குமரன்
சதங்கை 4, மணி 1/12
குரோதன, சித்திரை/பங்குனி
[April 1925 / April 1926]

Record no. 959

*Kumaran̲*

*Cataṅkai 4, maṇl 1/12*

*Kurōtan̲a, Cittirai/Paṅkun̲i*

*[April 1925 / April 1926]*

Record no. 959

ஓம்.

# குமரன்.

என் கடன் பணிசெய்து கிடப்பதே.

—[o]—

குரோதன-வருஷ

சதங்கை ௪.

பத்திராசிரியர்:

சொ. முருகப்ப செட்டியார்,

காரைக்குடி.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,



# உள்ளுறை.

---



சிவமயம்.

# குமரன்

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.
—திருவள்ளுவர்.

சதங்கை ௪. | காரைக்குடி, குரோதன ௵ சித்திரை ௴ | மணி ௧.

## வணக்கம்.

### முருகக் கடவுள்.

குமரா நமாவென்று கூறினு ரோர்கா
லமரா வதியாள்வ ரன்றி—யமராசன்
கைபுகுதார் போரூரன் கால்புகுவார் தாயுதரப்
பைபுகுதார் சேரார் பயம்.

—சிதம்பர சுவாமிகள்.

எள்ளத் தனைவந் துறுபசிக்கு
மிரங்கிப் பரந்து சிறுபண்டி
யெக்கிக் குழைந்து மணித்துவர்வா
யிதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து
தொட்டி லுதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைதவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல்
விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டு முமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

—பகழிக்கூத்தர்.

திருவடியுந் தண்டையுஞ் சிலம்புஞ் சிலப்பூ டுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புய மாறிரண்டும்
மருவடி வான வதனங்க ளாறும் மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தெ னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.

—அருணகிரிநாதர்.

# கவி யின்பம்.

வழக்கறிஞர் ஆர். பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்.

இவ்வுலகில் வழங்கும் ஒவ்வொரு மொழியிலும் சிந்தைக்கும் செவிக்கும் இன்பம் பயக்கின்ற இனிய கவிகள் இலங்கக் காண்கின்றோம். மக்களது மனத்திற்கு அளவிலா மகிழ் வூட்டும் கவி யின்பத்தினுஞ் சிறந்த இன்பம் இவ்வுலகில் வேறில்லை என்று சொல்வது மிகை யாகாது. இதனை அறிந்து அநுபவித்த கல்வியில் பெரியாராய கம்பர் இராமர் சீதையைக் கண்டாரென்று கூறப் போந்த விடத்து, அம்மாதினை 'செஞ்சொற் கவியின்பம்' என்று அழகாக அமைத்தார்.

"பொன்னின் சோதி போதினில் நாற்றம்
பொலிவேபோல்
தென்னுண் தேனில் தீஞ்சுவை செஞ்சொல்
கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே
களிபேடோடு
அன்னம்மாடு முன்றுறை கண்டு அங்கு
அயல் நின்றார்"

என்ற செய்யுளின் அரிய நயம் ஆராய்தற்குரிய தாகும். 'இராமர் கன்னி மாடத்தின்மீது பொன் மயமாயிலங்கும் ஒளியினைக் கண்டார்; மலரின் நறுமணத்தை நுகர்ந்தார்; தேனின் தீஞ்சுவையைத் துய்த்தார்' என்று அப்பெருமான் சீதையைக் கண்டு களித்த தன்மையைக் கூற வந்த கம்பர் இவை யனைத்திற்கும் மேலாகக் கவியின்பத்தை அமைத் திருக்கின்றார். கண்டறியும் புலனுக்கு இன்பம் பயக்கும் இனிய நிறத்தினும், உயிர்த்தறியும் புலனுக்கு இன்பம் பயக்கும் நல் மணத்தினும், உண்டறியும் புலனுக்கு இன்பம் பயக்கும் நறுஞ் சுவையினும், சிந்தைக்கு இன்பம் பயக்கும் செஞ்சொல் கவியே சிறந்த தென்று கம்பர் பெருமான் நன்கெடுத்துக் காட்டுகின்றார். ஐம்புலன்களால் துய்க்கப்பெறு மின்பத்தினும் அறிவினால் நுகரப்படும் கவியின்பமே சாலவும் சிறந்த தென்பது நூலறிவுடையார் அனைவரும் ஒப்புக்கொள்ளும் உண்மையாகும். ஆயினும் புல னற்றவர்க்கு ஐம்பொறிகளால் யாதும் பயனில்லாத வாறுபோல், அறி வற்றவர்க்கு செஞ்சொற் கவியால் யாதும் பயனில்லை. புலன்களால் நுகரப்படும் இன்பமே இத்தகையதென எடுத்துரைக்க இயலாதாயின், அறிவினால் துய்க்கப்பெறும் கவியின்பத்தை எவ்வாறு எடுத்துரைக்க இயலும்? இதனாலேயே பொன் போன்ற நிற மென்றும் மலர் போன்ற மண மென்றும் தேன் போன்ற சுவை என்றும் ஒவ்வொன்றுக்கும் உவமை கூறிய கம்பர் பெருமான் கவியின்பத்திற்கு யாதும் உவமை கூறாராயினர். ஆகவே ஐம்புலன்களால் நுகரப்படு மின்பத்திற்கு ஒருவாறு உவமை கூறலாமாயினும், கவியின்பத்திற்கு உவமை கூறுதல் ஒரு சிறிதும் இயலா தென்பது இனிது விளங்கும். இவ்வுண்மையைக் கவியின்பந்துய்த்த ஒவ்வொருவரும் நன்கு அறிவார்கள். மணிவாசகப் பெருமானது திருவாசகம் கற்று அதன் கவி நலம் துய்த்த பெரியார் ஒருவர் 'திருவாசக மென்னும் தேன்' என்றார். அத் திருவாசகத்தையே ஓதி ஓதி உள்ளங் கரைந்த வள்ளலார்

... ... ... நற்கருப்பஞ் சாற்றில்
தேன் கலந்து பால் கலந்து
செழுங்கனித்தீஞ் சுவைகலந்து
ஊன் கலந்து உவட்டாம லினிப்பதுவே



என்று தாம் நுகர்ந்த இன்பத்தைப் பாலும் தேனும் கரும்பும் கனியும் ஊனும் உயிரும் கலந்த உயரிய இன்பமாக எடுத்தோதினர். கவியின்பத்தால் கற்றோர் உள்ளம் எவ்வாறு களிக்குமோ, அவ்வாறே இராமர் சீதையைக் கண்டு களித்தாரென்று கூறும் கம்பர் பெருமானது சொல் நயமும் பொருள் நயமும் போற்றுதற்கு உரியனவாகும்.

ஒரு பொய்கையில் இதழ் குவிந்து நிற்கும் கமலப்போது காலையில் கதிரவன் வருகையால் மலரும் தன்மை போல், துன்பத்தால் கூம்பிய உள்ளமும் கவி நயத்தால் மலர்ந்து மகிழுமென்றால், அதன் பெருமையை அளவிட்டு அறிதல் இயலுமோ?

இத்தகைய கவியின்பத்தை உலகினுக்கு அளிக்கும் உயரிய புலவர்கள் அறிவால் தலை சிறந்தவர்கள் என்பது சொல்லாமலே அமையும். நமது நாட்டில் இப்புலவர்களை தேவர்களாகவும் ஆன்றோர்களாகவும் கருதிப் போற்றுகின்றோம். நவில்தொறும் நூல் நயம் விளங்குகின்ற திருக்குறள் இயற்றிய திருவள்ளுவரைத்தெய்வப் புலவரென்று வழங்குகின்றோம். கவி நயம் கனிந்தொழுகும் காவியம் இயற்றிய கம்பரைக்கலைமகள் அருள்பெற்றவரென்று கருதுகின்றோம். இவ்வாறே உயர்ந்த கவிகளை மக்களிலும் உயர்ந்தவராகவே எந் நாட்டினரும் கருதுகின்றார்கள். ஆங்கில மொழியில 'நாவன்மை பழக்கத்தால் வரும்; ஆனால் நற்கவிதை பிறப்போடு வரும்' என்னும் உண்மை மொழி வழங்குகின்றது. ஓர் உயரிய கவிஞன் தான் கருதிய பொருளை எழுதும் பொழுது அப்பொருளுக்கு ஏற்ற செஞ்சொற்கள் இயற்கையாகவே இனிதாக அமைவதைக் காணலாம். இத்தகைய செஞ்சொற்கள் படிப்போருள்ளமாகிய பளிங்கில் அழகிய உருவங்களை எழுதி அமைக்கின்றன. சிற்ப நூல் வல்லான் சிலையினால் உருவமைத்தல் போலவும், ஓவிய நூல் வல்லான் நிறங்களால் உருவமைத்தல் போலவும், கவிஞன் சொற்களால் கவிச்சித்திரம் அமைக்கின்றான். இச்சித்திரங்களை அறிந்து அனுபவிப்பதே அறிஞர் செயலாகும். இவற்றில் படிப்போரது மனப்பான்மைக்கு ஏற்றவாறு விரிந்து இன்ப மளிக்கும் சித்திரங்களை எழுதும் கவிஞர்களே உத்தமக் கவிகளென்று எம்மொழியினரும் இசைந்து கூறுகின்றார்கள். இக்கவிச் சித்திரங்கள் கம்பர், சிந்தாமணி முதலிய நூல்களில் சிறந்து விளங்குகின்றன. இராமரது திருக்கோலத்தைக் கண்டு மயங்கி அவர்மீது அருங்காதல் கொண்டு நின்ற ஒரு அழகிய மாதின் தோற்றத்தை,

"சொல் நலங் கடந்த காமச்
சுவையை ஓர் உருவமாக்கி
இன்னலந் தெரிய வல்லார்
எழுதிய தென்ன நின்றாள்
பொன்னையும் பொருவும் நீராள்
புனைந்தன எல்லாம் போகத்
தன்னையும் தாங்கலாதாள்
துகில் ஒன்றும் தாங்கி நின்றாள்

என்று கம்பர் ஓர் சித்திரமாக எழுதிப்போந்தார். 'சொல்லுதற்கரிய காதற் சுவையை ஓர் உருவமாக்கி அழகுற அமைத்தாற்போல், பொன்னொளிர் மேனியொடு நின்ற ஒரு மாது, தான் அணிந்திருந்த நல்லணிக ளெல்லாம் நிலை குலைய ஆகியையும் தாங்க லாற்றாத நிலையில் ஆடையை மட்டும் தாங்கி நின்றாள்' என்று கம்பர் அழகொழுக எழுதியசித்

திரம் அனுபவித்தற்குரியதாகும். சிந்தாமணி ஆசிரியரும் இத்தகைய சித்திரம் ஒன்று சிங்காரமாக அமைத்திருக்கின்றார். கதைத் தலைவனான சீவகன் போர்க்கோலம் பூண்டு மாற்றாரை அமர்க்களத்தில் வென்று அடலேறு போன்று திரும்பி வந்தபொழுது அவ்வீரனைக் கண்டு மயங்கிய ஓர் மங்கையின் நிலையை ஆசிரியர் ஓர் சித்திரமாக எழுதுகின்றார்:

"வட்டுடைப் பொலிந்ததானை
    வள்ளலைக் கண்ட போழ்தே
பட்டுடை சூழ்ந்தகாசு
    பஞ்சிமெல் லடியைச்சூழ
அட்டரக் கனையசெவ்வாய்
    அணிநலங் கருகிக்காமக்
கட்டழல் எரிப்பநின்றாள்
    கைவளை கழலநின்றாள்.

'அவ்வீரர் பெருமானைக் கண்ட அழகிய மங்கை அவன்மீது கொண்ட அருங் காதலால் மேகலை இடையினின்றும் நழுவி மெல்லிய பாதஞ் சேரவும், கொவ்வைக் கனிபோற் சிவந்த வாயிதழ்கள் தம் நிறம் குன்றிக் கருமை எய்தவும், மெய் முழுதும் காதல் நோயால் வெதும்பவும், முன் கையில் அணிந்திருந்த வளைகள் கழலவும் நின்றாள்' என்று ஓர் அழகிய சித்திரம் அமைத்தார்.

இத்தகைய சித்திரங்கள் உயரிய கவிஞர் நூலில் பலவாய் விளங்கக் காணலாம். இவ்வாறு இனிய சொற்களால் அளவிலா இன்பம் அளிக்கும் தன்மை கவி இலக்கணம் அறியாதாரிடமும் அமைந்திருக்கக் காண்கின்றோம். முன்பனிக் காலத்தில் கதிரவன் மேல் திசையில் தாழ்ந்து வெண்ணிலா வீசியபொழுது கிணற்றினின்றும் தண்ணீரிறைத்து நிலத்தில் பாய்ச்சிக் கொண்டிருந்த வேளாளன் ஒருவன்,

"மூங்கிலிலை மேலே
    தூங்கும்பனி நீரே"

என்னும் துலாப்பாட்டின் பகுதியைத் திரும்பத் திரும்பப் பாடிக்கொண்டிருந்தான். இதனை அருகிலிருந்து கேட்ட கவிஞன் ஒருவன் அச் சொற்களில் உண்மைக் கவி நலம் அமைந்திருந்ததை அறிந்து அகமகிழ்ந்து அப்பாட்டு முற்றுப் பெறு மென்று ஆர்வத்தோடு எதிர் பார்த் திருந்தான். ஆனால் அவனது கருத்து அப்பொழுது முற்றுப் பெறவில்லை. வேளாளனும் வேலையை நிறுத்தி வீட்டிற்குச் சென்றான். கவிஞன் அன்று இரவு முழுதும் இமை கொட்டாது துலாப் பாட்டை முற்றுவிக்க முயன்றும் இயலாது இடர்ப்பட்டான். மறுநாள் விடியற் காலத்தில் மறுபடியும் வேளாளன் வந்து தன் பணியைத் தொடங்கினான். அப்பொழுது கீழ்த் திசையில் கதிரவன் இலங்கித் தோன்றினான். கிணற்றைச் சுற்றி இருந்த மூங்கில் இலைகளில் தங்கி இருந்த பனித்துளிகள் முத்துப் போல இலங்கின. துலைப் பாட்டும் மறுபடியுந் தொடங்கிற்று:

மூங்கிலிலை மேலே
தூங்கும்பனி நீரே.
தூங்கும்பனி நீரை
வாங்குங்கதி ரோனே

என்று முடித்தவுடன் கவிஞன் அளவிலா ஆனந்த மடைந்தான். இராப்பொழுதில் மூங்கிலிலையாகிய மெல்லிய சயனத்தில் பனித்துளி படுத்துத்தூங்குகின்ற தென்றும், காலையில் அப்பனித் துளியைக் கதிரவன் மேல் நின்று வாங்குகின்றானென்றும் கருதுவது கவி நலமாகும். இவ்வாறு கவியின் நயம் அறியாதாரும் கவி நலம் ததும்பும் சொற்களை வழங்குந் தன்மையை ஆராயும்போது, தமிழ் மக்களது இயற்கை நலஞ் சான்ற மனப்பான்மை இனிது விளங்குகின்றது.

---

# பூம்புகார் வணிகன்.

—:o:—

தமிழ்ப்பண்டிதர் அ. கிருஷ்ணசாமி நாயுடு.

புலவர் பெரு மக்களால் போற்றப் பெறும் பூம்புகார் நகரம் மிகத் தொன்மையதாகும். சோழ அரசர்களின் தலை நகரங்களில் மிகப் பழமையானதும் பூம்புகாரே. வாசகம் எனின் திருவாசகம் என்பது போல், நகரம் எனினும் பூம்புகாரையே குறிக்கும். நகரம், புகார், பூம்புகார், பட்டினம், காவிரிப்பூம்பட்டினம் என்பன ஒரு பொருளையே குறிப்பன. மூவேந்தர்களின் முதன்மை பெற்ற நகரங்கள் தமிழகத்தில் பல இருந்தன. அவற்றுள் புலவர் புலத்தில் புனையப் பொலிந்தது பூம்புகாரே. இந்நகருள் வேற்று நாட்டு மாந்தர் ஒற்றுமை யுற்றிருந்தனர்; பல குலத்தினர் குழுமியிருந்தனர்; பல சமயத்தினர் சார்ந்திருந்தனர்; பல தொழிலினர் தொக்கி யிருந்தனர். அருகர் கோயில் அணுகி யிருந்ததும், புத்தர் கோயில் பொலிவு பெற்றிருந்ததும், கண்ணன் கோயில் கமழப் பெற் றிருந்ததும், முருகன் கோயில் முதன்மை பெற்றிருந்ததும் பூம்புகார் நகரத்திலேயாம்.

"நற்ற வம்செய் வார்க்கிடம்
    தவம் செய்வார்க்கு மஃதிடம்
நற்பொருள்செய் வார்க் கிடம்
    பொருள் செய்வார்க்கு மஃதிடம்
வெற்றவின்பம் விழைவிப்பான்
    விண் ணுவந்து வீழ்ந்தென
மற்றநாடு வட்டமாக
    வைகுமற்ற நாடரோ"

எனத் திருத்தக்கதேவர்கூறியசெய்யுள் ஏமாங்கதநாட்டிற்கு உயர்வு நவிற்சியணியாம்; பூம்புகார் நகரத்திற்குத் தன்மை நவிற்சி யணியாம்; சுருங்கக் கூறின், தமிழ் நாட்டின் பண்டைய நகர இலக்கணங்கள் முழுதும் நலம் பெற்றிருந்தது பூம்புகார் நகரமே என்னலாம்.

பூம்புகார் நகருள் பல திறப்பட்ட மாந்தர் பொலிந்திருந்தனர்; பல தொழில்கள் பல்கி யிருந்தன. இவருள்ளும் இவற்றுள்ளும் சிறந்தவரும் சிறந்ததுவும் வணிகரும் வாணிகமுமேயாம். வணிகருள்ளும் பல்வேறு வகையான வகுப்பினர் இருந்தனர். அவருள்ளும் பெரும் பொருள் படைத்து அரசர் விழைய வாழ்ந்திருந்தவரே நகரத்துத் தனவணிகரெனச் சிறப்பித்து நவிலப் பெறுவர். இத்தன வணிகக் குடிகள் மூவகைப்படுவன. அவை இப்பர், கவிப்பர் பெருங்குடியர் என்பன. இவற்றுள் பெருங்குடி என்னும் பெயரே சிலப்பதிகாரத்துப்பல இடங்களினும் பேசப் பெறுகின்றது. இப்பர், கவிப்பர் என்ற பெயர்கள் பிற்காலத்து நிகண்டு முதலியவைகளிலேயே காணப் படுகின்றன. ஆகையால் சிலப்பதிகார காலத்தில் —கஅ00 வருடங்களுக்கு முன்னர்— பெருங்குடியர் மரபன்றி வேறு மரபினர் தனவணிகர் குலத்துள் இருந்ததாகத் தெரியவில்லை. பூம்புகார் நகருள் வாழ்ந்தமக்கள் பலருள்ளும் பெருந்திருவினையுடையவரும் பெருங்குடிவணிகரேயாவர்; பெருங்குடியில் பிறந்தோர் தனவணிகர்; தனவணிகருள் தலைவன் பூம்புகார் வணிகன்: அவனே வணிக்ர் கோமான், கோவலன்.

'கோவலன்' என்னும் பெயர்ப் பொருள் யாது? இடுகுறிப் பெயரா? காரணப் பெயரா? இவ் விருவகையும்

தெரியினன்றே பெயர்ப் பொருள் காணலாம்? ஒரு காரணமுங் கருதாமல் ஒரு பொருளுக்கு ஆன்றோரால் இடப்பட்டன இடுகுறிப் பெயர்கள். அவை மரம், கல் போல்வன. காரணங் கருதி இடப்பட்டன காரணப் பெயர்கள். அவை, அணி, முடி, வளை போல்வன. கடவுளரின் பெயர்களைமக்களுக்கிட்டு வழங்குவதும் இடுகுறிப் பெயரே என்பர் இலக்கண நூலார். இவற்றினை உட்கொண்டு ஊன்றி நோக்கின், ஓர் வகையில் கோவலன் என்னும் பெயர் இடுகுறிப் பெயரென்றும் இயம்பலாம்; காரணப் பெயரென்றும் கருதலாம். எங்ஙனம்? கோவலன் என்னும் பெயர் ஸ்ரீ கண்ணபிரானுக்கியைந்த பெயர்களுள் ஒன்றாம். "குற்ற மொன்றில்லாத கோவலர் தம் பொற் கொடியே" என ஆண்டாள் அம்மையாரும் "விஷ்ணு சித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவலன்" எனப் பெரியாழ்வாரும் பாடியிருக்கின்றனர். இங்ஙனம் பல பெரியார் ஸ்ரீ கண்ணபிரானைக் கோவலன் என்றே கூறியிருக்கின்றனர். இதனால் சிலப்பதிகாரத் தலைவன் கோவலன் என்னும் பெயர் இடுகுறிப் பெயரெனில் இழுக்கொன்றுமின்றே! 'கோ' என்னும் சொற்கு அரசன், சிறப்பு, தலைமை, பசு எனப் பல பொருள்கள் உள. பசுக்களைக் காப்பாற்றுவதில் வல்லவன் என்னும் பொருளில் கோவலன் என்னும் பெயர் கண்ணபிரானுக்கு வழங்குவதாயிற்று. அன்றி, சிறந்த வல்லவன் என்ற மற்றப் பொருள்களிலும் கண்ணபிரானை அழைத்திருக்கலாம். அங்ஙனமே தலைமையானவன், சிறந்தவன் என்ற பொருள்களில் கோவலன்னனும் பெயரை வைத்துக் காரணப் பெயராக வழங்கியிருப்பின், வழக்கென்னென்க! எனினும் இவ்விரு பெயர்களினும் ஏதேனும்ஒன்றென்று துணிவதற்கு ஆதாரம் உண்டோ? உண்டு. என்னை? அடைக்கலக் காதையில் கோவலனை அழைக்கும் போழுது, 'விருத்த கோபல!' எனக் கோபாலன் எனும் பெயரால் கூறுகின்றனர். கோவலன், கோபாலன் எனும் இவ்விரு பெயர்களும் பொருள் வேற்றுமையின்றிச் சொல் வேற்றுமையாகப்பல இடங்களிலும் பயிலப்படுகின்றன. ஸ்ரீ கண்ணபிரானுக்குரிய கோவலன் என்னும் பெயர் செய்யுள் வழக்கொன்றினே உண்டு. கோபாலன் என்னும் பெயர் செய்யுள் வழக்கு, உலக வழக்கு இரண்டிலும் உண்டு. இவ் விரு வழக்கினும் உள்ள கோபாலன் என்னும் பெயரானே கோவலனைக் கூறுவதினாலும் அவ்விரு பெயர்களும் ஒரே பொருளுள்ளன வாகலானும், கோவலன் என்னும் பெயர் இடுகுறிப் பெயரா? காரணப் பெயரா? இடுகுறிப் பெயரெனின் இழுக்குண்டோ? அறிஞர்களே ஆராய்க. ஆராயின் இதில் ஓர் ஐயம் உண்டு. என்னை? சைன மதத்தைச் சார்ந்த கோவலனுக்கு வைணவ மதப் பெயராகிய கோவலன்—கோபாலன்—எனும் பெயரை இட்டு வழங்குவரோ என்பதாம். இதனாலென்? இக்காலத்தில்—சமயச் சண்டை தலைக்கேறி யுள்ள இக்காலத்தில்—ஒரு மதத்தினர் வேறு மதத்துக் கடவுளின் பெயர்களை இட்டிருத்தலைக் கண்கூடாகக் காண்கின்றோமன்றே? அக்காலத்தில்—சமயச்சண்டை அடியோடில்லா அக்காலத்தில்—ஒரு மதத்தினர் இன்னொரு மதத்துக் கடவுளின் பெயரை வைத்திருந்தனர் என்பதில் ஐயம் இல்லை. அதனால் வழக்கும் இன்று; வாதமும்



இன்று. இதனை உட்கொண்டே இளங்கோவடிகளும் கொலைக்களக் காதையில் கூறுவதாவது:

"ஆயர்பாடியின் அசோதை பெற்றெடுத்த
பூவைப் புதுமலர்வண்ணன் கொல்லோ?
நல்லமுது உண்ணும் நம்பி: ஈங்குப்
பல்வளைத்தோளியும் பண்டுநம்குலத்துத்
தொழுனைஆற்றினுள் தூமணிவண்ணனை
விழுமந்தீர்த்த விளக்குக் கொல்? என,
ஐயையும் தவ்வையும் விம்மிதம் எய்திக்
கண்கொளா நமக்கு இவர் காட்சிஈங்குஎன

நல்லமுதுண்டு வீற்றிருந்த கோவலனையும் கண்ணகியையும் கண்ட மாதரியும் ஐயையும் கோவலனைக் கண்ணபிரானென்றே காண்கின்றனர்; களிக்கின்றனர். கண்ணகியை நப்பின்னையென்றே நவில்கின்றனர்; நயக்கின்றனர். கோவலன் திருவடிவம் கண்ணபிரான் திருவுருவம் என்றே இளங்கோவடிகள் எண்ணினர்: இசைத்தனர். அம்முறையே யாமும் கண்ணபிரான் திருப்பெயர் கோவலன் என்பதே பூம்புகார் வணிகன் பெயராக இடப்பட்டதென்று எண்ணுகின்றோம்; எழுதுகின்றோம்.

இதுகாலை தமிழ் நாட்டில் கோவலன் சரிதம் நாடக வழியாகவும், பாடக வழியாகவும் இயங்குகின்றது. கோவலனைப் பற்றிச் சொற்பொழிவு செய்கின்றனர்: கட்டுரை வரைகின்றனர்; கதையாகக் கழறுகின்றனர். மேலும் சிறியார் செப்புகின்றனர்; பெரியார் பேசுகின்றனர்; நங்கையர் நவில்கின்றனர்; ஆடவர் அறைகின்றனர். இங்ஙனம் தமிழ் நாடென்னும் பொதும்பரில், கோவலன் சரிதமென்னும் பூங்குயில் புகுந்து புகுந்து இன்னிசை இசைத்துக் கொண்டேயுளது. தருமராஜன் சரிதம் நாடெங்கும் எங்ஙனம் பரவியுளதோ, அங்ஙனமே கோவலன் சரிதமும் நாடெங்கும் பரவியுளது; அதுபோன்றே இதுவும் படிக்கப்படுகின்றது. பரவியென்? படித்தென்? பரவின காரணமும் படிக்குங் காரணமும் வேறு வேறாயிற்றே. முன்னது தெய்வப் பிறப்பு என்று பரவலுற்றது; படிக்கலுற்றது. பாரதம் இயற்றிய வாதராயணர் என்னும் முனிவர் அக்கதா நாயகர்களுக்குப் பிறப்பிலேயே தெய்வத்தன்மையை ஏற்றுவாராயினர். சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகள் என்னும் துறவியோ, அந்தக் கதா நாயகனுக்குப் பிறப்பிலேயே மாநுடத் தன்மையைச் சாற்றுவாராயினர். ஆரியர் குலமுறை கற்பிப்பதில் அக்குல முறைக்கு முதற்றொடக்கம் சூரியன், சந்திரன், தேவர் முதலானோரைக் கற்பித்தல் மரபு. இஃது ஆரியரின் தொன்று தொட்ட வழக்கம். எக்கதா நாயகரையும் தெய்வப் பிறப் பாக்குவதில் ஆரியர்களுக்கு அளவிறந்த அன்புண்டு. ஓர் கதாநாயகனின் முற்பிறப்பை உரைக்கும் முன்னரே அக்கதா நாயகனுக்குத் தெய்வப் பிறப்பொன்று தேடுவாராவர். இங்ஙனம் ஆக்கும் குல முதற்றொடக்கத்தின் வழக்கமும், தெய்வப் பிறப்பைத் தேடும் பழக்கமும் பண்டைத் தமிழர் அறியவே அறியார். இடைக் காலத்திருந்த வில்லிபுத்தூரார் முதலானோர் இக்கட்டுரைகளில் கட்டமின்றிக் கட்டுப்படலாயினர். இப்பழக்க வழக்கங்களொன்றினுமே கட்டுப்படாத இளங்கோவடிகளுக்குக் கோவலன் சரிதம் தெய்வப் பிறப்புள்ளதாகத் தோன்றுவதெங்ஙனம்? ஆகையால் கோவலன் சரிதம் அவன் இறந்த பின்னர் தெய்வத்தன்மை பெற்றது. வையத்துள்வாழ் வாங்கு வாழ்ந்தஒருவரைப்பின்னர் தெய்வத்துள் வைத் தெண்ணப்படு

தல் இயற்கை. வாழ்வாங்கு வாழ்வதற்கு முன்னரே தெய்வத்துள் வைத்தெண்ணப்படுதல் செயற்கை. முன்னையது பண்டைத் தமிழர் வழக்கம்; பின்னையது ஆரியர் பழக்கம். ஆரியர் பழக்கங்களில் ஆழ்ந்து கிடக்கும் நம்மவருக்குத் தமிழரின் வழக்கங்களை அறியும் வகையுமுண்டோ? ஆரிய ஆசார மென்னும் மோகனாஸ்திரத்தினால் கட்டுண்டு தம்மை யறியாமே தவழும் நம்மவருக்குத் தமிழரின் வழக்கங்களை வகுத்துரைப்ப தெங்ஙனம்? இந்நிலைமையில் இயற்கைவழி நின்று தெய்வத்தன்மை பெற்ற கோவலன் சரிதம் நம்மவரின் உள்ளத்தில் சாதாரண மானிடச் சரிதமாகத் தோன்றுவதில் வியப்பொன்று மின்று. நம்மவர் இந்நிலைமைக்கு எளிதில் ஆளாயினர் என்பதை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் வியப்பே உண்டாகின்றது. என் செய்வேம்! என் செய்வேம்! ஆரியர் கூறும் குலமுறை கிளத்தும் படலங்களை இளங்கோவடிகள் அறியாதவரல்லர். அறிந்தும் இயற்கை வழியில் நின்றே கோவலன் சரிதம் இயம்புகின்றனர். பின்னர் கோவலன் தெய்வத் தன்மை யடைந்ததைப் பற்றி மனமார மகிழ்கின்றனர்; வாயார வாழ்த்துகின்றனர். அங்ஙனமே யாமும் மகிழ்கின்றேம்; வாழ்த்துகின்றேம்.

கோவலன் சரிதம் எனும் தமிழணங்கின் திருவடிச் சிலம்பு அச்சுவாகன மென்னும் தேரில் வீற்றிருந்து, தமிழ் நாடெங்கணும் உலாவிக் காட்சியைத் தருகின்றதைக் கண்டு களிக்கின்றோ மன்றோ? ஆகையால் அச்சரிதம் விரித்துக்கூற வேண்டிய அவசிய மின்று. ஈண்டுக் கோவலனைப் பற்றிய சில குறிப்புக்கள் மட்டும் பொறிக்கப்படும்.

க. வாணிகம்:—குலத் தொழிலாகிய வாணிகத்தைக் கோவலன் சிறப்பாகக் கைக்கொண்டனன். உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் கோவலனுடைய வாணிகம் பரவி யிருந்தது. தான் ஓரிடத் திருந்தே ஆட்களைப் பல்வேறிடங்களுக் கனுப்பி வாணிகத்தை நடாத்தினது மன்றித் தானே பல இடங்களுக்கும் நேராகச் சென்றனன். கலத்தில் ஏறிக் கடலைக் கடந்து வாணிகம் செய்தனன். திரைகடலோடித் திரவியம் தேடினான். இங்ஙனம் வாணிகம் என்னும் வளமுறு தொழிலால் கோவலனுக்குக் கலம் இலம் ஆயிற்று; நீர் நிலம் ஆயிற்று. கடலின்கண் பல காலங்கள் கழித்தனன்; காதவங்கள் கடந்தனன். ஓர் நாள் நள்ளிருள் நடுயாமத்தில், கோவலன் ஊர்ந்து சென்ற மரக்கலம் போகூழால் உடைந்து போயிற்று. உடைந்த மரக் கலத்தினின்றும் உடையா உள்ளத்துடன் கோவலன் சில நாள் கடலின்கண் நீந்தித்திரிந்து கொண்டிருந்தனன். கலங்கவிழக் கடலில் கலங்குவோர் நிலைமை என்னே! என்னே! இதுகாலை கப்பற் பிரயாணம் செய்யும் பெருந் திருவாளர், கப்பல் கவிழுமேயாயின், தமக்குத் தீங்கு நேரா வண்ணம் கடலின் மேல் மிதக்கச் செய்யும் "உயிர்க் கச்சை அங்கி" (life-belt) அணிந்து கொள்ளுகின்றனர். அவ்வாறான கச்சைகள் ஏதேனும் கோவலன் அணிந்திருப்பனோ? அக்காலம் அவ்வங்கிகள் ஏது? இல்லையேல் எத்துணை இன்னல்களுக் குட்பட்டு நீந்தியிருத்தல் வேண்டும்? இருளன்றி வேறு துணையில்லா இடையாமத்தில், உரமும் வீரமும் துணையன்றி வேறு துணையாளர் யாவர்? கடலில் சிலநாள் நீந்துவதற்கு எத்துணை மனத்திண்மையும் உடல் வன்மையும் வேண்டும்? மேனுலகம் முழுதும் வெற்றி கொண்ட நெப்போலியன் சக்கரவர்த்தி, ஓர் முறை எல்பா என்னும் தீவிலிருந்து மத்தியதரைக் கடலில் இத்தாலி வரையும் நீந்தினதைச் சரித்திரகாரர் இறும்பூதுற்று இயம்புகின்றனர்; இறுமாந்து எழுதுகின்றனர். நெப்போலியன் வீரன்; படைத்தலைவன். கோவலன் வணிகன்; பெருங்குடி மரபினன். இவ்விருவர் நீத்தத்துள்ளும் யார் நீத்தம் பெருமையுற்றது? ஒழுக்கத்து நீத்த கோவலன் சரிதமென்னுங் குறுமணி, ஆராய்ச்சி என்னும் சாணையில் அழகுபெற வைக்கப்பெறின், சரித்திர மென்னும் மாலையில் முதன்மணியாக வன்றோ விளங்கிக்கொண்டிருக்கும்?

0 அலைகளால் அலைப்புண்ட கோவலன் முன்னிலையில் ஓர் பெண் தெய்வம் தோன்றிக் கூறினதாவது:—"இத்தீவினுள்ளாரை இராக்கதர் இன்னலுறுத்தாமல் இந்திரன் ஏவலால் காத்துக் கொண்டிருக்கின்றேன். என் பெயர் மணிமேகலை. நீ முற்பிறப்பில் பேரறம் செய்தோனாதலின், உன்னை இவ்விடையூற்றினின்று நீக்கும் கடப்பாடுடையேன்" என்றுரைத்து மணிமேகலா தெய்வம் தெய்வத் தன்மையால் கோவலனைப் பெயர்த்து ஓர் தீவிடை விட்டுப் போயிற்று. இங்ஙனம் தன்னைக் காத்த மணிமேகலா தெய்வத்தினை என்றும் மறந்தானில்லை. மனதில் வீற்றிருந்த மணிமேகலா தெய்வத்தின் பேரிலுள்ள பேரன்பினால் மாதவியின் மகளுக்கு மணிமேகலை என்னும் மாண்புடைய நாமம் சூட்டினன். அப்பொழுது,

"அணிமேகலையார் ஆயிரங் கணிகையர்
மணிமேகலை என வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன்மாரி செங்கையில் பொழி
[ந்தனன்"

உ. மறம்:—மறம் என்பது வீரம். சிலர் மறம் என்பதற்கு அறத்திற்கு எதிர்மறை எனப் பொருள் கொள்வர்; அப்பொருளில் மறம் என்பது அறமல்லாதது; அதருமம் எனப்பொருள்படும். இங்ஙனம் அறத்திற்கு எதிர்மறை மறம் எனும் வழக்கு இலக்கியங்களில் இல்லை. பழய இலக்கியங்களில் எல்லாம் மறம் என்பது வீரம் என்ற பொருளிலேயே ஆளப்பட்டுள்ளது. திருக்குறளில் "மறத்திற்கும் அஃதே துணை" என்றஇடத்தில் 'மறம்' என்பதற்குப் 'பகைமை' எனப் பரிமேலழகர் பொருள் கொள்ளுகின்றனர். இங்ஙனம் மறம் என்பதற்குப் பகைமை என்னும் பொருள் அருகிய வழக்காம்; வீரம் என்னும் பொருளே பெருகிய வழக்காம். இப்

---

0 "இடையிருள் யாமத்து எறிதிரைப்பெருங்கடல்,உடைகலப்பட்ட எங்கோன்" என்னும் அடைக்கலக்காதை அடிகளில் 'எங்கோன்' என்பதற்கு 'எம்மரபில் முற்பட்டான்' என்றே உரைகாரர் உள்ளிட்டு அச்சிட்டார் அனைவரும் பொருள் கொள்கின்றனர். அப்பொருளில் இவ்வாணிக வரலாறு பூம்புகார் வணிகனின் முன்னோரதாகும். அங்ஙனமன்றி 'எங்கோன்' என்பதற்கு 'எமது தலைவனே' என விளிவேற்றுமையாகப் பொருள் கொள்ளின், இவ்வரலாறு பூம்புகார் வணிகனுக்கே பொருந்துகின்றது. பின்னர்ப் புகலும் கதைபோக்கினைக் கருத்துட்கொண்டு 'எங்கோன்' என்பதற்குப் பூம்புகார் வணிகன் எனப்பொருள் கோடலே ஏற்கும்.

பெரு வழக்கினையே இளங்கோவடிகளும் இயம்பி யுள்ளார். மாண்புடைக் கோவலன் ஆற்றிய மறச்செயலாவது:—கோவலன் செங் கைகளினின்றும் செம்பொன் மாரி பொழிதலைக் கேள்வியுற்ற மறையோன் ஒருவன், தளர்ந்த நடையில் தண்டையே காலாக ஊன்றித் தானங் கொள்ளுந் தகைமையனாய் வந்தனன். அவ்வமையம் பாகர் கைக் கடங்காத பருத்த மதயானை யொன்று, சினத்தால் அம் மறையவனைக் கைக்கொண்டது. அதனைக் கண்ட அக்கணத்திலேயே கோவலன் கோபங் கொண்டு, தன் கையாலே மறையோனை நீக்கி யானையின் கையிலே தான் புக்கனன். அவ்வளவிலே யானை தன் கையாலே வளைப்ப, அவ்வளைத்த கையினின்றும் நீங்கி வெள்ளிய கோட்டிடையே அடங்கினன். பின்னர், பற்றுக்கோடாக அக்கொம்பினையேகொண்டு உம்பர் ஏறிப் பிடர்த் தலையில் வீற்றிருந்து அச்சினம் நீங்கக் களிற்றின் மதத்தை யடக்கினன். இதனால் கோவலனுக்குக் 'கருணை மறவன்' எனும் பெயரும் உண்டாயிற்று.

மதங் கொண்ட யானையை வெல்லும் வன்மை மனிதனுக்குண்டோ என்னும் ஐயங் கொண்டோருளர். அவர் தம் ஐயத்திற்கு ஐயமிடுவம். இதுகாலை மிருக ஆட்டக் கூட்டங்களில் நாட்டம் வைத்தோர் மனிதன் யானையை அடக்கினதைக் கண் கூடாகக் கண்டிருப்பர். எனினும், மதங்கொண்ட யானையை அடக்கும் மனிதனை மாநிலத்திற் கண்டோரிலர். பாரத வீரரில் ஒவ்வொருவரும், பன்னூறு யானைகளின் பலங்கொண்டன ரென்றும், பெருங் களிறுகளை அம்மானைக் கழங்குகளாக வீசி ஆடினர் என்றும் கேட்டிருக்கின்றோம். நம்மினும் நம் முன்னோர் வன்மையும் திண்மையுங் கொண்டோரென்பதுண்மை. ஓர் காலத்தே ஓர்தேயத்தே வாழ்ந்த மக்கள் கூட்டத்தாருள் ஒருசாராருக்குப் பல்லாயிரம் யானைப்பலமும், ஒருசாராருக்குப் பலமின்மையும்பகவான் படைப்பிலுண்டோ? வேண்டு மென்றே வீமன் பலத்தை வியாசர் பல்லாயிரம் யானைப் பல மென்று புனைந்து கூறுகின்றனர்; அதற்கு வில்லிபுத்தூரார் சான்று புகல்கின்றனர். இத்துணைப் புனைந்துரையையும் நம்மவர் பொய்ம்மையின்றென்றே புலங் கொண்டுள்ளார். எனினும் தமிழ்நாட்டுச் சரித்திரத் தலைவனொருவன் யானைப்பலங்கொண்டவன் என்று கூறின் வியக்கின்றினர்; அயர்கின்றனர். வில்லிபுத்தூரார் விளம்புவது உயர்வு நவிற்சியணி; இளங்கோவடிகள் இயம்புவது தன்மை நவிற்சியணி. சரித்திரமென்னும் தானியக் குவியலில் உயர்வுநவிற்சியணிக ளென்னும்உமிகளைத் தேய்த்து ஊதிவிட்டால் தன்மை நவிற்சி அணிகளென்னும் அரிமணிகளைக் கண்டின்புறலாம். இங்ஙனங் கண்ட மணிகளையே இளங்கோவடிகள் சிலப்பதிகாரச் சிலம்பில் பெய்து வைத்துள்ளார்.

ஈண்டு கவனிக்கற்பால தொன்றுண்டு. மதங்கொண்ட யானையை எதிர்த்து மற்போர் செய்யும் உடல்வன்மை மக்கள் கூட்டத்திலும் இல்லை; மாக்கள் கூட்டத்திலும் இல்லை. இதுகாலை இயங்கும் உடம்பினைத் தாங்கிய உயிர்வருக்க மெல்லாம் யானையின் வன்மைக்குட்பட்டனவேயாம். அங்ஙனமாயின் சிங்கம் யானையைக் கொல்கின்றதே; வீரர் யானையை வதைக்கின்றனரே. இது பொய்ம்மையோ எனின்,



அன்று. சிங்கமோ, வீரரோ, நேரே யானையை எதிர்த்து மற்போர் செய்ய ஒண்ணாது. வீரர் தந்திறத்தினைக் கொண்டு தந்திரத்தால் தந்தியை வெல்கின்றனர். சிங்கமும் அங்ஙனமே. இங்ஙனமே கோவலனும் யானையின் கை வளைப்பினின்றும் தப்பிக் கோட்டிடை யேறிப் பிடர்த்தலையிருந்து, அதன் வன்மையையடக்கினன். யானையை யடக்குவோரனைவரும் பிடரியிலேயே யிருத்தல் வேண்டும். யானையின் உறுப்புக்களில் கைக்கும் வாலுக்கும் எட்டாத உறுப்பு பிடரியொன்றே. சிங்கம் யானையைக்கொல்லும் பொழுது தாவிப் பிடரியிலிருந்தே கொல்லுகின்றது. யானையைக் கொல்லவோ அடக்கவோ வேண்டுந் தந்திர மனைத்தும் விரைவில் அதன் பிடரியில் ஏறக் கற்றவர் தந் திறமையேயாம். இதுவே இயற்கை வழி. இளங்கோவடிகளும் இங்ஙனமே இயம்பினர்.

௩. தானம்:—*பூம்புகார் நகரின்கண் மறையவளொருத்தி ஒரு கீரியை வளர்த்தனள். அக்கீரிப் பிள்ளையைத்தன் பிள்ளைக்குக் காவல் வைத்துவிட்டுப் புறம் போந்தனள். அதுகாலை பாம்பொன்று அப்பச்சிளங் குழந்தையின் பக்கல் அணுகிற்று. அப்பாம்பைக் கண்ட கீரி, கடித்து இருதுண்டாக்கிக் குருதி தோய்ந்த வாயுடன் தலைவாயிலில் தலைவியின் வருகையை எதிர் நோக்கி நின்றது. அக்கீரியைக் கண்ட மறையவள், தன் குழந்தையை அக்கீரி கொன்று விட்டதென்று பிழைபட எண்ணிக் கையிலிருந்த மணையினால் கீரியைப் புடைத்துக்கொன்றனள். இக்கொடுமையினைக்கண்ட மறையவன்—கொழுநன்—மனைவியை நோக்கி "நின் கையில் உண்டு மனையறத்தின்கண் வாழும் வாழ்க்கை இனிக்கடவ தன்று. ஆதலால், வடமொழி வாசகம் எழுதிய இவ்வேட்டினைப்பொருளறியும் மாந்தர் கையகத்தே கொடுப்பாயாக" எனச்சொல்லி வடதிசையை நோக்கிக் கங்கையாடப் போயினன். மறையவள் அவ்வேட்டினைக்கையேந்திப் பீடிகைத் தெருவினும் பெருங்குடி வணிகர் மாட மனைகளினும் மீளமீளத் திரிந்து வருந்திக்கடைசியில் "என் கருமக் கழி பலங் கொண்மின்" எனக் கூவிக் குலைந்தழுதனள். இதனைக் கண்ட கோவலன் அவ் வருமறையாட்டியை யணுகி 'அம்மையே! நீ யுற்ற இடர்யாது?' என்றனன். அம்மாதும் தான் உற்ற ஊறு முற்றும் செப்பி 'இவ்வேட்டினை வாங்கிக் கொண்டு கைப் பொருளைத் தந்து என் கடுந்துயர் களைக' என வேண்டினள். அப்பொழுதே கோவலன் "அஞ்சல்; உன்றன் அருந்துயர் களைவேன்; நெஞ்சுறு துயரம் நீங்குக" என்று கூறித் தருமாசனத்

* இக்கீரியைக் கொன்ற கதையைப் பின்னுள்ளார் பிறிதாகப் பேசுகின்றனர். பஞ்சதந்திரம் பாடினோர் "கீரி பாம்பினைக் கொன்றதென் றறியாது பிள்ளையைக் கொன்றதென் றெண்ணி அப்பார்ப்பானே கீரியைக் கொன்றனன்" எனப் பாடுகின்றனர். மேலும் அப்பார்ப்பானுடைய தேயம் கௌடதேசம் என்கின்றனர். சிலப்பதிகாரத்திலும் அத்தேயம் இன்னதென்று இறுதிகாட்டவில்லை. கதை கூறும் மாட்சிமையைக் கூர்ந்து நோக்கின் அப்பார்ப்பனரின் தேயம் பூம்புகார் என்பது பொருத்தமுடைத்து. கோவிந்த சதகம் இயற்றினோர் அப்பார்ப்பினி கீரியைக் கொன்றதாகவே இயற்றியுள்ளார்; தேயத்தைப்பற்றி ஒன்றுமே செப்பவில்லை; கதையைப் பழங்கதை என்கின்றனர். பழங்கதையாயின் சிலப்பதிகாரம் செப்புவதே செம்மை யுடைத்து.

தோர் உரைத்த நூல் வழியே அப்பார்ப்பினிக்குள தாகிய கொலைப் பாவம் நீங்குதற்குத் தானத்தையும் செய்து அவள் துன்பத்தையும்களைந்தனன். பின்னர் வடதிசைக்கண்போய மறையவனையும் அழைப்பித்து, அவ்விருவரையும் கூட்டி மேலும் அவர்கள் இல்லறம் நடாத்த இரும்பொருள் கொடுத்துதவினன். இங்ஙனம் மாபெருந்தானஞ் செய்த பூம்புகார் வணிகனைப்பலரும் போற்றினர்; புகழ்ந்தனர். பெருந்தானங்கள் செய்தற்குக் காரணமான பூம்புகார் வணிகனின் பொருட்பெருக்கினைக் கண்டு ‘செல்லாச் செல்வன்’ எனும் சிறப்புப் பெயர் சூட்டினர்.

௪. உற்றுழி உதவல்:—ஒரு பத்தினிப் பெண்ணைப் பொய்ப்பழி எய்துவித்தற் பொருட்டு அறிவில்லாதவனொருவன் அவள் கணவனிடம் பொய்ச் சான்று கூறினன். இங்ஙனம் பொய்மை புகன்றமைக்காகத் தவம் மறைந் தொழுகும் அறுவகையோரையும் புடைத்துண்ணும் பூதசதுக்கத்துப் பூதம் அவ்வறிவிலாதவனையும் புடைத்துண்ணற்குக் கரியபாசத்தினிடத்தே அகப்படுத்திற்று. இதனைக் கண்டு அவன் அன்னை மிகவும் அல்லலுற்று அழுதனள். இவ்வழுகையினைக் கேட்டுக் கோவலன் ஆற்றுஉள்ளத்தனாய் அவனைக் கட்டிய பாசத்துள் கடிது சென்றெய்தினன். பின்னர் பூதத்தினை நோக்கி,

“என்னுயிர் கொண்டு ஈங்கு இவனுயிர்தா,
நன்னெடும் பூதம் நல்காதாகி [என
நரகன் உயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி யிழக்கும் பண்பு ஈங்கு இல்லை.
ஒழிகநின் கருத்துஎனஉயிர்முன் புடைப்ப’

கோவலன் அழிந்த உள்ளத்தவனாய் அவன் அன்னையோடும்போந்து அவ்வுயிரிழந்தவன் சுற்றத்தோர்க்கும் தொடர்புறு கிளைகட்கும் தன்னைப்பற்றிய கிளைஞரைப் போலப் பசிப்பிணியறுத்து அவர்களைப் பல்லாண்டு பாதுகாத்தனன். இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்து ஓம்பி (பாதுத்து) வேளாண்மை (உதவி) செய்தற் பொருட்டே யாகலான், பூம்புகார் வணிகன் உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாது பெரும் பொருள் வழங்கி வந்தனன். இங்ஙனம் இல்லத்தோருள் செயற் கருஞ் செயல் செய்து வந்தமையான், பூம்புகார் வணிகனுக்கு ‘இல்லோர் செம்மல்’ எனும் பெயர் இலங்குவதாயிற்று.

௫. புகழ்ப் பரிதி புயலுள் மறைதல்:—இல்லற மென்னும் நல்லறக் கடலின்றும் எழுந்த பூம்புகார் வணிகனின் புகழ்ப் பிரிதி மாதவி என்னும் புயலுள் மறைவதாயிற்று. சிறந்த சரித்திரங்களென்று போற்றப் படுவதினும் குற்றங்கள் கூறப் புரைகள் உள்ளன. நாடோறும் கடவுள் வழிபாட்டிற்கென்றே நன்கனம் சில நூல்கள் பாராயணம் செய்யப் பெறுகின்றன. அப்புனிதமான புத்தகங்களினும் குற்றங்கள் புகலவழியில்லாமலில்லை. குற்றம் நீங்கிய குணத்தின் கோமகன் யாவர்? உலகமே உள்ளத்துடன் ஒப்பும் உத்தமர் யாவரோ இதுகாறும் திருவவதாரம் செய்துள்ளார்? ஆகையால் எச்சரித்திரத் தலைவர் பேரினும் குற்றம் சாட்டலாம். சமயச் சார்பு, சரித்திரச் சார்பு எனும் ஒற்றைக் கண்ணைக்கொண்டு காணலுறின் குற்றமில்லாச் சரித்திரம் உண்டோ? அக்காட்சியில் குணங்கள் குற்றங்களாகின்றன; குற்றங்கள் குணங்களாகின்றன. கதைகளில் காணப்பெறும் குற்ற வடுக்கள் அபிமானப் போர்வையால் வேண்டு மென்றே மூடப்படுகின்றன. சரித்திரச் சரீரத்தில் இயற்கையாகத் தோற்றுகிற மச்சங்கள் வடுக்களென வேண்டு மென்றே தூற்றப்படுகின்றன. இன்னோரன்னவற்றை மேல்வரிச் சட்டமாகக் கொண்டு இயம்பலுறின், பூம்புகார் வணிகன் பேரினும் குற்றம் சாட்டலாம்; அவ்வாறான குற்றங்களை எச்சரித்திரத்தலைவர் பேரினும் சாற்ற வழியுண்டு. அங்ஙனம் உரைக்க உளம் வரவில்லை; உரைக்கின் ஒருசார் அன்பரின் அகமும் அல்லலுறும்: எனினும், அதற்குச் சமயமும் இன்று; சார்பும் இன்று; அன்பர்களே ஆராய்க.

ஓர் மனித வாழ்க்கையில் பல வீழ்க்கைகள் உண்டாதல் வழக்கம். அவைகள் குற்றங்க ளென்றுங் கொள்ளப் பெறுகின்றன. பல் குற்றங்களினின்றுந் தப்பிய பின்னரே, ஓர் மனித வாழ்க்கை தெய்வ வாழ்க்கை எய்தல் வேண்டும். ஆகையால் சரித்திரச் சாகரத்துள் தோன்றிய பூம்புகார் வணிகன் புகழ்ப் பரிதியும் புயலுள் புகுந்து மறைதலாயிற்று. அதுகாலை, காலமென்னுங் கடுங்காற்றால், மாதவி என்னும் புயலே முன்னின்றது. பூம்புகார் வணிகன் சரித்திர மென்னும் பேர்யாற்றுள் மூழ்குவோர் மாதவி என்னும் மண்மடுவினுள்ளேயே மூழ்குகின்றனர். அதனால், அவர் மேனி முழுதும் மண்படுகின்றது; மாசு படிகின்றது. அப்பேர்யாற்றின் முன்னும் பின்னும் ஓடும் தெள்ளிய பால்போலும் தூநீரைப் பருகுகின்றனரா? பார்க்கின்றனரா? இல்லை; இல்லை. பார்த்திருப்பின் அம்மண் துறையிலேயே படிவரோ? அத்தெள்ளிய நீரில் தோய்ந்து அம்மண்ணை யன்றோ கழுவல் வேண்டும்? மாசினையன்றோ மாய்த்தல் வேண்டும்? எங்ஙனம் கழுவினும் மாய்க்கினும், கோவலன் சரித்திர மென்னுங் குற்றமற்ற மணி, மாதவி என்னும் மண்ணில் மறைப்புண்டதே; மாசுண்டதே. எனினும், இம் மறைப்பும் மாசும் இன்றேல், கோவலன் என்னும் குறு மணி சரித்திர மாலையில் கோக்கப்பட்டிருக்குமோ? அம் மண்ணினைக் கழுவும் வழியானும், மாசினை மாய்க்கும் முகத்தானுமே, கோவலன் சரித்திரம் தமிழ் நாட்டுச் சரித்திரங்களில் தலைமை பெற்றது. பின்னர், அம்மணியின் மறைப்பு கழுவாயால் (பிராயச் சித்தம்) கழுவப் படுகின்றது; மன நெகிழ்ச்சியால் மாற்றப்படுகின்றது. அறியாமல் செய்த குற்றங்கள் கழுவப்படுமே யன்றி, அறிந்து வைத்துச் செய்த குற்றங்கள் கழுவப்படா. கழுவாய்களும் பலப்பல வழிகளாகப் பின்னர்ப் பிறந்த நூல்களில் நுவலப்படுகின்றன. அவையனைத்தும் ஆரிய வாசாரக் காட்டுவழியில் கண் மூடிப் போகின்றன. அவ்வழியில் தைத்தகற்களும் முட்களும் கணக்கில. இது காலை அவைகளைக் களையக் கலம் இல்லை. உண்மையான உள்ள நெகிழ்ச்சியே உற்ற குற்றத்தினை நீக்கும் கழுவாயாகும். இக்கழுவாயினையே பழங்காலத் தமிழர் கைக்கொண்டிருந்தனர். இங்ஙனமே பூம்புகார் வணிகன் தான் செய்த குற்றங்களை எண்ணி உள்ளம் நைந்து நைந்து இரங்குகின்றனன்; ஏங்குகின்றனன்.

கடற்கரைக் கானலின்கணிருந்து கோவலனும் மாதவியும் பாடின பாட்டுக்களால் இவ்விருவர் இணக்கமும் பிணக்க மாயிற்று. அப்பொழு

தே பூம்புகார் வணிகன் புலன் தெளிந்து;

"கானல்வரி யான்பாடத் தா
னொன்றின்மேல் மனம்வைத்து
மாயப்பொய் பலகூட்டும் மாயத்தாள்
பாடினாள்"

என மனம் மாழ்கினன். பின்னர் கண்ணகியின் கடிமனை புகுந்து கண்ணகியைக் கண்டு,

"சலம்புணர் கொள்கைச் சலதியொடு
ஆடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந்
தொலைந்த
இலம்பாடு நாணுத்தரும் எனக்கு
என்ன"

என்னும் இவற்றினை எண்ணும் பொழுது பொய்யொழுக்க முள்ள பொருட் பெண்டிரோடு கூடுவதில் பொருள் தொலைந்து இலம்பாடு (வறுமை) நாணந் தருவதை எண்ணி எண்ணி உள்ளம் உருகி இரங்குகின்றனன். இதனினும் இரக்கம் என்னே! என்னே! அன்றியும் தான் செய்த குற்றங்களனைத்தையும் ஆய்ந்து, ஆய்ந்து, அகம் அழிந்து அவற்றினைக் கண்ணகியுடன் பன்னிப் பன்னிப் பகர்கின்றனன். அவற்றினைக் காணின் கருங்கல் மனமும் கரைந்து விடும்; உருகா உள்ளமும் உருகிவிடும்.

"வறுமொழி யாளரொடு வம்பப்பரத்
தரொடு
குறுமொழிக் கோட்டி நெடு நகை
புக்குப்
பொச்சாப்புண்டு பொருள்
உரையாளர்
நச்சுக் கொன்றேற்கு நன்னெறி
யுண்டோ
இருமுது குரவர் ஏவலும்
பிழைத்தேன்
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும்
செய்தேன் வழுவெனும் பாரேன்"

எனத்தான் இழைத்த குற்றங்களுக்காக மனம் வருந்தி மாழ்குகின்றனன். இப்பாடல், குற்றம் இழைத்தோர் செய்யும் கழுவாய் இன்னதென்பதனைக் காட்டும் எடுத்துக்காட்டாக வன்றோ இலங்குகின்றது? ஒருவர் தாமிழைத்த குற்றங்களுக்குப் பரிகாரம் வேண்டுமே என்னில், அக்குற்றங்களை எண்ணி உண்மையாக உள்ளம் உருகுதலும், பின்னர் அவற்றினைச் செய்யாதிருத்தலுமே, அக் குற்றங்களைக் கழிக்கும் தக்ககழுவாயாகும். இங்ஙனமே பூம்புகார் வணிகன் மன நெகிழ்ச்சி என்னும் மாசற்ற தூநீரினால், தன் மேல்பட்ட மாதவி என்னும் மண்ணைக் கழுவலாயினன்; 'மாசு நீககலாயினன். பின்னர், பூம்புகார் வணிகன் தெய்வத் தன்மையில் பொலிந்து விளங்கினன். இங்ஙனமின்றிக் கோவலன் குற்றம் செய்தவனே, அக் குற்றம் குற்றமே எனக் குரங்குப் பிடியாகக் கூறுவோர்க்கு யாமிறுக்கும் பதில் ஒன்றே. என்னை?

"குற்றமே காண்குவார் குறுமாமுனி
சொற்ற பாவினும் ஓர்குறை தேர்குவர்"

எனும் சூத்திரமே அவர் கடாவிற்கு இறையாம்.

சமயம்:—

"திங்கள் மூன்றடுக்கிய திருமுக்
குடைக்கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழ்
ஒளிசிறந்து
கோதை தாழ் பிண்டிக் கொழுநிழல்
இருந்த
ஆதியில் தோற்றத்து அறிவனை
வணங்கி"

எனக் கோவலனைப் பற்றிக் கூறுவதினால், ஆருகதம் அல்லது ஜைன சமயமே கோவலன் கொண்ட சமயமாகும். கோவலன் கொண்ட சமயம் ஜைனசமயம் எனின், அன்பரில் பலர் அகத்தே வருந்துவர். கோவலனைப் பற்றிச் சிலர், சீரிய சைவ சமயமாயிருப்பின் சிறப்புற்றிருக்குமே எனச் சிந்திப்பர்; முதிர்ந்த வைஷ்ணவமாயிருப்பின் வீறு பெற்றிருக்குமே என விளம்புவர். என்செய்வேம்! இவ் விரு சமயங்களிலொன்றாயிருப்பின் தமிழகச் சமயச் சார்பினன்பர் சற்று மனங்குளிர்ந்திருப்பரே. இல்லாமற் போயிற்றே! இருக்க. மகாத்மாகாந்தியடிகளின் சமயம் என்ன? பிறப்பால் வைஷ்ணவ சமயம் என்கின்றனர்; ஒழுக்கத்தால் ஜைன சமயம் என்கின்றனர்; பிறர் பிறிதென்கின்றனர். கண்கொண்டு கண்டே காந்தியடிகள் சமயத்தில் தெளிவுற்றிலேம். அடிகளின் புறவடிவத்தில் சமயத்தினைக் குறிக்கும் குறிகளொன்றுமே புலப்பட்டிலது. அடிகளின் அகவடிவத்தைக் கண்டோர் உண்மையும் இன்னா செய்யாமையுமே அடிகளின் சமயம் என அறைகின்றனர். இப்புதிய சமயத்தினை எப்பெயரிட்டழைப்பது? மாண்புள்ளோர் மனம் போனவாறு மகிழ்ந்தழைக்க. இன்னா செய்யாதாரைக் கொல்லா விரதத்தார் எனக் கூர்த்த மதியினர் கூறுவர்.

"கொல்லாவிரதங் குவலயம் எல்லாம்
ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை
பராபரமே."

இக் கொல்லாவிரதங் கொண்டவனே கோவலன்.



பூம்புகார் நகரத்தினின்று கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளுடன் மதுரைக்கு வருங்கால் கவுந்தியடிகள் கழறுவது:—"நாம் போகும் வழியில் களைபறிப்பார் பறித்து வரம்பிலிட்ட குவளைப் பூவுடனே, தம் மெய்யிற் பொறியையும் வரியையும் உடைய வண்டினம் மதுமயக்கத்தால் போக வறியாது உள்ளொடுங்கிக் கிடப்பனவற்றை வழி வரல் வருத்தத்தாலே, நீர் உணர்வு மயங்கி வறும்பூ எனக் கருதி அவற்றின் மேல் அடியிடவுங் கூடும். அதனால், உயிர்க் கொலை புகும். அன்றியும்,

எறிநீர் அடைகரை இயக்கம்
தன்னில்
பொறிமாண் அலவனும் நந்தும்
போற்றாது
ஊழ்அடி ஒதுக்கத் துறு நோய்
காணில்
தாழ்தரு துன்பந் தாங்கவும் ஒண்ணா

என நடக்கும் பொழுதும் வண்டு, நத்தை முதலிய சிற்றுயிர்களுக்குந் துன்பம் வாராமற் காக்க வேண்டுமென்பது, ஆருகத சமயத்தின் அரிய சித்தாந்தம். இங்ஙனம் கொல்லா விரதச் சமயம் பூண்ட பூம்புகார் வணிகனின் உணவு, ஒழுக்கம் முதலியனவற்றைப் பற்றி உரைக்க வேண்டுமோ? ஆருகத சமயத்தில் இல்லறத்தார்க்குச் சாவகர், சாவக நோன்பிகள் என்று பெயர். உலக நோன்பிகள் என்றும் உரைப்பர். உலக நோன்பிகள் என்பதற்குத் துறவாது விரதங் காக்குஞ் சாவகர் என்பர் அடியார்க்கு நல்லார். சாவக நோன்பைப் பட்டினி நோன்பென்றும் பகர்வர். பட்டினி நோன்பிகள் என்பதற்கு 'இரண்டு உவாவும் அட்டமியும் முட்டுப்பாடும் பட்டினி விட்டுண்ணும் விரதிகள்' என்பது அடியார்க்கு நல்லார் அகம். மதுரையின்கண் மாதரி கோவலனைப்பற்றி "சாவக நோன்பிகள் அடிகள்" என்கின்றமையால் துறவாது விரதங்காக்கும் சாவகர் குழுவிலேயே கோவலன் கூடியுளன். சாவக நோன்பிகள், உலக நோன்பிகள் என்பன ஒரு பொருளன. உலக மோம்பும் உலக நோன்

பினைக் கைக்கொண்டோன் கோவலன். அந்நோன்பினை அகத்தே கொண்டு மிளிர்வது ஆருகதம். இந்நோன்பினைக் கொண்டோர் ஆருகதம் ஆயின் என்? பிறிதாயின் என்?

"கொல்லா விரதங் குவலயம் எல்லாம்
ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை
பராபரமே."

இச் சகத்தில் இவ் விச்சையைத் தாங்கினவனே பூம்புகார் வணிகன். இவ் விச்சையை எண்ணியன்றோ இறும்பூது எய்துதல் வேண்டும்? இதனைப் பரப்புதற் கன்றோ பாடுபடல் வேண்டும்? அன்றியும், கோவலன் ஒழுக்கம் எத்தகைமைத்து என்பதனைப் பற்றி எண்ணுகின்றார்களில்லை. கோவலன் கும்பிட்ட கடவுளின் வடிவம் என்ன? அக்கடவுளின் பெயர் யாது? என்னும் வழக்குகளிலேயே கண்ணும் கருத்தும் செலுத்திப் பூசலிடுவதிற் பயனென்னை? பூம்புகார் வணிகன் புகுந்த சமயம் ஜைன சமயம் ஆயினும், பிற சமயங்களில் அழுக்காறு அகன்றவன்; அவற்றினைப் பெரிதெனப் போற்றுகின்றவன். காவிரிப் பூம் பட்டினத்தின் கடை வாயிலைக் கடந்து வருகையில்; ஆங்கு

"அணிகிளர் அரவின் அறிதுயில்
அமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலம்செயாக்
கழிந்து"

வந்தனன். இங்ஙனம் ஒரு சமயச் சார்பினராயிருந்து வேறு சமயக் கடவுளரிடம் வெறுப்பின்றிக் கொல்லா விரதந் தாங்கிய உத்தமர் எச்சமயத்தவராயினும் என்? எச்சமயத்தினராயினும் நிச்சயம் அவரைப் போற்றுவோம்; புகழ்வோம். பொதுவாகத் தாய்நாடும், சிறப்பாகத் தமிழ் நாடும், கோவலனைப்போல் கொல்லா விரதம் பூண்ட சமரச ஞானிகளை வேண்டுகின்றன. அன்னவரால் நாடுநலம் பெறல் வேண்டும்; உலகம் உவத்தல் வேண்டும்.

இன்னும், பூம்புகார் வணிகனைப் பற்றிய சில குறிப்புகள் காவிரிப்பூம் பட்டினம் என்னும் கட்டுரையிற் கண்டு களிக்க.

மண்தேய்த்த புகழினான் மதிமுக
மடவார்தம்
பண் தேய்த்த மொழியினால்
ஆயத்துப் பாராட்டிக்
கண்டு ஏத்தும் செவ்வேள் என்று
இசை போக்கிக் காதலால்
கொண்டு ஏத்துங் கிழமையான்
கோவலன் என்பான் மன்னோ.

---

# கம்ப ராமாயண மும்மணிகள்,

——:0:——

பி. எஸ். ஆச்சாரியார்.

## தோற்றுவாய்.

இராமாயணம் என்னும் ஞானகங்கை, அயோத்தி, மிதிலை, இலங்கை யென்னும் மூன்று தலை நகரங்களின் வழியாகப் பெருகி வெள்ளமிடுகின்றது. இம் முப்புரங்களையும் உடம்பாகக் கொண்டு இராமனது வீர சரித்திரம் உயிர் பெறுகின்றது; இயங்குகின்றது; நின்று நிலவுகின்றது. பழய நாகரிகத்தின் நிலைக்களனாயிருந்த இம் மும்மைப் பெரும் பதிகளே இராமாயண கதை நிகழ்ச்சிக் குரிய முக்கிய களங்களாகவும் அமைந்திருக்கின்றன. இம் மூன்று திருநகரங்களும் இராமாயணம் என்னும் மலர் மாலையை மணம் பெறச் செய்யும் நறு மலர்களாய் மலர்கின்றன. இவை 'இராமாவதாரம்' என்னும் பேர் வாய்ந்த மணிக்கோவைக்கு அழகு செய்யும் பரு மணிகளாய் மிளிர்கின்றன.



## இரண்டு சித்திரங்கள்.

அயோத்திமா நகரம், மிதிலைமா நகரம், இலங்கைமா நகரம்—இம் மூன்று பேரூர்களையும், இராமாயணத்தைக் காவிய உலகத்திற்கு முதற்கண் வழங்கிய ஆதி முனிவரும் வருணிக்கின்றார்; இராமனது தெய்வமாக் கதையைத் தமது தெய்வமாக் கவியில் இசைத்துத் தமிழ்ப் பெருமக்களுக்குப் பேரிதிகாசம் அருளிய கவிச் சக்கரவர்த்தியும் வருணித்துச் செல்கின்றார். எனினும் கம்பசித்திரம் வேறு; வான்மீகி சித்திரம் வேறு. இது உண்மை; வெறும் வார்த்தையன்று. இவ் வுண்மையினை நாம் மறந்துவிடலாகாது.

இயற்கை யரசி கம்பீரமாகக் கொலு வீற்றிருந்த பழய உலகின் காடுகளிலே பிறந்தது வான்மீகி சித்திரம்.

"வெயில் இளநிலவே போல்
விரிகதிர் இடைவீசப்
பயில் மரம் நிழல் ஈனப் பனிபுரை
துளிமேகப்
புயல்தர இளமென்கால் பூ அளவிய
தெய்த
மயிலினம் நடமாடும்"

மனோகரமான காட்டகத்தே, கைபுனைந் தியற்றாத பேரழகுகளுக்கிடையே, கலைவளர் கழகமாய்த் திகழ்ந்தொளிர்ந்ததோர் குருகுல ஆச்சிரமத்திலே, இனிது சித்திரிக்கப் பெற்றது வான்மீகி சித்திரம். கம்ப சித்திரமோ, நந்தாய்நாடு தற்சுதந்திரத்தோடு வீரவாழ்வு வாழ்ந்த நாளிலே பிறந்தது. நந்தமிழ் நாகரிகம் சிறப்புற்றோங்கி யௌவன முதிர்ச்சி பெற்றிருந்த காலத்தில், காவிய உலகத்தின் பேரற்புத மாகிய தாஜமஹால் இதுவே யென்று யாவரும் மோகித்து நின்று வாழ்த்தும்படி, கவிச் சிற்பத் திறமையில் கைதேர்ந்த வல்லவனால் கம்ப ராமாயணம் என்னும் சுந்தரமான 'சப்த-சித்திரம்' சித்திரிக்கப் பெற்று அன்றுதொட்டின்றுகாறும் இதிகாச காவியங்களின் வரம்பாக நிற்கின்றது. நம் தெய்வத் தமிழ்ச் சிற்பி, கல்லையும் பொன்னையும் மண்ணையும் மணியையும் விலக்கி, தம் சித்திரக்கையால் கவியின்பத்தையே யிழைத்துத் தமிழ் கொண்டு பொதிந்து உயிர் பெய்து வடிவாக்கியதோர் செல்வ நெடு மாடத்தை, அழகுத் தெய்வத்திற்குத் தக்க ஞானத் திருக் கோயிலாகவே சமைத்து முடித்திருக்கின்றார். வாடாத சிற்பத் திறமை வாய்ந்த இக் காவியப் பூங் கோயிலையே கம்பசித்திர மென்று வழிபடுகின்றோம். வான்மீகி சித்திரத்திலே இயற்கை மணம் கமழ்கின்றது. கம்ப சித்திரத்திலே கவிச் சிற்பத்திறமை வரம்பின்றி விரிந்து கிடக்கின்றது. நடைச் சிறப்ப நயத்தில்—நூல் அமைப்பு முறையில்—காவியத்தின் கட்டுக்கோப்பு மர்மங்களில்,—கைவந்துள்ள கம்பரது என்றும் அழியாத உயிர்ச் சித்திரம், வான்மீகி சித்திரத்தை எளிதில் வென்றுவிடுகின்றது. ஆராய்ச்சி யாளராகிய ரஸிகர்களுக் கெல்லாம் பெரு விருந்தாகிய 'ரசனை'ச் சுவையில் (அதாவது காவிய அமைப்பு நலத்திலும் நயத்திலும்) நமது கவிச் சக்கரவர்த்தி

வடமொழியிலும் தென் மொழியிலும் பேர் பெற்று விளங்கும் பலவேறு மகாகவிகளையும் தமக்குப் பின் வெகுதூரத்தில் நிறுத்தி விடுகின்றார். நாடகக் காட்சிகள் போல நம் கண் முன் வரும் கம்ப சித்திரங்க ளெல்லாம் வான்மீகி சித்திரத்திலும் பன்மடங்கு ஒளி பெற்று, அழகு பெற்று, உயிர் பெற்றுத் திகழ்கின்றன. கம்பரது ஒப்புயர்வற்ற கவிச் சிற்பத் திறமைக்கு ஓர் உதாரணமாக, நாம் முன்னரே கூறிய மூன்று நகரங்களின் வருணனைகளை இங்குச் சிறிது பொழுது நுணுகி ஆராய்வோம்.

ஆநந்தக் கனவுகள்.

வான்மீகி சித்திரத்தில் அயோத்தியும் மிதிலையும் இலங்கையும் ஏறக்குறைய ஒரே அச்சில் வார்த்தெடுத்து உருவாக்கப் படுகின்றன. கம்ப சித்திரத்திலோ இம்மூன்று நகரங்களும் மூன்று வேறு வேறு நகரங்களாக உயிர்ப்பிக்கப் பெறுகின்றன. முதலில் அயோத்தியை உற்றுநோக்குவோம். அயோத்தி கம்பரது ஞானபூமி (Utopia)—கம்பரது லட்சிய பூமி (Ideal state). அயோத்தி வருணனையிலே கம்பரது உயர்ந்த லட்சியங்களைக் காண்கின்றோம். ஏன்? அயோத்தி ராம ராஜ்யம்* அல்லவா?

ஒவ்வொருவருக்கும் இன்பம் பயக்கும் ஓர் இலக்கு வேண்டும்; உயிர்க்கு அது தூண்டு கோலாகும் என்று ஓர் தமிழாசிரியர் உரைத்துள்ளார். இலக்கற்ற உயிர் இன்பமற்ற உயிர்; குறிக்கோளன்றி வாழ்வோர் நெறிப்படாது அல்லற்படுவர். அலைப்படு வாழ்க்கையுள் உழன்று திசையறியாது தத்தளிக்கும் பிரயாணிகளுக்குக் கலங்கரை விளக்கமாய் விளங்குவது அவர்களது அகக்கண்முன் எதிர்ப்படும் உயர்ந்த லட்சியமே யாகும். இத்தகைய இலக்கொன்று கம்பரது திருவுளத்திலே உதயமாகி ஒளிர்ந்தது. இவ் வொளிவெள்ளத்திலே மூழ்கிக் கிடந்த அவரது வாழ்க்கையும் கவிதையும் ஒன்றுபட்டு இசைந்து நின்றன. அவரது வாழ்க்கையைக் கவியின்பமாக மலர்த்திய லட்சியமான தெய்வ வான்சுடரன்றோ பொன்மேனியும் வீரத் தோளும் பெற்று அவர்தம் கதா நாயகனாக விளைந்து விடுகின்றது? இத்தகைய தலைமகனது தலை நகரமும், பூர்ண லட்சணங்களும் லட்சியங்களும் கூடிக் கருத்தொருமித்துக் கைகோத்து விளையாடும் வீர நிலமாக விளங்குகின்றது.

ஒரு மகாகவி தீர்க்கதரிசியு மாவான் என்று மேற்புல மேதாவியர் சிலர் ஊகிக்கின்றனர். இக்கொள்கையினை நம் மூதாதையரும் உணர்ந்திருந்தனர் என்பதற்கு 'கவி' யென்னும் சொல்லே சான்று பகர்கின்றது. கருவிலே திருவுடைய கவியரசு மயர்வற்ற மதி நலம் வாய்ந்தவனாதலின், அவனது அகக்கண்முன் உண்மையின் முக மலரை மறைத்திருக்கும் திரைகள் ஒன்றன்பின் ஒன்றாக விலகுகின்றன. திரை விலக விலக, தூரம் சமீபமாகின்றது; அந்நியர் சகோதரராகின்றனர்; மனித குலம் ஒரு குலம் ஆகின்றது. இத்தகைய உண்மை யொளி வீசப்பெற்ற கவியுலகில் தனிமுடி கவித்தாளும் கம்பர் தமது தீர்க்கதரிசனத்தால் மனிதனது எதிர் கால மகோன்னத நிலையைக் கண்டு களிக்கின்றார்.

"தாம் இன்புறுவது உலகின்புறக் கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்"

என்ற தமிழ் மறையின் விதிக்கிணங்க, தாம் அனுபவித்த காட்சி யின்பத்தை அடிக்கடி நோக்கி நோக்கி நாமும் நன்னெறிப்பட்டு மேனிலையடையும் வண்ணம் கவிச் சக்கரவர்த்தி தமது அற்புத மேதா விலாசத்தால் ராம ராஜ்யமாகிய அயோத்தியை நமக்குக் கற்பித்துத் தருகின்றார்.

கம்பர் தமது கதா நாயகனுக்குக் "கவியமை கீர்த்தி யக்காளை" என்று கட்டியங் கூறுகின்றார். 'கவியமை கீர்த்தி' வாய்ந்த பெருமகனது பிறப்பகமும் கவிஞரும் வடநூல் முனிவரும் புகழ்ந்த திருநாடாய்க் கம்பரது கவியுளத்திலே மனித குல முன்னேற்றத்தின் பொருட்டு எழுந்த ஆனந்தக் கனவுகளால் அலங்கரிக்கப்படுகின்றது. கம்பரது கற்பனை நகரம் எதிர்கால வுலக நிலையைக் குறிக்கும் ஆச்சரியமான கனவுகளையும் லட்சியங்களையும் ஒருங்கு சேமித்து வைத்திருக்கும் மூல பண்டாரமாகக் கட்புலனாகின்றது.

'அறத்தின் நாயகன்'—'அறத்தின் மூர்த்தி'—அவதரித்த அயோத்திமா நகரம் ஓர் அறப் பெருங்கோயிலாக நிர்மாணஞ் செய்யப் படுகின்றது. 'தோன்றிய நல்லறம் நிறுத்தத் தோன்றினான்'—'அறம் வளர்க்கும் கண்ணாளன்' பிறந்து வளர்ந்த அயோத்தியும் லட்சியங்களின் வளர்ப்புப் பண்ணையாகவும் நல்லறம் விளையும் புண்ணிய பூமியாகவும் பொலிகின்றது.

அறத்தின் வேர் அருள்; ஆதலின் அறத்தின் நாயகனைக் கவி 'பேர் அளிக்குப் பிறந்த இல்லாயினான்' என்று உசிதமாகக் கூறுகின்றார். இராமன் பிறந்த வீடாகிய அயோத்தியும் பேரறத்திற்கும் பெருந் தொழிலுக்கும் பிறந்த வீடான கருணை நிலமாகப் பிறங்குகின்றது. 'நவை யறு குணங்களென்னும் பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி' என்று கம்பர் தலைமகனைத் தலைவி வாயிலாக் வாயார வாழ்த்தி வழிபடுகின்றார். இப்புண்ணிய மூர்த்தியின் பொற்கோயிலும் மங்கள குணங்களுக் கெல்லாம் உரிய தோர் அழகிய நகைப் பெட்டியாகச் சித்திரிக்கப்படுகின்றது.

மக்கள் உரிமையும்
மன்னர் கடமையும்.

இனி, நற்குண நற்செய்கைகளெல்லாம் ஆழ்ந் தகன்ற கல்வி யறிவிலேதான் வேரூன்றி நிலைபெற்று வளர்ந்தோங்க வேண்டும். ஆதலால், கல்வியிற் பெரியாரும் தமது நாயகனைத் 'தென் சொற்கடந்தான்; வடசொற் கடற் கெல்லை தேர்ந்தான்' என்று புகழ்ந் தோதுகின்றார். ஏன்? இராமன் அரசர்களின் 'முன் மாதிரி'யாக நிற்கின்றான். தலையில் மணிமுடியும் நெஞ்சில் அறிவென்னும் ஒளி முடியும் சூடி அரசாண்டா லொழிய, நாட்டிலே நல்லறிவைப் பரப்பும் பெரும் பணியில் அரசன் தன்னை முழுமையும் இழந்து விடுதலென்பது பொருளற்றதாகும். எனவே 'எண்ணில் நுண்ணூல் ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்' என்றும் 'ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்' என்றும் கூறி நமது கவிச் சக்கரவர்த்தி தசரத சக்கரவர்த்திக்கு ஓர் உரிமைச் சீட்டு அளித்

* ராம ராஜ்யம் என்பது லட்சிய பூமி: *Ideal State.* வறுமையின்றி வண்மை பொழியும் மகா ராஜ்யத்தை 'ராம ராஜ்யம்' என்பது நம்மவர் மரபு. மகாத்மா காந்தியடிகளும் நாம் அடைய முயலும் 'சுயராஜ்யத்தை' ராம ராஜ்யம் என்று கூறுவது காண்க.

திருத்தல் கவனிக்கத்தக்கது. சக்கரவர்த்தியின் திருமகனே தந்தையினும் எத்துணையோ அளவு கல்வி யறிவாற்றல்களில் சிறந்து விளங்குகின்றான். அவனது விரிந்த மெய்யறிவு திருமுகத்திலே பிரதி பலித்துச் சுடர் கால்கின்றது.

"தற்றை வெண்ணிலவு நீக்கிக்
கருணையால் அமிழ்தம் காலும்
முற்றுறு கலையிற்றுய முழுமதி
முகத்தினானை
பெற்றவன் அளித்தமோலி இளையவன்
பெறத்தான் பெற்ற
சிற்றவை பணித்தமோலி பொலிகின்ற
சென்னியானே"

இவ் அழகிய செய்யுளில் 'கலை' 'முழுமதி' யென்னும் சொற்கள் இருபொருளில் வழங்கப்படுகின்றன. வெண்ணிலவின் குளிர்ந்த முகம்போன்ற இராமனது சோதி முகத்திலே பூரணமா ஞானம் பொங்கி பொலி விடுகின்றது. முழுமதியம் போன்ற இராமனது முகமண்டலம் கண்டாரை வசீகரிக்கும் கருணை நிலவும் ஞான வொளியும் ஒருங்கு மொழிகின்றது என்பது கம்பர் கருத்து. இராமனது ஆன்ம குணங்க ளெல்லாம் அவனது ஆழ்ந்தகன்ற நுண்ணறிவினையே பற்றுக்கோடாகக் கொண்டு படர்ந்து தளிரோடி இலை வீசியெழுந்து வானுற ஓங்கி வளர்கின்றன. அவனது வீரத் திருக்கதையின் ஜீவ நாதமா யொலிக்கும் தியாகம் என்னும் அரும்பெருங் குணமும் அவனது பேராற்றல் வாய்ந்த பகுத்தறிவிலே பரந்து வேரூன்றி நிலைத்திருக்கின்றது. சுருங்கக் கூறின், ஞானமூர்த்தியாகிய இராமன் ஒப்புயர்வற்ற தியாக மூர்த்தியாகவும் கருணை கூர்ந்து காட்சி யளிக்கின்றான்.

பேரறிவாளனுகிய பெருமகனது அயோத்தியும், அறிவுச் செல்வம் அருட் செல்வம், பொருட் செல்வம் எனும் முப்பெருஞ் செல்வத்திற்கும் ஒரு களஞ்சியமாகக் கற்பிக்கப்படுகின்றது. தற்காலத்தில் நமது நாட்டிலே செறிந்து குவிந்து காணப்படும் அறியாமை யிருள் கம்பரது அயோத்தியி லில்லை. 'வெண்மை யில்லை பல் கேள்வி மேவலால்' என்று யாவரும் வியந்து புகழுமாறு பல துறைப்பட்ட சமுதாய அபிவிருத்திக் குரிய வித்தாகிய கல்வி யறிவைப் பெற்று அயோத்திமா நகரம் ஒரு பெரும் பல்கலைக் கழகமாக வளர்ந்தோங்கி நிற்கின்றது. (இவ் வித்தை விதைப்பவன் அரசனே யென்பது போதரும்)

"ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்து
எண்ணில் கேள்வி
ஆகம் முதல் திண்பணை போக்கி
யருந்தவத்தின்
சாகந்தழைத்து அன்புஅரும்பித் தருமம்
மலர்ந்து
போகம் கனி யொன்று பழுத்தது
போலுமன்றே"

இது கம்பரது அயோத்திமா நகரம். கல்விச் செல்வம் எல்லா வகுப்பினர்க்கும் உரியது; இருபாலார்க்கும் பொதுவானது.

"கல்லாது நிற்பார் பிறரின்மையின்
கல்விமுற்ற வல்லாரு மில்லை,
அவை வல்லர் அல்லாருமில்லை.

கல்வி கேள்விகளோடு அயோத்தி மாந்தர் வாக்கு வன்மையும் பெற்று விளங்குகின்றனர். கல்வி கேள்வி இருபாலார்க்கும் பொது வுடைமையெனினும், சிறப்பாகப் பெண் கல்வியே இல்லறத்திற்கு இன்றி யமையாததாகக் கருதப்படுகின்றது.

"பெருந்தடங்கண் பிறைநுதலார்க்
கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும்
பூத்தலால்

வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே"

குடும்பமே விரிந்து நாடாகின்றது. நாடு ஒரு பெருங் குடும்பமே யாகும். எனவே பெண் கல்வி நாட்டின் முன்னேற்றத்திற்கு ஆண் மக்களது கல்வியைக் காட்டிலும் அவசிய மென்பது வெளிப்படை.

### பெண்மையின் பெருமை.

அயோத்திமா நகரில் ஆண்மக்களைப் போலவே, பெண் மக்களும் கல்வி கேள்விகளிலும் அறிவாற்றல்களிலும் சிறந்து விளங்குகின்றனர். கல்வியி னின்றும் பலவகை ஆராய்ச்சிகள் கிளைக்கின்றன. கல்வியால் ஆராய்ச்சி போஷிக்கப் படுகின்றது; ஆராய்ச்சியால் கல்வி உரம்பெறுகின்றது. கல்வி கேள்விகளி னின்றும் நல்லொழுக்கம் தழைக்கின்றது. "இன்பச் சீலம் அன்றியும் செய்தவம் வேறும் ஒன்றுளதோ?" ஆதலால் சீலம் அல்லது ஒழுக்கமே பொது ஜனங்களுக்குரிய தவமாகின்றது. கம்பர் பெண்மக்கள் ஒழுக்கத்தைச் சிறப்பித்து அதனை 'அருந்தவம்' என்றே குறிப்பது காண்க. (சுந்தர காண்டம்: படலம் கஉ; செய்யுள் கூ.)

பண்டைக் காலத் தமிழர், பெண்களின் பெருமையை நன்குணர்ந்திருந்தனர்.

"பெண்ணெனப் படுவகேண்மோ
பீடில பிறப்பு நோக்கா........"

இன்ன தன்மைத்தாகிய கொள்கை, வீழ்ச்சியுற்ற ஜைன பௌத்த சமயங்களின் நாசகாலத்திலே நமது நாட்டில் தோன்றிய 'வால்வெள்ளி' யாகும். இது பின்னை நாளில் வலியுற்று நிலைபெற்றதற்கு, இடைக்காலத்து வடநூலார் மதமும் ஒரு காரணமாகும் என்று கருதுவது தவறுகாது. இங்ஙனம் பெண் மக்கள் 'அன்பழி சிந்தையராய ஆடவர்' சூழ்ச்சிகளால் தாம் இழந்துவிட்ட உரிமைகளையும் அருமை பெருமைகளையும் நமது கவிச்சக்கரவர்த்தியின் அருளால் மீண்டும் பெறுகின்றனர். "தேவராஜன் என்று தெரிந்ததும் குதூகலத்தோடு சம்மதித்தாள்" என்று வான்மீகி கூறும் அகலிகையைக் குறித்து "நெஞ்சினுல் பிழைப்பிலாதாள்" என்று பரிவுடன் பேசும் கம்பர்—'வேசையருள்ளமும் ஒருவழி யோட நின்றவன்' என்று வேசையர்க்கும் வசை நல்கக் கூசி நிற்கும் கவிராஜசிங்கம் — 'காரிகையார் கண்ணே விலங்குவன, மெய்ந்நெறியை விட்டு' என்று அநியாயமாக ஆண் மக்கள் பெண்மக்கள்மீது சுமத்திய பெரும் பழியைத் துடைத்து,

"காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பும் நெறியின் புறஞ்செலாக்
கோசலம்........."

என்று தமது பேரிதிகாசத்தின் தொடக்கத்திலே பெண் குலத்திற்குப் பெரு நன்றியோடு தன் நீதி செலுத்து முறைப்படுவது ஓர் ஆச்சரியமன்று. 'மங்கைமார் சிந்தைபோலத் தூயது' என்று பெண்மையின் பரிசுத்தத் தன்மையைப் பாராட்டுவது கம்பர் மதம். பண்டைத் தமிழ்மக்கள் மதமும் இதுவே. கம்பரது அயோத்தியில் பெண் மக்களது ஒழுக்கம் அவர்களது கல்வியறிவால் உரம் பெற்று வளர்கின்றது. 'கற்பென்பது கல்லாமை' யென்னும் அறிவீனமான கொள்கை, கம்பர் கொள்கை யன்று. கல்வி கேள்விகளி னின்றும் தழைத்தோங்கும் ஒழுக்கம் இருபாலார்க்கும் உரியது; இவ்வொழுக்கத்தி னின்றும் அன்பு அரும்பு

கின்றது; தருமம் மலர்கின்றது. எனினும் மாதர் கல்வியையும் ஒழுக்கத்தையும் விசேஷமாகச் சிறப்பித்துக் கூறும் கம்பர் 'மாதரார் அற்பினின்றன அறங்கள்!' என்று கூறி 'மாதரது அன்பிலேதான் தருமம் நிலைத்து நிற்கின்றது' என்னும் இரகசிய உண்மையினை வற்புறுத்துகின்றார்.

அறிவினும் ஒழுக்கத்திலும் அன்பினும் சிறந்து விளங்கிய அயோத்தி மாதர்கள் அழகிலும் சிறந்து விளங்குகின்றனர்.

"தொழுதகை மடந்தையர்
சுடர்விளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கும்
ஆசைகொல்
எழுதசித் திரங்களும்
இமைப்பிலாதவே"

அகத் தூய்மையாலும் அழகு சுமந்த புறத் தோற்றத்தாலும் அயோத்தி மாதர் ஆடவராலும் தொழத் தக்க தன்மை வாய்ந்திருக்கின்றனர். அன்னார் அகத்தின் அழகு முகத்தின் அழகோடு ஒன்று பட்டு ஒளிர்கின்றது. 'அகத்தின் பரிணமமே புறமாகும்' என்னும் உளநூற் கொள்கைக்குக் கம்பரது அயோத்தி மாதர் சான்று பகர்கின்றனர். இத்தகைய பெண் குலத்தின் முடிமணியாகவும் கண்மணியாகவும் கதாநாயகி தோன்றுகின்றாள். ஆண்மையின் பெருமையினும், பெண்மையின் பெருமையே நமது கவிச் சக்கரவர்த்தியின் பொருவரும் திருவுளத்தை விசேஷமாகக் கவர்கின்றது. அயோத்தி அறிவின் பிறப்பகம்; அறத்தின் நிலைக்களம்; லட்சியங்களின் எல்லை நிலம்; எதிர்கால உலகின் உச்ச நிலையைக் குறிக்கும் உவம நிலம். அயோத்தி இங்ஙனம் விளங்குவதற்கு அதி முக்கியமான காரணம் என்னை? அந் நகரத்திலுள்ள தாய்மார்களும் தலைவியரும் சகோதரிகளுமே அயோத்தியின் மகோன்னத நிலைக்கு முதற் காரணமாவ ரென்பது கம்பர் கருத்து. சுருங்கக் கூறுமிடத்து, அயோத்தியின் பெருமைக்கு அந்நாட்டுப் பெண்மையின் பெருமையே அளவு கோலாகின்றது.

## கண்வழி புகுந்த காதல்

தலைமகனது தாய்நாட்டை உயர்ந்த லட்சியங்களின் தாயகமாகக் கூறுவது கம்பரது கவிச் சிற்பத் திறமையை நன்கு புலப்படுத்துகின்றது. இனி, அயோத்திமாநகரைத் தமது 'லட்சிய பூமி'யாகப் படைத்த கவிச் சக்கரவர்த்தி, மிதிலைமா நகரை எவ்வாறு நிர்மாணஞ் செய்கின்றார்? எவ்வாறு சித்திரிக்கப் பெற்றால், அது கம்ப சித்திரத்திற்குப் பொருந்துவதாகும்? அயோத்தி கதா நாயகன் கோயில்; மிதிலை கதா நாயகியின் கோயில். கம்பரது லட்சியமே 'கவியமை கீர்த்தி' வாய்ந்த கதாநாயகனை வெளிப்படுகிறதென்றால், கம்பரது 'கவி யின்பமே' கதாநாயகியின் உருவெடுத்து வருகிற தென்று கூறவேண்டும்.

"அறம் திறம்பும் என்று ஐயன்
அயோத்தியில்
பிறந்த பின்பும் பிரிவில ளாயினள்"

என்று கவி கதாநாயகியைக் குறிக்கின்றார். அறத்தின் மூர்த்தியான இராமனது 'ஸஹதர்மிணி' யென்னும் வாழ்க்கைத் துணையாய் உடனிருந்து அறம் வளர்ப்பவள் சீதை. தலைமகனது கல்வி யறிவு ஒழுக்கங்களினும், தலைவி யென்னும் உரிமை வாய்ந்த மாதரசியின் கல்வி யறிவு ஒழுக்கங்களே அறத்தின் வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதனங்கள் என்பது கம்பர் மதமன்றோ?



படுத்தான் வானவர் பற்றுரைத்
தடுத்தான் தீவினை தக்கோரை
எடுத்தான் நல்வினை எந்நாளும்
கொடுத்தான் என்றிசை கொள்ளாயோ

என்று 'சொல்லின் செல்வ'னாகிய அநுமன் பிராட்டியை நோக்கி அதியுசிதமாக, வெகு விநயமாகக் கூறுகின்றான். இராமன் தன் வாழ்க்கையின் சாராம்சமாகிய பெரு நோக்கத்தை இனிது நிறைவேற்றினன் என்னும் இசை, தலைவனைக் காட்டிலும் தலைவிக்கே உரியதாகின்ற தென்னும் அழகிய கருத்தினைக் கம்பர் ஆண்தகையும் நல்லறிவாளனுமாகிய அநுமன் வாயிலாக வெளியிடுகின்றார். சீதையைப் பிரிந்திருந்த நிலையில் தருமம் இன்னதென்று இராமன் உணர்ந்து ஒழுக முடியாமல் மயங்கினன் என்ற கருத்தை யுள்ளிட்டு, இராமனை அநுமன் 'மருளும் மன்னவன்' என்று குறிப்பதும் காண்க. கணவனது வாழ்க்கையைத் தன் மாசற்ற பேரன்பால் வசீகரித்து உள்ளத்தை விரித்து அவனது குணநிசயத்தை யுருவாக்கி, அன்பனது வாழ்க்கையின் அடிநாதமான லட்சியத்தை அவனது ஆருயிரினும் அருமையாகப் போற்றிவாழ்வது, ஸதியென்ற பேரும் புகழும் வாய்ந்த தருமபத்தினியின் பொறுப்பான கடனாகும். இத்தகைய உயர் நிலையைப் பெண்மக்கள் எய்த வேண்டுமெனின், அவர்களுக்குப் பொது ஜன சமுதாய வாழ்வில் விசேஷ கௌரவ ஸ்தானம் அளிக்கப்பட வேண்டுவது அவசியமாகும். சமூக வாழ்க்கையிலும் 'தொழுதகை மடந்தையராக'வே கம்பர்-பெண்மணிகள் விளங்குவதாக அவரது அயோத்தி வருணனையிலிருந்து நாம் ஊகித்து உணர்ந்து கொள்ளலாம். இத்தகைய பெண் குலத்தின் தலைவியாகிய சீதை இராமனது அறம் வளர்க்கும் தலைவியாகவே அவனது உள்ளத் தாமரை மீது என்றும் உறைகின்றாள். சீதையின் காதலும் கற்புமே இராமனது விசேஷ அருங் குணமாகிய 'அறம் வளர்க்கும்' வீரத்தை மேன்மேலும் வளர்த்து வருகின்றன. இராமாயணத்திற்கு இராமபிரானது வீரத்தைப் போலவே சீதையின் காதலும் கற்பும் இன்றியமையாதன. தலைமகனது தோள்வலியினும் தலைவியின் கற்பும் அகக்காதலுமே அவசியமாவன என்றுகூட நான் சொல்லத் துணிகின்றேன். ஏனெனில், பிராட்டியின் காதலும் கற்புமே இராம பிரானது வீர வாழ்க்கையை வசமாக்கி மலரச்செய்கின்றன. கம்பரது தலைவனும் தலைவியும் இருபாலார்க்கும் செய்த வசம்பாக நிற்கின்றனர். இராமன் என்னும் இராஜ சிங்கத்தின் 'உள்ளுறையுயிரே' மிதிலைமாநகரில் ஜனககுல சுந்தரியாக வளர்கின்றது. படைப்புக் காலந் தொடங்கி உலகம் புரிந்த பாக்கியத்தின் சாராம்சமே ஆடவரிற் சிறந்த இராமனுக்கு விளைகிறதென்று கூறும் கம்பர், பிராட்டியைப் 'பார் ஒரு கால் வந்தனையாள்!' என்ற 'மணிவாசக'த்திற் கிணங்கவே, பெண்மையாகிய கற்பகத்தில் பலபல யுகங்களுக்கிடையே அபூர்வமாகக் கனிந்த கனியாகக் காட்டுகின்றார்.

மிதிலையிலே தான் 'பெண்கனி'யாகிய பிராட்டி முதல் முதல் தன் 'ஆசையின் கனியை'க் காண்கின்றாள். காதலர்கண் எதிர்ப்பட்டுத் தம்முட் கலந்து உறவாடுகின்றன.

(தொடரும்.)

# சைவ சமயமும் தமிழ் மாதரும்.

——:0:——

பண்டிதை சு. பாலாம்பிகையம்மாள்.

சைவசமயமாவது சிவனை யடைவிக்குஞ் சமயம். சிவமென்னும் பொருளைப் புடையது. அன்பே சிவனை யடைதற்கும் சமயத்தை விருத்தி செய்தற்கும் முக்கிய கருவியாம். மக்கட்பிறப்பினருள் அன்பிற்கு உறைவிடமா யுள்ளவர் தாயராகும். அவரன்பின் மிக்கவ ரென்பதைத் 'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே' என்ற மாணிக்கவாசகர் திருவாக்கினாலுமறிக. அன்பின் மிக்கவரானமையால், அவரே சமய விருத்திக்குக் காரண ரென்பது நன்கு விளங்கும். ஒவ்வொரு தாயருந் தத்தம் பிள்ளைகளோடொத்து நோக்குங்கால் ஒவ்வோர் சிவஞானிக ளாவர். சிவஞானிகளின் பிரதான குணம் தம்மை மறத்தலாம். அத்தன்மைக் கேற்ப ஒவ்வொரு தாயருந் தத்தம் பிள்ளைகளுடைய சுகங் கருதத் தம்மை மறந்து அவர்களையே பொருளெனக் கருதி முயல்வர். ஆனமையால் சிவஞானிகளினும் அவருடைய தாயர் மிகவும் மேலாகக்கருதப்படுகின்றனர். பாலறுவாயராகிய திருஞான சம்பந்தப் பிள்ளையார் பலதலங்களையு மிறைஞ்சிப் பின் தம்மூராகிய சீகாழியி லமைந்த தமது மாளிகை வாயிலில் வர அவருடைய தாயாராகிய பகவதியம்மையார் பிள்ளையாருக்குத் திருநீறு சாத்தியருளினர்.

"மறையவர்க ளடிபோற்றத் தந்தையாரு மருங்கணைய மாளிகையி லணையூர் போதி, னிறைகுடமு மணிவிளக்கு முதலாயுள்ள நிறைமறைக் குலமகளிர் நெருங்கியேந்த, விறைவர்திரு நீற்றுக்காப்பேந்தி முன்சென் றீன்றதா யாார்சாத்தியிறைஞ்சியேத்த, முறைமையவர்க் கருள்செய்து மடத்துப் புக்கார் முதல்வர்பான் மணி முத்தின் சிவிகைபெற்றார்"

இவ் விடத்திலும் நீறுசாத்துவோர் நீறு சாத்தப்படுவோரினும் மேலோரா யிருத்தல் வேண்டுமெனின் பிள்ளையாரினும் அவருடைய தாயார் மேலாகக் கருதப்பட்டன ரென்பது பெறப்படும். அன்பின் பெருக்கினாலேயே இவருக்கு இவ்வளவு சிறப்புண்டாயிற்று. ஆனமையால் சமயவளர்ச்சிக்கு மாதர்கள் முக்கிய காரணரென்பது இனிது விளங்கும்.

முன்னாளிலே சில மாதரசிகளாற் சைவ சமயம் விருத்தி செய்யப்பட்டு வந்தமையைத் தமிழிதிகாசங்களிற் சிறந்ததாகிய பெரிய புராணத்திற் காணலாம். புகழனா ரென்பவருடைய அருந்தவப் புதல்வியாராகிய திலகவதி யம்மையாரினால் நமது சைவசமயம் தனி சிறந்து விளங்கியது. அம்மையார் தம தன்னை தந்தைய ராருயிர் நீத்தேகத் தம்பிற்றோன்றலாகிய வாகீசருடைய வேண்டுகோளின்படி உயிர் தரித்திருந்து தம்பியாரைத்தன் பிள்ளைபோற் காத்து வந்தார். அந்நாளில் முன்செய்த தீவினையின் பயனாக வாகீசர் சமணருடைய போர்தனைக் குள்ளாகி அதுவே மெய்ச்சமயமெனக் கண்டு அச்சமய நூல்களைக் கற்றுணர்ந்து அவர்கட்குத் தலையாய குருவாகித் தருமசேன னென்னும் பெயரையும் பெற்றனர். இவ்வாறு இவர் சமய குருவாகத் திலகவதியம்மையார் பிறவிப் பெருங் கடனீந்துவான் திருவதிகைவீரட்டானத் தமர்ந்த செம்பொற் சோதியை வழிபட்டுத் திருப்பணி செய்வாராயினர். அச்சமயம் தம்பியார் சமண சமயப் பிரவேசஞ் செய்ததை நினைந்து ஆறாத பெருந்துய ரெய்தி யவரைச் சமண சமயப் படுகுழியி னின்றும் நீக்கும்படி திருவதிகைத் தேவ தேவர்க்கு விண்ணப்பஞ் செய்தனர். வேண்டுவார் வேண்டுவதே யீவாராகிய பரமசிவன் அம்மையார் துயர் நீக்கத் திருவுளங் கொண்டு அவர் சொப்பனத்திற் றோன்றி 'நங்காய்! துயருறேல்; நாம் உன்னுடன் பிறந்தானைச் சூலை நோயால் வருத்தி யடிமை கொள்வேன்' எனத் திருவாய்மலர்ந்தருளினர்.

அமணப்பள்ளியிற் குருவாயமர்ந்த தருமசேனற்குச் சூலை நோய் தொடங்கியது. அந் நோயைத் தணிக்கும்பொருட்டு அமணர் தாமறிந்த மந்திரங்களை யோதினர். அதற்குந் தணியவில்லை. பின் அவ்விடத்துள்ள மற்றைய சமணர்கள் கரக நீரில் மந்திர முச்சரித்து அதைப் பருகுவித்தனர். நோய் முன்னையிலும் பன்மடங் கதிகரித்தது. சமணர்கள் கைவிட்டகன்றனர். தருமசேனர் தம்மை யாதரிப்பா ராருமின்றி ஓர் தூதுவனைத் தமக்கையா ராகிய திலகவதியா ரிடத்தனுப்பித் தம்மை வந்து காணும்படி வேண்டினர். அம்மையார் தாமவ்விடத்திற்கு வரமுடியாதென மறுத்தார். தருமசேன ரிச்செய்தியை யறிந்து போனா ரெய்தி யன்றிரவே தம் சகோதரியா ரிடத்து வந்துசேர்ந்து அவர் பாதங்களில் விழுந்தனர். அங்ஙனம் விழுந்த தம்பியாரை யெழுந்திருக்கச் செய்து திருவஞ்செழுத்தோதி விபூதி சாத்தி யெம்பெருமாற்குத் திருப்பணி செய்யும்படி கட்டளை யிட்டனர். தருமசேன ராகிய வாகீசர் அவ்வாறு திருப்பணி செய்தனர். எம் பெருமானுடைய திருவருளாலவற்குப் பாமாலை பாடு முணர்வு பெருகிற்று. 'கூற்றாயினவாறு' என்னுந் திருப்பதிகம் பாடினர். உடனே சூலை நோய் நீங்கிற்று. அன்றியு மவர்க்குத் திருநாவுக்கரசர் என்னுமோர் திருநாமமு முண்டாயிற்று. அதன் பின் பல தலங்களுக்குஞ் சென்று பாமாலைகள் பாடி யெம்பிரான் றிருவருள் பெற்றுச் சமய குரவர்களு ளொருவராக விளங்கி யிறைவன்றாளினை சேர்ந்தார். திருநாவுக்கரசு நாயனார் சமணப் படுகுழியி னின்றும் நீங்கிச் சைவ சமயத்தை யடைவதற்கும், இறைவன் றிருவருளைப்பெற்று அவர் திருவடி நீழலை யெய்துதற்கும், உலக மெங்கணுஞ் சைவசமயம் பரந்தோங்குவதற்கும், திலகவதி யம்மையாரே பிரதான காரணரா யிருந்தார். இவ்வம்மையார் சகோதரத்துவமுறை பூண்டு சைவ சமயத்தை விருத்தி செய்தனர்.

பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் சைவத்தை வளர்த்த தெய்வத்தமிழ் மகளிரு ளொருவராவர். இவ்வம்மையார் சைவாபிமானம் நிறையப் பெற்றவ ரென்பதற்குப் பல சான்றுகளுள. அம்மையார் தம் நாயகனாகிய அரசனிடத்து எவ்விஷயத்திலும் மாறுபாடின்றி ஒரு மனத்துடன் வாழ்ந்தனரேனும், சமயக்கொள்கையில் வேறுபட்டிருந்த தன்மையொன்றுமே அவர்க்குச் சைவத்தின் மீதிருந்த ஆர்வத்தை வெளிப்படுத்தும். அன்றியும் அரசனைவேண்டி அவனனுமதி பெற்றுத் தமக்குக் கீழ் வாழ்வார் இடையூறின்றி ஆலவா யமர்ந்த அருட் பெருங் கடவுளை வழிபடும்படி யுங் கட்டளை யிட்டனர்; பின் திரு

ஞானசம்பந்தப் பிள்ளையாருடைய மகிமையையும் அவர் வேதாரணியத்திலமர்ந்தருளலையுங் கேள்வியுற்றுச்சில பரிசனங்களை யவர்பா லனுப்பினர். அவர்கள் பிள்ளையா ரமர்ந்த திருமடத்திற்குச் சென்று அவரை வணங்கி 'சுவாமீ! அரசி அமைச்சர் ஆகிய இருவருடைய கட்டளையின்படித் தங்களைத்தரிசனஞ் செய்யவந்தோம்' என்றனர். அப்பொழுது பிள்ளையார் 'மங்கையர்க் கரசியாரும் குலச்சிறையாருஞ் சுகமா யிருக்கிறார்களா?' என வினவினர். அதன்பின் பரிசனங்கள் 'சமணருடைய துர்ப்போதனையினாலே பாண்டியன் சைவ சமயத்தைவிட்டுச் சமண சமயத்திற் பிரவேசித்திருக்கின்றார். அதனாலவ்விருவரும் பெருந் துயரமெய்தி யிருக்கின்றனர். அதை யடிகட்கு முறையிடும் படி பணித்தனர்' என்றுகூறி 'அடிகளே! நீர் எமது பாண்டியநாட்டிற் கெழுந்தருளிச் சமணச் சமணரை வாதில் வென்று சைவத்தை விருத்தி செய்து அரசனையும் விபூதி தரிப்பித்து அந் நகர முய்வடையும் பொருட்டுத் திருவுளங் கொண்டருள வேண்டுமென வணங்கினர். பிள்ளையா ரவர்களுக் கருள் புரிந்து திருநாவுக்கரசு சுவாமிகளுடன் கோயிலுக்குச் சென்று வேதாரணியேசுரரை வணங்கி அவ்விடத்து அப்பமூர்த்திக்கு அரசி, அமைச்சராகிய இருவருஞ் சொல்லி யனுப்பிய வார்த்தைகளைக் கூறிப். பாண்டிநாட்டிற் கெழுந்தருளத் துணிந்தனர். அப்போது திருநாவுக்கரசு நாயனார் 'சுவாமிகாள்! நீரோ சிறு பிள்ளையாயிருக்கிறீர். அவ்விடத்து அச்சமணருடைய வஞ்சனைக்கோ யெல்லையில்லை. தேவரீருக்கு இப்போது கிரகங்களும் வலி யில. ஆதலால் அவ்விடத்திற்கெழுந்தருளல் கூடாது' என்றார். எம்பெருமான் திருவடிகளை வணங்கப் பெறின் நமக்கு வருவதோரிடையூறில்லை யென நினைந்து "வேயுறு தோளி பங்கன்" என்னுந் திருப்பதிகம்பாடிப் பின்னும் பரமசிவனை வழிபட்டு அப்பரை யங்கிருக்கப் பணித்து,முத்துச்சிவிகையேறிச் சோழநாட்டிலுள்ள மற்றைய தலங்களையும் வழிபட்டுப் பாண்டி நாட்டிலுள்ள மதுரை மாநகரம் புக்கார். அச்சமயம் மங்கையர்க்கரசியார்க்கும் குலச்சிறையார்க்கும் நன்னிமித்தங்களும், சமணர்க்குத் துன்னிமித்தங்களும்நிகழ்ந்தன. பிள்ளையார் வரவைக் கேட்ட பாண்டிமாதேவியார் குலச்சிறையார்க்குப் பிள்ளையாரை யெதிர் கொள்ளப் பணித்துத் தாமரசனிடம் விடை பெற்றேகி ஆலவாயிலழனிறக் கடவுளை வந்தித்துப்பிள்ளையாருடைய நல்வரவேற்று வணங்கி யவ ரமர்தற் கோர் திருமடங் கொடுத்து மாளிகைக்கு மீண்டனர். அவ்விடத்து அரசன் துயருடன் பள்ளியிலமர்ந்தார். அதைக் கண்ட தேவியார் "காதல! உமக்குற்ற துயரென்னே" என வினவினர். அரசன் கூறுவான்: 'என் பிரிய நாயகி' சீகாழியினின்றும் ஸ்ரீ பரமேஸ்வரனுடைய திருவருளைப் பெற்ற வொருவர் நமது சமணாசாரியரை வாதில் வெல்வான் கருதி யிவ்விடத்திற் கெழுந்தருளி வந்திருக்கின்றனராம். இதுவே என் கவலைக்குக் காரணம்' என்றார். அம் மங்கை நல்லா ளதைக் கேட்டு யாவராயினும் வாதில் வெல்வாருடைய சமயத்திற் பிரவேசித்தலே தகுதியென விடை மீய்ந்து மீண்டனள்.

சமணர்கள் பிள்ளையா ரமர்ந்த மடத்திற்குத் தீக்கொழுவினர். அங்கமர்ந்ததொண்டர்கள் இது சமணருடைய செய்கை யெனவே நினைந்து இச்செய்தியைப் பிள்ளையாருக்கு முறையிட்டனர். பிள்ளையார் கழிபெருஞ்சிற்றமுற்று இத்தீங்கு அரசனாலேயே நிகழ்ந்ததென நினைந்து இச்சமணரிட்டதீயவ்வரசனையே சென்றுபற்றுகஎன்னும்பொருள்பட 'செய்யனே திருவாலவாய்' எனத் தொடங்கி 'அமணர் கொழுவுஞ் சுடர் பையவேசென்று பாண்டியற்காகவே' எனவோர் திருப்பதிகம் பாடியருளினர். அரசனிடத்துக் குற்ற மிருத்தலாலும் அவன் சைவ சமயத்திற்கு வரவேண்டிய நல்வினை யிருத்தலாலும், பிள்ளையாருடைய திருவாக்கின்படி யரசனை வெப்பு நோயணுகியது. சமணர்கள் தமது மந்திரங்களினாலந்நோயைத்தணித்தற்கு முயன்றனர். அவர்களால் முடியவில்லை. அதைக் கண்டு அரசியும் அமைச்சரும் 'சமணர்கள் பிள்ளையாருக்குச் செய்த தீங்கினாலேயே உமக் கிவ்வாறு வந்தது. ஆனமையால் அப் பிள்ளையாரே யிப் பிணியை நீக்குதற் குரியவர்' என்றார். அரசனதற் கிணங்கி 'அவரை யிங்கழையுங்க' ளென்றார். தேவியும் மந்திரியாரு மனமகிழ்ந்து பிள்ளையாரிடஞ் சென்று அவரை வணங்கியரசற்குநிகழ்ந்ததைக்கூறி யவரைத் தமது மாளிகைக் கெழுந்தருளி வந்து அந்நோயைத் தீர்த்தருளும்படி வேண்டினர். பிள்ளையாரதற் கிசைந்து ஆலவாயமர்ந்த சொக்கலிங்கப் பெருமானை வணங்கி அவரிடம் விடைபெற்று மாளிகையையடைந்தார். அமைச்சனர் அவர் வரவை யரசர்க்கறிவித்தார். அரசன் பிள்ளையாரை வணங்கி யவர் பதி முதலியவற்றை வினவ அவர் அவைகட்குத் தக்க பதிலளித்தார். பின்னவ்விடத்துள்ள சமணர்கள் அவரை வாதில் வெல்வான் கருதித் தங்கள் சமய நூல்களை யெடுத்துரைத்தனர். அரசனவர்களை நிறுத்தி 'எந்நோயைத் தீர்ப்பவர் யாரோ, அவரே வாதில் வென்றவர்' என்றார். சமணர்கள் தாமொரு பக்கத்து நோயைத் தீர்ப்போ மென்றும் பிள்ளையார் மற்றப் பக்கத்து நோயைத்தீர்க்கக்கடவரென்றும்கூறி அரசனுடைய இடப்பாகத்தை மயிற்பீலியினாற்றடவினர்.மேன்மேலு நோயதிகரித்தது. இறைவன் தாங்கலாற்றாது பிள்ளையாரை நோக்கினர். அவர் 'மந்திர மாவது நீறு' என்னுந் திருப்பதிகம்பாடி விபூதியை யரசனுடைய மேனியிற் றடவி யவன் வெப்புநோயை நீக்கி யருளினர். இம் முறையே இன்னு மிரு முறைகளிலுஞ் சமணர்கள் தோற்றழிந்தனர். 'வேந்தனுமோங்கு' என்னுந் திருப்பாட்டினாலே பாண்டியனுடைய கூனும் நிமிர்ந்தது. இவைகள் யாவற்றையு மறிந்து சைவ சமயமே மெய்ச் சமயமெனக் கண்டு இடர் செய்த சமணரைக் கழுவேற்றி அரசன் தானுஞ் சைவனானன். அதைக் கேள்வியுற்று அந்நகரத்தி லுள்ளார் யாவருஞ் சைவராயினர். அக் காலில் சைவ சமயம் விருத்தியாதற்கு மங்கையர்க்கரசியாரே முழு முயற்சியாளரா யிருந்தார். தம் நாயகனுடைய வெப்பு நோய் தீர்தற்கும் கூனிமிர்தற்கும் அவருடைய முயற்சியும் வேண்டுதலுமே பெருங் கருவிகளாயின. அரசனும் தன் மனைவியா லுய்வடைந்தான். இவ் வம்மையார் மனைவியாரா யிருந்து சைவவான் பயிரை வளர்த்தருளினர்.



இந்நாளிலும் நமது சமய விருத்தி பெண்மக்களிலேயே தங்கி யிருக்கின்றது. சமய வளர்ச்சிக்குத் தமிழுணர்

ச்சி யின்றியமையாத தாகும். முன்னாளில் ஆண் பெண்ணுகிய இருபாலாருந் தமிழறிவிற் றலைசிறந்து விளங்கிச் சமய வளர்ச்சிக்குந் தமிழ் விருத்திக்குங் காரணரா யிருந்தனர். இந்நாளில் ஆண்பாலார் ஆங்கிலங் கற்று இராச சேவைகளிற் றங்கள் காலத்தைப் போக்குகின்றனர். அங்ஙனமவர் ஆங்கிலத்தை வளர்த்தாலும் பெண்மக்களாவது தமிழ் மொழியிற் பேரபிமானங் கொண்டு தமிழை வளர்த்தல் வேண்டும். தமிழ் வளரச்சை வந் தானே வளரும். ஆனமையா லிந்நாளிலும் பெண்மக்கள் தமிழறிவிற் சிறந்து சமய வளர்ச்சிக் குரிய முயற்சி செய்வாராயின், சைவந்தானே வளருமென்பது திண்ணம்.

---

# கண்ணகி குறித்த கற்புடை மகளிர்.

சோ. பனையப்ப செட்டியார்.

---

உலகத்துப் பெண்பாலார் யார்க்கும் கற்பு இன்றியமையா அணிகலனும். கற்பாவது கணவனைத் தெய்வமெனவுணர்வதோர் மேற்கோள். கொண்டானிற் சிறந்த தெய்வமில்லை யென்றும், 'அவனுக்கு நீ இன்னவாறு குற்றேவல் செய்தொழுகு' என்றும் தாய் தந்தையாலும், பிறராலும் கற்பிக்கப்பட்டு இவ்வொழுக்கம் நிலைபெறுதலான் இப்பெயர் பெற்றது. இக்கற்புடை நங்கையரே தெய்வமெனப் பேணுந்திறனுடையார். கற்புடை மங்கையாரால் ஆகாத காரியமொன்றில்லை.

தெய்வந் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

முற்காலத்துத் தமயந்தியென்பாள் காட்டிற் கணவனைப் பிரிந்து அல்லலுற்றிரங்கிப் பாம்பாற் பீடிக்கப்பட்டுழி, தன்னை விடுவித்த வேடுவன் தன்மாட்டுக் கேடு நினைத்தலான் அவனை யெரித்தாள். சாவித்திரி யென்னும் மாது காலனாற் கொள்ளப்பட்ட தனது கணவனுயிரை விடாது பின்றொடர்ந்து கைப்பற்றினாள். இன்னு மிதுபோன்ற கற்புடை மங்கையர் சரிதைகள் எண்ணிலவாய் இலங்குகின்றன. கோவலன் என்னும் வணிகன் மதுரையில் பாண்டியன் நெடுஞ்செழியனால் சிலம்பு திருடிய குற்றஞ் சாற்றப்பட்டு வெட்டுண்டிறந்தான். அதனையறிந்த அவன் மனைவியாகிய கண்ணகி யென்பாள் ஆண்டுச் சென்று கோவலன் குற்றமுடையானல்லான் என்பதை நிரூபித்தாள். அதன்மேல் அரசன் நடுநடுங்கி "இழிதகைமையுடைய பொற்கொல்லன் சொற் கேட்ட நானே அரசன்? ஐயோ! அருமந்த குலம் என்னாற் பழியடைந்ததே! என் ஆயுள் இன்றே அழியக்கடவது" என்று துக்கித்துத் தானிருந்த மணியாசனத்தின்மீதே மயங்கி வீழ்ந் திறந்தான். அதனையறியாத அவன் மனைவி தன்னைக் காத்தருள வேண்டுமென்று கண்ணகியின்பாதங்களின் வீழ்ந்தாள்; வீழவே, கண்ணகி, 'இம்மே குறிக்கப்படுகின்ற கற்புடை மங்கையர் எழுவர் பிறந்த நாட்டிற் பிறந்தவளாகிய நான் உண்மையிற் பத்தினியாமாயின், அரசனொடு இம்மதுரையையும் ஒழிப்பேன்'



என்று வஞ்சினங்கூறித் தனது இடக் கொங்கையை வலக் கையாற் றிருகி அதனை யந்நகரத்தின்மீ தெறிந்து காவலன் பேரூரைக் கனலெரி மூட்டினாள். கண்ணகியாற் குறிக்கப்பட்ட கற்புடைய மங்கையர் எழுவர் வரலாறும் பின் வருமாறு:—

(க)

வன்னிமரமு மடைப்பள்ளியுஞ் சான்றாக
முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள்,

கடலோடுசென்று காவிரிகலக்குஞ் சங்கமுக மென்னுந் துறைமுகத்தையுடைய காவிரிப்பூம்பட்டினத்தின்கண் எல்லையில் செல்வமுடைய வணிகனொருவ னிருந்தான். அவன் புத்திரப்பேறின்மையாற் பலவகைய றங்களை யாற்றி, அதன் பயனாய் ஓர் பெண்மகவைப் பெற்றான். அவ்வணிகன் பாடல்சால் சிறப்பிற் கூடல் நகர்க்கண் மண முடித்துக் கொண்டிருக்கும் தன் மருமகனுக்கே தம்மகவை வ க் கொடுப்பதாகச் சுற்றத்தா ரறியச் சொல்லிக் கொண்டிருந்து சின்னாட்களில் இறந்துவிட்டான். அந்நாளிலேயே அவன் மனைவியும் பிரிவாற்றாது உடனிறந்தாள். சுற்றத்தார் அவ்விருக்கும் அபரக் கிரியைகளைச் செய்த பின்னர் அவன் மருமகனுக்கு ஓலையனுப்பினர். மருமகன் அவ்வோலையை கண்டுழி மிகவுங் கவன்று கிளைஞர் தேற்றத் தெளிந்து மதுரையை நீங்கி காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்துமாமனுடைய இல்லின்கண் இருந்தான். சின்னாட் கழிந்தபின்பு அப்பெண்ணை மதுரைக்கு அழைத்துச் சென்று ஆண்டுள்ள கிளைஞர் அறிய மன்றல் வினை யாற்றுவே னெனக் கூறி மாமனுடைய செல்வங்களை யெல்லாம் உடன்கொண்டு மதுரையினின்று தன்னுடன் போந்த சுற்றத்தினரை முன்னே போமாறு சொல்லித் தான் அப்பெண்ணை யழைத்துக் கொண்டு மெல்லச் சென்றான். திருப்புறம்பயம் என்னும் ஸ்தலத்திற்குச் சென்று அன்றிரவை ஆண்டுக் கழித்து வைகறையிற் புறப்படுவா மென்று, அணிமைக்கணுள்ள கிணற்றில் ஸ்நானஞ் செய்து ஆண்டுள்ள வன்னிமரத்தடியிற் சமையற் செய்து போனகமருந்தி கோயிற்படியொன்றில் தலையை வைத்து நித்திரை செய்தான். அவ்வமயம் ஒரு சர்ப்பம் அவனைத் தீண்ட விடந்தலைக்கேறியிறந்தான். உடனிருந்த சேடிப் பெண்கள் அவனுக்குற்றதை யுணர்ந்து புலம்பி நின்றனர். அப் பெண் இவைகளைக்கண்டு ஒரு சாரொதுங்கி அறிவிழந்து மயங்கி இறந்தவள் போலானாள். துன்பம் என்பது இத்தன்மைத்தென அறியாதவளாதலான் ஆற்றாது அவன் மேற்கொண்ட காதலுற்றுருகினாற் போன்று அன்றிரவெல்லாம் தனியே யிருந்து வாய் விட்டரற்றினாள்.

சிவபெருமான் எழுந்தருளி யிருக்குந் தலங்கடோறுஞ் சென்று சுவாமி தரிசனஞ் செய்து கொண்டு வந்து அணிமைக்கணுள்ள திருமட மொன்றில் எழுந்தருளி யிருந்த மலைமகள் ஞான முண்டாராகிய திருஞான சம்பந்தப் பெருமான் அவ்வழுகுரலைக் கேட்டு அங்கெழுந்தருளிவந்து அப்பெண்ணை நோக்கி "நீயார்? நிகழ்ந்த தென்னை?" என வினவி யருளினர். அவள் தன் மரபும், தாய்தந்தையரும், அவர் தன்னையிவனுக்கே மண முடிப்பேனெனக் கூறியதும், இவனிறந்ததும் ஆகிய எல்லாவற்றையும் கூறினாள். பெருமான் தமியளாகிய அப்பெண்மேல் எளிமை கொண்டு இறந்த அவ் வணிகனுக்குச் சமீபத்திற் சென்று அவன் உயிர்பெற் றெழுமா

று திருக்கண் சாத்தியருளினர். இறந்த வணிகன் துயிலெழுவான் போன்று எழுந்து நாயனரை வணங்கி நின்றான். அக்கன்னிகை உவகைக் கடலுண் மூழ்கி யொருசாரொதுங்கி நின்றாள். அக்கன்னிகை, தன் மாமனுடைய மகனை யிருந்தும் அவனிறந்த போதும், உயிர் பெற்றெழுந்த போதும் அவனைத் தீண்டாத நிலையையும், கற்பினையுந் திருஞான சம்பந்தப் பெருமான் கண்டு அவ்வணிகனை நோக்கி "உன் மாமன் பெற்ற இவள் சோபன காலத்தில் அல்லது துக்க காலத்தி லல்லா தென்று உன் தேகத்தைத் தீண்டப் பெறுவாள்? ஆதலான் இவ்விடத்திற்றானே மணவினை யாற்றிச் செல்வாய்" என்றார். அக்கட்டளையைச் சிர மேற்கொண்டு பெருமானை வணங்கிக் 'கிளைஞருஞ் சான்றுகளு மின்றி யெவ்வாறு மணவினை முடிப்பேன்' என்று வினவ "உன் மாமன் இக் கன்னிகையைப் பெற்ற ஞான்றே உனக்கே மணமுடிப்பேன் எனக் கூறியதைச் சுற்றத்தார் யாவரு மறிவர். அன்றியும் இந்த வன்னிமரமும் சிவலிங்கமுங் கிணறுஞ் சாக்ஷியாம்; நம் வார்த்தையைக் கடவாது மணமுடிப்பாய்" என்று பெருமா னருளிச்செய்தார். அதனைக் கேட்ட வணிகன் "அடியேனுக்குத் தாய் தந்தையரும் பிறவும் நீவிரே" என்று பெருமானை வணங்கி அவர் கட்டளைப்படி மணவினை யாற்றிக்கொண்டு மனைவியொடு அப்பெருமானை வணங்கி விடை பெற்றுக்கொண்டு மதுரைக்குச் சென்றான். மதுரைக்கணுள்ள கிளைஞர் யாவரும் அவ்வரலாற்றைக் கேட்டு மகிழ்ந்தனர். வணிகன் தன்னுடைய பொருளும் தன்மாமனுடைய பொருளுங் கொண்டு வாணிபம் ஆற்றிக் குபேரனைப் போன்று வாழ்ந்தான்.

அவனுடைய மூத்த மனைவிக்குத் துஷ்டர்களாகிய பல பிள்ளைகளும், இளைய மனைவிக்கு ஒரு சற்புத்திரனுமுண்டு. இருவருடைய பிள்ளைகளும் தெருவில் விளையாடுங்கால் மூத்தவளுடைய பிள்ளைகள் இளையவளுடைய பிள்ளையை அடித்தார்கள். இளையவள் அதுகண்டு பொறாது அப் பிள்ளைகளை வைதாள். மூத்தவள் இளையாளை நோக்கி "நீ எந்தவூர்? எந்தச் சாதி? யார் மகள்? யாவர் முன்னிலையில் தீக் கடவுள் சான்றாக என்னையகன் உன்னை விவாகஞ் செய்தான்? என்னையகன் எழில் கண்டு ஆசைப்பட்டுவந்த காமக் கிழத்தியாகிய உனக்கு வாயேன்? பெருமையேன்? என் னையகன் உன்னை மணவினையாற்றியதற்குச் சான்றாக ளுண்டோ? சொல்வாயாக" என்றாள். இளையவ ளதனைச் செவியுற்று வருந்தித் 'திருப்புறம்பயம் என்னுந் தலத்திலே என்னுடைய நாயகர் விடந்தீண்டி யிறந்தபோது தம்மை யுயிர்ப்பித்த திருஞான சம்பந்தப் பெருமான் திருவருளினாலே, சிவலிங்கமும் வன்னி மரமும் கிணறுஞ் சாக்ஷியாக என்னை மணமுடித்தார். அம் மூன்று சாக்ஷிகளும் உள' என்றாள். மூத்தவள் நகைத்து 'மணத்திற் கேற்ற சான்றுகளையே கூறினை. நன்று! நன்று!! அச்சான்றுகள் இங்கும் வருமாயின் அஃதுண்மைதான்' என்றாள். இளையவள் பெருமூச் செறிந்து புலம்பி யில்லிற்குச் சென்று 'தாய் தந்தைய ரில்லாத தமியளாகிய எற்குத் தெய்வமே துணை' என்று மனந் தேறி அன்றிரவு ஊணுறக்க மின்றி வைகறையி லெழுந்து பொற்றாமரையில் ஸ்நானஞ் செய்து சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளிலே வீழ்ந்து 'மாமனாக வந்து வழக்குரைத்த பெருமானே! என்மணத்திற்குச் சான்றாயிருந்த வன்னிமரமும் சிவலிங்கமும் கிணறும் ஆகிய மூன்றையும் இன்றைக்கு இங்கே வருவித்து மாற்றாளுடைய வாய்ப்பழியைத் தீராதொழிவீரேல், நான் என்னுயிரை மாய்த்துக் கொள்வேன்' என்று முறையிட்டாள். அப்பொழுது அவள் நிலையையுணர்ந்த ஸ்ரீ சோமசுந்தரப் பெருமானின் திருவருளினால் கோயிலின் ஈசான மூலையில் அச்சான்றுகள் மூன்றுந் தோன்றின. இளையவள் மூத்தவளை யழைத்து வந்து அவைகளைக் காட்ட அவள் கண்டு நாணித் தலை குனிந்தாள். இளையவளுடைய கற்பையும் சிவபக்தியையுங் கண்ட அந்நகரத்தி லுள்ளார் யாவரும் மகிழ்ந்தார்கள். மூத்தவளை இவள் கொடியவளெனப் பழித்தார்கள். நாயகனாகிய வணிகனும் குற்றமற்றவளைப் பழித்த பாவி என்று மூத்தவளை விலக்கி வைத்தான். இளையவள் அதனை யறிந்து 'என்னுடைய கற்பை யுலக மறியச் செய்தவள் இவளேயாம். தாயில்லாத அடியேனுக்கு இவளே தாயுமாவள்; இனி யிருவரும் ஒன்றி வாழ்வோம்' என்று கூறி, அவ்வாறே தம்மு ளிணங்கி வாழ்ந்தார்கள்.

(௨)

"கரையின் மணற்பாவை நின்கணவ
னாமென்
றுரைசெய்த மாதரொடும் போகா—
திரைவந்
தழியாது சூழ்தர வாங்குந்திநின்ற
வரியா ரகலல்குன் மாதர்"

காவிரிப்பூம்பட்டினத்தில் சில சிறு பெண்கள் கூடி விளையாடி மிடத்து, ஒரு சிறுமியைப் பார்த்து மற்றைச் சிறுமிகள் 'இம்மணற்பாவையே உன்னுடைய கணவனாவான்' எனக் கூற, அச் சிறுமி அம் மாதர்களுடன் இல்லிற்கும் போகாதவளாகிச் சமுத்திரத்தின் அலைகளான் அம் மணற்பாவை அழியாவண்ணம் அங்குக் காவலாக நின்று கொண்டிருந்தாள்.

(௩)

"..........உரைசான்ற
மன்னன் கரிகால் வளவன் மகள்
வஞ்சிக்கோன்
தன்னைப்புனல் கொள்ளத்தான்
புனலின்பின் சென்று
கன்னவி ரோளாயோ வென்னக்
கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத்
தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப்போதந்தாள்"

சோழவரசர்களுள்சிறந்தோனாகிய கரிகாற் பெருவளத்தான் மகளாகிய நல்லிசைப் புலமை வாய்ந்த ஆதிமந்தி யாரென்பார் நீர்விழ வொன்றில் கழாரென்னும் ஊரைச்சார்ந்த காவிரித்துறையில் கணவனாகிய அத்தியுடன் நீராடுகையில் அவனைக் காவிரிவெள்ளம் கவர்ந்து கொள்ள, இவர் அவனைக் காணாது பல இடங்களிலுந் தேடித் தேடிச் சென்று கடற்கரையில் ஆராற்றிக் கொண்டு நிற்கையில் இவரது கற்பின் பெருமையால் கடல் அவனைக் கரைக்கு அணித்தானவிடத்திற் கொணர்ந்து காட்ட இவருடைய துயரத்தை யறிந்தவளும் அங்கு நீராடிக் கொண்டிருந்தவளுமாகிய மருதியென்பாள் கண்டு அவனையழைத்து வந்து சேர்க்க மகிழ்ந்தாள்.

(௪)

"மணமலிபூங்கானல்வருகலன்கணோக்கிக்
கணவன்வரக் கல்லுருவ நீத்தாள்."

காவிரிப்பூம் பட்டினத்துப் பிறந்த மற்றோர் மங்கை தன்னை மணந்த கணவன் கடல் யாத்திரை முடித்துத் திரும்பும் வரையில் தனது கற்புக்கு ஏதம் வாராமற் காத்தற் பொருட்டு அக் கற்பின் மாட்சியால் கல்லுருவம் பெற்று அவன் திரும்பி வந்தவுடன் அவ்வுருவத்தை நீக்கித் தனதியற்கை வடிவம் பெற்று அவனுடன் இல்லறம் நடாத்தி வாழ்ந்தாள்.

(௫)

“.........................இணையாய
மாற்றாள் குழவி விழத்தன்
குழவியுங் கிணற்று
வீழ்த்தேற்றுக் கொண் டெடுத்த
வேற்கண்ணாள்.”

அங்கரத்துப் பிறந்தவளாகிய மற்றொரு மங்கை தனது சகளத்தியின் குழவி தவறிக்கிணற்றில் விழுந்தவுடன் தன்போல்வாள்மகவில்லாதிருக்கத் தான் மாத்திரம் குழந்தை யுடையவளாயிருத்தல் தகுதியன்று எனவெண்ணித் தன் குழந்தையையும் கிணற்றிற் போட்டு விட்டாள். அவள் கற்பின் உறுதியையும் மேம்பட்ட குணத்தையுமறிந்த தெய்வத்தினருளால் இரண்டு குழந்தைகளும் உயிருடன் மிதந்து வரப்பெற்று மகிழ்ந்தாள்.

(௬)

“.........................வேற்றொருவன்
நீணோக்கங் கண்டு நிறைமதி
வாண்முகத்தைத்
தானோர் குரக்கு முகமா
கென்று-போன
கொழுநன்வரவே குரக்கு
முக நீத்த
பழுமணி யல்குற்
பூம்பாவை.”

அங்கரத்துத் தோன்றிய மற்றோர் வனிதை தன் கணவன் அயலூர் சென்றிருந்த பொழுது ஆடவனொருவன் தன்னை விடாது நோக்குகின்ற காமப்பார்வையைத் தெரிந்து சகியாளாய்த் தன் கணவன் வருமளவும் குரங்கு முகம் வரும்படி சிந்தித்துப் பெற்றுத் தன் கணவன் வந்தவுடன் அம் முகத்தைப் போக்கித் தன்னியற்கை முகமடைந்தாள்.

(௭)

“பெண்ணறி வென்பது பேதைமைத்
தேயென் றுரைத்த
நுண் ணறிவினோர் நோக்க
நோக்காதே-யெண்ணிலேன்
வண்ட லயர்விடத் தியானோர்
மகட் பெற்று
லொண்டொடி நீயோர் மகப்
பெறிற்-கொண்ட
கொழுந னவளுக் கென்றியா
னுரைத்த மாற்றங்
கெழுமி யவளுரைப்ப கேட்ட
—விழுமத்தாற்
சிந்தை நோய் கூருந்
திருவிலேற் கென்றெடுத்துத்
தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்
டாளாய்—முந்தியோர்
கோடிக் கலிங்க முடுத்துக்
குழல் கட்டி
நீடித்தலையை வணங்கித் தலைசுமந்த
வாடகப் பூம்பாவை”

காவிரிப்பூம் பட்டினத்துத் தோன்றிய இரண்டு பெண்கள் சிறுவயதில் வண்டலியற்றி விளையாடுங்கால், தம்மிருவருக்கும் ஆண் பெண் என்னும் பாற்பகுதிப்படி மகவுண்டாமாயின், அவ் விருவருக்குமே மணமுடிப்போமெனப் பேசிக்கொண்டார்கள். பிறகு அவ்விருவருக்கும் பருவகால முற்றுழி மணவினை முடிந்து புத்திரப்பேறுண்டாய்ப் பேசிக்கொண்ட வாறே ஆண்பெண் என்னும் இருபாற் பகுதிப்படி பிறந்தன. ஆனல் அப்புத்திரன் முடவனு யிருந்ததைக்கண்ட பெண் மகவீன்ற மாது, தனது நாயகனை நோக்கி ‘நான் சிறுவயதில் பெண்களின் அறிவு பேதமைத்து என ஆன்றோர் கூறியதை ஆராயாது வண்டலாட்டயருங்கால் இவ்வாறு பேசிக்கொண்டதுண்டு; இப்போது அப்புதல்வன் முடவனு யிருக்கிறனென வருந்துகிறேன்’ என்று சொல்ல ‘எப்போது நமது தாய் அவனுக்கென் றுரைத்தனளோ, அப்போதே நான் அவனுக் குரியவளாயினேன்’ எனச் சிந்தித்தவளாய் அவள் புத்திரியாகிய பெண் இறைப்பொழுதுந் தாழ்க்காமற் கோடி யுடுத்துக் கூந்தலை வாரி முடித்துக் கொண்டு அப் புத்திரனைத் தன் தலைமீது சுமந்து நின்றனள்.

மேற் கூறப்பட்ட கற்புடை மங்கையர் எழுவர் சரித்திரங்களால், கற்புடைப் பெண்டிர் மிகச்சிறந்தோரென்பதும், அவர்கள் எக்காரியங்களையுஞ் செய்ய வல்லுநர் என்பதும் பெறப்பட்டன.



# பிற நாட்டில் இந்தியர்.

அறிஞர் ஸி. எப். ஆண்டிரூஸ்.

பிறநாடுகளிலுள்ள எளிய வாயில்லாத இந்தியர்களின் நிலைமையைப் பற்றித் தமிழ் மக்களுக்காக ஒரு சிறு வியாசம் எழுதும்படி ‘குமரன்’ ஆசிரியர் என்னைக் கேட்டிருக்கிறார். நான் மிகுந்த களிப்புடன் அவ்விதம் செய்வதில் எனது வார்த்தைகள் பலரின் உளத்தில் பதியுமென்று நம்புகிறேன்.

பீஜியிலும் நேட்டாலிலும் இலங்கையிலும் இன்னும் பல நாடுகளிலும் கூட—உலகத்தின் சகல பாகங்களிலும்—தமிழ் வேலையாட்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்களின் தேவை உண்மையாகவே மிகப் பெரியதென்றும் அநேக நாடுகளில் அவர்களின் துன்பங்கள் மிகக் கொடியவை என்றும் நான் சந்தேகமறச் சொல்லக்கூடும். பீஜியையும் நேட்டாலையும் பற்றிய வரையில் மேற்கூறியவை விசேஷமாய் உண்மையாகின்றன. அவர்களில் பலர் இப்போது நேட்டாலில் வெளியேற்றப்பட்டு இந்தியாவுக்குத் திருப்பி யனுப்பப்படுகின்றனர். அவர்கள் இங்கு வந்து உதவி யின்றித் தட்டழிகின்றனர். நேட்டாலிலிருந்து திரும்பி வந்து அந்த எளிய கதியற்ற மக்களின் நன்மைக்காக உழைக்கும் ஸ்ரீமான் ஸி. ஆர். நாயுடு அவர்களுடன் தமிழ் மக்கள் ஒத்துழைக்க வேண்டுமென நான் பலமாய் வற்புறுத்துவேன். அவர் சென்னையில் வெளியாகும் ‘பிறநாட்டில் இந்தியர்’ என்னும் பத்திரிகையின் ஆசிரியராவர். வெளிநாடுகளிலிருந்து திரும்பிய தொழிலாளரின் குறைகள் ஏதேனும் அவருக்கு அறிவிக்கப் பெறின், அவர் அவர்களுக்கு உதவி புரியத் தம்மால் கூடிய வரையில் முயலுவார். இனித் தமிழ் நாட்டிலிருந்து தொழிலாளர்கள் பீஜி, பிரிட்டிஷ் கயானா, மோரிஷஸ் போன்ற தூர இடங்களுக்குப் போவதைத் தடுப்பதில் நான் மிகுந்த கவலைக் கொண்டிருக்கிறேன்.

ஆனல் நான் மலேயா நாட்டில் தொழிலாளர்களின் நிலைமையைப் பார்த்திருக்கிறேன். அங்கு அவ்விதமான துன்பம் மிகுதியாகக் காணப்ப

டவில்லை என்பதை அறிந்து கொண்டிருக்கிறேன். மேலும் மலேயாவுக்குப் போவதும் அங்கிருந்து திரும்புவதும்சுலபமாயிருக்கிறது. ஆனால் தூரதேசங்களுக்கு ஒருமுறை புறப்பட்டால் திரும்பிவருவதுதொழிலாளர்க்கு மிகுந்தகஷ்டமாயிருக்கிறது. ஆனதால் மலேயா, இலங்கை போன்ற அண்மையிலுள்ள நாடுகளையும் பிரிட்டிஷ் கயானா, பீஜி போன்ற சேய்மைக் கண்ணுள்ள நாடுகளையும் நான் நன்குவேறுபடுத்துகிறேன். இலங்கையிலும் மலேயாவிலுமுள்ள தமிழ்த்தொழிலாளிகளின் நிலைமையைச்சீர்ப்படுத்த நம்மாலியன்றவரையில் முயற்சிசெய்யவேண்டும். அன்றியும் இனிமேல் தொழிலாளர் பீஜி, பிரிட்டிஷ் கயானா, மோரிஷஸ் போன்ற தூரஇடங்களுக்குச் செல்வதை நிறுத்துவதற்கு நம்மாலியன்றதைச் செய்யவும் வேண்டும்.

எனக்குக் கிடைத்த சிறிது அவகாசத்தில் இந்த அவசர வாக்கியங்களையே எழுத முடிந்தது. ஏனெனில் இப்போது எனக்கு வேலை அதிகம்; நான் மலேயா தொழிலாளர்களைப்பற்றிய அறிக்கையும் அஸ்ஸாமில் அமின் விசாரணைக் கமிட்டியின் முன்னுரையும் எழுத வேண்டியிருக்கிறது. தமிழ் மக்களுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தை யறிவிப்பதுடன் அவர்களிடத்து எனக்குள்ள ஆழ்ந்த அநுதாபத்தையும் தெரிவிக்கிறேன்.

---

# சிறுவர் உலகம்.

## வினவும் விடையும்.

---

பி. ஸ்ரீ. ஆச்சாரியார்.

சுமார் எழுநூறு ஆண்டுகளுக்கு முன், திருவரங்கப் பெருநகரில் ஒரு பெரியார் இருந்தார். இவர் உண்மை நெறியாகிய அன்பு நெறி நின்று, ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் 'பணி செய்து கிடப்பதே பேரின்பம்' என்னும் கொள்கையினை நந்தமிழ்நாடெங்கும் பரப்பிவந்தார். இவரது சொற்பொழிவுகளைக்கேட்டு இன்புறுவதற்கு எண்ணிறந்த ஜனங்கள் கூடுவது வழக்கம். இவர் பேசுகையில் உண்மையாகிய உள்ளொளி இவரது முகத்திலும் வாக்கிலும் ஒளிர்ந்து, கேட்போர் உள்ளங்களை யெல்லாம் கவர்ந்து விடுவதால், அவர்களெல்லாம் மோக நித்திரைக்குள்ளானவர்களைப்போல் தம்மை மறந்து செயல் அற்றிருப்பர்.

ஒருநாள் இப் பெரியார் தொண்டின் அருமை பெருமைகளைக் குறித்து ஓர் பேருரை நிகழ்த்தினார். இதன் முடிவில் சபையோரிற் சிலர் தங்கள் ஐயங்களை வினா வடிவமாக்கித் தீர்த்துக்கொள்ள முயன்றனர். அக் கூட்டத்துள் ஒருவன் கடைசியாக எழுந்து நின்று 'தொண்டனது இலக்கணங்கள் எவை?' என்று கேட்டுவிட்டு ஆசிரியரது அடிகளில் விழுந்தான். ஆசிரியர் அவனை வாரி யெடுத்துத் தழுவிக்கொண்டு, முகத்தையுற்று நோக்கினார். நோக்கிய கண்கள் சில நிமிஷ நேரம் இமையாது நின்றன. அக் கண்களில் அருளும் நகையும் ஒருங்கே யரும்பின. ஆனால் இத் வாய் மாத்திரம் மலரவில்லை. இத்



காட்சியைக் கண்ணுற்ற பேரவையும் மோனத்தில் மூழ்கிக் கிடந்தது.

மோனத்தைக் கடைந்து கொண்டு மீண்டும் அவ்வினா எழுந்தது. "தொண்டனது இலக்கணங்கள் எவை? சாத்திரச்சந்தடிகளிலே இதன் விடையை உற்றுக் கேட்க வகையறியாது மயங்கும் நாயேனுக்கு இரங்கியருள் புரிய வேண்டும்" என்று சீடன் மன்றாடினான்.

அப்போது ஆசிரியர் நம் செந்தமிழ் நாட்டின் வட எல்லையாகிய வேங்கட மலையிலுள்ள மருந்தே ஐயம் என்னும் பிணியைமுற்றிலும் ஒழிக்க வல்லதென்று அருளினார். அந்நாளில் இவ் அருமருந்தினைப் பலர்க்கும்தெரிவித்து ஆன்மாவிற்கு ஆரோக்கியம் விளைத்துவந்த ஒரு வைத்தியர் வேங்கடத்தில் வசித்து வந்தார். இவரையடைந்து நோய் களைய வேண்டுமென்பதே ஆசிரியர் குறிப்பென்று மாணக்கன் உள்ளத்தில் புலப்பட்டது. அன்பர்களே! பாருங்கள் முற்காலத்துக் கல்வி முறையை. சந்தேகம் பிறந்தவுடன் ஆசிரியர் தாமாக ஒன்றும் புகட்டவில்லை. புத்தகங்களையே மீண்டும் மீண்டும் குருட்டுப் பாடமாகக் கற்பிக்கவில்லை; கற்கும்படி வற்புறுத்தவுமில்லை. மாணக்கனது உள்ளத்திலிருந்தே அறிவு ஊறவேண்டும்; ஊறி யூறிப் பெருக வேண்டும். இங்ஙனம் அறிவைப் பெருக்குவதற்குத் தோண்டித் தோண்டி யாராய்வதே சிறந்த நன் முறையாகும். சீடன் ஆராய்ந்து தானே உண்மை காண வேண்டும். இதுவே கல்வி. இதற்கு ஆசிரியன் வழிகாட்டி நிற்கின்றான். இதுவே ஆசிரியன் கடமையாகும்.

ஆசிரியனது குறிப்புணர்ந்த மாணக்கன் அரங்கமா நகரிலிருந்து வேங்கடமலைக்குப் புறப்பட்டான். அக்காலத்தில் பிரயாணமென்பது எளிதன்று. ஆவி ரதமில்லை; சுகமாகப் பிரயாணம் செய்வதற்குரிய வசதிகளில்லை. ஆனால் அறிவுத் தாகத்தால் வருந்துவோன் இத்தகைய சௌகரியங்களைக் கவனித்துச் செல்வானா?

பல தினங்களாக நடந்து சென்று சீடன் வேங்கடத்தை யடைந்தான். தமிழிலக்கியங்களிலும் பெரியார் பாசுரங்களிலும் பிரசித்தியாகக் கூறப்படும் வேங்கடத்தையும் மலைமருந்தாகிய இறைவனையும் தொழுதபின், அம் மருந்தினை நோயாளிகளுக்கு அன்போடு அறிவிக்கும் சித்த வைத்தியராகிய ஆசிரியரது மடத்திற்கு நமது பிரயாணி சென்று, அங்கே தொண்டர் கூட்டில் ஒதுங்கினின்றான்.

புதியவனைக் கண்ணுற்ற ஆசிரியர் 'யார்?' என்று வினவினார். 'நாயடியேன் அரங்கதினின்றும் வருகின்றேன். தொண்டனது நல்லிலக்கணத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதே என் பிரயாணத்தின் பெருநோக்கம்' என்று சீடன் தெரிவித்துக் கொண்டான்.

ஆசிரியர் முகமும் கண்ணும் ஒளிவிட்டு விளங்கின. உடனே அவர் முகத்தைத் திருப்பிக்கொண்டு மடத்துள் மறைந்து விட்டார். வினாவிற்கு விடை கொடாது அவர் சென்றது தொண்டர் குழுவில் பேராச்சரியத்தையுண்டு பண்ணிவிட்டது.

### II

நமது பிரயாணியைக் கவனிப்பார் ஒருவருமில்லை. அவனது பசிக்கு உணவளிப்பாரு மில்லை. மடத்திலுள்ள தொண்டர்கள் உணவு கொண்டார்கள். ஆசிரியரோடு வார்த்தையாடினார்கள். ஆனால் வருந்தி வந்த

விருந்தினன் முகத்தை ஒருவருமே பார்க்கவில்லை; பார்க்கத் துணியவுமில்லை. இவ்விதமாகப் பகறபொழுது கழிந்தது.

இரவிலே வழக்கம்போல்காலக்ஷேபம் நடந்தது. ‘வேங்கடமாமலை—ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே!’ என்னும் அருளிச் செயலின் கருத்து இனிது விளக்கப்பட்டது. இத்தகைய நம்பிக்கையே நலந்தருமென்றும், நம்பிக்கை யற்றவர்க்கு இம்மையுமில்லை, மறுமையுமில்லை யென்றும், ஞானபக்தியின் உயர்நிலை பரிபூரண நம்பிக்கையாகிய மகா விசுவாசமே யென்றும், நம்பிக்கையின் அளவாகவே பக்தியோகத்தாலும் பிறயோகங்களாலும் நற்பலன்கள் சித்திக்கின்றன வென்றும், நம்பிக்கை கேவலம் மூட நம்பிக்கையாகாமல் அகன்றநல் அறிவின் பயனாக வளர்ந்தோங்க வேண்டுமென்றும், நம்பிக்கையே வேண்டியாங்கு விரைந்தளிக்கும் கற்பகமென்றும் ஆசிரியர் பேசினார். இவ் அமுதவாரியிலே ஆழ்ந்து மூழ்கிய பிரயாணி பசியையும் தன்னையும் அறவே மறந்து விட்டான்.

காலக்ஷேபத்திற்குப் பின் இரவிலும் உணவு அருந்துவோர் அருந்தினர். ஆனால் நமது பிரயாணிக்கு ஒருவரும் உண்டி வழங்கவில்லை. அவனுக்கு உறங்கவும் இடம் இல்லை. அவனிடம் ஒருவரும் பேசவுமில்லை. அவன்பசித்திருந்தான்; விழித்திருந்தான்; தனித்திருந்தான். ஆனால் மகிழ்ந்திருந்தான். புதுநாள் பொழுதுபுலர்ந்தது. காலையிளவெயிலில் வேங்கடமலை இன்பவொளி மயமாக விளங்கியது. அப்போது ஆசிரியரும் பிரயாணியை அழைத்து நேராடி வரும்படி ஆணை தந்தார். பிரயாணியும் அவ்வண்ணமே சென்று, ஆசிரியரது அடிகளில் முடிபட விழுந்து கிடந்தான்.

ஆசிரியர் அவனை முடிபிடித்து எடுத்து முகம் நோக்கி யருள்பொழிந்து ‘உண்ணும்’ என்று உபசரித்தார். அவன் உண்டு இளைப்பாறியபின் ‘போய் வரலாமெ’ன்று விடை கொடுத்தார்.

பிரயாணி மறுபடியும் ‘தொண்டன் எப்படியிருப்பான்?’ என்று அமைதியோடு வினவினான். ஆசிரியர் சிரித்துக்கொண்டே, கொஞ்ச தூரத்திலிருந்த கொக்கையும் கோழியையும் அருகே யிருந்த உப்பையும் சுட்டிக்காட்டி,

“கொக்கைப் போலிருப்பான்
கோழிபோலிருப்பான்
உப்பைப் போலிருப்பான்
உம்மைப் போலிருப்பான்”

என்று கூறிவிட்டு மடத்திற்குள் பனிச்சென்று பாய்ந்து மறைந்து விட்டார். அடியார்களது வியப்பு அளவுகடந்து அதிகரித்தது.

பிரயாணியின் உள்ளத்திலே குறித்த வசனங்கள் ஆழ்ந்து பதிந்தன. திசையெலாம் ஒளிரும் காலை யிரவியைப்போல, அவனது உள்ளத்தினுள்ளே ஆசிரியரது நல்லருள் உதயமாயிற்று. ஐயம் என்னும் இருள் பறந்தோடிப் போயிற்று.

பிரயாணி அரங்கமாநகருக்குத் திரும்பினான். வழியெலாம் வேங்கடமலையில் உதயமாகி ஒளிபரப்பும் ஞானசூரியனை வாயார, மனமார வாழ்த்திக் கொண்டே களைப்பின்றி நடந்தான்.

## III

திருவரங்கத்தில், வழக்கம்போல் காலக்ஷேபம் தொடங்கப் போகின்றது. அடியார்கள் பெருந்திரளாகக் கூடி யிருக்கின்றனர். அப்போது



நமது பிரயாணி அங்கே பிரவேசிக்கின்றான். ஆசிரியர் அவனை நோக்குகின்றார். ஐயந்திரிபற்ற அறிவு முகத்தில் ஒளிவிடுவதைக் கண்டு அகமகிழ்ந்து முகமலர்ந்து, வேங்கடத்தில் கிடைத்தவிடையை அரங்க நகர்ச் செல்வர்களுக்கு வெளியிடவேண்டுமென்று கட்டளையிடுகின்றார். சீடன் அவ்வாறே வெளியிடுகின்றான். ஆசிரியர் அவ்வெள்ளைச் சொற்களின் புதை பொருளைப் பெரு மகிழ்வோடு சபையில் வழங்குகின்றார். அதுவே அன்று நிகழும் உபந்யாசமாக விரிகின்றது. அதன் சாராம்சம் வருமாறு:—

அன்பர்களே! தொண்டன் யார்? இவ்வினாவிற்கு வேதம் வேண்டாம்; வேதாந்தம் வேண்டாம்; வேதாங்கமாகிய சாத்திரங்களும் வேண்டாம். இயற்கையை வினவுங்கள். இயற்கையே விடை தருகின்றது. இயற்கையே இறைவனது முதல் நூல்; அன்புருவாகிய அழகனது ஆதிவேதம். பிரபஞ்சமே பேராசிரியன்.

‘தொண்டன் எப்படி யிருப்பான்?’

“கொக்கைப் போலிருப்பான்.”

கொக்கைப்போல் உள்ளும் புறமும் ‘வெள்ளை’யா யிருப்பவன் தொண்டன். ‘வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை’ என்பது முதுமொழி கள்ளமும் கபடமும் அற்று, உள்ளும் புறமும் ஒன்று யிருப்பவன் தொண்டன். இன்னும் ஒருண்மை கொக்கினிட மிருந்து கற்கத்தக்கது:—

“ஓடு மீனோடி ஒருமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு”

கொக்கு ஒரு சரியான மீன் வருமளவும் காத்திருப்பது போல், தொண்டன் நல்லாசிரியனுக்காகவும் நல்ல தோழனுக்காகவும் காத்திருக்க வேண்டும்; கொக்கைப்போல்வே பற்றிக்கொள்ளவும் வேண்டும். இது தொண்டனது இரண்டாவது இலக்கணம். இனி, தொண்டன்

“கோழிபோ லிருப்பான்.”

எவ்வாறு? குப்பையைக் கிளறும் கோழியை அறியாதார் யார்? குப்பையிலிருந்து தானிய மணிகளைக் கோழி பொறுக்குகின்றது. அவ்வண்ணமே, தொண்டனும் வேத சாத்திரக் குப்பைகளிலிருந்தும் ஆராய்ச்சி வாயிலாக உண்மை மணிகளைப் பொறுக்கி யெடுக்க வேண்டும். பொறுக்கிய தானியங்களைக்கோழி தன் குஞ்சுகளுக்கு அளித்தே யருந்துவது போலத் தொண்டனும் தான் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு மகிழ வேண்டும்.

இங்ஙனம் கொக்கிடமிருந்து இரண்டு முக்கிய இலக்கணங்களும், கோழியிட மிருந்து இரண்டு இலக்கணங்களும் தொண்டன் பெறுகின்றான்.

இனி “உப்பைப்போலிருப்பான்” தொண்டன். உப்பு அதி முக்கியமான இலக்கணத்தை நமக்கு அறிவுறுத்துகின்றது. உப்பு முனைந்து நின்றால், கறியின் சுவை கெட்டுவிடும். உப்பு அழிய மாறினவிடத்தே, கறி அமுதமாகின்றது. அவ்வண்ணமே தொண்டனும் ‘நான்’ என்பது அறவும், உடல் பொருள் ஆவி அழிய மாறியும் தொண்டு பூண்டுழைக்க முற்பட வேண்டும். அப்போதுதான் தொண்டு பரிமளிப்பதாகும். முனைந்து நின்று விளம்பரத்தை இச்சிப்பவனது தொண்டு, உப்பு முனைந்து நிற்கும் கறி போலக் கெட்டொழியும். இதுவே மெய்த் தொண்டின் உயர்ந்த நல்லிலக்கணம்.

கடைசியாக, ஒருவன் தன்னிடம் தொண்டனது இலக்கணங்கள் நிரம்பி யிருக்கின்றன என்பதையும் அறியாதவனாய்த் தொண்டில் என்றும் மூழ்கிக் கிடப்பானாயின், அவனே தொண்டனது பரிபூரண இலக்கணங்களும் வாய்க்கப் பெற்றவனாவான். இத்தகைய இலக்கணம் வாய்ந்தவன் நமது பிரயாணி. ஆதலால் இவனை நோக்கித் திருமலையிலுள்ள ஞான ஆசிரியர்

"உம்மைப்போ லிருப்பான்"

என்று தொண்ட னிலக்கணத்தைக் கூறி முடித்தார்.

"கொக்கைப்போ லிருப்பான்
கோழிபோ லிருப்பான்
உப்பைப்போ லிருப்பான்
உம்மைப்போ லிருப்பான்"

என்று அருங்கலை விநோதரான திருமலையடிகள் அருளிய வெண் சொற்களில் புதைந்து கிடக்கும் பொருள் அழகுகளே தொண்டனது ஒப்பற்ற இலக்கணங்களாகப் பொலிகின்றன.

முதலாவது, தொண்டனது உள்ளம் மாசற்று விளங்க வேண்டும். அகத்தின் அழகு—அகத்தின் தூய்மை—இயற்கையாகவே முகத்திலும் உடம்பிலும் வெளிப்படும். இத்தகைய தூய்மையின்றி ஒருவன் கங்கையாடியும் காவிரியாடியும் குமரியாடியும் சிறிதும் பயன் பெறாதவனே யாவான்: கோடி தீர்த்தம் கலந்து குளிப்பினும், அது அக அழுக்கைப் போக்குவதில்லை. அகத் தூய்மையோடு அமையும் புறத்தூய்மையே தூய்மையாகும். இத்தகைய தூய்மையைப் பாதுகாப்பதற்கு நல்லார் இணக்கம் இன்றி யமையாதது; நல்லாசிரியன் கூட்டுறவும் இன்றி யமையாததே.

தொண்டனுக்கு நூலாராய்ச்சியும் அவசியமே யாகும். சாத்திரங்களைக் கற்றும் அறிவில்லாமல் சந்தையில் மீன்விற்கும் இழிசனர்போல, இரைச்சலிடுவோர் எத்தனைபேர்? இவர்கள் சாத்திரங்களை நாவால் போற்றுகின்றனர்; உண்மையில் இழிவு செய்கின்றனர். அன்பர்களே! நூல் அறிவோடு உங்கள் நுண்ணறிவைக் கலந்து பாருங்கள். அப்போதுதான் நூல்களில் மறைந்து கிடக்கும் நுண்பொருள் புலப்படும். அறிஞர்களே! கொக்கைப் பாருங்கள்! உள்ளும் புறமும் வெள்ளையா யிருங்கள்! கோழியைக் கண்டு உண்மையைக் கைக்கொள்ள முந்துங்கள்! உப்பை நினையுங்கள்! ஆடம்பரமின்றி, முனைந்து நில்லாது பணி செய்யுங்கள்! அறிஞர்களே! முடிவில், 'நான் தொண்டன்' என்ற எண்ணமு மில்லாமல் பணி செய்து கிடக்கும் மெய்த் தொண்டனைப் பாருங்கள்! இத்தகைய தொண்டனாக முயலுங்கள்.!

ஓர் அரசிளங்குமரி தன் காதலன் அளித்த நவரத்தின மாலையை மறந்து தேடிய கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள். அப் பெண்ணரசி காதலிலே தன்னை மறந்துவிட்டாள். தன்னை மறந்த நிலையில் தன் நாயகன் காதலின் அறிகுறியாகத் தனக்குக் கொடுத்த மணிமாலையையும் மறந்து தேடினாள். தேடித்தேடி யலுத்துத் தன்வசம் அழிந்து நின்றாள். அன்னாள் நிலைகண்ட தோழி நகைத்தாள்; இரங்கினாள். 'அம்மா! இதோபார், உனது மாலையை' என்று அவளது மார்பிலே நெஞ்சிற்குஅருகே கிடந்த மணிவடத்தைத் தொட்டுக் காட்டினாள். இதுவே நமது பிரயாணிக்குத் திருமலை யாசிரியர் செய்த உபகாரமாகும்.

இத்தகைய கருத்தைத் தழுவி அரங்க நகர் ஆசிரியர் பேசிய நல்லுரைகளை யெல்லாம் செவி வாயாகப் பருகிய அன்பர்கள், மெய்த்தொண்டின் உன்னத லட்சியத்தைத் தங்கள் நெஞ்சிலே தேக்கிக்கொண்டு இல்லஞ் சேர்ந்தனர்.

---

# அப்பர் அருள்மொழி.

*(From St Appar.)*

## இனிமை.

"கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன் அடைந்தார்க்கு இடைமருதனே"

## *Sweetness.*

Sweet is the mellowing fruit ;
Sweet the crystalled sugar ;
Sweet the companionship of thy beloved
In the fulness of her youth and beauty ;
Sweet the Imperial power that knows no bounds ;
Sweeter still is the Lord to them that come unto Him !

## அருளரசு.

"நற்பதத்தார் நற்பதமே ! ஞானமூர்த்தி !
நலஞ்சுடரே ! நால்வேதத் தப்பால் நின்ற—
சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற—
சொலற்கரிய சூழலாய் ! இது உன் தன்மை.
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள்
நிலாவாத புலால் உடம்பே புகுந்து நின்ற
கற்பகமே ! யான் உன்னை விடுவேன் அல்லேன்
கனகமா மணிநிறத்தேம் கடவுளானே"

## *The Almighty Grace.*

Thou art the One Goal of all that tread Virtue's ways !
Thou Wisdom's Form ! —the Pure Flame of Good !
Thou standst beyond the Fourfold Veda !
Thou transcend'st words that presume to spell out Thy Glory !
Such is Thy sport unspeakable and such Thy Nature!
Yet Thou enterest this fragile frame of flesh and standst
Rooted like Kalpaka(the Tree of plenty)in my heart of hearts,
Which, though apparently constant, is yet ever-changing.
Never to lose hold of Thee, my Lord, is my one firm resolve.

# சிங்காரப் பூங்காவனம்.

## பெண்கள் பந்தடித்தல்.

பொன் னிலங்கு பூங்கொடி
பொலஞ் செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைகள்
ஆர்ப்ப ஆர்ப்ப, எங்கணும்
தென்னன் வாழ்க! வாழ்க! என்று
சென்று பந்தடித்துமே;
தேவரார மார்பன் வாழ்க!
என்று பந்தடித்துமே!

பின்னும் முன்னும் எங்கணும்
பெயர்ந்து வந்தெழுந்துலாய்
மின்னு மின் இளங்கொடி
வியன் நிலத் திழிந்தெனத்
தென்னன் வாழ்க! வாழ்க! என்று
சென்று பந்தடித்துமே;
தேவரார மார்பன் வாழ்க!
என்று பந்தடித்துமே.

துன்னி வந்து கைத்தலத்
திருத்த தில்லை நீணிலம்
துன்னினின்றும் அந்தரத்
தெழுந்ததில்லை தானெனத்
தென்னன் வாழ்க! வாழ்க! என்று
சென்று பந்தடித்துமே;
தேவரார மார்பன் வாழ்க!
என்று பந்தடித்துமே,

(சிலப்பதிகாரம்.)

குறிப்பு:-இம்மூன்று பாடல்களும் செந்தமிழ்க் கவியரசாகிய இளங்கோ வடிகள் அருளியன. முற்காலத்தில் தமிழ் நாட்டு மாதரசிகள் ஆனந்தமாகப் பந்து விளையாடிய காட்சி பழங்கை வாசகரது மனப் பளிங்கில் இன்று நிகழ்வது போல எடுத்துக் காட்டுவதில் இவை இணையற்றன. இன்பமயமான இப்பாக்களை மனங் கனிந்து பாடுங்கால், இவற்றிலுள்ள சொற்கள் மறைந்து விடுகின்றன; தமிழ்த்தாயின் தவப் பயனாய்த் தோன்றி நாட்டை யலங்கரித்த பெண்மணிகள் மீண்டும் பொன்மேனி பெற்றுப் பூங்கொடி போல நம் கண்முன் வந்து தமிழ் வேந்தனை வாயார வாழ்த்திப் பந்தடிக்கின்றனர். அங்கும் இங்கும் ஓடியாடிப் பந்தடிக்கும்போது அவர்களது மார்பிலே ஊசலாடும் மணிமாலை ஒளி வீசுகின்றது. மேகலைகள் மேன்மேலும் மின்னி ஆர்க்கின்றன. முன்னும் பின்னும் எங்கும் பெயர்ந்து உலாவி இள மின்னற்கொடி விண்ணின்று நழுவி மண்தோய வந்ததென அரசனை வாழ்த்திச் சென்று பந்தடிக்கும் அற்புதத் தோற்றம், தமிழ்ப் பெண்கள் பொழில்களிலே பறந்து திரியும் பைங்கிளிகளைப்போல விடுதலை பெற்று வாழ்ந்த மகோன்னத நாகரிக காலத்தை நமக்கு நினைவு ஊட்டுகின்றது. "துன்னி வந்து கைத்தலத் திருந்ததில்லை நீணிலந், துன்னினின்றும் அந்தரத் தெழுந்த தில்லை" யென்று கண்டார் கண்கள் மருளும்படி விரைந்து சென்று பந்தடிப்பதைச் சலனபடங்களில் (Cinema) பார்ப்பது போல இளங்கோவடிகளின் கவியிலே கண்டு களிக்கின்றேம். அந்நாளில் தமிழ் மெல்லியலார் உடல்நலங் கருதி—உளநலங் கருதி—இத்தகைய குற்றமற்ற இன்ப விளையாட்டைப் பொழுது போக்காகக்கொண்டனர். பண்டைத் தமிழ்ப் பெண்களின் பந்து விளையாட்டை உயிர்ப்பித்துக் காட்டும் இப்பழம்பாடல்களின் இசை நயம் கவனிக்கத் தக்கது. பந்தும் பெண்களும் ஓடியுலாவிவரும் விரைவும் பரபரப்பும் இப் பாடல்களின் இசையோடு இசைந்து நிற்கும் மர்மம், அடிகளைப் போன்ற பாவேந்தர்களுக்கேயுரியதாகும்.

# பத்திரிகை ஆராய்ச்சி.

ஆசிரியர் பி. தி. ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் 'ரு000 வருடங்களுக்கு முன்னிருந்த தமிழர்' என்ற மகுடமிட்டு 'ஹிந்து' பத்திரிகையில் வியாசங்கள் தொடர்ச்சியாக எழுதி வருகிறார். அவற்றில் பின்வரும் விஷயங்கள் காணப்படுகின்றன:—

இந்தியாவில் காணப்படும் எதுவும் இந்தியாவுக்கு வெளியிலிருந்தே வந்திருக்க வேண்டுமெனக் கருதும் 'ஆராய்ச்சியாளரான சரித்திரக்காரர்' தமிழர்கள் இந்நாட்டுப் பழங்குடிகள் அல்லவென்றும் வெளிநாடுகளிலிருந்து வந்தவர்களென்றும் சொல்லுகிறார்கள். அவர்களில் ஒருவர் அவர்களை வழிகாட்டி யழைத்து வந்த 'குக்' வழிகாட்டியைப் போல், தமிழர்கள் பெலுச்சிஸ்தானத்திலிருந்து கன்னியாகுமரிக்கு வந்த மார்க்கத்தை வர்ணிக்கத் துணிந்துவிட்டார். தமிழர்கள் தென்னிந்தியாவிலேயே பிறந்து வளர்ந்தவரென்பதை இந்தச் சரித்திரக்காரர் புறக்கணிக்கின்றனர். தமிழர்கள் தமிழகத்திலிருந்து பிறநாடுகட்குச் சென்றதால் அவர்களின் மொழி பாதிக்கப்படவில்லை. இதனால் உலகத்தில் வேறு மொழிகளில் காணப்படும் அவ்வளவு தமிழ்ப் பதங்களின் உருவங்களும் பொருள்களும் திரிவுப்படாமல் மூலப் பொருள்களைப் பற்றியே நிற்கின்றன. சம்ஸ்கிருதத்தைத் தவிர்த்து உலகத்தில் வேறு எந்த மொழிக்கும் முன்னால் தமிழ் மொழியில் இலக்கியங்கள் அபிவிருத்தியடைந் திருந்தமையும் மேற் குறித்த நிலைக்குக் காரணமாயிருந்திருக்கிறது. தமிழகத்தில் ஜயின புத்தத்துறவிகள் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் குடியேறித் தமிழர்களைத் தங்கள் மதத்துறவிகளாகச் சேர்த்துக்கொண்டதன் பின்னரே சம்ஸ்கிருதத்திலிருந்து பதங்களைத் தமிழ் கடன் வாங்க ஆரம்பித்தது. சற்றேறக்குறைய அதே காலத்தில் பிராமணரும் தங்களுடைய வேதங்கள், ஆகமங்கள், மகாபாரதம், இராமாயணம், வியாகரணம். (இது பாணினி வியாகரணம் அன்று; இந்திரனது) இவற்றைக் கொண்டு வந்து புகுத்தினர். அகஸ்திய கோத்திரத்தில் பிறந்த ஒருவர் வடமொழி யிலக்கண முறைகளை யொட்டித் தமிழிலக்கண மொன்று செய்தார். அவரது மாணவர்கள் அந்நாளிற் பயின்று வந்த தமிழ் யாப்பிலக்கணத்தை வடமொழி யாப்பு சம்பந்தமில்லாமலே ஆராய்ந்தனர். இவ்வாறிருந்தும் தமிழர்கள் நெடுங்காலம் வரையில் தங்கள் மொழியின் தனிமையைக் காத்து நின்றனர். இதனால் கி. பி. ௬-ம் நூற்றாண்டிலும் தமிழ் மொழியில் வடமொழிக்கலப்பு சிறுபான்மையாகவே காணப்பட்டது. அதன்மேல் ஆலயங்களில் ஆகமவிதிகளின்படி சிவபெருமான், திருமால் இவர்களது வணக்கமும் ஜயினத் துறவு நூல்களும் தென்னிந்தியாவில் அதிகமாய்ப் பரவ ஆரம்பித்தன. அவசியமானவையும் அல்லாதனவுமாகிய வடமொழிப் பதங்கள் தமிழ்ப் பேச்சு வழக்கிலும் நூல் வழக்கிலும் தாராளமாய்ப் பிரயோகப்பட்டன. ஆனால் தென்மொழி, வடமொழி யாகிய இரண்டிலும் மொழி நூலாராய்ச்சியிலும் பயிற்சியுடையோர் எவரும் தனித் தமிழ்ப் பழ மூலங்களைப் பின்னால் கடன் வாங்கப்பட்ட பதங்களினின்றும் சுலபமாய் வேறுபடுத்திக் காணுதல் கூடும்.

* *

சர்வதேச யுத்த எதிர்ப்புச் சபையென்றொரு ஸ்தாபனம் ஐரோப்பிய நாடெங்கணும் பரவி யுத்தத்தையொழிப்பதற்கான கிளர்ச்சிசெய்து வருகின்றது. சமீபத்தில் இச்சபை உலாந்தா தேசத்தில் கீழ்க்காணும் அறிக்கையை வெளியிட்டிருக்கிறது:—

கட்டாய இராணுவ சேவையை விரும்புவோரென்று சொல்லப்படுவோரிற் 'சமாதானக் குழாங்கள்' ஏற்படும் நோக்கம் வரவர பலப்பட்டு வருவதை யுத்த விரோதிகளான ஆண்களும் பெண்களுமடங்கிய நாங்கள் ஆநந்தத்துடன் காண்கிறோம். இராணுவ வீரர்களாகச் சேர மறுக்கும் மனிதர் மெல்ல மெல்ல, ஆனால் வரவரஅதிகரித்து, வருதலையும் அறிகிறோம். இராணுவ சேவையை மனப்பூர்வமாக ஆட்சேபிப்போருடன் பகிரங்கமாய்ச் சேர்ந்து கொள்ள கடமைப்பட்டிருக்கிறோ மென்பதையும் உணருகிறோம். இராணுவ வீரரின் வாச ஸ்தலங்களிலும், குழி அரண்களிலும், போர்க் கப்பல்களிலும், ஆகாய விமானங்களிலுமே யன்றி யுத்தப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளிலும் தளவாடங்களை ஏற்றிச் செல்லும் தொழிலிலும்—சுருங்கக் கூறுமிடத்து சண்டையுடன் சம்பந்தப்பட்ட, அல்லது சண்டைக்குத் தயார் செய்கிற, எந்த வேலையிலும்—இராணுவ சேவையை மறுக்க உறுதியாய்த் தீர்மானித்திருக்கிறோம். இன்னும் இந்த அறிக்கையினால் யுத்த வீரரைச் சேர்ப்பதையும் தடுக்க விரும்புகிறோம். சமாதானத்துக்காகப் பாடுபடும் யாவரும் உடனே எங்களுடன் சேர்ந்து கொண்டு யுத்தம் உண்டாவதாகத் தோன்றும்போது தங்களால் கூடியமட்டும் அதனை நிறுத்த வேலை செய்யுமாறு வேண்டுகிறோம்.

* *

திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் பி. ஏ., எல். டி. 'லக்ஷ்மி' பத்திரிகையில் 'தமிழ் மொழி பேணலைக் குறித்து ஆழ்ந்த பொருள் பொதிந்த அரிய கட்டுரையொன்று வரைந்துள்ளார். இதன் அகத்தே மிளிரும் ஓர் உண்மையினை நம் வாசகர்க்கு எடுத்துக் காட்டுகிறோம்:—

தமிழ் நாட்டில் ஆங்கிலங் கற்போரும் கல்வி முறையைத் தீர்மானிப்போரும் தமிழை ஒரு 'வெர்னகுலர்' (vernacular) மொழி யென்று கூறுகின்றார்கள். இச்சொல் 'வீட்டிற் பிறந்த அடிமை' யென்னும் பொருள் தரும் verna என்னும் லத்தீன் மொழியினடியாகப் பிறந்த தென்ப. இத்தாதுவினடியாகவே பிறந்த vernaculous என்னும் சொல் 'அசங்கதமான,' 'முரட்டுத்தனமான' என்னும் பொருள்களைப் பயப்பதாம். ஆங்கிலத்தில் vernacular என்னும் சொல்லுக்கு 'நாட்டிற் பிறந்த' (native) என்னும் பொருள் ஏற்பட்டது. ஏற்பட்டும், தாதுவின் பொருளிற்கேற்ப, 'ஓர் இழி பொருள்' என்னும் தொனியும் உண்டாகி விட்டது. ஆகவே, ஒருவர் நந்நாட்டு மொழிகளை vernaculars என்னும்போது, அவை இந்நாட்டுக்குரியன என்பதோடு நில்லாது, அவை தாழ்ந்த மொழிகள் எனும் ஒரு குறிப்பையும் தொனிக்கச் செய்கின்றார். சென்ற சில ஆண்டுகளாகத் தமிழ் முதலிய தென்னாட்டு மொழிகளை நடத்தி வரும் இயல்பை உய்த்துணருமிடத்து, அவைகளுக்கு vernaculars என்று பேர் தந்திருப்பதின் உண்மைக் கருத்துப் புலனாகின்றது.

நமது நண்பர் கூறும்வண்ணம் பல கலைக்கழகத்தார், பேச்சு வழக்காறு இறந்துபட்ட உயர்தர மொழிகளையே உயர்தனிச் செம்மொழிகளாக மதிக்கின்றனர்; தமிழைத் தாழ்ந்த வகுப்பில் தள்ளி யொதுக்கி விடுகின்றனர். வாழ் விழந்த பழந் தெய்வங்களையே போற்றும் இவர்களது பக்தியை நாம் என்னென்று கூறுவது! உயிரோடுள்ள உயர்தனிச் செம்மொழி நந்தமிழ் மொழி யொன்றே. 'வெர்னகுலர்' என்று இதனை இகழாது போற்ற வேண்டுமென்பதுவே முகமாக வற்புறுத்துவது தமிழர் கடன்.



நகரங்களுக்குப் பரிசுத்தமான காற்று அளிக்கும் வகையைப்பற்றி சார்ந்தி ஹால் சிங்கர் ஏப்ரல் மாதத்திய 'வெல்பேர்' பத்திரிகையில் பின் வருமாறு எழுதுகிறார்:—

மரங்களை நட்டுப் பயிராக்குவோர் தமக்குச் சுவர்க்க லோக மார்க்கத்தைத் தேடுகிறார் என்று அறிவாளிகளாகிய நமது முன்னோர்களிற் சிலர் பன்னெடுநாள் முன்னரே கற்பித்து வைத்திருக்கின்றனர். தற்போதுள்ள இந்தியராகிய நாம் இந்தக் கற்பனையை மூடநம்பிக்கை யென்று எள்ளி யொதுக்குகிறோம். ஆகிலும் மேலைத் தேசங்களிலுள்ள மக்கள் மரங்களை வெட்டி வீழ்த்துவதனாலும் வயல் வெளிகளிலும் தரிசு நிலங்களிலும் ஒன்றின்மேலொன்றாக நெருக்கி வீடுகட்ட அநுமதிப்பதனாலும் ஜன சமூகத்தின் தேக சுகம் சீர்கேடு அடைகிறதென்று அநுபவத்தில் அறிந்து வருகின்றனர். முன்னாளிருந்தவர்கள் அறிவின்மையாலும் பேராசையினாலும் இறைவன் அருளிய திறந்த வெளியிடங்களை நகரச் சந்து பொந்துகளாக மாற்றிவிட்டனர். ஒளியும் வளியும் இன்மையாலும் மக்கட் பெருக்கத்தினாலும் கசுமாலங்களும் நோய்களும் பஞ்சமா பாதகங்களும் நிறைந்து எளியவர் வாழுமிடங்களைக் கடந்து அருகில் இடங்கன்ற மாளிகைகளில் வாழும் செல்வர்களையும் எதிர்க்க வந்துவிட்டன. ஆனால் சமீபகாலத்தில் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் எங்குமுள்ள நகர பரிபாலன சபைகள் நகரங்களில் அமைக்கப்படும் கட்டிடங்களை யொழித்துவிட்டுச் சிங்கார வனங்களும், விளையாடு மிடங்களும்—சுவாசக் குழாய்களென்று கூறப்படுகின்றவைகளை—அமைப்பதில் பணத்தைச் செலவிட்டு வருகின்றன. உலகத்தில் பெரிய நகரமாகிய லண்டனில இவ்வித அமைப்புகள் போதுமான அளவு காணப்படுகின்றன. சிறிய பெரிய உபவனங்களும், திறந்த பொதுவான வெளியிடங்களும், பசும்புல் வளர்ந்த வேலிகோலிய 'தீவு'களும், விளையாடுமிடங்களும் நகர எல்லைக்குள் எங்கணும் பரந்து கிடக்கின்றன. ஆனதால், ஒருவர் எந்தப் புறத்தில் வசித்தபோதிலும் பரிசுத்த வாயுவை உட்கொள்வதும் ஏதாவதொரு வகையில் தேகப் பயிற்சி செய்வதும் சுலபமாய்ச் சித்திக்கின்றது.

மகாத்மாவின் பெருமையை யறிந்து வாழ்த்த வந்திருக்கும் நியூயார்க் நகரிலுள்ள கம்மியூனிட்டி ஆலயத்தின் குருவாகிய கனம் ஜான் ஹேன்ஸ் ஹோம்ஸ் என்னும் பெரியார் கூறும் மொழிகள் வருமாறு:—

ஆன்மாவை வசப்படுத்தி ஆளுந் திறமுடையோன் ஒரு நகரத்தை வசப்படுத்துவோனை விட மேலானவனுயின், காந்தி உண்மையிலேயே நமது காலத்தில் பெரிய மனிதராவர். சென்ற மூன்று ஆண்டுகளாக அவர் எதிரிகளினால் சிறையிலடைபட்டார்; சிநேகிதர்களினால் தோல்வியும் தாழ்மையும் உற்றார்; தனது இயக்கம் உடைந்துபோய் அதன் சக்திகள் சிதறிப் போவதைக் கண்டார். ஆனால் தனது பொறுமையில் அவர் தடுமாறவில்லை; தைரியத்திலும் தவறவில்லை. அவர் நன்னம்பிக்கையையும் விசுவாசத்தையும் இழந்தவரல்லர். எல்லாவற்றிலும் மேலாக அவர் தமது ஆன்மாவைக் கோபம், வஞ்சம், வெறுப்பு இவைகளினின்றும் காத்து இனிமையாக நடத்திக்கொண்டு போகிறார். மேலும் மிகுந்த கஷ்ட காலத்திலும் சகல மனிதரையும் தன் சிநேகிதராகக் கொண்டுள்ளார். 'மாறுதல் வேண்டாதோர், சுயராஜ்யக் கட்சியார், தாராளக் கட்சியார், ஹோம்ரூல் கட்சியார், தனிக்கட்சியார் ஆங்கிலேயரும் கூட—இன்னோரன்ன பல்வேறு வகைப்பட்ட கொள்கைகளையுடைய மனிதர்களிடத்து காந்தி சமமாகிய அன்பைக் கொண்டிருப்பேனாகில், அது எனக்கு நல்லதென்றும் என் கட்சிக்கு நன்மை பயக்குமென்றும் எனக்

குத் தெரியும்' என்று அவர் (மகாத்மா) கூறுகிறார்.

* *

'பெண்கள்உலகம்' (women citizen) என்ற பத்திரிகை பின்வருமாறு எழுதுகிறது:—

நவீன உடல் வசீகரசாதனப் பொருள்களை விளம்பரம் செய்வதில் ஆண்களிலிருந்து பெண்மக்களைப் பிரித்துக் காட்டும் விஷயத்தில் நாம் ஆட்சேபனைக்கு எழுகிறோம். பெரிய மாதாந்தப் பத்திரிகைகளின் விளம்பரப் பக்கங்களை வாசித்தால், ஒரு புருடனை யடைவதற்கோ அல்லது ஏற்கெனவே அடைந்துள்ள கணவனை வசியப்படுத்துதற்கோ, இதையோ அதையோ உபயோகிக்கும்படி பெண்களுக்குச் சிபார்சு செய்யும் விளம்பரங்களே அபரிமிதமாகக்காணப்படுகின்றன. பெண்கள் தமது முகத்தையும், கூந்தலையும், உருவத்தையும், இளமையையும் புருடரை யடையும் பொருட்டும் வசப்படுத்தி வைத்துக்கொள்ளும் பொருட்டுமே பாதுகாத்துக்கொள்ளுதற்குப் பலவகையான யோசனைகள் கூறப்படுகின்றன. ஆனால் ஒரு யுவதியின் அன்பைப் பெறுவதற்கோ, அல்லது தனது மனையாளின் அன்பைக் காப்பதற்கோ புருடனுக்கு எதும் கூறப்படவில்லை. ஆடவன் தோலின் தன்மை அவனது தேக சுகத்தைப்பற்றியதா யிருக்கிறது. கூந்தல் வளர்க்கும் முறைகளைப் பற்றிய விளம்பரங்கள் அவன் வழுக்கைத் தலையனா யிருந்தாலும் அவன் மனத்தைக் கவர்வதில்லை. அவனது உருவம் அவன் மனையாட்டியே வெறுக்கும்படியான அவ்வளவு பருத்ததாயும் கோணலாயு மிருந்தாலும் அதைப்பற்றி விளம்பரங்களில் ஒன்றும் குறிப்பிடுவதில்லை. இது சரியானதன்று. ஆண்மக்களும் அழகுசெய்தற்குஉரியவரேயாவர். விளம்பரம் செய்வோரா சேர்ந்து குடித்தனம் செய்வோரா யிருந்தால், அவர்கள் உண்மையாகவே இருகட்சிகளையும் சமமாகப் பாவிக்கவேண்டும்.

* *

சுவாமி அரியானந்தரிடம் ஒருநாள் ஒரு யாத்திரிகர் மேனாடுகளில் சுவாமிகளின் அநுபவத்தைப் பற்றிக் கேட்டதற்கு அவர் கூறிய பதிலைகீழ் வருமாறு 'பிரபுத்தபாரதா' வில் சுவாமி அதுலாநந்தர் சொல்லுகிறார்:

மேனாடுகள் உலகாயதத்தைக் கைக்கொண்டு சுகாநுபவங்களில் திளைத்திருக்கின்றன. ஆனால் அங்கே பல நல்ல காரியங்கள் உண்டு. உணவு சிலாக்கியமானது. எந்தக்காரியமும், சமையல்கூட நவீன சாஸ்திரோக்தமாய்ச் செய்யப்படுகின்றது. சுகாதார வசதிகள் மிகச் சிறந்தன. ஜனங்கள் பலசாலிகளாயும் சுகதேகிகளாயு மிருக்கின்றனர். பெண்களோ மிகுதியான சுதந்தர முடையோராயும் கல்வியறி வுள்ளவராயும் இருக்கின்றனர். மேனாடுகளில் ஒவ்வொருவரும் தனித்தனியே தத்தம் காரியத்தைப் பார்க்கலாம். அவர்களது உடை செயலுக்கு ஏற்றதா யிருக்கின்றது. ஆனால் இங்கு நமது நாட்டிலோ, எந்தக் காரியமும் செயலற்ற தன்மைக்காகவே ஏற்பட்டிருக்கிறது. நாம் அவர்களைப் போல அவ்வளவு சுறுசுறுப் புள்ளவர்களன்று. மேனாடுகளில் எவரும் தாழ்ந்த குரலிலேயே வார்த்தையாடுவர். அங்கு பணியாளர் நமது நாட்டைவிட நன்கு நடத்தப்படுகின்றனர். மிகத் தாழ்ந்த வேலைக்காரரும் மரியாதையாக நடத்தப்படுகின்றனர். வேலைசெய்தல் அங்கே இழிவன்று. மனிதன் எந்தவேலை செய்தாலும் மனிதனே யாவன். ஆனால் அவன் சமூகச் சட்டத்துக் குட்படவேண்டும். அங்கே இழி குலத்தோரும் தீண்டத் தகாதோரும் இல்லை. நமது தாழ்ந்த வகுப்பினரை நாம் எவ்விதம் நடத்துகிறோமென்று நினைத்துப்பாருங்கள்.

# சதங்கை யொலி

## கால எழுச்சி.

சென்ற நூற்றாண்டில்—அதாவது சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன்னர்—வங்க நாட்டில் ஒரு புத்தப் புதிய தெய்விக இயக்கம் பிறந்தது. இவ்வியக்கம் இராம மோகன ராயரது திருவுளத்திலே பிறந்து, ஆசிரியர் பங்கிம் சந்திரரின் நாவிலே தவழ்ந்து, தாகூரடிகளின் கவி யுளம் புகுந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக இன்னும் வளர்கின்றது. வங்க தேசத்தின் பக்திப் பெருங்கா தலோடு பிறந்து வளரும் இம்மகா நதி தெற்கு முகமாகத் திரும்பி நமது பால கங்காதர திலகர் வாயிலாக வீராவேசம்பெற்று வறண் டயர்ந்த மராட்டிய பூமியை வளமுறச் செய்தது. இத்திரு நதியின் ஜீவவேகம் ஆந்திர நாட்டில் சிறிது குறைவாகவே காணப்படினும், ஆந்திரர் திருமொழியைச் சார்ந்து நமது ஜீவநதியும் தெளிந்துதித்திக்கின்றது. வங்கநாட்டுப் பேரன்பும், மராட்டிய சிங்கங்களின் வீரநாதமும் ஆந்திரவொளியும் தெளிவும் தழுவி வரும் இந்த ஞான கோதாவிரியே 'தமிழர் இயக்க'மாகப் பரிணமித்து நமது நாட்டிடையே பாயத்தொடங்கி விட்டது. இவ் இயக்கம் தமிழணங்கின் இயற்கை யழகோடும் இனிமையோடும் இசைந்து புத்த முதமாகப் பொங்கிப் பாய்ந்து, நமது புது வாழ்விற்குரிய தாய்ப் பாலாய்த் தமிழ் வளர்த்து அறிவு விளக்கும் என்பது எமது திடமான நம்பிக்கை.

## பழமையும் புதுமையும்.

நமது புதுமையியக்கம் என்னும் அற்புத மாளிகை பண்டைத் தமிழர் பெருவாழ்வை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட வேண்டும். பண்டைத் தமிழ் இலக்கியம் என்னும் பொக்கிஷம், மணிமாணிக்க வைரங்களாதிய இரத்தினங்களினும் விலை மதித்தற்கு அரிய பெரும் பொருள்களால் நிறைந்து விளங்குகின்றது. இவ் விலையிலா முழு மணிகளை இரு கோடியினும் மிக்க நந்தமிழ்ச் சகோதரர்களோடு நாம் பாகித்து அநுபவிக்க முயல வேண்டும். தமிழ்ப் பெருமக்களது அழியாத உரிமைப் பழஞ் செல்வம் தமிழிலக்கியமேயாகும். செல்வப் பொருளைப்போல, நமது செந்தமிழ்ச் செல்வம் வழங்கக் குறைவதில்லை; வழங்க வழங்கக் குறைவு படாது பொங்கிப் பொழியும் அற்புதப் பெருமை அறிவுச் செல்வத்திற்கே யுரியதாகும். பண்டைத் தமிழர் அறிவு நலம் என்னும் மூல பண்டாரத்தைத் தமிழ்க் குல மக்கள் அனைவர்க்கும் எளிதாக வழங்குகின்றோம்; வந்து முந்துங்கள் என்று கூவி யழைக்கும் காலம் விரைந்து வருகின்றதென்பது எமது கோட்பாடு. ஏனெனில் தமிழரது முன்னைப் பழம் பெருமையில் மூளைத்து வளர்ந்த தமிழிலக்கியமே தமிழர் இயக்கத்தின் கொழுகொம்பாகும் என்பது திண்ணம்.

## தமிழ் ஜாதி.

ஆரிய—திராவிட விவகாரங்களைப் பற்றிய ஆராய்ச்சி, உண்மையை மறைக்கும் ஒரு பெருங் காடாகவே வளர்ந்து விட்டது. இக்காட்டின் நுழைந்து நெறிகாண முயன்றவர்க ளெல்லாம் தம்முள் மாறுபட்டு மயங்குகின்றனர். எனினும் ஓர் உண்மை இப்போது சிறிது சிறிதாக முகங் காட்டுகின்றது. இவ் வுண்மையாவது: தமிழ் ஜாதி ஒரு கலப்பு ஜாதியென்பதாம். பழங்குடிகள், முன்வந்த திராவிடர், பின்வந்த ஆரியர் ஆகிய பல்வேறு குழுவினர் மெள்ள மெள்ள வந்து காலக் கிரமத்தில் கலந்து தமிழ்த் தாயின் மடிமீது வளர்ந்து தமிழ்ப் பாலுண்டு தமிழராயினர்.

"ஈனப் பறையர்க ளேனும்—அவர்
எம்முடன் வாழ்ந்திங்கிருப்பவ ரன்றோ?
சீனத்த ராய்விடு வாரோ?"
"ஒரு-தாயின் வயிற்றிற் பிறந்தோர்—
தம்முள்

சண்டை செய்தாலும் சகோதரர்
அன்றோ?"

தமிழொடு பிறந்து தமிழொடு வளர்ந்து தமிழொடு பழகும் மக்கள் அனைவரும் தமிழர். 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' என்று துணிந்து செந்தமிழ்த் தெய்வத்தின் பொன்னடி மலர்களிலே தொழுது பணிசெய்து கிடக்கும் தொண்டர் அனைவரும் தமிழர். 'தமிழ் கூறும் நல்லுலகம்' என்று தமிழகத்தைக் காதலித்து வாழ்வோர் தமிழர். தமிழ் மெல்லியல் தன் பூர்ண லட்சணங்களும் பொலிந் தொளிரும் பொன் மேனியையும் சுடர் முகத்தையும் உற்று நோக்கவைத்த மணிக் கண்ணாடி யாகிய இலக்கியத்தின்மீது உரிமை பாராட்டுவோர் தமிழர். கொல்லாமை யென்னும் தமிழ் மதத்தைச்—சிவ மணம் கமழும் அன்பு நெறியை—அருளொடு பரப்பும் அந்தணர் தமிழர். தமிழ் மக்கள் துன்பம் தம் நெஞ்சிலே பட, நாட்டுக்காகப் போராடும் போர்வீரர் தமிழர். 'நாம் ஆர்க்கும் குடியல்லோம்; நாமே இந் நாட்டு மன்னர்!' என்று வணங்கா முடியோடும் அஞ்சாத நெஞ்சோடும் வாழ்க்கைப் போர் முனையிலே நம் மக்கள் துணிந்து நின்று பிறப்புரிமைக்காக மன்றாடும் வண்ணம், தமிழ் நாட்டு வீர புருஷர் வீரத் தாய்மார், வீர பத்தினிகள்—இவர்களது வீர சரிதங்களை வீரத் தமிழ் வசனங்களால் சித்திரித்து, வாசகரது உள்ளமும் உதிரமும் ஒருங்கே வெறி கொள்ளும்படி செய்யும் ஆசிரியர் தமிழர். தமிழ் நாடு செல்வப் பொருளிலும் அறிவுப் பொருளிலும் இணையற்ற திருநாடாய் நிலை பெறும் வண்ணம் அறவழியில் பொருள் கண்டு வண்மை பொழியும் வணிகர் தமிழர். மெய்யுழவு செய்து பெருவாழ் விற் குரிய நல்வித்தை விதைத்துப் பொய்மையென்னும் களை வாங்கிப் பொறுமை நீர்பாய்ச்சித் தக்க வேலியிட்டு விவசாயம் செய்து நெற்பயிரோடு நாட்டிலே சுதந்திரப் பயிர்விளைக்கும் வேளாளர் அனைவரும் உண்மைத் தமிழராவர். ஆதியில் பல வேறு குழுவினராய் வந்த தமிழர், தமிழ் மொழி யென்னும் தெய்விகபந்தத்தால் இணைக்கப்பெற்று ஒருதனிக்கூட்டத்தினராய் அமைந்து விளங்கும் காட்சி யின்பத்தை என்னென்று வர்ணிப்பது! உண்மையில் பன்னிறங்கள் வாய்ந்த கதிர் ஒளி, தெய்விக பந்தத்தால் இசைந்து ஒன்றி நின்ற சூரியனது வெண்புகழாக எங்கும் பரவிக் களிக்கின்ற தன்றோ!

## இருளும் ஒளியும்.

ஆனால் தமிழ்மக்கள் இன்னும் இத்தகைய உயரிய நிலை எய்தவில்லை. தமிழ் நாட்டில் தற்காலத்திலே சாதிச் சண்டைகள், சமயச் சண்டைகள், கோத்திரச் சண்டைகள், சாத்திரச் சண்டைகள் வரம்பின்றி வளர்ந்து கொண்டிருக்கின்றன.

"ஒன்று பட்டாலுண்டு வாழ்வே—
நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும்
தாழ்வே!"

என்ற ஞானம் நமது மக்கள் உள்ளத்தில் வேரூன்றவில்லை. ஒளியிழந்த தமிழ் வானம் மேன்மேலும் இருண்டு வருவதாகவே தோன்றுகின்றது. இடையிடையே கருமேகங்களும் காரிருளோடு கலந்து வானத்தை மறைக்கின்றன. சிற்சில சமயங்களில் பயங்கரமான இடிமுழக்கமும் செவியைத் தொளைக்கின்றது. இருளின் வயிற்றைப் பீறி யெழும் மின்னல் மறைந்ததும், இருள் மீண்டும் அதிகரித்து விண்ணையும் மண்ணையும் விழுங்கிவிட எத்தனிப்பது போல விரிகின்றது. இது தமிழகத்தின் காலநிலை. ஆனால் கீழ்வானம் இப்போதுதான் சிறிது தெளிவடைந்தாற்போற் காண்கின்றது. இப்பொழுது தோன்றும் சிற்றொளி, பளிச்சென்று தோன்றி மறையும் மின்னொளி யன்று. இது ஒரு புதிய அருணோதயத்தின் அறிகுறியே. இதுவே நமது நாட்டில் சிறிது சிறிதாகப் பரவி வரும் தாய்மொழிப் பற்றாகும். இதுவே தமிழர் இயக்கம் என்னும் ஞான சூரியனைக் கட்டியங்கூறி யறிவிக்கும் முற் குறி யாகும்.

## வேற்றுமை வேண்டாம்.

ஆடையெல்லாம் அணிவோர் சிறப்பே!
பாஷையெல்லாம் பயில்வோர் சிறப்பே!



என்று மனோன்மணீய ஆசிரியர் கூறுகின்றார். தாய்மொழியின் சிறப்பு தமிழ் மக்கள் சிறப்பேயாகும். பண்டைத் தமிழிலக்கியம் பண்டைத் தமிழகத்தின் சிறப்பைக் கண்ணாடியில் காட்டுவது போலக் காட்டா நிற்கின்றது. 'சுதந்தரமே உயிர்; சுவாசம் அன்று' என்னும் கொள்கையோடு வீரவாழ்வு வாழ்ந்த நமது மூதாதையர் தமிழிலக்கிய வாயிலாக நமக்கு என்றும் நல்லுரை வழங்குகின்றனர். பல் வேறு மரபினரும் தொழிலினருமான சங்கப் புலவர் இலக்கிய உலகில் ஜாதி, மதம், நிறம், பால் முதலிய வேற்றுமைகளுக்கு இடமில்லை யென்று வற்புறுத்துகின்றனர். அந்தணர்க்கும் ஆதிதிராவிடர்க்கும், முடியுடை மன்னர்க்கும் தொழிலாளர்க்கும், பெருஞ்செல்வர்களான வணிகர்க்கும் ஏழை மக்களுக்கும், வல்லியல் மறவர்க்கும் நல்லிசைப்புலமை மெல்லியலார்க்கும் சங்கப்பலகை இடந்தந்து நிற்கின்றது. தமிழ் நாட்டு வீரர்களும்வீரமன்னர்களும், 'வீரர், வீரர் அல்லாதார்' என்னும் இரண்டு பிரிவுகளையே அறிவர். தமிழ்நாட்டு வள்ளல்களும் 'இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்' என்ற கொள்கையினரே யாவர். செந்தமிழ்ப்பெரியோர்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் தொண்டக்குலத்தினரே யாவர். இத்தமிழ்க் கொள்கையினை வில்லி பாரதம் பின் வருமாறு எடுத்துரைக்கின்றது.—

"கற்றவர்க்கும் நலனிறைந்த
கன்னியர்க்கும் வண்மைகை
யுற்றவர்க்கும் வீரரென்
றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கும் உண்மையான
கோதில் ஞான சரிதராம்
நற்றவர்க்கும் ஒன்றுசாதி
நன்மைதீமை யில்லையால்"

பொதுவாகத் தமிழிலக்கியமும், சிறப்பாக நமது தெய்வத் தமிழ் மறையாகிய திருக்குறளும் தமிழ ரியக்கத்தை வளர்க்கும் இன்றி யமையாத சாதனங்களாகும். இன்னும் கம்பனைப் போன்ற மகாகவிகள் ஓரியக்கத்திற்கு எவ்வாறு உயிரளிக்கின்றனர் என்பதுங் குறிப்பிடத்தக்கதாகும்.

## சிறு விண்ணப்பம்.

நமது இலக்கியம்இன்னும் மறுமலர்ச்சியடையவில்லை. ஆசிரியர் சுந்தரம் பிள்ளையும் பாரதியாரும் நெறிகாட்டி நிற்கின்றனர். சென்ற நூற்றாண்டில் வங்கநாட்டார் பெற்ற புது வாழ்வை நாம் இன்னும் பெறவில்லை. வங்க நாட்டினரது உள்ளத்திலே தேசநேச நெருப்பை முதற்கண் மூட்டியவர் இராமமோகனர். இக் கொழுங்கனலைக் காட்டுத் தீயாக்கிய பெரியார் பங்கிம் சந்திரர். இவரே 'ஆனந்தமடம்' என்னும் நவீன வீரக்கதை புனைந்தவர். இவ் வங்க முனிவர் அருளிய மகாமந்திரம் நமது தேச பக்தர்களுக்கெல்லாம் பொதுவாகிய திருமந்திரமாகிவிட்டது. தமிழ் மக்களே! உங்கள் இராமமோகனர் யார்? உங்கள் பங்கிம் சந்திரர் யார்? உங்கள் புதிய நூல்கள் எங்கே? புதிய புதிய கனவுகள், அழகுகள் எங்கே? பங்கிம் சந்திரரது 'வங்க தரிசனம்' என்னும் பத்திரிகை யொன்று அக் காலத்தில் புதுவாழ்வு பெற முயன்ற வங்க வாலிபர்களுக்கு நற்றுணையாக விருந்தது. இத்தகைய பணியை நம் தாய் நாட்டில் புரிய ஒருப்பட்டு நிற்பது நமது 'குமரன்' பத்திரிகையாம். என்றும் குமரனாகிய செந்தமிழ்ப் பரமாசாரியனது அருள் புனைந் தலவும் அருமைத் திருக் 'குமரனை' அன்னையர் தீம்பாலோடு தமிழ் பருகிய இளைஞரும் உள்ளத்திலே என்றும் இளமைவாய்ந்த அறிவாளரும் தமது ஆருயிர்த் தோழனைக் கைப்பற்றி யழைத்து, நந்தமிழர் இயக்கத்தை நாடும் நகரமும் நன்கு பரப்ப முயலும் அரும்பணியிலே ஒத்துழைக்க முற்படுவார்களென்று நம்புகிறோம்.

# மதிப்புரை.

**சைவத்தின் சமரசம்:**—இந்நூல் வடிவிற் சிறிது; ஆனால் பொருட் செறிவில் நிகரற்ற பெருமை வாய்ந்திலங்குகின்றது. இதனை இயற்றிய திருவாளர் கலியாணசுந்தரமுதலியார் தொட்ட தொட்ட பொருள்களையெல்லாம் பொன்மயமாக்கி அழகு செய்யவல்ல அரிய புலமையும் நுண்மதியும்வாய்ந்த நல்லறிவாளர் என்பது தமிழ் மக்கள் அனைவரும் அறிந்த தொன்றே. இவர் தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபையின் சென்ற ஆண்டுவிழாப் பேரவையில் நிகழ்த்திய சொற்பொழிவை யொட்டி இந்நூலின் உள்ளுறை அமைந்திருக்கின்றது. முதற்கண் நமது ஆசிரியர் சமயத்தின் உண்மை நிலையினைச் சுருங்கக் கூறுகின்றார். அப்பால் சைவத்தின் சமரசத்தன்மையைப் பொது நோக்காக நோக்குகின்றார். "சமயங்கள் பல. எனினும் சமயம் ஒன்றே. ஏனெனில் 'சமரச சன்மார்க்கமே கடவுள் சமயம்'. சமரச சன்மார்க்கமே, நாடுமொழி வண்ணம்—இவைகளில் வேற்றுமைப் பட்ட மக்களுக்கு ஆன்மநேய ஒருமைப்பாட்டை அறிவிக்கின்றது. இத்தகைய ஒற்றுமை யுணர்ச்சியே சமய வுணர்ச்சி. இக்கொள்கை தற்காலத்திலும் எக்காலத்திலும் மெய்யறிஞரால் போற்றப்பட்டதே யாகும். சைவசித்தாந்தமானது இத்தகைய சமரச நன்னெறிக்கு அரண் செய்து நிற்கும்அற்புதநிலையை நமது ஆசிரியர் ஆராய்ச்சி வாயிலாக வலியுறுத்துகின்றார். பண்டைத் தமிழர் முருகு கந்தழி என்ற பெயர்களால் வழிபட்டபரம்பொருளே சைவசித்தாந்திகளின் சிவம் என்னும் செம்பொருளாகும் என்பது ஆசிரியர் கொள்கை. இச்சிவ நெறியினை அன்பு நெறியாகவெளியிட்டு நந்தமிழுலகை நல்வழிப்படுத்த முயன்றவர்கள் சமய குரவராவர். இவர்களுக்குப் பின் சிவநெறியைப் பலரும் செல்லும் பெருநெறியாக்கிய பெரியார் சந்தானகுரவரும் சேக்கிழார் ஆதியமெய்யன்பருமாவர். அன்பிற் பெரியாராகிய இவர்களது சமரச நாட்டத்தை ஆசிரியர் வற்புறுத்துவது நன்கு கவனிக்கத் தக்கது. விரிவிலா அறிவிஞர்கள் போலி ஆராய்ச்சி வாயிலாக வேற்றுமை விளைத்துக் கலகம் வளர்க்கும் இந்நாளில் திரு. முதலியாரவர்களது சமரச நன்னோக்கம் தமிழுலகத்துக்கு நலஞ்செய்வதேயாகும். தாகூரடிகளின் கொள்கையினைத் தழுவி "ஆரியர் திராவிடர் என்னும் இருவரும் ஓரினத்தாராகி வேதாந்த உண்மைகளை நமது நாட்டுக்குத் தந்தார்." என்று ஆசிரியர் குறிப்பிடுவது, வீண்வாதங்களால் தொண்டை கிழிந்து மாளும் சமூகத்திற்கு ஓர் அமுத சஞ்சீவியாகும். இங்ஙனம் அருமருந்தாவதோடு உண்மையும் அதுவே. இத்தகைய சமரச இயலபு சைவ சித்தாந்தத்திற்கு உரியதேயாகும். இன்னும் சமரச இயல்புக்குரிய "பிறர்க் குழைத்தல், கைம்மாறற்ற பணி, பிறப்புவேற்றுமை பாராட்டாமை எவ்வுயிரையும் தன்னுயிர் போல் பாவித்தல், பாவமன்னிப்பு முதலிய அறவழிகள்" சைவநெறிகளேயாவன. முடிவில் ஆசிரியர் சைவ நன்மக்களது முன்னணி வேலையைக்குறித்துப் பேசுகின்றார். இம் முன்னணி வேலையில் சைவரோடு தமிழ் நாட்டார் அனைவரும் கலந்துழைக்கலாம். அரும்பெரும் பொருள்களைச் சிறு வடிவமாக்கி இந்நூலகத்தே அடக்கித்தந்த திருவாளர் முதலியாரவர்களுக்கும், இந்நூலை வெளியிடுவதற்குக் காரணரா யிருந்த தூத்துக்குடிச் சிவநேசச் செல்வர்கட்கும் எமது நன்றியறிதலைச் செலுத்துகிறோம். பொதுவாக நந்தமிழ் மக்கள் அனைவரும், சிறப்பாகச் சைவ சமயிகளாவார் யாவரும் இந்நூலைக் கற்று இன்புற வேண்டுமென்று விரும்புகின்றோம்.

விலை அணா அ. "முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை" யென்ற விலாசத்திற்கு எழுதுக.

---



சிவமயம்.

# குமரன்

" தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார் " —பாரதி

சதங்கை ச. | காரைக்குடி, குரோதன ௵ வைகாசி ௴ | மணி உ.

## வணக்கம்.

### தமிழ்த் தெய்வம்.

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்தவேணி
இறைவர்தம் பெயரைநாட்டி யிலக்கணஞ் செய்யப்பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை யனைத்தும்வென் றாரியத்தோ
டுறழ்தரு தமிழ்த் தெய்வத்தை யுள்ளினந் தேத்தல் செய்வாம்.

### வாழ்த்து.

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே,
வானம் அளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழிய வே ;
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொடு வாழிய வே,
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழிய வே ;
சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி யோங்கத்
துலங்குக வையக மே,
தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ் நாடே;
வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே,
வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழிய வே.

# தமிழ்மொழியின் பெருமையும் அதன் தற்கால நிலையும்.

(திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, பி. எ., பி. எல்.)

இவ்வுலகில் வழங்கும் உயர்தனிச் செம்மொழிகளில் அமிழ்தினுமினிய தமிழ் மொழியும் ஒன்ருகும். இம்மொழி மிகத்தொன்மையும் செம்மையும் வாய்ந்ததென்று அருங்கலை வல்லார் அனைவரும் இசைந்து கூறுகின்ருர்கள். முன் ஒரு காலத்தில் இமயமலைக்கும் தென்குமரிக்கும் இடையேயுள்ள நெடுநில முழுதும் தமிழ் மொழியே பரவியிருந்த தென்பது இலக்கியச் சான்றுகளால் அறியப்படுகின்றது. ஆயினும் தொல்காப்பியமென்னும் பழய இலக்கண நூல் எழுந்தகாலத்தில் வேங்கடமலையை வடஎல்லையாகவும் குமரியாற்றைத் தென்எல்லையாகவும் கொண்டு தமிழ்நாடு திகழ்ந்த தென்று தெரிகின்றது. இன்னும் சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல்கள் எழுந்த காலத்தில் திருவேங்கடமலைக்கும் குமரிமுனைக்கும் இடையேயுள்ள குறுகிய நிலமே தமிழ் மணம் கமழும் திருநாடாக விளங்கிற்றென்று அறியப்படுகின்றது.

இவ்வாறு காலம் செல்லச் செல்ல எல்லை குறைந்ததோடு இயற்கையாலும் இம்மொழிக்கு இடையூறுகள் நேர்ந்தன. கன்னியாகுமரிக்குத்தெற்கேயிருந்ததமிழ்நாடுஆழிவாய்ப்பட்டு அழிந்த காலத்தில் பலஅரியதமிழ் நூல்கள் அப்பெருவெள்ளத்தில் ஆழ்ந்து இறந்தன. இவ்வாறு தமிழகம் கடலாற் கொள்ளப்பட்டதும் தமிழ் நூல்கள் அழிந்ததும் உண்மை என்பது சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல் சான்றுகளாலும் சரித்திர ஆராய்ச்சியாலும் நன்கு விளங்குகின்றது. அன்றியும் மொழிநூல் வாயிலாக ஆராயும் பொழுதும் இக்காலத்தில் இல்லா தொழிந்த பல நூல்கள் அக்காலத்தில் இருந்திருக்க வேண்டு மென்பது இனி தறியப்படும். இப்பொழுது தமிழ் மொழியில் மிகப் பழய நூலாக விளங்குவது தொல்காப்பியமென்னும் இலக்கண நூலாம். அதற்கு முதல் நூலாய் அகத்தியமென்னும் இலக்கணம் விளங்கிற்றென்பது பல சான்றுகளால் நிறுவப்படுகின்றது. இவ்விரு இலக்கண நூல்களும் எழுவதற்கு முன்னே தமிழ் மொழியானது பல துறைகளிலும் தலை சிறந்தோங்கி இலக்கிய நூல் வளமுடைய மொழியாய் இருந்திருக்க வேண்டு மென்பது மறுக்க வொண்ணுத உண்மையாகும். எம்மொழியினும் இலக்கியங்கண்ட பின்னரே இலக்கணம் எழுதப்படு மென்பதுமொழிநூலின் அடிப்படையான கொள்கையாகும். இவ்வுண்மை 'இலக்கியங்கண்டதற்கு இலக்கணம் இயம்பலின்' என்னும் நன்னூல் விதியாலும் நன்குவிளங்கும். ஆகவே தொல்காப்பியம், அகத்தியம் என்னும் இலக்கணங்கள் எழுவதற்கு முன்னரே பல இலக்கிய நூல்கள் தமிழ் மொழியில் இருந்திருக்கவேண்டுமென்பதுஒருதலையாம். அவற்றில் ஒன்றும் இக்காலத்தில் இல்லாமையால் அந்நூல்களெல்லாம் இடைக்காலத்தில் அழிந்திருக்க வேண்டுமென்பது சொல்லாமலே அமையும். இவ்வாறு தனது இனிய அணிகளை யெல்லாம்இழந்தும்இனிமையும் இளமையும் குன்ருது நின்ற தமிழ்த் தாய்க்குப் பிற்காலத்திய பெரும் புலவர்கள் சில நல் அணிகளை அணிந்து மகிழ்ந்தார்கள். சூளாமணியே முடியணியாகவும் சிந்தாமணியே சிரிய மணியாரமாகவும் மணிமேகலையே இடையணியாகவும் சிலப்பதிகாரமே செய்யதாள் அணியாகவும் கொண்டு தமிழ்மாது திகழ்ந்தாள். அக்காலத்தில் தமிழகத்தை அரசாண்ட மூவேந்தரும் தமிழ்மொழியைப் பொன்னே போற் போற்றினர்கள். தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கமென்று தமிழ்நாடு போற்றிப் புகழ்கின்ற முச்சங்கங்களையும் பாண்டிய மன்னரே நிறுவித் தமிழ்மொழியை வளர்த்தார்கள் என்று தமிழ் வரலாறு கூறுகின்றது. அரசரால் ஆதரிக்கப்பட்ட தமிழ்ப் புலவர்கள் சிறந்த நூல்கள் செய்யத் தலைப்பட்டார்கள். சங்கக் காலத்திற்குப் பின்னரும் பலகுறுநிலமன்னரால் தமிழ்ப் புலவர்கள் ஆதரிக்கப் பெற்றுர்கள் என்று அறிகின்ருேம். சிந்தைக்கும் செவிக்கும் பேரின்பம் பயப்பதாய் வான்மீக முனிவரது வடமொழிக்காவியத்தைக் கவிநயம் கனிந்தொழுகுமாறு தமிழ் மொழியில் இயற்றித் தந்த கம்பர் பெருமான் சடையப்பவள்ளலார் என்னும் இருநிதிச் செல்வரால் ஆதரிக்கப்பெற்ருர் என்பது தமிழ்நாடு நன்கறிந்ததே யாகும். மற்ருெரு இதிகாசமாகிய பாரதநூலைத் தமிழ் மொழியில் விரித்துரைத்த வில்லிபுத்தூராழ்வாரும் அக்காலத்திய ஆட்கொண்டான் என்னும் அரசனுல் ஆதரிக்கப்பெற்றதாக அறிகின்ருேம். அவ்வள்ளல் தமிழ்மொழிவல்ல புலவர்க்கெல்லாம் நீர் நிறைந்த ஊருணிபோல விளங்கினுர் என்பது,

"பாகையாட் கொண்டான் செங்கைப்
பரிசுபெற்றவர் நெஞ்சன்ன
ஓகையாற் செருக்கிமீண்டார்
உதிட்டிரன் சேனையுள்ளார்"

என்னும் பாரத அடிகளால் இனிதறியப்படும். துரியோதனனது சேனையைப் போர்க்களத்தில் வென்ற பாண்டவசேனை, பாகையாட்கொண்டான் என்னும் வள்ளலிடம் பரிசுபெற்ற தமிழ்ப்புலவர் உள்ளம்போல் உவகை பூத்து அமர்க்களத்தினின்றும் மீண்டது என்று வில்லிபுத்தூரார் கூறுமிடத்தில் அவரது செய்ந்நன்றி மறவாமை விளங்கக் காணலாம். இன்னும் தமிழன்பில் தலை சிறந்த குமணன் என்னும் அரசன் தனது நாடு, நகரங்களை எல்லாம் இழந்து காட்டில் சென்று கரந்துறையும் காலத்தில் அவனிடம் குறைபிரந்து பரிசுபெறச் சென்ற தமிழ்ப் புலவரை நோக்கி,

"அந்தநாள் வந்திலைஅருங்கவிப்புலவோய்!
இந்தநாள் வந்துநீ நொந்தெனையடைந்தாய்,
தலைதனைக் கொடுபோய்த்தம்பிகைக்கொ
[டுத்து
விலைதனைவாங்கிநின்வெறுமைநோய் களை
[யே"

என்று தன் தலையையும் கொடுத்துத் தமிழ்ப் புலவரது வறுமையை நீக்க முயன்ருன் என்ருல், அவனது தமிழ்ப்பற்றை அளவிட்டுரைத்தலாகுமோ? இத்தகைய அரசர்களும் செல்வர்களும் அக்காலத்தில் தமிழ்மொழியை ஆதரித்தமையாலேயே அம்மொழி தழைத் தோங்குவ தாயிற்று. இவ்வாறு அரசரும் செல்வரும் தமிழ் மொழியைப் போற்றியதின் காரணத்தையும் நாம் நன்கறியவேண்டும். அவர்களிற் பெரும்பாலார் தமிழ்மொழியை நன்கு பயின்று அதன் அழகையும் இனிமையையும்

Best copy available

தாமே அறிந்து அனுபவித்த அறிஞ
ராயிருந்தமையால் அம் மொழியின் நய
முணர்ந்த நற்றமிழ்ப் புலவரை நன்கு
போற்றுவாராயினர். இதற்குச் சிற
ந்த சான்று சிலப்பதிகாரம் செய்த
சேரர் சிகாமணியே யாவார். சிலப்ப
திகாரமென்னும் சீரிய நூலைச்செய்த
இளங்கோவடிகளென்னும் பெரியார்
சேர அரசனது அருமைத் திருமக
னுய் அமைந்திருந்தும் தமிழ்ச் செல்
வமே பொருட் செல்வத்தினும் சிறந்
ததென்றுணர்ந்து அம்மொழியை ஆ
ர்வத்தோடு பயின்று தலை சிறந்த புல
வராய்த் திகழ்ந்தார். அவ்வாறே பா
ண்டிய நாட்டு அரசனுய் விளங்கிய
அதிவீரராமன் அகப்பொருட் சுவை
ததும்பும் நைடதம் என்னும் அழகிய
நூலை இயற்றத்தகுந்த புலமை யுற்றி
ருந்தானென்றால் அம்மன்னன் காலத்
தில் தமிழ்மொழி வளர்ந்த தென்பத
ற்குத்தடையும் உண்டோ? இவ்வாறு
அக்காலத்திய அரசர் பலர் தமிழ்
மொழியின் அருமை பெருமைகளை
அறிந்து அதனை ஆதரித்தமையாலே
யே வளம் நிறைந்த நூல்கள் அம்
மொழியில் எழுதப் பெற்றன என்
பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல
விளங்கும்.

ஆனால் பிற்காலத்தில் தமிழகத்தில்
தன்னரசு மாறி அன்னிய அரசு நிலை
த்த காலத்தில் தமிழ்மொழிக்கு அர
சாங்க ஆதரவு அகன்று போயிற்று.
நீதிமன்றங்களிலும் மற்றைய அரசி
யல் முறைகளிலும் அன்னியமொழி
களே பயிலத்தலைப்பட்டன. 'அரசன்
எவ்வழி, குடிகள் அவ்வழி' என்னும்
உண்மைக்கேற்ப, தமிழ்மக்களும் அ
ன்னிய மொழிகளை ஆவலோடு கொ
ள்ளவும் தாய்மொழியைத் தள்ளவும்
தலைப்பட்டார்கள். ஆங்கில அரசாங்
கம் இந்நாட்டில் நிலைத்த பின்னர் கல்
லூரிகளிலும் கலாசாலைகளிலும் ஆங்
கிலமொழியின் வாயிலாகவே அறிவு
நூல்களையெல்லாம் பயிற்ற வேண்
டும் என்னும் கடுவிதி ஏற்பட்டது.
இவ்விதியால் விளைந்த பயனே தமி
ழின் தற்கால நிலையாகும். ஆங்கிலக்
கல்விகற்று உயர்தரப்பட்டம் பெற்ற
வர்கள் உத்தியோகம் முதலிய உயர்
பதவிகள் பெறுவாராயினர். இதனைக்
கண்ட தமிழ் மாணவர்கள் ஆங்கிலத்
தை ஆர்வத்தோடு அல்லும் பகலும்
படிக்கவும் தமிழ் மொழியைத் தள்ள
வும் தலைப்பட்டார்கள். ஆங்கிலத்
தில் பேசுவதும் எழுதுவதுமே அறி
வுடைமைக்கு அழகென்றும், தமிழ்
மொழியிற் பேசுவதும் எழுதுவதும்
நாகரிகத்திற்குப் பொருந்தாதென்று
ம் தமிழ் மக்கள் கருதுவா ராயினர்.
இவ்வாறு தமிழ்மொழியின் தண்கதி
ர்கள் ஆங்கிலக் கார்மேகத்தால் மறை
ப்புண்டு நலங் குன்றி நெடுங்காலம்
ஒடுங்கி நின்றன.

அரசாங்கத்தாரது கடுவிதியால்
இவ்வாறு நலிந்த தமிழ்மாது, ஆங்கி
லக் கல்லூரிகளில் அமர்ந்த சில தமி
ழாசிரியரது தன்மையால் பின்னும்
நலிவுற்றாள். கலாசாலைகளில் ஆங்கி
லம் முதலிய பாடங்களைப் போதிக்
கும் ஆசிரியர்களுக்கு உயர்வும்
தமிழாசிரியருக்குத் தாழ்வும் அமைந்
திருப்பதை இப்பொழுதும் நாம் கண்
கூடாகக் காண்கின்றோம். தமிழ்
மொழி முக்கிய பாடமாகச்சர்வகலா
சங்கத்தேர்வுகளில் அமையாது ஒழி
யவே, அதனைப் போதிக்கும் ஆசிரி
யர்களுக்குப் பெருமை குன்றியதோ
டு குறைந்த சம்பளமும் போதியதெ
ன்று கருதப்பட்டது. இத்தகைய
குறைந்த சம்பளத்தையும் பெற்றுக்



கொண்டு பெரும்பாலும் வேறு ஊதி
யத்தொழில் பெறாது தமிழ்ப்பண்டித
வேலையில் அமர்ந்தவர்கள் வறுமை
யால் நலிந்தவர்களாகவே இருந்தார்
கள். இவர்களிற்பலர் தமிழ்நயம் உண
ராதாராகவும், தமிழ் மொழியில் இல
ங்கும் சீரிய நூல்களைக் கல்லாதவரா
கவும் கற்றபொருளையும் ஏற்றமுறை
யில் எடுத்துரைக்கும் ஆற்றல் இல்லா
தாராகவும் இருந்தமையால், தமிழ்
மொழியின் இனிமையையும் நயத்
தையும் அவர்பால் கற்ற தமிழ் மாண
வர்கள் காணாராயினர். கரும்பினுமி
னிய தமிழ் மொழியை நமது மாண
வர்கள் கசந்த மருந்தாகவே கண்டார்
கள். இந்நிலையில் கலாசாலைகளை விட்
டுவெளியேறிய மாணவர்கள், தமிழ்
மொழி சிந்தைக் கினிய செவிக்கி
னிய செம்மொழி என்பதையும் அறி
யாராய், உயிர்க்கு இருமையும் உறுதி
பயக்கத்தக்க மொழி உயரிய மொழி
என்பதையும் உணராராய், கையில் இ
னிய வெண்ணெய் இருந்தும் நெய்
தேடி அலையும்பேதையர்போலப் பிற
மொழிகளிற் சென்று அறிவு பெற
அலைந்தார்கள்.

இவ்வாறன்றி நுண்ணறிவோடு
நூலறிவும் அமைந்த ஒரு சில தமி
ழாசிரியரும் கலாசாலைச் சம்பளத்
தால் இனிது வாழ இயலாது வறு
மை நோயால் நலிந்து ஊக்கம் இழ
ந்து அறிவும் குன்றுவாராயினர்.

"பொச்சாப்புக் கொல்லும் புகழை அறி
[வினை
நிச்ச நிரப்புக் கொன்றாங்கு."

என்றுதெய்வப்புலமைத்திருவள்ளுவ
னார் கூறியவாறே, வறுமையே புலவர
து தமிழறிவை வாட்டி வருத்திக்கொ
ல்வ தாயிற்று. புலவர் வறுமை எந்
நாட்டிற்கும் பொதுவே யாயினும்,
'திரு வேறு தெள்ளியராதலும் வே
று' என்பது உலகனைத்திற்கும் உண்
மையே யாயினும், பிறநாடுகளில் புல
வர்கள் பொது ஜனங்களால் ஆதரிக்
கப்படுவதைக் காண்கின்றோம். ஆங்
கில மொழியில் எழுதப்படுகின்ற
நூல்களையும் பத்திரிகைகளையும் ஆங்
கில மக்கள் எவ்வாறு ஆதரிக்கிறார்க
ளென்பதையும், நமது மொழியில்
எழுதப்படுகின்ற நூல்களை நமது மக்
கள் எவ்வாறு ஆதரிக்கின்றார்களென்
பதையும் ஒப்புநோக்குவோமாயின்,
மேற்கூறிய உண்மை இனிது விளங்
கும். இவ்வாறே ஜப்பான் முதலிய
நாடுகளிலுள்ள ஜனங்கள் தமது நா
ட்டுப் புலவர்களை ஆதரிக்கிறார்கள்.
ஆனால் நமது தமிழ் நாட்டிலோ, அர
சாங்க ஆதரவுமின்றி, தமிழ்மக்கள்
ஆதரவுமின்றித் தமிழ்மொழி தயங்கு
கின்றது.

ஆயினும் இத்தகைய கார்மேகத்தி
னும் ஓர் கதிர் ஒளி இலங்கக் காண்
கின்றோம். இக்காலத்தில் நாடெங்
கும் புதியதோர் இயக்கம் பிறந்திரு
க்கின்றது. தாய்நாட்டைப் போற்ற
வேண்டும், தாய்மொழியைப்போற்ற
வேண்டும் என்னும் ஊக்கம் நாளுக்
கு நாள் பரவி வருகிறது. தாய் மொ
ழியில் பேசுவதும் எழுதுவதுமே
தக்கதென்றும், அன்னிய மொழிக்கு
அடிமைகளாக இருத்தல் ஆகாதெ
ன்றும் அறிஞர்கள் போதிக்கின்றார்
கள். தாய் மொழியைத் தள்ளுதல்
தன்னைப்பெற்று வளர்த்துப் போற்
றிய தாயைப் புறக்கணித்ததை யொ
க்கும் என்னும் உண்மை, தமிழ் மக்
கள் உள்ளத்தில் பசுமரத்தாணிபோ
ல் பதிந்து வருகின்றது.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே
இன்பத்தேன்வந்து பாயுதுகாதினிலே—

எங்கள், தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு, சக்திபிறக்குது மூச்சினிலே" என்று உண்மைத் தமிழ்த் தொண்டர் கூறிய இனிமையும் ஆண்மையும் தமிழ்நாடெங்கும் பொங்கித் ததும்புகின்றது. தமிழ்த் தாய்க்கு அன்புடன் பணிசெய்யும் தொண்டரும் பலராய் விளங்குகின்றனர். இவையெல்லாம் தமிழ் நாட்டில் இப்பொழுது ஊக்கம் நிரம்பியிருக்கின்றதென்பதனை நன்குணர்த்துகின்றன.

ஆயினும் இவ்வூக்கம் எல்லாம் செயலாக மாறினல் அல்லாது பெரும் பயன் விளையமாட்டாது. ஆதலால் தாய்மொழியை வளர்க்கக் கருதும் அறிஞர்கள் இப்பொழுது பலவாற்றாலும் பணிசெய்ய முன்வரவேண்டும். நமது சென்னைச்சர்வகலா சங்கத்தில் தமிழ் மொழியின் வாயிலாகவே அறிவு நூல்களைப் போதிக்கவேண்டுமென்னும் உண்மையை அரசாங்கத்தார் உணருமாறு பெருங்கிளர்ச்சிசெய்யவேண்டும். ஏனைய உயர்தனிச் செம்மொழிகள் என்று அவர்களால் கருதப்படுகின்ற ஆரியம், அரேபியம் முதலிய மொழிகளுக்கு அளிக்கப் பெற்றுள்ள உரிமைகள் எல்லாம் தமிழ்மொழிக்கும் அளிக்கப்படவேண்டுமென்று வற்புறுத்த வேண்டும். இவ்வாறு சர்வகலா சங்கத்தில் தமிழ்மொழி, உயர்தனிச் செம்மொழியாக ஒப்புக்கொள்ளப்பட்டு, M. A. முதலிய உயரிய தேர்வுகளுக்கு ஓர் தனிப்பாடமாக அமைக்கப்பெற்று, மொழி ஆராய்ச்சிக் குரிய துறைகளும் வகுக்கப்பெற்றாலன்றித் தமிழ் மொழியின் நூல்நயமும் தமிழ் மக்களது பழய பழக்க வழக்கங்களும் அவரது விழுமிய நாகரிகமும் உலகிற்கு என்றும் புதைபொருளாகவே யிருக்கும். தமிழ் மக்களது பழய நாகரிகத்தையும் வரலாற்றையும் அறியவேண்டுமாயின் தொல்காப்பியம் முதலிய நல் காப்பியங்களும் நன்கு ஆராயப்படவேண்டும். இவையெல்லாம் சர்வகலா சங்கத்தில் தமிழ் இலக்கிய ஆராய்ச்சித் துறை ஏற்பட்டால் அல்லாமல் இயலாவென்பது தேற்றம்.

இன்னும் இக்காலக் கல்வி முறைக்கேற்ற நூல்கள் இனிய எளிய உரைநடையில் எழுதப்படவேண்டுமென்பதை தமிழ்ப் புலவர்கள் நன்குணரவேண்டும். தமிழ் மொழியில் அரிய பெரிய காவியங்கள் அமைந்திருந்தாலும் இக்காலத்தினர் அவற்றின் பெருமையை எளிதில் அறிந்து கொள்வதற்கேற்ற வசன நூல்கள் இல்லாத குறையை இயன்ற விரைவில் நீக்கிவிடவேண்டும். இன்னும் மருத்துவநூல்களும், சரித்திர நூல்களும், பூமிநூல்களும், வான நூல்களும், மனவியல் நூல்களும், உடல் இயல் நூல்களும் மற்றைய அறிவு நூல்களும் பள்ளிச்சிறாரும் எளிதில் உணர்தற் கேற்ற உரைநடையில்எழுதப்படவேண்டும். இப்பணியை ஏற்றுக் கொள்ளத்தக்கவர்கள் ஆங்கிலமொழியைநன்காராய்ந்த தமிழறிஞரே யாவர். ஆதலின் ஆங்கிலம் கற்ற அறிஞர்கள் தாம் ஆராய்ந்தறிந்த நூற்பொருளைத் தமிழ்மொழியில் எழுத முன்வந்தாலன்றி இப்பொழுது உள்ள குறைகள் நீங்காவென்பது நிச்சயம்.

இனி, தமிழ் நாட்டில் செல்வம் படைத்த சீரியர்கள் தமிழ்மொழிக்காகச்செய்ய வேண்டிய கடமையைச்சிறிதுகருதுவாம். இவ்வுலகில் தோன்றி நிலவும் இயக்கங்களின் குறிக்கோள்கள்எல்லாம்செல்வத்தாலேயே எய்தப் பெறுகின்றன என்பது யாவருமறிந்த



த உண்மையாகும். நன்னெறியிற் பயன்படும் செல்வம் இம்மையும் மறுமையும் இன்பம் தருமென்று அறநூல்கள் கூறுகின்றன. ஆலயங்கள் அன்னசாலைகள் அமைத்தலும், சாலைகளும் சோலைகளும் வளர்த்தலும் சிறந்த அறங்களென்று நமது செல்வர்கள் அறிந்து ஆற்றுவது போலவே, தமிழ்மொழி வளர்த்தலும் உயரிய அறமென்பதனை நன்குணரவேண்டும். நமது மொழியானது தெய்வ இளநலஞ் சான்ற இனிய மொழியென்று அருளாளர் பலர் அருளிப் போந்தார். வடமொழி, தென்மொழியாகிய இருமொழிக்கும் கண்ணுதற் பெருமானே முதற் குரவரென்றும், இரு மொழிகளையும் வினையினீங்கி விளங்கிய அறிவுடைய ஆன்றோரே போற்றினரென்றும் அறியப்படுதலால், அருந்தமிழும் ஆரியமும் தெய்வ மொழிகளென்பதும் இனிது போதரும். இன்னும் கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்த மொழியே பைந்தமிழ் மொழியாமென்பதும், 'பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்த'மொழி, நமது செந்தமிழ் மொழியேயாமென்பதும் 'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும்முதலை யுண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண்ணுருவாய்க் கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததும் தண்டமிழ் மொழியே'யாமென்பதும் நன்கு அறியப்படுமாயின் தமிழ்மொழியை வளர்த்தல் தனிப்பெருந் தெய்வத்திற்குச் செய்யப்படும்ஒப்புயர்வற்ற பணியாம் என்னும் உண்மை இனிது விளங்கும். ஆகவே தமிழ்மொழி பயிலும் கலாசாலைகள் நிறுவுதலும், தமிழ்மொழிபயின்ற புலவரது வறுமை நோய் களைந்து அவரைப் போற்றுதலும், தமிழ் நூல்களை அச்சிட்டுப் பயன்படுத்துதலும் தமிழ்க்கழகங்களை ஆங்காங்கு அமைத்துத் தமிழ் மொழியைப் பொன்போற் போற்றுதலும் சாலவும் சிறந்த அறங்களாம். இத்தகைய அறநெறியில் பயன்படும் செல்வம் இம்மையிற் புகழும் மறுமையிற் பேரின்பமும் பயக்குமென்பதுஆன்றோர் துணிவாகும். 'நன்றேசெய்யவும் வேண்டும், நன்றும் இன்றே செய்யவும் வேண்டும். இன்றும் இன்னே செய்யவும்வேண்டும்' என்பது ஆன்றோர் திருவாக்காதலால், தமிழ்மொழி போற்றும் நன்னெறியாகிய அறநெறியை இன்றே தமிழ் மக்கள் மேற்கொள்ள வேண்டும். தமிழ் மக்களது அறிவும் பொருளும் தமிழ் மொழிக்குப் பயன்படுமாயின் இம்மொழி சிறப்புற்றோங்கி உலகிலுள்ள உயரிய மொழிகளுள் எல்லாம் தலையா நிற்கும் தகுதிவாய்ந்து இலங்கு மென்பதில் யாதும் ஐயமில்லை.

---

வாழிய செந்தமிழ் ! வாழ்க நற் றமிழர்
வாழிய பாரத மணித் திருநாடு !
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க !
நன்மைவந் தெய்துக தீதெலாம் நலிக !

—பாரதி.

---

# ஒழுக்கம்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

இப்பொழுது உங்கள் முன்னிலேயில் பேசஎடுத்துக்கொண்டபொருள் ஒழுக்கம் என்பது. ஒழுக்கத்தைப் புலவாறு பேசிக்கொண்டுபோகலாம். தேச ஒழுக்கம்,சமய ஒழுக்கம்,ஜாதி யொழுக்கம், வேறு பல ஒழுக்கமுறைகள் எனப் பாகுபடுத்திப் பேசிக்கொண்டு போகலாம். அவ்வழி பற்றி ஈண்டு யான் பேசப் போகின்றேனில்லே. அவ்வழிபற்றிப் பேசப்புகின், எனக்களித்துள்ள காலவரை போதாது. இவ்விடத்தில் அவ்வாறு பேச வேண்டுவதும் அனுவசியம். ஆதலால் ஒழுக்கத்தைப் பற்றிப் பொதுப்பட சில உரைகள் பகர விரும்புகிறேன். நிகழுங் குற்றங் குறைகளை மன்னிப்பீர்களாக.

ஒழுக்கம் என்னும் சொற்பொருளை ஆராய்தற்கு முன்னதாக, ஒழுக்கம் என்பது நல்லொழுக்கமா தீயொழுக்கமா என்பது கவனிக்கப்படல் வேண்டும். அடைமொழி யின்றி ஒழுக்கம் என்று சொல்லும்போது அது நல்லொழுக்கம் என்னும் பொருளேயே நல்குவதாகிறது. இதுதமிழ் மரபு. ஒழுக்கம் என்பதின் சொற்பொருளே விரித்து ஓதுவதிலும் உங்கள் அரிய காலத்தைச் செலவழிக்க விரும்புகின்றேனில்லே. ஒழுகு, ஒழுக்கு, ஒழுக்கம் — சொல் தோற்றங் காண்க! நேர்மையாக நடத்தலே ஒழுக்கம் என்று நந்தமிழ் மக்கள் கொண்டார்கள். நீரொழுக்கு, ஆற்றொழுக்கு என வருஉம் தொடர்களேக்கவனிக்க. சுருங்கக் கூறின் நன்னடை என்பதே ஒழுக்கத்தின் பொருள் என்று கூறலாம். வடமொழியாளர் அதனே ஆசாரம் என்பர். ஆங்கிலத்தார் character — conduct— morality — என்னுஞ் சொற்களால் ஒழுக்கத்தின் பொருளேத் தெரிவிப்பர். நேர்மையான நடை —செம்மைநெறி என்று கொள்வது ஒழுக்கத்தின் பொருளே ஒருவாறு தெரிவிப்பதாகும்.

அத்தகைய ஒழுக்கம் மக்கள் வாழ்விற்கு இன்றியமையாததா வென்பது ஆராயற் பாற்று. தீ யொழுக்கத்தால் விளேயுங் கேடு என்னே? நல்லொழுக்கத்தால் விளேயும் ஆக்க மென்னே? என்று எண்ணுவோர்—வினவுவோர் உலகிலில்லாமல் இல்லே. ஆண்டவன் இயற்கையில் நியதி என்பதொன்றை அமைத்திருக்கிறன். அந்நியதிக்கு மாறுபட்டு எவரும் நடத்தல்ஆகாது. மரத்தை வளர்க்க வெந்நீர் விடுவது நியாயமோ?வெந்நீர் விட்டால் என்ன என்று கேட்கலாமோ? மலே உச்சிகாண ஒழுங்காக நிறுவி யுள்ள படிவழி விடுத்து வேறு பாங்கர் செல்லும் ஒருவனுக்கு எவ்வளவு இடர் நேருமென்பதை நான் சொல்ல வேண்டுவதில்லே. அவன் முயற்சியும் பயன்படா தொழிகிறது. மனிதன் நாடோறும் நீராடுதல் நலமெனச் சொல்லப்படுகிறது. நீராடல் என்றவொன்று கொண்டு எந்நீரிலாவது ஆடலாமோ? எவ்வேளேயிலாவது குளிக்கலாமோ? அதற்கென உள்ள நீரினும் குறித்த காலத்திலும் நீராடவதே சிறப்புடைத்து. ஆண் பெண்ணேடு கூடிவாழ வேண்டு மென்பது நியதி. பெண்ணேடு கூடிவாழல் என்பதை மாத்திரங் கொண்டு நோயுள்ள பெண்களோடு கூடிவாழலாமோ? வரைவின் மகளிர் இன்பந் துய்க்கலாமோ? இவ்வெடுத்துக்காட்டுகளான் விளங்குவது என்னே? எவ்வினேயும் நேர்மைபற்றி ஒழுகவேண்டு மென்பதே இயற்கை நியதியின் நோக்கம். அதற்கு மாறுபட்டு நடப்போன் வழ்ாவு இன்னலுறுவது இயல்பு. நேர்படவொழுகு என வருஉம் ஆன்றோர் திருவாக்கை ஓர்க. ஆதலால் மனித வாழ்விற்கு ஒழுக்கம் இன்றியமையாதது.

> "ஒழுக்கம் உயர் குலத்தினன்று
> ஒழுக்கம் விழுப்பந்தாலால்
> ஒழுக்கம் உயரினும் ஓம்பப்படும்"

என்று நந்தமிழ்ப் பெரியோர்கள் ஒழுக்கத்தின் சிறப்பை விளக்கி யுள்ளார்கள். குலங் கெடுவதால் மனிதன் வாழ்வு கெடுவதில்லே. ஆனுல் ஒழுக்கங் கெடின் வாழ்வே கெடுகிறது. உயிரின் ஆக்கம் ஒழுக்கத்தைப்பற்றிக் கிடத்தலால் உயிரினும் ஒழுக்கம் ஓம்பப்படவேண்டு மென்று சொல்லப் பட்டது. மரத்துக்கு ஞாயிறு—ஒளி மண்புனல் காற்று முதலியன எவ்வளவு இன்றியமையாதனவோ அவ்வளவு உயிருக்கு ஒழுக்கம் இன்றியமையாதது. ஒழுக்கமில்லேயேல் உடல்வளமில்லே. உடல்வளமில்லா உயிர் பிறவிப் பயனேத் துய்ப்பதில்லே. உயிர் நலத்திற்கு உடல் நலம் வேண்டற்பாலது.

> உடம்பா ரழியில் உயிரா ரழிவர்,
> திடம்படமெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்,
> உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
> உடம்பைவளர்த்தேன் உயிர்வளர்த்தேனே.
> உடம்பினே முன்னம்
> இழுக்கென் றிருந்தேன்
> உடம்பினுக் குள்ளே
> உறுபொருள் கண்டேன்
> உடம்புளே உத்தமன்
> கோயில்கொண் டானென்
> றுடம்பினே யானிருந்
> தோம்புகின் றேனே.

திருமூலாருளிய இத்திருவாக்கால் உடலோம்பலின் அவசியம் புலனுகிறது. உடல் நலத்திற்கு அழகுஅவசியம். எவன்பால் அழகு பொலிகிறதோ அவன் உடல்வள முடையான் என்று கொள்ளலாம். அவ்வழகோம்ப மேல்நாட்டார் பலதுறையிலும் உழைத்து வருகிறுர். நம்முன்னோர்கள் உடல் நலத்துக்குரிய அழகைக் காக்க ஒழுக்க நெறிகாட்டி யுள்ளார். நல்லொழுக்கமுடையான்உடலில் செழுமையும் வளமையும் அழகும் கொழித்துக் கொண்டிருக்கும். அந்நல்லுடல் உடையான் உள்ளத்தில் சீற்றம் முதலிய தீநீர்மைகள் உறுதல் அரிது. சினம் முதலியன உடல் உரம் பெரிதும் இல்லாதாரிடத்து உறுவன என்று தத்துவ சாஸ்திரிகள் கூறுகிறுர்கள். இதற்குச் சாத்திரம் வேண்டுவதில்லே. உடல் வளமும் ஒழுக்கத்தைக் காப்பதென்பது ஈண்டுக் கருதற் பாலது. ஒழுக்கத்தைக் காப்போர் நீண்டநாள் உலகத்தில் வாழக்கூடும். அவர்கள் நோய் வாய்ப்படுதலும் அரிது. விரிக்கிற் பெருகும்.

ஒழுக்க நிகழ்ச்சிக்கு உறைவிடம் எது என்பதைச்சிறிது சிந்திப்போம். மனச்சான்று, நன்னடக்கை—உறைவிடமாயிருக்கின்றது என்று ஜேம்ஸ் ஆலன் என்ற பெரியார் கூறியுள்

[சேந்தமங்கலத்தில் பார்க்கவகுல சங்கமகாநாட்டில் ஸ்ரீமாந் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் பேசியது.]

ளார். ஒருவன் எவருமில்லா மாந்தோப்புக்குள் நுழைகிறான்; ஆங்கே மரங்களில் தொங்கும் தேமாங்கனிகள் அவன் மனத்தைக் கவர்கின்றன. அவன்பாலுள்ள சாத்தான் கனிகளைக் கவர்ந்து தின்னுமாறு ஏவுகிறான். ஆனால் மனச்சான்றெனுந் தெய்வம் "வேண்டாம், அவை இன்னொருவன் பொருள்" என்று தடுக்கிறது. இங்கே மனிதனை நேர்மை வழியில் நடத்தியது அவனது மனச்சான்றன்றோ? ஒருவன் பெண் மக்கள் நிரம்பிய தெருவூடே செல்கிறான். அவன்பாலுள்ள பேய் பெண்ணாசையைக் கிளப்புகிறது. ஆனால் அவனது மனச்சான்று "வேண்டாம் பிறன் மனைவி" என்று தகைகிறது. இதனால் மனச்சான்றுக்கும் ஒழுக்கத்திற்கும் உள்ள தொடர்பு நனி விளங்கும். ஒழுக்கத்தின் சிறப்பை உணர்த்த வேறு பல எடுத்துக்காட்டுகளும் கதைகளும் பிறவும் வேண்டுவதில்லை. உலக வழக்கில் கல்வி அறிவு ஒழுக்கம் என்று சொல்லப்படுவதைக் கவனியுங்கள். ஒருவன் சிறந்த கல்வியாளனாயிருக்கிறான். அவன்பால் ஒழுக்கமின்றேல் அவனை உலகங் கொள்ளுகிறதோ? இன்னொருவன் கூர்த்த மதியிற் சிறந்தவனாயிருக்கிறான். அவன்பாலும் நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் இல்லையேல் அவனை மனிதனாக உலகம் கொள்ளுகிறதோ? இல்லையே! ஒழுக்கமிலாக் கல்வியும் ஒழுக்கமிலா அறிவும் போற்றப்படமாட்டா. கல்வியினும் அறிவினும் ஒழுக்கமே உயர்வுடைத்து. கல்வியறிவின் பயனே ஒழுக்கம் என்பது. கல்வியறிவில்லா ஒருவனிடத்து ஒழுக்கமேன்பு தோன்றிருக்குமேல் அவன் கல்வியறிவைப் பெற்றவனாகிறான். கல்வி பயில்வது எற்றுக்கு? அறிவு விளக்கம்பெறுதல் எற்றுக்கு? ஒழுக்கத்துக்கன்றோ? ஒருவன் கல்வியின்றிவாழலாம். அறிவின்றி வாழலாம். ஒழுக்கமின்றி வாழ்தல் கூடுமோ? ஒழுக்கமிலர் வாழ்வு வாழ்வாகுமோ? ஆகவே ஒழுக்கம் குலத்தினும் உயர்ந்தது. உயிரினும் மேம்பட்டது. அது மக்கள் வாழ்விற்கு இன்றியமையாதது.

ஒழுக்க முறையை அறிஞர் புறப்புறவொழுக்கம் புறவொழுக்கம் அகப்புறவொழுக்கம் அகவொழுக்கம் என நான்கு வகையாகப் பிரிக்கின்றனர். அந்நான்கு புறம் அகம் என்னும் இரண்டில் அடங்கும். கூர்ந்து சிந்திப்பின் அகமே புறமென்பதும் விளங்கும். இதைப்பற்றி ஜேம்ஸ்ஆலன் என்ற அறிஞர் தனியாக ஒருநூலும் எழுதியுள்ளார். புறத்துக்கும் அகத்துக்கும் உள்ள தொடர்பை தொல்காப்பியப்பொருளதிகாரம் விரித்துக் கூறுகின்றது. புறவொழுக்கம் அகவொழுக்கம் என்னு மிரண்டில் முதலாவது புறவொழுக்கத்தை யெடுத்துக் கொள்ளுவோம். அதைப்பற்றியும் முற்றும் பேச இம்மகாநாடு இடந்தராது. சிலவற்றை ஈண்டுக் குறிப்பிட்டுச் செல்கிறேன். ஆசிரியர் திருவள்ளுவனார் 'புறந்தூய்மை நீரான்மையும்' என்று கூறியுள்ளார். ஆதலால் நீராடலின் அவசியத்தைப் பற்றிச் சுருங்கச் சொல்லலாமென நினைக்கிறேன். நமது மூதாட்டியார் 'வைகறைத் துயிலெழு' என்று கூறியிருக்கிறார். துயில் நீத்தெழுந்ததும் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு நீராடுதல் வேண்டும். வைகறை துயிலெழுந்து ஏன் நீராடுதல் வேண்டும்? மற்ற நேரத்தில் நீராடினால் என்னே? என்று சில அன்பர்கள் ஐயுறலாம். மற்ற நேரத்தில் நீராடுவதைப்பற்றி இப்பொழுது ஒன்றும் பேச வேண்டுவதில்லை. வைகறையில் துயிலெழாது படுக்கையில்கிடக்கின்றவன் உடலில் இரத்தக் கொதிப்புண்டாகும். அந்நேரத்தில் படுக்கையில் கிடந்து பழகிக் கொண்டவன் பலதிற நோய்வாய்ப்படுவன். இரத்தக்கொதிப்புவேகத்தால் அடிக்கடி சினமுறுவன். நஞ்சுண்டவனுக்கும் அவனுக்கும் வேற்றுமை யில்லையென்று கூறலாம். அவன் குருதி கரிய நஞ்சாகிறது. வைகறையில் எவ்வுயிரும் உறங்கலாகாதென்பது இயற்கை விதி. அஃறிணைகளாகிய பறவைகள் வைகறையிலன்றோ துயில் விடுத்து மன எழுச்சியோடு ஆடியும் பாடியும் ஆகாயத்தில் பறந்து செல்கின்றன? மன எழுச்சிக்குரிய காலம் வைகறையே. அக்காலத்தை உறங்காது உறங்குவதில் கழிப்பவன் நாளடைவில் மன எழுச்சி யில்லாச்சோம்பேறியாகிப்பூமிக்குச்சுமையாகவிளங்குகிறான். ஆதலால் வைகறைத் துயிலெழுவதே மக்கள் வாழ்விற்கு ஊக்க மூட்டுவதாகும். அந்நேரத்திலெழுந்து காலைக் கடனை முடித்து எவ்வித வேலை செய்யாமலும் உணவு கொள்ளாமலும் நீராடுதல் வேண்டும். அந்நேரத்தில் நீராடுதல் ஊக்கத்திற்கு ஊக்கமூட்டுவதாகும். விடியற்காலத்தில் நீராடி இளஞாயிற்றொளி மேல்படா, புனித உயிர்ப்பு மூக்கில் அடா, வீடு சேர்கிறவன் இவ்வுலகில் பன்னெடு நாள் வாழ்கிற பேறு பெறுகிறான். நீராடலின் சிறப்பை உணர்த்த ஈண்டொருவர் வரலாற்றுக் குறிப்பை நினைவூட்டிக் கொள்கிறேன். பிரான்சு தேசத்தில் எண்பது வயதுடைய ஒரு கிழவியிருந்தாள். வயதைக் கொண்டு அவளைக் கிழவியென்று சொல்லலாமேயன்றி அவள் வடிவத்தைக்கொண்டு அம்மொழியால் அவளை அழைத்தல் தகாது. அவள் வடிவம் இளங்குமரி வடிவமாகப் பொலிந்திருந்தது. அவளுக்குப் பிள்ளைகளுண்டு. பேரப்பிள்ளைகளுமுண்டு. ஒருநாள் ஒரு பேரன் அவளை உற்று உற்று நோக்கி அவளைத்தன் விருப்பத்திற்கு இணங்குமாறு கேட்டான். அவளது கட்டழகு அவனைக் காமுறச் செய்தது. அவள் வயதென்ன? இவன் வயதென்ன? முறையிலோ அவள் பாட்டி, இவன் பேரன். பேரன் மனதைத் தகாதவழியில் அவளழகு நடாத்தியதெனில், அவளது இளமை வளத்தை என்னென்று கூறுவது? பேரன் விருப்பத்திற்குப் பாட்டி இணங்குவளோ? அவள் மறுத்ததும் பேரன் நாண மேலீட்டால் தூக்கிட்டுக்கொண்டு இன்னுயிர் துறந்தான். எண்பது வயதுடைய ஒருத்தி இத்தகைய இளமை வாய்ந்திருந்ததற்குக் காரணமாக நின்றது எது? அவளது வீட்டுக்கு அணித்தாய் ஓடும் ஒரு சிற்றருவியில் நாடோறும் பன்முறை நீராடிவந்ததே யாகும். இதனை ஹாரிகேஸ் என்பவர் எழுதிய "என்றும் வாழ்வ தெப்படி "(How to live for ever?) என்னும் நூலில் பார்க்கக் காணலாம். இதனால் நீராடலின் சிறப்பு செவ்வனே விளங்கலாம். நமது நாட்டிலும் விடியற் காலையில் நீராடும் பழக்கம் உண்டு. இன்னும் கிராமங்களில் அக் காலைக் காட்சியைக் காணலாம். இவ்விடத்தில் நம்மவர்கள் நீரின் பெற்றி யுணராது சுகாதாரமுறைக்கு மாறுபட்ட பல காரியங்களை நிகழ்த்துகிறார்கள். ஆற்றில் ஒருபத்

கம் ஒருவன் நீராடும்போது மற்றொருபக்கம் இன்னொருவன் நாணமின்றி சௌசம் செய்கிறான்; வேறொருவன் குதிரை கழுவுகிறான். ஆற்றோரத்தில் நம்மவர்கள் நிரை நிரையாக மலஜலங்கழிக்கச்சிறிதும் அஞ்சுவதில்லை. மக்கள் நடமாடும் வழிகளில் மலஜலங்கழிப்பதினும் பாவம் வேறொன்றில்லை. பெரிதும் பெருநோய்கள் மல ஜலங்களை மிதிப்பதினால் உண்டாகின்றன. விரிவு சுகாதார நூல்களிற் காண்க. ஆற்றுநீர் ஓடு நீரென்ற போலிச் சாக்குப் போக்குகளைச்சொல்லி விடுகிறார்கள் நம்மவர்கள். ஓட்டமின்றிக்கட்டுப்பட்டுநிற்கும் நீர்நிலைகளிலாவது நம்மவர்கள் அசுத்தஞ் செய்யாம லிருக்கின்றார்களா? கரைபோரத்தில் மலஜலக்கழிவு; ஒரு பக்கம் சௌசம்; மற்றொரு பக்கம் துணி தோய்த்தல் இன்னொரு பக்கம்; தலைமுழுகல்; வேறொரு பக்கம் நீருந்தல்; பிறிதொரு பக்கம் பெண்கள் நீர் முகத்தல். ஆண்மக்கள் பெண்மக்கள் வேற்றுமை யின்மையையும் அங்குக் காணலாம். ஒரே குளத்தில் ஒருவன் ஒரே இடத்தில் சௌசம் செய்து விட்டு உடனே அதே யிடத்தில் முகங் கழுவி அந்நீரை வாயில் விட்டு உமிழ்கிறான். என்ன சுகாதாரம்! என்ன அறிவு! நீரைக் கடவுளெனப் போற்ற வேண்டு மென்று நூல்கள் கூறியிருந்தும் நம்மவர்கள் நீரைக் கெடுப்பதில் மிகவும் பேர் பெற்று நிற்கிறார்கள். இது நிற்க, எந்நீரில் மூழ்குதல் வேண்டு மென்பதைப் பற்றிச் சிறிது சிந்திப்போம். ஓடு நீரில் காலையில் முழுகுவதே நலம். ஓடாது கட்டுப்பட்ட நீரில் மூழ்குவது கூடாது. ஆறில்லா வூரில் வாழ்வோர் பெரிதும் வெந்நீரில் மூழ்குதல் வேண்டும். பெரிதும் மூளை வேலைசெய்வோர் வெந்நீரிலேயே தலை முழுகுதல் சிறப்பு. கங்கை, காவேரி போன்ற பெரு நதிகளில் மூளை வேலைசெய்வோரும் நீராடுவதாலெவ்விதத்தீங்கும் விளையாது. தண்ணீர் நரம்புகளுக்கு உரம் ஏற்றும். வெந்நீர் விரைவில் அழுக்கை அகற்றும். எப்படியாவது சுகாதார முறை வழிநின்று நீராடவேண்டு மென்பது கவனிக்கத்தக்கது. எக்காரணம் பற்றியும் அசுத்த நீரை உபயோகிக்க லாகாது.

நீரால் புறத்தைத் தூய்மை செய்த பின்னர் நீதி வடிவினனாகிய ஆண்டவனை நினைத்தலும் பாடலும் போற்றலும் வேண்டற்பாலன. ஒழுக்கத்துக்கும் ஆண்டவன் வழிபாட்டிற்கும் தொடர்பு உண்டோ என்று சிலர் கருதலாம். உண்டென்றேசொல்வேன். மனிதன் சார்ந்ததன் வண்ணமாவன் என்பது எவரும் ஒப்ப முடிந்த உண்மை. ஆண்டவன் மாசிலா மணியாய், நீதிப் பொருளாய்,ஒழுக்க மயமாயுள்ளவன்.

> இன்ன நிற..................நீதிபலவும்
> தன்னவடிவம்.

என்னும் திருப்பாட்டில் திருஞானசம்பந்தர் ஆண்டவனை நீதி திரண்ட ஒருவன் என்று கூறியிருக்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஒருமுறை உரைத்த பொய்மைக்கு அவரது இரண்டு கண்களையும் பிடுங்கிய இறைவன் எத்தகை யொழுக்க முடையானென்பதை விரித்துக்கூறவேண்டியதில்லை. அன்று தொட்டு சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய பல பதிகங்களில் ஆங்காங்கேகடவுளைச் சீலனெனவும் பண்பனெனவும் ஒழுக்கமுடையானெனவும் பாடியிருத்தல் காண்க. ஒழுக்கமயமான ஆண்டவனை மனமொழி



மெய்களால் வழிபடுவது ஒழுக்கத்தில் உறைந்து நிற்பதாகும். இக்காரணத்தால் ஒழுக்கத்துக்கு ஆண்டவன் வழிபாடு வேண்டற்பாலது.

இன்னுமுள்ளபலமுறைகளை ஈண்டு விரித்துப் பேசப் போதிய காலமின்மை குறித்து வருந்துகிறேன். ஆயினும் இரண்டொன்றைக் குறித்து மேலேசெல்வேன். உணவையும்உடையையும் குறிப்பிடாமற் செல்ல என் மனம் எழவில்லை. உணவைப்பற்றிஇரண்டோருரையும் அவ்வாறே உடையைப்பற்றிச் சில உரையும் பகர விழைகிறேன். உணவு நல்லொழுக்கத்தை வளர்ப்பதாக இருத்தல் வேண்டும். சினத்தையும் கொதிப்பையும் திமிரையும் உண்டாக்கும்உணவு கொண்டால் ஒழுக்கத்தை ஓம்பமுடியுமோ? கள்ளருந்தும் ஒருவன் ஒழுக்கமுடையவனாவனோ? காப்பிக்கும் தேத்தண்ணீர்க்கும் கள்ளுக்கும் என்னவேற்றுமை? வேற்றுமை சிறிதே! இவ்வெம்மைநாட்டிற்குக் காப்பியும் தேநீரும்முற்றும்அநாவசியம்.புலாலுணவுங்கூடாது.புளி மிளகாய் கலந்த உணவும்கொள்ளலாகாது.கனியுணவு உடலைப் பாதுகாப்பதாகும். அவ்வுணவு கொள்வோர் உலகில் நீண்ட நாள் வாழ்வர். சாத்வீக குணமும் பெருகும். இக்குணம் ஒழுக்கத்தை எவ்வெவ் வழியில் வளர்க்கு மென்பதை நான் சொல்லவும் வேண்டுமோ? ரஜோகுண, தமோகுண உணவுகளை உண்போன் எவ்வாறு நல்லொழுக்க முடையோனாயிருக்க முடியும்? பெருந் தீனி ஒழுக்கத்தைக் கெடுப்பதோடு உடல் வளத்தையும் சிதைத்து முடிவில் மரணத்தையும் விரைவில் கூட்டும். ஒழுக்கத்துக்கு விரதம் மிக இன்றியமையாதது. விரதங் காக்கக்காக்க ஒழுக்க உணர்வு ஓங்கி வளரும்.

நாம் அணியும் உடை மிக எளிய உடையா யிருக்கவேண்டும். போர் போராக உடை தரித்தல் உடல் நலத்தைக் கெடுக்க வழிதேடுவ தாகும். யந்திரங்களால் செய்யப்படும் உடைகளை மனிதன் தரிப்பது தவறு. யந்திரசாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களில் பெரும்பாலோர் குடிகாராதற்குக் காரண மென்னை? யந்திரங்களில் ஓயாது வேலை செய்வதாலும் யந்திர இயக்க ஒலிகளைச் செவி மடுப்பதாலும் உண்டாகும் அயர்ச்சி அவர்களைக் குடித்துத் திமிர்கொண்டு வெறித்து ஆடும்படி செய்கின்றது. மகாத்மா காந்தி இதைப் பற்றிப் பல இடங்களில் விரித்துப் பேசியிருக்கிறார். கையால் நூல் நூற்பதாலும் நெய்வதாலும் ஒழுக்கம் ஓம்பப்படுகிறது. வீட்டி லுள்ள தாய்மார்கள்—பெரிதும் செல்வத் தாய்மார்கள்—தற்பொழுது ஒழிந்த நேரங்களில் என்னசெய்கிறார்கள்? வீணான தீய எண்ணங்களை யெண்ணுகிறார்கள். அவ்வெண்ணங்களால் சில தாய்மார்களின் நிறையுங் கெடுகிறது. அவ்வேளைகளில் தாய்மார்கள் ராட்டினத்தைச் சுழற்றி நூல் நூற்பதில் கருத்தைச் செலுத்துவார்களானால் அவர்கள் மனதில் தீய எண்ணங்கள் உறுமோ? இன்னும் ராட்டினத்தைப் பிடித்துச்சுழற்றுவதால் முதுகு வளைவு நிகழாது. நிமிர்ந்து ஏக்கெழுத்தம் போல் உரம் பெற்று நிற்கும். முதுகந்தண்டத்திலும் நரம்புக்கொடிகளிலும் எத்தகைய ஊறும் நிகழாதவாறு இராட்டினம் காக்கும். ஆகவே கரத்தால் நெய்யப்பட்ட உடை தரிப்பதும் ஒருவழியில் ஒழுக்கத்தை ஓம்புவதாகும்.

உறங்கும்போது கவனிக்கப்பட வேண்டிய பல விடயங்கள் உண்டு. அவைகளிலும் இரண்டொன்றைக் குறிப்பிட்டுச் செல்கிறேன். உறக்க வேளையை விழிப்பில்போக்கலாகாது. ஒரு மனிதன் குறைந்தது நான்கு மணி நேரமாவது தூங்குதல் வேண்டும். உறக்கத்தை விழிப்பில் போக்குவதால் உடலின் அமைப்பு முறைகளும் கட்டுக்களும் நாளடைவில் குறைந்துவிடுகின்றன. அவை குலையப்பெற்ற உடல் நல்லொழுக்க நிலவலுக்கு நிலைக்களனுமோ? உரங்குன்றப்பெற்ற உரனுடையான் சிற்றின்பத் துறையில் விரைவில் எளியனுவான். இன்னோரன்ன பல காரணங்களால் உடல் கட்டுக்கோப்பைக் கெடுக்கும் வழியில் உறக்கத்துக்கு இன்னல் தேவேது அறியாமை. நாடோறும் உறக்கத்தை வலிந்து கெடுத்துக் கொள்ளுகிறவன்பால் சில மாதங்களில் ஒரு மாறுதல் நிகழ்வது காணலாம். இயல்பாக இடது கரத்தைக் கீழே ஊன்றிப் படுப்பதற்குப் பதிலாக அம்மனிதன் வலது கரத்தை ஊன்றிப் படுக்க விரும்புவான். ஒருவனது உடல் நிலையை அளந்தறிய வேண்டுமானுல் அவன் எக்கரத்தை ஊன்றிப் படுக்கிறுனென்று நிலை அளந்துவிடலாம். இரத்தம் ஒழுங்காகவும் முறையாகவும் ஓடும் பேறுடையான் இடது கரத்தை ஊன்றியே படுப்பன். மற்றவன் மற்றக்கரத்தை ஊன்றியே படுப்பன். அன்னுன் சுகாதார ஆராய்ச்சியுடையனுய் வலிந்து இடது கரததை ஊன்றி உறங்கினுலும் இயற்கைதேவி அவனை யறியாது அவன் கரத்தை மாற்றிவிடுவாள். இம் மாற்றத்தால் விளையுங் கேடுகள் பல. ஒழுக்கத்தைப் பற்றிய இவ் வுபந்யாசத்தில் அவைகளை விரித்துக் கூறுவது அநாவசியம். புறவொழுக்க முறைகளை இவ்வளவோடு நிறுத்தி விடுகிறேன். இனி அகவொழுக்கத்தின் மீது சிறிது கருத்தைச் செலுத்துவோம்.

(தொடரும்.)

---

# தமிழ் நாகரிக மாண்பு.

---

பி. ஸ்ரீ.

கர்ண பரம்பரையும் எட்டிப் பார்க்க இயலாத மருண்டு தடுமாறும் பண்டைக்கால உலகில் — சரிதகாலத்திற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே — தமிழ் மக்கள் மலைகளிலும் மலை சார்ந்த காட்டு நிலங்களிலும் வசித்து வந்தார்கள். தமிழ்மக்களே ஆதி மனிதரென்றும் தமிழகமே நாகரிகத்தின் பிறப்பக மென்றும், விருப்பு வெறுப்பின்றி ஆராயும் ஆராய்ச்சியாளர் அறிவிக்கின்றனர். பண்டைத் தமிழகத்தின் தென்பகுதி கடலால் விழுங்கப் பெற்றதென்றும், அந்நாளில் அருந்தமிழ் நூல்கள் பல வழிவழிப் பெயரும் மாள அழிந்துபோயின வென்றும் தமிழாராய்ச்சியினின்றும் வேறு சில ஆதாரங்களினின்றும் ஊகிக்கின்றோம். ஒரு காலத்தில் தமிழகம் குமரி முனைக்குத் தெற்கே பரவியிருந்தது போல, வேங்கடத்திற்கு வடபக்கத்திலும் வெகுதூரம் வியாபித்திருந்த தென்றும், தமிழ்மொழி சதுமறை யாரியம் வருமுன் இந்தியா முழுவதும் பரவித் தனியரசு செலுத்திவந்ததென்றும் சரித ஆராய்ச்சியாளர் சிலர் ஊகித்துச் சொல்லுகின்றனர். தமிழர் பழமை பெருமைகளுக்குத் தமிழிலக்கியங்கள் தக்க சான்றுகள் தருகின்றன. இவை புறச் சான்றுகளாலும் ஆதரிக்கப்படுகின்றன. பண்டைத் தமிழிலக்கியங்களில் கூறப்படும் 'யவனர்' ஐரோப்பிய நாகரிகத்தின் தாயகமாகிய கிரீசு தேசத்தினின்றும் வந்தஐயோனியர் என்ற கிரேக்கரே யாவர். கிரீசு, ரோமநாடு, பாபிலோன் ஆதியவெளிநாடுகளோடு தமிழகம், பொருள் வாணிபமேயன்றி உயர்தர வாணிபமாகிய அறிவு வாணிபமும் செய்து வந்தது. "திரைகடலோடியும் திரவியம்தேடு" என்ற ஔவை வாக்கினுக்கு இணங்க நம் மூதாதையர், நிலமெங்கணும் உலவியும் கடலோடியும் பொருட்செல்வம் கலைச் செல்வம் என்னும் இருபெருஞ் செல்வத்தினையும் ஒருங்கு தேடி இன்ப வாழ்வு வாழ்ந்தனர். தமிழகமும் அறியாமையிருளில் ஆழ்ந்து கிடந்த பழைய உலகின் ஞானப் புகழ் விளக்கமாய்த் திகழ்ந்து விளங்கியது. வேங்கடமலைக்கு வடதிசையில் வசித்த தமிழர் ஆரியரோடு இரண்டறக் கலந்தபின்னர், வேங்கடமே தமிழகத்தின் வட எல்லையாகக் கருதப்பட்டது. அக்காலத்திலும் குமரிமுனைக்குத் தெற்கே நாடுகளும் மலைகளும் ஆறுகளும் இருந்தன. தொல்காப்பியர் காலத்தில் குமரியாறே தமிழகத்தின் தெற்கெல்லையாக அமைந்திருந்தது. தொல்காப்பியர் காலத்திற்கு முன் குமரியாற்றிற்குத் தெற்கும் தமிழகம் பரவியிருந்தது. குமரியாற்றிற்குத் தெற்கே பாண்டியனொருவன் பஃறுளியாற்றை உள்ளடக்கி நாட்டை வளமுறச் செய்தான் என்று பண்டைத் தமிழ்ப்பாவலர் ஒருவர் கூறுகின்றார். தமிழ் நாட்டுப் பண்டையோரே பாண்டியராவர். 'ஆதியின்னதென்று ஓதுதற்கு அரிய வழுதியின் தொழுகுலம்' என்று சிறப்பித்துக் கூறப்படும் தொன்மையும் பெருமையும் வாய்ந்தது பாண்டியர் குலம். தமிழகத்துப் பழங்குடிகளில் முதன்மை பெற்று நின்றவர் பாண்டியர். பாண்டியர்க்குப்பின் தமிழ்ச்சரிதத்தில் பேரும் புகழும் பெற்றுவிளங்கும் பண்டைத் தமிழ்க் குலத்தினர் சோழரும் சேருமாவர். சேர சோழபாண்டியரே பண்டைத் தமிழகத்து முடியுடை மூவேந்தராவர். இவர்களது வீரத்திற்கும் செங்கோன்மைக்கும் நாகரிகத்திற்கும் நாட்டபிமானத்திற்கும் பண்டை நூல்களில்பல்குறிப்புகள்காணப்படுகின்றன

மலையிலே பிறந்த தமிழ் மொழியையும் தமிழ் நாகரிகத்தையும் பொன்னேபோல் போற்றி வளர்த்த பெருந்தகையாளர் பாண்டியராவர். கடல் கொள்ளப்பட்ட மதுரையிலும், கபாடபுரத்திலும் பாண்டியர்கள் தமிழ் ஆராய்ந்து வளர்த்துவந்தனர். பஃறுளியாறு, குமரியாறு முதலிய ஆறுகளோடும் குமரிக்கோடு முதலிய மலைகளோடும், கபாடபுரம் முதலிய ஊர்களோடும், பன்னாடு முதலிய நாடுகளோடும் பாண்டிநாட்டின் ஒருபகுதி கொடுங் கடலால் விழுங்கப்பட்டதற்கு முன், 'குடுமி' என்னும் ஒரு செந்தமிழ்ப பாண்டியன் இருந்தான். இவனது பூரணமான பெயர் பல்யாக

சாலே முதுகுமேப் பெருவழுதி யென்பது. இவ்வரசனே முதல் முதல் வட ஆரியரது வைதிக வேள்விகளையும் பிற வழக்க வொழுக்கங்களையும் தமிழ் நாட்டிலே பரவச் செய்தான் என்று ஊகிக்கலாம். குமரி முனைக்குத் தெற்கேயுள்ள நாடுகளைக் கடல் கொண்ட பின், குமரிக்கடல் தமிழகத்தின் தென் எல்லையாக அமைகின்றது. சங்க-காலத்திலேயே ஆரியநாகரிகமும் தமிழ் நாகரிகமும் ஒன்றோடொன்று கலக்கத்தொடங்கிவிட்டன. தமிழ் நாகரிகம் வெளிநாட்டு நாகரிகங்களோடும் கலந்து உறவாடிய தென்பது திண்ணம். தமிழ் மக்கள் கிணற்றுத் தவளைகள் அல்லர்; இன்று போல் பண்டை நாளிலும் அஞ்சாது கடல் கடந்து பல நாடுகளிலும் குடியேறியதுண்டு. ஆனால் அவர்கள் இன்று போல் பாமரராய் விலங்குகளாய்த் தற்சுதந்தர விருப்பமற்று வாழ வில்லை. அக்காலத்தில் 'சிற்றடிச்சீன'த்திலும் சாவகத்திலும் பிறநாடுகளிலும் குடியேறிய தமிழர் அந்நியரால் கௌரவிக்கப் பெற்ற ஆண் மக்களாய் வாழ்ந்து தமிழ் நாகரிகத்தைப் பரப்ப முயன்றனர். இக்காலத்து ஏழைமக்களோ தமிழர் எனும் பெயருக்கே யுரியராய்க் குடியேற்ற நாடுகளில் மக்களுக்குரிய பிறப்புரிமைகளையும் இழந்து வாடுகின்றனர். கடல் கோளுக்கு முன் தென் பாண்டி நாட்டின் மலைகளிலேபிறந்து இயற்கைச்செல்வியின்மடிமீது வளர்ந்த செந்தமிழ்மொழி உலக நாகரிகத்திற்கு அடிகோலி வாழ்ந்த ஆதித்தமிழ்மக்களது சிறந்த கருவியாக முதிர்ந்து வந்தது. தமிழெனும் மலைப் பயிரைப் பண்டை மன்னராகிய பாண்டியர் தங்கள் தலைநகரிலே விளைத்துத் தமிழ்ப் பெருமக்களது கூட்டுறவின் பயனைக் காலவகையினால் தோன்றிய சங்கங்களின் வாயிலாக வளர்த்து வந்தனர்.

ஆதிகாலத்தில் தமிழர் ஒரு தனிக் கூட்டத்தினராய் வாழ்ந்தனர் என்பதில் ஐயமில்லை. இவர்களது தாய்மொழி ஒரு தனிமொழியே யாகும். தெலுங்கு கன்னடம் மலையாளம் முதலிய திராவிட மொழிகளின் தாய்மொழியும் தமிழ் மொழியே யென்று மொழிநூற் புலவர் கூறுவர். மனிதனது ஆதி மொழியே தமிழ் அல்லது தமிழ் போன்ற ஒரு பாஷை யென்று ஐரோப்பிய ஆராய்ச்சியாளரும் அங்கீகரிக்கின்றனர். அதி பூர்வ காலத்திலேயே இலக்கியத் தேர்ச்சி பெற்று நின்ற மொழியும் தமிழ் மொழியே. தமிழ் உயர்மொழி, தனி மொழி, செம்மொழி; ஆதலால் உயர்தனிச் செம்மொழி யென்பது திண்ணம். தொன்மையில் வடமொழியையும் சொற்பொருள் நயத்தில் கிரேக்க லத்தீன் மொழிகளையும் தமிழ் வென்று விடுகிற தென்று பண்டிதர் கருதுகின்றனர். தமிழ்மொழியே தமிழ் நாகரிகத்தின் அழியாத அறிகுறியாய் விளங்குகின்ற தென்னலாம். இந்தியாவிற்கு எழுத்து அறிவித்தவரும், விவசாயம் கிராம வாழ்க்கை இவற்றை ஆதியில் கண்டறிந்தவரும் தமிழரே யென்று ஆராய்ச்சியாளர் கூறுவதால், இந்திய நாகரிகத்தின் உயிர்நிலையே தமிழ் நாகரிகம் என்று ஊகிப்பது தவறாகாது.

இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழும் பண்டைக் காலத்தில் நம் முன்னோர்களால் போற்றப்பட்டு வந்தது. ஆதிமக்கள் ஆடைக்கு முன் அலங்காரத்தையே விரும்பினர். அவ்வண்ணமே பண்டைத் தமிழரும்



இயற்றமிழுக்கு முன் இசைத்தமிழையே விரும்பி யாதரித் திருக்கவேண்டும். அழகிய மலைப் பிரதேசங்களில் வாழ்ந்த தமிழ்மக்கள் கட்குறி, கைக்குறிகளால் கருத்தை யறிவிக்கும் அநாகரிக நிலை கடந்து, நாகரிகத்தின் இளமைப் பருவம் எய்தியதும் அப்பருவத்திற்கு ஏற்ற மழலை மென்மொழியாகிய தமிழ் மொழியை இயற்கையாகவே படைத்துக் கொண்டனர். இம்மொழி இன்ன காலத்தில் இவ்விதமாக ஆக்கம் பெற்றதென்று வரையறுத்துக் கூற இயலாவண்ணம் மிகமிகத் தொன்மை வாய்ந்திருப்பதால், பிற்காலத்தார் இது இறைவனாலேயே அருளப்பட்ட தென்று கருதலாயினர்.

முதலில் இசைத்தமிழும் அப்பால் இயற்றமிழும் தோன்றின. பண்டைத் தமிழர் நாடகத் தமிழையும் போற்றி வளர்த்தனர். பிற்காலத்தில் ஜைன பௌத்தர்களால் நாடகத்தமிழ் நசித்துப் போயிற்று. இசைத்தமிழும் ஆரியர் கூட்டுறவால் தற்சுதந்தர மிழந்து விட்டது. இயற்றமிழ் ஒன்றே பண்டு தொட்டு இன்றுவரை தமிழ் மொழியின் தனிப்பெரு நிலையையும், தமிழ்ப்பெரு மக்களது உயரிய நாகரிக வாழ்வினையும் உலகத்திற்குப் புலப்படுத்தி நிற்கின்றது. இவ் இயற்றமிழ்ச் செல்வத்தைப் போற்றிப் பெருக்கிப் பாதுகாப்பது ஒவ்வொரு தமிழ் அபிமானியின் கடமையாகும். பண்டைத் தமிழ் நாகரிகத்தை நன்கு விளக்குவது சங்க இலக்கியமே யாகும். தொல்காப்பியரது பொருளதிகார ஆராய்ச்சி, தமிழ் நாகரிகத்தின் ஆதி வரலாறுகளை ஊகித்து அறிவதற்குரிய பல குறிப்புக்களையளிக்கின்றது. இன்னும் பல இன்றியமையாதகுறிப்புகள் தொகைநூல்களில் தொகுக்கப்பெற்றுள்ள பழந் தமிழ்ப் பாடல்களில் இலை மறைகாய் போல் பொதிந்து கிடக்கின்றன. தலைச்சங்கப் புலவருள் ஒருவராகிய முடி நாகராயர், தற்காலம் கிடைத்துள்ள பாடல்களி லெல்லாம் மிகமிகப் பழமையான தென்று துணியப்படும் தமது பாட்டில், அணுக்களால் நிலம் ஆக்கப்பட் டிருக்கும் பூதபௌதிக உண்மையினை 'மண்திணிந்த நிலன்' என்னும் ஓர் அழகிய சொற்றொடரால் குறிக்கின்றார். மேலும் இப்பாடல் நம் மூதாதையரது அறிவு நலத்தோடு நாட்டுப் பற்றையும் நன்கு வெளியிடுகின்றது. இப்புலவரால் பாடப்பெற்ற அரசன் பாரதகாலத்தில் பெருவாழ்வு வாழ்ந்தவனாகக் கூறப்படுவதால், இப் புலவரும் பாரதப்போர் நடந்த காலத்தில் இருந்திருக்கவேண்டு மென்றும், இவர் பாடல் கால நதியை எதிர்த்துச் சென்று கரையேறி வந்ததால் புறநானூறு தொகுக்கப்பட்ட பின்னாளில் அத்தொகை நூலோடு தொகுக்கப்பெற்றிருக்க வேண்டுமென்றும், தமிழாராயும் அருங்கலை விநோதர் துணிகின்றனர்.

இன்னும் கடல் கோளுக்கு முன் வாழ்ந்த செந்தமிழ்ப் புலவர்களின் பாடல்களிற் சில தொகை நூல்களிற் காணப்படுகின்றன. இவை பண்டைத் தமிழர் அறப் போர்களில் விளைத்த பெரு வீரத்தையும், சமாதானம் நிலைபெற்றிருந்த காலங்களில் குடிகளது பொது நன்மையின் பொருட்டு நந் தமிழ் வேந்தர் இழைத்த நாட்டுத் திருப்பணி மாண்பையும் அவர்களது அறிவின் பெருக்கத்தையும் அன்பின் கனிவையும் அமிழ்தினும் இனிய தமிழ் கொண்டு சித்திரிக்கின்றன. பண்டைத் தமிழ் நூல்களிலே நமது

மூதாதையர்களை முகமுகமாகக் கண்டு
வார்த்தை யாடுகின்றோம். அவர்க
ளது வீராவேசத்தைப் பருகி நமது
உள்ளமும் வெறி கொள்ளுகின்றது.
அவர்களது அறப்பெருஞ் செயல்களி
லே நமது உள்ளமும் செயல் மறந்து
ஈடுபடுகின்றது. பண்டைத் தமிழகத்
தை வளமுறச் செய்த கன்னியாறும்
பஃறுளியாறும், 'முதுசொற் புலவோ
ர் மனம்போல முழுதும் விரிந்து' நம்
கண்முன் மீண்டும் பெருகுகின்றன.
இந்த மகாசமுத்திரம் தனது அகத்
தே மறைத்து வைத்துள்ள அரிய மர்
மங்களில் சிலவேனும் நம் கண்முன்
அகப்படுகின்றன. காதலும் வீரமும்
கூடி மலையிலே விளைந்த தமிழ்ப்பயிர்
மீண்டும் தென் மதுரையிலும் கபாட
புரத்திலும் செழித்து வளர்வதை
நாம் கண்ணுறுகின்றோம். அந்தோ!
விதியின் கொடுமையால் அப்
பயிர், குமுறிக் கொந்தளிக்கும் கட
லால் அழிக்கப் படுவதையும் நாம்
கண்கூடாகக் காண்கின்றோம். இங்ஙன
னமாக நமது மூதாதையரது வாழ்
வில் இன்புறுகின்றோம்; தாழ்விலே
புழுங்குகின்றோம்.

சுருங்கக் கூறின், தமிழிலக்கியம்
என்னும் அரிய ஜாலக்கண்ணாடியின்
வாயிலாக நாம் பண்டைத் தமிழர்
நாகரிகத் துறைகள் பலவற்றையும்
பார்க்கின்றோம். பண்டை நாகரிகத்
தைப் பார்த்துப் பார்த்து நமது எதிர்
காலத்தைச் சென்ற காலத்தினும்
மிகமிகப் பெருமை வாய்ந்ததாகச் சித்
திரிக்க முற்படவேண்டும். தமிழ் நாக
ரிகத்தின் அருமை பெருமைகளை ஒவ்
வொரு மாணக்கனும் தமிழ்ச் சிறுவ
னும் நன்குணர்ந்து கொள்ளவேண்
டும். தமிழகத்தின் எதிர்கால நன்
னிலையும் இளந் தமிழர் உள்ளத்தில்
என்றும் அழியாத சித்திரமாய் அமை
ந்து விளங்கவேண்டும். நமது சிறு
வர் சிறுமியரே வருங் காலப் பெரு
மக்களாவர் என்பதை நமது தேச பக்
தர்களும் பத்திராசிரியர்களும் ஒரு
போதும் மறந்துவிட லாகாது.

பண்டைத் தமிழ் நாகரிக வரலாறு
களை ஆராய்வதால், பல நன்மைகள்
நமது நாட்டில் விளைதல் கூடும். இவ
ற்றுள் தலையாயது, தற்காலத்தில் நம
து நாட்டைப் பாழாக்கிவரும் சாதி
பேதங்கள் இத்தகைய உயர்வு தாழ்
வுகளோடு பண்டைத் தமிழ் மக்களி
டையே காணப்படவில்லை யென்ப
தாம். ஆரிய ரது நாற்பாற்
குலம் இந்நாட்டில் தொல்காப்பியர்
காலத்திற்கு முன்னரே வேரூன்
றிவிட்டது. எனினும் அது பிறப்பை
க்காட்டிலும் குணத்தையும் தொழி
லையும் தழுவியே நிலைபெற்றிருந்த
தென்று ஊகித்தற்கு ஆதாரமுண்டு.
தற்காலத்தி லுள்ள கடுமையோடு உ
யர்வு தாழ்வுகள் அக்காலத்தில் அனு
ஷ்டிக்கப்படவில்லையென்பது திண்ண
ம். 'தீண்டாமை' நோயும் பின்னாளில்
நமது சமூகத்திடையே புகுந்து பீடி
த்துவரும் தொத்துவியாதியே யாகும்.
ஆதித்திராவிடர்களாகிய நந் தமிழ்
நாட்டுப் பூர்வ குடிகளே பற்பல கார
ணச் செறிவால் தீண்டா வகுப்
பின ராயினர். இவ் வகுப்பின
ரைத் தாழ்த்தியதற்குக் காரணம்
எதுவாயினும், இன்னம் அவர்களைப்
பழி தொழிலும் இழி குலமும் வாய்ந்
த மக்களென்று ஒதுக்குவதற்கு நியா
யமே யில்லை. அனுவசியமான ஜாதிபே
தங்களென்னும் தளைகளை அறுத்தெறி
ந்து, தமிழ் நாகரிகத்தைக்காத்து நம
துசமூகமுன்னேற்றத்தைநாடி ஒத்து
ழைப்பதுநமதுமுதற் கடமையாகும்.

# சைவ சமயத்தின் தற்கால நிலை.

எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.

"பண்டேமிக நான்செய்த பாக்கியத்தாற்
பாஞ்சோதிநின்னைமம்பயிலப்பெற்றேன்"
—சுந்தரர்.

"ஞாலநின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயி லுறையுமெம் மாதியே"
—சம்பந்தர்.

சிவ சம்பந்தமே 'சைவம்' என
னப்படும். இதை உணர்ந்து இன்பு
றுதற்கு நன்கமைக்கப்பட்ட நெறியே
சைவ சமய மாகும். இச்சமயத்தின்
தற்கால நிலைமையை விளக்கிச் சைவ
நன்மக்கள் செய்யவேண்டிய சமயக்
கடமைகளிற் சிறந்த சிலவற்றை யவர்
க்கு நினைப்பூட்டி, அவற்றை நிறை
வேற்றும் வழிகளையுங் குறிப்பிடுதல்
இந்தக் கட்டுரையின் நோக்கம். ஒரு
சமயத்தின் நிலைமையை யாராயப்புகு
வோர் அச் சமயமாகிய நெறியின்
இயல்பையும் அந்நெறியைப் பின்பற்
றுஞ் சமயிகளையும் பற்றிப் பேசுதல்
முறைமை. இதன்படி சைவ சமய
த்தின் தத்துவக் கோட்பாடுகளையும்
சமய அமைப்புகளையும் சமய ஒழுக்
கங்களையும் எடுத்துக்காட்டுதல் நேரி
தாம். எனினும் இடச்சுருக்கங்கருதி
இப்பகுதிகளை விளக்க முயலாது,
சைவத்தின் சிறப்புகள் சிலவற்றை
மட்டுங் காட்டி மேற் செல்வாம்.

மக்கள் அறிவுணர் வாராய்ச்சிகட்
குப் பொருளாயிருக்கக் கூடியனவெ
ல்லாம் உலகு (பாசம்), உயிர் (பசு),
கடவுள் (பதி) என்னும் முப்பகுதியு
ளடங்கும். "பல கலை யாகம வே
தம் யாவையினுங் கருத்துப் பதிபசு
பாசந் தெரித்தல்" (1) என்றபடி
இம் முப்பொருளைப்பற்றியே எல்லா
நூல்களும் ஆராயும். சைவ
சமய நெறியானது தன்னை முற்றும்
பின்பற்றின பேர்க்கு இம்முப்பொரு
ளின் உண்மை இயல்பை உள்ளவாறு
புலப்படுத்தும். 'நிற்பனவும் சரிப்ப
னவும் சைவமேயாம் நிலை' (2)
இனிதுணர்த்தும். சீவனைச் சிவனோ
டொன்றுபடுத்தி உலப்பிலா ஆனந்
தத் தழுத்தும். இந்நெறியை 'நன்
னெறி' யென்றும் 'சன்மார்க்கம்' என்
றும் 'அருணெறி' யென்றும் ஆன்
றோர் கூறுவர். இப் பெருநெறி தன்
பால்வந்து கலக்கும் பலவேறு கிளை
நெறிகளை யுடையது. இக்கிளை நெ
றிகளில் நடப்போரும் முடிவில் தன்
னையே வந்தடைவர். இக்கிளை நெறி
களே ஏனைச் சமயங்கள். எனவே
இச் சைவ சமயமானது 'எல்லாச்
சமயமுமா யல்லவாகியாது சமயமும்
வணங்கு மியல்பதா' யுள்ளது. 'இய
ல்பென்றுந் திரியாம' லுள்ளது. 'வாத
மும் சமய பேதமுங் கடந்த மனோ
லய' த்தில் வாய்க்கும் மௌனத்தை
முடியாகவும், அகச் சைவ முதலாக
வுள்ள அளவில் சமயங்களைத் தன்ன
ங்கங்களாகவுங்கொண்டு ராஜாங்கத்தி
ல் அமர்ந்திருப்பது. இம்மதிப்புகளை
நம்முடையதன்று; தன்னிற் றன்னை
யறிந்து தலைப்பட்ட தாயுமானருடை
யதாகும். யாவர்க்கும் அருளைக் கா
ட்டத் தக்கநெறி இதுவன்றி வேறி

(1) உமாபதி சிவாசாரியர். (2) சேக்கிழார்.

ல்லையென றச் சுவானுபூதிச் செல்வர் மேலும் கட்டுரைக்கின்றார். (3)

பரந்தவித் தன்மைக் கேற்றவாறே இச்சமய ஆசாரியர் தொகையு மமைந்துள்ளது: சிமார்த்தம், வைணவம், மாத்துவம், புத்தம், மகம்மதியம், கிறித்துவம் முதலிய மதங்களில் மத குரு ஒவ்வொருவரேயாயிருப்பவும், சைவத்திற் காசாரியர் நால்வராயுள்ளார். ஏன்? சமயங்களெல்வொன்றும் தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நான்கு பாகுபாடுகளில் யாதானுமொன்றி லொடுங்கும். வைதிக சைவமோ, நீதியினல் இவையெல்லாம் ஓரிடத்தே காணத் தன்னுட்படுத்து நிற்கும் பேற்றியது. ஆதலின் இதற்கு நான் காசாரிய ரமைந்தது சாலப் பொருத்த முடைத்தே. சிவஞானிகளாய இந்நால்வரும் உலகுய்தற் பொருட்டு முறையே ஒவ்வொரு மார்க்கத்தை ஆசரித்துக் காட்டியருளினர்.

இத் திருவருட் செல்வர்கள் விளக்கியருளிய சைவ நல்வழி, தன் பொதுத் தன்மையில், இன்னகாலத்திற் குரிய தென்றாவது இன்ன நாட்டிற் குரிய தென்றாவது இன்னமொழிக் குரியதென்றாவது வரையறுக்க வொண்ணாதது. பொதுவகையில் எந்நாட்டிற்கு மிறைமை பூணு மிச்சமயம் சிறப்பு வகையில் நந்நாட்டில் விளங்குவ தொன்றாம். இத் தென்னாட்டினும் இஃது 'சாதி குலம் பிறப்பென்னுந் தடுமாற்ற'த்தைத் தவிர்க்க வல்லது. "எந்நிலையில் நின்றாலும் எவ்வேடம் கொண்டாலும், மன்னியசீர்ச் சங்கரன்றாள் மறவாமை பொருள்" என்று மக்கட் குணர்த்த வல்லது. திருநீறு, கண்டிகை, திருவைந்தெழுத்து என்னு மரிய சாதனங்களை இந் நாட்டிற் கருளியது. இயற்கையுண்மை விளக்கம் பொருந்தியது. அறிவனுபவங்கட் கொத்தது. மக்கள் தம் மன்றாட வாழ்க்கையில் அனுட்டித்தற் கேற்றது. அன்பைத் தன்னுயிராக வுடையது. அறிவைப் பாசஞானம், பசுஞானம், பதிஞானமெனப் பாகுபடுத்திப் பதிஞானமே மெய்யறிவென் றுணர்த்தி அதை நாமடைதற் குதவி செய்வது. தன்வழிச் சென்று பேறுபெற்ற பெரியார் சரிதங்களிற் பலவற்றையும் அவரருள் மொழிகளையும் ஆண்டவன் அவர் பொருட்டுச் செய்த அருள் விளையாட்டுக்களையும் எடுத்துரைக்கும் பல நன்னூல்களைத் தமிழிலும் ஆரியத்திலும் படைத்து விளங்குவது. பெரருள் செறிந்த குறிகளையும் அடியாரங்களையும் கோயில்களையும் குறைவறப்படைத்தது. இந்தியாவிற் பல்லாயிர ஆண்டுகளாய் நின்று நிலவி

(3) அந்தோவீ ததிசய மிச்சமயம் போலின்
றறிஞரெல்லா நவெறிய வணிமாவாதி
வந்தாடித் திரிபுவர்க்கும் பேசாமோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்று
மித்ராதி போகமெலம் பெற்றபேர்க்கு
மிதுவன்றித் தாயகம் வேறில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்றன் மார்க்கம்.



வருவது. (௧) இன்னோரன்ன அளப்பருஞ் சிறப்பு வாய்ந்தது இச்சமயம் என்று கண்டன்றோ, "சைவமாஞ் சமயஞ் சாரும் ஊழ்பெறல் அரிது" என்று அருணந்தி சிவம் அருளிச் செய்தது?

ஆனல், அந்தோ! சைவ சமயத்திற் பிறக்கும் நல்லூழ் படைத்தோரிற்பலர் இந்நாளில் தஞ் சமய இயல்பை யுணராதும் உணர முயலாதும் வீணே கெடுகின்றனர். இவருட் சிலர் நாத்திகம் பேசி நாத்தழும் பேறுகின்றனர். பலர் பேச்சில் நாத்திகரல்லாராயினும், ஒழுக்கத்தில் நாத்திகரேயாய் நழுவுகின்றார்கள். வேறு சிலர் சைவ மெய்ச் சமரசம் இன்னதென் றுணரமாட்டாது போலிச் சமரசம்பேசிப் பொழுதை யோட்டுகின்றனர்.

இவர்களால் விளையுங்கேடு பெரிதாதலால், இவர்கள் கோட்பாட்டைச் சிறிது ஆராய்தல் மிகையாகாது. எல்லாச் சமயங்களும் இறைவனை நோக்கிச் செல்லும் வழிகளே யென்று சைவம் ஒத்துக் கொள்ளுகின்றது. ஒவ்வொரு சமயத்திலும் உண்மைப் பகுதி யுண்டென்று அதைத் தழுவிக் கொள்ளுகின்றது. மக்கள் பல்வேறு பக்குவ நிலையி லுள்ளாராதலின், அவ்வவர் தகுதிக் கேற்பப் பல்வேறு சமயங்களுந் தேவைதா னென்றும் கூறுகின்றது. இப்படி எல்லாச் சமயத்திலும் சைவ முடிநிலை நிற்கும் ஒற்றுமைச் சுவையைக் கண்டு சமரசமென் பதொன்று. இதை விடுத்து, எல்லாச் சமயங்களும் சிறப்பிலும் பயனிலும் ஒரே அளவின என்று கொள்ளல் பிறிதொன்று. இங்ஙனங் கூறுவது, ஒரு பெரு நெறிக்கும் அதைப் பல் வேறிடங்களில் வந்து கலக்கும் கிளை நெறிகட்கும், அவயவிக்கும் அவயவங்கட்கும், தசாங்கங்கட்கும் அவற்றைப் படைத்துள்ள அரசனுக்கும் நறுமலருக்கும் அத னிதழ்ப்புகட்கும்

(1) ஆரிய மக்கள் இந்தியாவிற்கு வருமுன்னரும், இராமாயண பாரத காலங்களிலும் சிவவழிபாடே இந்நாட்டின் சிறந்த வழிபாடா யிருந்ததென் றறிஞர் தெரிவிக்கின்றனர். இந்துக்களனைவரும் மிக வுயர்ந்தன வென்று தேர்ந்தெடுத்து யாத்திரை செய்யும் இரண்டு ஸ்தலங்களும் (காசி, இராமேச்சுரம்) சிவ ஸ்தலங்களாயிருத்தலை யுய்த்துணர்க. அன்றியும் கீழ்க்காட்டப்படுவன போன்ற கருத்துக்களைச் சரித நூல்வல்லார் ஆதாரங்களோடு காட்டி நாட்டிவருவதையும் கவனிக்க: "The worship of Siva comes down at least from neolithic times, i-e 20,000 years ago ........................ The spade is slowly bringing up evidence to prove that India had developed a great civilisation before Vedic culture began in the Indo-Gangetic valley. Traces of this ancient civilisations can be discovered only in the Tamil language and in Tamil institutions. Siva belongs to this earliest stratum of Indian culture. No satisfactory derivation of His name can be furnished by Sanskrit philosophy."—P. T. Srinivasa Aiyengar.

"In any case, Dravidian civilisation was predominant in India before the coming of the Aryans. Many of the Dravidian peoples now speak Aryan or other languages, not originally their own, but they still retain their own languages and their own characteristics and several customs in the South and in certain hilly tracts of Central India; and there can be no doubt that they have very greatly influenced Aryan civilisation and Aryan religion in the North." —Prof. Rapson's "Ancient India."

உள்ள ஒற்றுமை நயமுணராது பேசுவோர் கூற்றும். ஒரு பள்ளியில் வாசிப்போ ரெல்லாரும் மாணவர்களே. ஒரு தாய் வயிற்றிற் பிறந்தா ரனைவரும் சோதரர்களே. ஆயினும் இவருள் அறிவனுபவ முதிர்ச்சியில் ஏற்றத்தாழ் வுண்மையை நோக்கி, அவர்க்குள் அரும்பு மலர் காய் கனிகட்குள்ள வேற்றுமையைக் காணுதிருத்தல் தவறே. இத்தவறை யுணராமையாற்றான் சைவரிற் சிலர் இன்று மாதேவனையும் நாளைக்கு மற்றைத் தேவரையும் வழிபடுகின்றார்கள். இவர்கள் சமரசநோக்கில் குறைமிடற்றண்ணலுமொன்றே, காடன் மாடனுமொன்றே. இவர்கள் தமக்கு ஒருநோய் வரின் முருகனுக்குப் பிரார்த்தனை செய்வர். இன்னொன் றுறின், 'ஏடு கங்கணம் ஏழு மலையானுக்கு' என்பர். பிறிதொன்று தோன்றின், தம்மதங்கூறும் எல்லாச்சாமியும் விட்டு அல்லாச்சாமிக்குப் பாத்திபா பண்ணுவர். 'பக்ஷிதோஷந் தாங்கியது, பள்ளிவாசலுக்குப் போவோம்' என்று இவர் வீட்டு மாதர் தம்பச்சிளங் குழவிகளைத் தாங்கிக்கொண்டு மசூதிப்படியில் காத்திருப்பர். இது கோழைச் சமரசம்; கொள்ளுஞ் சமரச மன்று. அகந்தைக் கிழங்கை அகழ்ந் தெடுத் தெறிந்து ஆண்டவனுக்கு ஆன்ம நிவேதனம் பண்ணலும், ஆடு கோழிகளை வதைத்து, 'அப்பனே! என்குறை நீக்குதிர்' என்னலும் ஒன்று மாறில்லை. சமயாதீத ஞானங் கைகூடி நிட்டையிலொடுங்கும் வரையில் ஒவ்வொருவரும் தத்தமக் கேற்றதொரு சமய நெறியைப் பின்பற்றி யதன் வழியே செல்லுதல் வேண்டும். மூர்த்தி வழிபாடு வேண்டப்படும் வரையில் தன் சமயமே கூறும் பல மூர்த்திகளுள்ளும் யாதானு மொன்றையே பற்றி நிற்றல் வேண்டும். இன்றேல், சகளோபாசனைப் பயன் கிட்டாது. பிற மூர்த்தியின் பெயரு முருவமும் புலப்பட்டவிடத்தும், அவற்றைத் தான் வழிபடு மூர்த்தியின தாகவே கொண்டு வணங்குதல் முறைமை. சமய குரவர் நால்வரும் அருணகிரி நாதனாரும் மூர்த்தி நிலைபேசுங்கால், தத்தமக்கு வெளிப்பட்டருளிய சிவமூர்த்தமெதுவோ, அதையே பெரிதும் போற்றிப் புகழ்ந்திருத்தல் கருதற்பாலது. இப்படி ஒருவன் தான் வழிபடு மூர்த்தியினிடத்து வைக்கும் பற்றுக் காரணமாகப் பிற மூர்த்திகளையும் அவரை வணங்குவோரையும் பகைத்தலும் வெறுத்தலும் தன்பால் தோன்றாதபடி தனைக் காத்துக்கொள்ளவேண்டும்; பொது வகையில் அவர்களிடத்தும் அன்பையே பெருக்கவேண்டும்.

தமக்கென வொன்றிலராய்ச் சமய வொழுக்க மாறுதல் செல்வோர் செயல் தவறுதல் போலவே, அவர்க்கெதிர் நிலையில் நின்று சில விரிவிலா அறிவிஞர்கள் வேறொரு சமயம் என்ற அளவில் சிறிவீழ்தலும் தவறுடைத்தாம். எங்கெங்கு அன்பும் அருளும் காணப்படுகின்றதோ, அங்கங் கெல்லாம் சைவமே யுள்ளதென்று மதிக்க வேண்டும். * சமயப் பொறைமையைப் போதித்தருளிய சமய குரவரே சமணபுத்தங்களைக் கண்டிக்கவில்லையோ என்னின், கூறுவாம்: அவர்கள் காலத்தில் அச்சமயிகள் தந்நிலையினின்றும் பெரிதுந் திரிந்து அச்சமயக் கோட்பாடுகட்கு நேர்மாறாகத் தாமொழுகிக் கெட்டதோடு, பிறசமயிகளையும் அவர்நெறியில் நிற்கவொட்டாது கலைத்துக்கெடுத்தனர். அவரால் ஆத்திகசமயத்திற்குப் பெருங்கேடு விளைந்தது. அதனால் அச்சமயங்களின் பரப்பை யடக்குதல் அவசியமென்று தோன்றியது. அப்போதும் இறைவன் திருவருட் சம்மதம் பெற்ற பின்னரே அப் புறச்சமயங்கள் அடக்கப்பட்டன என்பது அவ்வாசாரிய மூர்த்திகள் சரிதத்தாலறியக்கிடக்கின்றது.

போலிச்சமரசமும் பொருந்தாப்பற்றும்போல இன்னும் பல பிறழ்வுணர்ச்சிகளுஞ் சைவ ஜன சமூகத்திற் காணவுள்ளன. அவற்று ளொன்று தென்னாட்டில் வாழும் தமிழரில் ஒரு சாதியினர் மட்டுமே சைவரென்பது. இவ்வாறு பிறப்பாற் சைவம் பேசுவோர் தொகை இந்நாளில் அருகிவருகின்றது. இவர் கூற்றின் வலுவின்மையை விளக்கப் பெரியபுராண சரித்திரங்களே போதும். மற்றொன்று புலாலுண்ணாமையே சைவமென்பது. அன்பின் வழித்தாய் அவ்வொழுக்க நிகழுமிடத்து அது சைவவொழுக்கமே என்று மிக மதிக்கப்படும். அன்பில்லாவிடத்து அது சைவமாய் விடாது. ஆகுமெனின், ஆடு, மாடு, யானை, குதிரை முதலியவைகளும் பரம்பரைச் சைவர்களே யென்ன நேரிடும். தீக்கையும் கிரியையுமே சைவமென்று கூறவுங் கூடாது. சைவநெறியில் செல்லுதற்கு உதவி செய்யுஞ் சாதனங்களா யிவை அமைக்கப்பட்டன. அவ்வுதவியைச் செய்யு மளவுக்கேற்ப அவையும் இன்றியமையாதனவே. ஆனால் அவை சாதனங்களே யன்றிச் சாத்தியங்களல்ல. பெரிய புராணத்து வரும் நாயன்மார்களில் எத்தனைபேர் சிவதீக்கை பெற்றதாகப் படிக்கின்றோம் என்று பார்த்தலும் நலமே. நம் நாட்டில் தொன்றுதொட்டுவரு மிச்சாதனங்களின் கருத்தையுணர்ந்து, அவற்றைப் புறக்கணியாது இயன்ற அளவில் ஏற்றுக்கொள்ளுதல் நங்கடமை என்றுடம்படலாம். ஆனால் அவற்றின் மதிப்பிற்கும் படியுக்கு மோர் வரம் புண்டென்பதை மறக்க முடியாது. ஆண்டவனிடத்தும் ஆருயிரிடத்தும் அன்புகாட்டாதவன்னெஞ்சக் கள்வன், மனவலிய னொருவன், ஆசாரியாபிடேகம் பெற்றவனாயிருப்பினும் சரியே, அநுட்டான விதிகளை வெகு அழகுபெறச் செய்பவனாயினுஞ் சரியே, சிவலிங்க பூசையை ஆகமவிதிப்படிசெய்து காட்டுபவனாயினுஞ்சரியே, அவன் உண்மையிற் சைவ னாகான். இத்தீக்கையும் கிரி

* (க) "விரிவிலா அறிவினர்கள் வேறொரு சமயஞ் செய்தே, எரிவினாற் சொன்னாரேனும் எம்பிரார்க் கேற்ற தாகும்."

(உ) "வாது செய்து மயங்கு மனத்தராய், ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள் யாதோர் தேவரெனப் படுவார்க்கெலாம், மாதேவனலால் தேவர்மற் றில்லையே".

(ங) ஆறென் றியசமயக்களி னவ்வவர்க்கப் பொருள்கள், வேறொன் றிலாதன......இன்னம்பரான்ற னிணையடியே."

(ச) "ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன, தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே யேற்றுந் தகையன, ......இன்னம்ப ரான்ற னிணையடியே" (அப்பர்).

(ரு) "அறிவினன் மிக்க அறுவகைச் சமயத் தவ்வவர்க்கே ஆரருள்புரிந்து" (சுந்தரர்.)

(சு) "எத்தவத்தோர்க்கு மிலக்காய் நின்ற எம்பெருமான்"

(எ) "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதிமாண்பும், கேட்பான் புகிலளவில்லை கிளக்கவேண்டா." (சம்பந்தர்).

'சலம்பூவொடு தூபமறந்தறியேன்' என்னுந் தேவாரத் திருப்பாட்டின் உட்கருத்தும் உற்று நோக்கற்பாலது.

யையும் பூசையும் பொருந்தாதிருப்பி னும், பிறிதி னேயுந் தன்னேப்போற் போற்று மியற்கையும் இறைவன் சேவடி மறவாச் சிந்தையும் படைத்துள ளொருவன் உண்மைச் சைவனேயாவன். அகவொழுக்கமும் புறவொழுக்கமும் ஒத்தமைந்திருப்பின், அது பெரும் பேறேயாம்.

இவ்வாறு சைவசமயத்தினைக் குறித்துப் பல்வேறு திரிபுணர்ச்சிகள் இக்காலிற்காணப்படுதலில் வியப்புமில்லை. ஏனெனில், சைவ சமூகமானது இப்போது 'ஆள்வாரிலி மாடாவேனே!' என்றிரங்கவேண்டிய நிலையிலிருக்கின்றது; மேய்ப்பானில்லா ஆடுகள்போலலக்கணுறுகின்றது. இதனுல் திருநீற்றி னொளிவிளக்கம் புறத்தும் அகத்தும் குன்றி வருகின்றது. பிற சமயக்கோட்பாடுகட்கும் தம்மதக் கோட்பாடுகட்கும் வேற்றுமை தெரிவிப்பாரில்லாமையால் சைவ சமயிகள் பிற சமயக் குருக்களைத் தங்கள் குருக்களாகக் கொண்டு அவர் சொல்வழி வழி நடந்து வருகின்றனர். தஞ்சமய குருக்களை மேம்படுத்துகின்றிலர். பிற சமய நூல்களைப் பேணிக் கற்கின்றனர், தஞ்சமய நூல்களைக் கற்கின்றிலர். தந்தாய் மொழியாந் தமிழ் மொழியைத்தானும் போற்றுகின்றிலர். அவர் முகத்தில் இன்றைக்கு விபூதியும் நாளைக்கு நாமமும் அடுத்த நாள் சூனியமுங் காணலாம். நீர்க்குள் பாசிபோல் எந் நெறியினும் வேர்க்கொள்ளாது சைவ சமூகம் தவிக்கு நிலயி லுள்ளது. இந்நிலையில் நல்லொழுக்க வேரை யறுத்து, ஆண்டவன் செய்யு நன்றியை மறந்து அகந்தைபேசி, நாம் பிரமமென்று ஏட்டிற் கண்டு இதபத்திற் காணுச் சாம்பிராமுங்கூறும் சதா வுரைகள் பலர்க்குச் சத்தியமாய்த் தோன்றுகின்றன. அந்தோ! சாதன சதுட்டயங்கள் வாயிலின்றி வாழ்க்கையில் வரப்பெறுப் போலிஞானிகள் கையில் தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களும் சிவோகம் பாவனை முதலிய சாதனைகளும் அகப்பட்டுக்கொண்டு திகைக்கின்றன. இவைகள் எச்சமயத்து எப்பொருளில் யாரால் யாருக் குணர்த்தப்பட்டன வென் றுணராது செல்லாம் சொல்வோன், கேட்போன் தன்மை நோக்காது இவற்றை எங்கும் பேசித் திரிய இக்கால மிடந்தருவது வருந்தத் தக்கதே. "குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக் குருடுங் குருடுங் குழி வீழ்ந்தவாறே" என்று திருமூலர் அருளிச் செய்திருப்பதை இவர்கள் செயல் நினைப்பூட்டுகின்றது.

இவ்வா றெல்லாம் சைவர் தஞ்சமய நெறியி னின்றும் விலகினமையால், சைவ அமைப்புகளான கோயில்களும் மடங்களும் பல்வகைக் குறைவு கட் குறைவிடமாகி விட்டன. கூற்றுதைத்தான் திருக்கோயில்கள் பலவற்றில் ஆகமஞ் சாற்றிய பூசைகள் தப்பிப் போயின. பல இடங்களில் தரும கருத்தர்களும் குருக்கண்மாருங் கூடித் தம்மனம் போன போக்கில் நித்திய நைமித்திய முறைகளை மாற்றி விடுகின்றனர். பாடல் பெற்ற பெரிய சிவத்தல மொன்றில் கோயிலதிகாரிகள் சந்திரசேகரரைப் பள்ளி கொள்ள வைத்து, ஓரம்மனைத் தலைமாட்டிலும் மற்றோரம்மனைக் கால்மாட்டிலும் இருத்திப் பல்லக் குற்சவம் பண்ணி வருகிறார்கள். உமையம்மையை உறங்குமம்மை யாக்கவும் மயிலேறும் பெருமானைப் பாம்பேறும் பெருமாள் (காளிங்க நர்த்தன கிருஷ்ணன்) ஆக்கவும் வல்ல அருச்சகர்களும் அதிகாரிகளும் இப்போது அநேகம் பேரிருக்கிறார்கள். இளமை தங்கிய விலைமாதொருத்தி தானுடுப்பன வுடுத்துப் புனைவன புனைந்து ஒரு பிரமோற்சவத்தில் சிவ சந்நிதியில் நின்று நிலையாமை கூறி நந்தன் சரித்திரப் பிரசங்கஞ் செய்தனள்! இவை போன்ற திருக்கோயி லிழிவுகள் எத்தனையோ வுள. இவற்றைத் துணிந்து கண்டிக்கும் ஆண்மை பலர்க் கிருப்பதாகத் தெரிய வில்லை. இவ் விழிநிலை சேர்வதில் கோயில்களோடு மடங்களும் போட்டி போட்டு நிற்கின்றன. இவற்றின் நிலைமை விரித்துரைக்க இடமிலலை. "செய்தக்க வல்ல செயக் கெடும் செய்தக்க, செய்யாமை யானுங் கெடும்" என்னும் பொய்யா மொழிக்கு இவை ஏற்ற எடுத்துக் காட்டுகளாய் விட்டன என்று குறித்தலே சாலும். இங்ஙனங் கோயிலும் மடமுஞ் சீர் கெட்டது போலவே சிவவேடமு மாசுண்டது. வேட நெறிநில்லார் வேடம் பூண்கின்றனர். ஞானச் சோம்பர்கட்குப் பதில் ஊனச் சோம்பர்கள் பல்கிவிட்டனர். பஞ்சத் தாண்டிகள், பரம்பரையாண்டிகள், உழைத்துண்ண மனமில்லார், ஊருடன் பகைத்தோர், வீட்டில் சண்டையிட்டோர், வெளித்திரியும் வேட்கையோர் முதலிய பேரெல்லாம் அடியார் வேடந் தாங்கி யுழலுதலால், திருவேடங்கட்கே ஒரு வகையில் மதிப்புக் குன்றிவிட்டது.

சைவர்க்குச் சமய ஞானமும் சமய வொழுக்கமும் சமய அமைப்புகளும் நிலை திரிந்து போனமையால், அவர்கட்குள் ஒற்றுமை யுணர்ச்சியும் அன் பொழுக்கமும் பெருங் கொள்கையும் ஆற்றலும் குன்றிப்போயின. ஆகவே, சைவரிற்பலர் தாம் பழகு மதத்தினர் பழக்க வொழுக்கங்களைக் கைக்கொள்ளுகின்றனர். ஆங்கிலக் கல்வி கற்கும் சைவகுல மாணவ மாணுக்கரிற் பெரும்பாலோர் நாத்திகராகவோ அல்லதுகிறித்துவராகவோ மாறுகின்றனர். இவருள் வெளிப்படையாய்ப் புறமதம் போவோர் தொகை சிறிதாயிருப்பினும் தம்மதத்தில் வெறுப்பும் புறமதத்தில் விருப்புங் கொண்டுள்ளோர் தொகை நாளுக்கு நாள் பெருகியே வருகின்றது.

இங்கு நந்தன் மரபினராம் நம்மெளிய சகோதரரையும் நங் கணக்கிற் சேர்த்துப்பார்க்கவேண்டும். இவர்களெல்லோரும்—அல்லது பெரும் பான்மையோர்—தொன்று தொட்டே திருநீறணியும் பேறு பெற்றவர்கள். தம் வாழ்க்கை நிலைமைக்கேற்பச் சிவனையுஞ் சத்தியையும் வழிபடுஞ் சிறு தெய்வங்களைக் கும்பிடுவார்கள். இவரையும் சைவ சமயிகளின் தொகையிற் சேர்த்தெண்ணுதலே முறைமை. இவர்கள் சமய நிலைமை எவ்வாறுள்ளது? இதைக் கேட்குஞ் சைவ ரெங்குள்ளார்? இவ்வெளியசகோதரின் உழைப்பை மட்டும் உறிஞ்சக்கற்று, அவர் உயிர் நலத்துக் கொன்றுஞ் செய்யாது போன பாவமுதிர்ச்சியா லன்றோ இயற்கை வளஞ்செறிந்த இந்நாடு எழிலெல்லா மிழந்து 'அவலம், கவலை, கையாறு, அழுங்கல், தவலா வுள்ளம் தன்பாலுடைய' தாயிற்று. சைவரைப்போலன்றிக் கிறித்துவர்கள் இவ் வெளியாரிடத்து அன்பும் அருளும் செய்கையிற் காட்டிவருகின்றார்கள். சைவ மதத்திலிருத்தலால் இம்மை மறுமை இரண்டிற்கும் வழியற்றுக்கிடக்கும் இவ்வேழைகள் இம்மை நலமேனு மெய்துவான் வேண்டிப் புறமதம் புகுந்து

விடுகின்றனர். இப்படிச் சைவ சமயத்தை விட்டுப் போகிறவர் தொகை இலக்கக் கணக்கிலுள்ளது. கிறித்து மதத்திற்கு ஆள் திரட்டி யனுப்புவதில் இத் தென்னாடுதான் தலைமை பூண்டிருக்கிறது! என்னே விந்தை! நாயன்மார்களும், ஆழ்வார்களும், நீலகண்டர், சங்கரர், இராமானுஜர், மத்துவர் முதலிய பாடியகர்த்தர்களும் எங்கள் தென்னாட்டி லன்றோ தோன்றி விளங்கினர் என்று பெருமை பேசுவோர் இச்சிறுமையை யுணரின் வருந்தி வெட்கித் தலைகுனியா தென்செய்வர்?

இதுவரையில் சைவ சமயிகளது தற்கால நிலைமையை யொருவாறு விளக்கினோம். இனிச் சைவமக்கள் செய்யக்கடவதென்ன வென்று பார்ப்போம், "மண்டெரி—தான்வாய்மடுப்பினும் மாசுணங் கண்டுயில்வ,பேராபெருமூச் செறிந்து" என்பதற் கினிமே லிலக்கியமாயிருத்தல்தகுமோ? தஞ்சமய வொழுக்கமும் அமைப்பும் தங்கள் முன்னர்ப் பொன்றிவரக்கண்டும், தஞ்சமயக் கடமைகளைச் செய்ய முற்படாது வறிதே தாணியி லிருத்தல் முறையோ? இது தருமந்தானோ? அன்று, அன்று; தாமடைந்து விட்ட தாழ்மையை முற்றிலு முணராமையினாலேயே சைவர்கள் இந்நிலையிருந்து வருகின்றார்கள். ஆகவே தஞ்சமயப் பெருமையையும் தங்கள் சிறுமையையும் செவ்விதி னுணர்தலே அவர்கள் செய்யவேண்டிய முதற்கடமை. இவ்வுணர்ச்சி முறுகி எழவே, அவர்கள் தங்கள் சமயக் கடமைகளைச் செய்யத் தலைப்படுவரென்பது திண்ணம். இங்ஙனம் சில நல்லோர் இப்போது முற்போந்து முள்ளார்கள்.

சமய வுணர்ச்சி சிலர்மட்டும் விரும்பக் கூடிய அலங்காரப் பொருளன்று; மக்களை விலங்கினின்று பிரித்துத் தெய்வமாக்குதற்கு இன்றியமையாது வேண்டப்படுமோர் சத்தியமாது. எக்காலத்திலும் பார்க்க இக்காலத்தில் இச்சத்தியினுதவி பெரிதும் வேண்டியிருக்கிறது. ஏனெனில், இந்நாளில் உலகஞ் செல்லும் போக்கு போச்சத்தையும் கவற்சியையும் தருமியல்பினது. சில்லாண்டுகட்கு முன்பு முடிவுற்ற ஐரோப்பியப் பெரும்போரோடு உலகிற் சமரந் தொலைந்து நிலைத்த சமாதான மேற்பட்டுவிடு மென்று பலர் நம்பினர். இப்போது அவ்வெண்ணம் பகற்கனவாய் விட்டதென்று அறிவின் மிக்கார் பலர் கருதுகின்றார்கள். நொடிப்பொழுதில் நூறு, ஆயிரமாக மக்களை நாக்க வல்ல நச்சு மருந்துகளும் காற்றுக்களும் கருவிகளும் கண்டுபிடிக்கப் பட்டுள. இரண்டொரு நாடு நீங்கலாக மற்றெல்லா நாடுகளிலும், பல்வகைக் குழப்பங்கள் ஏற்பட்டுள்ளன. தேயங்களுக்குள் மனப்புழுக்கம், பகைமை, அழுக்காறு, அவா முதலிய தீமைகள் வளர்ந்து வருகின்றன. இப்பொல்லாங்குகள் மீண்டுமோர் போரை மூட்டிவிடுமாயின் மக்கட் கூட்டத்திலோர் பெரும் பகுதி மடிந்து போவது திண்ணம். இப்பெருங் கேட்டைத் தவிர்க்கவல்லது சமய சக்தியொன்றே. சர்வதேச சங்கங் கண்டு உலகிற் சமரை யொழித்துவிடப் பேரவல் கொண்ட பெரியாராம் ஆசிரியர் வில்சனும், இராசதந்திர நிபுணராம் லாயிட் ஜார்ஜும் மற்றும் பல மதிவல்லாரும் இதே கருத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

ஆகவே, ஒவ்வொரு சமயத்தாரும் தஞ்சமயமாகிய ஆற்றில் ஊற்றுக்



குழி தோண்டி அன்பு நீரைப் பெருக்கி, அதனால் உலகில் வளர்ந்துவரும் ஆசுர குண நெருப்பை அவிக்கப் பெருமுயற்சி செய்யவேண்டும். இத்தொண்டு சைவர்க்கு முரியதே. இதைப் படிக்கு மொருவர், 'உரியதாகலாம்; ஆனால் மிகப் பழயதாகிய இச்சமயம் இவ் விருபதாம் நூற்றாண்டிற்குப் பயன்படுமோ? அன்றியும் பிறநாட்டுத் தீமைகளைப் போக்க ஒரு நாட்டின் மூலையிலுள்ள சைவர்க்கு ஆற்றலேது?' என்று ஐயுறுதல்கூடும். ஐயுற வேண்டா ஒன்றும். சைவசமயங் கூறுங் கடவுள் 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருள்;' 'பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியன்.' அதுபோன்றே அவன் வகுத்தருளிய சைவமும் முக்காலத்திலும் பயன்படும் மொய்ம்பு படைத்தது. இதைச் சிறிது புலப்படுத்தலாம். இந் நூற்றாண்டில் ஒரு சமயமானது மக்கள் வாழ்க்கையிற் கலந்து அதை எல்லாத்துறைகளிலும் பண்படுத்த வேண்டுமாயின், அது சில கொள்கைகளைப் பெரிதும் வற்புறுத்துவதாயிருக்க வேண்டும். அவை பின் வருமாறு:—(க) அன்பு வடிவாங் கடவுள் ஒருவரே யுண்டு; அவர் அதிபரிசுத்தர், (உ) அவரருளால் தோன்றிய ஆன்மகோடிகள் யாவரும் சகோதரர்கள், (ஙு) திருவருட் சம்மதத்தால் பிரபஞ்சம் ஒரு நியதிக்குட்பட்டே நடக்கின்றது. (ச) மக்கள் தனித்தும் ஒன்று சேர்ந்தும் செய்யும் நன்மை தீமைகள் தத்தம் பயனைத் தந்தே தீரும். தீமையால் துன்பந் தேடிக் கொண்டது போலவே, நன்மையா லின்பந் தேடிக்கொள்ளலாம். (ரு) கடவுள் செய் நன்றியை மறவாது அவர் பாலன்பு செலுத்தவேண்டும். (சு) இடவேற்றுமை, மொழிவேற்றுமை, நிறவேற்றுமை, சமயவேற்றுமை கருதாது மன்னுயிர்க்குற்ற துன்பந் துடைக்கவேண்டும்.

இவற்றைக் கூறும் சைவத் திருவாளர்கள் திருவாக்கிற் சில பின்வருமாறு:—* (க) "அன்பே சிவம்;" "இமையளவு முபகார மல்லால் வேறொன்றியக்கா நிர்க்குணக் கடலாயிருந்த வொன்றே". "நன்றுடையானைத் தீயதில்லானை"; "கோதிலா அமுதே! ஈறிலாக் குணப் பெருங் குன்றே!" (உ) "அம்மை யப்பரே யுலகுக்கு அம்மை யப்பர் என்றறிக"; "உரை சேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதம், நிரை சேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான்" (ஙு) "தன்னருள் வெளிக்குளே யகிலாண்டகோடியெல்லாந் தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த் தழைத்தது." "ஆர்த்த பிறவித் துயர்கெட நாமார்த்தாடுந் தீர்த்தன் நற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடுங் கூத்தன் இவ்வானுங் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" (ச) "என்னுடையாப் பதந் தந்தாய் யானதறியாதே கெட்டேன்." "தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்" (ரு) "வந்தித்து நின்னை மறவாக்கடனுக்கிங் கிக்க நின்னதருள் செய்யாய் பராபரமே"; "குற்றமுலத் தமர்ந்துறையுங் கூத்தாநின் குரைகழற்கே கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே." (சு) "நான் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்"; "எவ்வுயிரு நீங்காதுறையும் இறை சிவனென்று எவ்வுயிர்க்கும் அன்பாயிரு" "எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணியிரங்கவு நின்தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"—இவை போல்வன பலவுள.

(தொடரும்.)

* இவையனைத்தும் சைவத்திற்குப் புதியனவல்ல; நன்கு வற்புறுத்தப்பட்டுள்ள அடிப்படையான பழைய கோட்பாடுகளே. சைவ நூல்களிற் சிறிது பயிற்சியுடையாரும் இவற்றை யறிவர்.

# கம்ப ராமாயண மும்மணிகள்.

பி. ஸ்ரீ. ஆசாரியார்.

(முன் தொடர்ச்சி.)

"கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின் என்ன பயனும் இல." [வாய்ச்சொற்கள்

அதாவது.— காதலர் இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கால் ஒக்குமாயின், வாயளவில் தோன்றுகின்ற சொற்கள் ஒரு பயனுமுடையவல்ல—என்று தெய்வத்தமிழ் மறை முழக்குகின்றது. இதனைத் தழுவியே நமது கவிச் சக்கரவர்த்தியும்

"கண்ணொடு கண்ணிணை
கவ்வி ஒன்றை ஒன்(று)
உண்ணவும், நிலைபெறு
துணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினன்
அவளும் நோக்கினள்"

என்று காதலர் காட்சியைச் சித்திரிக்கின்றார். இராமன் சீதையைப் பார்த்தான். சீதையும் அண்ணலை நோக்கினள். ஒருவர் கண்ணிணையோடு மற்றொருவர் கண்ணிணை பற்றிக்கொண்டன; பற்றி ஒன்றை யொன்று கவர்ந்துண்ணலாயின. உடனே இருவர் உணர்வும் தத்தமிடங்களில் நிலைபெறாமல் ஒன்றை யொன்று கூடி ஒற்றுமைப்பட்டு நின்றன. காதலின் பரிபாஷைகளிலே கண்கள் தடையின்றி உரையாடி மகிழ்வெய்துகின்றன. நெடுங்காலமாக வாய்ச் சொற்களால் சொல்லமுடியாத அரும்பெரும் பொருள்களையெல்லாம் காதலர் கண்கள் ஒரு கணத்திலே பேசி முடித்துவிடுகின்றன.

"போதங்கரைந்து பொங்கிடும் அன்பைப் பூத யாக்கையோ தடுத்திடும்?"

மனம் ஒன்றி நிற்க, மனம் இனிது நிறைவேறுகின்றது. அறத்தின்வேர் அருளாதல் போல, மெய்யான இன்பத்திருமணத்தின் ஆணிவேர் பரிசுத்தமான—அழகிய—அகக்காதலேயாம். "பெண்கள் அகக்காதலெலாம் பேசுமுயற்கொம்பே" என்னும் வேதாந்தம் சமூக வாழ்க்கையை நிலைகுலையச் செய்து பாழாக்கும் போலி வேதாந்தமேயாகும். இத்தகைய வேதாந்தம் நம் தாய்த் திருநாட்டின்கண் இருள் சூழ்ந்த இடைக் காலத்திலேதான் தோன்றியது. இது செந்தமிழ்ப்பெரியோர்களான நமது முன்னோர் மதமன்று.

மலைநாட்டு வாசிகளான பண்டைத் தமிழர் இயற்கையழகுகளிலே இறையொளி கண்டனர்; இறையுளம் கண்டனர்; அருள் அழகு கண்டனர். ஆதலால் அவர்கள் இன்ப வாழ்வு வாழ்ந்தனர். நிலத்திலும் நீல வானிலும் தோன்றும் பேரழகுகளை யெல்லாம் அவர்கள் அஞ்சாது காதலித்தார்கள். இயற்கை நறுமலரிலும் மாதர் முக மலரிலும் சுந்தரமாக இன்ப நகை புரியும் தெய்வ ஒளி தமிழ் வீரரது தூய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்து வசீகரித்தது. காதலும்வீரமும் பழைய செந்தமிழ் நாட்டிலே கவிதைப் பயிரை வளர்த்து வந்தன. காதலின் தாய்மையினை ஷேக்ஸ்பியராதிய மேலைத்தேச மகாகவிகளைப் போலவே சங்க காலத்துத் தமிழ்ப் புலவர்களும் சிறப்பித்துப் பாடுகின்றனர். பக்திப்பெருங்காதலோடு தமிழ் மறை யருளிய



திருநெறித் தொண்டர்களான புண்ணிய மூர்த்திகளும் காதலைச் சிறப்பாகவே பாராட்டுகின்றனர். 'காதல் உலகினும் பெரிது; காதல் வானினும் உயர்ந்தது; காதல் ஆழ்ந்த கடலினும் ஆழமானது' என்று பண்டைத் தமிழ்க்கவி யொருவர் காதலின் பெருமையைப் பாடுகின்றார். 'யாதினும் இனியன் பேரன்பினனே!' என்று வேறொரு கவி, காதலின் இனிமையைப்—பேரன்பின் பேரின்பத்தைப்—பாடுகின்றார். "சொல்லும் ஆடுப கண்ணினனே!" என்று இன்னும் ஒரு பழம் பெரும் புலவர், காதலர் கண்களின் அற்புதமான சொல்லாட்டத்தைப் பற்றிப் பேசுகின்றார். "காதலிருவர் கருத்து ஒருமித்து ஆதரவுபட்டதே இன்பம்" என்பது வீர சுதந்தரத்தோடு செந்தமிழ் விளைந்த தாயகத்தின் கொள்கையாகும். இதுவே தமிழகத்தின்கவிச்சக்கரவர்த்தி கொள்கையுமாகும். காதலின்பத்திற்கும் கவியின்பத்திற்கும் உள்ள சூட்சுமமான தொடர்பினை நமக்குச் சுட்டிக்காட்டி யறிவுறுத்த, நம் கவிஞர் பெருமான், காதலின்பம் இன்னதென்று முதற்கண் உணரும் தருணத்திலக்கன்னிகையாகிய பிராட்டியைக் கவி யின்பம் என்றே அழைப்பதும் காண்க.

## கண்டதும் காதல்.

காதல் முன்னும் திருமணம் பின்னுமாகச் சித்திரிப்பது கம்பசித்திரம். இது வான்மீகியின் சித்திர மன்று. மன்றல் நிகழ்வதற்கு முன், தலைவன் தலைவியர் ஒருவரை யொருவர் கண்ணுற்றுக் காதலித்ததாக வான்மீகம் கூறவில்லை. வில் விறுத்து மகட்பெறும் அசுர மணமே வான்மீகத்தில் கூறப்படுகின்றது. இவ் அசுரமணம் கம்ப சித்திரத்தில், கதைப் போக்கினுக்குப் பொருத்தமாகவே கந்தர்வ மணமாக மாறிவிடுகின்றது. தலைவனும் தலைவியும் கண்டவுடனே காதலிற் கலந்த உணர்வினராய், "ஒருங்கிய இரண்டுடற்கு உயிரொன் றாயினார்." இன்பத் தலைமகனும் இன்பத் தலைமகளும், காதலிற் கலந்த கண்களால் உரையாடி உவகை யெய்தி,ஒருவர் மேலொருவர் கொண்ட யாதினுமினிய பேரன்பினால் ஒற்றுமைப்பட்ட இரண்டு உடம்புகளுக்கு ஒருயிரென்னும்படி யானார்கள். பின்னர் மணமக்கள் மனநிலைக்கு ஏற்றவண்ணம் மணவினை நிகழ்கின்றது என்று கூறும் கம்பநாடர் தமது சித்திரத்தைப் பண்டைத் தமிழர் ஒழுக்க வழக்கங்களுக்கு இசைவாகவே அமைத்துள்ளார் என்பது தெள்ளிதிற் காணக்கிடக்கின்றது.

தற்காலத்தில் நம்மக்கள் பழக்க வழக்கங்கள் மாறிவிட்டன.காதல் பரிசுத்தமானது—தெய்வத்தன்மை வாய்ந்தது என்ற எண்ணம் இப்பொழுது எங்கேயோ மறைந்துபோய்விட்டது. இதனால் இயற்கையாகவே அன்பு கருணைபொறுமையாதியகுணங்களை ஆண்மக்களினும் விசேஷமாக வுடைய பெண்மக்கள் அகத்தே ஒளிரும் தெய்வப் பேரொளியை நம்மவர் நன்குணர்ந்து கொள்ளவில்லை. காதலால் பெண் மக்களுக்கு ஆண்மக்களும் ஆண் மக்களுக்குப் பெண்மக்களும் தெய்வ மாகின்றனர். பெண்மைக்கு ஆண்மையும் ஆண்மைக்குப் பெண்மையும் உலக யாத்திரையில்—வாழ்க்கை நெறியில் — அருந்துணையாய் அமைந்துள்ளன என்று பண்டைத் தமிழர் இயற்கையாகவேகண்டறிந்து வாழ்ந்தனர். அவர்கள் பெண்மையின் அருமை பெருமைகளை நன்குணர்ந்

இருந்தார்கள். 'பெண்மை' யென்னும் தமிழ்ச்சொல்லே, அன்பு, பெருமை, மாட்சிமை என்னும் பொருள் தந்து நிற்பது ஆராயத்தக்க தாகும். இடைக்காலத்தில் "பெண்ணெனப் படுவகேண்மோ பீடில" (அதாவது, பெண்மை யென்பது பெருமையில்லாதது) என்று பெண்மையின் சொற்பொருளையே சைனத்துறவிகள் மறுக்கத் துணிந்தனர். இதனால் நம்மவர் இல்லறம் அசுத்தமானதென்றும் துறவறமேஉயர்ந்த குறிக்கோளாகும் என்றும் கருதுவாராயினர். இன்பத் தலைவியே இல்லக்கிழத்தியாய், இல்லறத்தின் தனியரசியாய் நல்லறம் வளர்த்தகதைகளெல்லாம் ஏடுகளில் பதுங்கிக்கிடக்கும் பழங்கதைகளாய் விட்டன. காதல் வேறு, காமம் வேறு என்னும் உண்மையைப் பிற்காலத்தில் நம்மவர் முற்றிலும் மறந்து விட்டனர். காதல், காமம்—இவற்றிற்கு இடையேயுள்ள வித்தியாசம் மோட்சத்திற்கும் நரகத்திற்கு முள்ள வித்தியாச மாகும் என்பதையும் நம்மக்கள் உணர்ந்து கொள்ளவில்லை. 'நேசமில் வதுவை நாச காரணமே' என்னும் கொள்கை நவீன நாகரிகத்தின் பயனாக, மேலைநாட்டுப் பகட்டானபல பொருள்களோடும் நமது நாட்டில் இறக்குமதி செய்யப்பெற்ற தொரு புதுமைப் பொருளாமென்றே பலரும் ஆராய்ச்சியின்றி அங்கீகரிக்கின்றனர்.

நமது முன்னோர்கள் நேசமில்லாத மணத்தை மணமாக மதிக்கவில்லை. காமம் சேற்றில் தாழ்த்துவதென்றும் காதல் தெய்விகநிலைக்கு உயர்த்துவதென்றும் அவர்கள் அறிந்திருந்தனர். 'அன்பனே என் இன்னுயிர்; எனதுஆன்மா; என்தெய்வம்' என்று காதலி மனமொழி மெய்களால் உணர்ந்து வாழ்ந்தாள். காதலனும் காதலியைத் தன் ஆருயிராகவும் ஆன்மாவாகவும் காதல்-தெய்வமாகவும் போற்றி வாழ்ந்தான். காதலர் இருவரும் இல்லற நெறி நின்று இன்பப் பெருவாழ்வு வாழ்ந்தனர். இத்தகைய இன்பவாழ்வின் நிலைக்களமான இல்லமோ, தலைவன்மனைவி மக்களோடு எந்நாளும் கற்கும் ஒரு சர்வ கலாசாலையாக விளங்கியது. இக் கலாசாலையில் இயற்கை நுண்ணறிவு வாய்ந்த பெண்மணிகளும் ஆன்ம சுதந்திரத்தோடு கல்வி கேள்விகளால் அறிவைப் பெருக்கிப் பேரின்பவாழ்வு வாழ்ந்தனர். இத்தகைய பெண்மை யன்றோ சமூகத்தின் உயிர் நாடியாய்—ஜீவ சக்தியாய்—விளங்கும் பெருமை வாய்ந்தது? இத்தகைய இல்லத்திலன்றோ, காதல் இக சுகத்திற்கும் பரசுகத்திற்கும் ஓர் அளவு கோலாகின்றது? பெண்மக்கள் சீதையையும் ஆண்மக்கள் இராமனையும் குறிக்கோளாக (லட்சியமாக)க் கொண்டு வாழவேண்டும் என்பது இந்து மகாஜனங்களின் விருப்பமாகும். சீதையையும் இராமனையும் போலப் பரிசுத்தராய் வாழுங்கள் என்று நமது நாட்டின் தனிப் பெருந்தலைவராகிய மகாத்மா காந்தியடிகளும் கட்டளையிடுகின்றார். 'தேசி' யென்றும் 'பொன்னின் சோதி' யென்றும் 'வான்சுடர்ச்சோதி வெள்ளம்' என்றும் கவிச்சக்கரவர்த்தியால்போற்றப்படும் பிராட்டியே பாரதநாட்டின் ஜோதியாக விளங்கி நம் மக்கள் உள்ளமாகிய மகாராஜ்யத்திலே (Empire) எந்நாளும் அருள்முடி கவித்துத் தனியாசு செலுத்துகின்றாள். இத்தகைய சீதையின் காதலைக் கம்பர் வர்ணிக்கின்றார். 'புண்ணிய மூர்த்தி'யாகிய இராமன் 'கற்பின்கனலி'



யாகிய பிராட்டியைக் காதலிக்கும் அழகிய—பரிசுத்தமான—மகோன்னதமான காதலையும் வர்ணிக்கின்றார். இத்தகைய புனிதமான — தெய்வத்தன்மை வாய்ந்த காதல் வேறு; இழிவான—மிருகத்தன்மை வாய்ந்த காமம் வேறு என்பதை நமது கவிச்சக்கரவர்த்தி வற்புறுத்துகின்றார். உதாரணமாக, சூர்ப்பனகை இராமன்மீது கொள்ளும் காமத்தைக் கம்பர் எவ்வாறு வர்ணிக்கின்றார் என்பதைப் பாருங்கள். இராவணன் பிராட்டி மீது கொள்ளும் காமத்தைக் கம்பர் வர்ணித்திருக்கும் பகுதியையும் நோக்குங்கள். இவ்விரு பகுதிகளோடும் மிதிலைக்காட்சிப் படலத்தில் வர்ணிக்கப்பெறும் சீதையின் காதல், இராமன் காதல் என்னும் பகுதிகளை ஒப்பிட்டு ஆராயுங்கள். காதலென்னும் தெய்விக உணர்ச்சிக்கும் காமமென்னும் பேயுணர்ச்சிக்கும் இடையேயுள்ள நெடுந்தூரத்தை நீங்கள் நன்குணர்வீர்கள். காதல், காமம் என்னும் சொற்களை நமது கவி அபேதமாக உபயோகிக்கலாம்; ஆனால் யாதினுமினிய—பேரின்பத்திற்குரிய—பேரன்பிற்கும் (love), நம்மை இம்மையிலேயே நரகத்தில் வீழ்த்திவிடும் மாயாவிலாச மோகமாகிய மையலுக்கும் (lust) இடையே பாலமிட முடியாதபடி வரம்பின்றி விரிந்துகிடக்கும் பெருங்கடலுண்டென்பதை நமது கவிச் சக்கரவர்த்தியைப்போல நன்குணர்ந்த கவிகள், தமிழ் மொழியிலாவது வடமொழியிலாவது வேறொருவருமிலர் என்பது திண்ணம்.

மக்கள் உடலும் உள்ளமும் ஒருங்கே நிரம்பிய—அபரிமிதமான இயற்கையின்ப நுகர்ச்சிக்கு அடிப்படையாவது, ஓர் ஆடவன் ஒரு பெண் மீதும் ஒரு பெண் ஓர் ஆடவன் மீதும் கொள்ளும் பரஸ்பர மனப்பொருத்தமாகிய காதலேயாம். இங்ஙனம் மனம் பொருந்தி மணம் பெறும் காதல் — இங்ஙனம் இயற்கையாக அதி தீவிரமாய் இணைந்து நிற்கும் பரஸ்பர தெய்விக உணர்வு—பல பிறப்புக்களிலே வளர்ந்தும், மறைந்தும், வெளிப்பட்டும் நிலவும் என்று நமது நூல்கள் கூறுகின்றன. இவ் அருங் கருத்தினையே, கம்பர்

"பிரிந்தவர் கூடினால்
பேச வேண்டுமோ?"

என்று அட்சர லட்சம் பெறும் ஓர் அருமருந்தன்ன மகா வாக்கியத்தில், சின்னஞ்சிறு மாணிக்கச் செப்பில் இரட்டி யடக்கித்தரும் அமிர்த சஞ்சீவிபோல, அமைத்து நமக்குத் தருகின்றார். (பாற்கடலிலே ஒருவரோடொருவர் மனம் பொருந்தியிருந்த பழைய நிலைமை நீங்கித்) தனித்தனி பிரிந்துபோன காதலர்கள் மீண்டும் (ஓரிடத்தில் அல்லது ஒரு பிறப்பில்) கூடினால், அவர்களுக்கு உண்டாகும் காதலைச் சொல்லுதல் வேண்டுமோ? என்று கவி ஒரு வினவை அற்புதமாக, அதியுசிதமாக, எழுப்புகின்றார். வேண்டா? கூறாதே பெறப்படும்; பல பிறப்புக்களூடே வளர்ந்து மறைந்து வெளிப்பட்டு ஒளிரும் பொற்சுடர்போன்ற காதலின்பத்தை என்னென்று பேசுவது! எங்ஙனம் விரிப்பது! ஒவ்வொருவரும் உள்ளத்தின் பேராழத்திலே ஆழ்ந்து மூழ்கியே உணர்தல் வேண்டும்.

"முன்பு பின்பின்றி மூவுலகத்தினும்
அன்பி னல்லதோர் ஆக்கமுண் டாகுமோ?"
—அயோத்தியா காண்டம்.

மெய்யன்பு அழிவில்லாதது; மரணமில்லாதது. இதுவே அழிவிலாத

ஆக்கம் அல்லது ஐசுவரியம். மனணத்தின் வாயிலாகவும் நம்மைத் தொடர்ந்து வரும் நிறை செல்வம் அன்பேயாகும். அன்பே மூவுலகத்திலும் செல்லும் செல்வமாகுமென்று நமது கவிச்சக்கரவர்த்தி கம்பீரமான ஓர் இராஜ பட்டயம் (Magna Charta) நமக்கு அளித்திருக்கின்றார். இத்தகைய மெய்யன்பு வடிவான காதல் இம்மையிலும் மறுமையிலும் இன்ப வாழ்வு வாழ்வதற்கு அடிப்படை யாகும் என்று பண்டைத் தமிழர்கருதியது வியப்பன்று.

ஆடவரும் மகளிரும் தத்தம்மனத்திற் கினியாரையும் அன்பிற் குரியாரையும் மணந்து கொள்ளும்வழக்கம் நிலவிய பண்டை நாளில், காதலும் களிப்பும் வீரத்தை வளர்ப்பன—உயிர்த்தீயை மேலோங்கி ஜ்வலிக்கச் செய்வன—என்னும் கொள்கையும் நமது நாட்டில் நன்கு பரவியிருந்தது. இக்கொள்கையைத்தழுவி, நமது கம்பரும் காதல் உயிர்க் கனலைக் கொழுங் கனலாக மேலோங்கி ஜ்வலித் தெழச் செய்யும் இன்பக் காற்றென்று குறிப்பிடுகின்றார். காதல் உயிரை வளமுறச் செய்து வளர்ப்பது; ஆனால் காமமோ உயிரை அழித்துச் சிதைப்பது. இராமாயணத்தில் இராமனது வெற்றி காதலின் வெற்றியே. இராவணனது நாசம் காமத்தின் நாசமே. இவ்வாறு கம்பர் சித்திரிக்கின்றார். சூர்ப்பனகை அழகழிந்து கேடுற்ற கதையினையும் கவி காமத்தின் வீழ்ச்சியாகவே சித்திரித்துக் காட்டுவது கவனிக்கத்தக்கது.

இராமன் இராவணன்மீது வெற்றி கொண்டு வாகை மாலை சூடுவதும், காதலின் வெற்றியே யென்று சித்திரிக்கும் மகாகவி, இராமன் வில்லிறுத்து மணமாலை சூடுவதையும் காதலின் வெற்றியாகவே காட்டுகின்றார். காதலர் "இருவரும் மாறிப் புக்கிதயம் எய்தினர்" என்று கம்பர் காதல்—நோக்கின் பயனை ஓர் அதிசய சம்பவமாகச் சித்திரிக்கின்றார். காதல் தலைமகனது உள்ளத்திலே ஊறி உதிரத்தோடு கலக்கின்றது. அப்போது வில்வீரனாகிய காதலனது உள்ளத்திலே விஜய வாட்கண் நங்கையாகிய தலைவி பிரவேசிக்கின்றாள்; பிறகு சித்தத்தும் காதல் மயமாய் ஒளிரும் அம்மகாராஜப்பத்திலே காதலின் உரிமையாலும் பெருமையாலும் மகாராணியாகத் தனிமுடி கவித்துத் தனியரசு செலுத்துகின்றாள். காதலியின் ஜோதிமுகம் உள்ளத்தில் ஆவேசித்திருந்து குன்றாத தெய்விக ஊக்கமும் உற்சாகமும் அளிக்கின்றது. காதலியின் காதல் வீரனது வீரத்தை மேன்மேலும் விசிறி ஜ்வாலை செய்கின்றது.

"பொழிந்த நெய் ஆகுதி வாய் வழி பொங்கி, எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான், அழிந்தது வில்லென வானவர் ஆர்த்தார்." காதலால் வீரம் ஜ்வலித்து நெய் பொழிந்த கொழுங்கனல்போலப் பொங்கியெழுகின்றது. இவ்வீரம் அகமும் புறமும் நிறைந்து ததும்பி வழிந்து மேன்மேலும் மேலோங்கி வளர்கின்றது. இத்தகைய வீராவேசத்தோடு—இத்தகைய கொழுங்கனல் போன்ற மன எழுச்சியோடு—இராமன் எழுந்த தோற்றமே வெற்றியின் தோற்றமென்று தேவர்கள் கருதி ஜயகோஷம் செய்கின்றனர்.

"ஆடகமால் வரை யன்னது தன்னைத் தேடரு மாமணிச் சீதை யெனும் பொற் சூடக வால்வளை சூட்டிட நீட்டும் ஏடவிழ் மாலையி தென்ன எடுத்தான்."



இராமன் வில்லை நோக்கி யெழுந்தான். வில்லோ மகாமேரு மலைபோலக் கிடக்கின்றது. ஆனால் அது காதலன் கண்ணில் அவ்வாறு தோன்றவில்லை. காதல் நிறைந்து ததும்பும்கண்களிலே மலைபோன்ற அப்பெருவில், காதலிக்குக் காதலின் அறிகுறியாகச் சூட்டப்பெறும் மலர்மாலை போலத் தோன்றுகின்றது. பார்ப்பவர்களுக்கெல்லாம் பயங்கரமாயிருக்கும் சிவதனுசு இராமனுக்கு மாத்திரம் தன் காதலிக்குத் தான் பேரன்போடு சூட்டுவதற்காக எடுக்கும் இன்ப நறுமலர் மாலையாகத் தோன்றுகின்றது. 'தேடரு மாமணிச் சீதை' யென்ற தொடரால் காதலன் தான் கண்ணுற்ற காதலியை எவ்வாறு தன் உளத்தில் போற்றுகின்றான் என்பதைக் கவி குறிப்பிடுகிறார். காதற் சுவை கொழிக்கும் இப்பாட்டாலும்,

"..............நங்கை யிவள் என்றால் இச்சிலைகிடக்க மலை ஏழையும் இறாதோ?"

என்ற வசிட்டன் கூற்றாகிய வியப்புரையாலும் இராமன் விஜய 'வாட்கண் நங்கை'யின் கடைக்கண் பணியே பணியாக வில்லிறுத்தது காதலின் கன்னி வெற்றி யென்று கம்பர் மிக்க நயமுறச் சித்திரித்துக் காட்டுகின்றார்.

வான்மீகத்தில் வில்லிறுத்தல் இராமனது வீரதோளின் வெற்றியேயாகும். கம்ப சித்திரத்தில் இராமனது வெற்றி காதலின் வெற்றியாகின்றது. 'வந்தேன்!—கண்டேன்!—வென்றேன்!' என்று சீஸர் சக்கரவர்த்தி ஒரு பெரும் போரில் தான் அடைந்த வெற்றியைச் சுருங்கக்கூறி விளங்க வைத்தான் என உரோமர் சரிதம் முழுக்குகின்றது. கம்பர் கதாநாயகனும் மிதிலை புகுந்து வில்லிறுத்து வெற்றி பெற்ற வீர சரித்திரத்தைத் திட்பமாகவும் நுட்பமாகவும்சுருக்கிரிப்பதற்கு 'வந்தான்!—கண்டான்!—வென்றான்!' என்னும்மூன்று சின்னஞ்சிறு சொற்களே யமையும் என்று கருதுகிறேன். இராமன் வந்தான்!—சீதையைக் கண்ணுற்றான்!—வில்லிறுத்து வெற்றி பெற்றான்! என்பது கம்ப-சித்திரம். இராமன் வந்தான்!—வில்லிறுத்து வெற்றி பெற்றான்!—சீதையை மணந்தான்!—என்பது வான்மீகம். இவ்விரண்டு சித்திரங்களுக்குமுள்ள வித்தியாசத்தைச் சிறிது சிந்தனைசெய்யுங்கள். காந்தர்வ மணத்திற்கும் அசுர மணத்திற்கும் உள்ள வித்தியாசத்தை நீங்கள் காண்பீர்கள்.

"இவ்வாழ்க்கையில் எல்லையிலாமல் இன்பம் அளிப்பதே காதல்! இடைவிடாத ஓர் ஆவலையும் ஆழ்ந்த நினைவையும் ஈவதே காதல்! சிறிது பிரிவால் பெரிது புண்படுத்தி நொடிப்பொழுது காணில் பேரின்பம் விளைப்பதே காதல்! நீடூழி வாழ்கின்ற காதலின் காரியங்கட்குக் கணக்குண்டோ? மெய்யன்பிலாத மணம் புரோகிதர் முன்னின்று முறைப்படி யமைப்பினும் குப்பைக்கு ஒப்பாகும்"—என்றுகூறி வங்கநாட்டுக்கவியரசாகிய தாகூரடிகள் 'துறவு' என்னும் ஓர் அழகிய சிறு கதையகத்தே காதலின் பெருமையைக் கதா நாயகியின் வாயிலாக வெளியிடுகின்றார். காதலின் அருமை பெருமைகளைப் பண்டைத் தமிழ்ப் புலவர் நன்கறிந்து பாராட்டுகின்றனர் என்பது பண்டைத் தமிழகத்தில் பூத்த சங்க இலக்கியத்தினின்று நாம் தெரிந்து கொள்ளலாம். பிறகு காலத்தாலும், ஜைன பௌத்த சமயிகளது துர்அபிமானத்தாலும்

காதல் நமது நாட்டில் மாசு சூழ்ந்த மணி யாகிவிடுகின்றது. மீண்டும் காதலை மாசிலா மணியாகக் கழுவி நமக்களிக்கும் கவிச்சக்கரவர்த்திக்கு நாம் மாளாத காதலோடு ஆளாகின்றோம். காதல்மயமாய் ஒளிரும் இல்லமே அன்பெனும் ஆலயத்தின் மூலஸ்தானமாகின்றது. இல்லம், அன்பாலயத்தின் வெளிப் பிராகாரமாகிய மதிற்சுவரன்று. குடும்பத்திற்கு வெளியே அன்பு விரிந்து பரவாதபடி அதனைத் தடுக்கும் தன்னலக்கோட்டையன்று. உண்மையான இல்லம் மெய்யன்பின் சிறைக்கோட்டமன்று. அன்பாலயத்தின் மூலஸ்தானமே இல்லம்; புறமதில் அல்லது வெளிப்பிராகாரம் உலகத்தையே சூழ்ந்து தழுவி நிற்கின்றது. மெய்யன்பின் நடுநாயகமாய் மிளிர்ந்து நாற்புறமும் தெய்வ ஒளி பொழிந்து நிற்பதே இன்பமயமாய் ஒளிரும் இல்லமாகும். காதலன் காதலிக்குக் கற்பிப்பது கற்பென்று கூறுவர். காதலியும் காதலனுக்குக் கற்பிக்கின்றாள்; காதலின் மர்மங்களைக் காதலனுக்குபதேசிக்கின்றாள். காதலி காதலனுக்குக் காதலை உபதேசத்தால் உபதேசிக்கின்றாளில்லை;—காதலைக் காதலால், கற்பினால், ஒழுக்கத்தால் உபதேசிக்கின்றாள். குணமலையான காதலன் கற்பிக்கும் கற்பு, காதலியை வீரபத்தினி யாக்குகின்றது; உயிரோடு பத்தினிக் கடவுளாக அவளை உருப்படுத்துகின்றது. பேரன்பினளான காதலி கற்பிக்கும் காதலோ விசாலித்து விசாலித்து அகண்ட அன்பாக உலகமெங்கும் விரிந்து படர்கின்றது.

இத்தகைய பேரின்ப வாழ்வின் அடிப்படையாகிய மெய்க்காதலைக் கம்பர் பாரத நாட்டின் ஜீவியமாகிய சீதை வாயிலாகவும் நமது உயர்வற உயர்ந்த தேசிய லட்சியமாகிய இராமன் வாயிலாகவும் சித்திரித்துத் தருகின்றார். உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத உயிர்நிலை காதல் என்பதைக் காதல் மணக்கும் கம்பசித்திரம் வற்புறுத்துகின்றது. பிரபஞ்சமாகிய அரங்க மேடையில் இனிது நடிக்கப்பெறும் இல்லறம் என்னும் நாடகத்திற்கு அழகும் ஆனந்தமும் உயர்வும் பாக்கியமும் அளிப்போர் பெண்மணிகளேயாவர். ஆதலால் 'இராமநாடக'மாகிய இராமாயணம் சீதையின் சரிதமே யென்று பெரியோர் கூறுவர். கம்பர் இராமன் பெருமையைக் காட்டினும சீதையின் பெருமையைச் சிறப்பித்துக் கூறுகின்றார் என்பது பின்னர் நன்கு விளக்கப்பெறும். காதலின் தெய்வத்தன்மையையுணராதவர்கள்—காதலையும் காமத்தையும் ஒன்றாகக்கருதி மயங்கி ஒரே மூச்சில் இரண்டையும் ஒருங்கே கண்டித்துக்கூறும் பிற்காலத்தார்—பெண் ஜன்மமே பாவ ஜன்மமென்று பேசுவது ஓர் ஆச்சரிய மன்று. ஆனால் இக்கொள்கைக்கும் மகாகவியான கம்பர் கொள்கைக்கும் எவ்வளவு தூரம்? தலைவியைத் தலைவனைக் காட்டினும் உயர்வாகச் சிறப்பித்துச் சித்திரிக்கும் கவிச்சக்கரவர்த்தி, தலைவியின் குலமாகிய பெண்குலத்தைத் தாழ்த்திக்கூற ஒருப்படுவரோ? உலகம் புரிந்த பாக்கியமே கதாநாயகனாய் விளைந்ததென்று கூறும் கம்பர், 'புவி மடந்தைத்திரு' (பிரபஞ்சத்தின் பேரழகு) என்றல்லவோ பிராட்டியைக் குறிக்கின்றார்? ஆம்; கம்ப சித்திரத்தில் உலகம்செய்த பாக்கியம் இராமனாக விளைகின்றது. உலகத்தின் உயிர்நிலையான வளம் அல்லது வன



ப்பே பிராட்டியாக உருவெடுத்து வெளிப்படுகின்றது. (சீதா பிராட்டியவதரித்த) பெண் ஜன்மமும் பாவ ஜன்மமாகுமா? இறைவனது விசேஷ அனுக்கிரகம் அல்லது அருளழகே பெண்மையாய் ஒளிர்கின்றது. இது கம்பர் மதம். இதற்குரிய ஆதாரங்களை வேறொரு சந்தர்ப்பத்தில் எடுத்துக் காட்டுவோம்.

## காதலின் பூஞ்சோலை.

இனி, கல்வி, கேள்வி, ஒழுக்கம், அன்பு, முதலியவற்றால் ஒத்த தலைவனும் தலைவியும் கண்ணுற்றுக் காதல் கூர்ந்து இன்பம் எய்திய மிதிலைமாநகரை ஓர் அழகிய ஆனந்தப் பூம்பொழிலாகச் சிங்காரிப்பதே கம்ப சித்திரத்திற்குப்பெரிதும் பொருந்துவதாகும். இவ்வண்ணமே கம்பர் தமது மிதிலையைச் சிங்காரிக்கின்றார்.

'மிதிலைக் காட்சி'க்கு முந்தின படலத்தின் இறுதிச் செய்யுள் "வாச—மணங்கிளர் சோலை நீங்கி மணிமதில் மிதிலை கண்டார்" என்று முடிவுபெறுகின்றது. விசுவாமித்திர முனிவருடனே இராமனும் தம்பியும் மிகுந்த வாசனை வீசுகின்ற சோலையினின்றும் புறப்பட்டு, அழகு வாய்ந்த—மதில் சூழ்ந்த—மிதிலாநகரத்தைப்பார்த்தார்கள் என்று முந்தின படலம் முற்றுப்பெறுகின்றது. உடனே மிதிலைக் காட்சிப் படலம் ஆரம்பமாகின்றது. அரசிளங்குமரர் இருவரும் முனிவரோடு மலர் மிகுந்து நறுமணம் வீசுகின்ற இயற்கைச் சோலையினின்றும் புறப்பட்டுப் பூம்பொழிலின் வளமும் வனப்பும் செயற்கையாக அமைந்துள்ள மிதிலையை நோக்கி வந்தார்கள் என்று சாதுரியமாகக் குறிப்பிட்டு, மிதிலா நகரத்தினது தோற்றத்தை மூவரும் கண்ட வரலாற்றை மிதிலைக் காட்சிப் படலத்தின் முத லிருபத்து மூன்று பாடல்களால் கவி வருணிக்கின்றார்.

இராமபிரான் மிதிலாநகரத்தின் அருகிற் செல்லும் பொழுது, அந்நகரத்து மதில்களின் மேலுள்ள அழகிய மணிக்கொடிகள் மந்தமாருதத்தில் இன்பமாக அசைந்தாடுகின்றன. இத்தோற்றம்,மிதிலைமாநகரமே தன் பெரிய கைகளை உயர எடுத்து அவற்றால் இராமபிரானை விரைவில் வருமாறு அழைப்பதை ஒத்திருந்தது.

" மையறு மலரினீங்கி
யான்செய் மாதவத்தின் வந்து
செய்யவள் இருந்தாளென்று
செழுமணிக் கொடிகளென்னும்
கைகளை நீட்டி யந்தக்
கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை ஒல்லைவா வென்
றழைப்பது போன்ற தம்மா"

"செந்தாமரை மலராகிய பொற்கோயிலில் செம்மாந்து வீற்றிருக்கும்பொன்னரசி,நான் செய்த மாதவப்பேற்றினால், குற்றமில்லாத தன் கோயிலையும் சிம்மாசனத்தையும் துறந்து என்பக்கல் வந்து வளர்கின்றாள். இவள் 'வரம்பில் பேரழகினள்'. 'அந்தமில் அழக'னாகிய உனக்குஇணையான காதலி யிவளே"—இவ்வாறு மிதிலைமாநகரம் மௌனப் பிரசங்கம் செய்து, தன் புகழரசியாகிய சீதைக்குக் காதலனாதற்கு ஏற்ற இராமபிரானை விரைவில் வருவாயாக வென்று குதூகலத்துடன்கைகாட்டி யழைப்பதைப்போல் செழுமணிக்கொடிகள் அங்கு மிங்கும் அசைந்து பறந்தன. திருமகளுக்குத் தன் உறைவிடத்தினும் சிறந்த இனிய வாசஸ்தானமாக விளங்குவது மிதிலை மாநகரம். குறைவில்லாத இயற்கையழகு வாய்ந்ததனது இருப்பிடத்தை விட்டுத் திருமகளும்

திரும்பிவந்து வீற்றிருத்தற்கு ஏற்ற வனப்பும் வளமும் செயற்கையாகத் தன்பால் செறிந்து விளங்கப்பெறுவது மிதிலைமாநகரம். செந்தாமரை மலர்ச் செல்வியும் தனது இயற்கைப் பொன்மனை துறந்து, 'மணிமதில் மிதிலைமாநகர்ச் செல்வியாக வளர்ந்து இறுமாந்து வாழும்படி, மாதவஞ்செய்து'பேரழகு பெற்றுப் பொலிந்தொளிர்வது மிதிலை மாநகரம். தொழில் முற்றின மாடமாளிகைகளும் உபரிகை வீடுகளும் நிறைந்து விளங்குவது மிதிலை மாநகரம். மிதிலைமாநகரத்து மதில்களின்மீது பறக்கும் கொடிகள் இராமனைக் கையெடுத்து அழைக்கின்றன. மிதிலை நகரத்து மாளிகைகளின் மீது வரிசை வரிசையாக நெருங்கி நின்ற அழகிய கொடிகளெல்லாம் ஆகாயத்தில் ஆனந்த நடம்புரிகின்றன. ஒத்த சிறப்புடைய தலைவன் தலைவியர் ஒருவரையொருவர் காதலித்து மணம் புரிதல் தருமத்தின் பயனாதலால் இத்தகைய காதல் மணத்தைக் கூட்டி முடிப்பதற்குத் தருமம் தானே தூதுசென்றழைத்ததென்று கவி கற்பித்துக் கூறுகின்றார். இங்ஙனம் இன்பமயமாகத் தொடங்கி மிதிலைக்காட்சி இன்பத்தின் மேலின்பமாக மலர்ந்து ஓர் ஆனந்தமான 'கண் விருந்தா'கிய தண்டமிழ்ப் பூஞ்சோலையாக விரிகின்றது.

அயோத்தி மாந்தர்களும் மிதிலை மாந்தர்களைப் போலவே வாழ்க்கையை ஓர் இன்பக் கூத்தாகக் கருதி இயற்கையோடிசைந்த இன்ப வாழ்வு வாழ்கின்றனர். எனினும் அவர்கள் முடிவில் அருங்கலை விநோதர்களாகவே நம் கண்முன் நிற்கின்றனர். கலைச் செல்வச் சிறப்பே அவர்களது விசேஷ அருஞ்சிறப்பாகும். மிதிலை மாந்தர்களோ காதல்மயமாய், இயற்கையோடிசைந் தொளிரும் இன்ப வாழ்வு வாழ்வதையே ஓர் அருங்கலையாகக் கொண்டவர்களாவர்.

மிதிலைநகரத்துள்ள மைந்தர்களால் விநோதார்த்தமாக ஒன்றோடொன்று சண்டைக்கு விடப்பட்ட யானைகள் கூட மனத்தில் பகைமையில்லா திருக்கவும் லீலையாக ஒருவரோடொருவர் கலகப்படும் காதலர்போலவே வெளிக்குத் தற்காலத்தில் விரோதத்தை விளைத்துக்கொண்டு போர்செய்தன என்று கவி கூறுகின்றார். (மிதிலைக்காட்சிப் படலம்:—செய்யுள் ௩) அயோத்திமாநகரில் யானைகளோடு யானைகளை எதிரெதிராகப் போர்புரியும்படி மைந்தர் ஏவும் காட்சியைக் கவி, இங்ஙனம் காதலர் பூசலிடுங் காட்சியாகக் கூறாது, சாதாரணமாக யானைகள் போர்புரியும் காட்சியாகவே காட்டுவது கவனிக்கத் தக்கது.

"பூசலின் எழுந்த வண்டு
மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசறு பிறவிபோல
வருவது போவதாகிக்
காசறு பவளச் செங்காய்
மரகதக் கமுகுபூண்ட
ஊசலின் மகளிர், மைந்தர்
சிந்தையோடுலவக் கண்டார்."

இயற்கை வளமும் வனப்பும் செயற்கைபால் 'கை புனைந்து இயற்ற'ப்பெற்று விளங்கும் மிதிலை நகர்வாசிகளது வாழ்க்கை காதல்மயமாய்—இன்பமயமாய்—மலர்ந்து வாசகர் உள்ளத்தை வசீகரிக்கின்றது. உதாரணமாக மிதிலை மகளிர் ஊசலில் வீற்றிருந்து ஆடும் காட்சியைப் பாருங்கள். மிதிலைமாநகரின் நெடுந் தெருக்களைச் செயற்கை நலம் செறிந்த நடனசாலைகளும் இயற்கை நலத்தோடிசைந்த இனிய பூஞ்சோலைகளும், அழகு செய்கின்றன. நடனசாலைகளில் நடனமாதர் 'கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ்செல்ல' அபிநயஞ் செய்து ஆடுகின்றனர். சோலைகளிலும் சாலைகளிலும் பேரழகு வாய்ந்த பெண்மணிகள் பரிமளம்மிகுந்த மலர் மாலைகள் அணிந்து உல்லாசமாக ஊஞ்சலாடுகின்றனர். அந் நகரத்துள்ள தெருக்களுக்கு அழகு செய்வன இச்சிங்காரச் சோலைகள்; இச்சோலைகளுக்கு அழகு செய்து நிற்பன, 'பவளச் செங்காய் மரகதக் கமுகு'கள்; கமுகு மரங்களுக்கு அணி செய்வன 'கமுகு பூண்ட ஊசல்'கள். ஊஞ்சல்களில் இனிது வீற்றிருந்து, பெண்மையின் அணிகலமான மாதரசிகள் விசையாக ஆடும்பொழுது, அவ் ஊஞ்சல்கள் மாறி மாறி மேல் கீழாய் ஓடியோடி வருவதும் போவதுமாயிருக்கின்றன. அவ்வதிர்ச்சியால் மெல்லியலார் மேனியை அலங்கரிக்கும் மலர் மாலைகளில் மொய்த்திருந்த வண்டுகள் மேலெழுந்து பேரொலி செய்கின்றன. இக்காட்சியழகைக் கண் குளிரப் பருகிநின்ற மைந்தர்கள், அம்மகளிரது மெல்லிய இடை, விசையாட்டத்தைப் பொறுக்க மாட்டாதென்றல்லவோ வண்டுகளும் இரங்கி வாய்விட்டு அரற்றுகின்றனவென்று காதல் மிகுதியால் கவல்கின்றனர். இங்ஙனம் ஊசலாடும் விந்தையை நோக்கிய கண்கள் செயலற்று நிற்க, மனம் விடாது தடுமாறுகின்றது. மகளிர்கள் ஊசலாடுகின்றனர்; மைந்தர் மனமும் ஊசலாடுகின்றது. ஆதலால் "ஊசலின் மகளிர் மைந்தர் சிந்தையோடுலவக் கண்டார்" கதாநாயகன் முதலிய மூவரும் என்று கவி கூறுகின்றார்.



அப்பால் முனிவரோடு அரசிளங்குமரர், அரியகீதங்களையும் உல்லாசமாக எளிதிற் பாடவல்ல மகளிர் விருந்தென ஈந்த இசைத்தேன் செவிமடுத்து இளைப்புத் தீர்ந்து இன்பமாக வழிச் சென்றார்கள். சாளரங்கள் தோறும் சந்திரோதயமானதுபோல முகங்காட்டி மாதரசிகள் பலர் இவர்களைப் பார்த்து நின்றார்கள். மகளிர்கள் பந்தாடுமிடம், சூதாடுமிடம், நீராடும் நீர்நிலைகள் ஆதியவற்றைக் கடந்து,

"பாகொக்கும் சொல்
பைங்கிளியோடும் பலபேசி
மாகத்தும்பர் மங்கையர்
நாண மலர் கொய்யும்
தோகைக் கொம்பின்
அன்னவர்க் கன்னநடை தோற்றுப்
போகக்கண்டு வண்டினம்
ஆர்க்கும் பொழில்கண்டார்."

சாயலில் மயிலையும் மெல்லிய உருவத்தில் பூங்கொம்பையும் ஒத்து வடிவழகில் தெய்வப் பெண்களையும் வென்ற பெண்கள், பச்சைக்கிளிகளோடு கொஞ்சிக் கொஞ்சிப் பலபேசி மலர் கொய்து விளையாடும் முக்கியமான சோலையை மூவரும் கண்டார்கள். இச்சோலையை அடுத்து, மிகவும் அழகிய பொன்மயமான மாளிகை வரிசைகளோடு கூடிய மகாராசாவினது அரண்மனை, சுற்றிலுமுள்ள அகமதிலோடும் அகழியோடும் கட்புலனாயிற்று. அவ்வரண்மனையிலுள்ள கன்னிமாடத்திலேதான் கதாநாயகி கதாநாயகனுக்குக் காட்சியளிக்கின்றாள். வளம் மிக்க அவ்விடத்தேயுள்ள அன்னம் போன்ற சிற்றுயிர்களும் ஆணும் பெண்ணுமாய் விளையாடி இன்பம் நுகர்ந்திருந்தன. அவற்றைக் கண்ணுற்று நின்ற தலைவியின் கன்னியுள்ளத்தில், இராமனைக் கண்டதும் காதல்வேட்கை விளைகின்றது.

இங்ஙனம் மிதிலை காதலின் சிங்காரப் பூங்காவனமாகச் சித்திரிக்கப் பெறுகின்றது.

அயோத்தி லட்சியங்களின் மணி மண்டபம். மிதிலை காதலின் பூஞ்சோலை. அயோத்தி நல்லறங்களின் புண்ணிய தபோவனம். மிதிலை இன்பத்தோடிசைந்த காதலின் பூங்கோயில்—காதலின் ஆனந்த நந்தவனம்.

வாசகர்களே! கவிச் சக்கரவர்த்தி நமக்குச் சித்திரித்துத் தரும் இவ்விரண்டு திருநகரங்களையும் உற்றுநோக்குங்கள். நம் கம்பர் பெருமானது கவிச் சிற்பத் திறமையைக் காண்பீர்கள். இது அவரது வரம்பிகந்த பேராற்றலின் ஓர் அற்பமான அம்சமேயாகும். இனி, இலங்கைமாநகரம் நந்தெய்வத் தமிழ்ச்சிற்பியால் எவ்வாறு நிர்மாணஞ் செய்யப் பெறுகின்றது?

அயோத்தி அறிவுத் தெய்வம் அருள் நடம் புரியும் வெண்டாமரை மலர். "திருமகளிருந்த செய்யபோதெனப் பொலிந்து தோன்றும் பொனமதில் மிதிலை"யோ அழகுத் தெய்வம் ஆனந்தத் திருநடம்புரியும் செந்தாமரை மலராகும். இராமாயணம் என்னும் இன்ப நறுமலர் மாலையிலே, அயோத்தி ஒரு தூயவெண்மலராகவும், மிதிலை ஓரழகிய செம்மலராகவும் ஒளிதோற்றி மலர்கின்றன. இம்மலர் மாலையிலே இலங்கை எவ்வாறு பரிமளிக்கின்றது?

இரத்தின வடமாகிய 'இராமாவதாரத்'திலே அயோத்தி அறிவுத்தெய்வத்தின் அறிகுறியான வெண்முத்தாக மிளிர்கின்றது. மிதிலை அழகின் செவ்வொளி காட்டும் மாணிக்கமாகத் திகழ்கின்றது. இவ்வற்புத மணிமாலையிலே இலங்கை எவ்வாறு ஒளி செய்கின்றது?

(தொடரும்.)

---

## காதலின் நிலை.

"துன்பே நிறையும் மன்பே ருலகாம்
எரியும் கானல் விரியும் பாலையில்
திரியும் மனிதர் நெஞ்சஞ் சிறிது
தங்கி அங்கு அவர் அங்கம் குளிரத்
தாருவாய்த் தழைத்தும், ஓயாத்தொழிலில்
நேருந்தாகம் நீக்குவான் நிமல
ஊற்றுயிருந்து அவ ருள்ளம் ஆற்றியும்,
முயற்சியாம் வழியில் அயர்ச்சி நேரிடில
ஊன்று கோலாய் அவலுக்கம் உயர்த்தியும்,
இவ்விதம் யாரையும் செவ்விதிற் படுத்தி,
இகத்துள சுகத்திற்கு அளவு கோலாகி,
பரத்துள சுகத்தை வரித்த சித்திரமாய்,
இல்லறம் என்பதன் நல்லுயிரேயாய்,
நின்ற காதலின் நிலைமை, நினையில்,
இரும்பும் காந்தமும் பொருந்துந் தன்மைபோல்,
இருவர் சிந்தையும் இயல்பாயுருகி
ஒன்றுந் தன்மை யன்றி, ஒருவரால்
ஆக்கப்படும் பொருள் ஆமோ?" —(மனோன்மணீயம்)

---

# திருக்குற்றாலம்

## திருஞானசம்பந்த மூர்த்தி தேவாரம்

வம்பார்குன்றந் நீடுயர் சாரல் வளர் வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண்டு யாழ்செய் குற்றாலம்;
அம்பா னெய்யோ டாடல் அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர்போலும் நமரங்காள்!

செல்வம் மல்கு செண்பகம் வேங்கை சென்றேறிக்
கொல்லை முல்லை மெல்லரும்பீனும் குற்றாலம்
வில்லினொல்க மும்மதிலெய்து வினைபோக
நல்கு நம்பான் நன்னகர் போலும் நமரங்காள்!

பக்கம் வாழைப் பாய்கனியோடு பலவின்தேன்
கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம்;
அக்கும் பாம்பும் ஆமையும் பூண்டோ ரனலேந்தும்
நக்கன் மேய நன்னகர் போலும் நமரங்காள்!

மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்தும் குற்றாலம்;
இலையார் சூலம் ஏந்திய கையான் எயிலெய்த
சிலையான் மேய நன்னகர் போலும் சிறுதொண்டீர்!

மைம்மா நீலக்கண்ணியர் சாரல் மணிவாரிக்
கொய்ம்மா ஏனல் உண்கிளி யோப்பும் குற்றாலம்;
கைம்மா வேழத்தீருரி போர்த்த கடவுள் எம்
பெம்மான் மேய நன்னகர் போலும் பெரியீர்காள்!

நீலநெய்தல் தண்சுனை சூழ்ந்த நீள்சோலைக்
கோல மஞ்ஞை பேடையொடாடும் குற்றாலம்;
காலன் தன்னைக் காலால் காய்ந்த கடவுள் எம்
சூலபாணி நன்னகர்போலும் தொழுவீர்காள்!

போதும் பொன்னும் உந்தியருவி புடைசூழக்
கூதல் மாரி நுண்துளி தூங்கும் குற்றாலம்;
மூதூரிலங்கை முட்டியகோனை மிறைசெய்த
நாதன்மேய நன்னகர் போலும் நமரங்காள்!

பெருந்தண் சாரல் வாழ்சிறை வண்டு பெடைபுல்கிக்
குருந்தம் ஏறிச் செவ்வழி பாடும் குற்றாலம்;
இருந்துண் டேரும் நின்றுண் சமணும் எடுத்தார்ப்ப
அருந்தண் மேய நன்னகர் போலும் அடியீர்காள்!

பொருள் விளக்கம்:—தமிழ் மணமும் சிவமணமும் ஒருங்கே கமழும் தென்பாண்டிநாட்டின் திலகமாய்த்திகழ்வது திருக்குற்றாலம். இது சைவ சமயத்தின்பிறப்பகங்களில்ஒன்றாய் ஒளிரும் திருப்பதியாகும். இது சைவர்களின் திருநகரங்களில் ஒன்றாவதோடு, பிறக்கும் ஒப்பற்ற இம்மை யின்பம் அளிக்கும் ஓர் அழகிய நீராடு துறையாகவும் அமைந்து விளங்குகின்றது. சைவர்க்கும் சைவரல்லாதார்க்கும், செல்வர்க்கும் செல்வரல்லாதார்க்கும், கற்றார்க்கும் கல்லார்க்கும், வலிமை வாய்ந்தவர்களுக்கும் நோய்வாய்ப்பட்டு வலியிழந்தவர்களுக்கும், போது போக்கச் செல்வோர்க்கும், அருந்தமிழ் ஆராயும் அறிஞர்களுக்கும்ஒருங்கே இன்பசுகம் அருளும்இயற்கைத் தெய்வத்தின் எழில் நிலையமாய்—ஆரோக்கிய லட்சுமியும் அழகு லட்சுமியும் கைகோத்துக் குடிகொள்ளும் கடன சாலையாய்—நில உலகமெங்கும் தன் புகழ் வீசி விளங்குவது திருக்குற்றாலம். இத் தலத்திலுள்ள நீர்வீழ்ச்சிகள் இணையிலா அழகு வாய்ந்திலங்குகின்றன. இவ் அருவிகளே சித்திரா நதி யென்னும் சிற்றாறாகப்பெருகித் தற்காலத்தில் தாம்பிரவருணி யென்றழைக்கப்பெறும் பிரசித்தி பெற்ற பொருனை யாறறில் சங்கமமாகின்றன. இயற்கை யழகினும் இயற்கை வளத்தினும் ஈடில்லாத பெருஞ் சிறப்பு வாய்ந்த திருக்குற்றாலத்தை, நமது சைவ உலகின் தனி நாயகமாகிய திருஞான சம்பந்த மூர்த்திகள் சுமார் ௧௨௦௦ ஆண்டுகட்கு முன்னர் நேரில் கண்டு, தாம் ஆர்வத்தோடு பருகி யனுபவித்த இயற்கைப் பொருட் காட்சி யின்பத்தைப் பண்சுமந்த பைந்தமிழில் பெய்து தமிழ் மக்களின் என்றும் அழியாத அமிர்த கலசமாகத் தந்தருளினர். இப்பாடல்களைப் பாலைவனங்களில் படித்த போதினும், குற்றாலத்தின் பசுமையும் பொலிவும் நமக்குப் புலனாகின்றன. இப்பாடல்களை மனங்கலந்து பாடும்போது நம்மை யறியாமலே நாம் குற்றாலத்திற்குச் சென்று விடுகின்றோம். வாடாத இயற்கை மணம் சொரியும் மலைச்சாரல் கட்புலனாகின்றது. தெவிட்டாத இயற்கை யின்பம் பொழியும் பசுஞ்சோலை வளர்ந்தோங்குகின்றது. நீண்டுயர்ந்த பெருங்குன்றம் முடி மன்னன் போலச் செருக்கொடு நிமிர்கின்றது. நீலவரி வண்டுகள் மதுவுண்டு மலரைச் சூழ்ந்து நீங்காது யாழ் செய்கின்றன; அல்லது பெடையோடு குருந்தமேறிச் செவ்வழி பாடுகின்றன. 'செல்வம் மல்கு செண்பகம் வேங்கை சென்றேறி' மெல் லரும்பினும் முல்லை, பெருமக்களைச் சென்றடைந்து நற்பயன் நல்கும் பொருள்போல விளங்குகின்றது. மலைச்சாரலிலுள்ள வாழைக்கனியின் குலைகளை மடமந்தி ஆசையோடு கவர்ந்து தானுமுண்டு குட்டிக்கும் அளித்து அகமகிழ்கின்றது. நீலம்,நெய்தல் நிறைந்த சுனை சூழ்ந்த நெடுஞ் சோலைகளில் மயில்கள் அழகிய கலாபம் விரித்துப் பேடையோடு ஆடுகின்றன. இயற்கை நலம் வாய்ந்த மலைமகளிர் தினையை யுண்ணவந்த கிளிகளை யோட்டுகின்றனர். இங்ஙனம் பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் சம்பந்தர் கண்டெழுதிய சித்திரம்இப்போதும்கண்முன்விரிகின்றது. இன்னும் மலைகளிலுள்ள தீங்கனிகளைக்கண்டு நமது வாயில் நீர் ஊறுகின்றது. சம்பந்த மூர்த்திகளது உள்ளத்தின் சௌந்தரியம்போல மலர்ந்து



தோன்றும் இன்ப நறுமலர்களைக் கண்டு உள்ளம் குதி கொள்ளுகின்றது. இம்மட்டோ! "போதும் பொன்னும் உந்தி யருவி புடைசூழக்—கூதல்மாரி நுண்துளி தூங்கும் குற்றாலம்," அதிர்ந்து பொழியும் இன்பமான அருவிநீர்ப் பெருக்கோடும் பளிங்கு மழைபோல விழும் நுண்துளிகளோடும் கட்புலனாகின்றது. திருக்குற்றாலத் திருப்பதிகமும் குற்றாலத் தருவியைப்போலவே மெலிந்த உள்ளத்திற்கு அமுதமாய் எழுச்சி தருகின்றது. வீழ் நீர் போல இப்பாடல்களும் தடை படாமல் குதித்துக் களித்துச் செருக்கி யோடுகின்றன. பல பனிநீர் வீழ்ச்சிகளாக விழுந்த பின் பெருகியோடும் சித்திர கங்கையைப்போல இப்பாடல்களும் பாய்ந்து சுழித்து இன்ப அலைகொழித்துச் செல்கின்றன. குற்றாலத்து மலை வழியே தவழ்ந்து வரும் மெல்லிய பூங்காற்றைப் போலவே இப்பாடல்களின் இசை யின்பமும் உள்ளத்தையும் உணர்வையும் குளிர்ச்செய்கின்றது. இப்பாடல்களில் இயற்கைப்பொருள் அழகோடு, அன்புருவாகிய இறைபழமையும் தரிசிக்கும் பேறு பெறுகின்றோம். இங்கே இயற்கை மணத்தோடு சிவமணமும் அபேதமாகக் கலந்து வீசுகின்றது. இயற்கை யின்பத்தோடு கவி யின்பமும் பக்தி யின்பமும் சங்கமமாகிப் பெருக்கெடுத்து வருகின்றன. இப்பாடல்கள் நவில்தொறும் நயம் கொழிக்கும் பாடல்களென்பதை வாசகர்கள்காதலாகிக்கசிந்து பாடிப்பாடி யுணர்தல் வேண்டும்.பண்ணழகு வாய்ந்த பழந்தமிழ்ப் பாக்களில் சம்பந்தர்பாடல்கள் இணை யில்லாதனவாய்த் தலைசிறந்து விளங்குகின்றன என்று ஆசிரியர் சுந்தரம் பிள்ளை கூறியது உயர்வு நவிற்சியன்றென்பதை அருந்தமிழுணர்ந்த அன்பர் அனைவரும்நன்கறிவர். பி.ஸ்ரீ.

---

# தேசபக்தனும் தேவபோகமும்.

(சிறு கதை.)

பி. ஸ்ரீ. ஆசாரியார்.

மூன்று என்பது ஒரு பரிசுத்தமான எண். மும் மூர்த்திகள்; மூன்று லோகங்கள். மூன்று உண்மைகள்; மூன்று நிலைகள்; மூன்று மணிகள்; அவ்வண்ணமே மூன்று வகையான தேசபக்தர்களு முண்டு. தேசிய மகாநாடு, மாகாண மகாநாடு, ஜில்லா மகாநாடு, தாலுகா மகாநாடு முதலான மகாநாடுகளுக்கு மாத்திரம் சென்று, பிரசங்க மேடைகளில் பெருமையாக ஏறி நின்று கம்பீரமாக ஆங்கிலத்திலோ, இந்தியிலோ, அடிமை மொழி யென்று புறக்கணிக்கப் பெறும் நந்தாய் மொழியிலோ சொற்பொழிவு செய்துவிட்டுத் தாய் நாட்டிற்குத் தாம் செய்யவேண்டிய கடமைகள் எல்லாம் இனிது முற்றுப் பெற்றன என்றுகருதி மகிழ்வோரும் தேசபக்தர்களே. ஆனால் சித்திரகுப்த நயினார் கணக்கில் இவர்கள் தீவிர தேசபக்தர்களாகக் குறிக்கப் பெறுகின்றார்களில்லை. கிராமங்களிலும் தெருக்களிலும் பகிரங்கமான சந்திகளிலும் சதுக்கங்களிலும் கூசாது நின்று பிர

சாரஞ் செய்வோர் தீவிர தேசபக்தரென்று கணக்கிடப் பெறுகின்றனர். ஆனால் நமது ஞானசேனனோ வாய்ச் சொல்வீரத்தோடு வாழ்க்கையிலும் வீரங்காட்டி நாட்டிற்காக மன்றாடிய சுத்தவீரனாக வாழ்ந்தான். சித்திரகுப்தனும் இவனை அதி தீவிர தேசபக்தனாகக் கணக்கிட்டுத் தன் எஜமானனாகிய தர்மராஜாவுக்குக் காண்பித்தான். தர்மராஜாவும் 'இவன் நம்மவன் அல்லன்; தேவலோகத்திற்கு உரியவன்' என்று தன் கணக்கனிடம் கூறினான்.

ஞானசேனன் இறந்ததும் அவனைக் காலதூதர் இந்திரலோகத்திற்குப் புஷ்பகம் என்னும் ஆகாயவிமானத்தில் வெகுவிமரிசையாக அழைத்துச் சென்றார்கள். அப்பொழுது ஆயிரம் கோடி இந்திரர்கள் அரசாண்ட பின், அவ்வரச பரம்பரையில் புதிய இந்திரன் ஒருவன் பட்டத்திற்கு வந்திருந்தான். புதிய அரசன் கற்பகச் சோலையில் நவரத்தினங்களா லிழைத்த சிங்காதனத்தில் அமர்ந்து கவலையின்றி அமிர்த பானம் செய்து கொண்டிருந்தான். அவனது வெள்ளை முகம் அமிதமான அமிர்தம் பருகியதால் செங்காயாகச் சிவந்திருந்தது. மந்திரி பிரதானிகள், சூழ நின்று இராஜ வாழ்த்துப்பாடி இன்புற்றிருந்தார்கள். தேவராஜன் ஞானசேனனுக்கு நல்வரவு கூறி ஒரு பளிங்குப் புட்டிலை (Bottle) நீட்டினான். அது சுரை அல்லது அமிர்தம் என்னும் ராஜ-மதுவால் நிறைந்து விளங்கியது. ஞானசேனன் நிலவுலகில் மதுவிலக்குப் பிரசாரம் செய்து வந்தவன். "வந்தே மாதரம்" என்று அம் தேச பக்தன் வந்தனஞ் செய்துவிட்டுத் தான் 'காபி' 'டீ' 'பிராந்தி' முதலிய பானங்களையுங்கூடப் பருகுவதில்லையென்று மார் தட்டிப்பேசினான்.

அச்சமயத்தில் தேவராஜனது உத்தியோகஸ்தர்களில் ஒருவன் ஞானசேனனை எச்சரித்தான். "வந்தே மாதரம் என்று வாய்விட்டுச்சொல்லாதே. இங்கு உனக்குச் சுயராஜ்யம் வந்துவிட வில்லை. தேவராஜாவுக்கு ஜே! என்று சொல்" என்று செவியில் கூறினான்.

ஞானசேனன்:— திலகமகாராஜாவுக்குஜே! ஐயோ! இங்கும் அதிகாரவர்க்கமா ஆட்சிபுரிகின்றது? தேவலோகத்திலும் சுதந்திரதேவிக்குஇடமில்லையா? இந்தியாவிற்கு இரட்டையாட்சியாவது வழங்கியிருக்கிறார்களே?

இந்திரன்:—(கனவு காண்பவனைப் போல விழித்து) திருமிகு ஞானசேனரே! இங்கே ஒரே ஆட்சிதான். அது தேவராஜாவின் ஏகபோகமான ஏகாதிபத்தியமே. விசுப் பலகையின் மீது வீற்றிரும். சிறிது அமிர்தம் அருந்தும். ஆட்சியைப் பற்றிய கவலைகளைத் தேவர்களுக்கே விடும். அது தேவர்களின் சுமை; ஜனங்கள் சுமையன்று.

ஞானசேனன்:—நான் சுராபானஞ் செய்வதே யில்லை. (அப்போது 'நீ அசுரனோ' என்று ஒரு மந்திரி கேட்டான்) இந்த இராஜ்யத்தில் என் கடமைகள் என்ன? உரிமைகளென்ன? பிறப்புரிமையான தன்னரசின்றி இங்கே நான் எப்படி வாழ்வது?

புதிய இந்திரன் புன்னகைபூத்தான். "உமக்கு உரிமையு மில்லை, கடமையுமில்லை. உழைப்பு மில்லை. இங்கே எல்லோரும் கனவான்கள்; உழைப்பின்றி உண்பவர்; தாகமின்றிக் குடிப்பவர்" என்று சொன்னான்.



ஞானசேனன்:—(நகைத்து) வாசிப்பதற்கு ஒரு சமாசாரப் பத்திரிகை வேண்டுமே; கிடைக்குமா?

இந்திரன்:— இங்கே பத்திரிகை அச்சிடுவதற்கு நாம் அனுமதிகொடுப்பதில்லை.

ஞானசேனன் பிரமித்துப் போனான். "நாகரிக லோகத்தைப் பத்திரிகை யுலகமென் றல்லவோ சொல்லுகிறார்கள். தேவலோகத்தில் நாகரிகம் மிகமிகக் குறைவாகவே யிருக்கிறது. 'பொன்நாடு' என்றபெயரால் ஒருதேசிய வாரப் பத்திரிகையாவது நடத்த வேண்டும்" என்று தனக்குள் தீர்மானித்தான்.

ஞானசேனன்: — பத்திரிகை யில்லாமல் ஜனங்களை எப்படிச் சீர்திருத்துவது? தேசிய சபைகளாவது இங்கே உண்டா?

இந்திரன்:—(கோபத்தாலும் மதுபானத்தாலும் சிவந்த கண்களுடன்) (அப்படிப்பட்ட இராஜநிந்தனைக்கூட்டங்கள் இங்கே யில்லை)

ஞானசேனன்:-(பொறுமையோடு) இளைஞர்களைப் பெருமக்களாக்கும் தேசியக்கல்விச் சாலைகளாவது குருகுலங்களாவது இருக்கின்றனவா?

இந்திரன்:—இந்நாட்டில் பக்திவிளை கழகங்களும்கல்விச்சாலைகளுமுண்டு. அவ்விடங்களில் ஆண்டான்—அடிமைத்திறமும் இராஜபக்தியும் இராஜவாழ்த்தும் இராஜகுல சரித்திரங்களும் போதிக்கப் பெறுகின்றன. இராஜநிந்தை தேவநிந்தை பொருத மனமுள்ள நன் மாணுக்கர்களே உயர்ந்த பரீட்சைகளில் தேறுவார்கள். உத்தியோகம் பெறுவார்கள்.

இவ்வாறு சொல்லி இந்திரன் ஞானசேனனை நோக்கி ஊர் சுற்றிப் பார்க்கும்படி ஏவினான். அவனுக்குக் கூட்டாளியாக ஒரு உத்தியோகஸ்தனையும் அனுப்பினான். ஞானசேனன் நாட்டு நிலைமைகளை நன்கு கவனித்தான். ஜனங்கள் தேவலோகத்தில் இந்திரனுக்கு அடிமைகளாயிருந்தார்கள்; அசுரர்களால் அடிக்கடி பீடிக்கப்பெற்றார்கள். எனினும் திருப்தியும், பொறுமையு முள்ளவர்களாகவே யிருந்தார்கள். உயர்ந்த உத்தியோகஸ்தர்களெல்லாம் தேவர்களாகவேயிருந்தார்கள். குமஸ்தா முதலான சிறு தெய்வங்களெல்லாம் அந்நாட்டுப் புரோகித ஜனங்களின் புதல்வர்களாகவே யிருந்தார்கள். ஏறக்குறைய பொதுஜனங்களெல்லோருமே தேவர்களால் தீண்டா வகுப்பினராக ஒதுக்கப் பெற்றிருந்தார்கள். எனினும் ஜனங்கள் தங்களுக்குள்ளும் உயர்வு தாழ்வு கற்பித்துக் கொண்டு ஒன்பதினாயிரம் ஜாதிகளாகப் பிரிந்திருந்தார்கள். ஜனத்தொகையில் ஐந்திலொரு பங்கு பார்க்கத் தகாத வகுப்பு. மத பேதங்கள் ஐயாயிரம் தான். ஆனால் தேவர்களெல்லோரும் ஜனங்களுக்குக் கடவுளர்களாகவே யிருந்தார்கள். அந்நாட்டார் காப்பி, டீ, விஸ்கி, முதலான பானங்களைக் காட்டிலும் பான உலகத்தின் போரான தேவாமிர்தத்தையே பெரிதும் விரும்பிப் பருகினார்கள்.

நாடெல்லாம் பார்த்துவிட்டு நமது தேசபக்தன் அழுதகண்ணும் சிந்திய மூக்குமாக மீண்டான். தென் இந்தியாவைக்காட்டிலும் தேவலோகம் பரிதாப நிலையிலிருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது.

தேவர்கோன் அரம்பையர்களோடு அமிர்தபானஞ் செய்துவிட்டு ஓர் அழகிய நீலமலைமீது களித்துக் குலாவி

ஆடிக்கொண்டிருந்தான். நாடு அசுரர் கலகத்தால் கலங்கி வருந்திக் கதறியது.

தேவராஜா ஞானசேனனை நோக்கி "அமிர்தபானஞ் செய்துவிட்டு நீயும் ஆடிப்பாடி அகமகிழ்ந்து இன்புறலாம்" என்று கட்டளையிட்டான்.

ஞானசேனன் 'மகாத்மாவுக்குஜே!' என்று கூவி விட்டு மௌனமாயிருந்தான். மண்ணுலக மாந்தரின் துயரங்களைப் போலவே விண்ணுற்ற மகாஜனங்களின் துயரமும் அவன் நெஞ்சைப் புண்ணாக்கியது. "நான் இங்கே சாந்தி பெற விரும்பவில்லை; தேவபோகத்தையும் விரும்பவில்லை. இந்த ஜனங்களின் பொறுமைக்கு இரங்குகிறேன். இவர்களுக்காகப் பிரசாரம்செய்து பத்திரிகை நடத்தி, இவர்களுக்காக இரவும் பகலும் உழைப்பேன்" என்று ஞானசேனன் சங்கற்பஞ் செய்துகொண்டான்.

இந்திரன்:— (ஞானசேனன் தோளில் கைபோட்டு) தோழா! இந்த மேனகையைப் பார், என்ன ஆட்டம்! திலோத்தமையைப் பார்! என்ன பாட்டு? கொஞ்சம் அமுதம் சாப்பிட்டு உறங்கு. உன் கவலைகள் மறைந்துவிடும். மனம் மகிழ்ச்சியடையும்; முகம் மலர்ச்சி பெற்றிலங்கும்." என்றான். உடனே ஞானசேனன் இராஜ சபையினின்றும் நீங்கினான். சிறு தொழிலாளர்சங்கம்ஒன்றுசொர்க்கத்தில் இரகசியமாக வேலைசெய்து வந்தது. இவன் அக்கூட்டத்தில் சேர்ந்துகொண்டு தேவபோகத்தை வெறுத்துவிடுதலைக்காக உழைக்கத் தொடங்கினான்.

---

## ஆன்றோர் அமுத மொழிகள்.

நாம் விரும்பினாலும் விரும்பா விட்டாலும், இந்தியாவின் கொள்கைகளும் சிந்தனைகளும் வெளி நாடுகளுக்குச் சென்றுகொண்டே யிருக்கின்றன; இங்ஙனம் சென்று சேர்ந்து பிறநாட்டுச் சமூகங்களின் இலக்கியங்களிலும் ஏறி விடுகின்றன. உலக முன்னேற்றத்தின் முழுத் தொகுதியிலும் இந்தியா அளிக்கின்ற பெருந்தனம் மிக்க மேன்மை வாய்ந்தது. —விவேகானந்தர்.

* * * *

உண்மையை நோக்கி நின்று ஒருவன் நான் அறிகின்றேன் என்று உறுதி கூறுகின்றான். அவன் அறிகின்றானில்லை. முற்றுமுணர்ந்ததாகக் கூறுவோன், மூல தனத்தை மூடி மூடிப் பேராசையோடுபொதிந்து முடிச்சுப் போடுந் தருணத்திலேயே அதனை நழுவ விடுகின்றான். 'நான் அறியேன்' என்று கையை விரிப்பவனுக்கோ, மூட்டையுமில்லை முடிச்சுமில்லை. இதுவே ஈசோபநிடதத்தின் சாராம்சமாகிய நற்பொருள். —ரவீந்திர நாத தாகூர்.

* * * *

மகாத்மா காந்தி ஒரு மகரிஷியேயாவர். நான் அறிந்த அளவில், அவர் செல்லும் நெறியே செந்நெறியாகும் என்று தீர்மானிக்கிறேன். அம்மனிதருடைய அபார சக்தியைப் பாருங்கள்! உண்மைப் பொருளே காந்தி வாயிலாக இன்று வெளியிடப் பெறுகின்றது. இப்பொருளுக்கு உரிமை வாய்ந்தவன் ஒருவன் அல்லன்; ஒரு காலத்தின ரல்லர்; ஒருநாட்டின ரல்லர்; ஒரு வகுப்பின ரல்லர். —துரியானந்தர்.

---

## அப்பர் அருள்மொழி.

*(From St. Appar.)*

### அருள் அழகு.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை யிணையடி நீழலே.

### *The Beauty of Grace*

The perfect Music born of the faultless Vina ;
The full Moon reigning over the evening sky ;
The soft Breeze blowing from the southern hills ;
The swelling early spring ;
The Lake that is hymned by swarming singing bees —
What are these but the beauties reflected from the Grace
Divine symbolised by the Feet of the Blessed Lord ?

### உயர்தர உழவு.

மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகில்
சிவகதி விளையுமன்றே.

### *Mental Gardening.*

Plough the soil with Truth ;
Sow the seed of right desire ;
Root out the weeds of falsehood ;
Water the garden with patience ;
Watch thyself and thy garden,
Hedging it round with self-rule.
Thus watching, simply wait on the straight path,
And of itself grows the sovereign Grace.

---

# பத்திரிகை ஆராய்ச்சி.

ஆஸ்திரேலியாவில் வெளியிடப்பெறும் ‘ஞான தூதன்’ என்னும் பத்திரிகையில் மெய்ச் சமயத்தின் பன்னிரண்டு இயல்புகள் பின் வருமாறு நுட்பமாகவும் தெளிவாகவும் விளக்கப் பெற்றிருக்கின்றன.

(க) கடவுள் எங்கும் நிறைந்த பரம்பொருள்; இப் பொருளகத்தே மனிதனாதிய பிராணிகள், பொருள்கள் எல்லாம் வாழ்கின்றன, இயங்குகின்றன, நிலை பெறுகின்றன.

(உ) மனித உருவில் பரமாத்மாவின் சக்தி ஆவேசிப்ப துண்டு. இத்தகைய தெய்விக ஆவேசம் அருளப் பெற்ற பெரியார் அவதார புருஷராகின்றனர். இவர்கள் தம் பொன்னுரைகளாலும் மாசிலா வாழ்க்கையாலும் மனிதகுல முன்னேற்றம் கருதித் தொண்டு பூண்டுழைக்கின்றனர். இவர்களால் பாவிகளும் பிழைத்துப் போகின்றனர். வேண்டுமென்ற ஆவலோடு செய்த பாவங்களினின்றும் பாவிகள் தப்புகின்றார்களில்லை; பாவ நெறிகள் சேராமலே அவர்கள் பிழைக்கும் பெருநெறி பிடித்துச் செல்கின்றனர்.

(ங) மரணம் வாழ்வை முற்றுப்பெறச் செய்வ தில்லை; கேவலம் நிலைமை மாறுதலே மரண மாகும்.

(ச) மனிதன் பொறுப்பு வாய்ந்தவன்; இம்மையில் விதைத்து மறுமையில் அறுக்கின்றான்.

(ரு) மனிதன் ஆன்மாவே யாவன். இன்றும் ஆன்மா; என்றும் ஆன்மா; ஊனுடம்பில் உறையும் போதும் ஆன்மாவே.

(சு) மரணத்தின் பின்னும்மனிதர் உயிரோடிருக்கின்றனர், உணர்வோடிருக்கின்றனர்—சும்மா உறங்கிச் சுகமுற்றுச் சாந்தி பெறுவதில்லை.

(எ) இறந்தவர்களென்று கருதப்பெறும் அன்பர்களோடு நாம் இன்றும் உரையாடி உறவாடி மகிழ்ந்து சோகத்தைப் போக்குதல் கூடும்.

(அ) உலகத்திலுள்ள மாந்தர்களுக்கெல்லாம் நடு நின்று ஒளிகாட்டும் பேரொளி யொன்றுண்டு. அதுவே இறையொளியாகும்.

(கூ) ஓர் அழகிய மலர் மெல்ல மெல்ல விரிவதுபோல, மனித—ஆன்மாவும் இம்மையிலும் மறுமையிலும் பரிமளம் வீசி மலர்கின்றது.

(க0) மறுமையிலும் நமக்குக் கடமைகளுண்டு, உரிமைகளுண்டு, உழைப்புண்டு, முன்னேற்றமுண்டு.

(கக) மெய்ச்சமயம் மரண பயத்தை அறவே வென்றொழித்தல் வேண்டும்.

(கஉ) அகங் குழைந்து பிரார்த்தனை செய்வதால் நாம் இறைவனோடு இசைந்து இன்புற்று வாழலாம்; மரண வாயிலைக் கடந்து மறைந்த நண்பர்களுக்கும் உதவி செய்யலாம்.

*  *

இங்கிலாந்தில் பிரசுரமாகும் ‘அக்கல்ட் ரிவியூ’ (The Occult Review)மாசிகையில், வில்லியம் லாப்டல் ஹேர் என்பார்,மகாத்மாகாந்தியடிகளின் ஞான ஆசிரியருள் ஒருவரான டால்ஸ்டாய் என்னும் உருஷிய ஞானியைப்பற்றி ஒருகுறிப்பு எழுதியுள்ளார். அதன் சாராம்சம் வருமாறு:—

நமக்குத் தீங்கிழைப்போர்க்கும் நாம் ஒரு போதும் தீங்கிழைத்தல் ஆகாது—என்பது டால்ஸ்டாயின் உபதேச ரத்தினங்களில் பேர் போனதாகும். இக் கொள்கையை முதல் முதல் உலகத்திற்கு அருளியவர் கிறிஸ்து மூர்த்தியேயென்று ருஷிய அறிஞர் கருதுகின்றார். எனினும் இத்தகைய கொள்கை பௌத்தர்களுக்கும் சீனர்களுக்கும் உரியதேயாகும் என்று டால்ஸ்டாயும் அங்கீகரிக்கிறார். தற்காலத்தில் இக்கொள்கையை மேலை நாடுகளில் முழங்கும்படி செய்தவர் டால்ஸ்டாய் என்பவரே யாதலால், இது டால்ஸ்டாயின் மதமென்று மேலைத் தேசத்தினரால் போற்றப் பெறுகின்றது. இது கிறிஸ்து பெருமான் காலத்திற்கு முன்னரே உலகில் உலவிய தோர் கொள்கையே யாகும். ஸாக்ரடீஸ் என்ற பழைய யவன முனிவர் இக் கொள்கையை வெளியிட்டு வந்ததாக ப்ளேடோ் கூறுகின்றார். அச்சம் என்பதை அறவே யொழித்து அன்பு நெறி நிற்பவர்களுக்கு மனிதனும் தீங்கு இழையான்; மிருகங்களும் தீங்கு செய்யாது விலகும் என்று யோக நூல்கள் கூறுகின்றன. பரிபூர்ண அன்பு பயம் அறியாது என்பது யோக மர்மம். ‘அஹிம்ஸை வழியே செல்; உனக்கு அபாயமில்லை’என்று யோகியர் உபதேசிக்கின்றனர். இக் கொள்கையைக் குறித்த சரித ஆராய்ச்சியை டால்ஸ்டாய் சரியாகச் செய்யவில்லை. பழிக்குப் பழி வாங்குதல் மக்களது சாதாரண தருமமா யிருந்த பண்டைப் பழங்காலத்தில் ஒரு பாபிலோனிய அரசன் பழிக்குப் பழி வாங்குவதற்கு ஒரு நியாயம் வகுத்தான். இதன்படி ஒரு கண்ணுக்கு ஒரு கண்ணையே வாங்கலாம்; ஒரு பல்லுக்கு மாறாக ஒரு பல்லைத்தான் பிடுங்கலாம்; எலும்புக்கு எலும்பைத்தான் முறிக்கலாம். இந்த நியமத்தை அனுசரித்தே மோசேயும் சட்டம் ஏற்படுத்தினான். கிறிஸ்து நாதர் இச் சட்டத்தைக் கண்டித்தார்; கொடுமை செய்வோருக்கும் இரங்கவேண்டுமென்று புதிதாக ஒரு விதி செய்தார். கிறிஸ்து பெருமான் ஸாக்ரடீஸ் என்ற பழைய ஆசிரியரின் கொள்கையைத் தழுவி ஒருவாறு தமது கொள்கையையும் அமைத்திருக்கலாம். இக்கொள்கை டால்ஸ்டாய் வாயிலாகத் தற்கால உலகினுக்கு ஒரு புது நியமமாக வருகிறது. உலகம் இதன் பயனை இப்போது நன் குணர்ந்து கொள்ளவில்லை; எனினும் எதிர்கால உலகம் இதனை எதிர் நோக்கி நிற்கின்றது.

மகாத்மா காந்தியடிகள் போதிக்கும் அஹிம்ஸா தர்மமும் டால்ஸ்டாயின் நீதி தர்மமும் ஒன்றே யாகும். இதனையே தமிழரின் பொது மறையாகிய திருக்குறள் “இன்னாசெய்தாரை ஒறுத்தல் அவர் நாண, நன்னயஞ் செய்துவிடல்” என்று அழகாக எடுத் தோதுகின்றது.



# சதங்கை யொலி.

## நாட்டுக் கல்வி.

பதினெட்டாவது நூற்றாண்டின் மத்திய காலம் வரையிலும் நம் நாடு கல்விப் பயிற்சி நிறைந்த நாடாகவே விளங்கியது. இந்துக்களும் ஜைன பௌத்தர்களும் ஆதிக்கம் பெற்றிருந்த பண்டை நாளில், நாளந்தா, தட்சசீலம், விக்கிரமசீலம் ஆதிய சர்வ கலாசாலைகள் வட நாட்டில் ஆயிரக்கணக்கான மாணாக்கர்களுக்கு அறிவுப் பொருளை வழங்கி வந்தன. கரிகாலன், இராஜ ராஜன் ஆதிய தமிழ் வேந்தரும் செந்தமிழ்த் துறையை வளமுறச் செய்தனர். அக்காலத்துக் கல்விப் பயிற்சியே பல பல காவியங்களாகவும் கலைகளாகவும் மலர்ந்து கனிந்து நமது இலக்கியப் பூந்தோட்டத்திற்கு இனிமையும் அழகும் அளிக்கின்றன. தமிழ் நாட்டில் கோயிலில்லாத ஊரில்லை; தமிழ்ச் சங்கம் அல்லது தமிழ்க் கலாசாலையில்லாத திருக்கோயிலுமில்லை. “மக்கள் துங்கம் உயர்ந்திடவளர்கெனக் கோயில்கள் சூழ்ந்ததும் இந்நாடே” என்று தேச பக்த ஆசுகவி பாடுகின்றார். தமிழ் மக்கள் பெருமை—தமிழகத்தின் பரிசுத்த நிலை—தமிழ் நாகரிகத்தின் வெற்றி—வளர்ந்தோங்கும் வண்ணம் கோயில்கள் எழுந்தன என்பது கவியுள்ளம்.

## தமிழர் பெருந்தனம்.

தமிழ் நாட்டுக் கோயில்களே தமிழர் பெருந்தனம். கோயில்களே நமது சமயச் சிறப்பு. கோயில்களே நமது சிற்பச் செல்வம். நமது இசைச் செல்வத்தைப் போற்றி வளர்த்ததும் கோயில். நமது அறிவுச் செல்வத்தை அழிய விடாது காத்து நின்றதும் கோயில். தமிழ் நாட்டுத் திருக் கோயில்கள் உலகத்திற்கே ஒரு புதுமையாகத் திகழ்கின்றன. பொன் வேய்ந்தும் மூலாம் பூசியும் கோயில்களை ஒளி பெறச் செய்த பேரரசர், தமிழ் மக்களது உள்ளத்தையும் ஞான ஒளி விளங்கும் பொற் கோயிலாகச் செய்ய முயன்றனர். தமிழ் நாட்டுப் பேரறிவாளர்களின் லட்சியங்களைப் போலவே கோபுரங்களும் வானுற வோங்கி நிமிர்கின்றன. தமிழர் நல்லறிவை—தமிழர் நாகரிக மாட்சியை—தமிழர் ஆன்ம வாழ்வை—பொன்னே போல் போற்றிய புண்ணியத் திருக்கோயில்களில்லாத ஊர்கள் ஊர்களல்ல; அவை 'அடவி காடே' என்று அப்ப மூர்த்திகள் அருளிச் செய்கின்றார்.

## கிராம வாழ்க்கை.

தமிழ் நாடு கோயில் சூழ்ந்த நாடாக விளங்கியது. தமிழ் நகரங்கள் கோயில்—நகரங்களாக விளங்கின. கோயில்களும் சோலைகளும் சூழ்ந்த நாடு நகரங்களில் தமிழர் கற்றமிழ் விளைத்து நாகரிகம் வளர்த்தனர். பெரும் போர்களாலும் படையெழுச்சிகளாலும் அரசாங்கங்களும் சிங்காதனங்களும் மேல் கீழாய்க் கீழ் மேலாய்ப் புரண்டுபோன காலங்களிலும், தமிழரது கிராம அமைப்பு அசையாது நின்றது. இத்தகைய கிராம அமைப்பின் ஓர் இன்றியமையாத அங்கமாகத் தென் பாண்டி நாட்டின் பல ஊர்களிலும் தமிழ்ச் சங்கங்கள் திகழ்ந்தோங்கின. கஅகங-ம் ஆண்டு, ஆங்கிலப் பாராளு மன்றத்தில் (British Parliament) ஸர் தாமஸ் மன்றோ என்பார் ஒவ்வோர் இந்திய கிராமத்திலும் கல்விச்சாலையிருந்ததாகச் சான்று பகர்ந்தார். 'இந்துக்களது உதாரகுண நலத்திற்கும் பெருமைக்கும் நிலைக்களமான கிராம அமைப்பு முறைகள் சுதேசிகளின் அறிவைப் பெருக்கியிருக்கின்றன' என்று கஅகச-ம் ஆண்டில் கிழக்கு இந்தியா கம்பெனியார் அறிவித்திருக்கிறார்கள். கஅகசு-ம் ஆண்டு தொடங்கி நமது கிராம அமைப்பு நிலைகுலைந்து வீழ்ச்சியுற்றது. அப்போது நாட்டுக்கல்வி முறைகளும் நசிக்கத்தொடங்கின.

## நாட்டுக் கல்வியின் நாசம்.

ககூஉக-ம் ஆண்டு ஆரம்பக் கல்வி கற்பவர் தொகை மொத்த ஜனத்தொகையில் நூற்றுக்கு இரண்டே முக்கால் பங்காகச் சுருங்கிவிட்டது. சுயராஜ்யப் பேறு பெற்ற ஜப்பானிலோ, கல்வித் தெய்வம் திங்களொரு வண்ணமும் ஆண்டு ஒரு திருமேனியுமாக அருள் நடம் புரிகின்றது. நமது அரசாங்கத்தாரின் இராணுவமே அரசியல் வருமானத்தின் பாதியை விழுங்கி விடுகின்றது. ஆதலால் அறிவுத் தெய்வம் இந்நாட்டில் ஆதரவின்றி அகம் சாம்பி நாணத்தால் தலை கவிழ்ந்து நிற்கின்றது. கிராமங்களாவது முன் போலத் தன்னரசு நாடுகள் (Little Republics) ஆதல் வேண்டும். அப்போது தான் ஒவ்வொரு குழந்தையும் தன் உரிமைச் செல்வமாகிய அறிவைப்பெறுதல் கூடும்.

## அறிவே சக்தி!

'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்பது தமிழர் கொள்கை. அதாவது கல்வியறிவால் உயர்ந்தவர்களது அபிப்பிராயங்களே உலகத்தின் அபிப்பிராயங்களாகும். இக்கருத்தினை யொட்டி, 'நித்திய வாழ்வு' (Immortality) என்னும் அமெரிக்கப்பத்திரிகையில் வில்.ஜெ.எர்வுட் என்பார் கல்விப் பயிற்சியைக் குறித்து ஒரு கட்டுரை எழுதியுள்ளார். இக் கட்டுரையில் அவர் 'முடியரசை, யொழித்துக் குடியரசை நிலை நிறுத்திய அமெரிக்காவிலும், உண்மையான சக்தி பொது ஜனங்களிடத்திலில்லை; தேர்ந்த நிபுணர்களான கல்விமான்களும் ஆராய்ச்சியாளர்களுமான சிலர் கையிலேயே அடங்கிக் கிடக்கின்றது' என்று கூறுகின்றார். பி. ஸ்ரீ.



உ

சிவமயம்.

# குமரன்

" தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார் " —பாரதி.

சதங்கை ச. | காரைக்குடி, குரோதன ௵ ஆனி ௴ | மணி ௫.

## தமிழ்

யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம் ;
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ ? சொல்லீர் !
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்.

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வள்ளுவன்போல், இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை,
வெறும் புகழ்ச்சியில்லை ;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம் ; ஒரு சொற் கேளீர் !
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர் !

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற்
பெயர்த்தல் வேண்டும் ;
இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ்மொழியில்
இயற்றல் வேண்டும் ;
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர்
மகிமை யில்லை ;
திறமான புலமை யெனில் வெளிநாட்டோர் அதை வணக்கஞ்
செய்தல் வேண்டும்.

# தமிழரசர் நீதி.

ரா. பி. சேதுப்பிள்ளை, பி. எ., பி. எல்.

இத்தமிழ் நாட்டில் நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலமாகச் சேர சோழ பாண்டியரென்னும் மூவேந்தரும் அரசு புரிந்தனரென்பது இந்திய வரலாற்றால் அறியப்படுகின்றது. அவ்வரசரது பெருமையும் அவர் ஆட்சியின் செம்மையும் பழந் தமிழ் நூல்களில் இலை மறை காய்போல் விளங்குகின்றன. அம்மன்னர் நீதியைக் கண்ணும் ஆவியுமாகப் போற்றினர்களென்று கூறுவது சிறிதும் மிகையாகாது. இவ்வுண்மை பெரிய புராணம், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய இலக்கியங்களால் இனிது அறியப்படும்.

பாண்டிய நாட்டை அரசாண்ட நெடுஞ்செழியனென்னும் மன்னவன் கோவலனைக் கள்வன் எனக் கருதி அவனைத் தன் காவலாளரால் கொன்றான். கோவலன் கொலையுண்டு இறந்த கொடுமையை அறிந்த கண்ணகி, தன் கணவன் குற்றமற்றவன் என்று நிறுவுமாறு மன்னவன் முன்னே சென்றாள். தெய்வக் கற்பினளாகிய கண்ணகியின் மெய்யில் படிந்திருந்த பொடியையும், கையில் அமைந்திருந்த சிலம்பையும், கண்ணினின்றும் பெருகிய கண்ணீரையும், விரிந்துகிடந்த கரிய கூந்தலையும் கண்ட காவலன் என்ன நேருமோ என்று ஏங்கினான். கண்ணகி தன் கணவன் குற்றமற்றவன் என்றும் அவனைக் கொல்லுமாறு ஆணை செய்த கொற்றவன் நீதி தவறினான் என்றும் நிறுவினாள். அப்போது அரச நீதி தவறிய தன்மையைப் பாண்டியன் அறிந்தான். அந்நிலையில் அரியாசனத்தின்மேல் விளங்கிய வெண்குடை தாழ்ந்தது; அரசன் கையில் அமைந்திருந்த செங்கோல் தளர்ந்தது; ஆவி சோரும் அரசன் "அந்தோ! ஒரு பொற்கொல்லன் சொல்லை நம்பி நீதி முறையினை மறந்த யானோ அரசன்? கோவலன் உயிரைக் கவர்ந்து கொண்ட கள்வன் நானே ஆயினேன். இது காறும் என் வழி முறையில் நிலைத்திருந்த அரச நீதி என் காலத்தில் தவறியது. எனது வாழ்நாள் இன்றோடு முடிந்தது" என்று மொழிந்தான். அப்படியே அரியாசனத்தினின்றும் மயங்கி விழுந்து மாண்டான். கூடல் நகரை அரசாண்ட மன்னவன் கூடாயினான் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

தாழ்ந்த குடையன் தளர்ந்த செங்கோலன்
பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்கும் தென்புலங் காவல்
என்முதல் பிழைத்தது கெடுகஎன் ஆயுளென
மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே. [அ

இவ்வாறு தன்னுயிரினும் நீதியை உயர்வாகக் கருதிய பாண்டிய மன்னனது பெரும்புகழ் தமிழ் நாடெங்கும் பரவிற்று. அவனது செங்கோன்மையை அயல் நாட்டரசரும் பலபடப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

தொல்லை வினையால் துயருழந்தாள்
[கண்ணின் நீர்



கொல்ல உயிர் கொடுத்த கோவேந்தன்
[வாழியரோ
வாழியரோ வாழி வருபுனல்நீர் வையை
சூழு மதுரையார் கோமான்றன்
[தொல் குலமே

என்று பாண்டிய மன்னனைத் தமிழகம் வாழ்த்தி வணங்கிற்று.

இன்னும் அரச நீதியைச் சோர்விலாது போற்றிய ஒரு சோழ மன்னன் வரலாறு மணிமேகலையில் விளங்குகின்றது. துறவற நெறியில் நின்ற மணிமேகலை என்னும் மாதை அரசிளங் குமரன் காதலித்தான். அம்மாது வேற்றுருக் கொள்ளும் வரம் பெற்றிருந்தமையால் அரச குமாரன் கையில் நின்றும் தப்பிப் பிழைக்கக் காயசண்டிகை என்னும் மற்றொரு மாதின் வடிவம் பூண்டு நின்றாள். அப்பொழுது காயசண்டிகையைத் தேடி அங்கு வந்த அவள் கணவன் தன் காதலியை அரசிளங் குமரன் கைப்பற்றக் கருதினான் என்று எண்ணி அவனைத் தன் கையிலிருந்த வாளால் எறிந்து கொன்றான். அரச குமாரன் இவ்வாறு கொலையுண்ட கொடுமையை அங்கிருந்த மாதவர் அரசனிடஞ் சென்று அறிவித்தார்கள். அரசன் நிகழ்ந்த செயலை முழுவதும் கேட்டு,

யான் செய்பால திளங்கோன் றன்னைச்
தான் செய்ததனால் தகவிலன் விஞ்சையன்
மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனில் இன்றாம்
மகனை முறை செய்த மன்னவன்
[வழியோர்
துயர் வினையாளன் தோன்றினன்
[என்பது
வேந்தர்தம் செவி யுறுவதன் முன்னம்
ஈங்கிவன் தன்னையும் ஈமத் தேற்றி
கணிகை மகளையும் காவல் செய்கென்ற
[னன்

'தவநெறியில்நின்ற மணிமேகலைக்குத் தவறிழைக்கக் கருதிய எனது மைந்தன் கொலையுண்டு இறந்தது முறையேயாகும். ஆயினும் காயசண்டிகையின் கணவன் எனக்கு ஓர் தீங்கு இழைத்து விட்டான். நான் செய்தற்குரிய செயலை அவன் செய்து முடித்தது முறையன்றாகும். தவறு செய்த மைந்தனை நானே என் கையால் கொன்று முறை செய்திருப்பேன். அப்பெருமை எனக்குக் கிடைத்திலதே என்று தான் ஏங்குகின்றேன்' என்று வருந்தினான்.

இன்னும் திருவாரூர் என்னும் திருப்பதியில் முறை திறம்பாது அரசாண்ட மன்னவன் ஓர் பசுவின் கன்றைத் தேர்க்காலில் கொன்ற தன் மைந்தன்மீது அத் தேர்க்காலைத் தானே செலுத்தி நீதி போற்றிய வரலாறு பெரிய புராணத்தில் பெரிதும் பாராட்டப்படுகின்றது.

"ஒரு மைந்தன் தன் குலத்துக்
குள்ளா னென்பதும் உணரான்
தருமந்தன் வழிச் செல்கை
கடனென்று தன் மைந்தன்
மருமந்தன் தேராழி உற
ஊர்ந்தான் மனு வேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோ
மற்று எளிதோதான்"

என்று குன்றைமுனி கூறுமாறு அம்மன்னவன் தன் மைந்தனென்றும் கருதாது, தன் குலத்தை வாழ்விக்க ஒரு மைந்தனே உள்ளானென்பதையும் உணராது, அறநெறி நிற்றலை அரசனது கடமை என்ற ஒன்றையே உணர்ந்து, அருமந்த மைந்தன் மேல் தானே தேர்க்காலைச் செலுத்தினான் என்றால், அவ்வரசனது நீதியின் பெருமையை அளவிட்டு உரைத்தலாகுமோ? இம் மன்னவன் இறை மாட்சி

Intentional duplicate exposure

தமிழகத்தில் ஓர் எடுத்துக் காட்டாய் நின்று நிலவிற்று. பாண்டியன் நெடுஞ்செழியன்முன்னே தன் கணவன் குற்றமற்றவனென்று வழக்குரைக்கச் சென்ற கண்ணகியின் கோலத்தைக்கண்ட காவலன் அம் மங்கையைப்பார்த்து "மனம் கலங்கி வந்து நிற்கும் மாதே! நீ யார்" என்றான். அதற்கு கண்ணகி "அரசே! துயரடைந்த ஓர் பசுவின் கண்ணினின்றும் பெருகிய கண்ணீரால் அதன் துயரை யறிந்து அத் துயரிழைத்த மைந்தன் மேல் தேர்க்காலைச் செலுத்திய நீதி மன்னன் அரசாண்ட புகார் நகரத்தில் நான் பிறந்தவள்" என்று கூறினாள். நீதி தவறிய நெடுஞ்செழியனிடம் அரச நீதியை எடுத்துரைப்பவள் போல, தன் நாட்டின் பெருமையை எடுத்துரைத்த கண்ணகியின் மனப்பான்மை கற்போர் கருத்தைக் கவர்வதாகும்.

"வாயின் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத்
[தான் தன்
அரும் பெறல் புதல்வனை ஆழியின்
[மடித்தோன்
பெரும் பெயர்ப் புகார் என் பதியே"

என்று கண்ணகி இறை முறை பிழைத்த மன்னனிடம் அரச நீதியை எடுத்துரைக்கும் பெருமை போற்றுதற்குரிய தாகும்.

அரசர் எத்துணை ஆர்வத்தோடு நீதியைப் போற்றினரோ, அவ்வாறே அமைச்சரும் நீதியைக் கண்ணும் ஆவியுமாகப் போற்றினரென்று அறியப்படுகின்றது. அமைச்சனே அரசனுக்குக் கண்ணாவான் என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் இனிது எடுத்து உரைத்தார். கண்ணிலான் நல்ல நெறியறிந்து நடத்தல் இயலாதவாறுபோல, நல்லமைச்சனில்லா மன்னவன் நன்னெறியில் செல்லுதல் பெரும்பாலும் இயலாது என்பது ஆசிரியர் கருத்தாகும். இத்தகைய அமைச்சர் நுண்ணறிவோடு நூலறிவும் அமைந்தவராய் அரசனிடம் நீதியை அஞ்சாது எடுத்துரைக்கும் வீரராய் விளங்கினரென்று அறியப்படுகின்றது.

"அளி கொன்று அறியானெனினும்
[உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்"

என்பது தமிழ் மறையாகும். அரசன் தானும் நீதியையறியானாய் அமைச்சர் சொல்லையும் ஏற்றுக்கொள்ளானாய் அருஞ்சினங் கொண்டாலும், உண்மையை அஞ்சாது எடுத்துரைத்தலே அமைச்சர் தொழிலாகும் என்னும் தமிழ் மறையின் கருத்தையே கம்பர் பெருமான்

தம்முயிர்க்கு உறுதி எண்ணார்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாது நின்றுரைக்கும் வீரர்

என்று விளங்க வைத்தார். தாம் எடுத்துரைக்கும் நீதியை அரசன் ஏற்றுக்கொள்ளானாய் வெகுண்டபோதும், அமைச்சர் சிறிதும் மனம் தளர்வுறாமல் தடுமாறாமல் அரசனது வெம்மையைப் பொறுத்து அஞ்சா நெஞ்சு படைத்த போர் வீரர் போன்று நீதியை விடாது எடுத்துரைக்கும் மனத் திண்மை வாய்ந்தவராய் விளங்கினார்கள்.

சோழ நாட்டின் தலை நகராகிய புகார் நகரத்தில் அமைந்திருந்த ஐம்பெருமன்றங்களில் சில அரசநீதியைப் பாதுகாத்தனவென்பது பழந்தமிழ் நூல்களால் அறியப்படுகின்றது. நீதி மன்றத்தில் பொய்ச்சான்று சொல்லிய பொய்யனைப் பூதசதுக்கத்தினின்றும் ஓர் பூதம் தோன்றி அறைந்து கொன்றது என்னும் உண்மை,

"பொய்க் கரியாளர் புறங் கூற்றாளர் என்
கைக் கொள் பாசத்து கைப்படுவோரென
காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூதசதுக்கம்"

என்னும் சிலப்பதிகார அடிகளால் இனிது விளங்கும். இன்னும் அரசன் ஒரோவழி நீதி தவற நேரினும், அதனை அவன் அறிந்து சீர் செய்தற்கு ஏற்ற சில தெய்வக்குறிப்புகள் தோன்றின என்று பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன. அரசனது செங்கோன்மை தவறினும் நீதி மன்றங்களில் நடுநிலை விலகினும், அதனைப்பாவை மன்றத்தில் தோன்றிய சில குறிகளால் அரசன் அறிந்து கொண்டானென்று தெரிகின்றது.

"அரசுகோல் கோடினும் அறங்கூற
[வையத்து
உரைநூல் கோடி ஒரு திறம் பற்றினும்
நாவொடு நவிலாது நவை நீர் உகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமும்"

புகார் நகரத்தில் அமைந்திருந்ததாக சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய சங்கநூல்கள் கூறுகின்றன. அரச நீதி தவறிய காலத்துப் பாவை மன்றத்திலமைந்திருந்த பாவையின் கண்களினின்று கண்ணீர் தாரை தாரையாய் வடியுமென்றும் அவ் அடையாளத்தை அரசன் அறிந்து நீதியை நேர்மை செய்தானென்றும் சிலப்பதிகாரம் கூறுகின்றது. இவ்வாறு இயல்பாகவே செந்நெறி சான்ற மனப்பான்மை வாய்ந்த தமிழ் மன்னர் அஞ்சா அறிவுடைய அமைச்சராலும் எஞ்சாத தெய்வ அருளாலும் நீதி தவறாது செங்கோல் செலுத்துவாராயினர்.



ஒரு நாட்டில் மாதவர் நோன்பும் மங்கையர் கற்பும் தலை சிறந்து திகழவேண்டுமாயின், அரசன் நீதிவழுவாநெறி முறையில் நிற்றல் அவசியம் என்பது தமிழ் அரசியலின் அடிப்படையான கொள்கையாகும். பாண்டிய நாட்டை அரசாண்ட ஒரு மன்னவன் தன் குடிகளின் நலத்தைத் தன்னலம்போல் போற்றிப் பாதுகாத்து வந்தான். அவன் நாட்டில் வாழ்ந்து வந்த அந்தணனொருவன் துறை முழுகித் தெய்வம் தொழுதற்காக வடதிசை நோக்கிப் புறப்படும் பொழுது தனியாயிருந்த தன் மனைவியை நோக்கி "காதலி! நான் இன்னும் சில காலத்தில் மீண்டு வருவேன். நமது காவலன் கண்ணைக் காக்கின்ற இமைபோல் உன்னைக் காப்பான். ஆதலால் தனியேயிருத்தற்கு நீ அஞ்சவேண்டாம்" என்று ஆறுதல் கூறிச் சென்றான். இதனை அறிந்த அரசன் தனியாயிருந்த அப்பெண்மணிக்கு எவ்வகைத் தீங்கும் அணுகாதவாறு இரவும் பகலும் பாதுகாத்து வந்தான். ஒவ்வொரு இரவிலும் மாறு கோலம் பூண்டு மன்னவன் நகர் சோதனைக்கு வெளிப்படும் பொழுது அந்தணன் மனை அருகே சென்று அதனை மிகக் கண்ணும் கருத்துமாய் கவனித்து வந்தான். இவ்வாறிருக்கையில் ஒரு நாள் வடதிசைச் சென்ற அந்தணன் திரும்பி வந்து அங்கு தான்கண்ட நாட்டின் பெருமையையும் நகரங்களின் வளப்பையும் தன் காதலியிடம் வெகு நேரமாக எடுத்துரைத்தான். அப்பொழுது வழக்கம்போல் நகர்சோதனைக்குச் சென்ற அரசன் ஆடவனில்லாத வீட்டில் ஆணரவம் கேட்பதை அறிந்து அடைத்திருந்த வீட்டினருகே சென்றான். பின்னும் தெளிவாக ஆண் குரலைக்கேட்டான். தன் காவலில் அமைந்த மாதின் கற்பினுக்கு

யாதும் குறைவரல் ஆகாதே என்று கருதி அவ்வீட்டின் கதவைத் தட்டினன். வீட்டிற்குள்ளே யிருந்த அந்தணன் விரைந்தெழுந்து வந்து தன் காதலியின் கற்பு நிலையையுற்று வெளியே நின்ற அரசனை யாரென்று வினவினன். அக்குரல் அவ்வீட்டிற்குரிய அந்தணன் குரலே என்று அறிந்த அரசன் தான் ஆராயாது தவறிழைத்த தன்மையை எண்ணி வருந்தி அந்தணன் தன்னை ஐயுறு வண்ணம் அவ்வீட்டிற்கு அடுத்திருந்த பல வீட்டுக்கதவுகளையும் தட்டிக்கொண்டே அரண்மனை சென்றான். மறுநாள் அரண்மனையில் முந்திய நாள் இரவில் நிகழ்ந்த செயலை அறிவிப்பதற்காக அந்தணன் முதலியோர் வந்து சேர்ந்தார்கள். அரசனும் தன் அமைச்சரை அழைத்து நள்ளிரவில் தாளிட்ட கதவைத் தட்டிய கள்வனுக்கு யாது தண்டம் விதிக்கலாமென்று வினவினன். அதற்கு அவ்வமைச்சர்கள் 'இது காறும் நமது நாட்டில் இத்தகைய தவறு நடந்ததில்லை; ஆகலால் அதனைச் செய்தவன் யாவனே யாயினும் கதவைத்தட்டிய கையைக்கொய்து முறை செய்தலே தக்கதாகு' மென்று மொழிந்தார்கள். அரசனும் அப்படியே செய்வேனென்று சொல்லி உடைவாளை உருவித் தன் கையை வெட்டி எறிந்தான். இதைக் கண்ட அமைச்சரும் அந்தணரும் யாதும் அறியாது திகைத்து நின்றார்கள். அரசன் முந்திய இரவில் தான் அந்தணன் மனையைப்பாதுகாக்கச்சென்றதையும் அங்கு ஆண்குரல் கேட்டு ஐயுற்றதையும் அப்பால் உண்மையை உணருமாறு அந்தணன் மனைக்கதவைத்தட்டியதையும் அது கேட்டு அந்தணன் ஐயுறலாகாதே என்று அருகிலிருந்த மனைக்கதவுகளையும் தட்டிச் சென்றதையும் விரிவாக எடுத்துரைத்துத்தான் ஒரு தவறும் நினையாதது உண்மையே யாயினும், அவ்வந்தணன் வீட்டில் நின்று எழுந்த குரல் அம்மனைக் குரியவன் குரலோ அன்றோ என்று ஆராயாது அவசரமாய் முன் சென்று கதவைத் தட்டிய கையினைக் கொய்தது தக்கதே ஆகுமென்று கூறினன். இதைக் கேட்ட அந்தணன் முதலியோர் அரசனது நீதி முறையினை மனமாரப் புகழ்ந்து வாயார வாழ்த்தினார்கள். தவறொன்றும் செய்யாத மன்னவன் கை அறுபட்டதற்கு மனம் நொந்து பொன்னால் ஓர் கை செய்து அதனை அரசன் கையில் சேர்த்தார்கள். அரசனும் ஆர்வத்தோடு அப்பொற்கையை ஏற்று அன்றுமுதல் பொற்கைப் பாண்டியன் என்னும் புதுப் பெயர் புனைந்து பல்லாண்டு காலம் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தான் என்று பழைய வரலாறு கூறுகின்றது. இதனை

வச்சிரத் தடக்கை அமரர் கோமான்
உச்சிப்பொன் முடி ஒளிவளையுடைத்தகை
குறைத்த செங்கோல் குறையாகொற்றத்து
இறைக்குடிப் பிறந்தோர்க்கு இழுக்க மின் [மை

என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இவ்வரலாறு "மன்னவன் முட்டாது முறை செய்யுந் தன்மையை மகனை முறை செய்தான்கண்ணும் தன் கை குறைத்தான்கண்ணும் காண்க" என்று பரிமேலழகர் கூறுகின்றமையானும் இனிது விளங்கும்.

இனி, கம்பர் பெருமான் எழுதிய கவி நயம் பொருந்திய பெரு நூலில் ஒப்புயர் வற்று ஒளிரும் பரதன் என்னும் பெருந்தகையை



தெள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் [பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் [இவ்விருந்த
வள்ளலையே அனையானைக் கேகயர் கோன் [மகள் பயந்தாள்.

என்று ஆசிரியர் கோமுனி வாயிலாகக் கூறுகின்றார். கங்குகரை யிறந்து தடுத்தற்கரிதாய்ப் புறப்பட்டு வருகின்ற நீதியாகிய பெருவெள்ளம் பாய்கின்ற பள்ளம்போல விளங்குகின்ற பரதன் என்று ஆசிரியரமைத்த சொல்நயமும் பொருள் நயமும் போற்றுதற்கு உரியதாகும். முறைதவறி மூத்தோன் இருக்க இளையோனுக்கு அரசளித்த ஆதிமன்னனது அருளை நொந்து அவனிகாவல் அண்ணனதாக்கி அவன் பாதுகையா லுலகாண்ட பரதனை நீதிவெள்ளம் பாயும் பள்ளம் என்று கம்பர்கருதியது பாராட்டுதற்குரியதாகும்.

இவ்வாறு நீதிபோற்றிய தமிழ்அரசர் மன்னுயிரை யெல்லாம் தம்முயிர் போல் கருதிய தன்மையால் அரசாங்கத்தை ஒரு பெரும் பாரமாகவே கருதினர்கள். அரசனது பொறுப்பை யறிந்த ஆங்கிலக் கவிஞர்ஒருவர்'முடியுடை மன்னற்கு முற்றுங் கவலையே யாம்' 'Uneasy lies the head that wears the crown' என்று மொழிந்தார். இக் கருத்தையே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ் நாட்டை ஆண்ட சேரன் செங்குட்டுவன்,

"மழைவளங் காப்பின் வான்பேரச்சம்
பிழையுயி ரெய்தில் பெரும்பேரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பமல்லது தொழுதக வில்லென"

கூறி வருந்தினன். இக்கருத்தையே கம்பர் பெருமான் தசரத மன்னன் வாயிலாக வெளியிடுகின்றார். தனது அருமந்த மைந்தனை இராமனுக்கு முடிசூட்டித் தான் தவஞ்செயக் கருதிய தசரதன்,

மைந்தரை யின்மையில்
வரம்பில் காலமும்
நொந்தனன் இராமன் என்
நோவை நீக்குவான்
வந்தனன்; இனியவன் வருந்த
யான் பிழைத்து
உய்ந்தனன் போவதோர்
உறுதி எண்ணினேன்.

என்று தன் அமைச்சரிடம் கூறினன். "எண்ணிறந்தகாலம்மக்கட்பேறின்றி வருந்தி, வாடினேன்; அவ்வருத்தத்தையகற்றுமாறு இராமன்எனது திருமகனாய்ப் பிறந்தான். இனி இவ்வரசாங்கபாரத்தை அவன் மேலேற்றி என் உயிர்க்கு உறுதி பயக்கும் தவநெறியில் செல்ல எண்ணியுள்ளேன்" என்று தசரதன் கூறியமொழிகளில் அரசாங்கப் பொறுப்பு இனிது விளங்குகின்றது.

தமிழ் அரசாங்கத்தில் நீதி எச்சாதியினர்க்கும் எம்மதத்தினர்க்கும் பொதுவாய் அமைந்திருந்த தென்பது அறிந்து போற்றுதற் குரியதாகும். ஏனைய நாட்டினர் ஒரு குலத்திற்கு ஒரு நீதியாகவும் ஒருமதத்திற்கு ஒரு நீதியாகவும் நீதி முறையை யமைத்து அரசாண்ட காலத்து, இத்தமிழ் நாட்டில் நீதி யாவர்க்கும் பொது என்ற கொள்கை நிலைத்திருந்த தென்றால், இந் நாட்டின் நாகரிகத்தை விரித் துரைத்தலும் வேண்டுமோ? தவறிழைத்தவன் எக்குடியில் பிறந்தோனாயினும் எக்குலத்தைச் சார்ந்தோனாயினும், குற்றத்திற்கு ஏற்ற தண்டனை விதிப்பதல்லால், குலத்தைக் கருதி தண்டனை விதிக்கும் வழக்கம் தமிழ் நாட்டில் எக்கா

லத்தும் இல்லே. செல்வனுயினும் வறி ஞனுயினும் நீதி யாலயத்தில் யாதும் வேற்றுமை யில்லே. நீதி யென்னும் மாது தன் கண்களை இறுகப் பொத்திக்கொண்டு கையில் சமன் செய்து சீர்தூக்கும் துலாக்கோலைத் தாங்கி, குற்றத்திற்கு உரிய தண்டம் விதித்ததாகவே தமிழ் நூல்களால் அறியப் படுகின்றது. மேற்கூறிய தமிழ் அரசர்கள் தம் உயிரென்றும் பாராது தம் மைந்தர் உயிரென்றும் பாராது நீதி செலுத்திய முறையே இவ்வுண்மைக்குச் சிறந்த சான்ருகும். இத்தகைய தமிழ் நீதி தெய்வப் புலமைத்திருவள்ளுவனுர் இயற்றிய திருக்குறளில் இலங்கித் தோன்றுகின்றது. எச்சாதியினர்க்கும் எம்மதத்தினர்க்கும் எந்நாட்டினர்க்கும் பொதுவாய் அரசநீதிகள் அமைந்திருத்தலாலேயே திருவள்ளுவனுரது திருக்குறளை உலகோரனைவரும் உயரிய நூலாகப் போற்றுகின்ருர்கள். ஆரியமொழியில் அரசநீதி கூறுகின்ற மநுநீதி முதலிய நீதி நூல்களையும் தமிழ் மொழியில் நீதி கூறும் திருக்குறள் முதலிய நூல்களையும் ஒப்பிட்டு நோக்கிய மனேன்மணீய ஆசிரியர்

> "வள்ளுவர்செய் திருக்குறளை
> மறுவற நன்குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மனுவாதி
> ஒருகுலத்துக் கொருநீதி

என்று உண்மையை உறுதியாகக் கூறினர். ஆங்கில நாட்டில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் மத்திய காலம் வரை வெவ்வேறு சமயத்தார்க்கு வெவ்வேறு நீதிமுறை வழங்கிற்று. இப்பொழுதும் இந்திய அரசாங்கத்தில் நிறத்தாலும் பிறப்பாலும் நீதி மன்றங்களில் வேற்றுமைகள் விளங்கக்காண்கின்ரும். இவ்வாறு நாகரிகமுற்ற நாட்டின ரென்று கருதப்படுகின்ற ஆங்கிலேயராலும் இருபதாம் நூற்றுண்டில் அகற்ற இயலாத குறுகிய நோக்கத்தைத் தமிழ்மக்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அரசியல் முறையினின்றும் அகற்றிவிட்டாரென்ருல், அவரது பரந்த நோக்கமும் சிறந்த மனநேர்மையும் சாலவும் போற்றுதற் குரியன வென்பதில் ஐயமொன் றுண்டோ?

## ஒழுக்கம்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

(முன் தொடர்ச்சி.)

புறந் தூய்மை நீரானமையு மென்று கூறிய நாயனுரே "அகத்தூய்மை வாய்மையா லமையும்" என்று கூறி யுள்ளார். வாய்மையின் சிறப்பைத் திருவள்ளுவரின் திருக்குறளிற் காண்க. அக வொழுக்கத்துக்கு வாய்மை இன்றியமையாதது. அரிச்சந்திரன் வரலாறும் மகாத்மா காந்தியின் வரலாறும் வாய்மைக்கு இலக்கியமாக விளங்குகின்றன. இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நமது நாட்டைச் சுற்றிப் பார்த்துச் சென்ற கிரீஸ் தேசத்துச் சரித்திரக்காரன் ஒருவன் "இந்தியாவில் பொய் பேசும் ஓர் ஆண் மகனையுங் கண்டேனில்லே; கற்



பின் ஒழுக்கக் கல்வி எங்கே சென்றது? யாண்டுற்றது. நினது ஒழுக்கக் கல்வி இந்நாளில் அருகி யுள்ளமையால் திருவள்ளுவர் இளங்கோவடிகள் சாத்தனுர் திருத்தக்க தேவர் தெய்வச் சேக்கிழார் கல்வியிற் பெரிய கம்பன் தோன்றுவதில்லே. ஆங்கிலம் பயில வேண்டா மென்று நான் சொல்ல வரவில்லே. ஆங்கிலம் அறிவு வளர்ச்சிக்குப் பயில வேண்டு மென்பது எனது கருத்து. ஷேக்ஸ்பியர் காண்ட் முதலியோர் அரிய உரைகளைக் காட்டித் தீயொழுக்கத்தை வளர்க்கும் தற்காலப் பெருங் கல்லூரிகளைப் பார்க்கிலும் ஆத்திசூடி போதிக்கும் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் எததுணையோ மடங்கு சிறந்தன என்று அஞ்சாது சொல்லுவேன். "அறஞ்செய விரும்பு, ஆறுவது சினம்" என வரூஉம் அற உரைகளாம் விதைகளை இளங் குழந்தைகளின் உள்ளமெனும் நிலத்தில் விதைத்தல் நல்லதா? "இராமன் பூனையை அடித்தான்; கிருஷ்ணன் கண்ணுடியை உடைத்தான்" என்று அடித்தல் உடைத்தல் என்னும் தீயொழுக்கக் கருத்துக்களை இளங் குழந்தைகள் உள்ளத்தில் பதியச் செய்வது நல்லதா? பரலோக ராஜ்யத்துக்கு ஒப்பான பிள்ளைகள் உள்ளத்தில் நச்சு விதையை யா விதைப்பது? நமது நாட்டில் இப்பொழுது பெருகிவரும் ஜில்லா போர்டு தாலூகா போர்டு பாடசாலைகளிலும் பழய ஒழுக்க நூல்கள் போதிக்கப்படுத லில்லே. சதகங்களை இந்நாளில் படிப்போர் உளரோ? எவ்வளவு அறவுரைகள் ஒழுக்க முறைகள் சதகங்களில் இருக்கின்றன? அவைகளைத் தொடுவோரைக் காணேம். நாட்டுக் கல்விக்கென ஏற்பட்ட நாட்டுக் கல்லூரிகளிலும் சதகங்கள் போதிக்கப்படுவதில்லே. நாட்டுக் கல்லூரிகளிலுள்ள போதகாசிரியர்களும் தற்காலக் கல்வி பயின்றவர்களே. அவர்கள் சதகப் பெயர்களைக் கேளாதவரல்லரோ? அவரென் செய்வார்? நமது நாட்டு அற ஒழுக்கங்களையும் மேல் நாட்டுச் சுகாதார முறைகளையும் ஒன்று படுத்தி இக்கால வாழ்வுக்கேற்ற ஒழுக்கக் கல்வி ஊட்டத்தக்க பாடசாலைகள் பல காணப்படல் வேண்டும். அப்பாடசாலைகள் ஈனும் மாணுக்கர்கள் வயதடைந்து சமூக சேவையில் ஈடுபட்டு அரசாட்சி நடத்து வாராயின் குடும்பமும் சமூகமும் அரசும் பிறவும் எல்லாம் ஒழுக்கம் ஒழுக்க மயமாக அல்லவோ மிளிரும். தற்போது மேல்நாடு போரில் அறிவைச் செலுத்துகிறது. கீழ்நாடு உணர்ச்சியின்றிக்கிடக்கிறது. இதனுல் மக்கள் கடவுள் பிள்ளேகள் என்பதை மறந்து அன்பொழுக்கந் துறந்து ஜாதிச் சண்டை சமயச்சண்டை தேசச் சண்டை முதலிய கயமைத்துறைகளி லிறங்கி விலங்கு வாழ்வு நடத்தி வருகிருர்கள். இந்நாளில் உலகைத் திருத்தப் பல காந்தியடிகள் தேவை. உலகில் ஒழுக்க நெறி பரவினுல் ஜாதிமத தேச பாஷை—சண்டைகள் ஒழிந்து எல்லாரும் ஒழுக்க ஜாதியா ரென ஒரு ஜாதியா ராவர். அச்சாதியை ஆண்டவன் உலகுக்கு அருள்வானுக. இவ்வுரைகளோடு எனது புல்லிய சொற்பொழிவை நிறுத்திக் கொள்கிறேன். குற்றங் குறைகளுளவேல் பொறுத்தருள்க.

# இளங்கோவடிகள்.

அ. கிருஷ்ணசாமி நாயுடு.

## க. தொடக்கம்.

"யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவர் போல்,
இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை: உண்மை : வெறும்
புகழ்ச்சியில்லை"

என்ற பாரதியாரினும் யாரதி தம் சொல்லவல்லார்? உளங்கொண்ட இளங்கோவடிகளுடன், ஒருங்கே வைத்தெண்ணப் பெற்ற கம்பநாடரும் திருவள்ளுவனுரும், தமிழ் நாட்டில் தலைமைப் புலவராவர். திருவள்ளுவனுர் உள்ளத்தெழுந்த தெள்ளுபுகழ்த் திருக்குறளைப் பற்றிச் செப்பல்வேண்டுமோ? பாரகாவியங்களைத் தமிழில் யாத்த தம்பரும், இளங்கோவும், திருவள்ளுவனுரின் இரண்டு திருக்கரங்களேயாவர். எங்கிலத்து நன்னுவலரும், பொன்னேபோல் பன்னும் செந்நாப் புலவர் திருவள்ளுவனுரெனின், அவர் தம் தெய்வச் சிறப்பைச் சொல்லவேண்டுவதின்று. பண்டைத் தமிழ்மொழியில் பருத்த காவியங்களைப் பாடின பாவலர் பலர்; அவருள், சிந்தாமணி யன்ன நந்தாக் காப்பியங்களைத் தந்தோர் சிலர்; அவருள்ளும், இம்பர் புகழும் இனத் தமிழ்வாணர் இருவர். இவரியற்றியன இராமாவதாரம், சிலப்பதிகாரம் என்பன. இவ்விரண்டும் சீரிய செந்தமிழ்க் காப்பியங்களாகக் கொண்டாடப்பெறுகின்றன. இவ்விரு காப்பியக் கதைத் தலைவர்களின் தன்மையைப் பற்றியேனும், சொன்னயம் பொருணயங்களின் சுவைகளைப்பற்றியேனும், இதுகாலை ஒன்றும் உரைக்கிறோம் இல்லை. இவ்விருகாப்பியங்களையும் இயற்றுதற்கு வாய்த்த தருணத்தின் இயல்பினைப் பற்றியே சில இயம்புவோம்.

இராமாவதாரக்கதை கம்பர் காலத்தில் நிகழ்ந்த தன்று. கதைகள் நிகழ்ந்த பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே, அவற்றினை, ஒருதுறைப்படுத்திக் கம்பர் கழறினர். அதுவும், தம் காலத்திற்குனே வழக்காறற்ற வடமொழியினின்றே, வழக்காறமைந்த தமிழ்மொழியில் சாற்றலாயினர். சுருங்கக்கூறின், பல்வேறு வகைத்தாய—வடமொழி இராமாயணத்தாய் மாருக்கு, கம்பராமாயணக் கட்டிளந் தமிழ்க்கன்னி ஒருவளே பிறந்தனள். சிலப்பதிக்காரக்கதை நிகழ்ந்த காலமும், இளங்கோவடிகள் காலமும் ஒன்றே. அக்கதை வரலாற்றின் பிற்பகுதியினைத் தாமே கண்ணுரக் கண்டனர்; முற்பகுதியினைத் தன்னுழையிருந்த தண்டமிழ்ச் சாத்தன் சாற்றத்தாமே காதாரக்கேட்டனர். தாய்நாட்டில் நிகழ்ந்த சரித்திரத்தைத் தாய்மொழியில் முதன்முதல் மொழியும் பேறு பெற்றவர் இளங்கோவடிகள். சுருங்கக்கூறின், ஒருவகைத்தாய தமிழ்த்தாயின் திருவயிற்றுதித்த தனிக்குழவியே சிலப்பதிகாரச்செயாகும். இராமாவதாரத்தின் இய



பிழந்த ஒரு பெண் மகளையுங் கண்டேனில்லை." என்று கூறி யிருக்கிறான். நமது நாட்டில் வாய்மை பண்டை நாளில் ஒவ்வோர் இல்லிலும் வளர்ந்து வந்தது. அவ்வாய்மைக்கு உறையுளா யிலங்கிய நமது அரிய தெய்விக நாடு இற்றைஞான்று எந்நிலை யெய்தி யிருக்கிறது? இதற்கு ஆட்சி முறையும் தற்காலக் கல்வி முறையும் பிறநாட்டு வழக்க ஒழுக்கங்களும் இவை போன்ற பிறவுமே காரணம். நகர பரிபாலனசங்கத் தேர்தல், சட்டசபைத் தேர்தல் முதலிய தேர்தல் காலங்களில் நம்மக்கள் எப்படி வாய்மை காத்து வருகிறார் என்பதைக் கவனித்தால், நமது நாட்டின் தற்கால நிலை இனிது விளங்கும்! வாய்மையின்றி அகவொழுக்கங் காத்தல் அரிது.

அக வொழுக்கத்துக்கு இன்றியமையாதது மற்றொன்றுளது. அஃது எது? அதுவே இல்லற மென்னும் நல்லறம். ஒருவன் ஒருத்தியோடு கூடி இல்லறம் நடத்தா தொழிவனேல், அவன் இறக்குமட்டும் ஆ! ஆ! எத்துணைத் தீயொழுக்கங்கட்கு ஆளாகிறான். அந்தோ! அப்பாவி உலகிடை யேன் பிறந்தான்? மக்களை நல்வழிப் படுத்த அறநெறி அறிவுறுத்தப் புறப்படும் சில நல்ல சந்யாசிகள் போக ஏனையோரெல்லாம் மனை யறத்தை நடத்துங் கடப்பாடுடையராதல் வேண்டும். இல்லையேல் உலகம் தீயொழுக்கத்திற்கு உறைவிட மாகும்.

அகப்புற வொழுக்க முறைகளை நெறி நின்று கடைப்பிடித் தொழுகின் அவ்விரண்டுஞ் சேர்ந்த பயனுக அன்பொழுக்கம் என்னும் பேறவொழுக்க உணர்வு அரும்பும். அவ்வுணர்வே மனித வாழ்வில் முடிவாக வேண்டற்பாலது. அதற்கு அடிப்படையாகவுள்ள அகப்புற வொழுக்க முறைகளை அலட்சியம் செய்யாது ஓம்புதல் வேண்டும், வேண்டும் என்று பன்முறை சொல்கிறேன். அன்பொழுக்க முடைய ஒருவன் தன்னைப் போல பிறரையும் நேசிக்கிறான். அவ்வொழுக்கம் இல்லா வொருவன் ஜாதி, சமயம், தேசம், பாஷை முதலிய பேதங்களைக்கருதி, காய்ந்து எரியும் உள்ளம் உடையவனுய் வாழ்வதைக் காண்கிறோம். அவன் உய்யும் நாள் எந்நாளோ? அன்பொழுக்கம் உடைய ஒருவன் தன்னைப்போலப் பிறரையும் ஒழுக்க முறைகளைக் கடைப்பிடிக்குமாறு பல வழியிலும் முயன்று வரல் வேண்டும். ஒரு பதியில் ஒருவன் ஒழுக்க முடையவனய் வாழ்ந்து ஏனையோர் அவ்வொழுக்க மின்றி வாழ்வாராயின், அன்னர் தீய ஒழுக்கம் நல்லொழுக்க முடையான் அன்பிற்கு அடிக்கடி இடையூறு நிகழ்த்திக்கொண்டே யிருக்கும். ஆதலால் நல்லொழுக்க முடையான் பிறரையும் அவ்வொழுக்க வழியில் திருப்பி ஆள ஒல்லும் வகையாதல் தொண்டு செய்தல் வேண்டும். பெண் ஒழுக்க முடையளாயிருந்து ஆண் தீயொழுக்க முடையனு யிருப்பின், அவர் சேர்ந்து வாழும் குடும்பத்தில் இன்பமேது? ஆண் பெண் ஆகிய இருபாலாரும் ஒழுக்க முடையாயிருத்தல் வேண்டும். ஒழுக்க முடைய தந்தை மகனை ஒழுக்க முறையில் நிறுத்தி வளர்த்தல் வேண்டும். அவ்வாறே உலகில் ஒழுக்கத்தில் உயர்ந்தோர் ஒழுக்கத்தில் உயராதிருக்கும் கூட்டத்தாரை ஒழுக்க முடையாராக்க முயலாது வாளா கிடப்பாராயின், தீயொழுக்க முடையா ராற்றும் பாவங்களை

ல்லாம் நல்லொழுக்க.முடைய உத்தமரையே வந்து அடர்க்கும். நல்லொழுக்க முடையான் தன் கடனைப் பிறர்க்கு ஆற்றாத காரணமே தீயொழுக்க நிகழ்ச்சிக்கு வித்தாயிருக்கிறது. உலகில் தீமைக்குக் காரணர் தீயர் என்று சொல்வதை நான் ஏற்றுக்கொள்ளேன். நல்லோர் எனச்சொல்லப்படுவோர் தீயோரை நல்வழியில் திருத்த அருள்தொண்டு ஆற்றுதொழிவதே தீமைப் பெருக்கிற்குக் காரணம். ஆதலால் ஒழுக்க முடையான் பிறரையும் ஒழுக்க முடையாராக்க முயல்வது ஆண்டவன் பணி செய்வதாகும். தான் மட்டும் ஒழுக்கத்தை ஓம்ப எண்ணுகிறவன் எண்ணம் பயன்தாரா தொழியும். பலர் தீயொழுக்கம் ஒருவன் நல்லொழுக்கத்தை விழுங்கிவிடு மல்ரே?

கல்வி உயர்ந்தது என்று சொல்லப்படுகிறது. ஆசையை ஒட்டி ஒழுக்கத்தைக் குலைக்க வல்ல கல்வியும் உலகில் இல்லாமலில்லை. கல்வி கல்வியென்று தீயொழுக்கக் கல்வியைப் பயில்வது குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்ட கதையாக முடியும். ஒழுக்கக் கல்வி பயில்வதே நலம். திருக்குறள் போன்ற நூல்களைப் பயில்வதால் மனிதன் வாழ்வு எவ்வெவ் வழியில் பண்படுகிற தென்பதை நான் சொல்லவேண்டுவ தில்லை. அருளிற்கும் அன்பிற்கும் அறத்திற்கும் இவைகட்கு உயிரென இலங்கும் ஒழுக்கத்துக்கும் உறையுளாயுள்ள சேக்கிழார்பெருமான் அருளிச்செய்த தெய்வ மணங்கமழும் திருத்தொண்டர் புராண மென்னும் ஒன்றை யோதி யுணர்ந்தால் போதுமே! திருநீலகண்ட நாயனர் மெய்ப் பொருள் நாயனர் வன்றொண்டப் பெருந்தகையார் முதலிய தமிழ்ச் சான்றோர்கள் வரலாறுகளில் ஒழுக்க மன்றி வேறென்ன ஒழுகுகிறது? அவ்வரிய நூலை இந்நாளில் எத்துணை பேர் பயில்கிறார்? அப்பயிற்சிக் குறைவு ஒழுக்கக் குறைவை உண்டுபண்ணி யிருக்கிறது. இத்தகைய நூல்களைப் போதிக்கும் கல்லூரிக ளல்லவோ ஒழுக்கக் கல்லூரிகள். காரைக்கா லம்மையார் அன்பும் கண்ணகியின் வீரமும் மணிமேகலையின் அறவொழுக்கமும் நாட்டிடை இது போழ்து பரவாதிருப்பதற்குக் காரண மென்னை? தற்காலச் சிறுமைப் பாடசாலையின் பெருக்கே என்று நான் சொல்லுவேன்.

தற்காலக் கல்வி ஒழுக்கத்தைப் போதிக்கிறதா? அஃது ஆசையை யன்றோ அறிவுறுத்துகிறது. ஆசையெனும் பேய் வாய்ப்படுவோன் ஒழுக்கத்தை யெவ்வாறு வளர்க்க வல்லான்? ஆகவே ஆசை யெழுப்பும் கல்வி முறையை அறவே தொலைத்தல் வேண்டும். தற்காலக் கல்வியாளர் நோக்க மென்னை? எவ்வழியிலாவது வயிற்றுக்குப் பிழைப்புத் தேடிக்கொள்வ தன்றோ? பரீக்ஷையில் தேர்வதற் கெனவும் பட்டம் பதவிக்கெனவும் படிக்கும் கல்வி கல்வியாமோ? பாடசாலையில் பயிலும் மாணாக்கர்கள் தற்போது எண்ணுவன பேசுவன என்ன? தூர்த்த உணர்வு இளமைப் பருவத்திலேயே இந்நாளில் அரும்பி விடுகிறது. நகரங்களிலுள்ள பாடசாலைகளின் அணித்தே வேசையர் விடுதிகளின் பெருக்கைக் காணலாம். எவ்வழியிலுழன்றோ பரீக்ஷையில் தேறிப் பட்டம் பெற்று உத்தியோகந் தானே செய்யவேண்டும். தற்காலக் கல்வியின் சொடுமை என்னே! என்னே!! கலைவாணி,



குறித்தும், நல்வினை செய்யாமையைக் குறித்தும், அப்பொழுது, அப்பொழுது இவர் மனம் இரங்கிற்றென்பதை, ஆங்காங்குள்ள பாடல்கள் புலப்படுத்தும். இங்ஙனம், அறங்களாம் அரதனங்கள், சிலப்பதிகாரமாம் செம்பொன் செப்பில் பெய்து வைப்பினும், அவற்றுள், சிறந்து திகழ்வன மூன்றே. அவை:—

அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற் [றுவ தூஉம்,
உரை சால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்த [லும்,
ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்ப [தூஉம்,
சூழ்வினைச் சிலம்பு காரணமாக,
சிலப்பதிகாரம் என்னும் பெயரான்,
நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்.

என இளங்கோவடிகளே நுதலிப் புகுதலால்தெற்றெனப் புலப்படும்.

ரு நடுவு நிலைமை.

பதிகத்தில் பகர்ந்துள்ள "தன்னுழை யிருந்த தண்டமிழ்ச்சாத்தன்— யான் அறிகுவன் அதுபட்டது என்று" என்னும் அடிகளை ஆழ்ந்து நாம் ஆராய்வோமாயின் தண் தமிழ்ச் சாத்தனரே, பூம்புகார் வணிகனின் பொலிவு பெற்ற சரிதத்தினை, நாற் பொருளும் பயப்பப் பெருங்காப்பியமாகச் செய்யக் கருதினன் என்பது பெறப்படும். இதனை அறிந்தே இளங்கோவடிகள் "நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்" என உளப்பாட்டுத் தன்மைப்பன்மையாகக் கூறினர். இளங்கோவின் உளங்கொண்டவாறு அறிந்த சாத்தனர், அடிகள் ஏனை இரு வேந்தரையும் புகழ்ந்துரையார் என்பது கருதி "முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது ... ... அடிகள் நீரே அருளுக" எனக் கூறும் முகத்தான் "நீரே" என்று ஏகார வினைப்பொருளில், தம் கருத்தில் தங்கியதை விளங்குவான் விளம்பினர். அடிகளும் அக்கருத்தினையே துணிந்து தமது முத்தமிழ்க் கல்வியும் வித்தகக் கவியும் காட்டுதற்குத் தாம் வகுத்துக்கொண்ட மூவகையுள்ளுறையின் விளைவு தோன்றப் பெருங்காப்பியமாகப் பாடி முடித்தனர். மூவேந்தரின் மூவாப் புகழையும், நடு நின்று முறையே வகுத்துக் கூறுவானே, புகார், மதுரை, வஞ்சி, என்னும் மூன்று காண்டங்களாகக் காப்பியத்தை அடைவு படுத்தினர். புகார், மதுரை, வஞ்சி என்பன சோழன், பாண்டியன், சேரன் இம்மூவரின் முதன்மைப் பதிகள், அம்மூவரின் முதிர்ந்த ஆற்றல்களை, அவ்வக்காண்டங்களில் நடுவு நின்றே நவின்று நடக்கின்றனர். அவை பேசின் பெருகும். ஆயினும், தாலாபூலிக நியாயத்தான் ஒன்று உரைப்பம்.

க. புறவு நிறைபுக்குப்
பொன்னுலகம் ஏத்தக்
குறைவில் உடம்பு அரிந்த
கொற்றவன் யார் அம்மானை;
குறைவில் உடம்பு அரிந்த
கொற்றவன், முன் வந்த,
கறவை முறை செய்த
காவலன்காண் அம்மானை;
காவலன் பூம்புகார் பாடேலோர்
[அம்மானை.

(உ) பொன்னிலங்கு பூங்கொடி
பொலஞ் செய் கோதை, வில்லிட,
மின்னிலங்கு மேகலைகள்
ஆர்ப்ப, ஆர்ப்ப எங்கணும்,
தென்னன் வாழ்க: வாழ்க:என்று
சென்று பந்தடித்துமே.
தேவர் ஆரமார்பன் வாழ்க
என்று பந்தடித்துமே.

(௩) ஓரைவர் ஈரைம்பதின்மர்
உடன்று எழுந்த

போரில் பெருஞ்சோறு,
போற்றுது தான் அளித்த
சேரன் பொறையன்
மலையன்திறம் பாடிக்,
கார்செய் குழல் ஆட,
ஆடாமோ ஊசல்
கடம்பு எறிந்தவா பாடி,
ஆடாமோ ஊசல்.

இங்ஙனம் கூறுவதினுள் அடிகளின் நடுவு நிலைமை நன்கனம் புலப்படுகின்றதன்றோ? ' இது காலை, பணங்கொடுத்தார் அனைவரையும், பரமனைப் போற்றும் புறவேடத்துறவிகள், நடுவுநின்று மொழியும் இளங்கோவடிகளின் உண்மை அகத்துறவினைச் சிந்தித்துத் தெளிவார்களாக.

# சைவ சமயத்தின் தற்கால நிலை.

(முன் தொடர்ச்சி.)

எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.

இந்நாளிற் பெரிதும் வற்புறுத்தப்படுவது மன்னுயிர்க்கிதஞ் செய்தலொன்றே. இஃதில் வழிச் சைவமேயில்லை. ஆயின், பண்டைச் சைவப் பெரியார் சரிதங்களில் ஐக்கிய நாணய சங்கங்களும், தொழிலாளர் சங்கங்களும், இராப் பாடசாலைகளும், பகற் பாடசாலைகளும், புத்தக சாலைகளும், வாசக சாலைகளும், சீர்திருத்தச் சங்கங்களும், தரும வைத்திய சாலைகளும், வெள்ளக்கஷ்ட நிவாரண நிதிகளும் கஞ்சித் தொட்டிகளும் இவை போன்ற பிற நவீன ஏற்பாடுகளும் குறிக்கப் பெறவில்லையே, அவர் மன்னுயிர்க்குத் தொண்டு செய்தாரென்று கொள்ளுதல் எப்படி என்று ஒரு கேள்வி பிறக்கலாம். அவர்கள் காலத்தில் இந்நாடு தற்காலத்திலுள்ளது போலப் பிறநாடுகளோடு மிக நெருங்கிய தொடர் புடையதாயிருந்ததில்லை. அவர்கள் காலத்தில் இந்நாட்டு மக்கள் உண்டிக்கும் உடைக்கும் திண்டாடின தில்லை. பஞ்சமும் பிணியும் பரவியிருந்த தில்லை. மக்கள்பால் "நோயின்று நோக்குவிளங்"கிற்று. "கொள்வதூஉ மிகை படாது கொடுப்பதூஉங் குறைபடாது"வாணிபம் நடந்தது. பெருமழை மழையின்மை முதலிய கேடுகள் மலிந்திருந்ததாகத் தெரிய வில்லை. இங்ஙனம் இம்மை வாழ்க்கைக்கு வசதிகள் குறைவற விருந்தமையால் இவற்றைப் பற்றிக்கவலை கொள்ள அந்நாளில் காரணமில்லா திருந்தது. அம்மைக்குரிய சமயமும் நல்லொழுக்கமும் பெரியோராற் பாதுகாக்கப் படவேண்டி நின்றன. ஆகவே சமய விளக்கங் கெடாதபடி அவ்வக்காலத்திற் செய்யவேண்டியிருந்த சமயத் தொண்டுகளையே செய்தார்கள். இப்போது அம்மை வாழ்க்கைக் குரியனவும் இம்மை வாழ்க்கைக் குரியனவுமாகிய இரண்டுமே குன்றியுள்ளன. ஆகவே இரண்டு துறைகளிலும் தொண்டு செய்யவேண்டிய அவசியந்தோன்றுகிறது. சைவ சமயிக்கு இதில் முரண்பாடொன்றுந் தோன்ற ஞாயமில்லை. ஆகவே சைவ சமயம் இவ்விருபதாம் நூற்றாண்டிலும் பயன்தர வல்லதென்றே கொள்ளவேண்டும்.

இனிச் சைவம் பிறநாட்டுத் தீமைகளையுந் துடைக்க வல்லதாமோ என்



ம்பரும் சிறப்பை, ' இங்ஙனம், இங்ஙனம்' என எங்ஙனம் எடுத்துரைக்கினும், கம்பநாடர் முதனூல் மொழிந்தாரெனும் பேறு பெற்றவராவரோ? அவர் வழி நூலாரே. ஓ! ஓ! இஃது சிலப்பதிகாரந்தானே எனச் சிந்தை செய்யாது விடினும், இளங்கோவடிகள் முதனூலாரென்னும் இறும்பூது பெற்றவரே. வழிநூலார் என்னும் வார்த்தை அவர் மாட்டுத் தகுவதன்று; தகுவதன்று. ஆகையால், யாமறிந்த புலவருள்ளே கம்பர் இளங்கோ வென்னும், தமிழ்க்கடலில் கண்ட தண்ணிய மணிகளைத் தருணமெனும் தட்டில் வைத்துப் புலவர் புல்க்கோலால் தூக்குவாராக. தூக்கின், இளங்கோவென்னும் இருந்தமிழ் மணியே, தமிழ்த்தாயின் தலையணியில் நின்று திகழ்வதற்குத் தகுதியுள்ளதாகும்.

உ. தோற்றம்.

" குமரியொடு வட இமையத்து ஒருமொழி வைத்து அரசாண்ட சேரலாதற்கு, திகழ்ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் மகள் நற்சோணை ஈன்ற மக்கள் இருவர்." அவருள், முன்னவன் சேரன் செங்குட்டுவன்; பின்னவன் இளங்கோ. இளையவன் ஆயினமையானும், அரசகுமரன் ஆயினமையானும், இளங்கோ என்னும் பெயர் இட்டனர்.

ங. துறவு.

இவ்விரு மக்களோடு "தென்னர் செம்பியர் தன்னடி போற்றத்தமனிய மண்டபத்துச் சிங்கம் சுமந்த பொங்கணை மீமிசை, உவரித்திரையில் கவரியிரட்ட வேந்தன்— சேரலாதலன் —இருந்துழி, நிமித்திகன் சார்ந்தனன்." அந்நிமித்திகன்—ஜோசியன் —"சேரலாதனை அடிமுதன் முடிகாறும் நெடிது நோக்கி, ஈன்றோள் கழியப் பொன்திகழ் உலகம் நீசேர்தி" என உரைத்தனன். பின், " அவ்வரசன் மைந்தரை நோக்கி, நந்தாச்செங்கோல் அந்தமில் இன்பத்து அரசாள் உரிமை இளையோற்கு உண்டு" என உரைத்தனன். இதனைக்கேட்ட "இளங்கோ உளைந்து, வெகுண்டு அழுக்காற்று ஒழுக்கத்து இழுக்கு. நெஞ்சினனாய்க், கண்ணெரி தவழ, அண்ணலை—நிமித்திகனை — நோக்கினன்" பின்னர், இளங்கோ "கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச் செங்குட்டுவன்றன் செல்லல் (துன்பம்) நீங்க, பகல்செய்வாயிற் படிமையோர் தம்முன், அகலிடப் பாரம் அகல நீங்கி, சிந்தை செல்லாச் சேண் நெடுந்தூரத்து, அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தன் ஆயினன்." இவ்வரலாற்றினை வரந்தருகாதையில் இளங்கோ தம் உரையானே இயம்புகின்றனர்.

"வஞ்சி மூதூர் மணிமண்டபத்திடை
நுந்தை தாள்நிழல் இருந்தோய் நின்னை
அரசு வீற்றிருக்கும் திருப்பொறி உண்டு
[என்று
உரை செய்தவன் மேல் உருத்து நோக்கி
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த்
தானைச்
செங்குட்டுவன்றன் செல்லல் நீங்கப்
பகல் செய்வாயிற் படியோர் தம்முன்
அகலிடப்பாரம் அகல நீங்கிச்
சிந்தை செல்லாச் சேண் நெடுந்தூரத்து
அந்தமில் இன்பத்து அரசு ஆள் வேந்து"

இங்ஙனம் துறவறம் பெற்ற பின்னர், இளங்கோவிற்கு 'அடிகள்' என்னும் துறவறப்பெயர் சூட்டப் பெற்றது. அடிகள் என்னும் பெயர் ஆண்பாலார், பெண்பாலார் இருவருக்கும் ஒருங்கே வழங்கப் பெறுகின்

றது, முறையே இளங்கோவடிகள், கவுந்தியடிகள் என்றதினல் காண்க. நாடுகாண்காதையில் ''கவுந்தயையைக் கைதொழுதேத்தி, அடிகள் நீரே அருளுதிர்'' எனப் பெண்பாலார்க்கும், அடிகள் எனும் துறவறப் பெயரிட்டழைப்பதில், இளங்கோவடிகளுக்கு மிக விருப்பம்.

"குணவாயில் கோட்டத்து அரசு துறந்தி [ருந்த
குடக்கோச் சேரல் இளங்கோவடிகட்கு

சேரநாட்டு வஞ்சிமாநகரின் கீழ்த்திசை யமைந்த திருக்குணவாயில் என்னும் ஊரின்கண், அருகன், கோயிலில் இளங்கோவடிகள் துறவறநோன்பு நோற்றுவந்தனர். அரும்பத உரைகாரரும் ''பகல்செய்வாயில் படி'' என்பதற்கு ''ஆதித்தன் தோன்றுகின்ற குணக்காகிய திக்கினுலே பேருடைய குணவாயில்'' என உரைத்தனர். படிமம் என்பது படி எனக்கடை குறைந்து நின்றது. படிமம் = பூதம் = தெய்வம்; ஈண்டு அருகன். திருக்குணவாயில் கோட்டத்து அருகக்கடவுளின் முன்னிலையில் இளங்கோவடிகள் துறவறத்தை மேற்கொள்ளும் சூளேற்றனர். இதற் பெறப்படுவதொன்றுண்டு. என்னை? துறவினை மேற்கொள்வோர் தெய்வத்தின் முன்னிலையில் நின்று, தாம் துறவறம் ஏற்றுக்கோடற்கான காரணங்களைச் சொல்லி, துறவினைத் தெய்வந்தருவதாகப் பெற்றுக்கொள்ளல் பழங்கால வழக்கம். மனிதர் தருவதாகக்கொள்ளல் இக்கால வழக்கம். தெய்வ சம்மதமும், மனித சம்மதமும் பெற்ற இவ்விரு துறவுகளின் உயர்வு, தாழ்வுகள் எங்ஙனே ஆயினும் ஆருக. பண்டைக்காலத் தெய்வ சம்மதம் பெற்ற துறவினையே, இளங்கோவடிகள் மேற்கொண்டு தவம் செய்துவந்தனர். அரசாளும் பாரம் அதிக அல்லல் விளைக்கும் என்பதைத் தன் அகம் ஆர ஆராய்ந்தனர். ஆராய்ந்தே காட்சிக்காதையில்

மழைவளங் கரப்பின், வான்பேரச்சம்;
பிழை உயிர் எய்தில், பெரும்பேரச்சம்;
குடிபுர உண்டுங் கொடுங்கோல் அஞ்சி,
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்.

எனத் தன்வாக்கைப் பிறர் வாக்கிற் புகுத்துப் பேசுவாராயினர். இவருக்கு இளங்கோவடிகள், சேரமுனி, அடிகள் எனப் பலபெயர்கள் உள. அவற்றுள், அடிகள் என அழைப்பதிலேயே அடியார்க்குநல்லார்க்கு அளவிறந்த அன்பு. எமக்கும் அதுவே பெருவிருப்பம்.

ச. இயற்றியது.

இளங்கோவடிகள் எனும் இளம் பரிதியால் தண்டமிழ்த் தடத்துள் மலர்த்தப் பெற்றது, சிலப்பதிகாரம் எனும் செந்தாமரை ஒன்றே. துறவு பூண்ட பின்னரே சிலப்பதிகாரத்தை இளங்கோவடிகள் இயற்றினர். இளங்கோவடிகளின் இதயம் எனும் குளத்தில், நிரம்பியிருந்த அறங்கள் எனும் அரும்புனல், சிலப்பதிகாரம் எனும் செவ்விய மதகின் வழியாய்த் தமிழகம் எனும் செறுவில் பாய்தலாயிற்று.

''சிலப்பதிகாரத்தின் இடை இடையே சொல்லப்படுவோர்களுடைய சரித்திர நிகழ்ச்சியால் போந்த நற்பயனையும், தீப்பயனையும் ஆங்காங்கு உலகத்தாரை நோக்கிச் சொல்லிப்போதல இவர்க்கு இயல்பு. பின்னும், யாரேனும் மிக்க துன்பம் அனுபவித்ததாகச் சொல்லும் பொழுது, அத்துன்பத்திற்குக் காரணமாக முற்பிறப்பில், அவர்கள் தீவினை செய்ததைக்



னும் வினவிற்குச் சுருங்கிய விடை தருவாம்: இந்நாள் வரையில் கடலும் மலையும் தேயங்களைத் தனித்தனியாய்ப் பிரித்து வைத்திருந்தன. இப்போதோ கடல் வழியாகவும் வான வழியாகவும் போக்கு வரவு செய்தல் எளிதாய் விட்டது. ஒருவர் ஓரிடத்திற் பேசும் பேச்சைப் பல நூறு மைலுக்கப்புற மிருப்பாரும் இருந்த விடத்திருந்தே கேட்குமாறு செய்யுங் கருவிகளேற்பட்டு விட்டன. கம்பியில்லாத் தந்திகளும் கணக்கிலாப் பத்திரிகைகளும் உலகின் கண்டங்களை அகண்ட நிலமாக்கி வருகின்றன. இனிமேல் எந்த நாட்டாரும் பிறநாட்டார் தொடர்பின்றி யிருக்கமுடியாது. அவரவர் தத்தம் நாகரிகத்தில் கிடைத்துள்ள நல்லியல்புகளைப் பேணிப் பிறர்க்குத் தருதலும் பிறர் நாகரிகத் துக்காணும் நல்லியல்புகளை தாம் பெறுதலும் கடமையாய் விட்டது. ஆகவே, சைவ நன் மக்களும் தஞ்சமயத்தின் சிறப்பியல்புகளிற் சாரமானவற்றை விடாது போற்றிப் பிறர்க்குமுணர்த்தலும் பிறர்பால் காணு நலங்களில் தம் முன்னேற்றத்திற்கு வேண்டுவன வற்றைத் தாம் கைக்கொள்ளலும் ஒழுங்கே யென்க. பிறநாட்டு முதறிஞர் நஞ்சமய உண்மைகளை யறிந்து போற்றுகிறார்க ளென்பதையும், இன்னுமறிய முயன்று வருகின்றார்கள் என்பதையும் நம்மவருணர்தல் வேண்டும். காலங்காட்டி மியல்பிற்கேற்பப் பரந்த நோக்கோடு நன்னெறி நின்றுழைத்த லொன்றே நமது கடமை. அவ்வுழைப்பின் பயனைக் குறித்தாராய்தல் நங்கடனன்று.* அது இறைவன் திருவுள்ளப்படியமையும். ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்றன்றோ நம்மாசாரியர் அருளிச்செய்துள்ளார்.

இவ்வுயரிய நோக்கங் கொண்டு, போக்கு வரவு சாதனங்கள் குறைந்திருந்த ௨௦௦௦ ஆண்டுகட்கு முற்பட்ட காலத்தில் அசோக சக்கிரவர்த்தி தாம் கைக்கொண்ட புத்த மதத்தைக் கிரீஸ், ரோம், எகிப்து ஆசியா மைனர், சீனு, ஜப்பான், பர்மா, இலங்கை முதலிய தூர தேசங்களிலும் பரப்பினர். கிறித்தவமும் மகம்மதியமும் தாம் தோன்றிய நாள் தொட்டு இன்று வரை உலகெங்கு முல்விப் பரந்து வருகின்றன. இந்து சமுகமும் கிரகணம் பிடிக்கப்பட்ட சந்திரன் நிலையிலிருந்து வருகிறது. இதற்கும் கிரகணம் விடுபட வேண்டாமோ? இந்துக்கள் மட்டும் உலகத்தோ டொட்ட வொழுகாவிடில், வெகு

* ஸ்ரீ ரவீந்திரநாத தாகோரைப் பத்திரிகைப் பிரதிநிதி யொருவர் பம்பாயிற் கண்டு, ''கவீந்திரரே, தங்கள் விசுவபாரதியின் மூலமாய் மேல்நாடும் கீழ்நாடும் நட்புரிமை பூண்டு ஒற்றுமைப் பட்டுவிடுமோ? மக்களியாவரும் சகோதர வாஞ்சை காட்டுவரோ? முடியாக் காரியத்திற்கன்றோ முயற்சி செய்கின் றீர்கள்?'' என்று கேட்டபோது, அப்புலவர் பெருமான் அளித்தவிடையினேர் பகுதி கவனிக்கத்தகுந்தது. "Does not the Gita warn us:— Action is thy care, and not the fruits thereof." It is the effort that counts and not the result. The effort is the most valuable of all things. I do not know whether my efforts will have any effect, nor do I seek to know. I know it is the truth, and I know that Truth has to be asserted against all contradictions. Only actions are our duty, not the greed thereof."

க்கு.

விரைவில் தஞ்சிறப்பியல்பை யிழந்து பிறமதத்தாராய் மாறி மறைந்து போதல் திண்ணம். இவ்வுண்மையை நன்குணர்ந்த இந்துமதப் பெரியார் வட இந்தியாவில் ஆரிய சமாஜம் இந்து மகா சபை முதலிய அமைப்புக்களை யேற்படுத்திக் கொண்டு தம் சமயத்தைக் காக்க வழிதேடி வருகின்றனர். தென்னாட்டுச் சைவரும் தஞ் சிறப்பியல்பை இழந்து விடாது இப்பெருந் தொண்டில் கலந்து கொள்ளுதல் கடமையாம். "ஞால நின் புகழே மிக வேண்டுந் தென் ஆலவாயில் உறையும் எம்மாதியே" என்று சம்பந்தர் செய்தருளிய விண்ணப்பம் சைவ ரொவ்வொருவரும் செய்யும் விண்ணப்பமாதல் வேண்டும்.

சைவரிற் கற்றாரும் மற்றாரும் ஆசை யறாக்குமிவ் வகையைக்கொள்ளுங்கால், சமயப் பிரசாரஞ் செய்யுங் கற்றோர் இக்காலத்திற் கவனிக்க வேண்டிய கருத்துக்கள் சிலவுள: (க) பூதபௌதிக அறிவு நாளுக்கு நாள் வளர்ந்து வருமிந்நாளில் சைவசமயத்தின் அடிப்படையான கொள்கைகட்குமாறுபடாதபுதியஉண்மைகளை அறிஞர் எடுத்துரைப்பின் அவற்றை வரவேற்றுக் கொள்ளவேண்டும். (உ) முன்னோர் காலத்திற் கேற்றதும் இக்காலத்துக்குத் தீமை விளைப்பதுமான வழக்க வொழுக்கங்கள் நஞ்சமய முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்பின் அவற்றை நழுவவிடச் சித்தமாயிருக்க வேண்டும். (ங) ஆனால் நம் பண்டை நடையுடை பாவனைகளில் நமது முன்னேற்றத்துக் குண்மையில் இடைஞ்சல் செய்யாத எதையும் கைவிடலாகாது. (ச) சமய வளர்ச்சிக்குச் சாதகமான முறைகள் பிறமதங்களிற் காணப்படினும் அவற்றைப் பேணிக்கொள்ளல் வேண்டும். (ரு) சைவக் கொள்கைகளை இந்நாவில் எங்கும் பரப்பப் புகுவோர், கால இயல்பு கருதி சுருதி, உத்தி, அநுபவம் என்னும் பிரமாண முறை வைப்பை மாற்றி அநுபவம், உத்தி, சுருதி என்றமைத்துக் கொள்ளுதல் நலம். (சா) சமயாசாரியர் திருவாக்குக்களையும் அவர் வாழ்க்கையையும் பெரியபுராணக் கண்கொண்டு பன்முறை காணவேண்டும். காணில் இந் நூற்றாண்டில் சைவ சமூகம் நால்வரைப் பின்பற்றி நலமுறல் எப்படி என்று விளங்கும். பன்னிரு திருமுறைகளின் அடிப்படையான கொள்கைகளை மறைத்தோ மறுத்தோ செல்லும் எந்த நூலும் எந்த ஒழுக்கமும் தள்ளப்பட வேண்டும். (எ) சைவ சமயப் பாதுகாப்பு நலங்கருதி, அகச் சைவ வேற்றுமைகளை அதிகமாய்ப் பாராட்டிக் கொண்டிருத்தல் கூடாது. இருமொழி யினுமுள்ள வேத சிவாகமங்களைப் பிரமாண நூல்களாகவும், நால்வரைச் சமயாசாரியராகவும் கொண்டு சிவசின்னமணிந்து சிவமூர்த்த வழிபாடு செய்வோரனைவரையும் சிறப்பியல்புடைச் சைவரேயென்று உரிமை பாராட்டிப் போற்ற வேண்டும். இவை போன்ற கோட்பாடுகள் அறிஞர்க் கின்னும் பலதோன்றலாம். இவற்றைக் கருத்துட் கொண்டு கற்றோர் சமயப் பிரசாரஞ் செய்துவரின் சைவர்க்குள் ஒற்றுமையுணர்ச்சி பெருகும்.

மேலே குறித்தவாறு இங்கும் எங்கும் சைவ வானொளி வீசும்படி செய்தற் பொருட்டுக் கையாள வேண்டிய முறைகள் பலப்பல. தூய இயல்புணர்ந்த மதிவல்ல அன்பர் சிலர் அவற்றைப் பல இடங்களில் தெரிவித்து



வருகிறார்கள். அவற்றில் சிறந்தன சிலவற்றை மட்டும் ஈண்டுக் குறித்தல் போதும். சைவ சமய பரிபாலனத்துக் கென்றே அமைந்துள்ள சிவாலயங்களும் சைவ மடங்களும் தத்தம் நிலையில் திரியாது நின்று செய்வன செய்யுமாறு செம்மைப் படுத்தலே முதலிலெண்ணத்தக்க உபாயமாம். இவற்றைச் சமய பரிபாலனத்தின் பொருட்டுச் செவ்வனே பயன்படுத்திக்கொண்டால், கொண்டுள்ள விழுமிய நோக்கு நிறைவேறுதற்கு வேண்டிய இடம் பொருள் ஏவல் முற்றும் எளிதிற் கிடைக்கும். இவற்றை அரசாங்கத்தார் தம் மேற்பார்வைக் குட்படுத்தக் கருதி இந்து அறநிலைப்பாதுகாப்பு மசோதாவை ஆட்சிகொண்டு வர விரும்புவது யாவருமறிந்ததே. அம்மசோதா நிறைவேறிய முறை சரியோ தப்போ என்று வாதிப்போர் வாதிக்க. அதன் பகுதிகளிற் சிலவற்றைத் திருத்திவிட்டால் போதுமென்று சிலர் கருதுகின்றனர். இவை யெவ்வாறாயினும் இச்சட்டம் நிறைவேறி யிருக்கின்றது. ஆரவார எதிர்ப்பிடையே உருப்பெற்றெழுந்து வீறி நிற்குமிது, சிலர் விருப்பத்திற் கிணங்கி மன்னர் பிரானுல் கண்டிக்கப் பட்டாலல்லது ஆட்சியில் வந்தே தீரும். இதனால் இப்போதுள்ள தீமைகளை விலக்கிக் கொள்ளுவதும் நன்மைகளை வளர்த்துக்கொள்ளுவதும் இனிமேல் பெரும்பாலும் பொது ஜனங்களைப் பொறுத்து நிற்கும். ஒரு சமய அறநிலையச் சொத்துக்கள் அச்சமய நன்மைக்கே செலவாதல் நேர்மையாம். இவ் வுண்மையைச் சைவர்கள் இனியேனும் நன்குணரவேண்டும். சைவத்துக்காண் செய்யும் பல செயல்கள் இதுவரை செய்யப் பெறுதுள்ளன. அவற்றிற் சில ஈண்டுக் குறிக்கப்படும்: சைவக்கோயில்கள் மடங்களின் சொத்துக்களில் மிகுதி காணப்படுமாயின், காலம் இடம் தகுதி யாராய்ந்து, பழுது பட்டிருக்கும் சிவாலயங்களையும் சைவ மடங்களையுஞ் சீர்படுத்திக் கொள்ளலாம். சிவாகம விதிப்படியே சிவாலயங்களில் பூசை நடை பெறுதற்குச் சிவாகம முணர்ந்த ஆதி சைவர் வேண்டுமாதலால், சிவாகம பாடசாலைகளை வைத்துச் சிவ வேதியர்களையவற்றிற் பயிலுமாறு ஊக்கி, அப்பயிற்சியோடு பத்தியுமொழுக்கமுமுடையாரை ஆலயங்களில் அருச்சகராக நியமிக்கலாம். தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளைத் தமிழ்வேத ஆராய்ச்சி முறைப்படக்குமாறு, தமிழ்வேத பாடசாலைகளை ஆங்காங்கமைக்கலாம். இவற்றில் நல்ல வாலிபர்கள் வந்து சேர்ந்து தமிழ் மறை பயின்று அவ்வொளியைத் தமிழ் நாடெங்கும் பரப்பும்படி செய்யலாம். இன்னும் கோயில்கள் மடங்களின் சார்பாகப் பொதுக்கல்விக் கேற்ற பள்ளிக்கூடங்களைத் தோற்று வித்து, அவற்றில் தற்கால முறைக்கேற்ற கல்வியோடு, சைவ சமய ஞானத்தையும் தமிழ்ப் பற்றையும் இனிது வளர்க்கலாம். இவற்றில் புத்தக சாலைகளை யமைத்துப் பொது ஜனங்கட்குச் சைவ நூல்கள் எளிதில் கைக்கெட்டும்படி செய்யலாம். அறிவொழுக்கங்களிற் சிறந்த சைவ சமயிகளை ஆலயங்கள் மடங்களின் சார்பான சமயப் பிரசாரகர்களாக நியமித்து அவர்க்குப் போதிய ஊதியமும் சிறப்புந்தந்து, அவ்வம்மடங்களிலும் ஆலயங்களிலும்மட்டுமேயன்றி அடுத்துள்ள ஊர்களிலும் சமயப்பிரசாரம்

நிகழ்த்தலாம். சமய உண்மைகளை விளக்குந் துண்டுப் பிரசுரங்களை உற்சவ காலங்களில் இலவசமாகப் பொது சனங்கட்குத் தரலாம். சைவ சஞ்சிகைகளை அவற்றின் தகுதிக்கேற்ப ஆதரிக்கலாம். சமய நூல்களை இக்காலத்தினர்க் கேற்ற வகையில் பதிப்பித்துக் குறைந்த விலைக்கு விற்கலாம். இவை போல்வன இன்னும் பல. இவை யெல்லாம் எவ்வளவு பெரும் பயனைத்தரத்தக்கன வென்று கருத வேண்டும்.

சைவ மக்கள் ஒரு மனப்பட்டு இப்பெருஞ் சமயத்தொண்டுகள் இனிநிகழத்தான் வேண்டு மென்று உறுதி கொண்டு விடுவாராயின், அவ்வெண்ணம் நிறைவேறத்தடையில்லை. கோயிலதிகாரிகளை வசப்படுத்து வதினும் மடாதிபதிகளைவழிக்குக் கொணர்தல் கடினமென்று சிலர் கருதக்கூடும். சில்லாண்டுகளாகச் சிலமடங்களிழைத்து வந்த கொடுவினையே இச்சட்டந்தோன்ற இடந்தந்து தம்மைச் சுழைக்கின்றதென்று மடாதிபதிகள் இப்போது நன் குணர்ந்திருப்பர். இனியேனுமிவர்கள் தாமமர்ந்திருக்கும் புனித தானங்கட்கும் அணிந்திருக்கும் திரு வேடத்திற்கும் இழுக்குத் தேடா வகையில் வாழ்ந்துபகரித்தற்கு இறைவன் துணை செய்ய வேண்டும். முன்னுளிற்போ லிவர்கள் யோகியர் ஞானியர்களாய் விளங்கா விடினும் போகட்டும். "நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின். அதுதான் எல்லாருமுவப்பதன்றியும் நல்லாற்றுப் படூஉ நெறியுமாறதுவே" * என்ற பொருண்மொழிக் காஞ்சியை உள்ளத்திற் பதித்து அதன் வழி நடந்தால் சாலும். திருமடத்தின் தூய்மையைக் குறைக்கும் குணந் தொழிலுடையா ரெவரும் மடத்திலணுக வொட்டாதபடி தடுத்து, சமய பரிபாலனத்திற் கருத்தைச் செலுத்தி, தமக்குச் சரியெனத் தோன்றும் சமயத் தொண்டுகளைக் காலத்தின் தேவையறிந்து தம் மாசியன்ற வரையிற் செய்து வருவாராயின் அவர்களைத் தெய்வ மெனச் சைவர் போற்றுவர். கோயில்கள் மடங்களின் இழிவு குறித்து அவற்றின் அதிகாரிகளை மட்டும் நிந்தித்தல் சரியன்று. அவைகள் நாளுக்கு நாள் கெட்டு வருவதைப் பல ஆண்டுகளாகக் கண்டிருந்தும் ஒருபெருமுயற்சியுஞ் செய்யாது வாளா கிடந்த சைவ சனங்களும் இவ்விழிவிற்குக் காரணர்களே யாவர். போனது போக இனியேனும் சைவ மடங்களில் உண்மைத் துறவிகள் வாசமும், தமிழ்க்கல்வி சமயக்கல்வி வாசனையும், நிலை பெறுமாறு செய்தல் சைவப் பொது ஜனங்களின் கடமையுமாம். இச்சமயத்தின் அருணெறிக்கு முரணிய சாதிச் சழக்குகளைக் கால இயல்பிற்கேற்பக் குறைத்து மாய்த்து, வேட நெறி நிற்குந் தம்பிரான்கள், புலவர்கள், பிரசாரகர்கள் வாயிலாகச் சமயத்தொண்டு செய்ய சைவ மடாதிபதிகள் இனி முன் வருவர் என்று எதிர்பார்க்கலாம்.

திருமட அதிபர்கள் இன்னே செய்ய வேண்டிய பிறிதொரு பெருங்காரியமுமுள்ளது. இவர்கள் இதுவரை ஒன்று கூடித் தஞ்சமயப் பாதுகாப்பு குறித்துக் கலந்தாலோசித்ததாகக்கேட்டுமறியோம். இவர்களிலொருவரை யொருவர் சந்தித்தால் யார்யாரை எப்படி வணங்குவது என்பது போன்ற அற்ப ஐயங்கள் இவர்கட்குக் கடத்தற் கரிய தடைகளாய்க் காண்கின்றன. இவ்வரய்க்காலைத் தாண்டாத இவர்கள் பிறவிக்கடலைத் தாண்டுவதெப்படி? சமய பரிபாலனஞ் செய்வதெப்படி? இவர்கள் போற்றுஞ் சமய குரவரில் அப்பருஞ் சம்பந்தரும் திருப்பூந்துருத்தியில் சந்தித்தபோது எப்படி நடந்து கொண்டார்களென்பதை, சைவமடத்தலைவர்களும் நன்கறிவார்களன்றோ? "அடியார்க் கடியேனுவேனே" என்ற ஆசாரியர் திருவாக்கு இவர்கட்கும் பிரமாணந்தானே? "தொண்டரொடு கூட்டு கண்டாய்" என்ற திருவாசகம் இவர்கட்கு வேறு வாசகமல்லவே? ஆச்சிரமத்துக் கொவ்வாத லௌகிகங்களை அளவுக்கு மிஞ்சிப் புகுத்திக் கொண்டு இடர்ப்படுதல் எவர்க்கும் நன்மை தராது. திருந்திய நாகரிகமும் உயரிய சமயப் பொறுப்பும் படைத்த இப்பெரிய தொண்டர்கள் தம்முள் அளவளாவி ஆண்டவனுக்கும் அவனுறையும் நடமாடக்கோயில்களுக்கும் நல்லூழியஞ் செய்யக் கூசுதல் தகாது. பிற சமயங்களில் சமயத் தலைவர் அடிக்கடி ஒன்று கூடிச் சமய பரிபாலனஞ் செய்வதை இனியேனும் நந்தலைவர்கள் கவனித்து தம்முட் கூட்டங்கூடிச் சமய அரசாங்கத்தைச் செவ்வனே நடத்தும்படி அடி பணிந்து வேண்டுகின்றோம். சைவ சமயிகள் முன்பிழைத்த தீவினை காரணமாக இனியு மிவ்வதிபதிகள் செய்வன தவிர்த்துந் தவிர்வன செய்தும் சமயத்துக்கு இடையூறு விளைப்பரேல், பொது ஜனங்கள் இவர்களை எளிதில்விடமாட்டார்கள்; இவர்கட்கு ச்சுக மெய்யாது. கடவுளுக்கஞ் சாவிடினும் காலசக்கரத்துக்கேனுமஞ்சித் தஞ்சமயக் கடமைகளை இனிதுநிறைவேற்றுவார்கள் என்று பலர் ஆவலோடு எதிர் பார்க்கின்றனர்.

இவ்வண்ணங் கோயில்களும் மடங்களும் தத்தமக்குரிய சமயக் கடமைகளைச் சரிவரச் செய்யும்படி பார்த்துக்கொள்ளுவதோடு சைவ நன் மக்கள் இவற்றிற்கு வெளியிலும் பல வகையிற் பாடுபட வேண்டும். கோயில்களும் மடங்களும் பொது ஜனங்கட்கு நல்லறிவுச் சுடர் கொளுவத் தவறிய காலத்து, திருவருட் சம்மதத்தால் ஆங்காங்கு பல சைவ சபைகள் தோன்றின. அவற்றைச் சைவர்கள் பெரிதும் ஆதரித்தல் வேண்டும். அவற்றின் அங்கத்தவர்கள் தஞ்சமயச் சிறப்பியல்புகளைப் புறக்கணியாது போற்றும்படிக்கும் கல்வியறிவொழுக்கங்களில் மேம்பாடடையும்படிக்கும் ஊக்கந்தருதல் வேண்டும். கோயில்களுடனும் மடங்களுடனும் சபைகளும் ஒத்துழைக்கவேண்டும். இதற்கும் முன்னரே சைவ சபைகளெல்லாம் ஒரு மகா சபையின் உறுப்புக்களாயமைந்து நிகழ்தல் வேண்டும். இதனவசியத்தை நன்குணர்ந்த பெரியார் சில வருடங்கட்கு முன்னர் 'சைவ சித்தாந்த மகா சமாஜம்' என்னும் ஒரு பேரவையை நிறுவினர்கள். அது ஒழுங்காய் நடை பெற்று வந்த காலத்து அது சமயத்திற்கொரு பெருந் துணையாயிருந்தது. பரந்த நோக்கும் சமயப் பற்றும் தாழ்வெணும் தன்மையும் படைத்த சைவர் இப்போது அச்சமாஜத்தில் பலராக இல்லாமையால், அஃதொரு வாடிய கொடிபோல் ஒல்கி

* ௬. புறநானூறு.

யுலேகின்றது. இப்போவையை மீட்டும் உயிர்ப்பித்தல் வேண்டும்: இவ்வெண்ணம் பலருள்ளத்திலிருந்து வருகிறது. ஆயினும் உருப்பெற்றுத் தொழிற் படவில்லே. உண்மைச் சைவர் பலர் பெருந்திரளாய்ச் சேர்ந்து, தாம் போற்றத் தகுந்த வோர் பெரியாரைத் தலைவராகக் கொண்டு, அச்சமாஜத்தின் அங்கத்தவர்களாய்ச் சேர்ந்து, முன்னினுஞ் சிறந்த வகைகளில் சமயத் தொண்டு செய்யவேண்டும். சென்னையிலும் அதற்கருகிலுமுள்ள சைவ சபைகளின் பிரதிநிதிகளைக் கொண்ட வோர் மகாசபை சில மாதங்கட்கு முன்னேற்பட்டது. அச்சபை தன் கிளைச்சபைகளின் தனித் தன்மையைக் கெடுக்காமலே அவற்றை ஓர் அமைப்புக் குட்படுத்தி அவை செய்யுஞ் சமயத் தொண்டைப் பண்படுத்தவும், சமய பரிபாலனப் பெருங் காரியங்களைச் செய்யவும் முயன்று வருகிறது. இதுபோன்ற பல சபைகள் தாலுக்காவுக் கொன்றும் ஜில்லாவுக் கொன்றுமாகத் தோன்றி யாவும் ஒரு மஹா சமாஜத்தின் உறுப்புக்களாய்த் திகழ்தல் பெரிதும் விரும்பத்தக்கது.

சைவ சமய மின்ன தென்றுணராது வீணே புறமதம் புகுவதைத் தடுக்கவேண்டி, கோயில்கள் மடங்கள் சபைகளாகிய மூன்றும் ஒன்று சேர்ந்து சமய உண்மை விளக்கும் பிரசாரத்தை இடைவிடாது செய்து வரவேண்டும். துண்டுப் பிரசுரம், இன்னிசைக் கீதம், யந்திர விளக்குப் படம், சினிமா முதலிய சாதனங்களையும் கிறித்துவ சமயிகளைப்போல் பயன் படுத்திக்கொள்ளவேண்டும். நீண்டாமையை ஒழிப்பதற்குந் திறமையானவழி, சைவ ஒழுக்கத்தைப் பாப்புவதொன்றே. எளிய கீழ்வகுப்புச் சகோதரர்களின் ஒழுக்க நிலை உயர்ந்து விடுமாயின், அவர்கள் ஆலயப் பிரவேசம் நாளடைவில் எதிர்ப்பின்றி இயல்பாய் நிகழ்ந்து விடும். அந்நாள் வருங்காறும் அவர்கட் கெனத் தனியாலயங்களைச் சமைத்து, அவற்றில் புனிதமான வழிபாடு நடைபெற ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

இவ்வழிகளில் சைவ சமய உண்மைகளை நாடெங்கும் பரப்பி, அச்சமயத்தோர் புறமதம் போதற்கு எண்ணு வண்ணம் நன்மை செய்வதோடு, சமய உண்மையறியாது புறம் புறந்திரிந்த சகோதரர்கள் மீண்டுஞ் சைவம் புக விரும்பினால் அவர்களை அன்போடு வரவேற்றுக் கொள்ளவேண்டும். இது புதிய ஒழுக்கமென்று கூறி மறுத்தல் முறையன்று. எத்தனையோ பழைய வழக்க வொழுக்கங்கள் கழிந்துபோகவில்லையோ? புதிய வழக்கங்கள் புகுந்துவர வில்லையோ? அவசியமான ஒருவழக்கம் புதியதாயிருப்பினும் அதன் குணத்தையும் குற்றத்தையும் நாடி குணம் விஞ்சியிருப்பின் அதைக் கைப்பற்றுதல் வேண்டும். சைவத்திலிருந்து புறமதம் புக்கோரை மீண்டும் அச்சமயத்திற் சேர்த்துக்கொள்ளல் அறவும் புதிய வழக்க மென்று சாதிக்கவு முடியாது. சமய குரவர்கள் எண்ணிலாச் சமண புத்தர்களைச் சைவ சமயிகளாகத் திருப்பினரன்றோ? அவர்களிலொருவர் தாமே சைவம் விட்டுச் சமணம்புக்கு மீண்டும் சைவந்திரும்பி ஆசாரியருமானமை அனைவருமறிந்ததே. அங்ஙனமவர் சைவ சமயப் பிரவேசஞ் செய்தபோதுள்ளன சடங்குகள் குண்டமண்டலங்கள் செய்யப்பட்டன என்பதையும் உற்று நோக்க வேண்டும். ஆடம்பரப்



பிராயச்சித்தம் எதுவுஞ் செய்யப்படவில்லை. சிவ பத்தியிற் சிறந்த திலகவதியார் "கைலைக் குன்றுடையான் திரு நீற்றை ஐந்தெழுத்தோதிக் கொடுத்தார்." அதையணிந்து கொண்டு தருமசேனர், திருவீரட்டானம் புக்கார்; அரனைப்பாடினர், திருநாவுக்கரசராய்த் திரும்பினர். திருநீற்றிலும் திருவைந்தெழுத்திலும் பெருமதிப்பு வைக்கும் எவர்க்கும் இவற்றிற்கு மேல் ஒரு பிராயச்சித்தம்வேண்டு மென்று தோன்றுது. பலருமறியவொரு பிராயச்சித்தச் சடங்கு செய்தல் ஜன சமூக நன்மைக்கு வேண்டற்பாலதே என்று அறிஞர் கருதினால், திருநீறும் கண்டிகையும் திருவைந்தெழுத்தும் பொருந்தியதொரு சுருக்கமான கழுவாய்ச்சடங்கைமடாதிபதிகளும் மற்ற சைவப் பெரியாரும் தீர்மானிக்கு முறையில் கற்பித்துக் கொள்ளலாம். புறமதம் புக்கவரைச் சைவஞ்சேர்த்தவர் சமயாசாரியர்; நாமது செய்தல் தகுதியோ? என்று சிலர் எண்ணலாம். சமய குரவர் நடந்து காட்டிய வழியில் நாமும் நடக்க நம்மாலியன்ற வரையிலும் முயலுவதுதான் முறைமை. அவர்கள் செய்தவற்றை நாம் செய்தல் கூடாதென்னில் அவர்கள் திருநீறுங் கண்டிகையும் திருவைந்தெழுத்தையுங் கைக்கொண்டமையால், நாமவற்றைக் கைக்கொள்ளல் கூடாதென்றுஞ் சொல்ல நேரிடும்.

(தொடரும்)

---

# கம்பராமாயண மும்மணிகள்.

---

பி. ஸ்ரீ. ஆசாரியார்.

(முன் தொடர்ச்சி.)

இலங்கைமா நகரம்.

" மரம் அடங்கலும் கற்பகம் மனையெலாம் கனகம் " என்றும்

" சந்தப் பூம்பந்தர் வேய்ந்த
தமனிய அரங்கில் தத்தம்
சிந்தித்த துதவும் தெய்வ
மணிவிளக்கொளிரும் சேக்கை
வந்துற்ற நிருதமாக்கள்
விளம்பின நெறி வழாமை
கந்தர்ப்ப மகளிர் ஆடும்
நாடகம் காண்கின்றுரை"

என்றும், கவிச்சக்கரவர்த்தி இலங்கைமாநகரை வருணித்துச் செல்கின்றுர். இலங்கையிலுள்ள மரங்களெல்லாம் கற்பக மரங்கள்; மனைகளெல்லாம் பொன் மனைகள் என்று கூறி இலங்கைமா நகரை நமது கவி ஒருபெரும் போக பூமியாக வருணிக்கின்றுர். இராமாயணம் என்னும் மலர் மாலையிலே இலங்கை போகத்தின் அறிகுறியான கற்பக மலராக மலர்ந்து பரிமளிக்கின்றது.

இலங்கை வாசிகளான அரக்கர்கள் நாடகம் காணும் காட்சியை நோக்குங்கள். நிபுணர்களாலும் உயர்ந்தோராலும் வகுக்கப்பெற்ற நெறிதவறுது கந்தர்வப் பெண்கள் அரங்கேறி நடகமாடுகின்றனர். நாடகமேடை பொன்மயமாயிலங்குகின்றது. அழகிய பூம்பந்தர் வேய்ந்த பொன் அரங்கிலே 'ஜகஜ்ஜோதி'களாய் ஒளிரும்

நல்லிசைச் செல்வ மெல்லியலார்கள் ஆடுகின்ற கூத்தினை அரக்கர்களும் அரக்கிமாரும் கண்டு களிக்கின்றார்கள். அவர்கள் படுக்கையில் அமர்ந்த வண்ணமே நாடகம் பார்க்கின்றார்கள். அப்படுக்கையைச் சிந்தாமணியென்னும் தெய்வமணிவிளக்கு ஒளிசெய்து அழகு செய்கின்றது. இம் மணிவிளக்கு அரபியர் நிசிக்கதையில் (The 'Arabian Nights') பிரஸ்தாபிக்கப்பெறும் 'அலாதின் என்பானது அற்புத விளக்கை'ப்போல வேண்டுவோர் வேண்டுவனவற்றை யெல்லாம் வேண்டும் வண்ணமே வழங்குவதாகும். இத்தகைய சிந்தாமணி, போகத்திலும் தமோகுணத்திலும் ஆழ்ந்து படுக்கையில் கிடக்கும் அரக்கர்களுக்கு அவரவர் சிந்தித்த போகங்களை யெல்லாம் சிந்தித்த வண்ணமே சிந்தித்தவுடன் வழங்குகின்றது. தேவதேவியர்கள் பணியாளர்களாய்க் குறிப்பறிந்து பணியாற்றச் சித்தமாயிருக்கின்றார்கள்; எனினும் போகத்தைப் பெரிதும் போற்றும் உள்ளம், நொடிப்பொழுதும் பொறுப்பதில்லை. தெய்வப் பணியாளர்களினும் தெய்வமணியாகிய சிந்தாமணி அதிவிரைவில் சிந்தித்த போகப் பொருளை உதவுகின்றது. இத்தகைய தெய்வமணி விளக்கு ஒளிரும் சேக்கையில் அரக்கிமார்களோடு வந்து அமர்ந்த அரக்கர்கள், இசை சுமந்த தெய்வப் பெண்மணிகள் நடித்துக்காட்டும் இன்பக் கூத்தை, கருத்து இசைந்து கண்விருந்தாகப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருக்கின்றார்கள். இங்ஙனம் இன்பத்தில் ஆழ்ந்திருக்கும் அரக்கர்களை ஆண்மையாளனான அநுமன் கண்ணுற்றான் என்று கவி கூறுகின்றார். இது இலங்கையின் போகஇன்பம். ஆதலால் இராமாயணம் என்னும் அற்புத மணிமாலையிலே இலங்கை மாநகரம் 'சிந்தித்தது தவும் சிந்தாமணி'யாக ஒளி வீசுகின்றது.

போகத்தில் மூழ்கிக் கிடப்போர் பகுத்தறிவு மழுங்கப் பெற்றவராவர். ஆகவே நமது கவி போகத்தில் ஆழ்ந்து அழுந்தித் திளைத்து மிருகப் பிராயமாயிருக்கும் அரக்கர்களை * "நிருத மாக்கள்" என்றே கூறுவது எவ்வளவு பொருத்தமாயிருக்கின்றது பாருங்கள்! "மக்கள் தாமே ஆறறிவுயிரே; மாக்கள் தாமே ஐயறிவினவே." பகுத்தறிவுள்ளவர்களே மக்கள்; பகுத்தறிவில்லாதவர்கள் மக்களாயினும்—அதாவது மக்களைப்போல உடம்பும் உள்ளமும் வாய்ந்தவராயினும்—மாக்கள் அல்லது விலங்குகளேயாவர். கல்வியென்னும் கருவிகொண்டு தோண்டித் தோண்டியாராய்ந்து பகுத்தறிவைப் பெருக்கி வாழ்வோரே மனிதராய் வாழ்வோர்; பிறர் மக்களல்லர்; இருகால் விலங்குகளாவர்— என்பது செந்தமிழ்ப் போராசிரியர்களான தொல்காப்பியர், திருவள்ளுவர் மதம். போகமாகிய சேற்றில் ஆழ்ந்து அழிந்துவிடாமல் கல்வி கேள்விகளையே கண்களாகக் கொண்டு இயற்கையோடு இசைந்த இன்ப வாழ்வு வாழ்வதேவாழ்வு—என்பது செந்தமிழ்க் கவிச்சக்கரவர்த்தி மதம். 'நிருத மாக்கள்' என்று

* எமது பாடம் பழைய ஏட்டுப் பிரதிகளில் கண்டபாடம். "வந்தொத்தும் தரித மாக்கள் விளம்பித நெறிவழாமை" என்று சிதைந்து புத்தகங்களில் காணப்பெறும் பாடம் "அந்தரத் நிருதமாக்கள் விளம்பின நெறிவழாமை" என்று ஏடுகளிற் காணப்படுகின்றது.



நாம் கூறியதற் கேற்ப, அவர்கள் சுகமாகச் சுத்த சோம்பர்களாய்த் தூங்கியும் தூங்காமலும் கிடந்து நாடகம் காணும் படுக்கையை, 'மக்கட் படுக்கை' 'விலங்கின் படுக்கை' யென்னும் இருபொருளையும் ஒருங்கே தரும் 'சேக்கை' யென்னும் அருமையான சொல்லால் கவிகுறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. அரக்கர்கள் இயற்கை வாழ்வை மறந்து செயற்கை வாழ்வு வாழ்ந்தார்கள். அறிவை வளர்க்கும் இயற்கை யின்பங்களை விரும்பாது, பகுத்தறிவை மழுங்கச் செய்யும் போக இன்பத்தையே இச்சித்தார்கள். பகுத்தறிவோடும் தன்னடக்கத்தோடும் வாழும் இயற்கை வாழ்விற்கு மாறாக, ஆசையைப் பெருக்கிப் பிறரை இம்சித்து வாழும் போலி வாழ்வாகிய செயற்கை வாழ்வைக் கைக்கொண்டார்கள். "வேட்டதே வேட்டுவீயும்" அரக்கர்—அதாவது, ஆசையை மேன்மேலும் தூண்டிப் பெருக்கி, அவ் ஆசைத் தீயிலேயே விட்டில் பூச்சிகளைப்போல விழுந்து நசிக்கும் அறிவிலிகளான அரக்கர்—என்று கம்பர் யுத்தகாண்டத்தில்குறிக்கின்றார்.

போகத்தால் பகுத்தறிவு மங்கிப் போகும். உள்ளொளியாகிய அறிவு மங்கிவிடவே, காதல் காமமாகின்றது; மறமே அறமாகி விடுகின்றது. ஆகவே போகத்தால் அறிவும் மங்குகின்றது; ஒழுக்கமும் மழுங்குகின்றது. இத்தகைய நிலையினை இலங்கை வாசிகள் அடைந்திருந்தார்களென்று கம்பர் காட்டுகிறார்.

ஆசையின் அளவும் எல்லா
உலகமும் தானே ஆள்வான்
வாசவன் திருவும் கொண்டான்
வழியலா வழிமேற் செல்வான்

கொஞ்சமோ திசையின் அளவு! திசையொடு திசையின் அந்தங்களையும் கட்டியாளவேண்டுமென்று அரக்கர் கோனாகிய இராவணன் கருதினான். மண்ணுலகத்தோடு வரம்பின்றி விரிந்த ஆகாயத்திடை வறிதே சுழலும் நட்சத்திர லோகங்களையும் ஆளவேண்டுமென்று யவனர் கோனாகிய மகா அலெக்ஸாந்தர் இளமையிலேயே 'கனா'க்கண்டு வந்தானென்று யவனர் சரிதம் இயம்புகின்றது. இலங்கையர்கோனுக்கு இக்கனவு நனவாயிற்றென்று இந்தியர் இதிகாசம் கறிக்கின்றது. இவ்வுலகத்தை ஏகபோகமாக ஆண்டதோடு இராவணன் தேவபோகத்தையும் கைக்கொண்டு அநுபவித்தானென்று வான்மீகியின் மனோதர்மம் வர்ணித்துக் கூறுகின்றது. ஒவ்வொரு நாட்டின் 'தன்னரசை'யும் அழித்துத் தானே தனிமுடி கவித்துத் தனியரசாண்ட இராவணேச்வரன் போகத்தில் ஆழ்ந்து வழியலா வழிமேற் சென்றான் என்று கம்பர் கூறுகின்றார்.

இராவணேச்வரனது ஏகாதிபத்தியத்தைத் தாங்கி நின்ற முக்கியமான தூண்களைப் பாருங்கள். இத் 'தூண்களே' பஞ்ச சேனாபதிகள். இவர் "உலகம் மூன்றிற்கும் முதன்மை பெற்றேரென உயர்ந்தார்." எனினும் இவர்களது ஒழுக்கத்தைப் பாருங்கள்.

"வஞ்சமும் களவும் வெஃகி
வழியலா வழிமேலோடி
நஞ்சினும் கொடியராகி
நவை செயற் குரிய நீரார்
வெஞ்சின அரக்கர் இவர்."

இவர்கள் இராவணனது ஏகாதிபத்தி

...த்திலுந்தன்மை பெற்றிருந்தார்கள். அவ்வந்த மகா ராணுவ ராஜ்யத்தின் அரும் பெருந்தூண்களாய் அமைந்திருந்த இச்சேனுபதிகளும் தங்கள் சக்கரவர்த்தியைப் போலவே பேராசைக்கு இரையானர்கள். "முடித்தலை அற்ற போதன்றி ஆசையறுது" என்று அக்கன் இராவணனைக் குறித்துக் கூறுகின்றான். இத்தகைய கொடிய பேராசையோடு, பஞ்ச சேனுபதிகளும் இராவணனைப் போலவே வழி யுலா வழிமேல் சென்றார்கள். வழி பலா வழிமேற் செல்வதாக இராவணனைக் குறிக்கும் கவி அவனது சேனுபதிகளைக் குறிக்கும்போது 'வழியலா வழிமேலோடி' யென்று கூறுவது கவனிக்கத் தகுந்தது. இராவணன் செங்நெறியாகிய இராஜபாதையை விட்டுச் சிறுநெறிகளாகிய குறுக்கு வழிகளிலே சென்று போகத்தையும் பொருளையும் பெருக்கத் தொடங்கினான். அவனது வலக்கைபாக நின்ற சேனுபதிகளோ, அறநெறியாகிய பெருநெறி விடுத்து முட்புதர்களும் காடுகளும் செறிந்த வழி யலா வழிமேல் ஓடத் தொடங்கினார்கள்; 'ஜ்வர' வேகத்தோடு ஓடி இராவணனுக்கு முன்னமே படுகுழியில் விழுந்து விட்டார்கள். இவர்களது குணுதிசயத்தைக் கூறப்போந்த கவி 'வஞ்சமும் களவும் வெஃகி' என்று தொடங்குகின்றார். இராவணராஜ்யத்தில், இராஜ தந்திரம் கேவலம் 'வஞ்ச'மே யாகின்றது; திக்விஜயம்செய்து நாடுகவர்ந்தபெருமைகளெல்லாம் நமது மகா கவியின் அதிநுட்பமானபார்வையில் 'களவா'கவே வெளிப்படுகின்றன. இராவணனது ஏகபோகமான ஏகாதிபத்தியத்தை ஆண்செய்த படைத்தலைவரோ ஜன சமூகத்திற்கு 'நஞ்சினும்கொடியரா' யினர். 'மன்னர்க்கு நீதி ஒருவகை; பிறமாந்தர்க்கு நீதி மற்றோர்வகை' யென்னும் கொள்கை எந்நாளும் கொடுங்கோல் மன்னர் கொள்கையேயாகும்.

இலங்கையின் அழிவுக்கும் இராவணராஜ்யத்தின் வீழ்ச்சிக்கும் போகமே முதற்காரணமாகுமென்று நமது கவிச்சக்கரவர்த்தி வற்புறுத்திக்கூறுகின்றார். சுந்தரகாண்டத்தின் முதற்பாட்டே இலங்கையை ஒரு போக பூமியாகக் காட்டுகின்றது. ஆண்தகையான அனுமன் தன்பேராண்மைக்கு இசைந்த பேருருவங்கொண்டு கடல்தாவ ஒருப்பட்டு நிற்கின்றான். ஓர் அறிவாளியான பிரயாணி தான் புதிதாகப் பார்க்கச் செல்லும் ஒரு நாட்டின் சிறப்பியல்களை நன்கு விசாரித்தறிந்து தன் உள்ளத்தில் அந்நாட்டைக் குறித்து ஒரு படம் வரைந்து வைத்திருப்பான் அல்லவா? அவ்வண்ணமே பேரறிவாளனை அனுமனும் இலங்கையைக் குறித்து ஒரு மனப்படம் வரைந்து கொண்டிருக்கின்றான். அப்படம் எது? இலங்கை ஒரு போக பூமி என்பதே அது. தேவருலகைளவுஉயரமுடையனுக வளர்ந்த அனுமன் அவ்வுலகைப் பார்க்கின்றான்.

> ஈண்டிது தான் கொல்? வேலை
> யிலங்கை யென்றைய மெய்தா
> வேண்டரு விண்ணை டென்னும்
> மெய்ம்மை கண்டுள்ளம்மீட்டான்.

'இதோ தெரிகின்றதே ஒரு போக பூமி! இதுதானே இலங்கை?' என்று ஐயம் எய்திய அனுமன் 'இது கடல் சூழ் இலங்கையன்று; இது ஆகாயத்தில் அமைந்துள்ள தேவருலகம்' என்றும் உண்மை கண்டான். போகநிலமாகிய விண்ணுட்டை அருகில் கண்டதும் அனுமனது உள்ளம் இலங்கையென்று மயங்கி விரைந்து சென்றது. அப்பால் போக பூமியில் பொலிந்து விளங்கும் போக இன்பங்கள், அனுமனது திருமனத்தையும் வசிகரித்துத் தம்பால் இழுத்துவிட்டன. அனுமன் அபாயத்தை உணர்ந்தான். 'வேண்டுதல் இன்மையாகின்ற விண்ணுடன்றோ? இது? இலங்கையன்று' என்னும் மெய்ம்மை அனும னுள்ளத்தில் பளிச்சென்று மின்னிப்பாய்ந் தெழுந்தது. உடனே ஆண்தகையான அனுமன் அரிதில் முயன்று தன் உள்ளத்தைத் தன்பால் மீட்டினான். இதனால் அனுமன் தான் முன் பார்த்திராத இலங்கையை ஒரு போகபூமியாகக் கருதியிருந்தானென்று அறிகிறோம்.

அனுமன் உள்ளத்தில் ஒரே விருப்பமிருந்தது. அது 'போக நிலமாகிய அரக்கர் பேரூரில் சீதாதேவியைத்தேடவேண்டு' மென்பதேயாம். இதுவே அனுமனது தனிப் பெருநோக்கம்; அனுமன் கொள்கை. அனுமன், தன் விருப்பம் போகபூமியின் வசீகர சக்தியால் இன்மையாகின்றதை உணர்ந்ததும், அதனை ஓர் அபாய அறிவிப்பாகக் கருதி, தன்னை யிழுத்துக்கொண்டு தேவருலகிற்குச் சென்ற தன் மனத்தைப் பறிகொடாது மீட்டிப் பாதுகாத்தான். எனெனில்,

> காண்தகு * கொள்கை உம்பர்
> இல்லெனக் கருத்திற் கொண்டான்.

தான் காணத்தக்க லட்சியம் மேலுலகமாகிய போக பூமியில் இல்லை யென்று கருதினன் அனுமன். பிறகு தேவருலகினின்றும் மீட்டப்பெற்ற கண்ணும் கருத்தும் தெற்குமுகமாகத்திரும்பின; உடனே தெற்கு மாகடலுக்கு நடுவே இலங்கையைக்கண்டான். இன்பப் பூஞ்சோலைகளும், பொன் மாடங்களும் மணிமேடைகளும் வாய்ந்திலங்கும் இலங்கை மூதூர் கட்புலனுயிற்று. போகநிலமாகிய இலங்கை, காவலமைந்த கோட்டை கொத்தளங்களோடும் வட்ட மதிலோடும் வெற்றிக்குறிகள் அமைந்த வீரவாயிலோடும் தென் கடலுக்கிடையே திகழ்ந் தொளிர்வதை அனுமன் கண்ணுற்றான்.

> கண்டனன் இலங்கை மூதூர்க்
> கடிபொழில் கனக நாஞ்சில்
> மண்டல மதிலும், கொற்ற
> வாயிலும், மணியிற் செய்த
> வெண்தளக் கனகமாட
> வீதியும், பிறவு மெல்லாம்;
> அண்டமும் திசைகள் எட்டும்
> குலுங்கத்தோள் கொட்டியார்த்தான்.

போகம் விளைந்த பொன்னிலமாகிய இலங்கையென்னும் புராதன நகரம் கட்டுக் காவல்கள் அமைந்த ஓர் அரும்பெருங் கோட்டையாக, அனுமன் கண்ணுக்கு இலக்காயிற்று. அனுமன் உள்ளத்தில் உவகை கங்குகரையின்றி ஓர் கடலெனப் பொங்கி எழுந்தது. அவன் விண்ணில் முடிதாக்க நின்று தோள்கொட்டி ஆரவாரஞ் செய்தான். ஆகாயம் அதிர்ந்தது; திக்கெல்லாம் திடுக்கிட்டுக் குலுங்கி நடுநடுங்கிப் போயிற்று. பெருந்தவங்கொண்ட பெருந்தகை, விண்ணில் பொலிந்த வீரத் திருமுகமும் மயேந்திரமலையில் ஊன்றியதிருவடிகளு

* இது பழைய ஏடுகளில் கண்டபாடம். அச்சுப் பிரதிகளில் 'கொள்கை' யென்பது 'தோகை' யென்று சிதைந்திருக்கின்றது.

மாய் நின்றுபோகத்தின்பொற்கோயிலான இலங்கையை நோக்கினன். உடனே அடிகளை அழுத்தித் தாவ எத்தனித்தான்; வால் விசைத் தெடுத்துத் தாள்மடக்கி மார்பு ஒடுக்கி, இரண்டு வீரத்தோள்களும் பூரித்துப் பொங்கக் கழுத்தினைச் சுருக்கிக் கைகளை நீட்டி அதிவேகமாகப் பாய்ந்தெழுந்தான். இங்ஙனம் 1 உறுதியோடு 'இலங்கை மூதூர்க் கடி பொழிற் கனக நாஞ்சில் மண்டல மதிலை' இலக்காகக் கொண்டு பாய்ந்த அனுமன், அம்மதிலுக்கு நேராகவே வந்துவிட்டான். ஆனால் அம்மதிலை நோக்காது விலகி, இலங்கைத் தீவின் வடமலையாக அமைந்து பச்சை போர்த்து விளங்கிய பவளமலையிற் பாய்ந்தான். பாய்ந்த அப்பவளமலைக்கு அழகு செய்து திகழும் 'பசுஞ்சுடர்ச் சோலை'யில் தங்கி இலங்கையை யுற்று நோக்கினன் என்று கம்பர் கூறுகின்றார். 2 'தெய்வக் கற்பக நாட்டை யண்மி' (அதாவது தேவருலகத்திற்குச் சமீபமாகவே) வானவீதியில் விரைந்து சென்ற அனுமன் முதல் முதல் இலங்கையைக் கண்ணுற்ற நிகழ்ச்சியை நமதுகவி எவ்வளவு பொருத்தமாக எடுத்துரைக்கின்றார்! பாருங்கள்.

விண்ணிடை யுலகமென்னும்
மெல்லியல், மேனி நோக்கக்
கண்ணடி வைத்ததன்ன
இலங்கையைக் கண்ணிற்கண்டான்

அனுமன் ஆகாய வீதியிலே போக நிலமாகிய விண்ணாட்டையணுகி வந்தான். கீழே வரம்பின்றி விரிந்த கருங்கடல்; மேலே போகபூமியான பொன்னாடு. அனுமன் செல்லச் செல்ல வழியும் நீண்டு கொண்டே வளர்ந்து வந்தது. தான் பாய்ந்து சென்ற வானவீதிக்கும் வரம்பில்லை; கீழே கண்ணுக்கெட்டிய தூரமெல்லாம் விரிந்து பரந்து கொந்தளித்துக் குமுறிக் கோஷிக்கும் கடலுக்கும்முடிவில்லை 3 இந்தநிலையில் திடீரென்று இலங்கையை அனுமன் கண்ணிற் கண்டான். பொன்னாடென்னும் தெய்வ மெல்லியல் தன் மேனி முழுதும் நோக்க வைத்த நிலைக்கண்ணாடிபோல இலங்கை, முதல் முதல் பார்த்த அனுமன் கண்களில், ஒளிவீசி மிளிர்ந்தது—என்று கூறும் கம்பர் திருவாக்கு, இலங்கையை ஒரு போக பூமியாகக் காட்டுவதோடு, சந்தர்ப்பத்திற்கு எவ்வளவு இசைவாக, வாசகர் உள்ளத்திற்கு எவ்வளவு இனிமையாக, விளங்குகின்றது! வானவீதியில் பொன்னாட்டையே நோக்கிவந்த அனுமன், இலங்கையைக் கண்ணுற்றதும் இது போகபூமியான அப் பொன்னாட்டின் பிரதிபிம்பமோ என்று மயங்கி நிற்பது இயல்பேயாகும். நன்கு நோக்கிய பின்னர் "பொன்னகர் இதனையொக்கும் என்பது புல்லிதம்மா" என்று அனுமனே வியந்து கூறுகின்றான்.

இலங்கை பொன்னாட்டின் பிரதிபிம்பமன்று. பொன்னாடு இலங்கையின் சாயல் என்பதும் சரியன்று. விண்ணாட்டில் விருப்பமே இன்மையாகின்றது; குறையுள்ள இடத்திலன்றோ விருப்பம் தோன்றுகின்றது? ஆகவே 'வேண்டரு விண்ணாடு' என்று அனுமன் போக பூமியாகிய பொன்னாட்டைக் குறிக்கின்றான். விருப்பம் இன்மையாகின்றது; வெறுப்பும் இன்மையாகின்றதென்று அனுமன் கூறுகின்றானில்லை. தேவபோகங்களில் வெறுப்பு விளைதலும் கூடும். ஆனால் அரக்கர்களோ போக இன்பத்தில் வெறுப்பு விளையாத வண்ணம் போகத்திற்குரிய உபகரணங்களை முடிவில்லாதபடி பெருக்கிக்கொண்டேயிருந்தார்கள்; கிடைக்க அரிதான இன்பங்களையெல்லாம் மேன்மேலும் தேடிச் சேகரித்து வந்தார்கள்.

வேண்டிய வேண்டின் எய்தி
வெறுப்பின்றி வீழ்ந்து துய்க்கும்
ஈண்டரும் போக இன்பம்
ஈறிலது

ஒருநாளும் வெறுப்பு விளையாதபடி விதவிதமான—பலவேறு வகைப்பட்ட—போக இன்பங்கள் இலங்கையில் செறிந்திருந்தன. ஆதலால்போக பூமி ('துறக்கம்') இதுவே—பொன்னாடன்று என அனுமன் வியந்து இலங்கையைப் பாராட்டுகின்றான்.

உட்புலன் எழுநூறென்பர்
யோசனை, உலக மூன்றில்
தெட்புறு பொருள்களெல்லாம்
இதனுழைச் செறிந்த ... ...

இலங்கையின் பரப்பளவு எழுநூறு யோசனைதான். ஆனால் இங்கே உலக மூன்றிலுமுள்ள முதிர்ந்த இன்பப் பொருள்களெல்லாம் காணப்படுகின்றன. எல்லா உலகங்களிலுமுள்ள போக இன்பங்களின் தெள்ளத் தெளிந்த சாரங்களெல்லாம் இலங்கையில் ஒருங்கே செறிந்து குவிந்திருக்கின்றன. இங்ஙனம் அனுமன் யோசித்து முடிவில்

நரகம் ஒக்குமால்
நன்னெடுந் துறக்கம் இந்நகர்க்கு

என்று கூறிவிடுகின்றான். முதல் முதல் போக பூமியாகிய சொர்க்க பூமியைக்கண்டு இதுவோ இலங்கை' யென்று மயங்கிய அனுமன் இலங்கையைக் கண்டதும் 'இதுசொர்க்க பூமியின் பிரதிபிம்பமோ' என்று மயங்குகின்றான். பிறகு இலங்கையே துறக்கம் அல்லது சொர்க்க பூமியென்று விவகரிக்கின்றான். இலங்கையை எவ்விதத்திலும் துறக்கம் ஒக்கும் என்பது பொருந்தாது என்று வியக்கின்றான். முடிவில் இலங்கையே துறககம்; துறக்கமே நரகமென்று துணிகின்றான். அதாவது, இலங்கையே உண்மையான போக நிலம்; போகபூமியென்று புகழ்ந்தோதப்பெறும் துறக்கம் போகபூமியன்று என்பது அனுமன் துணிவு.

அனுமன் இலங்கையை முதல்முதல் நோக்கும்போது, சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்தான்.

ஆன் தகையனைய மேனி
சுருக்கி அச் சாளச் சாரல்
குன்றிடை யிருந்தான், வெய்யோன்
குரைகடல் குளிப்பதானான்

ஆண் தகையான அனுமன் (தன் பேராண்மைக்கிசைந்த) பேருருவத்தைச் சுருக்கிக்கொண்டிருந்தான். சூரியனும் தன் வெப்பத்தைக் குறைத்துக் கொண்டு கடலில் மூழ்கலாயினான். அஸ்தமன சூரியனது பொற்கதிர்களிலே மூழ்கிக் கிடந்த இலங்கைமாநகரை அனுமன் முதல் முதல் கண்ணுற்றான். எவரும் கடந்தறியாத இராவணனது கன்னிமாமதிலைக்கண்டான். கன்னிமதிலின் பொன்னொளியில் கண்ணும் வழுக்குமென்று கருதினான். கால்கள் வழுக்குமென்பது கூறவும் வேண்டுமோ? ஆகவே விசும்பிடைப் பாய்ந்து வந்த வீரன், மதிலைத் தரித்து நோக்காது விலகி ஆங்கு ஓர் பவளமலையைப் பார்த்தான்.

1 சுந்தரகாண்டம்:—முதலாவது கடல்தாவு படலம், பாட்டு உ.
2 கடல்தாவு படலம், பாட்டு அகூ.
3 கடல்தாவு படலம் பாட்டு அஅ.

பவளமலையைப் போர்த்துப பச்சைப் பசேலென்று விளங்கும் இரத்தின கம்பளம் போன்ற பூஞ்சோலையைப் பார்த்தான். அஸ்தமன சூரியனது பொன்னொளியில் மூழ்கி இச் சோலை பவளாதனின் மீது திகழும் மரகதம்போல் சுடர்விசியது. ஆகையால் கவி இதனை 'பசுஞ் சுடர்ச் சோலை' யென்று கூறுகின்றார். அஸ்தமன சூரியனது ஒளி வெள்ளத்திலே 'தகதக' வென்று ஒளி செய்து மிளிரும் இலங்கைத்தீவைக் கண்ணுற்ற அனுமன் 'போக பூமியென்னும் பூப்பாவை,மேனியழகை நோக்க வைத்தமணிக்கண்ணாடிபோஇது!' என்று பிரமிக்கின்றான். மாலையின் மனோஹரமான பொன்னொளியில், இலங்கையின் பொன்னொளி பிரதிபலிக்கின்றது. இப்பேரொளி 'பாய்தலின், பசும்பொன் உருகுகின்றது போன்றுளது உலகுசூழ் உவரி (இலங்கையைச் சூழ்ந்த கடல்)'. இவ் அழகு வெள்ளத்தைக் கடல் தாவிவந்த அனுமன் தாபமும் தாகமும்கெடக் கண்களால் முகந்து முகந்து பருகினான்.

மரகதத்தினும், மற்றுள
மணியினும் வனைந்த
குரகதத் தடந்தேரினம்
அவை பயில் கொட்டில்
இரவி வெள்க நின்று
இமைக்கின்ற இயற்கைய

சூரியனும் வெட்கமடைந்து கடலில் மூழ்கும்படி எதிரொளி செய்தன, இலங்கையிலுள்ள இரத்தினமயமான கொட்டில்கள்! இலங்கையின் மணி மாடங்களின் செல்வச் சிறப்பினை இயம்பவும் வேண்டுமோ?

இனைய மாடங்கள் இந்திரற்கு
அமைவர எடுத்த
மனையின் மாட்சிய என்னின் அச்
சொல்லும் மாசுண்ணும்.

தேவராஜாவான தேவேந்திரனது அரண்மனை இலங்கையின் குடிகளாயுள்ள சாதாரண அரக்கர் மாளிகைக்கும் ஒப்பாகும் என்று, உவமிப்பது தகாது, தகாது. இத்தகைய மாளிகைகளே, ஆனந்தமயமான அஸ்தமன வேளையில் பார்த்த அனுமன்,

பொன் கொண்டிழைத்த,
மணியைக்கொடு பொதிந்த,
மின்கொண் டமைத்த,
வெயிலைக் கொடு சமைத்த,
என் கொண்டியற்றிய
எனத் தெரிகிலாத,

என்று பிரமித்துப் போய்விட்டான். மாலையின் பொன்னிறமான 'மத்தாப்பு' வெளிச்சத்தில் எதிரொளிசெய்து திகழும் இலங்கை மாளிகைகள் எவ்வாறு இயற்றப்பெற்றன என்று அவன் தனக்குள் தானே போராச்சரிபமுற்று வினவலாயினான். இவை பொன்கொண்டு இழைத்தனவா?மணி கொண்டு பொதிந்தனவா? மின்னற் கொடிகளைக்கொண்டே வேய்ந்து அமைக்கப்பெற்றனவா? அல்லது இம் மாலையில்மிளிரும்மஞ்சள்வெயிலாலேயே—அஸ்தமன சூரியனது பொன்னிறக் கதிர்களாலேயே—இம்மாடங்கள் சமைந்தனவா? இவ்விதமாக வியந்து அனுமன் திகைத்து நின்றான். இத்தகைய இலங்கை நகரின் நிர்மாணத்தைக் குறித்து நமது கவி ஒரு குறிப்பு அளிக்கின்றார்.

பொன்னின் மால்வரை மேல்
மணிபொழிந்தன பொருவ *
உன்னும் நான்முகத் தொருவன்
நின்று ஊழ்முறை யுரைக்கப்
பன்னி நாள் பல பணியுழந்து
அரிதினில் படைத்தான்

* 'பொருவ' என்பது அச்சுப் பிரதிகளில் 'பொருத்தி' என்று சிதைந்து உருமாறிவிட்டது.



சொன்ன வானவர் தச்சன்
நாம் இந்நகர் துதிப்பான்.

இலங்கை நகரம் பொன்மலைமேல் அமைக்கப்பெற்றதோர் திருநகரமாகும். இந்நகர அமைப்பைக் குறித்து, படைப்புக்கடவுளான பிரமதேவனே ஆராய்ந்து ஆழ்ந்த ஆலோசனையின் பயனாகமுன்னமே ஒரு 'படம்'(plan) தயார் செய்து அதனைக் கொஞ்சம் கொஞ்சமாக வானவர் தச்சனுக்கு வெளியிட்டான். தெய்வச் சிற்பியும் நன்கு ஆலோசித்துப் பன்னெடு நாள் பணியுழந்து பழகிப் பயின்றபின் அரிதில் முயன்று இந்நகரத்தை நிர்மாணஞ்செய்தான். இங்ஙனம் தெய்வத் தச்சனும் நான்முகச் சிற்பியும் கூடிக்கருத்தொருமித்துக் கலந்து ஆலோசனை செய்து அமைத்த இலங்கையின் செல்வமணி மாடங்கள் பொன் மலைமேல், மாலை வெயிலில், மிளிரும் அற்புதக் காட்சியை அனுமன் கண்ணுற்றான். முதலில் ஆச்சரியத்தால் விழுங்கப்பெற்றவனாகி மதிமயங்கி நின்றான். பிறகு அக்கண் கொளாக்காட்சியை அனுமன் கண்கள்சிறிது சிறிதாகப் பார்த்துப் பார்த்துப் பழகலாயின. அப்போது தான் அனுமன் அந்நகர அமைப்பை ஒருவாறு உணர்ந்து கொண்டான். அந்நகரம் நான்முகச் சிற்பியின் ஆலோசனைக் கேற்ப, தெய்வச் சிற்பியின் சித்திரக்கையழகு தோன்ற, பொன் மலையின் முடிமணியாகத் திகழ்கின்றது. அந்நகரத்தை அணிசெய்து நிற்கும் நெடுமாடங்கள் அம்மலையின் முடிமீது வானுற நிமிர்ந்தோங்குகின்றன. இத்தோற்றம் சூரியாஸ்தமன வேளையில் பொன்மலைமீது மணிமழை பொழிவது போல விளங்கியது. கைபுனைந்தியற்றிய இலங்கைமா நகரம் தேர்ந்து முதிர்ந்தநிர்மாணத் திறமையால் கைபுனைந்தியற்றப் பெறாத ஓர் அற்புத இயற்கைப்பேரழகைத் தோற்றுவிக்கின்றது. 'தெய்வமாத்தச்சன் துணிவின் வந்தனன்தொட்டழகிழைத்தஅத்தொழில்கள்' என்றவண்ணம் தெய்வச் சிற்பி துணிந்து வந்து தன் சித்திரக்கையால் தொட்டுத்தொட்டு அழகையேஇழைத்துச் செய்தஅருந்தொழில்கள்,செயற்கையால் அமைக்கப்பெற்றனவாகத்தோன்றவில்லை; அவை இயற்கையாக விளையும் அற்புதங்களை யொத்து விளங்கின. இவை பொன் கொண்டிழைத்தனவா? மணி கொண்டு பொதிந்தனவா? மின்கொண்டமைந்தனவா? வெயில் கொண்டு சமைந்தனவா?—என்று கலங்கிய அனுமன் ஒருவாறு துணிந்து 'தொட்டு அழகையே இழைத்துச் செய்தன இவ் அரும்பெருந்தொழில்கள்!' என்று வியந்து கூறுகின்றான். இத்தகைய மாடமாளிகைகள்,

ஆகாயம் அஞ்ச அகல்மேருவை அனுக்கும்
மாகால் வழங்குசிறு தென்றல்வர, நின்ற.

ஆகாயத்தைக் கலக்கி மகமேருவையும் குலுங்கச் செய்யவல்ல பெரும் புயற்காற்றும் இராவண பயத்தாலே இலங்கையில் நுழையும்போது சிறு தென்றலாகித் தவழ்ந்து வந்தது. இத்தகைய இளந்தென்றல் இனிமையாகத் தவழ்ந்துவர, அம்மணி நெடு மாடங்கள் அந்தி வெயிலில் மூழ்கிச்செருக்கொடு கம்பீரமாக நிமிர்ந்து நின்றன. இவ் இளம் பூந்தென்றலைப் பருகி, மாலை மஞ்சள் வெயிலில் மூழ்கிப், பண்சுமந்த குரலால் உரையாடிப் பணியாற்றும் இப்பெண்மணிகள் யார்? இவர்கள் இல்லக்கிழத்தியரான எஜமானிகளல்லர்; இவர்கள் பணிப்பெண்களே யாவர்.

மாகாரின் மின்கொடி மடக்கினர் அடுக்கி
மீகாரம் எங்கணும் நறுந்துகள் விளக்கி
ஆகாய கங்கையினை அங்கையினின் அள்
[ளிப்

பாகாய செஞ்சோலவர் வீசபடு காரம்.

மேன்மாட மெங்கும், மகரந்தப்பொடிகளை இப் பணிப்பெண்கள் மின்னற் கொடிகளால் அமைந்த துடைப்பங் கொண்டு விளக்குகின்றார்கள். ஆகாயகங்கையினைத் தம் அழகிய தளிர்க் கைகளால் அள்ளி யள்ளித் தெளிக்கிறார்கள். இவர்கள் இளந்தேம் பாகில் அள்ளிக்கொண்ட இனிய செஞ்சொற்களால் ஒருவரோடொருவர் உரையாடிக்கொண்டு களைப்பை மறந்து தொண்டு செய்கிறார்கள். இவர்கள் யார்? 'அரிமடந்தையர் சிலதியர் அரக்கியர்க்கு'—இவர்கள் அரக்கியர்க்கு அடிமைகள்; "பொன்னகர் மடந்தையர், விஞ்சைப்பூவையர், பன்னக வனிதையர், இயக்கர்பாவையர்". இவர்கள் கணவரோ "தேவரும், அவுணரும், செங்கண் நாகரும், மேவரும் இயக்கரும், விஞ்சை வேந்தரு"மாவர். இத்தகைய உருவும் திருவும் உயர் குலமும் வாய்ந்த தெய்வப் பெண்கள் அரக்கர் பேரூரில் அடிமைகளாய்ப் பணியுழந்து உழலுவதற்குக்காரணம் என்னே? இத் தேவமாதர்களது காதலர்களும் அரக்கர்களது அருள் நோக்கிப் பணிசெய்து கிடக்கிறார்கள். 'அமரர் உரம் அடங்கிவந்து உழையராய்உழல்பவர்'. தேவர்கள் தங்கள் பதவியை யிழந்து ஆண்மையையும் இழந்து இலங்கை வாசிகளுக்குக் சொத்தடிமைகளாய் வாழ்கிறார்கள். உண்மையில், சுதந்திரமிழந்த இவர்கள் வாழ்கின்றார்களில்லை; உழல்கின்றார்கள்—அதாவது, மனஞ்சுழன்று தயங்குகின்றார்கள். இது இராவண ராஜ்யத்தில், தேவசமுகத்தின் நிலைமை. அன்னிய ஆட்சியில் ஆண்மை ஏது? உரிமையுணர் வேது? ஆண்மையாளர்களை அரக்கர்கள் எவ்வாறு அடக்கி வந்தார்கள்? இதற்கும் கம்பர் ஒரு குறிப்பு அளிக்கின்றார். "முட்டில் வீடுகாண்குறும் தேவரால் விழுநடங் காண்பார்." ஆண்மையை—உரிமையுணர்வை—இழந்துவிடாத தேவர்களை அரக்கர்கள் சிறையில் அடைத்து வைத்தார்கள். அஞ்சா நெஞ்சு படைத்த ஆண்சிங்கங்களுக்கே சிறைச்சாலை தவச்சாலையாகும். அவர்கள் முன்னினும் அதிக ஆவேசத்தோடு வெளிப்படுவார்கள். பிறரோ மனமுடைந்து ஆண்மை சிதைந்து உரிமை யுணர்விழந்து அடிமையுணர்வோடு விடுதலை பெறுவார்கள். இங்ஙனமாக வீடுகண்டதேவர்கள் அடிமையுணர்வோடு இராஜபக்தி (இராவணபக்தி) நிரம்பப்பெற்று விட்டார்களா என்பதை அரக்கர்கள் சோதனைசெய்தார்கள். எவ்வாறுசோதித்தார்கள்? இதற்காக அவர்கள் ஒரு விகடமான ஆலோசனைசெய்தார்கள். அரக்கர்கள் தங்கள் இஷ்டப்படி தேவர்களைக் கூத்தாடச் செய்து வேடிக்கை பார்த்தார்கள். எஜமானர்களது இஷ்டப்படி கூத்தாடுவது அடிமைகளும் இராஜபக்தர்களுமான தேவர்களது கடமையல்லவா? இராவண ராஜ்யத்தில் தேவர்களுக்கு உரிமை யில்லாவிட்டாலும் கடமைகளிருந்தன.

(தொடரும்)

# நரைக்கு மருந்து.

நெல்லை நேசன்.

தமிழகம் நாகரிகத்தின் பிறப்பகம். ஆதித்தமிழர் முருகனது இயற்கைக் கோயிலான மலையில் வசித்தார்; குகைகளில் வாழ்ந்தார். 'குகையில் வளரும் கனலே' என்று எமது தமிழ்க்கடவுளை (குகனை), பாரதியார் பாடுவது காண்க. ஆதித்தமிழர் குறிஞ்சி நிலமக்கள். இயற்கைமணம் கமழும் தமிழ்க்கடவுள் சந்நிதியிலே, அமிழ்தினு மினிய தமிழ்மொழி பிறந்தது. இன்பவளஞ் செறிந்த இயற்கை யழகு பொழியும் தமிழ்க்கடவுள்—மலைக்கோயிலிலே, இயற்கை யோடிசைந்த தெய்வத் தமிழ் நாகரிகம் தோன்றித் திகழ்ந்தது. இயற்கையொடு பிறந்த ஆதித் தமிழ்மக்கள் நாளடைவில் ஆடுமாடுகளைப்பழக்கக் கற்றுக்கொண்டார்கள். அவர்கள் ஆடுமாடுகளையே செல்வமாகப் போற்றினார்கள். 'வாழ்க..........., ஆனினம்' என்னும் ஜீவகாருணிய உணர்வு முதல் முதல் தமிழ் நிலத்திலே தான் முளைத்தெழுந்தது. ஆடு மாடுகளை மேய்க்கும் பொருட்டு நமது முன்னோர்கள் மலையிலும் மலை சார்ந்த இடங்களிலும் நிலைத்திராது, பசும்புல் தரைகளைத் தேடித்திரிந்தார்கள். அப்போது ஒரு தமிழ்க் கூட்டத்தினர் காடுகளிலும் காடுசார்ந்த நிலங்களிலும் திரியும் முல்லை நிலமக்களாயினர். இயற்கைச்செல்வியின் இன்பப் பூங்காவனமாகிய காடு, தமிழ் நாகரிகத்தின் அருமைத் தொட்டிலாக அமைந்தது, கடைசியாக ஒரு கூட்டத்தார் அங்கும் இங்கும் அலைந்து திரிவதைவிட்டு, காடுகெடுத்து நாடாக்கி ஓரிடத்தில் நிலையாகக் குடியேறினர். காடு வெட்டிச்சமமாக்கி நிலத்தை யுழுது பண்படுத்தி விவசாயஞ் செய்தார். செந்நெற்பயிரோடு செந்தமிழ்ப் பயிரும் கதிர்வீசி யெழுந்தது. நற்றமிழோடு நாகரிகமும் மேனி செழித்து வளர்ந்தது. இந்நிலைமையில் தான் தமிழ் மக்களிடையே கிராமவாழ்வு தளிரோடி இலைவீசித் தழைத்தோங்கியது.

இவ்விதமாக மக்கள் ஓரிடத்தில் ஒரு சமூகமாக நிலைபெற்று வலியுற்று வாழத் தொடங்கிய நாளில், 'அரசாங்கம்' பிறந்தது. சமூகத்தில் வீர புருஷனை ஓர் இனத்தலைவன் தோன்றினன். இவன் குடும்பத் தலைவர்களின் கூட்டுறவு பெற்று, சமூக விவகாரங்களைநடத்தலாயினன். இவனே ஆதியரசன். இத்தகைய வீர மன்னனது வழிமுறையே வந்தவர், தமிழநாட்டு முடியுடை மூவேந்தர். தமிழ்நாட்டில் பெரும்பாலும் முடியரசே நடைபெற்று வந்தது. எனினும் கிராமங்களிலே குடியரசு நிலைபெற்று நிலவியது. தமிழ் நாகரிகம் மலையிலே பிறந்தது; காட்டிலே வளர்ந்தது; நாட்டிலே விளைந்து முதிர்ந்தது. இயற்கைச் செல்வியின் எழில் நிலயமான மலையிலும் இன்பத்தோட்டமான காட்டிலும் தோன்றித்திகழ்ந்த பைந்தமிழ்ப்பூங்கொடி, கிராமவாழ்வைக் கொழுகொம்பாகத் தழுவிப் படர்ந்தெழுந்தது. இக்கொழுஞ்சுடர்க்கொடியில் அரும்பின சங்கநூல்கள்; வெடித்து மலர்ந்தது வள்ளுவர்; கனிந்தது கம்பர்.

தமிழ்ப் பெருமன்னர் மதுரை, பூம்புகார் ஆகிய புராதனநகரங்களை நிர்மாணஞ் செய்தார். மாடமாளிகை கூடகோபுரங்களை அழகுற அமைத்தார்; ஆடம்பர வாழ்க்கைக்குரிய தொழில்முறைகளைவகுத்தார்; இன்பவகைகளைப்பெருக்கினர்; நாகரிகத்தின் பலவேறு துறைகளையும் வளமுறச்செய்தார். இம்முடி மன்னரைத் தமிழுலகம் "நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே; மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம்!" என்று வாழ்த்தி வணங்கிற்று. எனினும் தமிழ் நாகரிகத்தின் ஜீவசக்தி-ஜீவவேகம், கிராமங்களிலிருந்து தான் பொங்கியெழுந்தது. தமிழ் மக்களில் பெரும்பாலார் கிராமவாசிகள்; வள்ளுவர்போன்ற பேரறிவாளர் கிராமவாசிகள்; கவிகளிற் சிறந்தோர் கிராமவாசிகள்; கல்வியிற் பெரியோர் கிராமவாசிகள்; அருட்பெருஞ் செல்வரான பக்தருங் கிராமவாசிகள். கலைச் செல்வரான சித்தரும் கிராமவாசிகள். இவர்கள் உரிமையுணர்வோடு, வீர சுதந்திர விருப்போடு, பிறந்தார்கள்—வளர்ந்தார்கள் — வாழ்ந்தார்கள். வீரசுதந்திரத்தோடு விண்ணுற்றார்கள்.

முடியரசு கிராமங்களின் குடியரசில் அனுவசியமாகத் தலையிடவில்லை. கிராமங்களிலே தமிழ்ப் பெருமக்கள் தற்கால நாகரிக நாடுகளிலிருப்பதைப்போலவே தேர்தல் முறைகளைக் கைக்கொண்டார்கள்; முடியாட்சிக்கு வணங்காத குடியாட்சி புரிந்தார்கள். அரசு கட்டில்கள் புரண்டன; மணிமுடிகள் உருண்டன; எனினும் கிராமங்களில் வேரூன்றிய குடியரசு அசையாது நின்றது. அன்னியர் ஆட்சி இந்நாட்டில் நிலையிடப்பெற்ற பின்னரே நமது கிராம சுய ஆட்சி நிலை குலைந்தது; வீழ்த்தப்பட்டது. கிராம வாழ்வோடு நம் உரிமை யுணர்வும் நம்மினின்றும் விடைகொண்டது. அடிமை யுணர்வு அகமும் புறமும் நிறைந்து ததும்பி வழிகின்றது. சுதந்திரதேவி நம் நாட்டிலே வாழ்விழந்த பழந்தெய்வமாக ஏடுகளில், நூல்களில் பதுங்கி நிற்கின்றாள். வறுமை பிணி கவலை அறியாமை, தலைவிரிகோலமாய்த் தாண்டவமிடுகின்றன. கிராமங்களில் வளர்ந்த பைந்தமிழ் 'என்றும் ஓர் துளிவரக் காணு நன் மருந்துபோல்' நலனிழந்து, சிறையின் எய்திய சீதைபோல வாடி ஒடுங்கிப்போயிற்று.

பண்டைத் தமிழர் அறிவு நலத்திற்கும் நாகரிக நலத்திற்கும் அவர்களது கிராம அமைப்பு முறைகளே தக்க சான்றாகும். கிராமமே தமிழ் மொழிக்கும் தமிழ் நாகரிகத்திற்கும் ஓரரிய வளர்ப்புப் பண்ணையாக விளங்கியது. கிராமமே தமிழ்த் தேவியும் சுதந்திரதேவியும் கைகோத்துக் களிநடம் புரியும் ஒரினிய நடனசாலையாகத் திகழ்ந்தது. கிராமமே செந்தமிழ்ச் செல்வத்தின் மூல பண்டாரம்; நம் மூதாதையர்களது உயர்ந்த கொள்கைகளின் உறையுள். இவ்வுண்மைகள் நெடுங் காலமாக மறைந்து கிடந்தன; இப்பொழுது சிறிது சிறிதாக வெளிப்படுகின்றன. புதிய புதிய ஆராய்ச்சிகள், கல்வெட்டுக்கள் முதலிய சாசனங்கள் இவ்வுண்மைகளைப் புதுமை புதுமைகளாக (wonders) நமக்குக் காட்டுகின்றன. ஆங்கிலேயர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளியிட்டுள்ள சில குறிப்புக்களும் இவ்வுண்மையை அரண்செய்கின்றன. இப்பொழுது இங்கே தமிழரது கிராம



வாழ்வின் அருமை பெருமைகளைக் குறித்து ஓர் இலக்கியச் சான்றுமட்டும் தருகின்றோம். இது நம் தஉரிமைப் பழந்தனமான 'எட்டுத்தொகை'யுள் ஒன்றாகிய புறநானூறு என்னும் 'பன்மணித்திரளி'லிருந்து பொறுக்கியெடுத்ததோர் அருமணியாகும். இரத்தின பரீட்சையில் தேர்ந்த வாசகர்களே இம்முழுமணியின் விலையை மதிப்பார்களாக.

யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதிர் ஆயின்,
மாண்ட என் மனைவியொடு மக்களும் நிர
[ம்பினர்;
யான்கண் டனையர் என் இளையரும்; வே
[ந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்; அதன் தலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்; யான்வாழும் ஊரே!

தமிழ் மக்கள் தற்சுதந்திரத்தோடு வீர வாழ்வு வாழ்ந்த நாளிலே உறையூரைத் தலைநகராகக்கொண்டு கோப்பெருஞ்சோழன் என்னும் ஒரு வீர மன்னன், 'தென்னாட்டின் பூந்தோட்டம்' என்று சிறப்பித்துக் கூறப்படும் சோழவளநாட்டை ஆண்டு வந்தான். இவ் அரசர் பெருமானது ஆருயிர்த் தோழராய் விளங்கியவர் பாண்டிநாட்டுப் பாவேந்தரான பிசிராந்தையாரென்பவர். கோப்பெருஞ் சோழன் புவியரசாகப் புகழ்பெற்றிருந்தது போலவே கவியரசராகவும் புகழ்பெற்று விளங்கினர். ஆகையால் ஒத்த உணர்வு வாய்ந்த அரசனுக்கும் புலவருக்கும் இடையேதோன்றிய நட்பு, நாளுக்கு நாள் புதிய புதிய வண்ணமும் வனப்பும் பெற்று வளர்ந்தோங்கியது. எனினும் உலக வாழ்க்கையில் அரசன் செல்லும் நெறி வேறு: புலவன் செல்லும்நெறி வேறு. அரசனோ போர்வீரன்; ஆற்றலை வளர்த்தான்; ஆசையைப் பெருக்கினன்; கவலையென்னும் நரகத்தில் ஆழ்ந்தான்; முடிவில் வாழ்வையே வெறுத்தான். கவலை தோய்ந்த உயிர் வாழ்க்கை, தாங்குதற்கு அரிய பெருஞ்சுமையாகி விட்டது. நரை திரை மூப்பு, அரசனைப் 'பிஞ்சிலே பழுக்க'ச் செய்தன. இந்த நிலைமையில் அரசன் எல்லாவற்றையும் வெறுத்தான், துறந்தான். அக்கால வழக்கத்தின்படி வடக்கிருந்து உயிரையும் துறப்பதாகத் தீர்மானித்தான். இவன் வடக்கிருந்ததைக் கேட்டு இவனது உயிர் நண்பரான பிசிராந்தையார் வந்தார். இவர் அரசனைப்போல் செயற்கை வாழ்வு வாழ்ந்தவரல்லர். இவர் பாண்டி நாட்டிலுள்ள பிசிரென்னும் தமது கிராமத்திலே இயற்கை வாழ்வு வாழ்ந்தவர்; இயற்கை யின்பம் பருகியவர்; இயற்கையழகோடு வளர்ந்தவர். இவரது உள்ளம் பரமபதத்தை யொத்த குழந்தையுள்ளம். பேராசை இவரை விழுங்கிவிடவில்லை. கவலை இவரைத் தின்றுவிடவில்லை. இளமை இவரது உள்ளத்தில் வேரூன்றி, உடம்பில் படர்ந்து திகழ்ந்தது. 'நரை உமக்கு இல்லையோ?' என்று வினவினோர்க்கு நமது புலவர் பெருமான் அளித்த விடையே நாம் இச்சமயத்து மேலே குறித்திருக்கும் அற்புதமான பாடலாகும்.

இதன்பொருள்:—உமக்குச்சென்ற ஆண்டுகள் பலவாயிருக்க நரையில்லையாகுதல் எப்படி யாயினீர் என்றுகேட்பீராயின், இக்கேள்விக்கு விடை தருகிறேன். இதற்குக்காரணம் எனது கிராம வாழ்க்கையே யாகும். நான் இருக்கின்ற ஊரே நரைக்கு மருந்து. இவ் அழகிய ஊரின்கண் எனது இல்லம் இருக்கின்றது. இவ் இல்லமே

என் இன்ப நிலயம். இல்லத்தில் அன்பாசு செலுத்தும் என் செல்வி யோ அழகாலும் குணத்தாலும், நிரம்பிய அறிவாலும் மாட்சிமைப்பட்டவள். நானும் என் காதலியும் சீர் பெற்று வாழ்வதற்குரிய எங்கள்செல்வமக்களும் தம் அன்னையைப்போலவே செல்வத்துட்செல்வமான அறிவுச் செல்வம் நிரம்பப் பெற்றவர். ஆகவே, எனக்கு மனைவி மக்களால் யாதொரு கவலையும் ஏற்படுவதில்லை. மேலும், வீட்டு வேலைக்காரர்களாலும் எனக்குத் துன்பம் விளைவதில்லை. ஏனெனில் அவர்களும் எங்கள் குடும்பத்து நற்பழக்கத்தால்நல்லறிவுபெற்று, யான் கருதிய அதனையே கருதுவர். இதனால் எனக்குக் குடும்பக் கவலை யென்பது ஒரு சிறிதுமில்லை. என் கிராமமோ எனக்கு ஒரு பெருங்குடும்பமாகவே யமைந்திருக்கின்றது. எங்கள் கிராம அமைப்பு முறைகளை, அரசனும் முறையல்லாதன செய்யானாய்க் காக்கின்றான். ஆகவே அரசாங்கத்தைப் பற்றிய கவலையும் எனக்கில்லை. கவலையின்மையால் எனக்கு நரையில்லை, மூப்பில்லை. இதற்கு மேலே, எனக்கு வாடாத இளமை நல்கும் இன்னொரு மருந்தும் எங்களூரில் இருக்கின்றது. அஃதாவது, கல்வியறிவால் நிறைந்து, அறிவினைப்போல் பணிவும், அப்பணிவுபோல் தன்னடக்கமும் வாய்ந்து, உயர்ந்த லட்சியங்களுடன் வாழும் சான்றோர் (மகாத்மாக்கள்) பலர், எமது ஊரிலிருக்கிறார்கள். இவர்களுடைய அறவுரைகளோடும் அறிவுரைகளோடும் பழகுவதால், நானும் இழிவான எண்ணங்களையும் கவலைகளையும் ஆசைகளையும் கருத்தில் புகவொட்டாதபடி தடுத்துவிடுகின்றேன். இயற்கையோடும் மகான்களோடும் இசைந்து கவலையில்லாத கிராமவாழ்வு வாழ்வதால், என்பால் என்றும் மாறாத இளமை வலியுற்று நிலைத்திருக்கின்றது.

இங்ஙனம்கூறும் கிராமவாசியாகிய நமதுகவிராயரும்நகரவாசியாகியகோப்பெருஞ்சோழனும் உயிரினுமினிய பேரன்பினராய் விளங்கினார்கள். இவர்களது அற்புத நட்பின் திறத்தை, நம் தமிழ்நாடு ஒருபோதும் மறந்ததில்லை யென்பது நச்சினார்க்கினியர் பரிமேலழகர் தம் உரைகளில் தரும் சான்றுகளால் இனிது புலனாகின்றது. அரசன் கிராமவாசியான தன் வித்துவநண்பனை 'என் உயிர் ஓம்புனனே' (என் உயிரைப் பாதுகாப்பவனே) என்று கூறுகின்றான். இவ்வண்ணமே கிராமவாழ்வும் பண்டை நாளில் தமிழ்நாட்டின் உயிரைப் பாதுகாத்துநின்றது. வாசகர்களே! நம் தமிழ் நாகரிகத்தின் உறுதியான அடிப்படை கிராமவாழ்வு என்பதை ஒருபோதும் மறந்துவிடவேண்டாம். உண்மையில் நமது கிராமங்களின் குடில்களிலே தான் தமிழ்ப் பெருமக்கள் வசிக்கின்றனர். நமது வாழ்வின் நிலைக்களம் கிராமம். நமது இலக்கியங்களின் தாயகம் கிராமம். நகரவாழ்வு நரகவாழ்வே யாகும். தற்காலத்தில் தோன்றிவரும் தமிழர் புதுவாழ் வியக்கம் நிலைபெற்று மேன்மேலும் மேலோங்கி வளரவேண்டுமாயின், இவ் வியக்கம் நமது கிராமவாசிகளின் பேராதரவு பெறவேண்டும். இதனையே நோக்கமாகக் கொண்டு நமது இளைஞர்களிற் பலர் தமிழ்த்தொண்டர்களாய், நமதுகிராமங்கள் சென்று உபந்யாச வாயிலாக நாடெங்கும் கிளர்ச்சிசெய்து செந்தமிழ் மணம் பரப்ப முயல்வார்களாக.

# குறத்திப் பாட்டு.

குற்றாலமலை வளங்கூறுதல்.

(கண்ணிகள்.)

வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்,
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்.
கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பார்,
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்.
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்,
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்.
கூனல்இளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே.

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்,
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண் டோடும்.
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்,
கிப்புரியின் கொம்பொடித்து வெம்புதினை யிடிப்போம்.
செழுந்தரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்,
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்.
வழங்குகொடை மகாராசர் குறும்பலவில் ஈசர்
வளம்பெருகும் திரிகூட மலையெங்கள் மலையே.

ஆடும் அரவீனும்மணி கோடிவெயில் எறிக்கும்,
அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்.
வேடுவர்கள் தினைவிரைக்கச் சாடுபுனந் தோறும்,
விந்தையகில் குங்குமமும் சந்தனமும் நாறும்.
காடுதோறும் ஓடிவரை யாடுகுதி பாயும்,
காகம்அணு காமலையில் மேகநிரை சாயும்.
நீடுபல வீசர்கயி லாசகிரி வாசர்
நிலைதங்கும் திரிகூட மலையெங்கள் மலையே.

கொல்லிமலை எனக்கிளைய செல்லிமலை யம்மே
கொழுநனுக்குக் காணிமலை பழநிமலை யம்மே
எல்லுலவும் விந்தமலை எந்தைமலை யம்மே
இமயமலை என்னுடைய தமயன்மலை யம்மே
சொல்லரிய சாமிமலை மாமிமலை யம்மே
தோழிமலை நாஞ்சிநாட்டு வேள்விமலை யம்மே
செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்கள் ஆடும்
திரிகூட மலையெங்கள் செல்வமலை யம்மே.

குறிப்பு:—இப்பாடல்கள் திருக்குற்றாலக் குறவஞ்சி யென்னும் நாடகத்தமிழ் நூலின் ஓர் உறுப்பாகிய 'மலைவளம் கூறுதல்' ஆகும். குறவஞ்சி யென்பது குறத்திப்பாட்டு. இது ஓரழகிய சிறுநூல். எனினும் இது நமது செந்தமிழ்த் தெய்வத்தின் திருவுளத்திற்கு மிக இனிதாய், அவளது நவரத்தின மேனியை விட்டு நீங்காது அழகு செயயும் ஓர் அருமையான ஆபரணமாகும். இவ் அற்புத அணியினை, நமது தமிழ்த்தாய்க்கு அணிந்து மகிழ்ந்த பெரியார் திருக்குற்றாலத்துப் பக்கமாகிய ஒரு கிராமத்தில் வாழ்ந்த வேளாளகுல விளக்கான திரிகூடராசப்பக் கவிராய மூர்த்திகளாவர். இவர் பாடிய திருக்குற்றாலத்தல புராணத்தில், இவரது கல்வித்திறமும், குறவஞ்சியில் கவித்திறமும் இனிதுபுலனுகின்றன. புராணத்தில் பக்திச்சுவை பழுத்தொழுகுகின்றது. குறவஞ்சியிலே கவிரசம் கனிந்து சொட்டுகின்றது. கவியழகில் 'குறத்திப் பாட்டு' பிற்காலத்தில் தோன்றிய பலபல பெருநூல்களையும் வென்று விடுகிறதென்பது கவிநயம் உணர்ந்தோர் கொள்கை. கவியின்பத்தில் குறவஞ்சி, ஆசிரியரது தல புராணத்திற்கும் முன்நிற்பதென்பது எமது அபிப்பிராயம். பிற்காலத்துப் பாரகாவியங்களான பணிகள் பலவும் தமிழ் மகளுக்கு அணிகளல்ல; பாரமான சுமைகளே யாவன. அழகை மறைத்து நிற்கும் அநாகரிகமான இப்பணிகளைத் தமிழ்மகள் காலவகையால் துறந்த பின்னரும், குறவஞ்சி போன்ற சிறுமணிகள் அமிழ்தினுமினிய நம்தமிழன்னையின் தெய்வத் திருமேனியை என்றும் ஒளி குன்றாது அழகு செய்யும் நல்லணிகளாக எஞ்சி நிற்குமென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

பண்சுமந்து, அழகு சுமந்து, இன்பஞ்சுமந்து, நகர்ந்தும் ஓடியும் துள்ளியும் செல்லும் இக் 'குறத்திப் பாட்டு', பண்டை நாடகத் தமிழினின்றும் நழுவி விழுந்த ஓரரிய விசேஷ இன்பச் சுடராகும். இது இற்றைக்குச் சற்றேறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்கு முன், இயற்கையின் பேரின்ப நிலையமான திருக்குற்றாலத்திற்கு அருகே பிறந்தது. குற்றாலத்தின் இன்பசுகம் இப்பாடல்களின் இசையிலே பொங்கி யெழுகின்றது. இளந்தென்றல் போல, இவை என்றும் புதியனவாய், என்றும் இனியனவாய், தவழ்ந்து வந்து வாசகரது உளத்தையும் உயிரையும் ஒருங்கே தழுவிக் குளிர்விக்கின்றன. 'குறவஞ்சி'யில், தமிழ்க் கன்னி ஒரு மோகனப்பசுங்கிளிபோலக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறாள். இப்பாடல்களில் இளந்தேம்பாகின் மதுரமும், அந்திவானத்தின் அழகும், வெண்ணிலவின் தண்மையும் கலந்து விளங்குகின்றன. "தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்" என்பது தேனா? தென்றலா? இன்பஅலையா? இசை வெள்ளமா? இது 'தேனருவி'யின் தெவிட்டாத அழகன்றோ? 'கிழங்குகிள்ளித் தேன் எடுத்து வளம்பாடி நடிப்போம்' என்பதுபோன்ற கண்ணிகளில், கவிதம்மை முழுக்க இழந்து, மலைவாழும் குறமகளாகவே நடித்து வளம்பாடுகிறார்.

அரும்பத உரை: மந்தி — பெண்குரங்கு. கானவர்—வேடர். கவனசித்தர்—வானவீதியில் நடக்கும் சித்தர். கூனல்—வளைவு. வேணி—சடை. கழங்கு—கழற்சிக்காய். சிற்றில்—சிறுவீடு. கிம்புரி—பூண். கொம்பு—காட்டானைத் தந்தம். வெடிக்கும்—தூரஞ்சென்று மணக்கும். தும்பி—யானை. வரையாடு—மலையாடு. கொழுநன்—இறைவனாகிய முருகன். எல்—ஒளி. செல்—மேகம். முழவு—மிருதங்கம்.

பி. ஸ்ரீ.

# ஆன்றோர் அமுதவாக்கு.

கொலைசெய்யாதே..................கத்தியை எடுப்போர் அனைவரும் கத்தியினாலேயே அழிவர். ... ... ......நீ எத்தொழிலைச் செய்தாலும் பிறர் உன்னிடத்து எவ்வாறு ஒழுகவேண்டுமென்று விரும்புகிறாயோ, அவ்வண்ணமே நீ அவர்களிடம் ஒழுகல் வேண்டும். —கிறித்துவ வேதம்.

மக்களை இம்சித்தல் தகாது. போர்களால் யாதொரு பயனுமில்லை. அவை அடியோடு ஒழிதல் வேண்டும். மக்கள் தமக்குத் தீங்கு இழைப்போரிடத்தும் சினங்கொள்ளாது ஆறிப் பொறுத்திருத்தல் வேண்டும். இத்தகைய நிலையை மக்கள் எய்தவேண்டு மெனின், ஒரு சிறிய உபாயம் இருக்கிறது. மனிதர் விஷயங்களைப் பகுத்தறிவு கொண்டு பரிசீலனை செய்யவேண்டும்; அவற்றைச் சரியான பெயர்களால் அழைக்கப் பழகுதல் வேண்டும். சேனையென்பது கொலைக்குரிய ஒரு கருவியே; சேனையைத் திரட்டுவது கொலைக்குரிய எத்தனமே என்று தெளிதல் வேண்டும். —டால்ஸ்டாய்.

ஒற்றுமையாய் வாழ்வதே பெருநலம் பயப்பதாகும் ... ... ... ஒருவரோடொருவர் சமாதானத்துடன் வாழுங்கள் ... ... ... ... ... அருளாளனுடைய அடியார் நிலமிசை சாந்தகுண பூஷணராய் வாழ்வர். —குரான் வேதம்.

எல்லா விதமான அநீதியும் ஆரம்பத்தில் சிறிதாயிருந்து அதிகரிப்பது இயல்பு. —ஸாதி.

அன்பால் அனைவர்க்கும் பணிசெய்தல் வேண்டும். அன்பின் பயன் துன்பமாயினும், அன்பே நெறி. அச்சமின்றி, ஐயமின்றி, அன்பைநாடு. மேலே பார்; மேலே மேலே பாடிச்செல். அன்பு-முடி தரித்து அன்பின் கொடி பிடித்து அன்புருவாகிய ஆண்டவனை நோக்கிச் செல். —எல்லென் கோரி.

நறுமணம் கமழும் பசுஞ்சோலைகளினின்றும், செந்நெற்கதிர் பொலியும் வயல்களின் வழியே, தாமரையோடை தாண்டி, பனித்துளிபோல் மிளிரும் ஒருகுட்டிச் சுடர்க்கனவு உனக்குக் கொணர்ந்து தருகிறேன். இன்பமே! கண்களைமூடிக்கொள். அன்பு மிதக்கும் கண்களே! இன்று இரவு விடைகொள்ளுகிறேன். வானச்சுடர்கள் உன்னைச் சூழ்ந்து பொன்னொளி பொழிகின்றன. நீ முத்துப்போன்ற ஓர் குழந்தைக் கனவு காணும்படி நான் கன்னத்தில் முத்தமிடுகிறேன். —சரோஜினி தேவி.

---

# ஆட்டுக்கால் கவிராயமூர்த்திகள்.

(குட்டிக்கதை)
நெல்லைநேசன்.

கம்மியன் பட்டியில் மகாவித்வான் பொன்னப்ப முதலியார் என்றுபேர் பெற்று விளங்கிய ஒரு தமிழ்ப் பண்டிதர் இருந்தார். வேனிற் காலங்களில் இவர் மூளையில் பல பல பகற்கனவுகள் விளைவதுண்டு. வெப்பத்தின் பயனாகவோ, உணர்வின் பயனாகவோ, உருகும் உள்ளத்தில் எத்தனை யுக்திகள், எத்தனை கற்பனைகள் சிலேடைகள் பிராசங்கள் மோனைகள் அலங்காரங்கள் பிறக்கின்றன, வளர்கின்றன! "செயற்கரிய செய்வர் பெரியர்" என்ற தெய்வப் புலவர் கூற்று,தமக்காகவே எழுந்த தென்று நமது பண்டித சிகாமணி கருதுவது வழக்கம். தாமும் வள்ளுவரைப்போல், கம்பனைப்போல் கவிகளைப் பாடி நூல்களை யெழுதிக் குவித்துவிட வேண்டுமென்று தீர்மானித்தார். பண்டைப்பெரும் புலவர்களையும் தாம் வென்று வாகைசூடுதலும் தமதுபேராற்றலுக்கு அரிதன்று என்னும் அபிப்பிராயமும் நமது மகாவித்வானது உள்மனத்தில் அரும்பிக்கொண்டிருந்தது.

இத்தகைய ஆலோசனைகளோடு நமது பண்டிதர், திருக்குறள்—பரிமேலழகருரையையும் கம்பராமாயணத்தையும் தொல்காப்பியத்தையும் தலையணையாக உபயோகித்துக் கொண்டு உறங்கிவிடுவார். கனவு—லோகத்தில் இவர்பல பாரகாவியங்களையும் இம்மென்னுமுன்னே மூச்சுவிடாது பாடி யரங்கேற்றுவார். இத்தகைய கனவுகளுக்கும் ஆலோசனைகளுக்கும் இவருக்கு விசேஷ அவகாசம் கொடுத்த தினங்கள் சனிக்கிழமையும் ஞாயிற்றுக்கிழமையு மாகும். ஏனெனில் நமது பண்டிதர், கம்மியன்பட்டிக் கருகேயுள்ள ஒரு கலாசாலையில் தமிழ்ப்பண்டிதராயிருந்தார். அக் கலாசாலையில் வாரந்தோறும், குறித்த இரண்டு தினங்களும் விடுமுறை தினங்களாகும்.

நமது தமிழ்ப் பண்டிதரை மாணாக்கர்கள் 'ஆட்டுக்கால் கவிராயர்' என்றழைப்பதுண்டு. அவர் ஒரு பையனை, "ஆடு + கால் = ஆட்டுக்கால்; இதுஎப்படி? நன்னூல்சூத்திரம் சொல்" என்று இம்சித்தார். பாவம்! பையனுக்கு இலக்கணம் தெரியவில்லை. அவன் விழித்தான். "என்னடா! ஆடு திருடினவனைப்போல விழிக்கிறாயே" என்று பண்டிதர் விகடமாகக் கேட்டார். பொங்கிவிட்டது கோபம் சிறுவனுக்கு. "ஆர் ஐயா ஆடு திருடினார்? நீரல்லவா ஆட்டுக்கால் கவிராயர்" என்று பதில் சொன்னான் பையன். அன்றுதொட்டு நமது புலவர் பெருமான் சிறுவர் உலகில் ஆட்டுக்கால் கவிராயமூர்த்திகள் என்ற அருமைத் திருப்பெயரால் அழைக்கப் பெற்றார். உயர்ந்த வகுப்புமாணாக்கர்களும் இத் திருப்பெயரை ஒப்புக்கொண்டார்கள். அவர்கள் இப்பெயருக்கு வேறொரு காரணமும் கண்டுபிடித்தார்கள். கவிராயர் அவசர அவசரமாக வயல்களையும் வரப்புக்களையும் தாண்டிக் குறுக்கு வழியாகக்கலாசாலைக்குஓடிவரும்போது, அவர் ஆடுபோல்ஓடிவருகிறார் என்று அம்மாணாக்கர்கள் தங்களுக்குள் உரையாடி நகைபாடுவதுண்டு.

நமது ஆட்டுக்கால்-கவிராயர் பையன்கள் செய்யும் கேலியை ஒரு பொருளாக மதிப்பதில்லை. அவர் மனம், தலபுராணங்கள் புனைவதிலும் யமக அந்தாதிகள் வனைவதிலும் சிலேடைகள் சிங்காரிப்பதிலும் ஈடுபட்டிருந்தது. 'வண்டி வண்டியாகப் பாடவேண்டும். காரிகை கற்று நிகண்டு கற்றவர்களும் மூச்சுமுட்டிப்பொருள் காணுதபடி விழித்தல் வேண்டும்' என்பதே அவர் பகல்-நினைவும் இரவின் கனவுமாயிருந்தது. ஞாயிற்றுக் கிழமைகளிலும் சனிக்கிழமைகளிலும் அவருக்கு விசேஷ ஞானோதயமுண்டாகும். அந்நாள்களில் கவிராயருக்குக்கொண்டாட்டம். ஆனால் கவிதாதேவிக்கோ—ஐயோ! —எத்தனை பிளவைகள்! எத்தனை துயரங்கள்!

கம்மியன்பட்டி ஊரார் நமது கவிராயரை ஒரு விசித்திரமான பிராணியாகவே கருதினர். 'இதுஒருமனிசன் அல்ல. என்ன படிப்பு! ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள்! எவ்வளவு திறமை இந்தச் சிறுமண்டைக்குள் புதைந்து கிடக்கிறது!' என்று கிராமவாசிகள் திகிலடைந்தார்கள். திறந்த வாயோடு வியந்து பிரமித்து அவரது புராணப் பிரசங்கங்களைக் கேட்பார்கள். அவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அடிக்கடி கொட்டாவி வந்துவிடும். உறக்கமும் வரும். எனினும் கவிராய ரல்லவா? அதிலும் உள்ளூர்க் கவிராய ரல்லவா? பொருள் தெரிந்தால் இவ்வளவுதானா என்று நினைத்தல் கூடும். பொருள் விளங்காத இடத்திலோ, பிரமிப்பு நீடித்து நிற்கும். நமது கவிராயர் இந்த இரகசியத்தை நன்குணர்ந்தவர். "என்னடா? கம்பன் வம்பன் கும்பன் எல்லாம் எனது 'சக்கிலிய அந்தணர் புராண'த்திற்கு ஈடாமோ?" என்று இறுமாந்து கூறி மகிழ்வார்.

பல தமிழ்ப்பண்டிதர்களுடைய டாடல்களைக் கேட்டுக்கேட்டு, சீத்தலைச்சாத்தனார் என்னும் புலவர் மண்டையிடியினால் வருந்தினார் என்ற பழங்கதையை நாம் பன்முறையும் கேட்டிருக்கிறோம். அதுகட்டுக்கதையென்று சிலர் கருதுகிறார்கள். ஆனால் நமது கவிராயமூர்த்திகளின் தலபுராணங்களையும், இராயர் கோபுரங்களைப் போல நின்ற பாரகாவியங்களையும் கேட்டவர்கள், தீராத தலைநோயால் வருந்தினார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆகையால்தான் நான் சாத்தனார் கதையையும் நம்புகிறேன். அக்காலத்திலும் ஆட்டுக்கால்—கவிராயர்கள் இருந்திருக்கலாம். கம்மியன்பட்டி வாசிகள் அடிக்கடி தலைநோய்களால் வருந்தியதற்குக் காரணத்தை யறியாத நாட்டு வைத்தியன் 'இது கபாலநீர்' என்று கூறினான். ஆனால் உண்மையான காரணத்தை, கலாசாலைச் சிறுவர்கள், சித்த வைத்தியர் பாடல்களில் ஒன்றாக அமைத்துப் பாடத்தொடங்கினார்கள்.

காணடா இவ்வூரில் தலைநோய் வந்தால்,
கபாலநீர் காரணமோ? அல்ல, அல்ல.
வீணடா மருந்தெல்லாம் வீணையாகும்
வீண்மருந்தை விழுங்குவதில் பயனென் [றுண்டோ?
நாணடா சொன்னாலும்; எனினும் சொல் [வோம்;
நம்முடைய ஆட்டுக்கால் கவிஞர் தாமே
வேணதெலாம் குரலெடுத்துக் கத்தும் [போது
விரைவாகப் பாவிவரும் மண்டைநோயே,

இந்தப் பாட்டைச் சித்தர் அனுக்கிரகத்தால் ஆசுகவியாக முதல் முதல் பாடியவன், விகடராமனென்னும் சிறுவன். பிறகு இது இளைஞர் உலகத்தின் பொது உடைமையாகிவிட்டது.

ஆட்டுக்கால் கவிராயர் வானம் பார்த்தறியாத மகாகவிகளில் ஒருவரார். அவர் நிலத்தையும் உற்றுப் பார்த்தறியார். சூரிய உதயத்தை யாதல், அஸ்தமனத்தை யாதல் அவர் பார்த்ததே யில்லை. இயற்கையின் மூஞ்சியில் அவர் விழித்ததே யில்லை. எனினும் பாட்டுக்களைக் கூடைகூடையாக அள்ளிவழங்குவார். சூரியபகவானது குதிரைகளும் தேரும் தமது கலாசாலை மேடையில் இடறி விழுவதாகவும், கம்மியன்பட்டிக் கோயில் கோபுரம் மேக மண்டலத்தைக் கடந்து சந்திரமண்டலத்தை முட்டுவதாகவும் அவர் கவிகள் புனைவார். அவ்வூர்ச் சக்கிலியருள் ஒருவர் செல்வராயிருந்தார். அவருக்கு நமது கவிராயரிடத்தில் அளவு கடந்த பக்தியுண்டு. அவர் கவிராயருக்குச் சிறிது பொருளுதவி செய்தார். மகிழ்ச்சி பொங்கி வழிந்தது கவிராயருக்கு. தமது நன்றியறிதலை அவர் தெரிவிக்க விரும்பினர். கம்பர் தம்மை யாதரித்த சடையப்ப வள்ளலை மறந்தாரா? வள்ளலை வைக்குமிடம் தெரிந்து வைத்தாரல்லவா? கவிராயரும் சக்கிலியரை அந்தணராக்கிப் பாடிவைத்தார். 'பிராமணர்கள் முனிவர் பரம்பரை. சக்கிலியரோ நேராக நான்முகன் வழியே தோன்றிய அந்தணராவர்' என்று நமது புலவர் பெருமான் தமது புராணத்தில் இருபதினாயிரத்தேழு பாடல்களால் சித்தாந்தம் செய்து, தமது வள்ளலின் திருக்குலத்தைச் சிறப்பித்துப் பாடினார். எனினும் தாம் மாத்திரம் வழக்கம்போல் அவர்களைத் தீண்டாத வகுப்பினராகவே கருதி ஒழுகிவந்தார்.

கவிராயர் பாடிய பாடல்களில் ஆயிரக் கணக்கானவை சித்திரக்கவிகள், யமகங்கள், சிலேடைகள். ஒரு பாட்டாவது ஒரு பொருளோடு அமைந்து அடங்குவதில்லை. ஒரு பாட்டிற்கு அவர் ஒரு தடவை நூறு பொருள் கூறினர். தம் பாடல்களைச் சிறப்பிக்கும் பொருட்டு, அவர் பிறர் பாடல்களின் குற்றங் குறைகளை அடிக்கடி எடுத்து வழங்குவது வழக்கம். "உலகம் எல்லாம் கம்பன் பாட்டு! கம்பன் பாட்டு! என்று மோகங்கொண்டு மயங்குகிறதே! நான் ஒவ்வொரு பாட்டிற்கும் ஆயிரம் ஆயிரம் குற்றம் கூறுவேன்" என்று கவிராயர் பெருமை பாராட்டிக் கொள்வார்.

இறந்த காலத்துக் கவிகளைக் குறித்து நமது கவிராயர் குறை கூறியதால் அவருக்கு விசேஷ சங்கடங்கள் ஏற்படவில்லை. தம்மோடு ஏககாலத்தவரான பண்டிதர்களையும் இவர் கூசாது கண்டித்து வந்தார். இவர் ஏகான்மவாதியாதலால் 'சித்தாந்திகளின் நந்திரம்' என்று ஒரு துண்டுப்பத்திரம் வெளியிட்டார். கொல்லன்குறிச்சியிலுள்ள ஒரு இலக்கணவித்துவானோடு, 'அருவியா? அரிவியா?'—'குன்றுமணியா? குன்றி மணியா?'—என்னும் அரியவிஷயங்களைக்குறித்து முதல் முதல் கடித மூலமாக வாதாடினர். பிறகு ஞாயிற்றுக் கிழமையன்று கொல்லன் குறிச்சிக்கு நேரில் சென்று சொல்லாடினர். சொற் சண்டையிலிருந்து, கைச் சண்டையும் எழுந்தது. கொல்லன் குறிச்சி வித்துவான், 'ஆட்



டுக்கால் கவிராயரே! உம்மை மூளை சிதறப் புடைப்பேன்' என்று மரியாதையாகச் சொன்னர். நமது கவிராயரோ மரியாதைப் பன்மையையும் மறந்து, 'அட, கெடுவாய்! உன்னை என் கவிச்செருப்பால் அடிப்பேன்' என்று பேசினர். ஊரார் விலக்கிவிட்டார். கவிராயர் உடம்பில் ஒரு காயத்தோடு கம்மியன்பட்டிக்கு மீண்டார். அவர் அப்புண்ணை ஒரு வீரன் போர்க்களத்தில் அருமையாகப்பெற்ற புண்ணைப்போலவே கருதி மகிழ்ந்தார். 'ஜயமாது தனக்கு விரும்பி யளித்த நல்லணியே அது!' என்று அவர் அனுதாபங் காட்டிய உள்ளூர்க்காரர்களுக்குச் சமாதானம்கூறினர். ஆனால் அவர் உள்ளத்தில் சமாதானம் ஏற்படவில்லை. இலக்கண வித்துவான் மீது பொங்கிய கோபம், சண்டையை விலக்கிய கொல்லன்குறிச்சி யூராரையும் சுற்றிப் பிடித்தது. "கொல்லன்குறிச்சியூரார் அனைவரும் மடையரே! என்பதை மெய்ப்பிக்கும் வீரகண்டாமணி" என்று ஒரு சிறு நூலை வெளியிட்டார்.

இதன் விளைவை நமது கவிராயர் முன் கூட்டியுணர்ந்தாரில்லை. ஒரு வக்கீலின் நிருபம் வந்தது. நீதிமன்றத்தில் வழக்கு விளைந்தது. குமாஸ்தாக்களும் சேவகர்களும் கவிராயரைத் தின்னத் தொடங்கினர்கள். கவிராயர் நீதிபதி மீது 'டுடுடுடுடுடுடுடு......' என்று பத்து 'டு'க்கள் வரும்படி ஒரு முடுகு வெண்பாவைக் கோர்ட்டிலேயே மடமட வென்று முடுக்கிவிட்டார். கோர்ட்டெல்லாம் கலகலவென்று சிரித்தது. 'கோர்ட்டை அவமதிக்கிறீர். நீர் கடுமையான தண்டனை பெறுவீர்' என்று நீதிபதி கவிராயரை எச்சரித்தார். முடிவில் அவர் அபராதம் கொடுத்து வெளியே வந்தார். தமது அரிய புலமைக்கு இது காலமில்லை யென்று கவிராயர் கண்டு வருந்தினர். அப்பால் இலக்கண விவகாரங்களை நிறுத்தி விட்டார்.

வாதங்களை விட்டுவிட்டு நமது கவிராயர்பெருஞ்சொல்இழைப்பதில் அறிவைச்செலுத்தினர். 'உபந்யாசம்' செய்வதை அவர் பெருஞ்சொல்லிழைப்பது என்ற தூய தமிழிலே கூறுவது வழக்கம். அவர் தம் பேருரைகளில் பொருள்களை ஆராய்வதில்லை. சொற்களையும் ஒலிகளையுமே ஆராயத்தொடங்கினர். ஆங்கிலம், வடமொழி முதலான 'பாழை'களில் சொற்களுக்குரிய தாதுப் பொருள்களுண்டு. தமிழ்ச் சொற்களுக்கும் இருந்திருக்க வேண்டுமே; கடல் கொண்டொழிந்த பல அருந்தமிழ் நூல்களோடு தமிழர் மொழிநூற் புலமையும் (Philology) 'கொடுங்கடலா'ன இந்து மகாசமுத்திரத்தின் அடித்தலஞ் சேர்ந்திருத்தல் வேண்டும். போனால் போகட்டும். நமது கவிராயர் எளிதில் தமிழ்நாட்டு 'மாக்ஸ் முல்லர்' ஆகத் தலையெடுத்தார். அவர்க்கு இத்தகைய 'சொற்பொருள்' ஆராய்ச்சியில் சிரமமேயில்லை. அப்போதைக்கப்போது ஞானோதயமாகிவிடும். அவர் தமது மொழி நூலாராய்ச்சியைக் குறித்து, தம் கலாசாலையில் ஒரு 'பெருஞ்சொல் இழைத்தார்' (அதாவது பிரசங்கம்செய்தார்). ஒவ்வொரு தமிழ்ச் சொல்லுக்கும் திடீர் திடீரென்று தாதுப் பொருள் சொல்லிவந்த புலவரை நோக்கி, விகடராமன் எழுந்து நின்று, "பண்டிதரையா! ஒரே ஒரு சந்தேகம். கழுதைக்கு 'ரூட்' (தாதுப்பொருள்) சொல்லவேணும், தயவு செய்து" என்று

பிரார்த்தித்தான். பண்டிதர் பார்த்தார். 'இதுவே தக்கதருணம், பையன்களுக்கு நம் திறமையைக் காட்டுவதற்கு' என்று நினைத்தார். உடனே ஞானமும் உதயமாயிற்று. காழ் + உதை = கழுதை. முன்னேபோனால் காள்! காள்! என்று கத்துகிறது; பின்னே வந்தால் உதை! ஆகையால் கழுதையென்றார் பண்டிதர். பையன்கள் 'பலே! அச்சா! ஷோக்!' என்ற வியப்புரைகளோடு கைகொட்டிச் சிரித்தார்கள். 'ஐயோ! அனுபவத்தின் மேல்வரும் வார்த்தை'யென்று விகடராமன் சொன்னான். 'இல்லையடா! இல்லை. பூர்வஞானம்தான் பண்டிதருக்குதயமாயிற்று' என்று ஷோக்சுப்பய்யா சொன்னான். மொழிநூல் புலமை அரிதல்லவென்று சிறுவர் சிறுமிகளும் கண்டார்கள். 'ஸ்ஸ்ஸ் + டக் = ஸோடா என்று ஒருவன் சோடாவுக்கு 'ரூட்' கண்டுபிடித்தான். பிறகு பண்டிதர் தம்மொழிநூற்புலமையைச் சிறுவர்களுக்குக் காட்ட விரும்பவில்லை. எனினும் 'அவர்'ரூட்'காண்பதை நிறுத்தவில்லை; மண்ணெண்ணெய் அடைத்திருக்கும் தகரங்களைக் 'காலி' செய்து அவ்வப்பொழுது தமக்குத் தோன்றிய தாதுப்பொருள்களை யெல்லாம் சிறுசிறு காகிதத்துண்டுகளில் எழுதி அத்தகரங்களில் போட்டு வைத்திருந்தார். இங்ஙனம் ஒன்பது மண்ணெண்ணெய்த் தகரங்களில் தாம் தமிழ்வாணியையே அடைத்து விட்டதாக அவர் தம்மைப் பார்க்கவந்த நண்பர்களுக்குக் கூறுவதுண்டு. நாளடைவில், நமது பண்டிதரது மொழிநூல் திறம் இன்னும் தெளிவடைந்தது.

பண்டிதர் ஓர் இரவில் ஒரு கனவு கண்டார். அக்கனவில் ஞானபண்டிதராகிய தண்டாயுதபாணி எழுந்தருளி, மொழிநூலாராய்ச்சியை ஒன்பது தகரங்களாக விரித்தது, தென்னாட்டு பல்பிணிச் சிற்றறிவினர்களாகிய தென்னிந்திய மக்களுக்குப் பயன்படாதென்றும், ஓரே ஒலி அல்லது எழுத்திலிருந்து தமிழ்ச் சொற்கள் பிறந்தனவென்று சித்தாந்தஞ் செய்வதே, பலவீனர்களும் சோம்பேறிகளுமான நம்மவர்க்கு நலம்தரும் என்றும் வற்புறுத்தினர். அப்பால் கவிராயரும், ஆய்த(ஃ)எழுத்து ஒன்றிலிருந்தே தமிழ்மொழியும் தமிழ்நாடும் தோன்றினவென்று சித்தாந்தஞ் செய்தருளினர்.

மொழிநூல்—பித்து விஷமேறுவது போல் நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகரித்து வந்தது. உண்ணவும் நேரமில்லை, உறங்கவும் நேரமில்லை. பித்தம் மண்டைக்கேறி விட்டதென்று வைத்தியர் சொன்னர். "என்ன பேச்சு! பிராசமில்லை, சித்தவைத்தியம் சுத்தப் பைத்தியம்" என்று கவிராயர் கூறினர். மும்முரமான சுரம்; விகடராமனும் ஷோக் சுப்பையாவும் பார்க்கவந்தார்கள். கவிராயரது கண்கள் விகாரமாய் 'ஜிவ்! ஜிவ்' வென்று செவ்வொளிவீசின. "ஆட்டுக்கால்—சூத்திரம் சொல்லுங்கள். கோபிக்கமாட்டேன்; மன்னித்து விடுகிறேன்" என்று உரக்கக் கூவிக்கொண்டு, பளிச்சென்று எழுந்தார்; அடுத்த நிமிஷத்தில் அவர் படுக்கையின் மீதுமாண்டு விழுந்தார். விகடராமனும் ஷோக் சுப்பையாவும் கண்ணீர் வடித்தார்கள்.

———

# பத்திரிகை ஆராய்ச்சி.

லண்டன் நகரத்து ராயல் சங்கத்தார் கூட்டமொன்றில் ஸர் ஹென்ரி ஷார்ப் என்பார் பண்டைக்காலத்து இந்திய சர்வ கலாசாலைகளின் லட்சியங்களைப் பற்றி ஒரு வியாசம் வாசித்தார். அதன் சாரம் வருமாறு:—

இந்தியாவில் இப்போது ௧௬-சர்வகலாசாலைகளும் ௨௫௬-கல்லூரிகளும், ௬௩ ௬௫-போதகர்களும் ஏறக்குறைய ௬௯,000 மாணக்கர்களும் இருக்கிறார்கள். இந்தியாவில் ௨௬-நூற்றாண்டுகளாக சர்வகலாசாலைகள் இருந்துவந்திருக்கின்றன. பாரதத்திலும 'ஜாதக' கதைகளிலும் தட்சசீலத்தைப் பற்றிய விவரம் காணப்படுகிறது. நாலந்தாவைப் பற்றி கி. பி. ஏழாவது நூற்றாண்டின் முற்பாதியில் குறிப்பிடும் சீனயாத்திரிகன், இச் சர்வகலாசாலையில் ஆயிரக் கணக்கான மாணக்கர்கள் பலவகையான பயிற்சியால் அறிவு நிரம்பப்பெற்றார்களென்றும், இவரது புகழ் வேறு தேசங்களிலும் பரவியதென்றும், அன்னிய நாட்டு மாணவரும் இங்கு வந்து அறிவை நிரப்பிச் சென்றாரென்றும், கூறுகிறான். இட்சின் என்னும் சீன மாணவன் ஏழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் நாலந்தாவில் மாணவனாக வந்து சேர்ந்தான். "நாலந்தாவில் புகழ்பெற்ற பேரறிஞர், அரசர் சபைகளிலும் தம் நுண்ணிய அறிவு ஆற்றல்களை வெளியிட்டு ஆட்சி முறையிலும் உயர்ந்த ஸ்தானம் வேண்டுமென்கின்றனர். இவர் புகழ், இந்தியா வெங்கும் கரைபுரண்டு பெருகுகின்றது. இவர்கள் மான்ய நிலங்கள் பெறுகிறார்கள். இவர்களது மாளிகைகளின் வாயிற்படி மீது வெள்ளை எழுத்துக்களால் இவர்களது பெயர்கள் பொறிக்கப்படுகின்றன. பிறகு இவர்கள் இஷ்டமான தொழில் செய்யலாம்" என்று இவன் கூறுகிறான். இத்தகைய சர்வகலாசாலைகள் முசல்மான்கள் காலத்தில் அழிவடைந்தன. ஆனால் முஸ்லீம்களும் கல்வியை அலட்சியம் செய்யவில்லை. ஐரோப்பியர் இந்தியாவிற்கு வந்த காலத்தில் வர்த்தகப் போரிலும் ஆயுதப் போரிலும் காலம் கழித்தனர். போர்த்துகல் நாட்டார் மாத்திரம் தம் மதஸ்தாபகர் மூலமாக, கல்விச்சாலைகளை அமைத்தார். பிறகு நாளடைவில் ஆங்கிலேயரும் ஐரோப்பிய-கலைகளுக்காக, சர்வகலாசாலைகளை அமைத்தார்.

பண்டைக் கலாசாலைகளில் சமய நூல்களோடு காவியம், வான சாத்திரம், பூகோளம், வைத்தியம், கணக்கு முதலிய உலக நூல்களும் போதிக்கப்பட்டன. ஹர்ஷ சக்கரவர்த்தி நாலந்தா கலாசாலைக்கு விஜயஞ்செய்து, தன் பொக்கிஷத்தின் வருமானத்தில் பெரும் பகுதியை வருடாந்திர நன்கொடையாக அளித்தான். இச் சர்வ கலாசாலைகளில் கற்பிக்கப்பெற்ற கல்வி அக்காலத்திய இந்திய வாழ்க்கைக்கு இசைந்திருந்தது. நமது தற்கலக் கல்வியும் பண்டை, இந்தியர் அறிவு நலத்தையும் நவீன அனுபவ ஞானத்தையும் தழுவி, வருங் காலத்தைச் சிறப்பிக்கும் நோக்கமுடையதாக இருத்தல் வேண்டும். நமது வாழ்க்கையின் முக்கிய அம்சங்களை நமது கல்வியின் முக்கிய அம்சங்களோடு பொருந்தும்படி செய்தல்வேண்டும்.

* * *

"இராமலிங்கசுவாமிகள் கல்விகற்ற வரலாறு" என்னும் பொருள் பற்றி, 'ஒற்றுமை' யென்னும் மாசிகையில் திருவாளர் மணி. திருநாவுக்கரசு முதலியார் ஒரு கட்டுரை யெழுதியுள்ளார் அதன் முக்கிய அம்சங்கள் வருமாறு:—

இராமலிங்க சுவாமிகளுக்கு இளமையிலேயே அவர் தமையனார் அக்கால முறைப்படி திவாகரம், நிகண்டு, சதகம், அந்தாதி முதலிய நூல்களைக் கற்பிக்கலாயினர். ஆனால் இராமலிங்கமோ பாடங்களைக் கண்ணும் கருத்துமாகக் கற்பதில்லை. அவர் குறிப்பின்றிச் சுற்றுவதும், மக்கள் கூட்டங்களில் சென்று வாயைப் பார்த்துக்கொண்டு நிற்பதும், வேடிக்கை பார்ப்பதுமாகக் காலங் கடத்தினர். அவர் தாமாகத் தமக்குத் தோன்றிய புத்தகங்களை எடுத்துக்கொண்டு, விருப்பமான நேரங்களில் படிப்பார். ஆனால் தமையனார் கட்டளைப்படி எந்த நூலையும் உருப்போட்டுப் படித்து ஒப்புவிக்கமாட்டார். எனினும் இராமலிங்கம் ஒரு நாளும் தம் தமையனாரை அவமதித்தேனும் எதிர்த்தேனும் பேசியதில்லை. முடிவில் தம் அண்ணியாரின் பேரன்பால் இராமலிங்கத்தின் அறிவு தூண்டப்பட்டது. பிறகு அவர் நாடோறும் ஒழுங்காகக் கற்று வந்தார். ஒரு நாள் தம் தமையனார் பிரசங்கஞ் செய்யும்போது, இராமலிங்கம் புராணம் வாசித்தார். எடுத்த எடுப்பே எல்லோருக்கும் இன்பம் ஊட்டியது. ஒவ்வொரு மொழியும் உள்ளத்தே பொதிந்த அன்பிலூறித், தேனிலூறிய பழம் போலத் தித்திப் பூறி வந்தது. சபையில் தேவாமிர்தம் கொழித்தது. பிறகு இராமலிங்கமே பிரசங்கமும் செய்யத் தொடங்கினர். அவர் மனத்தில் கருத்துக்கள் புதிது புதிதாக உதித்தன. அவர் வாக்கிலே மதுரமான தமிழ்ச் சொற்கள் கரைபுரண்ட வெள்ளமாக வந்துகொண்டிருந்தன.

* *

மகாத்மா காந்தியடிகள் 'பிரமசரியின் இலக்கண'த்தைப் பற்றித் தமது 'யௌவன இந்தியா'ப் பத்திரிகையில் எழுதுகிறார். அதன் சாரம் வருமாறு :—

உண்மை, அஹிம்சை, பிரமசரியம்—இவற்றை மேற்கொண்டொழுகுவோர் அடக்கமுடையவராக இருப்பர் என்று கொள்ளவேண்டும். அன்பைப் பெருக்கிக்கொள்ளுவதுபோல அடக்க முடைமையையும் பெருக்கிக் கொள்ளாவிட்டால் அவரால் யாதொரு பயனுமில்லை. "பட்டினி கிடக்கும் மனிதனிடம் பல வித இச்சைகளும் அடங்கிப் போகின்றன. ஆனால் அவற்றையடையவேண்டு மென்ற ஆசைமாத்திரம் அடங்குவதில்லை. கடவுளை நேரில் தரிசித்தாலன்றி அவற்றிலுள்ள ஆசை நீங்குவதில்லை" என்று கீதை இவ்விஷயத்தை நன்கெடுத்து இயம்புகின்றது. 'நான்' என்ற அகங்காரமுடையவன் கடவுளை நோக்கக் காணமுடியாது. இவ் உலக வாழ்க்கை புயலிடைப்பட்ட கப்பலை ஒத்திருக்கின்றது. இத்தன்மை வாய்ந்த உலகில் நான் வென்றேன் என்று துணிந்து கூறக்கூடியவர் எவர் இருக்கின்றனர்? நாம் என்றும் வெல்வதேயில்லை. நம்முன் உள்ள கடவுளே வெற்றி பெறுகின்றார். உயரிய குணங்களை மேற்கொள்வதே இவற்றால் விளையும் வெகுமதிகளாகும். இவற்றை உபயோகித்துப்பொருள் பெறமுயல்வோர் தமது ஆன்ம லாபத்தை இழக்கின்றார். நறுங்குணங்களைக் கொண்டு பண்டம் மாற்றல் செய்யமுடியாது.

* *

ஹூக்ளிஜில்லாவின் புஸ்தகசாலை மகாநாட்டின் வரவேற்புக் கழகத்தலைவர், பரதநாட்டின் பண்டைக்கால நூல் நிலையங்களைக் குறித்து ஒரு சொற்பொழிவு செய்தார். அதிலிருந்து பின்வரும் உண்மை வெளியாகின்றது.

நமது ஆதிநூல்களான திருமறைகள் ஒலிவடிவம் கொண்டு, மனோரம்யமான நதி தீரங்களில் செழித்தோங்கின. எழுத்துக்கள் தோன்றிய பிற்காலத்தில் எழுதா மறைகளெல்லாம் பனையோலைகளில் எழுதப்பெற்றன. சுதேச சர்வகலாசாலைகளில் ஏராளமான கையெழுத்து நூல்களிருந்தன. இந்நாளிலுங்கூட மடங்களிலும் கோவில்களிலும் நூல்கள் பல காணப்படுகின்றன. அன்னியநாட்டு யாத்திரிகர்கள் இவ்விஷயங்களைக்கண்டெழுதியிருக்கின்றனர். பண்டைப் புத்தகாலயங்கள் நிலைகுலைந்தவுடன், அந் நிலயங்களிலிருந்த புத்தகங்களை சன்னியாசிகள் நூல்களை ஆங்காங்கு எடுத்துச் சென்றனர். இவை தவிர அரசர்களும்செல்வரும்சொந்தத்திற்கு நூல் நிலயங்கள் வைத்திருந்ததுமுண்டு. முகமதிய அரசர்கூட, பழைய சுவடிகளைப் பாதுகாக்க விசேஷப் பொருளுதவி செய்தனர். தற்காலத்திலும் நேபாளம், ஜம்மூ, மைசூர், தஞ்சை அரண்மனை முதலிய இடங்களில் ஓலைச்சுவடிகள் ஏராளமாயிருக்கின்றன. பல சுவடிகள்கடலோடி ஜெர்மனிக்குச் சென்றுவிட்டன. இன்னும் தஞ்சை யாண் மனையில் சுமார் பதினெண்ணாயிரம் சுவடிகளிருக்கின்றன.

சமீபத்தில் தஞ்சை ஸரஸ்வதி மகாலிலுள்ள தமிழ்ச்சுவடிகளுக்கு நமது அன்பர் பண்டித — உலகநாதபிள்ளையவர்களால் ஒரு விவரமான 'பேரேடு' (Catalogue) தயார் செய்யப்பெற்றிருக்கிறது. இது தமிழாராய்ச்சி செய்வோர்க்கு ஒரு நற்றுணையாகும். பண்டைநாளில் வடநாட்டாரைக் காட்டிலும் தென்னாட்டுப் பொதுமக்களில் சாமானியரும் தொழிலாளருங்கூட அறிவுச்செல்வத்தில் சிறந்திருந்தார் என்று ஊகிக்க இடமிருக்கிறது. இக்காலத்தில் பிரதான புத்தகாலயங்கள் கல்கத்தா, சென்னை, புனா, பரோடா முதலிய இடங்களில் காணப்படுகின்றன. மதுரையிலுள்ள தமிழ்ச் சங்கநூல் நிலயத்தில் தமிழ் நூல்களைக் காட்டிலும் சாமானிய ஆங்கில நூல்களே அதிகமாகக் காணப்படுவது விந்தையினும்விந்தையே. மேல் நாட்டார் நூல் நிலயங்களை உயிர் நிலயமாகக் கருதுகின்றார். இம்மைக்கும் மறுமைக்கும் பெருந்துணையாகிய அறிவுத் தெய்வத்தின் அருமைத் திருக்கோயில்,புத்தகாலயமே என்பதை நம்மவர் மறந்துவிடுதல் மகாபாவமாகும்.தமிழகத்தின் ஒவ்வொரு கிராமத்தையும், கோயில் அழகு செய்வது போலவே புத்தகாலயமும் அழகு செய்தல் வேண்டும். இந்நாளில் அமெரிக்கரே கல்வித் தெய்வத்தின் சிறந்த மெய்யடியார்களாக விளங்குகின்றனர். நமது பரத நாட்டில் பரோடா சமஸ்தானமே கலைமகள் வழிபாட்டில் தலைசிறந்து நிற்கின்றது. அறிவின் பழ அடியாராகிய தமிழரோ, இன்று பரம ஏழைகளாய் ஆடுமாடுகளைப்போல வாழ்கின்றனர். நாமும் அடிமை நிலையைத் தூவென்று தள்ளி அறிவிற் சிறந்த ஆண்மக்களாய் வாழ்வது என்னாளோ?

## சதங்கை யொலி.

### வீரசொர்க்கம் புகுந்த — —தியாக மூர்த்திகள்.

இவ் ஆண்டில் நம் இந்திய அன்னையின் தியாகிகளுக்கு ஓர்அளவில்லை. முன்னாளில் வாழ்ந்த புத்தர், அப்பர், ஆகிய பெரியோர்களைப் போலவே, இந்நாளிலும் கருணைமூர்த்திகளாய்ப் பிறர்க்கன்றித் தமக்கென வாழாத பெருந் துறவிகளாய் விளங்கிய வீரர்கள் ஒருவர் பின் ஒருவராக சுயராஜ்யப் போர் முனையில் உயிர் துறந்து வீர சொர்க்கம் புகுந்தார்கள். இவர்களில் தேசபந்து தாசரும் அறிஞர் வ. வெ. சு. ஐயரும் நாட்டுப் பற்றோடு மொழிப் பற்றும் வாய்ந்

தவ ராவர். இவர்களது குணை நிசயங்கள் இந்தியாவின் அழியாத உடைமையாகும். இவ் அருந்தவப் புதல்வரின் பெயர்களை, நம் அன்னை என்றென்றும் மறவாது வாழ்த்துவாள் என்பதில் ஐயமில்லை. வீரர்களின் திருக் கதைகளிலே பிறப்பினும் மரணமே பேரழகு வாய்ந்ததோர் நிகழ்ச்சியாகத் திகழ்கின்றது. வீரனது மரணம் சாமானிய சம்பவமன்று. வீரனது சாவு சூரியாஸ்தமனம் போன்றதென்று ஷெச்சக்கரவர்த்தி கூறுகின்றார். அஸ்தமன சூரியனது பொன்னொளியினையும் அற்புதப் பேரழகினையும் மகாகவிகளே வர்ணிக்க வல்லார். ஒளிக்கடல், வர்ணக் களஞ்சியம் என்பதைத் தவிர நாம் வேறு என்னென்பது? எத்தனை வர்ணங்கள், வர்ணக்கலவைகள்! எத்தனை இன்ப உருவங்கள்!— அந்தி வானத்தைஅழகுசெய்கின்றன. இத்தகையமோகனஒளி—இத்தகைய இன்பஅழகு—வீரபுருஷனது மரணத்தையும் சூழ்ந்து சுடர்கின்றது." உயர்புகழ்நிறுவி நாளும்—இருநிலத் தெவர்க்கும் உள்ளத்திருந்தனன் என்ன வீந்த—செருவலி வீரன் என்னச் செக்கதிர்ச் செல்வன் சென்றான்" என்பது கம்பநாடகம்.

## ஊனுடம்பும் புகழுடம்பும்.

மாணத்திற்கு முன் ஒரு வீரன் ஊனுடம்போடு ஒருகாலத்தவனாய் ஓரூரனாய் வசிக்கின்றான். மாணத்தின் பின்னரோ அவன் விரிந்த 'வியாபக சக்தி' பெறுகின்றான்; தான் நேசித்த மக்களது உள்ளம் புகுந்து வளர்கின்றான். மரணத்தை வியாஜமாகக் கொண்டு நமக்கு முன்னிலும் சமீபித்து விடுகின்றான். வாழ்விலே நமக்குத் தூரத்திலிருந்த வீரபுருஷன், சாவிலே நமக்குக் கைகால்கள், முதலிய அவயவங்களினும் நெருங்கிய தொடர்புடையவனாகி விடுகின்றான். மூச்சைப்போல எந்நாளும் பிரியாது நம்முடன் ஒன்றி நிற்கின்றான். இது புகழுடம்பின் பெருமை. இங்ஙனம் வீரனது மரணத்தை தூரிய நிகழ்ச்சியாக விசேஷித்துக்கூறும் கவி, அத்தகைய மரணம் வருந்தத் தக்கதன்று —அதிசயித்துப் போற்றத் தக்கதே என்றும் குறிப்பிடுகின்றார். சூரியாஸ்தமனம் போலப் பேரழகோடு பொலிந்து திகழ்ந்தொளிரும் பெருமக்கள்—மரணம், அன்னார் தோற்றத்தினும் பெருமை வாய்ந்ததாகப் போற்றித் தொழத் தக்கதே யாகும்; வியந்து வாழ்த்தத் தக்கதே யாகும். நீதிக்காக உயிர் துறந்த செந்தமிழ் மன்னனை "உயிர் கொடுத்த கோவேந்தன் வாழி" என்று வாழ்த்திய தமிழ் மக்கள், நாட்டிற்காக உயிர் கொடுத்த பெருவீரர்களை மறந்து விடுவார்களோ? "வீரன் இறந்தான்; 'வீரன் வாழ்க' என்று வாழ்த்துவதே மரபு. அவ்வண்ணமே நமக்காக உயிர்கொடுத்த நமது சுயராஜ்யப் போர்வீரர்களையும் நாம் வாழ்த்தி வணங்கி நெறிப்படுவோமாக.

## 'முருகன்'

திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் 'குமரன' மாதப்பத்திரிகையின் முதலிதழில் எழுதிய கட்டுரையே இப்பொழுதவர்கள் ஓர் இன்பச் சிறு நூலாக விளைந்திருக்கின்றது. 'முருகன்' சொற்பொருள் விளக்கம் ஆராய்ச்சியாளர்க்கு அமுதமாகத்தித்திக்கின்றது. அழகிய நூல் அழகியவடிவத்தோடு நல்லகாகிதத்தில் அச்சேறிவருவதும் ஓர் ஆனந்தமே. விலை அணு ௯. விலாசம்— முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.

## ஸ்ரீமாணிக்கவாசகர்.

இது ஒரு சிறந்த ஆராய்ச்சி நூல். மணிவாசகப் பெருமானது வரலாறும் மணிவாக்கும், விசேஷ பக்திவிசுவாசத்தோடு ஆராய்ச்சி செய்யப்படுகின்றன. கால ஆராய்ச்சியில் அபிப்பிராய பேதங்கள் ஏற்படுவது இயல்பே. மணிவாசகர் காலத்தைக் குறித்து ஆசிரியர் கூறுவதை நாம் அங்கீகரிக்க முடியவில்லை. எனினும் சைவசமயி ஒவ்வொருவரும் இந்நூலை வாசித்தல் இன்றியமையாதது என்று மனப்பூர்வமாகக் கருதுகிறோம். ஆக்கியோர், திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார், பி. எ. எப். எம். யூ. கோயமுத்தூர். விலை ரூ க—௪—0 விலாசம்:—காரியதரிசி, கோவைத் தமிழ்ச் சங்கம், கோயமுத்தூர்.






சிவமயம்.

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.

| சதங்கை ௪. | காரைக்குடி, குரோதன ஞு ஆடிமீ | மணி ௪. |
|---|---|---|

## தமிழ்த் தெய்வம்.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்துசங்கத்
திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்தபேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்.

—வரந்தருவார்.

## வணக்கம்.

உரைத்தமிழ் மூவர்நாவின் ஊற்றெழும் அமுதைச் சங்கத்
திருக்கும்வெள் முத்தைக் கற்றோர் என்னும் ஈக்கூட்டுந்தேனை
வரைத்தமிழ் முனிவன் நெஞ்ச மலர்க்கமலப் பூஞ்சேக்கைத்
திருத்தகும் அரச அன்னப் பேட்டினைச் சிந்தை செய்வாம்.

—கந்தசாமிப் புலவர்.

வாணி கலைதெய்வம் மணிவாக்குதவிடுவாள்
ஆணி முத்தைப்போலே அறிவு முத்துமாலையினாள்
காணுகின்ற காட்சியாய்க் காண்பதெலாங் காட்டுவதாய்
மாணுயர்ந்து நிற்பாள் மலரடியே சூழ்வோமே.

—பாரதி.

## 'தமிழ் அமுதம்'

உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண் டாகும்.
வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவுமாயின்,
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவிகொள்வார்;
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்.

—பாரதி.

# ‡ இறையுளமும் இல்லறமும்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

முதலாவது இவ் விடயத்தைக்கூறு பிரித்துக்கொள்வது நலமென்று தெரிகிறது. இறை உளம் நோக்க மென்னை? இல்லறத்தின் நோக்க மென்னை? இவ்விரண்டிற்கு முள்ள தொடர்பு யாது? என்று பிரித்து ஆராய்வோமாயின் 'இறை உளமும் இல்லறமும்' என்னும் விடயத்தின் உள்ளக்கிடக்கை செவ்விதிற் புலனாகும்.

இறைவன் எவன் என்பதைப்பற்றி விரித்துரைக்க வேண்டுவதில்லை. யாண்டும் நீக்கமின்றி உறைகின்ற ஒருவனே இறைவன். அவன் உயிர்களின் கண்களினின்று எல்லாவற்றையுங் காண்கிறான். செவிகளினின்று எல்லாவற்றையுங் கேட்கிறான். சுருங்கக்கூறின் எல்லாவற்றையும் ஆட்டுவிப்பவன் அவனே! அவனுக்கு மேல் ஒரு பொருள் இன்மையான் அவனை நந்தமிழ் மக்கள் இறைவன் என்னுஞ் சொல்லால் போற்றி வருகிறார்கள். இவ்விறைவன் எல்லாஞ் செய்ய வல்லான் என்று அவன் இயல்புணர்ந்த சான்றோர் கூறியிருக்கிறார். இறைவனுக்கு எல்லாம் வல்ல இயல்புண்மை எதனால் விளங்குகிறது என்பது கருதற்பாற்று. அவன் துன்பமில்லா இன்பவடிவினன்; ஆகலான் அவன் எல்லாஞ் செய்ய வல்லான் என்று கூறலாம். துன்பத்தால் பீடிக்கப்பட்ட ஒருவன் எல்லாஞ் செய்ய வல்லவனாகான். துன்பத்திற்குத் தோற்றக்கேடுகளுண்டு. இன்பத்திற்கோ அவையில்லை. இறைவன் இன்பம் என்பதனை "ஈறிலாப்பதங்கள் யாவையுங்கடந்த இன்பமே" என்று நமது மணிவாசகனார் விளக்கி யிருத்தல் காண்க.

இறைவன் இன்பமயமா யிருப்பதனால் உயிர்களாகிய நமக்கு என்ன பயன் என்று இயல்பாகவே ஒருவினா எழும். இறைவன் திருவருளையே திருமேனியாகக் கொண்டு உயிர்கள் உய்யும் பொருட்டு ஆனந்தத் தாண்டவம் புரிபவன். ஆதலால் அவன் தன் இன்பத்தை உயிர்களும் நுகர்தல் வேண்டுமெனும் உள்ளமுடையனா யிருக்கிறான். எனவே இறைவனுளம் என்னை? என்பதற்கு உயிர்களின் துன்ப நீக்கத்துக்கும் இன்ப ஆக்கத்துக்கும் செந்நெறி கோலிக்கொண்டிருப்பது என்று சொல்லலாம். இப்பொழுது உயிர்களின் துன்ப நீக்கத்துக்கும் இன்ப ஆக்கத்துக்கும் உறுதுணை செய்யும் நெறி யாது என்பதைச் சிறிது ஆராய்வோம். இவ்வாராய்ச்சியால் இல்லறத்தின் நோக்கம் இனிது புலனாகிவிடும்.

இல்லறமென்பது மனையோடு கூடி வாழும் வாழ்வு என்று உலகிலுள்ள எவரும் கூறுவர். மனையோடு கூடி வாழும் வாழ்வு எற்றுக்கு என்று சிறிது சிந்திப்போமாயின் அது துன்ப நீக்கத்துக்கும் இன்ப ஆக்கத்துக்

‡ சாத்தூர் தமிழ்ச் சங்க ஆண்டு விழாவில் திருவிதாங்கூர் திருவாளர் இலக்குமணப் பிள்ளை அவர்கள் தலைமையில் சென்னை "நவசக்தி" ஆசிரியர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம்.



கும் உறுதுணை செய்வது என்று உணரலாம். இறைவனது திருவுள்ளக் கருத்தையும் இல்லறத்தின் நோக்கத்தையும் ஒருமைப்படுத்தி உரைப்பதையே இக்கட்டுரை குறிக்கொண்டு நிற்றலால் மேற்போந்த இரண்டிற்கும் உள்ள தொடர்பை முறை முறையாக ஆராய வேண்டுவது அநுவசியமெனத் தோன்றுகிறது. அத்தொடர்பை உணர்த்த மேலே தொகையாகக் குறிப்பிட்ட இறைவனுளம் என்பதையும் இல்லறம் என்பதையும் சிறிது விரித்துரைக்க முயலுகிறேன்.

இறைவன் உயிர்களின் துன்ப நீக்கத்தையும் இன்ப ஆக்கத்தையுங் கருதிப் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில் புரிகின்றான் என்று நமது மறைகள் முழங்குகின்றன. உலகிலுள்ள பல் சமயத்தாரும் படைப்பை ஒத்துக் கொள்கிறார். ஆனால் படைப்பு நிகழ்ச்சி கூறுமிடத்து ஒருவரோ டொருவர் மாறுபட்டு வேறுபடுகிறார். அக்கருத்து வேற்றுமையில் கவலை செலுத்த வேண்டுவது அநுவசியம். ஆண்டவன் உலகு உயிர்களைப் படைக்கின்றான் என்ப தொன்றே ஈண்டுக் கவனிக்கற்பாற்று. ஆண்டவன் படைக்கின்றா னென்பதைக்கொண்டு இல்லாத வொன்றை அவன் படைக்கின்றானென்று கோடலாகாது. உள்ள ஒன்றையே ஆண்டவன் தோற்றுவிக்கின்றான். உள்ளதற்கே தோற்றமன்றி இல்லதற்குத் தோற்றமில்லை யென்பது ஞாயம். உள்ள ஒன்றை ஆண்டவன் தோற்றுவிப்பானேன் என்னும் கடா எழாமற் போகாது. ஆண்டவன் துன்பமில்லா இன்ப வடிவினன் என்று மேலே சொல்லப்பட்டது. அவ்வின்பத்தை உயிர்களுக்கு ஊட்டவே ஆண்டவன் படைப்புத் தொழிலை மேற்கொள்ளுகிறான். உயிர்கள் அவ்வின்பப் பொருளாயின் ஆண்டவன் படைப்புத் தொழிலுக்கே இடமில்லாமற் போகுமன்றோ? உயிர்கள் இன்பப் பொருளா, துன்பப்பொருளாவென்ற வாதத்தில் ஈண்டுத் தலைப்பட நான் சிறிதும் விரும்புகின்றேனில்லை. உயிர்கள் இன்பப் பொருளெனக் கூறுவோரும் விவகாரத்தில் உயிர்கட்குத் துன்பமுண்டு என்று கூறுகிறார். இவ்வுலகில் வாழும் நாம் விவகார நிலையிலிருந்து ஒன்றை ஆராய வேண்டுமே யன்றிப் பாரமார்த்திக நிலையைக் குறித்துப் பேசுவது வீண்பொழுது போக்குவதேயாகும். இவ்வுலகிலிருந்தே பாரமார்த்திக நிலையைப்பற்றிப் பேசுவோர் பேசுக. எழுதுவோர் எழுதுக. இன்ப துன்ப உணர்ச்சியை யுடைய சிறியேன் அப் பேச்சுக்கும் எழுத்துக்கும் சேயன். இந்நிலையிலுள்ள எனக்கு ஆண்டவன் படைப்புத் தொழில் உயிர்களின் துன்ப நீக்கத்துக்கும் இன்ப ஆக்கத்துக்குமே நிகழ்வதென்றே தோன்றுகிறது. உயிர் உடலோடு கூடும் வாழ்வு பெறுதற்கு முன்னர் எத்தன்மையதாய் இருந்தது என்பதை விரிவாக ஆராய வேண்டுவதில்லை. "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல்" என வரூஉந் தாயுமானார் திருவாக்கு உயிர்களின் முன்னைய நிலையை அறிவுறுத்துவது காண்க. இருள் துன்பத்தில் வீழ்ந்து கிடக்கும் உயிர்களை அருள் இன்பத்தில் சேர்க்கவே எல்லாம் வல்ல எம்பெருமான் உயிர்கட்குத்

தநுகரணபுவன போகங்களைக் கொடுக்கிறான். இத்தநுகரண புவன போகங்கள் எற்றுக்கு? உயிர்களின் துன்ப நீக்கத்திற்கன்றோ? மாயாகாரியமாகிய தநுகரண புவன போகங்களின் வாயிலாக உயிர்கட்கு இன்பமூட்ட இறைவன் கொண்டுள்ள திருவுளப்பான்மையை ஏழையேன் விளக்க வல்லனோ?

ஆண்டவன், உயிர்கள் இன்பம் நாடி இவ்வுடலோடு கூடிய வாழ்வை அவைகட்குக் கொடுக்கின்றானென்பதை அறிஞர் பலரும் ஏற்றுக் கொள்வர். தநுகரண புவன போகங்களை இறைவன் உயிர்கட்கு எவ்வழியில் கொடுக்கின்றான் என்பதை ஏற்றுக் கொள்வதில் சிற்சில கருத்துவேற்றுமைகள் உண்டு. நூலளவில் தன் மதங்கொண்டு வாதப்போர் புரிவோர்க்கு வணக்கமொன்றே செலுத்தவல்லேம். இயற்கைக்கும் அளவைக்கும் அநுபவத்துக்கும் மாறுபட்ட கருத்து எதுவாயினும் அதை ஏற்றுக்கொள்ள என்மனம் ஒருப்படாது. இறைவன் உயிர்கள் பொருட்டு உடல் வாழ்வை எதன் வாயிலாக நல்குகிறான் என்பதை விளக்க எவ்வளவை வேண்டும்? காட்சியளவை ஒன்றே சாலும். எனது அருமைத் தந்தையும் தாயும் ஒன்றுபட்டு இல்லறம் நடத்தாதொழிந்திருப்பரேல் யான் இவ்வுலகில் தோன்றியிருப்பனோ? மாயாகாரியமாகிய எனது உடலை ஆண்டவன் எனது தாய்தந்தையர் இல்லறவழியான் எனக்கு நல்கியிருக்கிறான் என்பதை விளங்க உரைக்கவும் வேண்டுமோ? இவ்வாறே ஒவ்வொருவரும் தத்தம் பிறப்பு வரலாற்றை ஆராய்வாராயின் இல்லறத்தின் நோக்கம் விளங்கப் பெறுவர். உயிர்கள் படைப்பிற்கு இல்லறமல்லாத வேறோர் அறத்தை எனக்கு எவரேனும் காட்டுவாராயின் அதைப் பற்றி ஆராய்ந்து உண்மை காணும் கடப்பாடுடையேன். உயிர்களைத் துன்பக் கடலினின்றும் இன்பக்கரை யேற்றவே உலகில் உயிர்கள் ஆண் பெண் வடிவங்களாகப் படைக்கப் பட்டிருக்கின்றார்கள். உலகிலுள்ள புல் முதல் மக்களீறாகவுள்ள எவ்வுயிரும் ஆண் பெண் வடிவமாக இருத்தல் கண்கூடாம். உயிர்கள் ஆண் பெண் வடிவமாகத் தோன்றாவிடின் ஆண்டவன் உயிர்களை இன்பக்கரை யேற்ற வேண்டு மென்னும் திருநோக்கத்திற்கே இடையூறு நேரும். ஆகவே இல்லறமெனும் பேரறம், கடவுள் உளக்கருத்தை நிறைவேற்றும் பெருங்கருவி யென்பது கவனிக்கற்பாற்று. இல்லறமில்லையேல் கடவுள் திருநோக்கம் நிறைவேறுமோ? ஆண்டவன் திருவுள்ளக் கிடக்கையை நிறைவேற்றும் பெருநெறியாகிய இல்லறத்தைச் சிறுநெறி என்று கூறுவோர் பெரியரோ சிறியரோ என்பதை நேயர்களே கூறுதல் வேண்டும். இல்லறம் இறைவன் திருநோக்கத்தை நிறைவேற்ற வல்ல இயற்கையற மென்று கூறுவது மிகையாகாது. இவ்வியற்கை யறத்தை வெறுப்போர் செயற்கை வெயிலில் காய்வோராவர். ஆதலால் மக்கட்பிறவி யெய்தினோ ரொவ்வொருவரும் இல்லறமேற்று வாழவேண்டுமென்று வலியுறுத்துகிறேன்.

உயர்ந்த வேதாந்தத்தையும் மேலான துறவறத்தையும் பேசும் மகன் தாய் தந்தையர் உதவியின்றித் தான் எவ்விடத்தினின்றும் முளைத்தானென்பதை ஆராய்ந்து பார்ப்பானாக. தாய் தந்தையர் வாயிலாக உடல் வாழ்வு பெற்று இவ்வுலகிலுள்ள இன்



பங்களைத் துய்த்துப் பின்னை மேலாம் பதவி யெய்த முயலும் இச் செம்மகன், தன்னைப்போல் ஏனைய உயிர்களும் உடல் வாழ்வைப் பெற்று இவ்வுலக இன்பந் துய்த்துப் பின்னைப் பெரும் பதவி யெய்த இவன் துணைநிற்க வேண்டுமா வேண்டாமா? வேண்டாமாயின் இவன் இரக்கமில்லா வன்கணாளனாகிறான். இவன் மனையோடு கூடிவாழாமையின், சில உயிர்கள் துன்ப நீக்கத்திற்கு இடம்பெறுதொழிகின்றன. அப்பாவம் யாரைச் சாரும்! இல்லறத்தை வெறுத்த இச் சிறியோனையன்றோ சாரும்! மேலும் இவன் கடவுள் நியதிக்கு மாறுபட்டு நடக்கின்றவனும் ஆகின்றான். மனிதப்பிறவி தாங்கிய பயனால் பெறத்தக்க இன்பத்தை இவன் நுகர்வதுபோல இன்னும் உடல் தாங்காது காரிட்ட ஆணவத்தில் கட்டுப்பட்டுக் கிடக்கும் உயிர்கள் அவ்வின்பத்தை நுகர்தல் வேண்டாமா? அந்நுகர்ச்சியைத் தகையும் ஒருவன் இல்லறமல்லாத எவ்வறத்தை மேற்கொண்டொழியினும் இறைவன் ஆணை வழி நிற்பவனாகான். தான் பெற்ற இன்பத்தைப் பிறரையும் பெறுமாறு செய்வதே அறிவுடைமை. இல்லறம் மேற்கொள்ளாத ஒருவன் இறைவன் திருவுளக் கருத்தை நிறைவேற்றாதவன் என்றும், உடல் வாழ்வு பெறாத உயிர்களை வருத்துகிறவன் என்றும், வன்கணாளன் என்றும், தன்னலத்தன் என்றும் நான் பறை சாற்றிக் கூறுவேன். அதனால் ஒருவேளை பாவம் விளையுமானால் அதையும் ஏற்கச்சித்தமாயிருக்கிறேன்.

இல்லறத்தால் பெறற்கரிய பேறு எவ்வாறு பெறுவது என்று சிலர் கேட்கின்றனர். ஆணவச் சிறையில் கட்டுப்பட்டுக் கிடக்கும் உயிர்களின் விடுதலைக்கென ஏற்பட்ட நல்லறமே இல்லறமென்று மேலே எடுத்துக்காட்டியுள்ளேன். இவ்வுண்மையைச் சிறிது விரித்துக்கூற விரும்புகிறேன். ஒருவன் இளைஞனா யிருக்கும்போது, பெரிதும் தன்னைத்தானே நேசித்துக் கொள்கிறான். இஃது உலக இயல்பு. அவனே பின்னை மனத்திற் கிசைந்த இல்லாளோடு கூடிவாழும் மனையறத்தை மேற்கொள்ளும்போது தன்னைத் தான் எவ்வாறு நேசித்து வந்தானோ அவ்வாறே தன் இல்லக் கிழத்தியையும் நேசிக்கத் தொடங்குகிறான். ஒருயிரிடத்துக் கட்டுப்பட்டுக் கிடந்த அன்பு இப்பொழுது மற்றோருயிரிடத்தும் பாய்ந்து நிற்பது கவனிக்கத் தக்கது. பின்னை இருவருஞ் சேர்ந்து சேய்களை ஈனுகிறார். இவ்விருவர் மாட்டும் உலவிக் கொண்டிருந்த அன்பு இப்பொழுது பிள்ளைகளிடத்துப் புகுந்து பாய்வது காணலாம். உலகில் ஒருவன் மறவினை நிகழ்த்தும்போது அவனைப்பார்த்து உலகோர் என்ன உரைக்கிறார்? "அடா பிள்ளை பெறாத பாவி!" என்றன்றோ சொல்கிறார். இதன்பொருளென்னை? பிள்ளை பெறாதவன் அன்பில்லாதவன் என்பதன்றோ? இதனால் அன்புக்கு ஊற்றாக இருப்பது இல்லறமென்பது நனி விளங்குகிறது. தன்மாட்டும் மனைவிமாட்டும் மக்கள்மாட்டும் கட்டுப்பட்டுக் கிடக்கும் அன்பை அந்நிலையில் ஒருவன் ஒடுக்கிக் கொள்வானாயின் அவன் இன்பப் பேற்றை யெய்துபவன் ஆகான். ஆனால் இல்லறம் பிள்ளைப்பேறு பிற அவனது அன்பைக் கட்டுப்படுத்தா. அவை பிறவுயிர்களிடத்தும் அன்பு செலுத்துமாறு தூண்டிக்கொண்டே யிருக்கும்.

தன்னைப்போலவும் தன்மனைவிமக்கள் உற்றார் உறவினரைப் போலவும் மற்ற உயிர்களையும் நேசிக்கின்றவன் எவனோ அவனே துறவறத்தான். எல்லாவற்றையும் வெறுத்துக் காட்டுக்கு ஓடுகிறவன் துறவறத்தானாகான். துறவறமென்பது உலகை விடுத்து உயரப் பறப்பதன்று. எல்லாவுயிர்களையும் தன்னைப்போல் நேசிக்கும் ஒரு பெரும் நிலையே துறவறநிலையாகும். இந்நிலைக்குத் துணைபுரிய வல்ல இல்லறத்தையா வெறுப்பது? திருவள்ளுவர்திருக்குறளை நன்காராய்ந்தால் இவ்வுண்மைகாணலாம். அன்னார் “அழுக்காறவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்–இழுக்காவியன்ற தறம்” என்றும், “மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்” என்றும் அற இயல்பு கூறி அம்மன்மாசற்ற முதற்கண் இல்லறத்தைக் குறித்துப் பின்னை அதற்குரிய வாழ்க்கைத்துணைநலத்தை யமைத்து அதற்குமேல் மக்கட் பேற்றைப் பெய்து பின் அன்புடைமை வகுத்திருத்தல் காண்க. அவ் அன்புடைமை வளர்ந்து வளர்ந்து முடிவில் எல்லாவுயிரையும் நேசிக்கும் பேறநிலை பெறுவிப்பதைத் துறவற இயலால் விளக்கியிருப்பதைக் கூர்ந்து நோக்கல் 'வேண்டும். இம்மூன்றையை ஈண்டு விரிக்கிற் பெருகும். இல்லறம் முழு அன்பு வளர்ச்சிக்கு ஊற்றாயிருக்கும் உயர்வுடைய தென்பதே இங்குக் கவனிக்கற் பாலது. அன்பு படிப்படியாக வளர வளர அதற்கேற்றபடி அறியாமை தேய்ந்து தேய்ந்து ஒழியும். அன்பு வளர்ச்சிக்கும் அறியாமைத் தேய்விற்கும் காரணமாக வுள்ள இல்லறத்தை இழிவாகக் கருதுவது பெரும் பாவம்.

உண்மையாகப் பிறர்நலம் நாடும் எவனும் இவ்வுலகை வெறுத்துக் காட்டுக்குச் செல்லான். காட்டுக்கு ஓடுகிறவன் தன்னலத்தான் என்பதை நேயர்கட்குச் சொல்ல வேண்டுவதில்லை. தன்னலம் நாடிக் காட்டுக்கு ஓடினாலும் அவன் உயர்ந்து விடுவனோ? அவன் பெண்ணோடு வாழும் பேற்றை இழந்தமையால் அவன் உள்ளத்தைப் பெண்ணாசை முதலிய நசைகள் அலைத்துக்கொண்டேயிருக்கும். அவைகளால் குலைவுறும் அன்னோன் மறைவாகக் கூடாவொழுக்கத்தை மேற்கொள்ளும் அநியாய வாழ்வில் தலைப்படுவோன் ஆகிறான். இங்கே பெண்ணை வெறுத்த பாவத்தை அநுபவிக்கிறான். பாவம்! சிலர் தீயொழுக்கத்தின்பாற் படாது வேறு வழியில் பெண்ணின்பத்தை வெறுக்க முயல்கிறார். அவ்வழிகள், மருந்துண்ணல் இயற்கைக்கு மாறுபட்ட செயல்கள் முதலியனவாம். தன்பால் இயற்கையாக எழும் இன்ப உணர்வை அழிக்க மருந்துண்ணலும் வேறு பல செயற்கைச் செயல்கள் ஆற்றலும் இவன் வாழ்வையே கெடுத்து விரைவில் இவனைக் காலன்உலகிற்கு அனுப்பும். பெண்ணொடு கூடிவாழும் ஒருவன் நோயின்றி வாழ்வதோடு புத்திக்கூர்மையுடையனாய் வாழ்வான். ஆண் பெண்ணுக்கெனவும் பெண் ஆணுக்கெனவும் ஏனைய இயற்கைப் பொருள்களைப் போல் கடவுளால் படைக்கப்பட்ட பொருள்களாம். ஒருவரோ டொருவர் கூடி இன்ப வாழ்வை நடாத்தற்கு ஏற்றவாறு இயற்கை யமைப்புகளும் ஒழுங்குபடுத்தப் பட்டிருக்கின்றன. அவ்வியற்கை யொழுங்கு முறைக்கு மாறுபட்டு வாழ்கிறவன் உடல் சாக்கடைபோல் நாறும். அன்பு வளர்ச்சிக்கு இல்லறத்தை யேற்று உயிர்களை ஈன்று அவர்கள் துன்பத்தைப்போக்கி இம்மை மறுமைப்பயன்களை அடைய முயலும் ஒருவனே இறைவன் நோக்கத்தை நிறைவேற்றும் அடியவனாவன்.



நமது நாட்டில் உலகை வெறுத்து ஓடும் துறவு என்பதொன்று பௌத்த சமண சமயங்கள் தோன்றிய நாளில் தோன்றியது. பண்டைநாளில் பெண்ணை வெறுக்கும் போலித்துறவு நமது தமிழ் நாட்டிடை நிலவியதாகத் தெரியவில்லை. பெண்ணை வெறுக்கும் ஒருநெறி தமிழ் நாட்டுக்கு உரியதாயின் தமிழ் நாட்டில் அகப்பொருளியல் தோன்றியிராது. அகப்பொருள் உண்மை நாளடைவில் மக்கட்குப் புலனாகா தொழிந்ததற்குக்காரணங்கள் பலவுள. அவைகளுள் சிறந்தது பெண் இன்பத்தையும், இயற்கை அழகையும் வெறுத்தல் வேண்டும் என்றெழுந்த போலிஞான உணர்வேயாகும். அவ்வுணர்வே நமது நாட்டின் இயற்கை ஆராய்ச்சியை—இலக்கியப்பெருக்கை—பாச்சுவையை— வேறுபல இன்பத்துறைகளை இறந்துபடச்செய்த தென்று நான் கூறுவேன். இல்லறத்திற்கு உயிர்போன்ற பெண்ணை இழிவாகக் கருதும் சிறுமை, என்று நம் நாட்டைவிட்டு அகலுமோ அன்றே நாட்டிற்கு நலம் விளையும். உயிர்கள் தோற்றத்திற்கு நிலைக்களனாயுள்ள தாயைக் குறைகூறலாமா? ஒருபெரியார் “திங்கள், மலர், பாட்டு, பெண், கிறிஸ்து ஆகிய இவ்வைந்தும் தம்முள்ளத்திற்கு இன்பூட்டும் பொருள்கள்” எனக்கூறியுள்ளார். யான் இவ்வைந்தும் பெண்ணே என்று சொல்வேன். அழகிய திங்களையும், செழிய மலரையும், இன்பப் பாட்டையும், அன்புக் கிறிஸ்துவையும் எனது பெண் தெய்வத்தினிடத்திற் காண்கிறேன். அத்தகைப் பெண் தெய்வத்தைப் பேயெனவும், நாயெனவும், மலமெனவும் பேசுவதைக் கேட்பதே பெரும்பாவமெனத் தோன்றுகிறது. பெண்ணைத் தெய்வமாகப் போற்றுவதினுஞ் சிறந்த ஞானம் வேறொன்றுளதோ? பெண்ணினிடத்து மிருக இன்பம் இருப்பதாகக்கருதி அவ்வழியில் அறிவைச் செலுத்துகின்றவன் மனித நிலையினின்றும் இழிந்தவனாவன். உண்மையாகப் பெண்பால் குற்றமில்லை. ஆண்மகன் உள்ளத்துள்ள குற்றமே பெண்ணைச் சிறுமையாகக் கருதச் செய்கிறது. குற்றமிலா ஆண்மகனுக்குப் பெண், தெய்வமாகத் தோன்றுவள். பெண் பேரின்பப் பொருள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவ்வுண்மை காதல்நுட்பம் தேர்ந்தோர்க்குஇனிது புலனாகும். காதற்றன்மை யுணராக் காமுகரைப்பற்றி ஈண்டு ஒன்றுங் கழறவேண்டுவதில்லை. இப்பாவிகள் உள்ளமட்டும் பெண் உலகிற்குச் சிறுமையே விளைந்து கொண்டிருக்கும். பண்டைக் காலத்தில் பெரிதும் காதல் மணம் நிகழ்ந்து கொண்டிருந்தமையான் தீயொழுக்கம் பெரிதும் அருகியிருந்தது. காதலின்பம் மக்கள் வாழ்வைத் தூய்மைப்படுத்தி வந்தது. காமுகர்கள் நுகரும் இன்பம் இன்பமா? இன்பம் என்பது காம உணர்வைக் கடந்து நிற்பது; காதலில் படிந்து கிடப்பது. “கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள” என வருஉம் திருவள்ளுவர் செம்மொழியின் பொருள் தேருவோர்க்குக் காதலின்பத்

தின் பெற்றி செவ்விதிற் புலப்படும். ஆண்டவனோடு நட்புக்கிழமை பூண்டொழுகிய நமது வன்றொண்டப் பெருந்தகையாரும் "பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றுரையுடையேன்" என்று தமக்கும் தம்து இன்னுயிர்க் காதல் கிழத்திமார்க்கும் உற்றிருந்த நேயம் கடவுள் நேயம் என்பதை விளங்க ஓதியுள்ளார். காதல்மணம் இறந்துபட்டுள்ள இந்நாளில் பெண்ணின் இடத்துள்ள கடவுட்டன்மையை அறிதல் அரிதே. பழந்தமிழ் மக்கள் அறம், பொருள் இன்பம் என்னும் மூவகைப்பேற்றையே அடைய முயன்று வந்தார்கள். பின்னை மக்கள் இயற்கை வாழ்வை விடுத்துச் செயற்கை வாழ்வில் தலைப்பட்ட நாள் தொட்டு அவர்கள் மூன்றாவதாய இன்பத்தைச் சிற்றின்பமென்வும், பேரின்பமெனவும் இருகூறுபடுத்தி, மூன்றாவதாய இன்பத்தைச் சிற்றின்பமெனவும் வீட்டின்பம் எனும் நாலாவதைப் பேரின்பமாகவும் கொண்டார்கள். பண்டை நாளில் இன்பம் எனும் ஒன்றில் சிற்றின்பம், பேரின்பம் எனுமிரண்டும் அடங்கியிருந்தன. பின்னாளில் இரண்டாகப் பிரிந்த ஒரின்பத்தேன் பெண்வாயிலாகப் பிலிற்றிக் கொண்டிருந்தது. இத்துணைப் பெருமை வாய்ந்த பெண்ணையா வெறுப்பது? பழிப்பது? அறியாமை! அறியாமை!! அகப்பொருள் தோன்றப்பெற்ற தமிழ்நாடே! நீயுமா பெண்ணைப் பழிக்கின்றாய்? நினது இயல்பு அஃதன்று. காலநிலை தேசநிலை முதலிய நிலைகளை நோக்கி இல்லறவாழ்வு வேண்டாம் என்று சிற்சில அறிஞர் அவ்வப்போது கூறுவதுண்டு. அக்கூற்றை அழியா அறக்கூற்றாகக் கோடல் ஆகாது. மணியோடு கூடி வாழாத ஒரு கூட்டத்தார் சேவை வேண்டப்படும்போது, அறிஞர் இல்லறம் ஏலாது பிறர்க்கு உழைக்கப் புகுவது வழக்கம். அப்பெரியோர் பிறர்நலம் நாடி, பெண்ணோடு வாழும் வாழ்வைத் துறப்பதால் கேடு நேரிடாது. அவர் தீயொழுக்கத்திலும் வீழ்ந்து இடர்ப்படார். பின்னாளில் மகாத்மா காந்தி மணவினை வேண்டாமென்று சொல்லுகிறார். எக்காரணம் பற்றி அவர் அவ்வாறு சொல்லுகிறார் என்பதை ஆராய்தல் வேண்டும். காந்தியடிகள் கடவுள் திருவுள்ளக் கருத்துக்கு மாறுபட்டு நின்றுதல், பெண்ணைப் பழித்தாதல் அவ்வாறு கூறுகின்றாரில்லை. நாடு உரிமையிழந்து வறுமையாம் சிறுமைக் குழியில் வீழ்ந்து இடுக்கணுறும் இவ்வேளையில் குழந்தைகளைப் பெற்று அவைகளைப்பாதுகாத்து அறவழியில்வளர்க்கப் போதிய பொருள் வருவாயின்றி அல்லற் படுவதை நிறுத்தவேண்டி இரக்கமேலிட்டான் மணவினை வேண்டாமென்று அடிகள் அறைகிறார். காலநிலை நோக்கி ஒரு பெரியார் வெளியிடுங் கருத்தை என்றும் நிலைபேறுக நிலவும் அழியா மூலக்கருத்தாகக்கொள்ளுதல் தவறு. காந்தியடிகள் உரிமைப் போருக்கு எப்பற்றுமில்லா இளைஞரைப் பண்படுத்த வேண்டியும், அடிகள் நாட்டில் சின்னாள் மணவினை நிறுத்தப்படல் வேண்டுமெனச் சொல்லுகிறார். காலநிலைக்கு ஏற்றவாறு அடிகள் பகர்ந்த அறவுரையைப் பெண்ணை என்றும் பழித்துக் கூறும் பாவிகள் ஆண்டு, உலகை ஏமாற்றலாகாது.

இதுபோழ்து உலகுபுகழ் கவியரசரும் இந்தியமணியும் வங்காளச்செ



ல்வமுமாகிய கவிச்சக்கரவர்த்தி ரவீந்திரநாத தாகூர் யாத்துள்ள பாக்களின் கருத்துக்கள், பழந்தமிழ்மக்கள் இன்பவாழ்வை நினைவூட்டுகின்றன. தாகூர் எதையும் வெறுக்குமாறு அறிவுறுத்துகிறாரில்லை. எதையும் பொய்யென்று புகல்கிறாரில்லை. எல்லாவற்றையும் இறைவன் வடிவமாகக் கொள்ளுமாறு கூறுகிறார். அவரது போதனை இந்தியாவைப் பழைய நிலைக்குக்கொண்டுவரும் என்று உறுதியாக நம்புகிறேன். இல்லறத்தை வெறுக்குங் கூட்டத்தாரும் அவரொழுதும் நூல்களும் பெருகப் பெருக இன்ப நெறி இன்னதென்றே தெரியாமற் போகும். இந்நாளில் ஞானநூல்களெனச் சொல்லப்படும் சில நூல்களை வாசித்தும் மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை எனும் மூவாசையைத் துறக்க வேண்டுமென்றும், வேதாந்த வீட்டை நாடவேண்டு மென்றும் ஊரார்க்குச் சொல்லித் தாம் மாத்திரம் வயிறார உண்டும் களியாடல்களில் படிந்தும் எல்லாம் கடவுள் மயம் என்று சொல்லியும் தூர்த்தர்களாக வாழும் சகோதரர்களுக்கு இரங்குகிறேன். ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளாக நமது நாட்டில் போலித்துறவறம் நுழைந்து நமது ஊக்கத்தை—ஒழுக்கத்தை—உறுதியைக் குலைத்து வருகிறது. வெறுப்பு வெறுப்பு எனும் சொல்லே நமது நாட்டைக் கெடுத்து விட்டது. எதையும் ஆண்டவன் அன்பு வடிவாக நோக்கினால் வெறுக்கத் தக்கது ஒன்றிருக்குமோ? ரவீந்திரநாத தாகூர் இவ்வுண்மை உணர்ந்தே வெறுப்பை வெறுக்குமாறு கோருகிறார். அவர் நூல்களை நமது நாட்டார் பயின்று வருவாராயின் பழைய இல்லறநெறி மீண்டும் புத்துயிர் பெறுமென்பது நிச்சயம். வெறுப்பு துறவு என்பன இலை தழை அரும்பு மலர் காய் கனி இல்லா வற்றல் மரம்போல் தோன்றுகின்றன. ஆதலால் இனி வெறுப்பு துறவு என்பன சிறுவருள்ளத்தில் பதியாதவாறு காக்கவேண்டுவது தாய்தந்தையர்கடமை. கல்விபயின்று தொழில் மேற்கொண்டு அறவழியில் பொருளீட்டி இல்லற மேற்று இறைவன் திருவுள்ளக்கருத்தை நிறைவேற்ற இயலாது சோம்பலாலும் பிழைக்கும் வழி தெரியாமையாலும் "மனைவி மக்கள் பொருட்டு நாம் ஏன் உழைத்தல் வேண்டும்" என்னுந் தீய எண்ணத்தாலும் மொட்டையடித்தும் சடைவளர்த்தும் துவராடை புனைந்தும் சந்யாச வேடந்தாங்கித் திரியும் தீயொழுக்கம் நாட்டில் பல இடங்களில் பாவியிருக்கிறது. ஒன்று இல்லறமேற்று அன்புநெறி வளர்த்தல் வேண்டும். அல்லது அவ்வறமேற்கொள்ளாது உலகுய்ய நெறிபற்றியொழுகுதல் வேண்டும். இவ்விரண்டுமின்றி சோம்பேறிகளாகத் திரிந்து கூடாவொழுக்கத்தில் தலைப்பட்டுத் தீநெறி வளர்த்துவரும் போலிச் சந்யாசிகளையும் அவர்கள் போதனைகளையும் ஏற்றுக்கொள்ள எவரும் ஒருப்படலாகாது. நமது இந்திய நாட்டில் ஐம்பது லட்சம் சோம்பேறிச் சந்யாசிகள் திரிவதாகத் தெரியவருகிறது. இவர்களுள் கள்ளர் பலர். குடியர் பலர். கொலைஞர் பலர். இவர்கள் எத்துணை இல்லறத்தார் பொருளை நேர்வழியிலும் வேறு வழியிலும் பறித்து வருகிறாரென்பது நாட்டார்க்கு நன்றாகத் தெரியும். இக்கூட்டத்தவருள் சிறிது கற்றவராயிருப்பவர் தமது சோம்பர்க் கூட்டத்தார் பிழைப்புக்கென சில

போலி நூல்களை யெழுதிவெளியிடு கின்றனர். அந்நூல்கள் கல்வியில்லா ஏழை மக்களை எவ்வெவ் வழியில் ஏமாற்றுகின்றன என்பதை விரிக்கிற் பெருகும். இக்கூட்டம் பெருகப் பெருக நாடு பலவழியிலும் இழிநிலை யெய்தி இடருறு மென்பது திண்ணம். இறைவன் திருவுளக்கருத்துக்கு மாறுபட்டுத் திரியும் இவ்வினத்தார் ஒருவித நாத்திகத்தை வளர்த்துவருகிறார்களென்று கூறலாம். இன்னவர்க்குத் துணைபுரிவது இறைவனை அவமதிப்பதாகும்.

இனி தமிழ் மக்கள் பழந்தமிழ் நூல்களை ஆராய்ந்து அவைகளுட் போந்துள்ள இல்லற மாண்பையும் பெண்ணின் பெருந்தகைமையையும் நாட்டிற் பழயபடி பரப்ப காப்புக்கட்டி யுழைப்பார்களாக. உழைத்துவரின் இறைவன் உளமும் இல்லறமும் இரண்டிற்குமுள்ள அன்புத் தொடர்பும் நனிவிளங்கும். நாம் பயிலுங் கல்வியும் நினைக்கும் நினைப்பும் பேசும் பேச்சும் எழுதும் எழுத்தும் செய்யும் செயலும் எல்லாம் அவ்வன்புத்தொடர்பை உணர்த்துவனவாய் இருத்தல் வேண்டும். நமது நாட்டுக் கடவுளர் எவரே பெண்ணோடு கூடி வாழாதவர்? எல்லாரும் பெண்ணுடன் வாழ்பவரே! இவ்வுலகை வெம்மை தண்மை யென்னும் இரண்டும் இயக்கி வருகின்றன. வெம்மை ஆணுக்கு அறிகுறி. தண்மை பெண்ணுக்கு அறிகுறி. இயற்கை நிலை இவ்வாறாகத் தண்மையாம் பெண்ணை ஏனோ வெறுத்தல் வேண்டும்? இனிய அமிழ்து பொழியுந் திங்களை வெறுப்போர் யாவர்? உடலமைப்பில் ஊறுடையாரே அவ்வெண்ணிலவை வெறுப்பார். அதுபோல உடலில் உரமில்லாதாரும் நரம்பு தளரப் பெற்றோரும் நோய்வாய்ப் பட்டோரும் தீயொழுக்கத்தால் உடல் வளத்தைச் செகுத்துக் கொண்டவரும் இன்னவரன்ன பிறரும் அழகுறையும் இன்பத் தெய்வமாகிய பெண்ணை வெறுத்துக் கூறுவர். இவர்கள் சபிக்கப்பட்டவர்களென்று அறிஞர் கூறுவர். உலகில் பிறப்பது எற்றுக்கு! பெண்ணோடு கூடிப் பேரின்பம் துய்ப்பதற் கன்றோ? பெண்ணை வாழ்க்கைத் துணைநலனாகக் கொண்ட இல்லறத்தை ஏற்றிப் போற்றுதார் யாரே? "அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின், புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவ தெவன்" என்று திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந்திருப்பதைக் காண்க. ஔவையார் மிகச் சுருங்கிய உரையால் "இல்லற மல்லது நல்லற மன்று" என்று கூறிப் போந்தார். இல்லற மல்லாத அறம் நல்லற மாமோ? இல்லறமே இயற்கை யறம். மற்றையது செயற்கை யறம். அன்பர்களே! உங்கட்கு இயற்கை வேண்டுமா? செயற்கை வேண்டுமா? இன்பம் வேண்டுமேல் இயற்கையை விரும்புங்கள்! துன்பம் வேண்டுமேல் மற்றொன்றை விரும்புங்கள்! பெறற்கரிய மக்கட் பிறவி தாங்கி ஏனோ செயற்கைத் துன்பத்தில் விழுந்து வருந்தல் வேண்டும்? இயற்கைக் குரிய இல்லறத்தில் இறங்குங்கள்! அஃதே இறை உளம் என்பதை உணருங்கள்! இல்லற மில்லையேல் எத்துணை உயிர்கள் துன்பத்தில் வீழ்ந்து கிடக்கும்; உயிர்கள் துன்பத்தை நீக்க வல்ல இல்லறத்தை—இயற்கை யறத்தை—ஓம்ப எழுங்கள்! எழுங்கள்!! அவ்வறத்துக் குரிய பெண்மக்களைப் போற்றுங்கள்!



அவர்களே உங்கள் உடல் பொருள் ஆவி எல்லாம், எல்லாம்! நீங்கள் பெண்ணைப் போற்றிய நாளில் உங்கள் நாடு எந்நிலையி லிருந்தது? உங்கள் மொழி எந்நிலையி லிருந்தது? உங்கள் சமயம் எந்நிலையி லிருந்தது? இப்பொழுது இவைகள் எந்நிலையி லிருக்கின்றன? நீங்கள் பெண் மக்களை அடிமைகளாக்கி விட்டீர்கள். நீங்கள் அடிமைகளானீர்கள். உங்கள் நாடு அடிமைக் குழியில் விழுந்துவிட்டது. நீங்கள் மீண்டும் துன்பக்கடல் கடந்து இன்பக் கரை யேறவேண்டுமானால் பெண்ணைப் போற்றுங்கள்! அவர்கட்குப் பெருமை கொடுங்கள்! அன்பு நெறியாகிய இல்லறத்தை ஓம்புங்கள்! இல்லறத்திற் குரிய அகப்பொருளை ஆராயுங்கள்! தமிழ் மக்களே! தொல்காப்பியப்பொருளதிகாரத்தைப் படியுங்கள்! இறையனாரகப்பொருளை வாசியுங்கள்! மணிவாசகனார் திருக்கோவையாரை ஓதுங்கள். இறை உளத்தை யறியலாம்; இல்லறத்தை யுணரலாம். இரண்டிற்கும் உள்ள தொடர்பை—அதற்குரிய பெண்ணின் பெருமையை அறியலாம்.

---

மன்னர் வானவரால்லர், மேல் வானவர்க்கரசாம்
பொன்னின் வார்கழல் புரந்தரன் போலியரல்லர்,
பின்னும் மாதவம் தொடங்கி நோன் பிழைத்தவர் அல்லர்,
சொல்மருமகற் பெறறவர் அருந்துயர் துறந்தார்.

—கம்பர்.

ஊன்வாட உண்ணு துயிர்காவ லிட்டு
உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து
தாம்வாட வாடத் தவம் செய்ய வேண்டா
தமதா இமையோர் உலகாளகிற்பீர்
கானுட மஞ்ஞைக் கணமாட மாடே
கயலாடு கானீர்ப் பழனம் புடைபோய்
தேனுட மாடக் கொடியாடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்றுசேர் மின்களே.

—திருமங்கையாழ்வார்.

காவியு டுத்தும் தாழ்சடை வைத்தும் காடுகள் புக்கும் தடுமாறிக்
காய்கனி துய்த்தும் காயம் ஒறுத்தும் காசினி முற்றும் திரியாதே
சீவனொ டுக்கம் பூதவொடுக்கம் தேறவு திக்கும் பாஞான
தீபவி ளக்கம் காணஎ னக்குன் சீதள பத்மம் தருவாயே
பாவநி றத்தின் தாருக வர்க்கம் பாழ்பட உக்ரம் தருவீரா
பாணிகள் கொட்டும் பேய்கள்பி தற்றும் பாடலை மெச்சும் கதிர்வேலா
தூவிகள் நிற்கும் சாலிவளைக்கும் சோலைசி றக்கும் புலியூரா
சூரர் மிகக்கொண் டாட நடிக்கும் தோகைந டத்தும் பெருமாளே.

—அருணகிரிநாதர்.

---

# இளங்கோவடிகள்.

அ. கிருஷ்ணசாமி நாயுடு.

(முன் தொடர்ச்சி.)

### கூ. சமயம்.

சிலப்பதிகாரப் பதிப்பாசிரியர் மகா
மகோபாத்யாய சாமிநாத ஐயரவர்கள்
இளங்கோவடிகளின் சமயம் சைவ
சமயம் என்று எழுதியுள்ளார்கள்.
அதற்கு ஆதாரங் கூறுவதாவது:—
"கால்கோட் காதையில் செங்குட்டு
வன் இமயஞ் செல்லப் புறப்பட்ட
பொழுது

நிலவுக் கதிர்முடித்த நீள் இருஞ் சென் [னி,
உலகு பொதி உருவத்து உயர்ந்தோன் சே [வடி,
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து,
இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங் கொண்டு

எனவும், பின்பு,

ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்
சேடங்கொண்டு சிலர் நின்று ஏத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்,
ஆங்கது வாங்கி, அணிமணிப் புயத்துத்
தாங்கினன் ஆகி

எனவும், செங்குட்டுவனை நோக்கி
இமயத்து வந்த முனிவர்கள் கூறிய
தாக,

செஞ்சடை வானவன் அருளினில் விள [ங்க
வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்

எனவும், வரந்தரு காதையில் மாட
லன் கூறியதாக

ஆனேறு உயர்த்தோன் அருளினில் [தோன்றி
மாநிலம் விளக்கிய மன்னன் ஆகலின்

எனவும், இவரே கூறியிருத்தலினு
லும், இவர் அவனுடைய தம்பியாத
லினும் இவரது சமயம் சைவமெ
னத் தோற்றுகின்றது" என்பதாம்.
இவற்றுள் ஒன்றேனும், அடிகளின்
சமயம் இன்னதெனத் தெரிவிப்பன
வன்று; அனைத்தும் அடிகளின்
அண்ணன் செங்குட்டுவனைப் பற்றித்
தெரிவிப்பன. செங்குட்டுவன் தம்பி
என்ற முறை ஒன்றினுலே, எங்ஙனம்
அடிகளின் சமயம் சைவசமயமெனச்
சொல்லலாம்? மகன் பெயரினைக்
கொண்டு அப்பன் சமயத்தையும்,
உறவினரின் பெயரைக்கொண்டு பிற
ரின் சமயத்தையும், செந்தமிழ்ப் புல
வரில் சிலவர் தீர்மானிக்கின்றனர்.
அங்ஙனமே, அருந்தமிழ்ப் புலவர்
ஒருவர், கம்பர் மகனுக்கு அம்பிகா
பதி எனப் பெயரிருத்தலினுல், கம்பர்
சைவசமயம் எனச் செந்தமிழ்ப் பத்
திரிகையில் எழுதியுள்ளார். இதற்
கும் ஆசிரியர் ஐயரவர்கள் கூறுவதற்
கும் வேறுபாடென்னை? தாம் கூறுவ
திலேயே ஆசிரியர் ஐயரவர்கள் ஐயு
ற்று, "அடிகளைச் சைனசமயம் என்
று கூறுவாரு முளர்" என்கின்றனர்.
இங்ஙனம்வேண்டாவிருப்பாகச் சைன
சமயம் எனச் சாற்றுவதிற் பயனெ
ன்? நடுநின்ற அடிகளின் சமயத்தை
நடுநின்றன்றோ நாடல் வேண்டும்?
அடிகளின் சமயம் சைவசமயம் என்ப
தற்காகச் சிலப்பதிகாரம் முழுதும்
துருவி, உள்ளன முழுதும் எழுதிய
ஆசிரியர் ஐயரவர்களுக்கு, வேறு சம
யத்தினைக் காட்டும் அடிகள் அகப்ப
டாமற் போயினவே! ஒருதலைப் பார்
வையின்றி, நடுநின்று நன்கனம் நோ



க்கின், வேறு சமயத்தைப் பற்றிக்
கூறும் அடிகள் அகப்படாமற் போகு
மோ? ஆய்ச்சியர் குரவை எனும்
காதை முழுவதும் கண்ணபிரானைப்
பற்றியே கழறுகின்றன. இளங்கோ
வடிகள், இளங்குமரன் கண்ணபிரானை,
அகத்திலடங்கா அன்புகொண்டு வா
ழ்த்துகின்றனர்; வணங்குகின்றனர்.
அவ்வாழ்த்தும் வணக்கமும் ஆய்
ச்சியர் பேச்சாகவே யிருப்பினும்,
அப்பேச்சினுள் கமழும் மணம் அனை
த்தும் இளங்கோவால் தாளித்ததன்
றோ? அம்மணத்தினைச் சிறிது மண
க்குதும்.

மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா [வகை முடியத்
தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங் [கான் போந்து,
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை [கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செ [வியே:
திருமால்சீர் கேளாத செவியென்ன செவி [யே.

பெரியவனை மாயவனைப் பேருலகம் [எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண் [ணும்
திருவடியுங் கையுங் கனிவாயும் செய்ய
கரியவனைக் காணுத கண்ணென்ன கண் [ணே:
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணெ [ன்ன கண்ணே.

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனுர் வஞ்சங்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் [போற்றத்
தொடர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க் [குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே:
நாராயணு என்னு நாவென்ன நாவே.

அகங் குழைக்கும் இப்பாசுரங்க
ளைப் பாடும் பொழுதே, தம்மையறி
யாமல் கண்ணபிரான் கழலிணைகளில்
அன்பு நெகிழ்கின்றதே! அந்நிலைமை
யில் அடிகளின் சமயம் யாதென்று
இயம்புவோம். வைணவ சமயத்தடிப்
பேறினுர் ஒருவர், ஆய்ச்சியர் குரவை
யினை ஒரு முறை ஓதுவாரே யாயின்,
அடிகளின் சமயம் வைணவ சமயம்
என அஞ்சாது கூறுவர். பழந்தமிழ்
இலக்கியங்களின் உரையாசிரியர் அ
னைவரும், தத்தம் குலத்தையும் சம
யத்தையுமே பெரிதும் பற்றி, வேண்
டுமிடமெல்லாம் குலத்தையும் சமய
த்தையும் வேண்டுமென்றே திணித்
துத் திணித்துத் திரித்துத் திரித்துப்
பொருள்கூறிப் போகின்றனர். அவ்வ
ழியில் அரும்பிய நமக்கோ அவ்வடிச்
சுவட்டைப் பற்றி ஏகுதல் மிக எளி
தாயிற்று. ஆகையால், அத்துவிதம்
என்னும் அருந்தமிழ்த் தாழியில் அ
ரும்பிய ஆசிரியர் ஐயரவர்கள் என்
னும் மறைமாங்கன்று, சைவசமயம்
என்னும் பிற ஒட்டு மாங்கன்றுடன்
கட்டப்பட்டுக் கூடிச் செழித்து, வள
ர்ந்து, அரும்பிப் பூக்குமேல், ஓங்கிய
சைவசமயம் எனும் ஒட்டு மாங்கனி
யன்றி, வேறெக் கனியைத்தான் தமி
ழுலகிற்கு நல்கும்? இதில் எமக்கு
மாச்சர்யமும் இல்லை; ஆச்சர்யமும்
இல்லை. இங்ஙனம் இயம்பல் இன்னோ
ரன்னவர்க்கு இயல்பு.

இதுகாறுங் கூறியவாற்றுல், அடி
களின் சமயம் வைணவ சமயம் என்று
கூறப்படும் என அன்பர் அதிக ஆர்
வங்கொள்வர். எம்மதம் அதுவே யா
யினும், அங்ஙனங் கூறச் சம்மதம்
இன்று; இது காலை, அங்ஙனமெல்
லாம் நமது சமயத்தைக் கூறும் சம
யம் அன்று. ஒவ்வொரு நூலாசிரிய
ரும் தத்தம் சமயத்தினை, அவ்வந்நூ
லின் காப்புச் செய்யுட்களிலேயே தெ

ளிவு படுத்துவர். இங்ஙன மின்றி, இ
டையினும், இறுதியினும் குறிப்பாக
வும் விளங்கவைப்படார். அங்ஙனங் கூ
றிய குறிப்புக்களில் சார்ந்தனவே, மே
ற்கூறிய செங்குட்டுவனைப் பற்றியன
வும், ஆய்ச்சியர் குரவையுள் கண்ண
பிரானைப் பற்றியனவும். இவ்விரண்டு
மின்றி, அருகக் கடவுளைப் பற்றியன
பல உள. மேலும், அடிகள் எனும்
பெயர் சைனத் துறவிகளுக்கு வழங்
கும் ஓர் அருகிய வழக்குண்மையானு
ம், கோட்டம் என்பதற்கு அருகன்
கோயில் என அடியார்க்கு நல்லார்
உரை யுண்மையானும், அடிகளை
அருக சமயத்திற்கே அருகர் என
அழைக்கப் பெறுவர். ஆயினும், அடி
கள் அருக மதத்தினராயின் முதற்க
ண் ஓர் மொழியேனும், அருகமதச்
சார்பாகச் சாற்றி யிருப்பரன்றோ?
சோமுனி முதற்கண் செப்புவன,
முற்கூறிய சமயங்கட்கு முற்றிலும்
புறத்து வேற்றுமையுற்றே உள்ளன.
ஆயினும், அகத்தே அம் முச்சமய
நுண்பொருள்கள் ஒற்றுமை யுற்றுத்
திகழ்கின்றன. அடிகளின் அகத்தில்
அரும்பிய ஆண்டவன் வடிவங்கள்
திங்கள், ஞாயிறு, மழை, நகரம் என்
பன. அவற்றினையே புறத்தே வைத்
துப் போற்றுகின்றனர்; புகழ்கின்ற
னர். அம் மங்கலவாழ்த்தினை அன்
பர் ஆழ்ந்து ஆராய்தல் வேண்டும்.

அவையாவன:—

திங்களைப் போற்றுதும்: திங்களைப் [போற்றுதும்:
கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் [குடை போன்று, இவ்
அங்கண் உலகளித்தலான்.

ஞாயிறு பொற்றுதும்: ஞாயிறு போற் [றுதும்:
காவிரிநாடன் திகிரிபோல், பொன்கோட்டு
மேருவலந் திரிதலான்.

மாமழை போற்றுதும்: மாமழை போற் [றுதும்:
நாமநீர்வேலி உலகிற்கு, அவன் அளிபோல்,
மேல் நின்று தான் சுரத்தலான்.

பூம்புகார் போற்றுதும்: பூம்புகார் போற் [றுதும்:
வீங்குநீர் வேலி உலகிற்கு, அவன் குலத் [தோடு,
ஓங்கிப் பரந் தொழுகலான்.

இங்ஙனம் திங்கள், ஞாயிறு, மழை,
நகரம் இவற்றினை வணங்குவாரை எ
ச்சமயத்தவர் என்று இயம்புவது?
அவ்வணக்கத்தை எக்கடவுளரின் வ
ணக்கமென்று வாழ்த்துவது? அவ்
வடிவங்கள் இறைவனின் இயற்கை
வடிவங்கள்; வணக்கமும் இயற்கை
வணக்கம். பழங்காலத்துத் தமிழர்
இயற்கையினையே இறைஞ்சிவந்தனர்.
இவ்வாறான வணக்கங்களைப் பழங்
கால ஆரியர் வணக்கங்கள் என்று பக
ர்வர். அவை எங்ஙனம் ஆயினும் ஆ
குக. ஆயினும், அவரினின்றும் இவர்
அறிந்து வணங்கினவர் அல்லர். இங்
ஙனம் பல்லாயிரம் ஆண்டுகள் இயற்
கைக் கடவுளும், வணக்கமுமே தமிழ்
நாடெங்கணும் தழைத்திருந்தன. பி
ன்னரே, செயற்கைக் கடவுளும் வண
க்கமும் தோன்றின. அத்தோன்றல்
முறையினை இவ்வியற்கை வணக்கங்
களி லிருந்தே காட்டுதும். என்னை?
ஒரு சமயத்தார் திங்களையும் ஞாயி
றையும், தமது சமயத்துக் கடவுளின்
கண்களாகக் கண்டனர். மற்றொரு
சமயத்தார் மழையினையும், நகரையும்
(பூமியையும்) தமது கடவுளின் திரு
வடிவமாகவும், தேவியாகவும் செப்பி
னர். பிறிதொரு சமயத்தார் திங்க
ளைத் தமது சமயக்கடவுளின் குடை
யாகக் கூறினர். இச்செயற்கை வடி
வங்களுக்குப் பொருந்தவே, செயற்
கை வணக்கங்களும், வாழ்த்துக்க
ளும் வளம்பட வகுத்தனர். பின்னர்,



அவதரித்த ஆழ்வார், நாயன்மார் பா
சுரங்களில் கூட இயற்கை வழிபாடு
கள் அளவிறந்தன உள்ளன. அவை
உரைக்கின் விரியும். விரிவஞ்சி விடுத்
தனம்.

இவ் வுண்மைகளைக் கண்டு யாம்
துணிந்து கூறுவது யாதெனில்:- இள
ங்கோவடிகளின் சமயம் இயற்கைச்
சமயம்; அவரின் வழிபாடு இயற்கை
வழிபாடு; அவரின் கடவுள் இயற்
கைக் கடவுள். இனி, இவரைச் சைவ
ரென்று சாற்றினும் சாற்றுக; வை
ணவரென்று விளம்பினும் விளம்புக;
அருகர் என்று அறையினும் அறைக;
பிறர் பிறிதென்று பேசினும் பேசுக.
எங்ஙனம் கூறினும், அவ்வச் சமயத்
தோருக்கு அடிகள் அருகரே ஆவர்.
அடிகள் நமக்கும் அருகர்; ஆண்டவ
னுக்கும் அருகர்; எக் கோயிலினும்
தவம் செய்தற்கும் அருகர். ஆகையா
ல், அன்பால் அவரை அருகர் என்று
அழைப்பினும் என்? அத்தவம் செய்
த கோயிலை அருகர் கோயிலென்று
கூறினும் என்? எங்ஙனம் எடுத்தெ
டுத்துக் கூறுவதற்கும் அருகர் எமது
இளங்கோவடிகள்.

இயற்கை வணக்கங்களில் நகரத்
தையும் சேர்த்து இளங்கோவடிகள்
இறைஞ்சுகின்றனர். இயற்கை வணக்
கங்களில் தேயத்தை (நகரத்தை) வ
ணங்குவதும் ஒன்று. இது பண்டைத்
தமிழர் பழக்கம். தாய் நாட்டை வண
ங்குவதற்குத் தகுதியற்ற தமிழ்ப்
புலவன் இருப்பனேல் அவனைப்போல்
புல்லன் யாவன்? அவன் கல்வி எற்று
க்கு? அவன் அறிவு எற்றுக்கு? எம
து இதயத்தில் வீற்றிருக்கும் இளங்
கோவடிகளைப் போல் இயற்கையினை
வணங்கும் இசைத்தமிழ்வாணர் வே
ண்டும். நாட்டினை வணங்கும் நற்ற
மிழ்ப்புலவர் வேண்டும். இது போழ்
துள்ள தமிழ்நாட்டுத் துறவிகள் இள
ங்கோவடிகளைப் போல் தமிழ் மொழி
யைத் தழைக்கச்செய்தல் வேண்டும்.
அடிகள் அருள் அடைக.

---

செந்தமிழ் நாடெனும் போதி னிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சி னிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே—எங்கள் (செந்தமிழ்)

நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தந் தவஞ் செய் குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ் நாடு (செந்தமிழ்)

கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு (செந்தமிழ்)

வள்ளுவன் தன்னை உல கினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி கார மென் றோர்மணி
யாரம் படைத்த தமிழ் நாடு (செந்தமிழ்)

# சைவ சமயத்தின் தற்கால நிலை.

எஸ். சச்சிதானந்தம்பிள்ளை, பி. ஏ., எல். டி.

(முன் தொடர்ச்சி)

தன் வயலில் ஒரு சாணளவு மண்
ணைத் தன்னயலான் வெட்டி யெடுத்
தால் அது பொருது போராடி மண்
ணை யுடைத்துக்கொள்ளு மொருவன்
ஆன்மநேய உரிமைப்பாடுடைய தன்
சமயசகோதரன் தன் சமய ஆராய்ச்சி
செய்யாமற் புறமதம் போவதைக்
கவலையின்றிப் பார்த்துக்கொண் டிரு
த்தல்முறையோ?* ஆண்மைகுன்றிய
தற்கால இந்துக்கள் தவிர வேறெந்
தச் சமயத்தவரும் இங்ஙனம் பொறு
ப்புணர்ச்சியற்றுக் கிடக்கக் காண்டல்

அரிது, அரிது. அவருள்ளுஞ் சிலம்
பேசுந் தமிழ்நாட்டுச் சைவர் சிறுமை
யே சிறுமை; இவர்களுக்கு நந்தியெ
ம்பெருமான் வேண்டிப் பெற்ற பதி
னாறு பேறுகளில் "மறைகணிந்தனை
சைவ நிந்தனை பொறு மனமும்",
"நினைவில் வேறொரு கடவுளை வழி
படா நிலையும்", "தீமையாம் புறச்
சமயங்க ளொழித்திடு திறனும்"
என்பனவும், "ஞால நின் புகழே
மிகவேண்டுந் தென்னாலவாயிலுறையு
மெம்மாதியே" என்னுஞ் சம்பந்

* கி. பி. எ-வது நூற்றாண்டு வரையில் பிரமதத்தவரையும் பிறநாட்டவரையும் இந்து மதத்தில் எளிதில் சேர்த்துவந்ததாகச் சரிதவல்லார் தெரிவிக்கின்றனர். எகிப்து தேசத் திலிருந்து க0,000 மிலேச்சர்கள் இந்துக்களாக மாறிய செய்தி ஒரு புராணவாயிலாய் வெளியாகிறது. இராமப்பிரசாத சந்திரர் என்னும் சிலா பரிசோதனை வல்லவர் எழுதிய Archaeology and Vaishnava Tradition (Archaeological Survey of India No. ௫) என்னும் நூலில் தற்கால இந்துக்கள் உணரவேண்டிய உண்மைகள் பலவற் றை வெளியிட்டிருக்கிறார். அவற்றுட் சில ஈண்டுத்தருவாம்:—

கி. மு. உ-ம் நூற்றாண்டில் பல கிரேக்கர்களும் சித்தியர்களும் ஹன்ஜாதியாரும் இந்துக்களாக மாறினர். ஹெலியோடோரஸ் என்னும் ஒரு கிரேக்கன் வைணவனாக மாறி ஒரு கருடத்தம்பம் நாட்டினான். அதிற்காணப்படும் கல்வெட்டின் மொழிபெயர் ப்பு ஆசிரியர் ராப்சன் எழுதிய Ancient India என்னும் நூலில் பின்வருமாறு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. This Garuda columu of Vasudeva, the God of Gods was erected by Heliodorus, a worshipper of Vishnu the son of Dion and an inhabitant of Taxila, who came as a Greek ambassador from the Great King Antialcidas to King Kaciputra Bhagabhadra, the saviour, then reigning prosperously in the 14th year of his kingship." இங்ஙனமே கண் டோபேனிஸ் என்னும் பிறனொருவன் தேவாதனென்னும் பேர்பூண்டு இந்துவான செ ய்தியும், மிஹிராகுலன் என்னும் பேர்போன ஒரு ஹன்ஜாதியான் சைவனான செய்தி யும் கல்வெட்டுக்களால் புலனாகின்றன. சில மலைக்குகைகளில் அகப்பட்ட கல்வெட்டுக் களால் அக்கினிவர்மன், இந்திரதத்தன், விஷ்ணுதத்தன் எனனும் பேர்களோடு அந்நிய நாட்டார் பலர் இந்துமதம் புக்க செய்தி வெளியாகின்றது. மற்ற உதாரணங்களையும் இப்பழைய வழக்கம் நின்று போனதற்குக் காரணத்தையும் அறிய விரும்புவோர் இரா மப்பிரசாத் சந்திரர் நூலை வாசிக்கக்கடவர்.



தப் பெருமான் வேண்டுகோளும்
பொருளில் கூற்றுக்களாய்த் தோன்று
கின்றன போலும். சைவத்தின் உண்
மைச் சமரசத்தையும் பொறையை
யுங் கைவிடாது பிறமதத்தாரோடு
அன்பு பூண்டொழுகுதலோடு, தஞ்
சமயக் கொள்கைகளையும் அமைப்புக
ளையும் அழியாது பாதுகாத்தல் கட
மையென இவர்கள் உணர்ந்ததாகத் தெரி
யவில்லை. இவர்கள் கொண்டுள்ள சை
வம் தன்பெயர் முதற்கணுள்ள உயிர்
நீங்கப் பெற்றதாய்க் காண்கின்றது.
இல்லாவிடில், கோவில்களும் மடங்க
ளும் கெட்டொழியப் பார்த்துவந்தி
ருப்பதோடு, இவர்கள் சமய குரவர்
திருவவதரித்த புனிதத் தானங்களை
யும் சந்தான குரவர்கள் சமாதி கூடிய
தலங்களையும் கவனித்துப் போற்றாது
விட்டிருப்பார்களா? கஅஉகூ-ம் வருட
த்தில் மட்டும் எஉஅகO-பேர் ஷேக்
ஸ்பியர் என்னும் ஆங்கில நாடகக்கவி
பிறந்த இடத்தைப் பார்ப்பதற்குச்
சென்றனர். இம் மேல்நாட்டாரைப்
பழிக்குங் கீழ்நாட்டார்களில் எத்தனை
பேர் தங்கள் வள்ளுவர், சேக்கிழார்,
கம்பர், சிவஞான முனிவர் முதலிய
கருவிலே திருவுடைய புலவர்களவ
தரித்த இடங்களைக் கண்டெடுத்துப்
பார்த்திருப்பார்கள்? பார்ப்பதற்கு ஞா
பகக் குறிகள்தா முண்டோ? உண்
டேல் அவை எந்நிலையி லுள்ளன?
ஏன்? அழகிய திருச்சிற்றம்பல மு
டையார் திருவாசகத்தையும் திருக்
கோவையாரையும் தந்திருக்கரத்தா
லெழுதுதற்கு அமர்ந்தருளிய புண்
ணிய இடத்தில் இப்போது சித்திரை
மூலவேலியும் மேற்கூரை யில்லா ஆ
வுடையாருமே காணவிருப்பது இச்
சைவர்கள் மனத்துக்குச் சம்மதமாய்
விட்டதன்றோ? திருப்பணி வேலை

யைக் கோடிக் கணக்கான பொருளி
ட்டுச் செலவுசெய்து முடித்துவந்தி
ருக்கும் நகரத்துச் சிவநேசச் செல்வ
ர்களுக்கு இக்குறைகள் தெரிந்திருந்
தும் நீங்காதுள்ளனவோ, அல்லது
இவர்கள் மந்திரிகள் இவற்றைத் தெ
ரிவிப்பதே இல்லையோ? அம்பலத்தா
னுக்கே வெளிச்சம்! இன்னும் இக்
குறைகளை மீண்டும் மீண்டும் விவரி
ப்ப தெற்றுக்கு? தற்காலச் சைவர்
நிலையைக் கருதின் "புண்ணிலாம்
பெரும் புழையிற் கனல் நுழைந்தா
லென" த் துன்பம் பெருகுகின்றது.
நிற்க—இனிமேலாவது சைவர் தந்நிலை
யை யுள்ளவாறுணர்ந்து தங்கடமை
களைச் செய்யவேண்டும். செய்யா
தொழியின் இருவருட் கயனுமாய்
மேன்மேலும் புன்மை எய்துதல் தி
ண்ணம்.

இன்னுஞ் சிறிது காலம் வரையில்
இந்துக்கள் தஞ்சமயப் பாதுகாப்புக்
கான கடமைகளைச் செய்யாதிருப்ப
ரேயாயின் இவர்கள் கூட்டம் விரை
வில் நலிவுற்று மாய்ந்துபோம். அர
சாங்கத்தார் பத்து வருடங்கட்கொரு
முறை யெடுக்கும் ஜனத்தொகைக்
கணக்கைக் கவனிப்போர்க்கு இந்துக்
களின் ஜனத்தொகை வளர்ச்சி குன்றி
வருவது தெரியவரும். இதையெல்லா
முணர்ந்த இந்துமதப் பெரியார்கள்
வட இந்தியாவிலும் பம்பாய் மாகா
ணத்திலும் ஆரிய சமாஜம், சுத்தி
இயக்கம் முதலிய அமைப்புகளின்
மூலமாகப் புறமதம் போன இந்துக்க
ளைமீட்டும் இம்மதம் சேர்த்துக்கொள்
ளுதலில் தமக்குள்ள அக்கறையைச்
செய்கையில் புலப்படுத்தி வருகின்றார்
கள். மகம்மதியமும் கிறித்துவமும்
பிறமதத்தினரைத் தம்மதத்தில் எவ்
வளவு தீவிரமாய்ச் சேர்த்து வருகின்

றன என்பதை யாவருமறிவர். ஆக
லின் புறமதம் புக்க நம்மவரைச் சிவ
தீக்கையால் புனிதப்படுத்தி மீண்டும்
தஞ்சமயத்திற் சேர்த்துக் கொள்ளுவ
தில் யாதொரு இழுக்குமில்லை, பெரு
நன்மையே விளையும் என்பதைச்
சைவர் நன்குணரக்கடவர்.

இங்ஙனம் சைவத்திற்குத் திரும்பி
வருவோரை எப்படி நடத்துவது
என்று சிலருக்கு ஐயந்தோன்றலாம்.
சமய அறிஞர்கள் ஒன்றுகூடி அதை
ப்பற்றித் தீர்மானித்துக் கொள்ளல்
எளிது. சைவம் நாடித் திரும்பி
வரும் சகோதரர்கள் சிவாலயங்களி
லும் சிவனடியார் கூட்டங்களிலும்
தடையின்றிச் சென்று அன்பரொடு
மருவிப் பயன்பெற நாமிடந்தருதல்
அவசியம். அவர் திருந்திய ஆசார
முடையாராக விரும்பின் அவரோடுண்
ணலும் உறைதலும் செய்வது முறை
யேயாம். ஆனால் சைவத்திலேயே
நிலைத்தோடுள்ளார் விஷயத்திலும் சம
யத்திற் கொவ்வாச் சாதிபேதம் பா
ராட்டி, திண்ணைச்சைவம், நடைவீட்
டுச் சைவம், உள்வீட்டுச் சைவம்
எனப் பலதிறப்பட்ட சோற்றுச்சைவ
அநுட்டானங் கைக் கொள்ளுவோர்
க்கு இது பிடிக்காது. அவர்களை உட
னுண்ணச்செய்தல் வேண்டாம். மே
ற்சொன்ன ஆலயப் பிரவேசம் அடி
யார் கலப்பு என்னும் சமய உரிமைக
ளைத் தந்து, திரும்பிவந்த சோதரர்
கள் வீட்டுச் சுபாசுப காரியங்களில்,
பிறசமயத்தாரோடு நம்மவர் கலந்து
வாழுமளவிற்குக் குறையாது கலந்து,
ஒற்றுமையும் அன்புங் காட்டிவரின்
அது சாலும்.

இப்படிச் சைவ சமயிகளின் தொ
கையைக் குன்றவிடாது பாதுகாப்ப
தாயின் பெருந் தொண்டு செய்யவே

ண்டு மென்பது வெளிப்படை. நம்
கிறித்துவ சோதரர்கள் தம்மதத்தை
யாண்டும் பரப்பிவருதல் எவ்வலிமை
பற்றி என்பதை நன்குணரவேண்டும்.
அரசாங்கத்தார் அம்மதத்தினராயிரு
ததலே காரணம் என்று சிலர் கருது
கின்றார்கள். இஃதொன்றே போதிய
காரணமாய்விடாது. சுவிசேஷத்தை
உலகெங்கும் பரப்பும்படி இயேசுக்
கிறிஸ்துவானவர் கட்டளையிட் டிருக்
கின்றாரென்று அவர்கள் நம்புவதொ
ரு முக்கிய காரணம். ஆண்டவனிடத்
தும் ஆருயிரிடத்தும் அன்பு செலுத்
தலே முத்திக்கு வழியென்னும் சைவ
சமய உண்மையினை இயேசுநாதரும்
வற்புறுத்தி யிருக்கின்றார். அவரைப்
பின்பற்றும் சமயிகளிற் பலர் அதன்
வழி நடக்கத் துணிந்து தமது உடலை
யும் பொருளையும் ஆவியையும் உல
கிற் பல்வேறிடங்களில் தத்தஞ்செய்
து தம் சமயத்தைப் பரப்பியிருக்கின்
றனர். எண்ணில்லா மாக்களை மக்க
ளாக்கி யிருக்கின்றனர். இகழ்ந்தொ
துக்கப்பட்டாரை இயன்ற வரையில்
அன்போ டாதரித்து விடுகின்றனர்.
இந்த அன்பொழுக்கமே அம்மத வி
யாபகத்திற்கு அடிப்படையான கார
ணம். அதனோடு சாதி வேற்றுமை
சடங்கு வேற்றுமைகளை அதிகமாகக்
கருதாது தமது சமய வேலைகளை வெ
கு திறமையான கட்டுப்பாட்டுக்குட்
படுத்திச் செய்துவருவது மற்றொன்
று. அம்மதத்தினர் யாவரும் தத்த
மக்கென ஓராலயங் குறிப்பிட்டுக்கொ
ண்டு வாரத்திற் கொருமுறை ஆண்
பெண் ணடங்கலுமாய்த் தவறாது செ
ன்று, தஞ் சமய நூல்களை நன்கு கற்
றுள்ள போதகர் வாயிலாய்ச் சமய
போதனை பெற்றுவருதல் எவ்வளவு
சிறப்புடைய ஏற்பாடென்பதை நம்
மவ ரின்னு முணரவில்லை. பாதிரி



மார் சங்கங்கள் பலவா யிருப்பினும்
அவை ஒவ்வொன்றுந் தத்தமக்கென
த் திடமான அமைப்புகளை வகுத்துக்
கொண்டிருப்பதும், சமயாபிவிருத்தி
நாடிப் பெருங்காரியங்கள் செய்யவே
ண்டி அவை யாவும் ஒன்றுகூடி தங்
கள் முயற்சியின் பயனை அவ்வப்போ
து சோதித்து, வேண்டிய புதிய மு
றைகளைக் கையாளுவதும் அவர் வெ
ற்றிக்குத் துணைக்காரணங்களாம்.

இந்நாளில் சைவர்கள் தஞ்சமயக்
கடமைகளைச் செவ்வனே செய்ய வி
ரும்புவராயின், மேற்குறித்துப் போ
ந்த உண்மைகளை உள்ளவா றுணர்ந்
தொழுக வேண்டும். அதாவது அவர்
க்கும் சமயவொளி பரவவேண்டும்
என்னும் பேரவா எழுதல் வேண்
டும். அன்பைப் பேச்சில்மட்டு மன்
றிச் செய்கையிலுங் காட்டிவரவேண்
டும். கிறித்துவ சோதரர் போன்று
நாம் நாட்டிற்கும் காலத்திற்கும் ஏற்
றவாறு கட்டுப்பாடாக ஒன்றுகூடி யு
ழைத்தல் வேண்டும். "ஒன்றுபட்டா
லுண்டுவாழ்வே,—நம்மில் ஒற்றுமை
நீங்கில் அனைவர்க்குந்தாழ்வே" என்ற
வாக்கு சமய ஊழியத் துறைக்கும்
பொருந்துவ தொன்றெனப் புந்தியிற்
கொள்ளவேண்டும். ஓரமைப்புக்குட்
பட்டுச் சைவர் சமயப் பிரசாரஞ்செய்
வதைப்பற்றி முன்னரே குறிப்பிட்
டாயிற்று. முக்கியமாய்ச் சேரிகளில்
சைவபோதனையை ஏற்ற பெற்றி செ
ய்யும் பாடசாலைகள் விரைவில் ஏற்பட
வேண்டும். அங்குள்ள ஏழைகளின்
வறுமையைப் போக்கி அவர்கள் நிலை
யை உயர்த்துதற்கான ஐக்கிய நாணய
சங்க இயக்கம் மதுபான விலக்கு மு
தலிய நல்லியக்கங்களில் சைவர் மன
மாரக் கலந்துகொண்டு அத்துறைக
ளில் செய்யும் ஊழியங்களைச் சிவத்

தொண்டென மதித்து மன்னுயிர்க்
கிதஞ்செய்தல் வேண்டும். மேல் வகு
ப்பினர்க்கும் ஒழுங்கான சமயபோத
னை கிடைப்பதற் கேற்ற முறைகளைத்
தேடவேண்டும்.

சைவ சமயம் அன்புச்சமய மென்
பதை இவ்வாறெல்லாஞ் செய்கையிற்
புலப்படுத்த விரும்புவோர் முதலில்
தமிழ்நாட்டில் தொண்டு செய்யவே
ண்டும். பின்பு தெலுங்கு கன்னடம்
மலையாளம் துளுவம் என்னும் தமிழ்
த் தொடர்புள்ள மொழி வழங்கும்
பண்டைத் தமிழ்நாட்டுப் பகுதிகளில்
வேலை செய்யவேண்டும். அதன் பின்
னரேனும் வட இந்தியாவுக்கும் சை
வ சித்தாந்த மாண்பையும் தமிழின்
பெருமையையும் தெரிவித்தல் வேண்
டும். அங்குள்ள காஸ்மீரம், நேபா
ளம், ராஜபுதனம் இவற்றில் தொன்று
தொட்டே சைவ சமயம் நிலைபெற்று
வந்துள்ளது. அங்கெல்லாஞ் சென்று
சமய சகோதர உரிமை பாராட்டி
அவர்களையும் நமரெனப் பேணிக்கொ
ள்ள வேண்டும். இமயமுங் குமரியும்
இருகடல் வரம்பும் எல்லையாக் கொ
ண்ட இந்திய நாட்டின் முழுப்பரப்
பும் நந்தாயின் திருமேனி என்னும்
உணர்ச்சி இந்நாளில் வலுத்து வருகி
ன்றது. அம்மேனியில் ஓருறுப்பிற்
குறும் இன்பதுன்பங்கள் மற்றையுறு
ப்புகட்கும் உரித்தாம். ஆகவே சிவா
கம நெறி நிற்கும் நேபாள காஸ்மீரங்
களோடு தமிழ்ச்சைவ நாடு ஆன்ம
நேய உரிமை பாராட்டுதல் அவசியம்.
இம்மட்டோ? வெளிநாடுகட்குச் செ
ன்று குடியேறிய நம்மவர்களை மறந்து
விடலாகாது. பத்திரிகைகள் வாயிலாக
வும் தலைவர்கள் போக்கு வரவாலும்
சமய சம்பந்தத்தை நழுவ விடாது
போற்றி வரவேண்டும். இறைவன்

பிறப்பிறப்பறியாப் பெம்மான் என்னு
ஞ் சைவர் கோட்பாட்டைத் தன்னதா
கவுங் கொண்டுள்ள இஸ்லாம் மார்க்க
மானது இந்துக்களுக்கு இவ் விஷயத்
தில் ஒரு சிறந்த எடுத்துக்காட்டா யி
ருக்கின்றது. இஸ்லாம் மதத்தைத்
தழுவினவர் எந்நாட்டி விருப்பினும்,
எம்மொழி பேசினும், எந்நிறத்தவரா
யினும் எவ்வரசாங்கத்தின் கீழ் வாழி
னும் தாமெல்லாம் ஒரே கூட்டத்தவ
ரென்னும் உரிமையைச் செய்கையிற்
பாராட்டிக் காட்டுகின்றனர். வழிபா
ட்டு முறையினும் அம்மதத்தவர் காட்
டும் சகோதர சமத்துவம் பெரிதும்
வியக்கத்தக்கது. தொழுகைக்கு வா
ருங்களென்னு மொலி மசூதியினின்
றெழுந்தவுடன், அரசனும் ஆண்டி
யும், முதியனும் இளைஞனும், உயர்ந்
தோனும் தாழ்ந்தோனும் ஒரு தடை
யுமின்றித் தொழுமிடஞ் சென்று
ஒன்றுயுட்கார்ந்து வணங்கித் திரும்
புகின்றனர். இந்நேர் நெறிக்கு மூர
ணிய பல வேற்றுமைகளை இந்து ஆ
லயங்களிற்கற்பித்துக்கொண்டு ஆணவ
மலத்தை எருவிட்டு வளர்க்கும் நம்
மனோர் செய்கை போற்றத் தக்கதா
மோ? நிற்க. இங்ஙனம் பரந்த நோக்
கங் கொள்ளுதல் இருபதாம் நூற்றாண்
டில் தோன்றிய தொரு நவீனக் கொ
ள்கையென அறிஞர் கருதார். இது
இந்நாளில பொதுஜன வுணர்ச்சிக் கெ
ட்டும் வகையில் முன்னுளினும் விடப்
பெரிதும் வற்புறுத்தப்படுவது மெய்
யாயினும், கோட்பாடு பழையதே.
சைவர் போற்றுந் திருத்தொண்டர்
புராணத்தில் அப்பாலு மடிச்சார்ந்
தார் புராணம் என வொரு புராண
முண்டன்றோ? அதில் தெய்வப்புல
மைச் சேக்கிழார் அருளிச்செய்துள்ள
திருப்பாட்டைக் கருத்தூன்றிப் பார்

ப்போர்க்கு இவ்வுண்மை விளங்கும்.
"மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக்கப்பான்
முதல்வனாடிச்சார்ந்தமுறைமையோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற்
[கூறு

'நற்றொண்டர்காலத்துமுன்னும்பின்னும்
பூவேய்ந்தநெடுஞ்சடை மேலடம்புதும்பை
புதியமதி நதியிதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந்தார்
[கள்

செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார்தாமே"
என்பது அத்திருப்பாட்டு. இங்ஙனம்
தமிழ்நாட்டுக்கப்பாலும் அடிச்சார்
வார் உளராதலின், அவருக்கு நந்த
மிழ் வேதத் திருமுறைகளையும் தமி
ழிலுள்ள பிற அரிய நூல்களையும்
குறித்தறிவித்தல்இன்றியமையாதது.
அவ்வாறே அவர்களிட முளவாகக்
கூறப்படும் சிவாகமங்களையும் ஏனைய
நல்ல நூல்களையும் நாம் விரும்பிப் பெ
ற்றுத் தமிழ்ப்படுத்திக் கொள்ளலும்
இன்றியமையாதது. இக் கொள்ளல்
கொடுத்தல்களை முதலில் தெலுங்கு
கன்னட நாடுகளில் தொடங்கி வட
இந்தியா வரையில் பிணித்துக்கொள்
ளுவதோடு, உலகமெங்கும் பரவியிரு
க்கும் அரசாங்கமொழியாம் ஆங்கில
த்தில் சைவசமய நூல்களை வெளியிடு
தலும் பெரிதும் வேண்டற்பாலது.
பல மேனாட்டறிஞர்கட்குத் தமிழ் நா
ட்டுச் சைவசமய நூல்களி னியல்பே
தெரியாதாகையால், அவர்களுக்கு வ
டமொழியிலும் ஆங்கிலத்திலும் எளி
தில் கிடைக்கும் சங்கர ராமாநுஜ
மத்துவமத நூல்களையும் பிற வட
நூல்களையும்படித்துவிட்டு இந்துமதம்
என்பது இவற்றின் தொகுதியே யெ
ன மயங்கிவிட்டார்கள். இதனாலும்
சைவசமயம் சில நன்மைகளை யிழந்
திருக்க நேர்ந்தது. காலஞ் சென்ற
திரு. நல்லசாமி பிள்ளையவர்கள் இவ்



வுண்மைகளை நன்கோர்ந்து சித்தாந்த
சாத்திரங்கள் பலவற்றை ஆங்கிலத்
தில் மொழிபெயர்த்ததோடு 'சித்தா
ந்த தீபிகை' என்னுமோர் அரிய
ஆங்கில மாதச் சஞ்சிகையும் வெளியி
ட்டு வந்தார்கள். அதன் பயனாய்ச்
சில மேனாட்டறிஞர்கள் சைவ சமயக்
கோட்பாடுகளை யுணர்ந்து அவற்றை
வியந்துபாராட்டுவாராயினர். சைவ
த்தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் வெளி
யிடுதலால் மேல் நாடுகளில் மட்டு
மன்று; இந்த நாட்டிலும் நன்மையு
ண்டாம்; இந்தியர்களிற் பலர் தந்தா
ய்மொழியினும் பார்க்க ஆங்கிலத்தில்
மிக்க பயிற்சியுடையரா யிருக்கின்ற
னர். உயரிய நூல்கள் அம்மொழி
யில் தான் கிடைக்கும் என்னும் எண்
ணமுடையவர்போற் பலர் காண்கின்
றனர். இன்னார்க் கெல்லாம் சைவ
சமயத்தின் உண்மைகளைத் தெரிவித்
தற்கு ஏற்ற கருவி ஆங்கிலமொழி
பெயர்ப்பேயாம்.

சைவயமயப் பாதுகாப்புக்குத் தற்
காலத்தில் இன்றியமையாது வேண்ட
ப்படும் பத்திரிகைகள் எத்தனை யுள
வென்று கேட்டால் விடைதருதற்கு
ச்சைவர் வெட்கப்பட வேண்டியவரா
வர். ஆங்கிலத்தில் வெளியாய்க்கொ
ண்டிருந்த "தீபிகை", நெய்யுந்
திரியுமின்றி முன்னமே பொன்றிப்
போயிற்று. தமிழில் 'சைவம்' 'சித்
தாந்தம்' என்னும் இரண்டு பத்திரி
கைகள் தோன்றின. அவற்றுள்
'சித்தாந்தம்' முடிந்த முடிவைக்கண்டு
விட்டது. 'சைவம்' கொழுகொம்
பில்லாக் கொடிபோல் வாடித்தவிக்கி
ன்றது. இவற்றின் பின்னர் "செந்த
மிழ்ச்செல்வி" "குமரன்" என்
னும் பத்திரிகைகள் தோன்றின. இ
வைகள் பாராட்டத்தக்க வோரளவில்

சைவத்தையும் தமிழையும் போற்றி
வருகின்றன. இவற்றிற்கும் போது
மான ஆதரவை, தமிழ்ச் சைவமக்க
ளின்னுந்தரவில்லை. பத்திரிகைகள்
வாயிலாய்ச் சமயம் பேணுதல் இக்கா
லத்திற்கு இன்றியமையாதது என்
னும் உண்மையை இனியேனும் பொ
துவாய் சைவ மக்கள்யாவரும்—சிறப்
பாய் சைவமடாதிபதிகளும் நன்றாய்
உணர்ந்து தங்கடமையைச் செவ்வ
னே செய்தல் வேண்டும்.

சைவர்கள் சில தலைமுறைகளாகத்
தங்கள் சமயக் கடமைகளைச் கால
வியல் புணர்ந்து ஒழுங்காய்ச் செய்து
வாராமையால் சைவர்க்கும் அவர் தா
ய்நாட்டிற்கும் நேர்ந்த தீங்குகள்போ
துமானவை. அவர் முன்னோர் அவர்
பாலொப்பித்த ஞானச் செல்வத்தைப்
போற்றி வளர்க்கா தழிய விடுவரே
யாயின், அவர் பின் சந்ததியாருக்கு
அவை எளிதில் பயன்தரமாட்டாவா
ய்க்கெடும். இதனால் முன்னோர் தே
டிய சொத்தை யழித்தாரென்னும்
பழிபாவம் இத்தலைமுறையினரையுஞ்
சூழும். பிறமதத்தினர் தம்மதக் கட
மைகளைச் செய்யு மாண்பைக கண்ணு
றவேண்டும். தங்கடமைகளைச் செய்
யாமையால் விளைந்த கேடுகளையும்
காணவேண்டும். பல கிராமங்களில்
சிவாலயங்கள் பாழடைந்திருப்பதைப்
பார்த்தல்வேண்டும். கிறித்துவமதம்
போனவர் போக எஞ்சி நிற்கும் இந்
துக்களில் சைவமரபினரிற் சிலர் சில
வாண்டுகளாகத் திருநீறிடுவதை மற
ந்து நாமம் போட்டுக்கொள்ளுவதை
யும் நாடியுணரவேண்டும். சைவ
மரபினர் வாழும் பல ஊர்களில் சிவ
நாமங் கேட்டலரிதாய் விட்டது. கற்
றாரும் மற்றாரும் நாத்திக வாழ்க்கை
வாழ்ந்து வருகின்றனர். வாரத்திற்

கொருமுறை பஜனை செய்யும் பழக்க
முடையோரும் அரிபஜனை செய்வது
பெருவழக்கமாய்ச் சில ஜில்லாக்களில்
பரவிவருகின்றது.

ஆத்திக சகோதர சமயமாகிய வை
ணவத்தின் மீது நமக்கு வெறுப்பும்
பகைமையுஞ் சிறிதுமில்லை. சைவசமய
த்திற் பிறந்தோர் அவர்சமயத்தை யா
ராய்ந்து பார்த்து அது தமக்குப் பிடி
க்காதென்று கண்டால் அவர் வைண
வத்துக்குமட்டுமல்ல, வேறெம்மதத்
துக்குச் செல்லினும் சம்மதமே என்
றிருக்கலாம். அவர் நேர்மையைப்
போற்றவும் போற்றலாம். ஆனால்
தாம் பிறந்த சமய இயல்பையேனும்
தாம்புகும் பிற சமயத்தின் இயல்பை
யேனும் சிறிது மாராயாது வேறு
சமயம் புகுதல் பெருந்தவறே. அத்
தவறு நிகழாதிருக்கும பொருட்டுச்
சமயப்பிரசாரஞ் செய்தல் சைவர்கட்
குத் தலைமையான கடமையென்பதை
மீண்டும் வற்புறுத்துகின்றோம். கட
மையுணர்ச்சியா லுந்தப்பட் டுழைக்க
முன்வருவரேல், உழைக்கும் வழியும்
துறையும் உழைப்புக்கு வேண்டிய
இடம்பொருளேவல்களும் எளிதில்
ஏற்படும். சில வழிகள் முன்னமே
குறிக்கப்பட்டன. இவைபோல்வன
பலவுள. சைவரினி வித்தகம் பேசு
தலிற் பயனில்லை. பணிசெய்ய வே
ண்டும்.

இனி, நாட்டுக்கோட்டை நகரத்
தாருக்கு இதுபற்றியோர் தனி விண்
ணப்பஞ் செய்து இந்தக்கட்டுரையை
முடித்தல் தகுதியாம். இவர்கள்
தோன்று தொட்டே சைவ சமயப்
பற்றில் தலை சிறந்து வருபவர்கள்:
இவர்க ளீட்டிய பொருளில் எத்தனை
யோ லக்ஷங்கள் சிவாலயத் திருப்
பணிக்குப் பயன்பட்டிருக்கின்றன.
இன்றும் இவர்கள் மேற்பார்வையி
லுள்ள சிவாலயங்களின் சீரும் சிறப்
பும் வியக்கத்தக்கவா யுள்ளன. ஈத்து
வக்கும் இன்பம் அறிந்து இசைபட
வாழும் இவர்கள் சைவப்புலவர்களை
நன்காதரித்து வந்திருக்கிறார்கள்.
ஆனால் பிற ஜன சமூகங்கள் போல
வே இவர்கள் சமூகமும் கால சக்கி
ரத்தில் அகப்பட்டு வருவதாகக் கா
ண்கிறது. இது பொய்த் தோற்ற
மென்றேற்படின் மிகவும் நன்றே.
எதற்கும் முன் எச்சரிக்கையாகச்
சில உண்மைகளைப் பணிவுடன் தெரி
வித்தல் கடன். சைவ சமயிகள் செ
ய்யவேண்டிய அறங்களைப் பொது,
சிறப்பு என இருவகையாய்ப் பிரிக்க
லாம். இவற்றில் பொது அறங்களெ
ன்பவை, நல்லன செய்து அல்லன
விலக்கு முகத்தால் சைவனுவான் எல்
லாச்சமயிகட்கும் பயன்படும் வகை
யிற் செய்யுந் தருமங்களாம். சைவ
போதனை செய்யாப் பாடசாலை வைத்
தல் தரும வைத்தியசாலை ஏற்படுத்
தல், சாலைகள் சத்திரங்கள் அமைத்
தல் பசிபிணி மூப்புத்துன்ப முற்றோ
ர்க்குதவல முதலியன வெல்லாம், பொ
துத்தருமங்களாகும். இவைகளைப்
பிறசமயிகளுஞ் செய்தற் குரியவர்க
ளே. தத்தம் வசதிகட் கேற்பச் செய்
தும் வருகின்றார்கள். இனிச் சை
வர்க்குச் சிறப்பறங்களாவன சிவால
யம் சைவமடம் சைவ சபை இவற்
றை என்றும் சீர்கெடாது பாதுகா
த்தலும், சிவாகமபாடசாலை, ஆரியவே
தபாடசாலை, தமிழ்வேதபாடசாலை, சை
வசமய போதனை செய்யும் ஆங்கிலபா
டசாலை, தமிழ்ப்பாடசாலை என்னுமிவ
ற்றை யமைத்து வளர்த்து வருதலும்
சைவசமய உண்மை யாண்டும் பரவு
தற்பொருட்டுச் சைவ நூல்களைக் கா
லத்தின் தேவைக் கேற்பப் பலவகை



களில் வெளியிட்டெவர்க்கு முதவுதலு
ம், சமயப் பிரசாரகரை நியமித்து எங்
கும் கட்டுப்பாடான முறையில் சமய
போதனை நிகழுமாறு செய்தலும், தமி
ழ்க்கல்வி சைவக்கல்வியிற் றேர்ந்த
புலவரை மதித்துப் பேணலும் இவை
போல்வன பிறவுமாம். இவற்றைப்
பிற சமயிகள் தங் கடமைகளாக இது
வரையில் மேற்கொண்டது மில்லை,
இனி வருங்காலத்து மேற்கொள்ளப்
போவது மில்லை. ஆகவே இவற்றைச்
சைவசமயிகள் செய்யாதொழிதல் பெ
ருங்குற்றமாம். இவ்வுணர்ச்சி எங்கு
நகரத்தா ரினத்தில் மங்கிவிடுமோ
என்று சிற்சில சமயங்களில் அச்ச
மேற்படுகின்றது. சிறப்புத் தருமங்
களாகிய சிவதருமங்களை இக்காலத்
துக்கு வேண்டாதன வென்று நழுவ
விட்டு, உலகர் போற்றிப் புகழும் வ
கையில் பொதுத் தருமங்களை மட்டும்
செய்யும்படி இக்காலத்தில் பலர் அவ
ர்களைத் தூண்டுதல் இயல்பு. அவர்கள்
தருமப்பணத்தில் ஒரு பகுதி பெரும்
பயன் தாராவழியில் தொலைவது மெ
ய்யே. பழுதுபடாக் கோயில்களை இ
டித்துக் கட்டுதலும், வாகனதிகட்கு
வெள்ளியும் தங்கமும் வேண்டாவள
வு செலவழித்தலும் அளவுக்கு மிஞ்சி
உற்சவாடம்பரங்கள் பண்ணுதலும்
வீண்செலவாகலாம். ஆனால் அது பற்
றியே சிவாலயத் திருப்பணிக்கும் தி
ருவிழாக்கட்கும் செய்யும் செலவெல்
லாம் பாழாகின்றதென்று கூறுதல்
அடாது. சிவாகம விதிக்கு மீறுமலும்
சிவபெருமா னிலக்கணத்துக்கு மாறு
மலும் ஆலயத் திருப்பணிகளும் திரு
விழாக்களும் எந்நாளும் நடைபெற
வேவேண்டும். ஆனால் இங்ஙனம் செய்
வது மக்களுக்குள் சைவ சமய அறி
வையும் சிவபெருமானிடத்து அன்
பையும் பெருக்குதற்காக என்பதை
மட்டும் மறக்கக்கூடாது. இந்நெறியிற்
செய்யுஞ் செலவெல்லாம் பதிபுண்ணி
யந் தரும். இந்நோக்கமில்லாது வே
றெந்நோக்கங் கொள்ளினும், கொள்
ளாவிடினும், செய்யுந் தருமம் சைவர்
சிறப்புத்தரும மாகாது. அன்றியும்
சைவமுந் தமிழும் தமிழ்த்தாயின்
இரண்டு மூச்சுப்பைகள் போன்றுள்
ளன. என்னவே தமிழ்மொழி யோ
ம்பலும் சைவர் சிறப்புக்கடனே யெ
ன்பது போதரும். இவற்றை யெல்
லாம் சைவரன்றிப் பிறர் செய்ய முற்
படக் கண்டிலோம். ஆதலால் பொது
அறங்களைச் செய்து புகழ்பெறுவதை
இரண்டாந் தானத்தில் இருத்தி, சை
வச் சிறப்பறங்களைச் செய்யும்வகையிற்
செய்து புகழும் சிவபுண்ணியமும் பெ
றுவதைத் தலைமைத் தானத்தில் வை
த்தல் நகரத்தார் நன்மைக்கும் வேண்
டியதொன்றாம்.

சிறப்பறங்களைப் போதிய அளவு
செய்தாய்விட்டது, இனிப் பொதுத்
தருமங்களைப் பேணினால் போதுமெ
ன்று எவருங் கருத இடமில்லை. பா
டல்பெற்ற எத்தனையோ சிவாலயங்
கள் இன்னும் மிகப் பழுதுபட்டுக்கிட
க்கின்றன. பல சிவாலயங்களில் நித்
திய பூசைக்கே நிபந்தமில்லை. சிவ
வேதியர் செம்மையுறற்கு வேண்
டிய வசதிகளில்லை. தமிழ் வேத
ஆராய்ச்சி செய்தார் சிலர் பலரிருப்பி
னும் அவராராய்ச்சி இன்னும் நூல்
வடிவாக வெளிவரவில்லை. சைவர்பலர்
வீட்டில் தேவார திருவாசகங் காணக்
கிடையாது. சமய அமைப்புகளெல்
லாம் நிலை தளர்ந்துள்ளன. அறியா
மை மிகுந்துள்ளது. அறுபான் மும்
மை நாயன்மார் திருவீதி வலம் வரின்
அவர்களைப் பார்த்து "இவ்வறுபத்து
மூன்று பிள்ளைகளைப் பார்வதி பெற்
றெடுத்தாள். இன்னுமொரு பிள்ளை
க்குத் தவங்கிடக்கிறாள்" என்று
பலபேர் இன்றும் பேசுகின்றார்கள்.
"வள்ளிக்கும் தெய்வயானைக்குஞ்
சக்களத்தி போராட்டம்" என்பது
போன்ற சுவடிகள் வெளிக்கிளம்புகி
ன்றன. சமயகுரவர் சந்தான குரவர்
பெயரறியாத நீறுபூசிகள் இலக்கக்
கணக்கிலுள்ளார்கள். தமிழ்ச் சைவ
நாட்டின் கதியே யிப்படி யுள்ளது.
இதன் நிலைமையைச் செம்மைப் படு
த்துதற்கும், மேலே கூறியாங்கு

இந்தியாவின் பிறபாகங்களிலும், உல
கெங்கும், திருநீற்றிெனாளி விளங்கக்
காண்டற்கும் இன்னும் கோடிக்கண
க்கான பொருளும்எண்ணிலா மெய்த்
தொண்டர்களும் பலதலைமுறையூழிய
மும்தேவையாயுள்ளனவன்றோ ? தம்
முன்னோர் சிறப்பியல்லைப் போற்றி
இப்பெருந் திருத்தொண்டு செய்வ
தைத் தமது குறிக்கோளாக நகரத்
தப் பிரபுக்கள் கைக்கொண்டால்
சேரும் சிறப்பும் சிவபுண்ணியமும் வா
ராவோ ? பொது அறமே போது
மென்று கருதத் தலைப்படுவார்களாயி
ன்,அவர்கள் தஞ் சிறப்பியல் பிழந்து
பிற ஜனசமூகங்களோடுஒருசாதாரண
சமூகமாகக் கணிக்கப்படுவர். அது
அவர்க்குப் பெருநட்டமாம் என்ப
தைத் தன்வைசிய அறிஞர்கள் உய்த்
துணர்வார்கள் என்று நம்புகின்றோ
ம். வெள்ளம் வருமுன் அணைபோ
டுதலே அறிவுடைமைக் கழகு. அவர்
கள் சமூக மேம்பாட்டிற்குக் காரண
ம் அவர் தம் முன்னோர் ஈட்டி வைத்
திருக்கும் சிவ புண்ணியமே யென்ப
தை மறத்தலாகாது.

சைவர்கள் தங்கள் சமயக்கடமை
களை நிறைவேற்றி யின்புறவேண்டு
மாயின் அவருள்மக்ளிரா யுள்ளாரும்
சைவப்பற்றும் சமயத் தொண்டில்
பெருவிருப்பங் கொண்டவர்களாயிரு
த்தல் வேண்டும். இவர்கள் துணையி
ல்லா விடத்துச் சைவ ஆட
வர் செய்து முடிக்கக் கூடியது மிகச்
சிறியதே யாகும். சத்தியின் துணை
யின்றிச் சிவ முபகரிக்குமா றில்லைய
ன்றோ ? ஆதலால் இவர்களுள் பலர்
மங்கையர்க்கரசியராய் மாண்புறல்வே
ண்டும். மங்கையர்க்கரசியார் தோ
ன்றினால் சம்பந்தரும் குலச்சிறையா
ரும் தோன்றுதல் ஒருதலை. அதற்கே

ற்ற கல்வியையும் நாகரிகத்தையும்
சைவ சமூகம் தேடித் தரும் கடப்பா
டுடையது.

இதுவரையில் எழுதியவாற்றால்,
சைவசமயம் சமயங்கட்கெல்லாந் தா
யகமு நாயகமுமா மென்பதும், ஈடு
மெடுப்புமற்ற சில சிறப்புக்களையு
டைய தென்பதும், அச் சமயத்
திற் பிறந்தார் சிலர் அதனுண்
மையைப் பிறழ உணர்ந்தும் அடி
யோடுணராதும் பல தீங்குகட் காளா
யினரென்பதும், அதனாற் சமய
அமைப்புகளும் சைவ சமூகமும் சீர்
கெட்டிருக்கிற தென்பதும், இவைக
ளைத் தமிழ் நாட்டில் முன்னர்த் திரு
த்தி யமைத்துக்கொண்டு,பின்னர் பிற
இடங்களிலும் சைவ வாளொளி பரப்
புதல் வேண்டு மென்பதும், அதற்
கேற்ற சாதனங்களிவை யிவையென்
பதும், இச் சமயத் திருத் தொண்
டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்க்
குச் சிறப்புவகையிலுள்ள பொறுப்பு
களிவை யென்பதும், சமயம் தமிழ்
மொழி, தாய்நாடு மன்பதை இவற்
றின் முன்னேற்றத்திற்குச் சைவ
ஆடவர் சமய வழியில் தொண்டு
செய்யும் போது சைவ மகளிரும்
துணை நிற்றல் இன்றியமையாதது
மென்பதும் பிறவும் எடுத்துரைக்கப்
பட்டன. அறிஞர்கள் இவ்வுரைச் செ
ய்யுளில் காணக்கூடிய சொற்குற்றம்
பொருட் குற்றங்களைப் பொறுத்து
எழுதினேனுடைய நோக்கம் நன்
மையாயிருப்பதைமட்டும் நாடி ஆதர
வோடாராய்ந்து, சமயத் தொண்டு
சிறப்பாய் நடைபெறற்கான வழிகளை
த்தாமுங் கண்டறிந்து பிறர்க்கு முணா
ர்த்தி யுபகரிக்குமாறு பரங்கருணைத்
தடங்கடலாம் பன்னிருகரத்தையன்
பதமலரைச் சிந்திக்கின்றேன்.

---

# ஸ்ரீ வ. வெ. சு. ஐயரைப் பற்றிய குறிப்புக்கள்.

(கே. அனந்தராமய்யங்கார், விட்டலபுரம்.)

## முகவுரை.

பாபநாசத்தில் ஜூன்மாதம் மூன்
றும் தெய்தி நிகழ்ந்ததாக நமக்கு
எட்டிய செய்தி பாரத தேசம் முழு
வதற்கும், விசேஷமாகத் தமிழ்நாட்
டிற்கும் மிகுந்த துக்கத்தை விளைத்
தது. தமிழ்த்தாய் எக்காலத்திலும்
எவ்வாற்றாலும் ஈடுசெய்ய முடியாத
பெருத்த நஷ்டமடைந்தாள். தமது
அருமைப் புதல்வி காரணமாக ஐயா
வர்கள் அருவி பாய்ந்திறந்த நிகழ்ச்சி
தமிழ்மக்கள் அனைவரையுமே துயரக்
கடலில் மூழ்குவித்தது. அதின் சிற்
றலையாகிய நான் சமீபகாலத்தில் ஐய
ரோடு நெருங்கிப் பழகும் சிறப்புப்
பெற்றிருந்தமையாலும், தமிழாகிய
ரங்கபூமியில் நாங்களிருவரும் சந்தித்
துப் பலபொழுதுகள் இன்பமயமாகக்
கழிந்திருப்பதாலும், எங்கள் 'தமிழ்
இலக்கியச் சங்க' த்தின் ஆதரவில்
பங்குனி மாதம் நெல்லைநகர் கம்பனு
க்கு விழா எடுத்தகாலத்து, ஐயர் இர
ண்டு நாள் உடனுறைந்து இந்திரலோ
கமும் இவ்வாறு சல்லாபம் செய்வ
தின் இனிமை தராது என்று சொல்
லும்படியாக ஊட்டிய பேருவகையும்
பரவச வுணர்ச்சியும்இன்றும் பசுமை
யாக என் மனத்தில் விளங்குவதா
லும், இறந்தோர் பொருட்டு நண்பர்
செய்யும் கடன் எதிர்நோக்கி யிருப்ப
தாலும், ஐயரவர்கள் ஞாபகத்திற்
குச் சில குறிப்புக்கள் எழுத உத்தே
சிக்கிறேன். இவ்வாறு நான் துணிந்த
தற்கு எனக்கு உரிமை தருவது,
ஐயரிடம் எனக்குள்ள பேரன்பும்
பக்திப் பெருங்காதலுமே, எனது
ஆற்றலன்று ; ஆகையினால் நண்பர்
இக்குறிப்பிலுள்ள பிழைகளை மன்னி
ப்பார்களாக.

## ஐயர் வாழ்க்கை.

ஸ்ரீமான் வ. வெ. சு. ஐயரவர்கள்
வாழ்க்கையைச் சற்று உற்று நோக்கி
னால் மூன்று பிரதான அம்சங்கள்
காணப்படுகின்றன. தேசபக்தி, சமூக
சேவை, பாஷாபிமானம்—இம்மூன்று
சொற்களில் அவர் சரித்திரம் அடங்கி
விடும். அவர் வாழ்க்கையின் இம்
மூன்று குணங்களுக்கும் நெருங்கிய
சம்பந்த முண்டு. தேசபக்திதான்
அவருடைய ஜீவநாடி. மற்றவைகளில்
ஒவ்வொன்றும் பிந்தியதற்கு வித்தா
கவும், முந்தியதினின்றும் இயற்கை
யாக விளைந்த விளைவாகவும் காணப்
படும். ஒவ்வொன்றும் வேண்டிய
அளவு விஸ்தரிக்கப்பட்டு, இயற்கை
யான படியாக அடுத்த குணத்துக்கு
வழிகாட்டிக் கொண்டு போகும் ;
கடைசியாக, எல்லாம் ஒன்றுசேர்ந்து
பார்ப்போருடைய இதயம் லயித்துப்
போம்படி, அவருடைய வாழ்க்கை
யில் ஓர் சமஷ்டி உணர்ச்சியை உண்
டாக்கும். அவரது அனுபவ முதிர்ச்
சியும் படிப்பினையும் மலிந்து கிடக்
கும், பலசிறப்பட்ட வாழ்க்கையின்
தனித்தனி சம்பவங்களைக் கட்டி நிற்
பது தேசபக்தியே. சட்ட நிபுணப்
பரீட்சைக்குச் சீமைக்குச் சென்று,
அங்கே தேசபக்தசிகாமணிகளோடு

கலந் துறவாடி, சரித்திரக்குறிப்புக்களும் வியாசங்களும் எழுதியதும், அரசாங்கத்தினர் கோபத்துக் கிலக்காகி தேச தேசாந்தரங்களெல்லாம் திரிந்து, "எங்கும்போய்க் கரைகாணு தெறிகடல்வாய் மீண்டேயும், வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை" போலத் தாய்நாட்டிலே புதுச்சேரியில் அடைக்கலம் புகுந்து, அங்கே யிருந்து 'கம்பநிலயம்' ஸ்தாபித்துப் பல அரிய பிரசுரங்கள் செய்ததும், பின்னர் சென்னைக்கு வந்து 'தேசபக்தன்' தலைமை வகித்து தினசரிப் பத்திரிகையைச் செவ்வனே நடத்திச் சிறைப்பரிசு பெற்றுத் திரும்பியதும், கடைசியாக தாம்பிரபர்ணியின் உற்பத்தியில் குருகுலங்கண்டு 'பாலபாரதி' யென்னும் மாசிகையை வெளியிட்டுத் தமிழ்நாட்டுக்கு மகோபகாரம் புரிந்ததும், ஒத்துழையா இயக்கத்திலும், கதர்ப் பிரசாரத்திலும் தீவிரமாக வேலைசெய்து, ஒவ்வோராண்டிலும் தேசிய மகாசபைக்குச் சென்று, தற்கால தேசியவுணர்ச்சி முழுவதையும் பருகி வந்ததும் அவர் தேசபக்திக்குச் சான்று கூறுகின்றன. நாகரிக உலகிற்கேவழிகாட்டியாயுள்ள ஐரோப்பிய நகரங்களிலே தங்கிவிடாது புதுவையிலே வந்து 'கம்ப நிலயம்' ஸ்தாபித்து, 'தன்னம்பிக்கை' 'புக்கர் வாஷிங்டன்', 'சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம்' முதலிய பல நூல்களை இயற்றியும், 'விவேகானந்தரின் வர்த்தமான பாரதம்', 'வால்மீகி விஜயம்', 'ரவீந்திரநாத தாகூரின் கதைத் தொகுதிகள்', 'கம்பராமாயணம்—பாலகாண்டம்' முதலிய பல நூல்களைப் பதிப்பித்தும், சென்னையில் 'தேசபக்தன்' ஆசிரியராக அமர்ந்து, அதன் பொறுப்பையேற்று அதைத் தினசரிப் பத்திரிகைகளுக்கெல்லாம் திலகமாக விளங்கச்செய்தும், செந்தமிழ் நாடாகிய தென்பாண்டி நாட்டிலே, தாம்பிரபர்ணியின் மூலஸ்தானத்திலே, குருகுலமொன்று ஸ்தாபித்து, அதன்மூலமாகப் பெரு முயற்சியெடுத்து, ஜாதி வேற்றுமைகளை யொழிக்க அரிய காரியங்களைச் செய்து, அதைப் பெரியதோர் விசுவ வித்தியா நிலயமாக்க முயன்றும், 'பாலபாரதி' பத்திரிகையில், உலகத்தில் வீரச்செயல்கள் செய்து என்றும் அழியாப் புகழ் படைத்து வைத்திருக்கும் வீரர் சரித்திரங்களும், பிரசங்கங்களும், வீரப்பெண்டிரின் சரித்திரங்களும், வீரங் காட்டிய குழந்தைகளின் வரலாறும் பெய்து வைத்து, அதை உலகத்தின் வீரத்துக்கே களஞ்சியமாக்கியும், செய்த பேருதவியிலிருந்து, இவர் பாரத சமுதாயத்துக்கும், சிறப்பாகத் தமிழர் சமுகத்துக்கும் அரிய தொண்டு செய்தாரென்பது விளங்குகிறது. தமது காரியாலயங்களைத் தமிழ் நாட்டின் பல நகரங்களிலே ஸ்தாபித்து, தமிழ் அச்சியந்திர மேற்படுத்தி, தமிழிலே தினசரி மாஸிகைப் பத்திரிகைகளை நடத்தித் தமிழ் மணம் எங்கும் கமழச்செய்ததும், 'கம்பராமாயணம் — பாலகாண்ட'த்தைப் பதிப்பித்ததும், 'குறள் மொழிபெயர்ப்பு'ம் 'கம்ப ராமாயண மதிப்புரை'யும் எழுதிவைத்ததும், சுவை தரத்தக்க பல கதைகளும் மொழிபெயர்ப்புக்களும் இயற்றித் தந்ததும் இவருடைய பாஷாபிமானத்தைக் காட்டாவிட்டால் வேறெதைத்தான் காட்டும்?

## பாஷாபிமானம்.

ஐயருடைய பாஷாபிமானத்தில் மூன்று படிகள் காண்கின்றன. முதலா



வது, செந்தமிழ்த் தென் புதுவை நகரில் அடைக்கலம் புகுந்து 'கம்பநிலயம்' ஏற்படுத்தியது. இக்காலத்திலே பாரத சமுதாயத்தின் கம்பீரமான இதிகாசத்திலிருந்தும், உலக சரித்திரங்களிலிருந்தும் பல பகுதிகளை வெளியிட்டும், ஐரோப்பிய இலக்கியங்களிலிருந்து பல நூல்களை மொழிபெயர்த்தும், தமிழ் நூல்களின் பெருமையை ஆங்கிலரும் ஐரோப்பியரும் அறியும் வண்ணம் அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தந்தும், மதிப்புரை யெழுதியும், தாமே பல நூல்களை இயற்றியதன்றியும் சுப்பிரமணிய பாரதி, மகேசகுமார சர்மா முதலிய அறிஞர்களைக் கொண்டு பல நூல்களை எழுதுவித்து அவற்றைப் பதிப்பித்தும் பணிசெய்தது. இரண்டாவது, சென்னையில் "தேசபக்தன்" ஆசிரியரா யமைந்தது. பல பாஷைகளில் பயின்றவரும், மேனாடுகளில் சஞ்சரித்து உலகின் போக்கை நேரிலே அறிந்தவரும், மிகுந்த அறிவும், சிறந்த கல்வியும், விரிந்த நூற்பயிற்சியும், கூரிய ஆராய்ச்சித் திறமையும் பெற்று விளங்குவோர் ஒரு தினசரிப் பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பை யேற்று நடத்துவார்களானால், அப்பத்திரிகையை எவ்வளவு முன்னேற்றத்துக்குக் கொண்டுவரலாம் என்பதற்குத் தம்மையே இலக்காக்கிக் கொண்டார். அதன் தலையங்கங்களை எவ்வளவோ தரம் வாசித்து ஆனந்தமடைந்திருக்கிறேன். அவற்றைப் படிக்கும்போது, தமிழுக்கே ஒரு புதிய ஆற்றல் வந்துவிட்டதுபோல் தோன்றுகிறது. புதுவையிலே, 'கம்பநிலயத்'திலிருந்து, இந்திய ராஜீய விஷயங்களிலே கலந்துகொள்ளாமல் பழைய சரித்திரங்களையே எழுதிக் கொண்டிருப்பதிலும், சென்னையில்வந்து அரசியல் விஷயங்களைக் கண்ணால் கண்டும், நன்றாய்ப் படித்தும், அவற்றை உலகத்தாருக்குத் தமதபிப்பிராயத்தோடு உதவுவது எவ்வளவோ சிறப்பைத் தந்தது. என்றாலும், ஒருபுறம் அரசாங்கத்தார் கோபத்துக்கிலக்காகி அடக்குமுறைக் காளாகாமலும், மற்றொருபுறம் இந்திய மக்களின் பெருமதிப்பை யிழந்து விடாமலும், ஒரு பத்திரிகையை முதலாளிகளுக்கு லாபகரமாக நடத்திக் காட்டுவதென்றால், அம் மாலுமித் தொழில் சுலபமாகுமா? தேசபக்தியைப் பெறுவதற்குக் கடல்போல் ஆவேச அலைகள் துடிக்கவரும் இந்திய மகாஜனங்களின் அனுதாபமான கரையை விலக்கிப் பத்திரிகையை நடத்திச் சென்றது, தேசாவேசமாகிற சுழலில் அகப்பட்டு அரசாங்கத்தார் அடக்குமுறையென்னும் பாறையில் மோதிக்கொள்ளவே ஹேதுவாயிற்று. இங்ஙனம் பத்திரிகைப்பணி சிறைவாசமாகிற முத்திரையைப் பெற்றுக்கொண்டதும், தமக்கு எதிர்பாராமல் கிடைத்த அவகாசத்தை இலக்கிய ஆராய்ச்சிக்கே பயன்படுத்தினார். இச்சமயத்தில்தான் "கம்பராமாயண"த்துக்கு ஆங்கிலத்தில் மதிப்புரை எழுதியது. அது இன்னும் முற்றுப் பெறவில்லை. அதை நானும் என்னுடைய நண்பர் சிலரும் படித்தனுபவிக்கும் பாக்கியம் பெற்றோம். அது வெளிவருமாயின், தற்காலம் தனது இணையற்ற பேராற்றல் குலைந்துபோயிருக்கும் கம்பராமாயணத்துக்கு, உலககாவ்யங்களிலே அதன் இயற்கையான முதன்மை ஸ்தானம் கிடைத்து, தமிழ் மொழியும் நாகரிக உலகத்தார் சிரமேற்கொண்டு போற்றும்

எம்மொழிக்கும் இளைக்காது, தலைசிறந்து நிற்கும் என்பதே எனது கனவு. மூன்றாவதாக, தாமிரவருணியின் மூலத்தில் 'குருகுலம்' கண்டு 'பால பாரதி'யை வெளியிட்டது. முதல் போட்ட ஒருவனுக்கோ, ஒரு கூட்டத்தாருக்கோ, தம் நடத்தையெல்லாம் ஒப்புவிக்க வேண்டிய அவசிய மில்லாமலும், கேவலம் பணலாபத்தையே கருதி நடக்கவேண்டிய நியதி யின்றியும், பிறர் பொருளுக்கும் பிறர் அபிப்பிராயத்துக்கும் கட்டுப்படாமல் சுயாதீனமாக நடத்த வசதியளித்தது 'குருகுல' ஆசாரியப்பதவி. அன்றியும், மாஸிக பத்திரிகைகளுக்கெல்லாம் சிறந்த வழிகாட்டியாக விளங்கிய 'பால பாரதி'யும் இங்கேதான் உதயமாயிற்று. ஆயினும், "நெல்லிற் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்குமுண்டு" என்றபடி குருகுல ஆசாரிய ஸ்தானமும் 'பால பாரதி' ஆசிரியப் பதவியும் தமிழ் நாட்டிலே வகுப்பு வேற்றுமை காரணமாக எழுந்த அளவற்ற சச்சரவுகளுக்கெல்லாம் இவருக்குக் கவசமளிக்கவில்லை. இந்த நிலைமையில்தான், ஐயரவர்கள் அருவிபாய்ந்து புதல்விக்காக உயிர் துறந்தது.

## குருதுலம்.

ஐயர், தமது நுண்ணறிவாலும் முதிர்ந்த அநுபவத்தாலும் நமது நாட்டில் தற்போது கற்பிக்கப்படும் கல்விமுறையின் ஊழல்களை யுணர்ந்து, "முதன்முதல் மனிதனுக்கும் கல்வி கற்பிக்கவேண்டும்; சிறந்த அறிவாளி யாக்குவதோடு அமையாது ஜீவனோபாயத்திற்குத் தன் மனமுவந்த ஒரு தொழிலும் கற்பித்துத் தனது தாய்நாட்டின் நன்மைக்கே அதைப்பயன்படுத்திவளம்பெருக்கவேண்டும்; பிறநாட்டாருக்கு அறிவிலும் செய்கையிலும் அடிமைப்பட்டு நிற்றலை விட்டுத் தனிமனிதனும் சுதந்திர வீரனாக விளங்கவேண்டும்" என்றபெருநோக்கங்கொண்டு இக்குருகுலம் ஸ்தாபித்தார். வடநாட்டு ஹரித்துவார, சபர்மதி, சாந்திநிகேதன ஆச்சிரமங்களைப் போலத் தமது பரத்துவாஜ ஆச்சிரமத்தையும் உலகத்திற்கே அறிவுக் களஞ்சியமாக ஆக்க முயன்றார். ஆச்சிரமத்தின் ஒவ்வொரு புறத்திலும் ஒவ்வொரு சிறு விஷயத்திலுங்கூட ஐயர் அமைப்புத் திறமை விளங்காமல் இராது. நான் ஆச்சிரமத்தை நேரில் பார்த்திருக்கிறேன். இயற்கையரசியும் மனிதனது செயற்கைத் தேவியும் ஒருங்கு கூடிப் 'பணியுழன் றரிதினிற் படைத்த' பெருமை பொருந்தியது. ஆச்சிரமம். நான் சென்ற தினம் பௌர்ணிமையானதால், படைப்புப் பொருள்களெல்லாம் நிலவு வெள்ளத்தில் நீந்திக்கொண்டிருந்தன. இயற்கைத் தேவியும் தனது ஜகன்மோகனத் தன்மை காட்டி என்னை வலைபோட்டுப் பிடித்துக் கொண்டாள். நகர்ச் சந்தடி சிறிதுமில்லாத ஏகாந்த ஸ்தலத்திலே, உடைந்த ஹ்ருதயமும் ஒன்றுசேர்ந்து முன்போலாய்விடும் சாந்திமயமான சாயங்கால வேளையிலே, காண்பதெல்லாம் கனவெனத்தோன்றி பாவனாசக்தி கரை புரண்டோடும் நிலவொளியிலே, பெரியதோர் சோலையின் மத்தியில் காணப்படும் ஒரு பெருவெளியிலே ஒரு மாளிகையில் ஏறிச் சென்றோம். மேல்மாடியின் நிலாமுற்றத்திலே சாந்தி தளும்பும் முகமும் இடையிடையேசிறிது வெளிறி இருண் டடர்ந்ததாடியும் சிரமுழுதுங் கவர்ந்து வளர்ந்த முடியும் ஜபத்தின் பொருட்டு முகிழ்த்த கண்ணையு முடையராய் ஆசார்யர் தியானத்தில் அமர்ந்திருந்தார். சிறிதும் அரவம் செய்யாமல் ஒருபுறம் ஒதுங்கி நின்றேன். ஏதோ ஒரு முனிவரின் ஆச்சிரமத்துக்கே வழிதப்பி வந்துவிட்டதுபோல் தோன்றியது. தூரத்தில் இளஞ்சிறுவர்கள் ஒன்றுசேர்ந்து ஏக கண்டமாக உச்ச ஸ்வரத்தில் "பாரதசமுதாயம் வாழ்கவே" என்ற பாரதியார் பாடலைப் பாடிக்கொண்டிருந்தார்கள். மற்று, எங்கு பார்த்தாலும் சாந்தி. இயற்கைத் தேவியின் ஏகாந்த உபதேசம் பெற வேண்டுமானால் அதுவே ஏற்ற இடம், ஏற்ற சமயம். சிறுதென்றல் அசைந்து வந்து நாற்புறமும் பரிமளம் வீசியது. தூரத்தில் மரவரிசைகளின் இருண்ட நிழலும், இடையிடையே சிறுசிறு விளக்குவெளிச்சமும், வெகு தொலையில் தெரியும் மலையின் மங்கலான எல்லைக்கோடும், நடுவே பெருவெளியும்தான். நான் மனோபாவத்தின் லகானை விட்டுவிட்டு அது எடுத்தேறிச் செல்லுமிடமெல்லாம் உடன் சென்று ஆனந்தக் கனவுகள் பலகண்டு அழகு வெள்ளத்தில்மூழ்கியிருக்க, எனது இந்திரியங்களெல்லாம் சுகானுபவத்தைத் தவிர வேறொன்றறியாமல் பரவசப்பட்டு ஸ்தம்பித்து நிற்க, மனமானது இயற்கைப்பெருந்தேவியின் ஒவ்வோரியக்கத்திலும் ஒவ்வோரொலியிலும் புதுப்புது அழகுகளைக் கற்பித்துத் தந்துகொண்டிருக்க, சிறிது நேரம் தன்னையும் மறந்து நின்றேன். ஆசிரமத்தையும் ஆசாரியரையும் மறந்து, நின்ற இடமும் வந்த காரியமும் உணர்வினின்றும் நழுவ, பிரபஞ்சமே இயற்கையும் நானுமன்றி வேறில்லையென்று மனமானது தனியரசு செலுத்திக் கொண்டிருக்கையில் ஏதோ சப்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினேன். ஐயரவர்கள் யாரென்று மறுமுறையுங் கேட்க என்னைத் தெரிவித்துக்கொண்டேன். அன்றிரவு முழுவதும் இன்பமயமாகவே கழிந்தது. நித்திரை செய்யவில்லை. இராமாயணம், உலகத்தின் பல காவ்யங்கள், பாலபாரதி இவற்றிலே வட்டமிட்டுக்கொண் டிருந்தது எங்கள் சம்பாஷணை. இரவு பின்னேரத்தில் சிறிது தூங்கிவிட்டு அதிகாலையிலே யெழுந்து சுற்றிப் பார்த்தோம். ஆச்சிரமமே அவருடைய ஒளியினால்தான் பிரகாசித்தது போலும்! சில மாதங்களுக்குமுன் நடந்த இச்சம்பவங்கள் இப்பொழுது நடந்தது போல என் மனத்தில் சித்திரிக்கப் பெற்று விளங்குகின்றன. சில காலத்திற்கெல்லாம் ஜாதிவேற்றுமை காரணமாகச் சச்சரவுகளுண்டாய் ஆச்சிரமம் மங்கலாயிற்று. சச்சரவின் நியாய அநியாயம் ஒரு புறமிருக்க, எனக்கு வருத்தம் தருவதெல்லாம் இந்த ஜாதிச் சண்டைக்கு ஐயரை இலக்காக்கியதே. பின்பு ஐயர் ராஜீநாமா செய்துவிட்டு 'பால பாரதியின்' ஆசிரியராக மட்டும் விளங்கினர். இப் 'பால பாரதி' பத்திரிகையே ஐயர் குணத்தைப் பொதிந்து வைத்திருக்கிறது. இதுவே ஐயரின் கடைசி முயற்சி யாதலாலும், தமிழரின் எதிர்கால வாழ்விற்கும் இதற்கும் நெருங்கிய சம்பந்தம் இருப்பதாலும், இதைப்பற்றி ஆராய்ச்சி செய்கிறேன்.

## பால பாரதி

பரத்துவாஜ ஆச்சிரமத்தினின்றும் இம்மாசிகையின் முதற் பகுதி வெளி

வந்த காலம், தமிழ் மொழியின் வள
ர்ச்சி நிலையில் ஒரு புதிய யுகத்தை
யே குறிக்கும். இப் பத்திரிகை,
உயர்ந்த வழவழப்பான கடிதத்தில்
நேர்த்தியாக அச்சிடப்பெற்று, முகப்
பில் ஆயிர இதழ்த் தாமரையிலே,
வீணையும் கையுமாக சரசுவதி உட்
கார்ந்திருக்கும் பாவனையில் சித்திரி
க்கப்பட்ட வர்ணப் படத்தோடும் பிற
படங்களோடும் விளங்குகிறது. இதில்
எட்டே பகுதிகள் தாம் வந்துள்ளன
வாயினும், கலைப்பயிற்சியும் ரஸானு
பவமும் தரும் பல சுவையுள்ள விஷ
யங்கள் ஒன்றுசேர்ந்து, மாஸிகப் பத்
திரிகைகளிலெல்லாம் இதை முதல்
தரமாக்கி விடுகின்றன. ஆயினும்,
இதில் காணப்படும் கட்டுரைகளுக்
கெல்லாம் நமது ஐயருடைய கட்டு
ரைகளே உரைக்கிரீடமாக விளங்
கும். இதற்குப் பொருளுரை யெ
ழுதிய பல அறிஞரும் ஐயருக்கே
அழகு தந்து அயலொதுங்கி நின்ற
னர். ஆகவே 'பால பாரதி' யின்
ஆராய்ச்சி ஐயர் கட்டுரைகளைப் பற்
றிய ஆராய்ச்சியே யாகும். தமிழ்
வசன நடைக்கே ஒரு புதிய சக்தி
யும் ஓட்டமும் ஜீவகளையும் தந்தன
அவர் கட்டுரைகள். அவருடைய
ஜீவநாதமான தேச பக்தியும் அதற்
குச் சுருதிபோல இடை விடாமல்
ஒலித்துக் கொண்டிருக்கிற தமிழபி
மானமும் அவ ருரையை வார்க்கும்
கருக்களாகும். சாதாரணமாக, உலக
சம்பவங்களைப் பற்றிய குறிப்புக்களை
'ஆலோகன அவலோகனம்' என்
றும், தமது பத்திரிகாலயத்துக்கு
அனுப்பப்பெறும் புத்தகங்களின்
மதிப்புரைகளைப் 'புஸ்தக விமர்சனம்'
என்றும், தமது பத்திரிகையின் அடி
ப்படையான நோக்கங்களை 'நமது
பத்திரிகை' என்றும், பெயரிட்டு
வெளியிட்டார். இவற்றில் கூட ஐய
ருடைய உரைநடை பிரத்தியேகமா
கத் தெரியும், அதற்கே ஒரு சிறப்
பியல்பு உண்டு. அது வேறெந்த நடை
யிலும் காணப்படாது. ஆசிரியன் பெய
ரோடு வெளிவராவிடினும், அதை
எங்கும் கண்டுபிடித்துப் பெயர்
கூறிவிடலாகும். முதன் முதலாக ஐய
ரின் இலக்கியப் பயிற்சியும் ரஸிகத்
தன்மையுமே நமக்கு வியப்பைத் தரு
கின்றன. 'காவிய உத்தியானம்'
எழுதிய கை எத்தகைய இலக்கிய
ஆராய்ச்சிக்குத் தான் பின்னிடும்?
காவியக் களஞ்சியமாகிற நறுமல ரீட்
டத்திலே இவருடைய மனமானது
சுற்றிச் சுற்றிச் சுழலுகிறது. அதை
மெல்லச் செல்லவிட்டால், கட்டுக்கயி
ற்றை அறுத்துக் கொண்டோடுகிற
து. அந்தக் கட்டுரையில்தான் எத்
தனை பாஷைகளில், எத்தனை புலவர்
கள் எழுதிவைத்த, எத்தனை உருவ
ங்கொண்ட காவியங்கள் நமக்குக்
காட்டப்படுகின்றன! சமய நூல்கள்,
மகாகாவியங்கள், கம்பீரநாடகங்
கள், ஹாஸ்ய நாடகங்கள், மிசிர
நாடகங்கள், சிறுகாவியங்கள், சில்ல
றைப் பிரபந்தங்கள், நீதி நூல்கள்,
தனிப் பாடல்கள், தொகை நூல்கள்!
உயர்ந்த அழகிய ஓட்டமுள்ள வசன
நூல்களை யெடுத்துக் கொண்டால்
அதிலும் எத்தனை விதங்கள்! சரித்
திர நூல்கள், இலக்கிய சரித்திரங்
கள், ஜீவிய சரித்திரங்கள், ஆத்ம சரி
த்திரங்கள், வியாசங்கள், கற்பனைப்
பெருங்கதைகள், சிறுகதைகள்! இவ
ற்றை யெல்லாம் விவரிக்க முயன்றால்
'அவதியும் அளவும் ஒன்றுளதோ'?
'புலவர் வறுமை' யென்று ஒரு கட்
டுரை யெழுதியிருக்கிறார். அதில்



உலகத்தின் பல நாடுகளிலுள்ள கவி
களின் சரித்திரங்களைக் கொண்டு சர
சுவதியின் திருத்தொண்டர்கள் பெ
ரும்பான்மையும் வறுமைக்கும் தொ
ண்டர்களாகவே யிருந்து வந்திருக்
கிறார்கள் என்பதை விளக்குகிறார்.
'இ ரா ஜ கோ பா ல ன் கடித
ங்கள்' என்ற பெயரால் தனித்
தனியான பல வியாசங்களைத் தொடு
த்திருக்கிறார். பல்லாண்டுகளாக, சுத
ந்திரமும் வீரவுணர்ச்சியு மற்று, பிற
நாட்டுக் கல்வியிலும் நாகரிகத்திலும்
மோகங்கொண்டு, சரீர உழைப்பும்
உயர்ந்த லட்சியங்களு மின்றி, பொரு
ளற்ற, உயிரற்ற, இருளடைந்த தே
வாங்கு வாழ்க்கை வாழ்ந்துகொண்டு
காலந்தள்ளும் நமது ஜனங்களைப் பே
ருறக்கத்தினின்றும் தட்டியெழுப்பி,
மயக்கம் போக்கி, அறிவும் ஆண்
மையும் ஊட்டி, வீரவேட்கை யெழு
ப்பி வீர வாழ்க்கை வாழத் தூண்டும்
சிங்கநாதமே இவற்றின் நடை. ஆண்
மை யிழந்தவர்களுக்கும் புதிய ஆற்ற
லளித்துத் தமிழ் நடையாகிய பழங்
குட்டத்தைப் பாய்ந்தோடும் ஜீவநதி
யாக சிருஷ்டித்து விடுகிறது. தமிழ்
இலக்கணப் பாழ்ங்காட்டை வெட்டித்
திருத்திப் புதிய எண்ணங்கள் அலை
மேல் அலையெறிந்து விளங்கும் தாம
ரைத் தடாகமாக மாற்றி விடுகிறது.
சுருங்கச் சொல்லின், இக்கட்டுரை
கள் அறிவுக் களஞ்சியமாகவும், ஆற்
றல் சமைக்கும் உலைக்களமாகவும்,
இன்ப ஆற்றுக்களாகவும், சௌந்தர்ய
உத்யானங்களாகவும் விளங்கும். இக்
கடிதங்களிலே நமது புலவர் பிரகி
ருதி தேவியின் சௌந்தர்யத்தை சா
க்ஷாத்கரித்த சுகானுபவத்தைப் பொ
திந்து வைத்திருக்கிறது ஒன்று.
துன்பந் துடைக்கப் பிரகிருதி தேவி
க்கு நிகர் யாருளர்?" என்றுதொ
டங்கி, 'துக்கத்தைப்போல் புனித
மான வஸ்து வேறொன்று மில்லை.
நமது மனத்தைச் சுத்தி செய்வதற்
காகத்தான் ஈசுவரன் நமக்குத் துக்க
த்தைத் தருகிறான். மனம் பொரு
மிக் கண்ணீர் விடாதவனுடைய இத
யத்தில் இரக்கமும் பொறுமையும்
எட்டிப் பார்க்காது' என்று முடி
கிற பகுதி அபூர்வமான சிறப்பத்திற
மையோடு சித்திரிக்கப்பட்டுள்ளது.
சங்கக் காலத்தில், தமிழ் நாட்டுக்கும்
மேல்நாடுகளுக்கும் இருந்த வியாபார
சம்பந்தமும், தமிழர் மரக்கல யாத்
திரையும், தீவ தீவாந்தரங்களில் குடி
யேறித் தமிழ் நாகரிகத்தை விதைத்
ததும் கூறும் மற்றொன்று, தமி
ழுரைநடையின் ஆற்றலுக்கு எல்லை
நிலமாக விளங்குகிறது. வேணு
கோபாலையர் மாட்டுக் கொட்டத்திற்
பற்றிய தீ எவ்வளவோ ஆவேசத்து
டன் வர்ணிக்கப்பட் டிருக்கிறது.
அதைப் புதிய சக்தி அளிக்கும் வசன
வரிசைகளிலே சேர்த்து விடலாம்.
பழந் தமிழ்நாடு கடல் கொள்ளப்பட்
டதும், கண்ணகி கற்பினால் மதுரை
எரியுண்டதும், சம்பந்த சுவாமிகள்
பாண்டியனுக்குச் சுரம் தீர்த்து சம
ணரைக் கழுவேற்றியதும், சைவ
சமயம் மீண்டும் தழைத்தோங்கிய
தும், பாண்டிய ராட்சி வீழ்ந்த
அராபிய வியாபாரிகள் சிங்காதன
மேறுவதும் நாய்க்க அரசர்கள் மது
ரையைப் பிடித்துக்கொண்டதும் சல
னப்படக் காட்சியில் காண்பதுபோல
ஒன்றன்பின் ஒன்றாக நம் கண்முன்
காட்டப்படுகின்றன. இக்கட்டுரை
யே முடிவில் 'குருகோவிந்த சிங்க'
னாகப் பரிணமித்து விட்டது. குரு
கோவிந்த சிங்கன் யாகமும், சிஷ்யர்

களைச் சோதனை செய்து வீரதீட்சை
யளித்ததும் அவனுடைய வீரவாழ்க்
கையில் இடைவிடாது நடத்திய போ
ர்களும், வீரமாணமும் மிகுந்த
மனோபாவத்துடன் வர்ணிக்கப்பட்டு,
நம் கண்முன்னே நிலைபெற்று நிற்கி
ன்றன. இவற்றிலே, தமிழ்ச் சுவை
கொழிக்கிறது. ஆகவே, தமிழின்
சுவச்சமான ருசியை விரும்புகிறவர்
கள் இவற்றைப்படித்துப் பழகட்டும்.
இனி, சிறுகதைகள் எழுதுவதில்
இவர் இணையற்றவர் என்பது ‘அனர்
கலி’ ‘லைலிமஜ்னூன்’ ‘எதிரொ
லியாள்’ ‘மங்கையர்க்கரசியின் கா
தல்’ முதலிய பல கதைகளிலிருந்து
நன்கு விளங்கும். கதாப் பிரியர்கள்
ஆனந்திக்கும்படி புதிய கதைகளும்,
உயர்ந்த கதைகளின் பாஷாந்தரங்
களும் எழுதவேண்டு மென்பதுஇவர்
கொள்கை. ஒரு கதை யெழுதவே
ண்டு மென்றால், அது மனத்தில்
மூன்று மாதமாவது ஊறி,
பாவனைசக்தியால் சுட்டுச் சுத்தி செய்
யப்பட்டு, பத்தரைமாற்றுத் தங்கமா
யெழவேண்டு மென்று சொல்லிக்கொ
ள்வார். கதை சொல்லுதல் ஒரு கலை.
இதிலே ஆயுட்கால மெல்லாம் கழித்
தவர் போலத் தோன்றும், இக்கதை
களைப் படிக்கும்போது. இவற்றைமட்
டும் எழுதி வைத்துவிட்டு வேறொன்
றும் எழுதாமல் இறந்திருந்தபோதி
லுங்கூட, இவருக்குத் தமிழ்ப் புல
வர் வரிசையில் ஸ்தானம் நிச்சயம்.
கதைகளின் அமைப்பும், அழகும், ம
னோபாவமும், சித்திரங்களும் ரஸிகர்
மனத்தைக் கொள்ளைகொண்டுகற்போ
ரைக் கதாநாயகர்களின் மனோலோ
கத்துக்கே தூக்கிச் சென்று விடுகின்
றன. கதை வாசிக்கிறோம்என்கிற நினை
ப்பின்றி, கண்ணாற் காண்பதுபோல
வும் கதா நாயகர்களோடு உரையாடி
அவர்கள் சுகதுக்கங்களைப் பங்கிட்டுக்
கொள்வது போலவும், உண்மையுலக
மும் பாவனுலோகமும் தம்முள் நிலை
மாறி ஒன்று மற்றொன்றாகப் பரிண
மித்து விடுகிறது. டில்லியில் அக்
பர் பாதுஷாவின் தர்பாரும், நவரோஜ்
பண்டிகையும், அனர்கலியின் அதி
ரூபலாவண்யமும், ஸலீம் இரகசியக்
காதலும், நஜத் பாலைவனத்தின்
இடையிடையே பூத்த ஜீவபூமிகளும்,
ஆங்காங்கே திரியும் வியாபாரக்கூட்
டமும், லைலியின் காதல்நோயும், கா
யிஸின் பைத்தியமும், ஏசாளின் தேவ
சபையும், எதிரொலியாள் சாபமும்,
காதல் வளரும் வழியும், அது
துக்கத்திலே தவறாது முடிவுபெறுத
லும் எவ்வளவு அற்புதத் திறமை
யோடு சித்திரிக்கப் பெறுகின்றன!
ஓய்வு நேரமெல்லாம் மனம் இக்கதை
களுக்குப் பாய்ந்து செல்லுகிறது ;
படித்து வெகுகாலத்துக்குப் பின்
னும் இவற்றிலே சுற்றிச் சுழன்று
மீளமாட்டே னென்கிறது. இக்கதை
களிலே சோகமும் சிருங்காரமும்
தான் பிரதான ரஸங்களாகக் கா
ண்கின்றன. கதை சொல்லுதலைப்
பற்றி இவர் ஒரு வியாசம் வரைந்திரு
க்கிறார். அதன் விதிகளுக்குத் தம்
மையே இலக்கிய மாக்கிவிட்டார்.
தாங்கள் எழுதியனுப்பிய கதைகள்
இவர் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட
வில்லையே யென்று சில நண்பர் குறை
சொல்லக் கேட்டிருக்கிறேன். இவ்வள
ளவு சிறந்த கதைகளெழுதும்தமிழ்ப்
புலவர்கதைகளை அளவிடவைத்த கட்
டளை சிறிதுயர்ந்ததா யிருந்தால் யார்
தான் மன்னிக்க மாட்டார்கள்? இன்
னும் இவர், சரித்திரம் சமயம் விஞ்
ஞான சாஸ்திரம் சம்பந்தமாகக் கட்டு



ரைகள் பல எழுதியிருக்கிறார். அவை
களெல்லாம் மேனாட்டுப் புலவர் வகு
த்த கட்டுரை யிலக்கண விதிகள்
பிழைபாது விளங்குகின்றன. தமிழ்
நாட்டுச் சரித்திரத்தின் மறைந்து
கிடக்கும் பகுதிகள் வெளிவர
வேண்டுமென்பதில் இவர் எவ்வளவு
ஆவல் கொண்டிருந்தா ரென்பது
‘ஆனந்தரங்கப் பிள்ளையின் தினசரி’
யை இவர் பதிப்பித்ததினின்று விள
ங்கும். சிற்பக் கலைகளில் இவர்க்குள்ள
பெருவிருப்பம் ‘நமதுசிற்பச்செல்வம்’
‘குவாலியர் கோட்டை’ யென்று
முகுடமிட் டெழுதிய பொருளுரை
களால் தெளிவாகிறது. லலிதகலை
களிலும் இவர்க்கு மிகுந்த ஆர்வ
முண்டு. ரஸங்களில் வைத்து ஹா
ஸ்யம் இவருக்குஅவ்வளவாக வராது
என்பது ‘எறும்பின் மெய்க்கீர்
த்தி’யிலிருந்து புலனாகும்.

கம்பராமாயணம்.

கடைசியாக, ‘ஐயரும் கம்ப
ராமாயணமும்,என்ற விஷயம் பரிசீல
னைக்கு வருகிறது. இவருடைய இல
க்கிய ஆராய்ச்சித் திறமைக்கு இது
வே சிறந்த உதாரணமாகும். உலக
த்து முதல்தரமான கவிகளோடு ஒரு
ங்கு வைத்தெண்ணத் தகுதியுடைய
வன் கம்பன் என்பது இவரபிப்பிரா
யம். தமிழ்நாடு, தானும் கவிச்சக்கர
வர்த்தியின் மகிமையைத் தெரிந்து
கொள்ளாது அறியாமையில் மூழ்கிக்
கிடக்கும் நிலைமையில், பாரததேசத்
துக்கும் வெளிநாடுகளுக்கும் அவர்
பெருமையை எங்ஙனம் முழக்கம்
செய்யும்? கம்பன் அருளிய இராமா
யணத்தைப் பற்றியோ இரண்டபிப்
பிராயம் ஏது? உலகத்துக் காவியங்
களிலே அது தலைமை வகிக்கிறது.
அதற் கிணையாகச் சொல்லக்கூடிய
வேறு காவியம் ஒரு நாட்டிலும் ஒரு
பாஷையிலும் இல்லை. ஆகவே கம்
பன் கவிச் சக்கரவர்த்தி யென்பதும்,
இராமாயணம் ஆதர்ச காவ்யம் என்ப
தும், தமிழருக்கு இதிற்சிறந்த சம்பத்
தில்லை யென்பதும், இவர்கொள்கை
யென்று நாம் சொல்லாமலே
விளங்கும். தமிழரின் உண்மையான
உயர்வு இருக்கு மிடத்தைத் தமிழர்
இன்னும் தெரிந்து கொள்ளவில்லை.
இதைத் தமிழரும், அவர் வாயிலாக
ஊரும் நாடும் உலகமும் அறியச்செய்
வதே நமது ஐயர் பெருநோக்கமாக
இருந்தது. புதுச்சேரியில தமது காரி
யாலயத்துக்குக் ‘கம்ப நிலயம்’ என்று
பெயரிட்டு, தமிழில் விசேஷப் பயிற்சி
யில்லாத வித்தியார்த்திகளுங்கூட
அறிந்து கம்பன் பெருமையில் ஈடு
படும்படியாக ‘இராமாயணம்—பால
காண்ட’த்தைப் பதிப்பித்தார். ரஸிகர்
களுக்குப் பெருவிருந்தாகும்படி ஓர்
மதிப்புரை யெழுதி நூன்முகத்தில்
பெய்து வைத்ததும், இராமாயண
அர்த்த ஞானத்துக்குமுட்டுக்கட்டை
யான தமிழ்ச் சந்தி பிரித்தெழு
தியதும், இதன் விசேஷ அம்சங்கள்.
பின்பு பல்லாரியில் சிறைவாசஞ்
செய்த பொழுது கம்பராமாயணத்
துக்கு ஆங்கிலத்தில் மதிப்புரை விரி
வாக எழுதியிருக்கிறார். மேனாட்டு
ஆராய்ச்சிமுறை பற்றிக் கம்பராமா
யணத்துக்குப் பிரவேசமாக எழுதப்
பட்ட இப்பெருநூல் இன்னும் முற்
றுப் பெறவில்லை. இதின் ஒருபகுதி
லண்டன்மாநகரத்தில் ஐயரால்
பிரசங்கமாகச் செய்யப்பட்டது என்
று அதிலே கண்டிருக்கிறது. என
வே ‘இராமாயண ஆராய்ச்சி’ வெ
குகாலமாக இவர் மனத்திலே கிடந்
தூறி, பல்லாரிச் சிறையிலே வைத்து

உருவம் பெற்று, நாளிதுவரை திரு
த்தி பமைக்கப்பெற்றது என்பதுவெ
ளிப்படை. காவ்ய லட்சணத்தின் அடி
ப்படையான விதிகளும், கம்பராமா
யணம் அனுபவிப்பதற்கு இன்றியமை
யாத சில குறிப்புக்களும், இராமாய
ணத்தின் பலவகைப்பட்ட அழகு
களும், குண சிருஷ்டியில் கம்பன்
வைவிஸ்தாரமும் பொலிந்து விளங்கு
கின்றது இவ்வாராய்ச்சி. கம்பன்
காவ்யபாத்திரங்களில், இராமன் முத
லிய சகோதரர்கள் குணசிருஷ்டி
முற்றுப் பெற்றுவிட்டது. சீதை
யின் குணவிசேஷமோ, ஆராய்ச்சி
செய்யப்படவில்லை. இன்னும், மற்றை
யோர் குணவர்ணனமும் முடிவுரையும்
எழுதப்படல் வேண்டும். இவர் இரு
க்கும்பொழுதே, அமெரிக்காவில்
ஒரு பிரசார்லயத்தோடு இவ்வாராய்
ச்சியுரையை வெளியிட முயற்சி செ
ய்துகொண்டிருந்தார். இந்நூல் வெ
ளிவருமாயின், உலகத்துக் கவிகளில்
கம்பன் ஸ்தானமும் காவ்யங்களில்
இராமாயணத்தின் ஸ்தானமும் உலக
த்துக்கே நன்கு விளங்கும். கடை
யோக 'பாலபாரதி'யில் கம்பராமாய
ணத்தைப் பற்றிய கட்டுரைகளை எடு
த்துக்கொள்வோம். முதன் முதலாக,
கம்பராமாயணத்தைக் கற்கும் முறை
யிலே, ஓரடிப்படையான மாறுதல்
ஏற்படுத்தினர். இதுவரை கம்பனை
க்கற்று உபாஸித்தவர்க ளெல்லாம்,
இராமாயணத்தில் தனிக் கவிகளை யெ
டுத்துக்கூறி, அதற்குப் பலபொருள்
சொல்லி, கம்பனுடைய பெருமையி
லும் தங்கள் பெருமையையே உலகத்
துக்குக் காட்டியுள்ளார்கள்; அல்லது
ஒரு படலத்தை முழுவதும் படித்துக்
கதைப் போக்கை மட்டுமே கவனிக்
கச் செய்வார்கள். நமது ஐயரோ,

ஓர் பெருங்காப்பியம் அநேக அவ
யவங்கள் சேர்ந்ததாயிருப்பினும் ஒரு
ஜீவப் பிராணியைப்போல் ஓர் தனிப்
பிண்டமென்றும், அதன் ஒவ்வோ
ரவயவமும், தன் தனக்கு முன்னே
யுள்ள அவயவத்தோடும் பின்னே
யுள்ள அவயவத்தோடும் பிணைக்கப்
பெற்று, ஒன்று என்கிற உணர்ச்சி
யை வளர்க்க வேண்டுமென்றும்,
தனித்தனிப் பாகங்களிலுள்ள இன்
சுவை ஒரு பக்கமிருக்க, பாகத்துக்
கும் பாகத்துக்குமுள்ள பொருத்தம்
அழகாக இருப்பதோடு காவியமா
னது நல்ல சமஷ்டிகாணத்தைப் பெ
ற்றிருக்குமென்றும் சொல்லி, இந்த
க்கொள்கையை அளவு கருவியாகக்
கொண்டு, கம்பராமாயணத்தின் பெ
ருமையை மதிப்பிட்டிருக்கிறர். முழு
நூலையும் ஒருங்கு நோக்கி, 'ஒவ்
வொரு பாகமும் தன் தனக்கும் பிற
பாகங்களுக்கும் எவ்வாறு பொருத்த
முடையது? நூல் முழுவதற்கும் எங்
ஙனம் பொருந்தியிருக்கிறது? மத்
திய சம்பவம் எது? அதற்கு ஒவ்
வொரு பாகமும் எவ்வாறு அவ்யவ
சம்பந்தம் அமைந்திருக்கிறது? இந்த
ரீதியை அனுசரித்து, ஒவ்வொரு
படலத்தின் அழகும் அமைப்பும் ரஸி
கர்களுடைய அழகு விதிகளுக் கிண
ங்க அமைந்திருக்கிறதா?' இவை
போன்ற பல கேள்விகளுககு விடை
யே இவர் ஆராய்ச்சி. இன்னும் முத
னூலான வான்மீகி மகரிஷியாற் செ
ய்யப்பட்ட இராமாயணத்தோடு சீர்
தூக்கிப் பார்த்து, அதன் அமைப்
பைக் கம்பராமாயணம் எவ்வாறு
வென்றுவிட்ட தென்றும், உலகத்து
மகாகவிகளின் காவ்யாந்தரங்களில்
ஏற்றக்குறைய இதைப்போலுள்ள கட்
டங்கள் எவ்வாறமைந்துள்ளன என்



றும், காவ்யலக்ஷணங்களின் பல உறு
ப்பிலும், கம்பன் அவர்களை எவ்வாறு
வெகு தூரத்தில் நிறுத்தி விடுகிருன்
என்றும், தெளிவாகக் காட்டப்பட்டி
ருக்கிறது. ரஸிகர் மனத்துக்குத்
திருப்தி யுண்டாகும்படி அமைந்திரு
க்கிற காவ்யச்சிற்பத்துக்கு "ரசனை"
யென்று பெயர் வைத்து, கம்பராமா
யணத்தின் ரசனைச் சுவையைக் காண்
டம் காண்டமாக ஆராய்கிறர். அவரு
டைய அபிப்பிராயங்கள் முடிவான
வையென்றாவது அவற்றை முற்றி
லும் நான் ஒப்புக்கொள்கிறேன் என்
றாவது சொல்ல வரவில்லை. நான்
சொல்வதெல்லாம், மேனுட்டு விமர்
சன முறைகளைப் பின்பற்றி நமது
கவிக்கிரீடத்தை, காவியராஜனை, கம்
பநாடகத்தை ஆராய்ந்து, தான் வந்
துள்ள தீர்மானங்களுக்குப் பொரு
த்தமான காரணங் காட்டியிருக்கிறர்
என்பதே. இன்னும் தமிழ்ப் புலவர்
பலரும்இவ்வழிகாட்டியைப்பின்பற்றி
இத்துறைகளில் இன்னும் பலவகை
யாக உழைத்துப் பலபல முடிவுகளை
க்கொண்டுவரவேண்டும். முதலாக
இவர் பாலகாண்டத்தை யெடுத்து,
"கம்பராமாயண மாகிற அழகிய அர
ண்மனைக் கட்டிடத்துக்கு, இது முன்
வாயிற் சோலையாக விளங்குகிறது.
அரண்மனைக்குள் பிரவேசித்து அதன்
சிறப்புச் செல்வத்தில் மூழ்குமுன்,
கற்போன் மனது இவ்வுத்யானத்
தில் ஆனந்தத்தோடு உலவும். ஆனல்
அதற்குக் காவியத்தோடு அவயவ
சம்பந்தமில்லை. கதை, அயோத்தியா
காண்டத்தில்தான் தொடங்குகிறது"
என்கிறர். அயோத்தியா காண்டத்
தில், "இராமாயணத்தின் வஸ்து
அல்லது பிரதான சம்பவம் இரா
வணவதம். அதற்கு விதை எவ்வாறு

விதைக்கப் படுகிறது?' விதை
விழுந்ததும், என்ன வேகமாக
வளரத் துவக்குகிறது?" என்பதும்
பரதன் கதையும் கம்பவான்மீகர்
களின் தாரதம்யமும் மிகுந்த அழ
கோடும் ஆறறலோடும் விவரிக்கப்பட்
டிருக்கிறது. ஆரணிய காண்டமோ
சூர்ப்பநகையை அரங்கத்தில் தோ
ற்றுவிக்கும் அழகிலும், இராவணனி
டம் அவள் முறையீட்டிலும், சீதை
யை இராவண சந்யாசி சந்திப்பிலும்,
மாயமானைப் பற்றிய இராமலக்ஷ்மண
வாக்குவாதத்திலும், சீதை இலக்ஷ்
மணனை நிந்திப்பதிலும், கம்பன்
எவ்வாறு வான்மீகியை வெகுதூரத்
தில் நிறுத்திவிடுகிருன் என்பதைப்
பளிங்குபோலத் தெளிவாகக் காட்டு
கிறது. கிட்கிந்தாகாண்டம் அடிக்க
தையோடு அவயவ சம்பந்தம் மிக
இலேசாகவுள்ள உபாக்யானம் என்
று கூறிவிட்டு, சுந்தரகாண்டத்தின்
அமைப்பை ஆராய்கிறர். ஊர்தேடு
படலத்தின் அழகை விசாரித்துவிட்டு
சீதையைக் காணும்போது அநுமன்
மனத்தில் உண்டான எண்ணங்களும்
சீதையிடம் இராவணன் குறை யிரத்
தலும், அநுமசீதா சம்வாதமும்,
அநுமன் இராமனிடம் சீதை
யின் கற்புநிலையைத் தெரிவிப்பதும்,
அற்புதத் திறமையோடு ஆராயப்படு
கின்றன. 'உருக்காட்டுப்படல அமை
ப்பின் செவ்வியை, எக்கவியும் எக்
காலத்திலும வென்றதில்லை' யென்
றும் 'வெல்லமுடியாது' என்றும்
கூறிவிட்டு, 'ஊர்தேடுபடலத்தில்
எதிர்பார்க்க வைத்தபடி, கம்பன்
தனது ஸ்தாயியைப் படிப்படியாக
ஏற்றிக்கொண்டு சென்று கடைசிப்
படலமாகிற திருவடிதொழுத படலத்
தில் முத்தாய்ப்பைவைத்துவிட்டான்'

என்றும், சீதையின் நிலைமை இராமனிடம் அநுமான் வர்ணிக்கிற முறையொன்றிலிருந்தே, இராமாயணம் முழுவதற்கும் இக்காண்டம் அழகு செய்து நிற்பதால்தான் சுந்தரகாண்டம் ஆயிற்று என்றும் கூறி முடிக்கிறார். அப்புறம் யுத்தகாண்டத்தின் ரசனை, இந்திரசித்து நிகும்பலை யாகத்துக்குச் செல்வதுவரை ஆராயப்படுகிறது. அத்துடன் முற்றுப்பெறாது அரைகுறையாக நிற்கிறது. இவ்வாராய்ச்சி யுரையை இராமாயணம் முழுவதற்குமே பெற்றுப் படித்தானந்த மடையும் பாக்கியம், தமிழ் நாட்டுக் கில்லாதுபோயிற்றே என்றுதான் வருந்துகிறேன். அத்தகைய உணர்ச்சி உண்டாகிறது இதை வாசிக்கும்பொழுது. இவருக்குக் கம்பன்பேரிலும் இராமாயணத்தின்பேரிலுமுள்ள பக்திக்கு, இன்னுமோ ருதாரணங் கூறுகிறேன். ஏப்பிரல் மாதம் எட்டு ஒன்பதாம் தேதிகளில், திருநெல்வேலியில், எங்கள் தமிழ் இலக்கியச் சங்கத்தின் ஆதரவில், கம்பர் திருநாள் நடந்தது. நமது ஐயருக்கும் அழைப்புப் பத்திரிகை அனுப்பியிருந்தோம். அவர் 'பெல்காம்' தேசிய மகா சபைக்குச் சென்று, சவர்க்கார் சகோதரர்களையும் பார்த்துவிட்டு, சென்னைக்கு மீண்டு, அங்கே சிலகாலம் தங்கியிருந்து, அப்பொழுதுதான் பரத்துவாஜ ஆசிரமத்திற்குத் திரும்பியிருந்தார். பிரயாணத்தின் சிரமத்தைக்கூடக் கவனியாமல், 'கம்பர் திருநாள்' என்று பத்திரிகையில் படித்ததும், கவிச் சக்கரவர்த்திக்குத் தாம் செய்யவேண்டிய கடமை யீது என்று நினைத்து உடனே புறப்பட்டு நெல்லைக்கு வந்து, இரண்டாம் நாள் நடவடிக்கைகளில் கலந்து கொண்டார். விழாவிற்கு வந்திருந்த நமது ஐயருக்கும், இன்னும் பல பெரியோர்களுக்கும் வந்தனோபசாரம் செலுத்தப்பட்டது. அன்று இரவு வெகு நேரம் வரையில் இராமாயணத்தைப் பற்றியும், கம்பனைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். எங்கள் வேண்டுகோளுக் கிணங்கி, மறுநாளும் எங்களோடு தங்கியிருந்தார். இவ்வாறு இரண்டு நாளும் பரமானந்தமாகக் கழித்து விட்டு, ஐயரைப் பிரிந்தோம். அதுதான் அவரைக் கடைசி முறையாகப் பார்த்தது.

ஐயர் தமிழ்ப்பணி.

இனி, ஐயர் தமிழுக்குச் செய்த நன்மை என்ன? முதன் முதலாக, தமிழ்வசன நடையை வளமுறச் செய்தார். எனவே இவர் உரைநடையின் சிறப்பியல்புகளைக் கவனிப்போம். இவர் உரைநடையில், விஷய கௌரவ மிருக்கிறது. இவரிடமிருந்து ஜனங்களுக்கு அறிவிக்க வேண்டிய உபதேச மொன்றிருந்தது. அதை அறிவிக்கவே இவர் வசன நடை பயன்பட்டது. கூரிய அறிவும், விரிந்த உலகானுபவமும், பல பாஷைகளின் இலக்கியங்களில் தேர்ச்சியும், உலக சரித்திரங்களிற் சிறந்த பயிற்சியும் தமிழிற் கொண்டுவந்து கொட்டினார். இதற்கு முன் எந்த உரை நடையும் கற்போரை இவ்வளவு அறிவுடையாராகச் செய்ததில்லை. சொல்லுகிற விஷயம், தெளிவாகவும் சொற் சிக்கனத்தோடும் சொல்லுவார். குறித்த பொரு ளுணர்த்துவதற்கு எவ்வளவு சொற்கள் வேண்டுமோ அவ்வளவே அமைந்திருக்கும். கூடக் குறைய இரா. சொல்லுகிற விஷயத்தை ஐயந்திரிபின்றி வாசகர் மனத்தே பதித்துவிடுவார். இவர் நடைக்கு அளவிறந்த ஆற்றலுண்டு. மனத்தின் பேராழத்திலிருந்து புறப்பட்டுக் கேட்போன் இதயம்வரை வெள்ளமிடுகிற இவர் சொற்களுக்கு உண்மையும் அந்தரங்க சுத்தியும் இல்லாவிட்டால் வேறென்னதான் இருக்கிறது? எவ்வித உயர்ந்த பாவங்களையும் அனுயாசமாக வெளியிடக்கூடிய அவ்வளவு லாகவம் தமிழ்நடைக்குத் தந்துவிட்டார். தமிழ்ச் சொற்றொட ரிலக்கணம் இவர்க்குக் குற்றேவல் செய்கிறது. தமிழ் நடை இவர்க்குப் பணிந்து நடக்கிறது. ஏவின வேலையெல்லாம் செய்துவிட்டு 'இன்னும் என்னசெய்யவேண்டும்?' என்று பணி கேட்டு எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறது. இவர் அதற்கு அற்புதத் திறமை வாய்ந்த எஜமான னுகவே காண்கிறார். இவர் ஆட்சியை ஒவ்வொருதடவையும், ஒவ்வொரிடத்திலும் அது ஒப்புக்கொள்ளாமல் தீரவில்லை. சொற்களும் நிறுத்து வைத்ததுபோல் விழுகின்றன. அவற்றின் முறைவைப்பும் 'சரியான சொல் சரியான இடத்திலே'யே காணப்படுகிறது. பாஷையே, இவருடைய ஆற்றலுக்குப் பயந்து விரிந்து இடங்கொடுத்துச் செல்வதுபோலத் தோன்றுகிறது. உலக வழக்குச் சொற்களையும், திசைச்சொற்களையும், விசேஷ ஆற்றலை யுடைய பிறமொழிச் சொற்களையும் இடமறிந்து பெய்து வைக்கிறார். சிலர் இவருடைய நடையில் வடமொழிக் கலப்பு அதிகமாக இருக்கிறது என்று கூறக் கேட்டிருக்கிறேன். ஓடுகிற வனையும் பிடித்து நிறுத்தி, சொல்லும் விஷயத்தைக் கேட்பித்து, அவன் மனத்திலும் ஆசிரியன் நினைக்கிற உணர்ச்சிகளை யுண்டாக்கி, தன் மனம்போனபடி யெல்லாம் அதை முரலச் செய்யும் வல்லமை படைத்த வசன நடையில், வடமொழிக் கலப்பும் பிறமொழிப் பிரவேசமும் ஆராயும் நேரமெங்கே? 'அழகு செய்வதே அழகியது'! நினைத்த விஷயத்தை வெகுதிறமையோடு முடிக்கும் வசன நடையே நடை. "கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய்க், கேளாரும் வேட்ப மொழிவ" தன்றோ சொல்? இன்னும் இவ ருரைநடை சிருங்காரம் சோகம் வீரம் ரௌத்ரம் முதலான ரஸபாவங்களை வேண்டிய போது எடுத்துதவும் மூலபண்டாரமாகத் தோன்றுகிறது. சப்த சித்திரங்கள் நிறைந்த பொருட்காட்சிச் சாலையாக விளங்குகிறது. சாதாரணமான அற்ப விஷயங்களையுங்கூட பாவனைசக்தி கரைபுரண்டோடி மூலாம் பூசிவிடுகிறது. ஆனால், இவ்வளவு சிறப்புப் பொருந்திய இவர் தமிழ் நடையில் 'ஆசிரியர் எய்த்துப்போனார்' என்ற உணர்ச்சியே உண்டாவதில்லை. எவ்வளவு வாசித்து முடித்தாலும், இன்னும் வேண்டுமானால் இதிலும் பலமடங்கு எழுதுவார் என்ற எண்ணமே நமக்கு உண்டாகிறது. தமது நடையை மிகுந்த அடக்கத்தோடும் கையாளுகிறார். ஒரே ஓட்டமாக ஓடி, மூச்சுத் திணறிக்களைத்துப்போய்க் கீழே விழுந்துவிடாது, இளைப்பாற மண்டிபோட்டு உட்கார்ந்து விடாது, புறப்படும்போது தொடங்கிய நடை சிறிது சிறிதாய்க் கம்பீரமாகக் கிளம்பி, ஸ்தாயிக்குமேல் ஸ்தாயியாய் ஆரோகணக் கிரமத்திலேயே சென்று, நாம் அறியாமல் கதியின் வேகத்திலே ஈடுபட்டு லயித்துப் போயிருக்கையிலேயே, குறித்த விடத்தில் கொண்டு

சேர்த்துவிடுகிறது. இளைப்பாறுதலும் வழியிலேதான். அது இளைப்பாறுகிறதென்ற உணர்ச்சி நமக்கு இல்லாமலிருக்கையிலேதான். எவ்வளவு வேகமாகச் சென்றபோதிலும் பிரயாணத்தின் ஒவ்வொரு படியிலும், இன்னும் எத்தனை மடங்கு வேண்டுமானாலும் வேகமாகச் செல்லும் என்ற உணர்ச்சியைத் தோற்றிக்கொண்டே செல்லுகிறது. சக்தி முழுவதையும் செய்கையிலேயே கொட்டி விடவில்லை. செய்யும் ஆற்றலிலும் அடக்கமாக வைத்திருக்கிறது. கையிருப்பு இருந்துகொண்டே வருகிறது. நாற்றிசையும் புதைத்தெழுந்து, பல பக்கங்களிலும் கவடுபோக்கித் தழைத்து ஓங்கி முழுமரமாக வளர்ந்து விடினும், அதன் விதைபோல அடங்கிக் கிடக்கிறது இவர் நடையின் மூலபலம். ஆகவே இவர் வசன நடையின் பல அழகுகள் நம் மனத்தைக் கொள்ளை கொண்ட போதிலும், வெளிக்காட்டாது அமைந்துகிடக்கும் அதன் போராற்றலைக் கண்டு நம் மனம் ஸ்தம்பித்துப் போய்விடுகிறது. இத்தகைய உரைநடையைக் கையாண்டு, தமிழுக்கு இவர்செய்த திருப்பணியை மதிப்பிடுவதென்றால் எளிதில் முடியுமா? இவர் தமிழ்க் கவிகளுக்குப் போலத் தமிழுரை நடைக்கு ஒரு ஸ்திரமான வடிவம் கற்பித்தார். செய்யுட்குப்போல, வசன காவ்யங்களுக்கும் சமசுதந்திரம் வாங்கிக் கொடுத்தார். பல துறைகளில் தமிழ் வசன நடையைப் பெருகச் செய்து, பல விஷயங்களிலும் ஜனங்களுக்கு ஆவலையுண்டாக்கினர், தமிழ் மக்களுக்கு வசன நடை யெழுதவேண்டுமென்னும் பேரவா ஊட்டி, அதற்கு வழிகாட்டியாயும் விளங்கினர். தமிழ் வசன நடைக்குத்தான் எத்தனை புதிய வடிவங்கள்! அரிய வியாசங்கள், ரஸமொழுகும் சிறுகதைகள், மனம் பிரமிக்கும் இலக்கிய ஆராய்ச்சிகள், தமிழ்ச்சுவை கொழிக்கும் கடிதங்கள், விஞ்ஞான சாஸ்திர முடிபுகள், சமய ஆராய்ச்சிகள், வீர சரித்திரங்கள், இராஜீய விஷயங்கள், குறிப்புக்கள், மதிப்புரைகள், கலைச் செல்வங்கள், துண்டு துணுக்குகள் — இவையெல்லாம் ரஸிகர் மனத்தைச் சிறைசெய்து விடுகின்றன. இவர் சிறந்த பதிப்பாசிரியர் என்பதற்குக் கம்பநிலையப் பிரசுரங்கள் போதாவோ? பத்திரிகை நடத்துவதில் இவர் போராற்றல், என் போலியர் புகழப் பெருகும் சிறுமையுடைத்தன்று. 'தேசபக்தன்' தினசரிப்பத்திரிகை, இவர் கையில் எவ்வளவோ ஆற்றலும் அழகும் பெற்று விளங்கியது. 'பால பாரதி'யோ, மாஸிகப் பத்திரிகைக்கு வரம்பாக நின்று நிலவியது. சரித்திர சம்பந்தமாகவும் பல நூல்கள் எழுதியிருக்கிறார். எல்லாம் ஜனங்களுக்குள் வீரவுணர்ச்சியைப் பெருக்கும் பொருட்டே. இவர் மொழிபெயர்ப்பிலும் இணையற்றவரென்பது, முதனூற்சுவை சிறிதும் கெடாது பிறமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் ஆற்றலிலிருந்து கண்டு கொள்ளலாம். 'குறள் மொழிபெயர்ப்பு, கவிஹ்ருதய மறியாத பலமேனாட்டுப் புலவர் மொழிபெயர்ப்புக்களில் காணப்படும் குறைகளை நீக்கி, வள்ளுவர் கருத்தை உள்ளபடி உலக மறியவேண்டுமென்னும் பெருநோக்கம் கொண்டே யெழுந்தது. இராமாயணத்துக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிய மதிப்புரைகளைத் தவிர, இவர்



ஆராய்ச்சித் திறமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ? கல்வித் துறையில் உழைக்கவேண்டுமென்று இவருக்கிருந்த பேரவா, இவர் குருகுலம் ஏற்படுத்தி நடத்தியதால் வெளியாகிறது. இவர் புனைந்த கட்டுரைகள், அத்துறையிலும் இவரது அளவிறந்த திறமையைப் புலப்படுத்தி நிற்கும். கதை யெழுதுவதில் இவர் பேராற்றல், முன்னமே ஆராயப்பட்டது. இன்னும் இலக்கியத் துறையிலும், இராஜீய விஷயங்களிலும், சமய சாஸ்திர ஆராய்ச்சிகளிலும், லலிதகலைகளிலும், சிற்பக்கலைகளிலும் இவர்புலமை இவர் எழுதிய நூல்களாலேயே அறியக் கிடக்கிறது. கலித்தொகை முதலிய சங்க நூல்களிலிருந்து இவர் சிலபாகங்களை மொழிபெயர்த்திருப்பதாகவும் தெரிகிறது. எல்லாம் வெளிவந்தால்தான் இவர் பெருமையை உலகம் ஒருவாறறிய முடியும். ஆயினும் நூல்களிலிருந்துமட்டும் இவர் பெருமையை அறிய விரும்புவோர் அதில் செம்பாதியை யிழந்துவிடுவார்களென்பது திண்ணம். இவர் எழுதிய நூல்களுக்கெல்லாம் மேலாக விளங்குகிறது, இவருடைய வீரவாழ்க்கை. இவரை நேரிலறிந்து உரையாடும் பாக்கியம் படைத்தவர்களுக்கே, இவர் வாழ்க்கையின் உயர்வு தெரியும். இவர் சரித்திரத்தையும், சமீபத்தில் தமிழ்நாட்டார் விவரமாக எழுதி வெளியிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தமிழில் ஐயர் ஸ்தானம்.

இனி, தமிழில் இவர்க்குள்ள ஸ்தானம் என்ன? சிறந்த பத்திரிகாசிரியரும், சரித்திரக் குறிப்புக்களில் மிக வல்லவரும், தேசபக்திபாஷாபிமானம் என்ற கற்களாலேயே கட்டப்பட்ட வாழ்க்கையை உடையவரும், இலக்கிய ஆராய்ச்சியில் இணையற்றவரும் சிறந்த கதாசிரியரும், தமிழ் வசன நடைக்கு வழிகாட்டியும், ரஸிகர் தலைவருமான ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் ஸ்தானம் நிர்ணயிப்பதற்குக் காலம் பக்குவமாகவில்லை யென்றே நினைக்கிறேன். 'ஒருதேசாபிமானியை மரணமே அவன் தேசத்துக்கு உதவுகிறது' என்பர். ஒரு புலவரையும் மரணம் தான் உதவுகிறது. இவ்விரண்டு யோக்கியதையும் தன்னிடத்தே உடைய ஒரு பெரியாரை, ஜாதித்வேஷமும் வகுப்புச் சண்டையும் மலிந்து, சிறுதொழிலும் சிறுமுயற்சிகளுமே நிரம்பியுள்ள தமிழ்நாட்டில், இறந்த சொற்ப காலத்துக்கெல்லாம் மதிப்பிடுவதென்றால், சுலபமா? நெறிமுறை தவறி, நடுவுநிலைமை இழந்து நிற்கும் தமிழ் நாட்டிலே, தற்பொழுது இவருடைய ஸ்தானம் நன்கு விளங்காது. ஆயினும் காலம் செல்லச் செல்ல, இவருடைய வாழ்க்கையின் சிறுமையெல்லாம் மறைந்து, ஜாதிச் சண்டையின் கடுப்பும் தொலைந்து, இவர்பெருமையை இவர் நூல்களாலேயே அளக்கவேண்டிவரும் அப்பொழுதுதான் தமிழ்நாட்டுக்கு அது நன்கு விளங்கும். என்றாலும் ஒரு விஷயம் மட்டும் இப்பொழுதே சொல்லி விடலாம். தமிழ் ஜாதி புத்துயிர் பெற்று, ஆச்சரியமான சக்தியுடன் விளங்கத் துவக்கும் இந்நாளில், நிமிஷத்துக்கொரு மகோன்னதமான வர்ணத்துடன் விரிந்துகொண்டு வருகிற இம் மறுமலர்ச்சித் திருவிழாவில், ஐயர் ஓர் பிரதான ஸ்தானம் பெற்றுவிட்டாரென்பதே. தமிழ்ஜாதியின் புதுவாழ்விற்குத் துணைபுரிந்த பெரியோர் சுந்தரம்பிள

ரையும் சுப்பிரமணியபாரதியுமே. இருவருங் காலஞ் சென்றார்கள். அவர்கள் ஸ்தானத்தை ஐயர் ஏற்றுக்கொண்டார். அவர்களுடைய கவிதா சக்தி இவருக்கில்லை. மற்றைப்படி தமிழ்த் தாயின் திருவடிகளுக்குத் தொண்டுசெய்யத் தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தஞ்செய்ததில் இவர் அவர்களுக்குச் சிறிதும் இளைத்தவரில்லை. அவர்களைவிடக் கல்வி கேள்விகளிலும், பரந்துபட்ட அனுபவத்திலும் சிறந்து விளங்கினார். ஸம்ஸ்காரத்திலும், ஆத்மானுபவத்திலும் குறைந்தவராகவே காணப்பட்டார். அவர்களை அருட்கவிகள் என்று போற்றினால், இவரை அருட்புலவர் என்று புகழலாம். தமிழ்த் தாய்க்கு அவர்கள் கவிமண் சாத்தினார்களானால், இவர் உரைமாலை சமர்ப்பித்தார். இவர் கைங்கரியம் சிறிதும் தாழ்ந்ததாகத் தெரியவில்லை. சுப்பிரமணிய பாரதியும் இவரும் புதுவையில் ஒருங்கே வாசஞ் செய்தார்கள். அவன் கவிகளால் சித்திரித்த பிரகிருதிசௌந்தரியத்தை, இவர் வசனத்தால் சித்திரிக்கிறார். கவிகளால் அவன் ஊட்டிய வீரத்தை, இவர் வசன முகத்தா லூட்டுகிறார். அவன் கவிகளால் திருத்திய உலகத்தை, இவர் வசனத்தால் திருத்துகிறார். கவிகளால் அவன் வளர்த்த தேசபக்தியையும் தமிழபிமானத்தையும், இவர் வசனத்தால் வளர்க்கிறார். பேதம் அவ்வளவே ஒழிய வேறில்லை. இருவரும் இரண்டு கலைவலாளர். எந்தக் கலைக்கு ஏற்றம் சொல்லமுடியும்? பாரதியாரும் தமிழ் வசனநடை யெழுதியிருக்கிறார். வீரத் தமிழ்ச் சொல்லின் சாரத்தைப் பிழிந்து தந்திருக்கிறார். நடைச் சிறப்புத் திறமையெல்லாம் மழைபொழிவது போலப் பொழிந்திருக்கிறார். என்றாலும் இருவர் நடைக்கும் மிகுந்த பேதமுண்டு. ஒருவர் கருவிலே யமைந்த கவி. மற்றொருவர் சிறந்த வசனாசிரியர். இந்த பேதமே இருவர் நடையிலும் காணப்படுகிறது. அடிபாரந் தெழுந்து, நாற்றிசையும் புதைத்து மேலே கிளம்பி உயர்ந்தோங்கி மேக மண்டலத்திலே மறைந்த உன்னத சிகரங்களோடும், செடிகளும் கொடிகளும் பின்னி, மரவரிசைகளும் புதர்களுஞ் செறிந்து, இருண்டடர்ந்து ஆழங்காண முடியாத பள்ளத்தாக்குகளும் அமைந்த மலைத் தொடரின் காம்பீர்யத்தைத் தருகிறது ஒன்று; அடித்தலம் காணாத பேராழமுடையதாய் அலைகடலும் நீலவானமும் தவிர வேறு காட்சிகளின்றிக் கங்குகரையற்று எல்லையின்றிப் பரந்து விரிந்து கிடக்கும் பெருங் கடலின் காட்சியளிக்கிறது மற்றொன்று. தனக்கு அனுகூல சந்தர்ப்பம் வாய்ந்த இடத்திலே, பாரதி உயர்ந்து சென்று ஐயரை வெகு தூரத்தில் நிறுத்திவிடுகிறான். ஆனால் மறுபடியும் அவன் களைத்து வீழ்ந்து, ஐயருக்குப் பின்னடைகிறான். லட்சியத்தைத்தான் போய் அடைகிறானோ என்னவோ? நமது ஐயரோ, விடா முயற்சியாலும் பேருழைப்பாலும் தொடர்ந்து செல்லுகிறார்; பலதடவைகளிலும் வென்று விடுகிறார். லட்சியத்தைத் தவறாமல் அடைந்து விடுகிறார். இதுவே உரைநடைப் புலவர் இருவருக்குமுள்ள வேறுபாடு. அன்றியும் இவர் ஆராய்ச்சியுரைகள், தமிழிலே நினைத்துத் தமிழிலே யெழுதப்பட்டன போலத் தோன்றுகின்றன. மொழி பெயர்ப்புக்களெ



ல்லாம் முதனூலாகவே காண்கின்றன. வியாசங்களெல்லாம் தமிழ்ச்சுவை கொழிக்கின்றன. சுருங்கச் சொல்லுமிடத்து, தமிழ் உரைநடையில் தலைசிறந்து விளங்குகிறார். ஆகவே, பாரததேசம் இவரை யிழந்தாலும், உலகம் முழுவதுமே இவரை யிழந்துவிடத் தயாராயிருந்த போதிலும், தமிழ்நாட்டிடம் இவரை யிழக்க முடியாது. தமிழகத்திலே இவர் தம் பெயரைப் பதியவைத்தார், தமிழ் நாட்டிலே வேரூன்றிவிட்டார், தமிழ்ச் சரித்திரத்திலே இடம் பெற்றுக் கொண்டார், தமிழ்ப் புலவர் கோயிலிலே இவருடைய திருவுருவமும் ஓர் புறம் வைக்கப்படும் என்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை.

ஐயர் மரணம்.

இனி ஐயர் முடிவு நம் மனத்தை வசப்படுத்துகிறது. ஜூன்மாத ஆரம்பம். சாரல் பொழிகிறது. மேகம் குறுந் துளி தூற்றிச் சிறு திவலை பயிலுகிறது. பாபநாசத்தில் கண் கொள்ளாக் காட்சி. ஐயரைத் தமது மகளுடன் இயற்கையரசி ஆசை காட்டி அழைத்தாள். சுமார் மூன்று பனை உயரத்திலிருந்து கலியாண தீர்த்த அருவி மிகுந்த வேகத்துடன் விழுந்து தாம்பிரபர்ணி ஆறாகப் பாய்ந்து செல்லுகிறது. அருவியின் உற்பத்தி ஸ்தானம் ஒரு கரும்பாறை. அதன்மேல், அருவியாக இழிகிற கலியாண ஆறு குதித்தோடுகிறது. இவ்விடம், ஆறு ஒடுக்கமாயிருந்தாலும், நீரின் வேகம் அதிகம். கீழே வீழும் பெரிய அருவியே இதற்கு இவ்வளவு வேகத்தைத் தருகிறது. கரும்பாறையும், கன்னங்கரிய நீரும் அடித்தலங் காண முடியாததாய் ஆழம் புலப்படாதிருந்தது. ஐயர் அருமைப் புதல்வி சுபத்திரை, பாறைக்குப் பாறை சந்தோஷமாகத் தாவிச் செல்லுகிறாள். இயற்கைத் தேவியின் சௌந்தரியத்தைக் கண்ணாற் பருகிக்கொண்டும், அருவியின் இன்னிசையைக் காதில் நிறைத்துக்கொண்டும், சுபத்திரை தாவிச் செல்வாள், கால் வழுக்கி ஆற்றில் விழுந்தாள். அப்பா! என்றகுரல் ஐயர்மனத்தைக் கலக்கிற்று. மகளை மீட்டவேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் பாய்ந்தார். தாடியும் முடியும் அழகு செய்யும் ஐயர் முகம் ஒரு முறை மின்னெனத் தோன்றி மறைகிறது. மகளைக் காணவேயில்லை. கலியாண ஆறும் முன்போலவே உருண்டோடுகிறது. அருவியின் பேரிரைச்சலும் முன்போலவே முழங்கிக் கொண்டிருக்கிறது. பிரகிருதி தேவியும் தனது பயங்கரமான சௌந்தர்யத்தோடும் காட்சியளிக்கிறாள். பல நாளாக, இயற்கையின் வடிவழகில் ஈடுபட்டிருந்த ஐயரும் மகளும் இயற்கையில் இரண்டறக் கலந்தார். இரண்டு தினத்தில் சுபத்திரையின் சரீரம் கலியாண ஆற்றிலும், ஐந்து தினத்தில் ஐயர் சரீரம் கீழத் தடாகத்திலும், அகப்பட்டன. ஐயோ! நமது ஐயரின் முடிவுதான் என்னே! வீரவாழ்க்கையை ஒளிசெய்து நிற்கிறது வீர மரணம். முடிவு, வாழ்க்கையை அலங்கரிக்கும் மணிப் பூணாகி விட்டது. ஆதிமுதல் அந்தம் வரை இவர் வாழ்க்கையாலும், உபதேசத்தாலும், எழுதிய நூல்களாலும் அறியக் கிடப்பது ஐயரின் வீரமே. இராமன் ஆணையைச்சிரமேற்கொண்டு, தூதாகச்சென்ற அங்கதன், இராவணனிடத்தில்,

நீரிலே பட்டு நீண்ட
நெருப்பிலே பட்டுச் சுழ்ந்த

பாரிலே பட்டு வானப்
பரப்பிலே பட்ட வெல்லாம்
போரிலே பட்டு வீழப்
பொருத நீ ஒளித்தப் புக்குன்
ஊரிலே பட்ட தென்றால்
பழியென உளையச் சொன்னான்.

“பஞ்ச பூதங்களினு முள்ள பகைவ, அவ்வவை யிருக்குமிடந்தேடித் திரிந்து படையெடுத்துச் சென்று, யுத்த முகத்திலே எதிர்ந்து வென்றவீ, இராமன் கணை உன்மேற் சீறிவரும் வரை அகழாலும் மதிலாலும் காக்கப்பட்டு ஒளித்து நின்று, இலங்கையூரிலே, உன் அரண்மனை வாயிலிலே, இராமன் தந்த போரிலே இறந்து விழுதல் வீரதருமமா? காலமுள்ள வளவும் உன் வீரத்தைப் பழித்து நிற்பதன்றோ?” என்று கேட்கிறான். ஈரவல்சாகி யென்ற ஒரு அக்கினிகுல வீரன் நோயினால் தன் வீட்டின்கண் இறப்பது வீரத்துக்குக் குறைவென் றுணர்ந்து வலுவில் அயல் நாட்டு மன்னனோடு சண்டை செய்திறந்தான். இவற்றுக்கு எள்ளளவும் தாழ்ந்த தல்ல, நமது ஐயர் வீர மரணம். அன்றியும், தியாக மாகிற பீடத்திலே, இவர் வாழ்க்கை பலி யாயிற்று. ஆகையால், தெய்வ மரணமு மாகும்.

சரணெனக் காகொ லென்று
சானகி யழுத சாம்ப
அரணுனக் காவேன் வஞ்சி
யஞ்சலென் றருளி னெய்தி
முரணுடைக் கொடியோன்கொல்ல
மொய்யமர் முடித்துத் தெய்வ
மரணமென் றாதை பெற்ற
தென்வயின் வழக்கன் றுமோ?

என்ற செய்யுளில் கம்பன், “கதி எனக்கார்? என்று சானகி பலது குரல் கேட்டதும், இயற்கையாகப் பெருக்கெடுத்த ஜீவகாருண்யத்தால் ‘உனக்கு நானே அரண் ஆவேன். என்னை அழித்தபின் னன்றோ உனக்கு ஊறு வரும்?’ என்று சொல்லிக்கொண்டு இராவணன்மேற் பாய்ந்து சென்று கடும்போர் தொடங்கி, கேவலம் வலிமையாலன்றி வரபலத்தால் அவன் கொல்ல, சடாயு தெய்வ மரண மடைந்தான்” என்று கூறுகிறான். ஒரு பெண் அழுகுரல் காரணமாக, ‘அரணுவேன்’ என்று பாய்ந்து சென்று, அவளை மீட்டத் தன்னால் கூடியவரை முயன்று, எண்ணம் கைகூடாது தியாகத்திற்கு உயிரை அர்ப்பணம் செய்த இங்கும் தெய்வ மரணமென்று கூறத் தட்டில்லை. ஆகவே, வீரத்துக்கும் தியாகத்துக்கும், பாரத நாட்டிலும் தமிழ் மொழியிலும் பேரன்புபூண்டு இடையறு தியற்றிய திருத்தொண்டுக்கும், ஓயா உழைப்புக்கும், நிலைக்களமாக விளங்குகிறது, நமது ஐயர் வாழ்க்கை. எனினும் அது முற்றுப்பெறு அரைகுறை வாழ்க்கையே. அதனிடையே, நிறைவேறுத எண்ணங்களும், செய்கையில் முடிவுடையாத மனோராஜ்யங்களும் மலிந்து கிடக்கின்றன. இராமாயண ஆராய்ச்சி ஆங்கிலத்திலும் தமிழிலும் முற்றுப் பெறவில்லை. சரித்திர சம்பந்தமான ஒரு கதை பற்றுக் கோடாகக், கற்பனைக் கதைகளெழுத வேண்டுமென்பது இவ ரபிப்பிராயம். “கரிகால் பெருவளவன் காலம், அல்லது அதற்கும் முந்தினயுகம், ராஜேந்திரசோழன் காலம் ஆகிய இந்தப் பெருங் காலங்களில் நிகழ்ந்ததாகப் பல கதைகள் எழுதவேண்டும் என்கிற ஆசை எனக்கு இருக்கிறது” என்று இராஜகோபாலன் கடிதங்களில் காணும் வாக்கியம், இவர் ஆத்ம சரித்திரத்



தின் ஒரு பகுதியே யாகும். கஜினி மகம்மது காலத்தில் நடந்ததாகச் சரித்திரக் கற்பனை ஒன் றெழுத நினைத்து, அதன் கதையை எனக்குச் சொல்ல முன்வந்தார். சித்திரக்கலையின் புதிய யுகத்தை மனத்திற்கொண்டு, ஆசிரமத்திலிருந்து ஒரு புதிய சித்திரத்துறை வகுக்க எண்ணினர். இவையெல்லாம் அரும்பிலே யுதிர்ந்து விட்டன. இவ் வெண்ணங்களையெல்லாம் நிறைவேற்றவும், இவர் கண்ட கனவுகளுக்கெல்லாம் உருவம் கொடுக்கவும், இவர் ஆன்மாவே இன்னும் பலபல பிறப்புக்கள் தமிழ் நாட்டில் எடுக்க வேண்டு மென்பது எனது பிரார்த்தனை.

முடிவுரை.

பாரதநாடு வீரனை இழந்தது. தமிழ்த்தாய் தனிப் புதல்வனை இழந்தாள். கம்பன் சிஷ்யனை இழந்தான். குருகுலம் தலைவனை இழந்தது. பாக்கியலட்சுமி கணவனை இழந்தாள். நாம் நண்பனை இழந்தோம். ஒவ்வொருவரும் இழவு தம் தமக்கென்றுணர்கின்றனர். தமது துயரத்தையே பிரதானமாக்கி, மற்றையோர் துன்பத்தை அலட்சியம் செய்கின்றனர். நாம் நமது துயரத்தைப் பாராட்டுவதோடு, பாக்கியலட்சுமி யம்மாளுக்கும் செல்வக்குமாரனுக்கும், உற்றார்களுக்கும் குருகுல மாணாக்கர்க்கும் ஆசிரியர்க்கும் எமது அனுதாபத்தைத் தெரிவிக்கிறோம். நமது ஐயருக்குத் தமிழ் நாட்டாராகிய நாம் செய்யவேண்டிய கடமையுளது. உருவப்படங்களும் சிலைகளும் வைத்து அனுதாபக் கூட்டங்கள் கூடித் தங்கி ளனுப்புவதோடமையாது, அவர் கண்ட குருகுலத்தை வளர்த்து, ‘பாலபாரதி’யைத் தொடர்ந்து நடத்தவேண்டும். கையெழுத்துப் பிரதியாக இருக்கிற அவர் நூற்களை அச்சிட்டு அவரது ஜீவியசரித்திரத்தை விரிவாக எழுதித் தமிழ்நாட்டுக்கு உதவவேண்டும். அவர் உருவப் படத்தை வைத்து அவர் ஞாபக தினத்தை வருஷந்தோறும் கொண்டாடவேண்டும். அவர் வாழ்க்கையைப் பின்பற்றித் தாய்நாட்டுக்கும் தமிழ் மொழிக்கும் பேரன்பு பூண்டு இடையறு துழைத்து அவர் ஆத்மாவுக்குச் சாந்தியுண்டு பண்ணவேண்டும். இதுவே நமது கடமை, எனது வேண்டுகோள்.

---

## வீர தர்மம்.

முன்பு நின்றிசை நிறீஇ, முடிவு முற்றிய
பின்பு நின்றுறுதியைப் பயக்கும் பேரறம்,
இன்பம் வந்துறும் எனின் இனியதாய், இடைத்
துன்பம் வந்துறும் எனில் துறக்கலாகுமோ?

சிறப்பெரும் படைக்கலம் செறித்தின் சேரும்,
மறப்பயன் விளைக்குறும் வன்மையன்றரோ;
இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறமெனல் சூராவதே.

—கம்பன்.

## அப்பர் அருள்மொழி.

விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினல்
முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே.

As fire is in wood, as ghee is in milk,
As in the pure gem lies latent its ray serene,
So hides the Luminous One within !
Fix the churning-rod of love,
Pass round, the cord of Wisdom and twirl
with all thy heart and soul.
Behold ! The Divine Lord will bless thy sight.

நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை.
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம் மலர்ச் சேவடியிணையே குறுகினோமே.

We owe allegiance to no King,
Death itself we defy and fear not,
Even in Hell we suffer no torments,
Nor do we tremble on any account;
Self-reverence we have and bow not meekly in servitude,
Ever happy, we know no disease, no pain.
For we have come close to the ever-fresh, ever-
blossoming Grace (Feet) of the Divine Master a
His bond-slave——of the Beneficent One, the
King of Kings who hath no over-lord.

## தமிழர் கொள்கை.

யாதும் ஊரே ; யாவரும் கேளிர் !
தீதும் நன்றும் பிறர்தர வாரா ;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன ;
சாதலும் புதுவதன்றே ; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே ; முனிவின்
இன்னா தென்றலும் இலமே ; மின்னெடு
வானந் தண்துளி தலைஇ யானாது
கல்பொருது இரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம். ஆகலின், மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே ;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

—புறநானூறு.

அரும்பத உரை:—கேளிர்—சுற்றத்தார். அவற்றோரன்ன — அவற்றை யொப்பத் தாமே வருவன. மகிழ்ந்தன்றும் இலமே—உவந்தது மில்லை. முனிவின்—வெறுப்புவந்த இடத்து. வானம்—மழை. தண் — குளிர்ந்த. தலைஇ யானாது—பெய்தலால் அமையாது. பொருது—அலைத்து. இரங்கு—ஒலிக்கும். மல்லல் — வளவிய. வழிப்படூஉம்—வழியேபோம். புணை—மிதவை. முறைவழிப்படூஉம் — ஊழின் வழியே படும். திறவோர்—கூறுபாடு அறிவோர்.

குறிப்பு:—இது ஓர் பண்டைத்தமிழ்க் கவியான கணியன் பூங்குன்றன் பாட்டு. நம் தமிழ்ப் பெருமக்களது உயர்ந்த லட்சியங்களான அரும் பொருள்கள் அமைந்தது. உலக வாழ்க்கை' புயுலிடைப்பட்ட மரக்கலம் போன்றதென்று மகாத்மா காந்தியடிகள் தமது "யௌவன இந்தியா" வில் எழுதியுள்ளார். இக் கருத்தினையே நமது தமிழ்க்கவி "மின்னெடு ......முறை வழிப்படூஉம்" என்று கூறுகின்றார்.

கிராம வாழ்வினையே தாயகமாகக் கொண்டு படர்ந்த தமிழ்நாகரிகம் கடலோடிப் பிறநாகரிகங்களோடும் கலந்து தோழமை பூண்டு வளர்ந்தோங்கியது. அகன்ற இதயமும் பேரறிவும் வாய்ந்த ஒரு கிறிஸ்தவ மதாசாரியன் "The Whole world is my parish!" என்று கூறியது போல, கிராமத்திலே வாழ்ந்த நமது கவியும் 'உலகமெல்லாம் எமக்கு ஊரே' என்று கூறுகிறார். வங்கநாட்டுக் கவியரசாகிய ரவீந்திரநாத தாகூர், 'நோபல்' பரிசு பெற்றதற்காக வந்தனஞ்

...யிலே "இது தூரத்தைச் சமீபமாக்கி விட்டது; அன்னியனைச் சகோதரனாக்கி விட்டது" என்று கூறி மகிழ்ந்தார். எத்தனை நூற்றாண்டுகளுக்கு முன் இவ்வுண்மையினைத் தமிழ்ப் பெருமக்கள் உணர்ந்திருந்தனர்! அந் நாளில் இருப்புப் பாதை, நீராவிக் கப்பல், ஆகாய விமானம் ஆதிய வசதிகளால், உலகம் இன்றுபோல் குன்றிக் குறுகிவிடவில்லை; தூரம் அழிந்தொழியவில்லை. அறிவு நூல்களாலும் கருவிகளாலும் மனிதனது அறிவாற்றல் இன்றுபோல் பொங்கிப்பரந்து வெள்ளமிடவில்லை. எனினும் "மக்கள் அனைவரும் சகோதரர்; ஒரு குலத்தினர்" என்னும் பேருணர்ச்சி தமிழ் நாகரிகத்தின் உயிர்நிலையாய்—ஜீவசக்தியாய் விளங்கிற்று. 'அனைத்துயிர் ஒன்று' என்னும் ஜீவ வாக்கு, மேற்புல ஆராய்ச்சி முறைகளைக் கையாண்ட நமது ஜகதீச சந்திரவசு வாயிலாக எழுந்து இப்போதுதான் விஞ்ஞான சாஸ்திர உலகமெங்கும் பரந்து ஒலி செய்கின்றது. நவ நாகரிகத்தின் பட்டப்பகலான இவ் இருபதாம் நூற்றாண்டிலும் மனித-குலத்தின் ஆன்மநேய ஒருமைப்பாடு நன்கு வெளிப்படவில்லை. 'நாகரிக மக்கள் நாங்களே!' யென்றுமார்தட்டிச் செருக்கொடு திரியும் வெள்ளைமனிதர் நிறப்போரினும் பலவேறு பூசல்களினும் சிந்தை செலுத்துகின்றனர். மேலை நாட்டு நாகரிகம் இன்னும் நன்குணர்ந்து கொள்ளாத 'சகோதரத் தன்மை'யைத் தமிழ் நாகரிகம் உணர்ந்து ஒழுக முயன்றதென்றால், பண்டைத் தமிழர் அறிவு நலத்தை என்னென் றியம்புவது?

'சாதலும் புதிதன்று' என்னும் கொள்கை நமனுக்கும் அஞ்சாத தமிழர் மிடுக்கையும் வீரத்தையும் விளக்குகிறதன்றோ? தமிழர், தம்வாழ்க்கையை இனிதென மகிழ்ந்தாருமில்லை; இனிதல்லவென்று வெறுத்தாருமில்லை. வீரத் தமிழர் தம்வாழ்வை எவ்வாறு மதித்தனர்? பெரும்புயல், பெருமழை, கற்பாறைகளையும் அலைத்தொலிக்கும் காட்டாறு. இப்பெருவெள்ளத்திற்கு மேலே மிதந்து போகிறது, ஒரு மிதவை—ஒருதோணி—ஒரு மரக்கலம். இம்மரக்கலமே மனிதவாழ்க்கை. இது நம் செந்தமிழ் நாட்டிலே பேரறிவாளர் கண்ட காட்சி. அலைபட்ட பெரு வெள்ளத்திலும் தொலை யெட்டிக் கரை பிடிக்கும் மாலுமித்திறம் அந் நாளில் நம் மூதாதையர்க்கிருந்தது. இம்மாலுமித் திறமே, வாழ்க்கையில் உலைவின்றித் தாழாது செயற்கரிய செய்யும் பெரு முயற்சியாகும். இங்ஙனம் வீரவாழ்க்கை வாழ்ந்தோர் ஒருவரையும் மதித்தாரில்லை. மாட்சியால் மிக்க பெரியோரை வியந்தாரில்லை. அவ்வியப்பினும், 'சிறியோரை இகழ்தல்' அவர்பால் இல்லை. ஆங்கிலக் கவிச்சக்கரவர்த்தியான ஷேக்ஸ்பியருக்கு 'தெய்வத்தன்மை வாய்ந்த இவ்வுலகில், ஒன்றும் வியக்கத்தக்க பெருமை வாய்ந்ததாகத் தோற்றவில்லை; அற்பமானதாகவும் ஒன்று மில்லை' என்று ஓர் நவீன ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் கூறுகின்றார். இக்கருத்தோடு "மாட்சியிற் பெரியோரை வியத்தலும் இலமே; சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" என்னும் அடிகளை ஒப்பிட்டு ஆராய்க.

பி. ஸ்ரீ.

# பத்திரிகை ஆராய்ச்சி.

திருப்பாபுலியூரில் ஞானியார் மடாலய விழாவில் வளர்ச்சிநெறி மந்திரியார் திரு சிவஞானம் பிள்ளையவர்கள், தலைமை வகித்துச் செய்த பேருரையினிடையே, தாய்மொழி வளர்ச்சிக்குரிய சில குறிப்புக்கள் தருகிறார்கள். அவை வருமாறு:—

மேல்நாட்டு அறிவாளிகள் மாணவர்களுக்கும் பிறர்க்கும் இலக்கியத்தில் ஊக்கம் ஏற்படும் வண்ணம், ஆசிரியர்களின் ஜீவிய சரித்திரங்களையும் மேற்கோள்களுடன் நூல் நயச் சிறப்பையும் எடுத்துக் காட்டும் ஆராய்ச்சி நூல்கள் தொகுத்திருக்கிறார்கள். அவ்விதமே தமிழறிவாளிகளும் தமிழிலக்கியத்துக்குப் பாடுபடல் அவசியமாகும். ஆனால் ஆசிரியர்களின் சரித்திரங்களைத் தொகுக்க உதவியாயிருக்கும் சாதனங்கள் தமிழ் நாட்டில் அரிதாயிருப்பதும் உண்மையே. .........சரித்திர ஆசிரியர்கள் தென்னாட்டில் இருந்ததாகவும் தெரியவில்லை. தம்மை யறியாமலே தாம் இயற்றிய நூல்களில் ஆங்காங்கு சொருகியுள்ள தம்வாழ்க்கை அனுபவக் குறிப்புகளைத் தவிர, தம் ஜீவிய சரித்திரத்தைத் தம் பின்தோன்றல்களுக்கும் பயன்படுமாறு ஆசிரியர்கள் எழுதி வைத்ததாயுமில்லை. ஆகவே நூலாசிரியர்களின் வாழ்க்கை வரலாறுகளை ஆராயப்புகுமிடத்து அவர்கள் நூலில் அமைந்துகிடக்கும் அனுபவக் குறிப்புக்களை வைத்தே சரித்திரம் எழுதவேண்டியேற்படுகிறது. ... ... ... ... ஆசிரியர்கள் தம் மனோபாவ இயக்கத்தையும் அறிவையும் அனுபவத்தையும் வைத்து வாழ்க்கையைப் பிறருக்குப் புலப்படுத்தினர்கள். ... ... ... அபிமானமும் துவேஷமும் நீங்கப் பெற்றவராய் ஆசிரியரைப் பிறர்க்கு விளங்கவைத்தலே தம் முக்கிய கடமை யென்றும், தம் அறிவின் விசாலத்தை வெளியிட விரும்பி ஆசிரியர் கருதாத பல பொருள்களையும் தாம் காண்பதாகப் பறையறைதல் தகாதென்றும் (ஆராய்ச்சியாளர்) அறியக்கடவர். திறக. வாழ்க்கையின் வழியே இலக்கியம் பிறப்பதாதலின் வாழ்க்கை நிகழுந்தோறும் இலக்கியமும் பெருகிவரும். வாழ்க்கையில் கால இயல்புக்கு ஏற்றவாறு ஏற்படும் மாறுதல்களை யனுசரித்து அவ்வக் காலங்களில் தோன்றும் காவியங்களின் இயல்பும் மாறியேவரும். தேசச் சீரும் செல்வமும் சிறப்பும் ஓங்கும் காலத்தும், குடிகள் குறைவின்றி மகிழ்வுற்று வாழும் காலத்தும், வெற்றிப் பிரதாபங்களில் குடிகள் குதூகலிக்கும் காலத்தும் மதத்திற்கோ, சமுதாயத்திற்கோ, பாஷைக்கோ கேடுவரும் காலத்தும், இலக்கியம் பெருகுவதும், மற்றக் காலங்களில் குறுகுவதும் இலக்கியப் போக்கை ஆய்ந்தவர் அறிவார். The Augustan Age in Tamil Literature என்று கருதப்படும் கடைச்சங்க காலத்தும், மூவேந்தர் செவ்வனே அரசு நடத்தியகாலத்தும், சைவத்துக்குத் தடையாகப் பௌத்தமதம் பரவிவரும்போது சைவத்தைக் காக்கவென்று திரு அவதாரம் எடுத்த சைவ குரவர்கள் காலத்தும் இலக்கிய நூல்களும் சமய நூல்களும் பெருகின. பின்னர், நாடு வேற்றரசர் வசமாகி, குடியரசு கெட்டு, நலமிழந்து நலிந்து மெலிந்த சாண்கும்பியின் பொருட்டு, குடிகள் மிடிபட்ட வாழ்க்கை வாழ்ந்த பிற்காலத்தில் இலக்கியம் க்ஷீணித்து வந்திருப்பதையும் அறிவோம். தற்காலத்தில் பரவிவரும் வசன நூல்களில் சிலவே சமுதாய வழக்கங்களையும் அனுபவங்களையும் தழுவியிருக்கின்றன ...... ...... நம் தேச சரித்திரத்தில் கட்டுக்கதைகளைவிட அதிக ஆனந்தம் அளிக்கும் அரசியல் அனுபவங்கள் அபரிமிதமாயிருக்கின்றன. எனினும் சரித்திரப் போக்கை யனுசரித்து எழுதிய கதைகள் சிலவே யாகும். சரித்திர விஷயங்களைக் கொண்ட வசன நூல்கள் வெளிவரின் நேரப்போக்காய்ப் படிக்கும் சிறுவர் சிறுமியருக்குத் தேசாபிமானமும் சரித்திர ஞானமும் ஏற்படும். நான் மேற்கூறிய விதத்தில் காலங்கண்ட காவியங்களின் ஆராய்ச்சி நூல்களும் சரித்திர சம்பந்தமான வசன நூல்களும் இயற்றப்பட்டு வருமானால், நாளடைவில் பண்டிதரும் பாமரரும் நலம் பெறுவார்கள்.

## சதங்கை யொலி.

### கவி நயம்

குளித்தலை கம்பர் செந்தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு நிறைவு விழாவிற்குத் தலைவராக வீற்றிருந்த வழக்கறிஞரும் தமிழறிஞருமான திருவாளர் சோமசுந்தர பாரதியார் எம். ஏ. பி. எல். தமது முன்னுரையில் கவிநயத்தைக் குறித்துப் பேசுகையில் பொருள் பொதிந்த சில அரிய உண்மைகளை வெளியிட்டார்:— "கம்பருக்கு முன்பாக நக்கீரர், இளங்கோவடிகள், சாத்தனார், திருத்தக்க தேவர் முதலாகவுள்ள நல்லிசைப் புலவர்கள் நறுஞ்சுவைக்கவிகளை இயற்றி யிருக்கின்றனர். இயற்றியிருப்பினும் என்? அவைகளெல்லாம் கம்பன் காவியத்திற்கு ஈடாகா. கம்பன், காலத்தில் பிற்பட்டவனாயினும் கவிச் சக்கரவர்த்தி என்ற வகையில் முதன்மை யுற்றிருக்கின்றான். ஒருவன் ஒரு நாட்டில் பிறர் ஒருவரும் காவியம் இயற்றாத காலத்தில் காவியம் இயற்றுவது எளிது. சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி போன்ற உயரிய நூல்கள் தோன்றிய பின்னர், கம்பன் காவியகர்த்தா என்ற பெயரைப் பெற்றதுதான் அரிதினும் அரிது. மற்றப் புலவர்களை மறந்தாலும் மறப்பர்; கம்பனைக் கருதாதார் ஒருவருமில்லை. பிரம சிருஷ்டியைப் போன்று [illegible]மான நயங்களோடு கவிகளை இயற்றும் திறன் படைத்தவன் கம்பன். பாக்களில் ஆகர்ஷண உணர்ச்சி வளரும் தன்மையைக் காணலாம். படிப்பவர் மனத்தை ஈர்த்துச் செல்லும் தன்மை எல்லாக் கவிகளுக்கும் அமைவது எளிதல்ல. கம்பனுக்கு அச் சக்தி மிக எளிது."

### கம்பனது நாடகத்திறமை.

"கம்பன்கவி அடிகள் தோறும் தித்திக்கும். பாக்கள் தோறும் மணக்கும். படலங்கள் தோறும் இன்சுவை ததும்பும். மணிமேகலை, சிலப்பதிகாரம், கந்தபுராணம் முதலியன பெரிய காவியங்கள் என்ற பெயர்களைப் பெறினும் முற்றும் சுவை ததும்பிக் கிடக்கின்றன வென்று கூற முடியாது. இந்திரசித்தின் மரணத்தைக் குறித்து இராவணன் வருந்தும் இடத்தில் கம்பர் கூறுவதை, சூரபத்மன் மகன் மரணத்தைக் குறித்துச் சூரபத்மன் வருந்துவதைப் பற்றிக் கச்சியப்பர் கூறும் பகுதியோடு ஒப்பிட்டுப் பாருங்கள். இராவணன் சூரபத்மன் ஆகிய இருவரும் பெரும் மன்னர்கள். இராவணன் ஒரு வீர மன்னன் வருந்துவதைப்போல் வருந்துகிறான். சூரபத்மனோ சாதாரண மனிதன் வருந்துவதைப்போல வருந்துகிறான். கம்பன் தனது நூலில் பல பாத்திரங்களைக் கொண்டு பேசவைக்கிறான். ஒன்றோடு ஒன்று ஒவ்வா நிலையிலேயே அப்பாத்திரங்களை அமைத்திருக்கிறான். பாத்திரங்களின் குண மகிமைகளைப்பற்றி அவன் எங்கும் கூறுவதில்லை. அவர்கள் பேச்சைக்கொண்டே, நடையைக் கொண்டே அவர்கள் குணமகிமைகளை வெளிப்படுத்துவான். கம்பன் சிருஷ்டியில் ஒரு வீரன் மற்றொரு வீரனைப்போன்று இருக்க மாட்டான். ஒருவன் மற்றொருவனைப் போல் போர் புரியான். ஒரு நாள் நடந்த போருக்கும் மற்றநாள் நடந்த போருக்கும் ஒற்றுமையிருக்காது. கம்பர் நூல் யாவர் கருத்துக்கும் இசைந்தது. ஆடவரும் மகளிரும் முதியோரும் இளைஞரும் விலக்கின்றி ஓதி இன்புறலாம். கம்பனை ஒரு ஒப்பற்ற நாடகக்கவியென்று கூறலாம். அவனுக்குள்ள நாடக நுண்ணுணர்வு பிற புலவர்கட்குப் பெரிதும் இல்லை யென்று கூறலாம். கம்பன் தனது காவியத்தில் தமிழ்நாட்டின் பழக்க வழக்கங்களுக்கு ஏற்றவாறு முதல்நூலினின்றும் திரித்துக் கூறுவன். திரித்துள்ள இடங்களைப் பார்த்தால் அவை சாலப் பொருத்தமுடையன வென்று புலப்படும். சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு செய்யுள் ஓசையையும் மாற்றுவன்."

---

சிவமயம்.

# குமரன்

" தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார் " —பாரதி.

சதங்கை ௪. | காரைக்குடி, குரோதன ஹு ஆவணி௴ | மணி ௫

### கலைமகள் வணக்கம்.

வெள்ளைக் கமலத்திலே அவள்
வீற்றிருப்பாள் புகழேற்றிருப்பாள்,
கொள்ளைக் கனியிசைதான் நன்கு
கொட்டுநல் யாழினைக் கொண்டிருப்பாள்,
கள்ளைக் கடலமுதை நிகர்
கண்டதொர் பூந்தமிழ்க் கவிசொலவே
பிள்ளைப் பருவத்திலே எனைப்
பேணவந்தாள் அருள் பூணவந்தாள்.

வேதத் திருவிழியாள் அதில்
மிக்கபல் லுரையெனும் கருமையிட்டாள்,
சீதக் கதிர்மதியே நுதல்
சிந்தனையே குழ லென்றுடையாள்,
வாதத் தருக்கமெனும் செவி
வாய்ந்தநற் றுணிவெனும் தோடணிந்தாள்,
போதமென் றாசியினுள் நலம்
பொங்குபல் சாத்திர வாயுடையாள்.

கற்பனைத் தேனிதழாள் சுவைக்
காவியம் எனும்மணிக் கொங்கையினாள்,
சிற்ப முதற்கலைகள் பல
தேமலர்க் கரமெனத் திகழ்ந்திருப்பாள்,
சொற்படு நயம் அறிவார் இசை
தோய்ந்திடத் தொகுப்பதின் சுவையறிவார்
விற்பனத் தமிழ்ப் புலவோர் அந்த
மேலவர் நாவெனும் மலர்ப்பதத்தாள்,
வரணியைச் சரண்புகுந்தேன்
அருள்வாக்களிப்பாளெனத் திடமிகுந்தேன். —பாரதி.

# தமிழ்மாதர் நிறை.

ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ. பி. எல்.

தமிழ் மக்களது செம்மை சான்ற தொன்மை நாகரிகம் தமிழ் நாட்டு மாதரின் வாழ்க்கையில் சிறந்துவிளங் கக்காணலாம். ஒருநாட்டின் நாகரிகம் பலவகையால் ஆராய்ந்து அறியப்படு மாயினும், அவற்றுள் அந்நாட்டில் வாழும் மாதரது மனநிலையும் பழக்க வழக்கங்களுமே தலைசிறந்த சான் றாக அமையுமென்பது அறிஞர் கொள்கையாகும்.

மாதர்க்கு நிறையுடைமையே சிற ந்த அணிகலன் என்பது ஆன்றோர் கருத்தாகும். நிறையுடைய மாதர் எல்லாமுடையரென்றும், நிறையிழ ந்த மாதர் மற்று என்னுடையரே னும் இலர் என்றும், அறநெறி கூறுகின்றது. கற்புமைந்த மாதர் மனம் மாசற்றதாய் தூயதாய் விளங் கும் என்னும் உண்மையைக் கல்வி யிற் பெரியராய கம்பர்,

தங்கள் நாயகரில், தெய்வம்,
தவம் பிறிதிலவென் றெண்ணும்
மங்கைமார் சிந்தைபோலத் தூயது

என்னும் இனிய மொழிகளால்போ ற்றிப் புகழ்ந்தார். மாதர்நிறை மணப் பருவத்தே தோன்றுவதாகும். தமிழ் நாட்டுப் பழைய மணமுறைப்படி ஓர் பெண் தன் தலைவனை எதிர்ப்பட்டு, கண் களால் காதலை ஏற்று உள்ளங் கலந்த நிலையில் மனநிறை மாண்புறத் தோ ன்று மென்று பழந்தமிழ் நூல்கள் பாராட்டிக் கூறுகின்றன. தென்னாட்டு மணமுறை எழுதப்போந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்;

கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்
[வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல,

என்று அருளிப் போந்தார். இக் கருத்தையே, சீதையின் காதல் கூறப் போந்த கம்பர்பெருமான்,

எண்ணரும் நலத்தினள் இனைய
[நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை
[ஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றி
அண்ணலும் நோக்கினான் அவளும் [ட
[நோக்கினாள்

என்று அழகாக அமைத்துப் போ ந்தார். இவ்வாறன்றி, பெற்றோரால் உறுதி பேசப்பெற்று மணவினை நிக ழ்தலும் பிற்காலத்தில் தமிழகத்தில் வழக்கமாயிற்று. மணம் பேசி முடி ந்த பொழுதே மங்கையின் மனநிறை தோன்றிற்று என்பது தமிழ் நூல்க ளால் அறியப்படுகின்றது. தான் கண்ணினால் காணாத தன் பெற்றோர் தனக்காக உறுதி செய்த தலைவன், போர்க்களத்தில் பூத உடம்பை நீத்துப் புகழுடம்பெய்தினான் என்று கேள்வியுற்ற திலகவதியார்,

எந்தையும் எம்மனையும் அவர்க்கு எனைக்
[கொடுக்க இசைந்தார்கள்;
அந்த முறையால் அவர்க்கே யுரியது நான்
[ஆதலினால்
இந்த உயிர் அவர் உயிரோடு இசைவிப்பன்
[எனத்துணிந்தார்

என்று குன்றைமுனி கூறுகின்ற மையால் அவ்வம்மையாரது அருங் கற்பு ஓர் ஆடவனைத் தன் கண்களால் காணாது மனத்தினால் கருதிய நிலையி லேயே தோன்றிற்றென்பது இனிது அறியப்படும். இவ்வாறு நேரில் கண் டேனும் இருமுதுகுரவரது கருத்து க்கு இசைந்தேனும் தான் காதலனைக் கருதிய ஒருவனை யன்றி மற்றையோ ரை மனத்தினும் தீண்டா மாண்புடைய நெறியே மங்கையின் அறநெறி என்று ஆன்றோரால் போற்றப்படுவ தாகும். மிதிலைமாநகரில் இராமனது ஒவியத்தில் எழுத ஒணா உருவத் தைக் கண்டு காதலித்த சீதை யென் னும் திருமகள் அவ்வண்ணலது எழிலுருவத்தையே தன் உள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்து, அப் பெருமான் தன் காதலனாக அமை வானோ என்று ஏங்கி யிருந்தாள். அப்போது அவள் தோழியாய நீல மாலை யென்பாள் அவள் முன்னே தோன்றி அளவிறந்த உவகையால் ஆடிப் பாடினாள். அப்பால் தன் தலை வியை நோக்கி 'தசரத மன்னனது திருமகனாய் உருவின் மிக்க தோர் உடம்பினைப் பெற்ற ஓர் வீரன் முனி வனோடும் இளவலோடும் இந்நகரை யி மணவில்லை ஒடித்தான்' என்று மொழிந்தாள். அந்நிலையில் சீதையின் மனம் ஐயுற்றால் ஊசலாடத் தொட ங்கிற்று, வில்லை இறுத்தவீரன் தான் கண்டு காதலித்த அண்ணலோ, அன் றோ என்று ஐயுற்று நின்ற அவ்வ ணங்கு நீலமாலை சொல்லிய குறிகளை மீளவும் நினைந்து ஒருவாறு தெளிந்து,

சொல்லிய குறியின் அத்தோன்றலே, [அவன்
அல்லனேல் இறப்பன் என்று அகத்துள்
[உன்னினாள்

என்று கம்பர் கூறும் மொழிகளில் கற்பின் நலம் இலங்கக் காணலாம்.

இவ்வாறு மணவினை நிகழ்ந்த பின் னர் காதலர் இருவரும், மலரும் மண மும் போலவும், மணியும் ஒளியும் போலவும் ஒன்றாகி இல்லற மென் னும் நல்லறத்தை இனிது நடத்து வார்கள். கணவன் களிக்குங்கால் களித்தும், வருந்துங்கால் வருந்தி யும் இருவரும் ஒருவராய் வாழ்வதே இல் வாழ்க்கை யாகும். கற்புடைய மாதர்க்குத் தம் கணவரைப் பிரிந் திருத்தலினும் பெருந்துயரம் வேறி ல்லை யென்பது நிறை யமைந்த மாதர் வாழ்க்கையில் நன்கு விளங்கும். தா யின் ஆணை தலைமேற் கொண்டு நாடு துறந்து காடு நோக்கிய கமலக் கண் ணன், சீதையின் மாளிகையிற் செ ன்று மனங் கலங்கிய அம்மாதினை நோக்கி, "இணையற்ற என் தம்பி இந் நாட்டை யாள்வான். நான், தாய் தந் தையர் கருத்திற்கு இசைந்து இன் றுபோய் மலைவளம் கண்டுவருவேன். அதுவரையும் நீ வருந்தாதிரு" என்று கூறினான். அதுகேட்ட சீதை, தன் காதலன் கானகம் செல்லக் கரு தினான் என்றேனும் நாடாளும்நற்பத த்தை இழந்தான் என்றேனும் வருந் தினாளல்லள். ஆயினும் 'நான் போகி ன்றேன், நீ வருந்தாதே' என்றுகாத லன் கூறிய கடுஞ்சொல் அவள் உள் ளத்தில் சுடுசரம்போல் சுட்டது.

நாயகன் வனம் நண்ணலுற்றான்
[என்றும்
மேய மண் இழந்தான் என்றும் விம்மலள்;
நீ வருந்தலை நீங்குவன் யானென்ற
தீயவெஞ் சொல் செவி சுட
[தேம்புவாள்,

இவ்வாறு உள்ளம் நொந்து உயிர் உமிழாநின்ற சீதையிடம், வீரன் கான கத்தின் வெம்மையை எடுத்துரை த்து, அவளது கமல பாதம் காய்ந்து எரியும் கற்களின் வெம்மைக்கு ஆற் றாது வருந்தும் என்று சொல்லிய

பொழுது, அத்திருமகள் 'ஐய, நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடெ'ன்றாள். இம்மொழிகளில் கற்பின் கனிந்த நலம் இலங்கக் காணலாம். இதனாலன்றோ கண்ணகியின் கடிமணத்தைக் கண்டு களித்த மாதர்கள், அம்மங்கை தன் காதலனைப் பிரியாத பெருவாழ்வு பெறுக என்று ஆசி கூறியதாகச் சிலப்பதிகாரம் எடுத்துரைக்கின்றது.

தம் காதலர் துயருறும்போது, தாமும் துயர் உற்றுத் தலைவர் பொருட்டு வருந்தும் தன்மை கற்புடைய மாதர்வாழ்க்கையில் விளங்குகின்றது. கானகத்தில் தன் காதலனுடன் அலைந்து துன்ப முழந்த கண்ணகி, தன் துயரை மறந்து தலைவனது துயரத்திற்கு ஆற்றாது சோர்ந்தாள் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

அவ் கதிர் வெம்மையில் காதலன் [தனக்கு
நடுக்கு துயர் எய்தி நாப்புலர வாடித்
தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி

என்று இளங்கோவடிகள் போற்றும் மாண்மையால் நிறை யமைந்த மாதரின் உயரிய மனநலம் இனிதுணரப்படும்.

அக்காலத்தில் மாதர்நிறை எவ்வாறு போற்றிப் பாதுகாக்கப் பெற்றதென்பது மணிமேகலையில் நன்கு விளங்குகின்றது. காவிரி யாற்றில் நீராடி வந்த மருதி என்னும் பெண்மணியை அந்நாட்டு அரச குமரன் காதலித்து அவள் கண் எதிரே நின்று அழைத்தான். அச்சிறுவனது கண்களில் காதல் குறி இலங்கக் கண்ட அக்கற்புடைய மாது, அருகேயிருந்த பூத சதுக்கத்திற் புகுந்து அங்கு நின்ற தெய்வத்தை நோக்கி "ஐயோ! தெய்வமே, கற்புடைப் பெண்டிர் பிறர் மனம் புகாரே; அவ்வாறாயின் இவ்வரசிளங் குமரனது உள்ளத்தில் நான் செல்லுதற்கு என்ன தவறு செய்தேன்? என் தலைவனுக்கு யாதொரு தவறும் நினைத்தறியேனே" என்று அழுது முறையிட்டாள். அப்போது அத்தெய்வம் மன மிரங்கி; "மாதே! உனது கற்பில் யாதொரு களங்கமு மில்லை; ஆயினும் நீ பொய்க்கதையும் விடுகதையும் விரும்பிக் கேட்டாய்; கண்டோர் கண்களைக் கவரத்தக்க ஆடை அணிகளை அணிந்து திருவிழாக் காணச் சென்றாய். ஆதலால் அரசிளங்குமரனது உள்ளத்தில் நீ சென்றுசேர்ந்தாய்" என்று மொழிந்தது.

இவ்வரலாற்றில் அமைந்து விளங்கும் அரிய மனப்பான்மை தமிழ்மக்களது விழுமிய வாழ்க்கைக்குத் தலைசிறந்த சான்றாகும். ஒரு மாது, தன்னை மணந்த தலைவனை யன்றி மற்றையோரை மனத்திலும் தீண்டலாகாதென்று அறநூல்கள் எல்லாம் அறிவுறுத்துகின்றன. ஆனால் ஒரு மாது பிறர்மனம் புகாவண்ணம் மனநிறையால் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமென்னும் நுண்ணிய கருத்து ஆராய்தற் குரியதாகும். தனது நடையாலும் உடையாலும் பிறர் எவ்வகையினும் தன்னைக் கருதி, காதல் கொள்ளா நிலையில் ஒரு மாது அமைந்து வாழவேண்டு மென்பதே இதன் கருத்தாகும். பழைய கால முதல் இக்காலம் வரையும் பொதுமாதரினின்றும் குலமாதரை வேறுபடுத்துவது, நடையும் உடையுமேயாகும். குலமாதர், தமது நிலைக்கு அடாத ஆடை புனைவதாலும் நடை பழகுவதாலும், அவ்வேற்றுமை சிறிது சிறிதாக



நீங்குதலால் குலமாதரும் கழிந்த காமுகர் உள்ளத்தில் இடம் பெறுவர் என்பதில் யாதும் ஐயமில்லை. இவ்வுண்மையை இனிது விளக்குவதற்காகவே மணிமேகலை, இவ்வரலாற்றைக் கூறுகின்றது.

இத்தகைய மாதர்கற்பினை தலையாய கற்பென்றும், இடையாய கற்பென்றும், கடையாய கற்பென்றும் பழந்தமிழ் நூல்கள் பகுத்துரைக்கின்றன. தம் காதலர் இறந்த கடுந்துயரம் பொறாது அந்நிலையில் உயிர் துறக்கும் அரிய மங்கையர் தலையாய கற்பினர் ஆவர். அவ்வாறன்றி தலைவர் இறந்த துயரம் உள்ளத்தை வாட்டி வருத்த அவர் பின் உயிர் வாழ மனமற்றவராய் மறுமையில் அவருடன் பிரியாது வாழ எண்ணி மனமகிழ்ச்சியோடு எரியில் இறங்கி இறக்கும் பெண்மணிகள் இடையாய கற்பினராவர். இதுவு மன்றி தலைவர் இறந்தபின் கைம்மை நோன்புகளை மேற்கொண்டு துறை முழுகித் தெய்வம் தொழும் மங்கையர் கடையாய கற்பினராவார்.

தலையாய கற்பிற்குப் பாண்டியநாட்டை அரசாண்ட நெடுஞ்செழியனது மனைவியாகிய கோப்பெருந்தேவியார், ஒப்பற்ற சான்றாக விளங்குகின்றார். தன்கணவன், கண்ணகிக்குத் தவறிழைத்து நீதி தவறிய நிலையில் அரியாசனத்தினின்றும் மயங்கி விழுந்ததை அம் மங்கை கண்டாள். அருகே நின்ற கண்ணகியின் அடிகளில் தன் முடியுற வீழ்ந்து வணங்கினாள். அப்பால் தன் தலைவனது உடலைத் தலைமுதல் அடிவரை தன் மலர்க்கையால் மெல்ல வருடினாள். ஆவி அகன்றதென்று அறிந்தாள். தன் ஆருயிர்த் துணைவன் பிரிந்த துயருக்கு ஆற்றாது 'என் தலைவன் சென்ற நெறியில் நானும் செல்வேன்' என்று தன்னுயிர் கொண்டு தலைவனுயிரைத் தேடுபவள் போல, தேவியும் ஒருங்கே உயிர் துறந்தனள். இதனை

மயங்கினன் கொல்லென மலரடி வருடி
தலைத்தாள் நெடுமொழி தன் செவி [கேளாள்
கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாள்
மன்னவன் செல்வுழிச்செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடினள் [போல்
கோப்பெருந்தேவியும் ஒருங்குடன் [மாய்ந்தனள்.

என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இதனை ஆறிய கற்பென்று சிலப்பதிகாரத்திற்கு உரை வரைந்த அடியார்க்கு நல்லார் கூறுகின்றார். இதுவே தலையாய கற்பின் தன்மை யென்பது தசரதன் வாயிலாகக் கம்பர் கூறும் மொழிகளாலும் இனிதுணரப்படும். இராமன் பிரிந்தால் தன் உயிரும் பிரியுமென்றுணர்ந்த தசரதன், தீவினையாக நின்ற கேகையர்கோன் மகளை நோக்கி,

ஒன்று நின்ற ஆருயிரோடு முயிர் [கேள்வர்
பொன்று முன்னம் பொன்றின சென் [னும் புகழல்லால்
இன்றோர் காறும் எல்லையோர் தம்இறை [யோரைக்
கொன்றாரில்லை, கொல்லுதியோ நீகொடி [யானே!

என்று வருந்துகின்றமையால் தலையாய கற்புடைய மாதர் தன்மை இனிதுணரப்படும்.

இனி இடையாய கற்பிற்கு மணிமேகலையில் விளங்கும் ஆதிரை என்னும் நல்லாள் அருமையான சான்றாக அமைகின்றாள். தன் தலைவனான சாதுவன் கடலில் முழுகி இறந்தான்

என்று கேள்வியுற்ற இந்நல்லாள், பொறுக்கலாற்றாத பெருந் துயரடைந்து நல்லாடை அணிகளை அணிந்து, நறுஞ் சாந்தம் பூசி, வண்டறையும் மலர்வாவியுள் இறங்குபவள் போல எரி நெருப்பினுள்ளே இறங்கினாள். அவ்வாறிறங்கிய ஆதிரையின் மேனியைத் தீயும் தீண்டுதற்கஞ்சி அவளைச் சூழ்ந்து நின்றது. அக்கினியில் செந்தாமரையி னடுவே விலங்கும் திருமகள் போல ஆதிரை இலங்கினாள். அதுகண்ட அந்நல்லாள் 'தீயுங்கொல்லாத் தீவினையளாகிய யான் இனியென் செய்வேன்' என்று ஏங்கி அழுதாள். அப்போது 'உன் கணவன் இறந்தான் அல்லன்; இன்னும் சிலநாளில் ஈண்டு வருவான்' என்று ஆகாயவாணி ஒலித்தது. அது கேட்ட ஆதிரை மனந்தேறி வாழ்ந்து, பின்பு தலைவனைக் கண்டு மகிழ்ந்தாள் என்று மணிமேகலை கூறுகின்றது. இத்தகைய இடையாய கற்பிற்குச் சான்றுகள் நமது நாட்டில் பலவாம்.

இனி கடையாய கற்பு இப்பொழுதும் நமது நாட்டில் வழங்கக் காண்கின்றோம். கணவன் இறந்தபின் அணிகலன்களைக் களைதலும் நல்லாடை புனையாது போக்கலும் உப்பின்றிய உணவு உண்பதும் அயல்நாடு சென்று துறை முழுகித் தெய்வம் தொழுதலும் கைம்மை நோன்பென இப்பொழுதும் கருதப்படுகின்றது. இதனை, கண்ணகியின்வாயிலாகச் சிலப்பதிகார ஆசிரியர் இனிது எடுத்துரைக்கின்றார்.

இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்க
துன்புறுவன நோற்றுத் துயருறும் மக [ளிரைப்போல்
மன்பதை யலர் தூற்ற மன்னவன் தவறி [ழைப்ப
அன்பனை யிழந்தேன்யான் அவலங் கொண் [டழிவலோ?

என்று கண்ணகி கூறும் மொழிகளில் கைம்மை நோன்பு மிகக் கடையாயதாகக் கழிக்கப்பட்டதென்பது இனிதுணரப்படும். தம் கணவர் இறந்த பின் நோன்புகளை மேற்கொண்டும் துறைகளில் நீராடியும் காலம் கழிக்கும் மகளிரைப்போல் நானும் வாழ்வனோ என்று கற்புடைய தெய்வம் கூறும் மொழிகளால் அக்காலத்திலேயே கைம்மை நோன்பு, தலையாய மகளிர்க்குத் தகாதென்று கருதப்பட்ட தன்மை இனிது விளங்கும்.

எவ்விதிக்கும் விலக்குண்டு என்னும் உண்மைமொழிக்கேற்ப இம் மூவகையிலும் அடங்காத கற்பரசிகளும் இந்நாட்டில் வாழ்ந்திருக்கின்றார்கள். தவமுடையார்க்கே உரியதாகப்புகழப்படுகின்ற 'ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்' மனநிறைவாய்ந்த மங்கையரிடம் அமைந்திருக்குமேயானால் அன்னார் தேவராலும் தொழுதற்குரியரென்பதில் ஐயமொன்றுண்டோ? இதனாலேயே,

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு [வாளை
தெய்வந் தொழுந் தகைமை திண்ணமால்— [தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து

என்று கண்ணகியை சிலப்பதிகாரம் சிறப்பித்துக் கூறுகின்றது. இக்கண்ணகியின் தன்மையை ஆராய்வோமானால் கற்பின் அளப்பரும் ஆற்றல் இனிதறியப்படும். அறநெறி விலகி, தவறிழைத்த மன்னவனோடு மதுரை மாநகரையும் அழிக்கக் கருதிய கண்ணகி,

பட்டார் குழலார் பதிப் பிறந்தேன்
பட்டாங்கி யானுமோர் பத்தினியே யாமாகில் [கில்
ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரை [யையும்.

என்று கூறியபொழுது அந்நகரில் தீப்பற்றியதென்று சரித்திரம் கூறுகின்றது. இவ்வாறு அழிக்கும் ஆற்றல் கற்புடைய மாதரிடம் அமைந்து விளங்குதல் போலவே ஆக்கும் திறமும் அவரமாட்டு அமைந்துள்ளதென்பது

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு [தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை

என்னும் திருவள்ளுவனார் திருவாக்கால் இனிது விளங்கும்.

---

# மதுரைக் காஞ்சி.

---

பண்டிதை சு. பாலாம்பிகை அம்மாள்.

இந்நூல் சங்கத்துத் தலைமை பெற்றுவிளங்கிய நூல்களு ளொன்றாகிய பத்துப்பாட்டு ளொன்றாகும். இதை யியற்றியார் நல்லிசைப்புலமை வாய்ந்த மாங்குடி மருதனாராகும். இஃது தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியற்கு வீடுபேறு நிமித்தம் நிலையாமையை யறிவுறுத்துதற் கெழுந்ததா மென்பது. இது திணைப் பெயரால் வழங்கி வருகின்றது. மதுரைக்காஞ்சி யென்பது மதுரையிற் கூறியகாஞ்சி யென விரியும். காஞ்சித்திணை ஆண்பாற் காஞ்சி பெண்பாற் காஞ்சி யென இருவகைப்படும். ஒவ்வொன்றும் பத்துப் பகுதிகளையுடைத்து.

ஆண்பாற் காஞ்சி:—பெருங்காஞ்சி முதுகாஞ்சி, மறக்காஞ்சி, பேய்க்காஞ்சி, மன்னைக்காஞ்சி, வஞ்சினக் காஞ்சி, தொடாக்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி, மகட்பாற் காஞ்சி, போரில் வீழ்ந்து கிடந்த கணவனை முகத்திற் சேர்த்துக் கொண்டு அவன் மனைவி மனமுடைந்திறந்த நிலை யெனப்பத்தாம்.

(க) பெருங்காஞ்சி:—பிறரால்தடுத்தற்கரிய கூற்றம் வருமென்று சான்றோர் அறிவுறுத்துவது (உ) முதுகாஞ்சி:—இளமைத்தன்மை நீங்கிய அறிவுடையோர் இளமைநீங்காத அறிவின் மாக்கட்குக் காட்டுவது (ங) மறக்காஞ்சி:—போர்முகத்து விழுப்புண் பட்டவொருவன் அப்புண்ணை யாற்றிக் கொண்டு வாழும் வாழ்க்கையை வெறுத்து அப் புண்ணைக் கிழித்துக்கொண்டிறப்பது. (ச) பேய்க்காஞ்சி:—போர் நிகழ்ந்த இரவிற் புண்பட்டுக் கிடந்த ஒருவனைக் காப்பாரின்மையின் அவனைப்பேய் காத்ததாகக் கூறுவது. (ரு) மன்னைக் காஞ்சி—ஒருவீரனிறந்த விடத்து ஏனையோர் இவனித்தன்மையனென இரங்கிக் கூறுவது (சு) வஞ்சினக்காஞ்சி— இத்தன்மையதொன்றைச் செய்தலாற்றேனாயின் இன்னவாறாவேனெனக் கூறுவது. (எ) தொடாக் காஞ்சி—போரிலே புண்ணுற்றுக்கிடந்த கணவனைப் பேய் தீண்டா வண்ணம் பாதுகாத்துத் தானுமவனைத் தீண்டாது நிற்பது. (அ) ஆஞ்சிக் காஞ்சி—போரிலிறந்த தன் கணவன் வடுக்கண்டு அவன் மனைவி யஞ்சி நிற்பது, (கூ) மகட்பாற் காஞ்சி—தம் பெண்ணைக் கொடுக்க மறுத்தல்பற்றி, பகைவனுயவனை வலிந்து

கொள்ளவந்த அரசனோடு முதுகுடிப்
பிறந்த மக்கள் தம் பெண்ணைக் கொ
டுப்பதற் கஞ்சிக் கூறுவது (கo) போ
ரில் வீழ்ந்து கிடந்த தன் கணவனை
முகத்திலும் மார்பிலுஞ் சேர்த்துக்
கொண்டு அவன் மனைவி மனமுடை
ந்த நிலை யென்பதாம்.

பெண்பாற் காஞ்சி:—கூப்பீடு, தூக்
கம், மூதானந்தம், முதுபாலை, கை
யறு நிலை, தபுதார நிலை, தாபதநிலை,
பாலைநிலை, தாய் இறந்துபடுநிலை,
காடுவாழ்த்து எனப்பத்தாம்.

(க) கூப்பீடு:—பெரும்புகழுடைய
னாய் மாய்ந்த ஒருவனை அவனைச் சூழ்
ந்த பெண் சுற்றம் சூழ்ந்தழுவது.(உ)
தூக்கம்:—சுற்றத்தாரின்றி மனைவி
யர் தாமே தத்தங் கொழுநரைத் தழு
விக்கொண் டழுவதனாற் கண்டோர்க்
குண்டாகுந் துன்பம். (ங) மூதானந்
தம்:—தன் கணவனிறந்த பொழுதே
உடனுயிர் துறந்த மனைவியின் உழுவ
லன்பையறிந்தோர்பிறர்க்குரைப்பது.
(ச)முதுபாலை:—கொடியவழியில்தன்
கணவனையிழந்து அவன் மனைவி தனி
த்துப் புலம்புவது.(ரு)கையறு நிலை:—
கணவரொடு மனைவியரிறந்தவிடத்து,
அவரிடத்து முன்பு நிகழ்ந்த செய்தி
களை யெல்லாம் பிறர்க்கறிவுறுத்தி
அவர் சுற்றத்தார் முதலியோர் துக்
கப்படுவது. (சு) தபுதார நிலை:—
மனைவியைக் கணவ னிறந்து நிற்கும்
நிலை. (எ) தாபதநிலை:—காதலனை யிழ
ந்த மனைவி தவம்புரிந்தொழுகியநிலை.
(அ) பாலைநிலை:—கற்புடை மனைவிதன்
கணவனிறந்த விடத்து அவனொடெரி
புகுதலைவேண்ட, அச்செயலை வில
க்குவாரோடு மாறுபட்டுக் கூறுவது.
(கூ) தாய் இறந்து படுநிலை:—தன் சிறு
வன் போரில் வீரச் செயல் காட்டி
யிறந்த செய்தி கேட்டேனும், அச்
செயல் காட்டாமற் புறங்காட்டி யோ
டிய விறந்த செய்தி கேட்டேனுந்
தாயிறந்து படுவது. (கo) காடு வாழ்
த்து:—இவ்வாறு தன்கண்ணே பல
ரிறந் தொழியவும், தானொழியாது
உலகத்தி னிலையாமையை யறிவித்து
நிற்கும் புறங்காட்டைப் புகழ்வது
எனவுங் கூறுவர்.

இந்நூலாசிரியர் அரசன்முன்னோர்
பெருமையையும், அரசனுடைய வீர
த்தையும் பெருமையையும், பாண்டி
நாட்டின் ஐந்திணை வளங்களையும்,
மதுரைமாநகர்ச் சிறப்பையும், சே
ரன் நாளோலக்க வனப்பையும், மற்
றைய சிற்றரசர்கள் பெருமையையும்
விரித்துரைக்கின்றனர்.

முன்னோர் பெருமை.

கடல்புடை சூழ்ந்த பூமியின் கண்
ணே இருசுடர்த்தோற்றங் குறைவின்
றி விளங்க,வேண்டுங்காலத்தே மழை
பெய்தளிக்க, திக்குகள் தழைத்தோ
ங்க, விளைநிலங்க ளனைத்தும் பூரண
பலனைக் கொடுக்க,மரங்கள் பல்வேறு
வகைப்பட்ட உயிர்களுக்குந் தம்
பயனை யினிதளிப்ப, மாந்தர்க்குப் பசி
யும் பிணியும் நீங்க, உண்டு தொலை
யாத உணவு பொருந்திய செல்வத்து
டன், வாய்மையும் புகழும் நிறைந்த
அமைச்சருடன்,ஊழிகாலம் வரைக்கு
மாசாண்ட உயர்ந்தோர் குடியிற் பிற
ந்தவனே யென்றும், (இதனால் முற்
காலத்தரசர் நீதிதவறாது செங்கோல்
செலுத்திவந்தன ரென்பதறியக்கிட
க்கின்றது.) குறுநில மன்னரையும்,
மற்றையரசர்களையும் வென்று, அவர்
நாடுகளையுங் கைப்பற்றின சிறப்பை
யுடைய வடிம்பலம்ப நின்ற பாண்டி
யன் வழித்தோன்றலே என்றும்
முன்னோர் பெருமை கூறினார்.



அரசன் பெருமை.

பேய் மகளிருடைய துணங்கைக்
கூத்தின் தாளத்திற்குக் கவந்தங்க
ளாடுகின்ற போர்க்களத்தில் ஊன்றுலா
கிய சோற்றை வேள்வி செய்யும்
படையை யுடைய (யாக்கை நிலையா
மை கூறினார்) இராவணனை வென்ற
வலிமைபொருந்திய அகத்தியன் பின்
னே யெண்ணப்பட்டுப் புலவனாயமர்
ந்த பெரியோனே என்றும், பெரிய
மரக்கலம் திரையை யெதிர்த்துச் செ
ல்லும்படியாகப் பாய் விரிக்கப்பட்டு,
முரச முழங்க, சிறந்த பண்டங்களை
ஆண்டுள்ளார் நுகரும்படியாகக் கரை
யிற் கொண்டுவந்து தருஞ் சாலி
யூரைக் கொண்டவனே யென்றும்,
நீலமணி போன்ற பூக்களையுடைய
கழிமுள்ளிகள் பொருந்திய மணற்
குன்றுகளில் பரதவமகளி ராடுங் குர
வைக் கூத்தினோசையுடன், பயிர்க
ளிற் படியுங் கிளிகளை யோட்டு மரவ
முங் கலந்தொலிக்கவும், சுறுக்கள்
செருக்கித் திரியுங் கடலிடத்துத்
துவலை பெரியகாயை யுடைய தாழை
வேலி சூழ்ந்த இள மரக்காவின்கண்
ணே வந்து செறியவும், மீன்படகா
லே மீன்பிடிப்போர் வந்து கரையைச்
சேருமொலி, உப்பைவிற்போ ரொலி
யுடன் மாறுபடும் முதுவெள்ளிலை
யென்னு மூரையுடையவனே யென்
றும், முத்தினையுஞ் சங்கினையு முடை
ய சேரி பொருந்திய கொற்கை யென்
னு மூரையுடையோய், பரதரை வெ
ன்றடிப் படுத்தியவனே, பிறர்க்கரிய
பொருளை யெளிதாகக் கைக்கொண்டு
அவற்றைப் பிறர்க்குக் கொடுத்தலைச்
செய்வோய் (வள்ளன்மை கூறினார்);
பகைவரை வென்று அவ ரரண்களைக்
கைக்கொண்டு அதுவு மமையாமல்,
நின்னாலழிக்கப்பட்ட நாடுகளில் நின
க்குரிய நிலங்களில் பல்யாண்டு தங்
கிய அவைகளை முன்னையினும் பன்
மடங் கதிகமாகச் சிறக்கச் செய்யும்
பெரியோய், அழகியமருத நிலங்களு
க்குத் தீயூட்டி அவ்விடம் பாழாய்ப்
போக,புலவ ரமர்ந்த சங்கங்களிற் பே
யுலாவவும், சித்திர மாடங்களில்
கூகை குழறவும்,கழுநீர் மலிந்த சுனை
களில் வாட்கோணுகள் வளரவும்,
நின்னைவல் கேளாமையின் நின்பகை
வர் தேயங்க ளிவ்வாறு பாழாய் விட்
டன (செல்வ நிலையாமை கூறிற்று).
காவல! நினதுவலியினால் தம் வலி
குன்றியவரசர் நின்சொற் கேட்கையி
னாற் சோழதொண்ட மண்டலங்களைக்
கைக்கொண்டு அரசியல் பிழையாது
முன்னோரறநெறியை விளக்கி வாழ்
வாயாக. மேற்றிசைக் கட்டோன்றிய
மதியை யொப்ப நின்கொற்றம் மிகுவ
தாக என்று வாழ்த்தினார்.

அரசே!எவ்வகையுயர்ந்த நிலையை
யெய்தக்கூடியதாயிருந்தாலும் பொய்
யை விலக்குக. வாய்மையைக் கடைப்
பிடிக்க.வள்ளற்றன்மை யுடையோய்!
நினக்கும் ஐம்பொறிகளா னுகரப்படு
ம் பொருள்களுக்கு மென்ன தொடர்
புண்டு? ஒருவகைத் தொடர்புமில்லை.
ஆதலால், வெற்றிவீர! பெரியதொரு
பொருளைக் கூறுவேன், ஆனால் அது
என்னாற் காட்டற்கரிது. அதைச் சற்
குருவிடங் கேட்டறிக. (நிலையாமை
கூறி வீடுபேறுணர்த்தினர்)

ஐந்திணை வளங்கள் கூறுகின்றார்.

மருதம்.

மழை மிகுதியினால் நீர்
நிறைந்த, யானைகளை மறைக்கும்படி
யுயர்ந்த கதிர்களையுடைய வயல்களி
லும், மடுக்களிலும், தாமரை நீலம்
நெய்தலாகிய பூக்களையும், மற்றைய
மலர்களையு முடைய பொய்கைகளிலு
முள்ள வலையால் மீன்பிடிப்பார்

மருத நிலத்து மீன்களைக் கொன்று குவித்தலாற் பிறந்த வோசையும், களைப் பறிக்கு மிடத்தெழுந்த வோசையும், சேற்றிலாழ்ந்த எருமைகளைக் களமர்பெயர்க்கு மாரவாரமும், நெல்லறுப்பா ரொலியும், திருப்பரங்குன்றில் விழாக் கொண்டாடு மாரவாரமும், மைந்தரும் மகளிரும் நீராடு மரவமும், அங்கு வாழ்வார்க்கு இனிதாக ஒலிப்பப் பாணருடை பாட்டினோசையுங் கூடிய வூடலாகிய உரிப்பொருளமைந்த மருத நிலஞ் சூழப்பட்டது ஒரு பக்கம் என மருதச் சிறப்புக் கூறினர்.

முல்லை.

சிறு தினையை யறுக்கவும், எள்ளிளங்காய் முற்றவும், வரகின் கதிர் முற்றவும், குண்டுகளில் அழகிய மணி கிடந்து விளங்கவும், கௌவிமான் பிணைமானுடன் துள்ளிவிளையாட, கொன்றைமரம் நிறைந்த நிழலிடத்துப் பாறைகளழகுபெற்றுவிளங்கவும், பசுமையான பயிர்களிடத்து முசுண்டைப் பூவும், முல்லைப்பூவு மழகுபெற்று விளங்கவும், தெளிவான நீரையுடைய பள்ளங்களில் நீலமணியை யொத்த நெய்தல், தொய்யிற் கொடியுடன் மாறுபட்டு மலர இருத்தலாகிய உரிப்பொருளமைந்த காடு சூழ்ந்தது முல்லையென அதன் வளங்கூறினர்.

குறிஞ்சி.

உயர்ந்த நிலத்தே விதைத்த தோரை நெல்லும் வெண்சிறுகடுகும், மலைநெல்லோடு மாறுபட்டு வளர இஞ்சியும், மஞ்சளும், மிளகும் ஒழிந்த பலவாய் வேறுபட்ட பண்டங்கள் கற்பூமியிலே குவிக்கப்பட்டு, தினைப்புனத்தின்கண்ணே கிளியோட்டு மாரவாரமும், அவரையைத் தின்னுங் காட்டுப் பசுவையோட்டு மாரவாரமும் குறவர் பன்றியைக் கொன்றதனுண்டான அரவமும், வேங்கைப்பூக் கொய்யும் மங்கையர் புலியைக்கண்டஞ்சிக் கூவுமரவமும். மலையருவியினோசையும் மாறிமாறி யொலிக்கப் புணர்ச்சியாகிய உரிப்பொருளமைந்த பெரிய மலை சூழ்ந்த இடம் குறிஞ்சி யென்றார்.

பாலை.

பெரிய மூங்கிலிற் பிறந்த நெருப்பு பசிய தூறுகளைச் சுடுகையினால் கயங்கள் தாம் மேய்தற்குரிய இடங்களிற் போக, வாச்சியம் வாசித்தா லொப்ப மூங்கில் வெடித்து அழகு கெடுகையினால், அருவிகளில்லாத கவினழிந்த பெரிய மலையையுடைய ஊகம் புல்லுலர்ந்த காட்டில் மலைகளிற் சுழல்காற்று மோதியடித்தலில்கடல்போலொலிக்கு மாரவாரம் பொருந்திய வேனிற் குன்றத்துப் பல இளைஞர் ஆறலை கள்வரைக் காக்கும்படி வில்லேந்தி நிற்கும் முதுவேனிற் காலத்தையுடைய பிரிதலாகியஉரிப்பொருளமைந்த இடம் பாலையென அதன் சிறப்புரைத்தார்.

நெய்தல்.

ஒலிக்குங் கடல் தந்த முத்தையும், வளையையும் செட்டிகள் கொண்டு வந்து விற்கவும், வெள்ளிய உப்பையும், பொரித்த புளியையும், பரந்துயர்ந்த கானலிடத்துக் கருவாட்டினையேற்று நாவாயும் (இதனால் இந்நாட்டார் மற்றை நாட்டாரோடு வர்த்தகஞ் செய்தமை யறியக்கிடக்கின்றது) †யவனதேசம் முதலிய தேயத்தினின்று வந்த மீகாமர் இவ்விடத்துண்டான போணிகலங்களை அவ்விடத்திற்குக் கொண்டு செல்லுதற்கு கொண்டுவந்த குதிரைகள்நிறைந்த வளம் பொருந்திய (இதனால் மதுரை மாநகரம் கிரேக்க தேசத்தோடு வாணிகஞ் செய்தமை விளங்கும்) இரங்கலாகிய உரிப்பொருளமைந்த பல்வகைச் செல்வமும் நிறைந்த நிலம் நெய்தல் என அதன் வளம் விரித்தார்.

(தொடரும்)

† கிரேக் என்றும் அயோனியா என்றும் வழங்குவர். அயோனியா என்பதிலிருந்தே யவனமென்பது தோன்றியது.

# தமிழ் இலக்கியத்தில் வ. வெ. சு. ஐயரின் ஸ்தானம்.

ஏ. என். மகாபூஷணம். பி. ஏ.

பிரகிருதியின் பேரழகிலே காதல் கொண்டு அவ் வலையிலே பிடிபட்ட ஸ்ரீமான் சுப்பிரமணிய ஐயர், நிமிஷத்துக்கு நிமிஷம் மோகனமான வர்ண வேறுபாடுகளுடன்தோன்றித் திகழும் பொதியமலைக் காட்சிகளைக் கண்டு அனுபவித்துச்செல்லுகையில் தவறி விழுந்துவிட்ட தம் செல்வமகளை மீட்கும் பொருட்டுக் கல்யாண தீர்த்த மென்னும் பேரருவியில் விழுந்து வீரமரணம் எய்திய மகா துக்ககரமான செய்தி நம் நாடு முழுவதையுமே குலுங்கச்செய்து விட்டதென்று சொல்லவேண்டும். ஐயர் சிறந்த தேசாபிமானி, பெருந் தியாகமூர்த்தி. தேசமுன்னேற்றமே அவருடைய ஓயாத கவலையாக இருந்து வந்தது. நவ இந்தியாவின் சரித்திரத்திலே, பாரதமக்களின் இரத்தத்திலே என்றும் தணியாத சுதந்தர தாகத்தை மூட்டப் பெரிதும் உழன்று அரும் பெரும் தியாகங்கள் புரிந்து, தேசத்தின் பொருட்டுத் தீராத தொல்லைகளுக்குத் தங்களை இலக்காக்கிக் கொண்ட தேசபக்த சிகாமணிகளின் கோஷ்டியிலே நம் ஐயரின் பெயரும் பொறிக்கப்பட்டுக்கிடக்கும். ஆனாலும், ஐயரின் இந்தியப் பெருமையன்று தமிழ் நாட்டின் சிறப்புப் பெருமை. தமிழ் இலக்கிய சரிதம் எழுதப்படுங் காலை ஐயரின் ஞாபகம் இன்னும் நிச்சயமாக இன்னும் சிறப்புடன் ஒளிசெய்து நிற்கும். இதுவே ஐயரின் தமிழ்ப்பெருமை, அவர்தம் தனிப்பெருமை.

ஒரு கவியின்,ஓர் ஆசிரியனின் நூல்களை ஆராய்ந்து சீர்தூக்கி இலக்கியத்திலே அவன் ஸ்தானத்தை மதிப்பிட்டு நிர்ணயஞ் செய்து வைத்தலே நாம் அவனுக்குச் செய்யவேண்டிய மரியாதையும்கடமையுமாகும் என்று ஐயரே கூறியிருக்கிறார். ஆனால் இவ்வாறு ஸ்தான நிர்ணயஞ் செய்வது எளிதான காரியமன்று. அதற்குப் பலகலைப் பயிற்சியும் மிகுந்த ஆராய்ச்சித் திறனும் அவசிய மாகின்றன. ஈண்டு இத்தகைய ஆராய்ச்சி செய்ய முயல முன்வந்தது பிறருக்கு வழிகாட்டியாகவு மன்று, ஆதர்சமாகவு மன்று. மற்று, ஐயரிடமும் அவர் ஆற்றிவந்த தெய்வத் தமிழ்த் திருப்பணியிலும் இக்கட்டுரை ஆசிரியன் கொண்டுள்ள பெருமதிப்பைச் சிறிது வெளிப்படுத்தும் பொருட்டேயாகும். பழந் தமிழர் நாகரிகப் பெருவாழ்வின் பலனாய் விளைந்த சங்க இலக்கியங்களுக்கும், இனிமையில் ஒளி வந்து கலந்து திகழும் காட்சியே போன்ற ஆர்ய திராவிட நாகரிகங்களின் சேர்க்கையின் பெரும்பயனாய் எழுந்த தேவாரம் திருவாசகம் திருவாய்மொழி முதலிய பக்திப் பிரபந்தங்களுக்கும், கம்ப ராமாயணம் முதற்கொண்ட காவியங்களுக்கும் பின்னர், தமிழ் இலக்கிய காலத்திலே நீண்டதோர் இடைவெளி ஏற்பட்டது. தமிழ்க்காவிய

உத்தியானத்திலே அழகும் ஒளியும் மணமும் கொண்ட பலஇலக்கிய மலர்கள் பூத்துப் பொலிந்திருந்த புஷ்பக் கொடிகள், இப்பொழுதோ அரும்பவுமின்றி வறிதே சாம்பி நின்றன. ஒவ்வோரிடத்தில் காணப்பட்ட சில தனி மலர்களும் ஒளிமழுங்கி அழகுகுன்றி மணம் சுருங்கி வாடி வதங்கித் தோன்றின. மேல் நாட்டார் உறவு ஏற்பட்ட பின்னும் சிறந்த இலக்கியச் செல்வத்தையுடைய ஆங்கிலமே நமது மதுரமென்மொழிக்குச் செல்வச் செவிலியாய் அமைந்தும், தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி காறும் காத்திருக்கவேண்டி நேரிட்டு விட்டது. இம்மறுமலர்ச்சித் திருவிழாவிலே ஸ்ரீ சுந்தரம்பிள்ளையின் செல்வக் குழவி "மனோன்மணி" தோன்றியதும், கண்ணன்பாட்டு, குயில் பாட்டு, தேசிய கீதங்கள், ஞானரதம் முதலிய விலையிலா இலக்கிய மாணிக்கங்களை இயற்றித்தந்து சுப்பிரமணிய பாரதி இத்திருவிழாவைச் சிறந்து ஒளிரச் செய்ததும், தமிழ் இலக்கிய சரிதத்திலே வரவேண்டிய—ஆனால் இவ்வியாசத்துக்குப் புறம்பான—விஷயங்களாகும். தமிழ் மறுமலர்ச்சியில் ஐயர் அலங்கரித்த ஸ்தானத்தை, ஆற்றிவந்த அரும் பணியை (நம்மால் இயன்ற வரை) நிர்ணயஞ் செய்து மதிப்பிடுதலே இக்கட்டுரையின் நோக்கம்.

"நிமிஷத்துக் கொரு மனோகரமான வர்ணத்துடன் விரிந்துகொண்டு வருகிற இம்மறுமலர்ச்சித் திருவிழாவில் ஓர் பிரதானமான ஸ்தானத்தைப் பெறவேண்டும்" என்று சங்கற்பித்துக்கொண்டு ஐயர் சென்ற ஐப்பசியில் "பாலபாரதி" என்னும் மாதப் பத்திரிகையை வெளியிட்டனர். "தனது இணையற்ற பேராற்றல் குலைந்து போயிருக்கிற தமிழுக்கு அதன் இயற்கையான முதன்மை ஸ்தானத்தைத் தந்து புராதன கலைகளுக்குப் போலவே இக்காலத்துக் கலைகளுக்கும் அதைப் பெரியதோர் நிலயமாக ஆக்கவேண்டும்" என்பதே இப்பத்திரிகாசிரியனின் பேராவலும் பெருநோக்கமுமாகும். ஆசிரியன் செய்துவந்த இலக்கிய ஆராய்ச்சிகளும் 'நமது சிற்பச் செல்வம்' என்றுமகுடமிட்டுத் "தமிழ் நாட்டு ஆலயங்களின் அழகு ஒழுகும் சிற்ப வேலைகளையும் அதன் அருள் ஒளிரும் விக்கிரகங்களையும்" பல பிறநாட்டுச் சிற்பவன்மையையும் பற்றி எழுதிவந்த குறிப்புக்களும், அவர் புனைந்த ரஸம் கொட்டும் கதைகளும் "பால பாரதி'க்குத் தமிழ்ப் பத்திரிகைகளிலே முதல் இடத்தைத் தந்துவிட்டன. சங்கீதம் விஞ்ஞான சாஸ்திரம், (Science) உலக குருக்கள் வீரர்கள் சரித்திரங்கள், கதைகள், அரசியல் விஷயங்கள் இவற்றையும் இன்னும் பல அங்கங்களையும் 'பாரதி' மறந்துவிடவில்லை. மனிதன் சிறப்பாகக் கருதும் எல்லா விஷயங்களைப் பற்றியும் நெஞ்சை அள்ளும் நடையில் எழுதித் தந்து "பாரதியை" ஓர் 'விசுவ வித்யா நிலய' மாகச் செய்து விடவேண்டுமென்ற ஐயரின் பேருணர்ச்சியும் பெரு நோக்கங்களும், பத்திரிகை ஆரம்பித்து ஓராண்டும் கழிவதற்கு முன்னரே வீணாகக் கண்டு துக்கிக்காமலிருக்க முடியவில்லை. தமிழ்வசன வரலாற்றிலும் "பாலபாரதி"க்குச் சிறந்ததொரு ஸ்தானம் கொடுக்கப்படும் என்று உறுதி சொல்லலாகும்.

தமிழ்இலக்கியப் புதுமலர்ச்சியிலே ஐயரின் திருத்தொண்டு, வலி



மையும் கம்பீரமும் கொண்ட வசனம் வகுத்து வைத்ததே யாகும். தமிழ் வசன பரம்பரையோ, ஆங்கிலம் முதலிய பிறமொழிகளின் கத்திய பரம்பரை போலாவது, தமிழிலேயே காவிய பரம்பரைபோலாவது போற்றிப் பெருமை கொண்டாடும் தரத்ததாக இருந்து வந்ததில்லை. பண்டைத் தமிழரின் உரை நடை அழகும் ஆற்றலும் பெற்று இயங்கி வந்ததென்னினும் உண்மையான வசனகாவிய பாகுபாடு நம் தமிழ் முன்னோர் அறியாததொன்று என்றே சொல்லவேண்டியிருக்கிறது. இத்தனை புகழ் அற்ற பரம்பரையில் இருந்தே ஐயர் தம் இணையற்ற பேராற்றல் வாய்ந்த வசன நடையைச் சிருஷ்டித்துக் கொண்டு விட்டார்.

ஐயரைப் போன்று அத்துணை கல்விப்பெருக்கும் கலைப்பயிற்சியும் அனுபவஞானமும், சமீப காலத்தில் எந்தப் புலவனும் தமிழிலே கொண்டுவந்ததாகத் தெரியவில்லை. நோக்கங்களிலும் லக்ஷியங்களிலும் ஒன்றுக் கொன்று மாறுபாடுள்ள இரண்டு மொழிகளில் இலக்கியப் பயிற்சியாவது நூலாராய்ச்சிக்கு இன்றியமையாதது என்று ஆங்கில ஆசிரியன் மாத்யூ ஆர்னால்ட் என்பவன் கூறியிருக்கிறான். தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் இவற்றைத்தவிர க்ரீக், லத்தீன், பிரெஞ்சு, முதலிய பிறமொழிகளிலும் அவற்றின் இலக்கியங்களிலும் ஐயருக்கு நேரில் நல்ல பயிற்சி யுண்டென்பது இங்கு குறிப்பிடத் தக்கது. "காவிய உத்தியானம்" என்னும் வியாச ரத்தினம் ஒன்றே ஐயருக்கு நூலாராய்ச்சித் துறையில் எளிதாக முதலிடம் தந்துவிடக்கூடும் என்று சொல்லுவோம்.

இதனாலேதான் ஐயரின் கம்பராமாயண ஆராய்ச்சிகள் (தமிழிலும் ஆங்கிலத்திலும்) அருமையும் பெருமையும் உயர்வும் பெற்று விளங்குகின்றன. உலக மகாகவிகளிலே வால்மீகி, வியாசன், ஹோமர் முதலிய புராதன கவிகளுக்காவது, ஷேக்ஸ்பியர் என்னும் நாடக உலகின் ஜோதி நாயகனுக்காவது நமது கவிச்சக்கரவர்த்தி (கம்பன்) சிறிதும் இளைக்கவில்லை என்பதும், மகா காவியங்களின் வரிசையில் கம்பராமாயணம் முதலிடத்தைப் பெறும் தகுதி உள்ளதென்பதும் ஐயர் முதன் முதல் காவிய உலகுக்குக் கண்டு பிடித்துத் தந்த உண்மைகள் என்று கூறவேண்டும். தம் இராமாயண ஆராய்ச்சியின்கண் ஐயர் கம்பன் கவித்திறத்தையும் கதைக்கட்டையும் ஆரிய மகாகவி வால்மீகியின் கதைப்போக்குடனும் கவிநயத்துடனும் ஒப்பிட்டுச் சீர்தூக்கி இவ்விரு கவி அரசர்களுக்குமுள்ள ஏற்றத் தாழ்வைக் காட்டிச் செல்லும் அதிசயத்திறனும், ஐரோப்பிய கவிநாயகர்களுடன் இவ்விரு பாரதக் கவிகளுக்குமுள்ள தாரதம்மியங்களை எடுத்துக் காட்ட உபயோகிக்கும் படிப்பும் பயிற்சியும் வாசகர்களை பிரமிக்கச் செய்து விடுகின்றன.

ஐயரின் ஆராய்ச்சி நடையோ அற்புதமானது. அதற்கு இணைபார்க்க வேண்டுமானால் ஆங்கிலத்தில் ஆராய்ச்சி நடை கைவந்த வல்லாளர்களிடமே செல்லவேண்டும். உதாரணமாக "கம்பனுடைய கவிதையை ஒரே வார்த்தையில் வர்ணிக்க வேண்டுமானால் அதன் சிறந்த குணம் காம்பீரியம் என்று சொல்லுவோம். கம்பன் சிருங்காரம் அழகாகச் சொல

துகிறான் என்பதில் தடையில்லை. சோகம் சொல்லும் இடங்களிலெல்லாம் கண்களினின்று தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகும்படி செய்துவிடுகிறான். ஆனால் அவன் வீரத்தையும்வியப்பையும் ரௌத்திரத்தையும் தன் சொந்தமாக்கிக் கொண்டுவிட்டான். இவைதாம் அவனுக்கு இயற்கையாகவரும் ரஸங்கள். அவனுடைய காவ்யத்துக்குச் சமுத்திரத்தின் இயற்கையும் ஹிமாசலத்தின் தன்மையும் அமைந்துளது. அவனுடைய ராமாயணத்தைப் படிக்கும்போது, மகாமல்லபுரத்துக் கற்கோவில்களைப் பார்க்கும்போதும் சமண பெல்கோளத்துச் சிலையைப் பார்க்கும்போதும் உண்டாகும் உணர்ச்சி உண்டாகிறது'' என்று ஐயர் தம் பாலகாண்டப்பதிப்பின் முன்னுரையில் எழுதிவைத்திருக்கிறார்.

இவ்வாராய்ச்சி முகத்தாலும், 'கவிதை' என்னும் தனிக்கட்டுரை ஒன்றின் வாயிலாலும், இந்திய இலக்கணிகள் சொல்லாது விட்டு, அரிஸ்தோத்தலன் முதற்கொண்டு மாத்யூ ஆர்னல்ட் ஈறாக உள்ள மேற்புல இலக்கணிகள் நீண்ட நுண்ணிய ஆராய்ச்சியின் பயனைக் கண்டு கொண்ட—கவி என்பது என்ன? என்ன என்ன அம்சங்கள் சேர்ந்து இன்ப ஒளித்திரளான கவிதையாகப் பரிணமிக்கின்றது? கவியின் கட்டமைப்பில் எந்தெந்த உபாயங்கள் கையாளப்பட்டு வருகின்றன?—என்பவற்றைப் பற்றி ஐயர் எழுதி வெளிப்படுத்தியிருக்கும் விசாரணைகள் தமிழ்மொழியிலே புதியதோர் அம்சமாக மிளிர்கின்றன. நூலாராய்ச்சித் திறமையும் சிருஷ்டிவன்மையும் தனித்தனி குணங்களாகும். ஒன்றிருப்பவரிடத்தில் மற்றொன்று இருக்க வேண்டும் என்கிற நியதியில்லை. ஆனால் ஐயரிடத்தில் இவ்விரண்டு அம்சங்களும் பொருந்தியிருப்பது நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. 'ஆர்கிடெக்டானிக்ஸ்' என வழங்கும் காவிய அமைப்பு அல்லது ரசனைத்திறமை மகாகாவியங்களுக்கு மட்டும் அன்றிச் சிறுகதைகளுக்கும் அவசியமாகின்றது. பௌத்தர்களுடைய 'ஜாதக' (பிறப்பு)க்கதைகள் காலம் தொடங்கி உலகத்திலே சிறு கதைகள் எழுதியும் மதித்தும் வரப்பட்டும், சிறுகதை என்ற தனி இலக்கியப் பாகுபாடு ஆங்கில இலக்கியத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே பூத்து ஒளிர்ந்தது. இதனால் நமது பஞ்ச தந்திரக்கதைகளும், விக்கிரமாதித்தன் கதைகளும் பிறவும், அரபியரின் நிசிக்கதைகள் (Arabian Nights) போலவே இப்பொழுது தனி இலக்கியப் பகுதியாகக் கருதப்பட்டு வரும் சிறுகதை யென்னும் தலைப்பின் கீழே வர முடியாதன என்பது நாம் சொல்லாமலே விளங்கும். ஆகவே ஐயர் புனைந்துள்ள "லைலிமஜனூன்" "அனார்கலி" "எதிரொலியாள்" "மங்கையர்க்கரசி காதல்" முதலிய சிறு கதைகளுக்குப் பரம்பரை பார்க்க வேண்டுமானால் பிற மொழிகளுக்கும் தாகூரிடமும் (Tagore) தான் செல்ல வேண்டும். ஐயரும் பாரதியும் சேர்ந்து தாகூரின் சிறுகதைகளைத் திறமையுடன் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கின்றனர். இவைகளும் பாரதியின் கதைகளிற் சிலவும் ஐயரின் சிறுகதைகளும் தமிழில் சிறுகதை சித்திரிப்பவர்களுக்கு லக்ஷியமாகவும் வழிகாட்டியாகவும் அமைந்துள்ளன வென்பது மிகையாகாது.



உலகத்திலே 'நித்ய யௌவனமாயும் சர்வாந்தர்யாமியாயும்' நின்று நிலவும் சில கதைகளைத் தம் மனோபாவத்துக்கும் சௌந்தர்ய உணர்ச்சிக்கும் ரஸானுபவத்துக்கும் பொருந்துமாறு சிறந்த தமிழில் புனைந்து வெளியிட வேண்டும் என்ற ஐயரின் லக்ஷியத்தை அவரிடமிருந்து நேரிலேயே பேசிக் கேட்டிருக்கிறேன். ஆனால், மேனாட்டுக் கதாசிரியர்கள் கதை அல்லது சம்பவத்தைச் சொந்தமாகவே சிருஷ்டித்துக் கொள்ளுகிறார்கள்; கதாப் பிரியர்களும் அவற்றையே பெரிதும் விரும்புகின்றனர் என்னும் விஷயத்தை மட்டும் இங்கெடுத்து உரைத்தல் அவசியமாகிறது.

ஐயரின் வசனத்துக்கு உயிரும் ஒளியும் தந்து உதவுவது அவரது குன்றாத தேசபக்தியும் தமிழ்ப் பெருங்காதலுமே யாகும். "தமிழ் நாட்டின் மகாயுகங்களை நினைக்குங் காலத்தில் என் மனம் பூரிக்கின்றது, என் மார்பு விரிகின்றது, என் தோளில் புதிய வன்மை பிறக்கின்றது. நான் புதிய மனிதனாகவே போய் விடுகிறேன்" என்று ஐயர் எழுதிச் செல்லுகிறார். இந்தத் தமிழ்ப் பாசமே நம் ஆசிரியனின் இறகுக்கு விசையும் வலியும் தந்து, இன்று தாழ்வுற்றுக்கிடக்கும் தமிழ்மொழியை அதன் இயற்கையான ஸ்தானத்தில் வீற்றிருக்கச் செய்ய வேண்டுமென்ற அவர் பேராவலுக்கு அடிநாதமாக ஒலித்து வந்தது.

ரஸபாவங்களிலே ஐயர் வீரத்தையே தம் சொந்தமாக்கிக் கொண்டுவிட்டார் என்று சொல்லவேண்டும். அனார்கலியின் சோகம் நெஞ்சைப் பிடிக்கிறது. லைலியின் அழுகை நம்மைக் கண்ணீர் வடிக்கச் செய்துவிடுகிறது. ஆனாலும் குருகோவிந்த சிங்கன் பாரததேசத்திலே வீரஜாதி வகுத்த கதையைச் சித்தரிக்கும் பொழுதும், பண்டைத்தமிழர் "கடவுளையும் தங்கள் தோள்வலியையும் தமிழ் நாட்டின் பேரதிர்ஷ்டத்தையும் நம்பிச் செய்து வந்த கடல் பிரயாணங்களை"ப்பற்றிப்பேசும் பொழுதும், ஐயரின் நடை எத்துணை வீரவெறி பெறுகின்றது என்பதைப் படித்தேதான் அறியவேண்டும்.

ஐயரின் சௌந்தரிய உணர்ச்சி அவரை விட்டு அனேகமாக ஒரு போதும் நீங்குகிறதேயில்லை. எதைச் சொன்னாலும் அழகு பொலியச் சொல்லவேண்டும் என்பதே இலக்கியத்தின் முதல் விதியாகும். "அழகே உண்மை, உண்மையே அழகாம்" என்ற ஆங்கில அமுத கவியைப் பின்பற்றி ஐயரின் சுந்தர வருணனைகளும் உண்மையிலிருந்து பிசகுவதேயில்லை. ஆனால் கேவலம் புகைப்படத்தில் எடுப்பதுபோல் அணுவளவும் பிசகு இன்றி உள்ளதை உள்ளவாறே கூறுதல் இலக்கிய உண்மையாகாது. மனோலோகத்திலே சஞ்சாரஞ்செய்து உணர்ச்சிகளாலே முலாம்பூசப் பெற்றுச் சிறிது உருமாறித் திகழும் உண்மைச் சிறப்பையே மகாகவிகளும் பேராசிரியர்களும் கையாண்டு வந்திருக்கின்றனர். உதாரணமாக, "ஒவ்வொரு நிமிஷமும் ஒரு புதிய சித்திரம்; அத்தனையிலும் புதுப்புது ரூபம்; புதிய புதிய அழகு! இப்பொழுது கலியாண முருக்கமரமானது கமுகமரத்தோடு கொஞ்சுவது போலிருக்கிறது. சற்று நேரத்துக்கெல்லாம் அது தன் தணல்போன்ற மலர்களை அந்தப் பக்கத்திலிருக்கும்

மாமத்தினிடம் காட்டிச்சென்றுவிடுகிறது. சுந்தரப்பனே கைகளை ஆட்டிக்கொண்டு சிரிக்கிறது. இளநீலமாயிருக்கிற இந்தமுங்கிற் போத்துகள் வெகு ஒயிலாகப் பரதம் பிடிக்கின்றன. நீல் ஆகாயம் எத்தனைவித உருவத்தைத்தான் எடுத்துக்கொள்ளுமோ? மத்தியில் மேகங்கள் உலாவுகின்றன. அவைகள் பூணும் மாறுவேஷங்களுக்கு எல்லையேயில்லை. இப்படி இருக்கையில் நாரைகள் கூட்டம் கூட்டமாகப் பறந்து ஆகாயத்திற்கே மாலையிடுகின்றனபோலச் செல்லுகின்றன. சூரியப் பிரகாசம் அங்கங்கே மரங்களின் அடர்த்திக்கு நடுவே ஊடுருவிப் பாய்ந்து வந்து தரையில் ஒளியையும் நிழலையும் ஆயிரம் 'மோஸ்தாக'ப்பின்னி விடுகிறது" என்று ஐயர் இயற்கைச் சோட்டியின் எழில் நலங்களைச் சித்தரித்துச் செல்லுகையில், நாம் மேற்கூறிய உண்மைகள் சான்று பெறுவதைக் காணலாம்.

இவ்வளவு அழகும் உண்மையும் பொருந்திய வருணனையிலும் எத்துணை எளிய நடை கையாளப்பட்டிருக்கிறதென்பதைக் குறித்துக்கொள்ளவேண்டும். "ராஜகோபாலன் கடிதங்க"ளிலே இந்த ச-வது (நாலாவது) கடிதத்தை மட்டும் எழுதி வைத்து இறந்திருந்தாலும் நம் ஆசிரியன் உயர்ந்த வசன கர்த்தாக்களின் வரிசையிலே இடம் பெறுவர் என்று உறுதி சொல்லலாம்.

கவிதைக்குப் போலவே உயர்ந்த வசனத்துக்கும் கற்பனைசக்தியும் உணர்ச்சித்திறனும் அவசியமாகின்றன. உணர்ச்சியே வசனத்துக்கு உஷ்ணமும் ஒளியும் கொடுக்கவேண்டியிருக்கிறது. கற்பித்துச் சொல்லாத நிகழ்ச்சிகளுக்கு உயிர் தரக் கூடவில்லை. ஐயர் இவ்விரண்டு சக்திகளையும் திறமையுடன் கையாளுகிறார். அவர் பெற்றிருக்கும் கற்பனை சக்தி, காட்சிகளையும் சம்பவங்களையும் கண்முன்னே காணுவதேபோல் சித்தரிக்க உதவுகிறது. "ராஜகோபாலன் கடிதங்கள்" ஒன்றில் ஐயர் தமிழ்நாட்டின் பழஞ்சரிதத்தைச் சலனப்படக்காட்சி (Cinematograph) யில் காண்பதுபோல் சாக்ஷாத்கரித்திருக்கும் ஒப்பற்றதிறமை நம் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விடுகிறது.

ஐயரின் வசனம் ஓட்டத்துடனும் கம்பீரத்துடனும் செல்லுகின்றது. அவர் நூல்களைப் படிக்கும்பொழுது ஆசிரியன் நம் எதிரே நின்று உரையாடுவதேபோல் தோன்றுகிறது. திசைச் சொற்களும் பேச்சுவழக்கு மட்டிலேயுள்ள சொற்களும் சொற்றொடர்களும் எவ்வளவு இயற்கையாக எத்தனை பொருத்தமாக அவர் வசனத்தில் சேர்ந்து விடுகின்றன!

ஐயர் தமிழ் வசனத்திற்கே புத்துயிரும் புதியதோர் உருவமும் கொடுத்திருக்கிறார் என்று சொல்லவேண்டும். வசனத்தின் நடையமைப்பில் எண்ணற்ற வேறுபாடுகள் தோற்றுவிக்கிறார். வாக்கியக்கட்டு ஒரே மாதிரியாக விழுந்து வந்து நம்மைக் களைப்படையச் செய்துவிடாமல் மாறிக்கொண்டே வந்து வாசகர்களுக்கு இன்பத்தை விளைக்கிறது. ஒரு நண்பனின் குரலையும் அவன் நடை உடை பாவனைகளையும் எவ்வளவு சுளுவிலே நாம் கண்டுகொள்ளலாகுமோ அவ்வாறே பேராசிரியர்களையும் வசனகர்விய நடைமுறைகளிலிருந்து தெரிந்து கொள்ளலாமென்பது மேனுட்டு இலக்கணிகளின் துணிபு. இவ்வாறே ஐயரின் வசன மெங்கும்



அவர் எழுதிய துணுக்குகளிலுங்கூட, ஐயரின் தனி முத்திரையைச் சுட்டிக்காட்டலாகும்.

ஐயர் வடசொற்களை அதிகமாகப் பெய்து வைத்துத் தமிழ் நடையைக் கெடுத்துவிடுகிறாரென்று அடிக்கடி குறை கூறப்படுகிறது. 'மணிப்பிரவாளம்' என்னும் சுவைகெட்ட மொழிக்கலப்பு எத்துணை அழகுடனும் வலிமையுடனும் பொலிந்த போதினும் இலக்கியத்திலே இடம்பெற முடியாதென்பதை ஜைன வைஷ்ணவ உரையாசிரியர்கள் தமிழ்நாட்டிலே நிரூபித்து விட்டார்கள். பிறமொழிக்கலப்புச் சிறிதுமின்றித் தனித்தமிழிலேயே எழுதவேண்டுமென்கிற அவா இதுகாலே தமிழரிலே ஒருபகுதியினருக்கு இருந்து வருகிறது. இந்தச் சுத்தவாதிகள் மொழிநூல் உண்மைகளை அறிந்து கொள்ளவில்லையே என வருந்துகிறோம். அவர்கள் ஆங்கிலம் முதலிய பிறமொழிகளின் சரிதங்களையும் வங்கம் முதலிய ஆரிய மொழிகளையும், தெலுங்கு முதலிய திராவிட பாஷைகளையும், தமிழிலேயே சங்க காலத்திற்குப் பிந்திய இலக்கியங்களையும் ஆராய்ந்து தங்கள் கொள்கையை மாற்றிக்கொள்வார்களாக. ஆனாலும் "ஒரு பெரிய சிருஷ்டி சக்தி உத்போதன நேரத்தைப் பிரதீக்ஷித்துக்கொண்டிருந்தது" என்றெல்லாம் எழுதும் பொழுது ஐயரை நாம் ஆக்ஷேபிக்காமலிருக்க முடியவில்லை. தமிழ் நடைக்கு உயிரும் ஊனும் ஊட்ட இத்தனை வடசொற்கள் வேண்டுமென்று நினைப்பவர்கள் தமிழின் தனிச்சிறப்பை அறிந்து கொள்ளவில்லை யென்று சொல்லுவோம். ஐயர் இவ்வாறு, மிதமிஞ்சி வடசொற்களை எடுத்தாளுதற்கு முக்கியமான காரணம், அவருக்குத் தமிழிலக்கியத்தில், கம்பனுக்கும், ஒன்றிரண்டு சங்க இலக்கியங்களுக்கும், வேறு சில நூல்களுக்கும் வெளியில் ஆழ்ந்த பயிற்சி இல்லாததே என்று கூறவேண்டும்.

தமிழ் வசனத்தையே ஐயர் சிருஷ்டித்துவிட்டார் என்றுசொல்ல முடியாவிட்டாலும், தமிழ் வசனத்தில் இதற்குமுன் இல்லாத புதியதோர் ஆற்றலும் வேகமும் அமைப்பும் மனித இதயத்திலே கிளர்ந்தெழும் எத்துணை நுண்ணிய எண்ணங்களையும் பெயர்த்துச் சொல்லும் திறமையும் ஐயர் செய்த தமிழ்த் திருப்பணி என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். தமிழ் வசனத்தில் பாரதி ஒருவருக்கே ஐயருக்கிணையான பெருமையும் ஸ்தானமும் கிடைக்குமென்று தோன்றுகிறது. "ஞானரத"த்தின் பேரழகும், கற்பனைசக்தியும், கவிசல்மும் ஐயரின் நூல்களில் எங்கும் பார்க்க முடியாதென்பது உண்மையே. ஆனால் ஐயரின் படிப்புக்கும் பயிற்சிக்கும் ஆராய்ச்சித் திறமைக்கும் பாரதி எங்கே போவது? வசனம் எழுதும் முறைச் சிறப்பும் வீரமும் வேகமும் வாக்கியங்கள் பலதிறப்பட அமைக்கும்ஆற்றலும் பாரதியாரிடம் இல்லாத ஐயரிடம் காணப்படும் தனி விசேஷங்கள். சுப்பிரமணிய பாரதியும் சுப்பிரமணிய ஐயரும் தமிழ்ப் பூந்தோட்டத்திலே ஒரே கொம்பரில் பூத்தொளிர்ந்து தமிழ் மறுமலர்ச்சியை அலங்கரித்த இருமலர்கள். வசனமாகிற காம்பிலே பூத்தது ஒருமலர். கவிக்காம்பிலே பூத்தது இன்னொரு மலர். கவிதைக்கும் வசனத்திற்குமுள்ள பேதங்களே இவ்விரு அறிஞருக்குமுள்ள வேறுபாடாகும்.

ஐயரின் அகாலமரணம் தமிழ்மொழிக்கும் தமிழ் நாட்டுக்கும் எத்தனை நஷ்டத்தை உண்டுபண்ணி விட்டதென்பதைப் பலர் அறிந்து கொண்டிருக்கமாட்டார்கள். அவரை நேரில் தெரிந்து கொள்ளும் பாக்கியத்தைப் பெற்றவர்களே அவருடைய எழுத்துக்களிலும் வாழ்க்கையிலும் பிரதிபலிக்கின்ற தென்பதை உணரக்கூடும். ராஜகோபாலன் கடிதங்களும் கம்பராமாயண ஆராய்ச்சியும் முற்றுப்பெறாமற் போய்விட்டன. கதைகளும் நாடகங்களும் வியாச வரிசைகளும் எழுதிக் குவித்துக்கொண்டே செல்லவேண்டுமென்று ஐயர் உதிரத்துடன் ஊறிக்கிடந்த பேரவா நிறைவேறாது போய்விட்டது. "கரிகாற் பெருவளவன் காலம் அல்லது அதற்கும் முந்தியயுகம், ராஜேந்திர சோழன் காலமாகிய இந்தப் பெருங் காலங்களில் நிகழ்ந்ததாகப் பலகதைகள் எழுதவேண்டுமென்கிற ஆசை எனக்கு இருக்கிறது" என்று வரும் ராஜகோபாலனின் ஆசைத்துடிப்பு ஐயரின் ஆசைத் துடிப்பேயாகும். நம்தமிழ்நாட்டு தியூமாஸாகவோ விக்தர் ஹியூகோவாகவோ ஸ்காத்தாகவோ ஆக்கவேண்டுமென்று ஐயர் இன்பக்கனவுகண்டு வந்திருக்கிறார். இத்துணைப்பேராசிரியனைப் பறிகொடுத்த தமிழ்நாட்டின் துரதிர்ஷ்டம்தான் என்னே! பண்டைத் தமிழர், வீரக்கல் நாட்டி இறந்த பெரியாருடைய ஞாபகம் தலைமுறை தலைமுறையாகச் சிறந்தொளிரச் செய்தனர். நம் ஆசிரியனும் காலத்தினால் சிறிதும் பழுதுபடாத சிறந்த வீரக்கல் ஒன்றைத் தமிழ் இலக்கியத்தில் தாமே நாட்டியிருக்கிறார். ஐயரின் தமிழ்ப்பெருங் காதலையும் கலைச்செல்வத்தையும் பெற்றுக்கொண்டு அவர் நூல்களை ஊன்றிப்படித்து அவர்செய்து முடிக்காது விட்ட பணிகளைச் சிரமேற்கொண்டு தமிழர் முடிக்க முந்துவதே ஐயரிடத்தில் தங்களுக்கிருக்கும் அன்பையும் பெருமதிப்பையும் வெளிப்படுத்திக்கொள்ளும் வழிகளிலே தலைசிறந்ததாகும்.

---

# * "கைம்பெண்ணின் மகன்".

---

பாண்டியன் எழுதியது.

உலகமாகிய சந்தையிரைச்சலினிடையே வசித்துச் செவியடைத்திருப்பவன் மூத்தம்பேட்டைக்கு, ஒரு ஞாயிற்றுக்கிழமை சுற்றிப்பார்க்கச் செல்லும் சிரமத்தை மேற்கொள்வானுயின், எங்கணும் அமைதி நிறைந்து மனக்கிண்ணத்தைத் ததும்பி வழிய நிரப்பும் களியாட்டமடைவான். அசுரவேலை செய்து ஓயாது சுழன்று, சுற்றுங் காதவழிக்குச் செவிடுபடச் செய்யும் ஆலையின் ஓசையும், கருமான் கைத்தலத்திலிருந்து எழுந்தெழுந்து வீழும் சம்மட்டியின் சப்தமும், உழவன் எருதுகளைப் பல பரிபாஷைகள் சொல்லி ஓட்டி உழும் இரைச்சலும், வண்டிகள் ஓடும் ஒலியும்—எல்லாம் அன்று அடங்கி விடுகின்றன. சுருங்கச் சொல்லின் உயிரற்ற இயந்திர வட்டிலும், இயங்கும் மனிதன் கையும் அன்று ஓய்வெடுத்துக் கொள்ளுகின்றன. வீட்டு நாய்களும் வழிப்போக்கரின்மையால் அதிகம் குரைப்பதில்லை. காற்றும் அன்று வணங்கி அடங்கிவிட்டது போலத் தோன்றும். அந்நாள்தான் இனிமையான புனிதம் நிறைந்து அமைதிபொங்கி, ஒளிபரப்பி, மண்ணும் விண்ணும் மணக்கும் நாள்.

பக்தி செலுத்தித் தொழுவதற்கு அமைந்த நாள், ஓய்வுநாளாய் அமைதி நிரம்பி யிருக்கவேண்டுமென்று விதித்திருப்பது நன்றேயாகும். இயற்கை அரசியின் மலர்முகத்தில் ஒளிரும் சாந்தி மக்கள் மனதில் ஒரு ஆத்மார்த்த உணர்ச்சியை யுண்டாக்கி ஒழுக்கத்தை யளிக்கும் வல்லமையுள்ளது; காமக்குரோதங்கள் அதனால் அடக்கிவிடப்படுகின்றன. நாமும் ஆத்மாவின் உண்மை யொளியை, தத்துவத்தை நம்முள்ளேயறிகின்றோம். என்மட்டில், இயற்கையின் புனித வெழிலின் நடுவே திகழும் வேதக் கோயிலில் இருக்கும் பொழுது வேறெங்கும் உதியாத பல உணர்ச்சிகள் என்னுள் தோன்றுகின்றன. வேறொன்றுமில்லா விடினும் அன்று மற்றைய ஏழுநாளினும் இல்லாத புதுமையாக நான் முன்னைவிடச் சற்று மேம்பட்ட மனிதனாகவே ஆகின்றேன்.

நான் அடிக்கடி மூத்தம்பேட்டைக் கோயிலுக்குச் செல்லுவது வழக்கம். பழமையான அதன் சுவர்களும், கறுத்துப்போன சாளரக் கதவுகளும், உயர அமைக்கப்பட்டிருந்த என்னையாளுடைய ஐயன் உலகுய்ய ஏறிய சிலுவையின் குறியும்—எல்லாம் கடந்துபோன பல்லாண்டுப் பழமையின் பெருமையைக்காட்டி, இதுவே தியானத்திற்கு ஏற்ற இடமென்று உணர்த்தின. கோயிலைச்சுற்றிச் செல்வர் பலர் இருந்ததால் நவநாகரிகமும் கொஞ்சம் அதன் புனிதத்தோடு கலந்து தோன்றியது. செல்வர் பலர் உயர்ந்த பட்டாடைகளைத் தரித்துக்கொண்டு கண்ணைப் பறிக்கும் எழிலுடன் தொழவருவார்கள். பெண்டிரும் குழந்தைகளும் ஆடையாலும் நடையாலும் அழகு செய்துகொண்டுவருவது சிறந்ததோர் காட்சியாகும். ஆயினும் அங்கிருந்த தொழுகுழாம் முழுமையிலும், உண்மையான கிறிஸ்தவப் பணிவும் பயபக்தியும் நன்கமையப் பெற்றிருந்தவள் ஒரு கிழவியேயாவள். அவ்வம்மையின் தேகம் மெலிந்து, குறுகி, நரம்பு தளர்ந்து, தோல்வற்றி, ஒளி மழுங்கியிருந்தது. இதயத்துள்ள தூய்மையே போலத் தலையும் தூயதாய் மறுவின்றி வெண்மையாய்த் திகழ்ந்தது. அவள் மிகவும் எளியவளன்று. வேண்டுமளவு தற்பெருமை கொண்டு, தாழ்மையானதாயிருப்பினும் மிகத்தூய்மையான ஆடையை அவள் அணிந்திருந்தாள். அவள் கொஞ்சம் மரியாதையளிக்கப்பட்டு மற்ற ஏழைகளுடன் உட்காராது பலிபீடத்திற்கு ஏறும் படிகளில் உட்கார்ந்திருந்தாள். உலகப்பற்று, அன்பு, நட்பு, சமூகம் எல்லாவற்றையும் விட்டு மேலெழுந்து இறைவனை யடைவதொன்றையே கருதியவளாய் அவள் காணப்பட்டாள். பிரார்த்தனைப் புத்தகத்தை அவள் கைகள் தாங்க இயலாது தடுமாறின.

* (வசன ஆசிரியன் வாஷிங்டன் இர்விங்குவின் 'The widow and her son' என்னும் உரைப்பகுதியைத் தழுவியது.)

ஒளி குன்றிய அவள் கண்களுக்கு எழுத்தொன்றும் புலப்படுவதில்லை. எனினும் அவளும் தள்ளாடிக் கொண்டே யெழுந்து தன் பழுத்த மெய்யைப் பணிவித்துத் தோத்திரம் செய்வாள். வேதமுழுமையும் அவளுக்கு மனப்பாடமாயிருக்கவேண்டும். அக்கோயிலினின்றும் எழுந்த கீதத்திற்கும், ஏனையோர் பிரார்த்தனைக்கும் மிகமிக முன்பாகவே அவள் தட்டித் தடுமாறித் தாழ்ந்த குரலில் இறைவனைக் குறித்து ஓதிய பிரார்த்தனையெழுந்து சென்றது.

எனக்கு நாட்டுப்புறக் கோயில்களைச் சுற்றிப் பார்ப்பதில் மிகுந்த விருப்பமுண்டு. அதிலும் இக்கோயில் தகுந்த ஓரிடத்தில் நன்கமைக்கப்பெற்றிருந்ததால் அது அடிக்கடி என்னைத் தன்னிடம் அழைத்துக்கொள்ளும். அது ஒரு சிறு குன்றின்மேல் கட்டப்பட்டிருந்தது. அக்குன்றைச்சுற்றி யார் எங்குசென்றாலும் தன் வழியையே நோக்கி ஓடிக்கொண்டிருந்த ஒரு சிறு நீரோடை வானத்தைப் பிரதிபிம்பித்துக் காட்டிக்கொண்டிருந்தது. சுற்றிலும் எங்குபார்த்தாலும் பலபல வண்ணமான சிறுமலர்கள் மலர்ந்திருந்த பசும்புற்றரைகள் ஒரே மரகதப் பச்சையாய்விளங்கின. இன்னும் பலமரங்களும் இருந்தன. இவற்றிற்கு நடுவே பழமையும் பெருமையும் வாய்ந்த நீண்ட 'கோரி' போன்று எழுந்து விளங்கியது. ஒரு நாட்காலை நான் அங்கு உட்கார்ந்துகொண்டிருக்கும் பொழுது இரண்டு வேலையாட்கள் ஒரு சவக்குழிதோண்டுவதைக் கண்டேன். கோயில் முற்றத்தில் மிகவும் ஒதுங்கியதாயும் கவனிக்கப்படாததாயும் உள்ள ஒரு மூலையில் அவர்கள் வேலை செய்துகொண்டிருந்தனர். அங்கு சுற்றிலுமிருந்த பெயரில்லாத கல்லறைகளைப் பார்த்தால் அங்குதான் வறுமையில் உழன்ற எளியவர்களையும் திக்கற்றவர்களையும் புதைப்பது வழக்கம் என்பது தெரியவரும். ஒரு எளிய கைம்பெண்ணின் ஒரேமகனுக்காகப் புதிய குழி தோண்டப்படுவதாய் எனக்கு அறிவிக்கப்பட்டது. மக்கள் தாம் தோன்றிய மண்ணொடு மண்ணாய்க் கலந்த பின்னும் ஏற்றத்தாழ்வுகள் பாராட்டப் படுவதைப்பற்றி நான் சிந்தனை செய்து கொண்டிருந்தேன். உடனே மணியோசை கேட்டது. பிரேத ஊர்வலம் நெருங்கி வந்துவிட்டதைக் கண்டேன். சவச்சடங்குகளில் யாதொரு ஆடம்பரமுமின்றி எளிமையே தென்பட்டது. சாதாரணப் பலகைகளால் செய்யப்பட்டு, எவ்விதப் பெருமையுமின்றி ஒரு சவப்பெட்டி சில கிராமவாசிகளால் கொண்டுவரப்பட்டது. கோயிற் பலவேலைக்காரன் மிக அலக்ஷியமாய் முன்னே நடந்து வந்தான். கூலிக்கு மாரடிக்கும் பொய்யர் ஒருவரும் துக்கித்துக்கொண்டு வரவில்லை. ஆனால் சவத்தினருகே உண்மையான தாங்கொணாத்துயரத்துடன் ஒருத்தி தள்ளாடி விழுந்து வந்து கொண்டிருந்தாள். இவள் தான் காலஞ்சென்றவனின் முதிய அன்னை. நான் முன்பு பலிபீடப்படியில் வீற்றிருக்கக்கண்டவளும் இவளே. ஒரு தாழ்மையான நண்பரால் தாங்கப்பட்டும் ஆற்றப்பட்டும், தழல்மேல் மிதிப்பதுபோல அவள் அடிமேல் அடிவைத்து வந்தது என்மனதை இளகச் செய்தது. சில கிராமவாசிகளும் அவளைச் சூழ்ந்திருந்தனர். குழவித் தொட்டிலுக்கும் பிரேதப் பெட்டிக்கும் விசேஷ



வேற்றுமை யறியாத குழந்தைகள் சிலரும் கைகோர்த்துக்கொண்டு வேடிக்கை பார்க்க வந்திருந்தனர்.

அன்று நடந்த சமயக்கிரியைகளைப் பார்த்தால் மனதில் யாதொரு உணர்ச்சியும் உண்டுபண்ணமாட்டா. அவ்வளவு துரிதமாயும் தெளிவில்லாமலும் அவை நடந்தேறின. வேதத்திலிருந்து எடுத்து வாசிக்கப்பட்ட பாகங்கள் அருகிலுள்ளவர் செவியிற்படாது கேவலம் ஒரு சொற்கட்டாகத் தான் தோன்றின. எளிமை காரணமாய், மனதை உருகச் செய்யும் மரணச்சடங்குகள் வெகு அலட்சியமாயும் விரைவாயும் முடிவாயின.

நானும் குழியண்டை நெருங்கினேன். சவப்பெட்டி கீழே தரையில் வைக்கப்பட்டது. அதன்மேல் —"இருபத்தாறு வயதான ஜியார்ஜ் சோமரன்"— என்று வரையப்பெற்றிருந்தது. எளிய அக்கிழவி பிறர் உதவியால் முழந்தாளிட்டுப் பணிந்து வீழ்ந்தாள். அவள் உலர்ந்த கைகளையும் அசையும் இதழ்களையும் கண்டால் கர்த்தனைத் துதிப்பது போல் தோன்றியது. இக் காட்சியைக்கண்டதும் எனக்கு, 'ஒருத்தி நான்,— ஒருத்திக்கிந்த ஒருமகன், இவனும் தேறும் கருத்திலாச் சிறியன். ஐய, அருத்திசால் அறவோர் தேறும் அருட்பெருங்கடலே! எங்குமிருத்தி நீயறியாய் கொல்லோ?" என்ற கவி ஞாபகத்திற்கு வந்தது. அவள் தன் அருமருந்தன்ன குமரனின் கடைசி அடையாளங்களை, அன்னைமார்க்குரிய குழைந்த அன்புடன் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சுவிட்டு உருகிக் கொண்டிருந்தாள்.

குழியிற் பெட்டியை இறக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இச்சமயத்தில் தான் மனம் பதறுகின்றது, இதழ்துடிக்கின்றது, மெய்விதிர்த்து ஆடுகின்றது. நம் அன்பிற்குரியவரைக் குழியிடையிறக்கும்பொழுது மண்ணையும் கல்லையும் வெட்டிமூடும் மண்வெட்டிகளின் ஓசையே மற்றெல்லா ஓசைகளையும்விட மனதைப் பிளந்துவிடுவதாயிருக்கின்றது. தன்னை மறந்திருந்த அன்னையும் நீர்நிறைந்திருந்த கண்களை விழித்துப்பார்த்தாள். கயிறுகளால் பெட்டியைக் கீழே யிறக்குவதைக்கண்ட அவள், கைகளைப் பிசைந்துகொண்டு துயரக்கடலில் அழுந்தி விம்மிவிம்மி யழுது கரைந்துருகிவிட்டாள். அருகிலுள்ளவர் யாராலும் அவளையாற்ற இயலவில்லை. அவள் துயரம் ஆறாத்துயரம் என்பதைக் காட்ட அவள் கைகளைப் பிசைவாள், தலையைச் சற்றே அசைப்பாள். பெட்டி கீழே இறக்கப்படும் பொழுது கேட்டசிறு சப்தங்கள் அவளைச் சித்திரவதை செய்தன. பெட்டி மண்ணில் இலேசாகத் தட்டியதா லுண்டான ஓசையை அவள் செவிமடுத்ததும் அன்னையின் மெல்லியற்பாசமும் பரிவும் மேலெழுந்தன. உலகத்துன்பம் ஒன்றும் அணுகமுடியாத ஓரிடத்திற்கு அவன் சென்ற பின்னும் ஏதாவது துன்பம்நேர்ந்து மெய்வருந்துவனே என்றெண்ணி அவள் ஏங்கி அயர்ந்து வீழ்ந்தாள்.

இக்கொடிய ஊனையும் உயிரையும் உருக்குங்காட்சியை என்னால் அதிகம் பார்க்கமுடியவில்லை. குறித்த பொருளை யிழந்து அன்பும் அருளும் ஆறாய்க் கரை புரண்டோடு மிடத்தே பேசாது நிற்பதுமிருகத்தன்மையென்றெண்ணி நான் வேறொரு புறஞ் சென்று அவர்களெல்லோரும் போகும் வரை தங்கியிருந்தேன்.

அக்கிழவி தனக்கு உலகத்திலே உயர்வற உயர்ந்து நிகரிலா அன்பிற்குரிமையாயிருந்த கட்டிளஞ் செல்வத்தைச் செல்லரித்துச் சிதைவுபட மண்ணிற் புதைத்துவிட்டு, குறைநாள் முழுதும் பேசாது ஏகாந்தமாய்க் கரைகாணாத் துன்பத்தில் மூழ்கிமூழ்கிப் புண்படத் திரும்பிப்போகும்காலத்திலே அவளைக்கண்ட எனது துயர் சொல்லுந்தரமன்று. என் நெஞ்சடைத்துவிட்டது. செல்வம் மிகுந்த சீமான்களுக்குத் துன்பம் வந்தால் என்ன! ஆற்றுவதற்கு அருந்துணைவரும் நண்பரும் இருக்கின்றனர்—மனதை வேறுவழியில் திருப்பப் பல களியாட்டங்களிருக்கின்றன—உலகமே அவர்கள் துயரை நீக்கி வேறு வழிக்குக் கொண்டு செல்லுகின்றது. வாலிபரின் துயரந்தான் என்னே! வளர்ந்துவரும் அவர்கள் மனம் பட்ட புண்களை மறைத்து மேலே சதை கொண்டு மூடிவிடுகின்றது—அவர்களுக்கு எதற்கும் வளைந்து கொடுக்கும் ஆற்றலிருக்கின்றது—அவர்கள் ஆசை இழந்ததை விட்டு விட்டுப் புத்தப் புதியவைகளிற் சென்று விடுகின்றது. ஆனால் ஆற்றுவதற்குப் புறத்தில் ஒன்றுமில்லாத எளியவர் நிலையென்னே? அதிலும் வயது முதிர்ந்தவர்கள் படும் துயரம் சாமானியமாகுமா? அவர்கள் மரணம் இன்றோ நாளையோ? பின்னாளில் எவ்விதக் களிப்பையும் எதிர்பாராதவர்கள். அதிலும் தனிமையாய், ஆண்டு பலவாய், நரைத்துத் தளர்ந்து, தனிமையாய் ஆற்றுவாரின்றியுள்ள ஒரு கைம்பெண் தன் ஒரே மகனை யிழந்துவிடுவதென்றால் அத்துயரை எப்பெயரிட்டழைப்பதென்பது எனக்குப் புலனாகவில்லை.

நான் கோயிலை விட்டு வெளியே சென்றபொழுது இச்சடங்குகளுக்கு உடனிருந்த ஒருத்தியைக் கண்டேன். அவள் அக்கிழவியைச் சற்று தேற்றித் தனிமையான அவள் வீட்டில் கொண்டு சேர்த்துவிட்டுத் திரும்ப வந்துகொண்டிருந்தாள். கீழ்க்கண்டகுறிப்புக்களை அவளிடமிருந்து நான் அறிந்தேன்:—

அக்கிராமத்தில் சோமரன் பெற்றோர்கள் குழந்தைப்பருவ முதலே வசித்தவர்கள். ஒரு சுத்தமான குடிசையில் குடியிருந்துகொண்டு ஒரு சிறு தோட்டத்தைப் பயிர்செய்து, இன்னும் மெய்வருந்திப் பாடுபட்டுச் சம்பாதித்து அவர்கள் தூய்தோர் வாழ்க்கையை நடத்திவந்தார்கள். அவர்களின் அந்தியகாலத்திற்கு உதவியாயிருக்க அந்த ஒரு மகனேயிருந்தான். அவன் இனிமையும் நற்குணமுமன்றி நல்ல அழகும் வாய்ந்தவன். பெற்றோர்க்குப் பணிசெய்வதில் பிழைப்பறியாதவன். நீண்ட அவன் தேகத்தோடு சாய்ந்துகொண்டு, அவன் தாழ்ந்த கைகளால் தாங்கப்பட்டுக் கோயிலுக்கு ஞாயிற்றுக் கிழமைகளில் வரும்பொழுது அக்கிழவி அளவிலா ஆனந்தமடைவாள். தன் கணவனைவிட சோமரன் தன்னை யழைத்துச் செல்வதையே அவள் பெரிதும் விரும்புவாள்.

பின்னால் விவசாயத்தில் மிகுந்த நஷ்டம் மேற்பட்ட ஒரு வருஷத்தில் சோமரன் அருகிலிருந்த ஆறொன்றில் ஒரு ஓடத்தில் வேலைக்குச் சென்றான். அங்கு அவன் வெகுநாளிருக்கவில்லை. ஏனெனில் அவனைச் சில முரட்டு மனிதர் பலவந்தமாய்ப் பற்றிக் கட்டாய வேலை வாங்குவதற்குக்



கொண்டுபோய்விட்டார்கள். அவன் பெற்றோருக்கு அவன் பிடிபட்ட விஷயம் மட்டும் தெரியுமேயன்றி அவன் எங்கு யாருடனிருக்கிறானென்பது தெரியவில்லை. அவர்களின் முக்கிய உதவியாயிருந்த தூண் பறிக்கப்பட்டுவிட்டது. சோமரன் தந்தை—இயற்கையிலேயே மெலிந்திருந்த தேகம்—நோய்கண்டு இறந்துவிட்டான், அக்கிழவியும் பிறரளிக்கும் தர்மத்தை நோக்கி வாழவேண்டியதாய் விட்டது. அவளுக்குச் சுற்றுப்புற மெங்கும் மரியாதை செய்வார்கள். அவள் சிறு தோட்டத்தை ஊரிலுள்ள சில நன்மக்கள் பயிரிட்டு உதவிசெய்தார்கள். கொஞ்சநாளைக்கு முன்பு அக்கிழவி காய் கறி கொண்டுவரக் கொல்லைக்குப் போனபொழுது தோட்டக்கதவு திடீரென்று திறக்கப்பட்டது. புதியவன் ஒருவன் உள்ளே வந்து விழித்து விழித்து யாரையோ பார்த்துக்கொண்டிருந்தான். அவன் மாலுமியுடை தரித்திருந்தான். மிகவும் மெலிந்து வெளுத்து, மனமும் உடலும் நோயாலுடைந்திருந்த அவன் அவளைக் கண்டவுடன் தள்ளாடிச் சென்று முழந்தாளிட்டுப் பணிந்து குழந்தைபோல் அழுது கதறினான். கிழவி ஒன்றுமறியாது அவனைப் பார்த்துப் பார்த்து விழித்தாள். "ஓ! என் அன்பிற்குரிய அன்னையே! உன் ஒரு மகன்—எளிய சோமரனை நீ அறியவில்லையோ?" என்று வந்தவன் விம்மி யுரைத்தான். உண்மையில் முன்னாளில் மிகுந்த பொலிவுடன் விளங்கிய அவள் மகன் சோமரனே இவன். மலர்ந்ததன்றெனினும் வாடிய முளரியை யொத்த அவன் முகந்தான் இது. பிறநாட்டிற் சிறைப்பட்டும், நோய்வாயுழன்றும், அழகிழந்து ஒரு எலும்புக்கூடாகத் தான் குழவிப்பருவத்தில் குதித்து விளையாடிய இடத்தில் இளைப்பாறவேண்டுமென்றே அவன் இங்கு வந்துவிட்டான்.

பிரிந்தவர் கூடிய இப்பெரு நாளைக் குறித்து—இன்பமும் துன்பமும் கலந்து நடனஞ் செய்யும் இச்சந்திப்பைப்பற்றி நான் ஒன்றும் உரைக்கப்போவதில்லை. சோமரன் உயிரோடு வந்துவிட்டான். அய்யன் வந்துவிட்டான். அழகன் வந்துவிட்டான். அரும்பெறலமிழ்து வீடு முழுதும் வந்து நிறைந்துவிட்டது. இனி அவன் கிழவிக்கு உறுதுணையாயிருப்பான்.

ஆனால் இறைவன் சித்தம் வேறு விதமாயிருந்தது. தளர்ந்த அவன் மேனி நாளுக்கு நாள் மெலிந்துவிட்டது. தன் அன்னை துயில் நீத்துப் பல இரவுகள் படுத்திருந்த ஒரு பாயில் அவனும் படுத்திருந்தான். அதை விட்டு அவன் ஒரு பொழுதும் எழுந்திருக்கவேயில்லை. ஊராரனைவரும் செய்த உதவியும் வைத்தியர் காட்டிய பரிவும் ஒன்றும் பலனளிக்கவில்லை. அக்கிழவி இறைவனுக் கிழைத்த பிரார்த்தனையே பலிக்கவில்லையானால் மருந்தென்செய்யும்?

இரண்டொரு ஞாயிற்றுக்கிழமைக்குப் பின்னால் கிழவியைக் கோயிலிற் காணவில்லை. துயரம் தலைகாட்டாத ஒருலகில் இழந்த நண்பரைக் கண்டு கலந்து கொள்ளுவதற்கு அக்கிழவியும் அமைதியாய் மண்ணுலகை விட்டுச் சென்றுவிட்டாளென்று கேட்டு நான் மனதைச் சற்று சமாதானஞ் செய்துகொண்டேன்.

---

# கண்ணகி.

(வள்ளல் மனைவி.)

தமிழ்ப்பண்டிதர் அ. கிருஷ்ணசாமி நாயுடு.

இக்கட்டுரைத் தலைப்பைக்கண்டவுடனன்றே, அனைவரும் ஒரே கருத்துக்கொள்வர். கண்ணகி என்னும் கடவுள் பெயர் எல்லோர் கருத்திலும் ஒன்றுகவன்றே பதிந்துள்ளது. கண்ணகி என்னும் மொழி கேட்டவளவினே, காவிரிப்பூம்பட்டினத்துக் கற்புக் கடவுள் என்றே கழறுவர்; சிலப்பதிகாரச் செல்வி என்றே செப்புவர்; கோவலனின் கோமணி என்றே கூறுவர். இங்ஙனம் பலப்பல உள்ளங்களும் ஒன்றுதல்இயல்பு;இயல்பு. தமிழகம்என்னும்தமனியத்தகட்டில், பலப்பல படியாக இழைக்கப்பெற்றிருப்பது, கண்ணகி என்னும் கற்புக்கனிகலமன்றே? ஆகையான், கற்புக்கடவுள் கண்ணகியைப்பற்றி எத்துணை கட்டுரைகள் வரையினும், எத்துணை சொற்பொழிவுகள் நிகழ்த்தினும், கையும் களையாது; வாயும் ஓயாது. எமது தெய்வம்—தமிழகத் தெய்வம்—கண்ணகியைக் கருத்திற்கொண்டே இக்கட்டுரையும் வரைகின்றனன் திருந்திய சங்கத் தமிழ் என்னும் திருப்பாற்கடலுள், ஆர்வமென்னும் அழகிய மத்தினைக்கொண்டு கடையுங்கால், உண்டாய அமுதத்திரள்களென்னும் பெண்ணமுதங்களுள், இக்கண்ணகி என்பாள் ஓர் பெண்ணமுதம். இக்கண்ணகி என்பாளுக்கும், சிலப்பதிகாரச் செல்வி கண்ணகி என்பாளுக்கும், பெயரின் ஒற்றுமையேயன்றிக் கதையின் ஒற்றுமையும் புகலப் புகலப் புலனுகும். இக்கண்ணகி என்பார், தமிழ் வள்ளல் எழுவருள் ஒருவராகிய வையாவிக்கோப் பெரும்பேகன் என்பாரின் மனைவியார். பெரும்பேகனைப் பற்றிச் சிலச்சில செப்புதல் அமையுமன்றே? ஆகையால், சுருக்கமாகப் பேகனைப் பற்றிப் பேசுவன்.

பல்லோர் பரவும் பழனியம்பதியே பேகனின் பெரும்பதி. பழனியைத் திருவாவினன்குடி என்றும் பொதினி என்றும் பழந்தமிழ் நூல்கள் பகரும். பழனியைப்பற்றிப் பகரும் இடங்கள் அனைத்தும் திருவாவினன்குடி, பொதினி என்று புகலப்படுகின்றன. பழனியென்னும் பெயர் பழந்தமிழ் நூல்களிற்காணேம். "ஆவினன்குடி உறைதலும் உரியன்" என்றே உவந்து நவில்வர் நக்கீரர். பொதினி என்பது பழனி எனப் பிற்காலத்துச் சிதைந்து வழங்கப்பட்டதுபோலும்.

பழந்தமிழ்க் குடிகளுள் ஒன்றாகிய "ஆவி என்னுங்குடியில் பிறந்தவன் பேகன்; அக்குடிக்குக் கோமானுகத் திகழ்ந்தவன்; புகழும் பெருமையும் பெற்றவன். இதனுன், வையாவிக் கோப்பெரும் பேகன் எனச் சிறப்பித்துச் சொல்லப்பெற்றனன். ஓர் நாள், நமது தமிழ்வள்ளல் பேகன் பெருமான், மலைவளங்கண்டு இயற்கை இன்பங்களைத் துய்த்தற்குத் தனது மலைப்பூஞ்சாரல் பொழிலின்கண் போவானுயினன். அங்கு மலையின் மாண்பைக்கண்டு, மகிழ்ந்து இயற்கை இன்பங்களை நுகர்ந்து, தன்னைமறியாமே உலாவிக்கொண்டிருந்தனன். அதுகாலை, கனத்தமழை கடுகிவருவதும் கண்டிலன். அம்ம! அம்ம! அக்கனத்த மழையினுல்பேகனின் நனையா உடலம் நனைந்தது. நடுங்காமேனி நடுங்கினது. பெரும்பேகனின் உருவமைந்த உடம்பின் உட்செல்வதற்குப் பல்லாண்டு பல்லாண்டாகப் பதுங்கிக் காத்துக்கொண்டிருந்த குளிரும், நடுக்கரும், இன்று பேகனின் பெட்பமைந்த உடம்பில் எளிதே நுழைந்தன. வேண்டிய வேண்டியாங்குசயும்நமது வள்ளல் பெருமான் பேகன், இக்குளிருக்கும் நடுக்கருக்கும் தன் பொன்மேனி வழங்கலாயினன்: மேலும், அவற்றின் வயமுமாயினன். இக்குளிர் நடுக்கருக் காற்றுதவனுகி, ஓர் பெரு மரப்பொந்தின்கண் ஒதுங்கி, ஓர் கம்பளப் போர்வையைப் போர்த்து நின்றிருந்தனன். அப்போர்வை போர்த்த உவகையினும், அம்மழை பொழியும் பேரொலிக் காட்சியே பேகனுக்குப் பேருவகை ஊட்டிற்று. பெரும்பேகன் புலவருக்கு வரையாது வழங்குவதைப் போன்றே கருமேகங்களும் கைம்மாறு கருதாது புலவருக்குப் பொழிந்தன. அதனுன் புகழுடம்பெய்தினுரைப்போல் மேகங்களும் வெண்ணிறம்—புகழுடம்பு—பெற்று, அங்குமிங்கும் மந்தமாய் அசைந்து அசைந்து உலாவின.

அதுகாலை, மழையினைக் கண்டு மகிழ்ந்த ஆண்மயிலொன்று, பெரும்பேகன் திருமுன்னர், தனது அழகிய கலாவத்தை விரித்து கூவிக்கூவி ஆடுவதாயிற்று. அக்கூத்தினைக் கண்ட பேகன், "ஆ! ஆ! இம்மஞ்ஞையும் நம்மைப்போலக் குளிரற் கோட்பட்டன்றே துன்புற்றுக் கூவுகின்றது! நடுக்குற்று நடிக்கின்றது! இக்கானகத்தில் இம்மயிலின் குளிரினை யார் காக்கின்றார்? யார் கேட்கின்றார்? எவரும் இன்றே; இன்றே. மக்களாகிய நாம் ஆயும் அறிவுடைமையா னன்றே குளிருக்குக் கம்பளம் முதலியன செய்து போர்த்துக்கொண் டுள்ளோம்? மாக்களாகிய இன்னவை யன்னன செய்வன என்னே! என்னே! இக்குளிருக்கு இங்ஙனம் கூவிக்கூவி நடுங்குவ தன்றிச் செய்வது யாது? யான்மட்டும் குளிருக்குக் கம்பளம் போர்த்துக்கொண்டு இம்மயில் குளிரான் நடுக்கலுறுவதைக் காணல் நடுநிலையாகுமோ?" இங்ஙனம் இம்மழையான் தனக்குற்றன போன்றே குளிரும் நடுக்கரும் இம்மயிலுக்கும் எய்திற்றென்று எண்ணினன். தன்னைப் போலப் பிறரையும் எண்ணுவதன்றே உலகில் உயர்ந்தோரின் உள்ளம். ஆகையான், அம்மயிலின் குளிர்நடுக்கரைக்கண்டு, கற்றுவின் இனம்போலக் கசிந்துருகித் தான் போர்த்திருந்த போர்வையை மயிலின்மீது போர்த்துவிட்டுத் தனது பெருமனையை நோக்கிப் பேருவகையுடன் பெரும்பேகன் போயினன். இவ்வள்ளல் தன்மையை உள்ளத்தில் கொண்ட இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனர் எனும் நற்றமிழ் நாவலர்

வானம் வாய்த்த வள மலைக் கவான்
கானம் மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல்அணங்கின்ஆவியர்பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்

எனச் சிறுபாணுற்றுப்படையுட் செப்புவாராயினர்.

இயற்கை யறத்திற்கு வாழ்க்கைத் துணைவியாகக் கண்ணகி என்னும் பெண்ணணங்கைப் பெரும்பேகன் திருமணம் புரிந்து, இல்லற மென்னும் நல்லறத்தை நடத்தினன். இங்ஙனம் இல்லறம் இடுக்கணின்றி ஏகலுற்றது,

கியும் என்? இயற்கையிலேயே பெ ரும்பேகன் பேரழகு வாய்ந்தவன். "அருந்திறல் அணங்கின் ஆவியர்கோ மான்" என்பதால் பெறப்படும். பே ரழகு வாய்ந்த பெரும்பேகனைக் கண் டகணிகையுள் ஒருத்தி காமுற்றனள். காமக்கருத்தினைக் கொண்ட கணிகை யீள், பலகாலும் பேகன் பேரவைக்கு வந்து ஆடல் பாடல் நிகழ்த்தினள். "நெடுங்காமம் முன் பயக்கும் சின் னீர இன்பத்தினும், பின்பயக்கும், பீழை பெரிது" என்பதனைப் பெரும் பேகன் தெளிவாகத் தெரிந்திருந்த னன். தெரிந்தும் என்? அக்கணிகை யைக் கண்டு பேரவையின் பேரவை என்றிலன்; ஆடலை நோக்கி ஆடல் என்றிலன்; பாடலைப்பார்த்துப் பாடல் என்றிலன். இவ்வாடலும், பாடலும் தன்மாட்டு எதிர்மறை என்பதை எண்ணிலன்; உடன்பாடென்றே உட் கொண்டனன். ஆகையால் கண்ணகி யின் திருக்கண்களுக்குப் பெருவிருந் தாகல் வேண்டிய பேகனின் பேரழகு கணிகையின் காமக் கண்களுக்குக் கடிய விருந்தாயிற்று. "கண்டாரே கா தலிக்கும் கட்டழகும் விடமன்றோ?" எனக் கம்பநாடரும் "Beauty provoketh thieves sooner than gold" என ஷேக்ஸ்பியரும் செப்பிய இலக்கணங்களுக்குப் பேகனே இல க்கியமாதல் வேண்டும்? இங்ஙனம் கணிகையின் வயத்தில் நெஞ்சம் பே துற்ற பேகனைக்கண்டு, காதற்கிழத்தி கண்ணகி

"மேலோராயினும், நூலோராயினும்,
பால்வகை தெரிந்த பகுதியோராயினும்,
பிணியெனக்கொண்டு பிறக்கிட்டு ஒழியும்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்ம்"

(பேராறும்) எனப் பலப்பல நீதிகளைப் பேகன் நெஞ்சம் பிறிதுப்படுமாறு புக ன்றனள். கண்ணகியின் அமுதமொ ழித் தாரைகளுக்குப் பேகனின் செ விச்தொளைகள், காட்டில் கண்ட கமர் களேயாயின. "தையலார் மயலிற் பட் டோர் தம்கொரு மதியுண்டா மோ? " "கன்மத்தை ஞாலத்தவர் யா ருள்ரே கடப்பார்? பொன் மொய்த்த தோளான் (பேகன்) மயல் கொண்டு புலன்கள் வேறாய், உன்மத்தன் ஆனா ன்; தனை ஒன்றும் உணர்ந்திலா தான்." அரும்பெறல் வாழ்க்கைத் துணைவி கண்ணகியைப் பிரிந்து, கணி கையின் வயத்தனைப் பேகன், அக் கணிகையுடன் கழிபெருங் காமக் களி ளாட்டயர்ந்து காலங்கழித்தனன்.

காதற் கணவனை யடையவேண்டு மென்று கண்ணகி திருவருளைச் சிந் தித்து, மனத்தின்கண்ணே நோற்று, மனையின்கண்ணேயே யிருந்து தவம் செய்வாளாயினள். கண்ணகி காதல னைப் பிரிந்த துயரை ஆற்றாளாயினள். அதனால்

அம் செம் சீறடி அணி சிலம்பு ஒழிய,
மென்துகில் அல்குல் மேகலை நீங்க,
திங்கள் வாண் முகம் சிறு வியர்ப் பிரிய,
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்ப,
பவள வாள் நுதல் திலகம் இழப்ப,
தவள வாள் நகை பேகன் இழப்ப,
மையிருங் கூந்தல் நெய் அணி மறப்ப,
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்;
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்;
கையறு நெஞ்சத்துக் கண்ணகி

கலங்கியிருந்தனள். இத்துயரத் தீயி னில் காதல் கெய்யை வார்த்துத் தன் னகத்தை வேதித்து வேதித்துக்கூத வம் செய்வாளாயினள். இங்ஙனம் இரங்குவதினுல், கண்ணகியின் மலை போன்ற மனமும்மடிந்து மடிந்துமண் ணாயிற்று. கண்களும் கலங்கிக்கலங் கிக்கடலாயிற்று. இதனுலே கண்ணகி,



புணர்தலும், புணர்தல் நிமித்தமும் ஆகிய குறிஞ்சி நிலத்தவளே யாயினு ம், இரங்கலும், இரங்கல் நிமித்தமும் ஆகிய நெய்தல் நிலத்தவளே யாயி னள். கணவன் பாங்கரில் இருக்கும் பொழுது மகிழ்ச்சியினுல் மலைபோல் வளர்ந்த மனம், அவன் பிரிவென் னும் நெருப்பினுல் வெந்து வெந்து நீருகி நீருகித் தரையாகின்றது; அத்தரையோ கண்ணீரென்னும் கட லாற் சூழப்படுகின்றது. இதனையுட் கொண்டே புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சிநிலத்—மலைசார் ந்தநிலத்—திற்கென்றும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல்நிலத்—கடல் சார்ந்த நிலத்—திற்கென்றும் தமிழ்ப்பெரும் புலவர் வருணித்தனரோ னும்.

அருங்குணமும், பெருங் கொடை யுமுடைய இப்பெருந்தகை, இங் ஙனம் பொதுமகள் வலைப்பட்டு, தன் அரிய மனைவியைப்பற்றிய சிந்தையே யில்லாது திரிந்தனன். பேகனுக்கும் கண்ணகிக்கும் நேர்ந்த இப்பிரிவு பற் றிய செய்தியானது உலகமெங்கும் உலாவிற்று. இவர்களின் இல்வாழ்க் கைக் காலத்தே பெரிதும் உபசரிக்கப் பெற்றுப் பெரும்பயனடைந்த புலவர் பெருமக்களாகிய கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் என்ற சான்றோர்கள், முன்போலக் கண்ணகியும் பேகனும் சேர்ந்துவாழ முயல்வாராயினர். இப்புலவர்கள் பே கனையடைந்து, அவன் மனைவி கண் ணகியின் வாழ்க்கையில் இரக்கந்தோ ன்றக் கூறும் மாட்சி பெரிதும் வியக் கற்பாலது, நயக்கற்பாலது. ஆகை யால், இப்புலவர் பெருமக்கள் பேக னிடஞ்சென்று கூறுவனவற்றை மு றையே கூறுவன். அவருள் பொய்யா

நாவிற் கபிலன் புகல்வதாவது:—
"சிறந்த மலைநாடனே! போர்வன்மை யும் கொடைத் திறமையும் உடைய பேக! நேற்று வழிநடந்து வருந்திய என்சுற்றம் பசித்ததால், உயரிய மலை யிடத்துள்ள சிறிய ஊரில் நின்வாயிற் கண்ணே வந்து, நின்னையும் நின் மலையையும் வாழ்த்தி யான் பாடி நின்றேன். அதுகாலை, துயரத்துட ன் சொரிந்த கண்ணீரையுடையளாய், அக்கண்ணீர் முலையிடத்தே நனைக் கும்படி பொருமி, வேய்ங்குழல் இரங்கி ஒலிப்பது போல ஒருத்தி அழுதனள். இரங்கத்தக்க அன்னள் யார்கொல்லோ? சொல்க" என்ப தாம். இதனை

கடவுள் பேணிய குறவர் மாக்கள்
புனத்தினை அயிலும் நாட! சினப்போர்,
கைவள் ஈகைக் கடுமான் பேக!
யார்கொல்? அளியள்தானே. நெருநல்
சுரன் உழந்துவருந்திய ஒக்கல்பசித்தென,
நளியிரும் சிலம்பில் சீறூர் ஆங்கண்
வாயில்தோன்றி, வாழ்த்தி நின்று,
நின்னும், நின்மலையும்பாட, இன்னது
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்,
முலையகம் நனைப்ப விம்மி,
குழல் இனைவதுபோல் அழுதனள் பெரி தே.

என்னும் புறப்பாட்டில் கண்டுகொள் வது. இவ்வாறே பரணரும் அவ்வள ளலைக்கண்டு "நெருநல், மாலைக்காலம் சிறிய யாழை இரங்கற்பண்ணாகியசெ வ்வழிப் பண்ணில் வாசித்து, நினது மழையை ஏற்கும் கானகத்தைப்பா டினேமாக; நீலமலர் போன்ற கண்க ளினின்றும் கலங்கி வீழ்ந்த நீர்த் துளிகள், பூணையுடைய தன்மார்பத் தை நனைக்கும்படி வருந்துகின்ற ஒரு வள் எம்முன்வந்து தோன்றினாள்; அவளை நோக்கி இனையோய்! எங் கள் நட்பை விரும்பும் மன்னவனுகிய

பேகனுக்கு உறவினையோ? என யாங்கள் தொழுது வினவலும், அவள் காந்தள் மொட்டு போன்ற விரலாலே கண்ணீரைத்துடைத்து,நாங்கள் அவனுடைய உறவினர் அல்லேம்; இனி, கேளுங்கள்; வயங்கும்புகழையுடைய பேகன் எம்மை ஒக்கும் ஒருத்தியின் அழகைக்காமுற்று, ஒலிக்கும் தேரின்மேல் முல்லைவேலி சூழ் நல்லூரின்கண் அடிக்கடி வருவன் என்று சொல்வர்'' என்று நின்காதலி கழறினள். இஃது என்னே! தலைவ! நீ அவட்கு இரங்கி அருள்பண்ணுதிருத்தல் மிககொடியது. மயிலுக்கிரங்கிப் போர்வை யளித்த பெருங்கருணைப்பேக! இதுபோழ்து யாம் பசித்து நின்பால் வரவில்லை. எங்கள் பாரமும்—சுற்றமும்— இல்லை; அருளை விரும்பியவனே! அறம் (இல்லறம்) செய்வாயாக; நின்பால் யாங்கள் இரந்த பரிசிலும் இதுவே. இவ்விரவின் கண்ணே நெடுந்தேரேறிச் சென்று இன்னுமையின்உறை என்ற நின் காதலியின் துயரத்தைக்களைவாயாக— எனப்பேகன் மனமும் பிறிதாய் இரகும்படி இயம்பினர். இவ்வழகிய கருத்தினைத் தாங்கிய புறத்தினைப் புனைந்தாலன்றி அகம் மகிழ்வுறாது. அப்புறத்தின் புனைவு என்னை? இவையே:—

அருளாய் ஆகலோ கொடிதே! இருள்வ [ரச்

சிறியாழ் செவ்வழி பண்ணியாழ நின்
காரெதிர் கானம் பாடினேமாக;
நீல் நறுநெய்தலில் பொலிந்த உண்கண்
கலுழ்ந்துவார் அரிப்பனி பூணகம் நனைப்ப,
இனைதல் ஆனள் ஆக; இளையோய் !
கிளையை? மன் எம் கேள் வெய்யோற்கு,
[என
யாம் தன்தொழுதனம்வினவ, காந்தள்
முகைபுரை விரலில் கண்ணீர் துடையா;
யாம் அவன் கிளைஞரேம் அல்லேம் கேள்;
[இனி,
எம்போலொருத்தி நலன் நயந்தென்றும்
வருஉம் என்ப; வயங்கு புகழ்ப்பேகன்,
ஒல்லென ஒலிக்கும் தேரொடு
முல்லைவேலி நல்லூரானே.
மடத்தகை மாமயில் பனிக்கு மென்று
[அருளிப்
படாஅம் ஈத்த, கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக !
பசித்தும் வாரேம்; பாரமும் இலமே;
அறம் செய்து ஈமோ; அருள் வெய்யோய்
[என
இஃதுயாம் இரந்தபரிசில்; அஃது இரு
இனமணி நெடுந்தேர் ஏறி [ளின்
இன்னாது உறைவி அரும்படர்களைமே.

இனி, அரிசில் கிழாரும் பெருங் குன்றூர்க்கிழாரும் பாடுவன ஒன்றிய கருத்துடைமையால் அவற்றுள் ஒன்று மட்டும் உரைப்பன்.

அன்னவாக, நின் அருங்கலம் வெறுக்கை
அவைபெறல் வேண்டேம்; அம்போர்ப்
[பேக!
சீறியாழ் செவ்வழி பண்ணி, நின் வன்புல
நன்னுடைபோட, என்னை நயந்து
பரிசில் நல்குவை; ஆயின், குரிசில் நீ
நல்காமையின் நைவரச் சாஅய்
அருந்துய ருழக்கும் நின் திருந்திழை
அரிவை,
கலிமயில் கலாவங்கால் குவித்தன்ன,
ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய,
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

இங்ஙனம் அக்கவிக்காள மேகங்கள் புறத்தில் பொழிந்த அருந்தமிழ்த் தாரைகள் பேகனின் அகத்தில் நிறையப்பரவின. காமக்கிழத்தி கணிகையின் பாற்கொண்ட புதுக்காமக்கருத்தினை நீக்கி, காதற்கிழத்தி கண்ணகியின்பால் பழங்காதல் கருத்தினையே கொண்டனன். பெரிதும் வருத்தமும்இரக்கமும் உற்றவனுய்ப் பேகன் கண்ணகியின் கடிமனைக்கு வந்தனன்.



காதற்கிழத்தி கண்ணகியைக் கண்ணுறக் காண்டலும், பேகனுக்குண்டாய பேரிரக்கம் என்னென்பது; என்னென்பது. கண்ணகிக்குத் தான் இழைத்த எண்ணற்ற பிழையினை, பலப்பல படியாக எண்ணி மனம்புழுங்கினன். காதற்கிழத்தி கண்ணகியைக்கண்டு பேகன் பேசுகின்றனன்.

வறுமொழியாளரொடு, வம்பப் பரத்த
ரொடு
குறுமொழிக் கோட்டி, நெடுநகை புக்கு,
பொச்சாப்புண்டு, பொருளுரையாளர்
நச்சுக்கொன்றேற்கு,நன்னெறியுண்டோ?
இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்;
சிறுமுதுக்குறைவிக்குச் சிறுமையும் செ
[ய்தேன்;
வழுவெனும் பாரேன்.

இங்ஙனம் ஆருத்துயரத்துடன் தான் செய்த குற்றங்களைக் கூறினன். இவற்றினைக்கேட்டுக் கண்ணகி கூறும் மறுமொழி பெருவியப்பைத்தருவது. என்னை? என்னை? கண்ணிறைந்காதல! நீவீர் இக் குற்றங்களொன்றனையும் இழைத்தீரில்லை என்றன்றோ கூறல் வேண்டும். அங்ஙனம் கூறின் முகமன். அதுகிடக்க. அங்ஙனமின்றி, கணவனைப் பிரிந்தமையால், காமத்தால் பெருந்துயருற்றேன் என்றன்றோ? கழறல் வேண்டும்; ஆடை அணிகலன்கள் அணியும், நல்லூழ் இல்லாமல் போயிற்றென் றன்றோ? நவிலல் வேண்டும்; மற்றைக் களிபாடற் கூத்துக்கள் முதலியன காண்டற்கு வாய்க்கவில்லை என்றன்றோ? கூறல்வேண்டும். இவை பொன்றனையும் இயம்பினாள் இல்லை இல்லை; பெரும்பேகன் பிரிவுற்றமையால், பேரறமாகிய இல்லறம் செய்வனே நடத்துவதற்கு இல்லையாயிற்றே என ஏங்கினள்; இன்ன ஆற்றனள். காதற்கணவனைக் கருத்துறத்தழுவி ஆருயிர்மருந்தே! பேகன் பெரும! நீர் பிரிவுற்றமையால்

அறவோர்க்களித்தலும் அந்தணர் ஓம்ப
[லும்
துறவோர்க்கெதிர்தலும் தொல்லோர் சிறப்
[பின்
விருந்தெதிர் கோடலும் இழந்தவளா
னேன்,

இவ்வறங்களில்லையேல் இல்லாச்சிரமம் இல்லாச்சிரமமே. எல்லாச் சிரமமும் தீர்தற்கன்றோ இந்நல்லாச்சிரமம் மேற்கொள்வது? இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டன்றோ? எனக்கனிந்து கூறினள். பின்னர், பேகனும் கண்ணகியும் இன்பத்தோடிசைந்த வாழ்வில் இல்லறம் நடத்தி இறைவனடிசைந்த இன்பம் எய்தினர்.

கண்ணகி என்னும் பெயர் வாய்ந்த மகளிர்க்கெல்லாம்—தம் கணவர் பரத்தையர் நலம் நுகர்ந்து மகிழ்ந்திருக்க—தாம் பிரிவாற்றுது வருந்துதலே இயல்பாயிற்றுப் போலும். கோவலனுடைய கற்புடைமனைவி கண்ணகி என்பாள், இளமையில் தன் கணவன் பரத்தை வயத்தனுய் நின்ற துயரம் மிக்குவருந்தியது போலவே, இக்கண்ணகிக்கும் தன்கணவனுகிய பேகன் பொதுமகளொருத்தி காமத்தில் வீழ்ந்தமையால் பெரிதும் துயருற்றனள். இதனையுட்கொண்டு ஈண்டுக் கூறுவதொன்றுண்டு. அது நிகழ்காலத் தமிழுலகத்திற்குப் புதுமையாகவே தோன்றும். அப்புதுமை பழமையே. இவ்விரு கண்ணகிகளும் தம் கணவர்பால் கொண்ட நேயம் காதல். பேகன் கோவலன் இவ்விருவரும் தம்மனைவியர் மாட்டுக்கொண்ட நேயம் காமம். காதல் என்பது ஒருவன் ஒரு

ளையும் ஒருவள் ஒருவனையுமேநேசிப்பது: காமம் என்பது ஒருவன் பலரையும் ஒருவள் பலரையும் நேசிப்பது. இன்பம் என்பது எல்லாவுயிர்க்கும் இயல்பானே எழும் ஆசை. அதை, ஒரே ஒருவர் மாட்டு வைக்கப்படுமேல் காதல் எனப்படும். சுருங்கக்கூறின், இன்பம் என்ற தாய் ஈன்றதே காதல் என்னும் சேய். ஒருவனும் ஒருவளும் ஒருவருக்கொருவர் நேசமுறுவதற்கு முன்னர் நிகழும் ஆசையே இன்பம். நேசித்த பின்னர் எழும் ஆசையேகாதல். இருவரும் நேசமுறுவதற்கு முன்னர் நிகழும் ஆசையினைக் காமம் என்றே அனைவரும் கழறுகின்றனர். அதனை "இன்ப இச்சை" என்றியம்பலே இயல்புடைத்து. இக்கருத்தானே காமம் என்னும் மொழி, பழந்தமிழ் நூல்களில் ஆளப்பட்டுள்ளதென்பது, நுணுகி யாராய்வார்க்குப் புலனாகும். இதனானே கண்ணகிகள் கொண்டமை காதல்; பேகன் கோவலன் கொண்டமை காமம் என்றியம்பினேன்.

பழந்தமிழ்நூல்களில் எங்குளங்குத் துருவித்துருவித்தேடினும், கணவன் மனைவி என்ற இடங்களில் காதலன் காதலி என்றேகூறப்பெற்றுள்ளன. கணவனைக் காதலன் என்றும், மனைவியைக் காதலியென்றும் கூறுவதே உலகவழக்கு செய்யுள் வழக்கிரண்டினும் உண்டு. காதல் என்னும் பண்பினடியாகப் பிறந்த பெயர்ச் சொற்கள் காதலன், காதலி என்பன. காமம் என்னும் பண்பினடியாகப் பெயர்ச் சொற்கள் பிறப்பின் எற்றாகும்? அவை காமுகன் காமுகி என்றன்றோ வழங்கும். எங்கேனும் கணவன் மனைவிகளைக் காமுகன், காமுகி எனக்கழறப் பட்டிருப்பதைக் கண்டதுண்டோ? இல்லை; இல்லை. காமுகன், காமுகி என்ற மொழிகள், தூர்த்தர் வியபசாரிகள் என்ற பொருளினன்றோ வழங்குகின்றன. உலக வழக்கிலேயும் ஒருவரைக் காமுகன் காமி என்பமேல் அவர் மாட்டு நிகழும் வெகுளிக்கு வேலியுண்டோ? அங்ஙனமே காதலன் காதலி என்பமேல் அவர்பால் உதிக்கும் உவகைக்கும் உறைவிடமுண்டோ? இவ்வேற்றுமையினை நுணுகியாராயாத செந்தமிழ்ப் புலவருட் சிலவர் "காதல் கவறுடல்" என்னுமிடத்துக் காதல் காமம் என்னும் இரண்டும் ஒரு பொருளன எனக்கூறிப்போந்தனர். யானைக்கும் அடிசறுக்கும் என்றே அன்னாரின் அடிகளைப்போற்றி அகலுவன்.

பழங்காலம் — தொல்காப்பியருக்கும் முந்தியகாலம்—தமிழரின் தொடக்க காலம்—ஒருவனும் ஒருவளும் நேசித்த பின்னர் காதலர்களாகவே வாழ்ந்து வந்தனர். பின்னர் மனைவி காதலியாகக் கணவன் காமுகன் ஆயினன். அதுகாலே, காதல் மரத்தின் ஒருகிளை—வலக்கிளை— முறிந்துபோயிற்று. இதுவே இடைக்காலம்—தொல்காப்பியர்காலம் — சங்ககாலம். இவ்விடைக்காலம் பெண்ணுலகம் செவ்வழியில் திருத்த முற்றிருந்தது; ஆணுலகம் அழிவிற்கு வந்தது. ஆணுலகத்தின் அரக்கச்செயல்களினாலேயே, பெண்ணுலகம் ஒருசார் கணிகையர் கூட்டமாகப் பரிணமித்தது. பெண்ணுலகத்தைக் கணிகையர் என்னும் கழிபெருஞ் சேறுக்கிய பாவம், ஆண்மக்களுக்கே உண்டு; உண்டு. பெண்ணமுத மென்னும் பெருந்தாழியில், கணிகையர் என்னும் நஞ்சைக் கக்கினவர், ஆடவர் என்னும் அடல் நாகங்களேயாம். ஆடவரின் காதல்,



காமம் ஆயினமைக்கு இன்னொரு காரணமும் உண்டு. அஃது ஆடவர் வேறு மணம்புரியலாமென்பது. இக்கொள்கை ஆரியர் கொள்கை. அது பழங்காலத் தமிழர் கொள்கை அன்று; அன்று. தொல்காப்பியர் காலத்திலேயே இவ்வேறு மணக்கொள்கை தலைகாட்டியுள்ளது. ஆடவர் பெண்டிர் இருவரும் பல மணம் புரிதல் ஆரியர் ஆசாரம்; இருவரும் ஒரே மணம் புரிதல் தமிழர் ஒழுக்கம். இம்மறுமணம் புரிதலென்னும் விடநாகம், முதன் முதல் தமிழரின் ஆடவரையே தீண்டிற்று. அதனால், ஆடவர், மயங்கினர்; காமுகர் ஆயினர்; இருமணம் புரிந்தனர்; இருமனப் பெண்டிரை யுண்டாக்கினர். பலமணம் புரிதலென்னும் ஆரிய ஆசார விடநாகம், தமிழ்ப் பெண்மக்களைத் தீண்டவும் அஞ்சிற்று; அஞ்சுகின்றது. இன்னும் பழந்தமிழரின் ஒருமணக்கொள்கை பெண்மக்கள் மாட்டே உண்டு. தமிழரின் காதல்நெறி—ஒருமண ஒழுக்கம்—பெண்ணுலகத்திலேயே திகழ்ந்து விளங்குகின்றது. அக்காதல்நெறியைப் பெண் தெய்வங்களே ஓம்புகின்றன; காக்கின்றன. அப்பெண் தெய்வங்களை வணக்கம் செய்து காதல் நெறியைக் கற்றுக்கொள்ளல் வேண்டும்; ஒழுகல் வேண்டும். பேகனும் கோவலனும் கண்ணகிகள் என்னும் கற்பரசிகளைப் போற்றினர்; புகழெய்தினர். தமிழகத்தில் ஆணுலகமும் பெண்ணுலகமும் காதல் மணமாகப் பொலிதல்வேண்டுமென்றே தமிழ்த்தெய்வத்தை வணங்குகின்றனன்; வாழ்த்துகின்றனன். இன்னும் எழுதல் வேண்டுமென்னும் அவாவினை விரிவஞ்சிவிடுக்கின்றனன்.

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.

—வள்ளுவர் வாக்கு.

---

# வைகறை வணக்கம்.

---

த. ராமகிருஷ்ணன்.

(வைதிக மாசிகையிலிருந்து தமிழ்ப் படுத்தியது.)

ப்ராத ரக்நிம் ப்ராத ரிந்த்ரம் ஹவாமஹெ
ப்ராதர் மித்ரா வருணா ப்ராத ப்ராத ரஸ்விநா
ப்ராதர் பஹ்கம் பூஷணம் ஹ்ப்ராஹ்மணஸ்பதிம்
ப்ராத: ஸோம முத ருத்ரம் ஹவாமஹெ.

அதர்வம் ௩-௧௬-௧.

வைகறையில் முழுத்தழல் மேனியன், இருநிதிச் செல்வனுக்கு வணக்கம். வைகறையில் யாவர்க்கும் நண்பன், பெறற்கரும்பேறு, காத்த லழித்தலுடை இறைவனுக்கு வணக்கம். வைகறையில் திருவுடையான், செழுமையன், அறிவின் தலைவனுக்கு வணக்கம். வைகறையில் இன்பவடிவினன், அறத்தின் நாயகனுக்கு வணக்கம்.

விளக்கம்.

வைகறையில் துயிலெழுந்து எம்மிறைவனுகிய நின்னடிகளைத் தொழுகின்றேன். நீ அக்கினி உலகுக்கு உயிராகவும் ஒளியாகவும் மிளிர்கின்றனை. நீ அறிவிற்கு ஊற்றாகி எம்மனைவரையும் நடாத்துகின்றாய். நீ உலகனைத்தையும் இயக்குகின்றவன். செயல்கள் யாவுந் தோன்றுதற்குப் பிறப்பிடம் நீயே. இறைவ! இவ்வுடலில் உயிர் உறைவதை யொப்ப நீ உலகில் உறைகின்றனை.

நமது ஆன்மாவை இந்திரனென்று அழைக்கின்றனர். இந்திரன் நீயே. ஆன்மா, புலன்கள் பொறிகளாகிய இந்திரியங்களுக்குத் தலைமைதாங்கி அவற்றைச் செலுத்துகின்றது. நீ உலகின் புலன்களுக்குத் தலைவன். கண்கள் எனக்கெவ்வாறோ அவ்வாறே நினக்குக் கதிரவன். இச்சிறு உடலில் எனது சுவாசப்பை களியாடுவது போல நினது காற்று மண்டிலம் இவ்வுலகில் விளையாடித் திரிகின்றது. எனது மெல்லடிகள் இச்சிறிய சுமையைத் தாங்குகின்றன. இந்நிலவுலகம் நினது அடிகளின் சிறுபகுதி. இறைவ! நீ செறிந்துள்ள உலகின்பரப்பை யானெங்ஙனம் சிந்திக்கவல்லேன்? எனதகத்துறையு மிந்திரனே நினைத்தற்கரிய மிக நுண்ணியன். எனது புறச்செயல்களையும் அகக்கரணங்களின் செயல்களையும் ஆராய்கின்றேன். மனோவியக்கத்தின் நுட்பத்தையும் இரிபுகளையுங் கடந்து செல்கின்றேன். எனினும், எனது இவ்விந்திரனைப் பற்றிக்கொள்ள வல்லேனல்லன். எம்மினின்று புறவுலகில் புகுகின்றேன். புறப்பொருட்களை ஆராய்ந்து இந்திரனைக் காணமுயல்கின்றேன். பூதப்பொருட்களையும் இரசாயனப் பொருட்களையும் கண்டறிந்தேன். அவற்றின் அணுக்களையும் அணுக்களின் அணுக்களையும் பாகுபடுத்திச் சோதித்தேன். ஆண்டும் இந்திரனைக் காணப்பெற்றேனல்லன். அணுக்களின் ஆக்கத்தைக் கடந்தேன். யாண்டும் பரந்த இந்திரன் —பொருட்களின் மிக நுண்ணிய உருவம்— வேதரிஷிகளின் வித்யுத் (மின்னியக்கப் பொருள்) எமது பார்வைக்கு எட்டவில்லை. பருப்பொருளுலகம் இத்துணை நுண்ணியதாயின் நினது நுண்மை எத்தகைத்தோ? எம்மிறையே!

உபநிடதங்கள் நின்னைச் சிறியவற்றுட் சிறியன், அணுவிற் கணுவென அறைகின்றன. உயிர் யாண்டுளதோ? மிகச் சிறிய பிராணிகளும் இம்மனித யாக்கை புரிகின்ற செயல்களை யொப்பத் தங்கள் உறுப்புக்களாலிகழ்த்துகின்றனவன்றே, அவற்றை யெல்லாம் இயக்குகின்றவன் யாவன்? இறையே! யாங்கள் கண்ட மிகவுயர்ந்த அணுதரிசனியாலும் உணர்தற்கரிய இவ்வுயிர்கள் யாவும், இந்திரனே! நீயே யாவாய். நீ சிறிய வற்றுட் சிறியன், பெரியவற்றுட் பெரியன், மிகவுயர்ந்தவற்று ளுயர்ந்தோன். மிகப்பெரிய ஞாயிற்றுலகினும் பெரியன். வியாழ உலகினும் பெரியன். நெப்த்யூன் உலகினும் பெரியன். ஞாயிற்றின் மிகச் சிறிய நம்முலகினும் பெரியன். இக்கதிரவனுலகம் பதின்மூன்றிலக்கத்து ஆன்பதாயிரம் பூமியினளவைக் கொண்டது. தனிப் பெருந்தலைவ! ஞாயிற்று மண்டிலமென்ன, அதனைச் சூழ்ந்த பிற மண்டிலங்களென்ன, நினது வியக்கத்தக்க அதியற்புதப் படைப்பன்றோ? கதிரவன் எத்திசையில் தனது குழவிகளுடன் செல்கின்றதென்று யாமறிந்தோமில்லை. எத்துணை நெடுவழி யேகுவன், யாண்டு நிலைபெறுவனென்று நாமிருந்து காணப்போவதில்லை. ஏனைய உலகங்களைக் குறித்து யாம் யாதுணரப்போகின்றோம்? நமது ஞாயிற்று மண்டிலத்தினும் மிக்கொளி வீசுகின்ற மிகப்பெரிய இரண்டு மூன்று கதிரவனுலகங்கள் ஏககாலத்துக் காய்கின்ற உலகங்களுமிருக்கின்றனவாம். இறைவ! நினது பேரொளிப் பிழம்பில்—வானமண்டிலத்தில் — ஆகாயக் கடலில் இத்தகைய உலகங்கள் எத்துணை நாளும் உருவெடுத்து அழிவுறுகின்றன. நீ இவையனைத்திற்கும் தலைவனாய் விளங்குகின்றாய். இஃதுண்மை.

இறைவ! நின்னை யொப்ப நினது கருணையும் மிகப் பெரிதே. நீ எங்கள் நண்பன். எங்களைத் தூய்மைப்படுத்துகின்றனை. எங்கள் புண்ணிய பாவங்களை, ஆற்றலை அளந்தறிகின்றனை. எங்கள் பாவங்களை யழிக்கின்றனை. நீ உயிர்க் குயிராக, எங்களகக் கரணங்களுக்கு அரசனாக மிளிர்கின்றனை.

அண்ணலே! நீ உலகம் நடைபெற இயற்கையில் இருமைத் தோற்றங்களைப் படைத்திருக்கின்றனை. ஞாயிறும் திங்களும், பகலும் இரவும், ஆணும் பெண்ணும் போல்வன. எத்துணை வியப்புடையன, கூர்த்த மதியின, பயனளிக்கத்தக்கனவாக இவற்றை இணைத்திருக்கின்றாய். இவையனைத்தும் நின் வரம்பிலாப் பேரறிவையன்றோ உணர்த்துகின்றன.

பெருந்தகைய! இம்மகிமை யெல்லாம் நினக்கே உரித்து. நின்னை யணுகுவோர், பெருமை யெல்லாம், இன்பமெல்லாம், மகிழ்ச்சி யெல்லாம் பெறுவர். நின்னையுணர்ந்தார் நின்னடி சார்ந்தார் எஞ்ஞான்றும் துன்பமெய்தார். நினது இன்ப வாரிதியில் திளைத்து நிற்பர். இன்பமும் நின்னதே. வலிமையும் நின்னதே. தலைவ! எமது அறிவினால் ஆற்றலால் இவ்வுலகினை ஆள்கின்றேம், பொருட்களை ஆக்குகின்றோம், அழிக்கின்றேமென்று அறியாமையால் இறுமாந்து நிற்கின்றோம். இஃதெத்துணைத் தவறுடைத்து. உலகின் நிகழ்ச்சிகள் இதற்குறுசான்றாம். சிறந்த சரித நிகழ்ச்சிகளில் நினது திருவிளையாடலைக்காணலாம்.

பேரறிவ! நீ அறிவினாற்றாம் மறைகளுக்கு நாயகன். அருட்காட்சி யளிப்பவன். எமது சிறிய உள்ளத்தால், சிற்றறிவால், உரை மனமிறந்தனலை பற்ற பேரொளிப் பிழம்பை எவ்வாறு சிந்திக்கவல்லேம்.

சோம! மருத்துவ! இன்பவூற்றே! எமையாளுமரசே! அறத்தின் நிலையமே! உருத்திர பகவனே! நின்னுற்றலின் சிற்றணுவைப் பெற்றிட, நின்னீழல் சார்ந்திட எத்துணை நெடுவழி யேகினேன், அலைந்து திரிந்தேன். அறத்தின் வழியே, செந்நெறிக்கண் செலுத்துமாறு நின்னடி தொழுகின்றேன்.

# கம்பராமாயண மும்மணிகள்.

## இலங்கைமா நகரம்.

(முன்தொடர்ச்சி.)

பி. ஸ்ரீ. ஆசார்யா.

"தேவர் என்பவர் யாவரும் திருநகர்க்கிறைவற்கு ஏவல் செய்பவர்." "போரிலான் புரந்தரன் ஏவல்பூண்டனன்" இலங்கைவேந்தனுக்குஏவல்செய்வோரே தேவர்என்பவர்; அவனுக்கு ஏவல் செய்யாதார் தேவசமூகத்தில் இல்லை. ஆகவே இராவண ராஜ்யத்தில் தொழுது தொண்டாற்றும் பேரடியடிமைகளின் கடமைகளெல்லாம் தேவர் கடமைகளாகவே யிருந்தன. அடிமைகளேயாயினும் தேவர்கள் இராஜபக்தியில் அரக்கர்களுக்கும் அவுணர்களுக்கும் இளைத்தவரல்லர். "தேவரும் அவுணரும் முதலினோர் நிசைதவிய நறுமலர்" என்று கவி கூறுவதால் அரசனை இறைவனாக (கடவுளாக)வே வழிபடும் உயர்தர இராஜபக்தியும் தேவர்பால் காணப்பட்டதென்பது தெளிவாகின்றது. இத்தகைய இராஜபக்தி, இம்சிக்கப்பெற்ற தேவர்களுக்கு எவ்வாறு விளைந்தது? நம்மக்கள் சிலதெய்வங்களை அன்பால் வழிபடுகிறார்கள். வேறு தேவதைகளை அச்சத்தாலும் ஆராதிக்கிறார்களல்லவா? அவ்வண்ணமே தேவர்களது 'இராஜவிசுவாச'மும் உள்ளன்பின் விளைவன்று; அச்சத்தின் பயனாக முளைத்ததே யாகும். வணங்கா முடித் தனியரசு புரியும் இராவணேச்வரனது மகாசந்நிதியில் தேவர் கூட்டம் என்னபாடு படுகிறது, பாருங்கள்.

இன்னபோது இவ்வழி நோக்கும் என்ப
உன்னலர், கரதலம் சுமந்த உச்சியர், [தை
மின்னவிர் மணிமுடி விஞ்சைவேந்தர்கள்.

இன்னபோது மன்னர்பிரான் இவ்வழிநோக்கும் என்பதை யுணராதவராய், விஞ்சை (வித்யாதர) வேந்தர்கள் மணிமுடிமேல் சுமந்தகையோடு (அஞ்சலியஸ்தராய்) சக்கவர்த்தியின் பொன்னடி மலர்களைநோக்கி 'ஜயஜய! போற்றி, போற்றி!' என்று பல்லாயிரம் 'போற்றி' கூறியும் அமையாது எப்போதும் தொழுதவண்ணமாகவே நின்று தங்கள் பக்திப்பெருக்கை வெளியிட முயல்கிறார்கள். உயிரினும் இனிய சுதந்திரம்இழந்து, மானம் என்னும் மாசிலா மெய்யணியும்துறந்து சிற்றடிமைப்பட்டு, சிற்றரசர்களான இவர்களும், அணிகள் வேய்ந்த பிணங்கள்போலவே தம்மை விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களால் 'பொம்மை யரசர்'களாக அலங்கரித்துக்கொண்டு, அதிகார ஆடம்பர வைபவங்கள் நிறைந்த இராவண சபையில் வெட்கமின்றி வந்து முகங்காட்டுகின்றனர். இதனைக்குறிப்பிடவே, கவி இவர்களை 'மின்னவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்கள்' என்று வருணிக்கின்றார். முடியுடை விஞ்சை வேந்தர்க்கு இது வென்றால், சாமானிய தேவர்களின் தொண்டு நிலையை என்னென்று இயம்புவது! பன்னெடுநாளாகப் பணியழுந்து பழகும் கின்னரர்களின் பயபக்தியைப் பாருங்கள்.

அன்னவன் அமைச்சரைநோக்கி ஆண்
[டொரு
நன்மொழி பகரினும் நடுங்கும் சிந்தையர்



என்னைகொல் பணி? என இறைஞ்சுகின்
[றனர்,
கின்னரர் பெருமபயம் கிடந்தநெஞ்சினர்.

அரசர்பிரான் திடீரென்று அமைச்சரை நோக்கி ஒருவார்த்தை சொல்லுகிறான். ஐயோ! கின்னரர் நெஞ்சம் படபடவென்று துடிக்கின்றது, பறையடிக்கின்றது. அரசன் மொழி நன்மொழிதானென்றும், அது தம்மை நோக்கி எழுந்ததல்ல வென்றுங்கூட அவர் பெரும்பயத்தால் உணர்கின்றாரில்லை. அஞ்சியஞ்சிச் சுரமடைந்து கிடக்கும் நெஞ்சிலே விஷயம் ஒன்றும் சரியாக விளங்கவில்லை. திடுக்கிட்டுத் திகில் அடைந்து நடுநடுங்கும் உள்ளத்தோடு, 'என்ன உத்தரவு?' என்ன உத்தரவு?' என்று விரைந்து பணியிரந்து வணங்கி நிற்கின்றார். இனி, கின்னரர் பக்திக்குச் சித்தர் பக்தி தோற்குமா?

மங்கையர் திறத்தொரு மாற்றம் கூறினும்
தங்களையாம் எனத்தாழும் சென்னியர்,
அங்கையும் உள்ளமும் குவிந்த ஆக்கையர்,
சிங்க ஏறெனத்திறல் சித்தர் சேரவே. .

ஆண் சிங்கத்தோடொத்த ஆற்றல் படைத்த சித்த புருஷர்களெல்லாம், இராவண சந்நிதியிலே ஆண்மையும் ஆற்றலும் ஒருங்கே திறைகொடுத்து நிற்கிறார்கள். இவர் கைகள் கூம்பிக் குவிகின்றன. அம்மட்டோ? உடம்பு முழுவதுமே குவிந்து குறுகி ஒடுங்கி நிற்கின்றது. உள்ளங்கூட ஒரு சிறிதும் மகிழ்ச்சியின்றி—மலர்ச்சியின்றி—ஒடுங்கிக் குவிந்து விடுகின்றது. அங்கையும் குவிந்து உள்ளமும் குவிந்து உடம்பும் குவிந்து இழிவே உருவெடுத்து வந்ததுபோல நிற்கும் இவர்களும் ஒருகால், காடுகளில் தன்னிச்சைகொண்டு திரியும் சிங்கம்போல் கம்பீரமாக, சுயேச்சை

வாழ்வு வாழ்ந்தார்கள். ஆனால் அது இப்போது புண்டைப்பழங்கதையாய், கனவினும்பழுதாய்க்கழிந்துவிட்டது. அரக்கராட்சியில், சித்தர்கள் அடிமை வாழ்வோடு அடிமையுள்ளமும் (slave Mentality) பெற்ற பெரும் பேடிகளாகின்றனர். இராவணன் மந்திரிமாரை நோக்கி ஒரு மொழி கூறினும், கின்னரர் கிடுகிடென்று நடுநடுங்குகின்றார். அவன் மங்கையர்பால் ஒரு மாற்றம் (சொல்) கூறினும், சித்தர்கள், அது தங்களை நோக்கி யெழுந்ததாமென்று மதிமயங்குகின்றனர், தடுமாறுகின்றனர். உடனே அவர் தலைகள், கடுங்காற்றில் அசைந்தாடும் சுரைக்குடுக்கைபோல அசைந்தசைந்து, அரசன் அடிகளில் தாமாகவே தாழ்ந்து வணங்குகின்றன. உடம்பும் உள்ளமும் ஒருங்கே ஒடுங்குகின்றன. கையும் மெய்யும் குவிந்து விடுகின்றன. அடிமையுணர்வு அகமும் புறமும் பொங்கி வழிகின்றது. ஆண்மையிழந்து ஆற்றலிழந்து, மதியிழந்து மானமிழந்து, மனமொழி மெய்களில் தாழ்ந்து வாழும் சித்தர்கள், கின்னரரையும் விஞ்சையரையும் இராஜபக்தியில் வெகுதூரம் பின்னிறுத்தி விடுகின்றனர். பயபக்தி விசுவாசங்களில் சித்தரை வென்று முற்படுவோருமுண்டு.

நரகினராமென நடுங்கும் நாவினர்,
உரகர்கள் தம்மனம் உலைந்து குழவே.

அரக்கர்கோனைக் கண்ணில் காணுந்தோறும், நாகர் (உரகர்) நரகரேயாகின்றார். அடிமை வாழ்க்கை நரக வாழ்க்கையன்றோ? நரர்களை வாய்விட்டுக்கதறச் செய்வது நரகம் என்பர். பயத்தால், துன்பத்தால், கவலையால் நாகர் உள்ளம் உலைகின்றது. வாய்விட்டு அலறவும் 'உளற'வுங்கூட

ளக்கு நடுங்குகின்றது. இத்தகைய பரிதாப நிலையிலும்அடியார்கள்பாடும் 'இராஜவாழ்த்து'க்குக் குறைவில்லை.

திசையுறு கரிகளைச் செற்றுத் தேவனும்
வசையுறக் கைலையை மறித்து, வானெ [லாம்
அசையுறப் புரந்தரன் அடர்த்த தோள்களி [ன்
இசையினைத்தும்புரு இசையின் எத்தவே.

தொண்டு பட்டொழுகும் தேவசமுதாயத்தின் இராஜபக்தியையும், தேவசத்துருவான இராவணனது வீரத்தோள்களின் வெற்றியையும் ஒன்றுபட இசைத்து இசைவடிவமாக்கி, தேவரிஷியாகிய தும்புரு தேவகானத்திலே அமைத்துப் பாடுகிறான். திக்கொடு திக் அந்தங்களையும் எறிந்து வென்ற இராவணன், தேவதேவனுக்கும் வசையுண்டாகும்படி கைலையங்கிரியை மறித்தபின், வானுலகமெல்லாம் அசைந்து குலுங்குமாறு தேவராஜராகிய தேவேந்திரனையும் வென்று வலியழித்தான். அத்தகைய தோள்வலி வாழ்க! என்று சக்கரவர்த்தியின் பெரும்புகழினை அமுதகீத மழையாகப் பொழிகின்றார். இராவண ராஜ்பத்திலே தேவர்களெல்லாம் கைகட்டி வாய்புதைத்துப் பணிசெய்து பிழைக்கின்றனர். இதுவும் ஒரு பிழைப்போ? சாவாது சாதலன்றோ இது? தேவர்கள் அவசர அவசரமாகத் தொண்டு செய்யும் விந்தையைப்பாருங்கள்.

சித்திரப் பத்தியில் தேவர் சென்றனர்,
இத்தனை தாழ்ந்தனம் முனியும் என்று, [தம்
முத்தினாரங்களும் முடியும் மாலையும்
உத்தரீயங்களும் இரிய ஓடுவார்.

தேவர் இலங்கையில் தம்வேலைகளுக்குச் செல்கிறார். சித்திரப் பத்திகளாக—வரிசை வரிசையாகக் —கைதிகள் போல நடந்து செல்கின்றார். 'இவ்வளவு தாமதித்து விட்டோமே! எஜமானன் கோபிப்பானன்றோ?' என்ற எண்ணம் திடீரென்று தோன்றுகிறது. உடனே அவர்களது நடை ஓட்டமாகின்றது. அணிந்திருந்த முத்தாரங்களும் மணிமுடிகளும் மலர்மாலைகளும் பின்னே சாய்ந்தோடத் தேவர் முன்னேக்கி ஓடுகின்றார். இங்ஙனம் ஓடிச் செல்லும்போதும் தங்கள் 'சித்திரப்பத்தி' குலையாது தேவர் சென்றனர் என்று கவி கூறுகின்றார்.

அரக்கரோ, தாம் அரச வகுப்பினர் (Ruling class) என்பதை மறவாதவராய், கம்பீரமாக அடியிட்டுச் செல்கின்றார்.

இந்திரன் வளநகர்க்கு எகுவார், இகல்
சந்திரன் உலகினைச் சார்குவார், கலித்து
அந்தகன் உறையுளை அணுகுவார், அயில்
வெந்திறல் அரக்கனதேவல் மேயினார்.

இராவணனது ஆணையைத் தலைமேல் தாங்கி, இந்திரலோகத்திற்கும் சந்திரலோகத்திற்கும் எமலோகத்திற்கும் இறுமாப்போடு செல்லும் அரக்கர்களுக்கும், அரக்கர்களுக்கு அஞ்சி அடிமைத்தொழில் புரியும் தேவர்களுக்கும் எத்தனை வித்தியாசம் பாருங்கள்! அரக்கராட்சியில் தேவ சமூகத்தின் சீர்கேட்டினைக் கம்பர் பல சந்தர்ப்பங்களிலும் வற்புறுத்தியுள்ளார்.

அனுமன் அசோகவனத்தை 'புல்லொடு துகளுமின்றிப் பொடிபட' அழித்து விடுகின்றான். அப்போது அப்பொழிலைக் கண்ணினைக் காக்கின்ற இமைபோல் பருவந்தெரிந்து பாலித்து நின்ற காலதேவதைகளது நிலை



எவ்வளவு பரிதாபத்திற்கும் பரிகாசத்திற்கும் இடமாகின்றது!

நீரிடு துகிலர், அச்சம்
நெருப்பிடு நெஞ்சர், நெக்குப்
பீரிடும் உருவர், தெற்றிப்
பிணங்கிடு தாளர், பேழ்வாய்
ஊரிடு பூசல் ஆர,
உளைத்தனர், ஓடியுற்றார்
பாரிடு பழுவச் சோலை
பாரிக்கும் பருவத் தேவர்.

காவல் தேவர்களது நெஞ்சிலே அச்சம் நெருப்பைச் சொரிகின்றது. அவர்கள் நனைந்த உடையோடும் நடுங்கும் உடம்போடும் பின்னிப் பிணங்கும் கால்களோடும் வருந்தியோடி இராவணன் அருகு சென்று அடியில் வீழ்கின்றார். அரசனை நோக்கி, "குரங்கு இடைகிழித்து வீச, எரிபடு துகிலின் நொய்தின் இற்றது கடிகா என்றார்." ஒரு குரங்கினால், அசோகவனம் நெருப்பிலேபட்ட ஆடைபோல விரைவிலே அழிந்ததென்று, கேள்வியுற்ற இராவணன் அவ்வார்த்தையைக் கொஞ்சமும் நம்பவில்லை. மேலும் அவர்கள் அரக்கர் காத்த மண்டபத்தையும் அக்குரங்கு வேரோடு வாங்கி வீச இலங்கையும் பல இடங்களில் சிதைந்தது என்று சொன்னார்கள். இராவணனது அவநம்பிக்கை இன்னும் அதிகரித்தது.

ஆடகத்தருவின் சோலை
பொடிபடுத்து, அரக்கர் காக்கும்
தேடரும் ஓமம்வாங்கி
இலங்கையும் சிதைத்த தம்மா,
கோடரம் 1 ஒன்றே நன்றிவ்
இராக்கதர்கொற்றம், சொற்ற
மூடரும்மொழியாரென்ன
மன்னனும் முறுவல் செய்தான்.

தேவர்காக்கும் அசோகவனத்தைப் பொடிபடுத்ததுகூட இராவணனுக்கு அவ்வளவு ஆச்சரியமாகத் தோன்றவில்லை. அரக்கர்காக்கும் மண்டபத்தையும் பறித்து வீசியதாம்; அதனால் இலங்கையும் சிதைந்ததாம். என்ன ஆச்சரியம்! குரங்கு ஒன்றே. நன்று, நன்று, அரக்கர் பராக்கிரமம்! இவ்வார்த்தைகளை மூடரும் மொழிவரோ என்று இராவணன் இகழ்ந்து புன்முறுவல் பூத்தான். அச்சமயத்தில் அனுமன் செய்த ஆரவாரம் அவன் செவியில் விழுந்தது. நெஞ்சில் சிறிது பொருமை பொங்க, உடனே குரங்கைப் பிடித்து வரும்படி கிங்கரரை ஏவினன். கிங்கரர் அனைவரும் அழிந்தார்.

வந்தகிங்கரர் ஏயெனும்மாத்திரை 2 மடிந் [தார்.
நந்தவானத்து நாயகர் 3 ஓடினர் நடுங்கிப்
பிந்து காலினர் கையினர், பெரும் பயம் [பிடரின்
உந்த, ஆயிரம் பிணக்குவைமேல் விழுந்து
உளைவார்.

கிங்கரர் மடிந்த செய்தியைத் தெரிவிக்க அரசனிடம் நந்தவனம் காக்கின்ற தேவர்கள் ஓடி வருகிறார்கள். அவர்களுடம்பு நடுங்குகின்றது. கைகால்கள் பின்வாங்குகின்றன. ஆனால் பெரும்பயம் பிடர் பிடித்து முன்னே தள்ளுகின்றது. ஓடோடியும் சென்று தேவர் அச்சத்தால் வழிதுறை அறியாராய், பிணக்குவியல்கள் மீது விழுந்தும் எழுந்தும் உளைகின்றார். முடிவில் அச்சம் எப்படியோ அவர்களை விரைவில் தள்ளிக்கொண்டு இராவணன் சபையில் சேர்த்து விடுகின்றது.

1 கோடரம்—குரங்கு. 2 ஏயெனும் மாத்திரை—உம் என்னும் அளவில். 3 நாயகர்—காவல் தேவர்.

விரைவின் உற்றனர், விம்மினர், யாதொன்
[றும் விளம்பார்,
காதலத்தினுல்பட்டது, கட்டுரைக்கின்றார்,
தரையில் நிற்கிலர், திசைதொறும் நோக்கி
[னர், கலிப்பார்;
அரசன் மற்றவர் அலக்கணே உரைசெய்
[அறிந்தான்.

விரைவில் சென்ற தேவர் துக்கத்தால் குழந்தைகளைப்போல விம்மினர், ஒருவார்த்தை கூடப்பேசுவதற்கு நெஞ்சு துணியவில்லை, நாக்கும் எழவில்லை. பீதியடைந்து, அநாகரிகமாக்களைப்போல் கைக்குறியால் தங்களது கருத்தினை வெளியிட முயன்று, கிங்கரர் பட்டதும் தாங்கள் பட்டுவந்ததும் குறிப்பிக்கின்றனர். அதுவும் சாத்தியமாகவில்லை. தரையில் நிற்பதே அசாத்தியமாகத் தோன்றுகிறது. திசைகள் தோறும் பார்க்கின்றார். ஒரு நிலையில் நிற்கமுடியாமலே அசைந்து அசைந்து ஆடிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் துன்பமே உரை செய்ய அரசன் ஏதோ ஒரு விபரீதச் செயல் நிகழ்ந்திருக்க வேண்டுமென்பதை அறிந்தான். கிங்கரர் இறந்துவிட்டனரோ என்றுவினவினன். ஆனால் தன் போர் வீரர்கள் எவ்வாறு இறத்தல் கூடும்? அவர்கள் தன் ஆணையை இகழ்ந்து நீங்கினரோ? அதையும் நம்பமுடியவில்லையே. இராஜபக்திக்குப் பேர்போன இராஜசேவகர்கள் எவ்வாறு அரசன் ஆணையை இகழ்தல் கூடும்? அவர்கள் போர் தொலைந்தாராய் மறந்து நீங்கினரோ? யாது சொல்வதாக நீங்கள் வரலான தென்று கேட்டான். அப்போது காவல் தேவர்கள் சொன்னார்கள். "நீ அனுப்பிய கிங்கரர் சோர்ந்தாரில்லை, போர் முனையில் அஞ்சினருமில்லை. நீதிமன்றமேறி நெஞ்சறியப் பொய்ச்சான்று புகலும் பேதையர் குலங்களைப் போலக் குரங்கினுல் அவிந்தனர்." என்றார்கள். அப்போது இராவண சபையில் அவனது ஏவலால் எண்திசை காக்கும் தேவர்கள் ஏதோ ஒருகாரியமாக, வந்திருந்தார்கள். இராவணன் அவர்களை நோக்கினன். நோக்கியதும் உள்ளத்தில் வெட்கம் நிறைந்தது. வெட்கத்தோடு பெருங்கோபமும் பொங்கியெழுந்தது. 'அங்கே நடந்தது இன்னதென்று அறிந்து வந்திரில்லையோ' என்று கர்ச்சித்தான்.

ஏவலின் எய்தினர் இருந்த எண் திசைத்
தேவரைநோக்கினன், நாணும்சிந்தையான்,
யாவதென்று அறிந்திலிர் போலுமாலெ
[ன்றான்,
மூவகை உலகையும் விழுங்க மூள்கின்
[றான்.

தேவர்கள் உரையிழந்து விழிக்கின்றார்கள். பயத்தால் விம்முகின்றார்கள். அப்போது இராவணனுக்குச் சிறிது நம்பிக்கை பிறந்தது. ஒருவேளை இவர்கள் நேரில் பார்த்திருக்கமாட்டார்கள் என்று நினைத்தான்.

வீட்டியதரக்கரை என்னும் வெவ்வுரை
கேட்டதோ, கண்டதோ? கிளத்துவீர்
[என்றான்.

கிங்கரர் வதமாய்விட்ட கொடுமையும் ஒரு கொடுமையன்று. இத்தகைய செய்தியை, இராஜபோகத்தில் அமிழ்ந்து கிடக்கும் செவிகளிலே வார்க்கும் வார்த்தையே கொடிது, கொடிது (வெவ்வுரை). இப்போது இராவணனுக்கு இக்கடுஞ்சொல்லைக் கேட்க நேர்ந்ததுகூட ஒரு கொடுமையாகத் தோன்றவில்லை. இக் கடுஞ்சொல்லை முழுமக்களான காவலாளர் இவ்வளவு அசந்தர்ப்பமாக—தன் குடைக்கீழ் ஒருசார் ஒதுங்கி வாழும் அண்ணிபரான எண்திசைத்தேவர் முன்—ஏன் முழக்கஞ்செய்தல் வேண்டும்? இதனுல் சக்கரவர்த்தியின் கௌரவமன்றோ குறைந்துவிடும்? ஆனல் இங்ஙனம் உய்த்துணரும் ஆற்றல் கீழடியாரான காவலாளர்க்கு முண்டோ? ஒருவேளை இம்மூடர், கிங்கரர் வதத்தைத் தாம்நேரில் பார்க்கவில்லையென்று ஒப்பக்கொள்ள மாட்டார்களா? வதமானதாகப் பிறர்சொல்லக் கேட்டிருக்கலாம்; கேட்டதை ஆராய்ச்சியின்றி நம்பியுமிருக்கலாம். 'கேட்டோம்; கண்டோமில்லை' என்று ஒரு வார்த்தை சொல்லமாட்டாரா? அப்படியானுல் 'எண்திசைத்தேவர்' முன் இன்னும்கௌரவத்தைக்காத்துக்கொள்ளலாம். ஏனெனில் பொதுவாக நோக்குமிடத்து, கண்டது சான்றுமேயன்றி, கேட்டது சான்றுவதில்லையே. இவ்வாறுபலபலஎண்ணி, நட்டாற்றில்தத்தளித்துமூழ்குவோன் அற்பச்செடிகொடிகளையும் ஆதாரமாகப் பற்றி மிதக்கமுயல்வது போல, காவல் தேவரை நோக்கி "கண்டதோ, கேட்டதோ, தைரியமாகச் சொல்லுங்கள். பயப்படவேண்டாம்." என்று நயமும் பயமுமாக எச்சரித்துக் கேட்டான். தேவர்களது மறுமொழி இந்த மனக்கோட்டையையும் தகர்த்து விட்டது.



கண்டனம் ஒருபுடை நின்று கண்களால்;
தெண்டிரைக்கடல் என வளைந்த சேனை
[யை,
மண்டலம் திரிந்து ஒரு மரத்தினுல் அடி
உண்டதக்குரங்கு; இ(ன்)னம் ஒழிவதன்
[று என்றார்.

"மகாராஜாவே! மன்னித்தருளல் வேண்டும். நாங்களே கண்டோம்! ஒரு புறத்தே ஒதுங்கி (மறைந்து) நின்று கண்டோம்! கண்கூடாகக் கண்ட அக்கொடுமையை—ஐயோ! — என்னென்று எடுத்துரைப்போம். கண்ணுக்கெட்டிய தூரமெல்லாம் வரம்பின்றி விரிந்து பரந்து அலைமேல் அலை யெறிந்து பொங்கும் கடல் போல, வந்து வளைந்த கிங்கரசேனை முழுவதையும் அக்குரங்கு வட்டமிட்டு உலாவி ஒரே மரத்தினுல் அடித்து அடித்து உயிரை வாங்கிவிட்டது" என்று இராவணன் வினுவிற்கு விடையாக ஒரு விரிவுரை நிகழ்த்தினர்கள். தங்கள் சொல்லில் சக்கரவர்த்திக்கு முழு நம்பிக்கையும் ஏற்படும் வண்ணம் 'அவர்கள் அக்குரங்கு இன்னம் அங்கே தான் இருக்கிறது; ஒழிவதன்று' என்று கூறி முடித்தார்கள்.

பிறகு இராவணன் சம்புமாலி யென்னும் வீரனை நோக்கி அக்குரங்கைப் பற்றித்தந்து தன் சினம் தணிக்குமாறு கட்டளையிட்டான். சம்புமாலியும் அவன் படைகளும் அநுமனுல் அழிக்கப்பட்டபின், நாம் மீண்டும் காவல் தேவரைச் சந்திக்கின்றோம். "கழிந்தார் பெருமைகண்டு களத்தஞ்சி, உதித்துப் புலர்ந்த தோல்போல் உருவத்தமர் ஒடினர்." போர்க்களத்திலே மடிந்து கிடக்கும் அரக்கர் பெருந்தொகை கண்டு அச்சமுற்று வாடி வருந்தி, காய்ந்த தோல் போன்ற உருவத்தினராய், தேவர் ஓடி வருகின்றார்.

புக்கார் அமரர், பொலந்தார் அரக்கன் பொ
[ருவில் பெருங்கோயில்;
விக்கா நின்றார், விளம்பலாற்றார், வெருவி
[விம்முவார்;
நக்கான் அரக்கன், நடுங்கல் என்றான். ஐய!
[நமர் எல்லாம்
உக்கார், சம்புமாலி உலந்தான், ஒன்றே
[குரங்கென்றார்.

தேவர் இராவணன் அரண்மனைக்கு வருகின்றார். பேசமுடியாமல் விக்கல்

உண்டாகின்றது. அஞ்சி அஞ்சிக் குழந்தை போல நெஞ்சு பொருமி, விம்மி யழுகின்றார். இக்கூத்தைக்கண்டு இராவணன் சிரிக்கின்றான். 'நடுங்காது நில்லுங்கள்!' என்று கட்டளையிடுகின்றான். தேவர்கள் ஒருவாறு திடசித்தத்தோடு வந்தகாரியத்தை அறிவிக்கின்றார். "ஐய! நம்மவரெல்லாம் மாண்டார். சம்புமாலியும் மாண்டான். குரக்கு ஒன்று தான்" என்றார்கள். அரசனிடம் உபசாரமாக அரக்கரை நம்மவரென்று (நமர்) தேவர் கூறுவது கவனிக்கத்தக்கது. பிறகு இராவணனது சேனைத்தலைவர் ஐவர், அனுமன் மேல் சென்று மரணமடைகின்றனர். அப்பால் அட்ச குமாரன்—இராவணன் புதல்வரில் ஒருவன்—அனுமனோடு போராடி விண்ணுலகம் ஏறுகின்றான். மீண்டும் 'சாவோலை' கொண்டு செல்லும் நமது காவல் தேவரைச் சந்திக்கின்றோம். ஆனால் இவர்கள் செல்லுமுன் இராவணனுக்குத் தன் செல்வப்புதல்வன் இறந்த செய்தி எட்டி விடுகின்றது. இராவணன் மனைவியும் இலங்கையிலுள்ள பிறமாதரும் வயிறு அலைத்து அலறிக்கொண்டு இராவணன் அடியில் வீழ்ந்து இரங்குகின்றார், ஏங்குகின்றார். இதனைக் கண்ணுற்ற தேவர்களுக்கு இன்னது செய்வது, இன்னது சொல்வது என்பது புலப்படவில்லை. இவர்களும், பெண்களைப் போலவே அரசன் காலில் விழுந்து அழத்தொடங்கினார்கள்.

தாவரும் திருநகர்த்தையலார் முதல்
ஏவரும் இடை விழுந்திரங்கி ஏங்கினர்;
காவலன் கால்மிசை விழுந்து காவல்மாத்
தேவரும் அழுதனர், களிக்கும் சிந்தை [யார்.

காவல் தேவர்கள் புறத்தே அழுகையும் உள்ளத்தே உவகையும் கொண்டார்கள் என்று கவி குறிப்பதிலிருந்து தேவர்களது இராஜபக்தி எப்படிப்பட்டதென்பதை வாசகர் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

வானவரே முதலோரை வினவுவனேல் [வல்லரக்கன்
தான் ஒருவன் உளனாக உரைசெய்யும் [தருக்கிலரால்.

இராவணன் ஒருவன் இருக்கும்வரை, சீதையைக் குறித்த உண்மையைத் தேவர்கள் எனக்குத் தெரிவிக்க மாட்டார்கள் என்று அனுமன் கருதுவதும் தேவர்கள் இராஜபக்தியில் உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்யும் ஆஷாடபூதிகளே என்பதை வெளிப்படுத்துகின்றது. இராவண இராஜ்யத்தில் தேவர்கள் அநீதியைக் கண்டிப்பதற்கும் ஆற்றலின்றி வாய்மை பேசுவதற்கும் வாயின்றி, தன்மதிப்பு (தருக்கு) ஒரு சிறிதுமின்றி உயிரைமாத்திரம் ஒருவாறு கெட்டியாகப் பிடித்துக்கொண்டு வாழ்ந்து வருகின்றார். இத்தகைய தொண்டு நிலை ஆண் பெண் என்ற இருபாலாரான தேவர்களிடத்தும் காணப்படுகின்றது. ஆண்மக்களைப் போலவே பெண் மக்களும் அரக்கர்க்குச் சிற்றடிமைகளாய்க் குற்றேவல் செய்கின்றனர், அரக்கிமார்களுக்குத் தாதியராய்ப் பலவகையாகப் பணிசெய்கின்றனர். இம்மட்டோ! இராவணன் முன் 'செருப்பினைத்தாங்கித் திலோத்தமை செல்'வாள் என்று கவி கூறுவதால் தேவசமூகம் இராவண இராஜ்யத்தில் எத்தகைய இழி தொழிலும் புரிந்து வந்ததென்று தெரிய வருகிறது. தேவசமூகத்தின் பெருங் குறையைப் போறிவாளனான அனுமன் நன்குணர்ந்து கொண்டான். ஆகையால் தான் அவன் தேவர்களை 'தருக்கிலர்'



செருக்கில்லாதவர்; (கௌரவமில்லாதவர்) என்று கூறுகின்றான். இராவண இராஜ்யத்தில் தேவர்கள் பெருமிதமில்லாத பேடிகளாகவும் அரக்கர்கள் மிடுக்குவாய்ந்த கௌரவ புருஷராகவும் காணப் படுகின்றனர். 'கௌரவ'மே இராவணனது இராஜுவ ஏகாதிபத்தியத்தைத் தாங்கி நிற்கும் ஜீவாதாரமான பெருந்தூணாயிருக்கின்றது. இதனாலன்றோ இராவணன் தன் கௌரவத்தையும் அரக்கர் கௌரவத்தையும் காக்க அரும்பாடு படுகின்றான். இந்திரசித்தனும், தம்பி அட்சகுமாரன் வதத்தைக் கேள்வியுற்றபோது, அனுமனால் அருமைச் சிறுதம்பி அழிந்ததைக்கூட, ஒரு பெரு நஷ்டமாக மதிக்கவில்லை; சக்கரவர்த்தியின் கௌரவத்தையே பெரிதாகமதிக்கின்றான். 'தம்பியையுன்னுந்தோறும் தாரை நீர்ததும்பும் கண்ணான்.....குரங்கினால் ... எம்பியோ தேய்ந்தான்? எந்தை புகழன்றோ தேய்ந்ததென்றான்." அரக்கர் தவப்பயன்—பகைவர் காலாக்கினி—இலங்கை இளஞ்சிங்கம்—வீரவீரன் கூறுவது என்னை? குரங்கால் தேய்ந்தது தம்பியன்று; அந்தோ! சக்கரவர்த்தியின் அரும்புகழன்றோ? என்ற கம்பீரவசனம், இராவண சமஸ்தானத்தின் உயிர்நிலையான மர்மம் இதுவெனச் சுட்டிக் காட்டுகின்றது. அரச வகுப்பினர் மிடுக்கும் அடிமை வகுப்பினர் நடுக்கமும், இராவணனது இராஜுவரசஜ்ய நிர்வாகத்திற்கு, ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போலவே இன்றியமையாதனவாகக் கருதப் பெறுகின்றன. ஏனெனில் அடிமை வகுப்பினரான தேவர் இராஜபக்தராக நடிப்பினும், அந்நடிப்பு—பக்தியை யார் நம்புகிறார்? "தீய செய்குநர்தேவர்" என்றே அரக்கர் தீர்மானிக்கின்றார் (ஊர் தேடுபடலம். பாட்டு உஉ). அரசவகுப்பினர் தம்மையே நம்புகின்றார்; தமது ஆற்றலையும் அருந்தவத்தையும் அதிர்ஷ்டத்தையுமே நம்பியிருக்கின்றார்.

காயத்தால் பெரியர், வீரம்
கணக்கிலர், உலகம் கல்லும்
ஆயத்தார், வரத்தின் தன்மை
அளவற்றார், அறிதல் தேற்றா
மாயத்தார்.

அரக்கர்கள் தங்கள் மிருகபலம், தோள்வலி, வஞ்ச நெஞ்சம், பெருங்கூட்டம்—இவற்றையே நம்பி வாழ்கின்றார்; இவற்றை நம்பியே உலகெலாம் அடிப்பட அரசு புரிகின்றார்.

கழலுலாம் காலும் கால
வேலுலாம், கையும், காந்தும்
அழலுலாம் கண்ணும் இல்லா
ஆடவர்இல்லை.

காலில் வீரக்கழல், கையில் (உயிர் குடிக்கும்) காலவேல், கண்ணில் கோபாவேசம்—இவை அரக்கர் பெருமை, அவர்தம் அளவுகடந்த போர் வெறியினையும் இவை வெளியிடுகின்றன.

நானிலம் அதனின் உண்டு
போர் என நவிலின், அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும்
சிந்தையர்.

உலகத்தில் எங்கேயாவது ஓரிடத்தில் போர் என்று கேள்வியுற்றால் போதும். 'போர்' என்ற சொல் செவியில் பாய்ந்ததும், கள்ளினும் மேலான போர்வெறி (களிப்பு) நெஞ்சிலே பொங்குகின்றது. பக்தர்க்கு இறைவனைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாள். அரக்கர்களுக்குப் போர் செய்யாத நாளெல்லாம் பிறவா நாளே. போரே அவர்களுக்குத் தேனும் பாலும் அமுதுமா யிருந்தது. போரே உண்ணும் உணவும் பருகும் நீருமாயி

ருந்தது. போரே உயிர்; போரே அவர் மூச்சுக்காற்று. இத்தகைய போர் வெறி கொண்ட ஜாதியார், சாதுக்களான தேவர்களை அடக்கி ஆண்டது ஆச்சரியமாகுமா? இவர்கள் திக்விஜயஞ் செய்து ஒரு குடைக்கீழ் உலகாண்டது தான் ஆச்சரியமாகுமா? இத்தகைய எண்ணங்கள் 'ஊர் தேடு'ம் அநுமன் உள்ளத்தில் உதிக்கின்றன.

இராவணன் குடிகளும் இலங்கை வாசிகளுமான அரக்கர் அனைவரும் போர்வீரரே. அரக்கர்களில் குடிகள் வேறு, போர்வீரர் வேறு என்ற பாகுபாடு இல்லை. (They are all citizen-soldiers) இலங்கையில் ஆண்மக்களைப்போல், போர் வெறி பிடித்த பெண் மக்களுமிருந்தனர். 'போர் அரக்கர்' வீர வேசத்தைப் பல சந்தர்ப்பங்களிலும் பாராட்டிப் பேசும் கம்பர், 'போர் அரக்கியரை'யும் குறித்துச் செல்கின்றார். (நிந்தனைப் படலம். கஅ). மேலும் சில அரக்கியரை, "சூலம் வாள் சக்கரம் தோட்டி தோமரம்—காலவேல் கற்பணம் கற்றகையினர்" என்று 'காட்சிப்படலம்' வர்ணிப்பதால், ஆண்களோடு சரிசமானமாகப் போர்க்கலையில் பயிற்சி பெற்று ஆயுதபாணிகளா யிருந்த வீரப் பெண்களும் (Amazons) இலங்கையில் காணப்பட்டனர் என்பது அறியக் கிடக்கின்றது. 'போராக்கரு'ம் 'போராக்கிய'ரும் 'போரியற்கை யிராவணன்' (ஊர்தேடுபடலம்.) என்று புகழ்ந் தோதப்பெறும் மகா சூரனை தங்கள் சக்கரவர்த்தியிடம் மெய்யன்பு செலுத்தியது ஓர் ஆச்சரிய மன்று. இராஜபக்தியில் இவர்கள் தேவர்களைப்போல் வெளிவேடம் பூண்டு நடித்தவரல்லர். ஏனெனில் அரக்கரது இராஜபக்திக்கும் தேசபக்திக்கும் பரஸ்பர விரோதமில்லை. அரக்கர்க்கு இராஜபக்தியே தேசபக்தி; தேசபக்தியே இராஜபக்தி. இவ் இரண்டும் வெவ்வேறாகப் பிரிக்க முடியாதபடி ஒன்றோடொன்று இணைந்திருக்கின்றன.

(தொடரும்.)

---

## எதிர்கால நாகரிகம்.

---

விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியின் பயனாக, மக்களிடையே எதிர்காலத்தில் பலபல மாறுதல்கள் ஏற்படுதல் கூடும். உதாரணமாக, ௧000 வருஷங்களுக்குப் பின் மனிதரின் நிலையை புரொபஸர் லோ. என்பார் பின்வருமாறு ஊகிக்கின்றார். கம்பியில்லாத் தந்தி விசேஷ அபிவிர்த்தியடையும். மனிதர் வீட்டிலிருந்தே, கம்பியில்லாத் தந்திமூலம் தங்கள் காரியாதிகளை முடித்துக்கொண்டு ஆஸ்திரேலியா முதலிய தூரதேசங்களில் நடக்கும் பந்துவிளையாட்டுப் பந்தயங்களைப் பார்ப்பார். பறக்கக்கூடியதும் நிலத்தில் போகக்கூடியதுமான கப்பல்களில் யுத்தம் செய்வார். நடப்பதையே மறந்துவிடுவார். உடைகளும் மாறிவிடும். ஆண் பெண் உடைகளுக்கு அதிக வித்தியாஸம் இருக்காததால், மனைவியின் உடையைத் தரிக்காதிருக்க, புருஷன் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். குற்றங்கள் வியாதிகளென்றும் குற்றவாளிகள் வியாதியஸ்தர்களென்றும் கருதப்பட்டு ஆஸ்பத்திரிக்குச் சிகிச்சைக்கு அனுப்பப்படுவார்கள்.

---

## நாமகள் விழா.

---

வெள்ளைத் தாமரைப் பூவிலிருப்பாள்,
வீணை செய்யும் ஒலியி லிருப்பாள்,
கொள்ளை யின்பங் குலவு கவிதை
கூறுபாவலர் உள்ளத் திருப்பாள்,
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தி னுள்நின் றொளிர்வாள்,
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொருளாவாள்.

மாதர் தீங்குரற் பாட்டி லிருப்பாள்,
மக்கள் பேசும் மழலையி லுள்ளாள்,
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியின்நாவை இருப்பிடங் கொண்டாள்,
கோதகன்ற தொழி லுடைத் தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்—
ஈதனைத்தின் எழி லிடை யுற்றாள்,
இன்பமே வடி வாகிடப் பெற்றாள்.

செந்தமிழ் மணி நாட்டிடை யுள்ளீர்!
சேர்ந்தித் தேவை வணங்குவம் வாரீர்!
வந்தனம் இவட் கேசெய்வ தென்றால்
வாழி யஃதிங் கெளி தன்று கண்டீர்!
மந்திரத்தை முணுமுணுத் தேட்டை
வரிசையாக அடுக்கி யதன்மேல்
சந்தனத்தை மலரை யிடுவோர்
சாத்திரம் இவள் பூசனை யன்றாம்.

இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்,
இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்,
அன்ன சத்திர மாயிரம் வைத்தல்,
ஆலயம் பதி னாயிர நாட்டல்,
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்,
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத் தறிவித்தல். (பாரதி.)

---

## கைத்திறன்.

ஸ்ரீ எஸ். தேசிகவிநாயகம் பிள்ளை யவர்கள் பாடியது.

வெயில் வரினும் மழைவரினும் விரிகுடையாம் கையே!
வியர்வை வரின் ஆற்றுசிறு விசிறியதாம் கையே!
துயில ஒரு மகவைத்தொட்டில் இட்டசைக்கும் கையே!
துரிதமுடன் எழுதவொரு தூவிகொளும் கையே! (க)

இனிய செந்நெற் புலம் உழுதற் கேர்பிடிக்கும் கையே!
இன்னிசைகள் எழுப்ப வீணை யேந்து மெழிற் கையே!
கனியுதிர்ப்பக் கல்லெறியும் கவண்பிடிக்கும் கையே!
கண்களிப்பப் படமெழுதிக் காட்டுமென்றன் கையே! (உ)

தானதர்மம் செய்யவெதும் தளர்விலதாம் கையே!
தளர்பவரைக் கண்டுதலை தாங்க எழும் கையே!
பானம் செய்தற் கேற்றவொரு பாத்திரமாம் கையே!
பையரவைப் போல வந்து பயமுறுத்தும் கையே! (ங)

மலரெடுத்து நல்லசெண்டு மாலைகட்டும் கையே!
வரய்க்கினிய பண்டமெலாம் வைத்துதவும் கையே!
ஜலத்திலோட்டம் விடுவதற்குச் சலிப்பிலதாம் கையே!
தரையில் மோட்டார் ரயில் நடத்தச் சமர்த்துவதாம் கையே!

கோபுரஞ்சேர் கோவிலொடு குடிசை கட்டும் கையே!
கூபதடா கங்களெலாம் குழித்துதவும் கையே!
ஆபரணம் பன்மணிகள் ஆய்ந்து செய்யும் கையே!
ஆடைகள் பீர்வாடைகளும் ஆக்குமெழிற் கையே! (ரு)

மல்யுத்தம் செய்வதற்கு வந்துநிற்கும் கையே!
வாள்பிடித்து வகை வகையாய் மரமறுக்கும் கையே!
நெல்லைக்குத்தும் அரிசி தீட்டும் நொய்கொழிக்கும் கையே!
நேயரொடு பாண்டியாடி நிதம் ஜெயிக்கும் கையே! (சா)

நாடியசீர் நாடடைய நாட்டுருட்டும் கையே!
நல்லகதர் நெய்யமிகு வல்லமை கொள் கையே!
பாடிய வாய் தேனூறும் பாரதியார் பாடல்
பாடுதற்குப் பண்ணமைந்த பாணிகொட்டும் கையே! (எ)

அழைப்பதற்கும் அகற்றுதற்கும் அபிநயிக்கும் கையே!
ஆக்குதற்கும் அழிப்பதற்கும் ஆற்றல் பெறும் கையே!
உழைப்பதற்கும் ஊட்டுதற்கும் ஊக்கமுறும் கையே!
உதவுதற்கும் ஏற்பதற்கும் உரிமைகொளும் கையே! (அ)

மக்களைத்தம் ஒக்கல்வைத்து வளர்த்திடுமென் கையே!
வர்ணமலர் தலைக்கணிந்து வாசமூட்டும் கையே!
தக்கபெரியோர்க்கு சலாம் தானளிக்கும் கையே!
தரணியிலுன் திறமையெலாம் சாற்றலெளி தலவே! (கூ)

## பத்திரிகை ஆராய்ச்சி.

காலஞ்சென்ற பண்டிதசிகாமணியான ஸர். ராமகிருஷ்ண கோபால பந்தார்க்கரைக் குறித்து ஓரரிய கட்டுரை ஸ்ரீ லஜபதிராயின் 'மகாஜனம்' (The 'People') என்னும் பத்திரிகையில் பிரசுரமாயிருக்கிறது. அதன் சாராம்சம் வருமாறு:—

ஸர். ராமகிருஷ்ண பந்தார்க்கர் ஓர் உண்மையான கலைச்செல்வராவர். அவர் விசேஷ வடமொழிப் பயிற்சியோடு நவீன முறைகளில் பயின்று பழகிய ஆராய்ச்சித்திறமையும் வாய்ந்தவராய் விளங்கினார். கால ஆராய்ச்சியில் கைவந்தவர். இவர் கஅஙஎ ஜூலை சுஉந்தேதி ஓர் ஏழை மராட்டியப் பிராமண குடும்பத்தில் பிறந்தார். இவர் மாணாக்கராயிருந்த காலத்திலே, இவரது மதிவன்மையைக்கண்டு வியந்த தாதாபாய் நௌரோஜி இவரது எதிர்கால வாழ்வு விசேஷ ஒளிபெற்று விளங்கும் என்று கூறினார். பல பெரியோர்களைப் போலவே இவரும் பலவகையான துன்பங்களை அனுபவித்தார். அவர்களைப்போல இவரும் துன்பத்திற்கு அருமருந்து தொண்டாற்றுதலே என்பதை நன்குணர்ந்தார். உழைப்பே துன்பத்தை இன்பமாக்குவது என்னும் உண்மை கண்டு, தணியாத அறிவுத்தாகத்தோடு இவர் ஆராய்ச்சித்துறைகளில் உழைத்துவந்தார். இவர் தாம் கண்டறிந்த விஷயங்களை இனிமையாகப் பிறர்க்குப் புகட்டுவதிலும் அருந்திறமை வாய்ந்தவர். மாணாக்கர் உள்ளத்தைக் கவர்ந்து வசமாக்கி மலரச்செய்வதிலும் பந்தார்க்கர் தேர்ச்சி பெற்றிருந்தார். பதஞ்சலி கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்னும் உண்மையினை முதல் முதல் வெளியிட்டவர் பந்தார்க்கரே. கிறிஸ்துவுக்கு முற்பட்ட 'வடநூல் வரலாற்றி'ல் பதஞ்சலி காலம் ஒருமைல்—கல்லாகக் கருதப்பெறுகின்றது. கஅஎரு-ம் ஆண்டில் பந்தார்க்கர் 'ராயல் ஏஷியாடிக் ஸொஸைடி'யின் ஓர் கௌரவ அங்கத்தினரானார். இந்திய 'மொழிநூலாராய்ச்சி'யைப்பற்றி இவர் செய்த பேருரைகள் ககூகச-ல் புத்தகவடிவமாக வெளியிடப் பெற்றுள்ளன. கஅஎகூ-ல் இவர் வடமொழிக் கையெழுத்துப் பிரதிகள் தேடும் வேலையில் நியமிக்கப் பெற்றார். வைணவ சமயத்தின் தொன்மை, காஷ்மீர சைவம், சமணமதம்—இவற்றைக் குறித்து ஆராய்ச்சி செய்து, ஓர் அரிய நூல் வெளியிட்டுள்ளார். இப்பெரு முயற்சியைப் பாராட்டி, ஜெர்மன் சர்வகலா சங்கமொன்று இவருக்கு Ph. D. என்னும் பட்டம் சூட்டியது. ஐரோப்பாவிலுள்ள பல ஆராய்ச்சிக் கழகங்களும் இவருக்குப் பலபட்டங்களை வழங்கின. அரசாங்கமும் 'ஸி. ஐ. ஈ.' பட்டம் அளித்தது. 'சைவ—வைணவம்' என்னும் தமது தனிப் பெருநூலில் (Magnum Opus), ஆசிரியர் 'பக்தி கிறிஸ்துசமயத்தின் சிறப்பியல்பே' என்னும் கொள்கையை மறுத்து, கிறிஸ்துவுக்கு ஆறு நூற்றாண்டுகட்கு முன்னரே பக்தியோகம் இந்தியாவில் வழங்கியதென்பதைச் சித்தாந்தம் செய்தார். இவர் வாழ்க்கை மராட்டிய வாலிபர்களுக்கு வழிகாட்டி நிற்கின்றது. புனாவில் இவரது நினைவை நிலைநிறுத்தும் வண்ணம் இவர் பெயரால் ஓர் ஆராய்ச்சிச் சாலை நிலையிடப் பெற்றுள்ளது. அறிவிலும் ஆண்டிலும் முற்றமுதிர்ந்த பந்தார்க்கர் சென்ற திங்களில் விண்புகுந்தார். "நன்றாகத் தொண்டாற்றுவதே உனது பரம புருஷார்த்தம். கடமையே உனது நோக்கம். பலன் நோக்கமன்று" என்னும் கீதாசாரியன் கொள்கையே பந்தார்க்கர் வாழ்க்கையின் ஜீவநாதமாய் ஒலித்தது.

பந்தார்க்கர் வாழ்க்கை மராட்டிய வாலிபர்க்கு வழிகாட்டுவது போல

வே, தமிழ் இளைஞர்களையும் தமிழ்ப் பண்டிதர்களையும் ஆராய்ச்சித்துறையில் கல்வழிப் படுத்துவதாகுமென்று நம்புகிறோம். வடமொழி ஆராய்ச்சித் துறையை வளமுறச்செய்த பந்தார்க்கர் போன்ற பண்டித ரத்தினங்கள் நாடெங்கும் மகிழ்ந்து திகழ்தல் வேண்டும். அப்போதுதான் நாணமின்றி இந்நாளிலும் இந்நாட்டில் தலையெடுத்துவரும் போலி ஆராய்ச்சி புறங்காட்டி ஓடி ஒளிந்து ஒழிவதாகும். அப்போது தமிழ் ஆராய்ச்சி தானே தலையெடுத்து மேனி செழித்து வளர்ந்தோங்கும்.

* * *

செப்டம்பர் ௧௦—ந்தேதி சென்னை இராயபுரத்தில் காலஞ் சென்ற திவான் பகதூர் சுவாமிக்கண்ணுபிள்ளையும் லா. ராமகிருஷ்ண பந்தார்க்கரைப் போலவே ஓர் அருங்கலை பரசரும் உண்மையாராச்சி யாளருமாவர். ஸ்ரீ சுவாமிக்கண்ணு பிள்ளையைக் குறித்துப் பத்திரிகைகளில் வெளியிடப்பெற்ற விஷயங்களின் சாரம் வருமாறு:—

இவர் கி. பி. ௧அசுகு—ம் ஆண்டில் கோயமுத்தூர் ஜில்லாவிலுள்ள ஒரு கிராமத்தில் பிறந்தார். இவர் பன்மொழிப் பயிற்சியும் பல்கலைப் பயிற்சியும் பெற்று விளங்கினர். தென்னிந்திய பாஷைகளிற் போலவே ஐரோப்பிய பாஷைகளிலும் பயிற்சி பெற்றிருந்தார். இவர் உத்தியோகப் பற்றுள்ளவராயிருந்தும், பந்தார்க்கரைப் போலவே உழைத்து உழைத்து ஆழ்ந் தகன்ற நுண்ணறிவும், கால ஆராய்ச்சித் திறனும் வாய்ந்தவரானார். கல்வி கேள்விகளே அவர்க்கு உண்ணும் உணவாகவும் பருகுநீராகவு மிருந்தன. இவர் வானூலாராய்ச்சியிலும் வல்லவரா யிருந்தார். கல்வியைப் போல் அறிவும், அறிவினைப்போல் ஒழுக்கமும், ஒழுக்கத்தைப் போல் உயரிய பக்தியும் உடையராயிருந்தார். அறிவுச் செல்வத்தையே பெருஞ் செல்வமாக மதித்த இவர், 'தன்னடக்க'த்தோடு ஆடம்பர மற்ற வாழ்க்கை வாழ்ந்தார். தேனீயைப்போல் சுறுசுறுப்பாயிருந்ததால், இவருக்கு உறங்குவதற்கு ஐந்து மணி நேரம் தான் சாவகாசம் கிடைத்தது. கிரேக்க பாஷை, லத்தின், பிரஞ்சு, ஜர்மன், சமஸ்கிருதம், தமிழ் ஆகிய பலவேறு மொழிகளிலும் இவர் பாண்டித்தியம் பெற்றார். தமிழ்நாடு, பாண்டித்தியத்திற்கும்பொதுவாழ்க்கைக்கும் அணிகலனாக விளங்கிய ஓர் அருந்தவப் புதல்வனை இழந்துவிட்டது.

திரு. சுவாமிக்கண்ணு தமிழ் ஆராய்ச்சித் துறையிலேயே தம் வாழ் நாள் முழுமையும் உரிமையாக்கி உழையாது உத்தியோகப் பற்றோடு வாழ்ந்து காலஞ் சென்றது நமது தாய் நாட்டின் துரதிர்ஷ்டமேயாகும். இவரைப் போன்ற பேரறிஞர் தமிழ்ச்சரித ஆராய்ச்சியிலும் கால ஆராய்ச்சியிலும் தலையிட்டு, பந்தார்க்கரைப் போல் ஒரு முகமாக உழைத்திருப்பாராயின், 'கூவலாமைகளா'ன போலி ஆராய்ச்சியாளரால் கலக்கப்பெற்ற துறைகள் ஒருவாறு தெளிவடைந்திருக்கும் என்பது திண்ணம்.

* * *

'மார்னிங் போஸ்டி'ல் 'டீன் இன்ஜ்' என்பார் வெளியிட்டுள்ள கருத்து சிந்திக்கத்தக்கது.

இயற்கையை இரக்கமில்லாத — தெய்வ ஒளிவீசப்பெறுத ஓர் இயந்திரமாக்கருதும் நாத்திகக்கொள்கை வாழ்விற்கு நற்றுணையாவதன்று. ஆசையைப் பெருக்கிவாழ் என்று நாத்திகம் கூறுகின்றது. பேராசையை யகற்றித் தியாகமூர்த்தியாகப் பெருவாழ்வு வாழ்வதே அறிவுடைமை யென்பது ப்ளேடோ என்னும் யவனமுனிவனும் கிறிஸ்து பெருமானும் கண்ட உண்மையாகும்.

# சதங்கையொலி

## பாரதி பாடல்.

கவிகளே ஒரு மொழிக்குப் புதிய உயிரும் புதிய ஒளியும் புதிய அழகும் அளிப்போராவர். ஒரு நாட்டிற்குச் சுதந்திரம் மூச்சுக் காற்றென்றால், கவியே நாட்டு மொழியை நன்குவளர்க்கும் 'இரத்த ஓட்டம்' ஆகும். ஒரு மொழியைப் பாதுகாப்பதற்கு, அம்மொழியிலுள்ள பண்டை இலக்கியங்கள் மாத்திரம் போதுமா? நாட்டின் நன்மைக்கு இசைவாகக் கவிபாடும் புலவர் பெருமக்கள் அவ்வக்காலங்களில் தோன்றி மறைவதும் மொழிவளர்ச்சிக்கு இன்றியமையாததாகுமன்றோ? கம்பர் வள்ளுவர் ஆகிய பழம்புலவர், தமிழன்னைக்கு இலக்கிய உலகில் விசேஷ கௌரவஸ்தானம் அளித்து விட்டனர். எனினும் காலத்துக்கேற்ற கவிப்பெருக்கும் கலைப்பெருக்கும் கடல் வெள்ளம் போலத் தமிழ்மக்களிடையே பெருகினு லொழிய, தமிழரசி நீலநதிக்கரையில் கௌரவமாகப் 'பாடஞ்' செய்து வைக்கப்பெற்ற பிண அரசுகளைப் போல நாளடைவில் மாறிவிடுதலும் கூடும். "மெல்லத் தமிழினிச்சாகும்" என்று அன்னிய மொழிக்கு அடிமையாகி யுழன்ற மக்கள் கருதி மகிழ்ந்த காலத்திலே, "அன்னை கண்ணீர் எவ்வகையினும் துடைப்பேன்; இன்றேல் என் உயிர் துடைப்பேன்" என்று சபத மிட்டெழுந்த பெரியார் காலஞ் சென்ற தேசபக்த ஆசுகவியான சுப்பிரமணிய பாரதியாரே யாவர். இவர் அன்னை யடிமலர்களில் அணிந்த கவிமலர் சிலவேனும் என்றும் வாடாத ஒளி குன்றாது திகழும் என்பது திண்ணம். பலவீனம், ஒற்றுமையின்மை ஆகிய கெட்ட கனவுகள் கண்டு உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்த தமிழ் மக்களைத் தம் இன்னிசை முழக்கத்தால் எழுப்பிய புண்ணியத் திருப்பணி நமது பாரதி யாருக்கே யுரியதாகும். இத்தகைய கீதங்கள் தனதெல்லைக் குட்பட்ட பாடசாலைகளிலும் கலாசாலைகளிலும் முழங்குதல் கூடாதென்று அதிகாரவர்க்கம் விதிசெய்து விட்டதென்று பத்திரிகைகளால் அறிகிறோம். கல்விஇலாகா நமது மந்திரிகள் வசப்பட்டும் தமிழ்த் தாய்க்கு இத்தகைய அநீதி இழைக்கத் துணிந்தவர் யாவர்? என்று அறியவிரும்புகிறோம். வளர்நெறி யமைச்சர் நம் நாட்டிலே உழவுக்கும் தொழிலுக்கும் வளர்ச்சி வேண்டுமென்று உழைப்பது போலவே, நாட்டு மொழிக்கும் வளர்ச்சி இன்றியமையாததென்று பல இடங்களிலும் பல சந்தர்ப்பங்களிலும் பேருரைகள் நிகழ்த்தி வருகின்றார். ஆனால் கல்வியமைச்சர் 'பாரதி பாடல்'களை வெறுப்பதற்கு யாது காரணம் என்பது விளங்கவில்லை. ஒருவேளை, அவர் ஆந்திரரா யிருப்பதால், 'பாரதி பாடல்'களின் தமிழ்ச் சுவையை அறியா திருத்தல் கூடும். ஆனால் பாரதி கீதங்களை ஆந்திரத்திலாதல் ஆங்கிலத்திலாதல் மொழி பெயர்த்தேனும் கனம் பாத்ரோ அறிந்துகொள்ள முயல்வாரா? பாரதியார் பாடல்களில் சில ஆந்திர மொழியில் அமைக்கப் பெற்றுள்ளன என்று கேள்விப்படுகிறோம். இது உண்மை யெனின், கல்வியமைச்சர் அவற்றையேனும் அறிந்து கொள்ளமுயல்வாரா? வடநாட்டு ரவீந்திரரை வாயார வாழ்த்தும் இவர் தமிழ் நாட்டு ரவீந்திரரை இகழ்ந்து புறக்கணிப்பதேனோ? இரட்டையாட்சியே! இதுவோ உன் நீதி? இதுவோ உன் ஆண்மை? இதுவோ உன் தாய்மொழிப்பற்று? இதுவோ உன் தமிழ் வளர்ப்பு? நன்று நன்று நின் ஆட்சி!

## 'நமது பரதகண்டம்'

குருடன் குருடனுக்குக் கோல் பிடித்து வழிகாட்ட முயன்றால், குருடர் இருவரும் படுகுழியில் வீழ்ந்து கிடப்பர் என்பது ஆங்கில மொழியிலே காலங்கண்டதோர் பழமொழியாகும். இந்நாளில் நம் தமிழ் நாட்டிலே, குருடர் குருடருக்கு வழி காட்டும் திருக்கூத்து, வெகு விமரிசையாக

நடைபெறுகின்றது. இவ் விடைக்கூத்து அரசியல் உலகத்திலிருந்து சமூக உலகத்திலும் சமூக உலகத்திலிருந்து தமிழிலக்கிய உலகத்திலும் புகுந்து விட்டது. இதன் பயனாக நம்மக்களில் பலர் விழி குன் குருடராகிக் குழியில் விழுந்து, கரையேற வகையின்றி வருந்துகின்றார். இவர்களது விடுதலைக்கு வழியில்லையோ? தமிழ்த் தெய்வமே பாரதியார் நாவினின்றும் இவ்வினாவிற்கு விடைதருகின்றாள். "வெள்ளத்தின் பெருக்கைப்போல் கவிப்பெருக்கும் கலைப்பெருக்கும் மேவுமாயின், பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம் விழி பெற்றுப் பதவி கொள்வார்." கலைப் பெருக்கும் கவிப்பெருக்குமே நம்மைக் கைதூக்கி விடுப்பனவாகும். பாரதி, சுந்தரம் பிள்ளை போன்ற உண்மைக் கவிச் செல்வர், ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு முக்கியமான 'வழிகாட்டிகளாவர்'. ஆனால் கலைப் பெருக்கே, ஒருநாடு பழுதற்ற வலியுற்ற வனம்பெற்று வளர்ந் தோங்குவதற்கு இன்றியமையாத துணைக்காரணமாகும். கலைகள் பல பல. இவற்றுள் 'சரித்திர ஆராய்ச்சி' அதிமுக்கியமானதோர் அருங்கலையாகும். தாம் பிறந்த நாட்டின் வரலாற்றினை உள்ளவாறு உணர்தல் மக்கள் கடமையே யாகும். ஆனால் நமது மாணாக்கர்களுக்கு நம் தேச சரித்திரம் எவ்வாறு கற்பிக்கப்பெறுகின்றது? மேலைநாடுகளில் தேச சரித்திரப் பயிற்சி தேச பக்தியை வளர்க்கின்றது: நம் நாட்டிலோ அது தேசபக்தியை முளையிலே களைந்து கொல்கின்றது. சிவாஜியென்பது ஒரு 'மலையெலி'யின் பெயரே. இந்து நாகரிகம் என்பது அநாகரிகமே. "ஆதியில் பல மாராட்டர் அரப்பியர் திருக்கரெல்லாம்—நீதியில்லாத தன்பம் நிகழ்த்தியே நாட்டையாண்டார்—மேதினி மின்னாள் இன்னல் மேவுவள் அந்தோ! என்று—நீதிலா வெள்ளை மாக்கள் தெய்வமாய் உலகம் காத்தார்." இத்தகைய புராணமே பக்திவிசுவாசத்தோடு கலாசாலைகளில் ஓதப்பெறுகின்றது. இதற்கு மருந்து தேசிய முறையில் நமது பாரத கண்டத்தின் உண்மை வரலாற்றினை ஆராய்ந்து கற்பிப்பதேயாகும். இத்தகைய அரும்பணியினை மேற்கொண்டு 'நமது பாரதகண்டம் (முதற் பாகம்)' என்னும் தமிழ் நூலை நமக்களித்துள்ள கிரந்த கர்த்தாவான வை. சூரிய நாராயண சாஸ்திரிரியார், M.A., L.T., அவர்களுக்கும், பிரசுர கர்த்தரான 'தாருல் இஸ்லாம் புஸ்தகசாலை' யார்க்கும் எமது மனமுவந்த நன்றியறிதலையும் வந்தனத்தையும் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளோம். இந்நூலுக்கு 'முன்னுரை' யளித்த அன்பர் 'நவசக்தி ஆசிரியர்' கூறும் வண்ணம், 'இது தேசபக்தி மேலீட்டானும், தாய்மொழி ஆர்வமே லீட்டானும், எழுதப்பட்ட தென்ப'தில் ஐயமில்லை.

## மதிப்புரை.

**கந்த புராணச் சுருக்கம்:**—(மூலமும் உரையும்) கந்தபுராணம் ஒரு பாராகாவியம். அது முருகவேளின் திருக்கதைகளை விரிவாக எடுத்துரைப்பதாகலின், கடல்போலப் பரந்து கிடக்கின்றது. இக் கடலைத் தம் திருநாவின் மந்தாரத்தால் கடைந்து அமுதாகத் திரட்டியருளிய பெரியார் திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகளாவர். இவர் குமாரசாரான மைசூர் மன்னர் ஒருவரது வேண்டுகோளுக்கு இணங்கி இச் சுருக்க நூலினை ஆயிரத்துச் சில்லறை திருவிருத்தங்களால் அருளினார். கந்த புராணப் பயிற்சிக்கு முன் இந்நூல் கற்பது நன்று. பதிப்பாளர்—முருகவேள் புத்தகசாலையார், இராயப்பேட்டை, சென்னை, விலை ரூபா ௩.

**திருவருட் பயன்:**—(விளக்க வுரையுடன்). ஸ்ரீ உமாபதி தேவநாயனார் அருளிய இந்நூல் குறட் பாக்களால் அமைந்துள்ளது. சைவ சித்தாந்தம் கற்கப் புகுவோர்க்கு இன்றியமையாதது. இதனைத் தற்காலச் சைவமாணாக்கர்க்குப் விளக்கப்புகுந்த திரு. வெபாத சுந்தரம் பி. ஏ. அவர்கள் சித்தாந்த சாத்திரக் கொள்கைகளுக்கு இணங்கவே விளக்கவுரை வகுத்திருப்பது குறிப்பிடத்தக்கது. விலை சதம் ௩௪.



சிவமயம்.

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.

சதங்கை ௪. | காரைக்குடி, குரோதன௵ புரட்டாசி௴ | மணி ௧.

## வணக்கம்

எங்கள் நாடு.

மன்னு மிமய மலை யெங்கள் மலையே!
மாநில மீதது போற்பிறி திலையே!
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே?
பன்னரு முபநிட நூலெங்கள் நூலே!
பார்மிசை யேதொரு நூலிது போலே?
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே!
போற்றுவ மிஃதை யெமக்கில்லை யீடே.

மாரத வீரர் மலிந்த நன்னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்த பொன்னாடு
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையு நாடுறு நாடு
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரத நாடு பழம்பெரு நாடே
பாடுவ மிஃதை யெமக்கில்லை யீடே.

இன்னல்வந் துற்றிடும் போததற் கஞ்சோம்
ஏழையராகி யினி மண்ணிற் றுஞ்சோம்
தன்னலம் பேணி யிழிதொழில் புரியோம்
தாய்த்திரு நாடெனி லினிக்கையை விரியோம்.
கன்னலுந் தேனும் கனியு மின்பாலும்
கதலியும் செந்நெலும் நல்குமெக் காலும்
உன்னத ஆரிய நாடெங்கள் நாடே!
ஓதுவ மிஃதை யெமக்கில்லை யீடே! (பாரதி)

# காவிரிப்பூம்பட்டினம்.

வாழ்த்து.

பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி உலகிற்கு அவன்குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுகலான்.

## ௧. பேயர்.

காவிரியால் வளம் பெற்ற சோழ நாட்டின் தலை நகராய்ச் சிறப்புற்றிருந்தது காவிரிப்பூம்பட்டினம். காவிரி கடலொடு கலக்கும் பொன்னித் துறையில் பொலிவுற்று விளங்கிய நகரத்திற்குச் "சம்பாபதி, காகந்தி, புகார், பூம்புகார், பட்டினம், காவிரிப்பூம்பட்டினம்" எனப் பல பெயர்கள் உள்ளன. இப்பல பெயர் வழங்கலுற்றதற்குக் காரணங்களும் பலவுண்டு. அவை முறையே வருமாறு:—

சம்புத்தீவின் அதிதேவதை சம்பாபதி என்பவள். சம்புமரத்தின் கீழிருந்து தவஞ்செய்தமையின் சம்பு எனவும் பெயர் பெறுவள். சிவந்த திறமும் சடையும் உடையவள். இவளுக்குப் பொன்னித்துறையில் "குச்சிரக்குடிகை" என்னும் கோயிலும் உண்டு. இச்சம்பாபதி என்னும் தெய்வம் கோயில்கொண்டிருந்தமையால் பொன்னித்துறை நகரத்திற்குச் சம்பாபதி என்னும் பெயர் வந்தது. இது காவிரிப்பூம் பட்டினத்தின் மிகப் பழைய பெயர்.

காந்தன் என்னும் சோழ நாட்டரசன் ஒருவன் இருந்தனன். அவன் காதற்கணிகையின் மகன் காகந்தன் என்பவன். பரசுராமர் காந்தன் என்பவனுடன் போர்செய்யவருதலும், காந்தன் வேற்றுருக்கொண்டு மறைந்து கொண்டனன். அவன் மகன் காகந்தன் அரசுரிமைபெற்றுக் காவிரிப்பூம்பட்டினத்தில் செவ்வனே செங்கோல் செலுத்தி ஆண்டுவந்தனன். இங்ஙனம் காகந்தன் என்பவனால் ஆளப்பட்டமையான், அந்நகருக்குக்'காகந்தி' என்னும் பெயருண்டாயிற்று. புகார் என்பதற்குப் புலவர் ஒருவரும் ஒருபொருளையுங் கொண்டிலர். சிலப்பதிகாரத்தினும் பத்துப்பாட்டினும் 'புகார்' என்ற சொல் வருமிடங்களி னெல்லாம் 'புகார் நகரம்' என்றே கூறிப்போந்தனர். ஆழ்ந்து பொருள் கொள்ளும் அடியார்க்குநல்லாரேனும், நலிந்து பொருள் கொள்ளும் நச்சினார்க்கினியரேனும், புகார் என்பதற்கு ஒருகாரணமும் புகலாமற் போயினர். புறநானூற்று ௩௦-செய்யுளில் "புகார்ப்புகுந்த பெருங்கலம்" என்னும் தொடருக்கு "ஆற்று முகத்துப் புகுந்த பெரியமரக்கலம்" எனப்பொருள் கூறப்பட்டுள்ளது. புகார் ஆற்றுமுகம் இதனால், காவிரியாறு கடலின்கண் புகுதலைச் செய்யும் துறையின்கணுள்ள நகரத்திற்குப் புகார்=எனும். பெயர் வழங்கியிருக்கலாம். புகார்=புகுதல்; புகு;பகுதி, ஆர்;தொழிற்பெயர்விகுதி. ஆர் தொழிற்பெயர் விகுதியாக இலக்கியங்களில் காண்டல் அருமை; இப் புகார் என்னும் இலக்கியத்தையே



அந்த ஆர் விகுதி இலக்கணத்திற்கு இலக்கியமாகக் கோடல்வேண்டும். பூ=பொலிவு. பூம்புகார்=பொலிவுள்ளபுகார் நகரம். புகார் என்பதற்குப் புலவர் வேறு பொருந்துவன புகலினும் புகல்க. "பண்டம் பலகொடு பகரும் கடற்கரை, மன்னும் பதியே பட்டினமாகும்" என்றதனுன், கடற்கடையின்கண் வாணிகத்திற்கு வளப்பமுள்ள நகரத்திற்கே பட்டினமென்று பெயர். பண்டைக்காலம் பட்டினம் என்ற சொல்லே, எல்லாப் பட்டினங்களையும் விடுத்துக் காவிரிப்பூம்பட்டினத்திற்கே வழங்குவதாயிற்று. ஊர் எனின்உறையூர் என்பதுபோல, பட்டினமெனின் காவிரிப்பூம்பட்டினமே. பின்னர் உலக வழக்கில் காவிரி, பூ, என்னும் இரு அடைமொழிகள் சேர்த்துக் காவிரிப்பூம்பட்டினம் என வழங்கலாயினர். காவிரி கடலொடு கலக்குந் துறையில் பொலிவுள்ள பட்டினம் காவிரிப்பூம்பட்டினம்.

## ௨. நகரம்.

கடற்கரையின் காட்சி மிக்க காவிரிப்பூம்பட்டினம், பெரிதும் சிறந்ததுமான துறைமுகப்பட்டினம் என்று கூறவேண்டியிருக்கின்றமைத யன்றி, அதன் அகலமும் நீளமும் இத்துணைத்தென, வரையறைப்படுத்துவதற்கான ஆதரவுகள் கிடைத்தில. ஆயினும், இந்திரவிழவூரெடுத்த காதையில் "காதம் நான்கும் கடுங்குரலெடுப்பி" என்பதற்கு அடியார்க்குநல்லார் "காதம் நான்கும் என முற்றும்மை கொடுத்தலினுலே, ஊர் நாற்காத வட்டிகை என உணர்க" என உரைகூறுகின்றனர். மேலும், அரும்பத உரைகாரரும் அங்ஙனமே கூறுகின்றனர். ஆகையால், காவிரிப்பூம்பட்டினத்தின் சுற்றளவு நான்கு காதம் என நவிலல் வேண்டும். காவிரிப்பூம்பட்டினம், மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கம் எனும் இரு பெரும் பிரிவுகளை உடையது. மருவூர்ப்பாக்கம் புறநகர்; பட்டினப்பாக்கம் அகநகர். அரசர்க்கும் அரசாங்கத்தார்க்கும் வேண்டியன அமைக்கப்பெற்றுக் கோட்டையால் சூழப்பெற்ற நகரிற்கு அகநகர் என்று பெயர். அக நகரத்திற்கு வெளியே உள்ள நகரத்திற்குப் புறநகர் என்று பெயர். அகநகரைக் கோட்டை என்றும் புறநகரைப் பேட்டை என்றும் புகல்வர். இவ்விருநகரின் ஜனத்தொகை அறுபதினாயிரம் என்பர்.

## ௩. புறநகர்.

புறநகராகியமருவூர்ப் * பாக்கத்தில் நிலாமுற்றங்களும் அணிகளிட்ட சாக்கறைகளும் மான்கண்கள் போல் சாளரங்களும் நிறைந்த மாளிகைகள் மிகுந்திருந்தன. கண்டோர் கண்களைக் கவரும் யவனர்களுடைய இருப்பிடங்கள் அணி அணியாகக் காணப்பட்டன. அப்புறநகரின் ஓர்பால், பட்டு நூலானும் பருத்திநூலானும் எலிமயிரானும் நுண்ணிய வேலைகளைச்செய்து நெய்யும் வீட்டுக் கைத்தொழிலாளர் இருப்பிடங்கள் நிறைந்திருந்தன. ஓர்சார் பவழம் முத்து முதலிய இரத்தினங்கள், பலவகை அணிகள் ஆகிய இவற்றினை விற்கின்ற வியாபாரிகளின் வீதிகள் விளங்கின. ஓர்புடை, நெல்வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கில் நெல், புல் என்னும்எண்வகைக் ㅇ கூலங்களையும் விற்கும் தானிய வியாபாரிகளின்

* பாக்கம்—கடற்கரையில் உள்ள ஊர். ㅇ கூலம்=தானியம்

வீதிகள் அமைந்திருந்தன. ஒருபக்கம் பிட்டு விற்பவர், அப்பம் விற்பவர், உப்புவிற்பவர், எண்ணெய் விற்பவர், வெற்றிலை விற்பவர், குடியிருந்தனர். ஓர்பக்கல், கன்னார், செம்பு கொட்டிகள், தச்சர், கொல்லர், சித்திரகாரிகள், சிற்பாசாரிகள், உருக்குத்தட்டார், இரத்தினப் பணித்தட்டார் ஆகிய இன்னோர் வசித்தனர். பிறிதிடம் தையற்காரர் || தோலின் துன்னர், துணியினும் தக்கையினும் பூமாலை பொய்க்கொண்டை முதலியவன செய்வோரும் வதிந்தனர். வேறிடம் தொளைக்கருவிகள், நரப்புக் கருவிகள் முதலியனவற்றை இசைக்கும் குழலர் பாணர் முதலியோர் வாழ்ந்தனர். இவ்வீதிகளில் வண்ணமும் சுண்ணமும் சாந்தும் புகைப்பொருளும் வாசனைப்பொருளும் விற்போர் திரிந்துகொண்டேயிருப்பர். மற்றும், கடலில் சஞ்சரிக்கும் அந்நிய நாட்டார், அப்புறநகரத்தாருடன் ஒரு நகரமாந்தர்போல வசித்து வந்தனர்.

### ௪. அகநகர்

அகநகராகிய பட்டினப் பாக்கத்தில், ஓர்புறம் அரசர் பெருவீதியும் பெருங்குடி வணிகரின் மாட மாளிகைகள் வரிசை வரிசையாக அமைந்த வீதியும் விளங்கியிருந்தன. ஓர்சார், பஞ்சகிராமிகள், வேளாளர் வீதிகள் இருந்தன. மற்றொருசார், சோதிடம் வல்லார் மருத்துவம் வல்லார் வீதிகள் இருந்தன. ஓர்பக்கம் சங்கறுப்போர் முத்துக் கோப்போர் வசித்தனர். சூதர் மாகதர் வைதாளி பாடுவோர், நாழிகைக் கணக்கர், பல்வகைக்கூத்தரடும் ஆடவர் மகளிர் வேழம்பர் பல்வகை வாத்தியங்கள் வாசிப்போர் இவர்கள் உறைவிடங்கள் மிக்கிருந்தன. கடைவீதியும் விழா வீதியும் விளங்கின. அரசன் கோயிலைச் சூழ்ந்து அகன்ற இடங்களில், குதிரைப் படைவீரர், தேர்ப் படைவீரர், காலாட்படைவீரர், வசித்தனர்.

### ௫. நாளங்காடி

மருவூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப்பாக்கத்திற்கும் நடுவில் ஒரு பொது நிலம் உண்டு. அது இருபெருவேந்தர்கள் பெருஞ்சேனையோடு தங்கும் பாசறைகளுக்கு இடையிலுள்ள வெற்றிடம்போல், அத்துணைப் பரப்பினை உடையது. அந்நிலத்திற்கு நாளங்காடி என்று பெயர். அதில் பல சோலைகள் உள. அச்சோலைகளில் அணி அணியாக உள்ள மரங்களையே தூண்களாகக் கொண்டு கட்டியகடைகள் பல காணப்படும். அங்குப் பண்டங்களைக் கொள்வோர் ஓசையும் விற்போர் ஓசையும் இடையறாது தொலியா நிற்கும். முசுகுந்தன் என்னும் மன்னனுக்கு வரும் துன்பத்தைப் போக்கும் பொருட்டுத் தேவேந்திரன் ஏவலால் அந்நாளங்காடியில் வதியும் பூதம் ஒன்றுண்டு. மறக்குடி மகளிர் அப்பூதத்தின் பலிபீடிகையில் புழுக்கலும் எள்ளுருண்டையும் படைத்துப் பூவும் புகையும் காட்டி,

பெருநிலமன்னன் இருநிலம் அடங்க[லும்
பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்க எனவாழ்த்தி

த்தொழுது குரவைக்கூத்து முதலிய கூத்துக்களை ஆடிச் செல்வர். அன்றியும், அவ்விருபாக்கத்து வீரர்களும் அப்பூதத்திற்குப் பலவகைப் பூசையைச் செய்து "வெந்திறல் மன்ன

|| தோலின் துன்னர்=சக்கிலியர்.



ற்கு உற்றதை ஒழிக்க" என வாழ்த்துவர்.

அங்காடி=சந்தை. மலையாளத்தில் இன்னும் சந்தையை அங்காடி என்பர். நாளங்காடி=பகல் சந்தை. அடியார்க்கு நல்லார் விசேட வுரையில் நாளங்காடி என்றலின் அல்லங்காடியும் உண்டென்பர். அல்லங்காடி=இராச்சந்தை. இங்ஙனம்பகலினும் இரவினும் இடையறாத பெருஞ்சந்தைகள் காவிரிப்பூம் பட்டினத்தில் காணப்பட்டன.

### ௬. பட்டிமண்டபம்.

காவிரிப்பூம்பட்டினத்தின் காவலனான கரிகால்பெருவளத்தானுக்கு, வச்சிரநாட்டு வேந்தன் கப்பமாகக் கட்டிய முத்துப்பந்தரும், அவந்தி வேந்தன் உவந்துகொடுத்த வாயிற்றோரணமும், மகதநாட்டு வேந்தன் போர்தாங்காது இறையாகக் கொடுத்த பட்டிமண்டபமும், அங்கு உள்ளன. அம்மண்டபம் மயனென்னும் தெய்வத்தச்சனால் செய்யப்பட்டது. "ஒட்டிய சமயத் துறுபெருவாதிகள், அப்பட்டிமண்டபத்துப் பாங்கறிந்தேறி, செற்றமுங் கலாமுஞ் செய்யாது குழுமி நூற்கேள்விகளை நுகர்வர். கலைகளை நாடோறும் ஆய்ந்து தமிழ் மொழியினைத் தழைக்கச் செய்வர்.

### ௭. மன்றம் நான்கு.

௧. வெள்ளிடை மன்றம்:—இது ஊருக்கு வெளியிடத்திலிருப்பதினால் வெள்ளிடை மன்றம் எனப் பெயர் பெற்றது. இம்மன்றத்தின்கண் அயல் நாட்டார் தாம் கொணர்ந்த மூட்டைகளை இட்டு வைப்பர். அம் மூட்டைகளின் பேரில் அளவும் நிறையும், எண்ணும் ஆகிய இலக்கங்கள் இடப்பட்டிருக்கும். அம்மன்றின் இயல்பையறியாத புதிய மாக்கள், அம்மூட்டைகளைத் திருடுவார்களேயாயின், அக்கள்வரின் கழுத்து கடுக்கும்படி, அம்மூட்டைகளை அக்கள்வர் தலையில் ஏற்றி, அவர்களை ஊரைச் சூழ்வித்து நடுங்கும்படி செய்யும். ஆகையால் அவ்வூரி லுள்ளார் யாவரும் களவென்பதனைக் கனவினும் கருதார்.

௨. இலஞ்சி மன்றம்:—இலஞ்சி குளம். குளத்தினைப் பக்கத்தில் உடைய மன்றினுக்கு இலஞ்சிமன்றம் என்று பெயர். இம்மன்றத்தின் இலஞ்சியில்,

கூனும் குறளும் ஊமும் செவிடும்
அழுகு மெய்யாளரும் முழுகினர் ஆடிப்
பழுதில்காட்சி நல்நிறம் பெற்று

விளங்கிப் பின் அம்மன்றினை வலஞ்செய்து தொழுது செல்வர். இங்ஙனம் உயிர்களுக்குற்ற குறைகளை நீக்கும் தெய்வத்தன்மை வாய்ந்த இலஞ்சிமன்றம் ஆங்கு மன்னியிருந்தது.

௩. நெடுங்கல் நின்ற மன்றம்:—நெடிய கல் நின்றிருத்தலினால் இம்மன்றமும் நெடுங்கல் மன்றம் எனப் பெயர்பெற்றது. அந்நெடிய கல் எஞ்ஞான்றும் ஒளியைக் காலும் தன்மையது. அக்கல்லினை நாடோறும் தொழுவதை

வஞ்சமுண்டு மயல்பகையுற்றோர்,
நஞ்சம் உண்டு நடுங்கு துயர் உற்றோர்,
அழல்வாய் நாகத்து ஆர் எயிறு அழுந்தி[னர்,
கழல்கண் கூளிக் கடுநவைப் பட்டோர்,
சுழல்வந்து தொழத் துயர்நீங்கும்
நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றம்.

என சிறப்பித்துச் சிலப்பதிகாரத்துள் செப்பப்பட்டுள்ளது. இதனால் மருந்துண்டு பித்தேறினோரும், நஞ்சம் உண்டோரும், பாம்பின் வாய்ப்பட்

டாரும், பேய்க்கோட்பட்டாரும், இக் கல்லினை வலஞ்செய்து தொழுவ ரேல் அத்துயர்களைத் துடைத்துத் துன் பொழிவர்.

ச. பாவை மன்றம்:—பாவை நின் றிருத்தலின் பாவை மன்றம் எனப் பெயர் பெற்றது. அப்பாவையின் பான்மை யாதெனின்? "அரசனு டைய செங்கோன்மையில் சிறிது குறைவுற்றாலும், தருமநூல் முறையில் அறங்கூறும் தருமா சனத்தார் உரைக்கும் நடுவுநிலைமை மாறி ஒரு பக்கம் பற்றினும், அப்பாவை நாவால் கூறாது, கண்களி னின்றும் துன்பக் கண்ணீரைச் சிந் திக்கண்களாற் கூறும். இதனை இள ங்கோவடிகள் மனம் இளகி இயம்பு கின்றனர்.

அரசு கோல்கோடினும்,
அறங்கூர் அவையத்து
உரைநூல் கோடி
ஒரு திறம் பற்றினும்
நாவொடு நவிலாது
நவைநீர் உகுத்துப்
பாவை நின்று அழூஉம்
பாவை மன்றம்.

இங்ஙனம் ஒருமன்றம் அமைந்த பேறுபெற்ற காவிரிப்பூம்பட்டினத் தின் கடவுட்டன்மை என்னே! என் னே! அக்காலம் அந்நகரில் வாழ்ந்த மாந்தரின் நல்வினை என்னே! என் னே!

ரு. பூத சதுக்கம்.

இம்மன்றங்களேயன்றிப் பூதசது க்கம் என்னும் பெயர்வாய்ந்த நாற் சந்தி ஒன்றுண்டு. சதுக்கம்=நாற் சந்தி; நான்கு வீதிகள் கூடுமிடம். அச் சதுக்கத்தின்க ணுள்ள பூதத் தின் தன்மையாதெனின், தவவேடம் பூண்ட பொய்வேடத்தார், கற்பில் பிறழ்ந்த பெண்டிர், அரசரை அழிக் கும் அமைச்சர், பிறர்மனை நயப்போர், பொய்ச்சான்று புகல்வோர், புறங் கூறுவோர், ஆகிய இன்னோரை என் கையாற் புடைத்துண்பேன் என்று, அந்நகர் நாற்காதம் எல்லையும் கேட் கும்படி, தனது கடிய குரலால் உண ர்த்தி, அங்ஙனம் செய்வாரை அவ் வாறே புடைத்துண்ணும் தன்மை யது. இப்பூதத்தின் தன்மையினை

தவமறைந்து ஒழுகும் தன்மையிலாளர்,
அவம்மறைந்து ஒழுகும் அலவைப் பெ
[ண்டிர்,
அறைபோகு அமைச்சர், பிறர்மனை நயப்
[போர்,
பொய்க்கரியாளர், புறங்கூற்றாளர், என்
கைக்கொள்பாசத்துக் கைப்படுவோரெனக்
காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்
பூதம் புடைத்து உணும் பூதசதுக்கம்.

எனச் சிலப்பதிகாரத்துச் சொல்லியு ள்ளது. இப்பெற்றித்தான பூத சது க்கம் வாய்ந்த காவிரிப்பூம்பட்டினத் தின் காட்சியை என்னென்பேம்; என் னென்பேம். அக்காலம் அந்நகரில் பிறந்து நன்னெறியில் ஒழுகிய மக்க ளின் மாண்பை என்னென்பேம்; என் பேம்.

கூ. இந்திரவிழா.

தேவேந்திரனைக் குறித்துச் செய் யப்பெற்றமையின் இவ்விழா இந்திர விழா எனப் பெயர் பெற்றது. இந்திர விழா, ஆயிரங்கண்ணோன் விழா, இந்திரகோடணைவிழா, தீவகச்சாந்தி என்பன ஒரு பொருளன. பண்டைக் காலம் அகத்தியமுனிவரின் ஆணை யின் வண்ணம், காவிரிப்பூம்பட்டி னத்தையாண்ட தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன் என்னும் சோழவரசன், இந்திரன் அநுமதி பெற்று இந்திரனுக்குத் திருவிழா நடத்தினன். பின்னர் ஆண்டுதோ



றும்சோழ அரசர்களால் காவிரிப்பூம் பட்டினத்தில் மிக்க சிறப்புடன் நடை பெற்று வந்தது. கரிகால் பெருவ ளத்தான் என்னும் அரசர்பெருமான் காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்ந்த திருவிழாவின் சிறப்பையே சிலப்பதிகாரம் செப்புகின்றது. இவ் விந்திர விழா ஆண்டுதோறும் எம்மா தத்தில் தொடங்கப்படுகின்ற தென் பது சிலப்பதிகாரத்தால் தெரியவில் லை. சிலப்பதிகார இரண்டுரைகளை யும் கூர்ந்து நோக்குங்கால் ஒருவாறு புலப்படுகின்றது. என்னை? ஆண்டு தோறும் சித்திரைமாதம் சித்திரை நாளும் பௌர்ணமி திதியுங்கூடிய சித்திரர் பௌர்ணமியில் திருவிழா தொடங்கப்பெற்று இருபத்தி யெ ட்டுநாள் விழா நடத்தப்பெறும். திருவிழாத் தொடக்கத்தில் வச்சிரா யுதம் நிற்கும் கோயிலின்கணுள்ள முரசை, யானையின் பிடரியிலேற்றி, ஊரெங்கும் திருவிழாப் பறையறை விப்பர். அன்று, கற்பகதரு நிற்கும் கோயிலில் திருவிழாக்கொடி ஏற்றப் படும். அந்நகரத்து ஐம்பெருங்குழு வும், எண்பேராயமும் சூழ்ந்துவர அரசகுமாரும், வணிககுமாரும், யானை, குதிரை, இவற்றினை ஊர்ந்துகொண்டு, தண்ணிய காவிரியின் தாதுமலி பெருந்துறை க்குச்சென்று, புண்ணிய நன்னீரைப் பொற்குடத் தேந்திவந்து, மண்ணக த்தோர் மகிழ, விண்ணகத்தார் வியக்க, விண்ணவர் தலைவனை இந்திரனைச் சிறப்பாக மஞ்சனம் ஆட்டுவார். இவ் வரலாறு,

ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்
அரசகுமாரும் பரதகுமாரும்
தண்ணறுங் காவிரித்தாதுமலி பெருந்து
[றைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத்தேந்தி

மண்ணகம் மருள வானகம் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீராட்டி

என இந்திரவிழவூரெடுத்த காதையில் இயம்பப்படுகின்றது.

இங்ஙனம் திருவிழா நடக்கும் நாட்களில் காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள மற்றைக் கடவுளர் கோயில் களாகிய

பிறவா யாக்கைப் பெரியோன்கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயி
[லும்
வால்வளை மேனிவாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலைவெண்குடை மன்னவன்கோயிலும்

ஆகிய இக்கோயில்களினும், வசுக் கள், திவாகரர், உருத்திரர், மருத்து வர் ஆகிய நால்வகைத்தேவர் கோ யில்களினும் பதினெட்டு தேவகணங் கள் கோயில்களினும், அவ்வக்கடவு ளர்களுக்கேற்ற திருவிழாக்கள் சிறப் பாக நடைபெற்றன. அக்கோயில் களின் ஒருபால், நான்கு வேதங்கள் சொன்ன நன்னெறியின் வண்ணம் ஓமங்கள் நடந்தன. அருகர்பள்ளி, புத்தர்பள்ளி முதலியனவற்றில் தரு மம்போதித்தலும், புராணம் படித்த லுமாகிய செய்கைகள் மிக்கிருந்தன. அரசனின் அருளினால் சிறையினு ள்ளாரை விடுவிக்குஞ் செய்கையும் நிகழ்ந்தது. மதங்கர், பாணர், குயி லுவர், யாழ்ப்புலவர் முதலியோரின் இசைகள் மலிந்திருந்தன. இப்பெற் றியான சிறப்புக்களுடன் இருபத்தி யெட்டுநாள் இந்திர விழா நடாத்திக் கடைசிநாள் அந்திமாலையில் காவிரிப் பூம்பட்டினத்தார் அனைவரும் காவிரி கடலொடு கலக்கும் தண்ணிய பூந்து றைக்கு நீராடச் செல்வர். அங்ங னமே

அரசிளங்குமாரும் உரிமைச்சுற்றமும்
பரதகுமாரும் பல்வேறாயமும்

சூழ்ந்துவரப் பேரப் பொன்னிப்பூந் துறையில் பொலிவுற நீராடித் திருவிழாவைச் சிறப்புடன் நிறைவேற்றுவர். ஈண்டு, அரசிளங்குமரரும் உரிமைச் சுற்றமும் என்றதைப்போல், பரதகுமரரும் உரிமைச் சுற்றமும் எனக்கூறுமையால், வணிககுமரரின் உரிமைச் சுற்றத்தார் கடலாடுதல் மரபன்றென்க என அடியார்க்கு நல்லார் விசேட உரையான் விளங்குகின்றது. அரசகுமாரின் உரிமைச்சுற்றம்போல வணிககுமரரின் உரிமைச் சுற்றமும் கடலாடக் காரணத்தின் மாபென்னேயோ? இத்துணைச் சிறப்புடன் நடைபெற்ற இந்திரவிழாவை நெடுமுடிக்கிள்ளி என்னும் சோழ அரசன் முறையாகச் செய்யாதொழிந்தனன். அதனைக்கண்டு மனம் வருந்திக் கடலரசன், காவிரிப்பூம்பட்டினத்தைத் தன்னுலகத்திற்குக் கொண்டுபோய், இந்திரவிழா நடத்தலாயினன்.

இவ்விந்திர விழாவைப் பற்றிக் காவிரிப்பூம்பட்டினத்தையே சிறப்பித்துக் கூறும் பட்டினப்பாலையில் ஒன்றுமே காணப்படவில்லை. ஆனால், விழாவீதியைப்பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. அதில் மகளிர் மாடங்களிலிருந்து "முருகவேளுக்கும், பிறப்பறுத்தற்குக் காரணமான நல்லமையுடைமையால் கோயில்களிடத்தே உண்டாக்கின பலருந் தொழுந்தெய்வங்களுக்கும், பாடுமகளிரோடே பொருந்தப் பரந்து,வங்கியம் இசையுண்டாக்க, யாழ் வாசிக்க,முழவு முழங்க,முரசு ஒலிப்ப, எடுத்த திருநாள் நீங்காத அகன்ற அங்காடித்தெருவு" என விழாவீதியைக் குறிக்கின்றனர். அங்ஙனமே

காந்தளந் துடுப்பிற் கவிகுலையன்ன
செறிதொடி முன்கை கூப்பி, செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவணத்து
மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய
மலரணிவாயில் பலர் தொழுகொடியும்

எனப் பட்டினப்பாலையில்பார்க்கலாம்.

### ௧௦. கடற்கரைக்காட்சி.

வான்பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்

பொன்னித் துறையின் கண் ஓடங்கள் நிரை நிரையாக நிறுத்தப்பட்டிருந்தமை, குதிரைகள் அணிவகுத்துக் கட்டியிருந்தனவற்றைப் போன்றன. சோழநாட்டின் பலவிடங்களுக்கும் சென்று, வெள்ளையுப்பினைமிகுதியாக இறக்கிவிட்டு, ஆங்குநின்றும் நெல்லைக்கொண்டு வந்துநின்ற மரக்கலங்கள் வரிசை வரிசையாக நின்றன. வெள்ளிய பூங்கொத்துகளையும் மடலினையும், தாழையினையும் உடைய கடற்கரையிலுள்ள பரதவரின் அகன்ற தெருவின்கண் பெரிய பண்டசாலைகள் உள்ளன. கடற்கரைக்கு ஏற்றுமதிக்காகவும், இறக்குமதிக்காகவும் கொணர்ந்தபண்டங்களை அப்பண்டசாலையின்கண் இட்டுவைப்பர். அங்ஙனம் கொணர்ந்த பண்டங்களின்மேல் புலியை அடையாளமாகவிட்ட முத்திரையைப் பொறித்து, அப்பண்டங்களை ஏற்றுதற்கும் இறக்குதற்குமான இடங்களில் தனித்தனியே இட்டுவைப்பர்.

(தொடரும்.)

# வழக்காடல்.

இலக்கண விளக்க பரம்பரை திருவாரூர் சோமசுந்தரதேசிகர்.

'இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் எய்துதற்கு' உரியவைகளில் கற்றறிந்தமாந்தரால் எடுக்கப்பட்டபொருள் நான்கு. அவை அறம் பொருள் இன்பம் வீடு என்ப. இவற்றையே வடமொழியில் தர்மார்த்த காமமோக்ஷமென்பர் அந்நூல் வல்லார். அவற்றுள் அறமாவது:—

'மனத்துக்கண் மாசிலனாதல் லனைத்தற
னாகுல நீரபிற' என்றும்,
'அழுக்கா றவாவெகுளி யின்னாச் சொன்
மிழுக்கா வியன்றதறம்' [னான்கு,

என்றும் வகுத்தார் ஆசிரியர் திருவள்ளுவனார். இப்பரிய பொருளை ஒழுக்கம், வழக்கு, தண்டமென வகுத்தார் பெரியார். ஒழுக்கமாவது பெரியாரால் விதிக்கப்பட்டவழி நடத்தலும் விலக்கப்பட்ட துறைகளினின்று நீங்கலும் அடங்கும்.

வழக்கு என்பது 'ஒருபொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அது காரணமாகத் தம்முண் மாறுபட்டு அப்பொருள்மேற செல்வது. அது கடன்கோடல், அடைக்கலப் பொருளை மறித்தல், உடையனல்லான் விற்றல், கூடி மேம்படல், நல்கியதை நல்காமை, கூலிகொடாமை, கட்டுப்பாடுகடத்தல், விற்றுக்கொண்டு ஒப்பாமை, ஆண்டானடிமை வழக்கு, எல்லை வழக்கு, கடுந்தண்டம், கடுஞ்சொல், களவு, வன்செய்கை, பிறர்மனை வவ்வுதல், மாதராடவர் முறை, தாயபாகம், சூது எனப்பல திறத்தவாம். இவ்வாறு தத்தமக்குரிய பொருள்பற்றி ஒருவருக்கொருவர் மாறுபட்டு மன்றேறிநிலைகுலைந்தார் பல்லோராவர். மன்றமென்பது வழக்குகளை விசாரிக்குமிடம். இக்காலத்தில்'கோர்ட்' Court என்ற ஆங்கில மொழியாலும், கச்சேரி என்ற திசைச்சொல்லாலும் கூறினாலன்றி மக்கள் இவ்விடம் இன்னதென்று அறிந்துகொள்ள வகையில்லை. சிலர் நீதித்தலம் என்பர். வரும்புனற் பொன்னிநாடு' என்று தொண்டர்சீர் பரவுவாரால் பெருமையுடன் கூறப்பட்ட சோழமண்டலத்திலும் 'கூனல்வளை திரைசுமந்து கொண்டேகமண்டு கழிக்கானல்மிசை யுலவுவளம் பெருகு திரு காரைக்கா'ற் சீமையில் 'கூர்' என்று சொன்னாலன்றி அந்நாட்டினர் இன்னவிடமென்றறியார். ஆகவே இவ்வளவு பரியாயப் பெயர்களோடு கூடிய மன்றத்தில் வழக்கு எவ்வாறு நடந்து வருகிற தென்பது நல்லார் பொல்லார் எல்லோரும் நன்கறிவர். இவ்வழக் காடலால் எளியராயினர் இத்துணைய ரென்பது சொல்லவேண்டுவதில்லை. ஆயினும் முற்காலத்தில்—மிகப் பழமையான காலத்தன்று—ஓராயிர ஆண்டுகட்கு முன் வழக்காடல் எவ்வாறிருந்த தென்பதைப் பெரியபுராணமாம் திருத்தொண்டர் புராணத்தினின்றும் காட்டுவாம்; கதைவருமாறு: நம்பியாரூரர் என்னும் 'சுந்தர மூர்த்தி சுவாமிகள்' மணக்கோலம் பூண்டு 'கண்களெண்ணிலாத வேண்டுமென்பர் காளையைக் காணவென்பார், பெண்களில் உயர் நோற்றுள் சடங்கவி பேதை பென்

பார், மண்களி கூரவந்த மணங்கண்டு வாழ்ந்தோ'மென்றும் பலவாறு புகழ்ந்து சொல்லும்படிச் சென்று மணச் சாலையில் வீற்றிருக்கையில், எம்பெருமான் பண்டிசரி கோவணவுடையராய், வேணுத் தண்டேன்றித் தள்ளுநடை யுடையராய்ச் சென்று அடிமைகொண்டவரலாறு சைவ உலகமே யன்றிப் பிறரும் அறியாததன்று. ஆயினும் அக்காலத்து வழக்காடுமுறை எவ்வாறு நடந்ததென்பதே யீண்டு நுனித்தறிய வேண்டியதொன்றும்.

முதன முதலாக எம்பெருமானார் (நாவனகர்—ஆரூரன்) எனது அடிமை யென்று மணப்பந்தரின் முன் சொல்ல; நம்பி ஆளோலை காட்ட வேண்டினர். ஐயரோ அது நீ காணற்பாலயோ? அவைமுன் காட்டப பணிசெயற் பால என்றனர். நாவலாதிசைவன் அடியார்க் கெளியனும் எம் மண்ணல்மேற் சென்று அவ்வோலையைப் பிடித்திழுத்துக் கிழித்தெறிந்தார். உடனே பச்சிளந்தோகை பங்கன் தம்பிரான் றேழனுரைப் பற்றி முறைபோவென்று ஒலமிட, அவ்வுழை யிருந்தார் அவர்களை விலக்கி நீர் எங்குளீர் என்று கேட்பத் திருவெண்ணெய் நல்லூரன் என்று சொன்னர். அதனைக்கேட்ட வன்றெண்டர் நீர் பழையமன்ருடி போலுமென்று இகழ்ந்தனராயினும் அங்குச் சென்று பேசுவோம் என்றார். மன்றமேறி இழிவழக்கு அழிவழக்கு முதலியன பேசுவோரை பழையமன்ருடி என்று இகழ்ந் துரைத்தல் மரபு. மன்ருடி என்று கல்வெட்டுக்களில் பலபடப் பயின்றுள்ளன. இதற்கு இவ்வாறு பொருள் காணுதுஎம்பெருமான் ஆநந்தத் தாண்டவம் செய்வ

தினின்றும் போந்த பெயர் என்று கூறுவர். அக்கூற்று ஈண்டுப் பயன்படுமாறில்லை என்பதைக் கூர்ந்தறிக) பின்னர் இருவரும் திருவெண்ணெய் நல்லூர் சென்று அவ்வூர் கூட்டத்தார் முன் போய் நாவலாரூரன் என்னடிமையெனக் காட்டிய ஓலை கிழித்திட்டான். இதுவே என் முறைப்பாடு (பிராது Plaint) என்று சொன்னன். அதனைக்கேட்ட அவையின் மிக்கார் மறையவர் அடிமையாதல் இந்த மாநிலத்திலில்லை யென்ன, உண்மையோ அன்றே இது பொழுது வழக்கு இவன் ஓலை கிழித்ததும் அவ்வோலை இவன் பாட்டன் எழுதித் தந்ததுமே யாம் என்றார் திருவருட் பெருஞ்சோதியார். இதனைக்கேட்ட குழுவினர் ஆரூரன் எண்ண மென்னவென்று கேட்க, அவர் தான் ஆதிசைவனென்றும், அவர்கள் வேறொருவற்கு அடிமையாதல் யாண்டும் கேட்டிலேன் என்ன, அதனைக்கேட்ட அவையினில் மூத்தார் ஐயரை நோக்கி முறைப்பாடிடும் நீவிர் முன்னர் நமது முறைப்பாட்டை ஆட்சியில் ஆவணத்தில் அன்றி அயலார் தங்கள் காட்சியிற் காட்ட வேண்டுமென்று சொன்னார்கள். (ஆட்சி என்பது ஆளுகை. ஆவணம் என்பது அடையாளம் அல்லது உரிமைச்சீட்டு. காட்சி கண்கூடாகக் காண்பது) உடனே பரஞ்சோதி இவன் கோபத்திற் கிழித்த வோலை படியோலை (Copy) மூலவோலையுளதென்று காட்டினன். இக்கூட்டத்தாரிட்டபணி செய்பவனாகிய கரணத்தான் தொழுது அதனை வாங்கி,

அருமறை நாவலாதி சைவனாரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய்நல்லூர்ப் பித் தனுக்கியானு மென்பால்



வருமுறை மரபுளோரும் வழித்தொண் டு செய்தற்கோலை
இருமையா லெழுதிநேர்ந்தே னிதற்கி வை யென்னெழுத்து

என்று வாசித்தனன். அதனைக்கேட்ட அவையிலுள்ளோர் மேலெழுத்திட்டார் (சாட்சி)கள் கைச்சாத்தும் நோக்க அவர்கள் தங்கள் கைச்சாத்தே என்று சொன்ன அளவில் நம்பி யாரூரரை நோக்கி இவ்வோலையை வாங்கி நீரே பாரும், அன்றியும் நுமது பேரனுர் கைச்சாத்துண்டாகில் அவனை வருத்தும், ஒத்திடுவோ மென்றுகூற அவ்வாறே ஓசேடு வரவழைத்துப் பார்த்து ஒப்பு நோக்கி இரண்டுமொத்திருத்தலைக் கண்டு நம்பி! நீர் தோற்றீர் ஆகையால் ஏவல் செல்தல் கடன் என்று தீர்ப்பிட்டனர். நம்பியாரூரரும் அதனை ஒத்துக்கொண்டனர்.

ஆகவே இவ்வழக்கு முடிவடைய ஒரே நாளைக்கு மேற் சென்றிராதென ஐயமின்றி யுரைக்கலாம். இப்படிப்பட்ட வழக்கொன்று இந்நாளில் தொடர வேண்டுமாயின் அது முடிவடையப் பல்லாண்டு செல்லும். சென்றும் முடிவு என்னவாகுமோ ஈசனே அறிவான். இத்தகைய முறைப்பாடால் பாழான பழங்குடிகள் எத்தனையோ? இவ்வாறு நடத்தற்கு அக்கால வழக்கறிமுறை எவ்வாறிருந்தனவென்று ஒருவாறு கூறுவாம். அக்காலத்தில் ஓர் அரசின் கீழ்ப்பட்ட நிலப்பகுதிக்கு மண்டலம் என்று பெயர். இராஜ்யம் என்றும் சொல்லப்படும். அது அநேகவளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அவற்றை இப்பொழுதுள்ள ஜில்லாக்களுக்கு ஒப்பிடலாம். அவ்வளநாடுகள் பல நாடுகளாக (தாலூக்கா)ப் பிரிக்கப் பட்டிருந்தன. பட்டணங்கள் கூற்றங்களெனப்படும். ஊர்களில் அநேக சபைகளுண்டு. அவற்றுள் வற்சரவாரியமென்று பேரிடப்பட்ட ஒரு அவை வழக்குகளை விசாரிக்கும். இவ்வவைக்குத் தேர்ச்சி நடைபெறும். இதற்கு அரசன் ஒரு அதிகாரியை அனுப்புவான். இன்னின்ன யோக்கியதையுடையவர்கள் வாக்காளராகவும் (Voter) வாரியக்காராகவும் தகுதியுடையாரென்ற ஏற்பாடுண்டு. அவர்கள் பொதுவிடமான கோயிலில் கூடுவார்கள். கூடி வாக்காளர் அல்லது தகுதியுடையார் பெயரை எழுதி ஒரு குடத்திலிட்டு ஒரு பையனைக் கொண்டு எடுக்கச் சொல்லுவார்கள். ஒவ்வொரு ஊருக்கும் இத்தனை பேருண்டு என்று முன்னரே நியதி ஏற்பட்டிருக்கும். அதன்படி அத்துணையாரை எடுத்தவுடன் அவர்கள் அவரவர்கட்கு இட்டவேலையைப் பொறுப்புடன் செய்வார்கள். இவர்கட்கு உதவி செய்யக் கரணத்தான் என்றொருவனுண்டு. அவனே பொதுக் காரியஸ்தனாகவிருந்து வேலைகளைச் செய்து வருவான். இவைகளைச் செவ்வனே நடத்தவும் மேற்பார்க்கவும் பல அதிகாரிகளுண்டு. இவற்றிற் பழுது வராமற் பார்க்கவும் பல நிபந்தனைகளுண்டு. விரிக்கிற் பெருகும். இவ்வாறு ஊர்கள் தோறும் சபைகளிருந்தமையாலும் அவை உடனுக்குடன் கூடி வழக்கைத் தீர்த்தமையாலும் வழக்காளிகட்குப் பொருட்செலவு காலச்செலவு முதலாயின இலவாயிற்று. அவ்வாறிருந்ததும் நமது தமிழ் நாடே. வழக்கினுல் எளிமை யடைவதும் நமது தமிழ் நாடே.

(தொடரும்.)

# மதுரைக்காஞ்சி.

---

(பண்டிதை சு. பாலாம்பிகை அம்மாள்.)

(முன் தொடர்ச்சி.)

இனி மதுரையின் வனப்புக்கூறுகின்றாம்.

இவ்வாறு பல்வளமும் நிறைந்த நாட்டிற்கு நடுவண் மரம் நெருங்கின சோலையும்,பொழிலும் சூழ்ந்த,கரைகடோறும் பூக்கள் மலிந்து மாலையொழுகினற்போலும் ஒழுகுகின்ற நீரையுடைய வவையைக் கரையிடத்துப் பாணர் குடியிருப்பினையும் மிகவுமாழ்ந்த நீலநிற நீரையுடைய அகழியையும், விண்ணுரிஞ்சு மதிலினையும் திண்ணிய வலிய கதவுகளையுமுடைய மலைபோலுயர்ந்த வீடுகளோடு மக்களும் மாவுமிடையறுமற் சென்றுகொண்டிருக்கும் வாயிலினையுமுடைய மதுரை மாநகரின் கண்ணே மந்தமாருதம் வந்து வந்தசையும் பல சாலேகங்களையுடைய மனைக ளிருபக்கமு மமைந்த தெருக்களில் காலைக்கடையிற் பண்டங்களை வாங்கும் பலவான பாடவேற்றுமையையுடைய மாந்தரிடத்தெழுந்தவொலியும் பலவாச்சியங்களை வாசித்தலினுலுண்டான வொலியும் பொருந்திய பெரியகடைத்தெருவில், ஆலயங்களில் விழவெடுத்துக் கட்டின கொடியும், வெற்றிக் கொடியும், மற்றையக் கொடிகளு மசையா நிற்கும்.

பாகர்க் கடங்காது கட்டுத்தறியை முறித்தெறிகின்ற யானைகளும் வெள்ளிய குதிரைகளும் கள்ளுண்போரும் பல்காலும் வந்து வந்து திரும்புகையினால் பூக்கள் சுண்ணம்வெற்றிலை பாக்கு முதலிய பண்டங்களை விற்போர் அவைகளைக் கண்டஞ்சுவாராயிருந்து அவை போன பின்னர் அச்சம் நீங்கிக் குளிர்ந்த நிழ லிடத்திருந்து தம் பொருள்களை விற்கவும்,மாதர்கள் புஷ்பங்களையும் மற்றைய நுகர்பொருள்களையும் ஏந்திமாடங்கடோறுமுலாவவும்,தமது பாவங்கள் தீர்தற்குக்காரணமான தீர்த்தத்தைத் தன்னிடத்திற் கொண்ட ஏழாநாளாங்நதியில் அக்கரையிலுள்ளார் நீராடும் அரவமும் ஓர் பக்கத்தில் நிறைந்திருந்தது.

திருவிழாக் காண்டற்கேகுஞ் செல்வருடைய வனப்பும், வானுறை தெய்வங்களையொத்த ஆலயங்களிற் சேவிக்கச்செல்லும் மகளிருடைய வனப்பும், ஒள்ளிய நிலா முற்றங்கடோறு மிளநிலா நுகரும் மங்கையருடைய சுந்தரவதனங்கள் காற்றினலசையுங் கொடிகளினிடையே யொருகாலைக் கொருகாற்றோன்றி மறைந்து சிறப்பைச்செய்ய, சிவபிரானைமுற்கொண்டு நிலங்கடந்த நெடுமுடியண்ணல் குன்றெறிந்த குமரவேள் முதலான தெய்வங்கட்கு நைவேத்தியங் கொடுத்தற்கெழுந்த விழவின் கண்ணே வார்த்தியங்களொலியாநிற்கும். பிரகாசம பொருந்திய ஆபரணங்களை யணிந்த இளமைச், செவ்வி வாய்ந்த வனிதையர் தமது காதலஞ் செல்வரொடு தன் செல்வக் குழந்தைகளையு மெடுத்துக் கொண்டு அனைவருடைய ஆக்கமும் வேண்டித் தூபங்களை யுடையாராய்ப் பூ விட்டு வணங்கித் துதிக்கும் பௌத்தப் பள்ளிகளும்,வேதமோதி யாகங்கள் முதலிய உயர் தொழிலைச் செ



ய்யும் பெரியோர்பதியும், பிரமலித்துக்களுறைவிடமும்,திரிகாலமுமுணர்ந்தஞானிகளுறைவிடமும்,அமணப்பள்ளிகளுமொருசார் நெருங்கியிருந்தன. தருமநூலைச் சொல்வோரும்,அரசர்க்கிடித்துக்கூறி யவரை நல்வழியொழுகச்செய்யுமமைச்சரும், ஐம்பெருங்குழுவி லமைச்சரொழிந்த புரோகிதர் சேனாபதியர் தூதுவ ரொற்றரெனப்பட்டோரற்பெருங்குழுவும்,மணிகளைத் துளைப்போரும், பொன் வணிகரும், சித்திரகாரரும் திரண்டு ஒருவரோடொருவர் நெருங்கி நிற்கும் நான்காய் வேறுபட்ட வீதியினையுடையது மதுரை மாநகரம்.

சேரன்* நாளோலக்க விருப்பின்கண்ணே பலருந் திரண்டொலிக்க பலா, மா, வாழை முந்திரிகையாகிய இவற்றின் கனிகளையும், பலவிதமான இலைக்கறிகளையும், பாகற்காய் வாழைக்காய்முதலிய காய் வர்க்கங்களையும், கற்கண்டையும், சுவை மிக்க கிழங்குகளுடனே இனிய பாலடிசில் பால் முதலியவற்றைக் கொண்டுவந்திடுவாரிடத்தெழுந்த வோசையும் மிக்கிருந்தது.நடுவியாமத்தே பல சரக்குகளைக் கொண்டுவரும் மரக்கலங்களிலிருந்து அப்பண்டங்களை யிறக்குவோரோதை மாலைக் காலத்துக் குஞ்சுகளுக் கிரை கொண்டு மீளும்பறவைகளொலிபோல மிக்கது.

ஆயிரங் கிரணதாரியாகிய சூரியன் கிழத்திசையை யடைந்து அத்தகிரிக்குச்செல்ல, நிறைமதி தன் கிரணகோடிகளைப் பரப்பி நிலாவைச் சொரிந்து யாவர்க்கும் மகிழ்ச்சியையளிக்க, மங்கையர் செங்கழுநீர் மாலையைக் கட்டி அணிகலனணிந்து கஸ்தூரி பூசி வஸ்திரங்களுக்கு அகிற் புகை யூட்டி விளக்குகளையேந்தி யலங்காரஞ் செய்யும் மாலைக்காலஞ் சென்றபின் இனிய நரம்பு பொருந்திய யாழை வாசித்தலைச் செய்து மணங் கமழ்கின்ற தொடையல்களைக் கூந்தலி லணிந்து விளையாட்டயர்ந்தனர்.

தம்மை விரும்பி வந்தோருடைய பொருளை முற்றாக வௌவி அவர் நல்குரவு கண்டு தேனுகரும் வண்டுகளையொப்ப அவர் துயருறும்படி அவரைக் கைவிட்டுச் செல்வருடைய அழகிய மாளிகைகள் தோறும் சென்று ஆடல் பாடல் முதலியவற்றைச் செய்து அவரை வசிகரித்துப் பொருள் கவரும் பரத்தையர் வீதி மிகவும் சிறப்புற்றிருந்தது.

செங்கண்மால் திருவவதாரஞ்செய்த திருவோண நாளிலே அந்நாட்டாரெடுத்த விழவில் மறவர் யானையை யோட்டுகையினால் அதின் விசையைக் காணும் பரிக்காரர் மீது தாக்கமல் நீங்கும் பொருட்டுச் சிதறிய இரும்பு முட்கள் கால்களைத் துளைக்கக் கள்ளுண்டு மறவர் செருக்கித் திரிந்தனர். தமது நாயகர் மகிழ்ப் புதல்வர்ப் பயந்து ஈன்றணிமைக் கண் மிகுந்த சுற்றத்தாரோடு குளத்துள்நீராடி (இதனை நெய்யணி மயக்கம் என்பர்) தெய்வத்தைப் பரவிக் குறைநீங்கி வாழுஞ் செல்வ மகளிர் யாழின் கண்ணே செவ்வழி யென்னும் பண்ணை வாசித்து முழவுஞ் சிறுபறையுமொலிக்க பூசைப் பொருள்களுடன் விளக்கு முன்னுகப் பாற்சோறு முதலிய அடிசில்களை மகளிர் தேவராட்டியிடம் கொண்டு செல்ல ஒரு பக்கம்வேலன் வெறியாட்டிடமும், மகளிர் குரவையும், பாட்டுகளும், பல்வகைக் கூத்துகளும் மயங்கியச் சேரியிலுள்ளார் நன்னன்பிறந்த நாட் கொண்டாடுகின்ற ஆரவாரத்தைப்போன்றது.

வணிகர் கடைகளை யடைக்க சங்
கொலி யவிந்தடங்க, மகளிரும், அப்ப
வாணிகரும் ஓசையின்றி யடங்கின
சமுத்திரத்தை யேய்ப்ப, படுக்கையி
லெ துயில் கொள்வோர் இனிதாகத்
துயில,பேய்களுந்தெய்வங்களும் சுழ
ன்று திரியும் கூற்றத்தின் கொலைக்க
ஞ்சாத காவலையுடையது மதுரை மா
நகரம்.

வாளைக் கட்டிய கள்வர் ஆபரணங்
கள் முதலிய பொருள்களைக் கவர்
தற்கு வழிபார்த்துத் திரிகின்றவர்
ஒதுங்கியிருக்கின்ற விடத்தையறிந்து
அக்கள்வரைக் காவல்காத்து நிற்போ
ருலாவுகின்ற மூன்றுஞ் சாம மாகிய
செயலற்ற விராக்காலமென விரவின்
சிறப்புக் கூறினர். வண்டுகள் பாடி
னாற்போலப் பிராமணர் வேதத்தை
யோதவும், யாழோர் யாழை வாசிக்
கவும், யானைக்கு உணவையுண்பிக்க,
குதிரை புல்லையுண்ண, பண்டம் விற்
போர் கடையைமெழுக, அரிவையர்
துயிலெழுந்து காலைக் கடன்களை முடி
க்க, இருந்து ஏத்துவாரேத்த, பள்ளி
முர சொலிக்க, கோழிகூவ, அன்னம்
மயில் முதலிய பட்சிகள் தத்தம் பே
டைகளை யழைக்க, விலங்குகள் முழ
ங்க, முத்தும் பொன்னும் பூவாடல்
களுஞ் சிந்திக்கிடக்கின்ற முற்றத்தை
ப்பெருக்க, இராக்காலம் நீங்க யாவர்
க்கு மின்பஞ் செய்யும் விடியற் காலம்
வந்தெய்திபது. பகைப் புலத்திருந்து
கொண்டுவந்த கயங்களும், குதிரை
களும், பசுக்களும், இறைகொண்டு
வந்த மரக்கலங்களும், நிறைந்த
அளவிடப்படாத செல்வத்தையும்,
அழகையும், புகழையு முடையது
அம் மதுராபுரி. புட்பசயனத்தே கித்
திரை செய்தெழுந்து, தெய்வத்தன்
மை திகழ்ந்த அந்தரமேனியுடைய
சாய் முத்தாரந் தாழ்ந்த மார்பின்
கண்ணே பூமாலை யணிந்து, அழகிய
துகிலை யுடுத்த படைத்தலைவர் நின்
வெற்றியை வாழ்த்த, பல்வகை வீர
ரையும், பாணரையும், பாணிச்சிய
ரையுங் கூவி, அவர்களுக்கு யானைக
ளையும், இரதங்களையும் கொடுக்கும்
அரச! சற்குருவிடம் கந்தழியைப்
பெற்றனுபவித்த பல்யாகசாலை முது
குடுமிப் பெருவழுதியைப் போல்
நீயுங் கேட்டுப்பெறுவாயாக! நின்குடி
கட்குச் செல்வத்தை யுண்டாக்கி, நல்
விசை நிறுவி, திங்களைப்போல் விள
ங்கி நின் வாழ்நாள் முழுவது மின்ப
மனு விப்பாயாக!

இந் நூலை யாராய்ந்துணர்
ந்தோர்க்கு நமது தமிழ் மக்க
ளின் நாகரிகமும், வியாபாரப் பெரு
க்கும், சிற்பத்திறமையும், ஆண்,
பெண் இருபாலாருடைய கல்வி முதிர்
ச்சியும், சங்கீதத்திறனு மினிது
விளங்கும். இத்தகைய முன்னோர்
வழிவந்த நம்மை மற்றைத் தேயத்
தார் நாகரிக மற்றவ ரென்றும், பாம
ரர்களென்று மிகழ்கின்றனர். இதற்
குக் காரணம் நம்மவர் தமது தாய்
மொழிப் பற்றின்றி யதையோம்பாது
புறமொழியி லன்புவைத்துப், புறதே
யத்து நாகரிகங்களைக் கைக்கொண்டி
ருப்பதேயாம்.நம்மவரில்அநேகருக்கு
நமது நாட்டின் பழைய சீர்மை தெரி
யவராது. இதனால் மற்றவர் நம்மை
யிகழ நாமதை யேற்கவேண்டியவ
ராகின்றோம். அப்படி யன்று. இந்நா
ளில்தலைமை பெற்று விளங்குஞ் சாதி
யாரனைவரினும் பண்டைத் தமிழரே
அறிவு ஆற்றல்களிற்சிறந்தவர். அவர்
வழிப்பட்ட நாம் ஒப்புயர் வின்றி
விளங்கு முள்ளாற்ற லுடையேம்.
மறைந்து கிடக்கு மிவ்வன்மையை
யும், பெருமையையும் வெளிப்படுத்
தத்தக்கது அன்போடும் இன்பேடும்
புராதன தமிழ் நூல்களைக் கற்ற
லேயாம்.

# நகரில் நடுநசி.

## கோகுலத்துக் கண்ணன்.

இது மேனாட்டுப் புலவரான "ஆலிவர்
கோல்டு ஸ்மித்" என்பாரெழுதிய ஓர் வியா
சத்தைத் தழுவி எழுதியது.

எங்கும் அமைதி! நிஸ் சப்தம்! ஆ,
அஃதென்ன ஓசை! கோபுரத்திலிருக்
கும் கடிகாரம் மணி அடிக்கிறது!
ஒன்று ... இரண்டு, இப்பொழுது
மணி இரண்டு ஆகிறது. என் எதி
ரே இருக்கும் விளக்கிலிருந்த எண்
ணெயும் தீர்ந்து விட்டது. வெளிச்ச
மும் மங்கலாகி வருகின்றது. கால
மோ நிசா சரன் உலாவும் காலம்.
ஊரை அடிக்கடி சுற்றி "ஜாக்கிரதை,
ஜாக்கிரதை" என்று எச்சரிக்கை செ
ய்து வரும் நகரக்காவலாளியும் தன்
னை மறந்து தூங்கும் காலம். நெற்றி
வியர்வை நிலத்தில் விழ வேலைசெய்
யும் கூலியாளனும், பஞ்சணை மெத்
தை மேல் படுத்து உறங்கும் பிரபு
வும் நித்திரா தேவி வசம் ஆகும்
வேளை. சிந்தா குலத்தில் அழுந்தி
னோரும், குற்றவாளிகளும், களியா
ட்ட மாடுவோரும், துக்கசாகரத்தில்
முழுகி இருப்பவரும்—ஆகிய இவர்
கள் விழித்திருக்கும் நேரம். இந்நே
ரத்தில் தான் குடிகாரன் "இன்னுங்
கொஞ்சம், இன்னுங் கொஞ்சம்"
என்று மதுவை அளவின்றி யருந்தி
வெறித்து தனது மானிட சரீரத்தை
அழித்துக் கொள்கிறான். பிறன் பொ
ருளை அபகரிக்க எண்ணும் கள்வன்
தெருத்தெருவாய்ச்சுற்றி வரும் நேர
முமிதுவே. எக்காரணத்தாலோ இம்
மானிட சன்மத்தை வெறுத்தோர்
ஆண்டவன் படைத்த இச் சரீரத்தை
அழிக்கக் கருதித்தற்கொலைஎன்ற துர்
க்கிருத்தியத்தைச் செய்யும் வேளையு
மிதுவே.

நான் இதுவரை (இந்நேரம்) படி
த்த புராதனக் கதைகள் போதும்.
படித்த மட்டும் நிறுத்தி விட்டு வெ
ளியே சென்று ஏகாந்தமாய் உலாவி
வருவோம். நிமிஷத்திற்கு நிமிஷம்
மாறிக் கொண்டே இருக்கும் மானி
டர் நடமாடின இடத்தையும், மாயாப்
பிரபஞ்சத்தில் ஈடு பட்டோர் குழுமி
இருந்த இடத்தையும் பார்த்து வரு
வோம். சற்று முன்பு கோலாகலமாய்
மாயை உலாவி இருந்த இடம் இப்பொ
ழுதெங்கேயோ தெரியவில்லையே!

அப்பா, என்ன பயங்கரமான இரு
ட்டு! மினி மினிப் பூச்சிபோல் எரி
ந்து கொண்டிருந்த எனது விளக்
கும் அணையுந் தறுவாயி லிருக்கிறது.
கோபுரத்தின் நிலையிலுள்ள கடிகார
த்தின் சப்தத்தையும், தூரத்தில் நா
ய்கள் ஓலமிடும் அரவத்தையுந் தவிர
வேறொரு சப்தத்தையுங் காணேம்.
மனிதன் செருக்குடன் சற்று முன்பு
கூக்குரலிட்டு ஆடின இடம் இப்பொ
ழுது எங்குப்போய் ஒளித்தது? இத்
தகைய காலமே இவ்வுலகம் ஓர் மா
யை என்று காட்டுகிறது.

ஓ, இதென்ன ஏகாந்தம்! இத்த
கைய ஏகாந்தம் அநித்ய மன்றோ?
இது ஒழிந்து மானிடர் நித்யமான
ஏகாந்தத்தை அனுபவிக்கும் வேளை
வரும். அவ்வமயம் இந்நகரம் அழி
ந்து போய் இருந்த இடம் தெரியா
மல் ஒரு பெரிய வனாந்தரமாகிவிடும்.

தனது வாழ்க்கையிலே அநேக வெ
ற்றிகளை யடைந்து அதற் கேற்ற

விருதுகளை யணிந்து அமோகமான
செல்வத்தையும் இன்பத்தையும் பெ
ற்ற நகரங்கள் எத்தனை! ராஜ்யங்க
ளெத்தனை! தமக்குண்டான மதி மய
க்கந்தான், தாம் மனிதர் என்பதை
யும் மறந்து, தமக்கு நிகர் ஒருவரு
மில்லை, நாம் தேவர்களைப் போன்று
அழிவில்லாதவர்கள் என்று நினைத்த
வர் எத்தனைபேர்! கால தேவதை
அப்படிப்பட்ட மானிடர் வசித்த இட
த்தைச்சுட்டிக்காட்ட இயலாமல் தவி
க்கிறது. இது போன்ற மற்ற மனித
கோடிகள் வாசம் செய்த நகரங்களின்
பயங்கரமான பாழ் மண்டபங்களின்
இடையே துக்கம் நிறைந்த யாத்திரீ
கன் அலைந்து திரிகின்றான். அப் பிர
யாணி இக் காட்சிகளைக் காண்கையில்
"இவ்வுலகம் மாயையினாலாக்கப்பட்
டது" என்று கண்டு கொள்கிறான்.
இதோ, இவ்விடத்தில் தான் அவர்
களது கோட்டை கொத்தளங்களிரு
ந்தன; இப்பொழுது புல் பூண்டு முளை
க்கும் இடமாகிவிட்டது. இங்கு தான்
அவர்களது நகர காரியாலயம் இருந்
தது. அந்த இடத்தில் தான் இப்பொ
ழுது பாம்பு, தேள் முதலிய விஷ
ஜந்துக்கள் குடியிருக்கின்றன, அவர்
களது கோயில்களும், மாடமாளிகை
களும் இப்பொழுது எங்கே? எல்
லாம் ஒருங்கே அழிந்து போயின.
அவர்களது வீண் ஜம்பமும், பகட்டு
ம், சுய நலமுமே பலத்தை ஒடுக்கின.
அரசாங்கத்தார் அளித்த பட்டம், பத
விகளெல்லாம் தேச சேவகத்தின்
பொருட்டன்று. அவர்களது உலக,
பத ஆசையை நிறைவேற்றவே யாம்.
அவர்களது செல்வமும், செழுமை
யும் அயலகத்தாரை வரவழைத்தன.
ஆரம்பத்தில் அயலகத்தார் தோல்
வியடைந்தாலும் பிறகு தமது பெரு
முயற்சியாலே வென்று அவர்களை
இன்னாரென்று கண்டுபிடிக்க முடி
யாதபடி அழித்து விட்டார்கள்.
என்று இவ்வாறாக தேசந்தோறும்
உழன்று திரிந்து அழிந்து போன
இராஜ்யங்களையும் நகரங்களையும் க
ண்ட யாத்திரி கூறுகிறான்.

சில மணிக்கு முன்பு வெள்ளம்
போல் திரண்டு சென்ற ஜனக்கூட்டம்
இப்பொழுது எங்கே? வீதியில் ஒரு
சிலரையும் காணோம், அப்படி நம்
கண்ணுக்குப் புலப்படுவோரும் தம
து வெளி வேஷத்தை நீக்கி நிஜரூப
த்துடன் காம இச்சையையும் சஞ்ச
லபுத்தியையும் வெளிக் காட்டுகின்ற
னர் ஹா! அதோ அந்த குபேர செல்
வம் படைத்த வீதியிலே பிரபுக்களி
ன் வீட்டு வாயிலிலே தமது துன்
பத்தினிடையே சிறிதுநேரம் படுத்து
றங்குவோமென்று படுக்க இடமின்றி
வீதியிலே படுத்திருப்பவர் யாவர்?
பரதேசிகளும், ஏனென்று கேட்பாரி
ல்லா அநாதைகளும், காலக்கொடுமை
யைக் கூறுவதா லுண்டாகும் பயன்
யாது என்று பொறுத்திருப்போரும்,
துக்கத்திற்கு அளவேஇல்லாத ஏழை
மக்களுமேயாம். அந்தோ என்னே இ
வர்களின் கதி! பரிதாபம் பரிதாபம்!
இவர்களின் இடுக்கண் நமக்கு இரக்
கத்தைத் தருவதை விட்டு கோபத்
தையே கொடுக்கின்றது. சிலர் உடுக்
க உடையின்றி கந்தைத்துணி அகப்
படின் அதையாவது இக்குளிருக்குப்
போர்த்துக் கொள்வோமே என்று ஏ
ங்குகின்றனரே! வேறு சிலர் வியாதி
யினால் இளைத்து உண்ண உணவின்றி
மெலிந்திருக்கிறார்கள்! இத்தகையோ
ர்களை இப்பாழும் உலகம் வேண்டா
மென்று உதறி விட்டதே! செல்
வம் படைத்த மாந்தர் இவ்வேழை



மக்களுக்கு முதுகு காட்டிப் பசித்தி
ருக்கவும், ஆடையின்றி யிருக்கவும்
விட்டு வேடிக்கை பார்க்கிறார்களே!
இதோ குளிரினால் நடுங்கும் இப்பெ
ண் மக்கள் ஒரு காலத்தில் நற்காலத்
தைக் கண்டிருக்கிறார்கள். அப்பொ
ழுது அவர்களது சௌந்தரியத்தை
வியந்து பேசாதவர் கிடையாது. ஒரு
செல்வம் படைத்த பாதகனால் கற்ப
ழிக்கப்பட்டு இக்கொடும் மாரிகாலத்
தில் நடு வீதியிலே படுத்து, உடுக்க
உடையின்றி, உண்ண உணவின்றி இ
ருக்கின்றார்கள் ஒருவேளை தம்மைக்கெ
டுத்த கொடும்பாவியின் வீட்டு வாய
லிலே படுத்து இறந்துவேண்டுவோம்
என்று படுத்திருக்கிறார்கள் போலும்!
ஆனால் அக்கொடும் பாவிகளின் மன
ங் கரையவில்லை. கல்லுங் கரையுமே
இவர்களை நோக்கின்! பெண்ணெனி
ற்பேயுமிரங்கு மென்பார்களே!
இவ்வன்னெஞ்சர்களின் கடுஞ் சித்த
த்தை என்னென்று கூறுவது?

ஐயோ! நான் மானிடனாகப் பிறந்
தேன்? பிறந்தும் இவ்வநியாயக் காட்
சிகள் என் கண் முன் ஏன் தோன்ற
வேண்டும்? இவர்களது துன்பங்களைக்
கண்டும் அவற்றைத் தீர்க்க முடியாத
படி ஏன் நான் இப்பூமியில் பிறந்தே
ன். இல்லம் இல்லாமல் இடர்ப்படும்
ஏழை மக்களே! ஐயோ! உங்களுக்கு
உலகம் நன்மையைக் கொடாது துன்
பத்தையே மேன்மேலும் கொடுக்கி
ன்றதே! செல்வம் படைத்த பிரபுக்
களுக்கு ஒரு சிறிது துன்பம் நேரிடி
னுஞ் சரி (அது ஒரு வேளை அவர்க
ளது மனப்பிராந்தியாகவும் இருக்க
லாம்) அதைப் பதின்மடங்காக வளர்
த்தி நாமும் அவர்களுடன் சேர்ந்து
அநுதாபப்படும்படியாகச் செய்கிறார்
களே! ஏழை மக்களின் துன்பமோ
ஒருவருக்கும் தெரிவதில்லை. தெரிந்
தாலும், தெரியாதவர்கள்போல்போய்
விடுவார்கள். பலவித கொடுமைக
ளுக்கும் ஆளாகி மற்றவர்களுக்கு அ
ரண் போலிருக்கும் "சட்டம்" ஏ
ழை மக்களுக்குக் கொடும் பகையாளி
போல் விடுகின்றது. ஆ கடவுளே!
என் இருதயம் ஏன் இவ்வளவு இள
கினதாய் இருக்கவேண்டும்? அல்லது
எனது நற்காலம் என் இருதயத்தின்
வேண்டுகோட் கிணங்கி இருக்கக்கூ
டாது? பரோபகாரம் செய்யமுடியா
த மனிதனை ஏன் இளகிய நெஞ்சத்
துடன் ஈசன் படைக்க வேண்டும்.
அத்தகையோரின் மனம் ஏழை மக்
களின் மனதை விட அவர்களைக் கண்
ட போழ்து பதின் மடங்கு துன்பம்
அடைகின்றது. "பரோபகாரம் இதம்
சரீரம்" என்பதே ஆன்றோர் வாக்கு.

ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி.

---

நாயன்மீரே அடியேன் நாள்பலவா உண்டியிலேன்
தாயெனநும் எச்சிலிலே தந்தருள்கென் போர்க்களியார்
பாயசத்தில் சர்க்கரையும் பாத்தினில்ஆன் நெய்யுமிகத்
தூயளித்தான் உண்டியெனச் சொல்வோர்க்கீ வார்பலரே.

க.க.

# இன்பப்பேறு.

த. ராமகிருஷ்ணன்.
(வேதமாணுக்கன்)

இஃது ராவ்பகதூர் தாகூர் தத்தாவன் அவர்களால் வைதிகமாத சஞ்சிகையில் (Vedic Magazine) வரையப்பட்டிருப்பதை விளக்கித் தமிழ்ப்படுத்தியது.

சம் நொ மித்ர: சம் வருண:
சம் நொ ஃபவத் வர்யமா
சம் ந இந்த்ரோ ப்ருஹஸ்பதி:
சம் நொ விஷ்ணு ருருக்ரம:

| | |
|---|---|
| இருக்கு வேதம். | க—கo—க |
| எசர் ,, | ங௬—க |
| அதர்வ ,, | கக, க, ௬—எ |

பொருள்.

நண்பன், தூயன், நீதிமான், பெருஞ்செல்வன், உயர்ந்த ஞானி, எங்கும் நிறைந்தவன், பேராற்றலும் பொருந்திய இறைவன் எங்கட்குச் சாந்தம் அளித்திடுக.

சாயணர் பேருரை

பகற் கிறையாம் மித்ரன் எங்கட் கின்பம் நல்கித் துன்பம் ஒழிப்பவனுகுக. இரவிற் கிறையாம் வருணன் எங்கட்கு மகிழ்ச்சி யளித்திடுக. பகலிரவை யாக்கிடும் கதிரவனும் அர்யமன் எங்கட்குச் செல்வம் ஈந்திடுக. உயர்வுடைத் தேவர் காவலனு மிந்திரன் எங்கட்குக் களிப்பு உதவிடுக. குறளுருக் கொண்டு வாமனனுகி மூவுலகும் மூன்றடியா லளந்த பேரடியனும் விட்டுணு இடுக்க ணொழித்து இன்பம் பெருக்கிடுக.

க்ரிபித் (Griffith's) மொழி பெயர்ப்பு.

Be Mitra gracious unto us, and Varuna and Aryaman; Indra, Brihaspati, be kind and Vishnu of the Mighty stride.

"மித்திரனும், வருணனும், அர்யமனும், எங்கட்கு அருள் சுரந்திடுக. இந்திரனும், பிரஹஸ்பதியும், வலிய அடியாற் ருண்டும் விட்டுணுவும் கருணை புரிந்திடுக."

தயாநந்தர் பொழிப்புரை.

இஃது "ஆரியாபி விநயத்தில்" யாவரும் இறைவனை துதித்தற் குரியனவாக சுவாமிகளால் தொகுக்கப்பட்டது.

தனிப் பெருந்தலைவ! நீ மித்ரன், யாவர்க்கும் உற்ற நண்பன்; எங்கட்கு அழியாப் பேறு அளித்திடுக. உயர்வு மிக்க இறைவ! நீ வருணன், தூயன், அணுகுதற்குரியன்; எங்கட்கு நற்பெரும் பேறு உதவிடுக. நடுநிலை திறம்பா நேர்மை சால் ஞாயத் தலைவ! நீ அர்யமன்; எங்கட் குரியனவாம் நலத்தினை நியாயமாகப் பகிர்ந்தளித்திடுக. போராற்றல் மிக்க இந்திர! யாவும் ஆக்க வல்லாய்; உயர்மிகு ஆற்றலால் அடையும் பேற்றினை எங்கட்கு ஈந்திடுக. கலைகளுக்கும் வாக்கிற்கும் நிலையமே! பிரஹஸ்பதி; ஆசானும் காப்பவனுமாவாய், நீ மகாத்மா. எங்கட்குப் பேரின்பம் நல்கிடுக. யாண்டும் நிறைந்த, முற்றுருத் தாளாண்மைத் தலைவ! விட்டுணு, எங்கட்கு ஈறிலா வின்பம் தந்திடுக. நின்னையன்றி இன்பம் நல்குவார் எவருமிலர். எனவே, யாங்கள் நின்னை இறைஞ்சி வேண்டுகின்றோம். நின்னையன்றிப் பிறர் எங்கட்குத் தஞ்சமில்லை. யாங்கள் எஞ்ஞான்றும் போராற்றலுடைய, நீதி நிறைந்த, தண்ணளி மிக்க பெறற்கருந் தந்தையாம் நின்னையன்றிப் பிற தாழ்ந்த மக்களையோ, ஆற்றல்களையோ வழிபடோம். நின்னை யணுகினோர் கைவிடப் படார். நின்னைச் சரண் புகுந்தோம்; நீ எஞ்ஞான்றும் பேரானந்தம் விளைத்திடுக.



விளக்கம்.

இம்மந்திரம் மக்கள் மனைசாந்தி பெற்று இறைவனை அடையும் ஆறு உணர்த்துகின்றது. இறைமைக் குணங்களாகிய இவற்றை மக்களுள்ளத்துப் பதித்துப் பயின்று வரின் இறைவ னியல்பினை எய்துவ தெளிதாகும். இறைமைப் பண்புக்கள் கைவரப் பெற்றோன் மக்களி னுயர்ந்து தேவனுக மிளிர்கின்றான். விலங்கினங்கட்கும் தேவர்கட்கும் நடுநின்று மன உணர்வு பெற்ற மக்கள், கீழ் நெறியாம் மாக்கட் டன்மை யகற்றி உயர் நெறியாம் தேவத்தன்மை யடைதற்குரியர். இப் பண்புக்களின் பயிர்ச்சியே மக்கட் குயர்ச்சி தருவனவாகும். இறைவன் திருவருளைக் கூட்டுவிக்கும். இச்செய்யுள் இறைவனருளை வேண்டிநின்று, அவனைத் துதித்தற் குணர்த்தியது மட்டுமன்று கடவுட் டன்மை எய்தற்கு, மக்கள் எவ்வகைப் பண்புக்களை மேற்கொள்ளல் வேண்டுமென்று அறிவுறுத்தியதாகும். இறைவன் குணங்கள் யாவற்றினும் மிக்குயர்ந்து, மக்கட்கோரிலக்காக (Ideal) விளங்குகின்றான். இப் பெயர்களால் (Appelations) குறிக்கப்படும் அவனது பண்புக்களை இடையறாது சிந்தித்து மனத்திருத்தி, ஒழுக்கத்திற் கொணர்ந்து, அவ்வுயர்ந்தானே டொப்பநோக்கி அவனையணுக முயனுதல் வேண்டு மென்பதாகும்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" [னைப்
"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மசார்தரா சார்தரு நோய்" [ற்றழித்து

இறைவன் மித்திரன்—யாவர்க்கும் நண்பன்; தான் படைத்த உயிர்களிடத்து அன்பு கூர்ந்து அளவில் கருணை பொழிகின்றான். அவனை "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த வின்பமே யென்னுடைய அன்பே" என்றார் மணிவாசகப் பெருந்தகையார்; "அன்பே சிவம்" என்பர் திருமூலர். பண்பொத்தலா லன்றி ஒன்றை யொன் றொத்திருக்கக் காண்கிலம். அவ்விறைவனை அடையும் வழி யாழும் அன்புருவின ராதல் வேண்டும். நம்மூடன தோன்றிய உயிர்க ளனைத்திடத்தும் அன்பு கூர்ந்து அருள் சுரந்திடுதல் வேண்டும். பிறர் துயர் களைதற்கு எஞ்ஞான்றும் முயன்றிடுக. "முன்பு பின்பின்றி மூவுலகத்தினும் அன்பினல்லதோர் ஆக்கமுண்டாகுமோ" என்பர் அருந்திறற் கல்வியாளர். யாம் தேடற்பாலதாம் பெருநிதியம் அன்பேயாகும்.

அவன் வருணன்—தூயன்: யாம் உள்ளத் தூய்மை பெற்றாலன்றி அவனருளை யடைதற் குரியராகோம். நமது உள்ளம் உரை செயலால் பிறர்க்கு எவ்விதத் தீங்கும் விளைத்தலாகா. நெடு நாள் யாமியற்றிய தீவினைகட்கிரங்கிச் சிந்தித்து மாசகற்றி மாசிலா மணியா னிணையடி சார்தற்கு விழைதல் வேண்டும். மனத்துக் கண் மாசு இலனுதலே அறநெறியாகும். தூய்மை யாவது ஆசை

பின்மை. உண்மை கடைபிடித்தலால் தூய்மை பெறப்படும்.

"தூய்மை யென்ப தவாவின்மை மற்றது வாய்மை வேண்ட வரும்" [து

அவன் அர்யமன்—அறநெறி திறம்பா நீதிமான். செப்பமுடையான்: யாம் அறநெறி வழுவாது பொருளீட்டி இல்லற மோம்பி வழங்கத் தக்கார்க்கு உதவி வாழ்க்கையைச் செவ்விதின் ஆற்றுதல் வேண்டும். அறநெறி வழுவின் இறைவனது தண்டனைக் கிலக்காவோம். அறக்கடவுள் காயுமெனச் சிந்தித்து எவ்வினையு மாசயற நியற்றுதல் தகுதி. இறைவனாணை(சட்டம், Eternal Law) நேர்மையானது, நிரந்தரமானது, யாவர்க்கு மொத்த நீதி வழங்குவது, அவரவர் வினைகளுக் கேற்ப நடுநிலை திறம்பாது பயனளிக்கும் பெற்றியது. அவனது காட்சியினின் றகலுதற் கியலா வாகலான் உண்மை யொழுக்க முடையாராதற்கு எவ்வகையானும் முயலுதல் வேண்டும்.

அவன் இந்திரன்—இணையிலாப் பேராண்மையால் யாவற்றையும் ஆளுகின்றவன்: நமது ஆண்டகைமையால் ஆற்றலும் அதிகாரமும் பெற்று இறைவனது பெருமையும் ஆற்றலும் ஆணையும் யாவர்க்கும் அறிவுறுத்தி, அதற்குத் தக வொழுகுமாறு பணித்தல் வேண்டும். "முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கிறை" யாவன். நமது உடலும் உள்ளமும் சமூகமும் தளர்வடையத்தக்க எவ்வினையும் நிகழ்த்தலாகா. பிறர் நலங்காத்தற் கின்றியமையா ஆற்றலும் செல்வாக்கும் படைத்தற் குறுதுணையாக உடல் நலங்காத்து உரம் பெறுத லேற்புடைத்தாகும்.

அவன் பிரஹஸ்பதி—மெய்யறிவுணர்த்துபவன்; ஆசான்: யாம் கலையறிவையும் மெய்யறிவையும் பெற்று யாவர்க்கும் கைம்மாறு கருதாது வழங்குதல் வேண்டும். மக்களுயர்ச்சிக்கு உறுதுணையா யிருப்பது கல்வி. "கேடில் விழுச் செல்வங் கல்வி." மக்கள் யாவரும் ஒத்த அறிவு வளர்ச்சி பெற்றாலன்றி ஒரு நாடு நாகரிகம் பெறமாட்டா. "அறிவுடையார் எல்லா முடையார்." "மக்கள் உண்மை நெறி கடைப்பிடித் தொழுகத் தக்கவாறு அறிவு வளர்ச்சிக் காவன புரிதல் யாவர்க்குங்கடனாம். கல்லூரிகள் கழகங்க ளமைத்தல், சொற்பொழிவுகள் நிகழ்த்தல், துண்டுத்தாள்கள் புத்தகங்கள் உதவுதல், திங்கட்டாள் கிழமைத்தாள் புதினத்தாள் வெளியிடுதல். இவை போல்வன பிறவும் அறிவைப் பரப்புதற் குறுசாதனங்க ளாகும். இவற்றிற் காவன உதவுதலும், ஆதரித்தலும் ஒழுக்கத்தில் கொண்டு வருதலும் யாவர்க்கும் இன்றியமையாதன வாகும்.

அவன் விஷ்ணு—உலகையாளும் தொழிலாளி, யாண்டும் பரந்து நின்று வினைபுரிகின்றவன்: உலகம் தொழில் மயம். உலகத்தில் யாவும் தொழில் புரிகின்றன. மக்கள் யாவரும் வினை நிகழ்த்துகின்றனர். இறைவன் யாவர் பொருட்டு இச்செயல்களைச் செய்கின்றானென்று ஆராய்ந்திடுக. நமது செயல்கள் பயனுடையதாகி, யாவருள்ளத்தையும் கவரத்தக்கனவாக இருத்தல் வேண்டும். சிறுகணமும் வினையாற்று தொழிற்படலாகா. எத்துணைக் கடுமையுடைய தாயினுந் தவிர்த்திடாது பேருழைப்பையே மேற்கொள்ளுதல் வேண்டும். எஞ்ஞான்றும் சுறு



சுறுப்புடன் பயனுடையதாக உயர்வளிப் பவற்றையே இயற்றிடுக.

அவன் உருக்ரமன்—வரம்பிலாற்றலுடையான்: யாம் உடல்வலியும் உளவலியும் பெருக்கி எம்முயற்சியிலும் தளர்வடையாது ஊக்க முடையராதல் வேண்டும். ஆன்மவலி எத்துணைப் பெருமையுடைத்து; பாவத்தையும் ஆக்க வல்லது. மக்கள் ஆன்மசக்தியை வளர்த்தற்கு முயலுதல் வேண்டும்.

"உடையரெனப் படுவ தூக்க மஃதில்லா ருடைய துடையரோ மற்று"

இச் செய்யுள் மனச் சாந்திபெற விரும்புவார் மேற்கொண்டொழுக வேண்டிய சில பண்புக்களைத் தொகுத்துணர்த்தி, அவற்றின் பழக்கத்தால் மனச் சாந்தி எய்துவரென்று வலியுறுத்துகின்றது. அவர்கள் பண்படுத்த வேண்டிய குணங்கள் அன்புடைமை, தூய்மை, நடுவு நிலைமை, ஆண்டகைமை, அறிவுடைமை, வினைத்திறமுடைமை, ஆற்றலுடைமை என்பனவாகும். அவை பிறர் துயர் கண்டிரங்கு முள்ளமுடையராதல், உயர்ந்த ஒழுக்கமுடையராதல், ஞாயந்தவறு நெஞ்சுரமுடையராதல், செல்வாக்கும் அதிகாரமும் செலுத்தத் தக்க ஆற்றலுடையராதல், மெய்யறிவை விரும்பி யேற்றுப் பிறர்க்குதவும் பெற்றியராதல், வினை யியற்றுதலில் இடையறு முயற்சியுடையராதல், உடலும் உள்ளமும் உரம் மிக்காராதலுமாகும். இவற்றின் வேறாக மனத்திற்கு ஆறுதலளிப்பன, விடுதலை தருவன, பேரின்ப மெய்துவிப்பன யாவையுள? சிந்தித்திடுமின்!

உலகில் உயர்வுடைச் சமயம் அன்புச் சமயம்; சீவகாருண்ய நெறியாகும். அதனைச் சைவமென்று சாற்றினுஞ் சாற்றுக. வைணவமென்று வழங்கினும் வழங்குக. இந்த சமயமென்று கழறினும் கழறுக. பிரிதெப்பெயர் பொறிக்கினும் பொறித்திடுக. வேதமுறைப்படி அன்பு நெறியேயாகும். அகந்தூய்மையும் ஒழுக்கமும், தன்னடக்கமும் இல்லாதான் சமயப்பற்றுடன் எவ்வித நலனுமடைதற்குரியனல்லன். ஞாயநெறியிற் செல்லாதானைச் சான்றோனென மதியார். தன்கடனிறுக்காதானைத் தருமவானென்று கருதார். தன் குற்றங் கடிந் தொதுக்காதானை நீதிமானென மொழியார். உண்மையில் அறநெறி வளர்க்கும் ஆர்வமுடையார் மனவலியும் ஆற்றலும் பெறுதல் வேண்டும். அறிவும் உலக அநுபவமும் நிரம்புதல் வேண்டும். அறிவும் அநுபவமுமின்றி அதிகாரம் தாங்கிச் செவ்வனே ஆளுவதற் கியலா. அறிவிலி அதிகாரம் பெறின் பிழைபட்டுக் கேடுவினைத்திடுவன். மந்த மதியினன் அறிவும் ஆற்றலும் அடைதலருமை. ஆர்வமும் முயற்சியும் சுறுசுறுப்பும் வாய்ந்தவன் அறிவு பெற்றிடுவன். உடலும் உள்ளமும் நன்னிலையிலிருந்தாலன்றி எத்தொழிலும் செய்வதற்கியலா. உடல் வன்மை நமது முயற்சிகளுக் கெல்லாம் தாயகமாக விளங்குகின்றது.

இம்மந்திரத்தில் வரிசைப் படுத்தியிருக்கும் நெறிகள் ஒன்றோடொன்றனைவை யொப்ப இணைக்கின்ற இசைக்கருவி போலவும், மிகவுயரிய வீட்டுலகத்திற்குச் செலுத்துகின்ற ஏணிப்படிகள் போலவும் கீழ்மேலாக ஆராயுங்கால் புலப்படுகின்றன. மக்கள் பேரின்பமாகிய சாந்தியிலே பெறுதற்குரிய வழிகளாக முதற்கண் மொழியப்படுவது உருக்ரம—உடல் வன்

மையும் நற்சுகமும் நெடுவழியேகினும் களைக்காத உறுதியான அடிகளையும் பெற்றிருத்தல். உடல்வலியுடையார், விஷ்ணு—எவ்வினைகளும் உலகிற்குப் பயன்படத் தளராது ஆற்றுந்தகையர். அடுத்தபடி அறிவுப்பேறு, பிரஹஸ்பதி—பலகலைகளிலும் தேர்ச்சியுற்றுப் பிறர்க்குப் பயிற்றுந் திறமையடைவது. அறிவும் உலக அநுபவமும் வாய்ந்தவர். இந்திரன்—பிறரையாளும் ஆண்மையும் அதிகாரமும் எய்துவர். இந்நிலை, அர்யமன்—ஞாயநெறி நிற்றற் குறுதுணையாகின்றது. அன்னர் முடிபுகளை யாவரும் ஏற்றுக்கொள்வர். பின்னர், வருணன்—தன்னடக்கமும் தூயவொழுக்கமும் பெற்று, மித்திரன்—உயிர்கள் பால் அன்புநிறைந்து ஜீவகாருண்யச் செயல்கள் புரிந்து அழியாவின்பப் பேற்றிற்காளாகின்றனர். இவ்வமைப்பு எத்துணை இயற்கையாகத் திகழ்கின்றது. ஒருவன் பேரின்ப மெய்தற்கு தன்னலமற்ற செயல்கள் புரியத்தக்க உடல் வலியும், முயற்சியும், அறிவும், ஆற்றலும், நேர்மையும், ஒழுக்கமும் கடைப்பிடித்தல் வேண்டுமென்று அறிவுறுத்துகின்றது. அழியாவின்பமும் மனோசாந்தியும் பெறுதற்கு அன்பு, தூய்மை, நேர்மை, ஆண்மை, அறிவு, தாளாண்மை, உடல் நலமும் பெருகுதற்குப் பயிற்றுதல் வேண்டுமென்பதாகும்.

இயற்கைத் தத்துவப் பொருள்.

வேதப் பயிற்சியில் தேர்ந்தவரும், தொல்லிலக்கண ஆசிரியரும், வேதச் சொற்களுக்கு உரைகாண நிருக்தம் வகுத்தவருமாகிய யாஸ்காச்சாரியார் வேதத்தில் பயிலப்படுகின்ற பலசொற்களும் செய்யுட்களும் அதிதெய்விகம்—(Physical) இயற்கைத் தத்துவமாகவும்; அதிபௌதிகம்—(Psychical or Social) மனோதத்துவ சமூகதத்துவமாகவும்; அத்யாத்மிகம் — (Spiritual) ஆன்மதத்துவமாகவும் பொருள் கொள்ளத்தக்கனவாகக் காணப்படுகின்றனவென்று மொழிகின்றார். மேற்கோளாக, "அக்நி" என்னுஞ் சொல் இயற்கைத் தத்துவப்படி நெருப்பையும்; மனோதத்துவம் அல்லது சமூகதத்துவப்படி ஆசாரியனையும்; ஆன்மதத்துவப்படி முழுத்தழல் மேனியனாகிய இறைவனையும் உணர்த்துகின்றது. இம்முறையில் இச்செய்யுட்கும் பொருள் காணத்தகும். அப்பொருட்கள் மிகச் சிறப்புடையன. மித்ரன் — (Hydrogen) நீரின் மூலப்பொருள். இறைவனன்மை அவன் படைப்புக்கட்கு உதவுகின்றவனும், அளந்து செல்கின்றவனுமாகிய சூரியன். வருணன்—(Oxygen) பிராண வாயு. படைப்புக்களனைத்திற்கும் இன்றியமையாது வேண்டப்படுவதும், தூய்மை யளிப்பதுமாகிய நீர். அர்யமன்—(Nitrogen) உப்பு வாயு. பொருள்கள் யாவற்றையும் ஒழுங்குபெறக் காத்தற்கு ஊர்தி போன்று விரைந்து செல்லும் காற்று. இந்திரன்— (Electricity) உலகையாளும் இறைவனது ஆற்றலை வெளிப்படுத்துகின்ற மின்சார சக்தி. பிரஹஸ்பதி—ஒளி, உயர்ந்த காப்புப் பொருள், யாவு முணர்ந்தானது அறிவைத் துலக்கிக் காட்டுவது. விஷ்ணு—கதிரவனொளி அல்லது வெப்பம்; தொழில். உருக்ரமன்—(Kinetic energy) யாவற்றையும் இயக்கும் மூலசக்தி.



மனோதத்துவம் அல்லது சமூக தத்துவப் பொருள்.

மனோதத்துவம் அல்லது சமூக தத்துவப்படி இம்மந்திரம் சமுதாயத்தின் பல நிலைகளையும் அமைப்புக்களையும் உணர்த்துகின்றது. மித்திரன் — ஐம்புலன்களின் கட்டறுத்த * ஆதித்தன் அல்லது சமூக சூரியன். தன்னலத்தியாகம் புரிந்து உயிர்களிடத்து அன்புடையவனாகி, அவற்றின் நலனடி யுழைக்கின்ற துறவி. வருணன்—வனத்திலுறைந்து அழுக்கினைப் போக்கித் தன்னடக்கமும் தூய்மையும் பெறுதற்குத் தவமும் தியானமும் புரிகின்ற வானப்பிரத்தன். அர்யமன் — இல்லுறைந்து மனையாளுடன் பல்கடனாற்றி, அறமேற்கொண்டு பொருள் திரட்டி, அடைந்தார்க்குதவும் இல்லறத்தான். இந்திரன்—அரசன். படைவீரனாகவோ, அரச தந்திரியாகவோ இராணுவத்தில் அல்லது பொதுசேவையில் அரசாங்க ஊழியனாக அமர்கின்ற மறவன். பகைவரிடம் போர் தொடுத்தலும் உட்பகை களைதலும் சமூக நிலையை ஒழுங்குபெறக் காத்தலும் கடனாகவுடையவன். பிரஹஸ்பதி—அறிவர். கலையறிவையும் மெய்யறிவையும் மக்கட் கூட்டத்திற்கு ஊட்டி வளர்க்கின்ற ஆசாரியர். விஷ்ணு—வணிகன். தமக்கும் பிறர்க்கும் பயனளிக்கும் வேளாண்மையும் பிற தொழில்களும் வாணிகமும் புரிந்து பொருள் திரட்டுகின்ற மக்கள் கூட்டம். உருக்ரமன்—வாழ்க்கையின் பொருட்டு அறிவானன்றி உடல் வலியால் தொழில் செய்கின்ற சூத்திரன். இவற்றுள் முதன் மூன்று சொற்களும் சமூக வாழ்க்கையில் மக்களின் பின்மூன்று நிலைகளைக் குறிக்கின்றன. முதலாவதாகிய மாணவநிலை ஆசிரியனில்லத்து ஏக குடும்பமாகக் கழிதலால் முன்னவற்றுள் அடங்கும். பிந்திய நான்கு மொழிகளும் நான்கு வருணப்பாகுபாட்டை அறிவுறுத்துகின்றன.

இம் மூவகைப் பொருளின் பாகுபாடும் தொகுத்து, அவற்றின் சிறப்பை யுணர்தற் பொருட்டு, இக் கட்டுரையின் கடைசியில் ஒரு கோட்டத்தினகத்து வகுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

உலகில் உயிர்கள் யாவும் இயற்கையில் இன்ப வாழ்வெய்துதற்கு இன்றியமையாது வேண்டப் படுவன; கதிரவன் மண்டிலம், பிராண வாயு, தண்ணீர், காற்று, உப்புவாயு, மின்சாரம், வெளிச்சம், வெப்பம், இவை யாவற்றையும் இயக்குவிக்கும் மூலசக்தி என்பனவாம். ஒரு நாடு அல்லது சமூகம் நல்வாழ் வடைவதற்கு அறிவு வளர்க்கும் அறிஞரும்; அறங்காக்கும் மறவரும்.; பொருளாக்கும் வணிகரும்; உழைப்பால் வளம் பயக்கும் சூத்திருமாகிய நால்வகையாரும்; அறிவும், ஆற்றலும் பெருக்கும் மாணவ நிலையையும்; அறம் வளர்க்கும் இல் நிலையையும்; ஐம்புல னடக்கி ஆத்மசக்தி மிகுவிக்கும் வானப்பிரத்த நிலையையும்; யாவுந் துறந்து யாவற்றையுந் தன்னகத்துக் காணுந் துறவு நிலையையும் மேற்கொண்டு தங்கடனாற்றுதல் ஏற்புடைத்தாகும். நாடு அல்லது சமூகம் செவ்விதின் நடைபெறுதற்கு மக்களுள் நால்வகைப் பாகுபாடும், நான்கு

* ஆதித்தனென்பது, அ—திதி=கட்டறுத்தல், விடுதலையடைதல், சுதந்தரமடைதல் என்ற பொருளுடையது.

நிலைகளும் இன்றியமையாதன போலவே, இறைமைப் பண்புக்களாகிய வலிமை, தாளாண்மை, அறிவு, ஆண்மை, நேர்மை, தூய்மை, அன்பினையும் யாவரும் வளர்த்தலால்; அறங் காத்துப் பொருளாக்கிக் காதல் நுகர்ந்து இறைவனடியில் அழியா இன்பப் பேறு எய்துதற்குரியராகின்றனர்.

| | அதிதெய்விகம் | அதிபௌதிகம் | அத்யாத்மிகம். |
|---|---|---|---|
| சொற்கள் | இயற்கைத் தத்துவம் Physical or Cosmic relating to Prakriti or Nature | மனோதத்துவம் அல்லது சமூகதத்துவம் Psychical or Social relating to jivatma or Society | ஆன்ம தத்துவம் Spiritual relating to Paramatma and his moral Laws |
| க. மித்ரன். | சூரியன் (நீரின் மூலப்பொருள்) Hydrogen | துறவி Anchorite | அன்பு. |
| உ. வருணன் | நீர். (பிராண வாயு) Oxygen. | வானப்பிரத்தன் | தூய்மை. |
| ௩. அர்யமன் | காற்று (உப்பு வாயு) Nitrogen. | இல்வாழ்வோன் | நேர்மை. |
| ௪. இந்திரன் | மின்சாரசக்தி, Electricity | ஆளுகின்றவன் (அரசன்) Ruler | ஆற்றல். |
| ௫. பிருஹஸ்பதி | ஒளி (Light) | ஆசான் (அறிவன்) | அறிவு. |
| ௬. விட்டுணு | வெப்பம் (Heat) | விளைவிப்பவன் | தாளாண்மை. |
| ௭. உருக்ரமன் | இயக்கம் ஆற்றல் (Kinetic Energy) | உழைப்பாளி (Unskilled) | வலிமை. |

# புதிய உளநூலும் தமிழர் பொதுமறையும்.

——(o)——

இயற்கை நுட்பங்களை ஆராய்வது போலவே, மேலைநாட்டினர் இப்போது உளநூல் உண்மைகளையும் ஆராய்ந்து வருகின்றனர். இத்தகைய ஆராய்ச்சிகளால் அன்னார் கலைச் செல்வம் நாள்தோறும் பொங்கிப் பெருகுகின்றது. ஐரோப்பிய அமேரிக்க மேதாவியர் வாயிலாக ஒழுங்கு பெற்று வரும் உளநூல் உண்மைப்பொருள்கள் பலவும், புதிய உடை புனைந்து வரும் பழைய பழைய யோக நூல் மர்மங்களும் மந்திர நூற் கொள்கைகளுமே யாம்.

உளநூல் ஆராய்ச்சி மனிதனது தனி வாழ்வினையும் சமுதாய வாழ்வினையும் ஒருங்கே பெருக்கி வள்



முறச் செய்யும் பல பல அரும்பொருள்களை அளித்துதவுகின்றது. மனிதன் புழுவல்லன், பாவி யல்லன், தனிவாழ்வு வாழும் மிருகம் அல்லன், மனிதன் மனிதனே. இந்த இப்பிறவியிலே ஒவ்வொரு மனிதனும் இராஜ குலத்தினனாகப் பெருவாழ்வு வாழலாம். முனி குலத்திலும் கலந்து வாழலாம். மனிதன் இப்பிறவியிலேயே மனித நிலை கடந்து அமர நிலை யெய்தி மண்ணுலகிலே புண்ணிய உலகின் பேரின்ப வாழ்வு வாழ்ந்து புகழ்பெறலாம். விதி! விதி விதி! என்று அந்துபோல அரற்றி நொந்து மாளாமல் விதிக்கும் விதி மதியே என்று மனந்தேறி மகிழ்ந்து வாழ்க்கையை வளமும் வனப்புமுற உருவாக்கி யமைக்க முயல்வது நல்லறிஞர் கடன் என்று உளநூல் முறையிடுகின்றது.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்
திண்ணியராகப் பெறின் [ணியார்

எண்ணமிடுவோர், திண்மையுடையராகப் பெறின், தாம் எய்த எண்ணிய பொருள்களெல்லாவற்றையும் எண்ணியவாறே எளிதின் எய்துவர் என முழக்கும் தெய்வவான்மறை, உளநூலின் சாராம்சமாகிய மூலாதார நுண்பொருளை மிக மிக அழகாக வெளியிடுகின்றது.

## உரையாசிரியர் உதவும் சிற்றொளி.

மனத்திண்மைவாய்ந்தவர்க்கு நினைப்பு நினைத்த வண்ணம் பயன் அளிக்கும் என்னும் தமிழ் மறையைப் பன்முறையும் நாம் கற்றிருக்கின்றோம்; எனினும் நாம் நம் தெய்வத் தமிழ் மறையை நன்கு கற்றோமில்லை. பரிமேலழகர்தம் அழகிய பேருரையினையும் ஓதி ஓதி யுணர்ந்தோம். இன்னும் நம் பொதுமறையின் பொன்மொழியும் செம்பொருளும் நமக்கு இனிது புலப்படவில்லை. மணக்குடவரோடு மனமார உரையாடினோம். அவரும் வள்ளுவர் உள்ளத்துட் செல்லவகை யறியாது விலகி நின்று வழிபடுகின்றார். வாழையடிவாழையாக வாலாற்று முறையில் வந்த பண்டிதர்களோடும் பழகி வந்தோம். இன்னும் எம் அருமைத் திருக்குறளையுள்ளபடி யுணராது இடர்ப்படுகின்றோம். உரையாசிரியர் காம்பற்றி நாம்விழிகண் குருடர்களாய் வள்ளுவருலகில் நுழைந்து மெள்ள மெள்ள வழிதேடுகின்றோம். அறிவுற்றுக் கண் விழித்து நம்மை வழி நடத்துவோர் கை விடுத்து நாமாகவே வள்ளுவர் மனவுலகில் உலவித்திரிய முயலல் வேண்டும். அப்போது தான் ஆசிரியர் உளத்தோடு நமது உளம் ஒருவாறு ஒன்றுபடும். அப்போது தான் ஆசிரியர் உளம் நமது உணர்வை ஒருவாறுதொட்டு அறிவுறுத்துவதாகும்.

## ஆசிரியரோடு கற்றல்

இங்ஙனம் தமிழ் மாணக்கரும் மாணாக்கியரும் உரையாசிரியர் உதவும் மின்மினிவெளிச்சத்தில் தமிழ் மறை பயில்வதோடு அமையாது—திருவள்ளுவரோடு அருமறைகற்க முந்தவேண்டும். கற்றுக்கேட்டுச் சிந்தித்துத் தெளிதல் வேண்டும். தெளிந்த வண்ணம் ஒழுகல் வேண்டும்.

கற்க கசடறக் கற்பவை, கற்றபின்
நிற்க அதற்குத் தக

என்பது வள்ளுவர் வாய்மொழியன்றோ? திருமறையை நாவில் தரிப்பதோடு அமையாது கருத்திலும் தரித்தல் வேண்டும். அப்போது வள்ளுவரது உண்மையொளி உள்ளத்தில்

உதயமாகி, ஒழுக்கத்தில் ஒளிர்ந்து வாழ்க்கையிலே எதிர் ஒளி செய்து திகழ்ந்தோங்கி நிற்கும். அப்போது தான் மாணுக்கன் வள்ளுவருலகில் அடியெடுத்து வைத்துச் சஞ்சரிக்கத் தொடங்குகின்றான்; அப்போது தான் திருவள்ளுவரைக் கசடறக் கற்பவனுகின்றான்.

## மனத்திண்மை.

மனத்திண்மை வாய்ந்தவர்க்கு எண்ணம்வேண்டிய வேண்டியாங்குநல்கும் தவமாகும் --திருவாகும்— கற்பகமாகும்என்றுகூறும்மறைமொழியைநாம் உள்ளவாறு உணர்ந்து அகத்தே அணிந்து கொள்வோமாயின், அது நமது வாழ்க்கையைச் சூழ்ந்து என்றும் இன்ப வொளி பொழியும் ஞான சூரியனாக நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் எண்ணங்களின் இயல்பினையும் பயனையும் நாம்அறவே மறந்து விட்டு இருட்டறையில் விழுந்து கிடக்கும் குழந்தைபோல விம்மி விம்மி யழுகின்றோம். எண்ணங்களில் என்ன இருக்கிறது? மந்திரத்தால் மாங்காய் விழுமா? என்று நூதன விவேகிகள் வினவுகின்றனர். ஆகாயக் கோட்டை அரண்மனையாகுமா? ஆமெனின், இரவலரும் புரவலராவர் என்று பலரும் எள்ளிநகையாடுகின்றனர்.

## உள்ளொளியின் உயர்வு.

வாய்ச்சொல் வேதாந்தம் நற்பயன் நல்குவதில்லை.எனினும் சங்கரர்,இராமாநுஜர், மாத்வர், மெய்கண்டதேவர் முதலியோர் அகத்தே யுதித்த ஞானசக்தி இன்னும் தத்துவவுலகில் திகழ்ந்தோங்கவில்லையா? நம்பிக்கை பற்ற முடபக்தி யென்னும் வற்றல் மரத்தில் யாதொரு நலமும் தழைப்பதில்லை. எனினும் சம்பந்தர் சடகோபாதிய செந்தமிழ்ப் பெரியோர், காதலோடு தமிழகத்தில் ஏற்றிவைத்த வேதச் சுடர்விளக்கு இன்னும் வாடா மணிவிளக்காய் மெய்யொளி பரப்பவில்லையா? இழிவான இதயதுர்ப்பலத்தோடு தோன்றும் எண்ணங்கள் உரம் பெறாது உயிரற்றுப் பிறக்கும் குழந்தைகளாகின்றன. எனினும் நெடுஞ்செழியன், கரிகாலன், செங்குட்டுவன், குணபரன்—ஆகிய செந்தமிழ்ப் பெருமக்களது வீரவுள்ளத்திலே பிறந்த எண்ணங்கள் போர்முனையில் செயற்கரிய சாகசம் விளைத்து வெற்றிமாலை சூடி மீளவில்லையா? இராஜராஜனது ஆணை தஞ்சைப் பெரியகோயிலாகவும், கம்பனது மனோதர்மம் ஒப்பிலாமணிப் பெருங்காப்பியமாகவும் நிர்மாணமாக வில்லையா? நமது கண்முன் மேற்புல விஞ்ஞான உலகின் கனவுகளெல்லாம், ஆவிரதம் ஆகாயவிமானம் பூதக்கண்ணுடி தூரதிருஷ்டிக் கண்ணுடி அச்சியந்திரம் மின்சாரவிளக்கு கம்பித்தந்தி கம்பியில்லாத்தந்தி ஆகிய புதுப்புதுப் புதுமைகளாக விளைந்து வரவில்லையா? எண்ணங்கள்,விருப்பங்கள், கனவுகள், இலட்சியங்கள்—இவை பயனற்றன வென்று கூறுவோர் கூற்று அறியாமையினையே அறிவிக்கின்றது.

## உளநூலார் கொள்கை.

ஆன்மா சார்ந்ததன் வண்ணமாக நிற்கின்றதென்று தமிழொடு வளர்ந்த சைவசித்தாந்தம் முறையிடுகின்றது. உள்ளமும் சார்ந்ததன் வண்ணமாக உயர்கின்றது அல்லது தாழ்வெய்துகின்றது. எண்ணங்களின் வண்ணமே உள்ளத்தின் வண்ணம்.



புறவண்ணமும் அதுவே. இது உளநூலார் மதம்—உளநூலார் சித்தாந்தம்.எண்ணம் என்பது பொதுவாக உள்ள நிகழ்ச்சி அல்லது உள்ளநெகிழ்ச்சியைக் குறிக்கின்றது. அறிவு, உணர்ச்சி, விருப்பம், காதல், சித்தம் ஞாபகம், மனோதர்மம்— இத்தகைய உள நிலைகளெல்லாம சௌகரியத்தின் பொருட்டு எண்ணங்களென்றே வழங்கப் பெறுகின்றன. அறிவினும் பேராற்றல் வாய்ந்தன உணர்ச்சி, விருப்பம் ஆகிய உள்ள நிகழ்ச்சிகளேயாம். அன்பும் பகையும் மக்கள் மீது ஆவேசித்து வல்லரசு செலுத்துவதை யறியாதார் யார்? கேவலம் அறிவு நிலையில் நாடுவதினும் உணர்வோடு, ஆர்வத்தோடு, சித்த சக்தியோடு, மனோபாவத்தோடு நாடும் நாட்டமே நாடும் பொருள்களை நல்கும் என்பது வெள்ளிடைமலை. ''உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்!'' என்ற திருமங்கை மன்னன் திருவாக்கு நன்கு சிந்திக்கத்தக்கது. பேராற்றல் வாய்ந்த உணர்வும் விருப்பமும், படைக்குந் தன்மையில் அறிவைக் காட்டினும் சிறந்திலங்குகின்றன என்பது என்றும் மறக்கவொண்ணாததோர் உண்மை யாகும். சூரிய கிரணங்களைப்போல நமது எண்ணங்களும் பலவகையாகச் சிதறிவிழுகின்றன. கதிரவன் கதிர்கள் ஒருமுகப்பட்ட இடத்தே, நெருப்பு உண்டாகின்றது. அவ்வண்ணமே நினைவின் கதிர்களும் ஒருமுனைப்பட்டு உரம் பெற்ற நிலையில், நெஞ்சகத்தே ஞானக் கொழுங்கனல் சுடரெறிந்து பொங்கும் என்றும், ஐம்பொறிகளின் உதவியின்றி உளம் உளத்தோடு உறவாடி உரையாடு மென்றும் யோகநூல் உண்மை சொல்லுகின்றது. நீண்டகால ஆராய்ச்சியின் பயனாக இப்போது மேலை நாட்டு நல்லறிஞர்கள் சிலரால் இவ்வுண்மை, ஜடமாய வுலகில் விஞ்ஞான நூல்கள் விளைத்துவரும் அற்புதங்களினும் பேரற்புதமாக மதிக்கப்படுகின்றது.

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்

என்பது தமிழ்மறை. எண்ணங்களின் திண்மையே மனத்திட்பம். மனத்திட்பமே வினைத்திட்பம். 'வித்தைப் போல விளைவு' என்பது உண்மையினும் உண்மை. விருப்பே பிறப்பின் வித்து; எண்ணமே மனிதனை யாக்க வல்லது என்னும் உபநிடதவுண்மைகள் திறவோர் தியானவாயிலாகக்கண்ட காட்சிகளேயாம்.

## உயர்தர உழவு.

மெய்ம்மையாம் உழவைச்செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையு மன்றே!

—அப்பர் தேவாரம்.

எண்ணங்களின் திண்மையால் உள்ளத்தே ஓர் உயர்தரவிவசாயம் செய்யும் அரிய ரகசியத்தை அப்பர் தேவாரம் அருளொடு குழைத்து நமக்கு ஊட்டி யறிவுறுத்துகின்றது. முதற்கண் உண்மையுழவால் பண்பட்ட நெஞ்சிலே நல்விருப்பம் என்னும் வித்தை விதைத்தல் வேண்டும்; பயிரைக் கெடுக்கும் களைகளை அப்போதைக் கப்போது வாங்கி யெறிந்து

பொறுமைநீர்பாய்ச்சல்வேண்டும்;தன் னம்பிக்கையெனும் சூரிய வொளி இப்பயிருக்கு உயிர்தால் வேண்டும்; வேலியிட்டு 'வறிஞன் ஓம்பும் ஓர்செய்யெனக்காத்து' நின்று பாடு படல் வேண்டும். அப்போது விதை உள் மனத்தினின்றும் முளைத்தெழுகின்றது. நிலம், நீர் ஒளி—இவற்றினின்றும் வேண்டும் உணவை உட்கொண்டு பயிர் நாளொரு மேனியாக வளர்ந்து இம்மையிலும் மறுமையிலும் நற்கதியாக விளைகின்றது. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பது காரணகாரிய நியமமேயாகும். திண்மை வாய்ந்த எண்ணங்களும் விருப்பங்களும் இலட்சியங்களும் வீணாவதேயில்லை. சௌகரியங்களெல்லாம் இவற்றைத்தேடி யடைகின்றன. ஆதலால் குறித்த விவசாயத்தை இளமையிலேயே செய்தல் வேண்டும். இவ் விவசாயம் தொடங்குங்கால் சிறிது துன்பமாயிருந்து நாளடைவில் இன்பமாகும்.

### எண்ணத்தின் இயல்பு.

எண்ணங்களுக்கு வண்ணமுண்டு; வடிவமுண்டு; காந்த சக்தியுண்டு. ஒளிகளைப்போன்று எண்ணங்களும் விருப்பங்களும் அலைமேல் அலை வீசிப் பரவுகின்றன. பரவிச் சென்று இனம் இனத்தோடு கலக்கின்றது. விருப்பத்தின் காந்தசக்தி முதற்கண் சிற்றுருகத் தோன்றி முடிவில் ஒரு சடலாகப் பொங்கி விடுகின்றது.

விருப்பத்தைப்போல—அன்பினைப் போல—அச்சமும் பகையும் காந்த சக்தி வாய்ந்தனவேயாம். அன்பால் விடேய்திய பிரகலாதன் கண்ணப்பனதிபரையும் பகையால் வீடெய்திய இரணியன் இராவணனுதியரையும் புராணங்கள் உதாரணமாகக் காட்டுகின்றன. திருமகளின் பொன்னுருவை அகக்காதலோடு வழிபடுவோர் செல்வராகின்றன ரென்றும் வறுமையை அஞ்சி வெறுப்போர் அவ்வறுமைக்கே ஆளாகின்றனரென்றும் உளநூல் கூறுகின்றது. ஆதலால் அறியாமையால் எழும் அச்சம் பகையாதிய எதிர்மறை யுணர்ச்சிகளை (Negative Emotions) அறவே மாய்த்தல் வேண்டும். இத்தகைய 'அரக்கர் குணங்'களோடு எதிர் நின்று போராடுங்கால், இவை வாலியைப்போல முன்னினும் வலி பெறுகின்றன. இருளோடு பொருது வெல்வோர் யாரே? ஒளியே இருளை மாய்க்கவல்லது. பகையிருளை மாய்ப்பது அன்பெனும் செவ்விய ஒளியே. கெட்ட எண்ணங்களை எதிரிகளாகிய நல்லெண்ணங்களால் வென்று வலி யழிப்பதே உபாயம், வேறு உபாயமில்லை.

### உள்ளத்தை உருவாக்கல்.

கவலை, அச்சம் ஆதிய அரக்கர் புகுந்து கலகஞ் செய்ய இடமின்றி உள்ளமாகிய கோயிலைத் தூய்மையும் தெய்வத் தன்மையும் வாய்ந்த நல்லெண்ணங்களாலும் அழகிய உயர்ந்த லட்சியங்களாலும் காப்பது நம் முதற்கடமையாகும். எதிர் மறையுணர்ச்சிகளை உளத்தில் கொள்ளாது மறந்துவிடுதலே மேலாம். இத்தகைய அப்பியாசத்தால் உள்ளம் திட்பமுற்று நன்மையை இழுக்கும் காந்த மாவதோடு தீமையை விலக்கும் கவசமாகவும் உருப்படுகின்றது. இத்தகைய உள்ளக்கணவின் பொறிகளா யெழும் எண்ணங்கள் சக்தி மயமாக ஜ்வலிக்கின்றன. இத்தகைய உள்ளத் திருக்கோயிலில் உயிர்த்தீயைத் தூண்டி வளர்க்கும் உயர்ந்த லட்சியங்களைத் தெளிவான—இனிமையான—இன்பமயமான மனப்படமாகச் சித்திரித்து வழிபடுவோரே, வாழ்க்கைப் போரில் வாகை சூடிமீளும் மகாவீரராவர். இவ்வுள்ளப்படம் முதற்கண் 'புனையா ஓவியமா'கி (Outline Picture) மனோபாவம் தொடத் தொடப் பரிபூரண சித்திரமாக மலர்ந்து விரிந்து பொலிகின்றது.



### பூர்ணவாழ்க்கை.

லட்சியத்தை அகக்கண்ணால் கண்டு காதலித்து அதனை யடைந்துவிட்டதாகவே பாவித்து ஒழுகல் வேண்டும். குணப் பெருங்குன்றத்தில் ஊக்கமென்னும் சுத்த ஆகாயத்தைச் சுவாசித்துப் பூர்ண வாழ்க்கை வாழ விரும்பும் திருவாளர்களெல்லாம் அச்செல்வ வாழ்வினை எய்திவிட்டதாகவே பன்முறையும் பாவித்துப் பிரபஞ்ச நாடகத்தில் நடித்தல் வேண்டும்.

"பாவனை யதனைக் கூடில்
பரமனைக் கூடலாமே!"

என்று பெரியாரும் பணித்தார். பாவனை யுலகில் லட்சியத்தைக் கூடுவோர் உண்மையில் தத்தம் இலக்கை யடைந்து இன்புறுவர். இதுவே உளநூல் கூறும் மேலான ஸத்ஸங்க மாகும். குறைகளைமறந்து லட்சியமாகிய உள்ளொளியைக் கூடி நிற்போர்க்கு, அத்தெய்வவொளி பெருகி, நாடும் பொருள்களாகச் சுடர்வீசிப் பொழிகின்றது.

கலங்காது கண்ட வினைக்கண், துளங்காது
தூக்கம் கடிந்து செயல். (குறள்)

அப்பியசித்து மனம் தெளிந்து கண்ட வினையின்கண், திட்பமுடையாராய், பின்னசைத லின்றி நீட்டித் தலையொழிந்து செய்க என்பது விதியாகலின், அங்ஙனம் மனத்திட்ப முடையாராய் வினைசெய்வோர் செயற்கரிய செய்யும் பெரியாராவர் என்பது திண்ணம்.

நெல்லைநேசன்.

---

## கம்பராமாயண மும்மணிகள்.

### இலங்கைமா நகரம்.

(முன்தொடர்ச்சி.)

பி. ஸ்ரீ. ஆசார்யா.

அரக்கரது இராஜபக்திக்கும் தேசபக்திக்கும் ஓர் அறிகுறியாக—ஒருருவமாக—நிற்பவன், அரக்கர் புரந்தரனும் அகிலலோக பயங்கரனுமான இராவணனேயன். ஆகவே அவர்களது இராஜபக்தியும் தேசபக்தியும் ஒருங்கே இராவண பக்தியில் அடங்கிக்கிடக்கின்றன.

நீருள் தனையே உள்ள மீனினம்;
நிருதரெல்லாம்
வேருள தனையும் வீவார் இராவணனோடும்
மீளார்.

நீரோடு வாழ்ந்து நீரோடு நசிப்பது மீனுக்கு இயற்கை. அரக்கரும் இராவணனோடு வாழ்ந்து இராவணனோடு இறப்பதற்குச் சித்தமாயிருந்

கின்றனர். நீருண்டெனின், மீன் கூட்டங்களுமுண்டு; நீரின்றி மீனில்லை. அவ்வண்ணமே இலங்கையிலும் வெளிநாடுகளிலுமுள்ள அரக்கர் கூட்டங்களெல்லாம், இராவண ராஜ்யத்தின் செல்வத்தையும் செல்வாக்கையும் ஆதாரமாகக்கொண்டு தான், உலகமெலாம் போர்த்துவிரிகின்றன, பரவுகின்றன. அரக்கர் பெருமை யெல்லாம் இராவணன பெருமையே. இராவணனது வெற்றியிலும் வீரத்திலும் போரசிலும் பெருவாழ்விலும் ஒவ்வொரு அரக்கனுக்கும் பங்குண்டு, உரிமையுண்டு. எங்கணும் சிதறிக்கிடக்கும் அரக்கர் இனத்தையெல்லாம் ஒன்றுபட இணைத்து நிற்பவன் இராவணன். இங்ஙனம் தங்கள் வீரஜாதியை வாழ்விக்கும் கண்கண்ட தெய்வமாக விளங்கும் இராவணேசுவரனோடு வம்ச நாசமாகத்துணிந்து அரக்கர் கங்கணம் கட்டிநிற்பது இயல்பன்றோ? இராஜபக்திக்கு அரக்கர் மீன்களைப்பார்த்தார்; நீர்வாழ் பறவைகளைப் பார்த்தாரில்லை. நீர்ப்பறவை போன்றவர் தேவர்; 'போரியற்கை இராவண'னது இராஜுவராஜ்யத்தில் நீர்வாழ் மீனினமாகவாழ்வோர் போரரக்கரும் போரரக்கியருமே யாவர் என்று கவி வற்புறுத்துகின்றார்.

அனுமன் இலங்கைமா நகரில் புகுந்து பிராட்டி (சீதை)யைத் தேடிவரும் காலத்தில், இராவணஇராஜ்யம் மகோன்னத நிலையை அடைந்திருக்கின்றது.

> தேவர் தேவியர் சேவடி கைதொழும்
> தாவின் மூவுலகின் தனிநாயகம்,

எண்ணிறந்த போர்களின் பயனைவார்ந்து நிலைபெற்று நிற்கின்றது. எதிரிகளெல்லாம் அடிமைகளாகிப் பணிந்து விட்டனர். பகை ஒடுங்கிவிட்டதால் போரும் ஒடுங்கிப்போயிற்று. போர் ஒடுங்கவே, போர்வீரர்களான அரக்கர், நீரினின்றும் கரையேறிய மீன்களை யொத்திருக்கின்றனர். (They resemble the fish out of element)

> கழல் உலாம் காலும், காலவேல்
> உலாம் கையும், காந்தும்
> அழல் உலாம் கண்ணும் இல்லா
> ஆடவரில்லை; அன்னார்
> குழல் உலாம் களிவண்டார்க்கும்
> குஞ்சியால் பஞ்சிருன்ற
> மழலையாழ்க் குதலைச் செவ்வாய்
> மாதருமில்லை மாதோ.

போர்வீரரான அரக்கர் இன்னும் போர்க்கோலம் பூண்டு திரிகின்றனர்; ஆனால் போரில்லை. Warriors, No War—போர்வீரர், போர்தானில்லையென்றால், அது 'மீனினம், நீர்தானில்லை' யென்பதையொக்குமன்றோ? இத்தகைய நிலைமையில் அனுமன் அரக்கரைச் சந்திக்கின்றான். போர் பெறாத அரக்கர் எவ்வாறு பொழுது போக்குகின்றார்? போரரக்கரும் போரரக்கியரும இப்போது போகத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள்.

> கண்ணனார் உயிரே யன்னார்
> கைப்படைக் கலத்தில் காப்பார்

என்று இந்திரசித்தன் அரக்கரைப் பாராட்டிப்பேசுகிறான். இராவண ராஜ்யத்தின் கண்ணாகவும் உயிராகவும் இருப்பது இராணுவபலம். வீரமன்னனான இராவணனுக்கும் இளவரசான இந்திரசித்தனுக்கும் கையிலேந்திய ஆயுதம்போல உதவி, வெற்றியும் புகழும் விளைத்த கிங்கரர்களெல்லாம்—படைத் தலைவரெல்லாம் இராவண ராஜ்யத்தில் நிலைபெற்று சமாதானத்தால் தத்தம்வீர வெறிக்கும் போர்ச்சினத்திற்கும் 'போக்கு வீடு' (outlet) காணாது பலபல காமத்தராகி யுழல்கின்றனர்.

> மாதரும் மைந்தர்தாமும்
> ஒருவர்மேல் ஒருவர் வைத்த
> காதலங் கள்ளுண்டார்போல்
> முறைமுறை களிக்கின்றாரை

அனுமன் காண்கின்றான். இது போரரக்கர்—போரக்கியர் பொழுதுபோக்கு. போர்வெறி போகஇச்சை யாக மாறுகின்றது. 'வெஞ்சினக்களியினர்' என்றுகவி அரக்கரைக் குறிக்கின்றார் (ஊர்தேடு படலம் பாட்டு கஉ). கோபம் அரக்கரது இயற்கையானகுணம். கோப வெறியோடு காமவெறியும் கலந்துவிடுகின்றது. காமம், வெகுளி, மயக்கம்,—இம் மூன்றும் அரக்கரது முக்கிய குணங்கள். இவை நரகத்தின் பிரதான வாயில் என்று கீதை முறையிடுகின்றது. இம் முக்குணங்களோடு அரக்கர் சாதிச் செருக்கு செல்வச் செருக்கு கல்விச் செருக்கு என்னும் முக்குறும்பும் வாய்ந்தவராய் நம் கண்முன் வருகின்றனர்.

> பனிமலர்த் தவிசின் மேலோன்,
> பார்ப்பன குலத்துக்கெல்லாம்
> தனிமுதல் தலைவன்

பார்ப்பனர் முனிவர் பரம்பரையினர் என்றால், இராவணன் இந்திரசித்தன் முதலியோர், தாமே பிரமதேவனுடைய சரியான பரம்பரையைச் சேர்ந்த பிராமணரென்று செருக்கித் திரிகின்றார்.

> வையம் தந்த நான்முகன் மைந்தன் மகன்
> [மைந்தன்
> ஐயன் வேதம் ஆயிரம் வல்லான் அறிவா
> [ளன்

என அரக்கியர் இராவணனைக் குறித்துப் பேசுகின்றார். சாதிச் செருக்கோடு அறிவுச் செருக்கும் அரக்கர் அகத்தே குடிபுகுந்து இடங்கொண்டிருக்கின்றது. 'தேவ தேவியர் சேவடி கைதொழும்' தனி நாயகமான இராவணனுக்குச் செல்வப் பெருக்கினைப் போலவே செல்வச் செருக்கும் அளவு கடந்து பொங்குகின்றது. இராவண ராஜ்யத்திலே தேவர் தருக்கின்றி (பெருமித மின்றி) அழிகின்றார்; அரக்கரோ அதிகச்செருக்கால் அழிகின்றார்.

காமம், வெகுளி, மயக்கம்—இம்முக்குணங்களும் இம்மையிலேயே நம்மை அரக்கராக்கி நரகத்தில் வீழ்த்திவிடுகின்றன. சாதிச்செருக்கு கல்விச்செருக்கு செல்வச் செருக்கு—இவையும் அரக்கர் குணங்களே யென்றும், வாழ்க்கை நெறியில் நமது மதியை வஞ்சிக்கும் அகழிச்சுனைகள் இவ்'வஞ்சமுக்குறும்பே' யென்றும் கவி எச்சரிக்கின்றார். புறப்பகைகளையெல்லாம் வென்று வலியழித்த அரக்கர், கள்வர்போல் காந்துறையும் காமமாதிய உட்பகைவரால் வீழ்த்தப்படுகின்றனர். அரக்கர் மிருகபலத்தையே பற்றுக்கோடாகக் கொண்டு புறப்பகையை வென்று பொருளைப் பெருக்கிப் பெருக்கிப் 'பாவபண்டார'மாகக் குவிக்கின்றார். இலங்கையில் இல்லாத பொருள் வேறு எங்குமில்லை. 'உலகமூன்றில் தெட்புறு பொருள்களெல்லாம் இதனுழைச் செறிந்த.' ஆனால் அரக்கரிடம் ஒரு 'பொருள்' மாத்திரம் காணப்படவில்லை. அப்பொருள் எது? 'இரக்கம் என்றொரு பொருள் இலாத நெஞ்சினர்' அரக்கர் என முனிவர் இராமபிரானிடம் முறையிடுகின்றார். பொருளைப் பெ

ருக்கி, போகத்தைப் பெருக்கி வாழ்வோரது நெஞ்சிலே, அல்லற்பட்டு ஆற்றாது அழுவோர் அழுகை எதிரொலி கொள்வதில்லை. ஆகவே அத்தகைய நெஞ்சம் ஈரமின்றி வறண்டுபோந்த பாலைவனமாகின்றது. அதுவே இரக்கமிலா அரக்கர் நெஞ்சம். இத்தகைய அரக்கர் நெஞ்சம் எத்தகைய தீச்செயலையும் துணிந்து செய்கின்றது.—'களித்துப் புன்தொழில் மேல் நின்ற அரக்கர்' என்று கவி கூறுவது கவனிக்கத்தக்கது. வெஞ்சினம், வெங்காமம் என்னும் கள்ளுண்டு கருத்தழிந்த அரக்கர் புன்தொழில் மேற் களித்து (கள் வெறிபோடு) ஈடுபட்டார் என்பது கவியுளம். 'வெஞ்சினக் களியினர்' 'காதலங் கள் ளுண்டார் போல் முறை முறை களிக்கின்றார்' 'களித்துப்புன் தொழில்மேல் நின்றார்' என்றவண்ணம், கோபவெறி போகவெறி, புன்தொழில் வெறி கொண்ட அரக்கர் 'கொடியநாகக் கள்' வகைகளையும் உண்டுகளிப்பாராயினர்.

வரம்பின்றி வளர்ந்த காம
அருத்திய பயிர்க்கு நீர்போல் அருநறவு
அருந்துவாரை

கள்வா யரக்கி கதற
தேறல் மாந்தினர் தேனிசை மாந்தினர்
உள்ளுடை மயக்கால் உண்கண்
சிவந்துவாய் வெண்மையூறித்
தள்ளிடைப் புருவம் கோட்டித்
துடிப்பவேர் பொடிப்பத்துய்ய
வெள்ளிடை மருங்குலார் தம்
மதிமுகம் வேறொன்றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக்
கணவரைக் கவல்கின்றாரை

ஆலையில், மலரில், சாலி
மூலையினில், அமுதவாரிச்
சோலையில் துவசர் இல்லில்
சோனகர் மனையில் தூய

வேலையில் கொளவொணாத
வேற்கணார் குமுதச் செவ்வாய்
வாயெயிற்றூறு தீந்தேன்
மாந்தினர் மயங்குவாரை.

துயிர் நிறத்துறுகள் உள்ளம்
தள்ளுற அறிவு தள்ளிப்
பயிர்வுறத் தெய்வம் என்மேல்
படிந்தது பாரின் என்னை
உயிர் உயிர்த்து இரண்டுகையும்
உச்சிமேல் உயர நீட்டி
மயிர் சிலிர்த்து உடலம்கூசி
வாய்விரித்து ஒடுங்குவாரும்.

இங்ஙனம் ஆண் பெண் என்னும் இருபாலாரான அரக்கரும், உலகத்திற்குத்தலைவ ராயினும் பலவகையான மது அருந்தி முடிவில்லாத போக இன்பங்களுக்கு அடிமைகளாய் ஒழுக்கமின்றி உயரிய லட்சியங்களின்றி 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்றகொள்கையோடுகாலந் தள்ளுகின்றார். ஒருவகை மதுவில் வெறுப்பு விளைந்தால் வேறொருவகை மதுவைமனம் நாடுகின்றது.சில போகங்களில் வெறுப்பு விளைந்தால், புதுமை புதுமைகளான பலபல போகங்கள் இன்னும் எதிர் நோக்குகின்றன. இலங்கையில் 'வெறுப்பின்றி வீழ்ந்தது துய்க்கும் போக இன்பம் ஈறிலது' அன்றோ? இத்தகைய இன்பப் பொருள்களெல்லாம் 'உலக மூன்றின் தெட்புறு பொருள்கள்'—உலக மூன்றினுமுள்ள உயரிய நுகர்ச்சிப்பொருள்களாகும். உலகின்கணுள்ள உயரிய பொருள்களெல்லாம் இலங்கையில் எவ்வாறு தொகுக்கப்பெற்றன? இப்பொருள்களின்மீது அரக்கர்க்கு எத்தகைய உரிமையுண்டு? உலக மூன்றினும் தனியரசு புரிவோர்க்கு எவ்வித உரிமை வேண்டும்? வலிமையே அவர் தம் உரிமை.



எய்வினை இறுதியில் செல்வம்எய்தினன்,
ஆய்வினை மனத்திலான், அறிஞர் சொற்
[கொளான்,
வீவினை நினைக்கிலான், ஒருவன் மெய்யி
[லான்
தீவினையென இருள்செறிந்த தெங்குமே.

ஆசையை வளர்த்துவந்த இராவணன், உலக மூன்றினுமுள்ள உயரிய இன்பப் பொருள்களையெல்லாம் வலியால் கவர்ந்து கொண்டான். மறச்சுவர் மதிலெடுத்து மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் அமைத்தான். பிறரை இம்சித்து இம்சித்துப் பெருஞ்செல்வம் எய்தினன். இத்தகைய பொய்த்திருவால் போக இச்சையைப் பெருக்கி இன்ப வாழ்வு வாழ விரும்பினன். இம்சை நெறி இன்பநெறி யன்றென்பதை இராவணன் உணர்ந்தானில்லை. போகத்தில் தோய்ந் துழலும் உள்ளம், அறநெறி இது, மறநெறி இது என்று பகுத்தறியும் தன்மையினையும் வன்மையினையும் இழந்து விடுமன்றோ? நெருப்பில் நெய்பொழிவதுபோல், ஆசைத் தீயில் போகத்தைப் பெய்து வருவோன் தானும் ஆராய்ந்தறியான்; அறிஞர் அருள்சுரந்துதவும் அறிவுப் பொருளையும் அகத்தே கொள்ளான். இத்தகையநெறி தீராத துன்பத்தினும் மரணத்தினுமே முடிவுறும் என்பதை அவன் நினைப்பதேயில்லை. இத்தகைய நெஞ்சில் உண்மை எவ்வாறு குடிபுகுந்து நிலைபெறும்? உண்மையொளி வீசப்பெறாத இராவணனது உள்ளத்தில் தீவினையிருள் செறிந்து கிடந்தது. திருவிலியான இலங்கை வேந்தனது தீவினைபோல இலங்கைமாநகரை ஆரிருள் சூழ்ந்து கொண்டதென்று கவி வருணிக்கின்றார்.

போகநெறி வேறு, இன்பநெறி வேறு என்னும் உண்மையை அரக்கர் உணர்ந்தாரில்லை. போகத்தையே விரும்பி விரும்பி, வெறிகொண்டுபுன் தொழில்மேல் சென்றுபாழ்பட்ட நெஞ்சினரான அரக்கர் தன்மையை நம் கவி'பொய்வினை' அல்லது 'தீவினை'யின் அறிகுறியான இருளாகவே கூறிச் செல்வது கவனிக்கத்தக்கது.

பொய்வினைக் குதவும் வாழ்க்கை
அரக்கரைப் பொருந்தி, அன்னார்
செய்வினைக்குதவும் நட்பால்
செல்பவர்த் தடுப்பதேய்க்கும்
மைவிளக்கியதே யன்ன
வயங்கிருள்.

தீவினையை இருளாகவும் நல்வினையை ஒளியாகவும் உவமிப்பது இயல்பு. அரக்கர் தம் முழு ஆற்றலையும் வாழ்க்கையினையும் பொய்வினைக்கே உரிமையாக்குகின்றார். இத்தகைய அரக்கர்கூட, பொய்வினையைப் பொய்வினைக்காகவே காதலிக்கின்றாரில்லை.போகமே அவர்தம் பொய்வாழ்வின் தனி நோக்கமாகின்றது.பொய்வினைபுரிந்து பெருஞ்செல்வமும் பேராசும்பெறுவதுபோகத்தின் குறுக்கு வழியென்று அரக்கர் கருதுகின்றார். அரக்காது பெருநோக்கம் நிறைவேறி விட்டது. ஏகபோகமான ஏகாதிபத்திய வாழ்வினும் மேலானபோகம் இவ்வுலகில் உண்டோ? போகத்தோடு ஆடம்பர வாழ்வும் அதிகாரச் செருக்கும் கைகோத்துக் களிநடம் புரிகின்றன.

முன்னம் யாவரும் இராவணன்
முனியுமென் றெண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான்
கதிரெனப் புகல்வார்.

இராவணனது மகாராஜ்யத்தில் சக்கரவர்த்திக்கு அஞ்சி, கதிரவன் உதயம் செய்வதேயில்லை யென்று அரக்கர்

பெருமை பாராட்டிக்கொண்டதாகக் கவி கூறுகின்றார்.

உறங்குகால்புகா, கதிரவன் ஒளிபுகா,மறலி
மறம்புகாது, இனிவானவர் புகார் என்கை [வம்பே!
திறம்புகாலத்தன் யாவையும் சிதையினும் [சிதையா
அறம்புகாது,இந்த அணிமதிட் கிடக்கை [நின்றகத்தின்.

கதிரொளியைப் போலவே சுழல்காற்றும் காலன்வலியுங்கூட இராவணனது கன்னிமா மதிலைக்கடந்து செல்லத்துணிவதில்லை. என்றும் அழியாத அறமும் உட்புகா வண்ணம், இராவணன் மதிலெடுத்து அரண்செய்து இலங்கையை ஆட்சி செய்கின்றான். இராவணனது செல்வச் சிறப்பினையும், அதிகாரப் பெருக்கினையும், இராணுவ பலத்தினையும் கண்டு ஆண்மையாளனான அனுமனும் வியந்து செயல் மறந்து மயங்குகின்றான்.

தெய்வத் தச்சனைப் புகழ்துமோ?
செங்கண் வாளரக்கன்
மெய்யொத்தாற்றிய தவத்தையே
வியத்துமோ? விதியோன்
அய்யப்பாடிலா வர்தனையே
மதித்துமோ? அறியாத்
தொய்யற் சிந்தையேன் யாவரை
யாதென்று துதிப்பேன்?
விற்படை பெரிதென்கேனோ?
வேற்படை மிகுமென்கேனோ?
மற்படை யுளதென்கேனோ?
வாட்படை வலிதென்கேனோ?
கற்பணம் தண்டுபிண்டி
பாலம் என்றினைய காத்தும்
கற்படை உடைத்தென்கோ யான்?
காயகற்கு உரைக்கும் காளில்.
வெவ்வன அரக்கனை
மனக்கொள வியந்தான்.
தெவ்வர் இவர்! சேமம் இது!
சேவகனும் யாமும்
வெவ்வமர் தொடங்கிடின்
எனுப் விளையும் என்றான்.

இலங்கையின் சித்திரமே, கம்பனது இலங்கைமாதேவியின் விசித்திர வடிவம் தாங்கி நம்கண்முன் வருகின்றது. இலங்கையின் வாழ்நாள் போன்றவள் (வாணாள் அன்னாள்) இலங்கைமாதேவி. 'இலங்கை மூதூர் நல்லாள்' 'இவ்வூர் வைகுறை ஒக்கும் நயனத்தாள்.' கொடிய விட நாகத்தை நம்மவர் 'நல்ல பாம்பு' என்று கூறுவதுபோலவே கவி 'நல்லாள்' என்று இலங்கைமாதேவியைக் குறிக்கின்றார். இவளே இலங்கையின் காவல்-தெய்வமாய் இராவணனது இராஜதானி நகரைத் தன் கண்ணாகிய உறையிலிட்டுக் காத்துவருகின்றாள்.

எட்டுத்தோளான்,நாலுமுகத்தாள், [உலகேழும்
தொட்டுப்பெரும் சோதிநிறத்தாள், சுழல் [கண்ணாள்,
முட்டிப் போரின் மூவுலகத்தை முதலோ [டும்
கட்டிச் சீறும் காலன் வலத்தாள் கமையில் [லாள்

திக்கொடு திக் அந்தங்களையும் வென்று கட்டியாளும் இலங்கைமாநகரின் அதிதேவதை நாலுமுகத்தோடும் எட்டுத்தோளோடும் சோதி நிறத்தோடும் சுழல் கண்ணோடும், காலன் வலத்தோடும் கமை (பொறுமை) யிலா நெஞ்சோடும் தோற்றுகின்றது.

வேல்வாள் சூலம்வீசு றுபாசம் மிளிர்சங்கம்
கோல்வான் குந்தம் கொண்ட கரத்தாள்,
வடகுன்றம்
போல்வாள், திங்கட் போழின் எயிற்றாள், [புகைவாயில்
கால்வாள், காணில் காலனும் உட்கும் [கதமிக்காள்

இலங்கைமாதேவியின் கைகளில் இலகும் படைகளெல்லாம், இலங்கைவாசிகளான அரக்கர்படைகளே. 'வடகு



ன்றம்' போன்ற அவளது வீர வுருவமும் கோரப்பற்களும், அறிவைப்புகைத்தெழும் சினத் தீயும் எல்லாம் அரக்கர்தோற்றமே யாகும். இலங்கைமாதேவி, பஞ்சவர்ணப் பட்டாடையுடுத்து, சித்திரப் பொற்பட்டின் உத்தரியம் ஒன்று மார்பிலே தாங்கி வருகின்றாள். அவ்வுத்தரியத்தின்மீது புரளும் வெண்முத்துமாலை தகதகவென்று ஒளியுமிழ்ந்து மிளிர்கின்றது. அவளது கருமேனியைச் செஞ்சந்தனக்குழம்பு அழகு செய்து பரிமளிக்கின்றது. தன் அருங்கடமையிலே கண்ணும் கருத்துமாகவரும் அனுமன் இவளை முதற்கண் பார்த்தானில்லை. காவலிலே கண்ணும் கருத்துமாக நிற்கும் இலங்கைமாதேவியே மதிலைத்தாவ எத்தனிக்கும் அனுமனை முதலாவது பார்த்தாள்.

பாரா நின்றாள் எண்திசை தோறும்,பலர் [அப்பால்
வாரா நின்றாரோ! எனமாரி மழையே [போல்
ஆராநின்றாள் நூபுரம் அச்சம் தருதாளாள்,
வேரா மெய்யாள், மின்னின் இமைக்கும் [மிளிர்பூணாள்

அனுமன் ஒருவனைப் பார்த்ததும் இன்னும் பலர் அப்பால் வருகின்றனரோ என்று தொலையில் எட்டிப் பார்க்கின்றாள். அவளது மேனி வேர்க்கின்றது. அம்மேனியில் மிளிரும் அணிகள் மின்னற் கொடிகள் போல் பளிச்சுப் பளிச்சென்று மின்னுகின்றன. அங்கும் இங்கும் திரிந்து திசைகள் தோறும் பார்க்கும்போது, அவளது சிலம்புகள் அஞ்சாநெஞ்சங்களும் அதிர்ந்து குலுங்கி யஞ்சும்படி இடிமுழக்கஞ் செய்கின்றன. இத்தகைய பகட்டோடும் படாடோபங்களோடும் அனுமனை நோக்கிவரும் இலங்கைமாதேவி, இலங்கைமாநகரின் ஆன்மாவே ஒரு மாயாரூபம் தாங்கிவருவதுபோல வருகின்றாள். அச்சமயம் இலங்கைமா தேவியின் மணிமுடிமீது இலங்கும் மலர்மாலையில் வழக்கத்திற்கு மாறாக—ஓர் அவசகுனமாய்— வண்டுகள் மொய்த்து மகிழ்ந்து பண்பாடுகின்றன. அப்போதுதான் இலங்கை மாதேவி அணுகிவரும் அனுமனைக் கண்ணுற்று நோக்குகின்றாள். உடனே

நில்லாய் நில்லாய் என்று உரை
நேர்வாள், நினையாமுன்
வல்லே சென்றான்; மாருதி
கண்டான், வருகென்றான்.

இலங்கைமதிலைத் தாவிச்செல்ல வேண்டுமென்ற சிந்தையில் ஆழ்ந்து அயல் போன அனுமன் நினையாமுன், இலங்கைமாது 'நில்! நில்!' என்று எச்சரித்து விரைவில் எதிர்நோக்கி வருகின்றாள். சிந்தனை கலைந்து திடீரென்று அனுமன் இவளது பயங்கரமான பேய்க்கோலத்தைப் பார்க்கின்றான். மலையசையினும் மனம் அசையாத மாருதி(அனுமன்) அமைதியாக வாய் திறந்து 'வருக' என்று சுருங்கக்கூறி வரவேற்கின்றான். இலங்கைமாதேவி அனுமனது அஞ்சாமையை அறியாமையென இகழ்கின்றாள். ஊனைத் தின்று ஊனைப் பெருக்கி வாழாது உடல்வளமின்றி உயிர்சுமந்துழலும் அற்பக்குரங்கை அவமதித்துப் பேசுகின்றாள். அனுமன் அவளது கோபாவேசத்தைத் தன்பொறுமையால் எதிர்க்கின்றான். இது அன்னாள் வெஞ்சினத்தீயில் விறகு வீழ்ந்தது போலாயிற்று. அவள் போர் தொடங்குகின்றாள்; படையிழந்து போரிழந்து பாரிடை வீழுகின்றாள். இலங்கைமாதேவியின் வீழ்ச்சி இலங்கைமாநக

ரின் வீழ்ச்சிக்கு ஓர் அறிகுறியாகின்றது. மேலும் இலங்கையின் ஆடம்பர வைபவங்களையும் பல பராக்கிரமங்களையும் கண்டு உளம் திகைத்து வந்த அநுமனுக்கு, இலங்கைமாதேவி கொடுத்த போர் ஒரு 'சமயசஞ்சீவி' யாயிற்று. 'அறம் வெல்லும், பாவம் தோற்கும்' என்னும் இயற்கை மர்மத்தை இவளே நல்ல சமயத்தில் அநுமனுக்கு நினைவூட்டுகின்றாள். இலங்கையுட் புகுந்த அநுமனுக்கு இன்னும் இடையிடையே மயக்கம் விளைகின்றது. எனினும் 'அறம் வெல்லும், பாவம் தோற்கும்' என்னும் மகாமந்திரம் அநுமன் உள்மனத்தில் நன்கு பதிந்து விட்டது. இம்மந்திர பலத்தால், அநுமன் போகங்களையும் பொருட் பெருக்கினையும் படைச்செருக்கினையும் கண்டு மயங்கி வந்தகாரியத்தைக் கைநெகிழவிடாது, சீதையைத்தேடி 'மயக்கற நாடி' வருகின்றான்.

இயக்கியர், அரக்கிமார்கள்,
நாகியர் எஞ்சில் விஞ்சை
மயற்கரை மலராத் திங்கள்
முகத்தியர் முதலினோரை

யெல்லாம் அநுமன் பார்த்துக் செல்கின்றான்.

குழலும் வீணையும் யாழும் என்றினையன
[குழைய,
மழலை மென்மொழி கிளிக்கிருந்தளிக்
[கின்றமகளிர்,
சுழலும் நன்னெடுந் தடமணிச் சுவர்தொ
[றும் துவன்றும்
நிழலும் தம்மையும் மெய்ம்மை கின்றறி
[வருகிலைய.

விளரிச் சொல்லியர் வாயினால் வேலையுள்
[மிடைந்த
பளைக்காடெனப் பொலிந்தது; படை
[நெடுங்கண்ணால்

குவளைக்கோட்டகம் கடுத்தது; குளிர்
[முகக் குழுவால்
முளரிக்கானகமானது மூரி நீரிலங்கை.

போரரக்கியருள் ஒரு சாரார் விகாரமான தோற்றம் வாய்ந்தவரேனினும், பெரும்பாலார் அழகு சுமந்த புறத்தோற்றம் வாய்ந்தவராகவே வருணிக்கப்பெறுகின்றனர். ஆனால் இவர்கள் அயோத்திமாதர்களைப்போல் அறிவால், ஒழுக்கத்தால் 'அக-அழகு' வாய்ந்தவரென்று கவி கூறுகின்றாரில்லை. மிதிலை மாதரைப்போல் இவர்கள் இயற்கையோடிசைந்த இன்பவாழ்வு வாழ்வதாகவும் காணப்படவில்லை. இலங்கையிலுள்ள ஆண்களைப்போலவே பெண்களும் செயற்கை யின்பங்களிலும் போகங்களிலும் ஆழ்ந்து மூழ்கிவிடுகின்றனர். இலங்கை வாசிகள் தம்பெண்மக்களைக் கேவலம் பேரழகு வாய்ந்த பொம்மைகளாகவும் போகத்திற்கின்றியமையாத பொருள்களாகவுமே கருதுகின்றனர்.

அஞ்சொல் இளமஞ்ஞை என
அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென
வஞ்ச மகள் வந்தாள்.

என்றுகவி இராவணன்தங்கையைக்குறித்துச்சிறப்பாகக்கூறுவதுபோதுவாக இலங்கை யரக்கியர் அனைவர்க்கும் ஒருவேளை பொருந்தலாமோ என்று ஐயுறுகின்றேன். புறத் தோற்றம் அமுதமாகவும் அகத்தோற்றம் நஞ்சமாகவும் அமைவதற்குக் காரணம் மெய்யறிவின் பயனாகிய நல்லொழுக்கம் இன்மையே ஆதல்வேண்டும். இங்ஙனம் பெண்மையாகிய அமிர்தகலசத்தில் நஞ்சைக் கக்குவோர், போகத்தையே புருஷார்த்தமாகக் கொள்ளும் 'நஞ்சினும் கொடிய' ஆடவரே யாவர். 'வல்லியல் மறவ' ராண



ஆடவர் தாமும் கெடுத் தம்மையே நம்பிவாழும் மெல்லியலாரையும் கெடுத்துவிடுகின்றனர். பெண்மையின் பெருமை அழிவதால்ஒருசமுதாயத்தின் பெருமையே அழிந்துவிடும் என்பது உண்மையன்றோ? போகத்தால் ஆண்மக்கள் தம் ஒழுக்கத்தை இழந்து விடுவதுபோலவே, பெண்மக்களும் தமது பெண்மையினை இழந்துவிடுவது இயல்பு. இங்ஙனம் பெண்மையின் பெருமையினைப் பறிகொடுத்த அரக்கியரை 'நாணில் அரக்கியர்' (சூளாமணிப்படலம்) என்று சீதை குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

இலங்கையின் வீழ்ச்சிக்கு முதற் காரணமான போகம் ஆண்மக்களைப் பற்றிக் கொண்டதோடு அமையாது பெண்மையிலும் வேரூன்றிப் படர்வதாயிற்று. ஒரு சமுதாயத்தை—ஒரு நாட்டை—ஒரு இராஜ்யத்தை ஆக்குவோரும் பெண்மக்கள்; அழிப்போரும் பெண்மக்களே.

நீலமாமணி நிற நிருதர் வேந்தனை
மூலநாசம் பெறமுடிக்கும் மொய்ம்பினள்;
மேலைநாள் உயிரொடும் பிறந்து தான் விளை
காலம் ஓர்ந்துஉடன் உறைகடியநோயனள்.

இலங்கையர் கோனை மூலநாசம் பெற முடித்தவள், அவன் உடன் பிறந்த கொடிய காலநோய்போன்ற அரக்கி யென்று கவி கூறுகின்றார். நம் சகோதரிகளாகவும் காதலிகளாகவும் தாய்மாராகவும் இருந்து நம்மை உயர்த்துவோரும் தாழ்த்துவோரும் பெண் மக்களன்றோ?

பளிக்கு மாளிகைத் தலந்தொறும்,
இடந்தொறும், பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண்நறும்
சோலைகள் தோறும்,

அளிக்கும் தேறல் உண்டு
ஆடுநர் பாடுநராகிக்
களிக்கின்றாலால் கவல்கின்றார்
ஒருவரைக்காணேன்.

பணியாளர் கொணர்ந்து தரும் மதுவகைகளை அருந்தி ஆடிப்பாடி வெறிகொண்டு மகிழ்ந்திருந்த அரக்கியரையும் அரக்கரையும் அநுமன் கண்ணுற்றான். வாழ்க்கையை ஓர் கல்விச் சாலையாகக்கருதி வாழ்ந்தவர் அயோத்தி மாந்தர். வாழ்க்கையை ஓர் களிக்கூத்தாகக் கருதுவோர் இலங்கைமாக்கள். போகத்தின் உறையுளாகிய இலங்கைமாநகரில் 'களிக்கின்றார்' அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்' என்று 'ஊர்தேடி' வரும் அநுமன் கருதுகின்றான். கவலை தோய்ந்த முகம் ஒன்றும் இலங்கையில் இல்லை.

நான நாண்மலர்க் கற்பக நறுவிரை நான்ற
பானம் வாயுற, வெறுத்த தாள் ஆறுடைப்
[பறவை
தேனவா விரைச் செழுங்கழு நீர்த்துயில்
[செய்ய,
வானயாறுதம் ஆரமியத்தலந்தொறு மடுப்ப.

கற்பக மலரினின்று பொழியும் அமிதமானமதுவினைப் பானஞ்செய்துவெறுத்தவண்டு, செங்கழுநீர் மலரின்மதுவையும் உண்டு, இருவேறுவகையான மதுபானத்தால் மயங்கிஉறங்கிக்கிடக்கின்றதென்று ஊர்தேடு படலத்தின் முகப்பில் கவி வருணிக்கின்றார். இத்தகைய வண்டு, பலவேறு போகவகைகளையும் நுகர்ந்து மதிமயங்கிமதங்கொண்டுமெய்மறந்து கிடக்கும் அரக்கர்களுக்கு உபலட்சணமன்றோ? இலங்கையில் போகத்தால் மக்களும் மாக்களாகி விலங்குகளாகின்றனர். விலங்குகளும் மக்களைப்போலவே போகத்தில் அமிழ்ந்துகிடப்பதாகக் கவி கூறுகின்றார்.

· இராவணனது அகழிவருணனை யைப் பாருங்கள்.

உன்னுநாரை மகன்றில் புதாவுரில்
அன்னம் கோழிவண்டானங்களாழிப்புள்
பின்னரம் குரண்டம் கிலுக்கஞ் சிரல்
சென்னகாகம் குணலம் சிலம்புமே.

அகழிநீரில் வாழும் பறவைகளாகிய பிராணிகளும் களித்துச் செருக்கிக் கலகலவென்று சிலம்பிக்கொண்டிருக்கின்றன.

வலத்த மாதர் நறையகில் நாவியும்
அலத்தகக் குழம்பும் செறிந்தாடிய
இலக்கணக்கரியோடு இளமென்னடைக்
குலப்பிடிக்கும் ஓர் ஊடல் கொடுக்குமால்

இலங்கை மாநகரது மிதமின்றிய போகப் பொருள்கள் செறிந்திருந்ததால், அகழிநீரில் ஆடிச்சென்ற ஆண்யானை யோடு பெண்யானை ஊடல் கொண்டதாம். இலங்கையில் போகத்தின் வசீகரசக்தி மக்களோடு மிருகங்களையும் பறவைகளையுங்கூட வசீகரித்துவிடுகின்றது. மக்கள், விலங்குகள் பறவைகளோடொப்ப ஒருங்கே களிக்கின்றார். 'களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக்காணேன்" என்ற அனுமன் கூற்று இலங்கையின் நிலையைச் சுருக்கக்கூறி விளங்கவைக்கின்றது. இலங்கைவாசிகளான அரக்கர் தம்வாழ்க்கையை ஓர் 'களியாடலா'கவே கழிக்கின்றார். அரக்கர் களிப்பு மிகுக உலகத்தையும் தழுவுகின்றது; பறவையுலகத்திலும் சென்று சேர்கின்றது. இம்மட்டோ! இலங்கையில் இயற்கையும் களித்து விளையாடுகின்றது.

முதலாவது, மாலை வேளையில் மங்கிவரும் கதிரொளியின் மனோஹரமான வர்ண விசித்திரங்களில்—மூழ்கிக்களிக்கும் இலங்கையை அனுமன் கண்ணுற்றான். பிறகு பொங்கியெழும் நிலவொளியின் அமுத வெள்ளத்தில் நீந்திக் களித்து விளையாடும் இலங்கையைக் கண்டான். அப்பால் அவ்வெண்ணிலவின் தண்ணொளியிலே,

பளிங்கு செற்றிக் குயிற்றிய பாலொளி
விளிம்பும் வெள்ளமும் மெய்தெரியாது
மிளிரும் அகழியினைக் கண்டான்.

நீலமே முதல் நன்மணி நித்திலம்
மேலைமே பல்வேறொளி வீசலால்,
பாலின் வேலைமுதல் பல வேலையும்
கால்கலந்தனவோ எனக்காட்டுமே.

இங்ஙனம் களிப்பின்மேல் களிப்பாக அலைபெறிந்து பொங்கிப்பரந்து வரம்பின்றி விரிந்துபரும் போக சமுத்திரத்தின் உச்சியிலெழுந்த ஓர் இன்பத்தீவாகக் கவி இலங்கையைச் சித்திரிக்கின்றார். இலங்கையில் அரக்கர்க்கும் இயற்கைக்கும் தான் எவ்வளவு பொருத்தம்—என்ன உறவு! காண்பதெலாம் இன்பம்; காண்பதெலாம் களிப்பு. 'சோகத்தாளாய நங்கை'யை அனுமன் எங்கே காண்பது? எவ்வாறு காண்பது? அனுமன் கானும் இயற்கைப் பொருள்களும் இன்பவடிவாயிலங்கி, களிக்கின்ற அரக்கரோடு களித்து உறவாடுகின்றன. சிறைவாசஞ் செய்யும் சீதைபால், ஈரமிலா அகத்தினரான அரக்கர்க்குத் தான் இரக்கமில்லை. இயற்கைக்குங் கூட இரக்கமில்லையா? இவ்வாறு சிந்தித்த அனுமன் அகழியின் துறைகள் தோறும் கூம்பிக் குவிந்திருக்கும் இனிய செந்தாமரை மலர்களைக் கண்டான்.

நறவு நாறிய நான் நறும் தாமரை
துறைகள் தோறும் முகிழ்த்தன தோன்று
[மால்;
சிறையின் எய்திய செல்வி முகத்திேைடு
உறவுதாம் உடையார் ஒடுங்கார்களோ?



கம்பசித்திரமாகிய போகபூமிக்குப் பொருத்தமாகவே இயற்கைப்பொருள்களெல்லாம் இலங்கையின்கண் அழகுபெற அமைந்து விளங்குகின்றன. அனுமன் 'ஊர்தேடி' வருகையில், வழக்கம்போல் இலங்கை முழுமையும் போகத்தில் கவலையின்றி மூழ்கிக்களிக்கின்றது. ஆனால் சிறைவாசம் செய்யும் திருமகளின் மலர்முகத்தோடு உறவு பூண்ட செந்தாமரை மாத்திரம் மலர்ச்சியின்றி—மகிழ்ச்சியின்றி—முகிழ்த்து (குவிந்து) ஒடுங்கி நிற்கின்றது! 'களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்!' என்று கலங்கிய அனுமனுள்ளம், அவ் இரவில் செந்தாமரை மலர்களைக் கண்டதும்,

சிறையின் எய்திய செல்வி முகத்திேைடு
உறவுதாம் உடையார் ஒடுங்கார்களோ?

என்று ஒருவாறு தெளிகின்றது. கம்பர் எவ்வளவு சாமர்த்தியமாக, போகபூமியின் வர்ணனைகளுக்கிடையே வாசகர்களுக்குச் சிறைபுகுந்த செல்வியின் நினைவை உண்டாக்குகின்றார்! பாருங்கள். சுந்தரகாண்டத்தின் முதற்பாட்டில் 'காண்தகுகொள்கை' யென்றுகூறி, அனுமனது லட்சியம் சீதையைத்தேடிக் காண்பதேயாம் என்பதைக் குறிப்பிடுகின்றார். அப்பால், முதல்படலமாகிய 'கடல்தாவு படல'த்தில் குறிப்பாகவேனும் வெளிப்படையாகவேனும் பிராட்டியைக்குறித்த பிரஸ்தாபமேயில்லை. இலங்கை வருணனையோடு ஊர்தேடு படலம் தொடங்குகின்றது. இப்படலத்தின் தொடக்கத்திலேயே இலங்கையின் சித்திரம் நம் கண்ணுங் கருத்தும் ஒருங்கே கூசும்படி ஒளிவீசி மிளிர்கின்றது. படிப்படியாக இது புதிய புதிய வண்ணமும் வனப்பும் பெற்று வாசகரது உள்ளத்தையே படச்சீலையாகக் கொண்டு வளர்ந்து விரிகின்றது.

இலங்கையின் காட்சி அழகிலே அனுமன் மனம் ஈடுபடுவதுபோல் வாசகர் மனமும்ஈடுபடுகின்றது. அனுமன் மனம் மயங்குவது போல வாசகர் மனமும் மயங்கிவிடுகின்றது. இலங்கையின் காட்சியின்பத்தை அனுமனைப் போலவே நாமும் ஆர்வத்தோடு பருகுகின்றோம். அரக்கர் பெருமையும் தேவர் சிறுமையும் அனுமனுக்குக் கட்புலனாவதுபோல் நமக்கும் கட்புலனாகின்றன. இங்ஙனம், அறம்புகாத அரக்கர் பேரூரிலே அனுமனோடு நாமும் எவ்விதமாகவோ 'புகைபுகாவாயிலும்' புகுந்து பார்க்கும் பேறுபெறுகின்றோம். எங்கே பார்த்தாலும் களி யாடல்கள்! அரக்கரது ஆடம்பர வைபவங்கள்! இத்தகைய கோலாகலங்களுக்கு இடையே கவி அதியுசிதமாக நமக்குச் சீதையின் சிறைவாசத்தை நினைவூட்டுகின்றார். அஸ்தமன சூரியனது ஒளிமறைந்து வெண்ணிலவின் குளிர்முகம் ஒளிசெய்து திகழுமுன், இலங்கையை இராவணனது, தீவினைபோல இருள் சூழ்கின்றது. இப்போதுதான் கவி முதலாவது சிறைபுகுந்த செல்வியை நமது ஞாபகத்திற்குக் கொணர்கின்றார்.

வண்மை நீங்கா நெடுமரபின் வந்த அப்
பெண்மை நீங்காதகற்புடையபேதையைத்
திண்மை நீங்காதவன் சிறைவைத்தான்
[எனும்
வெண்மை நீங்கிய புகழ்விரிந்த தென்ன
[வே.

ஜனககுல சுந்தரி—இராகவன் இன்னுயிர்—பெண்மையின்போரசு—'கற்பின்கனலி'யை இராவணன் சிறை

வைத்தான். ஆண்மக்களுக்கு அவன் இழைத்த அநீதியினும் இத்தகைய பெண்தெய்வத்திற்கு இழைக்கும் அநியாயமே கொடும்பழியாக விளைந்து அவனது புகழினை முற்றிலும் இருளடையச் செய்கின்றது. இராவணன் தன் மிருகபலத்தை நம்பியே இத்தகைய கொடுமையைத் துணிந்து செய்கின்றான். 'திண்மையே உண்மை' (Might is Right) யெனக்கொண்டு இரக்கமிலா அரக்கர் கோன் இழைக்கும் தீவினைபோல இருள் இலங்கையைச் சூழ்ந்து திரையிடுகின்றது என்று கவி சமயோசிதமாக வர்ணிக்கின்றார்.

மீண்டும் நிலவொளியில் இலங்கையின் பேரழகு நம்மை வசீகரித்துவிடுகின்றது. மீண்டும் அனுமனோடு வியந்து செயல் மறந்து மயங்குகின்றோம். 'களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக்காணேம்' என்று அனுமனோடு கவன்றுவரும் நமக்கு அக்கழியின் துறைகளில் மறைந்து குவிந்திருக்கும் செந்தாமரையே சிறையில் மறைந்து ஒடுங்கிவருந்தும் சீதையின் திருமுகத்தைத் திருப்பவும் நம் நினைவிற்குக்கொண்டுவருகின்றது. சீதாபிராட்டி சிறைவைக்கப்பட்ட காரணத்தால் அரக்கர்கோன் புகழ் இருளடைந்ததுபோல, இலங்கையில் இருள் அடர்ந்தது என்று முதலில் உவமித்தும், அப்பால் சிறைவைக்கப்பட்டது காரணமாகவேசீதையின் திருமுகம் ஒடுங்கியபோது அத்திருமுகத்துக்கு உறவினமாதலால் செந்தாமரை மலர்கள் தாமும் இயல்பாகவே ஒடுங்கின வென்று கற்பித்தும், இரண்டு சந்தர்ப்பங்களில் போகபூமியின்களியாடல்களுக் கிடையே 'சிறையின் எய்திய செல்வி'யை நமக்கு கவி வெகுசாமர்த்தியமாக அதியுசிதமாக, ஞாபகப்படுத்துகின்றார். இதனை நாம் மறந்துவிடலாகாது. இதனால் கம்பசித்திரத்தின் பகிரங்க இரகசியம் ஒன்று நமக்கு இனிது புலனாகும்.

அயோத்தி மாந்தரும் இன்பத்தை நாடுகின்றார். மிதிலைமாந்தரும் இன்பத்தை நாடுகின்றார். இலங்கைமாந்தரும் இன்பத்தையே நாடுகின்றார். எனினும் இம்மூன்றுவகை இன்பங்களுக்குள்ளும் வித்தியாசங்களிருக்கின்றன; வித்தியாசங்கள் இருக்கவேண்டியதும் அவசியமேயாகும். அயோத்தி கம்பரது ஞானபூமி—லட்சியபூமி; மிதிலை காதலின் பூங்காவனம்; இலங்கை போகத்தின் தனியுறையுள். இவ்வாறு கம்பராமாயணத்தில் மூன்று நகரங்களும் சித்திரிக்கப் பெறுகின்றன. ஞானபூமியான அயோத்திவாசிகளது இன்பம் கல்வியால்வரும் இன்பம்; கேள்வியால் பெருகும் இன்பம்; ஒழுக்கத்தால் நிறையும்இன்பம்; அறத்தால்விளையும் இன்பம்; அன்பிலே ஊறித்ததும்பும் பேரின்பம். அறிவைப் பெருக்கி, அன்பைப் பெருக்கி, அருள்விளைத்து அறம்வளர்த்து நல்வழியிலே துய்க்கும்மெய்யின்பமே அயோத்திமாந்தர் பொன்போல் போற்றும் வாழ்க்கையின்பமாகும்.

ஏகம் முதல்கல்வி முளைத்தெழுந்து
[எண்ணில் கேள்வி
ஆகும் முதல் திண்பணை போக்கி அருந்
[தவத்தின்
சாகம் தழைத்து அன்பு அரும்பித்
[தருமம் மலர்ந்து
போகம் கனியொன்று பழுத்தது போலு
[மன்றே

கல்வியறிவாகியகற்பகத்தருவின் கொம்பிலே கனிந்த கனியாகிய போகத்தை அயோத்திமக்கள் உண்டு இன்புறுகின்றார். இது மண்ணுலகில் மக்கள் அடையத்தக்க பெரும்பேரின்பம் அன்றோ? இத்தகைய நல்லின்பம் வேறு; அருளும் நீதியும் குடிபுகா நெஞ்சினரான இலங்கையரக்கர்களின் போக இன்பம்வேறு. அயோத்தி மக்கள் சிறந்த நல்லறிவும் நல்லறமும் வளர்த்துத் துய்க்கும் இன்பவாழ்வோடு, இலங்கை மாக்கள் 'களித்துப்புன்தொழில்'மேல் நின்று 'மன்னுயிர் புடைத்துத்தின்று' பெறும் போகவாழ்வை ஒப்பிட்டுப் பாருங்கள்,

இராவணனுதிய அரக்கர்க்குப் பொருட்செல்வத்தைப் போலவே அறிவுச்செல்வமும், ஆசையைப் பெருக்குவதற்கும், பகைத்தீயை உலகமெங்கணும் மூட்டுவதற்கும் அறத்தை அழிப்பதற்கும், 'வழியிலா வழிமேற்சென்று' போகம் துய்ப்பதற்குமே பெருந்துணையாகின்றது. வஞ்சமும் வலிமையும் களவும் கொலையும் புலையும் பொய்யுமே தம்முட்கலந்து அரக்கர் நாகரிகமென்னும் போர்வை போர்த்து இலங்கையில் களிநடம்புரிகின்றன. மறமே அன்னர் தம் அறமாகவும், வலிமையே உரிமையாகவும், காமமே காதலாகவும்,போகமே வாணாளின் பேரின்பமாகவும் காணப்படுகின்றன.

அயோத்தி அறப்பெருங்கோயில்; மிதிலை காதலின் சிங்காரப் பூங்காவனம்; இலங்கை சுழிபட்டோடும்போகக்கடலின் உச்சிமீது மலர்ந்த இன்பத்தீவு. இவ்வாறு கம்பரால் இராமாயணத்தின் மூன்று முக்கிய நகரங்களும் சித்திரிக்கப் பெறுகின்றன. ஆனால் இலங்கை ஏன் போகபூமியாக வருணிக்கப் பெறுகின்றது? ஞானமூர்த்தியாகிய கதாநாயகனது பிறப்பகத்தை,நம்கவி ஞானபூமியாக—இராமராஜ்யமாக (Ideal state; Utopia)—ப்படைக்கின்றார். தலைவனும் தலைவியும் கருத்தொருமித்துக் கண்ணால் காதலையேற்கும் களமாகிய மிதிலையைக் காதலின் பூங்காவனமாகச் சிங்காரிக்கின்றார். இங்ஙனம் அதியுசிதமான கவிச் சிற்பத்திறமையோடு அயோத்திமாநகரையும் மிதிலைமாநகரையும் சித்திரித்த கம்பர், இலங்கைமாநகரை அதிகார ஆடம்பர வைபவங்கள் நிறைந்த ஒரு பெரும்போக பூமியாகக் கற்பிப்பதற்குக் காரணம் என்னை? இந்தக் கம்ப சித்திரத்தின் மர்மம் யாது?

'சிறையின் எய்திய செல்வி'யின் சித்திரமன்றோ, கம்பர் சுந்தரகாண்டத்திலே எழுதத் துணிகின்றார்? இத்தகைய சித்திரத்தை இனிது சித்திரிப்பதற்கு, நம் தெய்வக் கவிச்சிற்பி 'சித்திரநகர'மான இலங்கையை ஒரு 'பகைப்புலமாக' (=பாபகம்; Background) க்கொள்ளுகின்றார். 'சோகத்தாளாய நங்கை'(The Woman of sorrows) யின் சித்திரத்தை—'சிறையிருந்தவள் ஏற்ற'த்தை — எடுத்துக்காட்டுவதற்கு ஏற்ற 'பகைப்புல'மாக (Background) அமைவது போகபூமியாகிய இலங்கையன்றோ? இதுதான்கம்பரது இலங்கையின் இரகசியம். இத்தகைய சித்திரத்திலன்றோ, சிறைபுகுந்து தவம்கிடக்கும் செல்வம் 'தவஞ்செய்ததவமாந்தையலா'க உருவெடுத்து விளங்குகின்றது (திருவடி தொழுதபடலம்,பாட்டு கூசு)! சோகக்கடலுள் தோன்றும் அமுதினுக்கு (திருவடிதொழுதபடலம் கூஅ) உருவும் நிறமும் தருவதற்கு, போகக்கடலின் உச்சிமீதிலங்கும் இன்பத்தீவாகிய இலங்கையே சரியான 'பகைப்புலம்' என்று கவிச்சிற்பத்திறமையில் கைதேர்ந்த கவிநாதன் கருதுகின்றார். ஆதலால் அவர் இலங்கையை ஒப்புயர்விலாததோர் போகநிலமாசப் படைத்துக் காட்டுகின்றார்.

முற்றிற்று.

# "பாடியவாய் தேனூறும் பாரதியார் பாடல்"

அனைவர்க்கும் எளிதில் பொருள் விளங்கக் கூடிய நடையில், கள்ளமிலா வெள்ளைச் சொற்களால் அமைந்துள்ள இனிய பாடல்களும், காலத்துக்கேற்ற புதிய புதிய கோலம் பூண்டுவரும் அழகிய காவியங்களும் தமிழில் இல்லை யென்று பலரும் குறைகூறுவதை நாம் பன்முறையும் கேட்டிருக்கின்றோம். இத்தகைய கவிதைகளும் காவியங்களுமே தாய்மொழிக்குப் புதிய உயிர்தருகின்றன. பழைய இலக்கியத்திற்கும் புதிய தமிழ் மக்களுக்கும் பாலம் அமைத்தல் இன்றியமையாதது. இத்தகைய பாலமே நவீன இலக்கியமாகும். இத்தகைய பாலமின்றி, நமது மக்கள்வாழ்விற்கும் இலக்கியத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாமல் போய்விடும் என்பது திண்ணம். இங்ஙனம் பண்டைப் பழம்பெருமையோடு நம் புது வாழ்வை இணைக்கமுயன்ற பெரியார் இருவருள் பாரதியார் ஒருவராவர்.

பாரதியார் ஓர் உண்மையான தமிழ்க்கவி. 'காரிகை கற்றுக் கவிபாடுவதினும் பேரிகைகொட்டிப் பிழைப்பது நன்று' என்னும் தமிழ் நாட்டுப் பழமொழியின் தத்துவத்தை நன்குணர்ந்தவர் பாரதியார். 'உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின், வாக்கினிலே ஒளியுண்டாகும்' என்பது இக்கவிதம் சொந்த அனுபவத்தால் கண்டறிந்த உண்மையேயாகும். 'தமிழர்மறந்தாலும் தமிழ்மறவாத இப்புலவர்பெருமான்' தமிழ்நாட்டு ரவீந்திரராவர். இவர் வங்கநாட்டுப்புலவர் திலகம்போல் ஆழ்ந்தகன்ற பாண்டித்தியம்வாய்ந்தவரல்லர். எனினும் கவிதையழகில், இவரது அருட்கவிகள் ரவீந்திரரின் பாடல்களுக்குச் சிறிதும் இளைத்துக் காணப்படுவன அல்ல. "பண்டொருநாள், கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகருணனும்— தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?" என்று ஆண்டாள் அருளிய வண்ணம், பேருறக்கத்தில் கும்பகருணனையும் வென்று பேச்சுமூச்சின்றி அசையாது கிடந்த தமிழகத்தைத் தம் கவிமுழக்கத்தால் தட்டியெழுப்பிய பெருமை நம் செந்தமிழ்க் கவிச்சிங்கமான பாரதிக்கே யுரியது. இத்தகைய கவிச்சிங்கத்தை இனிது போற்றாது, கொன்ற 'பெருமை'யும் தமிழ்நாட்டிற்கே யுரியதாகும். பாரதியார் பாடல்களில் சில, 'கல்லைப்பிசைந்து கனியாக்கி'த் தேசபக்தி வெள்ளத்தே அழுத்தும் ஆற்றல் வாய்ந்தன. சில, வற்றிப்புலர்ந்த தோல்களுக்கும் என்புக்கூடுகளுக்கும் இன்னுயிர் அளிப்பன. இன்னும்சில, வறண்டயர்ந்த இதயங்களுக்கு உணர்வெனும் அமுதம் ஊட்டி, பாலைவனமும் பசுஞ்சுடர்ச்சோலையாகப்பொலியும்வண்ணம் அற்புதம் விளைப்பன.

பண்டைத் தமிழிலக்கியம், பண்டைத் தமிழர் பெருவாழ்வைப் பிரதிபலிக்கும் நிலைக்கண்ணாடியாக அமைந்து விளங்குகின்றது. தமிழர் புதுவாழ்வின் துறைகளையும் புதிய கனவுகளையும் லட்சியங்களையும், 'அடுத்தது காட்டும் பளிங்குபோல்' ஒருவாறு எடுத்துக்காட்டும் புதிய கவிகளைப்பாடியவர் பாரதியாரே யாவர்.

'கண்ணம்மா—என் குழந்தை'யென்னும் பாட்டு, ஓரரிய கவி-மாணிக்கமாகும். இத்தகைய பாட்டு நம் புதிய தமிழிலக்கியத்தில் 'மலடி வயிற்று மகன்போலே' தோன்றிய ஓர் அருங்குழவியே. இது 'பேசும் பொற்சித்திர'ங்களான குழந்தைகளின் மலர்வாய்ப் பிறந்த மழலை-மென்மொழிபோல் தெவிட்டாது தித்திக்கின்றது. இப்பாட்டில் மலரில் மணம்போல், மணியில் ஒளிபோல், கவிதையழகோடுபண்ணழகும் கலந்து பரிமளிக்கின்றது.

# கண்ணம்மா—என் குழந்தை

சின்னஞ் சிறு கிளியே—கண்ணம்மா
    செல்வக் களஞ்சியமே!
என்னைக் கலிதீர்த்தே—உலகில்
    ஏற்றம் புரிய வந்தாய்.

பிள்ளைக் கனியமுதே—கண்ணம்மா
    பேசும் பொற் சித்திரமே!
அள்ளி யணைத்திடவே—என் முன்னே
    ஆடி வருந் தேனே!

ஓடி வருகையிலே—கண்ணம்மா
    உள்ளங் குளிருதடீ
ஆடித்திரிதல் கண்டால்—உன்னைப்போய்
    ஆவி தழுவு தடீ.

உச்சிதனை முகந்தால்—கருவம்
    ஓங்கி வளருதடீ
மெச்சி யுனை யூரார்—புகழ்ந்தால்
    மேனி சிலிர்க்குதடீ.

கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
    கள் வெறி கொள்ளுதடீ
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா
    உன்மத்த மாகுதடீ.

சற்றுன் முகஞ் சிவந்தால்—மனது
    சஞ்சல மாகுதடீ
நெற்றி சுருங்கக் கண்டால்—எனக்கு
    நெஞ்சம் பதைக்குதடீ.

உன் கண்ணில் நீர் வழிந்தால்—என்னெஞ்சில்
    உதிரங் கொட்டுதடீ
என் கண்ணிற் பாவையன்றோ?—கண்ணம்மா
    என்னுயிர் நின்ன தன்றோ?

சொல்லு மழலையிலே—கண்ணம்மா
    துன்பங்கள் தீர்த்திடுவாய்
முல்லைச் சிரிப்பாலே—எனது
    மூர்க்கந் தவிர்த்திடுவாய்.

இன்பக் கதைக ளெல்லாம்—உன்னைப்போல்
    ஏடுகள் சொல்வ துண்டோ?
அன்பு தருவதிலே—உனை நேர்
    ஆகுமோர் தெய்வ முண்டோ?

மார்பி லணிவதற்கே—உன்னைப்போல்
    வைர மணிக ளுண்டோ?
சீர் பெற்று வாழ்வதற்கே—உன்னைப்போல்
    செல்வம் பிறிது முண்டோ?

# கவியின்பமே இன்பம்.

உண்மைக் கவிகள் அருள் சுரந்தளிக்கும் இன்பமே, நமது வாழ்க்கையில் நாம் அனுபவிக்கும் ஒப்பற்ற இன்பமாகும். 'இறைவன் கழல் ஏத்தும் இன்பம் இன்பமே'—'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே' —என்று பேரன்பினரான பக்தர் கூறுகின்றார். கவியின்பமே பேரின்பமென்றும், செவிச்செல்வமான கவிச்செல்வமே பெருஞ் செல்வமென்றும், பேரறிவாளரும் ஆராய்ச்சியாளருமான 'ரசிகர்' கருதுகின்றார். குழந்தைகள் கனியை விரும்புகின்றன; கற்கண்டை விரும்புகின்றன. அவ்வண்ணமே குழந்தை—மதிவாய்ந்த பாமரரும், இராஜபோகத்தில் இன்பமிருக்கின்றது — தேவபோகத்தில் இன்பம் விளைகின்றது—என வீண் கனவுகாண்கின்றார். கல்வியறிவு வாய்ந்த பெரியோர்களோ, முடியுடை மன்னர் வீரசிங்காதனத்திலும் இன்பம் வீற்றிருக்கவில்லை —நாவினுக்கு இன்சுவையூட்டி உடம்பினைத் தடிப்பேறவளர்க்கும் தேவாமிர்தத்திலும் தெவிட்டாத இன்பமில்லை—என்னும் உண்மையினை நன்குணர்ந்தோராவர். ஆகவே 'கவிதையிற்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே!' என நல்லறிஞர், கவிதையழகைப் புகழ்ந்து போற்றுகின்றார். உண்மைக் கவிதை யழகு என்றும் வாடாது, என்றும் இளமையாகவே வளமுற்று மிளிர்கின்றது. உண்மைக் கவியொளி, என்றும் மங்குவதில்லை; உண்மைக் கவியின்பம், என்றும் குன்றுவதில்லை. 'அறியுந்தோறும் அறியுந் தோறும் நாம் அறியாமையினையே காண்கின்றோம்' என்று காதலின்பத்தின் அற்புதப் பெருமையினை வள்ளுவர் அருணிக்கின்றார். இவ்வண்ணமே நாம் கவி இன்பத்தையும் சுவைக்குந்தோறும் சுவைக்குந்தோறும் முன்னறியாதபுதிய புதிய இன்பங்களைக் காண்கின்றோம்.பாடுந்தோறும் பாடுந்தோறும் நாம் முன்னறியாத புத்தமுதபோகம் உண்மைக் கவிகளினின்றும் பொங்குகின்றன. இவ் விஷயத்தில் கவியின்பமும் காதலின்பமும் ஒன்றையொன்று ஒத்திருக்கின்றன. இவ் ஒப்புவமையினை நன்குணர்ந்த கம்பர், காதலின்பத்தை முதற்கண் உணரும் சீதையை "செஞ்சொற் கவியின்பம்" என்றேவருணித்துச் செல்கின்றார். உண்மைக்கவியின் சொல்லழகும் பொருளழகும், கட்டழகியான ஓர் இளங்கன்னியின் அகஅழகும்புறத்தோற்றமும் போலத்தம்முள் இசைந்து ஒன்றுபடல் வேண்டும். இங்ஙனம் சொல்லையும் பொருளையும் உடலும் உயிரும்போல இசைவிப்பது இசையாகும்.

திருக்குற்றாலக் குறவஞ்சி யென்னும் குறத்திப்பாட்டு, கற்றார்க்கும் கல்லார்க்கும் ஒருங்கே களிப்பை விளைக்கும் உண்மைக்கவிதையினத்தைச் சேர்ந்ததாகும். 'குறத்திப்பாட்டி'ன் ஆசிரியர் கவியுலகின் பேரசர் கூட்டத்தில் சேர்ந்தவரல்லர். எனினும் புகழேந்திபோன்ற இரண்டாந்தரமான கவிச்செல்வர் வரிசையில் ஒரு கௌரவஸ்தானம் பெறுதற்கு உரியராவர். 'நாட்டுவளம்' கூறும் இப்பாடல்கள், சொல்லழகு, பொருளழகு, பண்ணழகு—இவற்றின் ஒளினிய சின்னஞ்சிறுசெல்வக்களஞ்சியமாக விளங்குகின்றது; இப்பாடல்களைப் பாடிப்பாடிப் பேரின்பமெய்துவோர்க்கே, இப்பாடல்களின் ஒப்பிலா இனிமையும் பேரழகும் புலனாகும். "ஓடக்காண்பது பூம்புனல் வெள்ளம், ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்" "தூங்கக்காண்பது மாம்பழக்கொத்து சுழலக்காண்பது பூந்தயிர்மத்து"— என்பன போன்ற பாக்கள் தமிழ் செவிக்கச் சுவை கொழிக்கும் தண்ணமுதக்கவி வெள்ளமன்றோ.

# குறத்திப் பாட்டு.

நாட்டுவளங் கூறுதல்.

சூழ மேதி யிறங்குந் துறையில் சொரியும் பாலைப்
பருகிய வாளை
கூழை வாசல் பலாவினில் பாயக் கொழும்ப லாக்கனி
வாழையிற் சாய
வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க வருவிருந்துக்
குபசரிப் பார்போல்
தாழை சோறிட வாழை குருத்திடுஞ் சந்த்ர சூடர்தென்
ஆரிய நாடே.

மாத மூன்று மழையுள்ள நாடு, வருஷ மூன்று
விளைவுள்ள நாடு
வேத மூன்றும் பலாவுள்ள நாடு விசேஷ மூன்றுங்
குலாவுள்ள நாடு
போத மூன்று நலஞ்செயு நாடு புவன மூன்றும்
வலஞ்செயும் நாடு
நாத மூன்றுரு வானகுற்றால நாதரு ராரிய
நாடெங்கள் நாடே.

நீங்கக் காண்பது சேர்ந்தவர் பாவம், நெருங்கக் காண்பது
கன்னலிற் செந்நெல்
தூங்கக் காண்பது மாம்பழக் கொத்து, சுழலக் காண்பது
பூந்தயிர் மத்து
வீங்கக் காண்பது மங்கையர் கொங்கை வெடிக்கக் காண்பது
கொல்லையின் முல்லை
ஏங்கக் காண்பது மங்கல பேரிகை ஈச ராரிய
நாடெங்கள் நாடே.

ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம் ஒடுங்கக் காண்பது
யோகிய ருள்ளம்
வாடக் காண்பது மின்னார் மருங்கு வருந்தக் காண்பது
சூலுளை சங்கு
போடக் காண்பது பூமியில் வித்து புலம்பக் காண்பது
கிண்கிணிக் கொத்து
தேடக் காண்பது நல்லறங்கீர்த்தி திருக்குற் றாலர்தென்
ஆரிய நாடே.

# பத்திரிகை ஆராய்ச்சி.

**“ஆங்கில நூலாசிரியர்சம்பாத்திய” த்தைக் குறித்து ‘டெயிலிமெயில்’ பத்திரிகையில் ஒரு நூலாசிரியர் எழுதியுள்ள கட்டுரை, கல்வியறிவு விசேஷமாகப் பரவியுள்ள ஒரு நாகரிக நாட்டில் தம் மூளையால் உழைத்துத் தொழில் புரியும் ஆசிரியரும், கைத்தொழில் முதலான முயற்சிகளில் தலையிட்டுழைக்கும் பிறதொழிலாளர்களைப் போலவே, கௌரவமாகப் பொருள்தேடி இன்பவாழ்க்கை வாழலாம் என்பதை மெய்ப்பிக்கின்றது. இக்கட்டுரையாசிரியர் கூறும் சில விவரங்கள் வருமாறு.**

**நூலாசிரியனது தொழில், செல்வம் அடைவதற்குக் குறுக்குவழியல்ல என்பது உண்மைதான். வியாபாரத்திலும் வக்கீல் தொழிலிலும் வைத்தியத்திலும் சித்திரம் எழுதும் தொழிலிலும், நாடகத் தொழிலிலும் தேர்ச்சிபெற்றவர்கள் மிகவும் ஏராளமாகச் சம்பாதிக்கிறார்கள். எனினும் நூலாசிரியர்களான ஸ்திரீபுருஷர்களுக்கும் தகுந்த சம்பாத்தியம் கிடைக்கிறது என்பதில் ஐயமில்லை. ஏராளமான வாசகர்களும்நாடகம்கண்டுகளிப்போரும் சலனப்படக்காட்சி பார்ப்போரும் ஆசிரியர்களுக்கு ஆதரவளிக்கின்றனர். ஆண்டு ஒன்றுக்கு ௧0,000 பொற்காசுகள் (பவுன்கள்) சம்பாதிக்கும் ஆங்கில கதாசிரியரும் நாடகாசிரியரும் குறைந்தது ஒரு ‘டஜன்’ பேராவது இருக்கின்றனர். ஆண்டு ஒன்றுக்கு ௫000 பொற்காசுகளுக்குமேல் சம்பாதிக்கும் கதாசிரியர்களும் நாடகாசிரியர்களும் வியாசகர்த்தர்களும் ஜீவிய சரித்திரம் எழுதுவோர்களுமாக, நாற்பது பேர்களுக்குமேல் இருக்கிறார்கள். ஆண்டு ஒன்றுக்கு ௧,௨00 முதல் ௨,000 பொற்காசுகள் வரை சம்பாத்தியம், நூற்றுக் கணக்கான நூலாசிரியர்களுக்குக் கிடைக்கின்றது.**

நம் தமிழ் நாட்டிலோ நூலாசிரியர்கள் “கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான்கற்பித்தானு?” என்றும், “அட, கெடுவாய்! பல தொழிலும் இருக்கக்கல்வி, அதிகமென்றே கற்றுவிட்டோம் அறிவில்லாமல்,— திடமுள மோகனம் ஆடக் கழைக்கூத்தாடச் செப்பிடுவித்தைகள் ஆடத் தெரிந்தோமில்லை” என்றும் புலம்பவேண்டிய நிலையில் இருக்கிறார்கள். அறிவுத் தெய்வமும் பொன்னரசியும் சக்களத்தியராகவோ, மாமிமருகியராகவோ வாழ்வதாகக் கருதப்பெறுகின்றனர். இதனால் நூலாசிரியனது தொழிலுக்குரிய கௌரவமே குறைந்து விடுகின்றது. தமிழில் புதிய புதிய நூல்கள் எழுதி வெளியிடுவோர்க்குப் போதுமான ஆதரவு அளிக்கப் பெற்றாலொழிய, தமிழ்நாடு தாய்மொழிவாயிலாக அறிவுச்செல்வம் துய்த்து முன்னேற்றமுறுவது முடியாத காரியமேயாகும்.

* * *

“தற்காலக் கல்வியின் குறை”களைக்குறித்து, இராமநாதபுரம் ஜில்லா, கலெக்டர் திருவாளர் எஸ். வி. இராமமூர்த்தி எம். ஏ. ஐ. ஸி. எஸ். மதுரைக்கல்லூரிமாணவர் சங்கத்தின் ஆரம்ப விழாவில் பொருள்பொதிந்ததோர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர். சொற்பொழிவின் சாராம்சம் வருமாறு.

நம் கிராமவாசிகளில் பெரும்பாலோர் வறுமையிலும் அறியாமையிலும் மூழ்கிக் கிடக்கின்றனர். அவர்களுக்குச் சுகாதாரம் என்பது இன்னதென இன்னும் தெரியவில்லை. இவ் அல்லல்களைக்குறைக்க, இவர்கள் பணத்தைக்கொண்டு கல்விபயின்ற பட்டதாரிகள் ஏதாவது செய்திருக்கின்றனரா? இல்லை. ஏன்? அவர்கள் கற்ற கல்வி அந்நிய நாட்டுக்கல்வி. ஊக்கமும் உற்சாகமும் ஆற்றலும் அளிக்காத கல்வி. முற்கால மாந்தர் கிராமத்தார்களுக்குப் போதித்த கல்வியன்றோ இன்னும் அவர்களிடையே சிற்றொளிசெய்து திகழ்கின்றது? கல்லூரிகளும் சர்வகலாசாலைகளும்கிராமவாசிகளது செலவிலேயேஅமைந்துள்ளன. எனினும் அன்னார் அறிவு எவ்விதத்திலும் வளர்ச்சி பெறுவதற்கு வழியில்லை. பணம் தருவோருக்குச் சிறிதும் கைம்மாறு கிடைக்கவில்லை. இதுஎவ்வளவு பெரிய அநியாயம்! பலவேறு வகுப்பினரும் மொழியினரும் வாழும் இவ் இந்தியா கண்டத்திலே, தேசிய ஒற்றுமைக்கு ஒரே ஒருவழிதான் உண்டு. அதுதான் கல்வி. ஆனால் தற்பொழுது போதிக்கப் பெறும் கல்வி, நம் நாட்டில் ௧00-க்கு ௬-பேர் அறியாத அந்நியமொழி வாயிலாகவே போதிக்கப்பெறுகின்றது. இன்னும் ஆங்கில இலக்கியம், ஐரோப்பிய தத்துவசாஸ்திரம், சரித்திரம், ஆதியவற்றுள் பயிற்சி பெற்றுள்ளவர்களே, தமிழ்மொழி வடமொழிப் பயிற்சி பெற்ற பண்டிதர்களைப்பார்க்கிலும் விசேஷ மதிப்பும் ஆதிக்கமும் பெறுகின்றனர். இத்தகைய கல்விமுறைகளே நாட்டிலுள்ள வேற்றுமைகளை வளர்க்கின்றன. தாய்மொழிவாயிலாக நாட்டுக்கல்வி கற்பிக்கப் பெறுமளவும் வரிசெலுத்துவோருக்கு யாதொரு பயனுமில்லை. நம்கலாசாலைகள் அறிவாளிகளை உற்பத்தி செய்வதற்குமாறாக, கூலிக்கு மூளையை உபயோகிக்கும்வித்தையினையேபோதிக்கின்றன. இந்தியாவில் தற்காலக்கல்வி வந்து இத்தனை ஆண்டுகள் கழிந்தும் இன்றுவரை ஒரு காந்தி, ஒருதாசர்,ஒரு போஸ்—இவர்களே வெளிவந்திருப்பது ஆச்சரியமல்லவா என்று ஓர் எகிப்தியர் என்னிடம் கூறினர். உபாத்தியாயர்கள், வழக்கறிஞர்கள் எல்லாம் திரும்பத் திரும்பச் செய்த வேலைகளையே செய்து வருகிறார்கள்; புதிதாக எதுவும் கண்டுபிடிக்க முயற்சிப்பதில்லை. ஆண்டாண்டுதோறும் பட்டதாரிகள் ஏராளமாக வெளிவருகின்றார்கள். ஆனால் உத்தியோகங்களின் எண்ணிக்கையோ அப்படியேதான் இருக்கிறது. இதுதான் வேலையில்லாத் திண்டாட்டத்திற்குக்காரணம்.இதற்கு உபாயம் நாம்நமது பழைய கைத்தொழிலைக் கைக்கொள்வதே யாகும். ஒவ்வொரு பட்டதாரியும் குறைந்தது ௬-மாதமாவது தான்கற்ற கல்வியைக் கிராமங்களில் பரப்பவேண்டும். அப்பால் அவன்மீண்டும் கலாசாலைக்கு வந்து தான் கற்றுக்கொண்டதை எடுத்துரைக்கவேண்டும். இதற்குத்தாய்மொழிவாயிலாக நம் பழக்க வழக்கங்களுக்கு இசைந்த கல்விகற்பிப்பது இன்றியமையாததாகும். இதனாலேதான் இந்தியா தன்லட்சியத்தைஅடைதல் கூடும்.

இது தற்காலக் கல்வியின் சிறந்த நற்பயன்களை அடைந்த ஒரு நல்லறிஞரது அபிப்பிராயமாகும். இவர் இக்கல்வியின் பயன்களைப்போலவே குறைகளையும் நன்குணர்ந்தவராவர். இக்கல்விமுறை நம்நாட்டிற்கு உரியதல்ல. நம்வாழ்விற்கு ஏற்றதல்ல.இங்கிலாந்தில் கடும்பனிக்காக அணிந்துகொள்ளவேண்டிய பாரமான ஆட்டுரோமக் காற்சட்டைகளையும், மேற்சட்டைகளையும் நாமும் காரைக்குடியின் கொடிய வெயிலில் சுமந்துதிரிவது எவ்வளவு அனுவசியம்! எவ்வளவு அறிவீனம்! இங்ஙனம் நமது அறிவீனத்தை நமக்கும் அறிவுறுத்தும் திரு. இராமமூர்த்தியின் பொன்னுரைகளைப் பன்முறையும் படித்துச் சிந்தித்துத் தெளியுமாறு வாசகரை வேண்டுகிறோம்.

# சதங்கை யொலி.

## பழைய இலங்கை.

இலங்கை அனுராதாபுரத்தில் கசுOO தூண்களால் அமைந்த ஓர் அற்புதமாளிகை பாழடைந்துகிடைக்கின்றது. சுமார் உகOO ஆண்டுகட்குமுன் (கி. மு. இரண்டாம் நூற்றாண்டில்) இது கட்டப்பெற்று, பௌத்த சமயத்துறவிகளின் இருப்பிடமாக இருந்ததாம். இது எண்பது மாடங்களும் வாயில்களும் கொண்டுவிளங்கியதாம். ஒவ்வொரு மாடத்திலும் நூறு அறைகள்; அறைகளுக்குத் தங்கம் பூசியகதவுகள். மத்திய கட்டிடத்தில் தங்கத்தால் சூரியனும் வெள்ளியினால் சந்திரனும் வெண்முத்துக்களால் பிறவும் அமைக்கப்பெற்றிருந்தனவாம். துறவிகள் உறைவிடம் இது எனின், பிரபுக்கள் மாளிகைகளும் முடிமன்னர் அரண்மனைகளும் அந்நாளில் எவ்வாறு அமைந்திருந்தனவோ? "பொன்கொண்டிழைத்த! மணியைக்கொடு பொதிந்த! — மின்கொண்டமைத்த! வெயிலைக்கொடுசமைத்த! —என்கொண்டியற்றியனத்தெரிகிலாத!" என்று கம்பன் வியந்துகூறும் 'கற்பனை இலங்கை' ஒருவேளை உண்மை இலங்கைதானோ? — என்றுகூட நாம் ஐயங்கொள்ளுகிறோம். இச்சந்தர்ப்பத்தில் 'உண்மை கற்பனையினும் விநோதமானது' (Truth is stranger than Fiction) என்னும் ஆங்கில அறிவுமொழியும் நமது நினைவிற்கு வருகின்றது. அனுராதாபுரத்து அற்புதமாளிகை பழைய நாகரிகத்தின் ஒரு சின்னமாகும். கண்கெட்டவனன்றோ காலன் (Time)! இப்பொழுது இம்மாடங்களெல்லாம் செடிகளும் கொடிகளும் புதர்களும் மூடிக்கிடக்கின்றன.

## பழங்கலைஞரா? — —
## — புத்தகப்பூச்சிகளா?

நமது பழைய நாகரிகம், பழைய இலக்கியம், பழைய சரிதம், இன்னும் ஒழுங்கான நவீன முறையில், சிரத்தையோடும் ஊக்கத்தோடும் ஆராய்ச்சி செய்யப்பெறவில்லை. அன்னியர் அவமதிப்பு ஒருபுறம்; நம்சொந்தமக்களது உற்சாகக்குறைவு மறுபுறம். இவ்விரு பெருங்கற்பாறைகளுக்குமிடையே ஆராய்ச்சி யென்னும் ஓடம் செவ்வையாக ஓட இயலாது இடர்ப்படினும் ஒருவாறு இயங்கிக்கொண்டுதானிருக்கிறது. இதனால் சிறந்த நற்பயன் தரத்தக்க சிற்சில உண்மைகளேனும் மெள்ளமெள்ள வெளிப்பட்டு முகம் காட்டுகின்றன. நடுநின்று பகுத்தறிந்து ஆராயும் அருந்திறனும் பெருந்துணிவும் நம்மவர்க்கில்லையென்று அன்னியர் வீண்பழி சுமத்துகின்றார். இவர் தம்விருப்பமே இத்தகைய எண்ணத்தை எழுப்புகின்றதுபோலும்! தலைச்சங்ககாலம் முதல் தமிழ்மக்களிடத்தில், நல்லனவற்றையும் அல்லனவற்றையும் சீர்தூக்கி ஆராயும் அறிவு நெடுங்காலமாக அமைந்திருந்தது. தமிழ்தந்த தனிமுதலான இறைவனும் உரையிழந்து விழிக்கும்படி 'குற்றம் குற்றமே' என்று கண்டித்துக் கூறிய நக்கீரன் கதை "காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண்" ஆராயும் நம்மவரது உயரிய குறிக்கோளை (லட்சியத்தை) க்குறித்தெழுந்த பழங்கதை யன்றோ? ஆனால் இங்ஙனம் நம்மவர் என்றும் நடுநிலை வழாது ஆராய்ச்சி செய்து வந்திருக்கின்றாரென்று உண்மையாக உறுதி கூறல் முடியாது. பிற்காலத்தெழுந்த 'சூருவளிகளும்' 'சங்கோத்தரவிருத்தி'களும் 'வைரக்குப்பாயங்'களும் 'வீரகண்டாமணி'களும்நம்மக்கள்நல்லறிவைப் புகைத்து ஆராய்ச்சிவிளக்கத்தை அவித்துவிட்டனவன்றோ? தமிழாராய்ச்சியில் ஈடுபட்டுள்ளஒவ்வோர் அறிஞரும்இளைஞரும் இதனை நன்குணர்தல் வேண்டும். ஒருநூலை ஆராயத் தொடங்குகையில் அதைப்பற்றி நெஞ்சில் எவ்விதமான 'சூருவளி'யுமின்றி அமைதியோடும் நடுநிலையோடும் பரிசிலனை செய்து பார்ப்பதாகத் தீர்மானித்தல் வேண்டும். இதற்கு மேலைநாட்டுப் பகுத்தறிவு முறையே இந்நாளில் நமக்கோர் அரிய வழிகாட்டியாக விளங்குகின்றது. இத்தகைய ஆராய்ச்சியாளர், கேவலம் பழம் புத்தகப் பூச்சிகளல்லர். இவர்களே " தொன்று நிகழ்ந்ததனைத்தும்உணர்ந்திடு சூழ்கலைவாணர்" களாவர்...



சிவமயம்.

# குமரன்

" தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார் " —பாரதி.

| சதங்கை ச. | காரைக்குடி, குரோதனவூ ஐப்பசிமீ | மணி எ. |
| --- | --- | --- |

## வணக்கம்.

மஹா சக்தி வாழ்த்து.

விண்டுரைக்க, அறிய, அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை
அண்டகோடிகள் வானில் அமைத்தனை
அவற்றி லெண்ணற்ற வேகம் சமைத்தனை
மண்டலத்தை யணுவணு வாக்கினால்
வருவ தெத்தனை அத்தனை யோசனை
கொண்டதூரம் அவற்றிடை வைத்தனை,
கோலமே நினைக்காளியென் றேத்துவேன்.

நாடு காக்கு மரசன் தனையந்த
நாட்டு ளோர் அரசென்றறிவார், எனில்
பாடு தண்டைக் குழந்தை, தனக்கிதம்
பண்ணும் அப்ப னிவனென் றறிந்திடும்
கோடி யண்டம் இயக்கி அளிக்கும் நின்
கோலம் ஏழை குறித்திடல் ஆகுமோ?
நாடி இச்சிறு பூமியில் காணும் நின்
நலங்க ளேத்திட நல்லருள் செய்கவே.

பரிதி யென்னும் பொருளிடை ஏய்ந்தனை
பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை
கரிய மேகத் திரளெனச் செல்லுவை
காலு மின்னென வந்துயிர் கொல்லுவை
சொரியும் நீரெனப் பல்லுயிர் போற்றுவை
சூழும் வெள்ளம் என உயிர் மாற்றுவை
விரியும் நீள் கடல் என்ன நிறைந்தனை
வெல்க காளி யென தம்மை வெல்கவே. —பாரதி.

# வாலியார் பெருமை.

ஆர். பி. சேதுப்பிள்ளை பி. ஏ. பி. எல்.

வாலியாரது பெருமையும் போராற்றலும் கம்பர் பெருமானது நூலில் கனிந்து இலங்குகின்றன. வடமொழியில் இராமகதை எழுதிய வான்மீகரது கருத்தைத் தழுவி, கம்பர் வாலியை வானரத்தலைவன் என்று கூறினாரேனும், அவ்வீரனது அறிவும் பெருந்தகைமையும் ஆறறிவுபெற்ற மக்களினும் அதிகமாகவே விளங்கக்காணலாம். அவ்வீரன் பேராற்றல் படைத்தவன் என்பதற்குக் கடல் கடைந்து அமுதெடுத்த கதையே போதிய சான்றாகும். அலைகடலைக் கடையும் அருந்தொழிலுக் காற்றாது வானவரும் தானவரும் சலித்து நிற்க, வாலி அக்கடலைக் கடைந்து அமுதெடுத்தான் என்றால், அவ்வீரனது ஆற்றல் அளவிறந்ததென்பது எளிதில் அறியப்படும். இவ்வீரனது ஆற்றலைச் சிறையிருந்த சீதையிடம் அறிவிக்கப் போந்த அனுமான்

'வெற்றியன், தேவர் வேண்ட
வேலையை விலங்கல் மத்தில்
சுற்றிய நாகந்தேய அமுதெழக்
கடைந்த தோளான்

என்று பாராட்டிக்கூறுகின்றான். தன் வீரத்தந்தையாகிய வாலியை இரத்த வெள்ளத்தின் இடையே கண்ட அங்கதன்

மலைகளும் மாவும் மற்றும்
மதியமும் பலவும் தாங்கி
அலைகடல் கடையவேண்டின்
ஆரினிக் கடைவரையா

என்று வருந்திப் புலம்புகின்ற மொழிகளாலும் வாலியின் வலிமை இனிது விளங்கும். அடல் கடந்த தோளையும், கடல் கடைந்த கையையும் உடைய அவ்வீரனது மார்பில் வேலனது வேலும் செல்லாது. காலனும் அவனைக்கண்டு கலங்குவான். கண்ணுதற்பெருமான் வீற்றிருக்கும் கைலயங்கிரியை வேரொடு பறிக்கும் ஆற்றல் வாய்ந்த இலங்கையர்கோனைத் தன் வாலினால் பிணித்து மலைதோறும் தாவிய வீரனது வலிமையைத் திருநெறித்தலைவராய திருஞான சம்பந்தர்

நீலமாமணி நிறத்தரக்கனை
இருபது கரத்தோடு ஒல்க
வாலினாற் கட்டிய வாலியார்
வழிபடமன்னு கோயில்

என்று போற்றிப் புகழ்ந்தார். இவ்வீரன் போர்க்கோலம் பூண்டு கோட்டையினின்றும் கடல்போல முழங்கிக் கொண்டு, கருமேகம் போன்ற திருமேனியோடு, காற்றின் வேகத்தோடு, ஊழித்தீயின் வெம்மையோடு வெளிப்பட்டபோது, அவனது அரும்பெரும் தோற்றத்தைக்கண்ட இராமன், தன் தம்பியை நோக்கி "ஐய!

எவ்வேலை, எம்மேகம், எக்கா
லொடெக்கால வெந்தீ
வெவ்வேறுலகத் திவர்மேனியை
மானுமென்றான்."

அவ்வாறே இலக்குவனும் வாலியைக் கண்ணுற்றான். உள்ளம் உருகினான். தன் முன்பிறந்தானது உயிரை உண்ணுமாறு கொடுங்கூற்றுவனை அழைத்துவந்த சுக்கிரீவனது கொடுமையையும் சிறுமையையும் எண்ணி ஏங்கினான். அந்நிலையைக்கண்டு ஆற்றாது இராமனைநோக்கி, "ஐயனே! அறநெறிதிறம்பா அடாதசெயல் செய்வார்களை ஆதரித்தல் அழகன்று: தன்முன்பிறந்தானைக் கொல்விக்கத் துணிந்த இக்கொடியன், ஏனையோரை என்செய்யான்?" என்று ஏங்கியுரைத்தான்.

ஆற்றாது பின்னும் பகர்வான் அறத்தா [றழுங்கத்
தேற்றாத செய்வார்களைத் தேற்றுதல் [செவ்விதன்றால்
மாற்றானெனத் தம்முனைக் கொல்விய [வந்துநின்றான்
வேற்றோர்கள் திறத்து இவன் தஞ்சமென் [வீர என்றான்.

என்னும் கவியில் இலக்குவனது இனிய மனப்பான்மையைக் காணலாம். இவ்வாற்றால் ஒரு வீரனது பெருமையை மற்றொருவீரனே உணர்வான் என்னும் உண்மை இனிது விளங்குகின்றது. வாலியின் தோற்றத்தைக் கண்ட இராமனது வியப்பும், அவ்வீரன் இறந்துபடுவான் என்று எண்ணிய பொழுது இலக்குவன் உள்ளம் இளகிய தன்மையும் வாலியின் வீரத்திற்குத் தலைசிறந்த சான்றாகும்.

இனி வாலியின் பெருந்தகைமை கம்பர் நூலைக் கற்கும் மனத்தைக் கவர்ந்து விழுங்குகின்றது. இராமனது வடிவத்தைத் தன் கண்களால் காணாது, அவனது பெருமையைக் கேள்வியால் அறிந்திருந்த வாலி அவ்வீரனை அறமே உருவாயமைந்தவன் என்று போற்றியிருந்தான். இம்மனப்பான்மை வாலி தன் மனைவியிடம் கூறும் மொழிகளால் இனிது விளங்குகின்றது. வாலி தன் தம்பியுடன் போருக்குப் புறப்படும் பொழுது அவன் மனைவியாகிய தாரை தடுத்தாள். அமுதில் தோன்றிய அம்மங்கை வாடிய முகத்தோடும், விரிந்த கருங்கூந்தலோடும் தன் காதலனது இரு பாதங்களையும் தன் கரங்களால்பற்றி இசையினும் இனிய சொற்களால், "ஐயனே! நீபோருக்குப் போகவேண்டாம். உன் தம்பி தனியாக உன்னுடன் போர்செய்ய வரவில்லை. அவனுக்குத் துணையாய் இராமனென்பவன் உன் உயிர் கொள்வதற்கு உடன் வந்துள்ளான். இதனை நான் நன்றாய் அறிவேன். ஆதலால் இப்போதுபோகவேண்டாம்." என்று வழிமறித்தாள். அப்போது வாலி தன் காதலியை நோக்கி "அந்தோ! அறநெறிவகுத்த இராமனது இயல்பறியாத பாவி உன் பெண்மதியால் பிழைசெய்தாய். இம்மையும் மறுமையும் இனிதறியும் பெருமானாகிய இராமனுக்கு என்னைக் கொல்வதா பெருமையோ? அதனால் அவர் பெறும் பேறுதான் என்னே? அறநெறி தானே தன்னை அழிக்குமோ? தனக்குரிய அரசைத் தம்பிக்கு அளித்துக் கானகம் போந்த கமலக் கண்ணன் எனக்கும் என் தம்பிக்கும் நேரும் போரில் ஒருபக்கம் சார்வானோ? இவ்வுலகெலாம் ஒருங்கே திரண்டுவந்தாலும் தன் வெஞ்சிலை ஒன்றால் அழிக்கவல்ல வீரனுக்கு என் தம்பியின் கேண்மையும் வேண்டுமோ? ஆதலால் நீ சொல்வது எவ்வகையினும்பொருந்தாது" என்றுகூறிப்போருக்கு எழுந்தான். இதனைப் பின்னர் தாரை நினைந்து வருந்தும் சொற்கள் உள்ளத்தை உருக்குகின்றன.

சொற்றேன் முந்துற அன்னசொற் [கேளாய்
ஆற்றான் அன்னது செய்கலனென
உற்றாய் உம்பியை ஊழிகாணும் நீ
இற்றாய் நான் உனை என்று காண்பனோ?

"ஐயோ! நாதா முன்னமே பாவியேன் சொன்னேனே! அச்சொல்லை நீ கேளாமல் இராமன் அவ்வாறு செய்யான் என்று போருக்குப் புறப்பட்டாயே! இப்போது அவனது அம்பால் இறந்தாயே! இனி உன்னை நான் எப்போது காண்பேன்?" என்று தாரை ஏங்கி அழுகின்றாள். அறநெறியாகிய இராமன் அறப்போர் செய்வதல்லால் மறப்போரை மனத்திலும் நினையான் என்று வாலி எண்ணிய எண்ணத்தில், அவன் உள்ளப் பான்மை சிறந்தொளிர்கின்றது.

அப்பால் வாலிக்கும் அவன் தம்பிக்கும் நிகழ்ந்த போரில் இராமன் மறைந்து நின்று அவ்வீரன் மார்பில் தன் வலிய அம்பினைத் தொடுத்தான். அவ்வம்பு வாலியின் உரத்த மார்பை ஊடுருவிச் செல்ல மாட்டாது மெல்ல மெல்ல இறங்கிற்று. ஆயினும் அவ்வெங்கணையின் வெம்மைக்கு ஆற்றாது வாலி மண்ணிடைவிழுந்தான். அவனதுகண்களில் தீப்பொறி பறந்தது. தன்னை எய்த வீரன் எங்குள்ளான் என்று தேடுபவன் போல நாற்றிசையும் நோக்கினான். மார்பிற் செல்லும் அம்பினைத் தன் கரத்தாலும், காலாலும், வாலாலும் வலியுற இழுத்தான். அதனை எளிதில் இழுக்கமுடியாமை கண்டு உளையும் மலைபோல் உருண்டான். தன் மார்பில் பாய்ந்த படை நெடுமாலின் நேமியோ, நீலகண்டன் சூலமோ, அறுமுகன் அயிலோ, இமையவர் கோன்படையோ! இவற்றில் ஒன்றும் எனது மார்பிற் செல்லும் ஆற்றல் வாய்ந்ததல்லவே! பின் இப்படைதான் யாதோ என்று திகைத்தான். எவ்வாற்றானும் இவ் வம்பினை இழுத்து இதனை எய்தவன் யாரென அறிவேன் என்று தனது பேராற்றலால் மீண்டும் இழுத்தான். அப்பொழுது அவன் உடம்பினின்றும் பொங்கிப் பாய்ந்த உதிரம் கடல் போலப் பெருகியது. இழுத்த அம்பினைத் தன் கண்களால் நோக்கினான். இராமன் என்னும் செம்மைசேர் நாமம் தன்னைக் கண்களில் தெரியக்கண்டான். தான் இராமனைக் குறித்து முன் எண்ணியிருந்த உயரிய எண்ணமெல்லாம் அறவே ஒழிந்தது. வில்லறம் துறந்த இராமன் தோன்றலால் கதிரவன் மரபின் தொல்லறம் தொலைந்ததென்று துணிந்தான். இது தான் இறைமுறையோ! அறநெறியோ! என்று எண்ணி ஏங்கினான். அப்பால் கமலக் கண்ணனைக் கண்டு பலவாறு பேசலுற்றான். அதன்மேல் இராகவனும், இலக்குவனும் சொல்லிய மாற்றத்தால் ஒருவாறு மனந்தேறி இறக்கும் தருவாயில் தனது பெருந்தகைமையை இவ்வுலகம் உள்ளளவும் அழியாது நிலைநிறுத்தினான். தன் னுயிர்க்கு இறுதி செய்த தம்பி கண்ணீரைவடித்துக் கொண்டு கலங்கி நிற்கக்கண்டான். அந்நிலையில் அவனது சிறுமையைச் சிறிதும் எண்ணாது தீமைபுரிந்தார்க்கும் நன்மைபுரிவதே சான்றாண்மைக் கழகென்னும் உயரிய நீதிக்கு ஒப்பற்ற சான்றாய் வாலி இராமனைப்பார்த்து "ஐயனே, இப்போது நான் உன்னிடம் வேண்டுகின்ற வரங்களைத் தந்தருளவேண்டும். மதுவுண்ட மயக்கத்தால் என்தம்பி அறிவு மயங்கி அடாத செயல்களைச் செய்வானாயினும் நீ சீற்றம் கொண்டு என்மீது ஏவிய அம்பினை அவன் மீது ஏவி விடலாகாது. இன்னும் நான் இறந்த பின்னர் உன் தம்பிமார்கள் என் தம்பியை, தமையனைக் கொல்வித்த தகவிலன் என்று இகழாவண்ணம் நீ தடுக்க வேண்டும். என் தம்பியை உன் தம்பியாகவே கருதவேண்டும். அவனும் அவன் சுற்றமும் உன் அடைக்கலம்' என்று சொல்லிக் கலங்கி நின்ற தம்பியைத் தன் கைகளால் தழுவி 'அப்பா நீ வருந்தாதே' என்று ஆறுதல் கூறினான். இவ்வொன்றே வாலியின் பெருமையை வையம் உள்ளளவும் அழியாது காப்பதாகும். தனக்குப் பிறன்செய்த தீமையைப் பொறுத்தல் நன்றென்றும், அதனை மறத்தல் அதனினும் நன்றென்றும் அறநூல்கள் கூறுகின்றன. அவ்வளவில் அமையாது தீமை செய்தார்க்கு நன்மை செய்தல் சான்றாண்மையாகும். "இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் சிறப்பித்த சான்றாண்மைக்கு வாலியினும் சிறந்த சான்று வேறுண்டோ? தன் ஆருயிர்க்கிறுதி விளைத்த தம்பிக்கு நன்மொழி புகன்று நலம்புரிந்த வீரனது பெருமை அளவிடற்கெளிதோ!



இன்னும் தன் இன்னுயிரை வாங்கிய இராமனைப் பார்த்து வாலி "ஐயனே' என் சிறுமையால் நான் சொல்லிய சொற்களை உன் பெருமையால் நீ பொறுத்தருளவேண்டும். ஆயினும் ஒன்றுதான் என் உள்ளத்தை வாட்டி வருத்துகின்றது. உனக்குத் தவறிழைத்த இலங்கையர் கோனை என்வாலினாற் கட்டி உன் முன்னே இட்டு உனது மனக்குறையை நிறைசெய்யும்பேறு பெற்றிலேனே என்று தான் வருந்துகின்றேன்" என்றுவாலி கூறும் சொற்களில் அவனது பெருந்தன்மை இலங்குகின்றது.

மற்றிலேனெனினும் மாய அரக்கனை [வாலிற்பற்றி
கொற்றவ! நின்கண்தந்து குரக்கியல் [தொழிலுங்காட்டப்
பெற்றிலேன் கடந்த சொல்லிற் பயனிலை [பிறிதொன்றேனும்
உற்றதுசெய் கென்றலும் உரியன் இவ் [அநுமனென்றான்.

தன்னால் இயலாதுகழிந்த செயலுக்கு மனம் இரங்கி அதற்குரியவன் அநுமனே யென்றும் வாலி அறிவிக்கின்றான். அநுமனையும் மற்றையோரையும் துணையாகக்கொண்டு சீதையைத் தேடியடைவாய் என்றும் இராமனை வாழ்த்துகின்றான். அப்பால் கலங்கி நின்ற தன் மைந்தனை அங்கதனைப்பார்த்து 'அப்பா! என்னுயிர்க்கு இராமன் இறுதிசெய்தான் என்பதை நீ இறையும் எண்ணாது அப்பெருமான் போர்செய்ய நேர்ந்தால் அவனது மலரடி சுமந்து வாழ்வாயாக' என்று பணித்தான். இத்தன்மை வாய்ந்த வீரனை அறிவாலும் குணத்தாலும் வானரன் என்று கூறுதல் பொருந்துமோ என்பது அறிஞர் ஆராய்தற்குரியதாகும்.

இன்னும் வாலியாரது பெருமை அவரியற்றிய உயரிய வழிபாட்டால் இனிது உணரற்பாலதாகும். சிவபெருமானை முழுமுதற் பொருள் என்றுணர்ந்து, அப்பெருமானை நாளும் மும்முறை மொட்டறுமலர் பறித்திறைஞ்சி வழிபடும் பெருமை வாலியார்க்கு வாய்த்ததென்றால் அவரது உளத்தின் செம்மையை அளவிட்டுரைத்தல் ஆகுமோ? தன்தாதையைக்கண்டு கண்ணீர் பெருக்கிய வாலியின்காளை

பஞ்சின் மெல்லடியாள் பாகன் பாதகம் [அலரது யாவும்
அஞ்சலித்தறியாச் செங்கை ஆணையாய்!

என்று உருகிப் புலம்பும் உரையால் வாலியின் உயரிய வழிபாடு இனிது ணரப்படும். இன்னும் வாலியின் நிலையினைக்கண்டு புலம்பிய தாரை 'முக்காணும் முதல்வனை வழிபடும் ஐயனே, நீ பூசனையை மறந்து எவ்வாறு இங்கு அயர்ந்து கிடக்கின்றாய்' என்று ஏங்கி அழுகின்றாள்.

அணங்கார் பாகனை ஆசைதோறமுற்று
உணங்கா ஒண்மலர்கொண்டுனன்பொடும்
இணங்காக்காலம் இரண்டோடொன்றி [னும்
வணங்காதித்தனை வைகவல்லையோ

என்று தாரைகூறும் மொழிகளில் வாலியார் இயற்றிய பூசனையின் பெருமை இனிது விளங்குகின்றது.

இன்னும்வாலியார் சிவபெருமானை வழிபட்ட முறையை சைவ சமயப் பெரியாராகிய திருஞானசம்பந்தர்

கோலமா மலரொடு தூபமும் சாந்தமும் [கொண்டுபோற்றி
வாலியார் வழிபடத் திருந்து மாங்கனிகள் [உந்தி
ஆலுமா காவிரி வடகரை யடைகுரங்காடு [துறை
நீலமாமணிமிடற் றடிகளை நினையவல் [வினைகள் வீடே

என்று தேவாரத் திருமுறையில் போற்றினர் என்றால் அவரது பெருமையை அளவிட்டறிதல் எளிதன்றென்பது இனிது விளங்கும்.

இத்தகைய விழுமிய வழிபாட்டால் வாலியார் உயரியவரங்கள் பெற்றிருந்தாரென்பதும், அவற்றுள் தன் எதிர்நின்று போர்செய்வார் எவரேயாயினும் அவரது வரத்தினும் வலிமையினும் பாதியைத்தன் பால்இழுத்துக்கொள்ளும் வரம் வாலியிடம் தலைசிறந்து விளங்கிற்றென்பதும் அறியப்படுகின்றது. இதனை

கிட்டினர் பொரக்கிடைக்கின் அன்னவர்
பட்ட நல்வரம் பாகமெய்துவான்.

என்று அநுமன் சிறப்பித்துக் கூறுகின்றான். இதுவன்றியும் இவ்வரத்தின் பெருமையை வாலியார் தாமே தம் காதலியிடம் எடுத்துரைத்துத் தேற்றுகின்றார்.

பேதையர் எதிர்குவ ரெனினும் [பெற்றுடை
ஊதியவரங்களும் உரமும் உள்ளதில்
பாதியும் என்னதால் பகைப்பதெங்ஙனம்?
நீதுயர் ஒழிகென நின்று கூறினன்.

இவ்வரமுடைமையாலேயே எவரும் வாலியார் எதிர் நின்று போர்செய்ய வலியற்றாராயினர். இதனாலேயே இராமவீரன் மறைய நின்று வாலியின் மார்பில் அம்புதொடுத்த முறையல்லாச் செயலை முறையென்று கூற முயல்வோர் கூற்று முட்டுப்படுகின்றது. பலவாறாகத் தான் செய்த செயல் தவறன்று என்று இராமன் எடுத்துரைத்த நீதிமொழிகளைக் கேட்டவாலி, "ஐயனே! நீ என்னைக் கொன்றது சரியெனக்கொண்டாலும், நீ ஏன் மறைந்து நின்று எய்தாய்?" என்ற வினாவிற்கு இராமன் மாற்றம் உரையானாய் இலக்குவன் இயம்பலுற்றான் என்று கம்பர் கூறுகின்றார். போர்க்களத்தில் எதிர் நின்று போர்செய்து மாற்றான் வலிமைக்கு ஆற்றாது உயிர் துறக்க நேர்ந்திருப்பின் அதற்கு வாலியின் உள்ளம் வருந்திக் கொதித்திருக்கமாட்டாது. ஆனால் மறைந்து நின்று உயிர் வாங்கிய முறைஇகந்த செயலே வாலியின் மனத்தைக் கொதிக்கச் செய்தது. இதனையே வாலி இராமனிடம் மும்முறை கேட்கின்றான். இருவர் போர்புரியும்போது ஒருவர் பக்கம் சார்ந்து மற்றையவர்



மீது மறைய நின்று அம்பெய்தல் அறநெறியோ என்று ஒருமுறைவினவினான். அன்றியும் நேர்நின்று போர்செய்யாமல் மறைந்து நின்று ஆயுதமற்ற ஒருவன் மார்பில் அம்பெய்தல் வில்லறமோ என்று மறுமுறை வினவினான். பின்னும் இராமவீரன் கூறிய மறுமொழியால் அமைவுறாமல் ஏனைய எல்லாம் முறைமையே எனினும் நீ எதிர்த்து நின்று எய்யாது

வெவ்விய புளிஞரென்ன
விலங்கியே மறைந்துவில்லால்
எவ்விய தென்னை?

என்று மூன்றாம் முறை வினவினான். இதற்கு இராமன் மாற்றம் உரையானாய் இலக்குவன் மாற்றம் உரைக்கின்றான். இஃது இராமகதையைக் கற்றோர் பெரிதும் சொற்போர் விளைப்பதற்கு நிலைக்களமாக நிற்கும் பகுதியாகும். அவ்வேளையில் வாலியின் உள்ளத்தில் ஓர் உயரிய ஞானம் தோன்றி அதனால் அவ்வீரன் அமைவுற்றான் என்று கருதுதல் பொருந்துமேயன்றி இராமனும் இளவலும் சொல்லிய காரணங்களால் அவன்மனம் அமைவுற்றதாகக் கருதுவதற்கிடமில்லை. இத்தகைய ஞானம் பிறந்தமையாலேயே வாலி இராமனை மண்ணிடைவந்த அண்ணல் என்றெண்ணி இறைஞ்சுவானாயினான். தான் செய்த தவத்தின் பெருமையால் மெய்ப்பொருள்தானே நோக்கவந்து தனக்கு வீடளித்தது என்று உணர்ந்தான். தன் தம்பி வெற்றரசைப்பெற்று வீட்டரசைத் தனக்கு விட்டான் என்று உண்மை உணர்ந்து போற்றினான். இத்தகைய ஞானத்தால் வீடுபெறும் பெருமை வாலியார்க்கு வாய்த்தது. முற்றிய தவஞ்செய்து சிவ வழிபாட்டால் சிறப்பெய்தி, வலிமையில் ஒப்புயர்வற்ற வீரனாய் விளங்கி, இன்னா செய்தார்க்கும் இனியவே செய்து பெறுதற்கரிய ஞானத்தால் வீடு பெற்ற வாலியார் பெருமை கல்வியில் பெரியராய கம்பர் பெருமானால் போற்றப்பட்டிருப்பது பெரிதும் பொருத்தமுடையதேயாகும்.

## காவிரிப்பூம்பட்டினம்.

(முன் தொடர்ச்சி.)

தமிழ்ப்பண்டிதர் அ. கிருஷ்ணசாமி நாயுடு.

இங்ஙனம் புலிமுத்திரை பொறித்த மூட்டைகளைச் சுங்கங்கொள்வதற்காக, மரக்கலங்களுக்குப் புறம்பே இட்டுவைத்து, நெஞ்சாலே அளந்தறிந்து, ஒரு சிறிதும் தவறின்றி அதற்கேற்ற சுங்கப்பொருளைக் கொள்வர். அக் கடற்கரையின்கண் அந்நியநாட்டார், வெண்மணல் பரவிய இடங்களில், தங்கள் நாட்டுப் பண்டங்களைக் குவித்து, இன்னபண்டங்கள் இங்குளதெனக் காட்டும்படி கொடிகளைக்கட்டியிருந்தனர். வண்ணம், சாந்து, மலர், சுண்ணம், பண்ணிகாரங்கள் ஆகிய இவைகளை விற்பவர் விளக்குகளும், தாங்கள் நகைகளைச் செய்யும் இடங்களில் தட்டார் வைத்த விளக்குகளும், பிட்டுவிற்போர் ஏற்றிய விளக்குகளும், அப்

பம் விற்போர் கூடத்தண்டில் வைத்த விளக்குகளும், பல பண்டங்களையும் பகரும் கீழ்க்குல மகளிரின் விளக்குகளும், பரதவர் தோணிகளில்வைத்த விளக்குகளும், பாஷைவேறுபட்ட தேயத்தோர் பணைக்கால்களின் மேல் குங்குலியம் இட்டெரிக்கும் விளக்குகளும், மிக்க பெரிய பண்டசாலையைக் காப்போர் இட்ட விளக்குகளும் ஒன்றுசேர்ந்து அவ்வெண்மணலின்மீது விழுந்த ஒரு சிறு கடுகும் தெரியும்படி, அத்துணை ஒளியை உண்டாக்கின. இவ்விளக்குகளேயன்றி, நிலைபறியாது ஓடும் மரக்கலங்களை அழைத்தற்காக இட்ட "இலங்குநீர் வரைப்பில் கலங்கரை விளக்கமு" (Light-House) கடற்கரையின்கண் காட்சியைத்தந்து களிப்பூட்டிற்று.

கக. சக்கரவாளக்கோட்டம்.

எல்லா உலகங்களையும் தன்னுள்ளடக்கிக் கொண்டுள்ள கோளத்தைச் சக்கரவாளம் என்றல் பௌத்த நூல்வழக்கு. கோட்டம்—அறை. அதன் வரலாறு:— கௌதமை என்னும் ஒருபெண் இறந்துபோன தன் மைந்தனைத் தூக்கித் தோளிலிட்டுக்கொண்டு, காவிரிப்பூம்பட்டினத்தின் காவல் தெய்வமாகிய சம்பாபதியை நோக்கி. "நீ என் உயிரை எடுத்துக்கொண்டு என்மகன் உயிரைத் தந்தருளல்வேண்டும்" எனப்புலம்பி வேண்டிக்கொண்டனள். அதற்குச் சம்பாபதி உடம்பைவிட்டுப் போன உயிரை மீண்டும் கொணர்தல் இயலுங்காரியம் அன்று.

உலகமன்னவர் உயிர்க்குயிர் ஈவோர்
இலரோ இந்த ஈமப்புறங்காட்டு

அரசர்க்கு அமைந்தன ஆயிரம்கோட்டம்
கிரயக் கொடுமொழி நீ ஒழி என்று

சம்பாபதி கூறினள். கௌதமை "கேட்டவரங்களைத் தேவர் தருவார் என்று நூல்கள் கூறும்; ஆகையால், யான்கேட்ட இவ்வரம் நீ தந்தருள்க. இல்லையேல், என்னுயிர் துறப்பேன்" என்று சொல்லினள். இச்சக்கரவாளத்துள்ள தேவர்களில் யாரேனும் கேட்டவரத்தைத்தந்தருள்வராயின் யானும் இவ்வரத்தைத் தருகின்றேன், என் ஆற்றலைக்காண்பாயாக என்று சொல்லி நான்குவகை அருவப்பிரம கணங்களையும், பதினறுவகை உருவப் பிரமகணங்களையும், இருசுடர்களையும், அறுவகைத் தெய்வகணங்களையும், அசுரகணங்களையும், எண்வகைநரகர்களையும், பலவிண்மீன் கூட்டங்களையும், அச்சுவினி முதலிய நாட்களையும், கோட்களையும் தன்னுள்ளே அடக்கிக்கொண்டுள்ள இச்சக்கரவாளத்து வரங்கொடுக்கும் தேவர்களை எல்லாம் வருவித்துக் கௌதமிக்கு முன்னே நிறுத்தி, இக்கௌதமியின் வருத்தத்தைத் தீர்ப்பீர்களாக எனச்சம்பாபதி சொல்லினள். அத்தேவர்கள் அனைவரும் சம்பாபதி கூறியவாறே அஃது இயலுங்காரியமன்று என்று சொல்லினர். இதனைக்கேட்டுக் கௌதமியும் ஐயமும் துயரமும்நீங்கினள். பின்னர், சம்பாபதியின் தன்மையினை யாவர்க்கும் புலப்படுத்தவும், அத்தேவர்கள் கூடியவிடத்திற்கு அடையாளமாகவும், ஒருகோட்டம் அமைத்தனர். அக்கோட்டத்துள் மேருமலையும், அதனைச்சூழ்ந்த ஏழுமலைகளும் நான்கு பெருந்தீவுகளும், இரண்டாயிரம் சிறுதீவுகளும், மற்ற விசேடஇடங்களும், அவற்றுள் வாழ்வார்களும் ஆகியவற்றின் உருவங்களைப் புலப்படுத்தி, ஒருகோட்டம் மயன் என்னும் தெய்வத்தச்சனால் நிருமிக்கப்பட்டது. இக்கோட்டமே சக்கரவாளக்கோட்டமென்பது. இது சுடுகாட்டின் மதிலின் புறத்தேயுள்ளதனால், இதனைச் சுடுகாட்டுக் கோட்டமென்னும் சொல்வர். இச்சக்கரவாளக் கோட்டத்தினையும் சுடுகாட்டினையும் மணிமேகலையில் மிக மாண்புபெறப் பாடப்பட்டுள்ளது.

கஉ. கோயில்கள்.

க. பிறவாயாக்கைப் பெரியோன் கோயில்
உ. நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன்கோயில்
௩. ஆறுமுகங்களையுடைய முருகப்பெருமான் கோயில்
௪. வெண்ணிறத்தையுடைய பலதேவன் கோயில்
௫. நீலமேனியையுடைய கண்ணபிரான் கோயில்
௬. வெண்குடையையுடைய வாசவன் கோயில்
௭. நால்வகைத்தேவர் கோயில்
௮. பதினெட்டுவகைத் தேவகணங்களின் கோயில்
௯. அருகர் கோயில்
க0. புத்தர் கோயில்
கக. ஸ்ரீ கோயில்
கஉ. காமவேள் கோயில்
க௩. காளிகோயில்
க௪. கற்பகதரு நிற்கும் கோயில்
க௫. வச்சிராயுதம் நிற்கும் கோயில்
க௬. ஐராவதம் நிற்கும் கோயில்
க௭. சம்பாபதி கோயில்
க௮. பூதசதுக்கக் கோயில்

இன்னும் இத்தன்மைய பலகோயில்கள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தன. இவற்றிற்கு நாள்விழாக்களும் ஆண்டுவிழாக்களும் குறைவின்றி நடந்துவந்தன. இவற்றிற்குப் பூசைமுதலியன செய்தற்கு உரியவர் இன்னர் என்பதனை மணிமேகலையில் ஓர்வகை சொல்லியுள்ளது. என்னை?
இத்தெய்வங்களுக்கு

வேறு வேறு சிறப்பின் வேறுவேறு
[செய்வினை
ஆறறிமரபின் அறிந்தோர் செய்யுமின்

என்பதாம். இதனுள் "ஆறறிமரபின் அறிந்தோர்" என்றதற்கு ஆறு என்றது இவற்றினை என்றும், அவற்றினை அறிந்தோர் இன்னோர் என்றும் அறிஞரே ஆராய்க. ஒன்றினையுமே அறியாத ஒருகூட்டத்தார், வழிவழியாகக்கோயில்களில் பூசை நடத்துதல், பண்டைக்கால வழக்கம் அன்றென் பழைச் சங்கநூல் கற்றோரனைவரும் சால அறிவர்.

க௩. வனங்கள்.

க. இலவந்திகைவனம், உ. உய்யானவனம். ௩. சம்பாதி வனம், ௪. கவேரவனம். ௫. உவவனம், எனப் பல சோலைகள் காவிரிப்பூம்பட்டினத்தில் உண்டு. க. இலவந்திகை வனம்:—இலவந்திகை யந்திரவாவி. யந்திரவாவியைத் தன்னகத்துட்கொண்ட சோலை. இச்சோலை அரசர்களுக்கே உரிமையானதால் இதனுள் யாவரும் ஏகார். உ. உய்யானவனம்:- அவ்வனத்திலுள்ள மலர்கள் தேவர்களாலன்றி மனிதர்களால் விரும்பப்படா. வண்டுகள் மொய்க்கா; வாடா. அன்றியும் அவ்வனம் பாசக்கையையுடைய பூதத்தால் காக்கப்படும். ௩. சம்பாபதிவனம்:— சம்பாதி ஓர் பறவை. மிக உயரப் பறந்தமையால் சூரிய ஒளியின் வெம்மையால் சம்பாதி தன் சிறகுகளை இழந்தது.

சடாயுவின் கூடப்பிறந்த பறவை என்பர். இவ் இறகுகளை இழந்த சம்பாதி யிருந்தமையால் இவ் வனம் சம்பாதிவனம் எனப் பெயர் பெற்றது. ச. கவேரவனம்:— கவேரன் காவேரியாற்றின் தந்தை; இராஜ முனிவன்; ஓர்யோகி. இக் கவேரன் இருந்து தவம்செய்தமை யின் இவ்வனம் கவேரவனம் எனப் பெயர் பெற்றது. இது காவிரிப்பூம் பட்டினத்திற்கு அணிமையிலுள்ளது.

உவவனம்:—

அருளும் அன்பும் ஆருயிர் ஓம்பும்
ஒருபெரும் பூட்கையும் ஒழியாநோன் [பின்
பகவ னாணையில் பன்மரம் பூக்கும்

உவவனம் என்பதொன்றுண்டு. இவ் வனத்தில் தன்னகத்துள்ளாரின் உரு வை வெளிப்படுத்தி ஓசைவெளிப் படுத்தாத பளிங்குமண்டபம் ஒன்று ண்டு. அம்மண்டபத்தினுள் மாணிக் கச்சோதிபரந்த பதுமபீடம் ஒன்று ண்டு. பூவரும்புகள் அப்பீடத்தி லிட்டால் மலரும்; பல்லாண்டு கழியி னும் வாடா; வண்டுகள் மொய்க்கா. ஒரு தெய்வத்தை நினைந்து மலர்களை அப்பீடத்திலிட்டால் அம்மலர்கள் அத்தெய்வத்தின் அடிகளுக்குச் சே ராநிற்கும். எந்நினைப்புமின்றிப்பீட த்தே இடின் அம்மலர்கள் அப்பீடத் தே கிடக்கும். இஃதென்னை? எ னின் "மனதையறியாமல் செயயும் கருமங்களும் அவ்வவற்றின் பயனை த்தரும்" என்னும் சமயவாதிகள் தன்புறவும், "மனதையறியாமல் செய்யுங்கருமங்கள் அவ்வவற்றின் பயனைத்தாரா" என்னும் சமயவாதி கள் இன்புறவும், மயன் என்னும் தெய்வத்தச்சனால் அப் பதுமபீடம் உண்டாக்கப்பட்டது. இதனை மணி

மேகலையில்மாண்புறக்கூறுவதாவது:-

சுடம்பூண்டு ஓர்தெய்வம் கருத்திடை [வைத்தோர்
ஆங்கு அவர் அடிக்கிடின் அவர் அடிதா [னுறும்
நீங்காது யாங்கணும் நினைப்பிலராய்இடின்
ஈங்கு இதன்காரணம் என்னை யென்றியேல்
சிந்தனை இன்றியும் செய்வினை உறும் [எனும்
வெந்திறல் நோன்பிகள் விழுமங்கொள்ள [வும்
செய்வினை சிந்தை இன்றெனின்யாவதும்
எய்தாது என்போர்க்கு ஏதுவாகவும்
மயன்பண்டு இழைத்த மரபினது.

இவ்வுவவனம் காவிரிப்பூம்பட்டின த்தின் பக்கலில் உள்ளது. மணி மேகலை மலர்களைப் பறிக்கச் சென்ற சோலையும், உதயகுமரன் மணிமே கலையின்மேல் காதல்கொண்டு கைக் கொள்ள முயன்ற இடமும் இதுவே; மணிமேகலா தெய்வம் மணிமேகலைக் குக் காட்சிதந்து மணிமேகலையை மணிவல்லவம் என்னும் தீவிற்கு எடுத்துச் சென்ற இடமும் இதுவே.

கச. அரசன்.

காவிரிப்பூம்பட்டினத்தைக் காவல் பூண்ட அரசர்களில் தலையாயவன் சோழன் கரிகால் பெருவளத்தான். இவ்வரசன் பெயர் சோழன் கரிகால் வளவன் எனவும், கரிகாலன் என வும் வழங்கும். இவ்வரசன் கால் இள மையில் நெருப்பாற் சுடப்பட்டுக் கரி ந்துபோயிற்றென்றும், போர்புரிகை யில் மதில் கடக்கையில் கரிந்துபோயி ற்றென்றும் பலர் பல காரணங்கள் கூறுப. அஃதெங்ஙனமாயினும், கரி ந்துபோன கால் உடைமையால் கரிகா லன் எனும் பெயர் காணப்பட்டது. இவ்வரசன் இளையன்; எங்ஙனம் வழ க்குத் தீர்க்கவல்லன்? எனப்பேசிய



முதியோரின் முன்னர், முதியோர் வேடம்பூண்டு அவ்வழக்குத் தீர்த்த வன். இங்ஙனம்,

இளமை நாணி முதுமை எய்தி
உரைமுடிவு காட்டிய உரவோன்

எனமணிமேகலையில் மாண்புற மதிக் கப்பெற்றவன். காவிரிப்பூம்பட்டின த்தைச் சிறப்பித்துப்பாடும் பொருட் டுக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்னும் புலவற்குப் பதினாறு நூறா யிரம் பொன் பரிசளித்துப் பட்டி னப்பாலை பாடப் பெற்றவனும் சோ ழன் கரிகால் பெருவளத்தானே. இதனைக் கலிங்கத்துப்பரணியில் "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன், பத்தொடாறு நூறாயிரம் பெறப் பண்டு பட்டினப்பாலை கொண் டதும்" எனச்சிறப்பித்துக் கூறுவ தே சான்று செப்பும். இவ்வரசன் ஓர்கால் இமயமலை வரையில் சென்று இடையிலுள்ள அரசர்களையும் வெ ன்றனன். இவன் வீரருள் வீரன். குடிமக்களிடம் மிக்க அருளுடைய வன். இக்கரிகால் வளவன் தண்ணிய

குடை நிழலில் வாழ்ந்த குடிகள்
விலங்கு பகையல்லது கலங்குபகையறி [யாக்
கொழும்பல் குடி
மக்களாய் மனமகிழ்ந்து வாழ்ந்து
வந்தனர்.

கரு. வணிகர்.

காவிரிப்பூம்பட்டினத்தில் களிப்பு டன் வேறுவேறு வகைப்பட்ட குடி மக்கள் வாழ்ந்துவந்தனர். அன்னார் இன்னார் இன்னார் என்பதை, மேற் குறித்த புறநகர், அகநகர், கடற் கரைக்காட்சி என்னும் பிரிவுகளிற் கண்டுகொள்க. மருவூர்ப் பாக்கத் தும், பட்டினப்பாக்கத்தும் வதிந்து

வர்ணிகம் செய்தார் அனைவரையும் வணிகர் என்றே சிலப்பதிகாரத்துள் செப்பப்பெறுகின்றது. அங்ஙனம் நோக்கும்பொழுது காவிரிப்பூம்பட் டினத்தில் வாழ்ந்த பெரும்பாலோ ரையும் வணிகராகவே மதித்தல்வே ண்டும். பலதிறப்பட்ட வணிகர் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்தன ரேனும், அவரனைவரையும் குறித் துச் சிலப்பதிகாரம்பாட, இளங்கோ வடிகள் எண்ணங்கொள்ளவில்லை. ஆ கையால், காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த வியாபாரிகள் அனைவரையும் வணிகர் என்னும் பொதுச்சொல்லா ற்குறித்து, அவ்வணிகர் எனும்பொ துச் சொல்லிற்கே சிறப்பாக உள்ள வரையே பாடஎண்ணங்கொண்டனர். இளங்கோவடிகள் வணிகர் எனப் பொதுவாகக்குறித்தமக்கள் மருவூர்ப் பாக்கத்திலேயும் சிறப்பாகக் குறி த்த மக்கள் பட்டினப்பாக்கத்திலே யும் வதிந்தனர். இளங்கோவடிகள் என்னும் பொன்னரிப்பாளர் தமிழ்ச் சுரிதமென்னுஞ் சரக்கையில் நின்று தமது கூர்த்தமதியென்னும் கலத் தாற்கழுவிச் சிலப்பதிகாரம் என்னும் செம்பொற்கட்டில் வைக்கப்பெற்ற மாணிக்கங்கள் கோவலனும் கண்ண கியுமேயாம். இம்மாண்புபெற்ற கோ வலனும் கண்ணகியும் பிறந்தகுலம் வணிகர்குலம். இவ்வணிகர் குலத் தார் வதிந்தமை பட்டினப்பாக்கத்தி லேயாம். இவ்வுயர்ந்த பெருந்தனவ ணிகர் வாழ்ந்த பட்டினப் பாக்கத் தையே கடியலூர் உருத்திரங்கண் ணனார் பட்டினப்பாலை என்னும் பா ட்டாற் பாடினார். ஆகையால் பெருந் தனவணிகரைப்பற்றிச் சிலப்பதிகா ரத்தும் பட்டினப்பாலையினும் பகரப் பட்டுள்ளதைப் பார்ப்போமாக.

காவிரிப்பூம்பட்டினத்தைப் பாடும் தொடக்கத்திலேயே இளங்கோவடிகள்,

உரைசால் சிறப்பின் அரசுவிழைதிருவில்
பரதர் மலிந்த பயங்கெழுமாநகர்

என அரசரும் விரும்பும் புகழமைந்த சிறப்பினையும் செல்வத்தினையும் உடைய வணிகரால் மிகுதிபெற்ற—பயனுள்ள பெரிய காவிரிப்பூம்பட்டினம் என, வாயாரவாழ்த்திச் செல்லுகின்றனர். அரசர் விழையும் பெருந் தனவணிகரே காவிரிப்பூம்பட்டினத்தின் பழங்குடி மக்கள் எனப் போற்றப்பெறுவர்.

பொதியிலாயினும் இமயமாயினும்
பதி எழுவறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரேயாயினும்
நடுக்கின்றி நிலீஇய என்பது அல்லதை
ஒடுக்கங்கூறார் உயர்ந்தோர் உண்மையின்
முடித்தகேள்வி முழுதுணர்ந்தோர்.

இப்பாட்டின் திரண்ட பொருளாவது:—எப்பொழுதும் உயர்ந்தோர் வீற்றிருத்தலினால், பொதியமலையும், இமயமலையும், பழங்குடிகள் மிக்க காவிரிப்பூம்பட்டினமும் என்றும் ஒரு தன்மையாகவே உள்ளன என்பதாம். இதில் "உயர்ந்தோர்" என்பதற்கு அடியார்க்கு நல்லார் அழகிய விசேட உரைகூறுகின்றனர். என்னை? உயர்ந்தோர் அகத்தியனும் இருடிகளும், பழங்குடியின் உள்ளாரும் எனறுமாம்; என்றதா இமயத்தோடும் பொதியிலோடும் உள்ள இருடிகளையும், வணிகரையும் உவமித்தவாறும்" என்பது. ஆகையால் காவிரிப்பூம்பட்டினத்தின் பழங்குடி மக்கள் பெருந்தன வணிகர் என்பது பெறப்பட்டது. இப் பெருந்தன வணிகரின் செல்வ வருவாயினையும், செல்வத்தினையும், தவத்தினையும் பற்றி

முழங்குகடல் ஞாலம்முழுவதும்வரினும்
வழங்கத்தவாஅ வளத்தவாகி,
அரும்பொருள் தரூஉம் விருந்தில் தேஎம்
ஒருங்குதொக்கன்ன உடைப்பெரும் [பண்டம்
கலத்தினுங் காலினும் தருவனர் ஈட்டக்
குலத்திற் குன்றாக்கொழுங்குடிச் செல்வர்
அத்தகு திருவின் அருந்தவம் முடித்தோர்

என மொழிந்தனர். அஃதாவது புதியதேயங்களினின்றும் அரியபொருள்களை மரக்கலத்தினும் வண்டிகளினும் கொணர்ந்து சேர்த்துள்ளதினால், கடல்ஞாலம் முழுவதும் வரினும் வழங்கக் குறையாத வளத்தையுடைய குலத்திற் குன்றாத கொழுங்குடிச் செல்வர். அங்ஙனம் அறத்தின் ஆய பொருளால் தலைமையான தானத்தினைச் செய்து முடித்தவர் என்பதாம். "அரசகுமரரும் பரதகுமரரும்" "அரசிளங்குமரரும் பரதகுமரரும்" எனச்சிலப்பதிகாரத்துப் பலவிடங்களில் அரசகுமாரரோடு வணிககுமாரரையும் சேர்த்துப்பாடப்பெறுவதினால், அரசர்குலத்தோடு ஒருங்கு வைத்தெண்ணப் பெறும் பெருமை வாய்ந்தது தனவணிகர்குலமேயாம். அரசரும் விரும்பும் செல்வச்சிறப்பு அத்தனவணிகர்க்கே உரிமையானது. ஆகையானன்றோ, இந்திரவிழாவில் இந்திரனுக்கு அபிஷேகம் செய்யும் மங்கல நீரைக் காவிரித் துறையினின்றும் பொற்குடத்தில் அரசகுமரரோடு வணிககுமரரும் கொணரும் உரிமைபெற்றனர். இங்ஙனம் அரசரோடு ஒருங்குவைத்தெண்ணப்படும் பெருங்குடியில பிறந்தனர் என்பதனை

பெருநிலம் முழுதாளும் பெருமகன் [தலைவைத்த
ஒருதனிக்குடிகளோடு உயர்ந்தோங்கு [செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்தும் மாசாத்துவன் [என்பான்

என மங்கலவாழ்த்துப் பாடலில் கோவலன் தந்தை மாசாத்துவனை மாண்புடன் புகழப்பட்டிருத்தலினால் கண்டுகொள்க. ஆகையால் காவிரிப்பூம்பட்டினத்துத் தனவணிகர் அரசரையொத்த பெரும்புகழுடன் வாழ்ந்து வந்தனர் என்பதில் ஐயமில்லை.

## கசு. தொழில்.

வணிகர்க்குரிய வளம்பெற்ற தொழில் வாணிகம் என்பதே பெரும்பாலோரின் கொள்கை. அங்ஙனமே தொல்காப்பியத்து

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை

எனக்கூறுவதும் அக்கொள்கையைக் கொண்டேயாம். ஆயினும், தொல்காப்பியத்து வேறு தொழில்களும் கூறப்படுகின்றன. என்னை?

மெய்தெரிவகையின் எண்வகை யுணவின்
செய்தியும் வரையார் அப்பா லான

என்பதாம். இதில் எண்வகைக் கூலங்களையும் விளைவித்தல் வணிகரின் கடமை என்பது புலனாகின்றது. மேலும் தொல்காப்பியர்

இடையிருவகையோர் அல்லது நாடில்
படைவகை பெறூஅர் என்மனார் புலவர்

எனவணிகர்க்குப் படைக்கலப் பயிற்சியும் உண்டென்று உரைக்கின்றனர்.

இம்முத்திறத் தொழில்களுள் சிறப்புற்ற தொழில் வாணிகமேயாம். ஆயினும், உழவும் அதனோடு வைத்து உரைக்கப்பெறும். பட்டினப்பாலையில் வாணிகம் உழவு என்னும் இருதொழில்களையும்பற்றிச் சிறப்பாகவே சொல்லப் பெற்றுள்ளன.

## கஎ. உழவு.

உலகத்திற்கு அச்சாணிபோன்ற உழவுத்தொழில் வாணிகமக்கள் உவகையுடன் கைக்கொண்டதொழில்களில் ஒன்றாகும். இத்துடன் தம் வாழ்க்கைக்கும் உலக நன்னெறி நிறுத்தற்கும் பல நன்மை பயக்கும் திருப்பணிகளையும் கைக்கொண்டிருந்தனர். என்னை? மீன்களையும் விலங்குகளையும் செருக்கி வலையாற்பிடிப்பாரையும், கொன்று தின்பாரையும் புகையாக்கருதி அஞ்சாமல் அவர்மாட்டணுகி, அவர்கள் புரியும் கொலைத்தொழில்களை அவர்களிடத்தினின்றும் போக்குவர்; பின்னர், களவு காண்பாரிடத்துச் சென்று களவுத்தொழிலையும் அவரிடத்தினின்றும் போக்குவர், அமரரைப்பேணி ஆவுதி அளிப்பர்; நல்ல பசுக்களுடன் எருதுகளையும் ஓம்புவர்; நான்மறையோர்க்குண்டாகும் புகழை நிலை நிறுத்துவர்; புண்ணியங்களைப் பெரிதும் பண்ணுவர்; விளைந்த நெல்லை உணவிலார்க்கு உணவாகக் கொடுப்பர். இங்ஙனம் செய்யும் அறத்தொழில்கள் முட்டுப்படாத குளிர்ந்த அருளுடனே வாழும் இல்வாழ்க்கையினை உடையவர். உழவமது நெடிய நுகத்தில் தைத்த நடுவாணிபோல நடுவுநிலைமை என்னும் குணம் நிலைபெற்ற நன்னெஞ்சினை உடையோர். இவற்றினைப் பட்டினப்பாலையில் பைந்தமிழடிகளால் பாடப்பெற்றுள்ளதைப் பார்க்க வேண்டாமா?

கொலைகடிந்தும் களவு நீக்கியும்
அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
நல்லானொடு பகடு ஓம்பியும்
நான்மறையோர் புகழ்பரப்பியும் [த்தும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடு
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்
கொடுமேழி நசை உழவர் [கைத்

நெடுநகத்துப் பகல்போல
நடுவு நின்ற நன்னெஞ்சினோர்.

இப்பாட்டினுள் "பகடு ஓம்பியும்" என்பதற்கு "வாணிகர்க்கு உழவுத் தொழிலும் உரித்தாதலால் பகடோம்பியும் என்றார்" என நச்சினார்க்கினியர் உரைக்கின்றனர்; மேலும் வணிகர்க்கு இருவகைத் தொழிலும் உரித்தென்பதற்கு "வைசிகன் பெறுமே" "மெய்தெரி வகையின்" எனும் இரு தொல்காப்பியச் சூத்திரங்களையும் மேற்கோள்களாகக் காட்டுகின்றனர். ஆகையால், பெருங்குடியிற் பிறந்த தனவணிகருக்கு உழவுத் தொழிலும் உரித்தென்பது பெறப்பட்டது.

கஅ. வாணிகம்.

தமிழ்நாட்டின் துறைமுகப்பட்டினங்களில் சிறந்தது காவிரிப்பூம்பட்டினம். தமிழ்நாட்டின் வணிகர்களுக்குள் வாணிகத்திற்கு இயற்கை வளமை வாய்ந்தவர் பூம்புகார் நகரத்துத் தனவணிகர். இங்ஙனம் இயற்கைப்பொருத்தம் வாய்ந்த வாணிகத்தின் சிறப்பை இக்கட்டுரையில் கழறவொண்ணாது. பழங்காலத்தின் வாணிகம், கைத்தொழில் முதலியன பூம்புகார் நகரத்தில் பொலிந்திருந்தன. காவிரிப்பூம்பட்டினத்தினுள்ளே நீண்ட கால்வாயொன்றமைத்து, அதனுள் மரக்கலங்கள் வந்து தங்குவதற்கான துறைமுகம் செவ்வனே அமைக்கப்பட்டிருந்தது. இத்துறைமுகத்தின்கண் அளப்பரிய பலபண்டங்கள் அந்நிய நாட்டினின்றும் கொணர்ந்து குவிக்கப்பட்டன. அவைகளுள் சிறந்தன என்னெனின்:—கடல் கடந்து வந்த குதிரைகளும், மிளகு மூட்டைகளும், மேருமலையில் பிறந்த மாணிக்கமும், பொன்னும், பொதிய மலையில் பிறந்த சந்தனமும், அகிலும், தென்கடலில் பிறந்த முத்தும், கீழ்க்கடலிற் பிறந்த பவளமும், கங்கையாலுண்டாகிய பொருள்களும் காவிரியாற்றின் பயனும், ஈழநாட்டின் உணவும், கடாரத்துண்டாகிய நுகரும்பொருள்களும், சீமை முதலிய தேயங்களினின்றும் வந்த கருப்பூரம் பனிநீர் குங்குமம் முதலியனவும், இன்னும் பல பெரும்பொருள்களும், நிலமகள் முதுகுநெளியும்படி திரண்டு, காவிரிப்பூம்பட்டினத்தின் நடுவிடத்தும், கரையினிடத்தும் இனிதாகத் தங்கியிருந்தன. இவற்றினை,

நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும்
காற்றின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப்பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப்பயனும்
ஈழத்து உணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெளிய ஈண்டி

என்னும் பட்டினப்பாலையின் பாட்டிகளைப்பார்த்து மகிழல் வேண்டும். இன்னோரன்ன பல்வேறு பண்டங்கள் வேறு வேறு தேயங்களுக்காக ஏற்றுமதியும் இறக்குமதியும் செய்யப்பெற்றன. பலபண்டங்களை இயற்கைப்பொருளாக அன்றிச் செயற்கைப்பொருளாகவும் ஏற்றுமதி செய்தனர். அங்ஙனம் ஆனவை அளவிறந்தவை. அவற்றுள் ஒன்றினைமட்டும் உள்ளத்தில் ஊன்றிக்கோடல் வேண்டும். அஃது என்னை? வீட்டுக் கைத்தொழில். அக்காலம் அமைந்த வீட்டுக் கைத்தொழில் சிறப்பைச் சொல்லவொண்ணுமோ? வீட்டுக் கைத்தொழிலினைப்பற்றிச் சங்க இலக்கியங்களில் சாலவும் சாற்றப்படுகின்றன. அவற்றுள்ளும் சிறந்தன நூற்றல் தொழிலும் நெய்தல் தொழிலுமாம்.



பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கையும்

என்றதில் "மயிர்" என்பதற்கு "எலிமயிர்" என அடியார்க்கு நல்லார் உரை கூறுகின்றனர். இதுகாலை வேறு உரோமங்களினால் ஆடைகள் நெய்யப்படுவதை அனைவரும் அறிவர். எலிமயிரால் ஆடைகள் நெய்யப்படுகின்றனவா? என்னும் ஐயம் நிகழ்கின்றது. பழங்காலத்தில் எலிமயிரால் நுண்ணிய ஆடைகள் நெய்யப்பட்டன என்பது உண்மை; உண்மை. எலிமயிரால் நெய்யப்பட்ட ஆடை குளிரைத் தாங்கும் வன்மை வாய்ந்தது. இதனைக் காஞ்சிப்புராணம் கழுவாய்ப்படலம் கூதிர்கால வருணனை கூறுமிடத்தில்,

அழற்றும் வெம்மைய அங்கராகமும்
செழித்த காரகில் செறித்த தூமமும்
இழித்திலா எலிமயிரின் போர்வையும்
கழித்திலார் அம்ரக்கணமும் யாவரும்

என எலிமயிரின் போர்வையைப்பற்றிச் சிறப்பித்துள்ளமை காண்க. இங்ஙனம் கணக்கற்ற வீட்டுக்கைத்தொழில்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்ந்து, அப்பண்டங்கள் ஞாலமுழுவதும் பரவின. இங்ஙனம் பரவுதற்குக் காவிரிப்பூம்பட்டினத்தில் வதிந்த தனவணிகரின் செல்வச் சிறப்பும் ஊக்கமுமே காரணமாகும். பட்டு, மயிர், பருத்தி முதலியனவற்றால் நூற்றல்தொழிலும், நெய்தல் தொழிலும் புறநகராகிய மருவூர்ப்பாக்கத்தில் நிகழ்ந்து வந்தன. இவ்வாறனவற்றைச் செய்யும் வேறு வேறு குலத்துவணிகர் மருவூர்ப்பாக்கத்தில் வதிந்து வந்தனர். பெரும் பண்டங்களைப் பிறநாடுகளுக்கு அனுப்புவதற்காக மரக்கலங்களை வைத்துள்ள தனவணிகர்கள் அகநகராகிய பட்டினப்பாக்கத்திலேயே வதிந்தனர். இத்தனவணிகர் காவிரிப்பூம்பட்டினத்தினின்றும் வேறு நாட்டினிற்குச் சென்று பெரும் பொருள் திரட்டி வந்தனர். சுமாத்ரா, ஜாவா, மலேயா முதலிய நாடுகளுக்குச் சென்று தனவணிகர் வாணிகம் செய்து வந்தமை, மணிமேகலையை மனமுறப் படிப்போருக்குச் செவ்வனே துலங்கும். இவற்றுள், ஜாவா என்பது சாவநாடு என இலக்கியத்துள் இயம்பப்படும். பெருங்குடியிற் பிறந்த தனவணிகர் வாணிகம்செய்யும் ஒழுங்கைப்பற்றிப் பட்டினப்பாலையில் பலபடப்புகழப்பட்டுள்ளது. என்னை,

வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம்குறைபடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல்கொண்டித் துவன்றிருக்கை

எனக்கண்டு கொள்க. இங்ஙனம் தமவும் பிறவும் ஒப்பச்செய்யும்வணிகரின் குணங்களைப்பற்றிக் கடைச்சங்ககாலத்ததாகிய திவாகரத்தில் பின் வருமாறு கூறப்பெற்றுள்ளன.

தனிமையாதல் முனிவிலனுதல்
இடனறிந் தொழுகல் பொழுதொடு
[புணர்தல்
உறுவது தெரிதல் இறுவதஞ்சாமை
ஈட்டல் வருத்தல் என்றிவை எட்டும்
வாட்டமில்லா வணிகர தியற்குணம்.

அக்காலம் வணிகருக்குச் சொல்லப்பட்ட இவ்வெட்டு குணங்களும் இக்காலத்திற்கும் ஏற்றதன்றோ? ஆயினும் அவற்றுள் "தனிமையாதல்" என்பது தனித்து வியாபாரம் செய்தல்; கூட்டு வியாபாரமுறை அன்று

எனப் பொருள்படும். கலங்களைக் கொண்டு கடலிற் சென்று கணக்கற்ற வியாபாரஞ்செய்தோருள் கூட்டு வர்த்தகமுறை இன்றென எங்ஙனம் கொள்வது? கூட்டு வர்த்தகமுறை அருகி, தனித்த வர்த்தகமுறை பெருகியிருந்தமையால், தனிமையாதல் என்னும் சூத்திரம் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல" எனும் கொள்கையுடையார்க்குத் தனித்த வர்த்தகம் கூட்டுவர்த்தகமாதல் புதுமையும் அன்று; கூட்டுவர்த்தகம் தனித்த வர்த்தகமாதல் பழமையும் அன்று; இங்ஙனம் பெருகிய தனிவர்த்தகமுறையிலோ, அருகிய கூட்டுவர்த்தகமுறையிலோ,காவிரிப்பூம்பட்டினத்துத் தனவணிகர் வாணிகம் செய்து வளம்பெற வாழ்ந்து வந்தனர்.

௧௯. வணிகரின் பட்டப்பெயர்.

சங்கத்தமிழை எங்கெங்கு திருப்பிப்பார்க்கினும் அங்கெல்லாம் வணிகர் எனும் பெயரைக்கண்டுகளிக்கலாம். மேலும், பல இடங்களில் வணிகர் என வழங்கவேண்டுமிடத்தில் "பாதர்" என்ற சொல்லே பயிலப்படுகின்றது. "பாதர்" என்பதற்கு உரைகாரர் அனைவரும் ஒருங்கே வணிகரென்றே பொருள் கொண்டனர். ஆனல் செட்டிகள் என்ற பெயரும் மணிமேகலை உ௩-வது காதையில் "கம்பளச் செட்டி" என வழங்கப்பெறுகின்றது. செந்தமிழ்ச்சரித்திரமாகிய சிலப்பதிகாரக்கதாநாயகர்கள் வணிகர்குலக் கோவலனும் கண்ணகியுமே யாவர். இவர்களைப்பற்றிக் கூறுமிடங்களினெல்லாம் இளங்கோவடிகள் "பெருங்குடிவணிகன்" "உரைசால் சிறப்பின் அரசுவிழை திருவின் பரதர்" என வணிகரின் குலத்தையும்செல்வத்தையும் பெருமையாகவே சிறப்பித்துச் சொல்லுகின்றனர். இங்ஙனம் பெருங்குலத்தில் தோன்றிய தனவணிகரின் இயற்பெயரும் சிறப்புப் பெயரும் வேறு வேறு வகையாக விருந்தன. மாசாத்துவன், சாயலன், கோவலன் இவை இயற்பெயர். மாநாயகன், கம்பளச்செட்டி, இவை சிறப்புப்பெயர். இவருள் மாசாத்துவன் கோவலன் தந்தை; மாநாயகன் கண்ணகியின்தந்தை. மாசாத்துவன் என்னும் இயற்பெயருள்ள கோவலன் தந்தைக்கு "இருநிதிக்கிழவன்" எனும் சிறப்புப் பெயரும் உண்டு. இயற்பெயர் அன்றி சிறப்புப் பெயராகிய இருநிதிக்கிழவன், மாநாய்கன் என்பன, பின்னர், அன்னோரின் குலம், குணம் தனம் இவற்றின் சிறப்பினல் இடப் பட்டபெயர்களாகும். அங்ஙனமே செட்டிகள் என்று பெயர்வைப்பதும் அக்காலம் ஒரு சிறப்புப்பெயராகவே கொண்டிருந்தனர்.

இயற்கையும் செயற்கையுமான பண்டங்களைக் கொண்டு வாணிகம் செய்து, பெரும் பொருள் படைத்த வணிகரைத் தமிழரசர் பெரிதும் பாராட்டி வந்தனர். வாணிகத்தால் செல்வமும் புகழும் சிறக்கப் பெற்ற வணிகர் "எட்டி" என்னும் அரும் பட்டமும் அதற்கடையாளமாகப் பொற்பூவொன்றும், அக்காலம் தமிழரசரால் அளிக்கப்பெற்றனர். மணிமேகலை உ௨-வது காதையில்,

வாணிகமரபின் வருபொருள் ஈட்டி
நீள் நிதிச் செல்வனய் நீள் நிலவேந்தனல்
எட்டிப்பூப்பெற்று இருமுப்பதின்யாண்டு
ஒட்டிய செல்வத்து உயர்ந்தோனுயினன்.

எனத் தருமதத்தன் எனும் தனவணிகனைப் புகழ்ந்து கூறப்பெற்றிருத்



தல் காண்க. தனவணிகர்க்கே உரிய இந்த எட்டி என்னும் பட்டம் வைத்தழைத்தல் இயற்பெயருக்கு முன்னரோ பின்னரோ என ஐயம் நிகழலாம். சிலப்பதிகாரம் அடைக்கலக் காதையில், சாயலன் என்னும் தனவணிகனைப் பற்றிச் சொல்லும்பொழுது "எட்டிசாயலன்" என எட்டி என்னும் பட்டப்பெயர் இயற்பெயருக்கு முன்னரே வைத்தழைக்கப்பட்டுள்ளது. இங்ஙனமே மணிமேகலையிலும் "எட்டிகுமரன்" என ஓர் குமரன் அழைக்கப்படுகின்றனன். இங்ஙனம் இயற்பெயரும் சிறப்புப்பெயரும் பட்டப்பெயரும் ஆகிய பெயர்கள், அக்காலம் பெருங்குலத்தில் தோன்றிய தனவணிகர்க்கு வழங்கப் பெற்றன.

௨௦. வேதவணிகர்.

காவிரிப்பூம்பட்டினத்துத் தனவணிகருக்குள்ளே வேதவணிகரென்னும் ஒரு பகுதியினரும் இருந்தனர். பட்டினப்பாலையில் வரும்,

நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்

எனும் அடிகளின் விசேடவுரையில் "நன்னெஞ்சினோர் என்றது ஆண்டுறையும் வேதவணிகரை" என வேதியராகிய நச்சினார்க்கினியரே நவில்கின்றனர். தொல்காப்பியம் புறத்திணை இயலில்,

அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்

என்னும் சூத்திரத்துள் "இருமூன்று மரபின் ஏனோர்" என்பது வணிகர் என்றும், இருமூன்றுவன:—ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம், என அறுவகை இலக்கணம் என்றும், நச்சினார்க்கினியர் உரைக்கின்றனர். ஆகையால், வேதம் ஓதுதலும் வணிகர் தொழிலுள் ஒன்றென்பது பெறப்பட்டது. இங்ஙனம், தனவணிகருக்குள்ளே ஒரு பகுதியினர் வேதமோதிக் கொண்டிருந்தமையான், அவரை வேதவாணிகர் என அழைக்கலாயினர். இங்ஙனமே, மக்கள் கூட்டத்தினின்றும், வேதமோதிக்கொண்டிருந்த ஓர்பிரிவினரை, வேத அந்தணர் எனப்பழங்காலத்தில் பகுத்தனர். அஃதெங்ஙனமாயினும் தனவணிகர் பெருங்குலத்தில் வேதவணிகர் எனும் பெயர்பெற்ற வேதியர் இருந்தனர். இஃது உண்மை; உண்மை. அவ்வேதவணிகரின் இயற்பெயரோ சிறப்புப் பெயரோ இதுவெனத் திட்டமாகத் தெரியவில்லை. ஆயினும் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் பெயர்களைக் கொண்டு, அவர் வேதவணிகரோ என ஆராய்தல் வேண்டும். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் என இரண்டு வணிகர் குலப் புலவரின் பெயர்களும் பாடல்களும் எட்டுத்தொகையுள் பல தொகைகளில் பயிலப்படுகின்றன. அன்றியும் திருவள்ளுவமாலையில், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடிய செய்யுள் ஒன்றுண்டு. அச்செய்யுளில் திருக்குறளை வேதத்திற்கு உவமிக்கும் முகத்தால்,

ஐயாறு நூறும் அதிகாரம் மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—
பொய்யாது
தந்தான் உலகிற்குத் தான் வள்ளுவனுகி
அந்தாமரை மேலயன்

என மெய்யாய வேதப்பொருள்விளக்குவது திருக்குறளே எனச் செப்புகின்றனர். வேதத்தின் மெய்யாய பொருள் செவ்வனே விளங்காமலிரு

ப்பின், காரிக்கண்ணனர் வேதப்பொருளும் திருக்குறட் பொருளும் ஒன்றென்பரோ? ஆகையால் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனர் செங்கண்ணனர் போன்ற வணிகர் குலப்புலவரை வேதவணிகரெனும் வேதியர் என்பதில் ஐயம் உண்டோ? காரிக்கண்ணனர் அக நானூற்றில்,

> கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெரு
> [ந்துறை

எனத் தம்மூர்க் காவிரிப்பூம்பட்டினத்தின் துறைமுகத்தைச் சிறப்பித்துப்பாடுகின்றமையால், இவர் சிறந்த தேசபக்தியும் பெற்றவரானர்.

## உக திருமணம்.

தமிழ்நாட்டின் பண்டைக்காலமண நிகழ்ச்சிகள் பெரிதும் சீர்திருந்தப்பெற்று, ஓர் வரம்பிற்கு வந்தது சிலப்பதிகாரக்காலத்திலேயாம். சிலப்பதிகாரத்திற் செப்பிய மணநிகழ்ச்சி, பொதுவாகத் தமிழ்நாட்டின் மணநிகழ்ச்சியைக் குறிப்பதாயினும், சிறப்பாகப் பெருந்தனவணிகர் மணநிகழ்ச்சியினையே மாண்புறச் சொல்லுவதாகும். எங்ஙனமெனின், சிலப்பதிகாரத்தின் சிறந்த தலைவர்களாகிய கோவலனும் கண்ணகியும் பெருந்தனவணிகர் குலத்திற் பிறந்தவர்களன்றோ? அத்தலைவர்களின் மணநிகழ்ச்சி மங்கலவாழ்த்துப் பாடலுள் பின்வருமாறு கூறப்பெற்றுள்ளது. "கோவலன் தந்தை மாசாத்துவனும் கண்ணகியின் தந்தைமாநாய்கனும் ஆகிய இருபெருங்குரவரும், தம்மக்களிருவருக்கும் திருமணம் நிகழ்த்துவான், ஒரு நாள் ஓரிடம் மகிமகிழ்ந்து கூடினர். தம்மக்களின் மணநிழ்ச்சியை மாநகரிலுள்ளார்க்கு அறிவித்தற்காகத் தம்மரபின் வழக்கப்படி, சிலமகளிரை யானையின் மேலிருத்தி அத்திருமண நிகழ்ச்சியை ஊரெங்கும் அறிவித்தனர். அதுகாலை, நகரெங்கும் முரசு, முருடு, பணிலம் முதலிய பல வாத்தியங்கள் ஒலித்தன. பின்னர், சந்திரன் உரோகிணி நட்சத்திரத்தோடு சேர்ந்திருந்த நன்னாளிலே, நீலவிதானத்து நித்திலப் பூம்பந்தலின் கீழே, அருந்ததியன்ன கண்ணகியையும் கோவலனையும் வேத விதிப்படி, மாமுது பார்ப்பான் சடங்குகள் செய்ய, ஓமத்தீயை வலஞ்செய்வித்துத் திருமணம் நிகழ்த்தினர்கள். அதன்பின், சில மகளிர் மங்கல விளக்குகளையும், பாலிகைகளையும், நிறைகுடங்களையும் ஏந்தி, சாந்தினையும், சுண்ணத்தினையும், மாலையினையும் சூடி, கண்ணகியையும், கோவலனையும் மங்கல நல்லமளி ஏற்றினர். மணமக்களுக்கு மங்கலமுண்டாகவேண்டுமென்று வாழ்த்தினர்.

இத் திருமணத்தைப் பிராசாபத்தியமென்பர் அடியார்க்கு நல்லார். பிராசாபத்தியமாவது:— "மகட்கோடற்குரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது" என்பது தொல்காப்பிய உரை. அஃதாவது:— மணமகன் வீட்டார் கொடுத்த பரிசத்தின் இரட்டிப்புப் பெண்வீட்டார் தம்மகளுக்குக் கொடுத்து மணம் செய்வித்தல் என்பதாம். இத்திருமணம் நிகழ்ந்தபொழுது கோவலனுக்கு வயது பதினறு, கண்ணகிக்கு வயது பன்னிரண்டு. இப்பிராசாபத்தியத் திருமணமே காவிரிப்பூம்பட்டினத்துத் தனிவணிகப் பெருமக்களால் பெரிதும் போற்றப்பெற்று வந்தது. திருமணம் நிகழ்ந்த சிலநாட்களுக்குப் பின்னர், மணமகனின் தாயார் தம்



மகனும் மருமகளும் இல்லறம் நடத்தவேண்டி, அவ்விருவரையும் வேருக இருந்து வாழும்படி செய்வள். இங்ஙனமே கோவலனும் கண்ணகியும் தனிமையாகவிருந்து மனையறத்தை மகிழ்வுடன் நடத்தினர். இல்லறம் நடத்தும்பொழுது, பொருளீட்டுதற்கோ, அன்றி வேறு தொழில்களுக்கோ, பிறநாடுகளுக்குப் போகவேண்டியிருப்பின், தம்மனமொத்த மனைவியரையும் உடனழைத்துக்கொண்டே போவர். இவ்வுண்மை

> முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
> வாரிருங்கூந்தல் வயங்கிழை ஒழிய
> வாரேன் நெஞ்சே.

எனும் பட்டினப்பாலை அடிகளை ஆராய்வோருக்கு நன்கு புலப்படும்.

மங்கலவாழ்த்துப் பாடலில் கோவலன் கண்ணகியின் கழுத்தில் திருமங்கலியம் அணிந்ததாகச் சொல்லப்படவில்லை. மணமகன் மணமகளின் கழுத்தில் திருமங்கலியம் அணிவது திருமணச்சடங்குகளில் சிறந்த சடங்கன்றோ? மங்கலவாழ்த்துப் பாடலில் திருமண நிகழ்ச்சி சுருக்கமாகச்சொல்லப்பட்டது. ஆகையால், மங்கலவாழ்த்துப்பாடலில் திருமங்கலியச்செய்தி இல்லாமையினாலேயே திருமங்கலியம் அணியும் வழக்கம் இன்றெனக்கொள்ளவொண்ணுது. மனையறம் படுத்தகாதையில் கோவலன் கண்ணகியின் அழகினைப்பாராட்டுவதாக,

> நறுமலர்க்கோதை! நின்னலம்பாராட்டுநர்
> மறுவின் மங்கல அணியே அன்றியும்
> பிறிதணி அணியப் பெற்றதை எவன்
> [கொல்

எனும் அடிகளின் அருமையை ஆய்தல் வேண்டும். மங்கலஅணி மங்கலியம்.

திருமணச் சடங்குகளில் திருமங்கலியம் தரித்தல் தமிழருக்கே உரிய பண்டைக்கால வழக்கம். புறநானூறு கஉஎ-வது பாட்டில்,

> ஈகையரிய இழை அணிமகளிர்

என்னும் தொடருக்குக் "கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை யணிந்த மகளிர்" என்னும் உரையினையுங்காண்க. இங்ஙனம் தமிழர் திருமங்கலியத்தைத் திருமணத்தின் அறிகுறியாகக் கொண்டிருந்ததைப்போல் ஆரியர் கொண்டிருந்தனரென்று தெரியவில்லை. எங்ஙனமெனின் ஆரியர் விவாகமுறை, ஒவ்வொன்றிற்கும் மந்திரங்கள் இருக்கின்றன. ஆனல் திருமங்கலிய சூத்திரம் தரித்தற்கு மாத்திரம் மந்திரங்கள் காணப்படவில்லை. பாணிக்கிரகணமே ஆரியவிவாகத்தின் கொள்கையாம். இக்கொள்கையினைத் தழுவியே, சிந்தாமணியில் இலக்கணையாரின் மணங்கூறப்பட்ட இடத்தும், இராமயணம் கடிமணப்படலத்தும், ஆண்டாள் அருளிச்செய்த "வாரணமாயிரம்" என்னும் திருப்பதிகத்தும், மங்கலியம் தரித்தல் மறக்கப்பட்டிருத்தல் வேண்டும். அவை முற்றும் ஆரியர் விவாக வழக்கத்தினை மேற்கொண்டே இயற்றப்பட்டதாகும். பண்டைக்கால ஆரியர் மங்கலியம் தரிக்கும் வழக்கம் இன்மையாயினும், தமிழரின் மங்கலியம்தரிக்கும் மாண்புற்ற வழக்கத்தினைக்கண்டு, பிற்காலத்து ஆரியர் மங்கலியம் தரிக்கும் வழக்கம் கைக்கொண்டனர். இங்ஙனம் தமிழருக்கே உரிய திருமங்கலியம் தரிக்கும் பெருமை காவிரிப்பூம்பட்டினத்துத் தனவணிகரின் திருமணத்தால், செவ்வனே தெரியலாயிற்று.

### ௨௨. உணவு.

காவிரிப்பூம்பட்டினத்து மாந்தர் இவ்வகையான உணவினையே உட்கொண்டாரென வரம்பு கோலுவதற்கு வகையுண்டோ? அஃது எங்ஙனே உரைப்பது? ஆயினும் உணவை இருவகையாகப்பிரிக்கின் ஒருவகை காணலாம். அப்பிரிவு சுத்த உணவு அசுத்த உணவு என்பதாம். அதனை சைவ உணவு அசைவ உணவு எனவும் இக்காலத்தார் இயம்புவர். இங்ஙனம் சுத்தம் அசுத்தமென்னும் இருவகை யுணவினையும் உட்கொண்டமாந்தர் பட்டினத்தில் பல்கியிருந்தனர். அசுத்த உணவை உட்கொண்ட அறிவிலிகளைப்பற்றி ஆராய்ச்சி ஏன்? சுத்த உணவை உட்கொண்ட தூயரைப்பற்றியே பேசல்வேண்டும். அத்தூய உணவினை உட்கொண்டோர் யாவர்? பெருங்குடியில் பிறந்த தனவணிகரே யாவர். இதனைத்திண்ணமாகக்கொள்வதற்குச்சிறந்த ஆதாரம் உண்டு. சிலப்பதிகாரம் செப்புவதெல்லாம் பெருந்தனவணிகர் சிறப்பேயாதலான், உணவினைப்பற்றியும் உரைக்காமலிருக்குமோ? கோவலனும் கண்ணகியும் மதுரையில் மாதரியின் மனையில், புதுவிருந்தினராக இருக்கும்பொழுது, மாதரி தன்மகள் ஐயை என்பவளை நோக்கி, இக்கோவலனும் கண்ணகியும் "சாவகநோன்பிகள்;" ஆகையினால், அவர்க்கு வேண்டுவன சமைத்தற்குக் கொடுப்பாயாக என்றனள். அங்ஙனமே ஐயையும் செந்நெலரிசி, பாகற்காய், வெள்ளரிக்காய், மாதுளங்காய், மாம்பழம், வாழைப்பழம், தம்மிடத்துள்ள பால்,நெய்இவற்றினைக்கொடுத்தனள். இங்ஙனமே

*சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்*

... ... ... ... ... ... ... ... ... ... ... ...

கோளிப்பாகற் கொழுங்கனித்திரள்காய்
வாள்வரிக்கொடுங்காய்மாதுளம் பசுங்காய்
மாவின்கனியொடு வாழைத் தீங்கனி
சாலியரிசி தம்பால் பயனொடு
கோல்வளைமாதே கொள்கெனக் கொடுப்ப

என இளங்கோவடிகள் இசைக்கின்றனர். "சாவகநோன்பு" என்பதற்கு அடியார்க்கு நல்லார் "துறவாத விரதங்காத்தல்" என உரைக்கின்றனர். ஆகையால் நோன்பு என்பது என்னை? அது தமிழ்க்கிழவியார் அருளிச்செய்த "நோன்பு என்பது கொன்று தின்னாமை" என்னும் தூய விரதமேயாகும். இங்ஙனம் கோவலன் கொல்லாவிரதம் தாங்கித் தூய உணவினையே உட்கொண்டனன். தாலாபூலிக நியாயத்தான் கோவலனைப் போன்றே, மற்றைப் பெருந்தனவணிகரெல்லோரும், சுத்த உணவினையே உட்கொண்டனர் என்பதில் ஐயம் உண்டோ? உண்டெனின், ஒரே ஒரு சான்றுண்டு. அதனைக்கண்டேனும் ஐய மகற்றல் வேண்டும். என்னை.

வலைஞர் முன்றில் மீன் பிறழவும்
விலைஞர் குரம்பை மாவீண்டவும்
கொலை கடிந்தும் களவு நீக்கியும்

எனும் அரும்பெறல் பட்டினப்பாலையடிகளைக் காணும் பொழுது வேறு சான்றும் வேண்டுமோ? காவிரிப்பூம்பட்டினத்துப் பெருந்தனவணிககுமரர் வலைஞர் வீட்டிற்குச் சென்று, அவர்கள் பிடித்த மீன்களைப் பின்னரும் தண்ணீரில் பிறழும்படியாக விட்டுவிடச் செய்தும், இறைச்சி விலைஞர் வீட்டிற்குச் சென்று, அவர்கள் பிடித்த விலங்குகளைப் பின்னரும் திரியும்படியாகச் செய்தும், கொலையை நீக்கியும், களவினைக்கடிந்தும்,



அரும்பெருந் திருப்பணிகளைச் செய்து வந்தனர். இங்ஙனம் கொலை களவு நீக்கும் தூய திருப்பணியை மேற்கொண்டிருந்த பெருந்தனவணிகர் அசுத்த உணவினை உண்ணவே உண்ணார். சுத்த உணவினை உண்டு, சுத்த ஆடையினை (தம் நாட்டு ஆடையினை) உடுத்தி, சுத்தவாழ்க்கையினையே மேற்கொண்டு, காவிரிப்பூம்பட்டினத்துத் தனவணிகர் களிப்புடன் வாழ்ந்திருந்தனர். காவிரிப்பூம்பட்டினமும் கடற்கரையின்கண்காட்சிபெற்றிருந்தது.

கற்புக் கடவுள் கண்ணகியைப் பெற்றெடுத்த [
பொற்புக் குலத்தின் பெயரோதகா ணம்மானை
பொற்புக் குலத்தின் பெயரோ உலகெல்லாம் [
நிற்குந்தனவணிகர் நோகுலங்காணம்மானை
நிறைந்ததனவணிகர்சீர் நிகழ்த்தேலோ [ம்மானை.

---

# குமரன்.

பண்டிதை—ந. பத்மாசனி அம்மாள்.

என்றும் இளையான் என்னும் பொருளினனாகிய குமரன் என்னும் திருநாமத்தையுடைய அறுமுகப்பெருமானது திவ்விய சரிதங்களைக் கூறும் நூல்களெண்ணில. அந்நூல்களெல்லாம் அப்பெருமானுடைய சரிதத்தைச் சிற்சில வேறுபாடுகளுடன் கூறுகின்றன. ஆனாலும் கந்தப்புராணத்துட் கூறப்பட்ட சரிதப் போக்கையே சாதாரணமாக நம்மனோர் பலரும் அறிந்திருக்கின்றனர். பல்லோரும் அறிந்துள்ள ஒன்றைப் பின்னும்வரைதலானுண்டாகும் "நின்றுபயனின்மை" யென்னும்குற்றத்தை யடைதற்கு நமது "குமரன்" விரும்பமாட்டானாதலால், ஆங்கதை விடுத்து ச்சங்கத்தமிழ் நூல்களுட் கூறப்பட்டிருக்கும் எம்பெருமானார் திருவவதார சரிதையையும், அக்கடவுள் அமர்ந்தருள்கின்ற ஸ்தலங்களின் வளங்களையும் மற்றும் பிற பல சிறப்புக்களையும் அச்சங்க நூல்களிற் கூறப்பட்ட விதமே ஈண்டுக்கூறுவாம்.

முன்னொருகாலத்திலே பிரமதேவனாகியபரகன் செலுத்தவேதங்களாகியகுதிரைபூண்ட பூமியாகிய தேரின் மேலேறி வாசுகியென்னும் பாம்புநாணாகவும் இமையமலை வில்லாகவும் வெள்ளி, பொன், இரும்பு என்று சொல்லப்படுகின்ற மூன்றுமதில்களும் ஒரு நெருப்பாகிய அம்பினால் வெந்துபோக அழித்து, தேவர்களுக்குச் செய்யும் யாகத்தில் அவிப்பாகத்தை யுண்ட ஈசன் "உமையொடு புணர்ந்தகாமவதுவையுள், அமையாப் புணர்ச்சியமைய", இந்திரனானவன் நெற்றியில் இமையாத திருக்கண்களையுடைய அக்கடவுளிடத்தில் "இதனால்தோன்றிய கருவையழிப்பாயாக" வென ஒருவரம் வேண்டினன். அக்காலையில் மழுப்படையையுடைய ஈசன் வாய்மை யுடையோனாதலின் யாகாதிபனாகிய தேவேந்திரனுக்குத் தான் கொடுத்த வரத்தை மாற்றாதவனாகிஏழுலகும்தன்மெய்ம்மையை விளக்க அக்கருவைப் பல கண்டமாக வெட்டினன். அவ்வாறாக வெட்டப்பட்ட குமாரக்கடவுளுடைய திருமேனியாவதற்குரிய கரு தேவர்களுடைய சேனைக்குத் தலைமையாம் ஒருவனா

கும் என்பதைச் சமாதியாலுணர்ந்த எழுதெய்வ முனிவர்களும் இந்திரனிடத்திற் சென்று அவனுக்குத் தன் பம் வாராமையை அறிவித்து அவனிடத்தில் அக்கருவைத் தாம்வாங்கிச் சென்றனர்.

அக்கருவைக்கொண்டு சென்ற மாதவர்கள் ஈசனுற்கண்டமாக்கப்பெற்ற வசிதடிபாகிய அதனைத் தம்பத்தினிமார் தரித்துச் சமைவிப்பாராலுல் நிறைவயிற் சாலார், ஆதலால் ஈசன் கடனாகிய அக்கினியே தரிக்கவென மதித்து, ஓமாக்கினியை வளர்த்து அதன்கண் அவியுடன் சொரிந்தனர்; சொரிந்தபோது அவ்வோமகுண்டங்களிலெழுந்த முத்தீக்கொழுவுதலாலுண்டான புரோடாசமாகிய அதனை, ஆகாசத்தில் வடபுறத்தில் விளங்குகின்ற தெய்வக் கற்பினையுடைய அருந்ததியொழிந்தமற்றையகார்த்திகைப்பெண்கள் அறுவரும் உண்டனர். அவ்வாறாக உண்டகுற்றமற்ற கற்பினையுடையகார்த்திகைப்பெண்கள் இமையமலையிலுள்ளசரவணத்தடாகத்தில்தாமரைப்பூம்பள்ளியின்மேல் ஆறுகுழந்தைகளைப்பெற்றனர். குழந்தைகள்பிறந்த அத்தினமே இந்திரனவன் பகைமிகுதியால் முன்னே முனிவர்களுக்குத் தான் கொடுத்த வரத்தையும் கடந்துவந்து வச்சிராயுதத்தினுலெறிந்தான். அக்காலையில் ஆறு குழந்தைகளும் ஆறுமுகமுள்ள ஒரு பிள்ளையாகி அவ்விந்திரனுடனேயுத்தஞ்செய்தன. பிள்ளைப்பருவமுடைமையால் வளரா உடம்பினையுடைய அத்துமாரநாயகன் செய்த யுத்தத்திற்கு இந்திரன் தோற்றமையால், இனிமேல் இவனே நம் சேனைக்குத் தலைவனுமெனவெண்ணி, அக்கினிதேவன் தன் மெய்யினின்றும் பிரித்துக் கோழியைக்கொடுத்தான். இந்திரன் மயிலைக்கொடுத்தான். இயமன்வெள்ளாட்டு மறியைக் கொடுத்தான். மற்றத்தேவர்கள் வில்லு, தண்டு, வாள், ஈட்டி, குடாரி, மழு, அக்கினி, மாலை, மணியாகிய இவற்றைக்கொடுத்தனர். இவ்வாறாக இவர்கள் தத்தம் தேகங்களினின்றும் பிரித்துக்கொடுத்தவற்றையெல்லாம் வாகனமாகவும், துவசமாகவும் பல்வேறு விதமான படைகளாகவுங்கொண்டு தேவசேனைக்குத் தலைவராகி அத்தேவர்களுக்குப்பகைவனை சூரபன்மன் முதலினோரை வதைத்துத் தேவர்களுக்கு அருள் செய்தார்.

கிருபாசமுத்திரமாகிய குமரேசப்பெருமான் திருப்பரங்குன்று, திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறுபடை வீடுகளில் வீற்றிருந்து அன்பருக்கருள் செய்வர். இப்படை வீடுகளின் அழகை வியந்து பற்பலவிதமாக நக்கீரனூர், நல்லந்துவனூர் முதலான பற்பல ஒண்டமிழ்ப்புலமையாளர்கள் வர்ணித்திருக்கின்றனர். அவைகளைக் கற்போரும் கேட்போரும் முருகப்பெருமான் திருவடி நீழலை யடைந்தாலன்ன ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்துவரென்பது திண்ணம். ஆயினும் தமிழ்ச்சுவையறிந்த அப்பெரியார்கூற்றுக்களை விரித்தெழுதுதல் அறிவிற்சிறியேனாகிய என்னால், இயலத்தகாதொன்றன்றாகலானும், சஞ்சிகையும் இடந்தாராதாகலானும், இயன்றவரையில் சுருக்கியெழுதுகின்றேன். அழகின் இறைவன் அப்பெருமானுதலால் அழகின் திறத்தைப்பறிதல் அப்பெருமானை யுணரும் வழியாகும்.



## முதலாவது திருப்பரங்குன்றம்.

பிரமா, விஷ்ணு, உருத்திரன் முதலான பற்பல தேவர்களும் தெய்வமுனிவர்களும் அவுணரும் பிறரும்முருகப்பெருமானைத் தரிசித்து அவனருளைப்பெறும் நிமித்தமாகப் பூமியில் வந்துறையு மிடமாகையால் அப் பரங்குன்றானது தேவர்களுடைய பழைய இடமான இமையமலையை யொத்திருக்கும். அவ்விமயமலையின் கண்ணே சிறந்து விளங்கும் தாமரைமலர்கள் நிறையப்பெற்ற சரவணத்தடாகத்தை யொத்திருக்கும் அங்குள்ள அருவிதங்கும் ஒழுங்குபட்ட சுனைகள். அக்குன்றின்கண் படியும் மேகத்தின் சப்தமானது குமாரக்கடவுளுடைய யானை பிளிறும் ஒலிபோலும். மேகத்தினெலியைக் கேட்ட கோழி மலையதிரக் கூவுதலானும் மதமிகுந்த யானை அக்குரற்குமாறாகப்பிளிறுதலானும் மலைமுழஞ்சினுண்டாகுமெதிரொலி அவற்றொடுமாறுபடா நின்றது: எழுதுளைவங்கியம் ஐந்து துளைவங்கியம் யாழ் என்பனவற்றில் பிறக்கின்ற இசைச்சுருதியையொத்து, தும்பியும்வண்டும் ஞிமிறும் பாண்செய்ய, சுனைகள் புஷ்பங்களையலர்த்த கொன்றைதாராகிய இணர்தலை மலர, கொடிமலர்கள் பரிமளமுடையவாய்மலர, அலர்ந்த காந்தண்மலர்கள் எவ்விடமும் நறுமணம் வீச, மற்றைய பல புஷ்பங்களும் தேன் துளியைச் சொரிந்து பரிமளிக்க, அப்பரிமள கந்தங்களோடு தென்றலையும் தலைமையையுடையது, குன்றத்தொடு கூடலிடை வழி.

அக்கூடலம்பதியின் மணிநிற முரசினெலி யெழுந்ததாக, காற்றினலலைப்புண்ணும்கடலொலிபோலவும் அக்கடலில் நீரையுண்ணும் மேகக்குரல் போலவும் இந்திரனது உருமேறு போலவும் அம்மன்றல் முரசம் அதிர அதிர அதற்கு மாறுமீருக அதிர்கும் கிரௌஞ்சகிரியைப் பிளந்த ஒளி வேலையுடையானாகிய குமரனது பரங்குன்றம் முழங்கும்முழக்கம். (பரிபாடல். நல்லந்துவனூர் கூற்று)

மேகங்கள் மழையைப் பெய்தலினால் நிரம்பிய நீரையுடைய சுனைகள் புஷ்பங்களை யலர்த்தின. குளிர்ந்தவாசனை பொருந்திய கடம்பமலர்களிலுள்ள மகரந்தப்பொடிகளை ஊதுகின்ற வண்டினங்களின் சப்தம் பண்ணிசை போன்றன. மூங்கில்கள் கொடிச்சியர் தம்தோள்கள்போன்றன. வாகைப்பூப் போன்றகுட்டினையுடையமயிலினங்களின்குரல் பிரிந்தோரை "விரைந்துவம்மின்" என அழைத்தல் போலும். அன்றலர்ந்த கொன்றை மலர்கள் பொலந்தார் போல்வன. அழுகையையுடைய மகளிர்க்கு அது தீர்தற்பொருட்டுத் தாயர் புலிபுலி யென்று சொல்லுமாறுவேங்கைப்பூ இடமிடங்கள்தோறும் பரந்தன. இவைகளோடு நெருங்கியமுகைகளையுடைய காந்தள் அவிழ்ந்த இதழ் நிரைகள்தோறும் தோன்றிக் கொடிகளில் அலர்ந்திருக்கும் பவளம்போலும் சிவந்த பூக்கள் பரந்து கார்காலமாம்தன்மை மிக்கது, சுடர்வடிவேலரன பரங்குன்று. (பரிபாடல். கேசவனூர் கூற்று)

கோலப்படும் அக்கினியும் இசைக்கருவிகளும் சந்தனம் முதலான விரைகளும் அகிற்புகையும் கொடிகளும் ஒருங்கேவர, தாம் தேன்வினந்த மலர்களையும் குழைகளையும் பூத்தொழில்களையுடைய துகில்களையும், மணிகளையும், இலைவடிவான வேலாயுதங்களையும் தாங்கிவந்து கடிமாமாகிய கடம்பைத்துதித்தவராய் ஆ

அழகிய மயில்போலும் சாயலையுடைய வள்ளிநாயகியாரது திருமணச்சிறப்பு, பொன்னுலகத்து தெய்வயானையம்மையாரது திருமணச்சிறப்பைமாறுகொள்வது போலும். அறிவானும் வீரத்தானும் சிறந்த கூடல்மகளிரும் மைந்தரும் வைகறைக்காலத்து மண்ணுலகில் தருமத்தைப் பெரிதாகச்செய்து அதன் பயனைப்பெறவேண்டி தேவலோகத்துக்குச் செல்வாரைப் போல தமக்கேற்ற மாண்பமைந்த ஆடையாபரணங்களை யணிந்து தேர் குதிரை, முதலான வாகனங்களிலேறிக்கொண்டு பரங்குன்றுக்கும் கூடலுக்கும் இடையெல்லாம் நெருங்கியாத்திரை செல்கின்ற தண்மணலார்ந்த கானல்போலுர்வழி, அவர்தலைகள் இடைவெளியற மாலைபோல நிரைத்தலால் ஒத்தமலர்களை நெருங்கவைத்துக் கட்டிப் பூமிக்கிட்டமாலைபோலும.

அறிவு திருந்திய வழுதிமாமிலனைய மகளிருடனும் காரியக் கடனறிந்த அமைச்சர்களுடனும் கூடி நாடும் நகரும் தன்னையடையுமண்ணம் வந்து மலைமேலேறித் திருக்கோயிலை வலம்வரும் தோற்றம் சந்திரன்நக்ஷத்திரக் கூட்டங்களுடனே மகாமேரு மலையை வலம்வரும் தோற்றத்தை யொக்கும்.

மதப்பெருக்கினால் வண்டுமொய்க்கும் கபோலத்தையுடைய யானைகளை புரசைக்கயிற்றால் மரங்களிற்கட்டுவாரும் அவற்றிற்கு கரும்புக்கண்டங்களையிடுவாரும், குதிரைகளை வழியினீங்க வாங்குவாரும் தேர்களை வழியினின்றும் விலக்கி நிறுத்துவாருமாக, அவைகள் பரந்து இருக்கின்ற மலையின் கீழ்நிலம் வழுதியின் பாசறையை யொக்கும்.

இவ்வாறு வழுதியுடன் மலைமேலேறியவர் குரங்குகளுக்குபண்ணியங்கள் அளிப்போரும், முசுக்களுக்குக் கரும்பு கொடுப்போரும், வீணைகானஞ்செய்வோரும், குழலோசையை எழுப்புவோரும், யாழோசையை எழுப்புவோரும் யாழோசையுண்டானவுடன் அதன் தாளத்திற்கேற்ப முரசினோசையை யெழுப்புவாரும் அங்குள்ள சித்திரங்களைக்குறித்து வினவுவோரும், அவை இவை இவையென விடையளிப்போருமாகப் பலப்பல அழகுகளும் பொருந்தியிருத்தலால் செவ்விய மூங்கில்களையும் விரிந்தபாறைகளையுமுடையமலை சோபனமான நிலைமையை யுடைத்து. ஒருபேதைப்பருவத்தாள் தன் சுற்றத்தவரினீங்கி அங்குள்ள அழகுகளைக்காணும் விருப்பினால் கற்களினிடையிடைப் புகுந்து திகைத்து 'சிறந்தவரே! சிறந்தவரே! யான் வழி பிழைத்தேனெ'ன விளிக்க, அங்குள்ள முழைகள் எதிரொலி யுண்டாக்க அதனையறியாத அப்பேதை தன் சுற்றத்தாரும் தன்னையழைக்கின்றாரென நினைத்து அவ்வெதிரொலி யுண்டாகுமிடத்துச் சென்று ஆண்டுத் தமரைக்காணாது மீளுமிடத்தும் விளித்தலை மேவாநின்றாள். அதனால் அன்பர்தம் வாழ்த்தினையுவக்கும் குமரநாயகனது குன்றத்தின் இடவேறுபாடு சிறார்க்கும் மடமைசெய்தலையுடையது.

அங்குள்ள மரங்களின் நுனிவளைந்த சினைகளின்கணுள்ள பல்லவங்களைத் தாம் ஆடலன்பொருட்டு சுனைகளின் கண்ணே உதிர்ப்ப அவை அவ்வுதிர்த்த சுனைகளின்கண் எடுத்த தலையவாய் அலர்களும் முகைகளும் பொருந்தக்கிடப்ப அவற்றுள் அலலாபனத்துடன் பொருந்திய இசையினையுடைபராய், அலர்ந்த புஷ்பங்களினின்றும்சொரிகின்றமதுவினால்மரங்கள் நனையப்பெற்ற மலையின்கண்ணே உறைகின்றவர் தேவருலகத்தில் உறைதலையும் விரும்புவாரோ? ஒருபுறம் பாணர்களுடைய இனிய யாழோசையும், ஒருபுறம் வண்டுகள் சப்திக்கின்ற ஓசையும் ஒருபுறம்இனியகுழலோசையும், ஒருபுறம்பண்போல்ஒலிக்கும்தும்பிகளினோசையும், ஒருபுறம் முழவினோசையும், ஒருபுறம் மலையருவி ததும்புமோசையும் ஒன்றுடனொன்று மாறுபட்டொலிப்பன.

ஒரு புறத்தில் இனியபாடலைப்பாடுகின்ற விறலியர் ஒல்கி நடங்குவர். மற்றொருபுறத்தில் அவ்விறலியரது நடக்கம்போல் பூங்கொடிகள் காற்றினால் ஒல்கி நடங்குவன. ஒருபுறத்தில் விறலியர்பாடும் இசைப்பகுதிகள் நிறை குறையாகத் தோன்ற அவற்றோடு ஆடுகின்ற சிறப்பினையுடையமயிலினங்கள் ஆலுகின்ற ஓசை மாறுகொள்வன. இத்தகைய பல்வளங்களையுடையது முருகக்கடவுளுடைய திருப்பரங்குன்றம். (பரிபாடல் நல்லழிசியார் கூற்று)

மேகங்கள் முழங்குகின்ற சிகரமும் அதன்கணுள்ள கொடிமின்னும் குமாரக்கடவுளுடைய நுதலணியணிந்த யானையை ஒக்கும். மலையின் கண்ணே யெழுதப்பெற்ற அம்பலம் அம்பினது ஏத்தொழில் நிலைபெற்ற மாரவேள் சிரமச்சாலையையொக்கும். அங்குள்ள சூர் நிறைந்தசோலைகளும் மழையினால் நிறைந்த நீர் ததும்புகின்ற சுனைகளும் பூக்கள் நிறைந்திருத்தலால் அழகு மிக்கிருக்கும் தோற்றம் அம்மாரவேளுடைய கூரிய அம்பு நிறையப்பெற்ற தூணியையொக்கும். கார்வரவால் தோன்றுகின்ற காந்தட்குலைகள் நெருங்கியிருக்கும் அழகு, போருக்குத் தோற்றுக்கட்டுண்டவர் கையை யொக்கும். தும்பிகள்கட்டவிழ்க்கின்ற அழகையுடைய காந்தள் முகைகள் யாழ் நரம்பினது புரியை நெகிழ்ப்பார் கையை ஒக்கும். அழகிய மேகம் ஆர்ப்பரித்து இந்திரனது வானவில்லை வளைத்தது. மலையின்மேலுள்ள மரங்கள் அவ்வில்லுச் சொரிகின்ற கணைகளுளவாயின் அவற்றையொக்க மெல்லியமலரைப் பரப்பின. அம்மலையின் கண்ணே போர்புரிதலாலுண்டாகும் அரவம் போலத் தாளவொலியுடன் மற்றைய வாத்தியங்களினொலியும் சிறந்து மேகமுழக்கத்துடன் கலந்து குன்றத்தை யழகுசெய்தன. (குன்றமென்பது முருகவேள் கோட்டமும் அதனைச்சூழ்ந்தஇடங்களும்.) மலைச்சிகரங்கள் அருவி சொரிதலால் முத்தணிந்தாலொத்தன. குருவிகள் ஆக்குமாறு தினைக்கதிர்கள் விளைந்தன. சுனைகள், கரையினின்றும் சாய்ந்த வேழத்தை முட்டுவன. பலநிறமலர்கள் பொலிந் திருத்தலால் வளைந்து அழகமைந்திருக்கின்ற இந்திரவில்லை வளைத்த வானத்தை யொத்தவாய் வண்டேதும் அழகுடையவாயின. இத்தகைய பல்வளம் பொருந்தியது முருகவேள் திருப்பரங்குன்றம். (பரிபாடல் குன்றம்பூதனார் கூற்று)

முருகப்பெருமான் தமது பெருங்கருணைத் திறத்தால் சுவர்க்கலோகத்தில் உறைதற்கு ஏதுவாகிய விருப்பத்தைப் பூமியிலுங்கொண்டு அறிவுக் கதிகமான கடம்பினைமேவி தேவர்களெய்துகின்ற நுகர்ச்சியை மனிதருமெய்துக வெனத்தந்த திருப்பரங்குன்றத்தின் கண்ணே இயல்கின்ற

றுறக்கிடந்ததனை இது ஐந்தலை நாகமென்றும் அதனருகு முதிர்ந்த முளையுறக் கிடந்ததனை அவ்வாசின் மூத்தளமகனென்றும், இளமுளை யுறக்கிடந்ததனை அதன் இளம்பார்ப் பென்றும் இளையமகளிர் மருளா நிற்க அதனருகே பச்சிலையது இளங் கொழுந்தும் மகளிர்வாய்போல் மலர்ந்த ஆம்பலும் எருவைப்பூவும், காலங்குறியாது பூக்கும் கோங்கமலரும், அக்கோங்க மலருடன் மாறு கொண்ட நிறத்தையுடைய இலவமலருமாகிய இவைகளெல்லாம் தெற்றின மாலைபோல் மலர் நிறைந்தும் கோத்தமாலைகள் போல் நிறம்மாறுபட்டும் தொடுத்தமாலைகள் போல் இடையிட்டும் தூக்கிக்கட்டின மாலைகள்போல் நெருங்கியும் பூத்தலால் மயங்குகின்ற மலர்கள் பொலிந்திருத்தல் முருகவேள் பரங்குன்றமெங்கும் விடியற்காலத்துப் பலநிறத்து மேகமார்ந்த வானம்போல் பொலியும். (பரிபாடல் நப்பண்ணனார் கூற்று)

சிறு சதங்கை சூழ்ந்த ஒளிபொருந்திய சிவந்த அடியையும் திரண்ட காலையும் வளைந்து நுடங்கிய இடையையும் மூங்கில்போலும் தோளையும், இந்திரகோபத்தை யொத்த செந்நிறம் வாய்ந்த பூத்தொழிலமைந்த துகிலையும் பலமணிகள் கோத்த மேகலையையணிந்த நிதம்பத்தையும் கைபுனைந்தியற்றாத வனப்பையும் பொன் ஆபரணங்களையும் சேய்நிலத்தைக் கடந்து விளங்கும் குற்றம் தீர்ந்த நிறத்தினையுமுடைய சூரரமகளிர், கூந்தலிலே வெட்சிமலர்களை விடுபூவாகத்தூவி அதனிடையில் குவளையிதழ்களைக் கிள்ளியிட்டு சிதேவியென்னும் தலைக்கோலத்தையும் வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடத்திலே வைத்து நெற்றியின்கண்ணே சுறவின் அங்காந்தவாய்போலும் தலைக்கோலம்தங்கப்பண்ணிக் கொண்டையிலே சண்பகப்பூவைச் செருகி அதன்மேல் மருதம்பூக்களையிட்டு சிவந்த அரும்புமாலையை வளையவைத்து, காதில் நிறையப்பெற்ற அசோகந்தளிர்கள் மார்பிடத்தே யசையா நிற்க, சந்தனக்குழம்பை மார்பிற் பூசி அதன்மீது வேங்கைமலரில்நறுந்தாதையும்அப்பி விளவினதுசிறிய தளிர்களைக் கிள்ளி ஒருவர் மீதொருவர் தெறித்துத் தப்பாமற்பட்டபோது வெற்றியையுடைய கோழியை மேலாகவுடைய கொடி நெடுங்காலம் வாழ்வதாக வெனவாழ்த்தி, தெய்வமகளிர் பலருஞ்சேர்ந்து பாடியாடுஞ் சோலையி னழகையும், அழகிய சிறகுகளையுடைய வண்டுக் கூட்டங்கள் வயல்களிலே அலர்ந்திருக்கப்பெற்ற தாமரை மலர்களில் இராப்பொழுது துயின்று விடியற்காலத்தில் நெய்தற்பூவையூதி சூரியனுதித்த காலையில் சுனைப்பூக்களிற் சென்று ஆரவாரிக்கும் அழகையுமுடையது திருப்பரங்குன்றம். (திருமுருகாற்றுப்படை நக்கீரனார் கூற்று)

## ௨. திருச்சீரலைவாய்.

ஓடுங்கால் காற்றெழுந்தா லொத்த வேகத்தினையுடைய யானையிலேறி திருமுடியில் அழகிய மணிகள் பிரகாசிக்கவும் மகர குண்டலங்கள் சந்திரனைச் சூழ்ந்து நீங்காத நக்ஷத்திரங்கள் போலொளியைக் காலவும், தவத்தர்களது மனத்திலே தோன்றும் ஒளிபோன்ற நிறத்தையுடைய அறுமுகங்களிலே ஒருமுகம் உலக இருள் நீங்கும் வண்ணம் பல கிரணங்களைத் தோற்றுவித்தது. ஒருமுகம் அன்பர் வேண்டியவற்றைக் கொடுத்தது. ஒருமுகம் அந்தணர் செய்யும் யாகங்களில் தீங்குவாராதபடி நினையா நின்றது. ஒருமுகம் வேதங்களிலும் நூல்களிலுமுள்ள நுண்பொருள்களை யாராய்ந்து இருடிகள் ஏமுறும் வண்ணம் உணர்த்தித் திங்களென்னத் திசைகளெல்லாம் விளக்கியது. ஒருமுகம் தறுகுதல் கொண்ட திருவுளத்தோடு அசுரர் முதலியோரைப் பொன்றக் கெடுத்துக் களவேள்வியை வேட்டது. ஒருமுகம் குறமகளாம் வள்ளிநாயகியாரொடு நகையமர்ந்தது.

இவ்வாறாக ஆறுமுகங்களும் அத்தொழில்களிடத்துச் செய்யுமுறைமைகளைப்பயின்று நடத்துகையால், அவற்றுக்கேற்ப திருமார்பின் கண்ணே விளங்குகின்ற உத்தம லக்ஷணமாகிய சிவந்த மூன்று வரியினையும் தன்னிடத்தேவந்துவிழும்படி வாங்கிக்கொண்ட தோள் தம்முடையவலியினால் புகழ்நிறையப்பட்டு படைக்கலங்களை யெறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்குவன. (இனி அவைகள் போர்செய்யாக் காலத்து இங்ஙனமிருக்குமென அவற்றினியல்பு கூறுகின்றார்.) ஒருகை ஆகாசத்தியங்கும் தெய்வமுனிவர்க்குப் பாதுகாவலாகக் கொடுத்தது. ஒருகை மருங்கிலே வைத்தது. ஒருகை தோட்டியைச்செலுத்தியது. ஒருகை துடையின் மேலேகிடந்தது. இரண்டுகைகள் வேலையும் பரிசையையும் சுழற்ற ஒருகை மார்பிலே பொருந்த ஒருகை மார்பின் மாலையொடு சேர்ந்தழகுபெற, ஒருகை களவேள்விக்கு முத்திரை கொடுப்ப ஒருகை யொலிக்கின்ற மணியை மாறி யொலிக்கப்பண்ண; ஒரு கை மழையைப் பெய்வியாநிற்க, ஒருகை தெய்வமகளிர்க்கு மணமாலை சூட்ட அப்படியே அந்தப் பன்னிருகைகளும் முகத்தின் பகுதிக்கேற்கத் தொழில்செய்து, அந்தரதுந்துபியொலிப்ப, கொம்புவாத்திய மொலிப்ப சங்கு முழங்க, முரசத்தின் இடிபோலும் ஓசையுடனே மயில் அப்பெருமானுணைபால் கொடியிலிருந்து ஒலியா நிற்க ஆகாசமே வழியாக விரைந்த செல்வினை மேற்கொண்டு நன்மை யோங்கும் நன்மக்கள் புகழ்ந்த உயருஞ் சீரினையுடைய நாமனார் அலைவாய் என்னும் திருப்பதியிலெழுந்தருள்வர். (திருமுருகு நக்கீரனார் கூற்று.)

## ௩. திருவாவினன்குடி.

மரவுரியாலாகிய உடையினையும் வலம்புரிச் சங்குபோலும் வெண்ணிறமான நரைமுடியினையும், எக்காலத்தும் நீராடுதலால் அழுக்கற விளங்கும் வடிவினையும் மார்பினெலும்புகள் கோவை தோன்றி உலவும் உடம்பினையுமுடையாரும் மாதோபவாசத்தையுடையாரும் மாறுபாட்டுடன் செற்றமும் நீங்கப்பெற்ற மனத்தையுடையாரும் கற்றோரால் அறியப்படாத இயற்கையறிவையுடையாரும் பலவற்றையும் கற்றோர்க்கு எல்லையான தலைமையையுடையாரும் மனவருத்தம் சிறிது மறியப்படா இயல்பினையுடையாருமான இருடிகள் முன்னே செல்லவும் அழுக்கேறுத் தூய உடையினையும் மாலை சூழ்ந்த மார்பினையுமுடைய கந்தருவர்கள் இனிய யாழை வாசித்து மாந்தளிர் போலும் மேனியையும் பொன்னுரை விளங்கினாற்போலுந் தித்தியையுமுடைய குற்றமில்லாத கந்தருவ

மகளிருடன் விளங்கவும் பாம்புப்படும் படிபடிக்கும் சிறகினையுடைய கருடனைப் பணிந்த நீண்டகொடியினையுடைய திருமாலும், ரிஷபக்கொடியையுடைய உருத்திரனும் உமாதேவியார் விளங்கும் ஒருபாகத்தையும், முக்கண்ணினையுமுடைய சிவபிரானும் ஆயிரங்கண்களையும் அழகிய நடையினையும் தாழ்பெருந் தடக்கையினையுமுடைய இந்திரனும் நான்காகிய வேறுபட்ட இயல்பினையுடைய முப்பத்துமூவரும், பதினெண்கணத்தவரும், நக்ஷத்திரங்கள் பொலிந்த தோன்றினாலொத்த தோற்றத்தையும் மீன்களுலாவுமிடத்தில் காற்று எழுந்தாலொத்த செலவினையும் காற்றினிடை அக்கினி தோன்றினாற் போன்றவலியினையும் நெருப்புண்டாக இடி இடித்தாற்போன்ற குரலினையுமுடையாராகச் சேர்ந்து வந்து காணும்படியாக அருட்கற்பினையுடைய தெய்வயானையம்மையாருடன் திருவாவினன்குடியிற் சிலநாளிருத்தலுமுரியர். (திருமுருகு நக்கீரனர் கூற்று.)

௪. திருவேரகம்.

ஓதல், ஓதுவித்தல், வேட்டல்வேட்பித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய அறுவகைத்தொழிலினும் வழுவாதவரும் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியம் காத்தவரும், அறத்தைஎப்பொழுதுங்கூறுகின்ற கொள்கையினையுடையரும், இருபிறப்பினையுடையாருமான அந்தணர்கள் தாம்வழிபடும் காலமறிந்து தோத்திரங்களைக்கூறி, உச்சிக்கூப்பிய கையினையுடையாராய் ஆறெழுத்தாகிய மந்திரத்தை நாப்புடைபெயருமளவில் பயில உச்சரித்து வணங்க அதற்கு மிகமகிழ்ந்து திருவேரகத்துறைதலும்முரியன் (திருமுருகு நக்கீரனர் கூற்று.)

௫. குன்றுதோறாடல்.

சாதிக்காயை நடுவேயிட்டுத் தக்கோலக்காயைக்கலந்து காட்டுமல்லிகையையும் வெண்டாளியையும் கட்டிய கண்ணியையும் சந்தனமணிந்த மார்பினையுமுடையனாகி வேலனென்னும் குறவர்கள் சுற்றத்துடனே தேனாற் செய்யப்பட்ட கட்டெளிவையுண்டு மகிழ்ந்து தொண்டகச்சிறுப்பறையுடன் குரவையயர, தலையிற்சூடும் நறியமலர்மாலையையும், வண்டு வீழ்கின்ற கண்ணியினையும் இணைத்தமாலையையும் அணிந்தகூந்தலையும் கஞ்சங்குல்லையையும் மலர்களையும் முகைகளையும் இடையிட்டுத்தொடுத்த அழகிய தழையை யணிந்த இடையையும், மயில்போன்ற சாயலினையுமுடைய மகளிருடனே, சிவந்த ஆடையை யுடுத்துக்காதில் அசோகந்தளிரை யணிந்து வெட்சிமாலையைச்சூடிக் குழலூதிக் கொம்பைக் குறித்துச் சிறிய பல்லியங்களை யெழுப்பி மயிலையேறிச் சேவற்கொடியை யுயர்த்துத் தோளிலே தொடியை யணிந்து மலைகடோறுஞ் சென்று குரவையயர அவருடன்சேர்ந்தாடுதலுமுரியன். (திருமுருகு நக்கீரனர் கூற்று.)

௬. பழமுதிர்சோலை.

அகிலை மேற்கொண்டு சந்தன மரங்களைத்தள்ளி சிறுமூங்கிலின் கொம்புகள் தனிப்பவேரைப்பிளந்து ருளிர்ந்த வாசனை பொருந்திய தேன் கூடுசிதைய பலாவின் சுளைகள் தன்னிடத்தே கலக்க, மலையினுச்சியிலுண்டான சுரபுன்னையின் நறியமலர்களுதிர கருங்குரங்குகளும் முசுக்களும் நடுங்க, பெரிய பிடியன் யானைகள் குளிரும்படி வீசி முத்துக்களை



யுடைய யானைக்கொம்புகளை யுள்ளடக்கி பொன்னையும் மணியையும்மேலே கொண்டு குதித்து, பொடியான பொன்னைத் தெள்ளி வாழைகள் முரியவும் தெங்கமரங்களின் இளநீர்க்குலைகளுதிரவுந்தாக்கி, மிளகுக்கொடிகளின் கரியகொத்துக்கள்சாய அழகிய கலாபங்களையுடைய மயில்களும் பேடைக்கோழிகளும் வெருவிப்பலவுஞ் சோக்கெட ஆண்பன்றியுடனே கருநிறத்தையும் வளைந்த அடியினையுமுடைய கரடி பெரிய கல்விண்டமுாஞ்சினுட்சேர கரிய கொம்பினையுடைய ஆமா ஏறுகள் முழங்க மலையினுச்சியினின்றும் இழுமென்னும் ஓசையுடனே குதிக்கின்ற அருவிவளத்தையுடைய பழமுதிர்சோலைமலை. (திருமுருகு நக்கீரனர் கூற்று.)

இவ்விதமான பற்பலவளங்களும் நிறையப்பெற்ற இடங்கள் தோறும் வதிந்தருள்பவராகிய குமாரக்கடவுளைக் குறிஞ்சி நிலக்கடவுளெனப் பெரியோர் கூறுவர்.

திருந்தப் புவனங்க ளீன்றபொற்
பாவை திருமுலைப்பா
லருந்திச் சரவணப் பூந்தொட்டி
லேறி யறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச்
சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்
றோதுங் குவலயமே.

என அருணகிரிநாதரும்

விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக்கிழவ

என நக்கீரனாரும் கூறியிருத்தல்காண்க.

குறிஞ்சி யென்பது மலைநிலம். சுனைகள் புஷ்பங்களை அலர்த்தியிருக்கும் அழகும், கல்லென்னும் ஓசையுடன் அருவிசொரியும் அழகும் இனிமுதலான புள்ளினங்களின் தீங்குரலோசையும், அறுபதமுரலும் புஷ்பங்களினின்று முண்டாகும் நறுமணமும் வேங்கை கடம்பு முதலான மரங்கள் செறிந்திருக்கும் சோலையினழகும், பூஞ்சோலைகளிலும் நீரருவிகளிலும் நறுஞ்சுனைகளிலும் வளாவிவரும் மந்தமாருத மூலவும் வளனும், பிறபல சிறப்புக்களும் நிறையப்பெற்று, சென்றவரைஐம்புலன்களாலும் நுகர்தற்கரிய இன்பமெல்லாம் நுகரச்செய்யும் இயற்கைவனப்பு வாய்ந்திருக்கப்பெற்ற மலைநிலங்களி லன்றே குமரன்மகிழ்ந்தினிதுறைவன்.

இதனாலன்றே குமரனைப் பரவுமடியவர் பலரும் நானிலங்களினுஞ் சிறந்த குறிஞ்சியை அவனுக்குரிமையாக்கி அதன்வனப்பினை வியந்துரைத்தனர். மலையருவிகளினும் சுனைகளினும் நீராடிப் பூஞ்சோலைகளிலுலவி, நறுமணத்துடன்வீசும் சுத்தமான காற்றினைச் சுவாசித்து, தூய வாழ்க்கையை நடத்தி அதன் மூலம் குமரனருளைப் பெறுதற்கன்றே முத்திநெறியைவிரும்புவோர் தவஞ்செய்தற்காக மலைநிலங்களுக்குச்செல்லுவர். இத்தூய்மையாளர் தம் புனித உள்ளத்திலேயே குமரன் வதிந்தருள்வன். இவர்களே குமரனருளைப்பெற்றோர்.

இனி குறிஞ்சி நிலமாக்கள் குமரனை வழிபடும் நோக்கமாக வேலனையழைத்து வெறியாட் டயர்தலும் பண்டை நூல்களிற் கூறப்பட்ட வழக்கமாகும். வேலன் என்பவன் குமரனைப் பூசிப்பவன். குமரன் வேலையடையாளமாக வுடைமையால் வேலனெனப்பட்டான்.

வெறியாட்டென்பது, காடு சோலை ஆறு, குளம், நாற்சந்தி, முச்சந்தி முதலான பற்பல இடங்களிலும் கட்

ம்பி ண்டியிலும் கோழிக் கொடியைய மைத்து மலர்களைத் தூவி, மாலைகளைத் தொங்கவிட்டு, சந்தனம், மஞ்சள் முதலான நறுவிசைகளைத் தெளித்து வெண்பொரி சிதறி அலங்காரஞ்செய்து கைகளிலே செந்நூலாகிய காப்பைப்பணிந்து வேலன் தான்வழிபடுதற்குரிய மந்திரத்தையுச்சரித்து, பலவிதமான பொருட்களைத் தெய்வத்துக்கு நிவேதிக்கக் குன்றவர் பலரும் யாழ் முதலான வாத்தியங்களுடன் தொண்டகப் பறையொலிப்பக் குறிஞ்சிப்பண்ணைப்பாடித் தெய்வத்தைப்பரவுதல், இவ்விதமாக ஊரவர் யாவரும் கொண்ட சிறப்பமைந்த வெறியாட்டு விழவின் கண்ணே, வேலனிடமாகக் குமரன் வெளிப்பட்டு அவர்களுக்கு வேண்டிய அருளைச் செய்வன்.

இங்ஙனமாகப் பல்லோரும் "நயந்த குமரபின் வியத்தகு குமர"

யாமிரப்பவை, பொருளும்
பொன்னும் போகமுமல்ல
அருளுமன்பு மறனுமூன்று
முருளிணர்க் கடம்பினொலி
[தாரோயே.

வேல்வாழி மயில்வாழி, சேவல் வாழி
வேறுமுள படைவாழி விளங்குதண்டைக்
கால்வாழி யருள்பொழியும் விழிகள் வாழி
கவின் குலவு மீராறு கரங்கள் வாழி
மால்வாழிவாழியெனப் பணிந்து வாழ்த்து
மலைமாது தருமுருகர் மகிழ்ந்தவாறு
பால்வாழி யெனையாளுங் கருணை வாழி
பங்கிருந்த மங்கையர் தம்பதங்கள் வாழி.

---

# வேதத்தில் இரத்தத்தினியல்பும் சுழற்சியும்.

**திரு. இராதா கிருஷ்ண ஆர்ய சேவக் பி. எஸ் ஸி., யம். பி., பி. எஸ்.,**
*தலைவர், குருகுல மருத்துவக் கலாசாலை.*

---

த. ராமகிருஷ்ணன்.
தமிழ்ப் படுத்தியது.

---

*க: அஸ்மிந் ஆப: வி அதஹ்தாத் விஷுவ்ருத:*
*புருவ் ருத: ஸிந்ஹ்து ஸ்ருத்யாய ஜாதா:*
*தீவ்ரா அருணா லோஹிநீ தாம்ரஹ் தூம்ரா:*
*ஊர்ஹ்த்வா அவாசீ: புருஷெ திரஸ்சீ:*

அதர்வவேதம். கரு—உ—கக.

உலகத்தின் தலைவனாகிய இறைவன் (க:) இம்மக்களினுடலகத்துப் (அஸ்மிந் புருஷெ) பல உருவங்களுடன் திகழ்வதும் (விஷுவ்ருத:) பல மாறுபாடுகளை யடைகின்றதுமாகிய (புருவ்ருத:) நீர்ப் பொருளைப் (ஆப:) படைத்திருக்கின்றான். (வி அதஹ்தாத்.) இப் பாவில் குறிக்கப்படுகின்ற அந் நீர்ப்பொருள் உடலில் வழியெழுந்து (ஜாதா:) இடைமுச் சிற்றலைகளுடனும் (ஸிந்ஹ்து ஸ்ருத்யாய) சிறுவேகத்துடனும் (தீவ்ரா:) பாயுந் தன்மையது. இந் நீர்ப்பொருள் உடலின் பல உறுப்புக்களையும் அடையுங்கால் வெவ்வேறு நிறங்களாக மாறுபடுகின்றது. குருதியென்று கூறப்படும் இந்நீர்ப் பொருள் இருதயத்திற்குச் செல்லுகின்ற இரத்த நாடிகளில் (Veins) கருஞ்சிவப்பு நிறமும் (அருணா:), சுத்த இரத்த நாடிகளில் (Arteries) சிவப்பு நிறமும் (லோஹிநீ:), நிணப்பைகளினுள்ள நிணங்களில் இளநரை நிறமும் (தாம்ரஹ் தூம்ரா:) பெறுகின்றது. அஃது உடலில் யாண்டும், உயர் தலைவரையிலும் (ஊர்ஹ்த்வா) கீழே அடிவயிறு வரையிலும் (அவாசி:) பக்கத்தில் உறுப்புக்களின் (திரஸ்சி) மிகச் செய்மைக் கண்ணும் சென்று பரவுகின்றது.

இம்மந்திரத்தினும். இச்சூக்தத்தின் பிறமந்திரங்களாலும் உணர்த்தப்படுகின்ற அரிய கருத்துக்களால் கருணைக் கடலாகிய இறைவன் உயிர்கள் மாட்டு வைத்த பேரருள் காரணமாக, எத்துணை வனப்பு நிறைந்த—தொழி லாற்றற்குரிய—பயன்றரத்தக்க—உயிர் வாழ்வதற்கின்றியமையாத பொறிகளையும் புலன்களையும் படைத்து, அவற்றினூடே இரத்தமாகிய நீர்ப் பொருளைப் பெய்து அமைத்திருக்கும் நீர்மை கண்டு எம்மனோரால் வியந்து புகழ்ந்து பாராட்டுந் திறத்ததாமோ? அவனது படைப்பின் நுட்பங்களை ஆய்ந்து உணர்ந்து புகழ்ந்து பிறர்க்கு மறிவுறுத்தி வழிபடற்குரியம். இயற்கையாக, இம் மந்திரத்தால் இரத்தத்தினியல்புஞ் சுழற்சியுங் குறித்த முழு உண்மைகளையும் உணர முடியாதிருக்கலாம். எனினும், இறைவனை வழுத்துதற்கமைத்த இப்பாவினால் இரத்தத்தின் தோற்றமும், இயல்பும், சுழற்சியுமாகிய உண்மைக் கருத்துக்கள் தெளிவுபடச்செறிந்து கிடப்பதைக்காண நினைவிற்கு மெட்டாத நெடுங்காலங்கட்கு முன்னர் தோன்றிய ஆதிமக்கட் கூட்டத்து முனிவர்களும் இவ்வுண்மை உணர்ந்திருந்தன ரென்பது புலனாகும். மேற்றிசை யாரிடமிருந்து உண்மைக் கருத்துக்களைக் கூடன் பெற்று மூளையில் நிரப்பியிருக்கின்றார்களென்று கருதுகின்ற நமது நாட்டவர்களும் ஐரோப்பியர்களும் இச் செயுளால் புலப்படுத்துகின்ற உண்மைகண்டு வியப்படையா திருத்தல் சாலுமோ? இம் மந்திரத்தின் கருத்துக்களைக் கீழ்க்கண்டவாறு பகுத்து ஆராய்ந்திடுவாம்:—

க. உலகின் தலைவனாகிய இறைவன் இம் மக்களினுடலகத்து நீர்ப் பொருளை அமைத்திருக்கின்றான்.

உ. இந்நீர்ப் பொருள் உடலின் பல உருவங்களைப் பெற்றிருக்கின்றது.

௩. அது உடலில் பல வேறுபாடுகளைப் பயக்கு மியல்புடையது.

ச. அது உடலில் விளைவிக்கப்படுகின்றது.

ரு. அது பாவிப் பாயுங்கால் இடையறுச் சிற்றலைகளை யெழுப்பிச் செல்கின்றது.

சு. அதற்குச் சிறு வேகமுமுண்டு.

எ. அதன் நிறம் உடலில் பலவிடத்துஞ் செல்லுங்கால் கருஞ்சிவப்பு, சிவப்பு, இள நரையாகவும் மாறுபடுகின்றது.

அ. அது உடலில் மேலே தலைவரையிலும், கீழே அடிவயிறு வரையிலும் பக்கத்தில் உறுப்புக்கள் யாவற்றிலும் யாண்டும் சென்று பரவுகின்றது.

க. க: அஸ்மிந் புருஷெ வி
அதஹ்தாத் ஆப:

அன்பும் அருளும் நிறைந்த இறைவன் நமது யாக்கையில்கட்டிப் பொரு

ட்களாகிய உறுப்புக்களை அருளியிருத்தலைப் பாராட்டி மறைகளின் பிறபகுதிகளில் புகழ்ந் தோதப்படுகின்றன. அவ்வாறே, ஈண்டு இச் செய்யுளில்இரத்தமென்கின்ற, நிணநீர்போன்ற, உணவுப் பொருட்களின் சாரமாக மாறுபடுகின்ற—உடலின் உட்புறத்தும் வெளியிலும் கசிகின்ற—புறத்தே மலமாகக் கழிக்கப் படுகின்ற நீருமாகிய இத்தகைய சிறப்புவாய்ந்த நீர்ப் பொருட்களையும் உடலில் படைத்திருக் கின்றனென்று விதந்தோதப்படுகின்றது. அன்றியும், இம்மந்திரத்துப் படைப்பின் தலைவனாகிய இறைவனால் இருடிகளுக்கு இரத்தமும் நிணநீரும் போன்ற சில தனிப்பட்ட நீர்ப் பொருட்களின் இயல்புகளையும் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

௨. விஷூ வ்ருத:

இவ் விருவகை நீர்ப் பொருட்களும் தோன்றுந் தன்மையாலும் கலப்பினாலும் ஒன்றோடொன்று மிகத் தொடர் புடையதாகக் காணப்படினும் வேறுபட்ட அமைப்புக்களையுடையன. அவையாவன:—

(அ) இரத்தம் கருஞ்சிவப்பு அல்லது சிவப்பு நிறத்துடன் அசுத்த இரத்த நாடிகளும் சுத்த இரத்த நாடிகளுமாகிய இருவகைப்பட்ட குழாய்த்தொகுதிகளில்பாய்கின்றது. நிண நீரைவிட மிகப் பிசுபிசுப்பானது.

(ஆ) நிணநீர் இளநரை நிறமுடையது. நிணநீர்ப் பைகளில் ஓடுகின்றது. இரத்தத்தினின்றுங் குறைந்த பிசுபிசுப்புடையது.

குருதி நுண்ணிய மெலிந்த போர்வையுடைய பைகளினின்று ஓடும்பொழுது அதின் நீர்ப்பகுதி எனும்புருவாக்கும் பொருளால் (Osmosis) வெளித்தள்ளப்பட்டு, பின்னர் நிணநீர் என்னு பெயர் பெறுகின்றது. இந்நிணநீர் உடலில் பின்னப்பட்டிருக்கும் சதைகளில்முழுகி, உணவுப் பைகளினின்று இரத்தத்தால் கொண்டுவரப்படுகின்ற பொருட்களால் அவற்றைச் செழிப்பித்து வளர்க்கின்றது. இத்துடன் சுவாசப் பைகளினின்று பெறுகின்ற பிராண வாயுவையும் ஊட்டுகின்றது. இவற்றிற்கு மாறாக சதைகளினின்று கழிவுப் பொருட்களையும் கரிமலக் காற்றையும் திரும்பப்பெறுகின்றது. இக் கழிவுப்பொருட்கள் பின்பு மூத்திரப்பையின் வாயிலாக மூத்திரமாகவும், தோலின் வழியாக வியர்வையாகவும் உடலினிருந்து வெளியாக்கப்படுகின்றன. கரிமல வாயு கடைசியாக நாளத்திற் செல்லும் இரத்தத்துடன் நுரையீரலையடைந்து ஆவியாக உயிர்ப்பின் வழியே வெளியாகின்றது.

௩. புரு வ்ருத:

நிணநீர், மெல்லிய போர்வையுடைய சுத்த இரத்த நாடிகளை (மயிர்க்கண் போன்றவை) விட்டகலும்பொழுது பின்னலாகக் கோர்த்திருக்கும் சதைகளுக்கு உணவுப் பொருட்களையும் உயிர்க் காற்றையும் உதவி, அவற்றிற்கு மாறாகக் கழிவுப் பொருட்களையும் கரிமலாமலகக் காற்றையும் பெறுகின்றது. அதின் இயற்கை இவ்வாறுச் சதைகளுடன் சார்தற்கு முன்பும் பின்பும் மாறுபடுகின்றது. கழிவுப் பொருட்களைச் சுமந்து செல்கின்றதாகிய நிணநீர், பெரிய அசுத்த இரத்த நாடிகளுக்குள்



புகுகின்றதும், பெரிய நிணநீர்ப்பைகளைச் சார்ந்திருக்கின்றதும் நிணநீர்ப்பைகளென்றழைக்கப் படுகின்றதுமாகிய, பலவகை நுண்ணிய குழாய்த்தொகுதிகளுக்குள் செல்லுகின்றது. குருதி, உணவுப் பொருளுடனும் உயிர்ப்புக் காற்றுடனும் சிவப்பு நிறமுடைய நீர்ப்பகுதியை தசைகளுக்கு அனுப்புவதற்கு முன்பு, திரும்பவும் கழிவுப் பொருட்களுடன் நிணநீர் போன்ற தொன்று அதனையடைகின்றது. கடைசியாக அது இருதயத்திற்குப் பக்கத்தில் செல்லும்பொழுது கருஞ்சிவப்பு நிறமாகத் துவங்குகின்றது. நிணநீர் முழுதும் அது பாவுங்கால் இருண்ட கருஞ்சிவப்பு நிறம் பெறுகின்றது. அது நுரையீரல் வழியாகக்கடந்து சென்றதின் பின்பு, கரிமலாமலகக் காற்று அதனினின்றும் பிரிக்கப்பட்டு, உயிர்ப்புக் காற்று உட்புகுந்து திரும்பவும் ஒளியுடைய சிவப்பு நிறமாக மாறுபடுகின்றது. எனவே, இவை பூதச்சேர்வு, பொருட்சேர்வுத் தத்துவங்களுக்கிணங்கவும், உயிர் நூலார் குறித்த நீர்ப்பொருள் மாற்றவியற்கைக் கொத்ததாகவும், நிணநீர் போன்று உதிரத்துடன் கலப்பதும் பிரிவதுமாகிய மாறுபாடுகளை உடலில் பயக்கின்ற இந்நீர்ப் பொருளின் இயற்கையினை புருவ்ருத: என்னும் மொழியால் வேதத்தில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருப்பது வெளிப்படையாம். மேலே விளக்கியவாறு உடல் தத்துவங்களை யுணராதிருப்பின், அக்காலத்து ஆதிமக்களா யிருந்த இருடிகளால் 'புருவ்ருத' வென்னும் மொழியினை எவ்வாறு ஆண்டிருத்தல் கூடும்? அன்பர்களே! அவர்கள் திறந்த ஆகாய வெளியில் வாழ்க்கை நடாத்தியதின் பயனாகவே, இத்தகைய நலன்களை நுகர்ந்து இயற்கை யுண்மைகளையும் அறிவுறுத்தினர். குருதி தூய காற்றைப்பருகுவதால், உயிர்ப்புக் காற்றுச் செழுமையுற்று மக்கள் சிவந்த கதுப்புக்களையும், ரோஜா போன்ற நிறமுடைய இதழ்களையும், சிவந்த நகங்களையும், ஒளி வீசுகின்ற கண்களையும் பெற்றிருப்பர். புதிய தூய காற்றினைப் பெறமுடியாத நெருங்கிய அகநகர் வாழ்க்கையால் உதிரம் மிகவும் கெடுதி யடைந்து, அழுக்கு நிறைந்த காற்று மண்டிலத்தில், அதன் கரிமலாமலகக் காற்றை வெளியிட இயலாதவ ராகின்றனர். இதனை ஜனத்திரள் நெருங்கிய நகரங்களில் மிகுதியாகக் காணப்படுகின்ற வெளிறிய முகங்களும், கன்றின உதடுகளும், மங்கிய ஒளியற்ற கண்களும், நெடுநாள் துன்புறுகின்றதாகிய முகத்தோற்றங்களும், வெளிப்படுத்திவிடுகின்றன. நமக்கு இத்தகைய சிறந்த நீர்ப்பொருளை யருளிய மக்கட்டலைவனாகிய உலகின் நாயகனுக்கு நாம் இம்மியும் தவறாது எத்துணை நன்றி செலுத்தற்குக் கடப்பாடுடையோமென்ப தோர்ந்திடுக. இத்தகைய உயிர்குறுதியான நீர்ப்பொருளைப்பயந்த இறைவனை வழுத்துதற்கு நமது இருடிகள் தவறினர்களில்லை. இவற்றை யுணர்த்தாது மௌனமாயிருத்தல் பாவத்திற் கேதுவாம்.

௪ ஜாத:

இந்நீர்ப் பொருள் உடலில் விளைவிக்கப் படுகின்றது. மேற்கூறியவாறு மருத்துவப் பொருள் குறித்த கோட்பாடொன்றை எழுதத் தக்க இருடிகள் இக்காலத்து வெளிப் போந்தார்களில்லை. இச் சொல், உடலில் தோற்றுவிக்கப்படுகின்ற நீர்ப் பொரு

ளின் உண்மை நிலையைச் சரிவர விளக்குதற்கு அமைவுடைத்தாகும். உடற் கூறுணர்ந்த ஒருவனுக்கு இம் மொழியில் மறைந்து கிடக்கும் பொருட் செறிவுகள் தெற்றெனப்புலனாம். விஞ்ஞானப் புலவன (Scientist) துள்ளத்து இக்கருத்து பளிச்செனப் பாய்ந்து செல்லுந் தகையது.

(க) இந் நீர்ப்பொருளை ஆக்குகின்ற தானங்கள் அல்லது பொறிகள் உடலிலிருக்கின்றன. (உ) அவை சிறிது வேறுபட்ட வகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஈண்டு குறிக்கப்படுகின்ற, ஆழ்ந்த கருத்தாகிய, இந்நீர்ப் பொருளின் ஆக்கவியல்பும் தானங்களும் புலப்படாதிருப்பின், ஜாதா: என்னும் மொழியை எங்ஙனம் வழங்கியிருத்தல் கூடும்? நிணவெலும்புகள், நிணநீர்க் கிரந்தி, காய்கள் முதலியவற்றினின்று குருதி ஆக்கப்படுகின்றன வென்று குறித்தல் சாலும்.

ரு. ஸிந்ஹது ஸ்ருத்யாய.

இக் நீர்ப் பொருள் பரவிச் செல்லுங்கால் இடையறாத அலைகளை வீசுகின்றன தென்று காட்டப் பெற்றது. இருடிகள் காலத்தினின்றும் பன்னெடு நாட்களுக்குப் பின்னர், மேற்புல உடற் கூற்றுணர்வு மிக்கார் உதிரம் பாய்ந்து செல்லுங்கால் இடையறா அலைகளை வீசுகின்றதென்பதை மெய்ப்பித்திருக்கின்றனர். அவர்கள் எவ்வாறு துணிந்தனரெனின்:—

(அ) மணிக்கட்டு முதலிய எலும்புத் தானங்களில் காணப்படுகின்ற தூய இரத்தநாடிகளின் துடிப்பாலும் அல்லது இடையறாது பாவி நின்று அடித்தலாலும்,

(ஆ) தூய இரத்தநாடி துணிக்கப்பட்டால், குருதி ஆற்றொழுக்குப் போல் பாய்ந்து செல்லாது சுண்டித் தெறித்தலாலும்,

(இ) மிக்கவாறும், மணிக்கட்டின் மீது தூய இரத்த நாடியில் வைத்து நாடி யடித்தலைக் கணக்கிட்டறிகின்ற கருவியினால் (Sphygonograph) புலப்படுத்துகின்ற இடைவிடாது பாயும் குருதியின் மாறிமாறிவரும் எழுச்சி வீழ்ச்சிகளாலுமென்க.

நாடி யடித்தலாகிய உண்மையினைப் பல தலைமுறைகளுக்கு முன்னர், அதனையோ அதன் அடையாளங்களையோ அறியப் படாதிருந்தும், நமது இருடிகள் இத்துணை உறுதியாகவும் திட்டமாகவும் யாங்ஙனம் நிறுவியிருத்தல் கூடும்? பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் நாகரிக காலத்து விஞ்ஞானப் புலவர்களால் ஆராய்ந்து கண்ட இத்தகைய முடிபினை, படைப்புக்காலத்து மகனொருவன்வரையறையாக பாவுளமைத்துக் கூறல் யாங்ஙனமியலும்? உதிரச் சுழற்சியினைக் குறித்த இவை யாவற்றையும் தக்க சான்றுகளால் தெளிந்திடாது இருடிகள் உணர்ந்திருத்தல் கூடுமோ? பொய்யாகத் தோன்றுகின்ற உண்மைகளாகிய இத்தகைய முடிபுகளை மக்கள் மூளையால் கண்டறிதல் அருமையினும் அருமை.

சு. தீவ்ரா:

இந் நீர்ப் பொருளுக்கு விரைவுத் தன்மையு முண்டு. இவ்வுண்மை ஒரு கவியினுள்ளத்தில் எளிதில் புலப்படுவதன்று. விஞ்ஞானக்கலை யுணர்வுடை யாரன்றிப் பிறமக்கள் குருதியினிடத்துள்ள விரைந்த செலவினை அறியார். பின்னர் எவற்றால் இது துணியப்பட்டது? இரத்தத்திற்கு விரைவுத் தன்மை அளித்திருத்தலை அறிவுறுத்தி, இறைவனைப் புகழ்ந்து பாவினோர், ஐயமின்றி முதற்கால மக்களாயிருந்திரார்.

(க) இருதயத் துடிப்பின்விரைவு.

(உ) குருதிக் குழாய்களின் புறத்தோல் விரிந்து சுருங்குந்தன்மை.

(ங) குழாய்களின் உள்ளளவினியற்கை.

இவற்றினியல்பால் ஏற்படுகின்ற இம் முடிபினை உணர்ந்திருந்தாலன்றி எஞ்ஞான்றும் அவர்களால் துணிந்து கூறற்கியலா. பல திறப்பட்ட உட்டொளைகளையுடைய குழாய்களின் வாயிலாகவும், இருதயத்திலும், இரத்தம் சுழன்று செல்லுங்கால் தாக்குந் தன்மை யுணர்ந்து, எத்துணை விரைவுடைய தென்று அவர்களால் அறிந்திருத்தல் கூடும்.

எ அருணா: லோஹினி: தாம்ரதூம்ரா:

உடலில் பலவிடங்களிலும் இந்நீர்ப் பொருள் கருஞ்சிவப்பு, சிவப்பு, இளநரைபோன்ற பல நிறங்களையும் பெற்றிருக்கின்றது. மேலே உ, கூ-வது எண்களில் குறித்தவாறு குருதி சுழற்சியடையும் பொழுது பல திறப்பட்ட நிறங்களாக மாறுபடுவதை இருடிகள் அறிந்திருந்தன ரென்று விளக்கிப் போந்தமையால் ஈண்டு விரித்தல் மிகையாம்.

அ. ஊர்த்வா: அவாசி: திரஸ்சி:

குருதி உடலின் எப்பகுதிகளிலும் உயரத் தலைவரையிலும், கீழே அடிவயிறு வரையிலும், உறுப்புக்கள் யாவற்றிலும் ஓடுகின்றது. உதிரத்தினை மேலே தலை வரையிலும், கீழ்ப்பக்கமாக அடிவயிறு வரையிலும், பக்கத்தில் உறுப்புக்களிலும் சென்று பாவும்படி செலுத்தக்கூடிய நடு நிலையம் அல்லது நீரிறைக்கும் பொறி போன்ற தொன்று இருத்தல் வேண்டுமென்பதை இருடிகள் உணர்ந்திருந்தன ரென்று இதனால் தெளிவிக்கப்படும். அப்பொறி இருதயமன்றோ? இன்னும் இப்பகுதிகளுக்கு இரத்தக் குழாய்களின் வாயிலாகக்குருதி பாவுகின்ற தென்பதையும் விளக்கமாகப் புலப்படுத்துகின்றது.

இவை யனைத்தும் இறை வணக்கத்தின் பொருட்டு குருதியின் கூறுபாடுகளும் சுழற்சியும் குறித்து விவரித்து வழங்கி வந்ததோர் மரபாகும். வணக்க உரைகள் குறிப்புக்களால் சுட்டப்படுவதன்றி விரிவாக நிகழ்த்தப்படமாட்டா. இக் குறிப்புக்கள் அவ்வழியே கூட்டி யுணர்த்தப்பட்டதாயிருந்த போதிலும், பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் தங்கள் ஆராய்ச்சிக் கழகங்களில் பல நாட்கள் புரிந்த கடும் உழைப்பின் பயனாக விஞ்ஞானப் புலவர்களும் இம்முடிபிற்கே வருகின்றனர். விஞ்ஞானப் புலவர்களும் இத்தகைய விஞ்ஞானக் கலைகளைத் தோற்றுவித்துப் பொருள் விரித்திடாத, இக்காலத்து விஞ்ஞானக் கலைகள் தம் பெயரைக் கொளத்தற்குப் பன்னெடு நாட்களுக்கு முன்னரே, இப் பொருட்களைத்துணிந்து நிறுவி வெளிப்படுத்திய இருடிகளுக்கு நிகராக ஒருவரால் நாட்டிடற்கியலா. எனவே, அவர்கள் நாகரிகம் பெறாத ஆதிமக்களாயிருத்தல் யாங்ஙனம் பொருந்தும்? மிகுதியும் உடலின் தனிப்பட்ட பகுதிகளில் விளைவிக்கப்பட்டு, விரைந்த செலவினை யுடையதாகி, உடலின் நடு நிலையத்திருந்து பாய்ந்து, உதிரக் குழாய்களின் வாயிலாகச்சுழன்று சென்று

உடலில்யாண்டும்பரப்பப்பட்டு,வேறு வகைப்பட்ட இயற்கையும் நிறமும் தோற்றுவித்து, இடைவிடாத நாடித் துடிப்பினைப் புலப்படுத்தி நிற்கின்ற குருதியி னியற்கையைத் திட்ப நுட்பமாக உணர்த்திய முனிவர்களுடன், சில ஆவிப் பொருள் மானிடக் குழாய்களின் வழியே ஓடிச் செல்கின்றதென்றும், காற்று அவற்றிடையே வீசி நிற்கின்ற தென்றும், மூளையிலுள்ள நீர்ப் பொருள் அவற்றிடைத் தங்கியிருக்கின்றன வென்றும் அறிவுறுத்துகின்ற நாகரிகமடைந்த மக்களை வைத்தெண்ணப்படுதல் அநீதமும் ஒழுங்கின்மையுமன்றோ? இத்தகைய புலமை மிக்காரை நாகரிகமடையாத ஆதிமக்களென்று விளித்திடுவீர்களா? ஆரியர்களாகிய யாம் இத்தகைய புலமை மிக்க முனிவர்களின் பின் தோன்றல்களென்று சேர்த் தெண்ணப்படுதல் இழிவாமோ? உங்கள் நரம்புகளில் ஓடுகின்ற அவர்களின் உதிரத்தை நீக்கிவிட முடியுமா? உங்கள் முந்தையோர் ஆடையற்ற அடிமைகளாக வாழ்ந்தனரென்று உண்மையில் கருதுவீர்களாயின், நீங்கள் மூளையைச் சிறைப்படுத்தியவர்களாக குருட்டுத் தனத்தில் இன்னும் மூழ்கிக் கிடக்கின்றவர்களாகவன்றோ ஆவீர்கள்? இனியும் அவ்வாறு நினைப்பீர்களாயின், உங்கட்கு இறைவன் துணை புரிந்திடுவாளுக. ஓம்.

---

# ஜீவவதை: ஓர் கடிதம்.

(கோகுலத்துக் கண்ணன்)

என் மனதுக்குகந்த நேசரே!

இவ்விடத்தில் நல்லா ரெனப்படுவார், யாதொரு ஜீவனையும் வதை செய்வதில்லை என்ற விரதம் அநுஷ்டிப்பவர் என்று கூறிக்கொள்ளுகிறார்கள். அவர்கள் 'வாய்ச்சாலக' த்தைக் கண்டு அயலான் ஒருவன் வெருவாக மயங்கிவிடுவான். இவ்வளவு இரக்கத்துடனும் பூததயையுடனும் பேசுபவர் ஓர் அற்பப் புழுவையும் நசுக்கமாட்டார் என்றே எண்ணுவான். அவர்கள் வாயினின்று வெளிப்படும் சொற்களும் "கொல்லாமையே அறவினை; கோறலே பிறவினை யெல்லாந்தரும்" என்பது போன்ற முதுரைகளே. அவர்களது கருணை ததும்பும் சொற்களும், அருளொழுகும்வாக்கும் அவர்களைப் புதிதாகக்கண்ட அயலானுக்கு வியப்பைத்தரும். இவர்களன்றோ நன்மக்கள், இவர்களது பொறைதானென்னே! என்று அதிசயிப்பான்.

ஆயினும் என் நண்பரே, நான் இனிக் கூறப்போவதை அவநம்பிக்கைப் படாமல் கேளும். ஹா! இவர்களது கபடநாடகத்தை யான் என்னென்று கூறுவேன்! முதல் நாள் அவ்வளவு உருக்கமாக அஹிம்சையைப்பற்றிப் பேசிய நண்பரே அடுத்தநாள் ஆறுவிதமான பிராணிகளை வதைத்து உணவாகக் கொண்டார்! ஆ, இஃதென்ன விந்தையான முறைமை! இரக்கம், அருள், சீவகாருணியம்! என்று மேடைகளிலும், வீதிகளிலும் அம்பலங்களிலும் கூறுவது, உண்பது மாமிசம்!! படிப்பது இராமாயணம், இடிப்பது பெருமாள் கோவில் போலும்!!

கேவலம் பகுத்தறிவில்லாத சிங்கம் புலி முதலிய காட்டுமிருகங்கள் கூட ஆகாரந்தேடப் போவதன் முன் தமது பெருத்த தொண்டையால் சப்தம் செய்கின்றனவே! எந்த மிருகமும் தனக்கு ஆகாரமான பிராணியை அது தனக்குநேரும் ஆபத்தை யறியாமல் சற்றே விளையாட விட்டுவேடிக்கை பார்ப்பதில்லை. ஆனால் நரஜன்மமெடுத்த நானும், பூனையுமோ—?

மானிட ஜென்ம மெடுப்பவன் பிறக்குந் தறுவாயில் நிரபராதமான, குற்றமற்ற தெளிந்த தன்மையுடைய பச்சிளங்குழவியாய் இருக்கின்றான். அக்குழவி வயது வந்து புத்தி அறிந்தவுடனே தான் முன்னிருந்த இயற்கைத் தன்மையினின்று விலகிப் போகின்றது. மனிதன் சிருஷ்டிப் பொருள்களில் ஒன்றாகத்தான் பிறக்கின்றான். ஆனால் அவன் மற்ற சிருஷ்டிப் பொருள்களைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு விடுகிறான். பகுத்தறிவில்லாத பிராணிகள் அவ்வாறு செய்ய இயலாமல் மானிடனிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கின்றன. மனிதனும் தான் மற்ற சிருஷ்டிப் பொருள்களுடன் உறவாடி அவற்றைப் பாதுகாத்து வரவேண்டுமென்பதே தனது கடமை என்பதை மறந்து, கடவுளால் ஆக்கப்பட்ட அப்பொருள்களை அழிக்கத் தொடங்குகிறான். என்னரிய நேசரே, இதுவோ நீதி? இதுவோ நாம் நம்மைப் படைத்துக் காத்து வளர்த்த இறைவனுக்குக் காட்டும் நன்றி?



எந்நன்றி கொன்றார்க்கும், உய்வுண்டாம், [உய்வில்லை
செய்ந்நன்றி கொன்றமகற்கு

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும் கூறியிருக்கின்றனரே!

நிற்க; கடவுளைப் பஜிக்கும் நாட்களாகிய உற்சவகாலங்களும், திருவிழா நாட்களும் வந்து விட்டாலோ—அம்மம்ம,—எத்தனையுயிர்கள்வதைக் கப்படுகின்றன! முதல் நாள் விரத—பட்டினிகிடத்தல். அடுத்தநாள் அவர்கள் விலாப்புடைக்க உண்பது மாமிசமே. கறியமுதும், குடிக்கப்போதை தரும் பானங்களும் இராவிட்டால் அவர்களுக்கு அது பண்டிகையாகாது, பஜனை நடக்காது.

உண்மையும் அருளும் நிறைந்த இந்தியநாட்டுச்சைவர்களே, நானுங்களை வணங்குகிறேன். 'அன்பேசிவம்; சிவமே அன்பு'—ஹா! எத்தகைய அழகிய, இனிய, தண்ணருள் சுரக்கும் மதமிது! இதன் பெருமையை யான் என்னென்று கூறுவேன். ஜீவவதையென்றால் ஒவ்வொரு சைவனும், அருளாளனும் நடுங்குவனே! ஒரு பிராணி துன்பப்படுவதைக் கண்டால் அது தனக்குஏற்பட்ட துன்பமென்று கருதுவதன்றோ தெய்வத் தன்மை பொருந்திய சைவரின் கடமை? புத்ததேவரின் பெருமை வாய்ந்த சமய நீதியும் இதுதானே. சைவமே 'அன்பின் பெருக்கை' க் காட்டுவது, தூயது; முத்திக்கொரு வழிகாட்டியுமதுவே. அன்பே கடவுள், அவரது அருளால் எழுந்த மற்ற ஜீவராசிகளும் அவரேயன்றோ? ஆகிய இவ்விஷயங்களைப்பற்றி சநாதனதர்மமான இந்துமதத்திலே பிறந்து, வளர்ந்து, விளையாடி உயிர்த்திருக்கும்நமக்கு இவ்வுண்மையை ஏன்மற்றொருவர் போதிக்க வே

ண்டும்? ஆகவே என் நண்பரே! உமது சகோதரர்களுக்கு இவ்வுண்மையைக் கூறுங்கள்.

இங்கு உதாரணமாக ஒரு சிறு கதையைக் குறிக்கிறேன். உமது காலத்தை நான் இவ்வாறு வீணுக்குவதற்காக மன்னிக்க வேண்டுகிறேன்.

மேற்றிசை நாடுகளிலே ஒரு சாரார் 'மனிதனுக்கு அநேக பிறப்புகள் இல்லை' என்ற கொள்கையை உடையவர்கள். ஆனால் இவ்வுண்மையை நன்கறிந்த ஒரு ஞானி அத்தகையாரிடத்தில் ஒரு காலத்தில் தோன்றினர். அவர் 'மனிதனைத் தவிர மற்ற ஜீவஜந்துக்கள் பைசாசங்களால் பிடிக்கப்பட்டிருக்கின்றன. அவை நியாயந் தீர்க்கும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன' என்றும் கூறி, அதை நிரூபிக்கவும் முயன்றார். ஆனால் சில பிராணிகள் தாங்கள் செய்த குற்றங்களுக்காக மனிதனிடம் அகப்பட்டு உபத்திரவப் படுகின்றன. அவை முன்பு மனிதனாயிருந்தவைதான். ஆனால் "நியாயந்தீர்க்கும் நாள்" வருவதற்கு முன்னமேயே அவை தாம் செய்த பாவங்களுக்கேற்றபடி தண்டனையை அனுபவிக்கின்றன என்று சிலர் கூறுகின்றனர். ஹா, இஃதுண்மையாயிருக்குமாயின், நம்மவரில் சிலர் கொல்லும் ஆடுகள், கோழிகள், முதலிய பிராணிகள் முற்பிறப்பில் நம் நண்பராகவோ, உறவினராகவோ பிறந்திருந்து, இச் சென்மத்தில் தமது நண்பனாலேயோ, பந்துவினாலேயோ கொல்லப்பட்டால்—ஆ, இதைவிட என்ன இழிந்த செயகை இருக்கின்றது! என்ன கோரமான கொலை!

துக்கத்துட் டேங்கி துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணைத்த சகொடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலன்
புல்லறிவாளர் வயிறு. [கெட்ட

கொன்றுண்பான் நாச்சாகாதோ?
அவன் வயிறு சுடுகாடன்றோ? * *

மாவரா நதி தீரத்தில் 'கபிலன்' என்ற ஒரு பிராமணன் இருந்தான். அவன் செல்வத்தில் குபேரனாயும், குணத்தில் லோபியாயும், கடின சித்தமுடையவனாயுமிருந்தான். வீண் பகட்டு, மமதை, கோபம் முதலியவற்றிற்கு இருப்பிடமிவன்தான் எனக்கூறலாம். யாதொரு தீமையையும் நாடாத அந்தணர்களையும் சைவர்களையும் வெறுத்தான். அவர்களது சமயப் பற்றுக்காக அவர்களை இகழ்ந்து பேசியும் கண்டித்தும் வந்தான்.

தினந்தோறும் அவன் உணவு மாமிசத்துடன்தான். அவன் சமையலறையில் பற்பலவிதமான மீன்கள், கோழிகள், வெள்ளாட்டின் நிண முதலியன பாகம் செய்யப்பட்டு வந்தன. அவற்றாலான ஆகாரம் அவன் வயிற்றுச் சுடுகாட்டில் புதைபடும். ஒருவன் எவ்வளவு பலவானாயிருந்தால்தானென்ன? அவன் ஆயுள் நாள்கள் முடிந்துவிட்டன. காலனும் தனது பாசத்தால் பிணித்து நமனூர்க்கு அவனுயிரைக் கொண்டுபோயினன். அதற்குக் காரணம் கபிலனின் அமிதமான உணவும் குடியுமேயாம். யமதருமராஜன் முன்பு இவன் கொண்டு போகப்பட்டதும், இவனுக்கு முன்னமே அவன் சபையில் வீற்றிருந்த இவனால் கொலை செய்யப்பட்ட ஆடு, மாடு, கோழி, மீன் முதலிய சகல பிராணிகளும் ஒரேகூட்டமாகக் குழுமியிருந்தன.

தருமராசனும் தனது பெயருக்கேற்ப, இக் கபிலனுக்கேற்ற தண்டனையை விதிக்க அப்பிராணிகளையே நியமித்தனன். இதையறிந்த கபிலன் நடுங்கினான். அவன் தேகம் மயிர்க்கூச்செறிந்தது. பயத்தால் குப்புற விழுந்தான்; மன்றாடினான்; கெஞ்சினான். ஏன்? அவனால் இது காறும் கொலை செய்யப்பட்ட பிராணிகளே இப்பொழுது அவனுக்கு நியாயந் தீர்க்கும் ஜூரர்களாக நியமிக்கப்பட்டது தான் அவன் பயத்துக்குக் காரணம். 'பழிக்குப்பழி' அவை வாங்கினால் இவன் செய்வது என்ன?

மத்யஸ்தர்களாக நியமிக்கப்பட்ட அம்மிருகங்களும் விசாரணைசெய்யத் தொடங்கின. இவன்மேல் மிக்ககாமமுங்கோபமுங் கொண்டிருந்தகாட்டுப்பன்றியொன்று எழுந்து நின்று "ஐயன்மீர்! இப்பாவி, ஒன்றுமறியாத என்னை, என் வீட்டிலிருந்தும் துரத்தி வேட்டையாடி, நான் மரண வேதனைப்படுவதைக் கண்டு களித்தான். மேலும், இவனது அம்புகளால் எனது சரீரமுழுவதையும் துளைத்து, படுகாயப்படுத்தி, படுகொலை செய்தான். கேளுங்கள் அவனையே, அப்படியவன் செய்தானா இல்லையாவென்று. மேலும், குற்றுயிராய் என்னை நெருப்பில் இட்டு வதக்கி, சொல்லொணா வேதனைகளையுண்டுபண்ணினான். ஆகவே, தர்மதுரைகளே! இக்காதகன் என்னைப் போல் பன்றியாகப் பிறந்து நான் அனுபவித்தவைகளை இவனும் அனுபவிக்க வேண்டுமென்பதே எனது கோரிக்கை" என்று கூறி உட்கார்ந்தது.

இதைக்கேட்ட கபிலன் உயிர் பாதி போய்விட்டது.



இரண்டாவதாக, ஆடு ஒன்று எழுந்திருந்து, "என் அருமைச்சகோதரர்களே, இப்பாதகன் என்னைப் போன்ற ஒருவெள்ளாடாகப்பிறக்கட்டும். அப்பொழுதுதான் இவன் மாதத்திற்கு ரு, ௬ தடவையாவது கொலையுண்டு நானும், என் குலத்தவரும் அனுபவித்ததை அனுபவிப்பான் என்றது. கபிலனின் நிலைமை இச்சமயத்தில் பரிதாபப்படும்படியாகவே இருந்தது.

மூன்றாவதாக, கன்றுக்குட்டியொன்று எழுந்திருந்து தனது குறையைக் கூறிற்று. எப்படி இவன் தனக்குத் தாய்ப்பாலைச் சிறிதெனும் கொடாமல் கறந்து குடித்தானென்றும், இவனது பார்வைக்குத் தான் அழகாக இருக்கவேண்டுமென்று இரத்தத்தைத் தினந்தோறும் தன்னுடலினின்றும் வெளிப்படுத்தினனென்றும் சான்று கூறியது.

இது கூறி முடிப்பதற்குள் இவனால் கவளீகாஞ்செய்யப்பட்ட கோழி மிக்க ஆக்ரோஷத்துடன் எழுந்து "இம்மகா பாபியை என்னதான் செய்யலாம்? ஐயோ! சகோதரர்களே! இவன் உங்களைமட்டுந்தானா வதைத்தான்? என் இறகுகளை எல்லாம் யான் அலற அலறப் பிய்த்து என்கழுத்தையும் திருகித் தின்ற இக்கொடியனை, இப்படியே எண்ணெய்க் கொப்பரையில் தள்ளினால்தான் என் மனம் திருப்தியடையும்" என்றது.

இதைக்கேட்ட மற்றெல்லாப் பிராணிகளும் "ஆம், ஆம், இப்பஞ்சமாபாதகனுக்கு அது ஏற்றதண்டனைதான் "என்று ஒரே குரலாய்க்கூவின.

ஆனால் இப்பிராணி-மத்தியஸ்தர்களுக்குத் தலைவனாய் அமர்ந்திருந்த

காளையொன்று எழுந்திருந்து தனது முடிவான அபிப்பிராயத்தைக் கூறத் தொடங்கிற்று.

"என்னருமை நேயர்களே! நீதி பதியே!

இதோ கூண்டிலிருக்கும் இக்கைதிக்கு ஒரு இளமனைவியும் குழந்தையும் பூவுலகில் இருக்கிறார்களென்று எனக்கு இப்பொழுதுதான்தெரிய வந்தது. இவனது மகன் வலிமையற்றவனாய், கிழத்தன்மையுற்று, பல வியாதிகளையுடையவனாய், தனக்கும், பிறருக்கும் வெறுப்பையுண்டாக்குபவனாய், பல வருடங்கள் இருப்பான். ஆகவே இக்குற்றவாளி இவனது மகனது சரீரத்துட் புகுந்து அவன் அனுபவிக்க வேண்டிய கர்மங்களை இவன் அனுபவிக்கட்டும். இவன் மகன் சிறுவயதிலே இறக்க நேரிட்டாலும், நற்பதவியை யடைவான். புன்புலால் விரும்பும் இக்கொடிய பாவி உலகத்தில் மறுபடியும் சென்று கஷ்டங்களை அனுபவிக்கட்டும்" என்று தீர்ப்பு கூறியது.

இயமதருமனும் "ததாஸ்து" என்றனன்.

என் மனத்திற்கிசைந்த அன்பரே! நீவிரும் நான் இதுகாறும் தங்களது அரியகாலத்தைவீணாகக்கழித்ததற்கு என்னை மன்னிப்பீரென்று நம்புகிறேன். நீர் இருக்கும் ஊர்களில் எனது கட்டுரையின் பயனை எதிர்பார்ககலாமா? சிவமே அன்பு; அன்பே சிவம்.

## சுத்த சன்மார்க்க வேண்டுகோள்.

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குள் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்து அமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே
அன்புருவாம் பரசிவமே!

அப்பா! நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல்வேண்டும்
ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான்சென்றே
எந்தை நினதருட் புகழை இயம்பிடல் வேண்டும்
செப்பாத மேல்நிலைமேல் சுத்த சிவமார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி! செலுத்தியிடல்வேண்டும்
தப்பேது நான் செயினும் நீ பொறுத்தல் வேண்டும்
தலைவ! நினைப்பிரியாத நிலைமையும் வேண்டுவனே.

(இராமலிங்கசுவாமிகள்.)

## மனிதத்தன்மை யடையும் வழி.

(ஸர். ஜே. ஸி. போஸின் சொற்பொழிவு)

பண்டைக் கால முதற்கொண்டு சர்வ கலைகளிலும் பெயர் பெற்ற இப்பாடலிபுரத்திற்குப்பன்முறையும் வந்திருக்கின்றேன். முற் காலத்திலேயே, மனுஷத்துவம், காருண்யம், ஆதியவைகள், இவ்விடத்தில்தான் ஸ்தாபிக்கப்பட்டன. பொறுமை ஒற்றுமை இவைகளைப் புகட்டும் அசோக மகாராஜாவின் கட்டளைச் சட்டங்களை இன்னும் வாசிக்கிறோம். இரண்டாயிரம் நூற்றாண்டுகளுக்குமேல் ஆகியும், பலவித ஜனங்களும் மிக்க ஊக்கத்தோடு, அக்குணங்களையே உயிர்ப்பித்து நன்றாய் விருத்தி செய்ய உழைத்து வருகிறார்கள். தற்காலமும் பண்டைக் காலமும், ஒன்றாகச் சம்பந்தப் பட்டிருப்பதை 'தெய்வப் பிரமாணம்' காட்டுகிறது. நளந்தா கலாசாலையின் சின்னங்கள் இதனருகில்தான். இருபது வருடத்திற்கு முன் நான் அங்கே பலநாள் தங்கி, பண்டைக்காலத்தின் 'சாராம்ச'ங்களை அனுபவித்தேன். நளந்தா தட்சசிலா, கலாசாலைகள் தான். நானும அத்தகைய ஒரு கலாசாலை ஸ்தாபிக்கக்காரணமாயுள்ளேன். ஆதலால் பண்டைக்காலம் அழிந்து அடியோடு தொலையவில்லை; இன்னும் இருந்து கொண்டு நாம் இனியாவது நன்கு வாழுமாறு எல்லோரையும் ஊக்கத்துடன் எத்தனிக்கத் தூண்டுகிறது. ஏனைய வம்சத்தாரும், ஜனங்களும் நம் நாட்டில்குடியேறி, இதனைச் சொந்தமாக்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லாருடைய ஒற்றுமையாலும்தான் இந்தியா பலப்பட வேண்டும்.

### எனது ஆராய்ச்சியின் போக்கு.

நான் முப்பது வருஷங்களுக்கு முன் எனது ஆராய்ச்சியை ஆரம்பித்தேன். அப்பொழுது எனக்கு இடையூறுகள் அநேகம் இருந்தன. யோகம் தவம் மனோபாவம் இவைகளை நிலையாகக்கொண்ட இந்தியர்கள் ஆராய்ச்சியில் புகுவது ஒழுங்கீனமெனப் பலர் நினைத்தார்கள். ஆனால் மனக் கற்பனையின் வேகம்,யோகத்தாலும்,மனத்தை அடக்கி ஒன்றிலேயே செலுத்துவதாலும்,கட்டுப்படுத்தப்பட்டுஒரு புதிய ஒழுங்கையும், முறைமையையும் நிலை நிறுத்துகிறது. உண்மையைத் தீரயோஜித்து, சரி பார்த்து உண்மையைக் கண்டு பிடிக்கும் கருவி மன அடக்கம் தான். ஜெயக் குறைவு சத்திக்குறைவு, இவைகளுக்குக் காரணம் அவ நம்பிக்கையே. அடையக்கூடிய காரியங்களைச் செய்து சுலபமாய் ஜெயமடைவதை விட அடையக்கூடாத காரியங்களைச் செய்து, அதில் தோல்வி யடைந்தாலும் சிலாக்கியமே. இதுதான் தீரர்களின் கொள்கை.

### எனக்கு நேர்ந்த இடையூறுகள்.

அக்காலத்தில் தக்க ரசாயன தர்ம சாலைகளே யில்லை. கருவிகள் இல்லாமல் பரிசிலனை எப்படிச் செய்வது? பிறர் மீது குற்றத்தைச் சுமத்தி நாம் சும்மா கையைக் கட்டிக் கொண்டிருப்பது தகாதகாரியம். அப்படியிருப்பின் நாம் எப்படி முன்னேற்றமடைய முடியும்? கஷ்டங்களை நிவர்த்திக்க முயல்வதே நமது கடமை. அசாத்தியமான காரியம் 'ஆத்மசக்

றிக்கு ஒன்றுமில்லை யென்று என் அனுபவங்களிலிருந்து கண்டறிந்தேன். ஊக்கத்தாலும் முயற்சியாலும், செயற்கரிய காரியத்தையும் சாதித்து வெற்றிபெறலாம்.

பண்டைக்காலத்தில் அதிவிநோதமானவைகளை நமது சிற்ப சாஸ்திரிகளும் செய்யவில்லையா? அவைகளைப் பார்க்கும் ஒவ்வொரு நாட்டாரும் ஆச்சரியப் படுகிறார்கள். அப்படியிருக்க அந்தச்சக்தி இந்தியர்களிடத்தில் அழிந்து போய் விட்டது என்று நினைத்தல் அடாத காரியம். அதை நான் நன்குணர்ந்து நமது இந்தியத் தொழிலாளிகளுக்கு ஊக்கத்தைப் புகட்டி,பரிசீலனைக்கு வேண்டிய கருவிகளைச் செய்தேன். ஆ! அதன் நுட்பத்தை என் சொல்வேன்? நாகரிகம் நிறைவுற்ற மேல் நாட்டார்களும் நினைத்து அத்தகைய கருவிகள் தாங்கள் செய்யமுடியாதென அறிவித்து, எங்கள் கலாசாலையில் செய்யும் கருவிகளையே பரிசீலனைக்கு வாங்கி உபயோகித்து வருகிறார்கள். அவ்வளவு நுட்பமான கருவிகள் மேல் நாட்டாரால் செய்ய முடியவில்லை.

ஆகையால் என் பரிசீலனையின் ஆராய்ச்சியிலிருந்து சிலவற்றை நிலை நிறுத்தி யிருக்கிறேன். முதலாவது ஊக்கமும், விடா முயற்சியும் இருப்பின் செய்ய முடியாதது ஒன்றும் இல்லை. சந்தேகமும் அவநம்பிக்கையும் காரியத்துக்குச் சத்துரு: எதுவாகினும் அது சர்வானுகூலம்தான் என்ற பூர்ண நம்பிக்கை, சக்தியையும் வெற்றியையும் நிலை நாட்டும். மேல் நாட்டார்களுக்கு நமக்கு இருக்கும் கஷ்டங்களைவிட, பல இருக்கின்றன. ஒவ்வொரு இடையூறுக்கும் ஒவ்வொரு நிவர்த்தி இருக்கிறது. வெறும்பேச்சுப்பேசி 'பட்டி மிரட்டு மிரட்டுபவர்கள்' அறியமாட்டார்கள். முழு நம்பிக்கையோடு வேலைசெய்யும் சுறுசுறுப்பாளிகள் தான் அறிவார்கள். இந்தியரிடத்திலும் ஆராய்ச்சி செய்யும் சக்தி பரிபூரணமாயிருக்கிறதென்று மேல் நாட்டாருக்கும் மெய்ப்பித்துக் காட்டியிருக்கிறேன்.

அச்சக்தியைத் தற்போது எப்படி உபயோகிக்க வேண்டும்?

உலகத்தில் தற்காலக் குழப்பம் பணக் கஷ்டத்தினுலேதான். எல்லா வித்தைக்கும் சத்துரு தாங்கொணு வறுமையும் தரித்திரமுமே. அந்தப் பிரதேசங்களில் கல்விமான்களும் சாஸ்திர நிபுணர்களும், தொழில் தலைவர்களும், அவரவர்கள் தேசம் செல்வத்தால் செழித்தோங்குமாறு காரியத்தைச் செய்ய முற்பட்டிருக்கிறார்கள். ஹா! என்ன ஆச்சரியம். நார்வே மிகச் சிறிய தேசமாயினும் அங்கு பஞ்சமே இல்லை. அவர்களுக்குச் சொந்தமாக ராணுவம், கப்பல் படை இருக்கின்றன. போதுமான கல்விச் சாலைகளும் இருக்கின்றன. ஏன் அங்கு வறுமை என்பதே இல்லை? தங்களுக்குள்ள ஒவ்வொரு சாதனங்களையும் விருத்தி செய்து தேசம் முன்னேற்றமடையச் செய்ததின் பலனே அது.

இந்தியாவின் கஷ்ட நிலைமை.

அப்படி இருக்க, தற்போது இந்தியா மகா கஷ்ட நிலையில் இருக்கிறது. ஒருகால் செல்வம்நிறைந்த இத்தேசம் இப்படியிருப்பதுபரிதாபமானதே. வாலிபர்களைத் தேர்ச்சி செய்யும் கலாசாலைகள் பல இருகக வில்லையா? ஏன் நமது வாலிபர்களை ரசாயன சாஸ்திரங்களில் தேர்ச்சி அடையும்படி செய்



யக்கூடாது? இந்தியர்கள் சாஸ்திரங்களில் நிபுணர்களாக ஏன் இங்கிலாந்துக்குப் போகவேண்டும்? அங்கேபடும் அவஸ்தையைச் சொல்லவும் வேண்டுமோ? நம்மிடத்தில் தகுந்த சாதனமில்லாவிட்டாலல்லவோ, நிபுணத்துவமடைய,பிறநாட்டுக்குச் செல்ல வேண்டும்.

இது யார் மீதுகுற்றம்?

இது நம்முடைய குற்றம்தான். பணத்தைத்தகுந்தபடி அரசாங்கத்தார் செலவுசெய்து நமது வாலிபர்கள் முன்னேற்ற மடையும் வழியைத்தேடல்வேண்டும். அப்பொழுது இங்கிலீஷ்காரர்களுக்கும்,இந்தியர்களுக்கும் ஐக்கியம் ஏற்பட்டு ,சகோதரத்துவமும் ஒற்றுமையும் உண்டாகும். பொறுமையாலும், நம்பிக்கைத் துரோகத்தாலும், துவேஷபுத்தியாலும் நாம் அழிந்து கிடந்தால், பிற நாட்டார் சுய நலங்கருதி இந்தியர்கள் நன்மையைக் கோராது தாங்களே ஒழுங்குபட்டு, கைக்காரர்கள் ஆகிறார்கள். அவநம்பிக்கையாலும், துவேஷத்தாலும், இந்தியா மூரண்பட்டுக்கிடக்க, ஆண்டு அனுபவித்து வருகிறார்கள். நாம் ஏன் ஒற்றுமைப்பட்டு, ஆராய்ச்சித்தொழிலில் முயற்சி செய்து நம் நாட்டை நாமடைந்து சந்தோஷமாக அனுபவிக்கக்கூடாது? மனுஷத்துவம் விருத்தி யடையுமே!

இறையருள்.

ஜன சமூகத்திற்கு உழைப்பதே கலாசாலைகளின் ஒரு முக்கிய நோக்கம். மேலும் நமது முன்னோர்களுடையனவும்,அயல்நாட்டார்களுடையனவுமான கொள்கைகளையும், வீரத்தன்மையையும், செயல்களையும், எல்லா விஷயங்களையும் அறிகிறோம். மேலும் நாகரிகத்தின் நிரந்தரத்தன்மையினையும் மனுஷத்துவம் ,எப்பொழுதும் ஒன்றே என்பதையும் அறிகிறோம். நிலையற்ற சிலஇடையூறுகளால் அதைரியப்படாது, மனிதர்களுக்கு இருக்கும் அவாவின் பெருந் தன்மையைக்கண்டு மனம் களிக்கவேண்டும். சும்மா கைகட்டிக்கொண்டிருந்தால் உலகத்தை வெல்லமுடியாது. ஊக்கம் கொண்டு ஜன சமூகத்துக்கு உழைக்க வேண்டும். பொறாமையை அழித்து, சக்தியைப் பெருக்க,மனத்தைத் திடப்படுத்தி, சகோதரத்துவம் பாராட்டி ஊக்கத்தையே கைக்கொள்ளும் சுறுசுறுப்பாளிகள், எந்த இடையூறுகளையும் நிவர்த்தி செய்து ஜன சமூகத்துக்குப் பாடுபட்டு, ஜனங்களுக்கு நன்மைசெய்தால், என் இந்தியாவில் மனுஷத்துவம் பரிபூரணமாயிராது? அப்படி மனுஷத்துவம் அடைந்தால் நமது நாட்டின் மகிமை உலகத்திற்கு நன்கு விளங்கும் என்பது திண்ணம்.

(அருங்கலை விநோதன்.)

---

அச்சம் தவிர்.
ஆண்மை தவறேல்.
குன்றென நிமிர்ந்து நில்.
கூடித் தொழில் செய்.
யவனர்போல் முயற்சிகொள்.
யாரையும் மதித்து வாழ்.

(புதிய ஆத்திசூடி.)

# கடிகாரம்

ஸ்ரீமான் S. தேசிக விநாயகம் பிள்ளை பாடியது.

[கடிகாரம் வாங்கித் தரும்படி கேட்டுக் கொண்ட தன் மகளிடம் ஏழையான ஒரு தாய் "மகளே! நேரத்தை அறிவதற்கு இயற்கையில் தானே அநேக லக்ஷியங்களிருக்க நமக்கு வேறு கடிகாரமும் வேண்டுமோ?" எனக்கூறுகின்றாள்.]

சேவற் கோழியுண்டு, காகமுண்டு, வானம்
செக்கச் சிவந்து தெரிவதுண்டு;
மேவு பொன்னே! அதிகாலை தெரிந்திட
வேறும் கடிகாரம் வேண்டு மோடி?

செங்கதிர் பொங்கி வருவதுண்டு, நல்ல
செந்தா மரைகள் மலர்வதுண்டு;
மங்கையே! காலைப் பொழுதை யுணர்ந்திட
மற்றும் கடிகாரம் வேண்டுமோடி?

தன்னிழல் தன்னடி யாவதுண்டு, சுடர்
தானும் தலைநேர் எழுவதுண்டு;
இன்னமுதே! பக லுச்சி யிதென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி?

கிண்மணி பாழியில் வீழ்வதுண்டு, வாசம்
வீசு மந்தாரை மலர்வதுண்டு;
கண்மணியே! மாலைக் காலம் குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி?

முல்லை யரும்பு விரிவதுண் டாம்பலின்
மொட்டுகள் மெல்ல அவிழ்வதுண்டு;
மெல்லியலே! மாலை வேளையறிந்திட
வெள்ளிக் கடிகாரம் வேண்டுமோடி?

அம்புலி நக்ஷத் திரங்களுண்டு, கணக்
காக்கி யறிய வழிகளுண்டு;
இம்ப ரமுதே! ராநேர மறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி?

கம்மென வாசம் கமழ்பாரி சாதமிக்
காவில் மலர்ந்து சொரிவதுண்டு;
அம்மையே! நள்ளிர வீதென்று சொல்லிட
ஆர்க்கும் கடிகாரம் வேண்டுமோடி?

சுற்றுப் பொருளெல்லாம் உற்று நோக்கியவை
சுட்டும் மணிநேரம் கண்டறிவாய்;
பெற்ற முத்தே! இந்த உண்மைய றிவோர்க்குப்
பின்னும் கடிகாரம் வேண்டுமோடி?

---

# பத்திரிகை ஆராய்ச்சி.

வங்கநாட்டுக் கவியரசு ரவீந்திரநாததாகூர் 'சர்க்கா'வைப்பற்றி எழுதிவெளியிட்ட கண்டனத்திற்கு மறுமொழியாக மகாத்மா காந்தி யடிகள் ஒருகட்டுரைவரைந்துள்ளார். 'இராட்டை' விஷயத்தில் மகாத்மா பித்துக் கொண்டிருப்பதாகக் கவியரசர்குறை கூறுகின்றார். ஆனால் சர்க்காவின் பொருளாதார மேன்மையைக் கவி மறுக்கவில்லை. மகாத்மாவின் மறுமொழி வருமாறு:—

கவி தாமே சிருஷ்டித்த ஓர் கற்பனையுலகில், சிந்தையால் சித்திரிக்கப் பெற்ற ஓர் அற்புதத்தனி வாழ்க்கை நடத்துகிறார். நானோ மற்றொருவரால் உண்டாக்கப்பட்ட இராட்டையின் அடிமை. கவி தமது வேணுகானத்தினால் கோபியரை நடனம் புரியச் செய்கிறார். நானோ என் காதலைக்கொள்ளைகொண்ட சீதாபிராட்டியான இராட்டினத்தைத் தேடி அலைகிறேன். மான்செஸ்டர்பாரிசு ஜப்பான் ஆகிய இடங்களாகிய பத்துத்தலை இராவணனிடமிருந்து பிராட்டியை மீட்க முயன்றுவருகிறேன். கவீந்திரர் ஒரு சிருஷ்டிகர்த்தர். நானோ ஏற்கெனவே படைக்கப்பெற்று மறைந்துகிடக்கும் பொருள்களைத்தேடி அலைபவன். கவிதினந்தோறும் புதிய, புதியஅழகிய பொருள்களை உலகுக்கு உதவுகிறார். பளபளவென்று கண்ணைப்பறிக்கும் புதிய பொருள்களைப் படைத்துக்காட்டும் மந்திரவாதி உலகில் ஓர் உயர்ந்த பதவியை எளிதில் பெறக்கூடும். ஆகவே எங்களிடையே போட்டியில்லை. ஆனால் எங்களிருவரின் வேலைகளும் ஒன்றுக்கொன்று துணையாயிருக்குமென்றுபணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஒருவரையும் தமது தொழிலை விடும்படி நான் கேட்கவில்லை. தேசத்தின் பொருட்டுச் செய்யும் தியாகமாக தினம் அரைமணிநேரம் நூற்றுக் கொடுத்துத் தங்கள் தொழிலைச் சிறப்பிக்கும்படியே நான் வேண்டுகிறேன். வேலையில்லாமல் பட்டினிகிடப்போரை, பிழைப்புக்காக நூற்கச்சொல்வதும்,அரைவயிறுஉணவுபெறும்குடியானவனைஒழிந்தநேரங்களில் நூற்கும்படிசொல்வதும் உண்மை. கவிசிரேஷ்டர் தினம் அரைமணி நேரம் நூற்றாரயின், அவருடைய கவிதை இன்னும் சிறந்து ஒளிரும். ஏனெனில் அப்போது அவர் ஏழையின் துயரங்களைப்பற்றி இன்னும் மனமுருகும்படி பாடக்கூடும். கோடிக்கணக்கான இந்தியர்கள் தங்களுடைய தனித்தனி நன்மைகள் முரண்பாடுடையன அல்லவென்றும், முக்கியாம்சங்களில் ஒற்றுமைப் பட்டனவென்றும் உணர இராட்டை சாதனமாக விளங்குகிறது. இயற்கைதேவி பல திறப்பட்ட வடிவங்கள் கொண்டு காட்சியளிக்கின்றாள்; ஆயினும் அவ்வடிவங்களினூடே விளங்கும் இலட்சிய ஒருமைப்பாடு எளிதில் உணரக்கூடியது. எந்த இரண்டு மனிதர்களும் ஒத்திருப்பதில்லை. ஆயினும் மானிடவர்க்கத்திற்கே பொதுவான அம்சங்களில்லையோ? எல்லா உயிர்களினுள்ளேயும் பாவிநிற்பது ஒரே உயிரன்றோ? இவ்வாறே பல்வேறு தொழில்களுக்கும் பின்னால், தொழில் ஒருமைப்பாடு ஒன்றும் காணக்கிடக்கிறது. மக்களில் பெரும்பான்மையோருக்கு விவசாயம் பொதுவான தொழிலன்றோ? சிறிது காலத்திற்கு முன்வரை நூற்றலும் மக்களுக்குப் பொதுவான தொழிலாயிருந்தது. ஏழைக் குடியானவன் முதல் அரசன் வரை எல்லோருக்கும் உண்டியும் உடையும் வேண்டும். இராட்டையை ஏற்றுக்கொண்ட மக்கள் கூட்டுறவின் பயனை அறிந்தவராவர்.

* * *

இந்தியாவிற்கும் ஜாவாவிற்கும் அதிபுராதன காலத்திலேயே தொடர்பிருந்ததாகத் தெரியவருகிறது. ஜாவனியர்கள் வெளிநாட்டிலிருந்து ஜாவாவில் குடி புகுந்தவராவர். இவர்களுக்கு முன் ஜாவாவில் அநாகரிக மக்களான பூர்வகுடிகள் வசித்து வந்தனர். இந்து மன்னர்களின் ஆட்சியில், ஜாவாவில் இராமாயண மகாபாரதக்கதைகள், சித்திரங்களாக வரையப்பெற்றன. இந்துக்களுக்கும் ஜாவானியர்களுக்கும் பண்டைநாளில் ஏற்பட்டிருந்த இணைப்பினைக் குறித்த ஒரு குறிப்பு வருமாறு:—

கி. பி. இரண்டாவது, மூன்றாவது நூற்றாண்டுகளில் மேல் ஜாவாவில் இந்துக்கள் குடி புகுந்திருக்கலாமென ஆராய்ச்சியாளர் சிலர் துணிகின்றனர். இவ்விந்துக்கள் கோதாவரி கிருஷ்ணாநதிக்கரையிலிருந்த கலிங்க தேசத்திலிருந்து வந்திருக்கலாமெனத் தெரியவருகிறது. இந்தியாவிற்கும் சீனாவிற்கும் வியாபாரம் நடைபெற்றுக் கொண்டிருந்த நாட்களில், இவ் இந்துக்கள் ஜாவாவில் தங்க நேரிட்டிருக்கலாம், பின்னர் நாட்டின் செழிப்பைக் கண்ணுற்று மேல் ஜாவாவில் குடியேறி யிருக்கலாம். இவர்கள் போர்னியோவிலுள்ள 'கோதை' என்ற நதிக்கரைகளிலும் குடியேறியுள்ளார். இவர்கள் ஜாவாவின் பூர்வகுடிகளைச் சீர்திருத்தவும் முற்பட்டு முயன்றதாகத் தெரிகிறது. இவர்கள் இந்துநாகரிகத்தை ஜாவாவில் விதைக்கையில் 'கண்டானியர்' என்ற பூர்வகுடிகளுக்கு சேவு வேலையைக்கற்பித்துக் கொடுத்தார்கள்.

*　　*　　*

பண்டை இந்தியாவில் சரியான போக்குவரவு சாதனங்கள் இருந்தனவா? ஆங்கிலஆட்சி நிலைபெறுவதற்கு முன்னர், இந்தியர்கள் அநாகரிக மக்களாய், நாகரிக வாழ்விற்குரிய சௌகரியங்களின்றி வாழ்ந்து வந்தார்களென்று பலர் ஆராய்ச்சியின்றி அங்கீகரிக்கின்றனர். சாணக்கியருடைய 'அர்த்த சாஸ்திர'த்தில், சந்திரகுப்த சக்கரவர்த்திகாலத்திலுள்ள இந்து நாகரிகத்தை அறிவதற்குரிய ஆதாரங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் அந்நாளில் இருந்த 'போக்குவரவு சாதன'ங்களைப்பற்றிய சில குறிப்புக்கள் மாத்திரம் சுருக்கமாகக் கீழே காட்டப்பெறுகின்றன.

சந்திரகுப்த ராஜ்யம் இப்பொழுதுள்ள பிரிட்டிஷ் இந்தியாவைக்காட்டிலும் விசாலமானது. ஓர்அரசாங்கம் செம்மையாக நடைபெறுவதற்கு, முக்கியசாதனங்களாகக் கருதப்பெறும் திறமை வாய்ந்த இராணுவம், ஒழுங்குபட்ட ஆட்சிமுறை, இராஜ்யத்தின் பிரதானபாகங்களை இணைக்கும் போக்குவரவு சாதனம், ஜனங்கள் ஏறக்குறைய சுகமாக வாழ்வதற்குரிய வசதிகள் முதலிய நாகரிக நற்குறிகள் யாவும், சந்திரகுப்த சக்கரவர்த்தியின் ஆட்சியில் இருந்தன என்பது திண்ணம். அக்காலத்தில் நில மூலமாகவும் நீர் மூலமாகவும் செல்லத்தக்க சாதனங்கள் இருந்தன. தலைநகராகிய பாடலிபுரத்திலிருந்து இராஜ்யத்தின் நாற்புறத்திலும் வாணிப நிமித்தம் பாதைகள் அமைந்திருந்தன. வடக்கே இமயமலையை நோக்கிச் செல்லும் பாதைகளைவிட, தெற்கு முகமாகச் செல்லும் பாதைகள் முக்கியமானவையென்று சாணக்கியர் கருதுகின்றனர். ஏன்? வடக்கேயிருந்து குதிரை, தோல், கம்பளம் முதலிய சாமான்கள் வந்தன, ஆனால் தென்னாட்டுகளிலிருந்த சுரங்கங்களினின்றுதான் பொன் நவரத்தினம் முதலியன வந்து கொண்டிருந்தன. அரசன் உபயோகித்த பாதை 'இராஜமார்க்கம்' என்று அழைக்கப்பெற்றது. இதன் அகலம் ௩௨-அடி. கிராமங்கள்வழியாகச் சென்ற பாதைகள் 'கிராமபதம்' என்று அழைக்கப் பெற்றன. இவற்றுள் பெரும்பாலன ௩௪-அடி அகலம் கொண்டன. கருங்கற்களை நிலத்தில் பரப்பிச் சமமாக்கப் பெற்ற பாதைகளில் இரதங்கள் சென்றன. 'தேவபதம்' கோயிலுக்குச் செல்லும் பாதை. வயல்களுக்கு இடையே செல்லும் பாதைகளைப் பற்றியும் 'அர்த்த சாஸ்திர' நூலாசிரியர் பேசுகிறார். அக்காலத்து இரதங்கள்சராசரி ௯௦-அடி உயரமுள்ளன. கோயில் விக்கிரகங்களை எடுத்துச்செல்லும் இரதம் 'தேவரதம்'. போர்களுக்கும் பிரயாணங்களுக்கும் வேறு வேறு இரத வகைகளிருந்தன. இரதங்களைத் தவிர, வண்டிவகைகளுமிருந்தன. வண்டிகளே பெரும்பாலும் உபயோகத்திலிருந்தன. இவையெல்லாம் எருதுகளாலும் குதிரைகளாலும் இழுக்கப் பெற்றன. இவை தவிரச் சிவிகை பல்லக்குகளும் உபயோகிக்கப் பெற்றன. பாதைகளெல்லாம் அவ்வப்பொழுது செப்பனிடப் பெற்றன. பாதைகளின் இருமருங்கும் மரங்கள்; ஆங்காங்கு தண்ணீர்ப்பந்தல்கள்; சத்திரங்கள், சாப்பாட்டு வசதிகள். நிலத்தில் போலவே நீர்மீதும் நம்மவர் அந்நாளில் தாராளமாகப் 'போக்குவரவு' செய்து வந்தார்கள். ஆறு, கால்வாய், சமுத்திரம்—இவற்றின் மூலமாக நடைபெற்ற கப்பல் போக்குவரவுகளை யெல்லாம் ஓர் அரசாங்க இலாகா கவனித்துவந்தது. மாலுமி அல்லது 'காப்டன்'(Captain) அந்நாளில் 'சாஸகன்' என அழைக்கப்பெற்றான். பர்மாவிலிருந்து (ஸ்வர்ணபூமி) ஒருவிதமான சந்தனமும் சிங்களத்திலிருந்து அகில் இரத்தினமாதியவும் சீனத்திலிருந்து சிலவகை ஆடைகளும் மகதநாட்டிற்குக் கடல்மார்க்கமாக வந்தன என்று அர்த்த சாஸ்திரம் அறிவிக்கின்றது. சுருங்கக் கூறுமிடத்து, ஒரு நாகரிக அரசாங்கத்தில் குடிகளுக்கு எத்தகைய சௌகரியங்களை நாம் எதிர்பார்க்கலாமோ, அத்தகைய சௌகரியங்களில் ஏறக்குறைய முக்கியமானவை யெல்லாம் பண்டை இந்து மன்னராட்சியிலும் இருந்தனஎன்பதுசரித ஆராய்ச்சியால் இனிது புலனாகின்றது.



---

## சதங்கை யொலி.

---

### தமிழர் போதுமறை.

திருசிரபுரம் பண்டிதர் மு. நடேசமுதலியார் 'திருவள்ளுவர்' என்பது பொருளாக நிகழ்த்திய ஓர் விரிவுரையில், தமிழர் பொதுமறையான திருக்குறட்சிறப்பு நன்கு விளக்கப்பெற்றது. அதன் சாரம் வருமாறு. "திருவள்ளுவர் சிறு பாட்டினால் குறளை யமைத்தது போலவே ஒவ்வொரு குறளையும் சிறு சொற்களால் அமைத்துள்ளார். பெரும்பாலும் அவரது நூலில் ௨ அல்லது ௩ எழுத்துக்களினால் ஆகிய சொற்களே அதிகம். முதல் ௯௦ அதிகாரங்களில் ௧௪௯ மொழிகளுண்டு. அவைகளுக்குள் ஓரெழுத்தொரு மொழியாக இருப்பன ௬. இரு எழுத்துக்களாலாகிய மொழிகள் ௨௨௫. மூன்று எழுத்துக்களாலாகிய மொழிகள் ௩௦௧. நான்கு எழுத்துக்களாலாகிய மொழிகள் ௨௭௪. ஐந்து எழுத்துக்களாலாகிய மொழிகள் ௧௧. நூற்றுக்கு இத்தனை மொழிகள் என்று கணக்கிட்டால், இரு எழுத்தாலாகிய மொழிகள் ௩௪. மூன்று எழுத்தாலாகிய மொழிகள் ௩௨. நான்கு எழுத்தாலாகிய மொழிகள் ௩௩. ஐந்தெழுத்தாலாகிய மொழிகள் ௯௦. குறட்பாக்களில் அமைந்துள்ள சின்னஞ்சிறு சொற்களுக்குப்பதிலாக வேறு எச்சொல்லை அமைத்தாலும் பொருள் சிறக்காது. ஒவ்வொரு சமயத்தினரும் திருவள்ளுவரைத் தங்கள் சமயத்தினர் என்று கூறக்கூடிய நிலையில் அவர் கடவுளைப் பற்றிக் கூறியுள்ளார். திருவள்ளுவர் தாம் கூறப்

ப்கும் பொருள்களை யாவரும் அறிந்த உபமானங்களைக் கொண்டு விளக்குவர். ஒவ்வொரு உபமானமும் ஒரு ஓவியத்தை எழுதிக்காட்டுவதுபோலிருக்கும். கல்லாதவரை, திருவள்ளுவர் குருடர், கயவர், விலங்கு என்று கூறுகின்றார். இப்பெருஞ் சிறப்புவாய்ந்த தமிழர் பொதுமறையைத் தமிழ் மக்கள் ஓதாமலும் உணராமலும் இருக்கலாமா? ஒரு வீட்டிற்கு வேண்டிய பொருளை எப்படிச் சேகரிக்கின்றோமோ, அப்படியே ஒவ்வொரு வீட்டிலும் நல்ல நூல்களைச் சேகரித்து வைக்கவேண்டுமென்று மேல்நாட்டாசிரியரான ரஸ்கின் என்பார் கூறுகின்றார். நம்முடைய வீட்டில் திருக்குறள் போன்ற நல்லதமிழ் நூல்கள் இருக்கவேண்டும்; ஓதப்பெற வேண்டும்.' தமிழ்மக்கள் இப்பொன்னுரைகளை நன்கு கவனித்தொழுகுவார்களாக. தமிழிலக்கியப்பற்று தமிழகத்திலுள்ள ஒவ்வொரு நிலையினருக்கும் தொழிலினருக்கும் உரியதாகும். தாய் மொழியை அறவே மறந்து திரிவோரும் தமிழின் சிறப்பினை, பிரசங்கமேடைகளில் பன்முறையும் முழக்குவோரும், தமிழ்நாட்டின் சிறப்பு தமிழ் மொழியின் சிறப்பே என்பதையும், தமிழ் மொழியின் சிறப்பு முழுவதும் தமிழ் நூல்களின் சிறப்பே என்பதையும் விரைவில் நன்குணர்வார்களாயின், அந்நல்லுணர்ச்சியே நம் நாட்டில் ஒரு புதிய மகாயுகத்தைத் தோற்றுவிப்பதற்கு ஓர் அருந்துணையாகும்

## கீதையின் பொருள்.

கீதை ஹிம்சையைப் போதிக்கும் கொலைநூலா அல்லவா? —என்ற பொருள்பற்றி மகாத்மா காந்தியடிகள் 'நவஜீவ'னில் வரைந்துள்ள கட்டுரையொன்று அவரது 'யங் இந்தியா'விலும் வெளியிடப்பெற்றுள்ளது. அடிகள் தமது ௨0-வது வயதில் (௧௮௮௯-ம் ஆண்டில்), முதல் முதல் கீதாசாஸ்திரத்தைத் தெரிந்துகொண்டார். அப்போது அவருக்கு அஹிம்சை நெறியைப்பற்றிய கொள்கையில்லை. அப்பால் இங்கிலாந்தி லிருக்கும்போது இரண்டு ஆங்கில நண்பர்கள் வற்புறுத்திய தற்கிணங்க, ஸர். எட்வின் ஆர்னல்ட் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள கீதையைப் படித்தார், பரவசம் எய்தினர். அந்நாள் முதல், கீதை— இரண்டாவது அதிகாரத்தின் இறுதியில் அமைந்துள்ள ௧௯-சுலோகங்களும் காந்தியடிகளின் இதயத்திலே நன்கு பதிந்துவிட்டன. "எனக்கு அவை என்றும் அழியா முழுமுதல் உண்மைகளாக மிளிர்கின்றன. அவையே கீதையின் திறவுகோல்—என மகாத்மா கூறுகின்றார். மகாத்மா கீதையின் பலவேறு மொழிபெயர்ப்பினையும் விரிவுரையினையும் ஆராய்ந்திருக்கிறார். கீதையைப்போன்ற சாஸ்திர ரத்தினங்களை பக்தியோடு பாராயணம் செய்ய வேண்டுமென்பது காந்தியடிகளின் கருத்து. நம்பிக்கைவேண்டும், அனுபவஞானம் வேண்டும், சாதனம் வேண்டும், ஒழுக்கம்வேண்டும், ஓர்குருவும் வேண்டும்; அப்போதுதான் கீதையைப் போன்ற ஞான நூல்களின் ஆழ்ந்த பொருள் இனிதுணரப்படும். இது மகாத்மாவின் அபிப்பிராயம். உண்மையின் முதிர்ந்த கனி, அருளொழுக்கமே (அஹிம்சை) யென்றும், துறவு அல்லது தியாகம் உண்மை யுணர்விற்கு இன்றியமையாததென்றும் அடிகள் கூறுகின்றார். "நூல்களின் நுண்பொருளை ஆராய்வதே அறிவுடைமை. ஒவ்வோர் எழுத்தையும் முக்கியமானதாகக்கொள்வது அறியாமையே. துரியோதனன் ஆதியரை 'அதர்ம'த்தின் வடிவங்களாகவும் தருமன், அருச்சுனன் ஆதியரை 'தர்மத்தின்' வடிவங்களாகவும் கற்பிப்பதே மகாபாரதத்தின் அந்தரங்க அபிப்பிராயம். போர் என்பது உடம்பின்கண் நிகழும் தர்மாதர்மயுத்தமே. உள்ளொளியாய் உடனுறையும் உண்மைக் கடவுளே கண்ணன். மாசிலா உள்ளத்திலே தான் கண்ணனது கீதம் ஒலிக்கின்றது. அருளொழுக்கமே முத்திநெறி. எனினும் இவ்வுயரிய கொள்கையினை உணர்ந்து ஒழுக முடியாதவர்கள், அஞ்சிப் பிழைக்க வேண்டாம். அஞ்சி ஒதுங்குவதினும் ஆண்மையோடு எதிர்த்துப் போராடுவதே மேலான நெறி. பேடியாக இருப்பதினும், கொல்லுவதும் கொல்லப்படுவதுங்கூட மேலானதாகும்". இதுவே கீதா சாஸ்திரத்தின் உட்பொருள் என்பது மகாத்மாவின் சித்தாந்தம். வாசகர்கள் ஆராய்ச்சி வாயிலாக மகாத்மாவின் கொள்கைகளைச் சோதித்து மயக்கம்தெளிந்து 'கீதைகொலைநூலல்ல, அருள்நூலே' என்று துணிவார்களாக.



சிவமயம்.

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.

சதங்கை ௪. | காரைக்குடி, குரோதன௵ கார்த்திகைமீ | மணி அ.

## வணக்கம்.

மஹா சக்தி வாழ்த்து.

வாயு வாகி வெளியை யளந்தனை
வாழ்வெதற்கு முயிர்நிலை யாயினை
தேயு வாகி யொளியருள் செய்குவை
செத்தவற்றைக் கருப்பொரு ளாக்குவை
பாயு மாயிரஞ் சத்திக ளாகியே
பாரி னுள்ள தொழில்க ளியற்றுவை
சாயும் பல்லுயிர் கொல்லுவை, நிற்பன
தம்மைக் காத்துச் சுகம்பல நல்குவை.

நிலத்தின் கீழ்ப்பல் உலோகங் களாயினை
நீரின் கீழெண் ணிலாநிதி வைத்தனை.
தலத்தின் மீது மலையும் நதிகளுஞ்
சாருங் காடுஞ் சுனைகளு மாயினை
குலத்தி லெண்ணற்ற பூண்டு பயிரினம்
கூட்டி வைத்துப் பலநலந் துய்த்தனை
புலத்தை யிட்டிங்குயிர்கள் செய்தா யன்னே!
போற்றி போற்றி நினதருள் போற்றியே.

சித்த சாகரஞ் செய்தனை, அரங்கதிற்
செய்த கர்மப் பயனெனப் பல்கினை
தத்துகின்ற திரையுஞ் சுழிகளும்
தாக்கி யெற்றிடுங் காற்றுமுள்ளோட்டமும்
சுத்த மோனப் பகுதியும் வெண்பனி
சூழ்ந்த பாகமுஞ் சுட்டவெங் நீருமென்
றொத்த நீர்க்கடல் போலப் பலவகை
உள்ள மென்னுங் கடலி லமைத்தனை. (பாரதி.)

# இரவலறிவு.

பண்டிதை—சு. பாலாம்பிகை அம்மாள்.

இறைவன், தமது திருவிளையாடலி னிமித்தம் உண்டாக்கிய இந்நிலவுலகின்கண்ணே யுள்ள பொருள்களின் சில உண்மைகளையறிதல் ஆற்றவும் அரிதாகும். ஆழ்ந்த அறிவுடையாரே ஒருவாற்றா னறிதல் கூடும். உண்மையை யறிதற்கு காண்டல், கருதல், உரையென மூவகைவழிகளுள. காட்சியாற் பெறப்படுவதைக் காட்சியாலும், அதற்கெட்டாத கருதலால் எட்டுவதைக் கருதலானும் அவ்விரண்டிற்கு மெட்டாதவற்றை உரையினாலுங் கொள்ளுதல் வேண்டும். காட்சியளவை எல்லாச் சமயிகட்கும் உடன்பாடான தொன்றும். மற்றை இரண்டுஞ் சிலராற் கொள்ளப்பட்டு வேறு சிலரால்தள்ளவும்படும்.

காண்டல் வாயிற்காட்சி, மானசக்காட்சி, வேதனைக்காட்சி, யோகக்காட்சியென நால்வகைப்படும். வாயிற்காட்சியாவது பொறிகளால் திரிபையமின்றிப் பொருளளவாக அறியப்படுவது. மானசக் காட்சியாவது ஐம்பொறிகளாலறிந்த பின் புத்தி தத்துவச்சார்பாற் பெறப்படுஞ் சவிகற்ப ஞானம். முன்பு ஒருமாட்டைக்கண்டு அதனிலக்கணங்களையறிந்த வொருவன் பின் அதே யிலக்கணங்கள் அமைந்தமிருகத்தைக் கண்டு இதுமாடெனத் தெளிதலாம். வேதனைகாட்சி நோயினால் வருந்தல் முதலியன. யோகக்காட்சி யோகசாதனையினால் ஒரிடத்திருந்தாங்கிருந்து முக்காலப் பொருள்களையு அறியுமுணர்வாம்.

கருதல் தன்பொருட்டனுமானம் பிறர் பொருட்டனுமான மென இருவகைப்படும். தன் பொருட்டனுமானமாவது தானொன்றையனுமித்துணர்தல். ஒரிடத்திருந்து புகைவருதலைக்கண்டு அவ்விடத்து நெருப்புண்டெனத் தீர்மானித்தல். பிறர் பொருட்டனுமானமாவது தானொன்றையனுமித்து அதைப் பிறர் அறியும்பொருட்டு ஐவகையுறுப்புக்களையுடைய வாக்கியத்தைக்கூறலாம். உரையென்பது கடவுள் வாக்கு. இதை முற்றாக நம்புவதே கடன்.

இம் மூன்றும் அறிவைப் பெறும் வழிகள். இவ்வழிகளிற் செல்லும் போது தவறிவிழுதலுமுண்டு. ஒவ்வொன்றிலும் பல்வகை மாசுகள் வரத்தக்கன. இவற்றினின்றும் விலகுதல் சிலகால் அரிதினுமரிது. நாம் கண்கூடாகப் பெறுங்காட்சியே பல்காலும் பொய்யாகின்றது. நமது கண்ணுக்குப் புலனாகுஞ் சூரியன் உண்மையில் இப்பூமியிலும் பதின் மூன்று லட்சம்மடங்கு பெரிதாகும். ஆயினும் நமக்கு ஒரு பந்தளவாகக் காணப்படுகின்றது. இது கருதலால் திருத்தற்பாற்று. என்னை? பூமியிலிருந்து பலகாதங்களுக்கப்பால் விளங்கும் ஞாயிற்றின் சூடு நம்மைவாட்டுவதை நாமறிகிறோம். அதுநமக்குத் தோன்றுவதைப்போல் சிறிதாயின் இவ்வளவு சூடு இங்கு வருதல் கூடாதாம். எவ்வளவு கடுஞ்சூடுடையதாயிருப்பினும் உருவத்தாற் சிறிதாயின் இத்துணைச்சேய்மையில் நம்மை வருத்தல்முடியாதாம். அன்றியும் பெரிதாயுள்ள ஒரு காற்றாடி மேலேபோகப்போகச் சிறிதாதல் காணப்படுகின்றது. இவ்வாறே கதிரவனும் காட்சியளவினும் நனிபெரிதாதல் கருதப்படும். புகைவண்டியிற் செல்லுங்கால் பக்கத்திலுள்ள மாங்கள் எதிராக ஓடுவதுபோற் காணப்படுகின்றன. முன்புகண்ட பொருளின் நினைவின்மையால் ஒருபொருளை வேறொன்றாகத்தீர்ப்பது முண்டு. குதிரையை ஒருமுறை மாத்திரங்கண்டவன் பலநாளின் பின் கழுதையைக்காணுங்கால் குதிரை யென்பன். இவை போல்வன காட்சியால் வருந்தவறுகளாம்.

கருதலாலுண்டாகுந் தவறுகள் மிகப் பல. நுண்ணிய மதியும், அகன்ற ஆராய்ச்சி வன்மையும், ஆழ்ந்த கருத்து முடையார் பலர் ஒருபொருளைப் பலவாறாகத் துணிந்து கொண்டனர். இவர்களுள் ஒருசாரார் தவிர ஏனையோர் தவறான கருத்தையுடையராதல் வேண்டும். மாறான கொள்கைகளு ளொன்று பொய்யாதல் வேண்டும். புலாலுண்ணல் முறையென்பாரும், தவறென்பாரும், மறுபிறப்பு உண்டென்பாரும், இன்றென்பாரும் அரசாட்சியாரோடொத்துழைத்தல்தகுமென்பாரும், தகாதென்பாரும் பெண்களுக்கு வாக்குரிமை யுண்டென்பாரும், இன்றென்பாருமுளர். இருவகைக்கோட்பாடுடையாருள்ளுஞ்சிறந்த விவேகிகளும் அறிவாளிகளுமுண்டு. ஆயினும் கருதல் வேறுபாட்டால் ஒவ்வாமுடிபினராயினர். கருதற்குற்றத்திலுள்ள பெரும்பிழை "சமன் செய்து சீர்தூக்குங்கோல் போல்" ஆகாமையே. சமன் செய்தலாவது ஒருபொருளை நிறுக்கும் இருதட்டுகளுள் ஒன்று மற்றதினுமதிகந்தாழ்ந்திருந்தால் மற்றத் தட்டில் இடையிட்டுச் சமன் செய்தலாம். இதுபோல ஒருபொருளைப் பற்றிய இருகொள்கைகளுள் ஒன்றிற்பற்றும் மற்றதில் வெறுப்புமிருத்தல் கூடாது. ஒரு கொள்கையில் பற்றிருந்தால் அதற்குச் சார்பான நியாயங்களே தோன்றும். "காக்கைக்குந் தன்குஞ்சுபொன்குஞ்சு" என்பதோர் முதுமொழி. காகமானது அன்பின் மிகுதியினாலேயே அழகில்லாத தன்குஞ்சைப்பொன்குஞ்சாக நினைக்கிறது. அதுபோலஒரு கொள்கையிற் பற்றிருந்தால் அதிலுள்ள குறைகள் தோன்றா. ஆதலாற்கொள்கைகளில் விருப்பும் வெறுப்பு மகற்றி ஆராய்ச்சி செய்தல் வேண்டும். அல்லது இரண்டிலும் ஒரேயளவுபற்றிருத்தல்வேண்டும். ஆராய்வுக் குறைவும் பல்வகையளவைப் போலிகளும் வாய்மையை மறைக்கும் பிறகருவிகளாம்.

ஓர் ஆராய்ச்சிமுடிபு மூவகையளவைகளையுமாதாரமாகக் கொண்டுளதாயின், அது சிறப்புடைத்தாம். காண்டல், கருதலாகிய இருவகையளவுகளாலே தீர்க்கப்படுவதை எவரும் ஏற்கவேண்டியதே. உரையளவையால் மாத்திரமறியப்படுவது சிலகால்தவறுதலுமுண்டு.

இத்துணை நுண்மதியும் அறிவும் ஆராய்வுமுள்ள போதும் பிழையான கருத்துக்கள் வரத்தக்கனவாயின், அறிவாராய்வின்றிப் பிறராட்டாருடைய சொல்லை முற்கொண்டு முடிபெடுத்தல் எத்துணைப் பேதைமை. இதுபோல்வனவே இரவலறிவெனப்படும்.

சைவ சமயத்தில் கௌதமபுத்தருக்குப் பின்னரே அருளுடைமை தோன்றிய தெனச் சிலர்கூறுவர்.

இக்கொள்கை காண்டல், கருதல் உரை முதலிய அளவைகளாலாவது சரித்திர வாயில்களாலாவது பெறப்பட்ட தொன்றாகக் காணப்படவில்லை. வேதங்களிலும் கொலை விதிக்கப்படவில்லை. இருக்குவேதம் "மாமிசத்தை விலக்கி மற்றையபதார்த்தங்களைச் சுத்திசெய்து சமைத்துச் சாப்பிடுமிறவர்களுக்கு நல்ல சித்திகளுண்டாகும்"—"உயிர்களொன்றையுங் கொல்லாத இல்வாழ்வானுக்கு மேம்பாட்டைக்கொடு" என்றுவிளம்பும். யசுர்வேதம் "கடவுளே! எல்லாப்பிராணிகளிலும் நான் அன்பாயிருக்கவும், அவைகளென்னில்அன்பாயிருக்கவும் அருள்செய்" எனப்புகலும். ◯ யாகசாலையில் ஆடு, குதிரை முதலிய மிருகங்களைக் கட்டி அவற்றிற்குப் பூசை செய்ததன்பின் அவிழ்த்துவிடும் முறையே யசுர்வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்களின் வழிநூல் சார்பு நூல்களாகிய பிராமணங்களிலுஞ் சூத்திரங்களிலும் கொலைவிதிக்கப்பட்டதேனின்,அவைகள் இறைவனூலாகாமையால்முதல்நூற்குமாறுபடுங்கொள்கைகள் விலக்கப்படவேண்டியனவாம்.

அன்றியும், இராமருடைய முன்னோராகிய சிபிச்சக்கரவர்த்தி ஓர் புறவினிமித்தம் தம்முடம்பிலுள்ள தசைமுழுவதையும் அரிந்துகொடுத்தார். அது எதன் பொருட்டு? அருளுடைமையின் பொருட்டன்றே. பௌத்தசமயந் தோன்ற எவ்வளவோ காலத்திற்குமுற்பட்டவர் இவ்வரசனென்பதை யாவருமறிவர். பாரதமும் பௌத்த காலத்திற்கு முற்பட்டதென்பது யாவர்க்கு மொத்த முடிபு. பாரதகாலத்திற்குப் பல்லாண்டுகளின்முன் இராமாயணம் தோன்றியது. சிபியினுடைய காலம் அதற்கும்அதிக நாட்களுக்கு முற்பட்டதாகும். இதனால் சைவசமயத்தில் அருளுடைமை தொன்றுதொட்டிருந்து வந்தமை வெள்ளிடைமலைபோல் தெள்ளிதிற் புலப்படும்.

ஆகமங்கள் அநாதியென்பது சைவக்கொள்கை. அவை பாரதத்திற்கு முற்பட்டனவென்பது யாவரும் ஏற்கவேண்டியதே. "காமிகாத்யாகமாநாந்து யதாதேவோமகேச்வர: அஷ்டாதசபுராணநாம் கர்த்தா ஸத்யவதிசுத" என்னும் பாரத சுலோகத்திலிருந்து ஆகமங்கள் பாரதத்திற்கு முற்பட்டனவென்பது கூறாதேயமையும். ஆகமங்களிலும் அருளுடைமை போற்றப் பட்டிருக்கிறது. வேதத்தையும் ஆகமத்தையும் பிரமாணமாகக் கொள்ளும் சித்தாந்த சைவரேனும், அகச்சமயத் தவரேனும் அருளுடைமை பௌத்தத்திலிருந்து சைவத்திற்கு வந்ததெனவாய்திறவார். வேதத்தைப் பிரமாணமாகவுடைய அகப்புறச் சமயத்தவரும், புறச்சமயத்தவரும் இவ்வாறு சொல்ல உடன்படார்.புறப்புறச் சமயத்தவரே ஒரு சமயம்இதைச் சொல்லத்துணிவர். சொல்லினுமவர் கண்டிக்கப்படுவர்.

◯ அசுவமேதயாகத்திற்கு அறுநூற்றொன்பது வகையான மிருகங்கள் கொண்டுவரப்படுமெனவும், அவைகளில் வீட்டு மிருகங்களை இருபத்தொரு தூண்களுக்கு ஒவ்வொன்றாகக் கட்டப்படுமெனவும், மற்றைய மிருகங்கள் தூண்களுக்கு நடுவிற் கட்டப்படுமெனவும், அதன்பின அவைகளுக்குப் பூசைசெய்து அவிழ்த்து விடப்படுமெனவும் யசுர்வேதங் கூறுகின்றது. இவ்வாறு அவிழ்த்து விடப்படுவதை பிராமணகாரரும் சூத்திரகாரரும் கொலையெனக் கூறினர்.



அல்லாமலும் சைவ சமயம் புலாலுண்ணல் பாவமெனக் கூறுகிற்றும். புலாலுணவை விலக்கிய சைவத்திற்கு அருளுடைமையில்லாதவாறும் அதை விதித்த பௌத்தத்திற்கு அருளுடைமை யமைந்து அதன்வழியாகச் சைவத்தில் நுழைந்தவாறும் வியப்புடைத்தாம். பௌத்தம் கொல்லாமையை விலக்கியது. அதற்குக் காரணமான புலாலுணவை விதித்துளது. கொல்லாமல் புலாலூண் பெறுதலெங்ஙனம்? நேரில் நின்று காக்கையை வெளியென்பாரை யொப்ப சைவத்தில் பௌத்தருக்குப்பின் அருளுடைமை தோன்றியதென்பது முழுமாறாகும். இந்தியாவில் மணிவாசக சுவாமிகளின்பின் பௌத்தம் நிலைபெற்றதில்லை. அதனைச் சங்கராச்சாரியர் வேரோடு களைந்தனர். அவ்வளவு பெலவீனமாயிருந்த பௌத்தமதக்கொள்கை சைவத்திற் புகுந்த தென்பது சற்றேனும் பொருந்தாக்கூற்றாம்.

மேனாட்டாசு தமிழகத்தைச் சாருமுன் தமிழர் யாவருந் தத்தமக்குரிய பிறவித் தொழில் செய்து தங்கள் தங்களறத்தைக் கடைப்பிடித்து ஒருவரோ டொருவர் போராடலிலராய் உடலின் வெவ்வேறுறுப்புக்கள்போல் ஒருவருக்கொருவர் துணையாய் இன்பவாழ்வு வாழ்ந்தனர். எவ்வகையினும் ஒவ்வாத வாழ்க்கை முறையினையுடைய ஐரோப்பிய அரசோடு அவரது சீர்கேடும் எம்மைப்பற்றி நம் பண்டை மக்களது வழக்க வொழுக்கங்களை யறவே யொழிக்கச் செய்து ஆடும் மாடுங் கன்றுந்தாயும் கருடகட் செவி போலவும், நீர்நெருப்புகள் போலவும் திரிபுற்று பகையும் அழுக்காறும் உள்ளிருளும் பரவின.

அந்தண்மை பூண்டொழுகும் பார்ப்பார் அரசாங்க சேவைநாடிச்சென்று தம்மியற்கைக் குணங்குன்றி வன்கண்ணராயினர். எந்நாளுங் காப்பாரும் செந்தண்மை யுடையாருமாகிய வேளாள குலமணிகள் சோம்பலாலும் பிராமணராலும் நசிவுற்றுச் செயலற்றிருந்தனர். கேனோபநிடதத்திற் கூறியபடி தேவர்களும் அசுரர்களை வென்றகாலம் வந்ததுபோல் வேளாளர் முதலியோரும், அந்தணரை வெல்லுங்காலமுண்டாகிப் பார்ப்பாராலாட்ட முண்டாயது. இவர்களுக்குப்பல்வகை வெற்றிகளும், உயர்வுகளும் வர தேவர்களுக் குண்டாய மதிகேடு இவர்களையும் பீடித்தது.

அந்தணர் தம்மை நெடுநாள் வருத்தியதால் அவர்மீது கொண்ட வெறுப்பை மற்றையோர் வடமொழியிலும் காட்டத் தொடங்கினர். வேதியர்க்கும் வடமொழிக்குமுள்ள தொடர்பு கழுதைக்கும் அறுகம்புல்லுக்குமுள்ளதொடர்பையொக்கும். என்னே? கழுதையல்லாதவைக்கும் புல்லிலுரித்துண்டு. கழுதைக்குப் புல்லகப்படாக் காலத்துக் குதிரைக்குப் புல்லகப்படவுங்கூடும். இதுபோல மறையோரல்லாதாருள் வடமொழியறிந்தோரும், பிராமணருள் அதையறியாதோருமுளர். வடமொழி வழங்குங் காலமொன்றுளதாயின் அதுபேசப்பட்ட நாட்டில் பார்ப்பாரல்லாதார் வாழவில்லையா? அவர்கள் ஊமராயிருந்தனரா? ஒவ்வொரு நாட்டிலும் பல்வகைப்பட்ட பிறப்பினருமுளர். அவர்களுள் வாய்பேசும் வல்லமையில்லாதோரன்றி மற்றையாவரும் அம்மொழியையே பேசுவர். ஆதலால் அம்மொழி அந்நாட்டில் வாழும் யாவருக்கு முரித்தாதல் வேண்டும். வட-

மொழி, பார்ப்பாருக்கு மாத்திரமுரித்தெனக் கோள்ளல் பேதைமை. பார்ப்பார் சற்றேனுமுண்மையைப் பார்ப்பாரலர்.

பார்ப்பாரிற் கொண்ட வெறுப்பு வடமொழியினும், வடமொழியிற் கொண்ட வெறுப்பு அம்மொழியிலுள்ள சைவமுத னூல்களினும் பற்றித்தாவியது.

நால் வேதங்களும் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனிதருடைய வாக்கெனத் தூற்றத் தொடங்கினர். அன்றியும், வேதக் கூறுகளைச் சொல்லியோர் மக்களென்பதற்கு அவ்வேதமே சாட்சியென்றனர். மறைகளிற் குறிக்கப்பட்டவர்கள் மந்திர திருஷ்டாக்களேயன்றி மந்திர கர்த்தரல்லர். மந்திர திருஷ்டாக்களானவர் அவற்றினுண்மையைக் கண்டு போதித்து வந்தவரே. மந்திரகர்த்தா சிவபிரானேயென்று தமிழ்வேத கர்த்தர்களே கூறியருளினர். "வேதமெய்ந்நூல் சொன்னவனே" "வேதமொழியினர்" என்று மணிவாசகப் பெருமானும் "வேதமோடாகம மெய்யாமிறைவனூல்" என்று திருமூலநாயனாரும் வேறு சிவனடியார்களும் பாடியருளினர். இவ்வருமைத் திருவாக்குகளை நிலையா நிலையெனக்கொண்டு வேதங்கள் தமிழிலுள்ளனவென்றும், ஆன்றோர் வடமொழி வேதத்தைக் குறித்திலரென்றும் ஒருகொள்கையைப் பிறப்பித்தனர். இவைகளெவை யெனின் அவைகளழிந்து போயின என்றனர். தமிழ் வேதங்கள் இருந்தமைக்கும் இறந்தமைக்கும் பிரமாணமென்னை யெனின் பிரமாணமில்லை யென்பர். ஓர்வகைப் பிரமாணமுமின்றி மனம்போனபடி ஒருவர் கூறுவதைக் கேட்டு இரவலறிவு கொண்டுழல்வர். வேறுசிலர் இதுவும் நிலையா நிலையெனக்கொண்டு திருக்குறளே வேதமென்பர். இதற்குப் பிரமாணமென்னையெனின் சிலர் கூறுவர் என்பர். அன்றேல் அக்கொள்கைக்குச் சிறிது இடமுண்டென்பர்.

"அருந்தவர்க்காலின் கிழற முத்தன் இனையுமிருந்தவர்க் கருளுமது" என்னுந் திருவாசகத்திற் கூறப்பட்ட அறம்பொருள் இன்பம் வீடாகிய நான்குந் திருக்குறளி னுண்மையால் திருக்குறளே வேதமென்பர். இவ்வனுமானம் மனிதனுக்குக் கண்ணுண்மை கூறப்படின் மந்திக்கு முண்மையால் மனிதனும் மந்தியுமொன்றெனத் துணிதலை யொக்கும். ஒம்றை நூலாகிய குறள் நான்காகிய மறையாத லெவ்வாறு குறிக்கப்படுவதோ? அன்றியுந் திருக்குறள் சிவபிரானுப தேசிக்கப்பட்ட தாயின் அதைத் திருவள்ளுவரியற்றினரென்பது பொய்க்குமே. திருக்குறள்பாற்கண்ட உண்மைகள் அளவான விவேகிகளாய்ந்து அறியக்கூடியவைகளே. இவைகளை யுபதேசிக்கக் கல்லால நீழலின் கீழ் எல்லாம் வல்லமுழுமுதலிறை யெழுந்தருளவேண்டுமோ? செவிமடுத்தற்குச் சனகாதி முனிபுங்கவர் வேண்டுமோ? அன்றியுந் திருவள்ளுவமாலையில் "ஆரியம் வேதமுடைத்து" என்றும் "செய்யாமொழிக்குந் திருவள்ளுவருரைத்த பொய்யாமொழிக்கும் பொருளொன்றே" என்றும் வெளிப்படையாய்க் கூறப்பட்டதற்கும் கண் மூடிக்கொண்டு பொய்யறிவில் எம்மனோர் மாய்கின்றனர்.

வேதத்தை யிகழும் பாதகத்தால் இவர்கள் கடும்புயலிலகப்பட்ட மரக்கலம் போல அலைந்து மாள்வது விசனகரமே.



இச்சார்பினருட் சிலர் சைவசமயம் வாழத்தவம் புரிந்த மாபிலவதரித்த சம்பந்த சுவாமிகளை, அந்தணாானமைபற்றி அவரையுமிகழ்கின்றனர். இவர்களைத் தாங்குந் தமிழ்நிலம் மற்றை நிலங்களினும் பொறுமை சான்றதேயாம்.

வேறோர் சாரார் வேதங்களை யிகழும் நோக்கமின்றி யிகழ்கின்றனர். அவற்றை நேரேகற்கு மாற்றலேனும், நன்குணர்ந்தோர் கொள்கையறியும்பாக்கியமேனும் இல்லாதவர். சொற்கேட்டு மயங்கிப் பதர் மொழியுரைப்பர். எமது பெருநூல்களுக்கும், பிறநாட்டு நூல்களுக்கும் பேதம் பலவுள. எமது பெருநூல்கள் முற்றறிவினரானும், பிறநாட்டாது நூல்கள் சிற்றறிவினரானும் மியற்றப்பட்டவை. மேனாட்டார் நூல்கள் காலத்துக்குக்காலம் திருந்திவருவன. எமது நூல்களும் அத்தன்மையவெனக்கருதி ஆதிநூல்களாகிய வேதாகமங்களில் திரிபுணர்ச்சி நிறைந்துளவென்பர். வேதங்களில் காற்றும் நெருப்பும், நீரும்தொழப்படும் பொருளெனவும் கடவுளைப்பற்றிய உணர்வு எம்முன்னோர்க்கு பிற்காலத்திலே உதித்ததென்றும் மேனாட்டார் கூறுவர். குருவிச்சைக் கடவுளென்று வணங்கினோரும், பரமஹம்ஸ என்னுஞ் சொல்லைப் பெரியவாத்து என மொழி பெயர்த்தோரும் இவ்வாறு விளங்குவது நூதனமன்று. ஆயினும், அவர் வாக்கைச் சைவர்கள் தேவ வாக்கெனக்கொண்டு இவ்வாறு பிதற்றுவதே நூதனமாம். பத்தொன்பது பல்வேறு வகைப்பட்ட சமயங்கள் வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளுமாயின், அம்மறைகள் பத்தொன்பது வகையாகப் பொருள் பண்ணப்பட்டமை பெறப்படும். சைவராகிய நாமும் அவ்வகையினருளொருவர். எமது சமயகுரவரும், சந்தான குரவரும், பாடியகாரரும் வேதத்தை எவ்வாறு விளங்கிக் கொண்டனரென்பதை இவர்களெண்ணுகின்றிலர். ஐரோப்பியர் செய்த வேதமொழி பெயர்ப்பை யேனும் முற்றுக வாசிக்கின்றிலர். படித்தாராயின் இருக்குவேத முதல் மண்டலத்திலுள்ள "இந்திரன், மித்ரன், வருணன் திவ்யன் சுபர்ணன், கருத்மான் முதலிய பலபேர்களால் அறிவாளிகள் கடவுளைச் சொல்லுகிறார்கள். ஆயினுங் கடவுள் ஒருவரே" என்னுங்கருத்தையுடைய மந்திரத்தைக் கண்டிருப்பர். கண்டிருப்பின் கடவுள் ஒருவரே யென்பதையும் காற்றும், நெருப்பும் கடவுளல்ல என்பதையும் அறிந்திருப்பர். அம்மொழி பெயர்ப்பைக் கண்டாரைக் கேட்டவரும் அவரைக் கேட்டவருமே வேதங்களைப் பற்றிய போலியறிவை வெளிப்படுத்துவர்.

வேதத்தை விளக்கப் புகுவோர் சைவ அநுசாரணைகளை அறியவேண்டும். அதன் தெளிவாகிய ஆகமங்களைக் கற்றல் வேண்டும். கருவிநூல்களாகிய நிகண்டு நிருத்தங்களில் பயிலவேண்டும். மனம்போன போக்கெல்லாம் போகலாகாது. வேதமொழி ஆதிமொழியாதலால் அது இயற்கைக் கருத்தையன்றி ஆக்கக் கருத்தை யுடையதன்று. அக்கினி வாயு வருணன் முதலிய சொற்கள் பதியிலக்கணங்களைக்குறிப்பன.

அக்கினி என்பதன்பொருள் அறிவிப்பது, எல்லாவற்றையு மறிவிப்ப

வர் என்றும், வாயு அசைவது, எல்லா வுலகங்களையும் அசையச் செய்பவர் (அதாவது உலகத்திற்குக் கர்த்தா) என்றும் வருணன் எல்லாராலும் விரும்பப்படுபவர் என்றும் பொருள்படும். வேதங்களைக் கற்குமுறை தானுமறியாதார் வேதங்களுக்கேற்றிய பொருளை இரவலாகக் கொண்டு அவற்றை மிகழாமலிகழ்தல் மற்றெவற்றினும் பெருந் துன்பத்தைத்தருகின்றது.

# பரந்தபனே! எழுக!

தமிழ்ப்பண்டிதர் அ. கிருஷ்ணசாமி நாயுடு.

ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வாழ்நாட்கள் தொடர்ந்த ஓவியக் காட்சிகளாக உள்ளன; அவற்றுள் குமார இந்தியாவிற்குச் சிறப்பாகத் தெரிவித்துக் கொள்வன இரண்டு உள்ளன. ஏனெனின், ஸ்ரீ கிருஷ்ணன் குழலினால் ஊதிப்பாடும் ஓவியக் காட்சி ஒன்று; குருக்ஷேத்திரத்தில் ஸ்ரீகிருஷ்ணன் அருச்சுனனுக்குத் தலைவனாயிருந்து உபதேசிக்கும் ஓவியக் காட்சி ஒன்று. குழலில் பாடிக் கூறுவது "அன்பு" என்பதேயாம்; தலைவனாயிருந்து உபதேசிப்பது "பரந்தபனே! எழுக! "என்பதாம். கோகுலத்தில் முரளி என்னும் இசையிற் பாடிய அந்த ஓரே அன்பே, குருக்ஷேத்திர யுத்தகளத்தினும் பேசுகின்றது. ஆனால், இசையின் ஒலிமட்டும் வேறுபட்டுள்ளது. இந்தியாவின் தற்கால இயக்கத்தில், அந்த எளிய, ஒளிநிரம்பிய மொழிகளின் அசைவுகளை நான் காண்கின்றேன். அம்மொழிகள் பரந்தபனே! எழுக! என்பதாம். இம் மொழிகள் உயிருள்ள செய்திகளை இசைக்கின்றன. "எழுக"என்னும் ஒலி ஒரு நகரத்தினின்றும் மற்றொரு நகரத்திற்குக் கடந்து கொண்டேயுள்ளது. எழுக! நீங்கள் குடும்பங்களில் சுதந்தரமுள்ளவர்களாகக் கருதப்படுகிறீர்கள்; நீங்கள் கட்டுக்குள் இருக்கவேண்டுவதில்லை. எழுக! இதுவே அறக்கடவுளின் அழைப்பு; இதுவே ஸ்ரீ கிருஷ்ணபகவானின் அழைப்பு.

இதுகாலை இரண்டு கட்சியாளர் உளர். அவர்களின் பெயர்களை நான் எங்ஙனம் இயம்புவேன்? அன்னோர் மிதவாதிகளும் அன்று; அமிதவாதிகளும் அன்று. ஆனால் காலத்திற்கேற்றவண்ணம் தங்கள் கருத்துக்களை மாற்றிக் கொள்ளுகின்றவரும், உயர்ந்த ஒரே நோக்கங் கொண்டுள்ளவரும் ஆவர். காலத்திற்கேற்ற கோலங்கொள்வோர்(Opportunists) கழறுவதாவது:— மனிதரே! நிலைமைக்குத் தகுந்த வண்ணம் பெரும்பாலனவற்றைச் செய்துகொள்ளுங்கள். உயர்ந்த நோக்கம் கொண்டோர் (Idealists) உரைப்பதாவது:— நீங்கள் முதன் முதல் மோட்ச ராஜ்யத்தைத் தேடுங்கள். பின்னர், எல்லாப் பொருள்களும் உங்களை வந்து அடையப்பெறும். சீர்திருத்தங்களில் (Reforms) எனக்கு நம்பிக்கையில்லை. சீர்திருத்தங்களில் ஒன்றுமே கொடுக்கப்படவில்லை. அதிகார



வருக்கத்தின் குணம் நிருவாகத்திலேயே தங்கியிருக்கின்றது. ஸ்ரீமாந். கர்டிஸ் என்பவர் தாம் எழுதிய இரட்டையாட்சி என்னும் நூலின்கண், மாகாண அரசாங்கத்தார் மத்திய அரசாங்கத்தாரின் உத்தியோகஸ்தர்களாயிருக்கின்றனர் என்பதை ஒத்துக் கொள்ளுகின்றனர். மேலும், மத்திய அரசாங்கம் சீர்திருத்தக்காரர் ஒத்துக்கொள்வதைப் போன்றே, பொறுப்பற்ற தென்பதையும் ஒத்துக்கொள்ளுகின்றனர்.

பண்டிதர் ரஷ்புருக் வில்லியம்ஸ் என்பவர் தாம் எழுதிய 'நீதியும் பொருளும்—முன்னேற்றம்' (Moral and Material progress) என்னும் புத்தகத்தில் காங்கிரஸ்காரரை வினவுகின்றனர். என்னே? காங்கிரஸ்காரர் அமிதவாதத்திற்குள் தள்ளிக்கொண்டு போகும் அபாயத்தைத் தடுக்க வேண்டுமென்றும், காலத்திற்கேற்ற கோலங்கொள்ளும் புதியவர் தம்தருணத்தை முழுவதும் பயன்படுத்த வேண்டுமென்றும் அரசாங்கத்துடன் மன எழுச்சியோடுள்ள ஒத்துழைப்பைக் கொள்ளவேண்டு மென்றுங் கூறுகின்றனர். மக்களிற் பெரும்பாலவரும் மன எழுச்சியோடு கூடிய ஒத்துழைப்பில் எச்சிந்தனையும் இல்லாமல் இருக்கின்றனர். காலத்திற்கேற்ற புதிய கோலங்கொள்வோரும் அரசாங்கத்தின் சாரமான அமைப்புக்களைப் பொறுத்தமட்டில் ஒன்றுமே இல்லாமலிருக்கின்றனர். அதிகார வருக்கத்தின் புறத்தினும், நடக்கையினும் மாறுதல் உண்டாகி உள்ளது. ஆனால், அகத்தில் அங்ஙனம் இல்லையே என்று வருத்தப்படுகின்றேன். அதிகார வருக்கத்தாரும் காலத்திற்கேற்ற கோலங்கொள்ளுபவரே. அரசாங்க நிருவாகமும் காலத்திற்கேற்றகோலங்கொண்டேயிருந்து வருகின்றது. ஆனாலும், அதில் அது தவறிவிட்டது. நிருவாக அரசாங்கம் எப்பொழுதும் தன் சகதியைப் போற்றிக்கொண்டு வருகின்றது. எனினும், தனக்குச் சக்தியின்மை என்பதையும் நிரூபித்திருக்கின்றது. காலத்திற்கேற்ற கோலங்கொள்ளுந் தன்மை நிருவாகம் ஒன்றின்மட்டும் தவறியிருக்கவில்லை. ஆனால் மக்களுக்குள்ளேயும் பலவாறு தவறியிருக்கின்றது. அமித வாதிகளுக்குள்ளேயும் சமய சஞ்சீவிகள் உளர்; அங்ஙனமே, மிதவாதிகளுக்குள்ளும் உயரிய நோக்கம் கொண்டோர் உளர். அரசியலிலும் உயரிய நோக்கம் வேண்டுமென்று மன்றாடுகிறேன். உயரிய நோக்கத்தை வணங்கல் வேண்டுமென்று உங்களை யான் வேண்டுகின்றனன். அதன் அருத்தமாவது:— கிளர்ச்சி, துன்பம், தியாகம் என்பனவாம். ஆகையால் "பரந்தப எழுக" என்னும்பரம்பொருளின் உபதேசத்தை உங்களுக்கு உரைக்கின்றனன்.

"எல்லாப் பொருள்களும் படிப்படியாக விருத்தியடையும், அதுகாறும் பொறுத்திரு; பொறுத்திரு." எனச் சமய சஞ்சீவிகள் சாற்றுகின்றனர். யான் வினவுகின்றேன். எத்துணை காலம் பொறுப்பது? ஜப்பான் ௬௦-(௰)வருஷங்களுக்கு முன்னர், பின்னேற்ற மடைந்த ஜனங்களாயிருந்தனர். இதுகாலை ஜப்பான் மிக உயரிய நிலையில் உள்ளது. இந்தியா இன்னும் அடிமை நிலையிலேயே இருக்கின்றது. "பொறுத்திரு." என்கின்றனை எத்துணை காலம்? இந்த ஆண்டுகள் காறும் யாங்கள் பொறுத்

திருந்தோம். இறுதிவரையும் பொறுத்திருந்தோம். உயிர் நிலையை அழிக்கும் வழிகள் தலைமுறை தலைமுறையாகச் சென்று கொண்டிருக்கின்றன. ஸ்ரீ கிருஷ்ணன் "எழுக!" என்கின்றனர்.

நாட்டின் ஆபத்துகளுக்கு விரோதமாக எழுக. அவ்வாபத்துகள் சிறப்பாக மூன்றுவகைப்படும்.

அவை:—இந்தியாவின் பொருள் சம்பந்தமான கட்டு, வற்கடம், வறுமை, நோய், கிராமங்களின் அழிவு என்பனவாம். இவையே இந்தியாவின் நிகழ்காலத்தோற்றம். ஒருகாலத்தில், இந்தியா வாணிகத்தில் உயர் நிலைமையில் இருந்தது; இக்காலம், இந்தியா மிக மிக எளிமை நாடாக இருக்கின்றது. ஸ்ரீமாந். "வெர்னே லவ்வெட்" கூறுவதாவது:— கைத்தொழில் அபிவிருத்தியைப் பொறுத்தவரையினும், இந்தியாவின் சிறப்பான பிரசினைகளைத் தீர்ப்பதற்கு ஒழுங்கு பெற்ற விசாரணைகள் செய்யப்படவில்லை. அவற்றைப்பற்றி அரசாங்கம் எவ்வித முயற்சிகளும் கைக்கொள்ளவில்லை; அன்றியும், பொருள் சம்பந்தமாகத் தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளும் முறையில், இந்தியாவைச் செய்ய இந்திய மக்களுக்கு எப்பழக்கமும் செய்துவைக்கவில்லை. அரசாங்கத்தின் முயற்சியின்றி பொருள்சம்பந்தமாகத் தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளுந் தன்மையைத் தேச மக்களுக்குப் பழக்குவித்தல் கடினமானதே. இந்திய அரசாங்கமே இந்தியரின் ஆவல்களை, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நன்மைக்காக மிதித்துக்கொண்டிருக்கின்றது. தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளும் தன்மையைச் செய்யும் இந்தியரின் முயற்சியே சுதேசிய இயக்கம் ஆகும். இரண்டாவது இந்தியரின் அரசியல் சம்பந்தமானகட்டு அரசாங்கத்தாரின் திருவுளத்தைச் சீர்திருத்தம் செய்யவில்லை. அடக்கு முறைகள் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன. இளைஞர்கள் தங்கள் உரிமையை முன்னிட்டுத் தங்கள் தேசத்தின் மேல் பக்திவைத்த பாவத்திற்காகச் சிறைக்கு அனுப்பப்பட்டு வருகின்றனர். இராஜத் துரோகப் புதிய சட்டத்தின் வண்ணம் இந்நாட்டில் * விருப்பமின்மை என்னும் பொருள்மட்டுமன்றி வெறுப்புடைமை என்னும் பொருளும் தருவதால், விருப்பமின்மை பகைமைகொண்ட அரசாங்கத்திற்குப் பாவமாயிருக்கின்றது. விருப்பத்தின் அளவு இன்னும் திருத்தப்படவில்லை. அரசாங்கத்தாரோடு ஒத்துழைப்பவர்களுக்குள் எத்துணைபேர் அரசாங்கத்தின் பேரில் விருப்பம் வைத்துள்ளார் என்பதைக்காண ஆச்சரியமாயிருக்கின்றது. விருப்பம் என்பது மரப்பாவையே. அது நம்பத்தகுந்தது மன்று; முடிபத்தகுந்தது மன்று.

* ஆங்கிலத்தில் "Want of affection" என்பதற்கும் விருப்பமின்மை என்பது பொருள். "Disaffection" என்பதற்கும் விருப்பமின்மை என்பதுவே பொருள். ஆனல், Disaffection என்னும் மொழிக்கு விருப்பமின்மை என்பதனோடு வெறுப்புடைமை என்னும் பொருள் கொள்ளுகின்றனர். இங்ஙனம் பொருள் கொள்ளல் தவறென்று திலகர்பெருமான் ௧௯0௯ஆ௵ பெரும் சொற்போர் புரிந்தனர். பெருமான்போருக்கு இலக்காக இருந்தன "Loyalty Disloyalty" என்னும் மொழிகளாம்.



மூன்றுவது:—மக்களின் அறநெறியைப்பற்றிய கட்டு. தலைமுறையாகக் காத்துக்கொண்டு வந்தும் மக்களின் நல்வழி-நாடிகள் தளர்ச்சியடைந்துள்ளன. அகத்தில் அச்சம் குடிகொண்டுள்ளது; அதிகாரத்திற்கு அஞ்சுகின்றனர். அன்னோர் அதிகார வருக்கத்தை மகிழ்ச்சி செய்வதொன்றனையே குறிக்கொண்டு, உயரிய நோக்கங்களின் பேரினும், தன்னைத்தானே மதிக்கும் இயற்கையறிவின் பேரினும், இந்தியாவின் கௌரவத்தின் பேரினும். தங்கள் சொந்த சமயத்தின் பேரினும், கால்வைத்து மிதித்திருக்கின்றனர். அரசாங்க ஆளுகையிலுள்ள கலாசாலைகளினும், கல்லூரிகளிலும் உள்ள மாணவர்களுக்கு, இந்தியாவின் பழக்க வழக்கங்களையும் சுதந்தர ஆவலையும் புகட்டப்படுவதில்லை. பஞ்சாப் படுகொலையின் பொழுது, இராணுவச்சட்டத்தின் கீழ் எல்லா மாணவர்களுக்கும் கசையடி கொடுக்கப்பட்டது, அதனைச் சன்மார்க்கமாகத் தடை செய்வதற்கு ஒரு மாணவனுக்கும் சக்தியில்லாமல் போயிற்று. ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணன் உபதேசித்த "எழுக" என்னும் மொழியைத் திரும்பவும் மொழிகின்றேன்.

யான் கூறுவது மூர்க்கத்தன்மை Violence அன்று; மூர்க்கத்தன்மை பயன்தரத்தக்கதும் அன்று; மூர்க்கத்தன்மை என் வாழ்நாட்களின் கொள்கைகளுக்கும் மாறுபட்டது. தரும தரிசனங்கள் தரணியிற் பரவும் பொழுது, மூர்க்கத் தன்மையோடுள்ள தேசபக்தியை மக்கள் அனைவரும் நிராகரித்து விடுவார்களென்று நம்புகின்றேன். சமயநூல்களையன்றியும் நானும் மூர்க்கத்தன்மை என்பது பெரும் மாயை என்றே மதிக்கின்றேன். இம்மாயை மக்களின் தருக்கங்களில் தங்கியிருக்கவில்லை. தேச மக்கள் அரசாட்சியினும் இம்மாயை (Violence) தங்கியிருக்குமேயாயின், அவ்வரசாட்சியையும் அது அழித்து விடும். இறுதியில் வாள் எடுப்பவர் வாளினாலேயே அழிந்து விடுவர். ஐரோப்பியர் வாள்வன்மையையே நம்பியிருக்கின்றனர். அதன் முடிவு எவ்வாறாயிற்று? மூர்க்கத்தன்மையினின்றும் மூர்க்கத்தன்மைக்கு ஐரோப்பியர் அலைந்து திரிகின்றனர். சுதந்தரத்தின் பிரசினையை ஐரோப்பியர் இன்னும் ஒரு முடிவாகத் தீர்க்கவில்லை.

ஆகையால், எழுக! மூர்க்கத்தன்மைக்காக வன்று; தன்னைத்தானே ஒழுங்குபடுத்தும் தன்மைக்காக எழுக. உன் வாழ்நாளைச் சீர்ப்படுத்துக. யான் அறிந்திருப்பதுவும் இதுவே; இந்திய இயக்கத்தின் உபதேசமும் இதுவேயாகும். ஒத்துழையாமை என்பது தன்னைத்தானே சீர்திருத்திக் கொள்ளுதல். சமுதாயமும் பொருள் சம்பந்தமுமான உன்வாழ்க்கையைச் சீர்திருத்துக. உங்கள் கல்வியைச் சீர் திருத்துக. உங்கள் நாகரிக வாழ்க்கையையும் சீர்திருத்துக. உங்கள் அரசியல் வாழ்க்கையையும் சீர்திருத்துக. இவையனைத்தையும் அரசாங்கத்தின் ஆதரவின்றிச் சீர்திருத்தல் வேண்டும். இவற்றினை மாணிடவருக்கத்தின் அடிப்படையினின்றே சீர்திருத்துக. அன்னியர் ஒருவரையும் வெறுக்கற்க. மக்கள் மாட்டுள்ள அன்பினலேயே சீர்திருத்துக. நமது பொறுப்பு முழுவதும் அரசாங்கத்தையே அணுகியிருப்பதினுல், தன்னம்பிக்கை இரக்கமின்றிக் காலின்கீழ் மிதிக்கப்பட்டு வருகின்றது. தன்னைத்தானே சீர்திருத்திக் கொள்ளுதலினுல் அத் தன்னம்பிக்கை திருந்திவளர்ச்சி பெறும். தன்னைத்தானே சீர்திருத்திக் கொள்ளல் என்பதுவே சுயராஜ்யத்தின் உட்பொருளாகும்.

# தமிழின் தொன்மையும் தற்கால நிலையும்.*

பண்டிதமணி—மு. கதிரேசச் செட்டியார்.

**'பால்வாய்ப் பசுந்தமிழ்'**

ஒருமைக்கட் பயிற்சியால் எழுமைக்கண்ணும் தொடரும் இயல்பினதாகிய கல்வியே மக்களை மக்கட்டன்மையுடையராக்குமென்பது பெரியார் துணிபு. எந்நிலத்தில் எக்குடிக்கட் பிறந்தாராயினும் கல்வியுடையாரையே உலகம் போற்றும் என்பது கண்கூடாக அறியப்பட்டதொன்று. இத்தகைய விழுப்பஞ்சான்ற கல்வியை, எந்நிலத்தில் எம்மொழி வழங்கப்படுகின்றதோ அந்நிலத்தில் வாழும்மக்கள் அம்மொழி மூலமாகவே முதற்கட் பயிலவேண்டும். அதுவே அந்நிலத்து மக்கட்குத் தாய்மொழியுமாகும். ஒரு குழந்தை பிறந்து மொழிபயிலுங்கால் அதன் தாயால் முதற்கட் பயிற்றப்படும் மொழி யாது, அதுவேதாய்மொழியென்று கோடல் பொருந்தும். அன்னைவாயிலாகக் கேட்டு மழலைமொழிந்து தேறியபின்னரே அக்குழந்தை அப்பனாலும் ஆசிரியனாலும்வரிவடிவிற்பயிற்றப்பட்டு அறிவுவிரிவெய்தப்பெறும். ஒருவன் இறைவனையடைந்து பேரின்ப நுகர்ச்சியில்தலைப்பட விழையுங்கால் அங்கும் அருளுருவாகிய தாயே முதற்கண் இவனைப்பண்படுத்தி அப்பனாகிய இறைவனை யறிவித்து அவன்பால் உய்ப்பவளாவள். இதனை, "மெய்யருளாம், தாயுடன் சென்று பின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து, ஏயுமதே நிட்டை" என்னும் முற்றத்துறந்த முனிவர் பெருமானாகிய பட்டினத்தடிகள் அருள்மொழியானுமுணர்க. தாய்வழியாகத் தந்தைக்கு ஆளாதலையுணர்ந்தே, முதற்கண் தாயைக்குறிப்பிட்டு மணிவாசகப் பெருந்தகையாரும், "அம்மையே அப்பா ஒப்பிலாமணியே" என்று திருவாய்மலர்ந்தருளினர். இத்தமிழ் நிலத்து மக்களாகிய நம்மனோர்க்கு நம் அன்னையரால் முதற்கண் பாலோடு குழைத்து அன்போடளாவி ஊட்டிய அருமைமொழி அந்தமிலின்பம் ஆர்தரப் புரியும் செந்தமிழ்மொழியே யாமன்றே! அன்னையார் அருளொடுசுரக்கும் இனியபாலை யுண்ணும் குழவிப் பருவத்தில், அவரால் பயிற்றப்பட்டுப்பயிலும் சிறப்புப் பற்றியன்றே இம்மொழி "பால்வாய்ப் பசுந்தமிழ்" என்று பாராட்டப்படுகின்றது. மழவிளம் பருவத்தில் பயிற்றப்படுதல் குறித்தே இதனைப் பசுந்தமிழ் என்றார்போலும். இயற்கையும் அன்னதே. இதனால் நம் உடல் பாலுண்டுவரும் பருவம் தொட்டே, உடற்கண் உறையும் உயிர், தன்குணமாகிய அறிவைச்செந்தமிழ்த் தெய்வமொழிப் பயிற்சிவாயிலாக வளர்த்துத்திகழும் உண்மை நமக்குப்புலனாகின்றது. அறியாப் பருவத்தினும் நம் உயிர்க்கு உறுந்துணையாகநின்று அறிவுச்செல்வத்தை வளர்த்து உதவிவரும் தமிழ்

* இத்தலைப் பெயரோடுவெளியிடப்பெறும் கட்டுரை, கரந்தைத் தமிழ்ச்சங்கம்—பதினான்காம் ஆண்டுத் திருவிழாவில் அவைத் தலைவர் திருவாளர் பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியாரவர்கள் கூறிய முன்னுரையின் முக்கிய அம்சமாகும்.



மொழியின் பழமையையும் சிறப்பையும் என்னென்று கூறுவேன்!

தொல்காப்பியம்.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த்தோன்றி இற்றைஞான்று நம்மை வரப்பெற்ற தமிழ்நூல்களெல்லாவற்றினும், காலத்தானும் சிறப்பானும் முற்பட்டுவிளங்குவது ஒல்காப்பெரும்புகழ்த்தொல்காப்பியம் என்னும் தலையாய இயல்நூலேயாகும். இதுகூடலின் கண் பண்டுநிலவிய முச்சங்கத்துள், தலைச்சங்கக்காலத்தில் தோன்றியதென்பது யாவரும் உணர்வர். இந்நூலின்கண் தமிழ் வரம்புகண்ட தண்டமிழ் முனிவராகிய தொல்காப்பியர், வடநூலார் நான்கென்வகுத்த உறுதிப்பயன்களை அகம் புறமென இருபிரிவினுள் அடக்கி, மக்கள் இம்மைப்பயனை நுகர்தற்பாலதாய இன்பநிலையை அகத்தினும், மறுமைக்குரியதாக எய்தற்பாலதாகிய அறநிலையினையும், அதற்குக் கருவியாகிய பொருள் நிலையையும், இம்மூன்றன் நிலையாமையையுமுணர்ந்து ஒருவி அடைதற்பாலதாகிய அந்தமிலின்பத் தழிவில் வீடாகிய உறுதிபயக்கும் வாயிலையும் புறத்தினும் ஒழுங்குற வகுத்து விளக்கியுள்ளார். இங்ஙனம் மக்கள் ஒழுகலாற்றைத் திறம்பட நுனித்துணர்ந்து பலபட விரித்துரைத்தலோடு மற்றை உயிர்த்தொகுதிகளின் இயற்கைகளையும், நிலையியற்பொருளாய மரமுதலியவற்றின் இயல்புகளையும், நிலப்பகுதிகளின் பான்மைகளையும் மற்றை இயற்கைப் பொருள்களின் தன்மைகளையும், ஆராய்ந்துணர்வார்க்குப் புலப்படும்படி கூறியிருக்கும் திட்பநுட்பம், வேறு எம்மொழி இயல்நூலார்க்கும் இயலாததொன்றும். ஒருமொழிக்கு இலக்கணம் காணப்புகும் ஆசிரியர் அம்மொழிக்கண் உள்ள எழுத்துச்சொல் என்னும் இவற்றையே யாராய்ந்து தூய்மைப்படுத்துவர். இவ்வியல்பு பிறமொழி இயனூலார் யாவர்க்கும் ஒத்ததாகும். நம் செந்தமிழ்த் தெய்வமொழியின் இயன்முதனூல் ஆசிரியரோ மொழியாளர் எல்லோர்க்கும் பொதுவாகிய எழுத்துச்சொற்களின் ஆராய்ச்சிகளோடு அமையாது, சொல் கருவியாக உணரப்படும் பொருளாராய்ச்சியிற் பெரிதும், தலைப்பட்டு அப்பொருளைக் கூறிவாளர் எத்துணைப் பாகுபாடுசெய்து உணர்விரும்புவரோ அத்துணைப்பகுப்புக்களும் அமைய மக்களின் ஒழுகலாற்றையும் பிற இயங்கியல் நிலையியற் பொருள்களின் தன்மைகளையும் தெள்ளத்தெளிய விளக்கியுள்ளார். இப்பொருளதிகாரத்திற் கண்ட கந்தழி முதலிய சொற்களை ஆராய்வோமாயின் அந்நூற்காலத்துத் தமிழரின் கடவுட் கொள்கை நன்கு புலப்படும். "ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித்தானே நிற்குந் தத்துவங்கடந்தபொருளாகக் கடவுளைத் தமிழர் ஆராய்ந்து தெளிந்துள்ளாரென்பது அதனாற் புலனும். தொல்காப்பியர் தமிழ் நிலத்தார் ஒழுக்கங்கண்டு நூல் செய்யுங்காலத்துத் தமிழர்நிலை இத்துணை மேம்பாடுற்றிருக்குமாயின் அதற்கு முன் எத்துணையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர் தத்துவ ஆராய்ச்சியில் தலைப்பட்டிருத்தல் வேண்டும். நாள்வினைகளைச் செவ்விதின் இறுக்கப்பணிக்கும் அறநூல்களின் வழியொழுகிப் பண்படுத்தப்பட்ட உள்ளநிலையுடையாரன்றே முடிவில்தத்துவ ஆராய்ச்சியில் தலைப்படுவர். அங்ஙனம் தலைப்படுவாரும் கடவுட்குப் பல

வகைப் பொருந்தா இலக்கணங்களைக் கண்டு ஒருவரோடொருவர் தம்முள் முரண்படுவர். அம்முரண்பாடறுத்துக் கடவுட்பொருளின் தூய இயல்நிலையை உள்ளவாறுணர்வார் மிகவும் அரியர். இவ்வரிய உணர்ச்சியைத் தமிழர் எத்துணையோ ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே எளிதிற் கைவரப்பெற்று ஒழுகினரென்பது அத்தொல்காப்பிய முதுநூலிற்கண்ட உண்மைத்தெளிவாகும். இதனால் தமிழின் பழமை,காலத்தான் அறுதியிட்டுரைத்தல் அரிதென்பது போதரும். புதிய முறையில் ஆராய்ச்சி செய்வாருள் சில நுண்மாணுழை புல மிக்கார்க்கும் இஃது உடன்பாடேயாகும். தொன்மை வரலாற்று முறையில் நோக்கினும் இதன் பழமை புலனும். ஒருபற்றுக் கோடின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங்கடந்த பழம்பொருளாகிய இறைவன், மக்கள் ஆண்பெண்களாக இயைந்து இன்ப நுகர்ச்சியில்தலைப்படும் பொருட்டு அருள்வழி உருக்கொண்டு,பொற்கோட்டிமயத்தின்கண் மலைமகளை வேட்டஞான்று அமரர்முதனியோ ரனைவரும் ஆங்கு ஒருங்கு தொக்காராகத் தென்பாலுயர்ந்து வடபால் தாழக்கண்ட இறைவன், நிலப்பரப்பின் சமனிலை குறித்துக் குறுமுனியை நோக்கிப் பொதியிற்கு ஏகென, அம்முனிவர் பெருமான் முழுமுதற்பிரானை வணங்கி, "ஐயனே! தெற்கணுள்ளார் தமிழ்மொழிவல்லாரன்றே.அவர் உவப்ப யான் அம்மொழிப் பயிற்சியில் பீடுபெறுதல் எங்ஙனம்?" என வேண்ட, இறைவன் அதுகாலைக் குடமுனிக்குத் தமிழ் அறிவுறுத்தா ரென்பது கந்தபுராணகதை. இப்புராணவரலாற்றை நம்புவார்க்குத் தமிழின் தொன்மையைப்பற்றி விரித்துரைத்தல் மிகையே.

### தமிழ் தனிமொழியே!

இனி, இங்ஙனம் தொன்மையான் மாண்புமிக்க இம்மொழியின் சிறப்பைப்பற்றிச் சிறிது ஆராய்வாம். ஒரு மொழிக்குச் சிறப்பு அதன்கண் அமைந்துள்ள சிறந்த இலக்கியம், இலக்கணம், சமயம் முதலியவைபற்றிய நூற்பரப்புக்களானும், பிறிதொன்றன் சார்புவேண்டாது புலவர்கருதும் எத்தகைய அரும்பொருள்களையும் வழங்குதற்குரிய சொற்களுடைமையானும், பிறவற்றானுமாம். இன்னோரன்ன சிறப்புக்களில் நம் தமிழ்மொழி யாதுங்குறைவுடையதன்று. இது மற்றொரு மொழியினின்றும் தோன்றிய தென்றுதல், பிறிதொன்றன் சார்பின்றி நடைபெறுதென்றுதல் கூறுவார் உண்மை யாராய்ச்சியிலாரவர். ஆனால் தொல்காப்பியர் காலந்தொட்டே வடசொற்களுட் சில தமிழில் வழங்கலாயின. அது பற்றித் தொல்காப்பியனாரும் "வட சொற் கிளவி வடவெழுத் தொரீஇ, எழுத்தோடு புணர்ந்த சொல்லா குமே" எனவும், "சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" எனவும் வடசொல் தமிழில் வழங்கு முறையை வரையறுத்துக் கூறினர். வடமொழி எந்நிலத்து மாந்தரும் மேற்கோடற்குரிய பொது மொழியாக வுள்ளமையானும், பொதுப்பொருளில் வேண்டுமளவு கோடல் முறையாதலானும், கூடற் சங்கத்துக்குலவிய பண்டைப்புலவர் பெருமக்களுட் பலர் வடமொழியினும் வல்லாராகவிருந்து தமிழை வளர்த்தமையானும் அச்சங்ககாலங்களில் மிகச் சுருக்கமாகத் தமிழில் வடசொற்கலப்பு உண்டாயிற்று. அங்ஙனம் வடசொற்கள் தமிழிற் கலக்குங்கால் பொதுவெழுத்தான் இயன்ற சொற்களே தூயதமிழுரு எய்திப் பெரும்பாலும் விரவலாயின. நாளடைவில் புலவர் தனித்தமிழ்ச் சொற்களைத் தெரிந்து வழங்கும் மதுகையின்மையானும், ஒரோவழித் தெரியினும் அவற்றினும் வடசொல் தொடை செவிக்கு இன்பம்பயப்பன வாம் என மாறுகொள உணர்ந்தமையானும், தனித்தமிழ்ச் சுவைகண்டு இன்புறும் தலைவர் அருகினமையானும் வடமொழியாளர் உவப்பத் தமிழில் பாட்டு உரை முதலியன இயற்றவேண்டுமென்னும் விழைவுமேற்கொண்டமையானும் பொதுவெழுத்தானும் சிறப்பெழுத்தானும் ஆய வடசொற்கள் பலவற்றைத் தமிழில் வரம்பின்றி வழங்கிவருவாராயினர். சுவையுடைமை அவ்வம்மொழிகளில் தனித்த நிலையிற் காணப்படுதல் போல் கலப்பிற் காணப்படுதல் சிறந்ததன்று. ஒருமொழியில் செவ்வனம் பயின்று அச்சுவையின் நிலைகண்டுணர்வார்க்கு அதன் தனிநிலையிற் போலப் பிறமொழிக்கலப்பில் அத்துணையின்பம் உண்டாகா தென்பது உண்மையநுபவமுடையார் எல்லோர்க்கும் ஒத்ததாகும். இதனால் வடசொற்களை நேர்ந்தவாறு தமிழில் புகுத்தல் முறையன்றென்பது தெளிவாம். ஒருசில வடசொற்கலப்பு உண்மைபற்றித் தமிழ் மொழியை வடமொழியினின்றும் தோன்றியதென்றல் பொருந்தாததொன்றும். வடமொழிக்கும் தமிழ் மொழிக்குங் கும் உள்ள வேறுபாடு மிகப்பலவாம். வடமொழியில் தமிழிற்போலத் திணைப்பாலுணர்த்தும் வினைவிகுதிகள்



இல்லை. "பவதி" என்னும் வினைமுற்று "இருக்கின்றான்" "இருக்கின்றாள்" "இருக்கின்றது" என ஓர் ஈறேநின்று எழுவாய்க்கேற்றவாறு பொருளுணர்த்தும். தமிழில் வினைமுற்றுக்களின் ஈறே திணைபால்களை உணர்த்திநிற்கும். பால் வகுப்புத் தமிழில் பொருளைப்பற்றியும், வடமொழியில் சொல்லைப் பற்றியும் உள்ளது. ஆண்மகனைப்பற்றிவருஞ் சொற்களெல்லாம் ஆண்பாலாகவும், பெண்மகளைப்பற்றி வருவனவெல்லாம் பெண்பாலாகவும் தமிழில் உள்ளன. வடமொழியில் இவ்வரையறையில்லை, மாறுபட்டுவரும்; சொல்நோக்கியதாகலின் மனைவியைப் பற்றிய "பாரியை" என்னுஞ்சொல் பெண்பாலாகவும், "தாரம்" என்னுஞ்சொல் ஆண்பாலாகவும், "களத்திரம்" என்னுஞ்சொல் நபுஞ்சகப்பாலாகவும்வருதல் காண்க. வடமொழியில் ஒருமை இருமை பன்மைச்சொற்கள் உள்ளன. தமிழில் ஒருமை யல்லாதனவெல்லாம் பன்மையே. திணைப்பாகுபாடு, குறிப்பு வினைமுற்று முதலியனதமிழ்க்கேஉரியன. "முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லையாக்கி" என்னும் கம்பராமாயணச் செய்யுளை வடமொழிக்கண் மொழிபெயர்க்கப்புக்க வடமொழிப்புலமை மிக்க என் நண்பரொருவர், அத்திணைப்பாகுபாடு வடமொழிக்கண் இல்லாமையால் "நல்லனவற்றைத் தீயனவாக்கியும் தீயனவற்றை நல்லனவாக்கியும்" என்னும் பொருள்பட மொழிபெயர்த்துள்ளார். திணைப்பாகுபாடு வடமொழிக்கண் இல்லையாயினும் பொருளா ராய்ச்சி வன்மையால் ஒருவாறு பொருந்த மொழிபெயர்க்கலாம். கூடாதென்பது

பது அவர் கருத்தாப்போலும், இன்னும் உற்றுநோக்குவார்க்கு இலக்கண அமைதியில் வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் வேறுபாடு பல தோன்றும். இவ்வேறுபாடுகளைச்சுருக்கி,

சாற்றிய தெய்வப் புலவோர்
மொழிக்குந் தமிழ்மொழிக்கும்
வேற்றுமை கூறில் திணைபா
லுணர்த்தும் வினைவிகுதி
மாற்றருந் தெய்வ மொழிக்கில்லை,
பேர்க்கெழு வாயுருபும்
தேற்றிய லிங்க மொருமூன்று
மில்லை செழுந்தமிழ்க்கே

என்று பிரயோகவிவேகநூலார் கூறினர். வடமொழி தென்மொழி ஆராய்ச்சியிற் புலமைமிக்க மாதவச் சிவஞானமுனிவர் இவ்வேறுபாடுகளை நன்கு ஆராய்ந்து தெளிவுபட உரைத்தனர். அவர் கூறியனவருமாறு:– தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட் படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகைமுதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலியசொற்பாகுபாடுகளும், அகம் புறமென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும் அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமையானும்'' என்பனவாம். இவ்வாராய்ச்சியால் தமிழ் தனிமொழி யென்பது செவ்விதிற் புலனாதல் காண்க.

நூற்பரப்பு.

இனி இம்மொழிக்கணுள்ள நூற்பரப்புக்களை உற்று நோக்குவாம். கடல்கோள் முதலியவற்றாற் சென்றனபோக எஞ்சிய சங்கநூல்கள் பலவுள்ளன. தமிழின் இயற்கைச் சுவை நலம் ததும்பித்திகழும் பத்துப்பாட்டு அகம், புறம், கலித்தொகை முதலிய சங்கத்துச் சான்றோர் இலக்கியங்களும், எம்மொழியினும் இத்துணைத் திட்பநுட்பங்களமைய யாத்த ஒரு நூலும் உளதோவென்று ஆராய்வார் வியப்புறும் வண்ணம் தமிழ் நிலத்தார் தவப்பயனாக எழுந்த திருக்குறளை முதலாகவுடைய நீதிநூல் இலக்கியங்களும், பாடுவோர்க்கும் கேட்போர்க்கும் இறைவன் திருவடிப் பற்றை விளைவித்து அன்புமயமாய் நின்று உருக்கும் தேவாரம், திருவாசகம், நாலாயிரப்பிரபந்தம் முதலிய அருட்பாடல்களும், காப்பியச்சுவை நலம் கனிந்தொழுகும் சிலப்பதிகாரம் சிந்தாமணி முதலியனவும், இறைவன் திருவருள் நலத்தை அன்பர் அள்ளி உண்டு இன்புற்ற முறையையும், 'உலகியல் நிலைகளை வரம்பிட்டு அழகுபெற உரைக்கும் பெற்றியையும் முறையே மேற்கொண்டு வெளிப்போந்த சைவ வைணவ இலக்கணங்களாகிய பெரியபுராணம், கம்பராமாயணம் முதலியனவும், சிவாநுபவச் செல்வர்களாகிய மெய்கண்டதேவர் முதலியோரால் அளவை நூன்முறையில் வைத்துப் பொருள்வரையறைசெய்து அருளிச்செயப்பட்ட சிவஞானபோதம், சிவஞானசித்தி, திருமந்திரம் முதலிய சமயநூல்களும், சிவஞானமுனிவர், குமரகுருபர அடிகள் முதலியோர் அருளிய இனிய நூற்றிரட்டுகளும், பிறவும் இதன்கண் உள்ளன. உருக்காந்த நூல்களினின்றுஞ் சிதறுண்டு அங்குமிங்குங்காணப்படும் சில செய்யுட்களைப் பார்க்குங்கால் முழுவுருவமுங் கிடைக்கப்பெறாமை தமிழரின் தவக்குறைபென்றே இரங்கவேண்டியதாயிற்று. சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தர்களையும் தனித்தனியே தொள்ளாயிரம் வெண்பாக்களாற் புகழ்ந்து பாராட்டு முறையிலமைந்த முத்தொள்ளாயிரச் செய்யுட்களில் சிதறிக் கிடந்த சிலவற்றைக் கண்டதும் அந்நூல் முற்றும் பெறுமை பற்றி என் மனம் வருந்தியதுண்டு. சிற்றுருவமாகிய வெண்பாவில் உயர்ந்த பொருள்களைச்செப்பனிட்டமைத்துச் சொல் வளமும் பொருள் வளமும் கொழும்பப் பாடியிருக்கும் வனப்புத் தமிழ்ச் சுவை நலம் துய்ப்பார் யாவருள்ளத்தையும் கவர வல்லதாம். "வெண்பாவிற் புகழேந்தி" என்று பாராட்டிய புலவர்க்கும் இம்முத்தொள்ளாயிர நூல் காணப்பட்டில தென்றே எண்ணுகின்றேன். "பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து" என்று தமிழ் மடந்தையைப் புனைந்து பாராட்டிய புலவரும் இதனைக் கண்டிலர். தென்னன் புகழின் மட்டில் அன்றி மூவேந்தர் புகழிலும் ஒருங்கு கிடந்தமை இந் நூலாற் கண்டிருப்பாராயின் "பொருப்பிலே பிறந்து மூவர் புகழிலே கிடந்து" என்று பாடியிருப்பார். இன்னும் பூதங்களாலும் காலதத்துவத்தாலும் கவரப்பட்டு ஒழிந்த சிறந்த நூல்களும் உரைகளும் பலவாம். இலக்கண நூல்களுள் எழுத்து முதலிய ஐந்து இயல்களையும் முற்ற உரைப்பனவும், அவற்றுள் ஒன்றிரண்டே நுதலுவனவுமாகிய தொல்காப்பியம், இறையனாரகப்பொருள், நன்னூல் முதலிய பல வுள்ளன.

(தொடரும்.)

---

# காஞ்சீபுரத்துக் கவியரசு—மகேந்திரன்.

தி. நா. சுப்பிரமணியன்.

## தொண்டைநாடும் காஞ்சீபுரமும்.

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும்
பனைவிரி மணங்கமழ்பூஞ்சோலை தோறுங்
காலாறு கோலியிசை பாட நீடு
களிமயினின் றாடியல்தொண்டைநாட்டுப்

பண்டைவளம் ஒப்புவமையற்றதே எனக் கூற வேண்டியிருக்கிறது. சோழநாடு சோறுடைத்து என்பது போன்ற சிறப்புகள் மற்றைய பாண்டிய சேர நாடுகளுக் குடையன வேனும் இவை எல்லாவற்றிற்கும் மேம்பட்ட அறத்தில் தோய்ந்த தூய ஒழுக்கமுடைய பெரியாரை உடையது தொண்டை மண்டலம். ஔவை 'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' என்றும் புகழேந்தி 'வையம் பெறினும் ஒரு பொய் உரைக்க மாட்டார் தொண்டை நன்னாட்டார்' என்றும் கூறியிருக்கிறார்கள். தமிழ் நாட்டிற் சைவப் பயிரைத் தழைக்கச் செய்தவரும் குன்றை நகரர் ளியுமான அருள் மொழித் தேவர் சேக்கிழார் பெருமானும்,

ஏயுமாறுபல் லுயிர்களுக்
கெல்லையில் கருணைத்
தாயனுள்தனி யாயின
தலைவரைத் தழுவ
ஆயும் நான்மறை போற்றநின்
றருந்தவம் புரியத்

தூய மாதவம் செய்தது
தொண்டைநன் ஞடே.
வன்மை நீடிய வேலிலே
யொழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால்
பெருங்குடி தழைப்ப
வன்மை யோங்கெயில் வளம்பதி
பயின்றது வரம்பின்
றொன்மை மேன்மை யினிகழ்பெருந்
தொண்டைநன் ஞடே.
நத்திரம்புரி பழையனூர்ச் சிறுத்
தொண்டர் நவைவக்
குற்ற போதகம் முயிரையும்
வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மை யுந்தாக்கியச்
சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மை யினிகழ்ந்தது
பெருந்தொண்டை நாடு.

எனப் பலவாறுகக் கூறிச் செல்கின்றனர்.

திருக் குறிப்புத் தொண்டர் சாக்கியனர், சிவநேசர் முதலிய திருத்தொண்டர்களையும் பொய்கையார் பூததார் முதலிய ஆழ்வார்களையும், தொண்டர் புராண மியற்றிச் சைவ உலகிற்குத் தந்து தில்லைத் திருநடனத்தான் திருவடி நீழலில் தன் பூத உடலை நீத்துப் புகழுடம் பெய்திய சேக்கிழார் பெருமானையும் தமிழ் நாட்டிற்குத் தந்துதவியது இத்தொண்டை நாடே. அன்றியும் மாபாரதத்தைத் தமிழிற் பாடியவரும் நந்திக் கலம்பகம் இயற்றியவருமான பெருந்தேவனரும் திருக்குறளுக்கு எவ்வுரையினும் மேம்பட்ட உரை யெழுதிய பரிமேலழகரும் கந்தபுராணமியற்றிய கச்சியப்பரும் விளங்கியது இப்புனித நாட்டிலேதான்.

இந்நாடு தென் மொழியில் மட்டுமல்லாமல் வடமொழிப் பாண்டித்திய—பெரியார்களையும் உலகிற்கீந்தது என்றும் சிறிது காலத்திற்கு முன் சரித்திர ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்திருக்கிருர்கள். காளிதாசக் கவிக்கு ஒப்பானவனும் கிராதார்ஜுனீயம் என்னும் காவியத்தை இயற்றியவனுமான பாரவி என்னும் புலவனும் அவனது 'கொள் பேர' னும் (அதாவது பிள்ளையின் பேரன்) தற்காலத்துத் தசகுமார சரித்திரம் என வழங்கும் நூலிற்கு முதல் நூலான அவந்தி ஸுந்தரி கதையும் காவியா தர்சம் என்னும் அணி நூலையும் இயற்றியவனை தண்டி என்னும் புலவனும் வாழ்ந்தது இந்நாட்டிலே தான். *'தண்டி அல்லாது வேறு ஒருவனும் புலவனுகவே மாட்டான்' எனக் கலைக் கிழத்தியே கூறினள் என்று ஒரு கதை வடமொழியாளருள் வழங்கி வருகிற பொழுது அவனது கவித்திறம் தான் என்னே! அவனைத் தந்துதவிய நாட்டின் பெருமை தான் என்னே! இத்துணை பெருமை பொருந்திய தொண்டை நாட்டின் வளப்பத்தை ஒருவன் நன்கு அறிய விரும்புவானுயின் அவன் கடியலூர் உருத்திரன் கண்ணனர் பாடிய பெரும்பாணுற்றுப்படையைப் படித்தாற் போதும். o

இந்நாட்டுத் தலைநகராகிய காஞ்சியை மதுரைக் கூலவாணிகன் சாத்தனர்,

தேவர் கோமான் காவல் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னகர்

* இவர்களது வரலாறு பின்னல் விவரமாகக் கூறப்படும்.

o இது பழைய நூல்களிலும் கல்வெட்டு முதலியவற்றிலும், தண்டாக விஷயம் தொண்டீர நாடு. தூண்டீரநாடு. தொண்டைநாடு எனப் பலவாறுகக் கூறப்பட்டிருக்கிறது.



எனக் கூறுகிருர். பழைய சிறப்பின் ஒரு பகுதியையாவது தற்பொழுது கொண்டுள்ள நகரம் ஒன்று தென்ஞட்டில் உள்ளது என்றெருருவன் கூறினல் அது காஞ்சி மாநகர் அன்றி வேறெதுவுமாகாது. முத்தி நகர் ஏழினுள் முக்கியமாம் காஞ்சி என ஒரு சமயாசாரியார் கூறினுராகில் அது சமயத்திற் பெரிதும் ஈடுபட்ட இந்தியர்களுக்கு, அதிலும் தமிழருக்கு எத்துணை சிறப்பு வாய்ந்தது? இன்றைக்கும் சைவம் வைணவமாகிய இரு திறத்தாருக்கும் திருப்பதியாக இருக்கின்றது என்பதைப பள்ளிச் சிறுவரும் அறிவர். காஞ்சீபுரத்தில் உள்ள கோயில்களைக் கணக்கிட்டால் இன்றைக்கும் சிவனுக்கும் விஷ்ணுவுக்குமாக அளிக்கப்பட்டன இருபதுக்கு மேல் உள்ளன என்பது போதரும்.

இந் நகரம் பழைய சாஸனங்களிலும் புத்தகங்களிலும் கச்சிப்பேடு, கச்சி கஞ்சி காஞ்சி காஞ்சீபுரம் எனப் பலவிதமாகக் கூறப்பட்டுள்ளது. பழைய செப்பேடுகளுள் கச்சிப்பேடு என்ற பெயரே காணபபடுகிறது. மொழிநூல் வல்லார் அதுவே இயற் பெயரென்றும் காஞ்சீபுரம் என்பது அதன் திரிபு என்றும் கூறுவர்.

இந்நகரம் அசோக சாஸனங்களுள்ளும் பதஞ்சலி வியாகரண பாஷியத்திலும் வாராஹமிஹிராது பிரகத் ஜாதகத்திலும் கூறப்பட்டிருக்கிறது. கி. பி. ஏழாம் நூற்ருண்டில் இந்தியாவில் திவ்விய தேச யாத்திரை செய்த சீனர் ஹியூன் ஸாங்* என்பவர், இது ஆறு மைல் நீளம் உள்ளது என எழுதிச் சென்றனர். அன்றி கி. மு. ஐந்தாம் நூற்ருண்டில் உலகிற்கு, தர்ம உபதேசம் செய்த பகவான் ததாகதர் (புத்தர்) அடிக்கடி இந்நகருக்கு வந்து கொண்டிருந்தார் என்றும் தர்ம உபதேசம் செய்து பிரஜைகளைப் புத்த சமயத்திற் புகுத்தினரென்றும் அதனல் அசோகன் ஸ்தூபிகளை இங்கு நட்டான் என்றும், அவர் வைத்துச் சென்ற குறிப்புகளிற் காணப்படுகிறது. பௌத்த சமயாசாரியர்களுக்குள் மிகவும் பிரக்யாதி பெற்றவரும் பிக்ஷுவுமான தர்மபால போதிஸத்வரைத் தந்துதவியதும் இந்நகரமே யாம். இன்னும் இந் நகருக்குத் தெற்காக அதிக தூரமில்லாமல் (அண்மையிலேயே) அதிமேதைகள் அடிக்கடி விஜயஞ் செய்யும் ஸங்காராமம் ஒன்று இருந்ததென்றும் அவ்விடத்திலேயே அசோக ராஜன் நிறுத்திய நூறு அடி ஸ்தூபி இருந்ததென்றும் அவர் கூறியிருக்கிருர். அசோகன் காஞ்சீபுரத்தில் ஸ்தூபி நட்டது எம்மட்டில் உண்மையாக இருக்கக்கூடும் என்பது விளங்கவில்லை. ஆனல் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் என்ன வழங்கி வந்தது என்பதை மேலே கூறியவை காண்பிக்கின்றன. என்பதை மறுக்க முடியாது. அசோக ராஜன் ஸ்தூபி நடவில்லையென்றும் மறுக்க இயலாது. அவன் து o ஸ்தூபியும் சாஸனமும் மைசூ

* Buddhist Records of the Western World; Translated by Beal Vol II. Page. 229, 230.

o Epigraphia Carnatica. Vol. XI. M. K. 21, 14, 34, Mysore and Coorg from Inscriptions by Mr. Rice Page. II.
Also, 1. R. A. S. for 1903, p. 829. and for 1904 pp. 1 and 355.

ரைச் சேர்ந்த லித்தாபுரத்திலும் கண்டு பிடித்திருக்கிறார்கள். தமிழ் நாடுகளுக்குப் பிரசாரகர்களை அவன் அனுப்பியதாகவும் அவனது சாஸனங்களில் காணப்படுகிறது. பௌத்த சங்கத்தார் காஞ்சீபுரத்திற்குத் தெற்கில் உறைந்தது மணிமேகலையிலும்,

> கடுகக செல்லல கண்ணின ளிழிந்து
> தொகெழற் கிள்ளி துணையிளங் கிள்ளி
> செம்பொன் மார்பினைத் திருமணிப்பா [சடைப்
> பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய
> சேதியந் தொழுது தென் மேற்காகத்
> தரணி பூம்பொழில் தான்சென் றெய் [தலும்

எனவும், இன்னும் பலவாறாகவும்கூறப்பட்டிருக்கிறது. ஹியூன்ஸாங் என்பாரும் நூற்றுக்கணக்கான ஸங்காராமங்களிருந்தனவென்றும், பதினாயிரம் பிக்ஷுகள் அவற்றுள் உறைந்தனர் என்றும் கூறியதை மறுக்க முடியாது. அவர் கூற்றைத் திருமுறைப பகுதிகளே வலியுறுத்தும். சைவ வைணவ சமயங்கள் தலையெடுத்ததும், அவை சின்னபின்னமாக்கப்பட்டுப் போயிருக்கவேண்டும். ஆனால் அவற்றின் சின்னங்கள் இன்றைக்கும் காணப்படுகின்றன. ஜைன பௌத்த சமய விக்கிரகங்கள் இப்பொழுதும் காமாக்ஷி அம்மன் கோவிலுள்ளும் இன்னும் பலவிடங்களிலும் காணப்படுகின்றனவென்று காலஞ்சென்ற திருவனந்தபுரம் சிலாசாஸன பரிசோதகர், து. அ. கோபிநாதராயர் M. A. அவர்கள் 'இண்டியன் ஆண்டிகுவரி' (Indian Antiquary) என்னும் பத்திரிகையில் விவரமாக எழுதியிருக்கிறார்.

இத்துடன் கூடவே இந்நகரில் பிராமணமதமும் தழைத்து வந்திருக்கிறது. தாலகுண்டா என்னும் ஊரிலிருந்து மானவிய கோத்திரத்தைச் சேர்ந்த மயூரசர்மன் என்னும் பிராமணன் தனது குரு வீரசர்மனுடன் வேதாத்தியயனம் பூர்த்தியடைவதற்காகக் காஞ்சி நகரை அடைந்தான் என்றும், அவ்விடத்தில் குதிரைச் சேவகன் ஒருவன், பிராமணர்கள் க்ஷத்திரியர்களிலும் தாழ்ந்தவர்கள் எனக்கூறக்கேட்டுக் கோபங்கொண்டு அவனுடன் சண்டையிட்டுச் சிலரைத் தனக்கு உதவியாகச் சேர்த்துக் கொண்டு பல்லவனை முறியடித்து, வைஜயந்தி (தற்காலத்திய பனவாஸி) யைத் தலைநகராகக் கொண்டு ஒரு ராஜ்யத்தைத் தனக்கு ஏற்படுத்திக்கொண்டான் என்றும் தலகுண்டா சாஸனத்தால் அறியக்கிடக்கிறது. * கி. பி. எட்டாம் நூற்றாண்டில் விளங்கிய சங்கர பகவத்பாதரும் இந்தியா முழுமையும் அத்வைதமதப்பிரசாரம் செய்து கடைசியில் காஞ்சியில் தங்கித்தமது வாழ்நாளைக் கழித்தனர் என்றால் அந்நகர் எத்துணை சிறப்புடைத்து!

இக்காஞ்சி நகரம், வேகவதி எனக் கூறப்படும் கம்பை நதிக்கரையில் அமைந்துள்ளது என்பதை "பொன்மலரும் கம்பைக்கரை ஏகம்பம் உடையானை" என்று திருக்கச்சி ஏகம்பப் பதிகத்துள் கூறப்பட்டிருக்கிறது. இன்றைக்கும் விசாலமான வீதிகளையும், பெரிய மெத்தைக்கட்டிடங்களையும் உடைய காஞ்சீபுரம்,

> தேரூர் நெடுவீதிச் செழுங்கச்சி
> விண்ணமர்நெடுமாடம்ஓங்கிவிளங்கியகச்சி





> மாட நெடுங்கச்சி
> கல்லார் மதில் சூழ் கச்சிநகர்
> ஆழ்கிடங்கு சூழ்வயலும் மதில் புல்கி
> தென் மருங்கிற் கலிகச்சி [அழகமரும்

எனப் பலவாறாக ஆழ்வார்களும் நாயன்மார்களும் புகழ்ந்த அக்காலத்தில், பல்லவ ராஜதானியாக எவ்வளவு அழகுவாய்ந்து இருக்கும் என்பதை இதைவாசிக்கும் அன்பர்களேயே யோசித்துப் பார்க்கவேண்டுகிறேன்.

இந்நகரம் தென்னாட்டுக்கு ஒரு மேகலை (ஒட்டியாணம்) எனக்கூறப்பட்டிருக்கிறது. பல்லவ அரசை அழிக்கக்கருதிக் காஞ்சியைப் படையெடுத்துக் கைப்பற்றிய சளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிரமாதித்தன் (கி. பி. எகூகூ-எசசூ) இந்நகரின் அழகைக்கண்டு மயங்கி, தமிழ்மடந்தைக்கு ஒரு மேகலைபோலவிளங்கும் இந்நகரை அழிக்கமனங்கொள்ளாமல் அதனுட்புகுந்து, நரஸிம்ஹ போதவர்மன் கட்டிய இராஜஸிம்ஹேச்வரர் கோவிலுக்கு (கைலாசநாதர் கோவில்) ம் இதர கோயில்களுக்கும் பொற்குவியல்களை அர்ப்பணம் செய்தான் என கேந்தூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. தமிழர்கள் மட்டும் அல்லாமல் தமிழர்களுக்கு விரோதியான பகையரசர்களும் இந்நகர் அழகைக் கண்டு மயங்கி யிருக்கிறார்கள்.

ஒரு நகரம் எப்படி அமைக்கப்பட வேண்டுமென்று நகர அமைப்புச் சாத்திரம் கூறுகிறதோ அதே விதமாக அமைக்கப்பட்டு இன்றைக்கும் காஞ்சீபுரம் விளங்குகிறதென்று நூல்வல்லார் கூறுவர்.

(தொடரும்)

---

# * முடிவு கட்டுதல்.

---

சா. நா. சா. அருணாசலச் செட்டியார்.

இந்நிலவுலகத்தில் நிலைத்திருக்கிற சமயங்களிற் சில, பாந்தமக்கட்டொகுதியினரின் ஒழுக்க மேம்பாட்டுக்கு எத்துணை நன்மையைச் செய்திருக்கிறதென்று உணரும்போது கடினமானதும் குருட்டுத்தனமானதுமான சடங்குகளை ஏற்படுத்தி வாழ்க்கையில் மக்களின் நோக்கங்களை அவைகள் எவ்வளவு குறுகியதாக ஆக்கிவிட்டனவென்பதையும் நன்கறிதல் வேண்டும். வழக்கம் என்னும் அடிமைத்தனத்தினின்றும் அவர்களை மீட்டுப் பரந்த நன்னோக்கை உண்டுபண்ணுவதற்குப் பதிலாக அவைகள் மக்களின் அறிவைக்கட்டுப்படுத்திவிட்டன.

பிழையுற்றழியும் ஒரு காலத்து மக்களைச் சீர்திருத்தி நன்னிலைக்குக் கொணர அவ்வக்காலங்களில் தோன்றும் சமயாசாரியர்கள் பின்வருங்காலம் யாவற்றுக்கும்—அன்றிருந்ததைவிட உயர்நிலைக்குச் சென்றுகொண்டிருக்கும் வருங்காலத்து எல்லா வகையான மக்கட்கும்—ஒருங்கே

* இது காண்ட்தாட் என்னும் இதழிலிருந்து மொழிபெயர்த்தது.

சட்டதிட்டங்களைச் செய்யவில்லையென்பது வெளிப்படை. அப்படிச் செய்திருப்பின அவர்கள் சமய உண்மை நன்கு புலனாகாதவர்களாகவே கருதப்படுவார்கள்.

நன்னெறியறியா துழலும் இவ்வுலக மக்களிடை அவர்கள் தோன்றுவதன் நோக்கம் கண்ணபிரான் அருளியதுபோல் "தீமையை யழித்து அறத்தை நிலைபெறுத்தற் பொருட்டே யன்றி ஊழிக்காலம்வரை என்றும் எல்லா மக்கட்கும் ஒருங்கே சேர்ந்த ஒருவகையான விதிகளை உண்டு பண்ணுவதற்கல்ல. ஆதலாற்றான் அவர்கள் ஒவ்வொரு காலமும் அவதரிக்கின்றனர். அறத்தாற்றின் நழுவி மறம் புரிவதிற்கழிபேருவகை கொண்டு திரியும் நம்மீது பேரிரக்கங்கொண்டு அக்கால மாத்திரத்திற்காவது நம்மை மாயைச் சேற்றினின்றும் விடுவித்து உயர்நிலை யடைவித்தற் பொருட்டேயன்றோ அவர்கள் அடிக்கடி நம்மிடை தோன்றுகின்றனர்.

மேலாகிய ஒழுக்கம் என்னும் மேடைமீது உயரிய ஆன்ம பீடத்தமர்ந்து அவர் பேசுகின்றாராகலின் இயற்கையாகவே பலவகைப்பட்ட மக்கட்பகுதியினருக்கும் அவர் ஒருசேர உபதேசித்தல் இயலாது. ஆகலான் அவர்கொள்ள வேண்டியனவற்றையும் தள்ளவேண்டியனவற்றையும் வற்புறுத்திப் பேசிக்கொண்டு வாழ்க்கையின் பொதுவான உண்மைகளை விளக்கிச்செல்லுவார். பின்னர், அவர்களின் உற்சாகமிக்க மாணவர்களும் அவர்களைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவோர்களும் சமயப்பித்துக் கொண்டு அவர்களுடைய உபதேசங்களுக்கு அவர்கள் என்றும் எண்ணியிராததும் காரணத்துக்குப் பொருத்தமில்லாததுமான பலபொருள்களைச்செருகி ஆச்சரியமான வியாக்கியானம் எழுதி அவைகளை என்றும் எல்லாராலும் கொள்ளத்தக்கன என்று மனித அறிவுக்கு ஒரு முடிவும் கட்டிவிடுகின்றனர்.

ஒவ்வொருவரும் "அவர் ஆக்கிய நூலைப்போலொரு நூலில்லை. அதே யாவராலும் எக்காலத்துங் கொள்ளத்தக்கது" என்னும் மூடநம்பிக்கையை மக்களிடை நாளடைவில் உண்டாக்கிவருகின்றனர். தற்காலத்தில் பலவகைப்பட்ட சமயங்களின் ஆச்சாரியர்களும் வெறிச்சமயத்தினும் இல்லா உண்மைகள்பல அவர்கள் சமயத்தில் பொதிந்து கிடக்கின்றனவென்றும் அவர்கள் கொண்டது உண்மையைத்தவிர வேறில்லையென்றும் பறை சாற்றுகின்றனர். மேலும் அவர்கள், வீடுபேறின்பம் தங்கள் கொள்கையிலேயே இருக்கின்றதென்றும் ஒருவன் வீடடையுமுன் அவர்கள் கொள்கைகளில் ஒவ்வொன்றையும் நன்கு அனுட்டித்தல் வேண்டுமென்றும் அறைகின்றனர். அதில் ஐயங்கொள்வதாவது உண்மையாவென விசாரிப்பதாவது பெரிய வஞ்சகமான, பாவமான செயலென்றும் கருதப்படுகிறது.

சிலசமயங்கள் அவைகளுடைய ஆச்சாரியர்களும் நூல்களும் முற்றுஞ்சரியானவை யென்றும் அவைகட்கு ஒரு காலத்திலும் திருத்தம் தேவையில்லை யென்றும் அவைகள் என்றும் யார்க்கும் பொருத்தமுடையனவென்றும் மொழிகின்றன. உண்மைக்குப் புறம்பான தொன்றுமில்லை. உலகம் இன்னும் பரிபூரண நிலையை



யடையவில்லை யென்பது யாவரும் நன்கறிந்த தொன்றேயாகும். அது சிறிது சிறிதாக மேலேறிவருகிறது. ஒருகாலத்தில் ஒரு பகுதியினர் ஒரு கொள்கையை வளர்க்கின்றனர். வேறொருகாலத்தில் வேறொரு பகுதியினர் வேறொருகொள்கையை வளர்க்கின்றனர்.

ஆபத்தான ஒவ்வொருகாலத்திலும் உலகத்தை ஒருபடி முன்னேற்றுவிக்க அவதாரம் நிகழ்கிற தென்பதே சரித்திரத்தாலும் அறியக்கிடப்பதாகும்.

உலகம் ஓரிடத்திலேயே நீண்டநாள் நிற்குமாயினும், அது ஓர் உயிரற்ற பொருளல்ல. அது வளர்தல் என்னும் இயற்கைக்குட்பட்டதேயாகும். உளம்பற்றியாதல், ஒழுக்கம் பற்றியாதல், ஆன்மஞானம் பற்றியாதல் உலகம் பத்திலக்கம் ஆண்டுகட்கு முன்னர் எங்கிருந்ததோ அங்கு இப்பொழுது இல்லை. உலகமானது சில ஆயிரம் ஆண்டுகள் முன்னர்ப் படைக்கப்பட்டதல்ல. அது இலக்கக் கணக்கான ஆண்டுகளாக இருந்துவருகிறது. இன்னும் அளவிறந்த ஆண்டுகள் அது இருக்கும்.

இன்னணம் மாறியும் வளர்ந்தும் வருகிற உலகத்தில் 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல, காலவகையினானே'. சிறுமகார் உண்ணும் உணவைக்கொண்டு வயது வந்த ஒரு ஆண்மகன் எப்படிப் பிழைத்திருத்தல் கூடும்?

ஆண்டவனைப் போல் நாம் பூரணத்தை யடைந்தாலன்றி, அவனோடு இரண்டறக்கலந்தாலன்றி, தொட்டிலிலிருந்து சுடுகாடு மட்டும், ஒரு பிறப்பினின்று வரப்போகும் பிறப்புகளுக்கும் தொடர்பு இருந்துகொண்டே இருக்கும். நல்வழியி லுய்விக்க அமைந்துள்ள உளம் ஒழுக்கம் ஆன்மா இவைகளைப்பற்றியகொள்கைகளெல்லாம் மாறுதலடையத்தக்கனவே.

வரம்பு கோலுவதில் நம்பிக்கை கொள்வதானது வளர்ச்சியில் ஒரு முடிவுக்கு வருவதேயாகும். நவில்தொறும் நவில் தொறும் இன்பம் பயப்பதாய் வரம்பில்லாததாய், சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய ஆண்டவனின் ஒளியிலும் அழகிலும் ஒரு சிறு துளியே கொண்ட இவ்வுலகில் ஒவ்வொரு பொருளும் ஒவ்வொருவரும் தொடர்புடையவர்களாகவும் வளர்ச்சியடைந்த புதிய முறைகளைக் கொள்பவர்களாகவுமே இருத்தல் வேண்டும். நாம் முன்னேற வேண்டுமே யன்றிப் பின்செல்லக்கூடாது. ஆண்டவன் நம்மை ஈர்க்கத்தக்க இன்னும் உயர்ந்த ஒளியையும் அழகையும் நமக்கு அளிக்க இருக்கிறான். பூர்ண பக்குவத்தை அடைந்த சமயங்கள்கூட ஆண்டவனது வரம்பில் தன்மையை அளந்து கூறவியலாது. ஆண்டவன் அளப்பறியாதவன்.

ஒவ்வொரு சமயமும் கடவுட்டன்மையின் ஏதோ ஒரு சிறுபாகத்தையே எடுத்தியம்புகின்றது. தெய்விக அறிவு அளவு கடந்த ஒன்றாகும். அது ஒரு சமயத்தின் நூற்றொகுதியில் அடங்குவதல்ல. சமய நூல்கள் மூலமாக அல்லாது நாடோறும் புத்தருக்கொண்டு விஞ்ஞான சாத்திரம் தத்துவ சாத்திரம் சிற்ப சாத்திரம் இலக்கியம் இவைகள் மூலமாகவும் ஆண்டவனின் அழகொளியில் ஒரு சிறிய துளி வீசிவருகிறது. "அறிவு என்பது எதையுந் தெரிந்து கொள்ள ஆசைப்படு

ம் உற்சாகத்தின் பூஞ்சேக்கையல்ல. அது நாடோடியின் உப்பரிக்கையுமன்று. சர்வ மிக்கோனின் இராஜீய அலங்காரம் வாய்ந்த கோபுரமுமன்று. இருமாந்திருப்போனின் கலமிக்க தங்குமிடமுமல்ல. விற்கவும் ஊதியத்தை அடையவும் உதவும் கடையுமல்ல. அது கடவுளொளியின் களஞ்சியமும் மக்களுக்கு வாய்த்த மாண்பெரு நன்கொடையுமாகும்'' என்று பேகன் கூறுகின்றார்.

தற்கால விஞ்ஞான சாத்திரிகள் தத்துவ சாத்திரிகளிற் சிலர் இறுதி கட்டல் என்னும் செய்கையைக் கொண்டிருக்கிறார்கள். அவர் தங்களுடைய எண்ணங்களும் தங்களால் கண்டு பிடிக்கப் பட்டவைகளுமே இறுதியாக ஒருவர் காணக் கூடிய தாகுமென மொழிகின்றார். இங்கர்சால், எர்னஸ்ட் ஹெக்கல் ஜோஸப் மாக்கேப், ஜீ பாரஸ்டர், புச்னர் முதலிய சிலர் இத்தகைய மூட நம்பிக்கை கொண்டவர்களாகவும் பொறுமை யில்லாதவர்களாகவும் குறுகிய மனமுடையவர்களாகவும் எனக்குத் தோன்றுகிறது. நல்ல வேளையாக இத்தகைய மனிதர்களின் தொகை அருகி வருவது குறித்து மகிழ்வெய்துகிறேன். மனித அறிவிலேயே முதல் இடம் வகிப்பவர்கள் அவர்களே என்றும் அவர்கள் கூறுவதே சரியானதென்றும் சொல்வது தவறு என்பதை இதுகாலை அவர்கள் நன்கறிந்து வருகின்றனர். இதுபோழ்து மேலைநாட் டறிஞர் சிலர் அத்தகைய ஓர் எண்ணத்தை இகந்து காரணத்துக்குப் புறம்பாக இயற்கை என்னும் பொருள் ஒன்றில்லை என்று அறிந்து வருகின்றார். பேரறிவாளராகிய பிராட்லி, பெர்குஸன் ஸர் ஆலிவர் லாட்ஜ் முதலானோர்களின் தத்துவ ஆராய்ச்சி யுரைகளால் இவ்வீணவாத உரைகளெல்லாம் பொய்யாய் விட்டன. அறிவுவெள்ளத்திற்குக்கண்டறியாத ஆழமும் அளவும் உண்டென அறியும் உண்மையான பரந்த மனமும் ஆழ்ந்த அறிவும் உடைய ஒருவன் எதையும் அடக்கமாகவும் எச்சரிக்கையாகவும் கூறுவானே யன்றி தான் சொல்வதே சரியானதென அகந்தை கொள்ள மாட்டான்.

''சொல்லுதல் யார்க்கும் எளிது; செய்தல் அரிது'' என ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் கூறினர். உடல் நூல் வல்லானொருவன் தனது முறைகள் ஒரு தத்துவ சாஸ்திரியினதையும் ஆன்ம ஞானியினதையும் விட உயர்ந்ததென்று சொல்லிக் கொள்ள எப்படி அருகனாவான்? மனித அறிவின் விளிம்பிலேயே அவன் நிற்பதாக வன்றோ அவன் இனி தறிதல் வேண்டும். அவனுடைய கொள்கைக்கு விரோதமான ஒன்றை நேரான அனுபவத்தாலல்லது சரியானதல்ல என்று சொல்ல அவனுக்கு உரிமை கிடையாது. ஒரு நூற்றாண்டுக்கு முன் அரிதென எண்ணப்பட்ட பொருள்கள் இப்பொழுது மிக எளிதாக இருக்கின்றமையின் உலகம் முன்னேறிச் செல்கிறதென்பது நன்கு புலப்படுகிறபடியால் மற்றெல்லாரைக் காட்டிலும் விஞ்ஞான சாத்திரிகளும் தத்துவ சாத்திரிகளும் அவர் கண்ட உண்மையே முடிவானதென்று கூறுதல் பொருந்தாது. ஆகலின் இப்பொழுது அரிதெனக் கருதப்படுகிற பொருள்கள் நாளடைவில் மிக எளிதாய் விடுமென்பது பொருத்தமுடையதேயாமன்றோ?

வாழ்க்கையின் பொது உண்மை 'வளர்ச்சி' என்பதை நாம் ஒருகால் ஒப்புக்கொண்ட பிறகு எந்தத் தீர்மானத்தையும் இறுவே இறுதியானதென்று கூறுதலாகாது.

சென்றும் மாறியும் வளர்ந்தும் வருகிற உலகில் எதுவும் இறுதியானதில்லை என்னும் உண்மையை யறிய நமக்குக் காலம் கிட்டிவிட்டது.

---

# இருக்கு வேதத்து உருத்திர தேவதை.

த. ராமகிருஷ்ணன்.
(வேதமாணுக்கன்)

## வேதங்கள்.

வேதங்கள் நினைவிற்கு மெட்டாத பன்னெடு நாட்களுக்கு முன்னர் தொகுக்கப் பட்டதோர் அறிவுப் பொருட் கருவூலமாகும். பல பிறவிகளினும் உள்ளத் துறவு பூண்டு யோக நெறி நின்று கடவுளுண்மை கண்டு தெளியும் பக்குவம் வாய்ந்தவர்களாகப் புடைப்புக் காலத்துத் தோன்றிய மக்கள் கூட்டத்தில் முனிவர்களா யிலங்கிய அக்நி, வாயு ஆதித்தன், அங்கிரஸ் என்ற நால்வர் வாயிலாக இறைவனல் அருளப் பட்டன நான்மறைகளென்பர். அவை மக்கள் அறிந்து ஆற்றி நுகர்ந்து அடைய வேண்டிய அறிவும் தொழிலும் இன்பமும் மெய்யுணர்வு மாகிய இருக்கு, எசுர், சாமம், அதர்வமென்னும் நான்கு வகைப்படும். நூலின லுணர்ந்து அடைய வேண்டிய உறுதிப் பொருட்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினையும் அறிவுறுத்தும் முதனூலாதலுமமையும். அவற்றுள் முதற்கண் நின்ற இருக்கு வேதத்து உருத்திரதேவதையைக் குறிக்கும் பகுதியினை ஈண்டு ஆராயப் புகுந்தனம்.

## உருத்திரன்.

உருத்திர னென்னும் மொழி பொதுப்பட யாதுணர்த்துகின்ற தென்பதை முதற்கண் ஆராய்வாம். உருத்திரனுவான் துதி பாடுகின்றவன், புகழ்ந்துரைப்பவன், வாக்கு வன்மையுடையா னென்பது யாஸ்கருக்கு முந்திய நிகண்டாசிரியர் கருத்து. தேவதைகளைத் துதித்தல் அல்லது குணநலன்களைப் புகழ்ந் துரைத்தல் வழிபடுவா ரியல்பாகலான், அவ்வாறு உள்ளத் தெழும் உணர்ச்சியால் வழிபடுகின்ற மக்களைக் குறித்தது. மறைகளுக்குப் பொருள் காண நிருக்தம் வகுத்த யாஸ்காச்சாரியர் ''உருத்திர தேவதை வான நடுவில் இருக்கின்றது. நிலத்தினும் வானுலகினுமன்று. நடுவானத்து மேகங்கள் வதியுமிடமாகும். ஆங்கு பல தேவதைகள் உறைகின்றன. அவற்றுள் முதன்மையாக வாயுவும், அடுத்தபடி வருணனும் பின்னர் உருத்திரனுமாவர். 'ருத்—ர' ஒலித்தலால் அல்லது 'ருத்—த்ரவ' ஒலித்து உறுமி மேகங்களை மழையாகப் பொழியச் செய்கின்ற—மேகத்திலுறையும்மின்சார மென்னும்சுடர்ப்பொருளாகும்'' என்பர். ஈண்டு வாயு, வருணன், உருத்திரனென்பன காற்று, நீர், மின்னெளி என்பவற்றை உணர்த்துகின்றது.

யாஸ்கர் பின்னும் உரைப்பதாவது:—

வேதத்தில் ஒன்றிற் கொன்றுமாறுபாடுடைய கருத்துக்கள் காணப்படுகின்றன. உருத்திரன் ஒருவனேயுளன். இரண்டாவதொருவன் இன்று (அத்விதீயன்) என்று ஒரு மந்திரம் கூறுகின்றது. பிறிதொன்று நிலவுலகில் எண்ணிக்கையற்ற ஆயிரக்கணக்கான உருத்திரர்கள் இருக்கின்றனரென்று சாற்றுகின்றது. இத்தகைய வேறுபாடுகளைக் கண்டு, இச்

சங்கைக்குச் சமாதானமாக யாஸ்கர் பகர்வதாவது—ஒவ்வொரு தேவதைகளின் சிறப்புக் காரணமாக உயர்ந்த பண்புகளால் பல பெயர்கள் சூட்டுகின்றனர். நாமங்கள் பலபடினும் அத்தகைய பல தேவதைகள் கிடையா. பல மொழிகளும் ஒரு தேவதையையே உணர்த்துகின்றன. யாங்ஙன மெனின், அவற்றின் தானமும் நுகர்ச்சியும் ஒன்றுபட்டிருத்தல் கண்டு, அப் பலவற்றையும் ஒன்றெனக்காணுதல் சாலும். நாட்டில் பல வேறு வகைப்பட்ட நிறத்தினர்—உருவினர்—பகுதியினர் உறையினும் அவர்கள் யாவருக்கும் அரசாங்கம் ஒன்றுதல் போல, பல தேவதைகளின் தானமும் நுகர்ச்சியும் ஒன்றுபட்டிருத்தல் காரணமாக அப்பலவற்றிலும் ஒன்றினைத் துணிதல் பொருத்தமுடையதாகும். எனவே சில மந்திரங்களில் 'உருத்திரன் ஒருவனுளன்—என்றும் சிலவற்றில் அநேக உருத்திரர் என்றும் கூறப்படினும் அவற்றால் வேற்றுமை கருதற்கில வென்பர் நிருக்தாசிரியர்.

இவ்வாறாக நிருக்தாசிரியர் சமாதானங் கூறுகின்றார். இச் சமாதானம் அத்துணைப் பொருத்த முடையதாகக் காணப்படவில்லை. இவ்வகையால் உருத்திரனையும் பிற தேவதைகளையும் ஆய்ந்து தெளிதல் அரும் பாடாகும். எனவே இப்பொருள் பற்றி நன்கு ஆராய்ந்து துணிதல் வேண்டும். யாஸ்கருடைய பிற கருத்துக்களையும் உணர்ந்து, பிறர் மதம் காண்பாம்.

அக்கிரபி ருத்ர உச்யதெ
நிருக்தம்.௧௦—எ—உ

"நெருப்பையும் உருத்திரனென்பர்" என்றும் பகர்கின்றார்.

உருத்திர னென்னும் மொழி பரமேசுவரனைப் பரமாத்மனைக் குறிக்கின்றது என்று யாண்டும் தெளிவுபட விளக்கினரில்லை. ஒரு தேவதையின் பல பெயர்களும் குணநலன் பற்றி வழங்கப்படுகின்றன வென்று சுட்டிச் செல்லுதலால் பரமேசுவரனுடைய பல நாமங்களுள் உருத்திர னென்பதும் ஒன்றெனக் கொள்ளுதல் பொருந்தும். எனினும் வருவிக்கப்படுகின்றனவே யன்றி தெளிவுபட இல்லாமை போர்க. வேறுபட்ட குண நலன்க ளிருப்பினும் இடம் பற்றி ஒன்றெனக் கொள்ளுதல் பொருந்து மென்று மேலே குறித்தனர். யாண்டும் நிறைந்துள்ள இறைவன் நிலத்திலும் நடுவானத்தும் விண்ணுலகிலும் வதிகின்று னன்றே! ஆதலான், எல்லாத் தானங்களிலும் உறைகின்ற தேவதைகளின் பெயர்கள் யாவும் அவ்வொப் புயர்வற்ற மகாதேவ னொருவனையே அறிவுறுத்தும். இந் நியாய முறைபற்றி நிருக்தாசிரியர் கருத்தினை யாம் உணரக் கிடக்கின்றது. முழு முதற் சோதியாகிய பரமேசுவரனை "உருத்திர" என்னுஞ் சொல் அறிவுறுத்து கின்றதென்று எவ்விடத்தும் விளக்கமாகக் கூறினாரில்லை. நிற்க, பிற மதங்களை ஆராய்வாம்.

## உருத்திர னொருவன்.

ஏகொ ஹ ருத்ரொ ந த்விதியாய தஸ்தூர்ய
இமாம் லோகா னீசத ஈசனீபி: ப்ரத்யங்
ஜநாஸ் திஷ்டதி ஸம்சு கோசாந்த காலே
ஸம்ஸ்ருஜ்ய விச்வா புவநாநி கோபா:
சுவேதாசுவேதர உபநிடதம் ௩—௨

"உருத்திரன் ஒருவனேயாவன். அவன் பிறரெவர் உதவியையும் நாடுவதில்லை. அவன் தனது போராற்றலால் இவ் வுலகனைத்தையும் தன் வயப்படுத்தி யிருக்கின்றான். அவன் ஒவ்வொரு மக்களின் உள்ளத்திலும் உறைகின்றான். இத்தகைத் தனிப் பெருந்தலைவன் உலகங்கள் யாவற்றையும் படைத்து, நிலைபெறச் செய்து காத்து, இறுதியில் யாவற்றையும் அழித்துத் தன்னகத் தடக்குகின்றான்." என்று சுவேதாசுவேதர உபநிடதமும் "உருத்திரன் ஒருவனுளன். அவன் பிறரெவர் உதவியையும் விரும்புவதில்லை. இவ் வுலகங்கள் யாவற்றையும் தனது போராற்றலால் அடக்கி ஆளுகின்றான். நித்தியமாக (என்றுமிருப்பவனாக)வும் பழமையாகவும் உருத்திரன் ஒருவனே யுளன் என்பர். அவ் வுருத்திரன், நெருப்பு, நீர், மூலிகை, தாவரங்கள் முதலியவற்றில் பரந்து நிற்கின்றான். அவன் இவ்வுலகனைத்தையும் ஆக்குகின்றான். அந் நிகரிலாப் பெருஞ்சோதியாம் உருத்திரனுக்கு வணக்கம்" என்று அதர்வசிரசு உபநிடத மந்திரங்களாலும் உணரக் கிடத்தலான் உபநிடதங்கள் உருத்திரன் ஒருவன், அவன் முழுமுதற்பரம்பொருளே யாவன் என்று அறிவுறுத்துகின்றன.

இனி வேதங்களில், தனிப்பேராற்றல் வாய்ந்த இறைவனிடத்து இவ் வுலகங்கள் இலங்குகின்றன. அவன் உருத்திரன், அவன் தனியனாய் விளங்குகின்றான் 1. உருத்திர தேவனொருவன். அவன் நெருப்பு, நீர், மூலிகை, தாவராதிகளில் நிறைந்துள்ளான். இவ்வுலகங்கள் யாவற்றையுந் தோற்றுவித் திருக்கின்றான். அவ் அழலுருவனும் உருத்திரனுக்கு வணக்கம். 2 உருத்திர! இந் நாற்றிசைகளும் வானுலகும் நிலவுலகும் பெரியதோர் வானநடுவும் நின்னதே. ஆன்மா நிலைபெற்று உயிர்ப்புடன் விளங்குகின்ற உயிர்களும், இந் நிலவுலகில் உயிர்வாழ்கின்றவைகளும் யாவும் நின்னதே. 3 உருத்திரன் மக்களுக்கு ஓராசனாய் நின்று ஆளுகின்றான். அவன் அவர்கள் இதயங்களில் வதிகின்றான். மக்கள் வழிபட வேண்டிய தனிப் பெருந்தலைவன் அவனே யாவன். 4 இவ் அதர்வவேதக் கருத்துக்களால் உருத்திரனது தனித்தன்மையும் (ஏகத்துவமும்), யாண்டும் பரந்து விளங்கு மியல்பும், யாண்டும் நிலை பெற்று யாவற்றையும் ஆளுகின்ற போராற்றலும், யாவருள்ளத்தும் நிறைந்து நின்று இயக்குந் தன்மையும், அவனே வழிபடற்குரியானென்றும் இறைமைப் பண்புகள் உருத்திர நாமத்தால் புலப்படுத்தப்படுகின்றன.

உருத்திர தேவன் பெரியன், வாலறிவன், மூப்பில்லான், இறப்பில்லான், தூய சிந்தையன். 'புவனஸ்ய பிதரம் ருத்ரம்' காணப்பட்ட உயிர்கள் யாவற்றையும் பிறப்பித்துக் காக்கின்றவன். (Rudra, the Father of the created Worlds) 5 உருத்திர தேவன் உலகங்களைப் படைத்துப் பொருட்களுக்கு நிறமும் அழகும் உருவமும் அமைத்தான். அவன் பேரொளியும் போராற்றலுமுடையான். தன் அறிவொளியாலும் தூய்மையாலும் அவன் மிளிர்கின்றான். அவன் உலகங்கள் யாவற்றிற்கும் ஒப்பற்ற தலைவன். 'புவனஸ்ய ஈசானத் ருத்ராத் அஸுர்யம் ந யோஷத்' உல

1. அதர்வம் ௧௩-௪-௨௪. 2. ஷெ எ-௯௨-௧. 3. ஷெ ௧௧-௨-௨௦.
4. ஷெ ௧௮-௧-௪௦. 5. இருக்கு ௬-௪௯-௧௦.

ின் தலைவனுகிய உருத்திர தேவ னது மாசக்தி அவனினின்றுயாண்டும் பிரிவதில்லை. (The divine power never departs from Rudra, who is the Lord of the created Worlds) 6 உருத்திரன் யாவரையும் நேசித்துக் காத்து விரும்பியன அளித்து தீயாரை யொழித்துத் தன் இன்னருளால் கருணை புரிகின்றான். 'த்வத் ஓஜீயோ ந வா அஸ்தி, அவனின் மிக்க ஆற்றலுடையார் எவருமின்று. 7 அவன் இளமை மூப்பின்றி யாண்டுங் குமரன். அவன் இளைஞரை யொப்பப் பிறர் வயத்தும் முதியோரை யொப்பத் தளர்வெய்தியு மிராது, யாண்டுங் குமரனுகத் தன்வயத்தனுக சுதந்திரனுக உரன் மிக்கானுக விளங்குகின்றான். 8 அவ் உருத்திரன் மலை போன்று அசையாது நிலைத்த—மக்களின் அகக்கரணங்களின் அதி நுண்ணிய—குகை போன்ற தானத்து நிலவுகின்றான். அவனை, சாத்துவிக உணவருந்தி சாத்துவிக உள்ளத்தினராக சாத்துவிக சிந்தையால் ஆராய்ந்துணர்ந்து அச் சாத்துவிக உருவனை அடைய விழைகின்றனர் 9 என்ற இருக்குவேத மந்திரக் கருத்துக்களால் உருத்திரன் உலகின் தந்தை, தனிநாயகன். தன்னிற் பிரியா—சக்தியான், அறவாழியந்தணன், யாண்டு மிளையன், இருதய குகையில் வதிகின்றவன், தண்கதிர்க்கடல், தண்ணளியார் அடைய விழைவர் என்று அறிவுறுத்துகின்றமையான் தனிப் பெருந்தலைவனுகிய இறைவனையே உணர்த்துவதாயிற்று. இறைவனே ஏகனுகிய உருத்திரன்,

உருத்திர தேவதை என்று துணியக் கிடக்கின்றது.

உருத்திரர் பலர்

ருத்ராம் ருத்ரேஷு ருத்ரியம் ஹவாமஹெ.

இருக்கு. ௬௦—௯௪—அ.

'பல உருத்திரர்களிடத்தும் வதிகின்ற புகழ்வாய்ந்த ஒரு உருத்திரனை யாம் தொழுதிடுவாம்.' ஒரு உருத்திரன் அநேக உருத்திரர்களிடத்து உறைகின்றான். பல உருத்திரர் அணுக்களாந் தன்மையர், ஒரு உருத்திரன் பெரியன். ஒரு உருத்திரனுல் பல உருத்திரர்கள் இயக்கப்படுகின்றனர். எனவே, இவ் அணித்துறைஎண்ணிலவாம் ஆன்மாக்களை ஒரு ஒப்பற்ற தனிமுதல் நின்று வியாபித்து இயக்குகின்றுனென்னும் உண்மையைப் புலப்படுத்துகின்றது. உயிர்களுக்கும் இறைவனுக்கும் பல பண்புகளும் பெயர்களும் ஒப்புவமை யுடையதாகக் காணப்படலான் உருத்திர னெனனும் பெயர் இருவருக்கும் பொதுவாயிற்று. பல உருத்திரர்களிடத்து ஒருஉருத்திரன் கலந்து நிலவுகின்று னென்பதை இவ்வுரைகளால் காண்க. (க) பல உருத்திரர்களிடத்துவதிகின்ற ஒரு உருத்திரன்நமக்கு நலன்புரிக. 10 (உ) பல உருத்திரர்களிடத்து உறைகின்ற ஒரு உருத்திர தேவன் நமக்கு நலனருளுக 11 (ங) பல உருத்திரர்களிடத்துக் கலந்து நிலவுகின்றதோர் மாபெரும் உருத்திரனைத்தொழுதிடுவாம் என்பன. இன்னும், 12 உருத்திர தேவனது 'யஹ்வம்' என்ற இடை பிரியாத மாபெரும் சக்தி என்றும் நிலைத்து சநாதனமாக விளங்குகின்ற உயிர்களிடத்தும், உடலுக்கும் புலன்களுக்கும் உலகுக்கும் பொருட்களுக்கும் காரணமாக—மாறிமாறி வருகின்ற படைப்பிற்கு அடிப்படையாக— நித்தியமா யிலங்குகின்ற மூலப்பகுதியிடத்தும் கலந்து நின்று தொழிலாற்றுகின்றது. 13 சுபதியாகிய உருத்திரன் பசுக்களாகிய ஆன்மாக்களுக்கு இன்பம் நல்குதற் பொருட்டு பாசத் தோடுடன் கலந்து நின்றும் வினையாற்றுகின்றான். எனவே, உயிருள்ள பொருட்களேயன்றி உயிரில் பொருட்களிலும் நிலவுகின்று னென்பதாயிற்று. இப் பல உருத்திரர்களுக்கு அவ்வொரு உருத்திரன் தந்தையாவன். தந்தை என்றுங் குறையா வின்பம் துய்க்கின்ற வனுதலால் மக்களாகிய பலஉருத்திரர்களும் அவனைக் காக்க வேண்டுங்கடமை யின்று. ஆனுல் புதல்வர்களாகிய இச்சிறு சிறு உருத்திரர்களை அவன் போற்றி வளர்த்துக் காக்கின்றான். 14 புதல்வர்களாகிய இவ் உருத்திரர்களுள் மூத்தார் இளையார் பெரியார் சிறியாரின்றி யாவரும் ஒத்த சோதரராவர். இவர்களுள் முயற்சியுடையராகி செந்நெறிபற்றி யொழுகுவார் உயர் வெய்தி நன்னுட்களாகக் கழிக்கின்றனர். பிறர் கழிப்பன தீயநாட்களே யாகும். இவ் அனந்த உருத்திரர்களும் மக்களேயன்றிச் 15 சாதல் பிறத்தலுடைய உடல் வாய்ந்த எண்ணிக்கையற்ற பிற உயிர்களுமாவர். 16

அஸங்க்யாதா: ஸஹஸ்ராணி யெ ருத்ரா அஹ்தி ஷ்பூம்யாத்.

எசுர். ௧௬—௫௪.

அளவற்ற ஆயிரக் கணக்கான உருத்திரர்கள் இந்நிலவுலகில் உறைகின்றனர். இந்நிலத்து, எஞ்ஞான்றும் அளவிட்டறிய முடியாது பிறந்தும் இறந்தும் சுழன்று, செல்கின்ற பல்லாயிரக்கணக்கான உயிர்களையும்இது குறிக்கின்றது.

இவ்வகையால் உருத்திரனென்பது இறைவனையும், உயிர்களையும், உலகங்களையும், உலகத்துப் பொருட்களையும் உணர்த்தியது.

உருத்திர தேவதையைக் குறித்த விரி பொருட்கள் எசுர்வேதம் பதினாறாவது அத்தியாயத்தில் விளக்கப்படுகின்றன. இதனை சதருத்ரியம் என்றும் கூறுவர். இதனுட் சுமார் இருநூற்று நாற்பது பொருட்கள் விரிக்கப்படுகின்றன. அவற்றை மறை வளர்க்குங் கழகத் தலைவர், பண்டிதர் ஸ்ரீபாத தாமோதர சாத்வளேகர் பதினொரு வகையாகப் பாகுபடுத்தியிருக்கின்றார். அவை, (க) தலைவன் வகை (உ) ஒளிப் பொருள் வகை (ங) காற்றுவகை (ச) தாவர வகை (ரு) அறிஞர் வகை (சு) வீரர் வகை (எ) வணிகர் வகை (அ) சிற்பியர் வகை (கூ) கயவர் வகை (௧௦) பிற உயிர்கள் வகை (௧௧) பிற வகைகள் என்பனவாம். இவ்வகையாக உருத்திர நாமங்களை ஆராயுங்கால், அவை ஒரு உருத்திர தேவனது அம்சம் அன்று என்பதும் வேறுவகைப்பட்ட பலவற்றையும் ஒரு பொருளென்று கருதுதல் பிழையா மென்பதும் தெளிவாகும். இப் பொருட்கள் யாவற்றையும் தொகுத்துக் காணுங்கால்—(க) விச்வ-ரூப (Omnipresent God) யாண்டும் நிறைந்

6. இருக்கு உ-௩௩-௧. 7. ஷை உ-௩௩-௧௦. 8. ஷை உ-௩௩-௧௧. 9. ஷை அ-எ௩-௩. 10. எ-௩௫-௬. 11. ஷை ௧௦-௬௬-௩. 12. ஷை எ-௧௦-௪.

13. ஷை அ-௧௩-௨௦. 14. ஷை ௬-௬௬-௩. 15. ஷை ரு-௬௦-ரு. 16. ஷை ௧-௬௪-௨.

துள்ள இறை முதல்வன் (௨) வித்யுத்-மின்னியக்கப் பொருள் (௩) காற்று (௪) மரம் (௫) க்ருத்ஸ-அறிஞன் (புலவன்) (௬) அமைச்சன் (௭) மருத்துவன் (௮) தேசச்கழகம் (௯) கழகத் தலைவன் President of the Congress (௰) ஸ்த-பதி, மன்னன் (௧௧) படைத்தலைவன் (௧௨) படைக்கல மியற்றுபவன் (௧௩) வீரன் (Warrior) (௧௪) வணிகன் (௧௫) உழவன் (௧௬) தச்சன் (௧௭) ஊழியன் (௧௮) கள்வன் (௨௰) கபடன் (௨௧) நாய் (௨௨) மூட்டைப்பூச்சி என்பனவாம். இவை யாவற்றையும் ஒன்றென்று துணிதல் தவறே யாகும். யாண்டும் நிறைந்த இறைவன் கள்வனாகவும் மூட்டைப் பூச்சியாகவும் இருக்கின்றானென்பது பொருந்தாது வேதத்தில்இவையாவும் உருத்திரனென்று பகரப்படுகின்றது. இவற்றுள் உருத்திரத் தன்மை எவ்வாறு அமைந்திருக்கின்றது என்று நுணுகி ஆய்தலே அறிஞர் கடன். இவற்றால் வைதிக தேவதைகளின் உருவகப் பொருளுண்மை புலப்படும்.

(௧) 'ரோதயதி இதி ருத்ர:'

பிறர் அழுது அரற்றித் துன்புறச் செய்கின்றவன் உருத்திரன்இஃது—

(௧) ரோதயதி சத்ரூந் இதிருத்ர: மஹாவீர:

(௨) ரோதயதி துஷ்டாந் இதிருத்ர: ந்யாயாதீச:

(௩) ரோதயதி தனிகாந் இதிருத்ர: சோர:

(௪) ரோதயதி நித்ராக் ராந்தாந் இதி ருத்ர: தல்பயகீட:

மாற்றாரைத் துன்புறுத்தலால் பெருவீரன் உருத்திரனாகின்றான். தீயாரைத் தண்டித்தலால் நீதிபதி உருத்திரனாகின்றான். பொருளாளரைக் கொள்ளையிடுதலால் கள்வன் உருத்திரனாகின்றான். துயில்வாரைத் துன்புறுத்தலால் மூட்டைப் பூச்சி உருத்திரனாகின்றது. இவற்றுள் வீரனும் நீதிபதியும் கள்வனும் மூட்டைப் பூச்சியும் பிறர்க்குத் துன்பம் விளைத்தலால் உருத்திரராகின்றனர்.

(௨) ருத் ஞானம் தத் ததாதி இதி ருத்ர:

அறிவு போதிக்கின்றவன் உருத்திரன்'. புலவன், ஞானி, ஆசான் சொற்பெருக்காளன் போல்வன.

(௩) ருத் துக்கம் த்ராவயதி விநாசயதி இதி ருத்ர

'துயர் நீக்குகின்றவன் உருத்திரன். இவை போல்வன பிறவும் ஏற்ற பெற்றி ஆய்ந்துணர்க.

தேவதை.

இனி, தேவதையாவது யாது? எப்பொருள் குறிப்பன? 'திவ்' என்னும் பகுதியடியாகத் தோன்றியவை தேவன்; தேவி, தேவதை, தைவதம் முதலியன. 'திவ்' என்னும் பகுதிப் பொருட்கள்—(க) களியாட்டு, விளையாடல் (to sport) (௨) வெற்றி பெற விழைதல் (௩) கொள்வன, கொடுப்பன ஆதி விவகாரங்கள் (௪) ஒளிருதல் (௫) புகழ்தல் (௬) இன்புறுதல் (௭) திருப்தியடைதல் (௮) ஆழ்ந்து துயிலுதல் (௯) அன்புறுதல் (௰) இயங்குதல் (௧௧) கொடுத்தல் என்பன.

பல்வகை விளையாட்டுக்கள், களியாட்டம் முதலியன புரிவார். தாம் முயன்ற காரியத்தில் வெற்றிபெற விழைந்து நிற்பார். கொள்வன கொடுப்பனவாதி சமூக வியவகாரங்களில் திறனுடையார். உடல் வளமும் வனப்பும் பெற ஒழுகுவார். பிறர் போற்றத்தக்கவற்றைப் புரிந்து புகழ்பெறுவார். என்றும் இன்பம் பயத்தற்குரியன புரிவார். எவ்வகையானும் மகிழ்வுறுவார். உடல் நலம் பயத்தற்கு நல்லோய்வு பெறுவார். யாவரிடத்தும் அன்புறுவார். நல்லியக்கங்களை நற்கிளர்ச்சிகளைத் தோற்றுவிப்பார். தன்னய மின்றிப் பிறர்க்குதவுவார் தேவராவர்.

வித்வாம் ஸோ ஹி தேவா:
சதபதம். ௩-௭-௩-௧௦

'அறிஞன், புலவன் தேவனாகின்றான்' அறிவு பெருகுதல் மக்களினுயர்ந்து தேவத்தன்மை அடைவதாகும். நால்வருணத்தாரையும் முறையே ஞானதேவன், இராஷ்டாதேவன், தனதேவன், கர்மதேவன் என்றழைப்பர்.

யெ கர்மணா தேவாநபி யந்தி
தைத்திரிய உபநிஷத் உ—அ
யெ கர்மணா தேவத்வமபி ஸம்பத்யந்தெ
பிரஹதாரணிய உப ௪-௩-௩௩.

செய்தொழிலால் தேவத்தன்மை எய்துதல் கூடும். செய்வினையால் மேனிலை பெற்றுத் தேவராவார் மக்களே யன்றிப் பிறரிலர். பிற நிலன் நீர் நெருப்பு இரவி மதி வான் முதலியனவும் அவற்றின் சிறந்தபண்புகளால் தேவப் பெயர் பெறும். இவகை அறிவுப் புலன்களும் தொழிற் புலன்களும் தேவப்பெயர் பெறும். எனவே, உருத்திர தேவதையாவது இறைமுதற் பொருளையும் மக்களையும் பிற உயிர்களையும் தோற்றங்களையும், அவற்றின் பண்பு நலன்களுக்கேற்ப விதந்து கூறுவதோர் தொடர் மொழியாகும். சுருங்கக்கூறின் ஜீவ ஈசுவர ஜகத் என வைணவரும் பதி பசு பாசம் எனச் சைவரும் வழங்குகின்ற இறை உயிர் உலகு என்னும் முப்பொருளையும் குறிக்கின்றதோர் தனிப் பெருஞ் சொல்லாக 'உருத்திரன்' என்னும்மொழி நான்மறைகளில் ஆளப்படுகின்றது. தேவதை யென்பது உயர்வினைக் குறிப்பதோர் பண்புச் சொல்லாகும்.

ஈண்டு இருக்கு வேதத்து உணர்த்தப்படுகின்ற உருத்திர சூக்தம் நான்கினையும் ஆராயப் புகுந்தனன். அவற்றுள் முதலிரு சூக்தங்களினும் உருத்திரனை மருத்துவனாகக் கூறப்படுகின்றது. பிற சூக்தங்களில் மருத்துவனேயன்றி வீரனாகவும் விளக்கப்படுகின்றன. இவற்றானே உருத்திரன் வைத்தியன், ராஜ வைத்தியன், வைத்திய ராஜனென அழைக்கப்படுகிறான். வேத மந்திரங்களின் பொருள் நயத்தை இச் சூக்தங்களால் வாசகர்கள் அறிதல் கூடும். உயர்வு மிக்க குண நலன்கள் யாவும் இறைவனிடத்து அமைந்துள்ளன வென்பதை வேதமந்திரங்களில் யாண்டும் பரக்கக் காணலாம். உலகில் காணப்படுகின்ற நற்குணங்கள் யாவற்றையும் இறைவனிடத்து நுணுகிக் காண்டலே வைதிக தர்மத்தின் சிறந்த தத்துவம். வைத்தியத்தினால் நோய் களைதலும் துயரொழித்தலுமாகிய இரு நலன்களுண்டு. இவ்விரு நலன்களின் உயர்வையும் பரமேசுவரனிடத்துக் காண்டலே மறைகளின் நோக்கமாகும். ஆதலால் அன்பர்கள், வைத்தியனை வருணித்திருக்கின்ற இச் சூக்தங்களால் பரமாத்மனது குண நலன்களையும் பொருத்திக் காண்டல் இயைபுடைத்தாகும். உலகில் தோன்றுகின்ற நற்குணங்களின் சிறுபகுதியும் இறைவனிடத்து நிறைவுடையதாகப் புலப்படும்.

இவ்வகையாக யாண்டும் இறைவனது தோற்றத்தினைக் கண்டு நுகர்தற்பாலது. அவனது அருங்குணங்கள் அனுபவத்தாலறிந்து இன்புறற்பாலனவாம். பொருளில் பற்று வைத்தலின்றி குணத்தில் பற்றுவைத்தல் வேண்டும். வைதிக தேவதைகள் குண உருவகமாகும். மக்கள் நற்குணங்களைப் பாராட்டலும் தீயவற்றை வெறுத்தலும் முறைமையும் கடமையுமாகும். தேவதைகள் பலவும் குண உருவகங்களாதலால்,மறைகளை யோதுவார் அவற்றின் நற்குணங்களில் ஈடுபட்டு சிந்தித்தல் இன்றியமையாதது.

---

# * தமிழ் நாடு.

திரு. வி. கலியாணசுந்தரமுதலியார்.

இப்போழ்து நாம் வதியுந் தமிழ் நாட்டின் எல்லை பன்னிரண்டு ஜில்லாக்கள் அளவில் கட்டுப்பட்டுக்கிடக்கிறது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னரோ தமிழ் நாடு சேர நாட்டையும் தெலுங்கு நாட்டின் ஒரு பாகத்தையும் உடன் பெற்றிருந்தது. சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தொல் காப்பியத்துக்குப் பாயிரங் கூறப்புகுந்த ஆசிரியர் பனம்பாரனர். "வட வேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து" என்று தமிழ் நாட்டின் வரம்பு குறித்துப் போந்தார். அவர் காலத்துக்கு முன்னர்த் தமிழ் நாட்டின் வடகோடு விந்தியம் வரை முட்டியிருந்ததென்றும், அவ்வரைகடந்தும் நின்றதென்றும் ஆராய்ச்சிக்காரர் கூறுப. தென்கோடாகக் குறிக்கப் பெற்ற குமரி என்பது இக்காலத்தில் ஒரு முனைக்கு வழங்கப்படினும், பழந்தமிழ் நூல்களில் அஃதோர் ஆற்றிற்கு வழங்கப்பட்டு வந்தது. அவ்வாற்றிற்குத் தெற்கே பஃறுளி என்னும் மற்றுமோர் ஆறு ஓடியதாகவும் நூல்கள் அறிவிக்கின்றன. இவ்வாறுகளிருப்பு "தெனுஅ துருகெழு குமரியின் தெற்கும்" "நெடியோன் நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" என வரூஉம் புறநானூற்றாலும், அழிவு "பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்-குமரிக் கோடு கொடுங்கடல் கொள்ள" என வரூஉஞ் சிலப்பதிகாரத்தானும் அறியக் கிடக்கின்றன.

இவ்வாறுகள்வளஞ்செய்த செழிய நிலப்பரப்பே குமரி நாடென்று சொல்லப்படுவது. அந்நாடு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கடலால் கொள்ளப்பட்டது. இப்பொழுதுள்ள இந்து மகாசமுத்திரமெனும் பெருநீர்ப்பரப்பு நிலப்பரப்பாயிருந்ததென்றும், ஆண்டே மக்கள் தோற்றம் முதன் முதல் உற்றதென்றும், அந்நிலம் பின்னை கடலால் விழுங்கப்பட்டதென்றும் ஆசிரியர் எர்னஸ்ட் ஹெக்கல், ஸ்காட் எலியட் உள்ளிட்ட அறிஞர் பலர் தமது ஆராய்ச்சியிற் கண்ட உண்மையை உலகுக்குணர்த்தியிருக்கிறார். இதனை இவ்வறிஞர்கள் எழுதிய "ஹிஸ்டொரி ஆப் கிரியேஷன்" (History of Creation —படைப்புவரலாறு) "லாஸ்ட் லெமூரியா" (Lost Lemuria-மறைந்த லெமூரியா) முதலிய நூல்களிற்காண்க. லெமூரியா என்னும் நிலப்பரப்பே தமிழ் நூல்கள் கூறும்குமரி நாடு.

இத்தொன்னிலப் பரப்பின் அழிவு போக எஞ்சி நிற்பதே இப்போழ்து நாம் வாழுந் தமிழ்த்தாயகம். இத்தமிழகத்தின் தொன்மையை எக்கால அளவுகொண்டு கூறுவது? அது சரித்திர காலத்தையுங் கடந்து நிற்பது. இத்தொன்மை வாய்ந்த நாட்டிற் பிறந்தவர்கள் நாம் என்று சொல்லும் போது என்னை அறியாது என்பால் இறுமாப்பெழுகிறது.

இந்நில மக்கள் வழக்க ஒழுக்கங்கள் மொழி கல்வி அரசு வீரம் முதலியன கொண்ட ஒன்றே நமது தமிழ்நாடு. நாடு என்பது வெறும் மண்ணைக் குறிப்பதன்றென்பதும், அம்மண்ணில் வாழ்மாந்தர் வழக்க ஒழுக்கம் முதலியன கொண்ட ஒன்றென்பதுங் கவனிக்கற்பாலன.

இத்தமிழ் நாடு வெப்பமும் தட்பமும் ஒப்ப வாய்க்கப்பெற்றுண்மையான், அதன் இயற்கை வளன் உடல் நலத்துக்கும் உயிர் நலத்துக்கும் உறுதுணை செய்யும் நிலையில் அமைந்து கிடக்கிறது. குளிர் மிகுந்த நாடு மக்கள் உடல் நலம் பேணத் துணை நின்று, உயிர்க்குரிய குணநலம் அரிதே வழங்கும். வெம்மை செறி நாடோ உடல் நலத்துக்கும் ஊறு செய்வதாகும். இரண்டும் ஒப்ப வாய்ந்த இட மே மக்கள் வாழ்விற் குரியதாகும். அப்பேற்றை நந்தமிழகம் பெற்றிருக்கிறது. இவ்வியற்கை நிலத்தைக் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்று பாகுபடுத்தி அதனதன் இயல்புக் கேற்ப வாழ்வு நடாத்தி இயற்கை இன்பந் துய்த்தவர்கள் நம் பண்டைத் தமிழ் மக்கள். அவ்வியற்கை வாழ்வே இதுபோழ்து வேண்டற்பாலது. இயற்கை வாழ்வை உலகிடை நிறுத்த மகாத்மாகாந்திமுயன்று வருதல் எவரும் அறிந்த தொன்று.

தமிழ்நாட்டின் மலைகளின் நிலையும் காடுகளின் செறிவும், ஆறுகளின் ஒழுக்கும், வயல்களின் செழுமையும் கடலின் ஓதையும் எழுத்தோவியர்க்குப் பெரு விருந்தாவன. வேங்கடத்தெழுங் கடவுள் மணமும், பொதிகையிலெழுந் தென்றற்காலும் ஒன்றி விராவி, நீலம் முதற்கோடுகளில் தாக்குற்றுத் தேங்குமாறு, கீழும் மேலும் இடையீடின்றித் தொடர்ந்தும் அடர்ந்தும் அரண்செய்யும் மலைக்கோவையின் கோலமும், அங்ஙனந் தேங்கும் இயற்கை அமிழ்தைச் சேமித்து உயிர்கட்கு ஊட்ட நீட்டுமா போல், அம்மலைக்கோவையினின்றுங் கவடுங் கோடும் அரும்பினலெனச் சுருள் சுருளாகவும் திரள் திரளாகவும் இவர்ந்தும் இழிந்தும் விட்டுந் தொட்டுங் கருவூலங்களை யொத்து நிற்கும் வரைக் குலங்களின் அமைவும், அவைகளின் துணைபெறு சிற்றில்களென ஆங்காங்கே சிதறிச் சிதறித் திகழுங் குன்றச்சூழல்களின் பொலிவும் கண்ணையும் மனதையுங் கவர்வனவாம். இயற்கையோடியைந்த இன்பவாழ் வளிக்கும் இயற்கை நிலையங்களாய திருக்கழுக்குன்றம், திரிசிராப்பள்ளி, பழனி, சென்னி

* இது காஞ்சியில் கூடிய தமிழர் மகாநாட்டுத் தலைவர் பேருரையின் ஒரு பகுதியாகும்.

மலை, திருச்செங்கோடு, கொல்லிமலை, சச்சைமலை, திருவண்ணாமலை, சேர்வராயன், டைக்கானல், நீலகிரி, சேர்வராயன் முதலிய மலைகள் உயிர்களை ஓம்பிவருகின்றன.

வாழ்வுக்கியைந்த காடுகளும் தமிழ் நாட்டில் அமைந்திருக்கின்றன. மலைகளோடு மிடைந்தும் தனியே சிறந்தும் செறியுங் காடுகள் வெயில் தங்கந் தளிக்குங் காரிருள் நீழலும், வண்டு திவைப்பத் தேன்பிலிற்றும் பூங்காவனங்களினின்றுங் கமழும் நறுநாற்றமும், வான்பரந்த பொழில்களின் நிரையும், கான்பரந்த தூறுகளின் திரளையும், பசுஞ்செடிகளினீட்டத்தையும், கொழுங்கொடிகளின் பின்னலும் உள்ளத்தைக் குளிர்விப்பனவல்லவோ? வான்முகடுகளினின்றும் முடுகி இடியென எழுந்து வீழுஞ் சாரல்களின்விரைவும், பாலையும் அறலையும் அரித்தரித்துப் பளிங்குருகியுமாபோல் இழிதரும் அருவிகளின் முழவும், பாட்டெடாப் பரந்து செல்லும் ஆறுகளின் அணியும், வேறு பல நீர்நிலைகளின் பரவலும் உரைகடந்த அகச்செவிக்கு இன்பூட்டுவன வல்லவோ? பாலியும் பெண்ணையும் காவிரியும் கொள்ளிடமும் வையையும் பொருநையும் அகில தாங்கி மணிகொழித்து அதிர்ந்தோடும் அழகை எழுத்தால் எழுத முடியுமோ? இவ்வாறுகள் பாய்ந்து வளஞ் செய்யும் வயல்களின் செழுமையைச் செப்பவும் வேண்டுமோ? வயல்களின் பரந்த பசுமை பசுங்கடலினைவையன்றோ ஊட்டுகிறது? மருதத்துக்கே உறையுளாய் நன்னிலங் கொண்ட தஞ்சையை நெற்களஞ்சியமாக வாய்க்கப்பெற்ற பெருமை நந்தமிழ் நாட்டுக்குண்டு. இத்தமிழ் நாட்டின் வளம்பில் மணியுக்கித் தாங்கும் பாடும் பாட்டுக்கு என்றுதல் ஓய்வுண்டோ?

இசைமயமான இயற்கை நிலத்தில் வாழ்வு நடாத்தி அவ்வியற்கைத் தமிழைச் சுவைத்தவர்கள் நம் முன்னோர்கள். தமிழ் என்பதற்கு இனிமை என்பது பொருள். "தமிழ் தழீஇய சாயலவர்" என்றும், "தமிழ் சேர் காஞ்சி" என்றும் புலவர்கள் இனிமை என்னும் பொருள்படத் தமிழ் என்னுஞ் சொல்லை ஆண்டிருத்தல் காண்க. பழமை மக்கள் இயற்கையினூருந் தமிழையே பின்னைத் தாங்கள் அவ்வியற்கைப் பொருளுக்கிட்ட சொன்மொழிக்கும் வழங்கினார்கள் போலும்! இயற்கை இனிமையோடு—தமிழோடு—அம்மக்கள் கொண்ட வாழ்விலெழும் இன்பக் கிளர்ச்சியால் தாங்கள் மாந்த இனிமை—தமிழ்—உறையுளாம் இயற்கையைச் சொல்லோவியமாக எழுதிவைத்து அவர்கள் பெருவிளையாட்டு. அச்சொல்லோவியங்களைக் கொண்ட இன்பப் பெட்டகங்கள் கலித்தொகை நெடுநல்வாடை, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள். நம்மக்கள் வாழ்வே தமிழ்வாழ்வு. அவர்கள் கண்டது தமிழ்; கேட்டது தமிழ்; உண்டது தமிழ்; உயிர்த்தது தமிழ்; உற்றது தமிழ். அத்தமிழ் அமிழ்தங் கொண்டநாடு இந்நாடு. ஆ! ஆ! இதை நினைவிலுறும்போது உறும் இன்பத்தை என்னென்பேன்! என்னென்பேன்! அவ்வின்பம் நுகர்ந்த இக்காலத் தமிழ்ப்பாவலர் பெருமானாகிய நமது பாரதியார் "செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத்—தேன் வந்து பாயுது காதினிலே" என்று கூறியிருத்தல் காண்க. இவ்வின்பத் தமிழ்நாட்டிற் பிறந்த நாம் இதுபோழ்து அத்தமிழின்பம் நுகர்கின்றோமா? இல்லையே! காரண மென்னை? உரிமையிழந்தோம்; தமிழை மறந்தோம். மீண்டும் அவ்வுரிமை யுணர்வு பெறயாண்டுப் போதல் வேண்டும்? தமிழ்த்தாயிடஞ் செல்வோமாக. அவள் சேவையில் உரிமையுணர்வு பெறலாம். தமிழ் மக்களே! அச்சேவைக்கு எழுங்கள்! எழுங்கள்!



பழந்தமிழ் மக்கள் தங்கள் வாழ்வை இரு கூறுகப் பிரித்து வாழ்ந்தார்கள். அவை அகவாழ்வு, புறவாழ்வு என்பன. அகவாழ்வாவது, ஒத்த குணன் ஒத்த கல்வி முதலியவுடைய ஒருத்தியும் ஒருவனுங் கூடி நடாத்தும் இல்லற வாழ்வு. அவ்வாழ்வு இன்பவாழ்வாக இயங்கவேண்டுமேல் அதற்குப் பொருள் இன்றியமையாது வேண்டற்பாலது. "பொருளில்லார்க்கு இவ்வுலகமில்" என்றார் பொய்யா மொழியாரும். அப்பொருள் எவ்வாறு கிடைக்கும்?

பொருட் பேற்றிற்குக் கல்வியுந் தொழிலுந் தேவை. கல்விப்பயிற்சியுந்தொழிற் பயிற்சியும் பெறுதற்குச் சிறந்த அமைப்புக்கள் இன்றியமையாதன. அவ்வமைப்புக்கள் செவ்வனே இடையூறின்றி இயங்க நாட்டில் அமைதி நிலவல் வேண்டும். மாற்றார் பகைகடிந்து அமைதி காக்க நல்லரசு வேண்டும். நல்லரசில்லையேல் நாடு காடாகும். ஒழுங்குபட்ட அரசிருந்தாலன்றி அகவாழ்வெனும் இல்லறம் ஒழுங்குபட நடைபெறலரிது. இவ்வரசு கல்வி பொருள் முதலியன கொண்டதே புறவாழ்வென்பது. இதனால் அகவாழ்விற்கும் புறவாழ்விற்குமுள்ள தொடர்பு நோக்கற்பாலது. அவை இரண்டும் உடல் உயிர்போன்றன. அகவாழ்வு அவ்வந்நாட்டு இயல்புக் கேற்றவாறு அமைந்து கிடப்பது. அவ்வாழ்விற்கரணுமாறு அவ்வந்நாட்டு இயல்புக்கேற்ற வண்ணம் புறவாழ்வும் அமைதல் வேண்டும். அகமும் புறமும் ஒன்றுபட்ட வாழ்வே இயற்கை வாழ்வாகும். பழந்தமிழ் மக்கள் கோலிய முறை வழி எங்ஙனும் வாழ்வு நடைபெற்றுவரின் உலகில் போரேது? அடக்குமுறை ஏது? ஒரு நாட்டார் இன்னொரு நாட்டாரை ஆள்வதேது? இப்பொழுது அகம் நம்முடையதாகவும் புறம் மற்றவருடையதாகவுமிருத்தலால் நாட்டில் இன்பமில்லை. அவ்வின்ப உரிமை பெறும் வழியாது என்று ஆராயவன்றோ நாமனைவரும் இங்கே கூடியிருக்கின்றோம்? பழந்தமிழ் நூல்களே வழி காட்டுகின்றன. அவ்வழியைப் புதுக் கண்கொண்டு நோக்குவோமாக.

பண்டைத் தமிழ்நாட்டில் பிறப்பால் சாதி பாகுபாடிருந்ததாகத் தெரியவில்லை. நிலப் பாகுபாடொன்றே அந்நாட்டில் நிலவியிருந்தது. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா—செய்தொழில்வேற்றுமையான்" என்றார் நந்தமிழ்ப் பெரியாரும். இடைக்காலத்தில் முளைத்த பிறப்பு உயர்வு தாழ்வும், தீண்டாமை என்னுங் கொடுமையும் நாட்டை அடிமைக் குழியில் வீழ்த்திவிட்டன. அக்கொடுமையினின்றும் நாட்டை விடுவிக்க இதுபோழ்து அன்பர்பலர் முயன்று வருகின்றார். அம்முயற்சிக்குப் பழந்தமிழ் நூலாராய்ச்சி பெருந்துணை செய்யும் என்று நான் விரித்துக் கூறவேண்டுவதில்லை.

மலை, திருச்செங்கோடு, கொல்லிமலை, சேர்ச்சைமலை, திருவண்ணாமலை, கோடைக்கானல், நீலகிரி, சேர்வராயன் முதலிய மலைகள் உயிர்களை ஓம்பிவருகின்றன.

வாழ்வுக்கினியதான காடுகளும் தமிழ்நாட்டில் அமைந்திருக்கின்றன. மலைகளோடு மிடைந்தும் தனியே சிறந்தும் செறியுங் காடுகள் வெயில் தகைந்தளிக்கும் கரிருள் நீழலும், வண்டிசைப்பத் தேன்பிலிற்றும் பூங்காவனங்களினின்றும் கமழும் நறுநாற்றமும், வான்பரந்த பொழில்களின் விரையும், கான்பரந்த தூறுகளின் நிறைவும், பசுஞ்செடிகளினீட்டமும், கொழுங்கொடிகளின் பின்னலும் உள்ளத்தைக் குளிர்விப்பனவல்லவோ? வான்முகடுகளினின்றும் முடுகி இடியென எழுந்து வீழுஞ் சாரல்களின்விரைவும், பாலையும் அறலையும் அரித்தரித்துப் பளிங்குருகியுமர்போல் இழிதரும் அருவிகளின் முழவும், பாட்டெனப் பரந்து செல்லும் ஆறுகளின் அணியும், வேறு பல நீர்நிலைகளின் பரவலும் உரைகடந்த அச்செவிக்கு இன்பூட்டுவன வல்லவோ? பாலியும் பெண்ணையும் காவிரியும் கொள்ளிடமும் கல்லையும் பொருநையும் அகில் தருக்கி மணிகொழித்து அதிர்ந்தோடும் அழகை எழுத்தால் எழுத முடியுமோ? இவ்வாறுகள் பாய்ந்து வளஞ் செய்யும் வயல்களின் செழும்மையைச் செப்பவும் வேண்டுமோ? வயல்களின் பரந்த பசுமை பசுங்கடலினைவ யன்றோ ஊட்டுகிறது? மருதத்துக்கே உறையுளாய் நன்னிலங்கொண்ட தஞ்சையை நெற்களஞ்சியமாக வாய்க்கப்பெற்ற பெருமை எந்தமிழ் நாட்டிற்குண்டு. இத்தமிழ்நாட்டின் வரம்பில் மணியுந்தித் தரங்கம் பாடும் பாட்டுக்கு என்றுதல் ஓய்வுண்டோ?

இசைமயமான இயற்கை நிலத்தில் வாழ்வு நடாத்தி அவ்வியற்கைத் தமிழைச் சுவைத்தவர்கள் நம் முன்னோர்கள். தமிழ் என்பதற்கு இனிமை என்பது பொருள். "தமிழ் தழீஇய சாயலவர்" என்றும், "தமிழ்சேர் காஞ்சி" என்றும் புலவர்கள் இனிமை என்னும் பொருள்படத் தமிழ் என்னுஞ் சொல்லை ஆண்டிருத்தல் காண்க. பழமை மக்கள் இயற்கையினூருந் தமிழையே பின்னைத் தாங்கள் அவ்வியற்கைப் பொருளுக்கிட்ட சொன்மொழிக்கும் வழங்கினார்கள் போலும்! இயற்கை இனிமையோடு—தமிழோடு—அம்மக்கள் கொண்ட வாழ்விலெழும் இன்பக்கிளர்ச்சியால் தாங்கள் மாந்த இனிமை—தமிழ்—உறையுளாம் இயற்கையைச் சொல்லோவியமாக எழுதுவது அவர்கள் பெருவிளையாட்டு. அச்சொல் லோவியங்களைக் கொண்ட இன்பப் பெட்டகங்கள் கலித்தொகை நெடுநல்வாடை, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள். நம்மக்கள் வாழ்வே தமிழ்வாழ்வு. அவர்கள் கண்டது தமிழ்; கேட்டது தமிழ்; உண்டது தமிழ்; உயிர்த்தது தமிழ்; உற்றது தமிழ். அத்தமிழ் அமிழ்தங் கொண்டநாடு இந்நாடு. ஆ! ஆ! இதுநினைவினூறும்போது உறும் இன்பந்தை என்னென்பேன்! என்னென்பேன்! அவ்வின்பம் நுகர்ந்த இக்காலத் தமிழ்ப்பாவலர் பெருமாஞ்கிய நமது பாரதியார் "செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத்—தேன் வந்து பாயுது காதினிலே" என்று கூறியிருத்தல் காண்க. இவ்வின்பத் தமிழ்நாட்டிற் பிறந்த நாம் இதுபோழ்து அத்தமிழின்பம் நுகர்கிறோமா? இல்லையே! காரண மென்னை? உரிமையிழந்தோம்; தமிழை மறந்தோம். மீண்டும் அவ்வுரிமை யுணர்வு பெறயாண்டுப் போதல் வேண்டும்? தமிழ்த்தாயிடஞ் செல்வோமாக. அவள் சேவையில் உரிமையுணர்வு பெறலாம். தமிழ் மக்களே! அச்சேவைக்கு எழுங்கள்! எழுங்கள்!

பழந்தமிழ் மக்கள் தங்கள் வாழ்வை இரு கூறாகப் பிரித்து வாழ்ந்தார்கள். அவை அகவாழ்வு, புறவாழ்வு என்பன. அகவாழ்வாவது, ஒத்த குணன் ஒத்த கல்வி முதலியவுடைய ஒருத்தியும் ஒருவனுங் கூடி நடாத்தும் இல்லற வாழ்வு. அவ்வாழ்வு இன்பவாழ்வாக இயங்கவேண்டுமேல் அதற்குப் பொருள் இன்றியமையாது வேண்டற்பாலது. "பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை" என்றார் பொய்யா மொழியாரும். அப்பொருள் எவ்வாறு கிடைக்கும்?

பொருட் பேற்றிற்குக் கல்வியுந் தொழிலுந் தேவை. கல்விப்பயிற்சியுந்தொழிற் பயிற்சியும் பெறுதற்குச் சிறந்த அமைப்புக்கள் இன்றியமையாதன. அவ்வமைப்புக்கள் செவ்வனே இடையூறின்றி இயங்க நாட்டில் அமைதி நிலவல் வேண்டும். மாற்றார் பகைகடிந்து அமைதி காக்க நல்லரசு வேண்டும். நல்லரசில்லையேல் நாடு காடாகும். ஒழுங்குபட்ட அரசிருந்தாலன்றி அகவாழ்வெனும் இல்லறம் ஒழுங்குபட நடைபெறலரிது. இவ்வரசு கல்வி பொருள் முதலியன கொண்டதே புறவாழ்வென்பது. இதனால் அகவாழ்விற்கும் புறவாழ்விற்குமுள்ள தொடர்பு நோக்கற்பாலது. அவை இரண்டும் உடல் உயிர்போன்றன. அகவாழ்வு அவ்வந்நாட்டு இயல்புக் கேற்றவாறு அமைந்து கிடப்பது. அவ்வாழ்விற்கு ஏற்றவாறு அவ்வந்நாட்டு இயல்புக்கேற்ற வண்ணம் புறவாழ்வும் அமைதல் வேண்டும். அகமும் புறமும் ஒன்றுபட்ட வாழ்வே இயற்கை வாழ்வாகும். பழந்தமிழ் மக்கள் கோலிய முறை வழி எங்ஙனும் வாழ்வு நடைபெற்றுவரின் உலகில் போரேது? அடக்குமுறை ஏது? ஒரு நாட்டார் இன்னொரு நாட்டினரை ஆள்வதேது? இப்பொழுது அகம் நம்முடையதாகவும் புறம் மற்றவருடையதாகவுமிருத்தலால் நாட்டில் இன்பமில்லை. அவ்வின்ப உரிமை பெறும் வழியாது என்று ஆராயவன்றோ நாமனைவரும் இங்கே கூடியிருக்கிறோம்? பழந்தமிழ் நூல்களே வழி காட்டுகின்றன. அவ்வழியைப் புதுக் கண்டுகொண்டு நோக்குவோமாக.

பண்டைத் தமிழ்நாட்டில் பிறப்பால் சாதி பாகுபாடிருந்ததாகத் தெரியவில்லை. நிலப் பாகுபாடொன்றே அந்நாட்டில் நிலவியிருந்தது. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா—செய்தொழில்வேற்றுமையான்" என்றார் நந்தமிழ்ப் பெரியாரும். இடைக்காலத்தில் முளைத்த பிறப்பு உயர்வு தாழ்வும், தீண்டாமை என்னுங் கொடுமையும் நாட்டை அடிமைக் குழியில் வீழ்த்திவிட்டன. அக்கொடுமையினின்றும் நாட்டை விடுவிக்க இதுபோழ்து அன்பர்பலர் முயன்று வருகிறார். அம்முயற்சிக்குப் பழந்தமிழ் நூலாராய்ச்சி பெருந்துணை செய்யும் என்று நான் விரித்துக் கூறவேண்டுவதில்லை.

பழந்தமிழ் நாட்டில் பெண்மக்கள்
நிலை எவ்வாறிருந்தது என்பதும் ஆ
ராயற் பாலதே. அது குறித்து என
துள்ளத்தெழும் அவாவினைக் காலத்
தின் அருமைநோக்கி அடக்கி இரண்
டோர் உரைகூறப் புகுகிறேன். 'தலை
வனுந் தலைவியும் ஒத்த கல்வியுடைய
ராயிருந்தார்' என்னுங் குறிப்பும்,
'பெண்மகள் தனக்கினிய ஒருவனைத்
தனக்குரிய தலைவனுகத் தானே தெரி
ந்தெடுக்கும் உரிமை பெற்றிருந்தாள்'
என்னுங் குறிப்பும், இன்ன பிறவும்
பழந்தமிழ் நாட்டுப் பெண்மக்கள்
நிலையைப் புலப்படுத்தும். விரிவு கள
வியலிற் காண்க.

"பெண்ணே. வெறுத்தல் பேரின்
பம்" என்னும் பாழுங்கொள்கை
இடைக்காலத்தில் தோன்றியதாகும்.
பெண்ணழகில் அன்புக் கடவுளுண்
மைகாணும் பெருமைவாழ்வு பெற்
றிருந்தார்கள் நம் பண்டைத் தமிழ்
மக்கள். இறந்துபடாது இன்றுமுள்ள
பழந்தமிழ் நூல்கள் அறம் பொருள்
இன்பம் என்னும் மூன்றையே அறி
வுறுத்தல் காணலாம். ஆண்மகன்
தன்னை பொத்த பெண்மகளை என்று
காமப் பொருளாகக் கருதினரோ
அன்றே இன்பம் சிற்றின்பம் பே
ரின்பமெனப் பிரியலாயிற்று. அப்
பிரிவு தோன்றிய நாள் தொட்டு உல
கும் கூடா ஒழுக்கத்துக்கு இரையா
கித் தேய்கிறது. பிரிந்த பேரின்பத்
தை வீடெனக் கொண்ட வழக்குப்
பின்னைய வழக்காகும். பழந்தமிழர்
கள் கடவுளுண்மையில் உறுதியில்
லாத மாக்களா" என்று சிலர் கடா
வலாம். அவர்கள் கடவுள் உண்மை
யில் உறுதியுடையவர்களே. ஆனல்
அவர்கள் கொண்ட கடவுள் எது?
அவர்கள் கடவுளைக் 'கந்தழி' என்

னும் பெயரால் வழுத்தினர்கள். கட்
டற்ற ஒன்று 'கந்தழி' என்பது.
அழுக்காறு அவா வெகுளி முதலிய
கட்டுகள் கடந்து விளங்கும் இன்ப
அன்பே அக் 'கந்தழி' என்னுங் கட
வுள். "ஈறிலாப் பதங்கள் யாவை
யுங் கடந்த இன்பமே என்னுடை
அன்பே" என்று பின்வந்த தமிழ்
நாட்டன்பர் மணிவாசகனு நம் கட
வுளை 'இன்பமே' என்றும் 'அன்
பே' என்றும் விளித்திருத்தல் கா
ண்க. அவ்வன்புக் கடவுள் யாண்டி
ல்லை? இயற்கையெலாம் அவ்வன்புக்
கடவுள் வடிவன்றோ? அவ்வியற்கை
யினின்றும் திரண்டெழுந்த அன்
புக்கொழுந்தன்றோ நம் பெண்ணமிழ்
தம்? அப்பெண் ணமிழ்தமா காமப்
பொருள்? கொடுமை! கொடுமை!!
மாசுபடாந்த மனதுக்கன்றோ பெண்
ணெனும் பெருமை காமப்பொருள்.
மாசிலா மனத்தார்க்கு அப்பெண்
ணெனும் பெருமை காதற் கடவுளல்
லவோ? அப்பெண்ணோடு கூடி வா
ழும் வாழ்வன்றோ இயற்கை வடி
வான இறையன்பைக் கூட்டும் வாழ்
வாகும்? இயற்கையை விடுத்து
இறைவனை எவ்வாறு காணமுடியும்?
இது போழ்து உலகம் போற்றுங்
கவியரசர் ரவீந்திரநாததாகூர் கொ
ள்கை பெரிதும் பழந்தமிழர் கொள்
கைக்கு அரண்செய்வதெனச் சுருங்
கச் சொல்கிறேன்.

பெண்ணுக்குரிமை நல்கிய என்ன
ருமைத் தமிழ்நாடே! இதுபோழ்து
யாண்டுளாய்! யாண்டுளாய்! என்று
அலமருகிறேன். அவ்வுரிமை நாட்
டை மீண்டும் காண எவர் முயலல்
வேண்டும்? தமிழகத்திற் பிறந்த நா
மல்லவோ முயலல் வேண்டும்? என்
னுடன் பிறந்த அருமைத் தமிழ் மக்



களே! அந்நாட்டைக்காண வீறுகொ
ண்டெழுங்கள்! எழுங்கள்!

இனித்தமிழ்நாட்டின் கல்வி இசை
ஓவியம் மருத்துவம் வானாராய்ச்சி
தொழில் வாணிபம் அரசியல் வீரம்
முதலியவற்றின் மீது சிறிது கருத்
துச் செலுத்துவோம். தமிழ் இயல்
இசை நாடகம் என்னும் மூன்று வழி
யிலும் வளர்ந்து வந்தது. தமிழ்க் கல்
வித்திறனை யுணர்த்தப் பழைய சங்க
மருவிய நூல்களும், பெரிய புராணம்
கம்பராமாயணம், தேவார திருவாச
கம், நாலாயிரப் பிரபந்தம் முதலிய
நூல்களும் கருவிகளாகத் துணைபுரி
கின்றன. பன்னூறு ஆண்டுகளாக
நாடு உரிமையிழந்தமையானும், மக
கள் நாட்டுக் கல்வியல்லாத கல்வியை
வயிற்றுப் பிழைப்பு நாடிப் பயின்று
வருதலானும், நாட்டில் நல்லிலக்கிய
ங்கள் பிற்காலத்தில தோன்றவில்லை.

தமிழ் நாட்டுக்கெனச் சிறப்பாக
இசையுண்டு. இதனை வலியுறுத்தச்
சிலப்பதிகார அரங்கேற்றுகாதை ஒ
ன்றே சாலும். தமிழ்நாட்டின்
இசைச் சிறப்பைக் காலஞ்சென்ற
தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்
றிய "கருணாமிர்தசாகரம்" என்னும்
விரிந்த நூலில் பரக்கக் காணலாம்.
தமிழ்நாட்டின் மருத்துவ மாண்பைச்
சித்த நூல்கள் தெரிவிக்கின்றன. நா
டிபார்த்து நோயியல்பு உணர்தலும்,
பாடாணங்களில் மருந்து செய்தலும்
தமிழ் மருத்துவத்தின் தனிச்சிறப்பா
கும். தமிழ்மக்கள் வானஆராய்ச்சியில்
வல்லுநராயிருந்தாரென்பதற்குச்"செ
ஞ்ஞாயிற்றுச்செலவும் அஞ்ஞாயிற்று
ப்—பரிப்பும் பரிப்புச்சூழ்ந்தமண்டில
மும்—வளிதிரிதருதிசையும்—வறிது
நிலை இய காயமும் என்றிவை—சென்
றளந்தறிந்தோர் போல என்றும்—

இனைத்தென்போரும் உளரே * *
* *" என வரூஉம் ஒரு புறப்பா
ட்டை எடுத்துக் காட்டுவதோடு நின்
று விடுகிறேன். இது குறித்து அறி
த்தே இவ்வுலகு நீத்தஅறிஞர் சாமி
கண்ணுபிள்ளை செய்த ஆராய்ச்சி
யைத் தொடர்ந்து பெருக்க வேண்டு
வது நந்தமிழறிஞர் கடமை.

தமிழ்மக்கள் ஓவியப் பெற்றியை
விரித்துக்கூறவேண்டியதில்லை. பழை
ய சோழ கட்டிடங்களும், பழைய
கோயில்களும், அமராவதி மாவலிபு
ரம் முதலிய விடங்களிலுள்ள சிற்ப
நுட்பங்களும், பழந்தமிழ் மக்கள்
அணிகலன்களும், அவர்கள் பாட்டுக்
களும் தமிழோவியத்தின் உயர்வி
ற்கு நிலைக்களன்களா யிருக்கின்றன.
தாகூர் முதலிய கவிவாணரும் தமி
ழர் ஓவியத்தைப் போற்றியிருத்தல்
கவனிக்கத்தக்கது. "நெடு நிலைமா
டத் திடை நிலத்திருந்துழி" என்
றும், "நிரைநிலை மாடத் தரமியமே
றி" என்றும், "வேயாமாடமும்"
என்றும், " மான்கண்கால் அதர் மா
ளிகை யிடங்களும்" என்றும் இளங்
கோ அடிகள் தமிழ்மக்கள் கட்டி
டங்களைச் சிறப்பித்திருத்தல் காண்க.

தமிழ் மக்கள் தொழின் முறைகள்
சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடு
த்த காதையினும், மணிமேகலை சக்
கரவாளக் கோட்டம் என்பதில் கடல்
வளம் ...

ற்கு இன்றியமையாத தொழில் பல தமிழ் நாட்டிலிருந்தன.

தமிழ் நாட்டின் வளனும் தொழின் முறைகளும் இந்நாட்டார் பண்டை நாளில் பிற நாட்டவரோடு செய்து வந்த வாணிபப் பெருக்கை நோக்குழி நன்கு புலனாகும். அந்நாளில் தமிழ் மக்கள் காலிற் பிரிவதோடு கலத்திற் பிரிந்துங் கடல் கடந்து வாணிபஞ் செய்தார்கள். 'காலிற்பிரிதல்' 'கலத்திற் பிரிதல்' என வரூஉம் பழந்தமிழ் நூல்களின் வழக்கும் "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்னும் பழமொழியும் தமிழ்மக்கள் கடல் கடந்து செய்த வாணிபப் பெருக்கைக் குறித்தல் காண்க. பண்டைத் தமிழ்நாடு கிறிஸ்து பிறப்பதற்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னரே பாபிலோன் எகிப்து ரோம் கிரீஸ் சிரியா முதலிய நாடுகளோடு வாணிபஞ் செய்ததைத் தற்காலச் சரித்திரக்காரர்கள் நன்கு ஆராய்ந்து பல நூல்கள் எழுதியுள்ளார்கள். அந்நாடுகளுக்குத் தேக்கு சந்தனம் தந்தம் தோகை மிளகு ஏலம் முதலியன தமிழ்நாட்டினின்றும் அனுப்பப்பட்டன என்பதற்குப் பல அகச்சான்றுக ளிருக்கின்றன. யவனர்க்கும் தமிழ் மன்னர்க்கு மிருந்த உறவும், அங்கும் இங்கும் ஒற்றர்களும் மெய் காப்பாளர்களும் இருந்தமையும் தமிழ்நூல்களில் வெள்ளிடைமலைபோல் அறியக்கிடக்கின்றன. யவனர் முதலிய சொற்கள் தமிழ் நூல்களில் நுழைந்ததும் தோகைமுதலிய தமிழ்ச்சொற்கள் துகிமுதலிய சொற்களாக ஹீப்ரு முதலிய மொழிகளில் நுழைந்ததும் ஆராயற்பாலன. இவ்வுண்மைகளைத் திரட்டிச் சரித்திர வடிவாக உலகுக்கீந்த

கனகசபை பிள்ளை, சவரிநாராயண பிள்ளை, நல்லசாமி பிள்ளை சூரியநாராயண சாஸ்திரியார், சீநிவாசபிள்ளை முதலிய தமிழ்மக்கள் நன்றி என்றும் மறக்கற்பாலதன்று.

இவ்வுலகியற் றுறைகள் யாவும் நேர்பட இயங்குதற்கு அந்நாளில் நிலைக்களனாக நின்றது அரசியலேயாகும். நல்லரசியல் இல்லா நாட்டில் அமைப்பேது? வாழ்வேது? அற வொழுக்கமேது? ஒருநாட்டின் நாகரிகமோ அந்நாகரிகமோ அந்நாட்டின் அரசியலையன்றோ பொறுத்து நிற்கும்? அரசியல் என்பது உலகிடை மறவினை மலியாது அறவினை மலியுமாறு செய்தற்கு ஏற்பட்ட ஓர் அமைப்பு. அது குடியாட்சியோ கோனாட்சியோ குடிக்கோனாட்சியோ எவ்வாட்சியோ பற்றி யியங்கினும் இயங்க. அதனால் குடிமக்கட்குக் கேடு விளைதலாகாது என்பதொன்றே கவனிக்கற் பாற்று. பெயருக்குக் குடியாட்சி யென்றோர் ஆட்சி வகுத்துச் செல்வாக்குடைய சிலரொன்று கூடி நாட்டை வருத்துவதால் என்னபயன்? எவ்வாட்சி ஆயினும் அதன் அடியில் அறமும் அன்பும் அருளுங் கால்கொண்டு நிற்றல் வேண்டும். இவையில்லா அரசியல் அரசியலாமோ? பழந்தமிழ் நாட்டில் வளர்ந்த அரசியல் பெரிதும் அறத்தையும் அன்பையும் அருளையும் அடிப்படையாகக் கொண்டு நிலவியது என்பதற்குச் சான்றுகள் பலவுள. "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே—மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" என்று புறநானூறு உலகத்துக்கு உயிர் அரசு என்பதைத் தெரித்தல் காண்க. உயிரனைய அரசு கோல் கோடி மறவினை



பெருக்கின் நாடுநிலை என்னும்? அந்நாட்டினுங் கடும்புலிவாழுங் காடே நன்று. ஒரு நாட்டார் தந்நிறை காக்கவேண்டுமேல் முதலாவது அவர் நல்லரசு கோலிக் கொள்ளல் வேண்டும். தமிழ் மக்கள் அரசின் பெற்றி யுணர்ந்த முதியவர்களாகலான் அவர்கள் அரசை உயிரெனக் கொண்டார்கள். அம்மக்கள் நிலைக்கேற்ற முறையில் அரசு அந்நாள் அமைந்திருந்தது. பழந்தமிழ் அரசின் நடுநிலையும் அருட்டன்மையும் ஈண்டு விரிக்கிற் பெருகும். "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்—அதனால் நமரெனக் கோல் கோடாது பிறரெனக் குணங்கொல்லாது—ஞாயிறன்ன வெந்திறல் ஆண்மையும்—திங்களன்ன தண்பெருஞ் சாயலும்—வானத்தன்ன வண்மையும் மூன்றும் உடையையாகி * * *" என்றும், "சோறு படுக்குந் தீயொடு செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது பிறிதுதெறல் அறியார் நின்னிழல் வாழ்வோரே—திருவில் அல்லது கொலைவில் அறியார்—நாஞ்சில் அல்லதுபடையும் அறியார்" என்றும் வரும் புறப்பாக்களை யோர்க. கண்ணகியின் வீரச் செயலால் அவளது கொழுநனாகிய கோவலனைக் கொன்றது தவறு என்று பாண்டி மன்னன் உணர்ந்ததும் "யானோ அரசன், யானே கள்வன்" என்று மண்ணில் வீழ்ந்து உயிர்துறந்தது ஒன்று தமிழரசின் பண்புரைக்கு மன்றோ?

பழந்தமிழரசின் அமைப்பு முறைகளை விரித்தற்கு அஞ்சுகிறேன். "படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண்ஆறும்—உடையான் அரசருள் ஏறு" என்னுந் திருக்குறளால் அரச அங்கமும், "குடிதழீஇக் கோலோச்சு மாநிலமன்னன்—அடிதழீஇ நிற்கும் உலகு" என்னுந் திருக்குறளான் அரசியல்பும் விளங்கப் பெறுகிறோம். 'ஐம்பெருங்குழு' வொடு 'எண்பேராய' முங் கொண்டது நந்தமிழரசு என்று சுருங்கச் சொல்கிறேன். தமிழ் அரசின் போர் முறைகள் தொல்காப்பியம் முதலிய விரிந்த நூல்களிற் காண்க. அக்காலங் கடற்போர் முதலியவற்றைப் பதிற்றுப்பத்து முதலிய நூல்களிற் காண்க.

இருபதாம் நூற்றாண்டு, நாகரிகத்தில் முதிர்ந்த நூற்றாண்டு என்று சொல்லப்படுகிறது. இந்நாகரிக நூற்றாண்டில் ஐரோப்பாவில் நடைபெற்றபெரும் போரில் ஜெர்மானியர் பெல்ஜியத்தில் நிகழ்த்திய கொடுமைக்கோர் அளவு முண்டோ? நிலத்திலிருப்போர் இன்னாரெனவுங் கருதாது ஆகாய விமானத்தினின்று குண்டெறிதலும் நச்சுக்காற்று விடுதலும் என்ன நாகரிகம்? இது போழ்து பிரெஞ்சுக்காரர் சிரியாவில் குழந்தை பெண் நோயாளி என்றும் உன்னாது ஆயிரக்கணக்கான மக்களை வதைத்த இருபதாவது நூற்றாண்டின் நாகரிகம் என்னே! என்னே! கிறித்துவ நூற்றாண்டு தொடங்குதற்கு முன்னரே நந்தமிழ் மக்கள் போர்முறைகளை ஒழுங்குபடக் கோலியிருந்தார்கள். அம்முறைகள் தமிழ்மக்கள் நாகரிகத்தைப் புலப்படுத்துகின்றன. மாற்றார்மீது அறப்போர் துவங்குதற்கு முன் தமிழ் வீரர்கள் ஆன், ஆன் அனைய அந்தணர், குழந்தை, பெண் முதலியோரைப் போர் நிலத்தினின்றும் விலகுமாறு அறிவுறுத்தி அன்னார் அவணிருந்து விலகிய பின்னர் அம்பு சொரிவார்கள். இதனை "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்—பெண்டி

ரும் பிணியுடையீரும் பேணித்—தெ ன்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கு ம்—பொன்போற் புதல்வப் பெறுஅ தீரும்—எம்மம்பு கடிவிடுதும் நும் மரண் சேர்மின் என—அறத்தாறு நுவலும் பூட்கை * * *'' என வருஉ ம் புறப்பாட்டா னுணர்க. போரி னும் அறநெறிகாத்த அருள்நாடு நந் தமிழ் நாடு.

பழந்தமிழ் மக்கள் வீரம் அளந்து கைக்கற் பாலதன்று. விரிவு புறநூ லகத்திற் காண்க. முதியோள் ஒருத்தி தன்மகன் செருக்களத்தில் புறமுது கிட்டான் என்று கேட்டதும், அஃது ண்மையானால் அவனுக்குப் பாலூட் டிய என் மார்பை அரிந்தெறிவேன் என்று வாள்தாங்கிப் போர்க்களம் புக்குப் பார்த்தபோது அவன் இற ந்து பட்டிருப்பது கண்டு அவனை ஈன்ற பொழுதினும் பெரிதுவந்த வரலாறும், மற்றொரு வீரத்தாய் தன் தலைவன் போர்க் களத்தில் உயிர்துறந்த அடுத்த நாள் செருப் பறை கேட்டுத் தன்னொரு புதல்வனை அகமலர்ச்சியோடு போருக்கனுப்பிய வரலாறும் இத்தமிழ் நாட்டில் நிகழ் ந்தன. "நரம்பெழுந் துலறிய நிரம் பா மென்றோள்—முளரி மருங்கின் முதியோள் சிறுவன்—படையழிந்து மாறினனென்று பலர் கூற—மண்ட மர்க் குடைந்தனனாயின்உண்டஎன்— முலையறுத்திடுவென் யானெனச்சினை இக்—கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்—செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய—படுமகன் கிடக் கை காணுஉ—ஈன்ற ஞான்றினும்பெ ரிதுவந்தனளே." "கெடுக சிந்தை கடிதிவள் துணிவே-முதின் மகளிர் ஆதல் தகுமே—மேனாள் உற்றசெரு விற்கு இவள் தன்னை—யானை எறிந்து களத்தொழிந்தனனே—நெருநல் உற் ற செருவிற்கிவள் கொழுநன்—பெரு நிரை விலக்கி ஆண்டுப்பட்டனனே— இன்றும், செருப்பறை கேட்டு விரு ப்புற்று மயங்கி—வேல்கைக் கொடு த்துவெளிது விரித்துஉடீஇப்—பாறு மயிர்க்குடுமி எண்ணெய் நீவி—ஒரு மகனல்லது இல்லோள்—செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே'' என வருஉம் புறப்பாக்களில் அவ்வாலாறு காண்க.

ஒரு முதியவள் வீரமும் கொழு நனை யிழந்த ஒருத்தியின் வீரமும் இத்தகைத்தெனில் அந்நாள் இளை ஞர் வீரம் எத்தகைத்தா யிலங்கியி ருக்க வேண்டும் என்பதை நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். வீரம் என் பது தாய்க்கருவினின்றும் அரும்பு தல் வேண்டும். வீரக் குழந்தைகளைப் பெறுந் தாய் கல்வியறிவிற் சிறந்தவ ளாய் உரிமையுணர்வு உடையவளா யிருத்தல் வேண்டும். முன்னாளில் பெண்மக்கள் இவைகளைப் பெற்று வீரஞ்செறிந்த தாய்மார்களாக வாழ் ந்தமையான் அவர்கள் வயிற்றில் வீர ப்பிள்ளைகள் பிறந்தார்கள். இந்நாளி லோ? வெட்கம்! வெட்கம்!!

பழந்தமிழ்நாட்டு நிலையை விள க்க ஈண்டொன்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஒருவர் ஒரு கிழ வனை நோக்கி "ஆண்டு பல வாயி னும் நரையில்லாமலிருப்ப தென் னை?" என்று வினவினர். அத ற்கு அம்முதியோன் இறுத்த விடை வருமாறு:—"யாண்டு பலவாக நரையி லவாகுதல்:—யாங்காகியரென வினவு திராயின்—மாண்ட என் மனைவியொடு மக்களுநிரம்பினர்—யான்கண்டனையர் என் இளையரும், வேந்தனும்—அல்ல வை செய்யான் காக்கு மதன்றலை— ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்—சா ன்றோர் பலர் யான் வாழும் ஊரே.'' இப்பாவான் பண்டைக்கால மனைவி மக்கள் நிலை, ஆட்கள்நிலை, அரசுநிலை, ஊரார் நிலை முதலியன விளங்குதல் காண்க. நீண்ட நாள் வாழ்விற்கு அல்லவை செய்யா அரசு வேண் டற்பாலது என்பதற்கு விரிவுரை வேண்டுங்கொல்!

பழந்தமிழரசு அறத்தை—அன் பை—அருளை அடிப்படையாகக்கொ ண்டு நிலவிய தென்பதற்குத் தாலி புலாக நியாயம்பற்றி ஈண்டெடுத் துக்காட்டிய சிலகாட்டுகளே சாலும். இன்னும் விரிக்கிற் பெருகும்.

முன்னை நாளில் இசைபட வாழ்ந்த தமிழ் மக்கள் குண நலன்கள் பலப் பல. அவைகளுள் ஒன்றைச் சிறப் பாக ஈண்டுக் குறிக்கிறேன். அதா வது விருந்தோம்பல். விருந்தோம் பலில் தமிழ்மக்கள் பேர் பெற்றவர் கள் என்பது எவரும் அறிந்ததொ ன்று. வாழ்க்கையே விருந்தோம்ப அக்கென்று திருவள்ளுவனர் கூறியு ள்ளார். "இருந்தோம்பி இல்வாழ் வதெல்லாம் விருந்தோம்பி—வேளா ண்மை செய்தற்பொருட்டு'' என வருஉந் திருக்குறளை நோக்குக. பா ரதப் போருக்கு அழைக்கப்பட்ட தமிழ் மன்னன் போரிற் கலவாது போரில் தலைப்பட்டவர்க்குச் சோறூ ட்டும் அறத்தொண்டேற்றது ஈங்கு நினைவிற்கு வருகிறது. "வலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ—நிலந்த லைக்கொண்ட பொலம்பூந் தும்பை —ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்—பெருஞ் சோற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்'' என வருஉம் முடிநாக ராயர் பாட் டைப்பார்க்க. இவ்விருந்தோம்பும் நீர்மை இக்காலத் தமிழ்நாட்டில் அ ருகிவருதல் காணக் கண்ணீர்பெருகு கிறது. காரணம் என்னை? வறுமை யா? அன்று; அன்று. தற்கால நா கரிகக் கல்வியால் ஏற்பட்டுள்ள ஆன் மநேய—ஒருமைப்பாட்டழிவே யா கும். மீண்டும் அந்நேயம் பெற நாம் பழந்தமிழ் நாட்டைப் புதுமு றையில் காண்டல்வேண்டும். அதன் பொருட்டே தமிழ்நாட்டின் பெய ரால் நாம் அனைவரும் இங்கே கூடி யிருக்கிறோம்.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த நமது அருமைத் தமிழ் நாடெங்கே? தமிழ் நாட்டின் வழக்க ஒழுக்கமெங்கே? அ ன்பெங்கே? அரசெங்கே? வீரத்தாய் மார்களெங்கே? தமிழ்த்தாயெங்கே? தமிழர்களே! உங்கள் தொன்மை என் ன? உங்கள் பெருமை என்ன? உங்கள் ஆண்மை என்ன? உங்களுக்குள் இது போழ்து எத்துணைப்பிளவு? நந்த மிழ்த்தாய் கால்வேறு கைவேறு தலை வேறு வேறாகக் கூறுபட்டுக் கிடப்பதைக்காண உங்கட்குக் கண் ணில்லையா? மனமில்லையா? மீண்டும் நீங்கள் பண்டை நிலை எய்த வேண் டாமா? வேண்டுமேல் பழந்தமிழ் நூல்களை ஆராய்ந்து உண்மைத்தமிழ் நாட்டைக்காண எழுங்கள்! எழுங் கள்!!

இத்தமிழ் நாட்டவராகிய நாம் பலப்பல சாதியினராய்ப் பலப்பல சமயத்தவராய்ப் பிரிந்து பிளவுபட் டுக் கிடக்கின்றோமே; ஒருமைப்பா ட்டுக்கு வழியும் உண்டோ என்று சிலர் வினவலாம்; சிலர் கருதலாம். சாதி சமய வேறுபாடுகளைக் கடந்து நின்று நம்மனைவரையும் ஒருமைப் படுத்தி நிற்பது ஒன்றுளது. அதன்

மீது நாம் கவலை செலுத்துவமேல், அதுவேறுபாடுகளை வீழ்த்தி ஒருமைப்பாட்டை யுண்டுபண்ணும். அஃது எது? அதுதான் நமது அருமைத் தமிழ். தமிழ்நாட்டிற் பிறந்து தமிழ்நாட்டில் வளர்ந்து தமிழ் நாட்டைத் தாய்நாடாகக்கொண்ட எல்லாரும் பெரிதுந் தமிழே பேசுகிறார். பிறநாட்டினின்றுந் தமிழ் நாட்டிற் குடிபுகுந்தோர் சிலரே. அவருந் தமிழகத்தைத் தாயகமாகக்கொண்டிருத்தல் கண்கூடு. அச் சிலரது வழக்க ஒழுக்கங்களையும் வழிபாடு முதலியவைகளையுங் கொண்ட பலருந் தமிழரேயாவர். பழமையில் பற்றுடைய மற்றவர் தமிழரென்பதை விளக்க வேண்டுவதில்லை. இவ்வனை வரும் தமிழ் என்னும் அமிழ்தை நாடோறும் வாழ்வில் பருகுஞ் சகோதரர்களே யாவர். இவர்கள் தமக்குள் ஒருமை காட்டுந் தமிழ்மொழியிற் பற்றுக்கொண்டு உழைப்பார்களாயின் தமிழ்நாட்டில் ஒருமைப்பாடு நிகழும் என்பது திண்ணம். சமயவேற்றுமை கடைச்சங்கப் புலவர்கள் காலத்திலேயே தலைகாட்டிற்று. அன்னார் சமய வழிபாட்டில் பன்மைப்பட்டு நின்றும் தமிழ் வளர்ப்பதில் ஒருமைப்பட்டு நின்றமையான் இவ்வொருமை அப்பன்மையை விழுங்கி நாட்டை யோம்பியதை ஆராய்ந்து உண்மைகண்டு ஒருமைப்படுவோமாக. ஆதலால் நம்மை ஒருமைப்படுத்தவல்ல தமிழை வளர்க்க முயல்வோமாக.

---

## வழக்காடல்.

(முன்தொடர்ச்சி)

இலக்கணவிளக்க பரம்பரை திருவாரூர் சோமசுந்தரதேசிகர்.

முன்னொரு அமயம் நீர்வளம் நிலவள மோங்கி அமிழ்தினு மினிய செந்தமிழ் வழங்குந் தமிழகத்தில் வழக்காடல் எத்துணை எளிதில் நடந்தேறியதென்று காட்டினேன். அவ்வழக்கு எவ்வாறு நடைபெற்றதென்று பின்னுமொரு எடுத்துக் காட்டான் (உதாரணம்) விளக்குவேன்.

கற்பனை கடந்தசோதியாம் பெருவாழ்வு கருணையே யுருவமாகி, கண்டார் அதிசயிக்கும் அற்புதக்கோலம் எடுத்து அருமறைச் சிரத்தின் மேலாஞ் சிற்பர வியோமமாகுஞ் திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புடன் ஆநந்தத் தாண்டவஞ் செயப்பெற்ற பெருமைவாய்ந்த பெரும்பெற்றப்புலியூரின் (சிதம்பரத்தின்) கண்ணே வேட்கோவர் (குயவர்) குலத்திலே நீலகண்டர் என்றுஒருவர் இருந்தார். அவர் பொய்யென்பதைமனதினும் நினையாதவர். ஆனேறு வலனுயர்த்த அந்திவண்ணனிடத்து மாறாத அன்பு பூண்டவர். மனதில்நினைப்பதொன்றும் வாய் ஒன்று சொல்லக் கையொன்று செய்யும் கரவரைப் போலன்றி மனமொழி மெய்களில் ஒருப்பட்ட எண்ணமுடைய மெய்யடியார்க்கான பணி செய்யும் விருப்புடையவர். இத்தகைய மாண்பினருக்குத் தகுந்த மனைவியும் வாய்த்தனள். இருவரும்சேர்ந்துநல்லறமாம் இல்லறம் நடாத்தும் நாளில் பழவினையின் தொடர்பால் நீலகண்டர் ஒரு பரத்தை வயத்தராகி யொழுகி மீண்டார். அதனால் ஊடிய கற்பின்



மிக்காள் மனையின் வாழ்க்கைக் குற்றறவோரை ஏத்தல் முதலான பலவற்றையும் செய்தனராயினும் தன் கணவனுடன் உறைவுமாத்திரம் இசைபாராயினர். வேட்கோவர் ஊடலைத் தீர்ப்பானெண்ணி வேண்டிவ இரந்து கூறி மெய்யுற அணையும்போது 'எம்மைத் தீண்டுவீராயில் திருநீலகண்டமென'ச் சூளுரைத்தனர். அன்று முதல் இருவரும் இல்லறம் இனிது நடாத்தினராயினும் நலனுகர்ச்சி இலதாயிற்று.

இவ்வாறு சில நாள் செல்ல, வளமலி இளமை நீங்கி வடிவுறும் மூப்படைந்தது. அவர்கள் நெறிதவறுமைகண்ட அடியாரை யாட்கொள்ளுமையன் ஒரு அந்தணனாகத் தோன்றி வேட்கோவரிடம் ஒரு திருஓடு தந்து அதனை வேண்டும்போது கொடுக்கச் சொல்லி மறைந்தனர். சின்னாட்செல்ல, வைத்த ஓடும் மறைய அடியார்க் கெளியனும் சிற்றம்பலவன் தோன்றித் தான் வைத்த ஓட்டை வேண்டினர். ஓடு மறைந்த கதையறியாத வேட்கோவர். உண்மையைச் சொல்லி வேறு ஓடு தருவதாகக் கூறியும் கேளாத எம்பெருமானும் கிழவர் திருநீலகண்டனரை நோக்கி நீவிர் சொல்வதுண்மையென்று காட்ட உமது மைந்தனைப் பிடித்துக்கொண்டு நடந்ததைச் சொல்லிக் குளத்தில் மூழ்குமென்றனர். அடியவர் 'பிள்ளைப் பேறில்லாப்பெரும்பாவியேன்' என்ன, மனைவி கைபிடித்து முழுகவேண்டுதலும், வேட்கோவர் தங்களுக்குள் உண்டாய மாறுபாட்டை வெளியிட மனமிலராய்த் தான்மாத்திரம் மூழ்குவதாகச் சொன்னார். சொன்னவளவிலே வேடத்தோடு வந்த அண்ணல்.

தந்தது முன்னாரதே
 கொள்ளாமைக்குன் மனைவி
அந்தளிர்ச் செங்கைபற்றி
 அலை புனலின் மூழ்காதே,
சிந்தை வலித்திருக்கின்றாய்,
 தில்லைவாழந்தணர்கள்
வந்திருந்த பேரவையின்
 மன்னுவன் யானெனச் சென்றார்.

அந்தணர்கூடிய அவையிலே சென்று தம் வழக்கை 'இந்த வேட்கோவன் பால் யான் வைத்த பாத்திரத்தைத் தந்தொழியான்; கெடுத்தானேல் தன் மனைவி கைபற்றி வந்து மூழ்கியும் தாரான்; வலி செய்கின்றான்' என்றெடுத் துரைத்தார். அவையோர் முன்னரே, நற்குண நற்செய்கையும் நல்லொழுக்கமும் பூண்டவனென்று அறிந்த அவ்வேட்கோவனை நோக்கி நடந்ததைக் சொல்லும்படிவேண்ட அவர் 'தான் இப்பெரியாரது திரு ஓடு பெற்றதுண்டு, காந்தவித மறியேன்' என்றார். அவ்வாறாயின் நீவிர் பெரியார் கேட்டபடி மனைவி கைபற்றி முழுகித் தரல் வழக்கே யென்று தீர்ப்பிட்டனர். அதனையேற்று வேட்கோவர் சென்று தமது பிழையை உலகிற்குக் கூறி முழுகி பெயுந்து இளமை பெற்றுச்சிவகதியடைந்தார்.

ஆகவே இவ்வழக்கு எவ்வளவு இலேசினும் எத்துணை விரைவினும் நடந்த தென்பதைக் கவனிக்கவேண்டுகிறேன். அவையினர் கூப்பிட்டுவிடாமலே வழக்குடையான் வலிசெய்தானைப் பற்றிச்சென்றுமுறையிட்டுத் தீர்ப்புப்பெற்றான். அந்நாடும் இத்தமிழ் நாடேயாம்.

---

# பத்திரிகை ஆராய்ச்சி.

புதிய உலகமாகிய அமெரிக்காவின் புத்தகஆலயங்களைக்குறித்து,சிலகுறிப்புக்கள் 'தேச ஊழிய'னில்காணப்படுகின்றன. அவற்றுட் சில வருமாறு:—

அமெரிக்கா கண்டத்தின் ஒரு பெரிய புத்தக ஆலயத்தின் மீது, அனைவரும் எளிதில் கண்டு ஆனந்திக்குமாறு ஓரழகிய பொன்னுரை பளபளவென்று மின்னும் தங்கம் பதித்த பெரிய எழுத்துக்களால் வரையப் பெற்றுள்ளது. அதாவது:— "உலகம் மேன்மைவாய்ந்த எண்ணங்களாலும் நோக்கங்களாலுமே நிலையிடப்பெறுகின்றது; செல்வப் பெருக்கினாலன்று" என்பதாம். புத்தகாலயத்தில் விசாலமான அறைகளுண்டு; சுவர்கள் பளிங்குக் கற்களால் அமைந்துள்ளன. சுகமாக அமர்ந்து படிப்பதற்குரிய நாற்காலிகள், மேசைகள் முதலான ஆதனங்கள், ஆதனங்களின்மீது இனிமையாக ஒளிவீசும் காந்த விளக்குகள், புத்தகாலயத்தை அலங்கரிக்கின்றன. அறிவுத் தெய்வத்தின் திருமுக ஒளியிலே, கவலைமறந்து துயரம் துறந்து நூலாராய்ச்சியிலே பதிந்த உள்ளத்தோடு மக்கள் இடையிடையே அமர்ந்து நூல் நிலையமெங்கணும் அழகு செய்யும் காட்சி, கண்கவர் காட்சியே யாகும். சுவரைச் சுற்றிலும் உன்னத அழகிய அலமாரிகள்; அலமாரிகளில் அழகுபெற அடுக்கப் பெற்றிருக்கும் அருமையான நூல்கள்; எண்ணிலா நிகண்டுகள், விஷய சூசிகைகள் சரித நூல்கள், அற நூல்கள், சன்மார்க்க சமய நூல்கள், நாடகங்கள், காவியங்கள், கதைக்கொத்துகள்—எவைதானில்லை! புத்தக ஆலயத்தின் ஓரம்சம் வாசகசாலை. அங்கே பத்திரிகைகளின் குவியல்கள் அடுக்கடுக்காயிருக்கின்றன: சாஸ்திர ஆராய்ச்சி சாலை, சிற்பசாலை, சங்கீதசாலை—இவைகளும் புத்தக ஆலயத்தின் முக்கிய அம்சங்களாகக் கருதப்பெறுகின்றன. குருடர்களுக்கும் வேறு நூல் நிலையங்களுண்டு. கட்புலனிழந்தவர்மேல்தூக்கிநிற்கும்எழுத்துக்களோடுபதிப்பிக்கப்பெற்றபுத்தகங்களை விரல்களால் தடவிப்படிக்கிறார்கள். கல்விப்பயிற்சி பெறுவதோடு, கேள்வியாலும் இன்புறும்வண்ணம் கட்டுரைகளும் சங்கீதக்கச்சேரிகளும் நிகழ்த்தப்பெறுகின்றன. புத்தக ஆலயத்தினின்றும் புத்தகம் எடுப்போர், குறிப்பிட்ட காலத்திற்குமேல் வைத்துக்கொண்டால், நாளொன்றுக்கு ஒரு அணா வீதம் வரிசெலுத்துவார்கள். இவ்வரி வசூலினால் கிடைக்கும் வருடவருமானம் நியூயார்க் நகரில்மாத்திரம் சுமார் ரூபாய் ௭௫,000 என்றால், புத்தகம் படிப்பதில் அவ்வூர் மக்களுக்கு எவ்வளவு உற்சாகம் இருக்கிறது என்பதை யாரால் அளவிட்டுரைத்தல் கூடும்.

* * *

'காந்தி-இயக்க'த்தின் உட்பொருளைக் குறித்து, சாந்தி நிகேதனம் திருவாளர் ஜி. ராமசந்திரன், 'கரெண்ட் தாட்' ('Current Thought') என்னும் மாசிகையில் ஒரு கட்டுரை வரைந்துள்ளார். அதன் சாரம் வருமாறு:—

'காந்திதரிசன'த்தின் சிலஅம்சங்களை நாம் ஒப்புக் கொள்ளாமலிருக்கலாம். ஆனால் காந்தியைப் புறக்கணித்தல் என்பது முடியாத காரியம். காந்தி உண்மையாகவே ஒரு மகாத்மா. அவர்தம் அருளுரை அறிவினுக்காக மாத்திரம் எழுந்ததன்று; உணர்வினை மாத்திரம் நோக்கி எழுந்ததுமன்று. நமது வாழ்க்கைநெறி எங்கே எங்கே செல்லுமாயினும், அங்கும் காந்தியின் குரல் எட்டுகின்றது. சிற்பச் செல்வத்திலே செருக்கி விளையாடும் நுண்கலையாளர்க்கும், நூல் நிலையங்களிலே ஆராய்ச்சிகள்செய்துவரும் அருங்கலை விஞ்ஞர்க்கும், சுததசோம்பராய்ப் பட்டுமெத்தைகளில் படுத்துப் புரளும் பெருஞ்செல்வர்க்கும், காந்தியின்குரல்எட்டுகின்றது. ஏன்? பிறப்புரிமை யிழந்த வாயிலா மக்களது துயரங்களெல்லாம் மகாத்மாவின் குரலிலே வடிவம் பெற்று வருகின்றன. தியாகமாகிய பலிபீடத்தில் தம்மையே வேள்விசெய்த பெருமக்களில் மகாத்மாவே இன்று தலைமை பெற்ற நிமல மூர்த்தியாக ஒளிர்கின்றார். மகாத்மா கேவலம் ஓர் அரசியல்வாதி யல்லர். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் தொண்டரே அவர். இவரது கருணையே இவரை அரசியல் இயக்கத்தில் செலுத்தியது. "நான் சமாதானத்தை விரும்புகிறேன். ஆனால் நான் ஆசைப்படும் சமாதானம் சவக்குழியிலுள்ள 'சமாதானம்' அன்று; கல்லில் காணப்பெறும் சமாதானம் அன்று"— என மகாத்மா கூறுகின்றார். அன்னியர்கள்நாட்டிலேபுகுந்து நகரமாந்தரின்உதவிபெற்று, ஏழு லட்சம் கிராமங்களிலும் உள்ள ஏழை இந்தியாவை நசுக்கிவருகின்றாரென்பதை மகாத்மா கண்டு கொண்டார். ஏழை இந்தியாவே உண்மை இந்தியா. ஆதலால் ஏழைகளுக்குஅஹிம்ஸா தர்மநெறியில்பணிபுரிவதையே அவர்நோன்பாகக்கொண்டார். இத்தகையநோன்பே 'சத்தியாக்கிரகம்' எனப்படுவது. ௧௯௧௯-முதல் ௧௯௨௨-ம் வருஷம் வரை வீசிய அரசியல்-பெரும்புயலிலும், ஏழைமக்களுக்குப் பணியாற்றுவதென்னும் கொள்கையை மகாத்மா மறந்ததே யில்லை. இப்பொழுது ஏற்பட்டுள்ள "நூற்பவர் சங்க" வாயிலாகவும் மகாத்மா தமது வாழ்க்கையின் பெருநோக்கத்தினையே நிறைவேற்ற முயல்கின்றார்.

* * *

ஆங்கில ஆசிரியரான மிஸ்டர் மார்வின், சென்னைச் சர்வ கலாசாலை அதிகாரிகளது வேண்டுகோளுக்கு இணங்கி, கலைக்கழக மண்டபத்தில் (Senate), 'நாகரிக ஒற்றுமை' என்னும் பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அதன் முக்கிய அம்சங்கள் வருமாறு:—

உலக சிருஷ்டியில் கிழக்கு—மேற்கு நாட்டினர் என்ற வேற்றுமை யில்லை. நூலாராய்ச்சியே நாகரிகத்திற்கு நற்றுணையாகும். மேலை நாட்டில் கிரேக்கரே (யவனர்) முதல் முதல் சாத்திர ஆராய்ச்சி செய்யத்தொடங்கினர். இவர்கள் கீழ் நாட்டிலிருந்து தான் நூலாராய்ச்சியைக் கற்றுக் கொண்டார். தாம் கற்றதை மேன்மேலும் வளர்க்கத்தொடங்கினர். மத விஷயமாகவும் மேலை நாட்டார் கீழ் நாட்டிலிருந்துதான் ஒளிபெற்றார். கீழ்நாட்டார் தத்துவம் வைத்தியம் முதலாயினவும் மேற்கே சென்று பரவலாயின. ௧௫-வது நூற்றாண்டில் புத்தகங்கள் அச்சிடப்பெற்றன. அப்பால் மேல்நாடு கீழ்நாடு என்றவேற்றுமை வெளித்தோற்றத்தில் ஏற்படலாயிற்று. கீழ் நாட்டாரது ஆதிக்கொள்கைகளே மேலைநாட்டாரது ஆராய்ச்சிவாயிலாகப் புதிய உருவும் திருவும் வளமும் பெற்று வளர்ந்தோங்கின. சாத்திரமென்பது உலகத்திற்கே பொதுவானது; ஒரு திசையினர்க்கு ஏகபோக உரிமைச்செல்வமாவதன்று. உலக நன்மைக்குரிய அறிவுச் செல்வம் எவரால் ஈட்டப் பெறினும் அது அனைவர்க்கும் பொது உடைமையே யாகும். மனித சிருஷ்டியைக் கவனிப்பினும், மக்கட் சமூக அமைப்பு உலகமெங்கணும் வேற்றுமையில்லாமலே தோன்றி வளர்ச்சியுற்றிருப்பது நன்கு விளங்கும். கிரேக்க முனிவர் பௌத்த முனிவர் ஆதிய இருடிகளும் ஆதிகாலத்தில் ஒரே மாதிரியாகத்தான் இருந்தனர். நகரத்தில் ஒருகட்டுப்பாடுபெற்று ஒழுங்காக வாழ்வதே நாகரிகமாகும். அங்ஙனம் வாழ்கையில் ஒவ்வொருவரும் ஒல்லும்வகை, பொதுநலம் கருதித் தன்னலத்தைவிட்டுக் கொடுத்தல் வேண்டும். இது நாகரிக வாழ்வின் சாராம்சம். இத்தகைய நா

சரிதம், கிழக்கு மேற்கு—இருதிசைக ளுக்கும் ஒருங்கே உரியதாகும். ஆகை யால் மக்கட்குலம் இயற்கை நெறியில் ஒன்றுபட்டு வாழ்வதற்கரிய நிர்மாண நோக்கத்தோடு 'சரிதம்' எழுதுவதே தற்கால ஆராய்ச்சியாளர் கடன்.

*　　　*　　　*

திருவனந்தபுரம் 'ஆர்ட்ஸ்' கலா சாலையைச் சார்ந்த தமிழ்ச் சங்கத் தின் முதற் கூட்டத்தில் சரித நிபு ணரான திருவாளர் கே. வீ. ரங்க சாமி ஐயங்கார் "தமிழின்பெருமை" யைக் குறித்து ஓரருமையான சொ ற்பொழிவு செய்தார். அதன் முக் கிய அம்சம் வருமாறு:—

சர்நாடக பாஷையில் ௯000-வருஷங்க ளுக்கு முன் செய்யப்பட்ட பழைய நூல்கள் இல்லை; தெலுங்கில் அ00-வரு ஷங்களுக்கு முற்பட்டவையில்லை, சே ரநாடு பண்டுள்ள முத்தமிழ் நாடுகளில் முதன்மை பெற்றிருந்தது என்பதை யாவரும் மறுக்கமாட்டார்கள். இங்கு பழைய நூல்களும், சிலை, செப்பேடு முதலியவைகளிலுள்ள பழைய சாஸ னங்களும் தமிழ்மொழியி லுள்ளவை யே. நாட்டுக் கோட்டைச் செட்டியார் ஒருவர் திருவஞ்சைக் களத்தில் புதுப்பி க்கப்படவேண்டிய கோயில்கள்முதலிய வை எவையேனும் இருக்கின்றனவோ என்று என்னிடம் வினவினர். திருவஞ் சைக்களம் இப்பொழுது கடலுக்குள் ளாகியிருக்கிறது. வைஷ்ணவ ஆழ்வார் கள் பன்னிருவருள் மிகவும் சிறந்த நம் மாழ்வாரால் பாடப்பெற்ற வைஷ்ணவ திவ்ய ஸ்தலங்களில் கூட சேர நாட்டி லுள்ளவை. இப்பொழுது கிறிஸ்தவர் நிறைந்துள்ள திருவல்லா என்பது மு ன்பு திருவல்லவாழ் என்னும் திவ்ய ஸ்தலமாயிருந்தது. கேரளீன் கீழ் என் னும் பெயருடன் திருவனந்தபுரத்து க்கு அடுத்துள்ள ஊர்க்கோயில் பெரு மாளுக்குத் திருவல்லவாழப்பன் என் னும் திருநாமம் வழங்கிவருகிறது. அ தற்குக் காரணம் சிறப்புற்ற ஒரு கோ யிலின் தெய்வ சக்தியை வேறு கோ வில்களிலும் பிரதிஷ்டை செய்து வந்த வழக்கம் தான்.

*　　　*　　　*

சேர நாட்டில் சைவம், வைஷ்ண வம், ஜைனம் ஆகிய மும்மதக் கோ யில்களும் தழைத்தோங்கின. இந் நாட்டின் பழைய நடவடிக்கைகள் எல்லாம் தமிழிலே நடந்தன. பர் மாதேசத்துப் பகான் என்னும் ஊ ரில் ஒரு பழங்கட்டிடத்தில் தமிழ்ச் சிலா லிகிதம் ஒன்று கண்டு பிடிக்கப் பட்டது வருமாறு:—

கொடுங் கோளூரிலிருந்து வைஷ்ண வநம்பி யொருவர் பல பேருடன் பய ணமாய் பர்மாவுக்குச் சென்று, அங்கே வைணவ மண்டபம் ஒன்றை ஏற்ப டுத்தினர். ௬00 ஆண்டுகளுக்கு முன் கொடுங்கோளூரில் வழங்கியபாஷை தமி ழ். ம:மம்போட்ட—அதாவது திருமங்கா ப்பணிந்த அந்த நம்பி பர்மாவில் செய் வித்த மண்டபத்தில் குலசேகராழ்வார் என்னும் சேர அரசர் இயற்றிய முகுந் தமாலை என்னும் நூலிலிருந்து இரண்டு சுலோகங்கள் சிலாலேகனமாகச் செதுக் கப்பட்டிருக்கின்றன. அந்த லேகநம் வட்டெழுத்திலுள்ளது. சோழர், வட சோழர் என்றும், சாதாரண சோழர் என்றும், இருவகைப்பட்டவரா யிருந்தார்கள். அவருள் வடசோழர் சா ளுக்கிய ஸம்பந்த முள்ளவர். சோழர் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கினர்கள். ராஜ ராஜ சோழன் சாளுக்கிய வம்சத் தில் சம்பந்தம் பெற்றான். முதலாம் குலோத்துங்கன் ௪0-வருஷகாலம் வே ங்கடநாட்டில் அரசாண்டபின், ௫0 ஆம் வயதில் தௌஹித்ர பாத்தியதையால் சோழ நாட்டுக்கு அரசனும் ௫0-வருஷ காலம் மஹா சக்கரவர்த்தியாய் விளங்கி னன். அவன் ஆட்சி வங்காளம் வரை பரவிற்று. அவன் தன் மந்திரத் தலை வனுன கருணாகரத் தொண்டைமானைத் தண்டத் தலைவனாகச் செலுத்திக் கலி ங்கராஜனை வென்றான். இது ஜயங் கொண்டான் என்னும் சிறந்தபுலவரால் "கலிங்கத்துப் பரணி" என்னும் நூலி ல் சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. சில சா ஸனத்திலுள்ள அவன் மெய்க் கீர்த்தி யும்இதற்கோர் சாட்சியாகும். அவன் காலம் கி.பி. ௧௧-ம்நூற்றுண்டின் இறு திக்காலம், அவனே கங்கை கொண்ட சோழன் என்னும் சிறப்புப் பெயர் பெ ற்று விளங்கினன், சென்னையிலும் காஞ்சியிலும் "கங்கை கொண்டான்" மண்டபம் ஒவ்வொன்றிருக்கிறது. அது ஸாதாரண ஜனங்களின் பேச்சில் 'கங் கண்ண மண்டபம்' என்று மருவி வழ ங்கிவருகிறது. கங்கை கொண்டவனு கிய இக்குலோத்துங்கன் கொல்லம் மு தல் கல்கத்தாவரையுள்ள நாடுகளைத்தன் கீழாக்கி ஆண்டு வந்தான். நெல்லூர் ஜில்லாவிலுள்ள சிலா சாஸனங்களில் மூன்றிலொரு பங்கு தமிழிலுள்ளவை. நரஸிம்மாசாரியர்என்னும் மைசூர் ராஜா ங்க சிலா சாஸன பரிசோதகர், சிலா லிகிதங்களிற் பல தமிழ் மொழியிலே யே உள்ளவை என்கிறார். சேர நாட் டுப் பழைய வழக்கங்கள் யாவும் தமிழ ருடையவைகளே. சுயராஜ்ய இயக்கத் தால் தமிழ்நாட்டில் தமிழுக்கு இப்பொ ழுது சிறிது அபிவிருத்தியும் ஜனபிமா னமும் ஏற்படத் தொடங்கியிருக்கிறது. எல்லாரும் அவரவர் தாய்மொழியில் தங் கருத்துக்களைத் தெளிவாய் வெளி யிடக் கற்கவேண்டும்; மற்றமொழிகளி லிருந்து சொற்களைக் கடன் வாங்குவ தற்குப் பின்னிடக்கூடாது. வட்டிக்கு வாங்கும் பணக் கடனைப் போலாகாமல் இக்கடன் நம் சொல்வன்மைச் செல் வத்தை அதிகமாக்கும். இவ்விஷயத் தில் ஸ்ரீமான் பவானந்தம் பிள்ளையவர் கள் பிரசுரம் செய்துள்ள அகராதி புக ழத் தக்கது. நம் தாயினிடத்துப் போ லவே, நம் தாய்மொழியினிடத்தும் நாம் உள்ளன்பு வைக்கவேண்டும். எவ்வளவு முயற்சி செய்தாலும், தாய்மொழியை முற்றிலும் மறக்க ஒருவனாலும் முடி யாது. நாம் அதை நன்றாகப் பயிற்சி செய்ய வேண்டும்.



## சதங்கை யொலி.

### ஆராய்ச்சியும் துறவும்.

திருவள்ளுவர் "நீத்தார் பெருமை" என் னும் அதிகாரத்தில், அருள் ஒழுக்கத்திலே நிலைபெற்று நின்று தன்னலம் துறந்த தியாக மூர்த்திகளையே துறவிகளென்று கருதுகின்றார். இவர்களே செயற்கரிய சாகசச் செயல் செய்து பெருவாழ்வு வா ழும் பெருமக்கள் என்பது தெய்வப்புலவர் திருவுளம். இத்தகைய உண்மைத் துறவிக ளை உடையால், வேடத்தால், வெறும்வாய்ச் சொல் வீரத்தால் அறிதலியலாது. தமக் கென வாழாது பிறர்க்கே தம்மை உரிமை யாக்கி வாழ்வோர் துறவு, அவர்தம் அரும் பெருஞ் செயல்களினலன்றோ இனிதறி யப்படும். இத்தகைய துறவிகள் வாழ்க் கையின் பலவேறு துறைகளிலும் இறங்கி உழைப்பர். மேற்புல விஞ்ஞான ஆராய்ச் சித் துறையிலும் இத்தகைய துறவிகளைக் காண்கின்றோம். புத்தப்புதிய ஆராய்ச் சித்துறைகளிலே அறிவுவெள்ளம் பெருகு மாறு தொண்டாற்றுவோரில் சிலர், உண் மை காண்பதற்காகத் தங்கள் கண், காது முதலிய அவயவங்களையும் இழந்திருக்கி றார்கள். இன்னும், அறிவுத் தாகத்தால் ஆவி துறந்தோருமுண்டு. இத்தகைய தியாக புருஷர்களான உண்மைத் துறவிகளில் ஒருவரான எமிலிபெர்கானி என்பார், ஆராய்ச்சியின் பயனாக முதலில் ஒரு கை யை இழந்தார்; பின்னர், மற்றக் கையி லும் மூன்று விரல்களை இழந்தார். அஞ் சா நெஞ்சு கொண்டு ஆராய்ச்சியைத் தொ டர்ந்து செய்தார். முடிவில் ஆராய்ச்சியா கிய பீடத்திலே தம் இன்னுயிரையும் பலி

கொடுத்தார். இவர் துறவியல்லரோ? பால்டிமோர் நகரிலுள்ள ஒரு வைத்தியசாலையில் மற்றொரு துறவி இருக்கிறார். இவர் பெயர் ஹென்ரிபெயிட்ஜர் என்பது. இவர் "எக்ஸ்ரே" ஆராய்ச்சியின் பயனாக, எடு முறைஇரணசிகிச்சைக்குட்பட்டார். வானசாத்திரியான எட்வின்பிராண்ட் என்பார், நட்சத்திரங்களைப் பார்த்துப்பார்த்து கண்களில் ஒன்று முழுதும் குருடாகிவிட்டது. மற்றொன்று பொட்டையாகும் தறுவாயிலிருக்கிறது. ஆயினும், ஆராய்ச்சி இன்னும் தொடர்ந்து நடைபெறுகின்றது. அருள் வசப்பட்டுத் தன் தசையை அரிந்துகொடுத்த சிபிச்சக்கரவர்த்திக்கும், தனது முதுகெலும்பையும் பிறர் பொருட்டுதவிய ததீசி முனிவனுக்கும், மேலே குறித்த ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் தினைத் துணையும் குறைந்தவராவரோ? நமது துறவிகளின் பெருமை இறந்தார் பெருமையாக மறைந்தொழிய, மேலை நாட்டு மேதாவிகளின தியாகம் இன்று நம் கண்முன் களிநடம் புரிகின்றது. ஐம்புலன்களின் கூறுபாடுகளை அறிந்து ஆராய்ச்சி செய்யும் தியாக புருஷர்களுக்கே உலகம் வசப்படுமென்றும், இவர்களதுபெருமையே "இருள்தருமா ஞால"த்தில் ஒளி செய்து நிற்பதென்றும் தமிழர் பொதுமறை பறைசாற்றுகின்றது. தமிழகத்திலும் இத்தகைய தியாக மூர்த்திகள் தோன்றி, பண்டை நாளில் நமது நாட்டைத் "தமிழ் கூறும் நல்லுலக" மாகத் திகழ்ந்தோங்கச் செய்தனர். அன்னையே! அவர்கள் மீண்டும் வருவரோ?

---

## மதிப்புரை.

---

### திருப்புகழ் விருத்தியுரை.

"திருப்புகழ் படிக்குமவர் சிந்தை வலுவாலே—ஒருத்தரை மதிப்பதிலை உன்றனருளாலே" என்பது திருப்புகழை ஓதுவதாலுண்டாகும் பெரும்பயனைக் குறிக்கின்றது. நம் தமிழ் நாட்டில் 'திருப்புகழ்' பாடல்களில் சிலவற்றையேனும் ஓதியுணராதாரில்லை. இதுவே இன்று இசைத்தமிழின் திலகமாக ஒளிர்கின்றது. இதன் ஆசிரியரான அருணகிரிநாதர் தமிழ்மொழியில் பெரும் புலமையோடு வடமொழிப் புலமையும் வாய்ந்தவராவர். சந்தத்தில் ஒரு சிறிதும் வழுவாத ஆனந்தமான தமிழ்ப்பாடல்களைப் பாடுவதில் இவரே இணையற்றவராவர். இவர்தம் நாவிலே செந்தமிழ்த் தெய்வம் கைகளிலும் கால்களிலும் பூண்ட தளைகளோடு களிநடம் புரிகின்றுள். அருணகிரி நாதாருளிய திருப்புகழ் போன்ற நூல்களுக்கு நல்ல பதிப்புகள் வெளியிடப்பெறுவதும் ஓர் ஆனந்தமே யாகும். இத்தகைய ஆவல் 'அல்லயன்ஸ்' கம்பெனியாருக்கு ஏற்பட்டது குறித்து நாம் மகிழ்வெய்துகின்றோம். இக்கம்பெனியார் திருப்புகழ் விருத்தியுரை முதல் தொகுதியை (ஆறுபடை வீடுகள் கொண்டது) டிம்மி யளவில் அறுபத்து நாலுபக்கங்கள் கொண்ட பன்னிரண்டு சஞ்சிகைகளாக வெளியிடமுன் வந்துள்ளார். 'பெதர் வெயிட்' எனும் விலையுயர்ந்த காகிதத்தில் ஒரு பதிப்பும் சாதாரண கனமான காகிதத்தில் ஒருபதிப்பும் ஆக இரண்டு பதிப்புகள் வெளியிடப் பெறுகின்றன. உரையாசிரியர் திருவாளர் பி. எஸ். சுப்பிரமணியம் எம். ஏ. எழுதிய தமிழுரை தமிழைப் புதிதாகக் கற்கும் மாணவருக்கும் திருப்புகழ் படிப்பதில் துணைசெய்வதாகும். பொதுவாகத் தமிழ் மக்களும், சிறப்பாக முருகக்கடவுளது அடியார்களும் திருப்புகழுக்கு விருத்தியுரைகாணும் நன்முயற்சியினை ஆதரிப்பார்களென்று நம்புகிறோம். வருஷ சந்தா உயர்ந்த காகிதப் பதிப்புக்கு ரூ. ௬. சாதாரண கிளேஸ் காகிதப்பதிப்புக்கு ரூ. ௩-௧௨. விலாசம்:— 'அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

---

உ

சிவமயம்.

[library stamp, illegible]

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.

சதங்கை ௪. | காரைக்குடி, குரோதனஹு மார்கழிமீ | மணி ௬.

## வணக்கம்.

---

திருப்புகழ்.

குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனஅ ருரையுதவு மயிலா எனத்தினமு முருகாதே

குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலன வரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்க ளுடைமைமன முடனே பறிப்பவர்க ளன்வோரும்

தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீ திநிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண் வலையாலே

சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமா தரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்தஅருள் தருவாயே!

சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள சணதுள் படுத்திவிடு செருமீதே

தவனமொடு மலைகள்நட மிடவீ ரபத்திரர்க
ளதிரநின மொடுகுருதி குடிகா ளிகொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள் பலகோடி

திமிதமிட நரிகொடிகள் கழுகா டாத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரஅமரர் பதிவாழ் வுபெற்றுலவு முருகோனே!

திருமருவு புயனயனு டயிரா வதக்குரிசி
லடிபரவு பழநிமலை கதிர்கா மமுற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவே ரகத்திலுறை பெருமாளே!

—அருணகிரிநாதர்.

# போகபூமி.

சுவாமி விபுலாநந்தர் எழுதியது.

பொன்பெற்ற நம்பி யென்னும் அரசிளங்குமரன் தன்பால் நட்புரிமை பூண்ட இளமாணியார் அறிவுடையரனார் என்னும் தமிழ்ப் புலவரைப் பார்த்துப் பின்வருமாறு கூறுகிறான்.

“ஐய! அருந்தமிழ்ப்புலவ! சுவர்க்கம் என்றாலென்ன? நரகம் என்றாலென்ன? இவற்றின் வேறாக நூல்களாலுணர்த்தப்படுகிற மோக்ஷம் எவ்வகையது? சுவர்க்க நரகங்களிலே மாவிடால் அநுபவிக்கற் பாலனவாகிய இன்பத் துன்பங்கள் எந்நீர்மைய? உலக வாழ்க்கையின் நோக்கம் யாது? இல்வாழ்க்கையிலே இன்பந்தரு நீர்மையவாகிய போக நுகர்ச்சிகள் பலவாக விருப்ப, அவற்றை யெல்லாந் துறந்து, ‘காவியுடுத்துந் தாழ்சடை வைத்துங் காடுகள் சுற்றி’த்திரிகின்ற தவயோகிகள் காதலிக்கின்ற பொருள்தான் என்னை? மேலும் இவ்வுலகத்தில் கல்வி செல்வம் என்னுமிவற்றை நிரம்பப்பெற்ற மானிடரே மதிப்பினையடைகின்றனர்; அஃதங்ஙனமாக இவற்றைத்துறந்த ஏழைமை, வாழ்க்கையால் வருதற்குரியபயன்தான் என்னை? பரதக்கண்டம் துறவு நிலையம் எனக்கூறிய முன்னோருடைய மொழியன்றோ, நமது நாட்டினது வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று? ஜப்பான் அமெரிக்கா முதலியநாடுகள் பொருளின்பத்தைக்காதலித்துமுயற்சித்தமையினாற் சீரையுஞ் செல்வத்தையு மடைந்தன. ‘செத்தபின்புசிவலோகம் வைகுந்தம்’ என்று நமக்குப் போதித்து நமது இம்மைப் பொருளை யெல்லாங் கொள்ளை கொள்ளுகிற பார்ப்பாரும், புரோகிதரும், சாமியார்களும் மலிந்த நமது நாடு வறுமையினாலும் பஞ்சத்தினாலும் வருந்துகின்றதே. மறுமையென்பதொன்றுண்டா? என்னுள்ளத்திலெழுந்த இவ் வையப்பாடுகளை அன்புடையீராகிய தேவரீர் நீக்கியருளவேண்டும்.”

இம்மொழிகளைக் கேட்ட அறிவுடையரனார் சிறிது நேரஞ் சிந்தித்துப் பின்னர்ப் புன்னகை புரிந்து அரசிளங்குமரனை நோக்கிச்சொல்லுவார்: “நண்ப! ஆன்றோரா னெடுத்துக் கூறப்பட்ட உறுதிப் பொருளை யுணர்வதற்கு நின்னுள்ளம் விழைகின்றது. அறிதற்கரியவாகிய சுவர்க்க நரகங்களின் பான்மையை ஆராய்ந்துணர்வதன்முன் அறிதற்கெளியவாகிய செல்வம் வறுமை யென்றின்னவற்றினியல்பினை ஆராய்ந்துணர்வது நன்றாகுமன்றோ? செல்வம் என்றால் என்ன? வறுமையென்றாலென்ன? இவ்வினாக்களுக்கு நினது புத்திக் கெட்டிய வரையில் ஆராய்ந்து விடை கூறுவாயாக.

பொன்பெற்றநம்பி:—ஐய! இவ்வினாக்களுக்கு அறிவில்லாத சாதாரண மக்களும் விடையளிப்பார்களே. அரசகுமாரனாகிய யான் படைத்த திருவே செல்வமெனப்படுவது; அரமனைப் புரோகிதனது புதல்வனும், தேவரீருடைய சிஷ்யனும் காற்காசுக்கு வழியற்றவனுமாகிய அறிவானந்தனது நிலைமையே வறுமையெனப்படுவது.

அறிவுடையரனார்:—அரசிளங்கும! உண்மை காண வேண்டுமாயின் யாம் எப்பொருளையுங் காய்தலுவத்தலகற்றி ஆராய்ந்துணர வேண்டும். உறுதிப் பொருளை யுணர்வதற்கு நீ விரும்புகின்றாய்; ஆதலால் நினது உள்ளக் கிடக்கையை மறையாமலெனக்குத் தெரிவிக்க வேண்டும். அறிவானந்தன் மீது நினக்கு வெறுப்புண்டாயிருக்கிறது. அஃது எக்காரணத்தினாலாயிற்று என்று எனக்குத் தெரியச் சொல்வாயாக. வறியோர் பலருளராகப் பலவாற்றானுஞ் சிறப்புடையோனாகிய அறிவானந்தனை வறியோன் என்றனையே.

பொன்பெற்றநம்பி:— புரோகிதன் பிள்ளையாகிய அந்தப்பயலுக்கு நிறைந்த கருவம் ஏற்பட்டிருக்கிறது. அரசகுமாரனாகிய என்னை அவன் ஒருபோதும் மதிப்பதில்லை. சிறிதுநாட்களுக்குமுன் பிறநாட்டு வித்துவானொருவனோடு அவன் தர்க்கம்பண்ணி வென்ற தினத்தில் அவனுக்கு நடந்த உபசாரத்துக்குத்தான் அளவென்ன? அஃதன்றியும் நமது மந்திரியாகிய பாண்டரங்கண்ணனது புதல்வியை என்னுள்ளம் காதலிக்கின்றது. கல்வி கேள்விகளில் நிறைந்த அம்மடவால் என்னையும் என் செல்வத்தையும் இகழ்ந் தொதுக்கிவிட்டு ஏழையாகிய அறிவானந்தனைக் காதலிக்கிறாள். அவனோ, அம் மெல்லி நல்லாளுடைய பேரழகைச் சிறிதேனும் பொருட்படுத்தாது தேவரீருடைய போதனைக்குட்பட்டுத் துறவுபூணவேண்டுமென்று நிற்கின்றான். வலிய வருகிற சீதேவியைக் காலாலுதைத்துத்தள்ளுகிற அந்தப்பயலை வறியவனென்னாது, வேறு என்ன பெயரிட்டு வழங்குவது?

அறிவுடையரனார்:—நண்ப! வெறுப்பினால் வெகுளி மீதூர நின்னுள்ளம்



நிலைகலங்கி அலைவுற்றிருக்கிறது. ஆயினும் ஒருவகையாக ஆராய்ந்து பார்ப்போம். நிரம்பிய பொன்னையுடைய மக்களே செல்வர் என்பது நினது உள்ளக் கருத்தா?

பொன்பெற்றநம்பி:—அதுவே யெனது உள்ளக்கருத்து.

அறிவுடையரனார் :—அதோ விருக்கும் இருப்புப் பேழையில் நின் தந்தையார் எனக்குத் தந்த பொற்காசுகள் நிரம்பவிருக்கின்றன. ஆதலால் அப்பேழையை நாம் செல்வனென்போமா?

பொன்பெற்றநம்பி.—பேழை செல்வனாகாது.

அறிவுடையரனார்:— அங்ஙனமாயின், பொன்னும் பொருளும் தம்மளவில் உயர்வுடையனவா? அன்றேல் தாங் கொடுக்கின்ற பயனை நோக்குங்கால் உயர்வுடையனவா?

பொன்பெற்றநம்பி:—பயனை நோக்குங்காற்றான் உயர்வுடையன; அங்ஙனமில்லையாயின் பொன்வைத்த பேழையும் செல்வனெனப்படுமன்றோ?

அறிவுடையரனார்:—நல்லது, நண்ப! பொன்னும் பொருளும் தம்மளவில் உயர்வுடையனவல்ல. தாம்கொடுக்கின்ற பயனை நோக்குங்கால் உயர்வுடையன வென்றனை; அவைதரும் பயன்தான் என்னை?

பொன்பெற்ற நம்பி:—இன்பத்தையும் பெருமிதத்தையும் தருகின்றன.

அறிவுடையரனார்:—பொருளால் அடையற்பாலனவாகிய இன்பத்தையும் பெருமிதத்தையும் அடைந்தனுபவிப்பார் செல்வரெனப்படுவா ரென்பது நினது உள்ளக்கருத்தென்றெண்ணுகிறேன்.

போன்பெற்ற நம்பி:—ஆம், அது வே எனது உள்ளக்கருத்து.

அறிவுடையரனர்:—அப்படியாயின், செல்வம் என்றால் என்ன?

போன்பெற்ற நம்பி:— இன்பத்தையும் பெருமிதத்தையுந் தரும் ஆற்றலுடையதெதுவோ, அதுவே செல்வமெனப்படுவது.

அறிவுடையரனர்:—நன்கு கூறினை. பொருட் செல்வமொன்றுதானு, இவ்வுலகத்தில் பெருமிதத்தையும் இன்பத்தையுந்தருவது?

போன்பெற்றநம்பி:— கல்வியுடையாரும் செல்வர்பாற் சென்று வழிபட்டு நிற்கின்றாராதலினால், செல்வப்பொருளே மேலாகிய பெருமிதத்தையும் இன்பத்தையும் தரவல்லது என்று எனக்குப் புலப்படுகின்றது.

அறிவுடையரனர்:—நல்லது நண்ப! நீ படைத்திருக்கின்ற செல்வம் நினக்கு எங்ஙீர்மையவாகிய இன்பத்தையும் பெருமிதத்தையும் தருகின்றதெனத் தொகுத்துக் கூறுவாயாக.

போன்பெற்ற நம்பி:—எனது முன்னோர்சட்டிவைத்த பெருநிதியம் எனக்கு இலவசமாகக் கிடைத்திருக்கின்றது. அதன் வழியாகப் பற்பல புலனுகர்ச்சிகளை யான் சம்பாதித்துக் கொள்ளுகின்றேன். அழகு மிகுத்த அரிவையர் பலர் என் அந்தப் புரத்திலிருக்கிறார்கள்; காமவெறி யென்னும் உன்மத்தம் பிடித்த மதகளிறனேபோனுகிய யான் இளம்பிடியன்ன அம்மெல்லியல்லாரளிக்கும் இன்பத்தை நுகர்ந்து நுகர்ந்து மனம் அனுப்படைகின்றேன். யான் காலாலிட்ட வேலையைத் தலையாற் செய்யக் காத்து நிற்குஞ் சேவகர்கள் பலர் என்மாளிகையி லிருக்கின்றனர். வேனிற் காலத்தில் மெல்லென்றசையுந் தென்றலுலாவும் அணிநிலா முற்றங்களும் வாசனை கமழும் பூஞ்சோலைகளும், தீம்புனல் நிறைந்த தடாகங்களும் வேட்டம்போய் விளையாடுதற்கமைந்த ஆரண்யங்களும் பிறவும் எனக்கு உரிமையாக விருக்கின்றன. யாழினும் மிடற்றினும் எழுந்த நல்லிசைக் கேற்ப நடிக்கும் நாடக மடந்தையர் பலரும் முத்தமிழறிந்த வித்துவான்கள் பலரும் என்னுள்ளத்தைக் களிப்பிக்கின்றனர். இவையெல்லாம் என் முன்னோரீட்டிவைத்த பொருட்செல்வத்தினாலெனக்குக் கிடைத்தன வன்றோ?

அறிவுடையரனர்:—நீ பூலோக குபேரனென்பதற் கையமில்லை. பல வகையாகிய சுகபோகங்கள் உனக்குக் கிடைத்திருக்கின்றன. அங்ஙனமாயினும், உன் மனத்தில் ஏதோ துன்பமிருப்பதாக உனது முகக்குறியினு லறியக்கிடக்கின்றது. உனக்கு என்னகுறையுண்டு? அதனை யெனக்குத் தெரியச் சொல்லுவாயாக. போகபூமியில் வாழ்வோருக்கும் ஓரோவொருகாலத்தில் மனத்துயர் உண்டாவது இயல்பாயின் உன்மனத்தில்துயர் ஏற்பட்டிருப்பது ஒருவியப்பல்ல.

போன்பெற்றநம்பி:— தேவரீருடைய சிஷ்யனுகிய அறிவானந்தனே என் துன்பத்துக்குக் காரணன். யான் படைத்த செல்வமனைத்தினும் பார்க்க ஆயிரமடங்கதிகமாகியசெல்வம் மந்திரி மனையில் ஒருமடவா ளுருவமாக வதிகின்றது. அதனையான் பெறுவதற்கு அறிவானந்தன் தடையாயினன்.

அறிவுடையரனர்:—கல்வி கேள்விகளில் நிறைந்த அச்சுந்தர மடந்தை அறிவானந்தனை விரும்பி நிற்பது



அவனது குற்றமா, அன்றேல் நினது குற்றமா, ஆராய்ந்து பார்ப்பாயாக.

போன்பெற்றநம்பி:— அம்மடவாலதுகாதலைப் பெறுதற்குஎனது செல்வமனைத்தினையுந் தியாகஞ்செய்ய யான் ஆயத்தமாயிருக்கிறேன்.

அறிவுடையரனர்:—நண்ப! நெஞ்சை யலையவிடாது ஆராய்வாகச் சிந்தித்து எனது கேள்விக்கு விடையளிப்பாயாக. மந்திரிமகளது உண்மைக் காதலாகிய இன்பத்தையும், சனங்களினது உண்மை மதிப்பாகிய பெருமிதத்தையும் நிரம்பப்பெற்ற அறிவானந்தன் நின்னினும் மேம்பட்ட செல்வனு, குறைந்தவனு?

போன்பெற்றநம்பி:— அறிவானந்தன், என்னினும் பார்க்கப் பன்மடங்கதிகமாகிய செல்வனென்பதற்கையமில்லை.

அறிவுடையரனர்:— அறிவானந்தன் இன்பத்தையும் பெருமிதத்தையும் எதனாலடைந்தான்?

போன்பெற்றநம்பி:— கல்வியினாலடைந்தான்.

அறிவுடையரனர்:—

கல்விதறுகண்ணிசைமை கொடையெனச்
சொல்லப்பட்ட பெருமிதநான்கே

எனவும்,

செல்வம் புலனே புணர்வுவிளியாட்டென்
றல்லல் னீத்த வுவகை நான்கே

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினாராதலினால் கல்விப் பொருளினால் இன்பமும் பெருமிதமும் நிரம்ப எய்துவன என்பது பெறப்படுகின்றது. கேடில்லாத விழுமிய செல்வம் கல்வியே யாகும்; ஏனைய செல்வமென்று கருதப்படா. இப்பொருள்பற்றியே ஆசிரியர் திருவள்ளுவர்,

கேடில் விழுச்செல்வங்கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றையவை,

எனவும்,

செல்வத்துட்செல்வம் செவிச்செல்வம் [அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந்தலை. எனவும்

அறிவுடையாரெல்லாமுடையா [ரறிவிலார்,
என்னுடையரேனுமிலர்

எனவும் கல்விச்செல்வத்தை விதந்து கூறினர். கல்விச் செல்வம் பொருட்செல்வமென்னுமிவற்றிற்கப்பாலாகிய வேறுபல செல்வங்களு முள.

போன்பெற்றநம்பி:— அவைதாம் யாவையோ? சிறியேனுக்கு, அறியச் சொல்லியருளவேண்டும்.

அறிவுடையரனர்:—

குடிப்பிறப்புடுத்துப் பனுவல்சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய்மடுத்து மாந்தித்தூய்மையிற்
காதலின்பத்துத் தூங்கித்தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்காறின்மையவாவின்மையென
இருபெருநிதியமு மொருதாமீட்டும்
தோலாநாவின் மேலோர்.

என்னும் பழஞ்செய் யுளினுள்ளே "அழுக்காறின்மை"யையும், "அவாவின்மை"யையும் இருபெரு நிதியமென்றார், அவையிரண்டும் உவகையையும் பெருமிதத்தையும் நிரம்பக் கொடுக்குமாற்றலுளவாகலின். தனக்கு ஒப்பாவதும் மிக்காவது மில்லாத தனிப்பெருஞ்செல்வம் "அவாவின்மை"யென்பதை வற்புறுத்தப் புகுந்த ஆசிரியர் திருவள்ளுவர்,

வேண்டாமையன்ன விழுச்செல்வமீண் [டில்லை
யாண்டுமஃதொப்பதில்

என்றார். துறவுநெறி நின்றார்மாட்டுக் காணப் படுவதாகிய அருட்செல்வத்தைச் "செல்வத்துட்செல்வம்" எனச் சிறப்பித்துக் கூறினர்.

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்
பொருட்செல்வம் பூரியார் கண்ணுமுள.

கல்வி, கேள்வி, அழுக்காறின்மை, அவாவின்மை யென்னும் நால்வகை நிதியங்களையும் நிரம்பப் பெற்ற அறிவானந்தன் இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் உடனெய்துதற்குரியனுயினன்.

பொன்பெற்றநம்பி:— ஐய! தேவரீரது திருவாக்கிலிருந்தெழுந்த வாசகங்களினுற் செல்வமென்பதின்னதென்றறிந்து கொண்டேன். வறுமையினியல்பையும் உணர்த்தியருளவேண்டும்.

அறிவுடையரனர்:— உவகைக்கு மறுதலையாகிய அழுகையையும், பெருமிதத்துக்கு மறுதலையாகிய இளிவரலையும் எது எய்துவிக்கின்றதோ, அதுவே வறுமை யெனப்படுவது. "வறுமை யென்பது போகந்துய்ப்பப் பெறுத பற்றுள்ளம்" என ஆசிரியர் நச்சினர்க்கினியர் கூறுவர். நீ பொற்குவையையும் நிலனையும் நிரம்பப் படைத்தாயாயினும் அடங்கா நீர்மைபதாகிய பற்றுள்ளத்தை யுடையையாதலின் வறியையாயினை, துன்புறுகின்றனை.

பொன்பெற்றநம்பி :— அங்ஙனமாயின் நான் என்முன்னேரளித்த பொருட்குவையையும் கண்ணுக்கினிய மெல்லியல்லாரையும் விட்டொழிந்து அறிவானந்தனைப் போலக் காவிகட்டிக்கொள்ள இச்சைப்படவேண்டுமென்பதோ தேவரீருடைய உள்ளக்கருத்து. கைத்தலத்திலுள்ள அருந்தனத்தை உகுத்திட்டுப் பிறிதொன்றினை நாடிச் செல்லுங்கால் அது கிடைக்குமோ கிடையாதோ வென்பதை யாவரறிவார்? கல்விச் செல்வம் அருட்செல்வம் எனப் பிற செல்வங்களுள வென்பதை யானுணர்ந்துகொண்டேனுயினும் என் கையிலிருக்கின்ற பொருட் செல்வ த்தை விட்டுவிட யான் ஒருப்படேன்.

அறிவுடையரனர்:— அருமை மைந்த! பொருட் செல்வத்தை விட்டொழிதியென யான் உனக்கு ஒருபோதும் கூறியதில்லை. அறிவானந்தனது நிலைவேறு, உனது நிலைவேறு. போகத்தை விரும்பிய உனக்குரிய போதனை வேறு; மோக்ஷத்தை விரும்பிய அறிவானந்தனுக்குரிய போதனைவேறு. மாணுக்கனது பக்குவத்தையறிந்து அவனது நிலைக்கேற்ற உறுதிமொழியைக் கூறுவதே ஆசானுக்கு மரபு. ஞானத்தைத் தேடுவதையே வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்ட யான் ஆசானல்லேன். ஆயினும், முன்னுளிலிருந்த மேலோருரைத்த உறுதிமொழிகள் சிலவற்றை ஆராய்ந் துணர்ந்திருக்கின்றேன். துறவுதியது,இன்பமும் பொருளுமே நாடத்தகுவன வென்னும் உபதேசம் இக்காலத்திற் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட முடிபுளென்று எண்ணவேண்டாம். முன்னுளிலே தேவகுருவாகிய வியாழபகவானும் அசுரகுருவாகிய சுக்கிராசாரியரும் இன்பமும் பொருளுமே உறுதிப் பொருள்களாவன எனக் கூறியிருக்கின்றனர். அன்னுருரைத்த உபதேசத்தி னியல்பினை ஆராய்ந்துணர்வாயாயின் நீ ஆரம்பத்தில் வினவிய போக மோக்ஷ இலக்கணங்களையும் உணர்ந்து கொள்ளுவாய்.

பொன்பெற்றநம்பி:— ஐய! அடியேன்மீது கோபம் வைத்தலாகாது. யானும் அறிவானந்தனைப் போலவே ஞானத்தினை விரும்புகின்றேன். பொருளின்பத்தையுங் காதலிக்கின்றேன். அஃதொருபாலாகச் சுக்கிராசாரியரென்பவர் யாவர்? அவர் யாருக்கு உபதேசித்தார்? என்ன உபதேசம் பண்ணினர்? தேவகுரு யாருக்கு உபதேசம் பண்ணினர்? இவற்றை யெல்லாம் அடியேனுக்குத் தெளியச்சொல்லவேண்டும்.

அறிவுடையரனர்:—மைந்த! அது நெடுங்கதை. "கந்தவேண்மாக்கதை" யென்னும் பழங்காப்பியத்தினுள்ளே விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதை நானுனக்குச் சுருக்கிச் சொல்லுகின்றேன். அசுரேந்திரன் மங்கலகேசி யென்னும் பெயரினையுடைய இராக்கதப்பெண்ணை மணஞ்செய்து அம்மணத்தின் பயனேயாகச் சுரசை யென்று பெயர் பெற்ற ஒருபுதல்வியைப் பெற்றுன். அம்மகள் ஐந்துவயதுப் பருவத்தினளாக வளர்ந்தபின்பு அசுரகுருவாகிய சுக்கிராசாரியர் அவளுக்கு மாயவித்தைக ளனைத்தினையும் இனிதுபோதித்து, அவளது சதுரப்பாட்டைக்கண்டு, மாயை யென்று பெயரிட்டனர். ஆண்டுசில கழிந்ததற்பின், மாயை சுக்கிரனுடைய கட்டளைப்படி பேரழகமைந்த வடிவத்தொடுபோய்த் தவத்தின் மிக்க காசிப முனிவரது மனநிலையைக் கலைத்து, அவரொடுகூடி வலிமைமிக்க சூரபன்மா, சிங்கமுகாசுரன் தாரகாசுரன், அசமுகி என்னும் மக்களைப்பெற்றனள்.

சூரபன்மன் தம்பியருடன் போய்த் தந்தைதாயரைப் பணிந்து தாஞ்செய்ய வேண்டிய தொழில் யாதென்று வினவக் காசிபமுனிவர் தருமநெறியினெழுகித் தவஞ்செய்து பேரானந்தப் பெரும்பேற்றினை அடையுமாறு போதித்தனர். காசிபமுனிவர் இவ்வாறு போதித்ததைக் கேட்டிருந்த மாயை அதனை மறுத்துச் செல்வமே சிறந்த தென்று போதித்தனள். அன்னவள் காசிபரை நோக்கி, "வேதங்களை யோதியுணர்ந்த முனிவரே! நீர் உண்மையான சாதனத்தையே சொன்னீர். உயர்ந்த முத்தியை யடையும் கருத்தினையுடைய முனிவர்களுக்கேயல்லாமல் நாங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு இவ்வாறு சொல்வது தகுமா? இந்திரன் குபேரன் முதலியவர்களது செல்வத்தினும் சிறந்த செல்வத்தையும், குற்ற மற்ற வெற்றியையும், போகானுபவத்தையும், எந்நாளும் அழியாதிருக்கின்ற ஆயுளையும் நிலைபெற்ற பெரிய கீர்த்தியையும், குற்றமற்றவாழ்வையும், நம்மாட்டன் புள்ளவர்களாகிய இவர்கள் பெறுதல் வேண்டும். பெருந்தவத்தைச் செய்கின்ற முனிவரே! விருப்பத்துடன் அவைக ளெல்லாவற்றையும் விரைவிற் பெறும் வண்ணம்போதிக்கக்கடவீர்" என்றனள்.

"அங்ஙனமாயின் நீயே யவர்களுக்கியைந்த வொழுக்கத்தைக் கூறுதி" என்று காசிபமுனிவர் கூற, மாயையானவள் தன் புதல்வர்களது முகத்தைப்பார்த்து "பரிசுத்தம் பொருந்திய இந்த முனிவர் சொல்லியது முழுதும் உண்மையே. ஆனுலும் அவைகள் உங்களுக் குரியனவல்ல; நீங்கள் யான் சொல்வதைக் கேளுங்களெ"ன்றுமுறைப்படிசொல்லுவாள்.

"கல்விச்செல்வம் பொருட்செல்வம் என்னுமிரண்டினும் பார்க்கச் சிறந்தது வேறொன்றுமில்லை; இவ்விரண்டினுள் ஒன்றினையாவது பெற்றுக் கொள்ளாதனவது பிறப்புப் பேயினுடைய பிறப்பினும் இழிவுடையதாகும். பிறவியெடுத்த நல்ல ஆன்மாக்களுக்கெல்லாம் பெருமையைக் கொடுக்கின்ற இவ்விரண்டு பொருள்களி

னுள்ளும் செல்வப்பொருளே சிறந்தது. கல்வியை திட்பமாக வுணர்ந்து தூய்மையான அறிவைப்பெற்ற சிறப்புடையவர்களும் செல்வத்தோடுபொருந்தாராயின், பூவுலகம் அவர்களைக் குற்றத்தின்பாற் படுத்தும்; கல்வியையும், மேம்பாட்டையும், தருமத்தையும், கீர்த்தியையும், வெற்றியையும் சேர்ப்பதனால் செல்வத்தினும் சிறந்ததாக வேறொரு பொருளில்லை; முயற்சியும் ஊக்கமுமுடையார் மேன்மைபொருந்திய பெருஞ்செல்வத்தை விரைவிற் பெறுவர். வடபூமியிலே ஆலந்தீவு என்னு மோரிட முண்டு. நீவிரங்குச் சென்று பொங்குகின்ற அக்கினியிலே நெய் முதலிய பொருள்களைச் சொரிந்து யாகஞ்செய்குவீர்?" என்று கூறி யாகத்துக்கு வேண்டிய பத்ததிமுறைகளையும், மந்திர முறைகளையும் போதித்தனள்.

சூரபன்மனுந் தம்பியரும் யாகபூமியை நோக்கிச் செல்ல அன்னோரை எதிர்ப்பட்ட சுக்கிராசாரியர் குலகுருவாதலின், சிறந்த மந்திரங்களை யுபதேசித்துச் சென்றனர்.

அசுரர் வைராக்கிய சித்தத்தோடு யாகத்தினை முடித்துத் தேவதேவராகிய சிவபிரானிடத்துப் பெறற் கரும் வரங்களைப் பெற்றனர். சூரனாதியரது வருகையைக் கேட்ட சுக்கிராசாரியர் சீடர் கூட்டத்துடன் எதிர்கொண்டுவர, அவரைக்கண்ட சூரபன்மன் அவரது தாமரை மலர் போன்ற மென்மையான அழகிய பாதங்களை வணங்கி யெழுந்து நின்றனன். பின்னர் சுக்கிராசாரியர் அவனுக்கு ஆசனமளித்து நிகழ்ந்தனவற்றை யுசாவியறிந்தனர். சூரன் அவரை நோக்கி "ஐய! நாங்களினி முயன்றுசெய்யத்தக்க முறைமையாது?" என வணங்கிக்கேட்கத் தீமை மிக்க மனத்தினையுடைய சுக்கிராசாரியர் கூறுகின்றார்.

"பாசமெனவும் பசுவெனவும் அவற்றினுஞ் சிறந்ததாகிய பதியெனவும் பொருள்களை மூன்றாகக்கூறுவர் அறியாதார். அவற்றுட் பாசமென்பது பொய்ப்பொருள்; ஆன்மாவும், ஒளிபொருந்தியசிவனும் ஒன்றேயாம்; வேறன்று. முதலும் முடிவும் இல்லாமல் நிர்மலமானசோதிவடிவாயிருக்கின்ற பழைய சிவபிரான் திருவிளையாட்டில் விருப்புற்றவராய்த் தமது மாயையினால் ஐம்பெரும்பூதங்களையும் பிறவற்றையும் படைப்பார். மாயாகாரியமாகிய சரீரங்களைப்படைத்து அன்னவற்றினோடே குடத்தின்கண்ணே யமைந்த ஆகாயம்போலநின்று சரீரமழியுங் காலத்தில் முன்போல ஒன்றியிருப்பார்.

இவ்வாறாகச் சிவபிரானெக்காலத்தும் ஆடல்புரிவாராதலின், இருவினைகளும் பிறவும் பொய்யேயாம். வீடுபேறும் அதனைப்பெறுதற்கு முயற்சிசெய்வதும் அங்ஙனமே பொய்யாம். ஐம்பொறிகளும் ஐம்புலன்களும் பொய்யாமென்றால் அவற்றாற்காணப்படுகிறபொருள்கள் உண்மையாகுமா? குற்றமற்ற புத்தியும், வாக்கும், உருவமும், செயலும் பொய்யேயாம். அவைகள் காரணமாக நேர்கின்ற சுகதுக்கங்களும் பொய்யேயாம். இவற்றை மெய்யெனக்கோரினும் இவை சரீரத்திற்கே யாமன்றி ஆன்மாவை படையாவாம். பிறத்தலும் இறத்தலும், இருவினை செய்தலும் சரீரத்திற் றுப்பொருந்திய தன்மையேயாம். எல்லாவிடங்களினும் ஏகான்மாவாய் அமைந்து நிற்கின்றபரம்பொருள்எக்காலத்தினும் ஒரே தன்மையாகவிருப்



பர். அது உண்மை யென்று நீயறிபக்கடவை. தருமம் நல்லதென்று நினைத்து அதனைச் செய்வதும், பாவந்தீய தென்று பயப்படுவதும் அறியாமையேயாம். எதுவது தன்னைவந்து சார்ந்ததோ அதனைத்தீய தென்றேனும் நல்ல தென்றேனும் நினையாது கடவுளது மாயையென்று சிந்தித்து அவற்றைச்செய்தல் முறைமையாகும். சொப்பனவத்தையில் ஒரு பொருளை விரும்புவதையும், துக்கப்படுவதையும் பிற இயல்புகளையும் விழிப்பு வந்தபொழுது நாம் கண்டதில்லையன்றோ? இப்பிறப்பிற் செய்யும் வினைகளெல்லாம் அவ்வியல்பினவேயாம். சிலரைச் சிறியரென்றும் சிலரை மேலோரென்றும் நினைப்பது தகுதியாமோ? அளவிறந்த ஆன்மாக்களெல்லாம் ஒன்றே யென்று உணர்தல் வேண்டும். இதுவேயுண்மை. நீ யுன்னையே பிரமமென்று ஐயமின்றி யுணரக்கடவாய். பிரமர் முதலிய தேவர்களிடத்து அன்பு வையாதே; அவர்களை உன்னினுயர்ந்தோர்களென்று நினைத்து வணங்காதே. தேவர்கள் உங்கள் பகைவர். தேவராஜனாகிய இந்திரன் முன்னாளில் அளவிறந்த அசுரர்களது அரியவுயிரைக் கவர்ந்தான். அவனை விரைவிற் பிடித்து வலிய சிறையில் வைப்பாய். தேவர்களும் திக்குப்பாலகரும் நினக்குக் குற்றேவல் செய்வாராக. பாவத்திற்கு அஞ்சுவாயாயின் நீ விரும்பியவற்றைப் பெற்றுக்கொள்ளுவது யாங்ஙனம்? இப்பொழுதே சேனைகளோடு போய் சிவபிரானுனக்குத்தந்த ஆயிரத்தெட்டண்டங்களையும் பார்வையிட்டு நீ செய்கின்ற கடமையாகிய அரசியலைச் செய். எட்டுத்திக்கினு முள்ளோர் புகழத் திரும்பிவந்து இவ்விடத்திலிருப்பாயாக.

இங்ஙனம் குரவன்கூறுதலும், இவற்றைக்கேட்டு உளம் பூரித்த சூரன் ஆசானுரையின் வழிநின்று ஆயிரத்தெட்டண்டங்களையும் அரசுபுரிந்தனன்; இந்திரச் செல்வத்தினும் மிக்க பெருஞ்செல்வம் அவனுக்குரியதாயிற்று.

பொன்பெற்றநம்பி:—ஐய! இந்திராதி தேவர்களை வெற்றி பெற்ற சூரனினும் பார்க்க அத்தேவர்கள் இன்பத்தினும் பெருமிதத்தினும் மேம்பாடுடையவர்களா?

அறிவுடையரனார்:— தேவதேவராகிய சிவபிரானளித்த பெறற்கரும் வரங்களைப் பெற்ற சூரன் சதமகனினும் பார்க்கப் பன்மடங்கதிகமாகிய செல்வத்தையுடையவனே.

பொன்பெற்ற நம்பி :— இந்திரனுடைய செல்வம் நிலையில்லாதது; அவனைமேற்கொண்ட சூரபன்மனுடைய செல்வமும் நிலையற்றதாயிற்றே.

அறிவுடையரனார்:—இவற்றின் வேறாக நிலையுள்ள செல்வமும் பிறிதொன்றுண்டு. நிலையற்ற செல்வம் நிலையற்றதென அறிந்தஞான்று அறிஞராயினார்நிலையானசெல்வத்தை நாடுவார்.

பொன்பெற்ற நம்பி:— போகபூமியில் வாழ்வோராகிய இந்திரன் முதலினோர் நித்தியானந்த வாழ்வினை நாடாமைக்குக் காரணமென்னை?

அறிடையரனார் :— போகானுபவங்களில் மூழ்கிக்கிடப்போர் அவற்றினின்று பிரிந்து நிற்கும் உண்மைநிலையை நாடா தொழிதல் இயல்பேயாம். அங்ஙனமாயினும் துன்பம் வந்துற்றகாலை விசாரத்தோடு கூடிநிற்பாராதலினால், அக்காலத்தில் நிரதிசயவின்பத்தை ஒருசார் நாடினும் நாடுவர். தேவராஜனாகிய இந்திரன் சூரனாற் றுன்புற்றகாரணத்தினால் இந்திரப் பதவியை வெறுத்துத் தவநெறிநிற்கமுயன்றனன்.

தொடரும்.

# *குடியன் கூத்து

(மத்த விலாஸ ப்ரஹஸனம்)

பல்லவ சக்கரவர்த்தி மகேந்திர வர்மன் இயற்றியது.

சரித ஆராய்ச்சியாளர் கே. ஜீ. சங்கரய்யர் பீ. ஏ. பீ. எல். மொழிபெயர்த்தது.

(நாந்தியின் முடிவில் பிரவேசித்து)

சூத்திரதாரன்:—உடல், உடை, பேச்சு, செய்கை, குணம், இவைகளின் வேற்றுமைகளை ஆதாரமாகக் கொண்டு, பலமெய்ப்பாடுகளை உள்ளடக்கியிருப்பதால் சிங்காரம் முதலான இரசங்களைக்கண்டவர் அனுபவிக்கும்படி செய்கிற உலக நடையான நிருத்தத்தைத், தடைபடாத அறிவின்வன்மைபடைத்த அந்த திவ்ய கபாலதாரிதானே செய்துகாட்டியும் கண்டும் விளங்கி உலகெங்கும் (அவனிபாஜனம்) பரவும் கீர்த்தியை உங்களுக்கு அருள்க.

ஆஹா! இளையாளிடம்பொருமை கொண்டிருக்கும் மூத்தாளை வசப்படுத்தத் தகுந்த உபாயமொன்று கிடைத்துவிட்டது. வெகு காலஞ்சென்று இப்பொழுது என்னைச் சபையோர் நாடகம் நடத்த நியமித்திருக்கிறார்கள். இதை அவளிடம் கூறுகிறேன்.

(திரைப்பக்கம் திரும்பி)

அடீ! இங்கே வா.

---

* நகைச்சுவை ததும்பும் இச்சிறுநூலினை வடமொழியில் இயற்றியவர் குணபரன் என்னும் பெயர் வாய்ந்த பல்லவ சக்கரவர்த்தி மகேந்திர வர்மன் என்பார். இது நடித்துக் காட்டுவதற்காகவே எழுதப் பெற்றதென்பது திண்ணம். அக்காலத்தில் நமது இந்து சமூகத்திலும் இந்நாட்டில் சிதைந்து வழங்கிய சமயக் கொள்கைகளிலுமுள்ள குறைகளை இந்நூல் பளிங்கு போல எடுத்துக் காட்டுகின்றது. இதன் ஆசிரியர் புவிபராக விளங்கியது போலவே வடமொழியில் ஒரு கவியரசாகவும் விளங்கினர். இவர் சமணராயிருந்து அப்பர் சுவாமிகளது உபதேசத்தால் சைவசமயத்தைத் தழுவிக்கொண்டார். இவரது காலம் கி. பி. ஏழாவது நூற்றாண்டாகும். இந்நூல் சரித ஆராய்ச்சிக்கு அருந்துணையான சாதனங்களில் ஒன்றாக மதிக்கப் பெறுகின்றது. இந்நூலுக்குத்தே பரிகசிக்கப்பெறும் கபாலிகர் பௌத்தர் முதலாயினரது ஒழுக்க வழக்கங்கள் பிற்காலத்தில் சைவ சித்தாந்திகளாலும் கண்டிக்கப் பெற்றன என்பது கவனிக்கத்தக்கது. நகைச்சுவை தரும் நாடகங்கள், கூத்துகள், வாயிலாக சமூகத்திலுள்ள குறைகளை எடுத்துக் காட்டுவது சீர்திருத்தத்திற்கு இன்றியமையாததோர் வழியாகும் என்பது டால்ஸ்டாய், பெர்னாட்ஷா முதலான ஐரோப்பிய நல்லறிஞர் கருத்தாகும். இத்தகைய உயரிய நன்னோக்கத்தோடு சுமார் ௧௨௦௦ ஆண்டுகட்கு முன்னர் எழுதப்பெற்ற இக் கூத்து (பிரகசனம்), நீண்டகாலமாகப் பழஞ்சுவடிகளில் பதுங்கிக் கிடந்து இப்பொழுதுதான் அச்சுவாகனம் ஏறி உலாவி வருகின்றது. இதன் ஆங்கில மதிப்புரை ஒன்று காலஞ்சென்ற சிலாசாசன பரிசோதகர் கோபிநாத ராயர் அவர்களால் கிறிஸ்தவ கலாசாலை மாசிகையில் எழுதப் பெற்றுள்ளது. நூல் முழுதும் இப்பொழுது ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. தமிழில் இம்மொழி பெயர்ப்பே முதல் மொழி பெயர்ப்பாகும், (பத்திராதிபர்)



(பிரவேசித்து.)

நடி:—(கோபத்துடன்) ஐயா, இந்தப் பருவத்திலேயா, யௌவனத் திமிரால் ஏற்பட்ட விலாசக்கூத்தைக் காட்டவந்தீர்? (யௌவனகுண பர மத்த விலாஸப்ரஹஸனம் என்றதால் முன் 'அவனிபாஜன'த்தைப் போல 'குணபர' என்ற மஹேந்திரன் பட்டப்பெயரும் மத்தவிலாஸம் என்ற ப்ரஹஸநத்தின் பெயரும் குறிக்கப் பட்டன.)

சூத்திர:—ஆமாம். (குணபரன் இயற்றிய மத்த விலாஸ ப்ரஹஸனத்தைக் காட்ட நினைத்திருக்கிறேன் என்று பொருள்).

நடி:—எவளை உமக்குச் சந்தோஷப்படுத்தி யாகவேண்டுமோ அவளிடம் காட்டும். (இளையாளைக் குறித்தபடி)

சூத்திர:—உன்னோடு தான் காட்டவேண்டும்.(உன் உதவி தான் வேண்டுமென்றபடி)

நடி:—அப்படித்தான் அவ்விடத்து உத்தரவோ? (அவ்விடம்=இளையாள்)

சூத்திர:—ஆமாம். (அவ்விடம்= சபையோர்) ஆடிக்காட்டினால் சிறந்த நன்கொடை கிடைக்கும்.

நடி:—அது உமக்குத் தான் ஏற்கும். (இளையாள் தரும் நன்கொடை என்றபடி)

சூத்திர:—ஏண்டி ஏற்காது?(சபையோர்தரும் நன்கொடை) உன் நாட்டியத்தைக்கண்டு சபையோர் களிப்படைந்து நன்கொடை யளிப்பது நிச்சயம்.

நடி:—(சந்தோஷத்துடன்) அப்படியா? அவர்கள் அநுக்கிரகம் செய்வார்களா?

சூத்திர:—அவர்கள் அநுக்கிரகம் கிடைத்தே விட்டது.

நடி:—ஆனால் இந் நற்செய்தியைத் தெரிவித்த உமக்கு என்ன தருவேன்?

சூத்திர:—கைம்மாறு வேறு வேண்டாம். கன்னங்களில் உரோமஞ் சிலிர்க்க முறுவலுடன்விளங்கும்உன் அழகிய முகம் கிடைத்தபிறகு எனக்கு வேறென்ன வேண்டும்? என் அன்பே!

நடி:—இப்பொழுது நாம் எதை நடிப்போம்?

சூத்திர:—மத்தவிலாஸ ப்ரஹஸநம் என்று நீயே கூறிவிட்டாயே.

நடி:—என்கோபமும் உமக்கு அநுகூலமாகவே யிருக்கிறது. உமது அபிப்பிராயத்திற் கேற்பவே அது என்னைப் பேசும்படிசெய்து விட்டது. இருக்கட்டும். இந்நாடகத்தால் புகழ்பெறும் கவி யார்?

சூத்திர:—கேளடி, சொல்கிறேன். இவ்வுலகிற்குக் குலபர்வதம்போல் விளங்கும் பல்லவகுலத்தில் தோன்றியவனும், நால்வகை இராஜநீதியால் சுற்றரசரையெல்லாம் வென்றவனும், பராக்கிரமத்தால் தேவராஜனை யொத்தவனும், பொருட்செல்வத்தின் பெருமைக்கேற்ற கொடைச் செல்வத்தால் குபேரனை வென்றவனும் ஆகிய ஸ்ரீ சிம்மவிஷ்ணுவர்மனது புதல்வன் மகேந்திர விக்கிர வர்மன் (என்று புகழ்பெற்ற மஹாராஜனே) இந்நாடகத்தை இயற்றியவன். இவன் உட்பகை ஆறினையும் வென்றவன். பிறர்க்கு அநுகூலஞ் செய்வதில் ஐம்பெரும் பூதங்கள் போன்றவன். பிரளய காலத்தில் பிராணிகளெல்லாம் ஆதிபுருஷனிடத்தே லயிப்பதுபோல, அறிவு, கொடை, தயை, பெருந்தன்மை. தைரியம், ஒளி, கலைவன்மை வாய்மை, பராக்கிரமம், களங்கமின்

மை, விநயம் முதலிய பல குணங்களும் இக் கலிகாலத்தில் புகலிடம் வேறு கிடைக்கப்பெறுமல் இவனையே சரண் புகுந்து வாழ்கின்றன. இவன் உயர்ந்த குணங்களுக்கும் நன்மணிகள் போன்ற வாக்குகளுக்கும் உறையுளாய் விளங்குகின்றவன்; எனினும் சாதுக்களது எளிய சொற்களையும் சிறப்பாய்ப் பாராட்டும் தன்மை பொருந்தியவன்.

நடி:—இனி ஏன் தாமதம்? இந்த நூல் அபூர்வமானதால், அதை நாம் விரைவில் நடித்துக்காட்டவேண்டும்.

சூத்திர:—ஆமாம். ஆனல் சங்கீதத்தையே செல்வமாகவுடைய நான் கவியின் குணங்களை வர்ணிப்பதில் ஈடுபட்டிருந்தேன்.

(திரைக்குள்)

சூத்திர:— அன்பான தேவஸோமையே! கபாலத்தையே செல்வமாகவுடைய இந்தக் காபாலிகனும் இளம் பெண்ணுடன் குடியில் ஈடுபட்டிருக்கிறன்.

(இருவரும் வெளியே செல்கிறார்கள்)

(ஸ்தாபனை முடிந்தது.)

---

(பிறகு கபாலியும் அவன்மனைவியும் பிரவேசித்து)

கபாலி:—(குடிவெறிதோன்ற) அன்பான தேவஸோமையே! வேண்டும் வடிவைத் தவத்தால் பெறலாம் என்பது உண்மையே. நீயும் உத்தம விரதத்தை ஒழுங்காய் அநுஷ்டித்ததால் முன்னில்லாத அழகு உனக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. கொடிகளை ஒத்த அழகிய புருவங்களும் முத்துக்களை ஒத்த வெயர்வைத்துளிகளும் உன் முகத்தில் பொருந்தியிருக்கின்றன. உன் நடை விநோதமாயிருக்கிறது. காரணமில்லாமலே நீ அடிக்கடி சிரிக்கிறய். உன் சொற்கள் தடுமாறுகின்றன. உன் கடைக்கண்கள் அயர்ந்து பார்க்கின்றன. உன் கண்கள் சிவந்திருக்கின்றன. கருவிழிகள் சுழல்கின்றன. கூந்தல் கட்டவிழ்ந்து மலர்கள் உதிரும் மாலைகளுடன் தோள்களில் தொங்குகின்றது.

தேவ—எனக்குக் குடிவெறி என்று கூறுகிறீர்கள்?

கபாலி:—என்ன சொன்னுபடி?

தேவ:—நான் ஒன்றும் சொல்லவில்லையே!

கபாலி:—எனக்கா குடிவெறி?

தேவ:—பூமி சுழல்கிறது, சுழல்கிறது நான் முன்னே விழுவேன் போலிருக்கிறது. என்னைத்தாங்கும்.

கபாலி:—அப்படியே, என் அன்பே! தாங்கச் (சென்றவன் கீழே விழுந்து) அன்பான *ஸோமதேவையே! ? நீ ஏன் கோபித்துக்கொண்டிருக்கிறய். நான் தாங்க வந்தால் தூரச்செல்கிறயே!

தேவ:—ஆஹா! ஸோமதேவைக்குக் கோபம்தான் வந்துவிட்டது. நீங்கள் தலைவணங்கிக் கேட்டுக்கொண்டும் அவள் ஒதுங்கி விட்டாள்.

கபாலி:—நீதானே ஸோமதேவை? (யோசித்து) இல்லை, இல்லை, தேவஸோமை.

தேவ:— ஸோமதேவை உமக்கு அவ்வளவு வேண்டியவளோ? என் பெயரால் அவளைக் கூப்பிடுவது மாத்திரம் சரியில்லை.

* குடிவெறியால் பெயர் மாறிவிட்டது.



கபாலி:— குடிவெறியால் தானடி, என் நாக்கு உளறுகிறது. உனக்கும் அபராதம் செய்தவனுனேன்.

தேவ:—போகட்டும். நீங்களாகச் செய்யவில்லையே.

கபாலி:—கள்ளுக்குடிதானே என்னை இவ்வாறு ஆட்டுகிறது. இருக்கட்டும், இருக்கட்டும். இனிநான் குடிப்பதில்லை.

தேவ:—எனக்காக நீங்கள் விரதபங்கம் செய்து தவசைக் கெடுத்துவிடாதேயுங்கள். (கால்களில் விழுகிறுள்)

கபாலி:— (களிப்புடன் அவளைத் தூக்கி நிறுத்தியணைந்து) * த்ருர்ண! த்ருர்ண! நமச்சிவாய! என் அன்பே! கள் குடிக்கவேண்டும். மனைவி முகத்தைக்கண்டு களிக்கவேண்டும். இயற்கைசெயற்கை அழகுகள் பொருந்திய உடைகளை அணியவேண்டும்—என்றிவ்வண்ணம் சுலபமான முத்திநெறியை உபதேசித்த நம் பகவன் பிநாகபாணி நீடு வாழ்க.

தேவ:—அப்படியன்றே சொல்லவேண்டும்! அருக சமயிகள் மாத்திரம் முத்திநெறியை வேறுவிதமாய்க் கூறுகிறார்கள்.

கபாலி:—அவர்கள் கூறுவது பிசகென்பதில் ஐயம் என்ன? காரியம் எப்பொழுதும் (காரணத்தை) ஒத்தேயிருக்க வேண்டும் என்று பல ஏதுக்களால் தெளிவாய் நிரூபித்துவிட்டு, அவர்களே துக்கத்திலிருந்து சுகம் உண்டாவதாய்க் கூறுவதால் அவ் அற்பர்கள் தங்கள் வாக்காலேயே கெட்டார்கள். §

தேவ—அவர்கள் பேச்சை எடாதேயுங்கள்.

கபாலி:—ஆமாம். அந்தப் பாவிகள் பெயரை அவர்களைத் தூஷிப்பதற்குக் கூடக் கூறுவது பிசகு: அவர்கள் பிரமசரியம், மொட்டைபடித்தல், அழுக்கான உடைகளை உடுத்தல், கட்டுப்பாடில்லாமல் கண்ட வேளைகளில் சாப்பிடுதல், முதலான துராசாரங்களால் உயிர்களை மிகவும் வருத்துகிறவர்கள். ஆகையால் அவர்கள் பேச்சை எடுத்த என்நாக்கை இப்பொழுது கள்ளினல் அலம்ப விரும்புகிறேன்.

தேவ:—ஆனல் நாம் கள்ளுக் கடைக்குப் போவோம்.

கபாலி:—அப்படியே, என் அன்பே! (இருவரும் செல்கிறார்கள்)

தேவ:—ஆஹா! இக் காஞ்சீபுரத்தின் செல்வமும் சிறப்புந்தான் என்ன! மாளிகைகளின்மீது மிருதங்கசப்தம், இளைப்பாறும் மேகங்களின் சத்தமோ என்று சங்கை விளைக்கின்றது. பூக்கடைத் தெருக்களைப் பார்த்தால் வசந்தகாலம் வருவது இப்படித்தானே என்று தோன்றுகிறது. சிறந்த இளம் பெண்களின் ஒட்டியாணச் சதங்கைகள் மன்மதன் ஜயபேரிகைபோல் முழங்குகின்றன. உண்மைப்பொருளை நன்குணர்ந்த மாமுனிவர்களும் விரும்பத் தக்க ஒப்புயர்விலாத அந்தமில் இன்பம் இங்கு ஒருங்கே காணப்படுகிறது. ஆனல், இதைக்காட்டிலும் இன்னும் ஒரு விசேஷமிருக்கிறது. இங்கே கிடைக்கும் இன்பம் சிற்றின்ப உருவமாகவும் ஐம்புலன்களால் இனிது அனு

* குடியால் நாக்கு உளறுகிறது. § சுகம் வேண்டுவோர் காயக்கிலேசம் செய்வது பிசகு என்றபடி

பனிக்கக் கூடியதாகவும், அமைந்துள் ளது.

தேவ:—ஆமாம், காஞ்சிதேவி கள் ளினாலும்தேவகானத்தாலும் விளங்கு கிறாள்.

கபாலி:—பார், என் அன்பே!பார். இந்தக்கள்ளுக்கடையைப் பார்த்தால், வேள்விச்சாலை போலிருக்கிறது. இக் கொடி மரமே யூபஸ்தம்பம்; கள்ளே சோமரசம்; குடியர்களே ரித்விக்கு கள்; பான பாத்திரங்களே சோம ரசத்தைத் தாங்கும் சமஸங்கள்; சூலத்தில் கோத்து நெருப்பில் சுடப் பட்ட ஊன் வகைகளே அவிசு; குடியர் பேச்சே எசுர்வேத மந்தி ரங்கள்; அவர் பாட்டே சாமகானம்; அக்பைகளே சுருவங்கள்; ஆசை யே வேள்வித்தீ; கடைக்காரனே யஜ மானன்.

தேவ:—நம்முடைய பிட்சையே உருத்திர பாகம்.

கபாலி:—மத்தளவாசிப்புக்குச் சரி யான அங்க சேட்டைகள்! வாக்கு கள்! புருவ நெரிப்புகள்! உயர்த் தின ஒரு கை உத்தரீயத்தை ஏந்தி நிற்கிறது. மற்றொரு கை நழுவிச் செல்லுந் துணிகளைத் தாங்கவேண்டி யிருப்பதால், தாளம் அடிக்கடி பிசகு கிறது. கழுத்தணிகள் தாறுமாறாகக் கிடக்கின்றன. ஆஹா! இந்தக் குடியர் கூத்தின் அழகே அழகு!

தேவ:—உம்மைப்போல் ரஸிகர் யார்?

கபாலி:—என் அன்பே! இந்த வா ருணிதேவி(கள்) பாத்திரங்களில் ஊற் றப்பெற்று ஒளியால் அணிகளைப் பழிப்பவளாகவும், ஊடல் தீர்ப்பவர் களாகவு, யௌவனத்தின் வெற்றி மயமானவளாகவும் இலங்குகின்றாள். அதிகம் சொல்வானேன்? முக்கண்ண னது மூன்றாவது கண்ணினால் காம தேவன் நீறானதாகக் கூறுகிறார்கள். அதுபிசகு. அவன் உடலே காதல் என்னுமறுபெயர்பூண்டு அக்கண்ணின் வெப்பம் தாங்காது, எல்லாரது உள் ளங்களிலும் பதுங்கியிருந்து அவ்வுள் ளங்களை வலியழித்துக் கலக்குகிறது.

தேவ:—நீர் சொல்வதுதான் சரி. உலகத்திற்கு உபகரிக்க வேண்டு மென்றேயிருக்கும் உலகநாதன் அவ் வுலகையே அழிப்பரோ?

(இருவரும் கன்னங்களில் பறை யடிக்கிறார்கள்.)

கபாலி:—பிட்சை போடுங்கள், அம் மா, பிட்சை போடுங்கள்.

(திரைக்குள்ளிருந்து.)

பிட்சை இதோ, பெற்றுக்கொள் ளுங்கள், ஐயா!

கபாலி:—இதோ வந்துவிட்டேன். அடி! என் கபால மெங்கே?

தேவ:—நான் பார்க்கவில்லையே!

கபாலி:—(யோசித்து) அடடா! அந் தக் கள்ளுக்கடையில் வைத்து மறந் து விட்டேன்போலிருக்கிறது. இருக் கட்டும், திரும்பிப்போய்ப்பார்ப்போம்.

தேவ:—இவ்வளவு ஆதாவுடன் கொடுக்கும் பிட்சையை வாங்காமலி ருப்பது அதர்மமாயிற்றே. இப்பொ ழுது என்ன செய்யலாம்?

கபாலி:—ஆபத் தர்மத்தை முன் னிட்டு, பசுவின் கொம்பால் வாங்கிக் கொள்வோம்.

தேவ:—ஆகா! அப்படியே, (வாங் கிக் கொள்கிறாள்.)

(இருவரும் சுற்றிப் பார்க்கிறார்கள்)

கபாலி:—எங்கும் காணவில்லையே! (வருத்தம் தோன்ற) மகேசுவரர்க



ளே, மகேசுவரர்களே! எங்கள் பிட் சா பாத்திரத்தை நீங்கள் யாராவது கண்டதுண்டா? என்ன சொல்கிறீர் கள்? காணவில்லையென்றுதானா? ஆ! கெட்டேன். என் தவம் ஒழிந்தது. இப்பொழுது நான் எப்படி கபாலி யாவேன்? கஷ்டம், கஷ்டம். உண் ணும்பொழுதும் குடிக்கும் பொழு தும் உறங்கும் பொழுதும் எனக்கு உதவியாயிருந்து என்னை விட்டுச் சிறிதும் பிரியாத என் புனித மான கபாலத்தை இப் பொழுது இழந்ததால் என் நண்பன் ஒருவனை யே நான் இழந்தாற்போல் வருத்தம டைகிறேன். (கீழே விழுந்து தலை யில்அடித்துக்கொண்டு)இருக்கட்டும். இன்னும் அடையாளம் ஒன்றிருக் கிறது. கபாலி யென்ற பெயர் என் னை விட்டுப் போய்விடவில்லையே! (எழுந்திருக்கிறான்.)

தேவ:—ஆமாம், கபாலத்தை யார் எடுத்திருக்கலாம்?

கபாலி:—என் அன்பே! சூலத் தில் பக்குவம் செய்த மாமிசத்தை அதில் வைத்திருந்ததால், நாயோ அல் லது சாக்கிய பிட்சுவோ எடுத்திருக்க வேண்டும்.

தேவ:—ஆனால் அதை இந்தக் காஞ்சிபுர முழுவதும் தேடிப் பார்ப் போம்.

கபாலி:—அப்படியே, என் அன் பே! (இருவரும் செல்கிறார்கள்)

(பிறகு சாக்கிய பிட்சு கையில் பாத்தி ரத்துடன் பிரவேசித்து)

சாக்கிய:—உபாஸகன் தனதாஸசெ ட்டியாரின் சத்திர மஹாதானத்தின் வைபவம்தான் என்ன? அதில் இஷ்ட மான நிறம், மணம், சுவை இவைகள் பொருந்திய மச்ச மாமிச வகை கள் சேர்ந்த உணவுப்பொருள்கிடைக் கிறது. இப்பொழுது இராஜ விஹா ரத்திற்கே போவோம். (சென்று கொண்டே தனக்குள்) ஆஹா! பரம காருணிகரான பகவான் புத்ததேவர் மாளிகைகளில் வாஸம், நல்ல படுக் கைகள் விரித்த கட்டில்களில் சய னம், காலையில் சாப்பாடு, பிற்பகலில் நல்ல ருசியான பானங்கள், ஐந்து கந்தங்களுடன் தாம்பூலம், நல்ல இழையுள்ள ஆடைகள், என்று இவ் வித உபதேசங்களால் பிட்சு சங்கத் தை அநுக்கிரகித்தவர், எதனால் பெண் கொள்ளல் மதுபானம் இவைகளை மாத்திரம் உபதேசிக்க வில்லை? அப்படியிராது. முற்று முணர்ந்த அவர் இவைகளைமாத்திரம் எப்படி கூறாது விட்டிருப்பார்? ஆகை யால் துஷ்டர்களான இந்தக்கிழட்டுச் சங்கத் தலைவர்கள் தங்களுக்கு உற் சாகம் மழுங்கிவிட்டதால் வாலிபர்க ளானஎங்களிடம் பொறாமைகொண்டு பிடக புத்தகங்களிலிருந்த ஸ்திரீ பரி க்ரஹ ஸுராபான விதிகளைக் கட்டா யம் மறைத்திருக்க வேண்டும். இப் பொழுது இவ்விதிகள் அடங்கிய மூல பாடம் அழிந்துவிடாத ஏட்டுப்பிரதி யை நான் எங்குக் காணலாம்? அதி லிருந்து புத்ததேவரின் உபதேச மு ழுவதையும் உலகத்தார்க்கு வெளிப் படுத்தினால் பௌத்த சங்கத்திற்கே நான் உபகாரியாவேன். (செல்கிறான்)

தேவ:—பாருங்கள், பகவானே, பாருங்கள். இவன் காவியுடையுடுத் து அச்சமில்லாது எல்லாரும்போய்க் கொண்டிருக்கும் இந்த ராஜவீதியில் அவயவங்களை யெல்லாம் ஒடுக்கிக் கொண்டும், இங்கும் அங்கும் விழித் துக் கொண்டும், அச்சத்துடன்காலடி

களை விரைவாய் வைத்துக்கொண் டும் போகிருன்.

*கபாலி:*—என் அன்பே! நீ சொல் வது சரி. இத்துடன் இவன் சிவரத் தில் (பிட்சுவின் ஆடை) எதையோ மறைத்திருப்பதுபோலவும் தோன்று கிறது.

*தேவ:*— ஆனல் அவனைச் சீக்கிர மாகப் பிடித்துப் பார்த்துத் தெரிந்து கொள்வோம்.

*கபாலி:*—அப்படியே செய்வோம். (அவன் அருகில் சென்று) ஓ! பிட்சு வே, நில்லும்.

*சாக்கிய:*—என்னைக் கூப்பிடுவது யார்? (திரும்பிப் பார்த்து) ஆஹா! இ வன்தான் ஏகாம்பரநாதர் கோயிலரு கில் இருக்கும் துஷ்டகாபாலிகன். இருக்கட்டும். இவன் குடிவெறிக்கு நான் ஆளாகமாட்டேன். (விரைவா ய்ச் செல்கிருன்.)

*கபாலி:*—பாரடி, என் கபாலம் கி டைத்துவிட்டது. என்னைக் கண்டு இவன் விரைவாய் அஞ்சி ஓடுவதே போதும். இவன்தான் திருடன் என் பதற்குச் சான்று வேறு வேண்டாம். (விரைவாய் அடுத்து முன் சென்று வழிமறிக்கிருன்.) அடே, திருடா! இப்பொழுது எங்கே போவாய்?

*சாக்கிய:*—ஓ! காபாலிக உபாஸக ரே! தகாது இது, தகாது. இதெ ன்ன?(தனக்குள்) ஆஹா! இந்த உபா ஸிகை எவ்வளவு அழகாயிருக்கிருள்?

*கபாலி:*—அடே,பிட்சு! காட்டு,பா ர்க்கலாம். உன்கையில் இதோ சீவா த்தில் நீ மறைத்து வைத்திருப்பதை நான் பார்க்கவேண்டும்.

*சாக்கிய:*—இதில பார்க்க வேண் டியதென்ன? இதில் பிட்சாபாத்திரம் தான் இருக்கிறது.

*கபாலி:*—அதைத் தான் பார்க்க வேணும்.

*சாக்கிய:*—ஓ, உபாஸகரே! இது உமக்குத்தகாது, தகாது. மறைத் தே இதைக்கொண்டு போகவேண் டும்.

*கபாலி:*—சரிதான். இது மாதிரி ஒளிப்பதற்காகவே பல கந்தைகளை உடுக்க வேணுமென்று புத்தன் உப தேசித்ததோ!

*சாக்கிய:*—ஆமாம்.

*கபாலி:*—இது மறைபொருளான உண்மை. உண்மையான உண்மை யை நான் அறியவேண்டும்.

*சாக்கிய:*—பரிகாசம் இம்மட்டில் இருக்கட்டும். பிட்சை வேளை தவறு கிறது. நான் போகிறேன். (புறப்படு கிருன்.)

*கபாலி:*—அடே! திருட்டுப் பய லே! எங்கே போவாய்? என் கபா லத்தைக் கொடுத்துவிட்டுப்போ. (சீவ ரத்தின் நுனியைப் பிடிக்கிருன்.)

*சாக்கிய:*— புத்ததேவருக்கு வண க்கம்.

*கபாலி:*—திருட்டு நூல் எழுதிய கரபடனுக்கு (மூலதேவன்) நமஸ்கா ரம் என்று சொல்லவேண்டும். இல்லை, இல்லை. இத்தொழிலில்கரபடனைவிடப் புத்தனே கைதேர்ந்தவன். ஏனென் ருல் பார்ப்பார்கள் விழித்திருக்கும் போதே, உபநிடதம், மகாபாரதம் இ வைகளிலிருந்து அவன் பொருள்களை க்கவர்ந்து பிடக புத்தகங்களில் (பொக் கிஷத்திற்போல) சேகரித்து வைத்தி ருக்கிருன்.

*சாக்கிய*—பாவம் சமிக்கட்டும்! பா வம் சமிக்கட்டும்!

*கபாலி:*— இவ்வளவு போக்கியனு கிய தபோதனனுக்குப் பாவம் ஏன் சமிக்காது?



*தேவ:*—பகவானே, தாங்கள் களை த்தாற்போலிருக்கிறது. இக்கபாலம் எளிதில் கிடைக்கக்கூடியதில்லை. ஆ கையால் இம் மாட்டுக் கொம்பிலிருக் கும் கள்ளைக் குடித்துவிட்டு மீண்டும் வலிமைபெற்று இவனுடன் தர்க்கம் செய்யலாம்.

*கபாலி:*—ஆகட்டும், அப்படியே.

(தேவஸோமை கபாலிக்குக் கள்ளைக் கொடுக்கிருள்.)

*கபாலி:*—(குடித்துவிட்டு) என் அன்பே! நீயும் சிரம பரிகாரம் செ ய்துகொள்.

*தேவ:*—அப்படியே. (குடிக்கிருள்)

*கபாலி:*—இவன் நமக்குத் தீங்கி ழைத்தவன். ஆனாலும் பொருளைப் பிற ர்க்கும் பங்கிட்டுக் கொடுக்கவேண்டு மென்றே நமக்கு உபதேசம். ஆகை யால் மீதியை ஆசாரியனுக்குக்கொடு.

*தேவ:*—அப்படியே. ஐயா,பெற்று க்கொள்ளுங்கள்.

*சாக்கிய:*—(தனக்குள்) ஆஹா! எதிர்பாராத அதிருஷ்டம் எனக் குக்கிடைத்திருக்கிறது. ஆனாலும் ஜன ங்கள் பார்த்துவிடக்கூடும். (வெளிப் பட) கூடாதம்மா, கூடாது. (நாக்கி னல் கடைவாயை நக்குகிருன்).

*தேவ:*—ஆனல் தொலைந்துபோ! உனக்கேது இவ்வளவு பாக்கியம்!

*கபாலி:*—என் அன்பே! மனமில் லாமல் கூறும் இவன் வாக்கு நாக்கு ஊறுதலால் தடைபடுகிறது.

*சாக்கிய:*— இன்னும் உனக்குத் தயவு வரவில்லையா?

*கபாலி:*—தயவிருந்தால், நான் எப் படி ஆசையற்றுப் போவேன்?

*சாக்கிய:*—தயவில்லாதது போல், கோபமும் இல்லாமல் போகவேண் டும்.

*கபாலி:*—என் பொருளைத் தந்து விட்டால், கோபம் போய்விடும்.

*சாக்கிய:*—உன்பொருள் எது?

*கபாலி:*— இந்தக் கபாலம்தான்.

*சாக்கிய:*—கபாலமா?

*கபாலி:*—கபாலமா—என்கிருனே! இல்லை, சரிதான். கண்கூடாகக் காண்கிற நிலம், கடல், மலைமுத லான பெரிய பொருள்களையே அறி வில்லாமல் பொய்யென்று சொல்பவ னதுமகனை உனக்கு ஒரு சிறு கபா லத்தை மறைப்பதா கஷ்டம்?

*தேவ:*—அவனைத் தாலாட்டினுல் தருவானு? ஆகையால் அவன் கையி லிருந்து பலாத்காரமாய்ப் பிடுங்கிக் கொண்டு போய்விடுவோம்.

*கபாலி:*—அப்படியே, என் அன் பே (பிடுங்கமுயல்கிருன்).

*சாக்கிய:*—தொலைந்துபோ, துஷ்ட காபாலிகனே!

(கையால்தள்ளிக் காலால் உதைக்கிருன்.)

*கபாலி:*—கீழே விழுந்து விட்டே னே!

*தேவ:*—செத்தாய் நீ தேவடியாள் மகனே! (சாக்கிய பிட்சுவின் குடுமி யை இழுக்கப்பார்த்து தாங்குதலில் லாமல் கீழே விழுகிருள்.

*சாக்ய:*— (தனக்குள்) தலையை மொட்டை யடிப்பதின் குணத்தை உணர்ந்த புத்தர் அறிவே அறிவு. (வெளிப்படையாய்) எழுந்திரு. உபா ஸிகையே, எழுந்திரு. (தேவஸோ மையைத் தூக்கி நிறுத்துகிருன்)

*கபாலி:*—பாருங்கள், மாஹேச்வ ரர்களே, பாருங்கள். சந்யாஸி யெ ன்று பெயர் வைத்துக்கொண்டு இந்த துஷ்டநாகசேனன் என் மனைவியின் கையைப் பிடிக்கிருன்.

---

# இந்தியரின் விவகாரம்.

ஸ்வாமி ராமதீர்த்தர் எழுதியது.

ரா. அனந்த கிருஷ்ணன் மொழிபெயர்த்தது.

**ஒற்றுமை:—** இதனை விரும்பாதார் யாரோ? நாட்டிலே அனந்தங்கோடி சக்திகள் உழைத்து வருகின்றன. ஒன்று மற்றது சென்ற வழியே செல்லாமல், வக்கிரமாகச் செல்லுகின்றது. இத்தனை சக்திகள் இவ்விதமாக உழைத்து வருவதால் விளையும் பயன் பூஜ்யமாகப்போய் விடுகிறது. மேதாவிகள், தோள் வலி படைத்தவர்கள் இவர்களுக்கும் ஒரு குறைவு இங்கு இலது. இவர்களும் பாடுபட்டு உழைக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் ஒருமைப்பாட்டினைப் பெறுமையால், இவ்வனைவர் உழைப்பும் 'சித்திர' மாகிச் சிதறிப்போய் விடுகிறது. இவ் அனைவரும் எதைக் குறிக்கொண்டு வாழ்கின்றனர் என இயம்பற்பாலதன்று. இவ் அனைவர் வாழ்வும் விழலுக்கே இறைக்கப்பட்டு வருகிறது. ஆயிரம் ஆயிரமாகப் பிரிவுகளும்,சாகைகளும் ஜாதிகளும், சமயங்களும் மலிந்து கிடக்கின்றன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வோர் துறையைக் குறிக்கொண்டு அதற்கே தேசமாகிற தோணியைச் செலுத்திக் கரைசேர்த்துவிடவேண்டும் என விழைகின்றது. இவை ஒவ்வொன்றும் இவ்வாறு தோணியை வலித்து இழுப்பதாயின், பாவம்—அந்தத்தோணி எந்த இடத்கென்று செல்லும்? இருந்த இடத்திலேயே சுற்றிச் சுழன்று கொண்டிருக்கும். இந்த 'அமர்க்களத்தை' ஒழுங்காக சாஸ்திரிய முறையில் படகைச் செலுத்திக் கரையேறுவது அசாத்தியமாகப் போய்விடுகிறது. இந்நிலைமையில், இத்தனை பெயர்களும்,தோணியைச் செலுத்த நாடாமல் அவரவருடைய துடுப்புகளைக் கீழே போட்டுவிட்டு வெறுமே இருப்பதுவே சாலச் சிறந்ததாகும். ஆனால் அவரவரும் தம் தம் ஸ்தானத்தை விட்டு எழுந்து போய்விடாமல் அங்கேயே இருக்கட்டும். சந்தடி தீர்ந்து அமைதி ஏற்பட்டதும், எல்லோரும் ஒரே துறையைக் குறிக்கொண்டு அதன் மாட்டு ஒய்யாரமாகப் பாடிக்கொண்டு தோணியைச் செலுத்தி வரட்டும். இப்படி ஒற்றுமையுடன் செய்தால், படகு முன்னே செல்லும். இந்த சமரசமும், வேற்றுமை நடுவே முளைத்திடும் இவ்வொற்றுமையும் இருந்தால் தான் முன்னேற்றம் பெறமுடியும். நமது நாட்டின், சாதி, நலனை கருதி நாம் வளர்க்க வேண்டுவதும் இவ்வொற்றுமையே யாகும். சாதி நலனை நாடாமல் நமது தனிநல உரிமைகளைத் தேடி அடைந்து கொள்வோம் என்பது அசாத்தியமான ஓர் விஷயமாகும். விசுவத்துக்கு க்ஷேமம் பிறந்தால் தான் வியக்திக்கும் க்ஷேமம் பிறக்க முடியும். அண்டத்துக்குள்ளதே பிண்டத்துக்கும்.

இவ்வண்ணம் சொல்லிவிடுவது மிக மிக எளிது. சொல்லுதல் யார்க்கும் எளியவாம். ஆனால் நாம் பெருங்கவலைகொண்டு ஆராய்ந்து அறிய வேண்டிய விஷயம் இதுவாகும். இவ்வொற்றுமையும் சமரச பாவமும் பெறுத நாடுகளுள் இந்திய நாடு ஒன்றுமட்டும் இந் நெடுங்காலமாக தலைசிறந்து விளங்கிவருவதன் காரணம் யாது? இதுவே ஆராயத்தககது. முக்கியமான காரணங்களாவன:—

(க) உலகிய லறிவில் வறுமை

(உ) மக்கட் பேற்றில் செழுமை.

இவற்றை முறையே ஆராய்வோம்.

(க) உலகியல் அறிவின் வறுமை.

முகமதியர் ஆட்சி இந்தியாவில் நிலைக்கு முன்னர், குராஸ்ஸன் நகரத்து அல்பெரூனி என்பான் இந்நாடு முழுமையுஞ் சுற்றிப் பிரயாணம் செய்து வந்தான். அவன் அறிவொளிபெற்று விளங்கிய ஓர் பெரிய ஸித்தாந்தி. கல்வி யறிவொழுக்கங்களில் சிறந்த சீலன். பிளாத்தன், அரிஸ்தோத்தலன் முதலிய மேலைநாட்டுச் சித்தாந்திகளின் நூல்களை எத்துணை ஆர்வத்துடன் விரும்பிக்கற்றானோ அத்துணை ஆர்வத்துடன் சம்ஸ்கிருத பாஷையையும், அதிலுள்ள சாஸ்திரங்களையும் விரும்பிக் கற்றுளான். தான் கண்டபடி இந்தியாவின் நிலைமையைப் பற்றிச் சவிஸ்தாரமாக எழுதிவைத்திருக்கிறான். இந்துமத சித்தாந்தம், காவியம், சோதிடம் முதலியவற்றைப்பற்றி பயபக்தி விநயங்களுடன் போற்றிப்பேசி யிருக்கிறான். அவன் சந்தித்த இரண்டொரு பண்டிதர்களிடம் நிரம்பியிருந்த கல்விக்கடலைக் கண்டு பெரிதும் வியந்து வியந்து கொண்டாடி எழுதியிருக்கிறான். ஆனால், மகாஜனத்தின், ஜன சாமான்ய நிலைமையைப் பற்றியும், பெண் மக்கள் நிலைமையைப் பற்றியும் அவன் என்னசொல்லுகிறான்? இவர்களது நிலையின் இழிவை எடுத்துரைக்க வல்லதோர் சொல் தனக்குத் தெரியவில்லை என்கிறான். இவர்கள் விழுந்து கிடக்கும் பாதாளத்தை வர்ணிக்க முடியாது என்கிறான். அத்துணை இழியநிலை. உடலிலே, உள்ளத்திலே, புத்தியிலே, ஏன்? ஆத்தியாத்மிக நிலையிலேயும் கூட, இவர்கள் பேடிகளாய்க் கயவர்களாய் பஞ்சைகளாய் இருக்கிறார்கள். கவனிப்பார் யாருமற்று, ஆனால் எல்லோராலும் மிதித்துத் தேய்க்கப்பட்டு நெளிகின்றனர். சமூகம், சமயம், இராஜரீகம், எந்தத் துறையில் சென்றாலும் 'அனந்த பேதங்கள்! நைந்துபோன உடற்கூறுகளுடன், மனதிட்பம் பெறாத இக்கோழைகள், கட்டு உடைந்த உடல்பெற்ற இப் பஞ்சைகள், போர்க்களத்தே நின்று வாள் வீசவல்லவராவரோ? வருடந்தோறும், இந்தியாவின் செல்வத்தைக்கொள்ளையடித்துக்கொண்டு போவதற்காக கஜினி மாமூதின் கீழ்ப் *படைஎடுத்துவரும் முஸ்லீம்கள் முன்னர் எதிர்த்து நிற்க மாட்டாமல் சூறைக்காற்றில் அடிபட்ட பஞ்சைப்போல் தூள் தூளாகப் பறந்துபோய் விழுகின்றனர். ஒரு கட்டுப்பாடு, ஒருபத்தி, ஒரு நிர்ணயம் எதுவுமே இவர்களிடம் இல்லை. இப்படியாக அவன் குறித்து வைத்திருக்கிறான். இவனுக்குப் பின்வந்த பேபர் என்ன கூறுகிறான் என்று கவனிப்போம். இந்தியமக்கட்கு புத்திசாலித்தனம் லேசமும் இல்லை. எதையாவது சொந்த யுக்தியினால் கண்டுபிடித்தார்கள், எதிலாவது திறம்பட ஆற்றும் தன்மை பெற்றுளார்கள் என்று கூறுவதற்கு இடமில்லை. கைத்



* சரியானபதம் நினைவுக்குவரவில்லை.

தொழில்களாகட்டும், சிற்ப சித்திர வேலைப்பாடுகளாகட்டும் எதிலும் ஞானசூனியராகவே திகழ்கின்றனர். சிற்பத்திறம் பொலிந்த அழகான கட்டடங்களாவது, மலர்களும் கனிகளும் கொஞ்சும் தோட்டங்களாவது, பெரியசோலைகளாவது வாய்க்கால்களாவது சமைத்துவெட்டிக்கொள்ளும் ஆற்றல் பெற்றிலர். வெடிமருந்துகூடச்செய்யத்தெரியாதெனின்பிற இயம்புவானேன்? இன்னும், பலர் தாராளமாக ஒன்றுசேர்ந்து ஒருகாரியத்தை ஆற்றவும் திறமையற்றவரென் இந்தியர்களை, பாபர் பழித்துக் கூறுகிறான். இக்கூற்றுக்களி னின்றும், மிகைபடக் கூறியவற்றைக் கழித்துப் பார்த்தாலுங்கூட, பெரும்பாலும் இவை உண்மை யெனவே காண்போம். அனுபவ அறிவுவறுமையே பாரதத்தின் வீழ்ச்சிக்கு உண்மையான காரணம்.

இவ் அன்னியர்களின் கூற்றை வாதத்தில் அடித்துப் பேசுவதற்கு எனக்குத் தெரியா தென்பதில்லை. மற்றவர்களைக் காட்டிலும் சமத்காரமாகப் பேசி இக் கூற்றுக்களை மறுத்துப் பேசிவிட முடியும். என்ன சொல்லிவிட்டேன்? இவ்வாசிரியர்கள் தாம் கண்ட மெய்யான விடயங்களையும், அசையாத உண்மைகளையுமே சிறிதும் மாறுமல் எழுதிவைத்துளார்கள். வேறு சான்றுகளின் துணையை நாடாமல், சுயம் பிரகாசமான சத்தியவாதங்களை எவ்வாறு இல்லையென்று நான் மறுப்பேன்? மேலே குறிப்பித்த அறிவின்மைகாரணம், இன்று நம் நாட்டை நலியச் செய்யும் பிணிகட் கெல்லாம். கைப்பாட்டில் (கைபால்பாடுபட்டுஉழைப்பதில்) ஒரு இழிவு உணர்ச்சி, சாதிசமயங்களை அடிப்படையாகக்கொண்டு இயற்கைக்கு மாறாக நிறுவப்பட்ட பிரிவினைகளும் உட் பிரிவினைகளும், தொலைநாடுகளுக்குச் செல்வதில் வெறுப்பு, சிசுமணம், பெண் மக்கள்பால் சுமத்தப்பட்ட அறியாமையும் வலியின்மையும்—இத்தனை பீடைகளுக்கும் மேலே சொல்லியதுதான் காரணம். இந்த ஸமூக அரிஷ்டங்களைத்துடைப்பது சுலபமான தொன்றன்று "நமக்குச்சந்தோஷமாயிருக்கவேண்டுமெனின், எத்தகைய சீர்திருத்தத்தையும் அணுகவொட்டாமல் தூரத்திலேயே வைத்துப் பார்க்கவேண்டும்" என்ற பர்க்கன் சொல் சால்புறுறது. வழக்கம், சம்பிரதாயம் என்பதன் தளைகளை அறுத்தெறிவது, அரும்பிரயாசை எடுப்போருக்கே சாத்தியப்படும். இதில், தொண்டர்களைக்கடுமையாகக் கண்டித்துப் பழிப்பதும், தொண்டர்கள் சமூகத்தைக் கண்டித்துப் பழிப்பதும் தவிர்க்கொணுத விளைவுகளாம். எனவே திரும்பவும் கார்ப்பு, மனஸ்தாபம், வேற்றுமை, இவற்றுக்கு விதை விதைப்பதாகிவிடும். இந்த வேற்றுமைக்குப் பயந்து சமூகம் எக்கேடு கெட்டால் என்ன என்று ஒதுங்கிக்கொண்டுவிடுவதோ? சமூகத்தின் நற்கதி யாதாலும் ஆகட்டும் என்று கைகழுவி விட்டு, தத்தம் சொந்த வீட்டுக் காரியங்களை மட்டும் கவனித்துக்கொண்டு கெட்டிக்காரப்பிள்ளைகளாக வாழஒருப்படுவதோ? சமூகத்தை ஆற்றிலே போகவிட்டு நாம் மாத்திரம் கரையேறிப் பிழைக்கப் பார்ப்பது.—ஹா! இதுமட்டும் சாத்தியமானல்—எவ்வளவு சுகமாக இருக்கும். மூழ்கிப் போகும் சமூகம் உன்னை மட்டும் தனியாக விட்டுவைக்காது. அது மூழ்குவதாயின் நீயும் கூடவே மூழ்க



வேண்டுவதுதான். கரையேறுவதாயின் நீயும் கரையேறிக்கொள்ளலாம். வேறுவழி இல்லை. முற்றுப் பெருத ஒரு சமூகத்திடையிலே, ஒரு தனிமனிதன் மட்டும் சம்பூரணம் பெற்று வாழமுடியும் என்று கொள்வது நகைப்புக்கே இடமாகும். அதைவிட, நமது கையைத் தனியாக வெட்டி வைத்துக்கொண்டு, அதைமட்டும் பூரண வன்மை பெற்றதாக்குவதில் சித்திபெற்றுவிடல்எளிதாகும்.

வேதாந்தத்துக்குமுரண்பட்ட இக்கருத்து நெடுங்காலமாக இந்தியாவில் பதிந்து வந்திருக்கிறது. இதன் பயன்தான், இன்று சமூகம் சின்னபின்னமாகச் சிதறிக்கிடப்பதாகும் செயற்கரிய ஆற்றலிருக்கும் இளஞ்சிங்கங்காள்! பாரதநாடு வருங்காலத்தில் அடையவிருக்கும் வைபவமே உங்களுடைய வைபவம். இவ்வைபவத்திற்குப் பொறுப்பேற்றவரும் நீவிரே! வேற்றுமை என்றமாயையின் ஆட்சிக்கு உட்பட்டு பயந்தவர்களே நடப்பர். ஆனல் சத்தியத்தை திருஷ்டியிலும் ஆதாரமாகவும் கொண்டு தூயவாழ்க்கை நடாத்தும் ஒரு ஆத்மாவே உலகோர் அனைவருடைய உள்ளங்களிலும் கருத்துக்களிலும் ஆட்சி செலுத்திவரும். வெளியே இராஜவேஷம் தரித்தவன் யாவனேயினும்சரி! உண்மையில் கோல் ஓச்சும் இறை முன்சொல்லிய ஆத்மாவே ஆகும். சர்வகலாசாலைகளில் அளிக்கப்படும் ஸ்நாதக, அத்தியட்ச பட்டங்கள் உங்களுக்கு எற்றுக்கு? இன்று நீங்கள் நிர்ணயம் செய்யவேண்டுவது—பேடியாக வாழ்வதா? அன்றி,வீரனுகவாழ்வதா? என்பதாகும். உங்களுடைய நிர்ணயம் என்ன என்று தெளிவாகக் கூறுங்கள். கொத்தடிமை போன்று வாழப்போகின்றீர்களா? அல்லது வாழ்க்கையில் இராஜன்போன்று உலவப்போகிறீர்களா? எது உங்களுடைய பிரியம்? தீரம் செறிந்த—ஆனல் தூய்மைநிரம்பிய—வாழ்க்கைபெற்றவர்கள் சரிதத்தின் போக்கை மாற்றிப் புரட்டிவைத்துவிடுவார்கள். தான் உற்ற பொருளின் போக்கைத் திரித்து மாற்றிவைப்பதே சக்தி என, நியூதனுடைய இரண்டாவது விதி அறைகின்றது. வழக்கத்தின்—பொய்யாசாரத்தின் சுவடுகளைப்பின்பற்றி இந்திய மக்களிடையே பரஸ்பர விரோதங்களும் இன்னும் கேவலமான பகைமைகளும் இத்தனை நாளாகத் தலைசுற்றி ஆடிக்கொண்டுவருகின்றன. கல்வியறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கும் இளைஞர்களே! விழலுக்கு வார்க்கப்படும் இத்தனை சக்திகளையும் தேக்கிப் பயன்படும் ஓர் ஆற்றில் செலுத்தவேண்டிய கடன் உங்களைச் சார்ந்ததாகிறது. இந்தப் பழைய ஜாட்டியத்தை, ஜடத்தன்மையை உதறி எறிந்துசக்திமான்களாய் எழுங்கள்! நாட்டிலே நடைபெறும் இயக்கங்களை மடக்கவேண்டிய இடங்களில் மடக்கித்திருப்பி விட்டு, கை கொடுத்துத் தள்ளிவிடவேண்டிய இடங்களில் தள்ளி விட்டு மாற்றவேண்டிய இடங்களில் அப்படியே மாற்றியும் நீங்கள் வைக்க வேண்டும். சமயோசிதம் போல நடக்கவேண்டும். இளைக்காமல் மேலும் மேலும் வேலை செய்து, இறந்த காலத்தை 'கருவில்' வார்த்து நிகழ்காலத்துக்குப் பொருந்திய வடிவத்தைச் செதுக்கிவிடுவீர்களா? இறந்தகாலத்தை உருக்கிவார்த்து எடுத்து நிகழ்கால உருப்பெற்றதாக மிளிரச் செய்யுங்கள்! பின்னர், வன்மை

யும் தூய்மையும் செறிந்த இந் நிகழ்காலத்தை வருங்காலத்திற்குத் தோற்றுவாயாக சமைத்து விடுங்கள். நமது மூதாதைகள் வைத்து விட்டுப்போன ஆஸ்தியைக் கைப்பற்றுமல் நழுவவிட்டு விடலாகாது. அவ் ஆஸ்தியைத் துறந்து வாழும் சமூகம் புறத்தில் நின்றும் அழிவெய்தும். அதற்காக அதனையே முற்றிலும் நம்பி வாழ்ந்தும் வரப்படாது. அங்ஙனம் அவ்வாஸ்தியின் காணியாட்சியே மேலோங்கி நின்றதானல் அப்பொழுது அந்த ஸமூகம் அகத்தினின்றும் நாசத்தை அடையும். உண்மை கடைப்பிடித்து நீங்கள் வாழ்ந்து வருவதால் சமூகத்திய கலகம் ஒற்றுமை முறிவுகள் விளையும்போல் இருக்கிறதா? உங்களுடைய கருத்து அதுதானு? உன் பக்கத்தில் நீ தன்னந்தனியாகவே நின்றாலும், உறுதியுடனே நிற்பாய். பின்னோக்காதே. அது தான் ஆண்மை. உன்பக்கத்தில் தான் இப்பொழுது காற்று அடிக்கிறது. அலேயும் உனக்கு அனுகூலமாகத்தான் இருக்கிறது. அவர்கள் இறந்தகாலத் தம்பத்தைப் பிடித்துக் கரையிலேயே நிற்கட்டும். தைரியமாகப் படகை விட்டுக்கொண்டு நீ முன் நோக்கிச் செல், வருங்காலத்தின் ஸாம்ராஜ்யம் முழுவதும் உன்னையே வந்தடையும். ஆனல் ஒன்று. உண்மை நெறிநின்று மாத்திரம் ஒரு சிறிதும் நீ பிறழ்ந்து விடலாகாது. தர்மத்தின்மீது நிர்மாணிக்கப்படாத ஓர் போலி ஒற்றுமையால் சாதி கரையேற்றப் பெற்றுவிடும் என்று நினைக்கிருயா? அந்தகாரத்திலே அடைத்துப் போட்டு வைப்பதால் ஜனங்களை ஒன்று படுத்திவிடமுடியும் என்பது உனது எண்ணமோ? பொய்யரசாத்திற்கும் அறியாமைக்கும் அடிமையாகி விட்டால் சாதியில் சமரசம் தளிர்க்கும் என்று கருதுகின்றனையா? உதாரணமாக, படகோட்டிகள் அனைவரும் ஒரு திசையை நோக்கியே படகைச் செலுத்துகிறார்கள் என்று வைத்துக்கொள். ஆனல் அவர்கள் குறிக்கொண்ட திசை கரையின் பக்கமாகச் செல்லாது நேர் எதிராகச் செல்வதாயிருந்து விட்டால், விரும்பத்தக்கதாமோ? வளர்ச்சிநெறியை அடுத்ததாகஇராது உண்மைக்கு மாறுபடுவதாக இருப்பதாயின் அதனை விழைவாயோ? அத்தகைய படகு ஒரு பாறையில் மோதித் துண்டு துண்டாக உடைந்துதான் போகும். இங்ஙனம் உடைவதாயின் சீக்கிரமாகத் தகர்ந்து போய்விடுவதே சர்வ ஸிலாக்கியமாகும். இத்தகைய சந்தர்ப்பத்தில் சந்திப்பென்பதை விண்ணுலகில் தான் பார்க்க வேண்டும்! இம் மண்ணுலகில் காண முடியாது. தூய்மையையும் வாய்மையையும் அடிப்படையாகக் கொண்டு எழுவதானல் தான் ஒற்றுமை இங்கு சாத்தியமாகும். சாதிய ஒற்றுமையில்பெரிதும் ஆர்வங்கொண்டுள்ள வீரர்காள்! நீங்கள் முதன்முதலாகச்செய்து முடிக்கவேண்டியகாரியம் இப்பொழுது ஜாதியைப்பிணித்திருக்கும் கணக்கற்ற நிர்மானுஷ்யமான பாவங்களின், பிழைகளின் பந்தங்களையெல்லாம் அறுத்தெறிந்து ஜாதியை இவற்றின் பிணிப்பினின்று விடுவிக்க வேண்டும். மானுடம், சத்தியம், தர்மம், முன்னேற்றம் இவை காரணமாக ஒரு போழ்து மகாஜனம் சங்கடத்திற்குள்ளாகவும், மறுபோழ்து தொண்டர்கள் கொடுஞ்சிறை நண்ணவும் நேர்ந்து விட்டால், என்ன? அப்பொழுது தான் ஜாதியின் உசுவாஸ



நிசுவாஸங்கள் மேனுங்கிழும் கிரமமாகப்போய்க் கொண்டிருக்கின்றன, என்று தெரிந்து கொள்ள முடியும். ஆன்ம நெறியில் அது கண்விழித்துக் கொண்டுதான் இருக்கிறது என்று ஏற்படும்.

ஓர் இலக்கான குணசீலனிடத்து துன்பத்தையே காணமுடியாது. அவன் சாந்திக் கடலாகத்திகழ்வான். அன்பும் அறிவும் நாலாபக்கங்களிலும் கதிர்வீச அவன் ஜ்வலித்துக்கொண்டிருப்பான். ஆனல் துன்பமே சூரியகிரணங்களாக விழுந்து, ஒளிபரப்புவது நமது ஜாதிக்கு நாராசத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோல் இருக்கிறது. ஒளி பெறுவதென்றல் கொலைக்களத்துக்குப் போகிறதுபோல் நமது சாதி நொந்து போகிறது. இத்தகைய சமூகத்திடையில், துன்பத்தின்கறைபெருத நிறைசாந்தியும், ஆத்மோத்தீபனமான ஜோதியும் உறைதல் எங்ஙனம் சாத்தியம்? ஆகவே, இடம் பொருள் ஏவல்களின் தன்மையினை அடுத்து, ஆதர்ச சீலம் இங்கு அரும்பாது; ஆயினும், ஆதர்சமாகஇல்லாவிட்டாலும்போலியாக பாஷண்டித்தனமாக இருந்து விடாமல் உங்கள் சீலம் சுயமானதாகத் திகழட்டும். எல்லாவற்றுக்கும், இன்று இங்கு வேண்டுவது இதுதான். குறுநோக்கங்கள் கொண்ட பெரிய மனிதர்களல்லர்ஒரு நாட்டுக்கு உரம் செய்பவர்கள். மற்று பெரிய நோக்கங்கள் பூத்த சிறு மனிதர்களே ஒரு நாட்டிற்கு பலம் கொடுப்பவராவர். மிருகப்பிராயமான ஊமைவாழ்வு சாந்தி மயமாகத்தான் இருக்கும். சுடுகாடும் அமைதி நிறைந்து தானிருக்கும். நாம் விரும்புவது உயிரில்லாத இந்த சாந்தியன்று. ஜீவ சாந்தியை நாம்நாடுகிறோம். வெளியே இருளில் ஜனங்கள்இடறி வீழ்ந்துதத்தளித்து அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்க உன்கையிலுள்ள விளக்கைப் புதருக்குள்ளே மறைத்துவைத்து விட்டு வாளாவிருப்பது அடுக்குமோ? இதைவிட உன் கையில் விளக்கே இல்லாமல் இருப்பதன்றோ சிறந்ததாகும். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், ஜனங்களைக் கரையேற்றி விடக் கூடிய மந்திரத்தைத் தெரிந்து கொண்டிருந்தும், அதனை வாய்விடாது தனக்குள்ளே அடக்கிக்கொண்டு ஊமையாக இருந்துவிடுபவனை என்னென்று சொல்லுவது? யுத்தகாலத்திலே தனக்குக்கொடுக்கப்பட்ட இடத்தை விட்டு ஓடிப்போகிறவனினும் இழிவான கயவனுகவே மேற்சொல்லியவனை மதிக்கவேண்டும்.

# இருக்கு வேதத்து உருத்திர தேவதை.

க.

த. இராமகிருஷ்ணன்.
(வேத மாணுக்கன்)

இருக்கு வேதம் மண்டலம்-க. சூக்தம்-ச௩.

தமிழ்.

க. சீரிய அறிவுடையானும், ஈகையாளனும், வலிமையுடையானும், இரக்கமுடையானுமாகிய மருத்துவனை யாம் எஞ்ஞான்றும் இனிய உரைகளால் வழுத்துவோமாக.

உ. மக்கள், குழவிகள், பசுக்கள்;

...லங்குகளாதி யாவர்க்கும் உணவுப் பொருட்களின் நியதியும் மருந்துகளும் எவ்வகையாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

௩. நண்பனும் சான்றோனுமாகிய மருத்துவன் நம்மை நன்கு ஆராய்ந்து சோதித்து மருந்தீதலுக் கேற்ப, யாமும் நம்பிக்கையுடன் மருந்துண்ணல் வேண்டும்.

௪. சோதித்துணர்தலில் தேர்ந்தவனும், சத்தான மருந்துகள் ஆக்குகின்றவனும், நீர் முறை மருத்துவம் அறிந்தவனும், அகப்புறக் கரணங்களுக் கேற்றவாறு சிகிச்சை புரிகின்றவனுமாகிய மருத்துவனை யாம அடைந்திடுவோமாக.

௫. சான்றோனும் வீரியங் காப்பவனும் புலன்களைத் தத்தம் நெறியில் செலுத்துகின்றவனும் கதிரவனை பொப்பப் பொன் போல் மிளிர்கின்றான்.

௬. ஆடவரும் பெண்டிரும் தத்தம் புலன்கள் பொறிகளாதி உறுப்புக்களை நன்னெறிக்கண் செலுத்தலால் உடல்நல மெய்துகின்றனர். அவ்வாறே, குதிரைகள் ஆக்கள் ஆடுகளும் நலன் பெறுகின்றன.

௭. தாவரங்காள்! பல நூறு மக்களாகிய எங்கட்கு உடலொளியும், உரன்மிக்க மக்கள் உள்ளமும், உயர் மிகு புகழும் நல்கிடுக.

௮. தாவரங்களின் வளர்ச்சியைத் தடை செய்கின்றவைகளால் நமக்கு வளர்ச்சி குன்று தொழிக. அவ்வாறே மாற்றாரும் அழிவாராக. உடலொளி பெருக்கும் உணவே! எங்கள் அன்னத்தோடிணைந்திடுக.

௯. தாவராதிகாள்! நீவிர் மனையகத்துச் சிறப்புற விளங்குகின்றீர், நுங்கள் சிரிய பொருத்தமுடைய உணவின் மிகுந்த ஒத்தாசையால் மக்கள் யாவரும் தேசுற மிளிர்கின்றனர். அதனை யுணர்ந்து உடல் நலனும் ஒளியும் அளித்திடுவீராக.

இம் முதல் உருத்திர சூக்தம் இருக்கு வேதம் முதல் மண்டிலம் நாற்பத்து மூன்றாஞ் சூக்தமாகும். இதன் சந்தசு அல்லது யாப்பு காயத்திரி. தமிழில் குறள் வெண்பாவை யொத்திருப்பது. கடைசிச் செய்யுள் அனுஷ்டுப் சந்தசு, முதலடியுடன் இரண்டாவதடியும் ஒத்து வருவது. இதற்கு இருடி அல்லது பொருள்காணும் வகை கண்ணுவ கௌர வெனப் படும். இச் சூக்தத்தின் பொருளை முதற்கண் உலகிற்கு வழங்கியவர் கண்ணுவரென்றுங் கூறுவர். தேவதை அல்லது உணர்த்தப்படும் பொருள் (Subject Matter) உருத்திரன். "ருத்ர:—ருக் ரோக: தம் த்ராதி கமயதி நாசயதி இதி ருத்ர வைத்ய:" உருத்திரன் நோய்களை யகற்றித் துன்பம்துடைத்தலால் மருத்துவனுவான். எனவே, இச்சூக்தம் மருத்துவ் வியலின்பாற் படும். இனி, பிறவிப் பிணியினை, யொழிக்கின்ற மருத்துவன் முழுமுதல் தலைவனுமிறைவனுதலால், அவனை வைத்தியநாதன், வைத்திய ராஜன் என்று இவ்வுருத்திரப் பெயரால் குறிக்கப்படும். மித்திரனும் வருணனும் சோமனும் இச் சூக்தத்திற்கு உருத்திரனுக்குள்ளிட்ட தேவதைகளாவர். இவர்கள் உருத்திரனுக்கு உதவிசெபவர். இது மருத்துவ வியலாதலால் மித்திரனுவான் வைத்தியனுடனிருந்து மருந்துகளை அளவையிட்டுக் கொடுப்பவன்; (Measure.) நோயாளியின் நண்பனுக அவனுடனிருந்து



உதவிசெய்பவன். வருணன் தூய நெறியுடைச் சான்றோன். நீர் தூய்மைப் படுத்திக்கொடுப்பவன். சோமன் தாவராதிகள் மூலிகைகள் (Drugs) இவ்வகையால், இச்சூக்தம் மருத்துவ நிலக்கணமும் உணவின் நியதியும் உடனுதவுவாரும் மருத்துவ வகையும் நோயனுகாவகையும் மருந்தும் உணவுவகையும் அறிவுறுத்தும். இச் சூக்தத்திற்குத் தமிழும் கருத்துரையும் பொருள் விளக்கமும்; வேத வுரை நூற்கள் பல வெளியிடுகின்றவரும், 'வைதிக தர்மத்தின்' ஆசிரியரும், மறை வளர்க்குங்கழகத் தலைவருமாகிய பண்டிதர் ஸ்ரீபாத தாமோதர சாத்வளேகர் கருத்தைத் தழுவி வரையப்படுகின்றது. இஃது தமிழன்னைக்கும் தமிழ் மக்களுக்கும் ஆற்றவேண்டியதோர் தாழ்ந்த பணியாகுமென்னுங் கருத்துடையேன். இப் பகுதியின் இறுதியில் இச் சூக்தத்திற்கு சமரச சன்மார்க்க நிலையத்தலைவர் உயர்திரு மறைமலையடிகள் கண்ட தமிழும், 'வேதம்' என்னும் இதழாசிரியர் வகுத்த பாட்டினுரையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அறிஞர் இவற்றின் ஒப்புமைகண்டு தெளிக.

## கருத்தும் பொருள்விளக்கமும்.

### ௧. மருத்துவ நிலக்கணம்.

௧. சிறந்த அறிவு, ஈகை, வலிமை, ஆழ்ந்த சிந்தனையுமுடைய வைத்தியனை யாம் எஞ்ஞான்றும் போற்றுவோமாக.

மருத்துவன் தூய உள்ளம், நல்லிதயம், ஆழ்ந்த சிந்தனை, மருத்துவ நூல்களில் நற்பயிற்சி, இதயத்து நன்னோக்க முடையவனுதல் வேண்டும். அவனுள்ளம் தன்னலமின்றிப் பிறர் நலம் நாடுந் தாராளத் தன்மை வாய்ந்திருக்கத் தக்கது. மருத்துவன் முயற்சியும், ஊக்கமும், உளவலியும் பிறர்பால் அன்பு செலுத்தும் இளகிய நெஞ்சமும் படைத்திருத்தல் இன்றியமையாதன. அவன் நோயை யுணர்ந்து, தீர்க்கும் வகை தெளிந்து நீக்குந் திறனுடையவனுதல் வேண்டும். இத்தகைய நலன்கள் வாய்ந்த மருத்துவனை யாவரும் விரும்பத் தக்கது.

அறிவிலி கல்வியில்லான் தன்னலங் கருதுபவன் ஊக்கமில்லான் கோழை நெஞ்சன் ஈரமில்லான் நோயாளியைக் கொள்ளையிடுபவனுவான். அவனை மருத்துவனென்று அழைத்தலாகாது.

### ௨. பத்தியமும் உணவின் நியதியும்.

௨. உண்ணல் பருகலாதி பொருட்களின் அமைப்பிற் கேற்ப உயிர்கள் யாவும் நோயினின் றகலுகின்றன.

உடல்நலத்திற்கும் உணவின் நியதிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உணவு மாறுபடின் உடல் நலமும் வேறுபடுதல் இயல்பேயாகும். உடல்நலம் வேறுபடுதலே நோய்க்குக் காரணமாதலால் ஈண்டு இச்செய்யுள் உணர்த்தப்படுகின்றது. உணவின் வகை ஆய்ந்து சிறந்த முறை பற்றி அமைக்கப்படுதல் உயிர்களுக்கு நலன் பயப்பதாகும். உணவும் ஒழுக்கமும் நெறிப்படுதல் வேண்டும். அவையே சிறந்த உடல் நலன் பெருக்குதற்கு உறுதுணையாகின்றன. நெறி பிறழ்வது நோய்க்கிடம். சிறந்த மருத்துவனை ஆராய்ந்து விரும்புவது போல; உணவின் நியதியை ஆய்ந்து அமைத்து முறைபட உட்கொளல் இன்றியமையாததாகும்.

இந்த மந்திரத்தில் இரண்டு அருஞ்சொற்கள் ஆளப்பட்டிருக்கின்றன.

அவற்றை முறைபட ஆய்ந்தாலொழிய மேலே குறித்த உண்மைகள் புலப்படா. அவை அதிதி ருத்ரியம் என்பன. "அதிதி" தேவதை உயிர்களனைத்திற்கும் "ருத்ரியம்" அல்லது மருந்து செய்கின்றது. அதிதியினால் உயிர்களின் நோய்கள் அகல்கின்றன. இவற்றுள் அதிதியென்பது:-

"யாவன் காணப்படுகின்ற யாவற்றையும் படைத்து, அவற்றை உண்பவனாக விளங்குகின்றானோ, அவனே அனைத்தையும் உண்கின்றான். இதுவே அதிதியின் அதிதித் தன்மை அல்லது உணவு கொள்ளும் இயல்பு. அவன் யாவற்றையும் உண்பவன். அவனுக்கு இவை யாவும் உணவாக விளங்குகின்றன. அந்த அதிதி இவற்றை உணவென்று இயல்பாகக் கருதுகின்றான்"

சதபத ப்ராமணம். ௧0-௬-௫-௫.

ப்ரஹதாரண்ய உபநிஷத் ௧-௨-௫

இறைவன் ஊழிக் காலத்து தன்னால் படைக்கப்பட்ட பொருட்கள் யாவற்றையும் உணவாகவுட்கொள்ளுகின்றானதலால், அவனைச் சிறப்பாக அதிதி என்னும் பெயரால் விளிக்கப்பட்டது. இவ் ஊழிக்கால வருணனையில் "அத்திதி ததிதே ரதித்வம்" உணவு கொள்ளும் நியதியினை அதிதித்துவம் என்று கூறப்பட்டது. "அத்—பக்ஷணே" என்ற பகுதியடியாக (அத்+இதி=அதிதி) அதிதி என்னும் மொழி தோன்றுதலானும், உணவு வகை உட்கொள்ளும் முறை யாதியவற்றை உணர்த்துவனவாகும்.

"ருத்ரியம்" என்பது மருந்து. ஆதலால் நோய் அகற்றும் ஆற்றல் என்னும் பொருள் படும். உணவு வகைகளைத் திறம்பட ஆய்ந்து முறை பிறழாது உட்கொண்டு ஒழுகுதல் உடலில் நோயகற்றும் ஆற்றலை வளர்ப்பதாகுமென்பது கருத்து.

௩. நோயாளியிடத்து அன்புடன் பழகுதல்.

௩. உற்றதுதவும் நண்பனும் சான்றோனுமாகிய மருத்துவன் சிகிச்சை புரிதற் கிணங்கவே யாமும் அன்புடன் மருந்துண்ணல் வேண்டும்.

நோயுடையானது *நலன் கருதுகின்றவனும், அவனது தோழன் அல்லது நட்புரிமையால் உற்ற ஊழியம் புரிகின்றவனும் மருத்துவன் ஆணைக்கிணங்கப் பிணியுடையானுக்கு உதவிசெய்திடுக. †நிறுவையானும் அளவையானும் மருந்துகளை அளவிட்டுக் கொடுப்பவன் வைத்தியனுடன் இருத்தலவசியம். மருத்துவன் மருந்துகளை அளவிட்டுக் கலக்கும் பொழுதும், மருத்துவன் ஆணைப்படி மருந்துகளை நிறுவையிட்டும் அளவையிட்டும்கணக்காகக் கொடுக்குங்காரியத்தையும் இம்"மித்திரன்" செய்தல் கூடும். ०பருகும் நீர் தூயதாகவிருத்தல் வேண்டும். §மருந்து உள்ளன்புடன் உட்கொள்ளத்தக்கது. மருத்துவன் அடிக்கடி சென்று கண்காணித்தலவசியம். பிணியாளியிடத்துநிறைந்த

* இம்மந்திரத்தில் மித்திரன்=நண்பன் அல்லது தோழன். † மித்ர=மி+த்ர=மா-த்ர=அளவு. அளப்பவன் (Metre, measurer) என்று பொருள்படும். ० ஸ—ஜாவஷஸ-வருணன்—நீருக்குத் தலைவன்; நீர் கொடுப்பவன், சான்றோன். § "ஜுஷ்-ப்ரீதி ஸேவநயோ" விருப்புடன் ஏற்று சேவிக்கின்றவன். இன்பம் ஊட்டுதல், தன்வயப்படுத்தல், சென்று காண்டல்.



அன்புடையவனாகி மகிழ்வுடன் மருந்திதலும், பிற எண்ணங்களில் மனம் புகவிடாது இனிய உரைகள் பகர்ந்து காத்தலும் பிறவும் மருத்துவர்க்கின்றியமையாதன.

௪. மருத்துவ வகை.

௪. சோதித் துணர்தலிற் சிறந்தவன், பலவகை, சத்தான மருந்துகளை யுடையவன், புறத்து உடலினும் அகத்து அகக்காணங்களுக்கும் நலன் பயக்கும் நீர் முறை மருத்துவமு முணர்ந்த வைத்தியனை யாவரும் நாடுக.

இச்செய்யுளில் மூவகை மருத்துவ முறைகள் குறிக்கப் படுகின்றன. அவை ஹ்காத்தபதி, மேஹ்தபதி, ஜலாஷ பெஷஜம் என்பன.

(க) ஹ்காத்தபதி:—(ஹ்காத்த) இசை, பாட்டு (Song), இசை வல்லோன். இசை இசைத்து நோய் நீங்கச் செய்தல். இசையினால் நோயகற்றும் முறையினை மருத்துவர் ஆய்ந்து துணிதல் கடனும். இசையினால் நோயுடையானை அறிதுயிலில் (Hypnotic Sleep) ஆழ்த்தி, தனது இச்சா சக்தியை ஊட்டி நோயகற்றும் முறை யோகக் கலையின் பகுதியாகக் காணப் படுகின்றது. எவ்வகையானும் இவ் வித்தை இச்சொல்லால் சுட்டப் படுகின்றது. பாடுதலால் பாடுகின்றவனுள்ளம் இன்ப மெய்துகின்றது. மனம் இன்பமடைதல் உடல் நலன் பயப்பதாகும். பாடுதலால் நீண்ட ஆயுட் பெறப்படுகின்றது. *நோயின் தன்மையைச் சோதித்து உணர்தல். முன் நிகழ்ச்சிகளைக் கேட்டறிந்து நோயின் காரணங் கண்டு தெளிதல் என்பனவும் கொள்ளலாகும்.

(உ) மேஹ்த†பதி—பலவகைச்சத்துக்கள் சாரங்கள் நெய்கள் எண்ணெய்கள் கஷாயங்கள் முதலியவற்றால் பிணி தீர்க்கின்ற மருத்துவன்.

(௩) ஜலாஷ-பேஷஜம்:—நீரினால் மருத்துவம் புரிதல். இந் நீர்முறை அதர்வ வேதத்து விளக்கப்படுகின்றது. அதர்வம் ௬-௫௭-ல் முதன் மூன்று மந்திரங்கள். "இது உண்மையாகமருந்து. வைத்தியனுக்குற்ற மருந்து. இதனால் பல நூறு வகையான துன்பங்களும் பிணிகளும் அகலுகின்றன. நீரினைப் பருகுக. நீரினைப் பயன் படுத்துக. நீரே மிக உயர்ந்த மருந்து. நீரினால் உடல் நலனும் ஆயுளும் பெருகுகின்றன. நீரினால் அகக் காணங்களுக்கு அமைதியும் புறவுடலுக்குத் தூய்மையும் விளைகின்றன. இதனால் துயர் அணுகுவதில்லை. குற்றங்கள் யாவும் விலகுகின்றன. இத்தகைய நன்மருந்து நம்மிடையே நிலவுகின்றது" உடம்பின் உள்ளும் புறமும் நீரை வழங்கலால் நோய்கள் யாவும் நீங்குகின்றன. இன்னும் இருக்கு வேதத்து (௧0-௧௩௭-௬)ல்

"நீர் உண்மையான மருந்து. நீர் நோய் நீக்குகின்றது. எல்லா நோய்களுக்கும் நீர் சிறந்த மருந்தாகும். இந்நீரை நீவிர் மருந்தாகப்பயன்படுத்துவீராக." என்றும் இத்தகைய பல மந்திரங்களும் காணப்படுகின்றன. அதனை மருத்துவர் ஆய்ந்திடுக.

* ஹ்காத்த—சேகரித்தல், ஆய்ந்துணர்தல், வழிகாண்டல், வினுதல், துணிதல், சோதித்தல். † மேஹ்த—சத்து, சாரம், நெய், கியாழம். (Juice, Sap, Essence.)

இச் செய்யுளில் (க) ஜலாஷ பேஷஜன், நீர் முறை மருத்துவன் (Hydropathist) (உ) மேஹ்தபதி, யொழம் முதலிய சத்துப் பொருட்களால் நோய் தீர்க்கும் மருத்துவன் (Allopathist) (ங) ஹ்காத்தபதி, இசைபோன்றவற்றால் மனத்தைவயப்படுத்தி நோய் நீக்கும் மருத்துவன் (Hypnotist) ஆகிய மூவகையார்களையும் அறிவுறுத்தப்பட்டன.

இத்துடன்:—

ஹஸ்தாப்யாம் தச சாக்காப்யாம்
ஜிஹ்வா வாச: புரோஹ்கவி
அநாமைத்நுப்யாம் த்வா தாப்யாம்
த்வோப ஸ்ப்ருசாமஸி.

இருக்குவேதம் கூ-சுஎ-எ.

"நாவின் நுனியால் மொழிகளை ஒலிக்கின்றேன். பத்துப் பகுதியினவாகிய நோய்களை யகற்றுகின்ற இருகைகளாலும் நின்னைத் தொடுகின்றேன். கைகளால் தொட்டு நின் நோய் அகற்றுகின்றேன்."

இப்பாவில் இருகைகளால் தொட்டு நோயகற்றும் முறை கூறப்படுகின்றது. கைகளால் தொடுதலாலும் ஒலித்தலாலும் நோய்கள் விலகுகின்றன. கையின் பத்துப் பகுதிகளும் பத்து விரல்களாகும். மனம், மொழி, கைகளாகிய மூவகையால் நோயகற்றுதல் இதனால் சுட்டப்பட்டன. யோக வித்தையால் மனோசக்தி வாயிலாக நோயகற்றுந் தன்மையினை இச்செய்யுள் வலியுறுத்துகின்றது. இவ்வகையாக, நோயகற்றும் மருத்துவர்களைச் சரதமாகக் குறிக்கும் பெயர் உருத்திரன் என்பதாகும்.

இதில் 'சம்-யொ' என்னும் மொழி வைத்தியனது இருவகைக் கடமைகளை வற்புறுத்துகின்றது. மருத்துவன் உள்ளம் அல்லது அகக்கரணங்களை முதலாவதாக (சம்) அமைவுபெற வைத்தல் வேண்டும். பின்னர் (யொ) புறக்கரணங்களுக்கு நலன் பயத்தல் வேண்டுமென்பதைக் குறிப்பிடுகின்றது. கரணங்களைச் சமப்படுத்தி வேற்றுமை களைதல் மருத்துவர் கடமை. மருந்து மட்டிலும் கொடுத்து விடுதலால் வைத்தியன் பொறுப்பு நீங்கிவிடாது. நோயாளியின் மனத்தை ஒழுங்குபெற நிறுவுவதே அவன் கடமையாகும்.

## ரு. நோயணுகா வகை.

ரு. சிறந்த ஒழுக்கமுடையானும், வீரியத்தைக் காக்கின்றவனும், புலன்களை யடக்கித் தத்தமியல்பிற் செலுத்துகின்றவனும் ஒளியெய்துகின்றான்.

பிரமசர்யாதி சிறந்த ஒழுக்கங்களால் *வீரியங் காத்து, †செந்நெறி பற்றித் தன்னிலேயோம்பிப் ௦புலன்கள் பொறிகளாதி உறுப்புக்களைத் தன்வயப்படுத்தி நன்னெறிக்கண் நிற்கின்றவன் கதிரவனை யொப்பக் காந்தி பெறுகின்றான். வீரியங் காவாது தீநெறிபற்றிப் புலன்களை யதன்வழிச் செலுத்துகின்றவன் ஒளியிழக்கின்றான். தூய்மை, அழுக்கின்மை, வீரியங் காத்தல், நல்லொழுக்கம், புலவடக்கம் முதலியவற்றால் நோயணுகமாட்டா. தூய்மையின்மை, அழுக்குடைமை, வீரியக்கேடு, தீயொழுக்கம், புலன்கள் சென்ற வழியே செலுத்தலால் நோய்களுண்டாகின்றன.

சு. மேற்குறித்த குண நலன்கள் ஞகவரப்பெற்றோர்* உடல்நலமெய்தி இன்புறுவர்.

இந்நலன்கள் யாவும் கைவருதலால் உயிர்களனைத்தும் உடலூர முற்று இன்பமெய்துகின்றன. இத்தகைய சிறந்த நியதியின் வழி யொழுகுவார் நோய்களால் பீடிக்கப்படார். மனவமைதியுடன் உடல் வளமும் பெறுவர்.

## சு. மருந்துப் பொருள்.

எ. மூலிகைகள் தாவராதிகளையுண்பதால் அழகிய உடலும், முயற்சி மிக்க உள்ளமும், உயர்வுடைப் புகழும் படைத்திடுவர்.

மேற்கூறியவாறு வீரியங் காத்தலும் புலவடக்கமும் இல்லாதார் பலபிணிகளாலும் மிகுந்த துன்பம் அடைவரென்பது திண்ணம். அன்னனம் துன்புறுவார் அதனைப் போக்குதற்கு விழைதலால் மருந்துண்ண வேண்டுவது இன்றியமையாததாகின்றது. அம்மருந்து சோமவல்லி முதலியன. மூலிகைகளையும் தாவர வகைகளையும் 'சோமம்' என்ற சொல்லால் உபலக்ஷணயாக உணர்த்தப்படுகின்றது. தாவர வகைகளுக்கு சோமம் அரசு. மூலிகைகளுள் சோமவல்லி மிகச் சிறந்தது. சோமவல்லி பொன்றையே குறிப்பினும் குறித்திடுக.

சோமவல்லி + உடலொளியும் * உளவலியும் § புகழும் பயப்பது. உளவலியைக் குறித்தற்கு 'ந்ரும்ணம்' என்ற சொல் வழங்கப்படுகின்றது. இது சிறந்த தலைமைத் தன்மை வாய்ந்த மேதக்கார் மனத்தினை உணர்த்தும்.

## எ. உணவுப் பொருள்.

அ. தாவரங்களினின்று விளைகின்ற உணவுப்பொருட்களே யாவரும் உண்ணுதற்குரியன. மாற்றார் தாவராதிகளை அழிக்காது காத்திடுக. தாவரங்கள் அழிவதால் யாவர்க்கும் அழிவு நேரிடும்.

தானிய வகை, காய்கறிகள், கீரை வகை, மூலிகைகள் முதலியவற்றை வளரவிடாது தடுக்கின்ற தீயோரும், பிறர் நலன் நாடாத, ஈகையில்லாத, தன்னலங் கருதிப் பிறர் பொருள் பறிக்கின்றவரும் மக்கட் சாதிக்கு மாற்றாராவர். இவ்விரு பகைஞரும் எவ்வகை உயிரையேனும், அழித்திடாது காத்தல் அறிஞர் யாவர்க்குங் கடனும். தானிய வகை, காய் கனிகள், பூவகை, கீரை வகை, மூலிகைகள் முதலியன 'நன்கு செழித்து வளர்ந்தோங்கி மக்கள் யாவருக்கும் உணவாகத் தக்கவாறு பாதுகாத்துப் பயன்படுத்தல் மக்கட் குயர்ந்ததோர் அறனுகும்.

* சுக்ர—தூய்மை, வீரியம், இரேதஸ், இருபாலர்வன்மை. (Male and female energy) தூயதை வீரியங்காக்கின்ற ஊர்த்துவ இரேதசுடையானை 'சுக்ர' னென்பர். † சிரேஷ்ட—அறநெறிச் செல்வோன், ஒழுக்கமுடையான். ௦ தேவாநாம் வசு—தேவ என்பது புலன்கள், உறுப்புகள். வசு—உறைதல், நன்னெறிக்கண் நிற்றல்.

* ஸுகம் = ஸு + (G) கம் = ஸுஷ்டு + (G) கமனம் — உறுப்புக்களை நன்னெறியில் செலுத்திப் பெறும் இன்பம். உறுப்புகள் தத்தம் அலுவலைச் சரிவர நிகழ்த்தலாலெய்து மின்பம். + ஸ்ரீ—செல்வம், மேன்மை, அழகு, அருள், ஒளி, நிறம், அறிவு, மெய்யுணர்வு, (Super-human power) மொழி, சொல்லாற்றல். * ந்ரும்ண — ந்ரு-மந = மக்களின் மனம், உயர்ந்தார் உள்ளம், உலகினை நடத்தும் தலைமை வாய்ந்தார் உள்ளம், மன அமைதி. § ச்ரவ—புகழ், கீர்த்தி, கேட்குந்திறன். இவ்வுரைகளால் இம்மந்திரத்திற்கு ஏற்ற பெற்றி பொருள் காண்க.

அன்னத்துடன் காய்கறி யுணவே சாலச்சிறந்தது. இதனை * 'இந்தோ வாஜெ பஜ' சோம! அன்னத்துடன் இணைந்திடுவாய் என்ற தொடர் விளக்குகின்றது. இதன்கண் மக்கட்குப் பொருத்தமான தாவர உணவின் உயர்வினைச் சிறப்பித்தும், பொருந்தாத பிற சிவகருணை நெறிக்கு மாறுபட்டவற்றை அழித்தற்கு வற்புறுத்தலும் கூர்ந்து ஓர்ந்திடுக. இது பின்வரும் மந்திரத்தாலும் தெளியப்படும்.

௬. இல்லங்களுக்குத் தாவர உணவே சிறப்புடையது. இத்தகைப் பொருந்தும் உணவை உண்பவர் உடல் வளமெய்தித் திகழ்வர்.

+ இல்வாழ்வார்க்குத் தாவரவுணவே இன்றியமையாது வேண்டப்படுவது. மக்கட்குத் (ருதம் அம்ருதம்) தக்க உணவுப் பொருட்கள் தானியவகைகளும், காய் கனிகளும் பிற தாவராதிகளுமாகும். கனியுணவும் சாலச் சிறந்தது. தாவரவுணவு கொள்வார்க்கு உடல் வளம் பெருகி ஒளி மிகுந்திடும். கனி யுணவினால் பல நோய்கள் அகல்கின்றன. அம்ருதமென்பது பலவகைக் காய் கனி கிழங்குகளையும், நெய், பால், அன்னம், நஞ்சு நீக்கும் மருந்து முதலிய பிறவற்றையும் உணர்த்தும். அ-ம்ருத என்று பிரித்து இறவாத (Not dead) என்ற பொருளால் உயிருடைச் சீவர்களை உயிர் நீத்து ஊனுண்டல் பொருந்து மென்று கொள்ளுதல் தவறுகும். இம்மொழி கனியுணவைப் பேசிறப்பாக உணர்த்துகின்றது. 'ருதம் அம்ருதம்' என்றவிடத்து நிலைத்த, உரிமையான, கொள்ளத்தக்க (Acceptable food) உணவு என்று பொருள் படுதல் காண்க.

இச் சூக்தத்தை நுணுகி ஆராய்வார்க்கு உடல் நலங் குறித்த பல சிறந்த உண்மைகள் புலப்படலாம். அவை அறிஞர் மேற்றதாகும்.

இதுகாறுங்கூறியவாற்றால் வைத்திய நூல்களில் தேர்ச்சியும் பிறர்க்குதவு முள்ளமும் ஊக்கமும் அமைதியுமுடையான் மருத்துவ னாதற்குரியா னென்பதும் உணவின் முறை ஆய்ந்து அமைத்து ஒழுங்குபெற உட்கொள்ளின் நோய ணுகா து காக்கும் பெற்றியன, முறை பிறழ்தலே நோய்க்கிடனு மென்பதும் உணவானன்றிச் சிறந்த ஒழுக்கமும் வீரியங் காத்தலும் புலன்களை தத்தமியல்பிற் செலுத்தி தூயநெறி பற்றியோர் உடல் வளமும் பிருந்த வனப்பு மெய்துவர், இந் நெறி கடந்தார் நோயுறுவ ரென்பதும் அந் நோய் தணித்தற்குக் கியாழ முறை நீர்முறை மனவசிய முறை பரிச முறையும் பிறவுமுள வென்பதும் நோய் தீர்ப்பாரும் உடனுதவு வாரும் நண்பராகவும் தூயராகவும் மன நலனளித்து நோயகற்றல் வேண்டு மென்பதும் அந்நோய் நீக்கும் மருந்துப் பொருட்கள் மூலிகைகள் தாவராதிகளா மென்பதும் அவை சிறந்த உடல் வளமும் உளவலியும் புகழும் பயப்பனவா மென்பதும், மக்கட்குரிய உணவு தானியவகை காய்





கனிகள் பூவகை கீரைவகை மூலிகைகள் முதலியனவா மென்பதும் அவற்றின் வளர்ச்சியைத் தடுப்பவைகளி னின்று காத்துச் செழிப்பித்தல் வேண்டு மென்பதும் இல்வாழ்வார்க்குத் தாவர உணவே ஏற்புடையதும் சாலச் சிறப்புத் தருவனவா மென்பதும் பிற ஊனுணவு கொள்ளத் தக்கன வன்றென்பதும் பிறவும் அறிவுறுத்தப் பட்டனவாம்.

இச்சூக்தத்திற்கு உயர்திரு மறைமலையடிகள் 'செந்தமிழ்க் களஞ்சிய'த்தின் புறவிதழொன்றில் வேதங்கள்பல தெய்வ வழிபாடு குறிப்பன வென்பதை யுணர்த்த எடுத்துக் காட்டிய மொழி பெயர்ப்பு வருமாறு:—

௧. வலியராய் மிக்க ஈகையுடையோராய்ச் சிறந்த அறிவினராய் இருக்கும் உருத்திரருக்கு அவர் உள்ளத்திற்கு மிக இனியதாக நாம் எதனைப் பாடுவோம்?

௨. நம்மைச் சேர்ந்தோர்க்கும் நம்முடைய ஆக்களுக்கும் நம்முடைய எருதுகளுக்கும் நம் பின்னோர்க்கும் அதிதியானவன் உருத்திரரின் அருளை வழங்குதற் பொருட்டும்;

௩. மித்திரரும், வருணரும், உருத்திரரும் எல்லாக் கடவுளரும் ஒரே உள்ளத்தினராய் எம்மைநினைவு கூர்தற் பொருட்டும்;

௪. களிப்பினையும் நலத்தினையும் வலிமையினையும் பெறுதற் பொருட்டும் வேள்விகட்கும் பாக்கட்கும் நோய் நீக்கும் மருந்துகட்கும் தலைவரான உருத்திரரை வேண்டிக் கொள்கின்றேம்.

௫. நல்லவரும் கடவுளிற் சிறந்தோருமான அவர் கதிரவனைப்போற் பேரொளியொடு விளங்குகிறார். விளக்கமான பொன்னைப்போல் அவர்மிகுந்த ஒளியுடையவராய் இருக்கின்றார்.

௬. பசுபதியான அவர் நம்முடைய போர்க் குதிரைகட்கு நலத்தினையும், நம்முடைய செம்மறிக் கிடாய்கள், கிடாரிகள், நம் ஆடவர் பெண்டிர் ஆக்கள் என்னும் இவர்கட்கு நல்வாழ்வினையும் தந்திடுவாராக.

௭. ஓ சோமரே! நூறு ஆடவர்க்குரிய மாட்சிமையினையும் வலிமையிற் சிறந்த படைத்தலைவற்குரிய பெரும் புகழையும் எங்கள்மேல் வைத்தருள்க.

௮. பிறர் தீயஎண்ணங்களும் வருத்துவோரும் எம்மைத் தடை செய்யாதிருக்க. இந்துவே, வலிமையால் எமக்கு ஒரு பங்கு கொடுத்தருள்க.

௯. சோமரே! தலையையும் நடு இடத்தையும் காதல் கூர்ந்தருள்க. சோமரே! மூவாதவரான நும்மக்கள் தூயதான உயர்ந்த உலகத்தில் உமக்குத் தொண்டு செய்யும்படி அறிந்தருள்க.

வேதமென்னுந் திங்கட் டாளாசிரியர் உயர்திரு சிவத்தியாநாநந்த மகரிஷி அவர்கள் கண்ட உரைநடை வருமாறு:—

௧. குற்றமற்ற ஞானோத்தமனும், இச்சைகளை வர்ஷிப்பவனும், எம்முடைய மனத்தில் விருத்தியாக வோங்குபவனுமாகியஉருத்திரனுக்கு, எந்த ஸுகதமமான ஸ்தோத்திரத்தைக் கூறுவோம்?

௨. நமது பூமியும் நமது குதிரைகளும் பந்துக்களும் பசுக்களும் நமது புத்திர சந்ததிகளும் சுகத்தையடையும் வண்ணம் உருத்திரன் வேண்டிய மருத்துச்செடிகளை யளித்து எங்களை

ஷாளும்படி (எத்தோத்திரத்தைக்கூறு வோம்?)

௩. மித்திரா வருணர்களும் உருத்திரனும் விச்வதேவர்களும் எம்மை யருளொடு பார்க்கும்படி (எத்தோத்திரத்தைக் கூறுவோம்?)

௪. ஸ்தோத்திரத்தைப் பரிபாலிப்பவனும், யாகத்தைப் பரிபாலிப்பவனும், ஸுகரூபமான பேஷஜங்களுக்கு நாயகனும் ஆன உருத்திரனை பிரஹஸ்பதி புத்திரனது ஸுகத்தை யொத்த ஸுகத்தை யளிக்கும்படி பிரார்த்திப்போம்.

௫. (அந்த ருத்திரன்) சூரியனைப் போல வெண்மையான ஒளியோடு கூடியவன்; பொன்னைப்போலஅடைந்தோர்க் கின்பத்தை யளிப்பவன்; தேவர்களுக்கு மத்தியில் சிரேட்டம் பொருந்தியவன்; செல்வ காரணனுமாவான்.

௬. எங்களுடைய குதிரைகளுக்கும், ஆட்டுக்கடாக்களுக்கும் பெண்ணாடுகளுக்கும் பசுக்களுக்கும் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் இலகுவாகக்கிடைக்கக்கூடிய சுகத்தை(உருத்திரன்) அளிக்கட்டும்.

௭. ஸோமதேவனே! புருஷர்கள் நூற்றுவர்க்குவேண்டிய செல்வத்தை எங்களுக்கு நிலையாகத் தருவாயாக. வலிமை சிறந்த அன்னத்தை யாங்கள் இன்பமடையும்படி எங்களுக்களிப்பாயாக.

௮. ஸோமனே! ஸோமயாகம் புரியாதவரும், சத்துருக்களும் எங்களை வருத்தாதிருக்கட்டும். எங்களுக்குப் பலத்தைத் தரும் அன்னத்தை யளிப்பாயாக.

௯. ஸோமனே! தலைமை வகிப்பவனும், மரணமற்றவனும் ரிதத்தின் உத்தமமான விடத்தை யடைபவனுமான உனது பிரஜைகளை (ஸ்தோத்திரஞ் செய்வோரைப்) பந்தனங்களோடு கூடிய யக்ஞக் கிரகத்தில் விரும்புவாயாக. எவ்விடத்தையும் அலங்கரிக்கும் அவர்களையே நாடி அறிவாயாக.

---

# ஊமைப் பெண்.

(தாகூரடிகள் கதையொன்றினைத் தழுவி யெழுதப்பெற்றது.)

சுபாஷிணி என்ற பெயரை இட்ட போது அவள் ஊமைப் பெண்ணாய் விடுவாள் என்று யாராவது எதிர் பார்த்தார்களா? அவளுடைய மூத்த சகோதரிகள் இருவரும் சுகேசனி சுகாசனி என்று முறையே அழைக்கப்பட்டனர். குழந்தைகளுடைய பெயர்களில் மோனை தவறிவிடக்கூடாதென்று தந்தை கடைசிக் குழந்தைக்குச் சுபாஷிணி என்று பெயரிட்டனர் போலும். அதைச் சுருக்கி ஜனங்கள் அவளைச் சுபா என்று அழைத்தனர்.

மாப்பிள்ளை தேடிக் கண்டு பிடிப்பதில் அதிக சிரமப்பட்டு, ஏராளமான பணச் செலவும் செய்து, முடிவில் மூத்த பெண்கள் இருவருக்கும் பெற்றோர் தக்க வரர்களைச் சம்பாதித்தனர். ஆனால், கடைசிக் குழந்தை அவர்களுடைய பெருங் கவலைக்கிட மாய் விட்டாள். ஊமைப் பெண்ணை யார் கலியாணம் செய்து கொள்வார்கள்? ஊமைக்கும் உணர்ச்சி உண்டு என்பது சாதாரண ஜனங்களின் அறிவிற்குப் புலப்படுவதில்லை. ஆகவே, அவளைப்பற்றிப் பெற்றோர் கவலையுற்று, அவளுடைய பிற்கால நிலையை நினைந்து நினைந்து சிந்தைநைந்து கண்ணீர் சொரிந்தனர்.

## சாபமோ பெண்ணுருவானது?

பண்ணமைந்த மென்மொழிப் பாவையர்க்கும் வரன்கிடைப்பது அரிதென்றால், இவ்வூமைப்பெண்ணுக்கு வாகை எவன் வருவான் என்று அவளைக் கண்டோர் யாவரும் இரங்கிக் கூறுவது வழக்கம். அச்சொற்களைக் கேட்குந்தோறும் அவள் பெற்றோர் அளவில்லாத துயரமடைந்து தங்கள் குடும்பத்தின்மேல் தெய்வம் இட்ட சாபமே ஓர் பெண் உருவாய் வந்தது என்று எண்ணி வருந்துவர். தன்னுடைய துர்ப்பாக்கிய நிலையை உள்ளபடி உணர்ந்த ஊமைப்பெண், வெளியே வரக் கூசி ஒருவர் கண்ணிலும் படாதபடி வீட்டிற்குள்ளேயே யிருந்து காலங்கழிக்கலானாள். அந்தோ! பாவம்!! தன்னை எல்லாரும் மறந்து விட்டால் அதுவே தான் அடையக்கூடிய அளவிறந்த நன்மை என்று அவள் கருதினாள். ஆனால் பெற்றோர் மனத்தினின்றும் அவளைப்பற்றிய துயரம் நீங்கவேயில்லை.

அப்பெண் ஊமையாயிருந்தது தனக்கு நேர்ந்த ஒரு பெருவசை யென்றே அவள் தாயார் கருதினாள். புதல்வனிலும் அதிகமாய்ப் புதல்வியையே தன் அம்சமாகக் கருதுவதும் புதல்வியின் குறைகள் தனக்குற்ற குறைபாடுகளே என்றேங்குவதும் தாயின் இயல்பு. வாணிகாந்தரோ தன் இதர புத்திரிகளைவிடச் சுபாவையே அதிகமாய் நேசித்து வந்தார். தாயோ தன் பாழ்த்த பாவிக் குடலுக்கு ஓர் சாபமே அவள் என்று கருதிச் சுபாவை வெறுத்தாள்.

## கடலினும் பெரிய கண்கள்.

சுபா ஊமையே யெனினும் அவள் கண்கள் கடலினும் பெரியனவாய், யாவர் கணிப்பினையுங் கடந்த ஆழம் உடையனவாய், உரையறியா உண்மை யலை எறிந்து விளங்கின. அற்ப உணர்ச்சி ஒன்றினாலும் அவளுடைய அதரம் தென்றலில் அசைந்தாடும் இளந் தளிர் என அசைவுற்றது.

நம்முடைய எண்ணங்களை யெல்லாம் உலகம் அறிய எடுத்துச் சொல்வது எளிதான காரியமல்ல. அவற்றை உள்ளவாறு வெளியிடுவது ஓர் மொழிபெயர்ப்பேயாகும். அங்ஙனம் வெளியிடுவதில் பிழை கலவாதிருப்பது அபூர்வமேயாம். அதை முற்றுப் படுத்துவதற்கு நாம் சமயாசமயங்களில் போதுமான சக்தியற்றவர்களாய்ப் போய்விடுகிறோம். ஆனால், கரிய கண்களுக்கோ மொழிபெயர்க்குஞ் சிரமம் யாதொன்றும் இல்லை. மனோபாவனை அப்படியே அவற்றில் பதிந்து விடுகின்றது. எண்ணங்கள் அவற்றில் விரிந்தும் சுருங்கியும் தோன்றுகின்றன. ஒரு சமயம் அவை பேரொளி வீசுகின்றன; ஒருசமயம் ஒளி குறையப் பெறுகின்றன. ஒரு சமயம் அவை அஸ்தமன சந்திரனைப்போல் நின்றொளிர்ந்து, மற்றொருசமயம்மின்னலைப்போல் பளீரென்றுமின்னி அவ்வொளியினைக் காண்போர்மீது பிரதிபிம்பிக்கச் செய்கின்றன.

பிறவிதொட்டு, தன் முகக் குறியேயன்றி வேறு பாஷை அறியாத ஒருவனுடைய கண்களின் மதுரமென்

மொழி அதி மனோகரமானது. அவற்றின் வசீகர சக்தியை அளவிடுவது கடலின் அடித்தலங்கண்டு அதன் ஆழத்தைக்கணிக்க முயல்வதுபோன்றதேயாம். எண்ணிறந்த விண் மீன்களும், பூங்கதிர் பொழியும் வெண்மதியமும், உலகை விளக்கும் பகலவனும் தோன்றி மறையும் நீல வானத்தை ஒருகால் அவற்றிற்கு உவமையாகக் கூறினால் கூறலாம்.

வாக்கிழந்த நம் கரிய கண்ணியினிடத்தில் இயற்கை யாசியின் மகத்துவம் போன்ற ஏகாந்தமான ஒரு மாட்சி அமைந்திருந்தது. இதனால் அவள் பருவத்துச் சிறுவரும் சிறுமியரும் அவளுடன் விளையாட அஞ்சி விலகினார்கள்.

௨.

### கிராம கன்னிகை.

சாந்தியூர் என்பது அக்கிராமத்தின் பெயர். அதன் அருகே ஓடிய நதி வங்க தேசத்தின் சிறிய நீரோட்டங்களில் ஒன்று. அதை அக்கிராம கன்னிகை யென்றே சொல்லலாம். அச்சிறு நதி கல்லென ஒலித்து மெல்லெனச் சென்றது. இரு கரைகளிலும் வளர்ந்திருந்த தருக்கனின் அடியைச் சுற்றிச் சுற்றி அது சிறு நடம் புரிந்து செல்லும் காட்சி கண் கவர் காட்சியே. அது அவ்வூரிலுள்ள எல்லோருக்கும் எந்த முறையினாலோ பந்துவாய் நின்றது. சிறுவர் முதற்கொண்டு கிழவர் வரை தன்னை விரும்பும் வண்ணமன்றி வெறுக்கும்படி அது ஒரு நாளும் நடந்தே யறியாது. கைம்மாறு கருதாது வழங்கும் அக்களஞ்சியத்தின் இருபுறமும் அழகிய வீடுகள் அணி அணியாய் நின்றன. பிறர்க் குதவுதலே யன்றி தன்னயம் சிறிதும் கருதாது ஆங்காங்கு சென்று பன்னலம் புரியும் புண்ணியவாளனை ஒத்துச்சென்றது அது.

அதன் கரையோரத்திலேயே வாணிகாந்தரின் வீடு கட்டப்பட்டிருந்தது. அவருடைய மூங்கில்வேலி, கூரை வீடு, மாட்டுத் தொழு, குத்துப்பரை, வைக்கோல் போர், புளிய மரம், மாந்தோப்பு, பலா மரங்கள், வாழைத் தோட்டம், அச்சிறுநதியில்படகேறிச் செல்லுபவர் விருப்புற்று நோக்கும் பொருள்களாய் நின்றன. அத்தோற்றத்திற்கிடையே அவ்வூமைப் பெண்ணை யாராவது பார்த்தார்களோ என்பது சந்தேகமே. ஆனால் ஒழிந்த நேரங்களில் எல்லாம் ஆற்றின் கரைக்கு அருகாமையில் போயிருப்பது அவளுடைய வழக்கம்.

### இயற்கையின் ஆரவாரம்.

இயற்கை யன்னை அப்பெண்ணுடைய ஊமைத்தனத்திற்கு ஈடு அருளவிரும்பி அவளுக்காகப் பேசி நின்றாள் போலும்.

நதி ஓடும்போது உதித்த மழலையிளங்குரலும், மனிதர்களின் இரைச்சலும், படகு ஓட்டிகளின் உல்லாசமான பாடல்களும், பட்சி ஜாலங்களின் இனிய கானமும், இலைகளின் மர்மராஞ்சமும், தலைமயக்குற்றுக் கலந்து ஒரே நாதமாய்க் கரைகளை மோதும் அலைகளைப்போல நித்திய அமைதிபெற்ற அப்பெண்மணியின் உள்ளத்தைத் தாக்கின. இயற்கையின் ஆரவாரம் ஊமைகளின் பாஷையைப் போலவே விளங்குகின்றது. அது, காதளவோடி நீண்டு பரந்த கண்களையுடைய சுபாவினுடைய பாஷையின் விரிவேபோலும். சில்வண்டின் சிறு



குரல் தொனிக்கின்ற பசும்புல் தரையிலிருந்து, தொனியின் எல்லை கடந்த விசும்புவரை, அறிகுறிகள், அபிநயங்கள், பாடல்கள், பொருமல்கள் வெய்துயிர்ப்புகளே நிரம்பியிருக்கின்றன.

படகு ஓட்டிகள் சாப்பாட்டிற்காகச் செல்லுவதும், குடித்தனக்காரர்கள் போஜன முடித்துச் சிறுதுயில் அமர்வதும், துறைத் தோணிகள் அசைவற்று நிற்பதும், சப்த மயமான உலகம் திடீரென்று சப்தமற்று அசைவற்று ஏகாந்த மௌன விரதம் பூணுவதும், வெப்பம் முதிர்ந்த கதிர்களைப் பொழிந்து கனற் பிழம்பை யொத்து வானுச்சியில் ஜகஜ்ஜோதியாய்ச்சூரியன் பிரகாசிப்பதுமான மத்தியான நேரத்தில், மாசுமறு அகன்ற வானவெளியின் கீழ், ஒருமாது சூரிய கிரணங்களின் கீழும், மற்றொரு மாது மாநிழலின் கீழுமாக. மௌன தேவியான இயற்கை யன்னையும், ஊமைப் பெண்ணான சுபாஷிணியும் எதிர்முகமாக இனிதமர்ந்திருப்பர்.

### சுபாவின் தோழிகள்.

சுபாவுக்கு நண்பர்கள் அதிகமில்லையென்று நாம் சொல்லமுடியாது; சிநேக பாத்திரங்களுமுண்டு. அவை அவளுடைய மாட்டுத் தொழுவின் வாசிகளாகிய சார்வசி, பங்குலி என்ற இரண்டு பசுக்களே. அவை இரண்டும், ஒருநாளும் சுபாவின் அதரங்களினின்றும் தங்கள்பெயர்கள் தொனிக்கக் கேட்டிராவிடினும், பஞ்சினும் மெல்லியனவான அவளுடைய செல்வச் சீறடிகளின் சிற்றொலி அவற்றின் இதயங்களை உருக்கிவிடவல்ல மனோகரமான சங்கீதமாய்த் திகழ்ந்தது அற்புதத்திலும் அற்புதமேயன்றோ? என்னே! பேசவகையிறந்த அம்மூவரின் அன்பு! அவற்றிற்கு மற்றையரைக் காட்டிலும், அவளுடைய சீராடல்கள், கோபதாபங்கள், பிரார்த்தனைகள் முதலியன தெளிவாய் விளங்கி வந்தன.

மாட்டுத் தொழுவிற் புகுந்து சார்வசியின் கழுத்தைத் தன் இருகரங்களாலும் அணைத்துக்கொண்டு, சுபா கண்ணாடிபோன்ற தன் கன்னங்களை அப்பசுவின் காதுகளோடு அன்புருக உரசி நிற்பதும், அவ்வமயத்தில் பெருகிய அன்பு ததும்பும் கண்களினால் பங்குலி அவளை உற்றுநோக்கி, மென்மலரை யொத்த அவள் மேனியைத் தன் நாவினால் நீவி நிற்பதும் அடிக்கடி நிகழ்ந்து வந்த சம்பவங்கள்.

அப்பெண் தினசரி மாட்டுத்தொழுவிற்கு மும்முறை போவது வழக்கம். மேலும், தன் தோழிகள் எதிர்பாராத சமயங்களிலும் அங்கே போவதுண்டு. வீட்டில் யாராவது அவளைக் கடுகடுத்துப் பேசினால், தன் அருமைத் தோழிகளிடம போய்விடுவாள். அவை ஏதோ ஒருவித இயற்கை உணர்ச்சியால், துயரம் தோய்ந்து பொறை சூழ்ந்திருந்த அவளுடைய நயனங்களின் தோற்றத்தினின்றும் அவள் மன வருத்தத்தை யுணர்ந்து மற்றைய நேரங்களிலும் அதிகமாய் அவளை நெருங்கித் தங்கள் கொம்புகளை அவளுடைய கரங்களில் மென்மையாய் உரசி, மௌனமான ஊக்கத்தோடும், ஆசையோடும் அவளுடைய வருத்தத்தைத் தணிக்க முயலும்.

### வேறு நண்பர்கள்.

அவற்றைத் தவிர அவளுடைய சிநேக பாத்திரங்களில் ஒரு வெள்ளாடும், பூனைக்குட்டி ஒன்றும் உண்டு.

ஆனால், அவற்றின் உரிமை பசுக்களின் உரிமை போன்றதென்று சொல்ல முடியாது. எனினும், அவை சுபாவிரும்பும் அளவிற்கு அவளுக்கு அடங்கியே நடந்து வந்தன. இரவிலும் பகலிலும் அச்சிறு பூனைக்குட்டி சிறிதும் சங்கோசம் இன்றித் தன் தோழியின் மடியில் தூங்கி வந்தது. தன் கழுத்தையும் முதுகையும், சுபா மெல்லிய விரல்களால் தடவினால் தனக்குத் தூக்கம் வருமென்று, அது சின்னங்களினால் காட்டி வந்தது.

௩.

சுபாவின் தோழன்.

முற்கூறிய தோழிகளைத் தவிர அவற்றினுமுயர்ந்த இனத்திலிருந்து சுபாவுக்கு ஒரு சிநேக பொக்கிஷம் கிடைத்தது. ஆனால், அந்நண்பன் ஊமையல்லாதபடியாலும் அவள் ஊமையாயிருந்தபடியாலும் அவர்களிருவரின் நட்பின் உண்மையான தன்மையை நாம் உணர்வது அரிது. அவ்விருவருள் வழங்கி வந்த பாஷை சாமான்யமானதல்ல.

அவன் கோஸ்வாமி குடும்பத்தின் கடைக்குட்டி வாலிபன். அவனுடைய பெயர் பிரதாபன். அவன் ஒரு விஷயத்திலும் முன்னுக்கு வரச் சிறிதும் உதவாத கடையன். அவனைச் சீர்திருத்த அநேக முயற்சிகளைச்செய்த பின்னர் தங்கள் குடும்பத்தை எக்காலத்திலாவது முன்னுக்குக் கொண்டு வருவதில் அவன் உழைப்பான் என்ற நம்பிக்கையை அவன் பெற்றோர் அடியோடு இழந்தனர். உபயோகமற்றவர்கள் சுற்றத்தார்களால் வெறுக்கப்பட்ட போதிலும் அந்நியரது பட்சத்தை அடைந்துவிடுகின்றனர். வீடுகளை அடுத்திராதபொதுஜன சமுதாயத் தோட்டங்கள் ஒரு பட்டணத்திற்கெவ்வளவு அத்தியாவசியமான பொருள்களோ, அவ்வண்ணமே பொதுச்சொத்துக்கள்போன்ற வேலையற்ற சில மனிதர்கள் ஒரு கிராமத்திற்கு முக்கியமாய்வேண்டியவர்கள். அவர்கள் ஒரு கொண்டாட்டத்திலாவது, விசேஷச் சடங்குகளிலாவது, ஆள் குறையும்போது அவ்விடத்தை நிரப்ப முன்வந்து விடுவார்கள்.

தூண்டில்போட்டு மீன் பிடித்தலே பிரதாபனுடைய மனத்திற்கு இனிய தொழில். அவனுடைய நேரத்தில் அதிகமான பாகத்தை அது வெகு லகுவாய் அழித்து வந்தது.

மத்தியான நேரத்தில், அவன் ஆற்றங்கரையோரமாக அத்தொழிலில் அமர்ந்திருப்பது வழக்கம். அவ்வமயங்களிலெல்லாம் அவன் சுபாவைச் சந்திப்பது வழக்கம்.

எவ்வேலையில் அமர்ந்தாலும் ஒரு கூட்டாளி வேண்டுமென்று விரும்புவது பிரதாபனுடைய இயல்பு. தூண்டிலிட்டு மீன் பிடிக்கும் நேரத்தில் ஒரு மௌனமான கூட்டாளியே வேண்டுவதவசியமாகும். ஆகவே, சுபாவைப் பிரதாபன் அதிகமாக மதித்து வந்தான். இக்காரணத்தினால் அவன் அவளை மற்றையோர் சுபா என்று கூப்பிடுவதைப்போல் அல்லாமல் அத்தியந்த அன்புடன் 'சூ' என்று கூப்பிடுவான்.

நட்பின் முதிர்ச்சி.

சுபா ஒரு புளியமரத்தடியில் உட்கார்ந்தாள். தூண்டிற் கோலை அவளுக்குப் பக்கத்தில் தரையில்போட்டுவிட்டு பிரதாபன் தண்ணீரை உற்று நோக்கினான். அவள் கையினால் தயாரிக்கப்பட்ட வெற்றிலைச் சுருளை அவளிடமிருந்து தினந் தோறும் அவன் பெற்று வந்தான்.



அங்கு அதிக நேரம் வரை உட்கார்ந்து பிரதாபனுக்கு எவ்விதத்திலாவது பயன்படக்கூடிய உதவியைத் தான் செய்ய வேண்டுமென்றும்தான் கூட உலகத்தில் மிகவும் அற்பமான பிராணி அல்ல என்று அவனுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றும் சுபா எண்ணினாள். ஆனால் அவளுக்கு அச்செயல் யாதென்று தோன்றவில்லை.

“ஆ! சுபா இத்தகைய அபூர்வ சக்தி வாய்ந்தவள் என்று யார் அறிந்தார்கள்?” என்று பிரதாபன் வியப்புடன் கூறும்படி அவன்முன் மந்திர வலிமையினால் ஒரு அற்புதமான செய்கையைச்செய்வதற்குத் தனக்கு இயல்பு கடந்த சக்தியைக் கொடுக்கும்படியாக அவள் பகவானைப் பிரார்த்தித்தாள்.

சுபாவின் கனவுகள்.

சுபா ஒரு ஜலதேவதையாயிருந்தால் தன்னுடைய நீர்மஞ்சத்தினின்றும் எழுந்து மெதுவாய் வெளியே வந்து நாகரத்தினமொன்றை அங்கிருந்த நதிக்கட்டத்தில் வைப்பாள். அப்பொழுது பிரதாபன் மகாகேவலமான தூண்டில்போடும் வேலையை விட்டுவிட்டு அந்த மாணிக்கத்தைக் கையிலேந்திக்கொண்டு அதன் சக்தியால் தண்ணீருள் மூழ்கிப்பாதாளத்திற்பிரவேசிக்கவே அங்கு யாரை அவன் காண்பான்? வெள்ளி மாளிகையில் செம்பொற் சிங்காதனத்திலே நாகரத்தினம் எண்திசைகளிலும் மணிவெயில் பரப்பி நிற்கும் பாதாளலோகத்திற்கு அரசியாய் வாணிகாந்தரின் ஊமைமகள் “சூ” கொலுவீற்றிருப்பதையே அவன் காண்பான். அப்படி ஒரு காலம் வாராதா? அது என்ன அவ்வளவு தூரம் முடியாத காரியமா? இல்லை. உண்மையில், முடியாதது ஒன்றுமில்லை. ஆனால் 'சூ' பாதாளலோகத்திலுள்ள அரச வம்சத்தில் அல்லாமல் வாணிகாந்தரின் வீட்டிலேயே பிறந்திருக்கிறாள். அதனால் கோஸ்வாமி குடும்பத்தைச் சேர்ந்த வாலிபனை மயக்கிவிடக் கூடிய அற்புதமொன்றும் அவள் செய்ய முடியாது.

சுபா அழகிய பெண்ணாய் வளர்ந்து கொண்டிருந்தாள். சிறிது சிறிதாய், அவள் தன்னை நன்குணர ஆரம்பித்தாள். பூரண சந்திரோதயத்தில் அவள் அறியாத ஒரு கடலிலிருந்து இன்பம்பெருக அவளுடைய இதயத்தில் புதிய வாழ்க்கை யுணர்ச்சிகளாகிய அலைகள்மோதின. அவள் தன்னைத் தானே நோக்கி நினைந்து விசாரணை செய்துகொண்டாள். ஆனால், அவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

ஓர் இரவில் தன் படுக்கை அறையின் கதவைத்திறந்து அச்சத்துடன் வெளியே எட்டிப் பார்த்தாள். சுபா இயற்கை தேவியும் சந்திரிகை பொருந்திய அவ்விரவில் சுபாவைப்போலவே விழித்துக்கொண்டு தோழி ஒருத்தியு மில்லாமல், நித்திராதேவியின் வசமாகி நின்ற உலகைப்பற்றி நினைந்து ஏகாந்த மௌன விரதம் பூண்டு இளம் பருவத்திற்குரிய பிரகாசமும் ஆனந்தமுமுற்று ஆழ்ந்தகவலையோடும்பேச்சிறந்து நின்றாள். அவ்இயற்கை தேவிக்குப் பக்கத்தில் அவளை நோக்கி ஏதோ பிரார்த்திப்பவள் போல நின்றாள் நம் கதாநாயகி.

பெற்றோர் சூழ்ச்சி.

அவளுடைய விவாக விஷயத்தைப் பற்றிக் கவலை கொண்டிருந்த பெற்றோர் அவள்கதி யாதாகுமோ என்று

ஏக்கங்கொண்டனர். ஜனங்களும் அவளைப்பற்றி ஒவ்வொன்று பேச ஆரம்பித்துவிட்டனர். அவர்கள் ஜாதிப் பிரஷ்டர்களாக ஒதுக்கப்படுவார்கள் என்ற வதந்தி எங்கும் பரவியது.

வாணிகாந்தர் சுகவாழ்வை அநுபவித்தவர்களில் ஒருவர். அவருக்குத் தினசரி இரண்டு வேளை சுடுசாதமும் மீனும் தட்டில்லாமல் கிடைத்து வந்தது. அதனால் அவருக்கு அனேக எதிரிகள் இருந்தனர்.

நெடுநேரம் தீர்க்கமாய் ஆலோசித்த பிறகு அவளுடையபெற்றோர் ஒரு தீர்மானத்திற்கு வந்தனர். வாணிகாந்தர் சில நாட்களுக்கு ஊரைவிட்டு நீங்கி வெளியூர்களுக்குப் போனார்.

நெடுநாட்களுக்குப்பின் "நாம் கல்கத்தாவுக்குப் போவோம்" என்றார்.

பிரயாணத்திற்கு வேண்டிய ஆயத்தங்கள் வெகு ஊக்கமாக நடைபெற்றன. மூடுபனியுள்ள காலை நேரத்தைப்போல சுபாவின் இதயம் முழுவதும் துயரத்தில் முழுகிவிட்டது. சில நாட்கள் வரை வாக்கிறந்த ஓர் மிருகத்தைப்போல் ஒருவிதமான பயத்தோடு தாய் தந்தையரைப் பிடிவாதத்துடன் பின்பற்றினாள். அவள் அறியாததை, தன் விசாலமான கண்களால் அவர்களுடைய முகக்குறியிலிருந்து அவள் அறிந்துகொள்ள விரும்பினாள். ஆனால் அவர்கள் அவளுக்கு ஒன்றுமே கூறவில்லை.

சுபாவின் துயரம்.

ஒருநாள் மத்தியானம் பிரதாபன் மீன் பிடிக்கும்போது சிரித்துக்கொண்டு, "ஆ, சூ! கடைசியாக உனக்கு ஒரு மாப்பிள்ளை தேடிக் கண்டுபிடித்து விட்டார்கள். உன் விவாகம் விரைவில் முடிந்துவிடும். இங்கேபார். நம்மை நீ மறந்துவிடாதே" என்றான். அதன் பிறகு தூண்டிற்கோலை நோக்கித் தன் பார்வையைத் திருப்பினான். அம்பு தைத்த மான் ஒன்று வேடனை நோக்கி, "நான் உனக்கு என்ன செய்தேன்?" என்று மௌனமாய்க் கூறுவதுபோலப் பிரதாபனைச் சுபா நோக்கினாள். அதற்குப் பிறகு அவள் அம்மரத்தடியில் உட்காரவில்லை. மத்தியான நித்திரைக்குப் பிறகு 'உக்கா'க் குடித்துக்கொண்டிருந்த வாணிகாந்தரின் படுக்கை அறையிற்புகுந்து, அவள் அவர் பாதங்களினருகே உட்கார்ந்து அவர் முகநோக்கி அழ ஆரம்பித்தாள். அதுகண்ட அவர் உள்ளுடைந்து அவள் துக்கத்தை ஆற்ற முயன்றபோது அவருடைய உலர்ந்துபோன கன்னங்கள் கண்ணீரில் நனைந்தன.

மறுநாள் அவர்கள் கல்கத்தாபோகவேண்டுமென்று நிச்சயமாயிற்று. சுபா தன் தோழியரிடம் விடைபெற்றுக் கொள்ள மாட்டுத் தொழுவிற்குள் புகுந்தாள். அவள் தன் கைகளாலேயே அவற்றிற்கு ஆகாரம் ஊட்டி வந்தாள். அவற்றின் கழுத்தை இரு கரங்களாலும் அணைத்துக் கொண்டு அவள் அவற்றின் முகத்தை உற்று நோக்கவே கண்கள் துக்க நீரைச் சொரிந்தன. அதுகண்ட அப்பசுக்கள் தேம்பித் தேம்பி அழுவனபோலக் கண்ணீர் வடித்து உளமுருகி நின்றன.

அன்றிரவு அவள் தன்னுடைய படுக்கையறையினின்றும் வெளிப்போந்து ஆற்றங்கரையை அடுத்துள்ள பசும்புற்றரையிற்போய்ப் படுத்துருண்டு பூமி தேவியை நோக்கி, "என்னை இவ்விடத்தினின்றும் போகவிடாதே, தாயே! உன்னுடைய இரு கரங்களாலும் என்னைப்பற்றிக்கொண்டு என் மனத்திற்குகந்த இவ்விடத்தைவிட்டு நான் நீங்கிவிடாதபடி காப்பாற்றுவாய்!" என்று கூறுபவள்போலக் கிடந்தாள்.



மணமகளும் மணமகனும்.

ஒருநாள் கல்கத்தாவிலுள்ள ஒரு வாடகை வீட்டில் சுபாவின் தாயார் அவளைக் கண்டோர் வியக்கும்படி சிங்காரிக்கலானாள்.

"நீனிறமுகிலோ பசியசைவலமோ
நெடுந்திரை கொழித்த தெள்ளறலோ
பானலங்கனிந்த பனிமொழித்துவர்வாய்ப்
பைந்தொடி கரிய மென்கூந்தல்
தேனினம்முரன்று துதைந்துதாதாடும்
சினைமலர்த் தொடையொடும் வேய்ந்து
நானமும்புழுகும் கமழ்தரநீவி
நள்ளிருள் குடியிருந் ததுவே"

என்ற வருணனைக் கிசைந்த அவளுடைய கேசத்தைக் கோதி அலங்காரமாகப் பின்னி மணம்ஊட்டுவித்தாள்.

சுபாவின் அலங்காரம் அழகுபெற முடிவுற்றது. ஆனால் பேதைச் சுபா அழ ஆரம்பித்தாள். கண்ணீர் தாரை தாரையாய் அவள் கன்னங்களின் வழியாய்ப் பொழிவுற்றது. "உன் முகத்தைக் காண்போர்க்கு விகாரம் ஆக்கிவிடாதே. அழாதே" என்று அவள் தாயார் அதட்டியும், கண்ணீர் அவளுடைய ஆணை கடந்து மேன்மேலும் பெருகியது.

மாப்பிள்ளை தன்னுடைய தோழன் ஒருவனோடு பெண்ணைப் பார்ப்பதற்கு வந்தான். பலிபீடத்தில் பலி கொடுப்பதற்குரிய பிராணியைத் தானே தேடிக்கொள்ளத் தேவதையொன்று பூமியில் இறங்கும்போது அப்பிராணி நடுங்குவதுபோல் அவள் பெற்றோர் கவலையும் அச்சமும் உற்று நைந்த சிந்தையராய் நின்றனர்.

சுபாவின் தாயார் வசைமொழிகளினால் மகளின் கண்ணீரை அதிகரிக்கச் செய்து, திரைக்குப் பின் இருந்து கொண்டு அவளை மாப்பிள்ளைமுன் அனுப்பினாள்.

மாப்பிள்ளை அவளை நன்றாய்ப்பார்த்துவிட்டு, "பாதகமில்லை" என்றான். அவள் வடித்த கண்ணீரிலிருந்து அவளுக்கும் ஒரு இதயம் இருக்கிறதென்று மாப்பிள்ளை உணர்ந்தான். இன்று தன் பெற்றோரின் பிரிவாற்றாமையை உணர்ந்து அழும் இதயம், நாளை தன்னதாய்விடுமென்று அவன் நினைந்தான். அவளுடைய கண்ணீர் அவளுக்காக ஒருவார்த்தைகூடப் பரிந்து பேசாத போதிலும், அவளுடைய மதிப்பை விலையேறிய ஒருமுத்தென்ன அதிகரிக்கச் செய்தது.

மணமும் மறுமணமும்.

சோதிட நூலார் பஞ்சாங்கத்தை நன்றாய் ஆராய்ச்சி செய்து குறித்த முகூர்த்தத்தில் சுபாவின் விவாகம் சுபமாய் நடைபெற்றது.

பெற்றோர் தங்கள் ஊமைப் புத்திரியை ஒரு அன்னியனுக்குத் தத்தம் செய்து கொடுத்துவிட்டு வீட்டிற்குத் திரும்பினார்கள். இவ்விதமாக அவர்கள் ஜாதிப் பிரஷ்டர்களாக்கப்படும் கொடிய அபவாதத்தினின்றும் தப்பித் தங்கள் வாழ்க்கையையும் உறுதிப்படுத்திக் கொண்டனர்.

இப்பொழுது ஐக்கிய மாகாணங்கள் என்று அழைக்கப்படும் வடமேற்கு மாகாணங்களில் மாப்பிள்ளை அலுவல் பார்த்து வந்தான். விவாகம் நடந்த சில நாட்களுக்குப் பிறகு

அவன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு அவ்விடத்திற்குப்போனுன்.

ஒரு வாரத்திற்குள் புதிய மண மகள் ஊமையென்று எல்லாருக்கும் தெரியவந்தது. அதற்காக அவனைக் குற்றம் சொல்வது நியாயம் அல்ல வென்று ஒருவரும் உணரவில்லை. அவள் ஒருவரையும் ஏமாற்றிவிட வில்லை. அவளுடைய விசாலமான நயனங்கள் எல்லாவற்றையும் தெளி வாய் உணர்த்தின. ஒருவரும் அதை அறிந்துகொள்ளவில்லை. அவள் சுற் றிச் சுற்றிப்பார்த்தாள்; ஆனுல் பேச வகையற்று நின்றுள். தன்னுடைய பிறப்பிலிருந்து தனக்கு அறிமுகமா ன முகங்களையாவது, தன்னுடைய ஊமை மொழியை அறியவல்ல முகங் களையாவது அவள் காணவில்லை.

ஓயாததாயும் வெளியே கேளாத தாயும் உள்ள துக்ககரமான அழுகை யொலி அப்பெண்ணின் நித்திய மௌன இதயத்தினுள்ளே தொனிக்க ஆரம்பித்தது. இதய சோதனைக் காரணுகிய இறைவன் ஒருவனுக்கே யன்றி வேறெருவருக்கும் அது கேட்கவில்லை.

மறுதரம் அவள் புருஷன் கண்ணி னுலும் காதினுலும் சோதனைசெய்து பேசக்கூடிய ஒரு மணப் பெண்ணை மணந்து தன் வீட்டிற்குக் கொண்டு வந்தான்.

முற்றிற்று.

## *கண்ணன் குழல்—கீதை.

சா. நா. சா. அருணுசலச் செட்டியார்.

இந்திய சரித்திரத்தில் கண்ணன் என்றும் நிலைத்திருப்பவனுவன். சில இளைஞர்கள் கண்ணனது பெருமை யை நன்குணரவில்லையென்பதை யா னறிவேன். அவர்கள் அவனைக் குறித்து மொழிபெயர்ப்பில் படிக் கிருர்கள். மொழிபெயர்ப்பு பெரும் பான்மையாக உருவமாற்றுகவேகாண் கின்றது. அவனை அவர்கள் உள்ளத் தினுள்ளே படிப்பார்களாயின்! "கண் ணனை வழிபடுதலின்றி எக்காரியத்தி லும் தலைப்படுதலில்லை" என ஓர்பெரி யார் கூறியதில் நிரம்பிய பொருளிருக் கிறது. கோகுலம், துவாரகை, பிருந் தாவனம், மதுரை, குருக்ஷேத்திரம், சோமநாதம் என்றசொற்களே எனக் கு ஒரு உபதேசத்தை—வாழ்க்கை யின்குறிக்கோளைத் தெரிவிக்கின்றன. மகமது கஜினி (Muhamad Gazini) சோமநாதத்திலுள்ள அஞ்சாத பிரா மணர்களோடு சண்டையிட்டு அப் பெரிய கோயிலையும் அழித்தான் என் பது உண்மையே. ஆண்டுக் கண்ண பிரான் ஓர் வேட (Bhil) னது அம்பி னுல் காயப்படுத்தப்பட்டா ரென்பது முண்மையே. சோமநாதத்தில் எம் பெருமான் உடலினின்றும் பிரிந்து சென்ருர். சென்றது வேறு வழிக ளில் நமது பாரதத்தாய்க்கு உதவி, அவனை உலகத்திற்கு வழிகாட்டியாக் கவேயாமென யான் நம்புகிறேன். வெளிச்சமுட் செல்லுவதற்கு எப்படி

* இக்கீதை ஆசிரியர் வாஸ்வானி அப்பெயர்கொண் டெழுதிய நூலின் ஒரு பகுதி யின் மொழிபெயர்ப்பாகும்.



ஒரு சாளரக் கதவம் திறக்கப்பட் டிருக்கிறதோ அவ்வாறே அவனது அன்பு எனதுள்ளத்திற் புகுந்து என் னைத் தூய்மைப்படுத்தும் பொருட்டு எனதுள்ளத்தை மலரச் செய்திருக் கிறேன். கண்ணபிரான் எனதுள்ளத் தினுள்ளே உறைகின்ருர் என யான் நம்புகின்றேன். தற்காலத்து மக்க ளிற் பலர், அந்தோ! பிறப்பின் பயனுமுணராது இந்தியாவின் ஊழை யும் மறந்தவராயிருக்கின்ருர். அவ னையும் அவன் உபதேசத்தையும் அவர்கள் சிந்திப்பார்களானுல் தம்மை யுணர்வார்கள்.

கண்ணனும் கிறிஸ்துவும்.

கண்ணபிரானின் சரித்திர உண் மையைப்பற்றிப் பலப்பல அழிவா ராய்ச்சிகள் (Destructive criticism) செய்யப்படுகின்றன. சூரிய மண்டலத்தின் அதிசயங்களை விரித் துக்கூறும் அக்காலமக்களின் பொய்க் கூற்றே கண்ணன் வாழ்க்கையெனப் பலர் வாய்ப்பறையறைகின்ருர்! அவ் வாறே இயேசுவின்வாழ்க்கையையும் பொய்யாக்கிவிடப் பற்பல முறைகள் முயற்சி செய்யப்பட்டன. "இயேசு வின்பிதாக்கள்" (Fathers of Jesus) என்னும் நூலாசிரியர் இரண்டுபெரிய தொகுதிகளில் கிறித்துவின் உற்பத் தியை சூரியமண்டிலமளவுங் கொண் டு செல்ல முயற்சித்தார்! ஆராய்ச்சிக் காரர்களின் உரைகளெல்லாம் மறைந் தன; கண்ணபிரானும் கிறித்துபக வானும் இன்னும் இருக்கிருர்கள். "கிருஷ்ணன்" என்னும் பெயரானது கருமை என்று பொருள்படுவதால் அவன் இந்தியாவின் பழங்குடிகளால் போற்றப்பட்டுப் பின்னர் ஆரிய ரால் கொள்ளப் பெற்றிருத்தல் வே ண்டுமென்னும் டிஸ்டால் பாதிரியாரி (Rev Tisdall) ன் உரைகள் சில ஆராய்ச்சிக்காரர்களால் எதிரொலியி டப்படுகின்றன. இக்கொள்கையின்படி கண்ணன் ஆரியரல்லாதாரால் வழி படப்பெற்ற கடவுள் ஆகவும் பின் னர் ஆரியரால் கொள்ளப்பட்டவனு கவுமாகிருன்! அவதாரம் வகுப்பு வேற்றுமையைக்கடந்ததொன்ருகும். அவன் கீழ்த் திசைக்கும் மேற்றி சைக்கும் உரியவனே. அவனது சரிதமும் உபதேசங்களும் அவன் எத்தகைய மக்களிடை வாழ்ந்தான் என்பதைப் புலப்படுத்துகின்றன. பண்டை நூல்களைப் படித்தால் வாழ் க்கை முறைகளிலும் மனப் போக் கிலும் இயேசு யூதர் போன்றிருப் பது போல் கண்ணன் ஆரியன் போ ன்றிருப்பதை அறியலாம். கண்ண ன் ஆரியனல்லாதான் என்று கூறு வோர் அவனது வாழ்க்கை எம் மக்களிடை நிகழ்ந்தது என்பதைச் சரித்திர மூலம் நுனித்தறியும் மதுகை யின்மையையே காட்டுகின்ருர். வேறு சில ஆராய்ச்சிக்காரர் கிருஷ் ணமதம் கிறித்தவத்தின் உருமாற்றே யாமென உரைப்பர். இவ்வபிப்பி ராயம் டாக்டர் லாரின்சரால் (Dr Lorinser) ஒரு பெரிய நூன்முகமாக வெளியிடப்பட்டிருக்கிறது. அது போன்ற மற்றுமொரு அபிப்பிராயம் எப். ஜியார்ஜி (F. Giorgi) யாலும் வெ ளியிடப்பட்டிருக்கிறது. கிருஷ்ணன் என்னும் பெயர் கிறித்து என்னும் பெயரின் திரிபேயாகு மென்றும் கீதை கிறித்தவ உபதேசங்களின் மொழிபெயர்ப்பேயா மென்றும் அவர் கூறுகின்ருர்! இவர்கள் மெகஸ் தீன்ஸின் நூலைப் பார்த்தால் உண் மை யுணர்வார்கள். அக் கிரேக்க ஆசிரியரின் (Ta Indika) என்னும்

நூலானது கண்ணன் வழிபாடு இந்தியாவில் கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே தொடங்கிற்று என்பதை நன்கு விளக்கிக் காட்டுகிறது. ஒரு வழியில் டாக்டர் லாரின்சாரின் கொள்கைக்கு நல்ல பதில் என்னவென்றால் "இந்தியாவிலுள்ள கண்ணன் வழிபாட்டின் திரிபே ஐரோப்பாவிலுள்ள கிறித்து வழிபாடன்றி வேறன்று" என்னும்வால்னி(Volney) ௧௭௯௧-ம் ஆண்டில் வெளியிட்ட அபிப்பிராயமேயாகும்! கிறித்துவின் சரித்திரத்திற்கும் கண்ணனின் சரித்திரத்திற்கும் சில ஒற்றுமைகள்* காணப்படுகின்றன வென்பது உண்மையே. இத்தகைய ஒற்றுமை இயேசுநாதருக்கும் புத்தபகவானுக்குமிடையிலும் காணப்படுகிறது. கிறித்துநாதர் தன்னைப்பற்றி விவிலிய நூலின் புதிய காண்டத்தில் (New Testament) "நான் ஒரு தனி முதல்வனின் மகன்" "ஆபிரகாமுக்கு முன்னரே நான் இருக்கிறேன்" என்று கூறுகின்றார். அப்படியே நாம் 'லலிதா விஸ்தாரத்தில்' புத்தரின் தெய்விகத் தன்மையையும் முற்கால ஞானத்தையும் காண்கிறோம். மேலும், புத்தர் 'புருஷர்' என்றும், 'மகாபுருஷர்' என்றுங் கூறப்படுவதையு மறிகிறோம். கண்ணபிரான் தன்னைப்பற்றி கீதையில் பின்வருமாறு கூறுகிறார்:—'என்னை யார் உண்மையுடன் போற்றுகிறார்களோ அவர்கள் என்னில் இருக்கிறார்கள்; நான் அவர்களில் இருக்கிறேன்." "எவன் என்னைப் பிறவாதவன், இறவாதவன், அநாதியானவன், உலக முதல்வன் என அறிகிறானோ, அவன் மாயையின் விடுபட்டோனாவன்; அவன் பாவத்தினின்றும் விடுதலை யடைகிறான்." "நான் பார்க்குமிடமெங்கு மொருநீக்கமற நிறைகின்ற பரிபூர்ணானந்தமா யிருக்கிறேன்."

மூன்று மகாபுருஷர்கள்.

கண்ணபிரானுக்கும் புத்தர்பெருமானுக்கும் கிறிஸ்து பகவானுக்கும் உள்ள இத்தகைய ஒற்றுமைகள் வெளிப்படையானவையே. ஆனால், அவைகள் ஒருவரிடமிருந்து மற்றொருவர் கடன்வாங்கினார்களென்பதைக் காட்டவில்லை. உலக முதல்வனின் அவதாரங்களே அம்மூவரும் என்பதையே காட்டுகின்றன. 'அவதாரம்' என்னும் சொல் மிகத் தெளிவானதாகும். அது அடிக்கடி நிகழும் இறைவனின் அருட்டோற்றத்தைக் குறிக்கிறது. சரித்திரம் பொய்யல்ல என்பதை நாம் ஒப்புக்கொண்டால் உலகாயதநாகரிகத்தைக் கடவுட்டோற்றம் வென்றுவிடுகிறது; அதன் மீது ஆளுகை செலுத்துகிறது என்பதையும் ஒப்புக்கொள்தல் வேண்டும். சரித்திரத்தில் ஆன்மசக்தியின் ஆக்கம் ஒளிவீசுகிறது. அஃது இல்லையெனின், சரித்திரம் பொருளில்லாத வீண் கதையாகவே முடியும். தெய்விக ஆக்கசக்தி (Spritual creative Power)யானது ஒருமனித உடலிற் புகுதலையே நான் அவதாரமென்கிறேன். நமது சாத்திரங்கள் அவதாரத்திற்கு ஊழ்வினையில்லையென்று கூறியது முற்றிலும் உண்மையேயாம். அவதாரம் ஆண்டவனின் பிரதிநிதியாகும். சீர்திருத்தப் புரட்சிக்காகவே அவதாரம் நிகழ்கிறது. உலக அழைப்புக்குப் பதிலிறுக்கவே அது நிகழ்கிறது. குறிப்பிட்ட ஓர் யுகத்துக்கேயெனினும் ஒருவகுப்புக் காதல் நாட்டுக் காதல் இன்றி உலகத்துக்கே பொதுவான ஒரு உபதேசத்தை அவ்வவதார புருடர்கள் செய்கிறார்கள். கண்ணன் வாழ்க்கை இத்தகையதேயாம். அது தொன்றுதொட்டு அவதாரமாகவே கொண்டாடப்பட்டுவருகிறது. கண்ணன், புத்தர், இயேசு என்ற மூவராகிய ஒருவரும் ஒருவராகிய மூவரும் உலக வளர்ச்சியின் ஒவ்வொரு முக்கியமான காலத்திற் றோன்றியவராவர். அம்மூவரும் அவதார புருடர்களேயாவர். அவதாரம் ஏதோ ஒரு காலத்தில் நிகழ்ந்ததென்பது உண்மையே; ஆனால் அதன் பெருமை என்றும் நிலைத்திருப்பதாகும். சரித்திரம் முற்காலத்தை வருணிக்கும் பொய்க்கதையுமன்று; வருங்காலத்தின் நிகழ்ச்சிகளை யுரைப்பதுமன்று. அது ஆண்டவனின் பெருமையை வெளியிடும் அவ்வக்காலத்து நிகழ்ந்த செய்திகளின் தொகுதியேயாம். அவதாரங்களின் நிர்மாண சக்தி (Creative power) யால் நிகழுபவையே அவை. கண்ணன், கௌதமர், கிறித்து இம்மூவரும் உயரியதெய்வசக்திகொண்டு அவதரித்தவரென்பது எனது நம்பிக்கை. தீமையே திரண்டு ஆற்றல் வாய்ந்த உருக்கொண்டுவிளங்கிய ஒவ்வொரு காலத்தில் அவர்களில் ஒவ்வொருவருந் தோன்றி அதை எதிர்த்தார்கள். காண்டற்கரிதாகியஉலகத்தினின்றும் அவர்கள் பெற்ற நிர்மாண சக்தியினால் உலகாயத மதத்தை எதிர்த்து நின்றார்கள்.

என் பேரவா.

எத்தனை நூல்களில் இந்துக்கள் கண்ணனையும் அவனது உபதேசத்தையும் போற்றி யிருக்கிறார்கள்? கீதை, மகாபாரதம், வேறு பல புராணங்கள், வங்காளத்து வைணவ இலக்கியம் இவைகளில்கண்ணபிரானது சரித்திரமும் உபதேசங்களுமே காணப்படுகின்றன. அவனது அருட்டோற்றத்தையும் பொருள் வளங்கெழுமிய உபதேசங்களையும்பற்றி அநேக நூல்கள் எழுதுதல்வேண்டும். அவனது அன்பர்கள் குழுமியிருக்கும் அவ்வுலகத்தையடையுமுன் இவ்வேலையை முடித்துவிட வேண்டுமென்பது எனது பேரவாவாகும்.

அன்புக் கண்ணன் அருட்கீதம்.

நான் எண்ணுவதுபோல அவனை ஓர் கோகுலத்து இளைஞனாக—கோபஸ்திரீகளின் தோழனாக—யாதவ மக்களின் அன்பனாக—அறிவுச் சுடர் கொளுத்தும் பேராசிரியனாக—அர்ச்சுனனின் சாரதியாக—ஆரியாவர்த்தத்தைக் சீர்திருத்துந் தலைவனாக எண்ணுங்கள். எஞ்ஞான்றும் வேய்ங்குழலிசைக்கும் அவனது திருவுருவே என்முன் பொலிகின்றது. அவனது குழலிசைக்கும் பாட்டானது அன்புப் பாட்டாக—எத்தகைய வேறுபாடுமின்றி உலகிலுள்ள சராசரங்களனைத்தையுந் தழுவிய உயரிய அருட்பாட்டாக மிளிர்கின்றது. எவர் கண்ணபிரானைக் காட்டினும் பெரிதும் பசுவினத்தைப் போற்றினார்? ஒரு நூலில் கோபஸ்திரீகளே அவன் அன்புபாராட்டிய பசுக்களாக உருவகப்படுத்தப்படுகிறார்கள். பலநூல்களில் அவன் கோகுலத்திலிருந்து, அதாவது பசு உலகத்திலிருந்து வந்தவனாகக் கூறப்படுகிறான். கண்ணன், பசுவின்பால் கொண்ட பேரன்பினாலும், "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்; இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்" என்னும் அவனது ஆழ்ந்த தத்துவக் கருத்தாலும் தற்காலத்தில் உயிர்ப் பிராணிகட்கு இழைக்கப்படுங் கொடுமை நன்கு

கண்டிக்கப்படுகிறது. பலநூல்களில் கண்ணபிரானது வீரத்தை விளக்கும் கதைகள் கூறப்படுகின்றன. அவனது வீரம், பரந்த மனத்தினின்றும்—அன்பு நிறைந்த உளத்தினின்றும் தோன்றுவதாகும். வீரக்கண்ணன் அன்புக் கண்ணனுகவே விளங்குகிறுன். உலகத்துக்கே அவன் தனது அன்பை அளிக்கிறுன். இதுவே எனது நம்பிக்கை. பத்தாம் நூற்றுண்டில் ஒரு கவி "என்று நம்மக்கள் ஒரு சகோதரராவர்" (When shall our race be one great brotherhood?) என வினவுகின்றுர். இதறகு விடை கீதையில்—கண்ணன்குழலில் காணலாம். நமது தேசியம் இக்குறிக்கோளாற் பொலிவுறும் நாளை நான் எதிர்பார்க்கிறேன். குடும்பப்பற்று எப்படி நாட்டுப்பற்ருக விரிகிறதோ, அப்படியே நாட்டுப்பற்று உலகப்பற்ருக விரிதல் வேண்டும். இக்கொள்கையே பகவத்கீதையில் பன்முறை வற்புறுத்தப்படுகிறது. அந்நூலை உலகமானது மக்கட் பகுப்பினர்க்கே பொதுவான நூலென்று அறிதல் வேண்டும். அதை யான் எக்காலத்துக்கும் உரிய கீதம் (Song of the ages) என்று கூறுகிறேன். உலகிற் பெரிய அறிஞரெல்லாம் அவனையும், அவனது குழலிசைக்கும் இன்னுருவங்கோயிலாகக் கொண்ட அந்நூலையும் போற்றுதற்குக் காரணமில்லாமலில்லை. ஜெர்மன் அன்பராகிய வில்ஹெம்வான் ஹம்போல்ட் (Wilhelm Von Humboldt) கீதையைப் பற்றி ஓர் ஆராய்ச்சி எழுதியிருக்கிருர். ஓர் ஜெர்மன் நண்பருக்கு அவர் எழுதிய கடிதத்தில் "வியக்கத்தக்க தத்துவங்கள் பல பொதிந்த அருமையான நூலாகிய கீதையைப் படிப்பதற்கு நான் உலகில் நெடுநாள் வாழ இறைவன் அருளியமைக்கு அவனுக்கு வணக்கஞ் செலுத்துகிறேன்" எனக் குறிப்பிட்டிருக்கிருர்.

## குழலின் அழைப்பு.

கண்ணன் குழல் உலகத்துக்குரிய உபதேசத்தைச் செய்கிறது. நம் நாட்டு வயதின் முதிர்ந்தார் பலர் அவ்வுண்மை கண்டு அதில் நம்பிக்கை கொள்ளும் திறனிலராயினர். இளைஞர் அவ்வாறில்லையென நான் நம்புகிறேன். இதுகாலை குழல் அவர்களை அன்புச் சட்டத்திற்கு உண்மையுள்ளவர்களாய் நடந்து கொள்ளும்படி அறைகூவி யழைக்கிறது. குருக்ஷேத்திரத்தில் ஆற்றல் மிக்க பெருங் கூட்டத்தால் எதிர்க்கப்பட்டு எம்பெருமான் அத் தெய்விகப் பாட்டை இசைத்தார். அர்ச்சுனன் அதையேற்று வெற்றி யடைந்தான். இந்நேரம் பெரும்புயலினுல் மோதுண்டிருக்கும் நிலையில் வாலிப இந்தியா நமது தலைவரின் குழலிசையைச் செவிமடுத்து உலக நன்மையின் பொருட்டு இந்தியாவின் உரிமைக்குப் போராடுமோ? அன்றி ஆழ்ந்த யோசனையின்றி இன்னல்வழிச் சென்று இடர்ப்படுமோ?

என்று உன்னைக் காண்போம்?

இது காலை குழலின் உபதேசமே உலகத்தை உய்விப்பதாகும். நம்மவரின் வாழ்க்கையை வெறுப்பும் சினமும் ஆளுகை செலுத்தி அழித்து வருகிறது. நவீன நாகரிகம் அகந்தையையும் ஆற்றலில் அவாவையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இந்தியா, எகிப்து, ஆப்பிரிக்கா, சின்ன ஆசியா (Asia Minor) மெசபொடேமியா, கிழக்கு முஸ்லீம் நாடு இவ்விடங்களில் ஆண்டவனை மறந்து



பணமெனுந் தெய்வத்துக்குத் தொண்டு புரியும் நாகரிகம் செழித்திருக்கிறது. ஐரோப்பா தனது ஆன்மாவைச் சாத்தானுக்கு விற்றுவிட்டு ஆன்ம விடுதலைத் தாகங்கொண்டு அலமருகிறது. "இறையின் வரவு நோக்கி இறைஞ்சுங்கள்" என்னும் கிழக்கத்திய கவியின் முறையீட்டை நான் எதிரொலி யிடுகிறேன். இன்னொரு அவதாரம் நிகழப்போகிறது என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு. எனது தியானத்தின் நிம்மதியான சில நிமிடங்களில் அவன் மீண்டும் ஓர் குடியானவன் போன்று உடையுடுத்து வருவதாகத் தோன்றுகிறது. இறை வரவு நோக்கி யாவரும் இறைஞ்சுங்கள்! நாட்டின் பல பாகங்களிலும் அறிஞர் பலர் இருந்தாலன்றி அவனது தோற்றத்தை யறித லரிதாகும். ஆகவின், நான் கண்ணனது உபதேசத்தைப் புதிய முறையிற் படித்தலும் ஆராய்ச்சி செய்தலும் வேண்டுமெனக் கூறுகிறேன். எளிய வாழ்க்கையும் தன்னலமறுப்பும் அன்புளமுங்கொண்ட இளைஞர் திருநெறித் தொண்டர் குழாங்கள் வேண்டுமென இயம்புகிறேன். இவ்விரண்டுக்கும், எழுச்சியும் ஞானமும் இன்ன லேற்க இசையும் மனமும் வேண்டும். இவ்விரண்டும் தன்னல மறுப்பு என்னும் பள்ளியில் ஆன்மாவைப் பழக்குகின்றனை. அண்மையிற் கண்டுபிடிக்கப்பட்ட கிறித்து நாதரின் 'புதிய வாசகங்களில் (New sayings) "என்று நீ எங்கட்கு வெளிப்படுவாய்?; என்று நாங்கள் உன்னைக் காண்பேம்?" என அவரது மாணவர்கள் வினவியதற்குக் கிறித்து பகவான் உடையைக் களைந்தபோதும் என்று உங்கட்கு நாணமுண்டாகாம லிருக்கிறதோ அன்று" என விடையிறுத்தார் என்று கூறப்பட்டிருக்கிறது. இந்தியாவின் பொருட்டு, உலகத்தின் பொருட்டு உடல், பொருள், ஆவி மூன்றையும் தியாகஞ் செய்யத் தயாரா யிருங்கள். கண்ணபிரானின் பொருட்டு ஏழைகளாக--பற்றற்றவராகத்தயாராயிருங்கள். அப்பொழுதே நமது தலைவர் தோன்றுவார். கண்ணன் தோன்றின் உலகின் இளமையும் அறிவூற்றும் அரும்பும்.

---

# பத்திரிகை ஆராய்ச்சி.

---

'நியூ ஓரியண்ட்' என்னும் பத்திரிகையில் 'ஜப்பானியர் நாட்டுப்பற்று' என்னும் பொருள்பற்றி எழுதும் ஒருவர், "ஜப்பானியர் தேச பக்தியைப் பேசிவிட்டு அதே மூச்சில் பிற நாட்டாரது தேசப்பற்றினைக் குறித்துப் பேசுதல் பாவம்" என்ற விவேகாநந்த சுவாமிகள் வாய்மொழியைப் பாராட்டிப் பேசுகிருர். இக்கட்டுரையின் சாராம்சம் வருமாறு:—

ஜப்பானியர்க்குத் தம் முன்னேரிடத்து விசேட பக்தியும் விசுவாசமுமுண்டு. ஜப்பானியர் 'பிதிர் கடனை' ஒரு முக்கியமான கடமையாகவே கருதுகின்ருர். அவர்கள் காலஞ்சென்ற முன்னேரை இறந்தவராகவே கருதுவதில்லை. 'இறந்தவர் இறந்தவ ரல்லர்; இன்னும் (சூக்கும நல்லுலகில்) வாழ்வோரே யாவர்' என்னும் கொள்கை, ஜப்பானியரின் ஒழுக்க நெறியின் உறுதியானதோர் அடிப்படை யம்சமாகவே

காணப்படுகின்றது. மேலும் ஜப்பானில் மக்களுக்கும் இயற்கைக்கும் நெருங்கிய உறவு அல்லது தொடர்புண்டு. ஜப்பானியர் விண்ணையும் மண்ணையும் காதலிக்கின்றனர்; குன்றையும் காற்றையும் மலையையும் நேசிக்கின்றனர். இதனால் அன்னார்க்கு நாட்டுப்பற்று மூச்சுக் காற்றைப்போலவே இயல்பாயிருக்கின்றது.

நம் முன்னோரும் 'தமிழ் கூறு நல்லுலக' மென்று தம் தாய் நாட்டைப் போற்றிவந்தார்; தாய்நாட்டின் திருநதிகளையும் மலைகளையும் காதலித்தார், தம் முன்னோர் 'கடனை'யும் மறந்தாரல்லர். நாமும் நம் முன்னோரை வழிபடுவதோடு, "காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள், கடலும் மலையும் எங்கள் கூட்டம்—நோக்குமிடம் எல்லாம் நாமன்றி வேறில்லை—நோக்க நோக்கக் களியாட்டம்" என்ற குதூகலத்தோடு தாய் நாட்டைக் காதலித்தல் வேண்டும். இத்தகைய நாட்டுப்பற்றே நமது எதிர்கால மகோன்னத நிலையின் உறுதியான 'அஸ்திவாரக் கல்'லாகும்.

* * *

ஆக்ஸ் போர்டில் திரு. எச். ஜாக்ஸன் என்னும் அறிஞர், வாணிபம், கைத்தொழில் முயற்சி முதலியவற்றில் ஈடுபட் டுழைப்போர்க்கும், நூலறிவும் இலக்கியப் பயிற்சியும் இன்றியமையாதன வென்பதை வற்புறுத்தி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். இதன் சாராம்சம் வருமாறு.

செல்வப் பொருள் ஈட்டுவதில் ஈடுபட்டிருக்கும் வியாபாரிகளுக்கும், வயிறு பிழைக்கும் தொழிலாளர்க்கும் படிக்க நேரமேது?—என்ற வினாவைக் கொள்கை கண்டிக்கத்தக்கது. நாகரிக மேலை நாட்டு வர்த்தக மன்னர்களில் பெரும் பாலோர் நூலறிவு வாய்ந்தவராவர். இவர்களில் பலர், தங்கள் இதம்கருதியும் நேசர் இதம் கருதியும் அறிவுப் பொக்கிஷங்களான நூல் நிலையங்கள் நாட்டியுள்ளார். நல்ல நூல்களில் பயிற்சி பெறுவதே 'சத் சங்க'மாகும். நூலறிவால் பணம் பெருகாவிட்டாலும் பணத்தை நல்வழிப்படுத்திப் பேரின்பம் துய்க்கும் ஆற்றல் இலக்கிய அறிவினாலே பொங்கிப் பெருகுகின்றது. செல்வ ரல்லாதார்க்கும் சிந்தையின் நிறைவாகிய அறிவுச் செல்வம் அகத்தே பொலிவதால், புறத்தே வறுமை என்பதே இல்லை யென்னலாம். நிலையில்லாத இவ்வுலகின் கண், அறிவுப் பொருளே பொன்னினும் மணியினும் விலையுயர்ந்ததாகப் போற்றத்தக்கதாகும்.

இங்ஙனம் வர்த்தக ஜாதியினரான ஆங்கில மக்கள் அறிவைப் போற்றுகின்றனர்; ஆங்கில இலக்கியத்தை ஓர் அரும்பெருங் குலதனமாக மதிக்கின்றனர். நமது பெரியோரும் 'கேடில் விழுச் செல்வம்' என்று அறிவுச் செல்வத்தையே அழியாத பெருநிதியமாகக் கருதியுள்ளார். "நுண்ணுணர்வின்மை வறுமை!"—அதாவது நூலாராய்ச்சி வாயிலாக அடையப் பெறும் ஆழ்ந்தகன்ற நுண்ணறிவு இல்லாமையே வறுமை; நுகர்ச்சிப் பொருளின்மை வறுமையன்று—என்னும் உண்மைகண்ட நம் நாட்டிலே 'சிந்தையின் நிறைவா'கிய அறிவுச் செல்வம் மிக மிகக் குறைவா யிருப்பது விசனிக்கத் தக்கதேயாகும். அறிவைப் பெருக்கி, ஆராய்ச்சியைப் பெருக்கி, நம் தமிழ் இலக்கியத்தை வளர்ப்பதே முதன்மையான—இக் காலநிலைக் கேற்ற—போறமாகும் என்பதை நமது பெருஞ் செலவரும் வர்த்தக மன்னரும் மறவாது சிந்தித்தல் வேண்டும்.

# சதங்கை யொலி.

## இந்தியாவும் ஆசியாவும்.

ஒரு காலத்தில் இந்திய நாகரிகம் ஆசியா கண்டத்தின் பொது உடைமையாக இருந்தது. அன்னிய நாடுகளிலிருந்து பிரயாணிகள் இங்கு வந்து நமது இலக்கியங்களிலும் நுண் கலைகளிலும் தத்துவ நூல்களிலும் சமய நூல்களிலும் பயிற்சி பெற்று மீண்டார்கள். இவ்விதமாக இந்தியாவின் ஞான பொக்கிஷம், நீர் நிறைந்த வாவி போல, ஆசியாவெங்கும் பாவி நற்பயன் விளைத்தது. மேலும், இந்தியாவிலிருந்து புறப்பட்டு ஆசியாவெங்கும் சுற்றித் திரிந்த பௌத்த சமய போதகர்கள் இந்தியாவின் ஞானப் புகழொளியை இமயமலையிலிட்ட விளக்கம்போலத் திகழ்ந் தொளிரச் செய்தனர். கி. பி. கூ-வது நூற்றாண்டில்தான், புத்த சமயம் ஜப்பானில் பரவலாயிற்று.

## ஜப்பானும் இந்தியாவும்.

ஜப்பானுக்குச் சென்ற இந்திய பௌத்தர்கள் ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் இந்திய ஞான ஒளியை அந்நாட்டில் பரப்பினார்கள். இவ் இந்திய அறிஞர்க்கு எவ்வாறு ஜப்பான் கடன்பட்டுள்ளதென்று ப்ரொபஸர் தகாகசு என்பார் டொக்கியோ மாசிகை யொன்றில் எழுதுகிறார். தர்ம போதி என்னும் பெரியாரது உபதேசமே ஜப்பானில் புத்தசமயம் பரவியதற்கு முதற் காரணமாயிருந்தது. போதிசேனன் என்னும் தென்னாட்டுப் பிராமண னொருவன் மஞ்சுஸ்ரீ என்னும் ஒரு முனிவரைச் சந்திப்பதற்குச் சீனதேசஞ் சென்று, அப்பால் ஜப்பானில் அந்நாட்டுக் குருமார்களுக்கு வடமொழி கற்பித்து வந்ததோடு, சில முக்கியமான கோயில்களும் ஜப்பானில் நிர்மாணஞ் செய்வதற்குக் கருவியாக இருந்ததாகவும் கேள்விப்படுகிறோம்.

## இந்து நாகரிகமும் — — — — புத்த சமயமும்.

இந்தியாவிற்கு விஜயஞ் செய்த ஹியூன் த்ஸாங் என்னும் சீன தூதனும் ஜப்பானில் புத்தசமயம் பரவுதற்கு ஒரு காரணமாயிருந்தான். அவனிடம் பயிற்சி பெற்ற "தோஷோ" என்னும் ஜப்பானியன் பிரேதங்களைச் சுடுவதே சரியான முறை யென்று போதித்தானும். சங்கார மூர்த்தியாகிய நமது சிவபெருமானையே ஜப்பானியர் "மகா காலன்" என்று பொருள்தரும் 'திங் கொகூடன்' என்னும் பெயரால் வழிபடுகின்றனராம். இவ்வண்ணமே நமது கலைமகளும் திருமகளும் வேறு பெயர்களால் ஜப்பானில் வழிபடப் பெறுகின்றனராம். இந்து நாகரிகத்தையும் இந்திய கலைஞானத்தையும் ஆசியாவெங்கும் விதைப்பதற்குப் புத்த சமயம் ஒரு பெருங் கருவியாக இருந்ததென்பதில் ஐயமில்லை.

## புத்தசமய வீழ்ச்சிக்குக் காரணம்.

இத்தகைய புத்த சமயத்தை இந்துக்கள் ஏன் துரத்திவிட்டார்கள்? இதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. புத்த சமயம் பின்னளில் மாசுற்றதே அதன் நாசத்திற்கு அதிமுக்கியமான காரணமாகும். மேலும் பௌத்தர்களுக்குள் ஏற்பட்ட ஒற்றுமையின்மையும் பௌத்த சமயத்தின் வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று. "மகாயன" "ஹீநயன" என்னும் இருதிறத்தாரும், தம்முள் ஒருவகுப்பார் உபயோகிக்கும் நதியில் நீர்பருகுவது கூட, பாவமென்று கருதினராம். ஆகவே, பௌத்தசமய வீழ்ச்சி "ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே" என்னும் சத்திய வாக்கினுக்கு ஓர் அழியாத சான்றாகின்றது. நாமும் நமது சமயத்தி லுள்ள மாசுகளை அகற்றி, மெய்ஞ்ஞானத்தை மாசிலாமணியாக மதித்து, வேற்றுமையுணர்வை வேரோடு களைந்தாலொழிய, நமது இந்து சமயமும் இந்தியாவில் புத்த சமயத்தின் கதியினையே அடையும் என்பது திண்ணம். இந்து சமயமும் இந்து நாகரிகமும் இந்தியர் மனப்பண்பும் இந்தியர் இலக்கியமும் ஒன்றையொன்று தழுவிக் கிடக்கின்றன. ஆதலால் இந்து சமயத்தின் அழிவு இந்து சமூகத்தின் அழிவே யாகும்.

## மதிப்புரை.

### சிவஞானபோதம் (உரையுடன்)

மெய்கண்டதேவர் அருளிய சிவஞான போதம், ஆலமரத்தை அடக்கிக்கொண்ட வித்தைப்போல, சித்தாந்தத்தைத் தன்னகத்தே அடக்கமாகக் கொண்டு விளங்குகின்றது. இது மூல நூலா, மொழி பெயர்ப்பா? என்னும் விவகாரம் இன்னும் முற்றுப்பெறவில்லை. இந்நூலின் திருப்பெயராக அமைந்துள்ள 'சிவம்' 'ஞானம்' 'போதம்' என்னும் மூன்று சொற்களுங் கூட வடசொற்களா, அல்லவா என்று சிலர் விவகரிக்கத் தலைப்படும் இந்நாளில், காய்தல் உவத்தல் அகற்றி மெய்ப்பொருள் காண்பது ஓர் அருமுயற்சியேயாகும். இத்தகைய நூதன விவகாரங்கள் ஒருபுறம் இருக்க, வைதிக சைவர்களோ, விசேட ஆராய்ச்சியின்றி, தமிழ்ச் சிவஞானபோதம் வடமொழியிலிருந்து பெயர்த்தெழுதப் பெற்றதேயென்றும், வடமொழிச் சிவஞான போதமே சிவபெருமான் திருக்கைகளில் அமர்ந்ததென்றும், மணிவாசகப் பெருமானுக்கு உபதேசிக்கப்பெற்றது அதுவே யென்றும், வாதிக்கின்றனர். மூடநம்பிக்கைகளாலும் நம்பிக்கையற்ற 'அழிவாராய்ச்சி'களாலும் விளையும் வாதங்களை ஒதுக்கிப் பார்க்குமிடத்து, மெய்கண்டார் அருளிய தமிழ்ச் சிவஞானபோதமே சைவசித்தாந்த ஞான முழுமுதல் நூலாக விளங்குகின்றதென்பது திண்ணம். இம்முழுமுதல் நூல் கஉ-சூத்திரங்களாலாகியது; ௪௦-அடிகளுடையது; ௬௨௪-எழுத்துக்களாலான ௨௧௬- சொற்கள் கொண்டது. சமயநூல்களுக்கு அரசாக விளங்கும் இந்நூலுக்கு மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரையும் பேருரையும் எழுதியுள்ளார். ஆனல் சிவஞானமுனிவர் உரைகளை ஆராய்வது சமயநூற் பெரும்புலமை வாய்ந்தவர்களுக்கே எளிதில் கைகூடுவதாகும். ஆகையால், பாமரருக்கும் ஒருவாறு சூத்திரங்கள் விளங்கும்படி, தமிழ்ப் பண்டிதர் திரு. கா. மு. சுந்தர முதலியார் பதவுரை எழுதி ஒரு சிறு புத்தகமாக எழுதி வெளியிட்டிருப்பது பாராட்டத் தக்க நன்முயற்சியேயாகும். இதனை வெளியிட்டவர், ஆரணி திருநாவுக்கரசு மடாலயச் சமரச சங்கத்தவர். வேண்டுவோர் "திருநாவுக்கரசு பிரஸ், ஆரணி, வட ஆறுகாடு ஜில்லா" என்று விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### புலோலிப் பசுபதீசுவரர் பதிற்றுப்பத் தந்தாதி.

இச்சிறு நூலை இயற்றி வெளியிட்டவர் மதுரைத் தமிழ்ச் சங்க பண்டிதை ஆகிய புலோலி ஸ்ரீமதி ந. பத்மாசனி அம்மையவர்கள். இவ்வம்மையவர்களது தமிழ்ப் பயிற்சி, இவர்கள் இம்மாசிகை வாயிலாக வெளியிட்டுவரும் கட்டுரைகளால் நம் வாசகர்க்கு நன்கு புலனாகும். இவ்வம்மையாரது பாடல்கள் அவர்களது அகத்தேயுள்ள பக்திப் பெருக்கையும் கல்விப் பெருக்கையும் வெளியிட்டு, ஆற்றொழுக்கினைப்போல் தெளிந்து ஒழுகுகின்றன. இவர்கள் இன்னும் புதிய புதிய துறைகளில் தமிழ்ப் பனுவல்களை வெளியிட வேண்டுமென்பது எமது பேரவா.

### புனிதவதியார்.

இச்சிறு நூல் "தமிழகத்துத் தாய்மார்" வரிசையில் இரண்டாவதாக வெளியிடப் பெற்றுள்ளது. "தமிழும் தமிழ்நாடும் தமிழ் மக்களும் தகுதியில் உயர்வுபெறற்குத் திருந்திய உரைவடிவ நூல்கள் பல வெளிவரல் வேண்டும்" என்று ஸ்ரீ உயர்திரு ஞானியார் சுவாமிகள் கூறும்வண்ணம், உரைநடை நூல்களே பொதுமக்கள் அறிவை வளர்ப்பனவாகும். இத்தகைய நன்னூல்களில் நமது பண்டிதர் மு. நடேச முதலியாரது "புனிதவதியார்" என்னும் சிறு நூலும் ஒன்றாகும். சைவசமயத்தை உருவாக்கிய பெண்மணிகளில் புனிதவதியார் ஒருவர் என்பதை அறியாதாரில்லை. இவ் அம்மையாரது திருக்கதையினை நமது சிறுவர் சிறுமியர்களும் எளிதில் அறிந்து இன்புறுமாறு இனிய செந்தமிழ் நடையில் எழுதி வெளியிட்டுள்ள நமது ஆசிரியருக்குத் தமிழகம் போதுமான ஊக்கம் அளிக்கப் பின்வாங்காதென்று நம்புகிறோம்.





சிவமயம்.

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.



| சதங்கை ௬. | காரைக்குடி, குரோதனவூ தைமீ | மணி ௧௦. |
|---|---|---|



## வணக்கம்.

### பரசிவ வணக்கம்.

அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே!
அன்பெனும் குடில்புகும் அரசே!
அன்பெனும் வலைக்குள் படுபரம் பொருளே!
அன்பெனும் கரத்தமர் அமுதே!
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே!
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே!
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே!
அன்புருவாம் பரசிவமே.

### எம்பெருமான் நடம்புரியும் இடம்.

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி, யுள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார் யாவர்அவர் உளந்தான், சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடமெனநான் தேர்ந்தேன், அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன் சிந்தைமிக விழைந்ததாலோ.

### விண்ணப்பம்.

வருமுயிர் இரக்கம்பற்றியே உலகவழக்கில் என்மனம் சென்றதோறும்
வெருவியின் அடிக்கே விண்ணப்பித்திருந்தேன் விண்ணப்பஞ் செய்கின்றேன் [இன்றும்
உருவளன் உயிர்தான் உயிரிரக்கம்தான் ஒன்றதே, இரண்டிலை, இரக்கம்
ஒருவில்என் னுயிரும் ஒருவும் என்உள்ளத் தொருவனே! நின்பதத்தாணை.

—இராமலிங்க சுவாமிகள்.

# தாரையார்.

திரு. ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.

தாரை யென்னும் பெண்மணி வானர நாட்டுத் தலைவனான வாலியின் மனைவியாய் விளங்குகின்றாள். அவ்வீரனது அளப்பரும் பெருமைக்கேற்ற அறிவும் நிறையும் அம்மங்கையிடம் மாண்புற அமைந்து விளங்கின. தலைவன் உயிரும் தாரை உடலுமாக இருவரும் இனிது வாழ்ந்து இல்லறமாகிய நல்லறத்தை இசைபெற நடத்திய தன்மை கம்பர் நூலில் நன்குவிளங்குகின்றது. இறந்து கிடந்த தன் தலைவனைக் கண்ட தாரை,"ஐயனே! என்னை இவ்வுலகில் தனியேவருந்தவிட்டு நீ, வானோர் நாடு சென்றாயே,

ஐயாநீ யெனதாவி யென்பதும்
பொய்யோ? பொய்யுரையாத புண்ணியா!

என்று உருகிக் கூறும் உரையால் அவளது உள்ளப்பான்மை எளிதில் உணரப்படும்.

இவ்வாறு இல்லறம் நடத்திய தாரை தன் தலைவனுக்குற்ற துணையாய் உறுதிகூறும் இயல்பமைந்து விளங்கினாள். வாலி, தன் தம்பியோடு போர் செய்யப் புறப்படும்பொழுது தாரை தன் தலைவனைத் தடுத்த மெல்லிய தன்மை கற்போர் உள்ளத்தை உருக்குகின்றது. தனது கருங்கூந்தல் விரிந்து கிடக்கவும் கண்கள் கலங்கிக் கண்ணீர் பொங்கவும் தாரை வாலியின் இருபாதங்களையும் பற்றிக்கொண்டு போருக்குப் போக வேண்டாமென்று தடுத்தாள்.

ஆயிடைத் தாரையென்
றமுதில் தோன்றிய
வேயிடைத் தோளினாள்
இடை விலக்கினாள்

வாயிடைப் புகைவர
வாலிகண் வரும்
தீயிடைத் தன்னெடுங்
கூந்தல் தீகின்றாள்.

என்று கம்பர் பெருமான் தாரையின் கனிந்த நலத்தையும் மென்மையையும் எடுத்துரைக்கின்றார். வாலி போர்க்கோலம் புனைந்து கோட்டையினின்றும் வெளிப்படுகின்றான். அவன் வாயினின்றும் வீரப்புகை விரைந்தெழுகின்றது; அவன் கண்களினின்றும் தீப்பொறி பறக்கின்றது; இக்கோலத்தோடு கடல் கடைந்த கரங்களையுடைய வாலி போருக்குப் புறப்படுகின்றான். அப்போது அமுதில் தோன்றிய அழகிய தாரை அவலமே வடிவாய் அவ்வீரனை இடை நின்று விலக்குகின்றாள். தன் மனைவியின் மனக் கருத்தை அறியாத வாலி, "மாதே! என்னை விலக்காது போக விடு; வெளி நின்ற பகைவன் யாவனேயாயினும் அவன் உடலைக்கலக்கி, உயிரைக் குடித்து நொடிப் பொழுதில் மீள்வேன்" என்று மாற்றம் உரைக்கின்றான். அந்நிலையில் மயில் போன்றசாயலையுடைய அம்மாது தன் அறிவின் பெருமையால் சில ஏதுக்களை எடுத்துரைக்கின்றாள். "ஐயனே! இதுகாறும் உனது நாமத்தைக் கேட்டபோதே நடுங்கி ஒதுங்கி மலையில் ஒளித்துக்கொண்டிருந்த உன் தம்பி இப்பொழுது உன் கோட்டையை அஞ்சாது அணுகி உன்னையே போர்செய்ய அறைகூவி அழைத்தால் அவன் பெருந் துணைவலி பெற்றுள்ளான் என்பது விளங்கவில்லையோ"



என்று வினயமாய்க் கூறினாள். அது கேட்ட வாலி தனது போராற்றலையும் பெருவரங்களையும் தாரையிடம் எடுத்துரைத்துத் தேற்ற முயன்றான். "மாதே! என் எதிர்நின்றுபோர்செய்வார் எவரேயாயினும் அவரது வரத்திலும் வலிமையிலும் பாதி எனக்குரியதென்றால் என்னை வெல்வதும் இயலுமோ? ஆதலால் நீதுயர்தவிர்க" என்று தலைவன் சொல்லக் கேட்ட தாரை பின்னும் தயங்கி, "ஐயனே! உன் தம்பிக்கு

இன்னுயிர் நட்பமைந்து
இராம னென்பவன்
உன்னுயிர் கோடலுக்கு
உடன்வந் தானென,
துன்னிய அன்பர்கள்
சொல்லினா ரென்றாள்.

இராமன் சுக்கிரீவனுக்குத்துணையாய்ப் போருக்கு வரும் தன்மையை வாலி அறிவதன் முன்னமே தாரை அன்பர் வாயிலாக அறிந்திருந்தாளென்றால் அரசியல் முறையில் ஒற்றரால் உளவறியும் தன்மை அம்மங்கையிடம் சிறந்து விளங்கிற்றென்பது இனிதுணரப்படும். தன் தலைவனுக்கும் அவன் தாங்கிநின்ற அரசாங்கத்துக்கும் ஏதம் செய்யும் உட்பகை புறப்பகைகளை ஆராய்ந்தறியும் நுண்ணிய அறிவு தாரையிடம் அமைந்திருந்ததென்பதற்கு இதுவோர் சிறந்த சான்றாகும். இத்தகைய அறிவு அமைந்திருந்த தாரையே வாலியின்பின் அரசாங்க பாரத்தை ஏற்றுக்கொண்ட அருக்கன் மைந்தன் தன் தமையனது மனைவியாய தாரையின் மொழியை தாய்மொழியாகத் தலைமேற் கொண்டு அவள் சொல்வழி நின்று அரசியல் நடத்துவானாயினான்.

தாரையின் அறிவுரையைத் தள்ளிவிட்டு வாலி போர்செய்யப் புறப்பட்டதனாலேயே உயிர் துறக்க நேர்ந்தது. தான் தலைவனிடம் கூறிய மொழிகளையும் அவன் கூறிய மாற்றத்தையும் தாரை பின் நினைந்து புலம்பும் சொற்கள் உள்ளத்தை உருக்குகின்றன.

சொற்றேன் முந்துற
அன்னசொற் கேளாய்,
அற்றான் அன்னது
செய்கலா னென
உற்றாய் உம்பியை
ஊழிகாணும்நீ
இற்றாய், நானுனை
யென்று காண்பனோ?

என்று தாரை சொல்லும் சொற்களில் சோகம் ததும்புகின்றது. இறந்து கிடந்த தன் தலைவனைக் காணவந்த தாரையின் கோலம் கல்நெஞ்சையும் கரைக்கும் தகையதாகும். சரிந்த துகிலோடும் விரிந்த கருங் கூந்தலோடும் அவ்வீரனது மார்பில் விண்ணில் தோன்றும் மின்னென விழுந்து புரண்டாள். இசையினுமினிய மொழிகளால் இரங்கினாள்; ஏங்கினாள்; விம்மினாள்; உருகினாள்; புலம்பினாள்.

செருவார்தோள! நின்சிந்தையுளேனெனின்
மருவார் வெஞ்சரம் எனையும் வவ்வுமால்
ஒருவே னுள்ளுளையா கினுய் தியால்
இருவேமுள் இருவே மிருந்திலேம்:

என்று பலவாறு புலம்பி அழுதாள். அப்பால் கற்புடை மகளிர்க் கேற்ற கைம்மைக்கோலம் பூண்டு கண்டோர் மன முருகும் நிலையில் நின்றாள். மங்கல வணியை நீக்கி மணியணிகளையும் மலர் மாலைகளையும் மாற்றி, வண்ணமும் சுண்ணமும் துறந்து மார்பொடு கழுத்தையும் மறையப் போர்த்து, சாரற்காலச் சந்திரன்போலத் தோன்றிய தாரையைக் கண்ட இலக்குவன் உள்ளம் நைந்து உருகுவானாயினன்.

தலைவனை யிழந்து அவலமுற்று நின்ற அழகிய மங்கையைக் கண்ட இளைய வீரன் உளம் உருகி, கண்கலங்கி தன் தாயரது வடிவத்தை நினைந்து வாடி வருந்தினன். அப்பால் யாதேனும் மாற்றம் உரையாதிருத்தல் முறையன்றென்றெண்ணி "அம்மையே! சேனையும் தானும் சென்று சீதையைத் தேடித் தருவதாக வீரனிடம் வாக்களித்த மாற்றத்தை மன்னவன் மறந்தான். அவன் மன நிலையை அறியுமாறு எனது அண்ணலது ஆணையால் ஈண்டு வந்தேன்" என்றுசீற்றத்தோடு இலக்குவன் இயம்பினன். அதைக் கேட்ட தாரை இசையினுமினிய சொற்களால் "ஐயனே! சிறியோர் தம் சிறுமையால் செய்யும் செயல்களைப் பெரியோர் தம் பெருமையால் பொறுப்பது கடனன்றோ! மன்னனும் உமது பணியை மறந்தானல்லன். நாடெங்கும் தூதரைவிடுத்து படை திரண்டு வரும் காலத்தை எதிர் நோக்கியிருக்கின்றான். சேனைவந்து சேருங்காலமும் நெருங்கிற்று. ஆதலால் தாயினும் சிறந்தோய்! சீற்றம் தணிவது கருமமாகும்" என்று இனிமையாய் இயம்பிய மொழிகளைக் கேட்ட இலக்குவன் அருளும் நாணமும் ஒருங்கேயடைந்து யாதும் பேசவெழாது நின்றான். இவ்வாறு வீரன் சீற்றம் தணிந்துநின்ற செவ்வி பார்த்து, சொல்லின் செல்வனை மாருதி அவன் மருங்கு செல்லும் மனத்திறல் பெற்றான். இவ்வாலாற்றால் தாரையின் பெருமை இனிதுவிளங்குகின்றது. தான் செல்லும் வழியில் ஊறாக நின்ற மரங்களும் மலைகளும் நீறாகுமாறு கடுஞ்சினத்தோடு சென்ற இளைய வீரனது வெம்மையை மாற்றி சீதமர் சாந்தம் போன்ற தண்மையும் மென்மையும் எய்துவிக்கும் சொல்நயம் தாரையிடம் அமைந்திருந்ததென்றால் அம்மாதின் அறிவின் பெருமையை விரித்துரைத்தலும் வேண்டுமோ? சொல்லும் முறையே உலகினை வெல்லும் முறையாம் என்பது அறிஞர் கருத்தாகும். ஆக்கமும் அழிவும் சொல்லால் வருதலாலேயே சொல்வன்மை அரசாங்கத்துக்கு அமைந்த தோர் இயலாக ஆன்றோரால் கருதப்படுகின்றது.

சொலல் வல்லன் சோர்விலன் அஞ்சானவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது.

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் சிறப்பித் துரைத்த சொல்வன்மை தாரையிடம் அமைந்திருந்த தன்மையாலேயே இலக்குவனது இறுகிய வுள்ளம் நெகிழ்ந்து சுக்கிரீவன் பிழைத்தான். சொல்லில் வல்லவனாய அநுமனே இலக்குவனது சீற்றம் பெரிதென்றுணர்ந்து தாரையை முன் அனுப்பி, தான் பின் செவ்வி பார்த்துச் சென்ற தன்மையை அறிவோமானால், தாரையின் சொல் நலத்தின் செம்மை சொல்லாமலே விளங்கும். இத்தகைய சிறப்பு வாய்ந்த தாரையை சுக்கிரீவன் தாயென நினைந்து வணங்கியதன்மை சாலவும் அமைவுடையதேயாகும்.

இவ்வம்மையார் ஆழிவாய்த்தோன்றிய அமுதில் பிறந்தவள் என்பது கதையில் காணப்படுகின்றது. மற்றைய மக்கள்போல் புன்புலால் யாக்கையில் தங்கி நின்று பிறவாது கடலிடை எழுந்த அமுதில் தோன்றிய அம்மங்கை பிறப்பாலும் உயர்ந்தவளே யாகின்றாள். வாலியார் கடல் கடைந்தபோது அவ்வாழிவாய்த் தோன்றிய அமுதச் செல்வியை அமரர் அவ்வீரனுக்கே உரிய பொருளாய் அளித்தாரென்றும் அம்மங்கை தன் பிறப்புக் கேற்ற மெல்லியல் வாய்ந்து வாலியின் மனைவியாய் வாழ்ந்தாள் என்றும் கதை கூறுகின்றது. மாசிலாக் கற்பு வாய்ந்த இம்மாது, தலைவன் இறந்த பின் தன் மைந்தனை அங்கதனுக்கும் அரசாங்கத்துக்கும் உற்ற துணையாய் அமைந்து புனையா ஓவியம் போல உயிர் வாழ்ந்தாள்.

மங்கல வணியைநீக்கி
மணியணி துறந்து, வாசக்
கொங்கலர் கோதைமாற்றி,
குங்குமம் சாந்தம் கோட்டா,
பொங்கு வெம்முலைகள் பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்டவள்ளல்
நயனங்கள் பனிப்ப நின்றான்.

என்று தாரையின் கைம்மைக்கோலத்தைக் கம்பர் கற்போர் உள்ளமாகிய பளிங்கில் ஓர் உயிர் ஓவியமாக எழுதி அமைக்கின்றார். இம் மங்கையைக் கண்டபோது இலக்குவன் "இனையராம் என்னையீன்ற இருவரும்" என்று எண்ணி நைந்தானென்றால் தாரையாரது முகத்தின் தன்மையும் அதனாலறியப்படுவதாகிய அகத்தின் தன்மையும் ஒருவாறு உய்த்துணரப்படும். செம்மையால் உலகளித்த செங்கோல் மன்னனது தேவியராய்த் திகழ்ந்த கோசலையும் சுமித்திரையும் அம்மன்னன் ஆவி அகன்ற பின்னர் எக்கோலத்தோடு விளங்கினார்களோ, அக்கோலமே தலைவனையிழந்த தாரையிடமும் விளங்கிற்றென்பதற்கு இலக்குவனது மொழிகளே இசைந்த சான்றாம். கங்கைக்கரையில் தன்னையீன்ற அன்னையர் மூவரையும் கண்டு அவர் கோலத்தை அறிந்திருந்த இலக்குவன் தாரையைக் கண்டபோது தன் தாயரில் இருவரை நினைத்தல் இயல்பேயாகும். மயில்போன்ற சாயலையுடைய மங்கையர் குழாத்தினடுவே இலங்கிய தாரையைக்கண்டபோது 'சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற' கோசலா தேவியை நினைந்தான். மாசற்ற மனத்தளாய தாரையைக் கண்டபோது 'அறந்தானே என நின்ற' தனது அன்னையை நினைந்தான். தசரதன் இறந்தமையால் உலகிலுள்ள உடலெல்லாம் உயிரிழந்தாற்போல வருந்தவும் இடரிலா முகத்தோடிருந்த கேகையர்கோன் மகளது கோலத்தைத் தாரையின் முகத்தில்இலக்குவன் காணாமையால், அவளை நீத்து எஞ்சிய தாயிருவரையும் நினைந்தான் என்று கொள்ளுதல் பொருந்தும்.

இத்தகைய நலங்களும் பெருமையும் வாய்ந்த தாரை பஞ்ச கன்னியருள் ஒருவராகப் பாராட்டப்படுவது பெரிதும் பொருத்தமுடையதேயாகும். ஒரு தாய் வயிற்றில் அடங்கி நின்று பிறவாத பேறுபெற்ற மாதரில் தாரையார் ஒருவராகத் திகழ்வதாலும், வலிமையில் ஒப்புயர்வற்ற வாலியின் மனைவியாய் அமைந்து அப்பெருமானுடன் இல்லறத்தை இனிது நடத்திய பெருமை வாய்ந்தவராதலாலும், அப்பெருமகன் இறந்த பின்னர் மன்னனுக்கும் மன்னுயிர்க்கும் தாயாகிச் செம்மை சான்ற கைம்மை நெறியை மேற்கொண்டு மனத்தின்கண் மாசின்றி வாழ்ந்த மாண்புடையராதலாலும், தாரையார் அனுதினமும் அறிஞரால் நினைக்கப் பெறும் ஐம்பெருங் கன்னியரில் ஒருவராய்த் திகழ்வது அமைவுடையதேயாகும்.

# குடியன் கூத்து

(மத்த விலாஸ ப்ரஹஸனம்)

பல்லவ சக்கரவர்த்தி மகேந்திர வர்மன் இயற்றியது.

சரித ஆராய்ச்சியாளர் கே. ஜி. சங்கரய்யர் பி. ஏ., பி. எல். மொழிபெயர்த்தது.

(முன்தொடர்ச்சி)

**சாக்கிய:**—ஆ! உபாஸகனே! அப்படிச் சொல்லாதே. கஷ்டதசையிலிருப்பவர்களிடம் தயை காட்டுவது எங்கள் தர்மம்.

**கபாலி:**—இதுவும் ஸர்வஞ்ஞன் (புத்தன்) தர்மமா? முதலில் விழுந்தது நானல்லவா? இருக்கட்டும். இதனாலென்ன? இப்பொழுது உன் மண்டையோடுதான் என் பிட்சா கபாலமாகப் போகிறது.

(எல்லோரும் கலகம் செய்கிறார்கள்.)

**சாக்கிய:**—கஷ்டம், கஷ்டம்.

**கபாலி:**—பாருங்கள், மாஹேச்வரர்களே, பாருங்கள்! சந்யாசி வேஷம் பூண்ட இந்த துஷ்டன் என் பிட்சா கபாலத்தைத் திருடிவிட்டுத் தானாகவே அழுகிறான். இருக்கட்டும். நானும் கூச்சல் போடுகிறேன். அப்ரஹ்மண்யம்! அப்ரஹ்மண்யம்!!

(பிறகு பாசுபதன் பிரவேசிக்கிறான்.)

**பாசுபதன்:**— சத்தியசோமா, நீ ஏன் கூப்பிடுகிறாய்?

**கபாலி:**—பப்ருகல்பா! சந்யாசி என்ற பெயரை வகித்திருக்கும் இந்த துஷ்ட நாகசேனனுக்கு என் பிட்சா கபாலத்தைத் திருப்பித்தர மனமில்லை.

**பாசுபதன்:**—(தனக்குள்) நமக்கு வேண்டியதை அந்த கந்தர்வர்களே செய்துவிட்டார்கள். அந்த அம்பட்டன் தாசியாகிய என் வைப்பாட்டி மனத்தை இந்த துஷ்டன் தன் கந்தை நுனியிலுள்ளபணமுடிப்பைக்காட்டி, இளம்புல் முஷ்டியால் பசுவை யிழுப்பதுபோல், பல தடவையும் கவரப் பார்க்கிறான். ஆகையால், ஒரு யானையின் மேல் வேறு யானையை ஏவுவது போல் இப்பொழுது கபாலியைக் கிளப்பிவிட்டு என் சத்துருவான இவனைத் தொலைக்கிறேன்,

(வெளிப்படையாய்) நாகசேனா! இவர் சொல்வது சரிதானா?

**சாக்கிய:**—நீரும் இப்படியா சொல்கிறீர்? கொடாததை வாங்கக் கூடாதென்றும், பொய் சொல்லக் கூடாதென்றும், பிரமசரியத்தைக் காப்பாற்ற வேண்டுமென்றும், பிராண இம்சை கூடாதென்றும், அகால போஜநம் கூடாதென்றும் எங்களுக்கு உபதேசம். எங்கள் புத்த தருமத்தைச் சரண் அடைகிறேன்.

**பாசுபதன்:**—சத்தியஸோமா! இவர்கள் சித்தாந்தம் இப்படி. நீ என்ன சொல்கிறாய்?

**கபாலி:**— பொய் சொல்லக்கூடாதென்று எங்களுக்கும் உபதேசம்.

**பாசுபதன்:**—இரண்டும் சரிதான். இதை நிர்ணயிக்க வழியென்ன?

**சாக்கிய:**—புத்த வசனத்தைப் பிரமாணமாகக் கொண்டு சந்யாசி, கள் குடிக்கும் பாத்திரத்தை எடுப்பதெப்படி?

**பாசுபதன்:**—எதற்கும் காரணம் கேட்கும் நீங்கள் பிரதிஜ்ஞையை மாத்திரம் கூறினால் போதுமா?



**கபாலி :**— பிரத்தியட்சத்திற்குக் காரணம் எதற்கு?

**பாசுபதன்:**—பிரத்தியட்சமா?

**தேவ:**—இவன் சீவரத்தில் மறைத்திருப்பது கபாலம்.

**பாசுபதன்:**—கேட்டீரா?

**சாக்கிய:**—இந்தக் கபாலம் என்னுடையதே.

**கபாலி:**—ஆனால் அதைக் காட்டும். பார்க்கலாம்.

**சாக்கிய**—அப்படியே. (காண்பிக்கிறான்)

**கபாலி:**—பாருங்கள், மாஹேச்வரர்களே, கபாலிகன் செய்த அநியாயத்தையும் இந்த சாக்கிய பிட்சுவின் யோக்கியதையையும் பாருங்கள்.

**சாக்கிய:**—கொடாததைவாங்குவது கூடாதென்று எங்கள் முனியின் உபதேசம். (என்று முன் சொன்னதையெல்லாம் திரும்பச் சொல்கிறான்)

(இருவரும் குதிக்கிறார்கள்.)

**சாக்கிய:**—சீ, வெட்கப்பட வேண்டிய காலத்தில் குதிக்கிறான்.

**கபாலி:**— ஆ! குதிப்பது யார்? (சுற்றும் பார்த்துவிட்டு) ஆ! காணமற்போன என் கபாலத்தைத் திரும்பக் கண்ட சந்தோஷமென்ற தென்றலால் அசைக்கப்பட்ட பிரீதியென்ற கொடியின் விலாசங்களே, இவன் நர்த்தனம் என்று எண்ணுகிறான்.

**சாக்கிய:**—உங்களுக்குத் தெரியவில்லையா? ஓ! நீரே சொல்லும். இதன் நிறமென்ன?

**கபாலி:**—இதில் சொல்ல வேண்டியதென்ன? நான் தான் பார்த்தேனே! காக்கையைவிடக் கறுப்பு.

**சாக்கிய:**—ஆனால் இதுஎன்னுடையதே. ஒத்துக்கொள்.

**கபாலி:**—ஆமாம். சாயம் மாற்றுவதில் உன் சாமர்த்தியத்தை ஒத்துக்கொண்டேன். இயற்கையில் தாமரைத் தண்டைவிட வெண்மையான ஆடையை இளஞ் சூரியனைப்போல் சிவப்பாக்கின உன் செய்கைக்கு ஒப்புண்டா? இத்துடன், அகமும் புறமும் அழிவில்லாத சாயத்தால் மறைக்கப்பட்ட உன்னையடைந்த பிறகு கபாலம் மாத்திரம் எப்படிச் சாயமேறு திருக்கும்?

**தேவ:**—ஹா! அதிருஷ்டம்கெட்ட நான் தொலைந்தேன். லட்சணமாய், பிரமதேவன் மண்டை யோட்டைப் போல் சிறந்து, பௌர்ணமி சந்திரன் போல் வெளுத்து, எப்பொழுதும் கள் மணத்தையுடைய இந்தக் கபாலத்திற்கு அழுக்குத்துணியின் சேர்க்கையால்இந்தக்கதி ஏற்பட்டுவிட்டது. (என்று அழுகிறாள்)

**கபாலி:**— அழவேண்டாம். என் அன்பே, அழவேண்டாம். மறுபடியும் சுத்தமாய்விடும். மகாபூதங்களும் பிராயச்சித்தங்களால் சுத்தமாய் விடுமென்று கேட்டிருக்கிறேன். சந்திர சூடரான நமது சுவாமியும் மகா விரதத்தை யநுட்டித்து பிரமதேவன் தலையைக் கிள்ளின பாவத்திலிருந்து விடுபட்டார். முன்னொரு காலத்தில் துவஷ்டாவின் குமாரனை மூன்றுதலை விசுவரூபனைக்கொன்றதே வேந்திரனும் நூறு அசுவமேத யாகங்களைச் செய்து திரும்பவும் பரிசுத்தனானன். பப்ருகல்பா, சரிதானே!

**பாசுபதன்:**—நீங்கள் கூறுவது சாஸ்திர சம்மதமே.

**சாக்கிய:**—ஓ! நான் சாயம்தான் மாற்றினேன். இதன் அளவை யார் மாற்றினது?

கபாலி:—மாயையின் வம்சத்தில் பிறந்தவர்களல்லவா தாங்கள்?

சாக்கிய:—நான் எவ்வளவு நாழிகை உம்மிடம் கதறுவேன்? இதை நீரே எடுத்துக்கொள்ளும்.

கபாலி:— புத்தனும் தாநபாரமிதையை (ஒரு பௌத்த நூல்) இப்படித்தான் பூர்த்தி செய்திருக்கவேண்டும்.

சாக்கிய:—இப்பொழுது என்னை இரட்சிப்பவர் யார்?

கபாலி:—ஏன்? புத்தனும் தர்மமும் சங்கமும் இல்லையோ?

பாசுபதன்:—இந்த வழக்கை என்னால் தீர்க்கமுடியவில்லை. ஆகையால் நியாயஸ்தலத்திற்கே போவோம்.

தேவ:—அப்படியானால் கபாலம் போய்விட்டது.

பாசுபதன்:—ஏன்?

தேவ:—இவன் பல விஹாரங்களை (பௌத்தமடம்) அநுபவித்துக் கிடைத்த திரவியத்தைக்கொண்டு நியாயஸ்தலத்திலுள்ள காருணிகர்களான அதிகாரிகள் வாய்களை இஷ்டம்போல அடைக்க முடியும். பாம்புத்தோல் மாத்திரமுள்ள தரித்திர காபாலிகனுக்குப் பணிவிடை செய்கிற எங்களுக்கு நியாய ஸ்தலத்தில் பிரவேசிப்பதே எப்படி?

பாசுபதன்:— அப்படியில்லை. தூண்கள் மாளிகையைத் தாங்குவதுபோல் அந்த ஸாதுக்கள் தர்மத்தைப் பாதுகாத்து வருகிறார்கள். அதெப்படியென்றால், தூண்கள் கோணாமல் இருப்பதுபோல் சாதுக்கள் கபடமில்லாதவர்கள். தூண்கள் வயிரம் பாய்ந்து கனமாயிருப்பதுபோல் சாதுக்கள் உண்மை கண்டு பிடிப்பவரும் பெருந்தன்மையுடையவருமாவர். தூண்கள் அசையாதிருப்பதுபோல, சாதுக்கள் நடுநிலைமையிலிருந்து பிறழாதவர். தூண்கள் மெதுவாயிருப்பதுபோல, சாதுக்கள் அன்பு வாய்ந்தவர். தூண்கள் குல மரத்தால் அமைக்கப்பட்டிருப்பதுபோல் சாதுக்கள் உயர் குலங்களில் பிறந்தவர்.

கபாலி:—போதும், போதும். ஆனாலும் நியாயமாய் நடப்பவனுக்கு எங்கிருந்தும் அச்சமில்லை.

சாக்கிய:—நீர் முன்னே போம்.

பாசுபதன்:—அப்படியே.

(எல்லாரும் செல்கிறார்கள்.)

(அதன் பிறகு உன்மத்தகன் பிரவேசித்து)

உன்ம:—இந்தப் பொல்லாத நாய், சூலத்தில் பக்குவம் செய்து வைத்திருந்த மாமிசத்துடன் கபாலத்தை எடுத்துக்கொண்டு ஓடுகிறது. தேவடியாள் மகனே! எங்கே போவாய்? இப்பொழுது இது கபாலத்தைக் கீழே போட்டுவிட்டு என்னைக் கடிக்க வருகிறது. (சுற்றிப்பார்த்து) இந்தக் கல்லால் இதன் பற்களைப் பெயர்த்து விடுகிறேன். என்ன! கபாலத்தைப் போட்டுவிட்டு ஓடுகிறாயா? பைத்தியம் பிடித்த துஷ்டநாயே, இவ்வளவு சூரத்தனத்தோடுதானா என்னையும் கோபிக்கிறாய்? சமுத்திரம் வற்றியபின் மேல் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பி, இராவணனைக் கொன்று தேவேந்திரன் பிள்ளையாகிய திமிங்கிலத்தைப் பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டது! ஓ! ஆமணக்கு மரமே! என்ன சொல்கிறாய்? பொய், பொய் என்றா? உலக்கைகள்போல் கைகளை விசாலமாயத் தொங்கவிட்டுக்கொண்டிருக்கும் இந்தத் தவளை எனக்குச் சாட்சியில்லையா? இல்லாவிட்டால் மூவுலகிலும் பெயர்பெற்ற பராக்கிரமசாலிக்குச் சாட்சி எதற்கு? இப்படிச் செய்கிறேன். நாய் தின்று மீந்திருக்கும் மாமிசத் துண்டைத் தின்பேன். (கடித்து மயங்கி) ஹா! ஹா! கண்ணீர் என்னைக் கொல்கிறது, கொல்கிறது. (அழுதுபார்த்து)யாரடா இது? என்னை யடிக்கிறாய்? (பார்த்துவிட்டு) துஷ்டப் பயல்களே! பீமசேனனுக்குக் கடோற்கசன்போல, யாரோ ஒருவனுக்கு நான் மருமகனில்லையா? மேலும் கேளுங்கள். என் வயிற்றில் நூறு பிசாசுகள் பல வேடங்களுடன் சூலங்களை ஏந்தி வருகின்றன. இயற்கையில் பயத்தை யுண்டுபண்ணுகிற நூறு கடுவாய்களும் இருக்கின்றன. இதோ நான் வாயிலிருந்து பெரிய பாம்புகளை வெளியாக்குகிறேன். என்னை ஏன் உபத்திரவிக்கிறார்கள்? சிறு எசமானர்களே! கருணைகாட்டவேண்டும். இந்த மாமிசத் துண்டுக்காக என்னைக் கஷ்டப்படுத்தாதேயுங்கள். (முன்னேபார்த்து)இதோ! நம் ஆசாரியன் சூரநந்தி. இவனிடம் செல்வேன்.

(ஓடுகிறான்.)

பாசுபதன்:—அடே! இந்தப்பைத்தியம் இங்கேயே வருகிறது. இவன் கிராமக் குப்பைமேடே மனித உருவெடுத்து வருவதுபோ லிருக்கிறான். அதெப்படியெனில்—உபயோகமில்லாததால் குப்பையில் போடப்பட்ட விசித்திரக் கந்தைகளை ஒன்றோடொன்று முடிந்து அணிந்துகொண்டிருக்கிறான். இவன் தலைரோமங்களோ பரந்து புழுதியும் சாம்பலும் படிந்து, நிர்மால்ய மாலைகளைத் தாறுமாறாக அணிந்திருக்கின்றன. எச்சிலுக்கு ஆசை கொண்டு கத்தும் காக்கைகள் கூட்டம் கூட்டமாய் இவனைப் பின் தொடர்கின்றன.

உன்ம:—இவனிடம் போவேன். (அடுத்துச் சென்று) மஹா சாதுவும் சண்டாளனுமான நாயிடமிருந்து கிடைத்த இந்தக் கபாலத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

பாசுபதன்:—(ஜாடைகாட்டி) பாத்திர மறிந்து கொடுக்க வேண்டும்.

உன்ம:—மகாபிராமணனே! அநுக்கிரகிக்க வேண்டும்.

சாக்கிய:—இது இந்தமகாபாசுபதனுக்குத்தான் தகும்.

உன்ம:—(கபாலியின் சமீபம் சென்று கபாலத்தைப் பூமியில் வைத்துப் பிரதட்சணம் செய்து கால்களில் விழுந்து) மஹாதேவனே! பிரசாதிக்க வேண்டும். இதோ உம்மைக் கும்பிடுகிறேன்.

கபாலி:—கபாலம் நம்முடையது.

தேவ:—ஆமாம்.

கபாலி:—பகவான் பிரசாதத்தால் திரும்பவும் கபாலியாகிவிட்டேன். (எடுக்க விரும்புகிறான்)

உன்ம:—தேவடியாள் மகனே! விஷத்தைச் சாப்பிடு. (கபாலத்தைப் பிடுங்கிக்கொண்டு போகிறான்)

கபாலி:—(பின்சென்று) இந்த எமபடன் என் உயிரைக் கொண்டுபோகிறான். தாங்களிருவரும் அனுக்கிரகிக்க வேண்டும்.

இருவரும்:—இருக்கட்டும். நாங்கள் உனக்கு உதவுகிறோம்.

(எல்லாரும் வழிமறிக்கிறார்கள்.)

கபாலி:—நில், அடா, நில்.

உன்ம:—என்னை ஏன் தடுக்கிறீர்கள்?

கபாலி:—என் கபாலத்தைக் கொடுத்துவிட்டுப் போகலாம்.

**உன்ம:**—மூடா! உனக்குத் தெரியவில்லையா? சுவர்ண பாத்திரமல்லவா இது?

**கபாலி:**—இப்படிப்பட்ட சுவர்ண பாத்திரத்தைச் செய்தவன் யார்?

**உன்ம:**—சுவர்ண நிறமான ஆடை தரித்த இத்தட்டான் மைத்துனனால் செய்யப்பட்டதால், பகவானே! இதை சுவர்ண பாத்திரமென்று சொல்கிறேன்.

**சாக்ய:**—என்ன சொல்கிறாய்?

**உன்ம:**—சுவர்ண பாத்திரமென்று.

**சாக்கிய:**—இவன் என்ன பைத்தியகாரனோ?

**உன்ம:**—பைத்தியகாரன் என்ற வார்த்தையைப் பல தடவைகளில் கேட்டிருக்கிறேன். இதை வாங்கிக் கொண்டு பைத்தியகாரனைக் காட்டு. (கபாலியிடம் கபாலத்தைக் கொடுக்கிறான்)

**கபாலி:**—(கபாலத்தை வாங்கிக் கொண்டு) இவன் இப்பொழுது சுவரில் மறைந்திருக்கிறான். சீக்கிரமாய்ப் பின் தொடரவேண்டும்.

**உன்ம:**—எனக்கு அநுக்கிரகமாயிற்று. (விரைவாய்ச் சென்றுவிட்டான்.

**சாக்கிய:**—ஆஹா! எதிரிக்குலாபங் கிடைத்ததால் எனக்கும் சந்தோஷமாயிற்று.

**கபாலி:**—(கபாலத்தை பணிந்து கொண்டு) கபாலமே! அந்தத் திருடன் சீக்கிரத்தில் சுலபமாய் மறைந்ததும் நீ இப்பொழுது எனக்கு க்ஷேமமாய்த் திரும்பக் கிடைத்துவிட்டதால், நான் நீண்டகாலம் இடைவிடாமல் தவம் செய்திருக்க வேண்டும். பகவான் பரமேசுவரனிடம் எனக்கு உண்மையான பக்தியுமிருக்க வேண்டும்.

**தேவ:**—பகவானே! என் கண்கள் சந்திரனுடன் சேர்ந்த ப்ரதோஷத்தைக் கண்டாற்போல், கபாலம்பெற்ற பகவானைப் பார்த்து இப்பொழுது களிப்படைந்தன.

**பாசுபதன்:**—நல்லகாலம்; உமக்கு மேன்மை கிடைத்தது.

**கபாலி:**—இந்த மேன்மை தங்களாலேயே கிடைத்தது.

**பாசுபதன்:**—(தனக்குள்) பிழையறியார் பயமறியார் என்பது உண்மையே. இந்த பிட்சு இப்பொழுது கடுவாயின் வாயிலிருந்து தப்பிவிட்டான். (வெளிப்படையாய்) நான் இப்பொழுதே அன்பனுடைய மேன்மையாலுண்டான ஆனந்தத்தை முன்னிட்டுக் கிழக்குத் திக்கில் வசிக்கும் பகவானுடைய தூமசமயத்தை (யாகவேளை) எதிர்பார்க்கிறேன்: இன்று முதல் உங்களுக்குள் இயல்பாக ஏற்பட்டு எப்பொழுதும் இருந்து வருகிற இந்தவிரோதம் கிராதனுக்கும்(வேடனுருவெடுத்த சிவன்) அர்ச்சுனனுக்கும் ஏற்பட்டாற்போல் முடிவில் பரஸ்பரம் சந்தோஷத்தை யுண்டு பண்ணட்டும்.

(வெளியேறினான்.)

**கபாலி:**—நாகசேனா! என் பிழையைப் பொறுத்து உள்ளம் தெளிய வேண்டும்.

**சாக்கிய:**—இதையும் கூறவேண்டுமா? உமக்குப் பிரியமாக நான் வேறென்ன செய்யவேண்டும்?

**கபாலி:**—நீங்கள் மகிழ்வெய்திவிட்டால் வேறென்ன வேண்டும்?

**சாக்கிய:**—ஆனால், நான் போகிறேன்.



**கபாலி:**—போய் வாருங்கள்.

**சாக்கிய:**—ஆகட்டும். (வெளியே சென்றான்).

**கபாலி:**—அன்பார்ந்த தேவசோமையே! நாமும் போவோம்.

(பரத வாக்கியம்)

குடிகளின் நன்மைக்காக முறையே அடிக்கடி ஹோமம் செய்யப்பட்ட ஆகுதிகளை அக்கினி பகவான் ஏற்கட்டும். அந்தணாளர்கள் அத்தியயநம் செய்துகொண்டிருக்கட்டும். பசுக்கள் ஏராளமாகப் பாலைக் கறக்கட்டும். இவ்வுலகினர் எல்லாரும் அவரவர் அறங்களில் ஈடுபட்டு அவைகளை ஒழுங்காக நடத்தி வருவதால் பலவித ஆபத்துக்களிலிருந்தும் விடுபட்டுத் தன் சக்தியால் பகைவரை வென்ற சத்துருமல்லனால் (மஹேந்திரன்) நீண்டகாலம் நன்கு ஆளப்படட்டும்.

(இருவரும் வெளியேறினர்.)

முற்றிற்று.

---

## பத்திராதிபர்பின்னுரை.

### குணபரனைப்பற்றிய குறிப்புக்கள்.

குணபரன் என்று பெயர்கொண்ட முதலாவது மகேந்திர வர்மன் ஏழாவது நூற்றாண்டில் (கி.பி. ௬௦௦-௬௨௫) காஞ்சிபுரத்திலிருந்து தொண்டை நாட்டை யாண்ட பெருந் தமிழ் மன்னர்களில் ஒருவன். இவன் பல்லவ வமிசத்தைச் சேர்ந்தவன். சமணனாயிருந்து அப்பர் சுவாமிகளின் அற்புதத்தால் சைவனானவன். இவன் சமணனாயிருந்த காலத்துச் சமணர்களின் சொற்கேட்டு (சமண சமயத்திலிருந்து சைவசமயத்திற்குத் திரும்பி வந்த) அப்பர் சுவாமிகளை நீற்றறையிலிட்டும், யானையைவிட்டு மோதச் செய்தும், நஞ்சூட்டியும், கல்லைக் கட்டிக் கடலில் இட்டும் பலவாறு வருத்த முயன்றான் என்று பெரிய புராணம் இயம்புகின்றது. அப்பரெம்பெருமானுக்குச் சிவபெருமான் அருளால் ஒரு துன்பமும் வாராததுகண்ட அரசன் சமண சமயம் துறந்து சைவ சமயம் புகுந்தான். திரிச்சிராப்பள்ளி மலைமீதுள்ள இவனது கல்வெட்டொன்றில் "இலிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயரோடு கூடிய அரசன் இந்த இலிங்கத்தினால் (பெற்ற) விபக்ஷ விருத்தியிலிருந்து (சைன மதத்திலிருந்து) திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டகாலம் நிற்பதாக" என்று கூறப்பட்டிருக்கிறது.

அக்காலத்தில், சமணர் இருக்கையாயிருந்த திருப்பாதிரிப்புலியூரிலிருந்த சமணக் கோயிலை யிடித்துக் கடிலநதிக் கரையிலுள்ள திருவதிகை வீரட்டானத்தில் இவன் சிவபிரானுக்கு ஒரு பெருங் கோயில் கட்டினான். குணபரன் என்ற இவன் பெயர் ஒன்று கொண்டே குணபரீச்சுரமென்று அதற்குப் பெயர் ஏற்பட்டது.

வீடறியாச் சமணர் மொழி
பொய் யென்று மெய்யுணர்ந்த
காடவனுந் திருவதிகை
நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்தில் அமண்
பள்ளியொடு பாழிகளுங்
கூட விடித்துக் கொணர்ந்து
குணபரவீச் சுரமெடுத்தான்.

—பெரிய புராணம்.

தென்னாட்டில் என்றும் அழியாத குகைக் கோயில்களை வெட்டியவன் இவனே. இவ்விஷயம் விழுப்புரத்திற்கு அருகேயுள்ள மண்டகப்பட்டு கிராமத்திலுள்ள குகைக் கோயில் கல்வெட்டில் கூறப்பட்டிருக்கிறது. தென்மொழியிலும் வடமொழியிலும்

இவன் மகாபண்டிதனாக விளங்கினான். குடியினால் விளையும் கேட்டை விளக்குமாறு இவன் இயற்றிய "மத்தவிலாசம்" என்ற இவ்வடமொழி நாடகத்தைத் திருவாங்கூர் அரசினர் அச்சியற்றி வெளியிட்டிருக்கின்றனர். அதன் ஆங்கில மொழிபெயர்ப்பொன்று சென்னை ஆர்க்கியலாஜிகல் இலாகா ஸ்ரீமான் பி. வி. ஜகதீசய்யரால் இயற்றப்பட்டு, சென்னை ஸ்ரீநிவாச வரதாச்சாரி கம்பெனியாரால் வெளியிடப்பட்டிருக்கிறது. குடியென்னும் கேட்டை ஒழிக்குமாறு பெருமுயற்சிகள் நடைபெறும் இக்காலத்தினர் சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன் குடியின் கேட்டை விளக்கி ஒரு நூல் எழுதிய பெருந் தமிழ் மன்னனின் பொதுநல ஊக்கத்தைப் போற்றுவார்களென்பதில் ஐயம் இல்லை.

---

# இந்தியரின் விவகாரம்.

---

சுவாமி ராமதீர்த்தர் எழுதியது.

ரா. அனந்தகிருஷ்ணன் மொழிபெயர்த்தது.

(முன் தொடர்ச்சி.)

இனி மக்கட்பேற்றை—ஜன சங்கியைப்பற்றி ஆராய்வோம்:—

மால்தூஸன் போன்ற பொருள்நூலாரின் சித்தாந்தத்தைப்பற்றி இங்கு எடுத்தாராய வேண்டாம். உயிர்நூலின் துணிபையே மால்தூஸனது சித்தாந்தம் எடுத்துரைக்கின்றது. இவ்விஷயமாக இயற்கைநூலார் சாற்றுவதென்னவென்று பார்ப்போம். ஓர் இயற்கையான காட்டின் நடுவே நடப்பட்ட ஒரு தோட்டத்துடன் ஒரு குடியேற்ற சமூகத்தை ஹக்ஸ்லி என்னும் பேராசிரியன் ஒப்பிடுகிறான். சமாஜத்தின் விகாசகதி (இதனை அவன் தார்மிக பந்தா என்கிறான்) தோட்டம் வைத்துப் பயிர்செய்தலை ஒத்திருக்கின்றது. ஆனால், இவையிரண்டும் இயற்கையின் வயத்தால் வளர்ந்தோங்கும் காட்டுவளர்ச்சிமுறைக்கு—பிரகிருதியின் பந்தாவிற்கு, நேர் எதிராவன. கானக வளர்ச்சிமுறையில், வாழ்க்கைப்போர் ஓயாது மும்முரமாக நடந்துகொண்டிருக்கும். ஆனால், தார்மிக பந்தாவிலும் தோட்டக்கால் பயிர் முறையிலும் உள்ள விசேஷம், இப்போரினைத் தவிர்த்து விடுவதாகும்—இப்போர் மூளுவதற்குக் காரணமானவைகளை அப்புறப்படுத்தி வைத்துவிடுவதாகும். ஹென்ரி துருமான்தன் என்ற ஓர் ஆசிரியன் இவ்விரு திறத்தனமுறைகளும் ஒன்றுதான் என நிரூபித்துவிடப் படாத பாடெல்லாம் படுகிறான். ஆனால் அவனுடைய ஆர்ப்பாட்டங்களினூடே, ஹக்ஸ்லி, டார்வின் இவ்விரு ஆசிரியர்களின் துணிபிற்கு ஒருமயிரிழைகூட விலகிச் செல்ல முடியவில்லை. தோட்டக்காரன் அதிக ஜாக்கிரதையாக இருந்துகொண்டு அனுவசியமாசப் புல்பூண்டுகள் முளையாதபடி அவ்வப்பொழுது பிடுங்கி எறிந்துவாராமல் இருந்தால், தோட்டம் முழுவதிலும் சிலநாளைக்குள் களைகளும் புதர்களும் அடர்ந்துவிடும். எனவே, தோட்டம் அடியோடு அழிந்துபோவதற்கு ஏதுவாகும். காடு தன் வெற்றிக் கொடியைத் திரும்பவும் இங்கு நட்டுவிடும். ஒரு வரைமுறையில்லாமல் செடிகளும் மரங்களும் கண்ட கண்ட இடங்களில் எல்லாம் ஒன்றையொன்று முட்டி மோதிக்கொண்டு ஓயாத வாழ்க்கைப்போரை நிகழ்த்திவரும் இந்த அமர்க்களத்தில், பழைய சாந்தியும் செழுமையும் எங்ஙனம் நிலவும்? இவ்வுண்மையினை ஹென்ரி துருமந்தன் என்பானும் ஏற்றுக்கொள்கிறான். ஏன்? சுயபிரக்ஞையிலுள்ள யாவனே இதனை மறுப்பான்? ஓர் சமாஜத்திலும் இப்படியேதான். கிரமமாக ஒரு நாட்டில் எத்தனை ஜனங்கள் இருக்கலாமோ, அந்த அளவுக்கு ஜனத்தொகை பெருகியதும், மேன்மேலும் விருத்தியாகும் ஜனத்துக்கு ஒருவடிகால் கட்டவேண்டும். அவ்வடிகால் மூலமாக வேறு நாடுகளுக்கு அவர்கள் சென்று அங்கு செழித்தோங்கி வளர்ந்து கொள்வார்கள்.



ஒரு நாடு ஓம்பக்கூடிய மக்கட்கு ஓர் வரம்பு உண்டு. இவ்வரம்பை, மக்களின் தொகை தாண்டிவிட்டபொழுது அவ்வெஞ்சிய தொகையினருக்குப் பிறிதோர் புகல் விட்டாக வேண்டும். அப்படிச் செய்யாதவிடத்து, உள்நாட்டிற்குள்ளேயே போர் கொழுத்து, அமைதி குலைந்துபோய்விடும். எனின், தார்மிக பந்தாவிற்கு இங்கு இடமே இலதாகிவிடும். அந்நாட்டு மக்கள் அறநெறியைத் துறந்து, இறைவன் ஆணைகளை அழித்துவிட்டு மாக்களாகி வாழ்வர். இத்தகைய சந்திகளில் நின்றுதான், சாதிகளின் வீழ்ச்சி தொடங்குகிறது. ரோமவல்லரசு, கிரேக்கநாடு, முதலிய எந்நாடாயினும் சரியே, அவற்றின் வீழ்ச்சிக்கு அடிப்படையாக, இவ்வரம்பிகந்த மக்கட்டொகுதியையே காண்கின்றோம். இந்தியா, இவ்வரம்பைக்கடந்து செல்லத்தொடங்கி இப்பொழுது நெடுநாட்கள் சென்று விட்டன. எனினும், இந்த தோஷமூலத்தைப் பரிகரிக்க நமது சிறு விரலையும் இன்னும் நாம் அசையாமல் இருக்கிறோம். இந்தியாவைப் போன்று வறுமையுற்ற—ஆனால் மக்கள் அடர்ந்த—நாடு வேறு ஒன்று கூட, கிடையாது. ஒரு சாமானிய குடும்பத்தைக் கவனித்துப் பார்த்தால் போதும், இந்திய நாடு முழுவதையும் பற்றித் தெரிந்துகொள்ள. வருவாய் மிக மிகக் குறைந்தது. வருடந்தோறும், இதை வைத்துக்கொண்டு ஜீவிக்கவேண்டியர்களின் தொகை பெருகிக்கொண்டுபோகிறது என்பது மாத்திரம் இல்லை; பொருளற்று உயிர் வாங்கும் சடங்குகளில் அடிமைத்தனமாக விரயம் செய்ய வேண்டிய செலவுகளும் பெருகிக்கொண்டே போகின்றன, ஒரு தொழுவத்துள் ஒரு மந்தை முழுவதையும் அடைத்துப் போட்டுவிட்டு, ஒரு கூளம்புல்லை மட்டும்போட்டால், பாவம், அந்த மாடுகள் என்ன செய்யும்? புல்லுக்காக ஒன்றையொன்று முட்டிச் சாவதன்றி வேறு வழியேது? கலகஏதுவை நிவர்த்திக்காமல், ஜனங்களுக்கு சாந்தியுபதேசம் தருவது, உபதேசம் செய்வதென்பதையே பரிகசிப்பதாகும். எனது நாட்டினர், சுபாவமாக சாதுக்கள்; அமைதி படைத்தவர்கள். ஆகவே, சமாதானமாக வாழவேண்டும் எனும் ஆர்வம் அவர்கள் நெஞ்சகத்துப் பரிபூரணமாக இருக்கத்தான் செய்கிறது. ஆனால் குட்சிபாதை வந்து குறுக்கே முளைத்துவிடும்பொழுது, அதற்குத் தாளமாட்டாமல் அசூயைகளுக்கும் அகங்காரங்களுக்கும் இடங்கொடுத்து விடுகின்றனர். ஜனத்தொகைப்

பிரசினையைத் தீர்க்காமல் அப்படியே
விட்டு வைப்பதனுல்,ஜாதியஒற்றுமை
பரஸ்பர அன்னியோன்னியம் என்ப
வை சொல்லளவிலேயே ஒடுங்கிவிட
வேண்டுவதுதான்; ஆதர்ச லோகத்
தில் அல்லது இங்கு பிரத்தியட்சத்
தில் காணமுடியாது. விக்கிரமாதித்
தியன் பொம்மை விடுக்கும் இப்பிதி
ருக்கு நாம் உத்தரவாதம் சொல்லி
யாக வேண்டும்; அவ்வழி நமக்கு மா
ணம் சித்தம். நமது தோழர்களிட
த்து, நாடோறும் துன்பத்தையும்
பிணியையும் தவருது பார்த்துக்
கொண்டு வரவேண்டியது, நமது
சமூகப் பொது அமைப்பினின்றும்
நிர்ப்பந்தமாகப் போய்விட்டபொழுது
நமது உள்ளத்தில் இரக்கமும் தன்
னல மறுப்பும் பூப்பது இயலாது
போய்விடுகிறது. ஜீவ சாஸ்திரிகளு
டைய சித்தாந்தமும் இவ்வாறுதான்
செப்புகின்றது. உங்களைச் சுற்றி
நாலு பக்கங்களிலிருந்தும் மக்கள்
அடர்ந்த இவ்வறுமை கண்ணை உறுத்
திக்கொண்டு நிற்கையில், இந்தியர்க
ளே! அன்பும் அருளும்உள்ளத்தில் ஊ
றும் என்று நம்புவது வீணேயாகும்.
அது ஒரு போழ்தும் சித்திபெருது.
நிற்க, பௌதிக நூலினின்றும் ஒரு
சங்கதியை எடுத்துக் கொள்வோம்.
ஒரு பொருள் சமதை நிலை அடைந்து
எதாஸ்தானத்தில் இருக்கவேண்டின்,
அதன் தத்துவங்கள் எவ்வாறு
அமைந்திருக்கும் என நோக்குங்கள்.
அதனிடத்து அடங்கியுள்ள ஒவ்வொ
ரு அணுவும் மற்றவற்றுடன் சம
தூரத்தில் நிற்கவேண்டும். அப்பொ
ழுதுதான் ஒவ்வொரு அணுவும் தன்
தன் சொந்த சாரங்களைத் தன் தன்
சிறிய வட்டத்துக்குள்ளே செய்து
கொள்ள முடியும். இப்படி ஒவ்வொரு
அணுவும், அடுத்த அணுவினுடைய
அசைதல்களுக்கு இடைஞ்சலின்றித்
தன் தன் சலனத்தைச் செய்துகொள்
ளும். அப்பொழுதுதான், இவற்ருல்
ஆகிய ஒரு பொருள் சமன் நிலை பெற்
று ஸ்திரமாக இருக்கும். இப்பொ
ழுது, இந்திய ஜனபிண்டத்தின் நிலை
யாது? அதில் அடங்கிய ஒவ்வொரு
வியக்திக்கும், தன் தன் சொந்த சல
னங்களை, பிறவற்றுடன் முட்டி மோ
தாமல் செய்து கொள்ளப் போதிய
வசதி இருக்கிறதா? ஒவ்வொரு வியக்
தியும் தன் இயற்கை தருமத்திற்
கேற்றபடி காரியங்களைச் செய்வதற்
குப் போதிய விஸ்தாரமிருக்கிறதா?
அன்ன வஸ்திரத்துக்கு ஒருவனுக்கு
மாத்திரமே வகை யிருக்க, மற்று
பத்துப் பெயர்வழிகள் வகை தெரியா
மல் திண்டாடும்பொழுது, ஜாதியினை
சமன்நிலைக்குக் கொண்டுவர உடனே
வழிதேட வேண்டாமா? அப்படிச்
செய்யாதவிடத்து, கானக இயல்பு வந்
து பற்றிக்கொண்டுவிடும். நம்முடை
ய விவகாரத்தைப் போன்று மித
மீறிய விவகாரங்களுக்கு வசிஷ்ட
மகரிஷி சொல்லிய பரிகாரங்கள்
தான் பொருந்தும். கொள்ளை நோய்,
பஞ்சம், பூபாரம் தொலைக்கும் யுத்தம்,
பூகம்பம் இவைதான் பிராயச்சித்தங்
கள். இருக்கும் கெடுதியைப்பற்றி இவ்
வளவு சொல்லியது சாலும். இனி,
இதனை நீக்கும் வழிகளைப்பற்றிக்
கவனிப்போம். உற்ற மருந்து யாது?

அது பலவித மூலிகைகளாலாயது.

க. முதலாவது, இந்தியாவின் எல்
லையைக் கடந்து ஒரு அடி எடுத்து
வைத்துவிட்டால் மோட்சபதவி கிட்
டாது போய்விடும் என்ற இந்த மித்
தை யறிவு நமது நாட்டை விட்டு
நெடுந்தூரம் நீங்கிச் சென்றுவிட



வேண்டும். அதோடு, இங்கே வாழ
வகையில்லாமல் இருப்போரில் சாத்
தியமான பேர்கள் அனைவரும் நாட்
டை விட்டு வெளியேறிவிட வேண்
டும். வெளியே ஏகுங்கள். அயல்
நாடுகளில் குடியேறுங்கள். கிணற்
றுத் தவளைகளாய் வாழ்வதில் இன்
பம் என்ன இருக்கப்போகிறது? செம்
மைசான்ற பாரதத்தை உனக்கு
ஓர் இருட்டறை யாக்கிக் கொண்டு
விட்டாய் என்பதை எப்பொழுதா
வது கண்களை நன்ருகத் திறந்து
பார்த்தறிய மாட்டாயா?

உ. இந்தியாவில் குடியேறிய ஆரி
யர்கள் மக்கட் பேற்றைப் பெரும்
பாக்கியமாகக் கருதி வாழ்ந்த காலம்
ஒன்று இருந்தது. அது ஓர் காலம்.
ஆனல் இப்பொழுது அதெல்லாம்
பறந்தோடிப் போய்விட்டது. விவ
காரம் நேர் எதிராகத் திரும்பிவிட்
டது. இன்று குடும்பம் பெருகுவது
ஒரு சாபமாக, ஒரு பீடையாகப்
போய்விட்டது. இந்த நாளிலும் கூட,
பிள்ளைப் பேறு பெறுவதால்தான்
மோட்சத்துக்கு ஏறலாம் என்று
கொள்ளும் கருத்தழிந்த ஓர் மகன்
உளனேல், அவன் தன் கண்களைத்
துடைத்துக்கொண்டு விழித்து நோக்
கட்டும். அவன் சாவதற்கு முந்தியே,
பிள்ளைகளைப் பெறும் ஒரு குடும்பம்
ஒழிந்த நரகம் வேறு இலதெனக்
கண்டுகொள்வான். அவனும் இகத்
திலேயே இந்த நரகாவஸ்தையை
‘நெஞ்சுமுட்ட’ அனுபவித்துக்கொள்
ளுவான். தற்கால பாரதத்தின் நிலை
இது. பகவத்கீதை உ-வது அத்தி
யாயம் சஉ-சரு-வது சுலோகங்களில்
சுவர்க்கத்தை நாடுவோரைப் பழித்து
க் கண்ணபிரான் கூறியது, பிள்ளைகள்
பெறுவதாலேயே சுவர்க்கத்துக்குச்
செல்லுவான் என்ற அர்ச்சுனன்
வாதத்தை மறுக்கவேதான் என்று
எண்ண இடம் இருக்கிறது. அந்த
சுலோகங்களைத் திரும்பத் திரும்ப
நீங்கள் படித்து, அவை அளிக்கும்
சுதந்திரத் தேனைப் பருகிப் பயன்
பெறுவீர்களாக. தவருது மணம்
முடித்து, கண்ணை மூடிக்கொண்டு
குட்டிகளை ஈன்று, அறியாமையில்
அழுந்தி வாழ்ந்து, அடிமையில் மடிந்
துபோ, என்று கூறி ஓர் துர்தேவதை
நமது நாட்டில் நெடுங்காலம் தீய
ஆட்சி செலுத்தி வந்துவிட்டது. இத்
துர்தேவதையை உடனே நீங்கள்
நாட்டை விட்டுத் துரத்திவிட வேண்
டும்; தங்க இனி சிறிதும் இடங்
கொடுத்து விடப்படாது. நமது இழி
நிலைக்கு முகமதிய அரசர்கள் கார
ணம் என்று இப்பொழுது கூறுகி
ருேம். அடுத்தபோழ்து பிரிடிஷ்
அரசாங்கம்தான் பழி ஏற்கவேண்டி
யது என்கிருேம். அப்பால் இந்தியா
வில் நிலவும் மதங்களைக் கழுவிலேற்
றப் பார்க்கிருேம். இவையெல்லாம்
இல்லை. கல்வி முறைதான் உண்மை
யான காரணம்; அதுதான் நமது
வீழ்ச்சிக்கு ஜவாப்தாரியாக வேண்
டும் என்று ஓர் வேளையில் மொழி
கிருேம். ஒரு சிறு அளவுக்கு இக்
கூற்றுக்களிலும் நியாயம் கிடைக்க
லாம். ஆனல் உண்மையில் பழி
சுமக்க வேண்டியது, இவ்வுலகத்தி
லேயே சர்வோத்கிருஷ்டமான சம்பந்
தத்தைக் கறைப்படுத்தி நிற்கும்
தூய்மையின்மையே ஆகும். இந்
திய மக்கள் அனைவரும் தோன்று
வதற்கு அந்த சம்பந்தம்தான் உண்
மையான காரணமாகும். இன்னும்
நம்மை இந்த நிலைமையில் வைத்தி
ருப்பதும் இந்த சம்பந்தம்தான்.

இதுதான் விவாகசம்பந்தம். அனைத்திலும் சிறந்த, புனிதம்பெற்ற இந்த சம்பந்தத்தை நாம் எப்படி கையாண்டு வருகிறோம்? மிக மிக அசட்டுத்தனமாக, மிக அசாஸ்திரீயமாக, மிகவும் வெட்கக் கேடாக அதனைக் கையாண்டு வருகிறோம். சாதகம் பார்த்தல், இலக்கினம் நிர்ணயித்தல், சகுனங் காணுதல், மந்திரம் ஓதுதல், ஓமம் வளர்த்தல் முதலிய சமஸ்தமான சடங்குகளும் யாதொரு குறையுமின்றிச் செய்யப்பட்டாலும், இந்தியாவில் நடக்கும் கலியாணங்கள் எல்லாம் அகாலமாவன; அதார்மிகமாவன; அசுபமாவன என்றே சொல்ல வேண்டும். பருவம் அடையாத மணமகளிர்க்கு மணம் சூட்டிவைக்கப்பட்ட அசுப கிரகங்களில் உறைய எந்த நவகிரகம் ஒருப்படும்? அதிலும் இவ் அசுபகாரியத்துக்கு ஆதரவளிக்க எந்த கிரகதேவதைதான் ஒருப்படும்? நிர்மானுஷ்யமான இந்தக் காட்சியைக் கண்டு அவைகளும் நடுநடுங்கி தம் சாரங்களை விட்டு விலகிப் போய்விடாவோ? இக்காட்சி மிருகப்பிராயமானது என்று சொல்வதற்குக் கூட இல்லை; அதிலும் இழிவாகப்போய் விட்டது. தமக்குத்தாமே ஜீவனோபாயம் தேடிக்கொள்ள ஏலாத வதூவரர்களுடைய மறஞ்செறிந்த மணத்தைப் புனிதப் படுத்தவும் வேதமந்திரங்கள் சகிக்குமோ? இம்மாதிரியான அசுப காரியங்களுக்குத் தம்மை இழுத்துக் கொண்டுவிட்ட அக்கணம் முதற்கொண்டே அவை தம் பொலிவிழந்து பயனையும் துறந்துவிடும்; வருங்கால மனைத்திற்கும் அவை பலிக்காமல் போய்விடும். நாட்டிலே தகுதியற்ற, ஆற்றலிழந்த யோக்கியதை நீங்கிய புல்லுருவிகளைப் பெற்று விடுவதாகச் செய்யப்படும் கலியாணத்தின் துர்க்கந்தத்திற்கும் வெப்பத்திற்கும் இடையிலே, எந்த புஷ்பம் தன் இயற்கை மணம் குன்றாது கமழ்ந்துகொண்டிருக்கவல்லதாகும்?

(தொடரும்.)

---

# சைவ சமயத்தைச் சார்ந்த ஓர் உலா நூல்.

—o—

எஸ். வையாபுரிப் பிள்ளை பி. ஏ., பி. எல்.

கம்ப-ராமாயணம் என்னும் காவிய அருங்கலம் இன்றளவும் தக்க அறிஞர்களால் திருத்தமுறப் பதிப்பிக்கப்படவில்லையென்பது யாவரும் அறிந்த தொன்றேயாம். தமிழ்-மொழிக்கு என்றும் அழியாப் பெரும்புகழ் தந்து விளங்கும் இம் மகாகாவ்யத்தைப் பிழைநிரம்பிச் சீர்குலைந்த வடிவத்திற் கண்கொண்டு கண்டும், பொறைகூர்ந்து அமைதியில் ஆழ்ந்திருக்கின்ற தமிழ்-உலகின் மனப்பான்மை பெரிதும் இரங்கத்தக்கதே. ஏடெழுதுவோரும் மதாபிமானம் தலைக்கேறியவர்களும் போலிக் கவிவாணர்களும் நெடுங்காலம் ஒருங்கு கூடிக் கம்பரது காவியப் பூங்கோவிலைப் பாழ்படுத்த முயன்றும், அதன் பேரழகு முக்கியாம்சங்களிற் குன்றாம லிருப்பதே ஒப்புவமையற்ற அதன் பெருஞ் சிறப்பினை நன்கு காட்டவல்லதாகும். தமிழ்-மகட்குச் சிரோபூஷணம் என்று சொல்லத்தக்க இவ் இதிஹாஸ-ரத்தினத்தை அதற்குரிய இயற்கை நல்லொளியுடனும் பேரழகுடனும் தமிழ்-மக்கள் விரைவிற் கண்டு களிக்குமாறு இறைவன் திருவருள் புரிவாராக. நிற்க.

இராமாயண-ஏடுகளிற் காணப்படும் பாடபேதங்களை என்வசமுள்ள அச்சுப் பிரதியிற் குறித்துக்கொள்ளுமாறு பலவிடங்களிலிருந்தும் ஏட்டுப் பிரதிகள் சம்பாதித்துக்கொண்டு வருகின்றேன். திருவனந்தபுரம் அரண்மனை-நூல்நிலயத்திற்கு அதிகாரிகளின் உத்தரவு பெற்றுச் சென்று ஆங்குள்ள தமிழ்-ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதித்தேன். அங்கே இரண்டு இராமாயணப் பிரதிகள் உள்ளன. இவற்றுள், ஒன்றன் தலைச்சீட்டில் 'ககூஎ மகுடவாதம்: தமிழ்ப் பாட்டு: ஜீர்ணம்' என்று எழுதப் பெற்றிருக்கிறது. பாலகாண்டத்திலே பெரும்பகுதியும் உயுத்த காண்டத்திலே முதற்போர்ப்படலம் முதல் பிரமாத்திரப் படலம் உ0அ-வது செய்யுள் வரையும் இதன்கட் காணப்படுகின்றன. 'முதற்போர்ப் படலம்' என்பதற்கு மாறாக 'மகுடபங்கம்: முதனாள் யுத்தம்' எனப் படலப் பெயர் தரப்பட்டுளது. மகுடபங்கம் என்றதனையே 'மகுடவாதம் என வாசித்து அதனை நூற் பெயராகக் கொண்டு தலைச்சீட்டில் வரைந்துள்ளார்கள் போலும். இரண்டாவது ஏட்டுப் பிரதியின் தலைச் சீட்டில் 'உஉ-ராமாயணம்: தமிழ்ப் பாட்டு: சோரப்படலம் முதல் மூக்ஷிப்படலம் வரை' என்று எழுதப்பெற்றுளது. இப்படலங்கள் முறையே 'இராவணன் சோகப் படலம்' என்பதனையும் 'மீட்சிப்படலம்' என்பதனையும் குறிப்பனவாகும்.

முதலாவது ஏட்டுப் பிரதியின் இறுதியில் யாப்பருங்கலக் காரிகை





முதலிய நூற்பகுதிகளும் விரவியுள்ளன. இங்ஙனம் விரவியுள்ள நூலொன்றைப் பற்றியே யான் ஈண்டு எழுத விரும்புவது. இரண்டு இதழ்களே இந் நூலுக்குரியனவா யிருக்கின்றன. அவ் இதழ்களிற் காணப்படுவன வருமாறு:—

... ... ... ... ... ... ... —பின்னொருத்தி
மூவர் தாமதூர முத்தமிழின் தொல்பயனுந்
தேவர் பரவுந் திருவெழு ... ... ... —ாவ
மருவலருந் தண்சோலை வாதவூ ரெந்தை
திருவியலும் போல்வாள் தெரிவை—
[யருமறைதேர்
மன் றுக் குரியபிள்ளை மாணிக்கக் கேயூரக்
குன் றுக் கெனவளர்ந்த கொங்கையாள்—
[கொன்றை
யலங்கல் புனையு மதிரேக மார்பிற்
கலந்து துயி ... ... ... கண்ணுள்—நிலம்
[புனல்கால்
ஈட்டும் புவன விருவிசும்பை யேழுகத்
தீட்டும் படிநினைந்த செங்கையாள்—
[மூட்டுமிகல்
அந்திப் பிறைநிலவை யாரும வாளுடை
[யான்
உந்தித் தடம்படிந்த வுள்ளத்தாள்—பைந்
[தடத்து
வாச மலரளைந்த மந்தா நிலக்களிறு
பூசலிடு மந்தண் பொழிலிடத்துக்—காசி
[னியில்
விண்ணுங் குனிவிக்கும் வெண்டாள
[வேதிகைமேல்
எண்ணின் கலைமா தெனவிருந்து—கண்
[ணுதலை
யாதரித்த நாளொருத்தி பெற்றமத
[மல்லாது
மாதருக்குப் பார்மீது வாய்க்குமோ—
[ஆதலால்
கண்ணிணையுந் தோளுங் கனகொங்கை
[யும்நுதலும்
வண்ணநறுங் கொன்றை வனமானேன்.

இங்கே தந்துள்ள பகுதியை வாசித்து நோக்கிய அளவில், இந் நூல் சொல்வளஞ் சிறந்த ஓர் உலா-நூல் என்பதும் அது சைவ சமயத்திற்

...குரியது என்பதும் யாவர்க்கும் தெளிவாய் விளங்கக்கூடியது. இவ்வுண்மையைக் குறித்து தமிழ்—ஆராய்ச்சியில் வல்ல அறிஞர்கள் ஏதாவது உணர்த்தக் கூடுமாயின், தமிழும் சைவமும் அவர்கள்பால் மிக்க நன்றி யுடையதாகும்.

---

# காஞ்சீபுரத்துக் கவியரசு.

—o—

தி. நா. சுப்பிரமணியன்.

## மகேந்திரன் முன்னோர்கள்.

இத்தகைய சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய காஞ்சிநகரை ஒரு அணிகலனாகக் கொள்ளப் பல அரசர்கள் பாடுபட்டிருக்கின்றனர். அவ்விதம் கொண்ட அரசர்களில் ஒருவரும் இந்நகரைப் பாழாக்கவில்லை. சிலர் இந்நகரையே தங்களுக்குத் தலைநகராகக் கொண்டு அழகுபெறச் செய்தனர். மற்றுஞ் சிலர், தங்களாதீனத்தின் கீழிருந்த ஒரு சிறிது காலத்திற்குள்ளாகப் பிறநாடுகளில் தாங்களடைந்த நிதிக்குவியல்களை யெல்லாம் காஞ்சிக்களித்து அலங்கரித்தனர். பல்லவ, சோழ, சளுக்கிய, ராஷ்டிரகூட, விஜயநகர அரசர்கள் பலராலும், கொண்டாடப்பட்டு வந்த காஞ்சி ஒரே ஒரு தடவை மாத்திரம் மகமதியர் கைக்குள் அகப்பட்டுக் கலங்கியது. இவர்கள் எல்லோருடைய சின்னங்களும் தொடர்புகளும் இன்றைக்கும் காணப்படுகின்றன. ஆனால் அவை யெல்லாவற்றினும் மேம்பட்டு இலங்குவன பல்லவருடைய திருப்பணிகளேயாம். இவ்வமிசத்திற் பிறந்து இக்காஞ்சிநகருக்கு என்றுமழியாத ஒரு பெருமையை நிலைபெறச் செய்து, சிவ பெருமான் திருவடி நீழலடைந்த பெருமானே நாம் இப்பொழுது கூறப் புகுந்த சரித்திர நாயகனை மகேந்திரன்.

மகேந்திரனது வாழ் நாட்களையும் அவன் காலத்தின் நாட்டு நிலைமையையும், நாம் ஆராயப் புகுவதற்கு முன்பு, "பல்லவர்என்பார் எவர்? தமிழரா அல்லரா? அன்றெனின் தமிழ் நாட்டை எவ்விதம் அடைந்தனர்?" என்பனவற்றை நாம் அறிய வேண்டுவது முக்கியமாகிறது.

கல் வெட்டுகளினும், செப்பேடுகளினும் பல்லவர்கள் தங்களைப் பல்லவர், போத்தரையர், காடவர், திரையர், தொண்டையர்கோன் எனப் பலவிதமாகவும், பிரமாவின் வமிசத்தில் வந்தவர்கள் எனவும் பாரத்துவாஜ கோத்திரத்தினர் எனவும் கூறிக் கொள்ளுகிறார்கள்.

"ஸ்வஸ்திஸ்ரீ இவ்வகையே ப்ரஹ்மன் ஆதியாக வாராநின்ற" பல்லவ வம்சத்துள் பரமேசுவரப்போத்தரையன்" * எனவொரு சாஸனத்திற் காணப்படுகிறது.

சயங்கொண்டாரும் சோழ அரசன் அபயகுலோத்துங்கனுக்காகக் கலிங்கு மெறிந்து பரணிகொண்ட கருணாகரத் தொண்டைமானை

* South Indian Inscriptions vol IV. p. 10.



"மறை மொழிந்தபதி மாபின் வந்தகுல திலகன் வண்டை நகர ரசனே" ௩௨௮ எனக் கூறுகிறார்.

பிரமன் முதலாக பல்லவன் ஈறாக உள்ள வமிசாவளி, "விஷ்ணுவின் உந்திக் கமலத்தினின்று பிரமனும், பிரமனின்று ஆங்கிரஸனும், அவனின்று இந்திர குரு பிரகஸ்பதியும், பிரகஸ்பதிக்குச் சம்யுவும், சம்யுவிற்குப் பரத்துவாசனும், அவனுக்கு வில்வித்தையில் மிகவும் கெட்டிக்காரனான துரோணனும், அவனுக்கு "அவார்ய வீர்ய மஹிமான்" ஆன அசுவத்தாமனும், அவ்வசுவத்தாமனுக்குப் பல்லவனும் பிறந்தனர்" எனச் சாஸனங்களிற் கூறப்படுகின்றது. தென்னாட்டில் விளங்கிய அரசர்கள் வடநாட்டாரைப் பின்பற்றித் தங்களையும், சூரியன் அல்லது சந்திரன் வழிவந்தோர் எனக் கூறிக்கொள்வதைப் பார்க்குமிடத்து இவர்கள் பிரமன் வழி வந்தவர்கள் எனக் கூறிக் கொள்வது இவர்கள் இந்தவகுப்பைச் சேர்ந்தவர்களல்லர் என்பதைக் குறிக்கிறது.

ஒலிவடிவில், இவர் பெயரை ஒத்து 'பஹ்லவர்' 'பல்ஹவர்' என்ற பெயர்கள் வடநாட்டுச் சாஸனங்களிற் காணப்படுகின்றன. அவர், கிறிஸ்து ஆப்தத்திற்கு அணித்தாக வடமேற்குக் கணவாய் வழியாக இந்தியாவிற் புகுந்த பாரசிக வகுப்பைச் சேர்ந்தவர். இப்பஹ்லவர் யவனருடன் கூட இராமாயணத்தில் "விசுவாமித்திரர் வசிஷ்டரிடமிருந்து காமதேனுவை பலாத்காரமாகக் கைக்கொள்ள முயன்றபொழுது அந்நந்தினி, தனது தெய்விக சக்தியால் உண்டாக்கிய வீரர் *" எனவும், விஷ்ணு முதலிய புராணங்களில் "இவர்கள் ஒரு காலத்தில் க்ஷத்திரியர்களாக இருந்தார்கள்; பிராமணர்கள் உயர்ந்தோர் என்பதை ஒப்புக்கொள்ளாதவர்கள்; எப்பொழுதும் ஆரிய அரசர்களுடன் சண்டை போட்டுக்கொண்டிருந்தவர்கள்; பூணூல் தரிக்கும் வழக்கத்தைக் கைவிட்டவர்கள்" எனவும் பலவிதமாகக் கூறப்படுகிறார்கள்.

இவற்றால் டாக்டர் ஹுல்ஷ், ஸர் ராமகிருஷ்ண கோபால் பண்டார்கர், ஸ்ரீமான் வெங்கய்யா † முதலியோர் பல்லவர், வார்த்தியர் என்ற பாரசிக வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், பாரசீகத்திலிருந்து புறப்பட்டு வந்த நாடோடிகள்; ஆகையால் வடநாட்டில் தங்க இடமில்லாமல் இன்னும் தெற்கே நடந்து தமிழ் நாட்டில் தங்கியவர்கள் என்றும் மதித்தனர். இக் கொள்கை பார்வைக்கு, மிக அழகாகவும் எல்லாவிதத்திலும் பொருத்தமாகவுந்தான் தோற்றியது. வெள்ளைத் தோலுடைய ஒரு கூட்டத்தார் தங்கள் பெருமை பொருந்திய வில்லம்புகளைத் தாங்கி அழகு மிளிர்ந்த மனைவி மக்களுடன், குடிசைகளைத் தூக்கிக்கொண்டு ஊரூராகக் கடந்து வருவதை மனத்தால் நினைத்தவுடனே, ஒருவித உணர்ச்சி ஏற்படுவது இயற்கையே. ஆனால் ஒரு கூட்டத்தார் பாரசீகத்தின் ஒரு கோடியிலிருந்து மூவாயிரம் மைல்களுக்கு அதிகம் நிலத்திற் கடந்து, தமிழ்நாட்டின் ஒரு பாகத்தில் வந்து தங்கி, அந்நாட்டு அரசர்களை வென்

* ஸ்ரீவால்மீகி இராமாயணம் பாலகாண்டம். ௫௪-வது ஸர்க்கம். ௩௰-வது சுலோகம்.

† Annual report of the Archeological Survey of India 1906-07 p. 220, Madras Manual vol I p. 129. also Mysore Gaz. I p. 303-4.

ற அரசியலையும் கைக்கொண்டனர் எனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்? அங்ஙனம் நடக்க அக்காலத்தில் இவ்விரு நாடுகளிலும்—அல்ல, பாரசிகம் தொட்டுத் தமிழ்நாடுவரையுள்ள எல்லா நாடுகளிலும்—ஒரு பெருங் கிளர்ச்சி ஏற்பட்டிருத்தல் வேண்டும். சரித்திரக்காரர்களுக்கு அவ்விதக் கிளர்ச்சி ஒன்றும் காணக் கிடைக்கவில்லை.

டாக்டர் ஜி. ழுவோ-துப்ரே என்பார் பல்லவரை ஒரு கூட்டத்தினராக எடுத்துக் கொள்வதாற்றான் இவ்வித முரண் ஏற்படுகின்றது என எண்ணி, அவர் பாரசீக வகுப்பைச் சேர்ந்த ஒரு வமிசத்தினர் எனவும், அங்ஙனம் கூறினால், வடமேற்கு இந்தியாவினின்றும் தென்னாடு போந்ததற்குக் கிளர்ச்சியொன்று தேடவேண்டியது அவசியமில்லையெனவும் எண்ணித்துணிந்து, அவ்வமிசத்தினர் எங்ஙனம் காஞ்சியை அடைந்தனர் என்பதை ஆராயச் செல்கின்றனர். *

இக்கொள்கைகள் நேரிதாகத் தோற்றாததால், சில ஆசிரியர், பல்லவரை அவர் அரசு புரிந்த நாட்டினரே என்று கூறுகின்றனர். இவ்விதம் கூற ஆதாரங்கள் இல்லாமற் போகவில்லை. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிறுதியிலும், பத்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும், கூர்ச்சர தேசத்து அரசர்களான மகேந்திரபாலன், மகிபாலன் இவர்களது அவையில் விளங்கிய கவி இராஜசேகரன் என்பார், புவனகோசம் என்று ஒரு பூகோள புத்தகம் எழுதியிருக்கிறார். அன்றி அவரெழுதிய காவிய மீமாம்சத்தின் பதினேழாம் அதிகாரத்திற கூறியவற்றைத் தவிர மற்றவைகளைப் புவன கோசத்திற்றான் பார்க்கக் கூறுகிறார். அவர் காவிய மீமாம்சத்தில் இந்தியாவை ஐந்து பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்திற்கும் உரிய ஆறு மலை மக்கள் நகரம் முதலியவற்றைக் கூறுகிறார். அதில் பல்லவரைத் தக்ஷிணபதம் என்ற தென்னாட்டிற்கும், பஹ்லவரை "ப்ரிதுதகம் (பெருநீர்) என்ற சிந்து நதிக்கு வடக்கே உள்ள உத்தராபாதத்திற்கும் உரியோர் எனக்கூறுகிறார். பஹ்லவர் என்ற பெயர் ஹூணர், காம்போஜர் முதலியோருடன் சேர்த்துக் கூறப்பட்டிருக்கிறது. இந்தியாவில் நீண்டதூரம் பிரயாணம் செய்து வடமொழிப் பயிற்சியைப்பற்றியும், ஒவ்வொரு நாட்டிலுமுள்ள மக்கள் முதலியோரது வாழ்க்கை முதலியவற்றைப் பற்றியும் விவரமாகக் கூறியுள்ள ராஜசேகரன் அவ்விருவரும் வேறானவர் என்று கூறுகிறார். ஆனால் அவரது கூற்று பிற்காலத்தியதேனும் இற்றைக்குச் சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு, அவ்விரு வம்சத்தினரும் இந்தியாவில் இருந்தபொழுதே, அவ்விருவரும் வெவ்வேறு நாட்டினர் என்ற கொள்கை இருந்து வந்ததென்பதைக் காட்டுகின்றது. §

(தொடரும்.)

* Ancient of History the Deccan p. 54. § The origin and Early History of the Pallavas of Kanchi by S. Krishnaswami Aiyangar M.A.,P.H.D. in the Journal of Indian History vol III p. 25-26.

# தெரு விளக்கு.

(ஹான்ஸ் ஆண்டர்ஸன் எழுதிய சிறு கதைகளில் ஒன்று.)

கே. எஸ். நடராஜன் பி. ஏ., பி. எல்.

நீ எப்பொழுதாவது தெருவிளக்கின் கதையைக் கேட்டிருக்கிறாயா? அது மிகவும் அழகான கதையல்ல. ஆனாலும் கேட்கத் தகுந்ததே. வெகு நாளாகத் தன் கடமையைச் செவ்வையாகச் செய்து வேலையிலிருந்து விலகும் தருணம் அடைந்த ஓர் பழைய விளக்கு கடைசிமுறை தன் தம்பத்தில் நின்றுகொண்டு தெருவைப் பிரகாசிப்பித்துக் கொண்டிருந்தது. அப்பொழுது அதன் நிலை கடைசி முறை ஆடும் ஓர் நாட்டியப் பெண்ணை ஒத்திருந்ததென்று கூறலாம். மறுநாள் காலை அவளைப்போலவே விளக்கும் நிர்க்கதி அடையவேண்டியதுதானே! அம்மறுநாள் என்னும் வாக்கு நம் விளக்குக்கு எவ்வளவு விசாரமான எண்ணங்களைக் கிளப்பியது! ஏனென்றால் அது நாளை நகரத்தார் கூடும் சபைக்குப் போகவேண்டும். அப்பொழுது நகர அதிகாரிகள் அதைப் பரிசோதிப்பார்கள். அங்கு அதை குக்கிராமங்களுக்கு அனுப்புவதா, அல்லது உருக்கி வேறு விதமாக மாற்றுவதா என்பது தீர்மானமாகும். உருக்கிவிடுவதால் விளக்குக்கு விசேஷக் கவலையில்லை. எந்த உருவை அடைந்தால்தான் என்ன! ஆனால் பழைய உருவுடன் பூர்வ ஞாபகமும் போய்விடுமோ என்பதே அதன் முக்கிய வருத்தம். என்ன நேர்ந்தாலும் நேரிடாவிடினும் விளக்குக்கு இராக்காப்பானையும் அவன் மனைவியையும் பிரிய மனமில்லை. அது என்று தெருவை அடைந்ததோ அன்றே அவனும் அந்த உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டான். அப்பொழுது அவன் மிகச் சுறுசுறுப்புள்ள வாலிபனாயிருந்தான். இப்பொழுது எத்தனை வருஷங்கள் ஆய்விட்டன!

இராக்காப்பான் மனைவி முதலில் சற்று கர்வமுடையவளாகவே இருந்தாள். பகற் பொழுதில் விளக்கை ஏறிட்டுப் பார்ப்பதேயில்லை. ஆனால் நாளடைவில் அவளுடையசீலம் மாறிவிட்டது. தன்கையாலேயே விளக்கை மினுக்கித் துடைத்து எண்ணெய் விட்டுப் பரிபாலித்து வந்தாள். மிக்க யோக்கியர்களான அவ்வயோதிகர்கள் விளக்குக்கு ஏற்பட்டுள்ள எண்ணெயில் ஒரு துளியும் அபகரிக்கவில்லை.

இன்றிரவுதான் அவ்விளக்கு கடைசி முறை தெருவில் நிற்கப்போவது. முன் கூறியபடி மறுநாள் காலை நகர சபையை அடையப்போகிறது. ஆகையால் அது ஒளிகுன்றி எரிவதும் ஓர் ஆச்சரியம் அன்று.

அப்பொழுது அதன்மனத்தில் பல எண்ணங்கள் எழுந்தன. அது எவ்வளவு மனிதர்களுக்குத் தன் ஒளியை அளித்திருக்கிறது! எத்தனை காட்சிகளைக் கண்டிருக்கிறது! அதன் அனுபவம் நகரத் தலைவர்க்குக்கூட உண்டோ என்பது சந்தேகம். ஆனால், விளக்கு இவைகளை எல்லாம் வெளியிட்டுச் சொல்லுவதில்லை. அது நற்குணமும் நல்லொழுக்கமும் உள்ள விளக்காதலால் ஒருவரையும் இழிவாகக் கூறக்கூடாதென்று அதற்குத்

தெரியும்; அதிலும் இராஜாங்கத்தையா? இத்தகையகுணங்களையுடைய விளக்கை எல்லாரும் மறந்து விடுவார்களோ என்னும் ஏக்கத்தால் அதன் ஜ்வாலை எப்பொழுதும் சலித்துக்கொண்டே இருந்தது. ஆனால், சிலராவது விளக்கின் ஞாபகத்தை மனத்தில் வைத்துக்கொண் டிருப்பார்களென்று அது நம்பியது. ஏனென்றால் சில நாட்களுக்கு முன் ஒரு அழகிய வாலிபன் விளிம்பில் பொற்பொடி தேய்த்து நறுமணம் கமழும் கடிதமொன்றைக் கையில் ஏந்தி நின்றான். அது ஒரு மாதின் மெல்லிய கையால் எழுதப்பெற்றது. இருமுறை அக்கடிதத்தைப் படித்து முத்தமிட்டான். பிறகு, "என்னிலும் பாக்கியவான் உலகத்தில் யார் இருக்கிறார்கள்" என்று சொல்லுவதுபோல் விளக்கை உயர நோக்கினான். அவன் காதலியிடமிருந்து வந்த முதற் கடிதத்தின் பொருளை அவனும் அவ் விளக்குமே அறிவார்.

தவிர வேறிரண்டுகண்களும் அந்த விளக்கின் ஞாபகத்தில் தோன்றின. தெருவில் ஒரு அழகிய இளம்பெண் உயிர் நீங்க, அவள் உடலை மலர் பரப்பிய வாகனத்தில் சுமந்து சென்றார்கள். இருவரிசையாக அமைந்ததீவர்த்திகள் விளக்கை மங்கச் செய்தன. கூட்டங்கூட்டமாக மனிதர்கள் மெள்ளப் பின் தொடர்ந்து சென்றார்கள். தீவர்த்திகளின் பிரகாசம் திகைத்து நின்ற விளக்கை விட்டு மறைந்ததும் ஒரு மனிதன் தம்பத்தில் சாய்ந்து நின்று துயர் ஆற்றாது அழுதான். இத்தகைய மக்கள் விளக்கை மறந்துவிடமாட்டார்கள் என்பதுதான்விளக்கின் நம்பிக்கை.

வேலையை இழக்கும் காவற்காரனுக்காவது அவன் பின் வருபவன் யார் என்று தெரியும். அவனுக்குச் சில புத்திமதிகள் கூறலாம். ஆனால் நம் விளக்குக்கு அப்படியல்ல; பின்பற்றி வருபவரைத் தெரிய வழியில்லை. இல்லாவிடில் எவ்வளவு நற்புத்திகள் போதித்திருக்கும்! மழை, மூடுபனி, சந்திரிகை, காற்றடிக்கும் திசை இவை இவ்விளக்குக்குத் தெரிவதுபோல் ஒருவருக்கும் தெரியாது.

இப்படியிருக்க, தெரு ஓடையில் வசிக்கும் மூன்று பொருள்கள் விளக்கின் பதவியையடைய விரும்பின. அவைகளில்ஒன்று ஒருமீனின் தலையோடு. அது இரவில் மின்னும் தன்மையுடையது. அது தன்னைநியமித்தால் நகரத்தாருக்கு எண்ணெய்ச் செலவு குறைந்துவிடும்; ஆகையால் தான் அதற்கு அருகன் என்று எண்ணிக்கொண்டது. மற்றொன்று அழுகிய சுள்ளிக் கட்டை; அதற்கும் மின்னும் சக்தியுண்டு. அது அருகில் உள்ள வனத்தை அரசாண்ட ஒரு மகா விருக்ஷத்தின் வம்சத்தைச் சார்ந்ததாகப் பெருமை பாராட்டிக் கொண்டது. மூன்றாவது ஒரு மின்மினிப் பூச்சி; எப்படி ஓடையை அடைந்தது என்று விளக்குக்குப் புலப்படவில்லை. ஆனால் அது ஓடையில் வசிப்பது உண்மையே. மீன் தலையும், உளுத்த சுள்ளியும், மின்மினிப் பூச்சிக்குச் சில வேளைகளில் மாத்திரம்தான் மின்ன முடியும் என்று சொல்லி அதன் உரிமையை ஆட்சேபித்தன; பூச்சி இவ்வேலைக்கு உதவாதென்று சத்தியமும் செய்தன. விளக்குக்கு இவற்றுள் ஒன்றாவது போதியகாந்தியுடையதாகப் புலப்படவில்லை. ஆகையால்



இவர்களால் இவ்வேலையைச் சரியாகச் செய்ய இயலாது என்று வெளிப்படையாகச் சொல்லிவிட்டது. ஆனால் யார் ஒரு எளிய விளக்கின் வார்த்தையை நம்புவார்கள்?

அந்நேரம்தெருக்கோடியைச்சுற்றி வந்த காற்று விளக்கின் சாளரத்தின் வழியாக உட்புகுந்து சொல்லிற்று. "விளக்கே! நான் கேட்ட சமாசாரம் மெய்தானா? நீ நாளை இவ்விடம் விட்டுப் போகிறாயாமே. ஆகையால் நான் உனக்கு ஒரு பரிசு அளிக்க விரும்புகிறேன். அதாவது, நான் உன் மனத்துள் சென்று வீசி நிகழ்ந்த காட்சிகளையும் வசனங்களையும் அழியாது தங்கும்படி செய்கிறேன். தவிரவும் உன் முன் பேசுவதையும், வாசிப்பதையும் அறியும்படியான நிர்மல சக்தியினையும் உனக்கு அளிக்கிறேன்."

விளக்கு இவ் வொப்புயர்வற்ற வெகுமதிக்கு,காற்றைத்தாழ்மையாக வந்தனம் செய்து கேட்டது:—"நான் இவ்வீதியைவிட்டுப் போனதும் என்னை உருக்கி விடுவார்களோ? அப்பொழுது என் அறிவும் போகுமாயின் .. ..." அதற்கு காற்று, "கிழவிளக்கே! ஏன் உனக்கு வீண் வருத்தம்?" என்று சீறி பதில் உரைத்தது. அப்பொழுது மேக மறைவில் இருந்த சந்திரன் வெளித்தோன்றினான்.

காற்று:—சந்திரனே! இக்கிழவிளக்குக்கு என்ன கொடுக்கப் போகிறாய்.

சந்திரன்:—ஒன்றும் இல்லை. நான் இப்பொழுது க்ஷீணதசையை அடைந்திருக்கிறேன். விளக்கு எப்பொழுதாவது எனக்கு வெளிச்சம் தந்திருக்கிறதா?-என்றுசொல்லிமேகத்தினுள் மறைந்து கொண்டான். விளக்குக்காகக் காற்று கெஞ்சிக்கேட்டது சந்திரனுக்குப் பிடிக்கவில்லை.

அப்பொழுது திடீரென்று இருண்ட மேகங்களினின்று ஒரு நீர்த்துளி விளக்கின்மீது விழுந்தது. அது மேகங்கள் அனுப்பிய வெகுமதி. "ஒருநாள் நீ என்னை மிகச் சிறந்த பரிசென மதிக்கலாம். உனக்கு உயிரில் வெறுப்பு உண்டாகும் பொழுது உன் உடலுள் புகுந்து உன்னை துருப்பிடித்துச் சாம்பலாகும்படி செய்கிறேன்" என்றது அந்நீர்த்துளி. விளக்குக்கு இது நல்ல வெகுமதியாகத் தோன்றவில்லை. காற்றின் அபிப்பிராயமும் அப்படித்தான். பிறகு காற்று "வேறொருவரும் விளக்குக்குப் பரிசு அளிக்க மாட்டார்களா?" என்று உரக்கக் கூவிக் கேட்டது. அப்பொழுது வானத்திலிருந்து சுடர்ப்பொறி பின்தொடர ஒரு நக்ஷத்திரம் விழுந்தது. அதைப் பார்த்து மீன்தலை "இதென்ன! ஒரு நக்ஷத்திரம் நேராக விளக்கினுள் பாய்ந்தது போல் தோன்றவில்லையா? உயர்ந்த விண்மீனே விளக்கின் பதவிக்கு முயன்றால் எளியோராகிய நாம் வந்தனம் அளித்து நம்மிருப்பிடம் செல்வதே நலம்" என்றது. ஆனால், விளக்கோ மகிழ்வுற்றுப் பொன்னொளி பரப்பிநின்றது. ஏனென்றால் காந்தி மிகுந்த நக்ஷத்திரங்கள் நம் விளக்கின்மேல் வைத்த அன்பைக் காட்டி அதற்கு அளித்த பரிசின் அறிகுறியன்றோ இப்பொழுது நிகழ்ந்த காட்சி! ஆகாயத்திற்பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களே இவ்விளக்கின் குறிக்கோள். அவைகளைப்போல்தானும்பிரகாசிக்க முயன்று அவ்வுன்னத பதவியை அடையவிரும்புவதே அதன் கருத்து. நக்ஷத்திரங்கள் அளித்த பரிசு என்னவென்றால்:—நாம் பார்ப்பதையும், அறிவதையும் நம் அன்பர்களுக்

குத் தெரியச் செய்வதே. நாம் அனுப்பவிப்பதை நம் அன்பரும் பகிர்வதன்றோ சிறந்த சுகம். ஆகை யால் இப்பரிசே மிக்க விலையுயர்ந்த தென்றுகருதி விளக்கு மகிழ்ந்து நின் றது.

இதைக் கண்ட காற்று விளக்கை நோக்கி "உன் எண்ணங்கள் உன்னை களிப்படுத்துகின்றன. ஆனால் உன் அரிய சக்தி பிறர்க்கு உதவவேண்டு மானால் உன்னுள் மெழுகுவர்த்தியை வைக்கவேண்டும். நட்சத்திரங்கள் இதைக் கவனிக்கவில்லை. அவைக ளுக்கு எல்லா வெளிச்சமும் மெழுகு வர்த்தியிலிருந்து வருவதாகவே எண் ணம். எனக்கு நேரம் ஆகிறது. நான் போய் வருகிறேன்" என்று சொல்லிப் போயிற்று.

விளக்கு மெழுகுவர்த்திக்கு எங்கு போகும்? .... ...

மறுநாள் மாலை விளக்கு ஒரு பழைய நாற்காலியில் சாய்த்து வைக்கப்பட் டிருந்தது. அது எவ்விடத்தில் என்று நினைக்கிறாய்? இராக்காப்பான்வீட் டில். நெடுநாளாக அவன் உழைத்த தற்காக அவன் வேண்டுகோளுக்கு இணங்கி நகரசபையார் அவனுக்கே அவ்விளக்கைப் பரிசாக அளித்துவிட் டார்கள். இருபத்து நாலு வருஷங் களாக அவன் பாதுகாத்து வந்ததால் அவ்விளக்கை அவனுடைய குழந் தைபோலக் கருதி வந்தான். மேலும் அவனுக்கு வேறு குழந்தைகள் இல்லை.

இராக்காப்பானும் அவன் மனைவி யும் இராபோஜனம் செய்யும் சமயம். அப்பொழுது அவர்கள் விளக்கை மிக வும் மட்சமுடன் அடிக்கடி பார்த்தார் கள். மேசையேலேயே அதனை வைத் துவிட இசைவார்கள்போல் தோன்றி ற்று. அவர்கள்வசிப்பது பள்ளத்தாக் கான இடம்; குளிருக்கு மிகவும் அடக்கமாக இருக்கும். பலகை தை த்த கதவுகள் குளிர்காற்றைத் தடுத் தன. எல்லாம் மிகவும் சுத்தமாகவே யிருந்தது. படுக்கையைச் சுற்றிலும் பலகணிக்கு முன்னும் வெள்ளைத் திரைகள் தொங்கின. ஜன்னல் தட் டில் விசித்திரமான இரு பூச்சட்டிகள் இருந்தன. இவைகள் யானை வடிவத் தில் மண்ணால் செய்தவை. சுவரில் ஒரு சித்திரம் தொங்கிற்று. அதன் அருகில் ஒரு கடிகாரம் 'டிக் டிக்' என்று ஓடிக்கொண்டிருந்தது.

விளக்குக்குத் தான் இருப்பிடம் விட்டு மாறி இருப்பதால் உலகம்முழு தும் தலைகீழாக மாறிவிட்டதாகத் தோன்றிற்று. ஆனால் இராக்காப் பான் தன்னைப் பார்த்து மழை யிலும், பனியிலும், தெளிய வே னில் மாலையிலும், நெடுங்குளிர் இர விலும், உறைந்த பனியிலும், நேர்ந்த சம்பவங்களைப்பற்றிச் சொல்லும் பொழுதெல்லாம் உலகம் சீரடைந்து விட்டதாகத் தோன்றும். இவை எல்லாம் அதன் கண்முன் நடப்பது போலத் தெளிவாக விளங்கின.

இரு வயோதிகரும் சுறுசுறுப்பும் தொழிலில் ஊக்கமும் உடையவர். வீண் பொழுது போக்கார். ஞாயிற் றுக்கிழமை மாலைகளில் கிழவன் புத் தகம் வாசிப்பான். அது சாதாரண மாக யாத்திரைப்புத்தகமாயிருக்கும். ஆப்பிரிக்காவில் பரந்த காடுகளில் மத யானைகள் ஏதேச்சையாகத்திரிவதை வாசிப்பான். அப்பொழுது அவன் மனைவி பரபரப்புடன் பூச்சட்டியில் அமைத்த யானைகளைப் பார்த்து, "இ தன் ரூபந்தானே! என் மனதில் நான்



நினைப் பதிகிறது" என்பாள். அப் பொழுது விளக்கு தன்னுள் மெழுகு வர்த்தியை வைக்கவில்லையே என்று வருந்தும். ஏனென்றால், அப்பொழு து தான் கண்டு மகிழ்வதுபோலவே, இரு கிழவர்களும் அவர் நினைப்பன வெல்லாம் கண்ணெதிரில் கண்டுகளிக் கலாமன்றோ! உயர்ந்த மரங்களும், இணைந்த கொம்புகளும், குதிரை ஏறித்திரியும் வனசரர்களும், உயர்ந் த பார்வையுடன் காட்டில் சஞ்சரிக் கும் யானைக்கூட்டங்களும் இன்னும் பலவிதக் காட்சிகளும் அவர்கள் கண் முன் தோன்றும். "என்னுடைய அரிய சாமர்த்தியத்தால் என்ன பயன்! எண்ணெயும் திரியும் தவிர வேறொன்றும் வைக்கமாட்டார்க ளே!" என்று ஏங்கிற்று.

ஒருநாள் மெழுகுவர்த்தித் துண்டு கள் அவ்வறையில் குவிக்கப்பட்டன. பெரிய துண்டுகள் எரிக்கவும் சிறு துண்டுகள் நூலில் தேய்க்கவும் எடுத் துக் கொண்டார்கள். ஆனால், ஒரு வருக்காவது ஒருதுண்டை இவ்விளக் குக்குள் வைக்கத் தோன்றவில்லை.

"ஏன் என் விசேஷ சக்தியை இவர் கள் உணராதிருக்கிறார்கள்! பல விஷ யங்கள் என் மனத்தில் தோன்றுகின் றனவே! ஆனால் ஒன்றையும் பிறரு க்கு அளிக்க இயலவில்லை. நான் இச் சுவரை விலையுயர்ந்த திரையாகவோ, அல்லது அடர்ந்த காடாகவோ, அல் லது அவர்களென்னநினைக்கிறார்களோ அப்படியே மாற்றக்கூடும் என்று அ வர்களுக்குத் தெரியவில்லை" என்றது. ஆனால்அவர்கள் விளக்கைத்துடைத்து சுத்தமாக்கி எல்லார் கண்ணுக்கும்தட் டுப்படும் இடத்தில் வைத்திருந்தார் கள். சிலர் அதை ஒன்றுக்கும் உத வாத குப்பை என்றார்கள். ஆனால் கிழவன் இதைக் கவனிக்கவில்லை.

இராக்காப்பான் பிறந்தநாள் அணு கிற்று. அன்று கிழவி விளக்கண்டை வந்து புன்சிரிப்புடன் "என் கிழவன் கௌரவத்திற்காக இன்று உன்னை ஏற்றப்போகிறேன்" என்றாள். அத ற்கு விளக்கு ஈயம் பூசிய விளிம்புக ளால் சலசலத்தது. அது அவ்விளக்கு தான் அடையப்போகும் வெளிச்சத் திற்காக சந்தோஷமுற்றதற்குறிகுறி யாகும். அன்றிரவு கிழவி விளக்குக்கு எண்ணெய்விட்டு எரியவைத்தாள். மெழுகுவர்த்தியின் ஞாபகம் அவ ளுக்கு வரவில்லை. அது அன்று இரவு முழுதும் எரிந்தது. ஆனால் நக்ஷத் திரம் அளித்த வெகுமதி இப்பிறப் பில் பயன்படாதென்று அறிந்து கொண்டது.

அன்றிரவு அதற்கு ஒரு கனவு உண்டாயிற்று. அஃதென்னவென் றால்:—வயோதிகர்கள் இறந்துவிட் டார்கள்; விளக்கையும் இரும்பு உருக் கும் உலைக்குக் கொண்டுபோய்விட் டார்கள். அப்பொழுது அதற்கு உண்டான பயத்துக்கு அளவில்லை. துருப்பிடித்துப்போகும் சக்தியிருந் தும் அதை உபயோகிக்கவில்லை. உலை யில் அதை உருக்கி மிக அழகிய மெழுகுவர்த்தி விளக்காக மாற்றுவ தாகத் தோன்றிற்று. மனிதர் கற் பனையில் எவ்வளவு வடிவழகு வாய்க் குமோ அவ்வளவு அழகு வாய்ந்த ஒரு தேவதூதனது திருஉருவை அடைந்து கையில் ஒரு மலர்க் கொத் தை ஏந்தி நிற்பதாகத் தோன்றிற்று. மலர்க் கொத்தின் நடுவே, மெழுகு திரி வைக்கும் இடம்.

இவ்விளக்கு ஒரு பசுங் கம்பளம் விரித்த மேஜைமேல் வைக்கப்பட்

டிரு

டிருந்தது. அது ஓர் அழகிய அறை. நாற்பக்கங்களிலும் புத்தகங்கள் நிரம்பியிருந்தன. அது ஒரு கவியின் உறைவிடம். அவர் எழுதப் போகும் பொருள்களெல்லாம் உருவுடன் அவர் கண்முன் தோன்றின. இருண்ட வனங்களும், நாரை உலாவும் அழகிய புல் தரைகளும், கொந்தளிக்கும் கடலைக் கடக்கும் கப்பல்களும், மாசுமறுவற்ற வானமும், எண்ணற்ற நட்சத்திரங்களும் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன. ... ...

கனவு தெளிந்ததும், "இவ்வளவு சக்தி என்னிடம் இருக்கிறதா! என்னை மெழுகுதிரி விளக்காக மாற்றி விடட்டும்" என்று ஆசைப்பட்டது. பிறகு "இப்பொழுது கூடாது. இவ்விருவரும் உயிருடன் இருக்குமளவும் அவரை விட்டுப் பிரியக்கூடாது. அவர்கள் என்னை எவ்வளவு அன்புடன் ஆதரிக்கிறார்கள்! என்னை நன்றாய்த் துடைத்து எண்ணெய் நிரப்பி வைக்கிறார்கள். அங்கு தெருவில்பிரகாசிக்கும் விளக்குக் கூட்டத்துக்கு என்ன மரியாதை நடக்கிறதோ அது எனக்கும் உண்டு. அதனால் அவர்களுக்குச் சந்தோஷந்தான்" என்று சொல்லிக்கொண்டது. அன்றுமுதல் அவ்விளக்குக்கு ஒருவித மன அமைதி உண்டாயிற்று.

---

# *இராதா கிருஷ்ணன்.

—o—

சா. நா. சா. அருணாசலச் செட்டியார்.

என்னே! கண்ணனின் மனோ சக்தி!! ஓர் ஆராய்ச்சியாளனா? ஆம். ஓர் அரசியல் நிபுணனா? ஆம். ஆனால், நான் அவனை ஓர் இசையாளனாக நினைந்து வழிபடுதலிலேயே பெருவிருப்புடையேன். குழல் அதரத்தின் மேலாக, அவன் ஆரியாவர்த்தத்தை எத்துணை மகிழ்ச்சியூட்டுவித்தான்! பிருந்தாவனம் இளமை நாடாக ஆயது. கண்ணன் உளத்தில் இசையைத் தாங்கி நின்றான். ஒரு சீன முனிவர் கூறியதுபோன்று, எங்கு இசையிருக்கிறதோ அங்கு மகிழ்ச்சியிருக்கிறதன்றோ?

இசையானது சாதாரண மக்கட்குப் புலப்படாத பல இரகசியமான தெய்வத் தன்மை பொருந்திய பொருள்களைக் கொண்டிருக்கிறது. அது குறிப்பிடப்பட்ட பல வரையறைகளுடன் (Geometricises) அழகாக இயங்கி வருகிறது. நம் நாட்டு முற்காலத்து இசைவல்லுநர் பாட முயற்சிக்கு முன் இரு கண்களையும் மூடிக்கொள்வர். பாட விரும்பும் இராகத்தின் ஓவியத்தை அவர் அப்பொழுது காண்பார். ஒவ்வொரு இராகத்துக்கும் ஒவ்வொரு ஓவியமுண்டு என்பது இந்துமக்கள் கொள்கை. இசை ஓவியங்களையும் பலவகை நிறங்களையுங் கூட உண்டுபண்ணுகிறது! கண்ணன் எத்தகைய உருவங்களால், எத்தகைய அழகிய ஓவியக்காட்சிகளால் பிருந்தாவனத்தை நிரப்பி இருப்பான்?

* ஆசிரியர் வாஸ்வானி எழுதியதன் மொழிபெயர்ப்பு.



ஆர்மோனியம் நமது இசை நயத்தைக் கெடுத்து வருகிறது. குழல் மிக எளிய இசைக் கருவியேயாகும். ஆயினும், அது எவ்வளவு உயர்ந்ததாயும் உணர்ச்சியளிக்க வல்லதாயும் இருக்கிறது! அராபியக் குழலோன் இன்னும் உணர்ச்சி யளிக்க வல்லவனாக விளங்குகிறான். பழைய நூல்களில் குழலின் வியக்கத்தக்க அரிய சக்திகளை நாம் படிக்கிறோம். ஹீப்ருவர் (Hebrew) குழலை ஆலயவழிபாட்டிலும் சமயசம்பந்தமான திருவிழாக்களின் ஊர்வலத்திலும் உபயோகப்படுத்தினர். பெருவியர்(Peruvians) விழாக்காலங்களிலும்வெற்றிக்கொண்டாட்டங்களிலும் உபயோகப்படுத்தினர். இசை விருப்புடைய கிரேக்க மக்களுக்கு குழல் ஏன் முதன்மையான கருவியாக இல்லையென நான் ஆச்சரியப்படுகிறேன். குழலைத் தன்னுடன் கொண்டுவந்த அதீனே (Athene) அதை எறிந்துவிட்டாள் என ஓர் கிரேக்கக் கதை கூறுகிறது! கிரீசில் அவள் அதை எறிந்தாளெனில் இந்தியாவில் கண்ணன் அதை எடுத்துக் கொண்டான். கண்ணன் குழல் ஒரு எளிய கருவியாகவே இருந்திருக்க வேண்டும். தற்காலக் குழல்களைப் போன்று தந்தத்தினாலும் எலும்பினாலும் செய்யப்படாது மூங்கிலால் ஆயதேயது. மூங்கிலாலாய இவ்வெளிய இசைக் கருவியிலேயே கண்ணன் உளங் கவரும்—வியக்கத்தக்க இசையை உண்டாக்கினான்.

இசையாளனாகிய கண்ணன் 'உள்ளங் கவர் கள்வனாக' விளங்கினான். மலாடி வெறுமையாக, வலது கரம் குழலின்மீது அமைய அவன் இனிமையாக இசைக்கும்போது கேட்டுக்கொண்டிருப்போரின் உளங்களைக் கொள்ளை கொண்டான். நூல்களைப் படிப்போர் அவனை இடைச்சியரும் இடையரும் தேடினரென இசைப்பர். அந்நூல்களை அவர்கள் இன்னும் ஆழ்ந்து படிப்பாராயின், அவனும் அவரைத் தேடினானென்பதை உணர்வர். மனிதன் கடவுளைத் தேடுகிறான். ஆனால், இன்னும் ஆழ்ந்த உண்மையொன்றுண்டு. கடவுள் மனிதனைத் தேடுகிறார். கண்ணன் குழல் மன்பதையின் உளத்தைத் தேடுகிறது. இசைத் தெய்வம் வெளியில் வதிகிறதெனக் கூறப்படுகிறது. இசைத் தெய்வமாகிய கண்ணன் வெளியில் வதிய உளங்கொளவில்லை. மக்களின் உள்ளத்தினுள்ளே வதிய இசைந்துள்ளான். ஆகலின் அவன் பிருந்தாவனத்தில் குழலிசைத்துழி கோபஸ்திரீகள் தம்மை மறந்தார்கள் என நாம் நூல்களிற் படிக்கின்றோம். அவன் உங்களுளத்திற் புகும்போது நீங்கள் உங்களை மறந்துவிடுகிறீர்கள்! அவனையேற்க அவாக்கொண்டிருககும் உளங்களில் அவன் புகுகின்றான். ஒரு ஆங்கில மாது எனக்கெழுதிய கடிதத்தில் கண்ணனைத் தனதுளத்தேற்றிருக்கிறாள்; நான் அப்பொழுது கண்ணன் குழல் அவள் உளத்தைக் கவர்ந்திருக்கிறது என எண்ணினேன். பண்டைய கண்ணனடியாரையெல்லாம் ஞாபகப்படுத்திக்கொண்டேன். பதினேழாம் நூற்றாண்டில் சையது இபுராகிம் என்னும் முஸ்லீம் கண்ணனடியாராயினர். அக்காலத்திய தாஜ் என்னும் முஸ்லீம் மாது கண்ணன் வழிபாட்டைக் கொண்டு அவனைப் புகழ்ந்து அழகிய பல பாக்களும் யாத்திருக்கின்றார். அரிஸ்டாட்டல் (Aristotle) ஓரிடத்

தில் குழலிசை இச்சையை(Passion) உண்டுபண்ணுகிறதெனக் கூறுகிருர்.

இச்சையினும் ஆழ்ந்தவொன்றுஇருக்கிறது. அதுவே அன்பு, தன்னல மறுப்பு என்பதாகும். கண்ணன் குழல் அன்பையே தேடுகிறது. அவன் நமது உளத்தில் ஒரு புதிய பிறப்பெடுக்க விரும்புகிறுன். அதற்கு நமது உளத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும்படி குழல் இசைக்கிறது. நூல்களில் இராதையைப்பற்றிப் பல கதைகள் கூறப்படுகின்றன. மக்கள் உளமே இராதையாகும். மக்கள் உளம் அவனைத் தேடுகிறதென்பது உண்மையே. ஆனுல், அவன் மக்கள் உளத்தைத் தேடுகிறுன் என்பது இன்னும் ஆழ்ந்த உண்மையாகும். கண்ணன் இராதையைத் தேடிக் காடுகளி லெல்லாம் அலைகிறுனென்று கூறப்படுகிறது. ஏனெனில், இராதை ராசநடனத்தைவிட்டு நீங்கினுள். கண்ணன் அவளைத் தேடி அங்குமிங்கும் அலைந்தான். கண்ணன் மனித உள்ளத்தைத் தேடுகிறுன். அவ்வறவாழி அந்தணன் அரவிந்தத் தாளை அன்புடன் சேர்ந்து அவனது குழலிசைக்குப் பதிலிறுத்தாலன்றி முத்தி—விடுதலை கிடைத்தலரிது. கல்வியுடைமையால் அகந்தை கொள்ளும் ஒருவனுக்கு முத்தியில்லை. 'கற்றதனாலாய பயனென்கொல்? வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்?' பக்தியிலலாத கல்வி உடலுள்ளுறை எலும்புகளைப் படம்பிடித்துக்காட்டும்கருவி (X-ray apparatus) வேலை செய்யும் போதிருக்கும் நிலையை ஒத்ததேயாம. ஒரு பாதுகாவற் பெட்டியில்லாது அக்கருவியை யுபயோகப்படுத்துவது அபாயத்தையே விளைக்கும். குழந்தைபோன்று தனது ஆசாரியனை உளத்தில் ஏற்கும் ஒருவனுக்கே முத்தியுண்டு. வடஅமெரிக்காவிலுள்ள இந்தியர், குழலை "காதலர் குழல்" என அழைக்கின்றுர். காதலர் குழலே கண்ணன் இசைப்பது. அவன் நமது உளத்தைத் தேடுகிறுன். அவனுக்கு உளத்தை யளித்தல் சமயவுண்மையை யறிதலாம்—இன்னல் வந்துற்றபோதும் பொறுமையுடனிருத்தலாம்—அகந்தையை விடுத்து, தன்னல மறுப்பில் மகிழ்ச்சி கொள்ளுதலாம்.

கீதை, பாகவதபுராணம் இவற்றின் திரண்ட உண்மை இதுவேயாம். "அன்புடனிருக்க வாழ்" (Live love). அதுவே கண்ணபிரானின் உபதேசம். இளைஞர்க்கு இவ்வுபதேசமே வேண்டற்பாலதாகும். இந்தியர் அதிகமாக அல்லலுற்றுவிட்டதென அவர் கூறுகின்றுர். அது ஓர் புதிய அரசாங்க அமைப்பை வேண்டி நிற்கிறதென அவர் கூறுகிறுர். புதிய அரசாங்கம் புதிய உளங்களாலன்றி எப்படிக் கட்டப்பெறும்? அந்தோ! சிலர் அரசியல் நாட்டுப் பணியென்பதை உணராது அதைக் கௌரவம், புகழ் மூதலியன ஈட்டுங் கருவியாகக் கொள்கின்றுர். ஒவ்வொரு நகரமும் சிற்றூரும் இந்தியாவிற்குஉள்ளப் புபூண்ட, குறைந்தது, பன்னிரண்டு பேரையாவது கொண்டிருக்கட்டும். இந்திய தேவி உரிமை யடைவாள். தற்காலப் போராட்டத்துக்கு ஆண்டவன் துணைநிற்கிறுன். அருச்சுனனுக்கு குருக்ஷேத்திரத்தில் வெற்றியளித்ததுபோல், காகிதத் திட்டங்களையும் கூட்டத் தீர்மானங்களையு மட்டுமன்றித் தமது உளத்தையளிப்பார்க்கு வெற்றியளிப்பான். அவன் தேடுகிற உளத்தை



நாம் அவனுக்களிக்கிற அளவில் அவன் நம் மூலமாக வேலை செய்கிறுன். "கண்ணன் அதரத்திற் பெருகும் அமுதத்தை யருந்தக் குழல் என்ன நல்வினையை யாற்றிற்று?" என முற்காலத்தில் ஓர் கோபஸ்திரீ வினவினுள். அவ்வினுவுக்கு விடை மிகத் தெளிவானதாகும். குழல் தன்னைத் தூயதாக்கிக் கொண்டது (Emptied itself). அதன்மூலம் கண்ணன் ஆரியாவர்த்தத்தில் இசையைப் பெருக்குவித்தான். அவன் இறந்துவிடவில்லை. இற்றைய இந்திய வாழ்க்கையிடை அவன் மகிழ்ச்சியுடன் தனது இசையை இயற்றுவான். நாம் நம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுதல்வேண்டும். அப்பொழுது தன்னல மறுப்பு என்னும் பாட்டையிற் சென்று கொண்டிருக்கும் இந்திய தேவி அவனுல் ஆசீர்வதிக்கப் பெறுவாள். அப்பொழுது அவன் இந்தியாவின் மூலம் இந்திய விடுதலைக்கும் உலக நன்மைக்கும் மறுபடியும் இசைப்பான்.

பவிஷ்ய புராணத்தில் "நித்திய இராதா கிருஷ்ணனை" ஓரே உருவமாகக் காண்கின்றேம். ஆயிரம் யுகங்கள் தவமியற்றியபின் அவன் இராதையென்றும் கிருஷ்ணன் என்றும் இரண்டாகப் பிரிக்கப்படுகிறுன். இருவரும் தனித்தனியாக ஆயிரம் ஆண்டுகள் நோற்றபின்பு அவர் உடலினின்றும் ஒரு ஜோதி உண்டாயது. அச்சோதியினின்றும் தெய்விகப் பிருந்தாவனம்உற்பததியாயது. ஆண்டவனேடு ஆன்மா அடையும் என்றும் நிலைத்த இன்பக் கலப்பைக் காட்டும் அது ஓர் அழகிய வழியாகும். அவ்வான்மா நிலவுலகத்துப் பிறப்பெய்துழிப் பிரிவெய்துகிறது. கண்ணன் குழல் மறுபடியும ஐக்கியமாவதற்கே அழைக்கிறது. அவனேடு மறுபடியும் ஐக்கியமாவதற்கு ஒவ்வொரு உளமும் இராதையாக, பெண் தெய்வமாக ஆதல் வேண்டும். பெண்ணுளம் அன்பை, பக்தியைக் கொண்டது. நூல்களில் இராதையும் கண்ணனும் யமுனையிற் கூடினர் என அறிகிறேம். ஒவ்வொரு உளமும் யமுனையாக—அன்பு பெருக்கெடுத்தோடும் அருவியாக ஆதல் வேண்டும். ஓர் சீர்திருத்தப் புரட்சியாளனின் உணர்ச்சி இராதையிடம் அமைந்திருப்பதாக யான் சில நேரங்களில் நினைப்பதுண்டு. வழக்கங்களிலும் பொருளற்ற சடங்குகளிலும் சாதி சமயக் கட்டுப்பாடுகளிலும் அவளுக்கு நம்பிக்கையில்லை. அவள் இவைகளை ஏற்காதவள்(Nonconformist). உலகம் அவளைப்பற்றி என்ன நினைக்குமென்பதைக் குறித்து அவளுக்குக் கவலையில்லை. "கண்ணனுக்காக நான் நாணமின்றிக் கடமை நெறியையும் கைவிடுவேன்" என அவள் கூறினுள். பெரும்பாலாக மக்கள் 'கடமை' என்று கூறுவது 'வழக்கம்' ஆக 'மாயை' ஆகவே காண்கின்றது. சீர்திருத்தப் புரட்சியாளர் மாயையை—வழக்கத்தைக் கடந்தவராவர். இந்தியாவின் சீர்திருத்தம் பெண் தெய்வங்களாலேயேயாம்.

ஒருவன் மாயையைக்கடந்து ஆண்டவனேடு ஐக்கியமாவது கேவலம் சீர்திருத்த விஷயமல்ல. அம்மனிதன் புதியவனுதல் வேண்டும். அவன் மறுபடியும் பிறத்தல் வேண்டும். பெண்ணுளம் அவனிடத்தமைதல் வேண்டும். நூல்கள் மறுபிறப்பு என்று கூறுவதை நான் மாறுதல் (Revolution) என்று கூறுகிறேன். மாயை

யைக் கடந்து அவனுடன் ஐக்கியமாவதற்குச் சிலபடிகளைக் கடந்துசெல்லுதல் வேண்டும். இராதையைப்பற்றிக் கூறும் நூல்களில் இவை பல கதைகள் மூலமாகவும் கட்டுரைகள் மூலமாகவும் நன்கு விளக்கப்படுகின்றன. நமது நாடு மாறுதலடைவதற்கு இவ்விரண்டு படிகளையும் கடந்து செல்லுதல் வேண்டுமென யான் நம்புகிறேன். முதலாவது படி 'உணர்ச்சி' யாகும். இதைக் குறிப்பிடுவதற்கு நூல்களில் 'விவேகம்' என்னுஞ் சொல் உபயோகப்படுத்தப்பெறுகிறது. கண்ணனிடமிருந்து பிரிக்கப்பட்டபோது இராதை தனது நிலையை உடனே உணர்கிறாள். அவன் மதுரை சென்றுவிட்டான். "அவன் என்னை ஏன் பிரிந்தான்? என்னுடன் அளவளாவுதலை அவன் ஏன் விடுத்தான்?" என அவள் தன்னையே தேடிக்கொண்டிருக்கிறாள். தெய்விக வாழ்க்கையில் நாம் வளர்ச்சியுறுவதற்குமுன் உணர்ச்சியடைய வேண்டும். இந்தியா விடுதலையடையுமென நாம் நம்புமுன் மக்கட்கு எழுச்சி யுண்டாக வேண்டும். நீங்கள் உங்கட்கு விருப்பமுள்ள எதைச்செய்யினும் உணர்ச்சி, பழக்கம், சாதனம் இப்படிகளைத் தவிர்க்க இயலாது. இந்தியா சிற்றூர் நிறைந்த நாடாகும். பெரும்பாலான கிராமங்கள் இன்னும் விடுதலையின் உண்மையையறியவில்லை. ஒரு தனிமனிதன் தனது ஆன்ம விடுதலையையாதல் அல்லது ஒருநாடு அரசியல் விடுதலையையாதல் உணர்ச்சி என்றபடியைக் கடந்து செல்லாது எப்படி அடைதல்கூடும்? பொறுமையாயிருக்கக் கற்றுக்கொள்ள வேண்டியது அகத்தியமாகும். இதுகாலை நாம் செய்ய வேண்டியவேலையாதெனின், கிராமங்களில் உணர்ச்சியையுண்டாக்கவேண்டியதேயாமென எனக்குத் தோற்றுகிறது. கிராமங்களைத்தட்டியெழுப்புங்கள். ஒருநாட்டின் விடுதலைக்கு அதைவிடக் குறுகியவழி வேறொன்றில்லை.

உணர்ச்சியின் பிறகு நமது நூல்களிற் கூறப்படும் "வியாகுலதா" என்பதாகும். அதை நான் "ஆன்மாவின் வருத்தம்" (Anguish of the soul) எனக் கூறுகிறேன். இந்தியாவின் தற்கால நிலையில் விடுதலையைப் பற்றிப்பேசும் நம்மவரில் எத்துணைப் பெயர் தங்கள் மனத்தில் வருத்தத்தைக் கொண்டிருக்கிறார். இராதை ஓர் நண்பரிடம் கூறுவதாக ஒரு கவி பின் வருவனவற்றை யமைத்திருக்கிறார். "எனது அருமை நண்ப! எனது துக்கத்தின் அளவை யான் யாங்ஙனம் கூறவல்லேன்? அருமைச் சகோதரி! எனது தற்கால நிலை அழுதாற்றத் தக்கதாக விருக்கிறது. எனது உள்ளம் அல்லும் பகலும் நெருப்பிலிட்டாலென உருகுகிறது. நான் சமாதானத்தை யறியேன். கண்ணன் யாண்டுக் காணப்படுவானோ ஆண்டுப்பறந்தோடி விடுகிறேன்". மனத்தில் வருத்தமில்லாத தேசபக்தி என்பெறும்? ஆங்கிலேயரை வெறுக்கும் இளைஞரை நான் அறிவேன். தேசபக்தி அன்புணர்ச்சியாகு மென்பதை அவர் மறந்துவிடுகிறார். நமது பண்டைய முனிவரைப்பற்றிப் பல்காலும் பெருமை பேசிக்கொள்ளும் இளைஞரையும் நானறிவேன். தேசபக்தி நம்மை எளிய உளத்தவராக்க வேண்டு மென்பதை யவர் மறந்துவிடுகிறார். நாம் நமது முனிவரரால் இறுமாப்புடையேமாயினே மெனக் கூறுகின்றோம். அம்முனிவரர் நம்மால் இறுமாப்புடையவ ராயினரோ? அரசிய



லைத் தொழிலாகக் கொண்ட இளைஞரையும் நானறிவேன். அது அவர்க்குக் கூட்டத்தினரின் கரகோஷத்தையும் ஆதரவையும் அளிக்கிறது. ஒரு தேசபக்தன் தனது உளத்தில் வருத்தைத் தாங்கியிருக்கிறானென்பதையவர் மறந்துவிடுகிறார். ஏனெனில் இந்தியா கட்டுண்டு கிடக்கிறது.

மூன்றாவதாக தியாகம். கண்ணனைத் திரும்ப அடைவதற்கு இராதை விரதங்களை அனுட்டித்தாள் என நூல்கள் கூறுகின்றன. இராதை தவமியற்றினாள். பெரிய வங்காளக் கவியான வித்தியாபதி இராதை கூறுவதாகப் பின்வரும் பொருள்வளங் கெழுமிய சொற்களைப் பெய்கிறார்.

"கண்ணன் கோகுலத்துக்குத் திரும்பிவரின் விழாவின உபயோகத்திற்காக எனது முத்து மாலையையளிப்பேன். அவனது பணியில் யான் யாவும் அடைவேன்."

முடிவு இந்திய விடுதலைத் திருவிழாவாக இருக்குமாயின் போர்முனையில் நீங்களும் நானும் அழிந்துபோவதால் என்? இராதை உளத்தில் தாங்கிய அன்போடும் அவாவோடும் "தாயே! உனது தொண்டில் நாங்கள் யாவும் அடைவோம்" என்று கூறுவதை விட நமது சரித்திரத்தின் சோதனைக் காலமான இந்நேரத்தில் வேறு எத்தூய்மையான தியானத்தைச் செய்யலாம்?

---

# இருக்கு வேதத்து உருத்திர தேவதை.

—:(o):—

௨.

இருக்கு வேதம் மண்டலம் ௧. சூக்தம் ௧௧௪.

த. ராமகிருஷ்ணன். (வேத மாணுக்கன்)

தமிழ்.

௧ இந்நகரத் துறையும் இருகால் நாற்கால் படைத்த சீவர்கள் யாவரும் நோயின்றி உடல் நலமெய்திச் செழிப்புற்று வாழ்க்கை நடாத்திடுக. ஆற்றல் பொருந்தியவனும், வலியிழந்தாரை இயக்குந்திறன் வாய்ந்தவனும், க்ஷயம் முதலிய நோய்களை யகற்றுகின்றவனுமாகிய மருத்துவன் இத்தகைய நல்லறிவினைப் பரப்புக.

௨ மருத்துவ! எங்கட் கின்பம் நல்குக. எங்களைப் பிணியற்றவர்களாக ஆக்கிடுக. க்ஷயம் அல்லது குறைகளைத் தவிர்க்கின்ற நினக்குப் போற்றிமொழி இசைக்கின்றோம். சித்தனையுடையானும் காக்கின்றவனும் நோய் தணிக்குமாற்றல் அடைகின்றான். வைத்திய! நினது சிறந்த நியதிகளைக் கடைப்பிடித்து யாங்கள் அந்நலன்களைப் பெறுகின்றோம்.

௩ ஈகைசால் மருத்துவ! குறைகளை யகற்றுகின்ற நினது கூரிய அறிவினை யாங்கள் பெற்று, குடிகளாகிய யாங்கள் நினது நுண்மதியால் நுனித்தறிந்த இன்பம் பயக்கும் வழிகளை உறுதியாக ஆற்றிடச் செய்க. பிணி தீர்க்கின்ற நினக்கு உணவு அல்லது காணிக்கை வழங்கிடுவோம்.

௪ திருவும், நல்லாற்றினுதவலும், முயற்சியும், மெய்யுணர்வும் படைத்துத் துன்பம் துடைக்கின்றவ

ளாகிய வைத்தியன், நம்மைக் காத்தற் பொருட்டு இறைஞ்சுவோமாக. புலன்களால் விளையும் சினம் வெகுளி முதலியன நம்மினின்றகலுக. இந் நல்லறிவினை யாங்கள் உறுதியாகப் பெற்றிடச் செய்க.

௯ சிறந்த உணவு கொள்ளுகின்றவனும், திருவுடையானும், வடிவழகனும், வலியிழந்தாரைத் தக்கநெறி உய்விக்கு மாற்றலுடையானுமாகிய வைத்தியனை வானுலகினின்று வணக்கத்துடன் அழைத்திடுவோம். அவன் கைகளில் நோய் நீக்கும் ஒளடதங்களைத் தாங்கி, நமது அகக் கரணங்களைக் குளிர்வித்துப் புறவுறுப்புக்களின் கேடு நீக்கும் வமன விரேசனாதிகளைச் செய்விக்கின்றான்.

௬ இறக்குந் தன்மை வாய்ந்த உயிர்களைக் காப்பாற்றுகின்ற வைத்தியனிடத்து இனியதினுமினிய, உயர்வளிக்கின்ற இம்மொழிகள் கேட்கப்படுகின்றன. அமர! எங்கட்கு மக்கட்குரிய உணவினை அளித்திடுக. அவ்வாறே எம்மையும் எமது மதலைகளையும் சுகம்பெறச் செய்திடுக.

௭ வைத்திய! எம்மின் முதியாரை வதைத்திடற்க. எம்மின் இளையாரை அழியற்க. எம்மை வளர்ப்பாரைக் கொல்லற்க. எம்மால் வளர்க்கப்படுவோரைச் சிதைக்கற்க. எமது தந்தையாரைச் சாய்த்திடற்க. எமது தாயாரைத் தீர்த்திடற்க. எம்மனைவரது இனிய யாக்கையினைக் குறைவுபடுத்தற்க.

௮ மருத்துவ! எமது மதலைகள், இளைஞர், மனிதர், ஆக்கள், குதிரைகளும் குறைவடையா திருந்திடுக. மயக்கம் சினம் முதலியவற்றால் எமது வீரரை அழித்திடற்க. நினக்குரிய உணவுகளுடன் நின்னினின்றே யாங்கள் அழைக்கின்றோம்.

௯ இறக்குந் தன்மை வாய்ந்த மக்களைக் காக்கும் மருத்துவ! ஆக்களைக் காக்கின்றவனையொப்ப எங்கட்கு மிகுந்த நலன் அளித்திடுக. யாங்கள் நின்னைப் புகழ்ந்து பணிவோம். யாதெனின் நினது நன்மதி மிகுந்த நலன் விளைவிப்பதாக இருக்கின்றது. எனவே யாங்கள் உறுதியாக நின்னால் காக்கப்பெறுகின்றோம்.

௧௦ குறையகற்றுகின்றவ! நினது பசுக்களையும் மக்களையும் வதைக்கின்ற பண்பினை யொழித்திடுக. எங்கள் பொருட்டு நீ நன் மனத்தினைப் பெற்றிடுக. எங்கட்கு நலன் பயந்திடுக. சீரியோய்! இருபாலாரையும் வளர்க்கின்றவனாகிய நீ, எங்கட்கு நல்லுரைகள் வழங்கி அமைதி யளித்திடுக.

௧௧ காக்கும் பொருட்டு வேண்டி நிற்கும் யாமனைவரும இத்தகைய மருத்துவர்க்கு வணக்கஞ் செலுத்துவோம். இறக்குந் தன்மை வாய்ந்த மக்களிடையே வதிகின்ற வைத்தியன் எங்கள் வேண்டுகோட்குச் செவிசாய்த்திடுக. நண்பர், சான்றோர், விருந்தினர், கடல், நிலன், வானுலகும் நம்மை அவ்வாறு உயர்த்திடுக.

## கருத்தும் பொருள் விளக்கமும்.

இந்தச் சூக்தமும் முன் குறித்தவாறு (இருக்கு க-௬௩) மருத்துவ இயலின்பாற் பட்டது. இதன் ஐந்தாவது செய்யுளில் "உருத்திரன் நோய்நீக்கும் மருந்துகளைக் கரத்திற்றாங்கி, மக்களுக்குற்ற பிணிகளை வமன விரேசனாதிகளால் போக்கி அகக்கரணங்களுக்கு அமைதியும், புறக்கரணங்களுக்கு நலனையும் விளைவிக்கின்றான்" என்று பகரப்படுதலான், உருத்திரப் பெயர்க்கு மருத்துவனென்னும் பொருள் காணக்கிடக்கின்றமை யோர்க. இச்சூக்தத்திற்கு உருத்திரன் சிறப்புடைத் தேவதை. கடைசி மந்திரத்தில் மித்திரன், வருணன், அதிதி, ஸிந்து, பிருதிவி, த்யௌ என்னும் தேவதைகளின் பெயர்களும் சாற்றப்படுகின்றன. அவற்றைக் கடைசி மந்திரப் பகுதியுள் விளக்குவாம். இச்சூக்தத்தில் பதினொரு செய்யுட்களுள. இவற்றின் யாப்பு ஜகதி, திரிஷ்டுப் என்று இருவகைப்படும். இருஷி கிருத்ஸ ஆங்கிரஸன்.



### க. நகர சுகாதாரம்.

க. இந்நகரத் துறைகின்ற இருகால் நாற்கால் சீவர்கள் நோயின்றிச் செழிப்புற்று அமைதியுடன் இன்ப வாழ்க்கை யெய்தத் தக்க நியதிகளை வகுத்தல் மருத்துவர் கடனும். வைத்தியர் நோய்களை யகற்றுதற்கும் வலியிழந்தாரைச் செலுத்தற்குந் திறன் படைத்திருத்தல் வேண்டும்.

கிராமம், நகரம், பட்டணம், புரம், முதலிய பகுதிகளில் உறைகின்ற மக்களும் பிற சீவர்களும் உடல் நலனுற்றுச் செழிப்புடையாராகவும், வலியாராகவும், முயற்சியுடையவராகவும் வாழுமாறு செய்தல் மருத்துவர் கடமையாகும். நகர சுகாதார நியதிகளை நன்கு ஆய்ந்து அமைக்கின்றவரும், நகர வாசிகளாகிய மக்கள் உடல்நலங் காத்து இனிய வாழ்க்கை நடாத்தற்குரிய நெறிகளை அறிவுறுத்துகின்றவர்களுமாகிய வைத்தியர்கள் போற்றுதற்குரியர். நகரங்களி லுறைகின்ற மக்கள் இத்தகைய மருத்துவர்களைத் தேர்ந்தெடுத் தொன்று சேர்த்து நகர சுகாபிவிருத்தித் (Public health) தாபனங்கள் நிறுவுதல் இன்றியமையாதது. இத்தாபனங்கள் வாயிலாக ஆராய்ந்துவெளியிடப்பெறும் அறிவுரைகளை அவ்வக்காலத்திற் கியைந்தவாறு கைக்கொண்டொழுகி உடல் நலங் காத்தல் நகர மாந்தர் கடமையாகும்.

ஒருநகரின் சுகாதாரநிலையை அளந்தறிவதற்கு, அந்நகரிலுறையும் மாந்தரின் ஆயுட்பெருக்கே போதியகருவியாம். சுகாதார வசதியுடன் உடல் நலங்காக்கப்பெறும் சிறந்த நகரங்களிலுறைவார்க்கு ஆயுள் நூற்றைம்பதினும் மிகும். நூறும் அதில் குறைந்தாரும் வதியும் நகர் நடுத்தரமானது. இளம்பிராயத்தில் பல மரணங்கள் நிகழப்பெறும் நகர் மிகத் தாழ்மையானது. இவற்றின் நிலைமைகளையாராய்ந்து சுகாதார வசதிகள் அமைக்க வேண்டுவது மருத்துவர் கடன்.

இச்செய்யுளில் மருத்துவர்க்கு அடை மொழிகளாகக் குறிக்கப்பெறும் 'தவஸெ கபர்திநெ க்ஷயத்வீராய' என்னும் மூன்று சொற்களும் ஆராய்தற் குரியன.

க. தவஸ்:—முதுமை, வலிமை, பெரிய, உயர்ந்த. மருத்துவன் முதுமையும் மனோதிடமும் பெற்றிருத்தல் வேண்டும். முதுமையால் கைத்தேர்ச்சியும் மிகுந்த அநுபவமும் வாய்ந்திருத்தல் கூடுமென்பது தேற்றமாம்.

உ. * க-பர்தின்:— வயிற்றகத்து நிறைந்து நிற்கும் கேடுற்ற காற்றுக்

* க-பர்தின்—'பர்த்(d)' வயிற்றகத்துள்ள வாயுக்களுக்கு இயக்கந் தந்து கேடுற்றவைகளை வெளியில் தள்ளுவது. 'க'-கேடடைந்த.

களை அபானவாயுவாகச் செய்து வெளியில் தள்ளப்படுவது. வயிற்றில் வாயு கேடடைந்து நிலைபெறுமாயின் நோயாளிக்கு மிகுந்த துன்பம் விளைவிக்கும். மருந்துகளைக் கலந்து கொடுத்து அபான வாயுவை சமநிலைப்படுத்தி நிறுத்துவது மருத்துவர்களாகலான், அவர்க்கு இப்பெயர் உரியதாயிற்று. *மிகக் கெடுதியான நிலைமையிலிருக்கின்ற நோயாளிகளையும் மருந்துகளால் பரிகரித்து நன்குநடைபெறுமாறு செய்யுந்திறமை. வயிற்றகத்துச் சென்றடைகின்ற பொருட்களில் ஒவ்வாதவைகளையோ, கேடுற்றவைகளையோ திரும்பவும் வெளியில்தள்ளும் வலிமை. †நோய்களால் துன்புற்றுவருந்துகின்றவர்களை பசித்துக்கிடக்கச் செய்து, அந்நோய் அகற்றும் முறையினைக் 'க-பர்த்' என்று குறிக்கப்படும். கபர்த்-மயிர்முடி. மயிர் முடிச்சுடையானைக் கபர்த்தின் என்பர்.

ங. க்ஷயத்-வீர:—காசம், க்ஷயம் முதலிய உடம்பினை இளைக்கச் செய்கின்ற நோய்களை (Wasting diseases)‡ நிவாரணம் செய்கின்றவன். § க்ஷயத்-உறையுமிடம். வீரர்கட்குறைவிடம். மக்களை ஆட்சிபுரிகின்றவன் (Governing men) வீரர் தலைவன் (Commander of heroes) என்பர் அறிஞர் போத்லிங், இராத் முதலியோர். வீரர்களை அழிக்கின்றவன் (Destroyer of heroes) என்பர் அறிஞர் விட்னி. வீரர்கட் குறைவிடம், பகைவர்களை அழிக்கின்றவன் என்பர் மகிதரர். எனவே நோய்களாகிய பகைவர்களை யோட்டுகின்ற வீரன் மருத்துவனுவானென்க.

இத்தொடரினல் முன்னைப் பழமையனும் போராற்றலுடையானும் சடைமுடி தரித்தவனும் வீரர்க்குவீரனுமாகிய மாஉருத்திரனென்று சிவ பெருமானைக் குறித்தனர் போலும். அன்றியும் தமிழ் நாட்டில் மருத்துவமுணர்ந்த பழம்பெருஞ் சித்தர்களின் கோலமும் இதனை நினைவுறுத்தும். சிவபெருமானையும் ஒரு சித்தராகத் தவசியாகப் புனைந்துளர்.||

உ. உடல் நலமும் நோய் நீக்கமும்.

உ. யாவரும் உடலில் நோயின்றி மன அமைதியுடன் வாழுமாறு செய்தல் மருத்துவர் கடன். நன்கு ஆராய்ந்து காத்து ஒழுகுதலால் உடல் நலன்பெற்று நோயணுகாது தடுக்கும் வலிமை பெருக்க மடையும்.

ஆராய்ந்தறியும் ஆற்றலுடையார் 'மநு' மக்களாவர். காக்குந் திறனுடையார்+'பிதா' ஆவர். தமது உடலின் நிலைமைகளை நன்றாக ஆராய்ந்து துணிந்து, அதற்கேற்ப ஒழுகி உடல் நலங் காக்கவேண்டுவது மக்கள் கடமையா மென்பது இச்சொற்களால் உணர்த்தப்படுகின்றது. உடல் நலமாவது %'சம்' புலன்களை தத்தமியல்பிற் செலுத்தி உள்ளம் அமைதிபெறுதலும்; @'யொ'புறத்தேநின்றுவரும் துயர்களை அகததுச் செல்லவிடாது தடுக்குமாற்றலுமாகும். இவற்றை o'ப்பணீதி(ப்ர-நீதி)' நன்றாக ஆராய்ந்து மக்கள் யாவருக்கு மொப்ப நாட்டிற்கும் பருவங்களுக்குமியைய விதி நியமங்களால் (வரையறையாக) ஒழுக்க வழக்கங்களாக நிறுவுதல் வேண்டும். ப்ர-நீதி (Special guidance), உடல்நலங் காக்கும் நியதிகளை ஆராய்ந்து அநுபவத்திற்கண்டு பிறர் ஒழுகுமாறுகற்பிக்கும் நூலாதலுமமையும்.

மருத்துவர் உடல்நலங் காத்தற்குரிய நியதிகளை வகுத்து யாவர்க்கும் அறிவுறுத்த வேண்டுவதும், மக்கள் சுகாதார விதிகளுக்கேற்பத் தங்கள் ஒழுக்க வழக்கங்களை அமைத்துக் கொள்ள வேண்டுவதும் இன்றியமையாதன.

(தொடரும்.)

* ப்ருத், ப்ருத்(d)—இயக்குதல், எறிதல். † பர்த்(d)—பசி கிடத்தல் (to fast). ‡ வீரன்—பிறர் துயர் நீக்குகின்றவன். § க்ஷி—(க) உறைதல், தங்குதல், வைத்தல், (உ) குறைதல், அழிதல். || இவை எமது கருத்து. + பிதா—'பாதி ரக்ஷதி இதி பிதா' காப்பாற்றுகின்றவன் தந்தை. % சம்—உடல்நலம், நோயின்மை, மனவமைதி. @ யொ—புறத்தினின்று உட்புகும் துயர்களைத் தடுத்து நிறுத்தல். o ப்ர-நீதி—நல்வழி துணிதல், நன்முறையில் ஒழுகும் நியதிகாண்டல். சிறந்த அறநெறியால் ஒழுக்கினை அமைத்தல்.



---

# நைவினை நணுகேல்.

பண்டிதை—சு. பாலாம்பிகை அம்மாள்.

பிறர் கெடத்தக்க தீவினைகளை நீ ஒருபோதும் செய்யாதே என்பது இதன் பொருள். உலகில் நால் வகைத் தோற்றங்களுள. அவை அண்டசம் சுவேதசம், உற்பிச்சம், சராயுசம், என்பன. அண்டசம் முட்டையில் தோன்றுவன. சுவேதசம் வேர்வையில் தோன்றுவன. உற்பிச்சம் விதையிற்றோன்றுவன. சராயுசம் கருப்பையிற்றோன்றுவன. இத் தோற்றங்களிலமைந்து வரும் உயிர்களனைத்திற்கும் தாம் இன்பமாக வாழவேண்டுமென்னும் எண்ணம் இயல்பாகவுண்டு. இக்காரணத்தினலேயே நைவினை என்பது தோன்றியிருத்தல் வேண்டும். விருக்ஷங்கள் தாம் சுகமாக வாழும் பொருட்டு தமக்குணவிருக்குமிடங்களைத் தேடிச்சென்று உண்டும், இலைகள் மூலமாகக் காற்றருந்தியும் சீவிக்கின்றன. அன்றி நிழலிலகப்பட்டவிடத்து ஒருபுடை சாய்ந்து எவ்வாற்றானும் வெளி வந்து தன்னிஷ்டப்படி வாழுகின்றது. இத்தகைய மரங்கள் தாம் இன்பவாழ்வு தேடுவதனல் மற்றைய உயிர்களுக்கு ஒருவித துன்பமும் நேரிடுவதில்லை. ஒரு வகை மரங்கள் தம் இலைகளாகிய கைகளை நீட்டிக்கொண்டிருக்கும் போது உணவுக்குபயோகப்படும் சில செந்துக்கள் அகப்பட்டக்கால் அவை புறஞ்செல்லாவாறு இலைகளை மூடிக்கொண்டு சாப்பிடத் தொடங்கும். சாப்பிட் டொழிந்தவுடன் திரும்பவும் இலைகளை விரித்துக்கொள்ளும். அப்போது அவைகளின் செட்டைகள் புறத்தோல்கள் மாத்திரம் காணப்படும். இவைகள் பத்திரம் மூலமாகத் தசையை உட்கொள்ளுகின்றன போலும். இது கொலையின்பாற்படினும் தம்முணவளவிலேயே நின்று விடுகின்றன.

அநேக மிருகங்கள் தாவர போசனத்தையே உண்ணுகின்றன. சில மேற்கூறியவாறு போசனத்திற்காகவும் அச்சங் காரணமாகவுங் கொல்லத் தலைப்படுகின்றன; ஒரு புலி ஒருவனைக் கொல்லுகிறது. அது அவனுடைய மாமிசத்தைப் புசிப்பதற்கன்று. ஆனல் அவன் தன்னை ஊறுபடுத்தக் கூடுமென்னும் அச்சத்தினலே தான் இவ்வாறு செய்கிறது. பட்சிசாலங்களு மித்தன்மைத்தே.

ஆனால் மனிதனே பல பல கார
ணங்களால் அநேக துன்பங்களைப்
பிறருக் கியற்றுகிறான். ஆதி நாளில்
மக்கள் ஒற்றுமையுடன் இன்ப வாழ்
வு வாழ்ந்தனர். அவர்கள் உண்டிக்
காக உயிர்வதை செய்ததாகத் தெரிய
வில்லை. ஏனெனில் அவர்கள் உறுப்
புக்கள் புலால் புசித்தற்குத் தகுந்த
வைகளாகத் தோன்றில. நாளேற நா
ளேற இரும்பு முதலிய லோகங்களை
க் கண்டெடுத்துக் கொலைத் தொழி
லுக்குரிய ஆயுதங்களைச் செய்து உயி
ர்களைக் கொன்று புலால் மிசைந்த
னர். சில நாட் கழிந்த பின் ஒவ்
வொருவரிடத்தும் அகங்கார மமகார
ங்கள் அரும்பின. எமது நாடு எமது
செல்வம் என்னுமெண்ணங்கள் மன
தில் குடிகொண்டன. அதன் பய
னாக பகுதி பகுதியாக வேற்றுமை
பரவியது. பின் அப்பகுதிகளுள்ளு
ம் சிறு சிறு கிளைகளாக மாறுதல்
உண்டாயிற்று. வேற்றுமை என்னு
மரசனே செங்கோல் செலுத்தினான்.
இவ்வரசன் ஆணை வழி நிற்றலை
யொழித்துச் செந்நெறி போதிக்கவே
பல சமயங்களுந் தோன்றின. இவ்
வாறு நன்னெறி நிறுவுதற்கெழு
ந்த மதங்களும் நாளடைவில் வேற்
றுமை வேந்தனின் அன்பான அமை
ச்சராயின. சமயங்களாற் பெரும்
போர் நிகழ்ந்தது. அளவிறந்த மன்
பதைகள் வீர சுவர்க்கம் புகுந்தன.
எஞ்சியிருந்தோருள்ளும்பகையநிகரி
த்து ஒருவர்க்கொருவர் கெடுதி செ
ய்ய வேண்டு மென்னும் மெண்ணமு
ம் தலையெடுத்தது.

சமயங்களுள் நமது இந்து மதம்
மற்ற மதங்களையுந் தழுவி, வேற்று
மையின்றி நிலவியதென்றே சொல்ல
லாம். "யாதொரு தெய்வங் கண்
டீர் அத்தெய்வமாகி யாங்கே-மாதொ
ருபாகனார் தாம் வருவர்" "எவ்வெ
வர் தம்மை யேனும் யாவரே யெனி
னும் போற்றின்-அவ்வவரிடமாக்கொ
ண்டே யவர்க்கருள் தருவாய் போற்
றி" இவ்வாசகங்களால் பல மதங்க
ளைத் தழுவி யிருத்தலும் ஒற்றுமை
யை வலியுறுத்தி யிருத்தலும் நன்
கு புலப்படும். இஃதன்றி ஒருவன்
செய்யுந் தீவினை அவனையே சென்று
சாரும் என்னும் உண்மையை உரமா
கக் கூறுகின்றது "தன்வினை தன்னைச்
சுடும்" தாம்தாம் செய்தவினை தாமே
அனுபவிப்பார்" என்று நூல்களுரை
க்கின்றன. திருவள்ளுவ நாயனாரும்
"கெடுவல் யானென்பதறிக தன்னெ
ஞ்சம்—நடுவொரீஇ யல்ல செயின்"
நடுநிலை நீங்கி யொருவன் பிறனுக்
குத் தீங்கிழைக்க நினைப்பானாயின்
நான் கெடப் போகிறேனென்று உ
ணர்தல் வேண்டும் என்றார். இத்
தன்மைத்தான பல உண்மைகளும்
நீதிகளும் நமது சமயத்தில் இலங்கு
கின்றன. இந்நாளில் இவைகளை யறி
ந்தோர் பலராவர். அறிந்திருந்தும்
மேற்கூறியவாறு அவாவினாலும் ப
ழி வாங்கும் நோக்கத்தினாலும் பொ
றாமையினாலும் மிகப் பலவாய துன்
பங்களைப் பிறர்க்குச் செய்கின்
றனர். பிறர்க்குரிய பொருளை யிச்
சித்தும் வஞ்சித்துக் கவர்ந்தும் இ
ராக்காலங்களில் வீடுகடோறுஞ் செ
ன்று கொள்ளையிட்டும் நேரிற் பெற்
றுக்கொண்டு திரும்பக் கொடுக்க ம
றுத்தும் இப்பெயர்ப்பட்ட கெடுதிக
ளைத் தம்மவாவினாலே செய்கின்ற
னர். இவ்வாறு கவரும் பொருளி
னால் தாம் எப்பொழுதும் ஒருகுறை
வுமின்றிச் செல்வமாகவும் இன்பமாக
வும் வாழ்வோம் என்பதே அவர் எண்



ணக்கிடக்கை. ஆனால் களவினாலுண்
டாகிய பொருள் ஒரு சில நாட்களு
க்கின்பத்தைக் கொடுத்துப் பின் பழி
யும் பாவமும் பெருக்கி விரைவில்
தானும் அழிந்து போம். நாயனா
ரும் "களவினாலாகிய ஆக்கம் அளவி
றந்து ஆவது போலக் கெடும்" எ
ன்றார். எத்தகைய இடர்ப்பாடுறி
னும் நேர்மை வழி நிற்றலே மரபு.
நமக்குள்ள பொருளோடு நாம் திரு
ப்தியடைதல் வேண்டும். பொருளி
ன்றேல் சரீரத்தை வருத்தி உழைத்
துச் சீவித்தல் வேண்டும். ஆசை
யே ஆன்ம ஈடேற்றத்தைத் தடுக்க
முன்னிற்பதாம். ஆதலால் ஆசையை
ஒழித்தல் வேண்டும். பழிக்குப் பழி
வாங்குவோரை இந்நாளிற் பரக்கக்
காணலாம். முன்னோர் "தம்மையிக
ழ்ந்தாரைத் தாம் பொறுப்பதன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப் பயத்தால்
—உம்மை எரிவாய் நிரையத்து வீ
ழ்வர்கொலென்று" பரிவர். தம்மையிக
ழ்ந்துரைத்த வசைமொழிகளைப் பொ
றுப்பதுமல்லாமல் எம்மை யிகழ்ந்த
பாவத்தினால் மறுபிறப்பின்கண்
கொடிய நரகத்தில் விழுந்தழுந்துவ
ரேயெனத் துன்பமுறுவாராம். இந்
நீதிகள் யாவும் ஓடி ஒளித்துவிட்
டன. மனச் செருக்கினாலேனும்,
அறியாமையினாலேனும் ஒருவன் தீங்
கிழைத்தால் அதைப் பொறுத்து
விடப்போரையே வையகமும் வான
கமும் ஒருங்கு போற்றும். பதி
லுக்குப் பதில் செய்வதனால் செய்
வோனுக்கு ஒரு சில கணப்பொழு
திற்கு இன்பம் நிகழும். ஆனால்
பெரியோர் இதை ஓர் நல்லின்பமா
கக் கருதார்.

மேற்கூறியவற்றால்ஒருவகைப்போ
லியின்பமெய்தினும் பொறாமையினால்
நாமெய்தும் பயனோ ஒன்றுமில்லை.
ஒருவன் கல்வியுள்ளவனாய் செல்வனா
ய் பெரும் புகழ் படைத்தவனாயிரு
க்கிறான். அவனை நோக்கிப் பொறா
மை கொள்வதனால் நமக்குக் கிடை
ப்பதென்ன? இப்பொறாமையோ மற்
றெல்லாவற்றினும் கொடுமை யுடை
த்து. சிலர் இதனால் பலருக்குப்
பல தீங்கிழைத்தல் கண்கூடு. மற்றை
யோர் துன்பத்திற்குத் தாமுவத்த
லும் அவர் இன்பத்தில் தாம் துன்புறு
தலுமாகிய தீக்குணங்கள் இதனாலே
யே உண்டாகின்றன. மாநிலத்தில்
நாம் மானிட வடிவெடுப்பது இத்
தகைய தீக்குணங்களுக் கிரையாகி
நமது காலத்தை வறிதே கழிப்ப
தற்கல்ல; உடம்புக்குரிய சுகபோக
ங்களைத் தேடுதற்கல்ல; ஆனால் ஆன்
மாவை நல்வழிப் படுத்துதற்கேற்ற
வினைகளைச் செய்வதற்கேயென நமது
சாஸ்திரங்கள் முறை யிடுகின்றன.
ஆன்மா நலனெய்த மெய்யறிவு பெற
வேண்டும்; ஆசையகற்றல் வேண்
டும்; மெய்யறிவு பெறுதற்கு சாஸ்தி
ர உணர்ச்சி இன்றியமையாதது.
ஆசையை நீக்குதற்குச் சரீர சுகத்
தில் விருப்பமில்லாதிருத்தல் வேண்
டும். நாம் தீவினை செய்யில் இறை
வன் நம்மைத் தண்டிப்பான் என்ப
து உண்மையினும் உண்மை. அத்
தண்டனையையும் உவந்தேற்றுக் கொ
ள்ளல் வேண்டும், சரீரத்திற்குத்
துன்பம் நேரிடுகிறதே என்று துன்
புறுதலாகாது. இறைவன் தண்டிப்
பான் என்பதை அப்பர் சுவாமிகள்

ஒதுவித்தாய் முன்னறவுரை காட்டி
அமணரொடே
காதுவித்தாய் கட்டநோய் பிணிதீர்த்தா
கலந்தருளி [ய்

போதுவித்தாய் நின்பணி பிழைக்கிற்
புளியம்வளாரான்
மோதுவிப்பா யுகப்பாயிறைவா கச்சி
யேகம்பனே.

இச்செய்யுளால் விளக்கியருளினர். பொருமையாதி துர்க்குணங்களை இயலும் வகையொதுக்கி சுயநலங் கருதாது முன்னோர் அறவுரைகளைக் கடைப்பிடித்து நல்வழியொழுகலே நமது பெருங் கடனாகும்.

---

# கனகத்தின் கலியாணம்.

—:(o):—

*(ஓர் உண்மையான தென் தமிழ் நாட்டுச் சம்பவம்.)*

ஏ. என். மகரபூஷணம் பி. ஏ.

சூரியன் அஸ்தமித்து ஐந்து அல்லது ஆறு நாழிகை இருக்கலாம். தாதன்குறிச்சியில் ஒரு வீட்டுள்ளாவது விளக்கிருந்ததாகக் காணப்படவில்லை. குக்கிராம வழக்கப்படி, அந்திச்சூரிய வெளிச்சத்திலேயே சோற்றை யுண்டுவிட்டுச் சிறிது நேரம் அங்கங்கே கூடியிருந்து பேசி முடிந்ததும், கிராம ஜனங்கள் நித்திரை போய்விட்டார்கள். விளக்கொளியால் கவரப்பட்டு எரிந்து சாகும் பூச்சிகளுக்கு இரங்கி, ஜைனர்கள்—மகா ஜீவகாருண்ய முள்ளவர்கள்—இரவிலே விளக்கெரிப்பதில்லை என்று கேள்விப்பட்டிருப்பது இந்தச் சந்தர்ப்பத்திலே பலருக்கு ஞாபகத்துக்கு வரலாம். ஆனால் ஒரு விஷயம் மட்டும் சொல்லிவிடுகிறேன்; தாதன்குறிச்சிக்குச் சுற்றுக் காதவழியிலும் *வர்த்தமான மகாவீரன் பெயரே எட்டியிருப்பதில்லை. தாதன்குறிச்சியில் "மனையென்னும்பெயர்க்குரிய மாபொன்றுமின்றி" நின்ற பாழ்வீடுகளைக் கழித்துக் கணக்கிடுவதானால், மொத்தம் முப்பது வீடுகளே இருந்தன. இந்தப்பெருந்தொகையிலும் காரைமச்சு வீடு ஒன்று தவிர மற்றவை ஓலையாலும் வைக்கோலாலும் வேய்ந்த கூரை வீடுகளாகவே காணப்பட்டன.

காரைவீட்டு முற்றத்தின் கல்தளத்தில் வீட்டு முதலாளி அருணாசலம் பிள்ளை கவலைதேக்கிய முகத்தினராய் உள்ளங்கையால் மோவாயை ஏந்திக்கொண்டு சோர்ந்து உட்கார்ந்திருந்தார். அவர் மனைவி பாயை உதறி விரித்துத் தலைக்கு அணையாக வழுவழுப்பாய் இழைக்கப்பட்டிருந்த பலகைக் கட்டை யொன்றைப் போட்டுவிட்டு, முதலாளியின் பக்கத்திலே வந்து நின்று இலேசாக ஒரு முறை இருமிக்கொண்டு, "என்ன பலத்த யோசனையாக இருக்கிறதே! எனக்குத் தெரியக்கூடாதா?" என்று மிருதுவாகப் பேசினாள்.

"ஒன்றுமில்லை ……… குழந்தை கனகு தூங்கிவிட்டாளோ, இல்லையோ …… எல்லாம் அவள் விஷயமான கவலைதான். எவ்வளவுநாள்தான் அவளை நாம் கலியாணம் செய்துகொடாமல் வைத்திருப்பது?"

"குற்றம் உங்கள்பேரில்தானே, உங்களுக்குப் பகல் முழுதும் புன்செய்க் காட்டிலே வேலை பிடிப்பில் இருக்கிறது. காலம் ப்ருவகாலம் …… …… சொக்கு நல்ல பிள்ளை. ஆனால் என் தம்பி பாலத்துச் சோசியன் சொன்னதைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு தன் மகன் சொக்கனுக்கு இன்னும் மூனு வருஷத்துக்குக் கலியாணம் என்ற பேச்சையே எடுக்கப் படாது என்கிறான்.'!

"நாமென்ன பணக்காரர்களா, மாப்பிள்ளை வீட்டுக்காரர் நம்மை வலுவிலே தேடிவர? பட்டணத்துப் பிள்ளை அவருடைய மகனுக்கு நம்முடைய பருத்திக்காட்டுப்பெண் ஆகாதென்று சொல்லி நம்மை ஏளனஞ்செய்துவிட்டார். நான் என்ன செய்யட்டும்? என்னாலான முயற்சி செய்துகொண்டுதான் இருக்கிறேன்."

"கனகத்தைத்தான் பார்க்க முடியவில்லை. கலியாணப் பேச்சை யெடுக்கும்போதெல்லாம் மாப்பிள்ளை கிடைக்காம லிருப்பது தான் செய்த பாவத்தினாலே யென்றெண்ணிக் கண்ணீர் வடிக்கிறாள். செக்கடிப் பிள்ளையாரைத் தினம் காலையுமட்டும் சுற்றி வருகிறாள். அம்மன் கோயிலுக்கு எண்ணெய்கொண்டு போவதில் சலிப்பதேயில்லை. மாரியம்மனும் செல்வ விநாயகரும் தான் துணை செய்ய வேணும்."

அருணாசலம் பிள்ளை சிறிது நேரம் வருந்தி வாளா இருந்துவிட்டுத் திடீரென்று "வளைய வளைய யோசிப்பானேன்? உலகனையே பேசித் தீர்மானம் செய்துவிடுவோம். அதனால் என்ன வந்தாலும் சரி!" என்று கூறி முடித்தார்.

பிள்ளையவர்களின் மனைவி உடல் நடுங்கினாள். "காலில் விழுந்துகெஞ்சுகிறேன், பெரிய பாவத்தைப் பண்ணி விடாதேயுங்கள். நம்முடைய குலத்துக்கே நாசம் ஏற்பட்டுவிடும்" என்று பதறி வாய்குழறிப் பேசியும், அருணாசலம் பிள்ளை ஒரே பிடிவாதமாய் "என்னிஷ்டப்படிதான் நடத்தப் போகிறேன். வடிவு! நீ மட்டும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். எல்லாம் காலக்கிரமத்தில் சரியாய்ப் போய்விடும்" என்று சொல்லிவிட்டுச் சரேலென எழுந்து படுக்கப்போய் விட்டார்.

வடிவம்மை நின்ற இடத்திலேயே நெடுநேரம் திகைத்துப்போய் நின்றுகொண்டிருந்துவிட்டுப் பின்னர், செல்வ விநாயகர், தோடி மாடன், மாரியாத்தாள் முதலிய தாதன்குறிச்சியில் தலைமுறை தத்துவமாக வழங்கி வரும் தெய்வங்களைப் பிரார்த்தித்துக்கொண்டு, நெஞ்சம் பதைபதைக்கக் கண்ணீர் பெருக்கெடுக்கத் தன் செல்வ மகள் கனகத்தின் படுக்கையின் பக்கத்திலேயே போயுட்கார்ந்துகொண்டு இரவைக் கழிக்கலானாள்.

அருணாசலம் பிள்ளை காட்டிய பிடிவாதத்தின்பலனாக, சௌபாக்கியவதி கனகவல்லிக்கும் அவளுக்குத் தகப்பன்வழியிலே தூர பந்துவான செங்குளம், ஜோஸ்யம் மாயாண்டியாபிள்ளை மகன் செல்வச்சிரஞ்சீவி உலகநாத பிள்ளைக்கும் விவாகம் சிறப்பாக நடந்தேறியது. தம் ஒரே மகன் நோயற்ற நெடு வாழ்வு வாழவேண்டு மென்ற எண்ணத்தையே கொண்டவராய் அனேக ஏடுகளைப் புரட்டிப் பார்த்து நீண்ட ஆலோசனையின் பேரில் தாம் தேர்ந்தெடுத்த முகூர்த்த லக்கினம் இம்மியும் தவறிவிடாதபடி மாயாண்டியாபிள்ளை ஓயாமல் நிழலளந்து பார்த்துக் கவனித்துக் கொண்டிருந்தார். அருணாசலம் பிள்ளையோ தம்

* ஜைனமத ஸ்தாபனம் செய்த பெரியார்.

ஒரே மகள் மணவினையிலே செல்வு செய்யாத பொருளைக்கொண்டு என்ன தான் செய்யப்போகிறோம் என்று கூறிக்கொண்டு தமக்கிருந்த அற்ப நிலங்கரைகளையும் விற்றுச் செலவு பண்ணி சமீப காலத்திலே இத்தனை பெரிய கலியாணமே நடைபெற்றிருப்பதில்லையென்று அண்டை அயல் கிராமங்கள் எல்லாம் ஸ்லாகித்துக் சொல்லும்படிக்கு விவாகத்தை ஆடம்பரமாக நடத்தி வைத்தார். ஆனால் இத்துணைச் சந்தோஷத்தின் சந்தடியிலும் வடிவம்மையின் முகம், கறுப்பு மேகங்களிடையே மயங்கும் சந்திர பிம்பம்போல் துக்கத்தையே மிகுத்துக் காட்டிற்று. அருணாசலம் பிள்ளை தம் மனத்தின் அடித்தலத்தே கிளர்ந்த சந்தேகங்களை ஒருவாறு மறைத்து, வெளியிலே வெகுவாக மகிழ்ச்சி கொண்டவர் போலவே காட்டிக்கொண்டார். கனகத்தின் கூர்மையான புத்திக்கு இவ் விஷயங்கள் புலனாகாமற் போய்விடவில்லை. ஆனால் மாப்பிள்ளை வீட்டார் சாதகம் கேட்டபொழுது அருணாசலம் பிள்ளை தம் மகளுக்கு எப்பொழுதும் சாதகமே குறிக்கப்படவில்லை யென்று முழுப் பூசினியைச் சோற்றில் மறைப்பவர்போல் சாதித்ததும், சாதகப் பேச்சுக் காதிலே விழுந்தவுடன் வடிவம்மை முந்தானையால் முகத்தை மறைத்துக்கொண்டு வீட்டுள்ளேசென்றுவிட்டதும், ஏழை கனகத்தின் விசால புத்திக்கும் எட்டாத பிதிர்களாய் முடிந்தன.

௨.

“அம்மா கனகு! அந்த ராட்டை எடுத்துக்கொண்டு வா. நிலவெறிக்கிறது. கொஞ்சம் நூற்கட்டும். வாசல் திண்ணைப்படியின் கீழண்டையில் கொட்டின பஞ்சு வைத்திருந்தேன்; அதையும் இங்கே கொண்டுதா” என்ற வார்த்தைகள் எழுந்து சிறிது நேரத்திற்குள், கூடத்திலே காலை நீட்டி உட்கார்ந்திருந்த ஒரு கிழவியின் முன்னே இளவயதுப் பெண்ணொருத்தி தோன்றி ராட்டையும் பஞ்சையும் பரபரப்புடன் கொண்டுவந்து வைத்துவிட்டு, வாசலில் போய் நின்றுகொண்டு, சந்திரன் வரவை எதிர்நோக்கியிருக்கும் அந்திவானம்போல் யாவர் வரவையோ எதிர்நோக்கி நின்றிருந்தாள்.

கனகவல்லி பட்டிக்காட்டுப் பெண்களைப்போல் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருக்கவில்லை. மெல்லிய சரீரமும் சிறிய வடிவமும் வாய்ந்து பதினாறு பதினேழு வயதுப் பெண்போலத் தோன்றினாள். முகம் மட்டும், புத்தி விசாலத்தினாலோ இயற்கையான அமைதிக் குணத்தாலோ, வேறு என்ன காரணத்தினாலோ அவளுக்கு வயது கொஞ்சம் கூடியிருக்க வேண்டும் என்று காட்டிற்று. கனகத்தின் சரீரம் நொடிப் பொழுதிலே மலர்ந்த புஷ்பங்கள் தாங்கிப் பொலிய இருக்கும் பூங்கொம்பர்போல் விளங்க, அவள் சுடர்முகம் காம்பிலே சிறிது நேரமாக விரிந்து அலர்ந்து நிலமகளின் சுந்தரப் புன்னகையோ யெனத் தோன்றி நிற்கும் ரோஜா மலரெனத் திகழ்ந்தது.

உலகநாதன் வீட்டுக்குத் திரும்பும் பொழுது அகாலமாய் விட்டபடியால் அவன் அத்தைக் கிழவி ராட்டையும் பஞ்சையும் பக்கத்தில் வைத்துக் கொண்டபடியே உறங்கிப்போய்விட்டாள். கனகம் மட்டும் கொஞ்ச நேரம் வாயிலிற் காத்துக்கொண்டிருந்த பிறகு, வீட்டினுள்ளே எரிந்



து கொண்டிருந்த புன்னைக்காயெண்ணெய் விளக்கைச் சிறுகத் தூண்டிவிட்டுக் கூடத்தில் கிழவியின் பக்கத்திலே உட்கார்ந்து, தன் களங்கமற்ற இளமனம் போனபோக்கில் யோசித்துக்கொண்டிருந்தாள். ஒன்றிரண்டு தட்வைகளில், அவள் முகவொளியைத் திடீரெனச் சிறிது மங்கச் செய்து நொடிப்பொழுதிலே மறைந்த சாயை, கனகத்தின் மாசுமறுவற்ற மன விசும்பிலே எழுந்த எந்தக் கருநினைவின் நிழலாக இருக்கலாம்?

“கனகு!” என்றுகூப்பிட்டுக்கொண்டு உலகநாதன் கூடத்திற்கு வந்துவிட்டான். கனகம் அன்பு துளும்பும் மழலைச் சொற்களாலே, “ஏது, இன்று இவ்வளவு தாமதம்? அத்தை இதுவரை விழித்திருந்தவர் கொஞ்ச நேரத்துக்கு முன்னாலேதான் கண்ணயர்ந்தார்” என்று வினவினாள்.

“ஒன்றுமில்லை. சொக்கன்பட்டியிலிருந்து மந்திரவாதி ஒருவன் வந்திருந்தான். அவன் நடந்ததை நடந்தபடியே ஆச்சரியமாகக் குறி சொல்லுகிறான்; ரேகை பார்க்கிறான்; ஆரூடம் கணிக்கிறான். அவன் வடுகப்பழங்கரை வண்ணானுக்கும் அடங்காத மூப்பிடாரியையும், தோணிக்குளம் ஐயருக்குப் பணியாத மோகினியையும் கூட வாய்கட்டிவிட்டானாம். அவனை நம்முடைய குடும்ப விஷயமாகச் சில கேள்விகள் கேட்டுகொண்டிருந்தேன்.”

“வார்த்தை கனத்துப் பேசுகிறீர்களே! சல்தோஷம் போலிருக்கிறதே! கொஞ்சம்சுக்கைஉரைத்துக்கொண்டு வருகிறேன்; நெற்றியிலும் மூக்கிலும் தடவிவிட்டுப் படுத்துக்கொண்டால் நல்லபொழுது விடிந்து எல்லாம் சௌக்கியமாகப் போய்விடும்” என்று கனகம் கவலைப்பட்டாள்.

“பள்ளிக்கூடத்திலேஇதுவரைஉட்கார்ந்துபேசிக்கொண்டிருந்தோம். அது தன் கூரை விழுந்து ஒரு வாரமாயும் அதைக்கட்டிக்கொடுக்க ஊரிலே புண்ணியவான்களைக் காணோம்! *அண்ணாவி இன்றுகாலைதான் என்னிடம் சொன்னார் ... ... மாசி மாசம் ஆனதால் விளக்குவைக்கு முன்னமே பனிவிழ ஆரம்பித்துவிடுகிறது. சந்திரிகை சந்தோஷகரமாகத்தான் இருந்தது. ஆனால் வான வெளியில் பனியில் உட்கார்ந்திருந்தது உடம்புக்கு ஒத்துகொள்ளவில்லை. கவலைப்படாதே. எல்லாம் சூரியோதயத்துக்குள் சரிப்பட்டுப் போய்விடும்” என்று உலகன் பதில் தந்தான்.

“குறிகாரன் என்ன சொன்னானென்று சொல்லவில்லையே?” என்று கனகம் ஆவலுடன் கேட்டாள்.

“குறிகாரனா? உன் சாதகத்தைப் பார்க்கவேண்டுமென்று சொன்னான். உனக்குச் சாதகமே குறிக்கப்படவில்லையென்று நான் சொல்ல, அவன் ஆரூடம் கணித்துப் பார்த்து உன் சாதகம் பாவசாதகம் என்றும் எனக்கும் இப்பொழுது அட்டமத்துச் சனியாதலால் மிகுந்த கஷ்டங்களுண்டாகுமென்றும் பரிகாரங்கள் அதிமாகச் செய்யவேண்டுமென்றும் சொன்னான். நான், ஐயா தாதன்குறிச்சிக்குப் போயிருக்கிறார்கள்; எல்லா விஷயங்களுக்கும் அவர்கள் வந்து கலந்துகொள்ளட்டும் என்று சொல்லிச்

* திண்ணைப்பள்ளிக்கூட ஆசிரியனை “அண்ணாவி” என்றழைப்பது தென்பாண்டி காட்டிலே சில கிராமங்களில் வழக்கமாக இருக்கிறது.

சொற்ப தட்சணைகொடுத்து அனுப்பிவிட்டேன்" என்று நடந்த விஷயங்களை முழுமையும் உலகன் தன் மனைவியிடம் சொல்லி முடித்தான்.

கனகம் வெகுவாக உடல் நடுங்கினுள். உலகன் சற்றுப் பயந்து "கனகு! ஏனம்மா உனக்கு உடம்பு நடுங்குகிறது?" என்று கலவரத்துடன் கேட்டான். கனகம் சமாளித்துக்கொண்டு, "பனிவிழுகிறதோ இல்லையோ, அதனுல் கொஞ்சம் குளிர்ந்தது; வேறென்றுமில்லை" என்று சொல்லவே, அப்பொழுதுதான் ஏதோ கனவுகண்டு மிகவும் பயந்த குரலில் "ஐயோ என் உலகனை விட்டுவிடுங்கள், அவன் குழந்தை, ஒன்றுமறியானே" என்று தூக்கத்திலே புலம்பிக்கொண்டிருந்த கிழவியை எழுப்பிக்கொண்டு எல்லோருமாகப் படுக்கப் போய்விட்டனர்.

பின் தூங்கி முன் எழும் தமிழ்ப் பெண்கள் ஜாதியைச் சேர்ந்த கனகம் விடியற்காலை எழுந்திருந்து பார்க்கையில் தன் கணவன் முகத்தையும் சேர்த்து உடல் முழுதும் போர்த்துப் படுத்திருப்பதையும் இடைக்கிடையே "அம்மா, ஐயோ" என்று முக்கி முனகிக்கொண் டிருப்பதையும் கண்டு பயந்து நடுங்கிப்போய் அத்தைக் கிழவியை எழுப்பிவந்து காட்டினுள். அநுபவசாலியான கிழவியும் நாடி பிடித்துப் பார்த்து, உலகனுக்கு இராக்கொண்டே பலத்த சுரம் வந்து விட்டதென்று கண்டு காரசாரமான மருந்துகள் கொடுப்பதற்காக அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தாள்.

கனகத்துக்குக் கையில் காரியமே எழவில்லை. உலகன்மேல் அவள் அளவற்ற காதல்வைத்திருந்தாள். தான் ஒரு தடவை இருமியதனுல் கனகம் பட்ட கவலையை அறிந்திருந்த உலகன் அவள் அறியாவண்ணம் வாசற்புறம்போய் இருமிவிட்டு வீட்டுக்குள் வருவது வழக்கம். அப்படியிருக்கத் தன் உலகன் தன் கண்முன்னுலேயே பெருங் காய்ச்சலோடு பாயும் படுக்கையுமாகக் கிடப்பதைப் பார்க்க அந்த ஏழைநெஞ்சம் என்னபாடு பட்டிராது?

உலகனுக்கு நாளுக்கு நாள் வியாதி அதிகரித்து வந்தது. செங்குளத்துக்கும் அண்டை அயல் கிராமங்களுக்குமாகப் பெயர்போன வைத்தியனை மாடசாமிப் பண்டிதன் இரவில் அங்கூட உலகன் பக்கத்தே விழித்திருந்து கவனித்து மருந்து கொடுத்துக்கொண்டு வந்தான். மாடசாமியின் ஓயாத வைத்தியத்தை அத்தைக் கிழவியின் சலியாத ஊக்கமே பயனுறச் செய்ததென்று சொல்ல வேண்டும். வாத உபத்திரவத்தினுல் இதுவரை முடங்கிக் கிடந்த இந்தக் கிழவியின் கைகால்களுக்கு இப்பொழுது எங்கிருந்தோ என்றுமில்லாத பல்மும் சுறுசுறுப்பும் வந்துவிட்டன.

பண்டிதன் வைத்தியத்திலும் கனகத்தின் பணிவிடையே விசேஷப் பலனளித்து வந்தது. எத்துணைக் கசப்பு மருந்தாயினும் கனகம் கையால் கொடுத்தால் உலகன் கஷ்டமில்லாமல் குடித்துவிடுவான். அவன் தன் மனைவியிடம் கொண்டிருந்த காதல் பெருக்கை அபூர்வமான சில சமயங்களிலன்றிப் பொதுவாக வெளிக்காட்டினவனல்லன். இந்தக் காய்ச்சல் காலத்திலே அவள் வெளியிட்ட அன்பும் ஆசையும் கனகத்தின் துன்பத்தையும் கவலையையும் கூட ஒருவாறு மட்டுப்படுத்தியது. கோவில் குளத்துக்குப் போன நேரம் தவிர மற்றப்



படி ஒரு விநாடியாவது கனகத்தைக் காணுமல் இருக்க உலகன் சம்மதிப்பதேயில்லை. கனகம் கால் கடுக்கச் சுற்றிவந்த பிள்ளையார், மாடன் முதலிய தெய்வங்களுக்கும், அரசமரங்களுக்கும் கணக்கேயில்லை. இத்தனைக்கும் மத்தியில் அவள் சாதக சம்பந்தமான பிதிர்மட்டும் அடிக்கடி கனகத்தின் மனத்திலே எழுந்து நடுக்கத்தை உண்டுபண்ணி வந்தது.

தாதன்குறிச்சிக்கு வியாபார நிமித்தம் சென்றிருந்த உலகன் தகப்பனுர் பத்து நாட்களாயும் திரும்பாததனுல், உலகனுடைய தேகநிலையைத் தெரிவித்து அவரை உடன் கையோடு அழைத்துவர அத்தைக் கிழவி கூலி ஆள் ஒருவனை அனுப்பி வைத்தாள்.

ந.

"கனகு, என் அன்பே! கூடத்திலே கட்டிலைப்போடு. படுத்திருந்து படுத்திருந்து முதுகெல்லாம் புண்ணுய்ப் போய்விட்டது. கொஞ்சம் உட்கார்ந்து பார்க்கிறேன். மாடசாமி கெட்டிக்காரன். அவன் மருந்திலே இப்பொழுது இரண்டு நாளாகக் குணம் கண்டிருக்கிறது. பிழைத்துக் கிடந்து மாடசாமிக்குத் தகுந்த மரியாதை செய்யவேண்டும்" என்று உலகன் தன் எண்ணங்களைக் கனகத்தினிடம் சொல்லிக்கொண் டிருந்தான். கனகம் சந்தோஷமாக இருக்க எவ்வளவோ முயன்றும் தன் மனம் எதிர்பாராத சம்பவங்களையும் நடக்க இயலாத கெடுதல்களையும்பற்றிச் சிந்திக்க முந்துவதையும், தன் இதயத்திலே துக்கமே மிகுந்து இசைப்பதையுங்கண்டு நெஞ்சு துடித்துக்கொண் டிருந்தாள்.

"கனகு! என்ன உன் முகத்தில் அவ்வளவு உற்சாகத்தைக் காணும். வாடியிருக்கிறுயே! சொக்கன்பட்டியான் சொன்ன குறி எவ்வளவு சீக்கிரத்தில் பலித்துவிட்டது பார்த்தாயா? இந்தத் தடவைக்குக் கடவுள் கிருபையால் இலேசாகப் போச்சு என்று நினைக்கிறேன். ...அது கிடக்கட்டும். வானத்தைப் பார்த்துச் சந்திரன் என்ன செய்துகொண்டிருக்கிறு னென்று சொல் பார்ப்போம்" என்று உலகன் விளையாடினுன்.

கனகம் ஆகாயத்தை அண்ணுந்து பார்த்து, "சந்திரனு? ஏன், நீங்கள் நோயால் மெலிந்து கஷ்டப்பட்டிருக்கவும், அவன் தன் காதல்—தாரகைகள் கண் சிமிட்டிப் புன்னகை பூத்துச் சூழ்ந்து நிற்க உல்லாசமாகச் சிரித்து விளையாடிக்கொண் டிருக்கிறுன். அவனுக்கென்ன கவலை!" என்று கொஞ்சினுள்.

கனகத்தின் தெய்வ மழலை அந்த நிலவிரவின் நிசப்தத்திலே எழுந்து ஒலித்து அடங்கிப்போகு முன்னரே, வாசற்பக்கம் ஏதோ பெரிய இரைச்சல் கேட்டது. "பாவி மச்சுவீட்டுக்காரன் படுமோசம் செய்துவிட்டான்" என்ற வார்த்தைகள் திரும்பத் திரும்பக் கேட்டன. கனகம் திக்கென்றடைக்கும் நெஞ்சுடன் கட்டிலில் உட்கார்ந்திருந்த தன் உலகனை விழுந்து கட்டிக்கொண்டாள். அடுத்தவிநாடியில் மாயாண்டியாபிள்ளை கூடத்திலே திடும்-பிரவேசம் செய்து "இதோ பார் படுபாவி பண்ணின மோசத்தை!" என்று கூவிக்கொண்டு தன் மகன்முன் ஓலைச்சுருள் ஒன்றைக் கடுங் கோபத்துடன் விட்டெறிந்தார். அத்தைக் கிழவியும், "இப்படியும் செய்வார்களா சண்டாளர்கள்! அப்பொழுதே சொன்னேனே, சாதகம் பார்க்காமல் கலியாணம் செய்யப்படாதென்

ஏ. யாராவது கேட்டீர்களா? விளங்குவார்களா, பழிகாரர்கள்?" என்று ஆசீர்வாதம் வழங்கிக்கொண்டு வந்தாள்.

உலகன் ஒன்றும் விளங்காமல் திகைத்துப்போய் மஞ்சள் தடவியிருந்த அந்த ஓலைச்சுருளைப் பிரித்துப் பார்த்து அது கனகத்தின் சாதகக் குறிப்பு என்று கண்டுகொண்டான். கலியாண காலத்திலே தன் மாமன் அருணாசலம் பிள்ளை கனகத்துக்குச் சாதகமே குறிக்கப்படவில்லையென்று ஒரே அடியாக மறைத்துவிட்ட காரணம் விளங்காமல் ஐயங்கொண்டு உலகன் தன் தகப்பன் முகத்தைப் பார்க்க, அவர் "அந்தக் கழுதை பிறந்த ஆண்டைப் பார். அது உனக்கு இரண்டு வயதுக்கு மூத்ததல்லவோ? இந்த மாதிரி வயதுக்கு மூத்த பெண்ணை விவாகம் செய்வது நம் சாதிக்கு அடுக்குமோ?... என்னடா, மண் ஆந்தைபோல விழிக்கிறாய்? அந்த வெட்கங்கெட்ட சனியனைத் தள்ளிப்போகச் சொல்லடா" என்று கரைமீறி எழுந்த தன் கொடுஞ்சினத்தை வெளியிட்டார். கனகம் உச்சிமீது வானிடிந்து விழுந்தாற்போல நடுநடுங்கித் தன் புருஷனை விட்டு விட்டு உணர்வற்றுச் செயலற்றுச் சித்திரத்தெழுதிய துக்கதேவதைபோல் நின்றுகொண்டிருந்தாள்.

இரவு முழுதும் மாயாண்டியா பிள்ளையும் அவர் சகோதரிக் கிழவியும் செய்த ஆர்ப்பாட்டமும் தாதன் குறிச்சியாருக்கு வழங்கிய வசைமொழி—ஆசிவாழ்த்தும் உலகன் மனத்தைக் கலக்கி அவன் புத்தியைக் குழப்பி விட்டன. உலகனுடைய படிப்போ திண்ணைப்பள்ளிக்கூடத்திலே அரிச்சுவடியோடு நின்றுபோய் விட்டது.

தம் ஒரே மகன்—தாயில்லாக் குழந்தை—செல்வச் சீராளன் தேக சிரமப்பட்டுப் படித்து என்ன ஆகவேண்டுமென்று தம் உடன்பிறந்தாள் ஒதி வந்ததை உறுதிமொழியாகக்கொண்டு மாயாண்டியாபிள்ளை தம் மகன் படிப்பை ஆரம்பத்திலேயே நிறுத்திவிட்டார். கிறல் கையெழுத்தென்று சொல்ல லஜ்ஜைப்பட்டு உலகன் தன் சொந்த முயற்சியினால் கையெழுத்து மட்டும் செவ்வனேபோடக் கற்றிருந்தான். மாயாண்டியாபிள்ளை வீட்டிலோ எப்பொழுதும் குறிகாரன், உடுக்கை தட்டி, ஜோஸ்யன், மாந்திரீகன் முதலிய உத்தமர்களின் கூட்டமாகவே இருக்கும். மாயாண்டியாபிள்ளையும் ஜோதிஷத்திலே தாம் கரைகண்டுவிட்டதாக எண்ணி அடிக்கடி பெருமிதங் கொள்வதுண்டு. 'சோசியம் மாயாண்டிப்பிள்ளை' என்று அவர் பெருமையுடன் கைச்சாத்துச் செய்வது வழக்கம். இந்தக் கூட்டத்தினிடையே வளர்ந்த குழந்தை உலகனுக்கும் ஜோஸ்யத்திலும் குறியிலும் அதிகம் கிறுக்கு.

ஒருமூலையிலேமனமுடைந்து தேம்பித்தேம்பி அழுதுகொண்டிருந்த கனகத்தை ஒருவரும் கவனிக்கவேயில்லை. ஆளனுப்பப்பட்டுச் சொக்கன்பட்டிக் குறிகாரன், பட்டைபட்டையாகத் திருநீறணிந்து, கையிலே மந்திரக்கோல் ஏந்தி, பை நிறையச் சோகிகளைச் சொரிந்துகட்டிக்கொண்டு வந்து சேர்ந்தான். பொருத்தமில்லாத பெண்ணை மணந்த பாவத்துக்குப் பரிகாரமே இல்லையென்றும், தவறுதலாக நடந்துவிட்டதனால் ஏதோ பார்க்கலாமென்றும் அவன் நீண்ட ஆலோசனையின் பேரில் கூறிமுடித்தான்.



ஏழை உலகனுக்கு மனம் இடிந்து போய்விட்டது. கனகமும் தன் பெற்றோருடன் சேர்ந்துகொண்டே இந்தக் கேடு சூழ்ந்திருக்கவேண்டுமென்று எண்ணலானான். "ஆகா எவ்வளவு வஞ்சகம் குடிகொண்ட நெஞ்சுடன் இந்தப் பெண் நம்மை இதுவரை ஏமாற்றி வந்திருக்கிறாள்! களங்கம் சிறிதுமற்ற குழந்தை மனம் என்று எண்ணியிருந்தேனே. "பெண்ணாகி வந்ததொரு மாயா பிசாசம்" என்று பாடிக்கொண்டு பிச்சைக்கு வந்த பண்டாரத்தை ஏளனம் செய்த எனக்கு இத்தனையும் வேண்டும்" என்று ஏங்கினான். கனகமோ—? உலகனுக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பு அறவே ஒழிந்துவிட்டதாகவே மாயாண்டியா பிள்ளையும் அவர் தமக்கையாரும் எண்ணிவிட்டனர்.

உலகனுக்குச் சிறிது குணங்கண்டு வந்தவியாதி, மறக்கவொண்ணாத சம்பவங்கள் நடந்த அந்த நிலவிரவு முதல் அதிகரித்து வந்தது. வைத்தியன் மாடசாமி மருந்துச் 'செல்ல'த்தைத் திறந்து மாத்திரைகளும், பொடிகளும், கஷாயங்களுமாகக் கொடுத்துக்கொண்டேவந்தான். நோயாளிக்கு வியாதி அதிகமாக அதிகமாக மாயாண்டியாபிள்ளையின்வசைமொழிகளும் அவர் சகோதரியின் கூக்குரலும் இன்னும் அதிகமாக முழங்கத் தலைப்பட்டன. உலகனுக்கு ஏக்கமும் மனக்கொதிப்பும் ஆற்றாமையும் மிகுதியாகி உயிர்வாழவேண்டுமென்ற ஆசையே வேரற்றுப் போய்விட்டது. மனோவியாதிக்கு மருந்தேது? பாவம் மாடசாமிதான் என்னசெய்யக்கூடும்?

உலகநாதன் அறிவு கலங்கி அடிக்கடி புலம்ப ஆரம்பித்துவிட்டான். ஒருநாள் உலகன், கண்ணீர் பெருகும் கன்னங்களுடன் உயிர்ப்பிணம்போல் தன் பக்கத்திலே சென்றுகொண்டிருந்த கனகத்தைக் கூவி அழைத்து "அடி சண்டாளி! என்ன காரியம் செய்துவிட்டாய் உன் அப்பனுடன் சேர்ந்துகொண்டு" என்று பற்களை ஓசைப்படக் கடித்துச்சொல்லி அவளை ஏற இறங்க விழித்துப் பார்த்தான். கனகம் பயத்தால் விறைத்துப்போய் இன்ன செய்வதென்று தோன்றாமல் சிறிதுநேரம் திகைத்து நின்றுவிட்டு அழுதுகொண்டே அப்புறம் சென்றுவிட்டாள்.

நாளுக்கு நாள் உலகனுக்கு அறிவு அழிந்து வந்தது. மாயாண்டியா பிள்ளை சொக்கன்பட்டிக்காரனுடைய மந்திரத்திலே மயங்கி மதியிழந்து வைத்தியத்தில் குணமில்லையென்று சொல்லி மாடசாமிப் பண்டிதனைப் பணங்கொடுத்தகற்றி விட்டார்.

உலகனுடைய புலப்பத்திலே பெரும்பாகம் "அடி சண்டாளி! இப்படி நம்பிக்கை மோசம் செய்யலாமா?" என்ற வார்த்தைகளாகவே இருந்து வந்தது. பின்னர் ஒரு நாள் பகல் முழுதும் "கனகம், கனகம்" என்று எழுத்தெழுத்தாக உச்சரித்துக் கொண்டு, உலகன் படுக்கையிலே கிடந்த இடத்தில் கிடவாமல் உருண்டுகொண்டிருந்தான். கனகமும் தன்னை வெகு கஷ்டத்துடன் சிறிது திடப்படுத்திக்கொண்டு, தன் மாமனும் அத்தையும் இல்லாதிருந்த அற்றம் பார்த்து உலகன் பக்கத்திலே சென்று, "அன்பே! 'கனகம் கனகம்' என்கிறீர்களே இதோ இருக்கிறேனே பாவி!" என்று அவன் கையைப் பிடித்துக்கொண்டு நெஞ்சம் குமுறிக் கண்ணீர் வடிக்க, உலகன் புலப்பத்தை நிறுத்தி அவளைப் பார்த்து வெறிக்க வெறிக்க

விழித்தான். கனகம் அழுதுகொண்டே "உங்களாணை சொல்லுகிறேன். அந்தச்சண்டாளப் பாதகர்கள் செய்த பம்மோசம் எனக்குத் தெரியவே தெரியாதே! தெரிந்திருந்தால், நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகமா? இதற்குள் சொல்லியிருக்க மாட்டேனா?" என்று கதறினாள். "என்ன சொல்லுகிறாள்? கூட இருந்து குடியைக்கெடுத்து விட்டாளே பாதகி!" என்று உலகன் மறுபடி புலம்ப ஆரம்பித்துவிட்டான். "சண்டாளி......பாவி" என்று கொஞ்ச நேரமாகச் சிறு குரலில் முனகிக்கொண்டிருந்தவன் திடீரென்று, "சண்டாளீ இ இ இ......" என்று தொண்டை எட்டும் மட்டும் கத்தவே மாயாண்டியாபிள்ளையும் அத்தைக் கிழவியும் பதைபதைத்து ஓடி வந்தார்கள். ஆகா என்ன ஆச்சரியம்! கனகமும் "சண்டாளப் பாவி கூட இருந்து நம்பிக்கை மோசம் செய்துவிட்டார்களே!" என்று தனக்குத்தானே முணுமுணுத்துக்கொண்டு உயரப் பார்த்துச் சிரித்து நின்று கொண்டிருந்தாள் ...... கனகத்துக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

மாயாண்டியா பிள்ளையும் அத்தைக் கிழவியும் திகைத்துப்போய் ஏக காலத்தில் "உலகு, உலகு" என்று கூவ, உலகன் கண்களைப் பயங்கரமாக உருட்டி விழித்து, "எங்கே சண்டாளி? ...... இல்லை, இல்லை. அவள் நிரபராதி. அவள்தான் என்மேல் ஆணைபிட்டுச் சொன்னாளே ...... சண்டாளப் பாதகி எங்கே?" என்று பிதற்றிக் கொண்டே கட்டிலிலிருந்து உருண்டு பொத்தென்று கீழே விழுந்து விட்டான். மாயாண்டியா பிள்ளையும் அவர் தமக்கையாருமாகச் சேர்ந்து உலகனை மெதுவாகத் தூக்கிக் கட்டிலில் விட, உலகன் இறந்து கிடப்பதைக் கண்டு அழுது புரண்டு கதறினார்கள்.

## பத்திரிகை ஆராய்ச்சி.

சிகாகோ 'இண்டெர் நாஷனல் ஹார்வஸ்ட் கம்பெனி' விவசாய அபிவிருத்தி இலாகாவைச் சேர்ந்த திரு. ரால்ப் ஏ. ஹேயின் என்பார் பசுவைப் பற்றி ஒரு சிறுநூல் இயற்றியுள்ளார். அவர் பசுவைப்பற்றி வெளியிட்டுள்ள முகமனுரைகளெல்லாம் பண்டை இந்திய இலக்கியங்களின் அபிப்பிராயங்களை எதிரொலி செய்வனவாகவேயிருக்கின்றன. பசுவை மக்களின் வளர்ப்புத் தாய் என்று ஆசிரியர் அழைக்கிறார். அவரது கொள்கைகளில் சில வருமாறு:—

மக்கட் பிறப்பின் பெருந்துணைகளிலொன்று பசுவேயாகும். பசுவின்றி விசேட நாகரிகமுற்ற பெருமக்கள் உலகிலில்லை. மக்களுக்கு இன்றியமையாத சிறந்த நல்லுணவு தருவது பசுவன்றோ? புல்பூண்டுகளிலிருந்து நமது உடலுக்குவளமும்வலிமையும்அளிக்கும் பாலமிழ்தம் பசுவின் கொடையன்றோ? கன்றுக்குப் பாலூட்டுவதோடு, மனிதர்க்கும் ஊட்டும்படி, ஏராளமான பாலைப் பொழிந்து தருவது பசுவன்றோ? பசுவின்றி விவசாயத் துறை வளமுறுவதில்லை; மக்கள் மாண்புறுவதில்லை. எங்கே பசு பரிபாலிக்கப் பெறுகின்றதோ, அங்கே நாகரிக லட்சுமி நடம்புரிகின்றாள்; பூமிதேவி அருள் சுரக்கின்றாள்; இல்லங்கள் இன்ப நிலையமாகின்றன; கடன்கொண்ட நெஞ்சமும் கலக்கமின்றி வாழ்கின்றது. உண்மையாக நமது பாக்கிய லட்சுமியாகிய அன்னையே பசு வடிவமெய்தி நம் மக்களிடை வதிகின்றாள். நமது செல்வச் சிறுவர் சிறுமியர்க்கு உடலில்சதைப்பற்றும் என்பும் வளரவேண்டுமெனின், பசுவின் பாலும் வெண்ணெயும் இன்றியமையாதன.

* * *

'காங்ரெகேஷனல் ரிவ்யூ' என்னும் பத்திரிகையில் ஆங்கில நாட்டின் முதல் மந்திரியாயிருந்த திரு. லாயிட் ஜார்ஜ் என்பார் "ஒரு நாட்டின் உண்மைச் செல்வம் எது?" என்பதைப்பற்றி ஆராய்கின்றார். செல்வப்பொருள் பொருளன்று; பொருட் செல்வத்தினும் சிறந்த பெருஞ் செல்வம் உயர்தர எண்ணங்களும் லட்சியங்களுமே யாகும் என்றும், இத்தகைய கொள்கைகளைப் பொதிந்து வைத்திருக்கும் பொக்கிஷம் காவியங்களும் அறிவு நூல்களுமேயாகும் என்றும் லாயிட் ஜார்ஜ் கூறியுள்ளார். இவர்தம் ஆராய்ச்சியுரையின் சாராம்சம் வருமாறு:—

ரௌஸோவின் அறிவுச்சுடர் ஐரோப்பாவில் காட்டுத்தீபோலப்பரவி, பிரஞ்சு அரசியல் புரட்சியை உண்டுபண்ணிவிட்டது. ஷெல்லியின் கொள்கைகளே கக-வது நூற்றாண்டின் சீர்திருத்தங்களுக்குக் காரணமாயின. கவிகளை மறக்கும் மக்கள், தாங்களே மறக்கப் பெறுவர் என்று ஹஸான் கூறுகிறார். ஒழுக்கமின்றி அழிந்த மக்கள் வரலாறுகளை உலக சரித்திரம் எடுத்துக் காட்டுகின்றது. படாடோபங்களையும் அதிகார ஆடம்பர வைபவங்களையுமே அடிப்படையாகக் கொண்டெழுந்த மகாராஜ்யங்களெல்லாம் மண்ணோடு மண்ணாக மடிந்து போயின. போகமும் செல்வப் பெருக்கும் ரோம ராஜ்யத்தை அழித்துவிட்டன. கிரீசு, பாரசீகம், ஸ்பெயின் முதலான நாடுகளிலும் இதே கதைதான். ஒரு நாட்டின் பெருமை அந்நாட்டு மக்களின் நல்லொழுக்கத்தையே பொறுத்துநிற்கின்றது. மக்கள் அறப்பற்றும் அருளொழுக்கமும் வாய்ந்தவராய், உறுதியும் உழைப்பும் உயர்குணமும் தியாகவுணர்வும் உடையராய் வாழ்வதே வளர்நெறியில் முன்னேற்ற முறுவதாகும். பூமியிலே பிலஞ் சுரக்கும் செல்வம் செல்வமன்று; மக்கள் அகம் சுரக்கும் அறிவும் ஒழுக்கமுமே மெய்த்திருவாகும். வியாபாரப் பெருக்கினும் ஆடம்பரமற்ற நன்னம்பிக்கையே பெரிது. உன்னத லட்சியங்களும் ஒழுக்கநெறியும் போற்றப் பெறும் காலமே நாட்டிற்கு நற்காலமாகும். ஆக்கம் ஒழுக்கத்தைப் பின்பற்றுகின்றது; ஒழுக்கத்திற்கு முற்படுவதன்று.

* * *

லஜபதிராய் பர்மாவில் 'இந்துசமூக முன்னேற்ற'த்தைப்பற்றிப் பேசுகையில் சமய அறிவைப் பரப்பும் சாதனங்களைப் பின்வருமாறு குறிப்பிட்டார்.

இராமாயணமும் மகாபாரதமும் இந்துக்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஞானத்தையும் அளிக்கத் தக்கவை. இராமபிரானது வீரத்திருக்கதையைக் கற்பதாலும் கேட்பதாலும் ஞானம் பெறாத எந்த இந்துவாவது உண்டா? இத்தகைய நூல்களைப் படிப்பதால் இந்துக்கள் தங்கள் முற்கால மகிமைகளை அறிவதுடன், பிற்கால முன்னேற்றத்திற்குப் புதிய ஆற்றலையும் பெறுகின்றனர். இப்புத்தகங்களே நமது பண்டைப் பெருமையின் சாசனம்; இவையே எதிர்கால வளர்ச்சிக்குரிய வித்து. பர்மாவிலுள்ள இந்துக்களிடையே இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் உபந்யாச வாயிலாகவும் வேறு உபாயங்களாலும் பரப்பல் வேண்டும்.

லஜபதிராயின் அபிப்பிராயம் நன்கு சிந்திக்கத்தக்கது. சமய அறிவைப் பரப்புவதற்கு இதிகாச புராணக்கதைகள் தக்க கருவிகளாகும். ஆனால், ஆராய்ச்சியறிவு பௌராணிகர்க்கு இன்றியமையாதது.

## சதங்கை யொலி.

### இந்தியாவும் பர்மாவும்.

இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் பன்னூற்றாண்டுகளாகத் தொடர்பிருந்து வருகிறது. பண்டைநாளில் இந்தியா "கூவலாமை" போலவாழ்ந்தவரவில்லை. இரங்கோனுக்கு அருகேயிருந்த உக்கலா என்ற ஊரிலிருந்து தபாசி பல்லுகா என்ற இரண்டு வர்த்தகர்கள் ஐந்நூறு காட்டு வண்டிகளில் வியாபாரச் சாமான்கள் ஏற்றிக்கொண்டு இந்தியாவிற்கு வந்து புத்தரைச் சந்தித்தனராம். அவருக்குத் தேனூட்டிய பிறகு, நினைவுக் குறியாக அவரது சிகையிலிருந்து எட்டு ரோமங்கள் பெற்று மீண்டனராம். அந்த ரோமங்களே பகோடாவில் நிலையிடப்பெற்றனவாம். அந்த 'பகோடா' 'சுவேடாகன்' என அழைக்கப் பெறுகின்றது. கங்காநதி தீரத்தில் வாழ்ந்த இந்துக்கள் பண்டைநாளில் பர்மாவில் குடியேறி, புத்தமதத்தைப் போதித்தனர்; மதபோதனையோடு பர்மியர்க்கு நூல் நூற்பதையும் ஆடை செய்வதையும் கற்பித்தனர். கிருஷ்ணா கோதாவரி நதிகளுக்கு அருகே வசித்த இந்துமக்களும் நீண்டகாலத்திற்கு முன்னரே கடல் கடந்து பர்மா சென்று ஐராவதி நதி தீரங்களில் குடியேறினர். புத்தசரித்திரங்களில் பர்மா 'பொன்னுடு' (சொர்ண பூமி) என வழங்கப்பெறுகின்றது. சுமார் மூவாயிரம் ஆண்டுகட்கு முன் குடியேறிய இந்தியரால் பர்மாவின் அரசியல்முறை சீர்திருந்தலாயிற்று. பர்மாவில் நூற்றுக்கணக்கான ஆண்டுகட்குமுன் வசித்த 'பௌனு' ஜாதி இந்துக்கள் பர்மியராகி விட்டனர். எனினும் இவர்கள் இன்னும் பூணூல் அணிந்திருக்கின்றனர். இந்துக்களின் ஒழுக்க வழக்கங்களை விசேடமாக விவாக காலங்களில் அனுஷ்டித்து வருகிறார்கள். இப்பொழுது பர்மாவிலுள்ள இந்து மக்களில் பெரும்பாலார் தென்னிந்தியரேயாவர்.

### குழந்தைகளின் பயிற்சி.

"நிலத்தின் தன்மை பயிர்க்குளதாகுமாம், சீசத்தொண்டும் மடமையும் கொண்டதாய், தலத்தில்மாண்புயர் மக்களைப்பெற்றிடல், சாலவே அரிதாவதோர் செய்தியாம்" என்று பாரதியார் பாடுகிறார். நிலத்தின் தன்மைக்கிணங்க பயிர் உண்டாகின்றது. தாயின் தன்மை சேயிடம் பிரதிபலிக்கின்றது. அறியாமையில் ஆழ்ந்து கிடக்கும் அன்னை, தன் தீம்பாலோடு மூடத்தனத்தையும் பேடித்தனத்தையுமே மக்களுக்கு ஊட்டுகின்றாள். பண்டைத் தமிழ் நூல்களில் வீரத்தாய்மார்களைப்பற்றி வாசிக்கிறோம்; நல்லிசைப் புலமை மெல்லியலார்களைக் குறித்து வாசிக்கிறோம். பண்டைத் தமிழகத்தை உருவாக்கியவர்கள் தமிழகத் தாய்மார்களேயாவர். அவ்வண்ணமே இன்று தமிழகம் வலிகுன்றி, வீரம்குன்றி, அறிவுகுன்றி, வளர்ச்சி குன்றியிருப்பதற்கும் நமது பெண் மக்களின் நிலையே ஒரு பெருங் காரணமாகும். குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்போர் முதலாவது குழந்தைகளையே நன்றாகக் கற்க வேண்டும். குழந்தைகளைக் குறித்து எத்தனை கவிகள் எவ்வளவு அழகாகப் பாடியிருக்கிறார்கள் என்று நாம் வியந்து கூறுகிறோம். ஆனால்குழந்தையே, உருவெடுத்து வரும் ஓர் கவிதை என்பதை நாம் மறந்து விடுகிறோம். குழந்தைகளிடத்தில் எங்குமுள்ள தெய்வ ஒளி, விசேஷமாகவிளங்குகின்றதென்பது பெரியோர் கொள்கை. இதனாலன்றோ முருகன்—கண்ணன் என்னும் இந்தியாவின் இணையிலா அழகுத் தெய்வங்களிரண்டும் குழந்தை வீரர்களாகக் காட்சியளிக்கின்றன. "இளரொளி வானகம்" —அதாவது விளங்குகின்ற ஒளி மயமான பரமபதம்—என்று பரலோக ராஜ்யத்தை வருணிக்கும் நம்மாழ்வார், "இளரொளி இளமை" யென்று இளமைப் பருவத்தை இனிது வருணிக்கின்றார். இதனால் இளைஞர் உள்ளம் கடவுள் தன்மை வாய்ந்ததென்பது நம்மாழ்வார் கொள்கை. கர்த்தாது பரலோக ராஜ்யத்தை ஒத்திருப்பது குழந்தையுள்ளம் என்பது கிறிஸ்துவின் கொள்கையுமாகும்.

உ

சிவமயம்.

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.


| சதங்கை ச. | காரைக்குடி, குரோதனுஸு மாசிமீ | மணி கக. |
| --- | --- | --- |


## வணக்கம்.

### பரசிவ வணக்கம்.

கருணைநிறைந் தகம்புறமுந் துளும்பி வழிந்துயிர்க் கெல்லாங் களைகணுகித்
தெருள்நிறைந் தஇன்பநிலை வளர்க்கின்ற கண்ணுடையோய்! சிதையா ஞானப்
பொருள்நிறைந்த மறையமுதம் பொழிகின்ற மலர்வாயோய்! பொய்யனேன் தன்
மருள்நிறைந்த மனக்கருங்கற் பாறையுமுட் கசிந்துருக்கும் வடிவத் தோயே!

வன்புகலந் தறியாதமனத் தோர்தங்கள் மனங்கலந்து மதிகலந்து வயங்காநின்ற
என்புகலந் தூன்கலந்து புலன்களோடு மிந்திரியமவை கலந்துள் இயங்குகின்ற
அன்புகலந் தறிவுகலந் துயிரைம்பூத ஆன்மாவுங் கலந்துகலந் தண்ணித்தூறி
இன்புகலந் தருள்கலந்து துளும்பிப்பொங்கி யெழுங்கருணைப் பெருக்காறே!
[யின்பத்தேவே!

அருளருவி வழிந்துவழிந் தொழுகவோங்கும்
ஆனந்தத் தனிமலையே அமலவேதப்
பொருளளவு நிறைந்தவற்றின் மேலுமோங்கிப்
பொலிகின்ற பரம்பொருளே! பூர்ணமாகி
இருளறுசிற் பிரகாச மயமாஞ்சுத்த
வேதாந்தப் பெருவெளிக்குள் இருந்தவாழ்வே!
தெருளளவு முளமுழுதுங் கலந்துகொண்டு
தித்திக்குஞ் செழுந்தேனே! தேவதேவே!

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம்வீசத்
தடம்பொழிற்பூ மணம்வீசத் தென்றல்வீச
வெண்ணமுதப் பளிக்குநிலா முற்றத்தே
இன்னிசை வீசத்தண்பனிநீ ரெடுத்துவீச,
பெண்ணமுத மனையவர்விண் ணமுதமூட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிறப்பட்டோடக்
கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்துமின்பம்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுள்தேவே!

—இராமலிங்க சுவாமிகள்.

# சீதையின் காதல்.

ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் பி. ஏ., பி. எல்.

கல்வியிற் பெரியவர் கம்பர் என்னும், கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும், என்றும் அந்நல்லியற் கவிஞரது பெருமை இன்னும் நமது நாட்டில் வழங்குகின்றது. இப்புலவர் பெருமான் வடமொழியில் வான்மீக முனிவர் இயற்றிய இராமகதையைத் தமிழுலகிற்குத் தந்தாரெனினும் அப்பெருங் கதையினை, தமிழ் நாட்டின் செம்மை சான்ற நாகரிகத்துக் கேற்றவாறு மாற்றியும் சேர்த்தும் அதனைத் தமிழ்க் கதையாகவே கற்றோர் உள்ளம் களிக்குமாறு எழுதிப் போந்தார்.

தமிழ் மொழியின் இனிமையும் தமிழ் மக்களது திருந்திய மனப்பான்மையும் இன்பப் பாலால் இனிதறியப்படுமென்றும் அதன் அழகு ஆயுந்தோறும் தொறும் அதிகரிக்குமென்றும் அறிஞர் கருதுகின்றார்கள். இத்தகைய அகப்பொருள் அழகுகள் இலங்கும் வண்ணம் கம்பர்பெருமான் சீதையின் காதலைச் செம்மையாய் அமைத்தார். மிதிலைமாநகரத்தில் தவமுனியோடும் தம்பியோடும் போந்த இராமன் சீதையாய திருமகளைக் கன்னிமாடத்தில் எதிர்ப்படுமாறு கம்பர் அமைத்துள்ள காட்சி, வான்மீகரது நூலில் அமையாத அகப்பொருள் நுணுக்கமாகும். குணத்தாலும் நலத்தாலும் அறிவாலும் அரும்பொருளாலும் ஒப்புயர்வற்ற தலைமகனும் தலைமகளும், ஊழ்வினைப் பயனால் ஒருவரையொருவர் எதிர்ப்பட்டுக் கண்களால் காதலை ஏற்று உள்ளங் கலத்தலே, தமிழ்மக்களது மணமுறையென்று அகப்பொருள் நூல்கள் அழகுறக் கூறுகின்றன. இந்நயத்தை நாயனார்

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் [வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.

என்று இனிதாக அமைத்தார். இதனைத் தழுவியே கம்பரும்,

எண்ணரு நலத்தினா ளினைய நின்றுழி,
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றை [யொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்.

என்று சீதையின் காதற் பிறப்பைச் சீர்பெற அமைத்தார். நலத்தாலும் குணத்தாலும் மேம்பட்ட தலைமகனும் தலைமகளும் ஒருவரையொருவர் எதிர்நோக்கினார்கள் என்றும், அவ்வாறு நோக்குங்கால் ஒருவர் கண்கள் மற்றொருவர் கண்களை ஆர்வத்தோடு கவ்வி உண்டன என்றும், அந்நோக்கின் பயனாக இருவர் உணர்வும் ஒன்றாயிற் றென்றும், கவி அமைத்திருக்கும் சொல்லழகும் பொருளழகும் போற்றுதற்குரியவாகும். அந்நிலையில் அன்பெனும் பாசம் இருவர் உளத்தையும் பற்றி யீர்க்க, தலைமகன் தலைமகள் உள்ளத்திலும் தலைமகள் தலைமகன் உள்ளத்திலும் மாறிப் புகுந்தார்கள். இவ்வாறு வீரனை மனச்சிறையில் அடைத்த மங்கை மையலால் மயங்கி நிற்ப, அவ்வண்ணல் வீதிவாய்ச் சென்று மறைந்தான்.

இக்காட்சியைக் கண்ட தலைமகள் தான்கண்ட தலைவன், தேவனோ அன்றிக் காமனோ என்று ஐயுற்று, பின்பு தான் கண்ட காட்சியை மீளவும் நினைந்து அவன் அரசிளங் குமரனே யாதல் வேண்டும் என்று தெளிகின்றாள். அழகால் தான் கண்ட தலைவன் மாரனையொப்பவனேயாயினும் அவன் தடக்கையில் தாங்கிய வில், கரும்பு வில்லன்றிக் கணைவில்லே யாதலால், அவன் காமனல்லனென்று தேருகின்றாள். தாமரை யிதழ்போன்ற தன் தலைவனது கண்கள் இமைக்கக் கண்டலால் அவன் இமையா நாட்டமுடைய தேவருள் ஒருவனல்லன் என்று தெளிகின்றாள். பின்னும் அவன் மார்பிலணிந்திருந்த நூலாலும் தோளில் தாங்கி நின்ற வில்லாலும் அரசகன்னிக்கேற்ற அரசிளங் குமரனே அவன் என்று துணிந்தாள். இதனை அகப்பொருள் நூலோர் ஐயம், தெளிவு என்னும் துறைகளில் அமைப்பர். இத்தன்மை, இறைநலம் சான்ற காதலரிடத்தும் நிகழுமென்னும் உண்மை, பரவையார் சுந்தரரைக் கண்டபோது சொல்லும் சொற்களால் இனிதுணரப்படும். தான் கண்ட தலைவனை முருகனோ என்றும் மாரனோ என்றும் விஞ்சையனோ என்றும் பஞ்சின் மெல்லடியாள் பாகனது பக்தனோ என்றும் பரவையார் ஐயுற்றுநின்ற நிலையை

முன்னே வந்தெதிர் தோன்றும்
முருகனோ, முருகொளியால்
தன்னேரில் மாரனோ,
தார்மார்பில் விஞ்சையனோ
மின்னேர் செஞ்சடை யண்ணல்
மெய்யருள் பெற்றுடையவனோ,
என்னே என்மனம் திரித்த
இவன்யாரோவென நினைந்தார்.

என்று பெரியபுராண ஆசிரியர் அழகாக அமைத்தருளினார். இதனால் கன்னிநல் காதலை ஏற்று அக்காதலால் மயங்கித் தளர்வதும் தவம் புரிவோர்கட்கும் தகுமென்னும் தன்மை இனிது போதருகின்றது.

இவ்வாறு காதல்கொண்ட சீதை, தான்கண்ட தலைவனது எழிலுருவத்தையே தன் உள்ளத்தில் அழகொழுக எழுதிப்பார்த்து மையல் நோயால் நையலுற்றாள். "காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலைமலரும்" காதல் நோயால் நலிவுற்றாள். அந்தி மாலையில் ஆகாயமெங்கும் தன் அண்ணலது அழகிய நிறமே நிரம்பி நின்றது. அதனைக்கண்டு வருந்திய காதலி,

ஆலமுலகிற் பரந்ததுவோ
ஆழிகிளர்ந்ததோ அவர்தம்
நீலநிறத்தை யெல்லோரும்
நினைக்கஅதுவாய் நிரம்பியதோ
காலனிறத்தை யஞ்சனத்தில்
கலந்துகுழைத்துக் காயத்தின்
மேலுநிலத்து மெழுகியதோ
விளக்குமிருளாய் விளைந்ததுவே.

என்று எண்ணி எண்ணி ஏங்கினாள். அந்நிலையில் தன் காதலனைப் பிரிந்து வருந்திய அன்றில் பேடை தன் அன்பனை அழைக்கும் காதற்குரல் ஆகாயத்தில் எழுந்தது. அதைக் கேட்ட சீதை, காதல் கிளரப்பெற்று "அவ்வன்றில் பேடையை நோக்கி அந்தோ! அன்றிலே, நீ என்னை வருத்தும் மாரனது தூதோ, அன்றி நான் செய்த தீவினையோ" என்று மனமுருகிக் கூறுகின்றாள். சிறிதும் மனமிரக்கமில்லாத மாரன், நான் யாதொரு துணையுமற்ற ஏழையென்றும் எண்ணாது பெண்ணொன்று மிரங்காது என்மீது வில்விற் கணைதொடுக்கும் வீரனாயிருக்கின்றான்; பகலில் போர் செய்தல் தனது ஆண்மைக்கு அடாது என்று கருதி இருளில் போர் செய்கின்றான். இருளிலும் எதிர் நின்று போர் செய்தால் அறப்போராய் விடு

மென்று அஞ்சி மறைந்து நின்று தன் மாயக்கணைகளை விடுகின்றான். அத்தகைய வீரனிடம் நீயும் மாயை பயின்றனையோ என்று வருந்திக் கூறும் மொழிகள், அவள் காதலின் கனிவை இனிதுணர்த்துகின்றன.

தலைமகளாய சீதை, வீதிவாய்ச் சென்ற வீரனை நோக்கிய நோக்கை, கம்பர் 'பருகிய நோக்' கென்று பாராட்டியிருக்கும் பான்மை போற்றுதற்குரியதாகும். உருவின் மிக்கதோர் உடம்பினைப்பெற்று ஓவியத்தில் எழுதவொண்ணு உருவத்தோடு விளங்கிய வீரனது மெய்நலம் முழுமையும் சீதையின் கண்கள் வழியாக உளத்திற் சென்று உறைவதாயிற்று. தன் காதலன் கண்வழி நுழையும் கள்வனுயினன். தன்மாசற்றமனத்தைப்பாசத்தாற் பிணித்த அன்பனது திருமேனியின் அழகை நினைந்துநினைந்து நெஞ்சம் குழைந்தாள். அவனது இந்திரநீலம்போன்று இருண்ட குஞ்சியையும், மலைபோன்ற தோளையும், மதிபோன்ற முகத்தையும், அகன்ற மார்பையும், தாழ்ந்த கரங்களையும் நினைந்தாள். இவ்வாறு தன் காதலனது நலங்களை நினைந்து நினைந்து இரவும் பகலும் உறக்கமற்று மேனி வாடி வருந்துவளாயினள். கண்வழியாகப் புகுந்த காதல்நோய், பாலுறு பிரைபோல் உடலெங்கும் பரந்து மெய்யையையும் மனத்தையும் வெதுப்பியது. தண்மையை அளிக்கும் ஒள்ளிய மதியும் உடம்பினை எரிக்கும் கடு நெருப்பாகத் தோன்றியது. இருட் பிழம்பை நீக்கி மலர்க்கதிர் பரப்பிவந்த மதியினை நோக்கி, கருநெருப்பின் இடையே எழுந்த வெண்ணெருப்பே என்று சீதை கூறும் சொற்களில் காதலின் வெம்மை நன்கு காணப்படுகின்றது. இரவு முழுவதும் உறக்கமற்று, பொழுது புலர்ந்ததும் தன் மாளிகையின் அருகேயிருந்த தாமரைத் தடாகத்தின் மருங்கே சென்றாள். அத்தடாகம் பசுமையான தாமரையிலைகளாலும் செம்மையான தாமரை மலர்களாலும் நிறைந்து நிற்பதை நோக்கினாள். கதிரவன் ஒளியால் இலங்கித் தோன்றிய தாமரை யிலைகள் தன் காதலனது கருமையான திருமேனியைக்காட்டி ஒருவாறு மனவாட்டம் தீர்த்தன. ஆதவன் வரவால் மலர்ந்த தாமரை முகைகள், தன் காதலனது செவ்விய கண்ணின் உள்நிறம் காட்டி ஒளிர்ந்தன. அந்நிலையில் சீதை அம்மலர்களையும் இலைகளையும் பார்த்து

> பெண்ணிவணுற் றதென்னும்
> பெருமையா லருமையான
> வண்ணமுமிலைகளாலே
> காட்டலால் வாட்டந்தீர்ந்தேன்
> தண்ணறுகமலங்காள்! என்
> தளிர்நிறமுண்ட கண்ணின்
> உண்ணிறங் காட்டி நீரென்
> னுயிர்தர உலோவினீரே.

என்று கூறும் சொற்களில் காதற் சுவை ததும்புகின்றது.

இவ்வாறு சீதை காதலால் வருந்தியிருப்ப, இராமவீரன் மண வில்லை ஒடித்தான் என்னும் மாற்றத்தை தலைமகளிடம் சொல்லுமாறு நீலமாலை என்னும் தோழி ஓடி வந்தாள். வந்தவள் வழக்கம்போல் அடிபணிந்து அடங்கிநில்லாது அந்தமில் உவகையால் ஆடிப்பாடினாள். அக்களிப்பின் காரணத்தை அறியாத சீதை, 'தோழி! இவ்வானந்தக் கூத்தின் காரணம் என்னே?' என்று வினயமாய் வினவினாள். அதற்கு நீலமாலை நேரான மறுமொழி கூறாது நெடுங்கதை கூறத் தொடங்கினாள். நாற்படை



யோடு நானிலமாளும் அரசன் தசரதனென்பான்; அவன் அறிவின் மிக்கவன்; செம்மையாய் உலகம் காக்கும் சீரிய அரசன்; வறியார்க்கு மழைபோலப் பொருள் வழங்கும் வண்மையுடையான்; அவனது அருமைத் திருமகன், மாரனையும் அழகால் வெல்லும் மாண்புடையோன்; வரைபோலும் வலியதோளான்; மால்போலும் ஆற்றலுடையான்; இராமனென்னும் திருப்பெயருடையான்; அவன் முனிவனோடும் தம்பியோடும் இந்நகரடைந்தான்; அரசனைக் கண்டான்; மணவில்லைக் காணும் மனமுடையேன் என்றான்; அரசனும் அதனைக் கொண்டு வருமாறு ஆணை செய்தான்; வில்லும் வந்தது; அதனை வீரன் நாணேற்றினான்; மணவில்லும் ஒருவாறு முறிந்து வீழ்ந்தது என்று தன் நெடுங்கதையை ஒருவாறு கூறி முடித்தாள். இக்கதை நிகழும் காலத்தில் சீதையின் உள்ளம் ஐயத்தால் ஊசலாடத் தொடங்கிற்று. "வில்லை ஒடித்த வீரன் தான் கண்டு காதலித்த அண்ணலோ, அன்றோ" என்று ஐயுற்று நின்ற அவ்வணங்கு நீலமாலை கூறிய குறிகளை மீளவும் நினைந்து

> கோமுனி யுடன்வரு
> கொண்டலென்ற பின்,
> தாமரைக் கண்ணினன்
> என்ற தன்மையால்
> ஆமவனே கொல் என்
> றையம் நீங்கினாள்.

என்று கம்பர் கூறும் சொற்களில் காதல் மணம் கமழ்கின்றது. பின்னும் ஒரு சிறிது ஐயுற்று என் தோழி சொல்லிய அடையாளங்களால் நான் கண்ட வீரனேதான் அவன்; அல்லனாயின் நான் மற்றொருவனுக்கு மனையாளாய் அமைந்து உயிர்வாழ ஒரு சிறிதும் ஒருப்படேன்; அவ்விதி வருமாயின் என் உயிரை விடுவேன் என்று சீதை கூறும் சொற்களில் காதல் நயம் கனிந்து விளங்குகின்றது.

> சொல்லிய குறியின்த் தோன்றலேயவன்
> அல்லனேலிறப்பனென்றகத்துன்னினாள்

இத்தகைய ஐயம் சீதையின் மனத்தில் தன் காதலனைக் கண்ணெதிரே காணுமளவும் நீங்காதிருந்ததென்னும் நீர்மையைக் கம்பர் வெகு நயமாகக் காட்டியுள்ளார். மணமகளாய சீதைக்கு ஆடை அணிகள் புனையப் போந்த அழகிய மங்கையர், அவள் காதில் குழையென்னும் அணியைப் பூட்டியபோது அது அங்குமிங்கும் ஆடிய நிலையை, சீதையின் மனநிலைக்கு ஒப்பாக, கவி கூறுகின்றார். அக்குழை ஊசலாடியது போலவே சீதையின் உளமும் ஐயத்தால் ஊசலாடிற்றென்னும் உண்மையை

> வெள்ளத்தின் சடிலத்தான்றன்
> வெஞ்சிலையிறுத்த வீரன்
> தள்ளத்தன் னுவிசோரத்
> தனிப்பெரும் பெண்மைதன்னை
> அள்ளிக்கொண் டகன்றகாளை
> அல்லன்கொல் ஆங்கொல்என்பாள்
> உள்ளத்தி னூசலாடுங்
> குழைநிழல் உமிழவிட்டாள்.

என்று கம்பர் அமைத்துள்ள அழகு போற்றுதற் குரியதாகும். அப்பால் மணமகள் மணிமண்டபம் போந்து அங்குநிறைந்துநின்ற அரசர்முனிவர் முதலியசீரியோர்நிறைந்தசபையினடுவே தன் தாதையருகில் அமைத்திருந்த தனியாசனத்தில் அமர்ந்தாள். அப்பொழுது அவள்மனம் கண்ணின் முன்னே கடுகிச் சென்று காதலன்

பால் சேர்ந்தது. கண்ணின் காதலைப் பெண்மைக் குணங்கள் இடைநின்று தடுக்க, நேராகத் தன் தலைவனை நோக்க இயலாது மங்கை மயங்கி நின்றாள். பின் எவ்வாற்றானும் காதலனைக் கண்ணினால் காணவேண்டுமென்னும் ஆசைகடுக்க, தன்கைவளையைத் திருத்தும்போது கடைக்கண்ணால் நுகர்ந்தாள். வில்லை ஒடித்த வீரன், தான் கண்டு காதலித்த கமலக் கண்ணனே என்று தெளிந்தாள். அந்நிலையில் கதிரவன் முன்னர் ஒடி மறையும் கடும்பனி போல, அவள் மனத்தில் நின்ற ஐயம் அகன்றொழிந்தது. அமுதம் அருந்தியவள்போல உவகையால் உடல் தடித்தாள். மறுநாள் காதலர் இருவருக்கும் கடிமணம் நிகழ்ந்தது. இருவரும் மனமிசைந்து இல்லறம் நிகழ்த்துங்கால் சீதை துன்பம் என்பதையே அறியாளாய், கணவனுடன் இன்புற்று வாழ்ந்தாள். அப்போது இன்பத்தின்மேல் இன்பம் பெருகுமென்னும் உலகியலுக்கேற்ப தனகணவன் அரசுரிமையும் பெறப்போவதாக அறிந்து பெரிதும் இன்புற்றாள். அப்பால் கைகேசியின் சூழ்ச்சியால் நிகழ்ந்ததொன்றும் அறியாத சீதை, கதிர்முடிதரித்த கணவனைக் காணலாம் என்று ஆர்வத்தோடு எதிர்நோக்கியிருப்ப, அங்கு அழுத தாயரோடும் அந்தணரோடும் அரசரோடும் மரவுரிதரித்த தன் மணாளனைக் கண்டாள். உற்ற தொன்றும் உணராளாய் உளக்கலக்க முற்றெழுந்தாள். எழுந்த மங்கையை மாமியர் தழுவி, கண்ணீர் பெருக்கினார்கள். சீதை சிந்தை யழிந்து தன் தலைவனை நோக்கி, நடுங்கிய மேனியோடு 'நாதா! என்ன துயரம் உற்றதென்று வினவினாள். அதற்கு வீரன் 'இணையற்ற என் தம்பி இந்நாட்டை அரசாள்வான். நான் இருமுதுகுரவர்து ஆணையை ஏற்று இன்றுபோய் மலைவளம் கண்டு வருவேன்; அதுகாறும் 'நீ வருந்தாது இங்கேயிரு' என்றான். இதைக் கேட்ட சீதை தன் நாயகன் கடுங்கானகம் செல்லலுற்றானென்றும் நாடாளும் நற்பதத்தை இழந்தானென்றும் வருந்தினாளல்லள்; ஆனால், 'நீ வருந்தாதே, நான் உன்னைவிட்டுப் பிரிவேன்' என்று காதலன் கூறிய கடுஞ்சொற்கள் சுடுசரம்போல் அவள் செவிகளைச் சுட்டன. அப்போது அவள் தன் தலைவனை நோக்கி ''ஐயனே! தந்தைதாயர் மொழிகளைத் தலையில் தாங்குதல் சாலவும் சிறந்ததேயாம்; ஆயினும் என்னை நீத்து ஏகுதல் நீதியோ, முறையோ'' என்று ஏங்கி நின்றாள். அதைக்கேட்ட அண்ணல் ''மாதே! நான் செல்வது கடுமையான கானகமாகும்; அங்கு வெய்யோன் வெப்பத்தால் கல்லும் உருகும்; உனது கமல பாதங்கள் அக்கல்லிற்பட சிறிதும் பொறுக்கமாட்டா'' என்று உருக்கமாகக் கூறினான். அது கேட்ட மங்கை ''ஐயனே! நின் பிரிவினும் சுடுமோ அப்பெருங்காடு'' என்றாள். அம்மாற்றத்தை அண்ணல் கேட்டான். தன் காதலி தன்னோடு கடுங்கானகம் செல்லக் கருதினாளென்று உணர்ந்தான். கண்ணீரை வடித்தால் காதலி கலங்குவாள் என்று கருதி உள்ளடக்கினான். இன்ன செய்வதென்றறியாது செயலற்றுத் திகைத்து நின்றான். அவ்வேளையில் சீதை, தன் மாளிகை சென்று மரவுரி புனைந்து இமைப்பின் முன்னம் இராமன் அருகே போந்து அவன் தடக்கையைப்பற்றி நின்றாள். சீதையின் கோலத்தைக் கண்டவர் யாவரும்மண் மேல் விழுந்து அழுது அரற்றினார்கள். அப்பொழுது வீரன் தன் பெருட்டாக வேனும் அம்மங்கை கானகம் செல்லும் கருத்தைத் தவிர்ப்பாளோ என்று அறிய எண்ணி சீதையை நோக்கி, ''மாதே! நீ பின்வரும் துன்பத்தை யுணராது என்னோடு யேகப் புறப்படுகின்றாய்; நீ வருவதால் எனக்கு எல்லையற்ற துன்பம் உண்டாகும்'' என்று கூறினான். அது கேட்ட சீதை சீற்றங்கொண்டு ''ஐயனே! உம்மைப்பற்றி நின்ற துயரம் நான் ஒன்றே; என்னை நீத்தபின் உமக்கு இன்பமே'' என்றாள். இதற்கு மாற்றம் உரைக்கும் வகையறியானாய் இராமன் வானா புறப்பட்டான்.

மருத நிலத்தின் வழியாக நடந்து செல்லும்பொழுது அன்னங்கள் அழகிய நடையோடு அங்குமிங்கும் திரிவதையும் தாமரை மலர்கள் செம்மையாய் மலர்ந்து நிற்கும் சீர்மையையும் குவளை மலர்கள் கண்போல் மிளிர்ந்த காட்சியையும் சீதை கண்டு களித்தாள். வழிநடந்து செல்வதாலாய வருத்தம் தன் காதலன் தன்னோடிருத்தலால் அறவே யொழிந்தது.

கருப்பேந்திர முதலாயின
கண்டாளிடர் காணாள்,
பொருப்பேந்திய தோளானொடு
விளையாடினள் போனாள்.

என்று கம்பர் கூறுமாறு கரும்பாலைகளில் கரும்பு அரைபடுவதைக் கண்ட சீதை அக்கரும்பை யொத்த துயரத்தால் நலிந்தும், தன் தலைவனோடு துயரை மறந்து விளையாடிக்கொண்டு வழி நடந்தாள். அப்பால் கங்கைக் கரை வழியாக நடந்து மூவரும் கடுவனத்துட் புகுந்தார்கள். அங்கு சீதையின் சோகத்தை மாற்றுமாறு இராமன் மயிலினம் நடமாடும் மாட்சியையும் ஆவொடு கன்றுகள் விளையாடும் அழகையும் மலர் நிறைந்த மாங்காவின் எழிலுறு வனப்பையும் காட்டிச் செல்லும் நிலையில் காதலியும் தன் துயரை மறந்து வழிநடந்தாள். அப்பால் சித்திரகூடமலையை அடைந்து அங்கு தன் தம்பியால் அமைக்கப்பட்ட பர்ணசாலையில் மூவரும் தங்கினார்கள். அப்பர்ணசாலையை இராமன் பார்த்து மனங்கசிந்து கண்ணீர் சுரந்து நின்றான். மலரினும் மெல்லிய சீதையின் பாதங்கள் கானகத்தில் நடக்கக் கற்றன. வில்லொடு பயின்ற என் தம்பியின் கைகள் இச்சாலை சமைக்கக் கற்றன; அற்றவர்க்கு ஆகாதனவும் இவ்வுலகில்உளதோ! என்று தன் தம்பியைப் பார்த்து ''குன்று போலும் வலியதோளினாய்! இத்தொழிலை என்று கற்றனை?'' என்று சோகமுற்று வினவினான்.

இவ்வாறாற்றால், சீதையின் செய்ய சேவடிகள் கானகத்திலுள்ள கல்லிற்பட்டு வழிநடக்கமாட்டாது வருந்தினவெனினும், அம்மாது தலைவனோடிருக்கும் தலையாய ஊக்கத்தால் தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடியாய் விளங்கினாள் என்னும் தன்மை இனிதறியப்படும். இதுவே கற்பமைந்த மாதரின் மனப்பாங்கென்பது கண்ணகியின் கதையாலும் தெள்ளிதில் காணப்படும்.

திருமகளாய சீதை முற்பிறப்பில் பாலாழியில் பள்ளிகொண்ட திருமாலுடன் பிரியாத பெருவாழ்வுபெற்றிருந்து, அப்பால் அறநெறி நிறுத்துமாறு அப்பெருமான் இம்மண்ணுலகில் பிறந்தனனென்று தானும் ஒரு அரசனது திருமகளாய் அமைந்து முந்

திப மணாளனை மணந்தாளென்னும் உண்மை, கம்பர் நூலில் பலவிடங்களில் காணப்படுகின்றது.

அறந்திறம்பு மென்றையன் அயோத்தியிற்
பிறந்த பின்பும் பிரிவிலனாயினுன்.

என்னும் வாக்கால் மேற்கூறிய உண்மை இனிது விளங்கும். இவ்வாறு மேலைக் காதலால் இம்மையில் தலைமகனும் தலைமகளுமாய்த் திகழ்ந்த இருவரும் மலரும் மணமும்போல ஒன்றுபட்டு வாழ்வது இயல்பேயன்றோ? சீதையின் உயிர்நிலை இராமன் என்பதும் அவ்வண்ணலது அறநெறியை அழகுற நிறுத்திய ஆர்வம் சீதையிடம் விளங்கிற்றென்பதும் இனிது அறியப்படுகின்றது. இதனை இலக்குவன்

நீருள வெனினுள மீனும் நீலமும்,
பாருள வெனினுள யாவும், பார்ப்புறில்
வருள தனுவுளாய்! நானும் சீதையும்
ஆருள ரெனினுள மருளுவா யென்றான்.

என்னும் கவி கூறும் மொழிகளால் இனிது விளங்கும். இராமனை நீராகவும் தன்னை மீனாகவும் சீதையை நீலமலராகவும் இலக்குவன் உவமை கூறிய அழகு பெரிதும் போற்றுதற்குரியதாகும். இலக்குவன் இராமனையின்றி வாழுமியல்புடையனல்லன் என்பதும் நீர் எங்கெங்கு சென்றாலும் அங்கங்குசென்று அதில்வாழும் மீனின் இயல்பே அவன் இயல்பாமென்பதும் அவனது சொற்களாலேயே இனிது போதருகின்றது. இதுவன்றியும் இனிய நீர்நிலையில் தோன்றி தன் நிறத்தாலும் மென்மையாலும் அந்நீர்நிலைக்கே ஓர் அழகினை அளிக்கின்ற நீலமலரோடு சீதையை உவமித்த செம்மை மிகச் சிறப்புடையதாகும். அற்றகுளத்து அறுநீர்ப் பறவைபோ லல்லாது வற்றியகாலத்தும் உடனுறைந்து சாம்பும் ஆம்பலும் நீலமும் உயரிய அன்பிற்கு உவமையாக எக்காலும் புலவரால் எடுத்தாளப்படுகின்றது. இதனால் இராமனே தம்பிக்கும் சீதைக்கும் தாயகமாகவும் உயிர்நிலையாகவும் அமைந்திருந்த தன்மை இனிது விளக்கப்படுகின்றது.

இவ்வாறு விளங்கிய சீதையை உடலினின்றும் உயிரைப் பிரிப்பதுபோல இலங்கையர்கோன் பிரித்து அசோகவனத்தில் அமைத்தான். அங்கு சீதை தன் காதலனது நிறைந்த குணங்களை எண்ணி எண்ணி ஏங்குவாளாயினாள். முன் மிதிலைமாநகரில் அப்பெருமானது மெய்நலம் சீதையின் உளத்திற் பதிந்து உறைவதாயிற்று. அசோக வனத்திலே அப்பெருமானது குண நலங்களே அம்மாதின் மனதில் நிலைத்து நிற்பதைக் கம்பர் நன்கு காட்டியுள்ளார். முடியுடை மன்னனாய் இந்நாட்டை ஆள்வாய்! என்றபோதும் மரவுரி தரித்து கானகஞ் செல்வாய்! என்றபோதும் சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரையை ஒத்திருந்த முகத்தினை உன்னி, தன் தலைவனது உள்ளத்துறவை உணர்ந்து நைந்தாள். இன்னும் சாதி, குலம், பிறப்பு என்னும் பிழையால் தடைப்படாது அன்பின் பெருமையை அறிந்து ஏழை வேடனாய குகனைத் தன் தோழனாய்க்கொண்டு இலக்குவனை அவன் தம்பியாக்கி, தன்னை அவன் கொழுந்தியாக்கிய கோதிலா அன்பின் பெருமையை நினைந்து நினைந்து நெஞ்சம் குழைந்தாள். இவ்வாறு காதலனைப் பிரிந்து வருந்திய சீதை, உயிர் வாழ ஒரு சிறிதும் மனமற்றவளாயிருந்தும் நாயகனைக் காணலாமென்னும் காதலால் உயிர் தாங்கி நின்றாள். இதனை,



காணெலாம் துறந்தேனில்லின்
நன்மையினல்லாக் கேய்ந்த
பூணெலாம் துறந்தேன் என்றன்
பொருசிலை மேகந்தன்னை
காணலா மென்னுமாசை
கடுக்கவ்வன் னுவிகாத்தேன்
ஏணிலா வுடலினீங்கல்
எனக்கெளிதெனவுஞ் சொன்னாள்.

என்னும் சீதையின் மொழிகளால் செம்மையாய் அறியப்படும். தன்னைச் சிறையினின்றும்விடுவிக்குமாறு தன் தலைவன் வருவானோ என்று திசை நோக்கித் தொழுது நின்றாள். பிறர் மனையிலும் மனத்திலும் புகுந்த பேதையாகிய தன்னை அப்பெருமான் பின்னும் தீண்டுமோ என்று திகைத்தாள். கற்புடையபெண்டிர் பிறர்மனம் புகார்; ஆதலால் அரக்கனாய இலங்கையர்கோன் உளத்திற்புகுந்த தன்னை அவ்வுத்தமன் இனி மனத்திலும் தீண்டுமோ என்று மயங்கினாள்.

உன்னினர் பிறரென
வுணர்ந்து முய்ந்தவர்
சொன்னன சொன்னன
செவியில் தூங்கவும்
மன்னுயிர் காத்திருங்
காலம் வைகினேன்.
என்னின் வேறாக்கியர்
யாண்டை யார்கொலோ?

என்று சீதை தன்னை நொந்துகூறும் சொற்களில் அம்மங்கையின் உண்மைக் காதலும் கற்பும் கனிந்து விளங்குகின்றன. தனது கற்பின் ஆற்றலால் ஒன்றை அழித்தலும் உவந்தாரை ஆக்கலும் இயலுமென்னும் தன்மையைச் சீதை இனிதறிந்தவளேயாயினும் தன் சொல்லினால் இலங்கையர் கோனையும் அவன் நாட்டையும் சுட்டெரித்தால் அதனால் தன் தலைவனது வில்லின் ஆற்றல் விளங்காது போய்விடுமென்றெண்ணியே வாளாது பொறுத்திருந்தாள். தான் சிறையினின்றும் விடுவியாது, தலைவனைக் காணாது உயிர் மாய நேரினும் மீண்டும் பிறந்து தன் தலைவனது திருமேனியைத் தீண்டப்பெறும் பெருவாழ்த்தையே வேண்டினாள். அசோக வனத்தில் தோன்றிய அநுமனிடம் தன் மனநிலையை மாசறவுணர்த்திய அம்மங்கை

ஈண்டு நானிருந் தின்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்து தன்மேனியைத்
தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினாள்தொழு தென்றுவி ளம்புவாய்

என்று சொல்லி விடுத்த சொற்களில் சீதையின் காதல் பிறப்பென்னும் வரையிகந்த பெரும்பொருள் என்பது இனிது போதருகின்றது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த சீதைபால் காதல்கொண்ட சிறுநெறிச் செல்வனான இலங்கையர்கோன் இறுதியில் தனது நாடும் பீடும் இழந்து இராமபாணத்தால் முடிமுதல் அடிவரை துளைக்கப்பெற்று போர்க்களத்தில் கிடந்த காட்சியை, கல்வியிற் பெரியசாகிய கம்பர்

வெள்ளெருக்கஞ் சடைமுடியான்
வெற்பெடுத்த திருமேனி மேலுங்கீழும்
எள்ளிருக்கு மிடமின்றி
யுயிரிருக்கு மிடனாடி யிழைத்தவாறோ?
கள்ளிருக்கு மலர்க்கூந்தற்
சானகியை மனச்சிறையில் கரந்தகாதல்
உள்ளிருக்கு மெனக்கருதி
யுடல்புகுந்து தடவியதோ ஒருவன் [வாளி?

என்று போற்றியுள்ள சீர்மை அம்மங்கையின் மாண்பமைந்த காதலை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணர்த்துகின்றது.

# காஞ்சீபுரத்துக் கவியரசு.

—(o)—

ஸ்ரீ. நா. சுப்பிரமணியன்.

(முன் தொடர்ச்சி.)

பெரும்பாணாற்றுப்படையில்,

"இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் புறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபி னுரவோ னும்பன்
மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கு
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி
னல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையன்." உக–நஎ.

எனக் கூறப்பட்டிருப்பதற்கு உரையாசிரியர் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், "என்றதனால், நாகப்பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாக கன்னியைப் புணர்ந்த காலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என் செய்வேனென்ற பொழுது, தொண்டைக் கொடியை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பலென்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின் திரையனென்று பெயர்பெற்ற கதை கூறினார்" என்று கூறுவதையும்,

கூலவாணிகஞ் சாத்தனார் மணிமேகலையில், "முன்னொருநாள், அரசன் (நெடுமுடிக்கிள்ளி) இந்நகரிற் (காவிரிப்பூம் பட்டினத்திற்)கடற்கரையைச் சார்ந்த புன்னைமரச் சோலையில் பேரழகினளாகிய ஒரு மங்கையைக் கண்டு விரும்பி, அவளோடும் இன்புற்றுஒரு மாதம் அச்சோலையில் உறைவானாயினன்; அம்மங்கை அவனிடஞ் சொல்லாது தன்னிடஞ் சென்றாள்; செல்லவே, அரசன், இளங்கொடி யாங்கொளித்தனளென்று பலவிடத்துந் தேடிக்கொண் டிருக்கும்பொழுது, அற்புத சக்தியையுடைய ஒரு சாரணன் வர, அரசன் கண்டு அவனை வணங்கி முன்னின்று, 'என் உயிர் போல்பவளாகிய ஒருத்தி இங்கே ஒளித்தனள்; அவளை அடிகள் கண்டதுண்டோ?உண்டாயின்சொல்லுக" என்று கேட்ப, அந்தச் சாரணன், 'அரச! அம்மடந்தையை யான் இப்பொழுது கண்டிலேனாயினும் முன்பு அறிந்துளேன்; கேட்பாயாக; அவள் நாகநாட்டரசனாகிய வளைவணனென்பவனுடைய தேவியான வாசமயிலையென்பவளின் வயிற்றில்தோன்றிய பீலிவளை யென்பாள்; அவள் பிறந்த நாளிற் சோதிடங் கூறவந்த கணி, "இவள் சூரியகுலத் தரசன் ஒருவனைச் சேர்ந்து கருவுற்று வருவாள்" என்று அரசனுக்குக் கூறினன்; இது முன்பு நடந்தது; அவளே நீ கூறிய மடந்தை; இனி அவள் வயிற்றில்தோன்று மகனேவருவான்; அவள் வாராள்; நீ கவலாதிருக்கக் கடவை; ... ... ..." *என்று சித்திராபதி வாயாலும், "நாகநாட்டரசன் மகளாகிய பீலிவளை என்பவள் தான் பெற்ற குழந்தையுடன் வந்து இத்தீவையும் (மணிபல்லவம்) புத்த பீடிகையையும் வலம் வந்து துதிக்கும் பொழுது, கம்பளச் செட்டியின் கப்பல் வந்துதங்க, பீலிவளை அவனிடஞ் சென்று, 'இவன் அரசன் புதல்வன்; இவனை அரசனிடஞ் சேர்ப்பாயாக' என்று சொல்லி குழந்தையை அவன் கையிற்கொடுக்க, அவன் பெருமகிழ்ச்சி யடைந்து வாங்கிக் கப்பலேறிச் செல்லுகையில் அஃது உடைந்து போயிற்று. போகவே கப்பலிலிருந்தோரிற் சிலர் மெல்லப் பிழைத்துச் சென்று காவிரிப்பூம்பட்டினத்தை யடைந்து புதல்வனைக் கொடுத்த செய்தியை அரசனுக்குத் தெரிவித்தார். அதுகேட்டு அவன் பொறாமல் செயலற்றுக் கடற்கரையை யடைந்து மகனைத் தேடினன்" *என தீவதிலகை வாயாலும் கூறுவதையும், ஒன்றாக வெண்ணி, மணிபல்லவம் (தற்காலத்திய யாழ்ப்பாணம்) என்னும் தீவினின்று தமிழ்நாட்டிற் குடிபோந்த நாகர்களுக்குச் சோழரது உறவாற் பிறந்தவரே பல்லவசாவார் என்பர் இலங்கை ஸ்ரீமான் இராசநாயகம் அவர்கள். இஃது சரியல்லவென்றும், தொண்டைமண்டிலத்தே சங்ககாலத்தில் வசித்த மக்களாகிய அருவாளர் எனப்படுபவரே பல்லவராவர் என்றும் கூறுவர், சென்னைச் சர்வ கலாசாலைச் சரித்திர ஆசிரியர் ராவ்சாகிப் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள்.

அவர்களது உற்பத்தியைப்பற்றிப் பலர் பலவிதமாகக் கூறுகின்றனர்; அது இன்னும் ஒரு ரகசியமாகவே இருக்கிறது. இதனாற்றான் Vincent A. Smithஎன்பார் Oxford History of India உகO-ம்பக்கத்தில் (There is every reason to beleve that future historians will be able to give a fairly complete narrative of the doings ofthePallava kings and that the mystery which sourrounds their origin and affinities may be elucidated in large measure) இனிவரும் சரித்திர ஆசிரியர்கள், பல்லவ அரசர்களது செய்கைகள் முழுமையும் சரியாகத் தொகுத்துக் கூறவும், அவர்களது உற்பத்தி .......... ... ... ... ...ப்பற்றிய இரகசியத்தை நன்கு வெளியாக்கவும் கூடும் என்று துணிவதற்கு ஏற்ற சாதனங்கள் உள்ளன எனக் கூறினர்.

பல்லவர்களது செப்பேடுகளுள் மிகவும் பழமையான காலத்தனவாகக் கிடைத்தவை பிராகிருத பாஷையில் உள்ளன; வரிவடிவும், எழுத்தாராய்ச்சியாளர்கூற்றுப்படி கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்குரியது; ஆதலின், பல்லவர் காஞ்சிநகரத்தைத் தலைநகராகக்கொண்டு ஆண்டுவருவது கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்தே எனக் கூறலாம்.

அதற்கு முன்பு தொண்டைநாட்டின் வடபாகம் வடபுலத்தரசர்கள் ஆளுகைக்குட்பட்டு இருந்ததென்று தெரிகிறது. சங்க நூற்களில், வடுகர் எனப்படுவார் அடிக்கடி வேங்கடம் முதல் திருக்கோயிலூர் வரை படையெடுத்து வந்ததாகக் கூறப்படுகிறது.† அன்றி, சென்னை கடற்கரையை ஒட்டிக் கூடலூர் வரையில், ஒரு

* உஉ ஆபுத்திரன் நாடடைந்த காதை. உஎ—சுக.

* உகு ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை. † புறநானூறு ௩ள௮, அகநானூறு ௩௩௬, ௩ள௩, நற்றிணை கஎO.

புறத்தில், இருபாய்மரங்களையுடைய மரக்கலத்தின் வடிவும், மறுபுறத்தில் 'உஜ்ஜயினி வடிவு' என்று கூறும் ஒரு சைத்தியமும் (அதாவது ஒரு கட்டிடமும்) அதற்குமேல் மூன்று வளைந்த கோடுகளும் காணப்படும் ஒருவகை நயநாணயங்கள் கிடைக்கின்றன.* அவற்றுள் 'ஸ்ரீ புளுமாவி' என்ற பெயரும் காணப்படுகிறது. இவ்வகை நாணயங்கள் மற்ற எப்பாகங்களிலும் கிடைக்கவில்லை. உஜ்ஜயினி வடிவு, கி.மு. ௨-ம் நூற்றாண்டுமுதல் கி.பி. ௨-ம் நூற்றாண்டு வரையில் ஹைதர்பாத் ஸமஸ்தானத்தில் வடமேற்குக் கோடியில் உள்ள பைதான் (பிரதிஷ்டானபுரம்) நகரத்தைத் தலைநகராகக்கொண்டு * ஆண்ட சாதவாகனர்களுக்கு உரியதாகும். கி.பி. ௨-ம் நூற்றாண்டில் க்ஷத்திரபர்கள் என்றும் க்ஷகராத்திரர்கள் என்றும் கூறப்படும் சக அரசர்களது ஆதிக்கம், மேனாட்டில் அதிகமாகவே, சாதவாகனர்கள் அந்நாட்டை விட்டு கீழ்க்கடற்கரையில் கிருஷ்ணா ஜில்லாவில் உள்ள அமராவதி (தான்யகடகம்) என்ற நகரில் குடியேறினர். இவர்களுள், கடைசி அரசனான புளோமா (புளுமாவி) என்ற அரசன் பல்லாரி † ஜில்லாவை ஆண்டுவந்தான் என்பது அவனது மியாகதோனி சாஸனத்தால் அறியக்கிடக்கிறது. இவர்களுக்குப் பிறகு மைசூர்நாட்டை இவர்களின்கீழ் சேனாபதி முதலிய வேலைகளைப் பார்த்து வந்த 'சூடு' குலத்தைச் சேர்ந்த நாகர்கள் கைப்பற்றி ஆண்டு வந்திருக்கின்றனர். அந்தச் சமயத்திற்றான் பல்லவர்களும் காஞ்சீபுரத்தையும் அதைச் சுற்றிய நாட்டையும் அடைந்திருக்கவேண்டும்.

வேலூர்ப்பாளையம் செப்பேடுகள் § பல்லவர்களுள் முதன்முதல் இராஜ்யபாரம் செய்த வீரகூர்ச்சன் என்னும் அரசன், நாக அரசனது மகளின் கையையும், அரசியலையும் ஒரே சமயத்திற் பெற்றுப் புகழடைந்தான் எனக் கூறுகின்றன. இந்நாக அரசன் யார் என்பதைப்பற்றிய விவாதம் பலமாக இருக்கிறது. பலர் 'சூடு' குலத்தில் வந்த சாதகர்ணி சிவஸ்கந்த நாகனாகத்தான் இருக்கவேண்டும்' என்று அபிப்பிராயப்படுகின்றனர்.

முதலில் வந்த பல்லவ அரசர்கள் நாட்டை முன்னேற்ற மிகவும் பிரயாசப்பட்டிருந்ததாகத் தெரிகிறது. ஹீரகடகல்லி சாசனத்தில் முதல் அரசன் அநேகம் கோடி பொன்னும் நூறாயிரம் கலப்பைகளும் பிரஜைகளுக்கு வழங்கினான் என்று கூறுகிறது. அப்பொழுது நாடும், வடநாட்டு முறையால், அர்த்தசாஸ்திரத்திற் கூறியபடி, பலபடியாகப் பிரிக்கப்பட்டிருந்ததாகத் தெரியவருகிறது.o

கி. பி. ௩௪௦-க்கு அணித்தாக விஷ்ணு கோபன் என்ற அரசன் ஒருவன் ஆண்டிருக்கிறான். இவன், வடநாட்டுப் பாடலிபுரத்தில் ஆண்ட ஸமுத்ரகுப்தன் திக்கு விஜயம் செய்ய எண்ணித் தென்னாடு போந்த பொழுது அவனை எதிர்த்துப் போர் புரிந்திருக்கிறான்.i இவனை ஜயித்ததாகச் சமுத்திரகுப்தன் । அலகபாத்துச் சாஸனத்தில் கூறிக்கொள்ளுகிறான். இச்சமுத்திர

* Catalogue of the coins of the Andhra dynasty the Western Kshatrapas, etc, in the British Museum by Prof. Rapson page 22. † Epigraphia Indica vol XIV p. 153. § S. I. I. vol II part V, p. 510. o Hirahadagalli plates. Epigraphia Indica vol I p. 2. i fleet's Gupta Inscriptions p. 7.



குப்தனையே சரித்திர ஆசிரியர் 'புதிய அலெக்ஸாந்தர்' என்னும் புனைபெயராற் குறிப்பர்.

இவனுக்கு முன்னும் பின்னும் வந்த அரசர்களுக்கும், இவனுக்கும் உள்ள உறவின்முறை விளங்கவில்லை. முன்வந்த அரசர்களது சாசனங்கள் பிராகிருத பாஷையிலும், பின் வந்தவர்களது சாசனங்கள் சம்ஸ்கிருத பாஷையிலும் உள்ளன. அன்றி, கி. பி. சுமார் ௪௫௦-ல் அரசாண்ட குமாரவிஷ்ணுவென்னும் அரசன் காஞ்சீபுரத்தைக் கைப்பற்றியதாகக் கூறப்படுகிறது. இவற்றால், பிராகிருத சாசனங்களைக் கொடுத்தோரும், சம்ஸ்கிருத சாஸனங்களைக் கொடுத்தோரும் வேறு வேறு வமிசத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், சமுத்திரகுப்தன் படையெடுப்புக்குப் பின் அதனாற் பல்லவர்களுக்கு ஏற்பட்ட சளைப்பின் காரணமாகக் காஞ்சியைப் பிற அரசர் சிறிதுகாலம் கைப்பற்றியிருந்தனர் என்றும் எண்ண இடமுண்டாகிறது.

சம்ஸ்கிருத சாசனங்களைக் கொடுத்த அரசர்கள் மிகவும் பராக்கிரமசாலிகள். தொண்டைமண்டல மட்டுமல்லாமல், தற்காலத்திய மைசூர் நாட்டையும், கிருஷ்ணாஜில்லா உள்ளிட்ட தெலுங்கு தேசத்தையும் ஆண்டு வந்தனர். ஆனால் சுமார் கி பி. ௫௦௦-க்கு சமீப காலத்தில், தெலுங்கநாட்டை வாகாடக அரசர்கள் பிடுங்கித் தங்கள் மாப்பிள்ளையாகிய விஷ்ணுகுண்டின அரசன் மாதவவர்மனுக்கு அளித்து விட்டான். மைசூர் நாட்டை ஆண்டு வந்த கங்க, கடம்ப அரசர்களும் கொஞ்சங்கொஞ்சமாகப் பிரிந்து தனியரசர்களானார்கள். ஆனால் கங்கர்கள் மட்டும் அடிக்கடி பல்லவர்களின் உதவியை நாடினின்றனர். கி.பி. ௪௮௦-ல் கங்க அய்யவர்மனைப் பல்லவ மகாராஜா ஸிம்ஹவர்மன் பட்டத்தில் வைத்து அபிஷேகம் செய்தான் என்று பெனுகொண்டா* செப்பேடுகள் கூறுகின்றன. அவன் மகன் ஸிம்ஹ வர்மனையும், பல்லவ ஸிம்ஹவர்மன் மகன் ஸ்கந்த வர்மன் அதேபோலப் பட்டம் ஏற்றுவித்தான்.

இவர்களுக்குப் பிறகு இவ்வமிசத்தில் வந்த நந்திவர்மன் மிகவும் புகழ் பெற்றவன் என்று தெரிகிறது. அவன் காஞ்சீபுரத்திற் சுமார் கி. பி. ௫௩௦ விருந்து ௫௫௦ வரையில் அரசாண்டான். வேலூர்ப் பாளையம் செப்பேடுகள் இவன் பினாகபாணியின் கிருபையால் (சிவபெருமானது) திருஷ்டிவிஷனைக் கூத்தாடச் செய்தான் எனக் கூறுகிறது. நாகர்களுள் ஒருவகையான ஸிந்தவம்ச அரசர்கள் திருஷ்டிவிஷகுலதிலகரென்று சிறப்பிக்கப்படுவர்.‖ இவ்விடத்திற் குறிக்கப்பட்டவன் அந்த வமிசத்தாருள் ஒரு அரசனாகவே இருத்தல் வேண்டும்.

இவனுக்குப் பின்னால் ஸிம்ஹ வர்மன் என்பவன் சிறிதுகாலம் ஆண்டான். அவனுக்குப்பின் பல்லவ அரசு நடத்திய ஸிம்ஹவிஷ்ணு என்னும் அரசனே நாம் இப்பொழுது எழுதப் புகுந்த மகேந்திரனது தந்தையாவான். இவன் மிக்க புஜபலமும், வடமொழிப் புலமையும் உடையவன்.

(தொடரும்.)

* Epigraphia Indica vol XIV p. 331. ‖ Epigraphia Indica vol III p. 232.

# இந்தியரின் விவகாரம்.

—:(o):—

சுவாமி ராமதீர்த்தர் எழுதியது.

ரா. அனந்தகிருஷ்ணன் மொழிபெயர்த்தது.

(முன் தொடர்ச்சி)

இளங்காளையர்களே! இதனை நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!! வருங்கால வாழ்வின் பொறுப்பு வாய்ந்த ஓ இளைஞர்களே, நிறுத்துங்கள்! தர்மத்தின் மீது ஆணை! பாரதத் திருப்பேர் மீதாணை! உங்கள்மீது; உங்கள் சந்ததிகள் மீது ஆணை! நாட்டிலே நடக்கும் கண்ணற்ற அறிவற்ற மணங்களை உடனே நிறுத்திப் போடுங்கள். இதனால் ஜனங்கள் தூய்மை பெறுவர். மக்கட் செறிவினைக் குறித்த பிரசினை இதன் மூலமாகவும் ஒரு சிறிது தீர்க்கப்படும்.

இந்த யோசனைகள் அசம்பாவிதமாக, இயற்கைக்கு விரோதமாக இருக்கின்றனவென்று கருதுகிறீர்களா? இதை மட்டும் மனதில் தரித்துக் கொள்ளுங்கள். மேலே சொல்லியவற்றை அனுபவத்திற்குக் கொண்டுவர வேண்டும். தவறினால், இரத்தத்தைச் சுண்டச் செய்யும் வறுமைக்கும், அநாயாசமாக இல்லாத நீடித்த மரணத்துக்கும் ஆளாகவேண்டும். இதில் அதிசயோக்தி சிறிதுகூட இல்லை! ஒரு அணுவும் இங்கு மிகைபடக் கூறவேயில்லை! அசைக்க முடியாத சித்தாந்தங்களும், பயங்கரமான சத்தியமுமே இம்மொழிகளில் என்றும் சுடர்கின்றன. சிசு மணத்தையும் பால்ய விதவைகளையும் விட அசம்பாவிதமானதொன்று இவ்வுலகத்தின்கண் நிகழ்தல்கூடுமோ? இம்மண்ணுலகில் நாகரிகம் பெற்ற எந்தச் சமூகத்தையேனும் கேட்டுப் பாருங்கள். ஜீவ காருண்யம் ஒரு லேசமாவது உங்களிடம் உளதோ? உளதாயின் இந்த அசம்பாவிதமான, அப்பிராகிருதமான பழக்கவழக்கங்களைப் போக்கித் துடைப்பதற்கு முன்னர் திருப்தியுற்று அமர்வது பொருந்துமோ? கைம்பெண் குழந்தைகள் பைந்தளிர் போன்ற தம் இளங்கைகளை நீட்டி உதவி நாடுகின்றன; உதவி மறுப்பீரோ? உங்கள் கண்களுக்கெதிரே கணக்கற்ற ஸதிக் குழவிகள், ஒவ்வொரு அங்குலமாக பழக்கங்கள் எனும் கொடுந் தீககிரையாகிச் சாம்பராகி வருகின்றன; இதனைப் பார்த்துக் கொண்டு வாளா விருக்கப் போகிறீர்களே! கண்ணீரை ஆறாகப் பெருக விட்டுக் கொண்டிருக்கும் இந்த நிரபராதிகளுடைய கண்களினூடே நின்று பரமன், உதவிசெய்ய வாரீரோ என்று எதிர்பார்த்து நிற்கிறான். அவனைச் சட்டை செய்யாமல் இருந்து விடப் போகிறீர்களோ? பவானிதேவி உங்கள்முன் அழுது அலறிக்கொண்டு நிற்கிறாள். அவளைப் பாராதவர்கள் போல் எத்தனை நாளைக்குத்தான் ஒதுங்கிச் சென்று கொண்டிருக்கப் போகிறீர்கள்? அவள் அலறுவதைச் செவியேற்காதவர்கள்போல இன்னும் ஒரு நாள் செல்லுங்கள் போதும். அடுத்த நாள், அந்த பவானிதேவி மகா கோர சொரூபம் தாங்கி துர்க்கையின் அவசரத்தில் நிற்பதைக் காண்பீர்கள். எம் அன்னை சர்வ பயங்கரியாய், சர்வ நாசகாரியாய், பிரளயாக்கினிபோன்று எல்லாவற்றையும் எரித்து வருவதைக் காண்பீர்கள். உதிரம்சொரியும் தன் நாவினை வெளியே நீட்டித் தொங்கவிட்டுக்கொண்டு, இரத்ததாகம் தணியப்பெறுதவளாய், பழிவாங்கக் காத்துக்கொண்டிருப்பதைக் காண்பீர்கள். இந்தக் காட்சியைக் கண்டு, இவ்வுலகம் மட்டுமன்றி இந்த அகில பிரபஞ்சமும் பயத்தினால் நடுநடுங்கி 'விலவில'த்துப்போய்விடும். இந்த துர்க்கையின் பீடம் உங்கள் மத்தியிலே இருக்கும் மட்டினும் நாட்டிலே அமைதி எங்ஙனம் பொலிந்து விளங்கும்? ஐரோப்பாவிலே, ஜனங்களின் தரம் கீழே போகப் போகச் 'சிறு பிராயங்களிலே கலியாணம் செய்துகொள்ளுகிறார்கள். ஆனால் அங்குங்கூட, இந்து மக்கள் செய்துகொள்வது போன்று அத்துணை இளம் வயதில் கடையாய வரினும் கடையாய மக்கள் கூட மணந்து கொள்வதில்லை. உயர் வகுப்பினர், மணம் முடிப்பதென்றால் முப்பது வயதுக்கு முன்னர் மணப்பது அருமையினும் அருமை. அவர்களின் கருத்து:—சில குழந்தைகள் இருந்தால் போதும்; ஆனால் அவை தகுதியுற்றனவாய் இருக்கவேண்டும்; என்பதுதான்.

## பிரமசரியம்.

ஹெர்பேர்த் ஸ்பென்ஸர் எனும் பெரிய ஸித்தாந்தி, 'ஜீவதத்துவங்கள்' என்று ஒருநூல் எழுதி இருக்கிறான். அதில் மன வளர்ச்சி மிகமிக புஷ்டி (பலம் அல்லது ஸந்தானம்) குறைந்து கொண்டேவரும் என்று அவன் கூறியிருக்கிறான். ஸந்தானபுஷ்டி ஒன்றை மட்டும் பாராட்டும் சிறுமையை இன்னும் எத்தனை காலத்துக்கு நாம் விடாது பற்றிக்கொண்டு மிருகப்பிராயமாக இருப்பது? நம்முடைய சாஸ்திரங்களையே எடுத்துக் கொள்வோம். அவை பிரமசரியத்தின் பெருமையை வியந்துவியந்து வாய்சளைக்காமல் கொண்டாடிக்கொண்டிருக்கின்றன அவைகளின்படி பார்த்தால்கூட தூய்மையில்லாது வேறு வழியாக ஆன்மபலமாகட்டும், உடல்வலியாகட்டும் ஊற முடியாது என்றுதான் ஏற்படுகிறது. காம விழைவு, காம நோக்கு, காமக் கருத்து, காமச்செயல முதலியவற்றில் விரயமாகும் இந்திரியபலத்தைத் தடுத்துத் தேக்கி நிறுத்திக்கொண்டு விட்டோமானால், அதுவே ஓஜஸாக மாறிவிடுகிறது. இந்த ஓஜஸ், ஆத்ம சக்தியின் கங்கு கரையற்ற கடலாகும்.

இந்திரிய நிக்கிரகம்செய்து நீங்கள் ஜிதேந்திரியர்களாக மிளிரவேண்டும். காம விகாரங்களை அடக்கிக்கொள்ள மாட்டாமல், ஓர் மூடன் பிரகிருதியில் மிகச் சிறந்த சம்பந்தமாகிய இந்தத் தம்பத்திய சம்பந்தத்தைப் புல்லியதாகக் கருதி ஒழுகுவனேல், அவன் தனது உயிரையே தனது ஜீவனுக்கு மூலாதாரமான சுவேதரத்தத்தையே சிந்திவிடுகிறான் என்பதைத் தெரிந்து கொள்ளாத குருடனாகிவிடுகிறான். இந்தத் தெய்விக சக்தியின் துஷ்பிரயோகந்தான் சகலவிதமான பாவங்களுக்கும் வேராகும். இயல்பான இடத்தில் இல்லாமல் தவறான இடத்தில் உள்ள ஐசுவரியமே தூசு எனப்படும் என்ற இந்த ஸித்தாந்தத்தை இதற்கு உதாரணமாகக்காட்டுவோம். காம விகாரங்களில் ஈடுபடுவது மிருகப் பிராயமானது என்று ஏன் சொல்

லப் பெறுகிறது என்றால், மிருகங்கள் இவ்விஷயத்தில் மிகவும் நீசமாக—புத்தியற்றதாக நடப்பதனால்தான் என்க. அவை வரம்பில்லாமல் குட்டிகளை ஈன்றுகொண்டே போகின்றன. வரம்பில்லாமற் குட்டிகளை ஈன்றுவிட்டு, இதனை அடுத்து இரத்தம்பெருகும் வாழ்க்கைப் போரையும் மூட்டிவிடுவதால்தான், இவ்விஷயத்தில் அவற்றை நீசமாகக் கருதவேண்டி வருகிறது. என்றாலும், மிருகங்களுங்கூட காம லீலைகளின் பொருட்டே, அவற்றில் தோய்ந்து கிடப்பது கிடையாது. நிற்க. மனிதன் மிருகத்தினும் மேம்பட்டவன் எனக் கருதப்படுகிறான். காரணம் தனது உணர்ச்சிகளை, மன நெகிழ்ச்சிகளைத் தனது பகுத்தறிவைக்கொண்டு அடக்கியாளும் வன்மை அவனுக்கு உண்டு. இப்பொழுது, அவிவேகமாக மக்களைப் பெறுவதில் மனிதன் மிருகங்களை ஒத்தும் அனுவசியமான அசுத்தமான லீலைகளில் தோய்ந்து கிடப்பதில் அவற்றினும் எத்தனையோ படிகள் கீழே இறங்கியும் விடுகிறான். எனின், அவன் அடையும் நீசத்தன்மைக்கும் இழிவுக்கும் மானக்கேட்டுக்கும் ஒரு அளவு உளதாமோ?

## பரிசுத்த வாழ்க்கை.

பரிசுத்தம்! பரிசுத்தம்! 'யமகண்டத்தில்' நின்றுகொண்டாக்கும் பரிசுத்தத்தை நீங்கள் தேடியடைந்துகொள்ளவேண்டும். பரிசுத்தத்தை நாடியடையாமற் போனீர்களானால், விகாச முறையினை அடுத்து நிகழும் போரில் நீங்கள் ஸமூலத்தோடு சர்வநாசத்தை அடைந்துவிடுவீர்கள். இன்றைக்கு, உங்களுக்கு நம்பிக்கையும் காப்பும் அளிக்கவல்லது ஒன்று உளதேல் அதன் பெயர் பரிசுத்தம் என ஓருங்கள்.

நெருங்கிய உறவினரிடத்து, கற்பு தவறுதொழுகும் நிர்ப்பந்தத்துக்கு ஆதிக் காட்டாளர்களை ஆட்படுத்தியது எது? அது, விகால கதி. அந்த விகால கதிதான் இன்று, தூய்மை நிரம்பிய உள்ளமும், கற்பு தவறாத ஒழுக்கமும் உங்களிடம் செறிந்திருக்க வேண்டும் என்று உங்களுக்குத் தாக்கீது கொடுக்கிறது. ஓ இந்திய மக்காள்! இவற்றைப் பெறுவீடின், நீங்கள் வாழ்வது அருமையினும் அருமை. சுலபமாக இருக்கட்டும், சிரமசாத்தியமாக இருக்கட்டும்; நீங்கள் பரிசுத்தத்தைத் தேடி அடைந்து தீரவேண்டும். பாரதத்தின் பொருட்டு, உங்கள் உடலின்பொருட்டு, உங்கள் அறிவின் நிமித்தம்; உங்களது சமயம் காரணமாக, இம்மை மறுமைகள் சார்பாக, நீங்கள் மாசு மறுவிலாத பரிசுத்தவான்களாகப் பரிணமித்துத் தீரவேண்டும். தூய்மை பெறாதவிடத்து வீரமேது? ஒற்றுமை எது? சாந்திதான் எது?

## நமது கல்வி அறிவு.

இங்கிலாந்திலாகட்டும், அமெரிக்காவிலாகட்டும் பள்ளியில் நிழலுக்கும் ஒதுங்காதவர்கள் பெற்றுள்ள அறிவினும் மிக மிகக் குறைவாகவே, இந்திய சர்வகலா சாலைகளில் படிக்கும் மாணவர்களின் அறிவு இருக்கிறது. ஏன் இப்படி? அந்நாட்டினரின் அறிவுப் பெருக்கத்திற்கு முதற்காரணம் மிக மிக மலிவான தினசரிகளேயாகும். கலாசாலைகளைவிட மிகமிக விஸ்தாரமாகப் பத்திரிகைகள், இங்கிலாந்து அமெரிக்கா ஜப்பான் ஆகிய பிரதேசங்களில், அறிவைப்பரப்பி வருகின்றன. நமது நாட்டிலும் ஒருமட்டிற்



குக் கல்வியைப் பரப்பி வருவதற்காக நமது துரைத்தனத்துக்கும் ஏனைய ஸ்தாபனங்களுக்கும் 'தன்யவாதம்' கூறுவோம். ஆனால் இவற்றால் விளைந்த பயன் பூஜ்யம் என்றே சொல்லவேண்டும். நமது ஜனப் பிண்டத்தின் அறியாமைக்கும் நமது பெண்களின் பயங்கரமான இருள் சூழ்ந்த நிலைமைக்கும் பழியேற்க வேண்டியவர் நாம்தாம்; வேறு எவருமிலர். மிகவும் வெட்கக் கேடான காரியங்களைச் செய்வதிலும், இன்னும் கேவலமாக ஒரு கர்மமும் இயற்றாமல் இருப்பதிலும் கண்ணற்று 'ஆழும் பாழு'மாக்கப்படும் ஜீவசக்தியை முதலில் அணைகட்டித் தேக்கவேண்டும். பின்னர், ஜனகாரத்திற்குக் கல்வி புகட்டல், பெண்மக்களைக் கரையேற்றுவித்தல் ஆகிய கால்களில் ஒழுங்காகப் பாய்ந்து வரும்படி விடவேண்டும். இவ்வாற்றான் நீங்கள் உன்னதநிலை பெற்று, உங்களை ஈன்ற ஜாதியை மேல் ஸ்தானத்தில் தூக்கிவைத்துவிடவேண்டும். இதற்குச் சர்வசுலபமான, மிக்க நேரான பாதை இந்திய பத்திரிகைகளைச் செம்மை செய்வதாகும். உண்மையில் பயன் தரத்தக்க பத்திரிகைகளைத் துவக்கி நடத்துங்கள். ஏற்கெனவே ஏதாவது இருந்தால் அவற்றை நன்றாக்கி ஆங்காங்கேயுள்ள ஸ்திரீகள், சாமான்ய சனங்கள் இவர்கள் பேசும் பாஷைகளில் வெளியிட்டு வாருங்கள். இத்துறையில் ஒன்று இரண்டு முயற்சிகள் ஒருவேளை செய்யப்பட்டு இருக்கலாம். ஆனால் அவை பலிக்கவில்லை. காரணம், உயர்ந்த வகுப்புகளில் படிக்கும் மாணவர்கள் தாய்ப்பாஷைச் சரக்குகளைக் கையில் எடுக்கவும் அருவருப்பதாகும். உங்கள் தாய்மொழிக்கு கௌரவம் கொடுக்க நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும். வாலிய இந்தியர் சங்கம் ஒரு பத்திரிகையை ஆரம்பிக்கலாம். அது சாமான்யமான எளிய நடையில் எழுதப்படவேண்டும். இந்தி எழுத்துக்களைக் கொண்டு பஞ்சாபி மொழியில் எழுதுவதாயின் இன்னும் சிலாக்கியமாகும். கூடிய மட்டிலும் சம்ஸ்கிருதச் சொற்களையும் பார்சி பதங்களையும் தவிர்த்து எழுதுவதுதான்மேல். நெடுகிலும் சமாளித்துக்கொண்டுபோகமுடியாத ஒரு நடையில் எழுதும் விபரீத ருசியை அறவே அகற்றிவிடுங்கள். இயல்புக்கு மாறாமல், நீங்கள் நினைக்கிறபடியே எழுதிவாருங்கள். எவர் பின்னும் நீங்கள் செல்லவேண்டியதில்லை. கலாசாலை மாணவர்கள் சிறு வியாச தானம் செய்யலாம். நீங்கள் படித்துவரும் நூல்களில், சமயாசமயங்களில் மிக மனோக்கியமான உணர்ச்சிகளும் அதிபுன்னதமான சிந்தனைகளும் பொலிந்து விளங்கக் காணலாம். அப்பொழுது, அவற்றை உங்களுடைய தாய்மொழியில் வெளியிடப் பழகுவதால் வாசகர்கள் பன்மடங்கதிகமான பயனைத் தாங்களே பெற்றதாகக் கருதிக்கொள்வர். இந்த வேலையில், எவ்விதமான சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் நீங்கள் கருதி இடைஞ்சல்பட வேண்டியதில்லை. முதல் பிரதியில், இந்தி நெடுங்கணக்கும், ஒரெழுத்து ஈரெழுத்துச் சொற்களும் வெளிவந்தால் போதும்.

கலாசாலை மாணவர்கள்தாம், நாட்டில் அறிவுச் சுடர்கொளுத்த வேண்டிய சோதித் தூண்களாவர். இவர்களே, எழுத்தறிவில்லாத தம் நாட்டுச் சகோதர சகோதரிகளுக்கு எழுத்

தரிக்கும் இன்பக்கடலை முதன் முதல் மேற்போட்டுக்கொள்ளட்டும். முதலில் இவர்கள் வெளியே செல்ல வேண்டியதில்லை. தமது வீட்டிற்குள் ளிருந்தே துவக்கலாம். தமது சகோதரர்கள், தங்கை தமக்கையர், மனைவியர் முதலிய உறவினர்களை எடுத்துக்கொண்டு அவர்களுக்குக் கல்வியூட்டி வரலாம். இவர்களுக்கென்று தனியாகப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுகிறவரை காத்திருக்கவேண்டிய அவசியமில்லை. புனிதம்பெற்ற இந்தப் பொறுப்பு உங்கள் பங்கிற்கே விழுந்திருக்கிறது. பாரதம் பிழைத்திருக்க வேண்டுமாயின், பெண் கல்வி கண்டகண்டவிடமெல்லாம் தவிர்க்க வேண்டும். அங்ஙனமாக, முதல் விதைகளை நீங்களே ஏன் தூவக் கூடாது? உங்களுடைய மாகாணத்தில் எழுதப் படிக்கத் தெரியாமல் ஒரு ஸ்திரீ, ஒரு ஏழைகூட இல்லாமல் செய்துவிட வேண்டியது உங்களுடைய தலைச்சுமையாகும். பாரத தேவியின் திருமுகத்தைக் கறைப் படுத்தும் இவ்வறியாமையைத் துடைத்துத் தப்புரவாக்குங்கள். உங்கள் அண்டை வீடுகளில் உள்ள தோட்டிப் பெண்களுக்குக் கல்வி புகட்ட உங்களுக்குப் பயமாயிருக்கிறதா? அல்லது வெட்கமாக இருக்கிறதா? அங்ஙனமாயின் உங்களுடைய நடையுடை பாவனைகளுக்கும் தர்ம சாஸ்திரங்களுக்கும் நெருப்பு வைத்துச் சாம்பராக்கிவிடுங்கள். தாயின் தயையுடனும் பிரேமையுடனும், ஏழைகளை அணுகி அவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுங்கள்! ஹா, என்ன தெய்விகமான தொண்டு! வாலிப இந்தியர் சங்கத்துப் பத்திரிகையில் சிறுகச் சிறுக, பௌதிக சாஸ்திரம், ரசாயனம், இதிகாசம், சோதிடம், அர்த்த சாஸ்திரம், மனோ தத்துவம், சரீர சாஸ்திரம் ஆயுர்வேதம் முதலிய விஞ்ஞான கலைகளின் பாடங்கள் படிப்படியாக வெளிவரவேண்டும். அவற்றை எவ்வளவுசுலபமாகவும், மனோரம்மியமாகவும் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்து எழுதி வெளியிட வேண்டும். நாளேற ஏற பத்திரிகையின் நடையும் உயர்ந்து, சம்பூரண இலக்கிய தோரணையைத் தழுவிவிடலாம். அந்தப்பத்திரிகை இந்திலிபியில்வெளிவரட்டும் என்று ராமன் (நான்) சொல்வதற்குக் காரணம், சீக்கிரத்தில் இந்தி பாஷை அகில பாரத பாஷையாக மாறிவிடும் என்பதை உன்னியேயாம்.

பெண்களுக்கும் ஏழைகளுக்கும் கல்வியளிப்பது உங்களுடைய தவிர்க்கொணாத கடமையாகும். இக்கடமையை நீங்கள் செவ்வனே நிறைவேற்றி வைத்தீர்களானால், உங்களுடைய ஆன்ம உயர்வைக் கண்டு நீங்களே அதிசயித்துக் கொள்வீர்கள். ஆனால் மேலே சொல்லியதை விட இன்னும் அதிக முக்கியமான நேரான கடன் ஒன்று உளது என்பதையும் மறந்துவிடாதீர்கள். விவசாயம், கைத்தொழில் ஆகிய இவ்விரு துறைகளிலும் நன்கு முன்னேறியுள்ள நாடுகளுக்குச் சென்று, இக்கலைகளில் பயின்று தேர்ச்சிபெற்று, அவ்வறிவை உங்கள் நாட்டிலே நெடுக விதைத்துவிட வேண்டும். இதுவும் இன்றியமையாத ஓர் கடனாகும் உங்களுக்கு.

சமயம்.

இக்கட்டுரை மிகவும் நீளமாகப் போய்விட்டதோ? இதுவரையிலும் பொறுமையுடன் செவிமடுத்து அனுத்துப் போய்விட்டீர்களோ? அனுப்போ இல்லையோ, முடிவு வரையிலும் இருந்துகேட்டுத் தீர்த்துவிடுங்கள். தனக்குத் தெரிந்த ஒரு செய்தியைச் சொல்லித் தீர்க்குமளவும் ராமன் உங்களை நகரவிடமாட்டான். ஓ விருந்தினர்காள்! இன்றியமையாத கடமைகளை நிறைவேற்றுதற்காக நீங்கள் செல்லவேண்டி யிருக்கிறதோ? இருக்கலாம். ஆனால், எதைச்சொல்லுவதற்காக இந்த பண்டைப் படகோட்டி (இப்பெயர்கொண்ட ஒரு பாட்டு ஆங்கிலத்தில் உளது. இங்கு அது குறிப்பிடப்படுகிறது) பிறந்திருக்கிறானோ, அதை விள்ளாமல் உங்களை விடமாட்டான். ராமனுடைய உரையைக் கேட்பதைவிடப் பெரியதோர் கடமை உங்கட்கு ஏதும்இருக்க முடியாது.



மனை, சுற்றம், நாடு இவற்றின்மாட்டு நீங்கள் இறுக்க வேண்டிய கடன்கள், உங்களுடைய வினை இயல் ஆகும். பெருமை இலங்கும் எவ்வினையும் இருளில் இயற்றற்பாலதாகாது. இருள் வினைகள்தாம் இருளில் முடிக்கப்பெறும்; பிற வினைகள் ஒரு போதும் அவ்வாறு முடிக்கப்பெறா. நம்பிக்கை எனும் கனலைமூட்டிக்கொழுந்து விட்டெரியச் செய்யாமலும், அறிவென்னும் தீவர்த்தியைக் கையில் ஏந்திக் கொள்ளாமலும் இருப்பீர்களானால், நீங்கள் எந்தச் செய்கையிலும் வெற்றிபெற மாட்டீர்கள்; முன் நோக்கி ஒரு அடி உங்களால் எடுத்து வைக்க இயலாது. நாடோறும் உங்கள் செவிகளிலே முழங்கப்பெறும் குறிப்புரைகளும் விளக்க வுரைகளும் உடலளவினவாகும். ஆனால் உயிர்ச்சுடர் உள்ளொளிரப்பெறாத ஓர் உடல் தனியே தரித்துநிற்கக் கூடுமோ? வெற்றியுறும் இயக்கங்கள் அனைத்திற்கும் உயிர்ச்சுடர்போல்வது, உயிர்வன்மை நிரம்பிய நம்பிக்கையும் பற்றும் சுடர்விட் டொளிரும் அறிவேயாகும். மண்ணிலுறும் இன்பமல்லாமல் பிறிதில்லை என்போர், எதினும் ஒரு முடிவுபெறாது ஓயாத ஐயப்பாட்டினையே தலையாய்க்கொண்டோர், எல்லாம்உளவென்போர், கடவுள் இருக்கைமறுப்போர், கடவுளை அறிய ஏலாதால் கருதுவதில் பயனில்லை யென்போர் ஆகிய பலதிறப்பட்ட கொள்கையினரும் கூட, தம்மை யறியாமல் இச்சுடரின் ஒளி பெற்றிருந்ததாலேயே வெற்றிபெற்றனர். சில இடங்களில் கடவுள் உண்டு எனக் கொட்டி முழக்குவோரைவிடப் பன்மடங்கு மிகையாகவே மேற்குறித்த திறத்தினர் அறவாழ்க்கை வாழ்ந்துவந்திருக்கின்றனர். இதோ ஒரு ரப்பர் ஆலை இருக்கிறது. இதில் எத்தனை ஆயிரம்பேர் வேலை செய்து பிழைத்துப்போகின்றார்! இவ்வாலை ஏற்படுவதற்கு முந்தி இத்தனைபேருக்கும்போதிய வேலை இல்லாமலே இருந்தது. இத்தனைபேர் பிழைப்பதுமன்றி, இதனால் நாட்டின் கொள்வினைகொடுப்பினை பெருகுவதாகிறது. அதனை அடுத்துநாட்டில்செல்வம் குவிவதற்கு இடமேற்படுகிறது. இச்செல்வமோ திரும்பவும் நாட்டு ஏழைத் தொழில் மக்கட்கே நலம் பயப்பதாகிறது. கப்பற் குழுக்கள், இருப்புப்பாதைக் குழுக்கள், கடிதப் போக்குவரவு நிலையங்கள் முதலிய பலவற்றுக்கும் வேலை மிகையாகக் கிடைத்து ஊதியமும் வளர்கிறது. இப்பொழுது இவ்வினையின் மாண்பெல்லாம் எதைப் பொறுத்திருக்கிறது? ஒரு சிறு வைப்புமுறையைத் தான் இத்தனையும் பொறுத்திருக்கிறது. இவ்வைப்புமுறை பொய்த்துவிட்

டால் முற்கூறிய கட்டடங்கள் அனைத்தும் அடியற்று வீழ்ந்துவிடும். அதேபோல, மனை, கூட்டம், நாடு முதலிய பலதிறத்த வேலைகளும் ஒய்யாரமாக ஓங்கிவளரா. உங்கள் உள்ளம் ஒளியும் அழகும் நயமும்பெற்றுத் திகழவில்லையெனின், உங்கள் உள்ளம் அடியோடு மாறிவிடவேண்டும். உங்கள் நெஞ்சத்து மறு அமைப்பு (சீர்திருந்திய ஆக்கம்) பொலியப்பெற வேண்டும். சுருங்கக்கூற, உங்கள் உள்ளமெலாம் கடவுள்மணம் கமழ வேண்டும். கார்லைல் கூறுகின்றான்:—"நம்பிக்கை பெருமைசெறிந்தது; உயிர் அரும்புவது" என்ற நம்பிக்கை பிறந்த பொழுதே, ஒருநாட்டினர் வரலாறுகனிபயப்பதாய், அறிவுச்சுடர் சொலுத்துவதாய், பெருமை மின்னுவதாக மாறுகிறத். நேற்று இந்த அராபியர்கள் இருந்தநிலை என்ன; அவர்களிடையே ஒருவன் முகமது பிறந்ததென்ன! அந்த ஒரு நூற்றாண்டு என்ன! ஒருங்கே எல்லாவற்றையும் நோக்க ஒரு தீப்பொறி விழுந்துவிட்டாற்போலத் தோன்றவில்லையா? இதுகாறும் கண்ணுக்குப் புலனாகாது, கரிய மண்தரையாயிருந்த ஒரு இடத்திலே திடீரென ஒரு அனல் கங்கு பொறித்துவிட்டது போலத் தோன்றவில்லையா? என்ன விந்தை! இதுகாறும் கறுப்புமண்ணாயிருந்தது ஒரு நொடியில் வெடிமருந்தாக மாறிவிட்டது. என்னே! இவ் வெடியின் ஒலி விண்ணையும் கிழித்துக்கொண்டு சென்றுவிட்டது. தில்லி முதல் கிரனேது (ஓர் ஊர்) வரை ஒரே இடிமுழக்கம். அல்லாஹோ அக்பர்! கடவுளைவிடப் பெருமை படைத்தது ஏதுமில்லை. இந்த ஒரு இடைச்சல்தான்."

உண்மையில் எவைஎவை பெருமை பெற்றுப் பிறக்கின்றனவோ, அவை அனைத்தும் பேச்சுமூச்சற்றபேர் ஆழத்தினின்றுதான் முளைக்கின்றன. முற்றினும் எவன் ஒருவன் கடவுள் நினைவில் வாழவில்லையோ, அல்லது எவன் ஒருவன் ஒரு பகுதி அக்கருத்தில் வாழ்ந்து, முழுவதுமே அப்பொருள் தன்மைத்தாக ஆகிவிட வேண்டும் என்று ஆர்வங்கொண்டு பாடுபடவில்லையோ, அவன் யாவன் ஆயினும் ஆகுக. அவன் பூணும் வெளிமயக்குகளும் செல்வச்செழுமையும், எத்திறத்ததாகவேனும இருக்கட்டும். அவன் உயிர்வாழ்வாருடன் சேர்த்து எண்ணப்படமாட்டான். செத்தாருள்ளேயே வைக்கப் பெறுவான்.

ஹெ. ஸ்பென்ஸர் கூட சாகும் தறுவாயில் எழுதிவைத்த ஒரு நூலில், பின்வருமாறு குறித்துளான். இவ்வாறு எழுதத் தூண்டுகோலாயிருந்தது, ஹக்ஸ்லி பெரிய மூளை பெற்ற ஒரு விலங்கினிடத்துச் செய்து பார்த்த ஒரு ஆராய்ச்சி வினையாகும். "நமது நினைவு—உள்ளச் சான்றுக்கு உடலாக இருப்பன நமது உணர்ச்சிகள்; இவ்வுடலுக்கு ஒரு வடிவத்தின் அளவாகவே இருக்கிறது பகுத்தறிவு என்று நம்மால் சுட்டப்படும் பொருள். அதற்கு வழக்கமாக உள்ளம் உள்ளக்கிடை என்று நாம் வழங்கும்பொழுது, அதற்குச்சாறுபோன்றதைக்கீழே நழுவவிட்டு, சக்கைபோன்ற பகுதியையே கருத்தில் கொள்ளுகிறோம். நாம் நழுவவிட்ட, ஆனால் சாறு ஒத்த பகுதியே நமது உணர்ச்சிகள். உணர்ச்சியை (தலைவனாகவும்) ஏவுவோனாகவும், பகுத்தறிவை ஏவலாளியாகவும் கூறலாம். உணர்ச்சி மக்கள் வழக்கில் நெஞ்சம் எனப்பேர் பெறுகிறது. இதுவே நம்பிக்கைக்கும் கொள்கைக்கும் இருப்பிடமாகும். தவிர ஒரே



போழ்தில் இது வினைகளைச்செய்யுமாறு ஏவுதலையும் ஏவியவினைகளைச்செய்யவேண்டிய வன்மையையும் கொடுக்கிறது. ஏவுவோனைச் 'சும்மா' விட்டுவிட்டு, ஏவலாளியை மட்டும் செம்மை செய்வதால் மிக மிகச் சிறு பயனே பெறுவோம்" என்று ஸ்பென்ஸர் கூறி முடிக்கின்றான். அறிய வொண்ணாததால் கடவுளை நினைப்பதில் பயனில்லை என்போருள் பழுத்த பழமாகிய இவன் கூற்றும், தற்போழ்து(ராமதீர்த்தர் காலத்தில்) உள்ள உளநூற் புலவருள் தலை சிறந்து விளங்கும் ஜேம்ஸ் புலவனது முடிபும் என்ன அழகாக ஒத்துப்போகிறதெனப் பார்ப்போம். "கடவுட்கொள்கை வழிபெற்ற உணர்வு, புலன்வழி நேராகவந்த உணர்வைப்போன்று அத்துணை தெளிவாகவும் ஐயப்பாட்டிற்கிட மில்லாததாகவும் இருக்கிறது. சொல்லப்போனால், வழக்குப் பேசும் முறையானே பெறப்பட்ட முடிவுகளைக் காட்டினும் இவை எத்துணையோ தெள்ளியதாக, உள்ளத்து வந்ததாக இருக்கின்றன" என்று அப்புலவன் கூறுகிறான். 'போக்குவரத்து' அற்று ஆழ்ந்த இயல்பை மருவிவாழ்தல், உன் உள்ளக் கடலின் உள்தரைக்கே ஆழ்ந்து சென்றுவிடுதல், கண்ணாரக் கண்டு உணர்ந்து, உன் உள்ளத்தில் சுடரும் மெய்ப்பொருளாகி நிற்றல், உள்ளத்தில் ஒளிரும் மெய்ச்சுடரே வெளி இயற்கையிலும் ஒளி பரப்பித் தவழ்கிறது என்ற அறிவு பிறத்தல், அது நீ யாவாய் என்பதற்கு உயிர்ப் பொருளாகத் திகழ்தல்,—இவையெல்லாம் உண்மையில் வாழ்வு எனப்படுவது.

## மல்லை.

### இலக்கண விளக்க பரம்பரை திருவாரூர் சோமசுந்தர தேசிகர்.

ஏழுமாறு பல்லுயிர்களுக்கு எல்லையில் கருணைத் தாயனாள் தனியாயின தலைவரைத் தழுவத் தவஞ்செய்த திருப்பதியைத் தன்னிடத்தே கொள்ளத் தூய மாதவஞ் செய்த தொண்டை நன்னாட்டிலே திருக்கழுக்குன்றம் என்னுந் திப்பிய தலத்திற்குக் கீழ்பால் ஒரு யோசனை தூரத்திலே ஒரு சிறு கிராமம் கடற்கரைக்கணுளது. அங்குச் சென்று பார்த்தால், கண்ணைக் கவரக்கூடிய வனப்பு வாய்ந்த வேலைகளமைந்த கற்குன்றுகளைக் காண்பீர். ஒரு சிறு விஷ்ணுவாலயமும் ஒரு சிறு குளமும் சில பல வீடுகளுந் தவிர வேறொன்றுங் காணக்கிடையா. இவ்வூரின் பெயர் என்னவென்று விசாரித்தால் மாவலிபுரம் என்பர். 'கதையென்ன? இப்பெயர் எப்படி வந்தது' என்று கேட்டால் இதற்கு மகாபலிபுரமென்று பெயர் என்றும், பூர்வகாலத்தில் இராக்கதனாயிருந்தும் தான் செய்த உறுதியான தவத்தால் எல்லா உலகங்களையும் வென்று சக்கரவர்த்தி என்னும்பெயர் பெற்றுக் கொடையிற் சிறந்தவனான பலிச்சக்கரவர்த்தியால் கட்டப்பட்ட நகரமிது வென்பர்.

நூல்களை யாராயும்போது நந்திக்கலம்பகம் என்னும் நூலில் பின்வருஞ் செய்யுட்கள் காணப்படுகின்றன.

> புனத்துநின்ற வேங்கைமேற்
> புகைந்தெழுந்த வாளையின்
> சினத்தையன் றொழித்தகைச்
> சிலக்கை தீர்வீரமோ

மனத்துநின்ற வெஞ்சின
  மலைத்தலைகண் டதிர்ந்தமான்
வனத்தகன்ற கோபநந்தி
  மல்லை யாப்பதே. (௩௪)

தார்வட்டக் களிமருவும் விசாரத்
  தனரிடைத் தையல்வஞ்சிக்கின்
றேர்வட்டத் தண்மதி வெற்றிக் [றே
  கொடைகொடி தென்றுலதுபழுதன்
போர்வட்டச் சிலைபடையுடை நந்திப்
  பொருகடன்மல்லைப்புரவலனேயிப்
பார்வட்டத் தனிமதயானைக் குடையு
  பல்லவ ரடலேறே. (௩௪) [டையாய்

வெண்சங் குறங்கும் வியன்மாதர்
  முற்றத்து வெடிவேதான்
வண்சங் கொலிப்ப வல்லி
  விளையாடு மல்லை வேந்தன்
தண்சங் கோனந்தி தண்
  குடைக்கீழ் வாரிட
கண்சம் பிளியாகோ
  யாமோகட வோமே. எ௨

தளவுகண்டாய் பெறிகின்றிலஞ்
  சென்றினிச் சொல்லவல்ல
வளவுகண்டாய் வந்தாதிகண்டா
  யடல் வேழமுண்ட
விளவுகண்டாய் வன்னமேனிகண்டாய்
  விறன்மாறன் செய்த
களவுகண்டாய் நந்திமல்லையங்
  கான்றகழிக் கம்புளே. அஅ

இச்செய்யுட்களாலே இக்கிராமம் மல்லையெனப் பேர்பெற்று பல்லவ அரசாட்சியில் ஒரு பெரும் பட்டினமாக இருந்ததென அறியலாம். இப்பல்லவ ராசாட்சி கி. பி. மூன்றும் நூற்றூண்டு துலங்கி ஒன்பதாம் நூற்றூண்டு வரை நடந்தது. அவர்களுடைய நாடு வடக்கே கிருஷ்ணாநதி துவங்கி தெற்கு சோழ பாண்டிமண்டலங்களையுங் கவர்ந்திருந்தது. அந்த நாளில் சோழர் இருந்த இடமே தெரியாதபடி மறைந்திருந்தனர். பாண்டிய இராச்சியமோ தெற்கே ஒரு சிறு பகுதியுள் அடங்கியிருந்தது. இப்பல்லவர் காலத்திலேதான் கருநாட்டக் கடைசியர் தங்களிகாட்டுங் காவேரித் திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியினராகி ஈசனடியார்க்கு என்றுமியல்பான பணி செய்தே, ஆகில் புகழ் மன்னவன்பால் அணுக்கராய் அவற்காகத் தண்டு போய் வடபுலத்து, கீர்த்தியோடு வாழ்ந்து வந்த சளுக்கியனை புலிகேசி என்பானைத் தோற்கடித்து அவனது தலைநகராம் வாதாவித் தொன்னகரம் துகளாக்கித் தன்னரசற்குப் பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும் இன்னன எண்ணில கவர்ந்து கொணர்ந்தளித்த சிறுத்தொண்ட நாயனர் வாழ்ந்து வந்தது.

இக்காலத்து அரசாண்டவன் முதலாம் நரசிம்ம வர்மனெனப்படுவான். இவன் மிக்க கீர்த்திவாய்ந்தவன். வடநாட்டிலே ஹர்ஷவர்த்தன னென்றெரு பேரரசன் இருந்தான். இமயமலை முதல் விந்தியமலை வரைத் தன்னடிப் படுத்திய பின்னும் பொன்னசை பொருளாசைமேலீட்டால் அதற்குந் தெற்கேயுள்ள நாடுகளை அடிப்படுத்த எண்ணிப் படையெடுத்து வந்தான். அச்சக்கரவர்த்தியை புலிகேசி என்னுஞ் சளுக்கிய அரசன் எதிர்த்து முறியடித்து அவனைத் தன்னுட்டினூடே போகச் செய்தான். அப்படிப்பட்ட புலிகேசியை வெற்றிகொண்டு அவனது ஊரையழித்துச் சாம்பராக்கினன். இது வெறுங் கட்டுக்கதையல்ல. மறந்தும் பொய்யாத நமது சேக்கிழார் சுவாமிகளும் கூறியிருக்கின்றார். மேலும் இதனை கூரம், காசாகுடி உதயேந்திரம் முதலானவிடங்களிற் கிடைத்த செப்பேடுகளும் வலியுறுத்துகின்றனவென சரித்திர ஆராய்ச்சி வல்லார் எழுதியுள்ளார்.



இவ்வரசனுக்குப் பல பட்டப்பெயர்களோடு மாமல்லன் என்று ஒரு பட்டமும் உண்டு. அதனாலே இவ்வூருக்கு மாமல்லபுரம் என்று பேரிட்டானென்று தோன்றுகிறது. இவ்வரசனுடைய பெயர் அங்குக் காணப்படும் கல்வெட்டுக்களில் காணப்படுவதன்றி இவனது தந்தை, பாட்டனுடைய உருவமும் அதன் கீழ் அவன்பேரும் வெட்டப்பட்டிருக்கின்றன. ஆகவே கரிகாலன் காவிரிப்பூம்பட்டினத்தை எவ்வாறு வளம்படுத்தி வாணிபத் துறைமுக மாக்கினனே அவ்வாறே இந்நரசிங்கவர்மனும் பிற்றை நாளில் இப்பட்டினத்தை யுண்டாக்கி அழகுபெறச் செய்தான்.

பல்லவர்களுக்கு காஞ்சிபுரம் இராஜதானியாயினும் அது கடலுக்குப் பலகாவத தூரத்திலிருந்தது கொண்டு அதற்குநேரினும் அருகினுமுள்ள இவ்வூரை யுண்டாக்கினனென்று காண்கிறது. இதனை வெகு அழகாகச் செய்து அரசனும் இதிற் சிலகாலம் வசிப்பதுண்டென்பதைச் தெய்வத் திருவாளராம் சேக்கிழார் சுவாமிகள் தமது பெரிய புராணத்திலே 'தேசுடைய மலர்க்கமலச் சேவடியார் அடியார்தந் தூசு உடைய துகள்மாசு அழிச்குந் தலைமை பூண்ட' திருக்குறிப்புத் தொண்டாது புராணத்திலே நாட்டுவளம் கூறுங்கால்

கோடுகொண் டெழுந்திரைக்
  கடற்பவள மென்கொழுந்து
மாடுமொய்ச் சந்தனச்
  சினைமிசை வளரும்
நீடுநெய் தலுங் குறிஞ்சியும்
  புணர்நிலம் பலவால்
ஆடுநீள் கொடிமாட
  மாமல்லையே யனைய*

என்று பாடியுள்ளார். [இப்பாட்டிலே நெய்தலும் குறிஞ்சியும் புணர்நிலம் பல என்றது இது நெய்தல் நில வூராயினும் இதினுள்ள கற்குன்றுகளாலும் மற்றைய குறிஞ்சிப் பொருள்களாலும் இரண்டும் புணர்ந்த நிலமென்றூர் என்க.]

இதுவன்றி கார்மேக வண்ணனது அடியார்களில் பரமபக்தி பூண்டவரான திருமங்கை மன்னன் கடன் மல்லையென்னும் திருவாய்மொழியில் பின் வருமாறு கூறுவர்.

பாராயது உண்டுமிழ்ந்த பவளத்தூணைப்
  படுகடலி லமுதத்தைப் பரிவாய்க்கீண்ட
சீரானையெம்மா னைத்தொண் டர்தங்கள்
  சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங் [கரும்பினை
போரானைக் கொம்பொசித்த போரேற்றினைப் [னைப்
  புணர்மருத மிறநடந்த பொற்குன்றினை
காரானை யிடர்கடிந்த கற்பகத்தைக்
  கண்டதுநான் கடன்மல்லைத் தலசய [னத்தே.

நண்ணுத வாளவுண
  ரிடைப்புக்கு வானவரைப்
பெண்ணுகி அமுதூட்டும்
  பெருமானுர் மருவினிய

* இப்பாட்டின் ஈற்றடிக்கு மல்லை என்பது விரித்தலெனகொண்டு அங்குள்ள மாடங்கள் மலையையொப்பனவென்று பொருள் கூறுவது மரபு. ஆயினும் புராணத்தை ஊன்றி நோக்கிச் சரித்திரக் கண்ணுடி கொண்டு பார்ப்பார்களாயின் இதற்கு முன்னுள்ள இரு பாட்டிலும் திருஒற்றியூரையும், திருமயிலையையும் கூறியிருப்பது விளங்கும். நெய்தநிலத்தைக் கூறவந்த அவ்வூர்களையும் ஒருவாறு சுட்டிச் சென்றூர் என்பதும் சுவாமிகள் காலத்து இவ்வூர் நல்ல நிலையிலேயே இருந்ததென்பதும் நுனித்தறியலாம்.

தண்ணார்ந்த கடல்மல்லைத்
தலசயனத்து உறைவாரை
எண்ணாதே யிருப்பாரை
இறைப்பொழுதும் எண்ணோமே.

பிச்சிச்சிறு பீலிச்சமண்
குண்டர் முதலாயோர்
விச்சைக் கிறையென்னும்அவ்
விறையைப் பணியாதே
கச்சிக் கிடந்தவனூர்கடல்
மல்லைத் தலசயனம்
நச்சித் தொழுவாரை
நச்சென்றன் நன்னெஞ்சே.

இக்கடைசித் திருவாய்மொழியின் முதலிரண்டடிகளை யூன்றி நோக்கும்போது அந்நாளாண்ட அரசன் சமணமத வயப்பட்டுக் கிடந்தானென்பதும் அதனினின்றும் இத்திருப்பதியை யடைந்தானென்பதும் தோன்றும்.

இவ்வூரைப்பற்றியும் நாட்டு மக்களைப்பற்றியும் சீன யாத்திரிகரான ஹியூவான் த்ஸியாங்‡ பின்வருமாறு சி. யூ. கி. என்ற புத்தகத்தில் குறித்துள்ளார். இந்நாடு ௬௦௦௦ லீ சுற்றளவுள்ளது. இதன் இராஜதானி கிஞ்சிபுரம்.0 இது ௹-மைல் சுற்றளவுள்ளது. நாடு செழிப்புள்ளது. பயிர்த்தொழில் செவ்வனே நடைபெறுகிறது. பலவிதமான பூஞ்சோலைகளும் இளமரக் காக்களுமுண்டு. அங்கு விலையுயர்ந்த மணிகளும் மற்றும் பலவு முண்டு. வெப்பமதிகம். மக்கள் வீரமுடையவராவர். அவர்கள் வாய்மை—கண்ணியம் முதலானவைகளை அணிகலனுகவுடையவர். கல்வியைப் பெரிதும் மதிப்பவர். பாஷையிலும் எழுத்திலும் மத்திய இந்தியாவிலுள்ளதைப்போலவே காண்கிறது. அவரது சீடரான ஹுவி லீ என்ற சமணர் தமது ஆசிரியரது பதினறு வருடப் பயணத்தையும் குறித்துள்ளார். அந்நூலுக்கு ஹவி-லீ என்றே பெயர். அதனில் இப்பாகத்தைக் கூறும்போது காஞ்சிபுரம் கடல்மூலமாகமூன்று நாட் பயணத்திலுள்ள சிம்மளத்துக்குப் புறப்படும் துறைமுகமென்பர். இவைகளினுலே கடன்மல்லை என்ற மாமல்லபுரம் பல்லவர்களில் சிலருக்கு இராஜதானியாகவும் காஞ்சிபுரத்திற்குக் கடற்றுறைப் பட்டினமாயும் இருந்தது என்பது நிச்சயமாகிறது. இனி இவ்வூர் இப்பொழுது எவ்வாறிருக்கிறதென்று கூறிவிட்டு முன்னுளில் எவ்வாறிருந்ததென விவரிப்பேன்.

(தொடரும்.)

---

* இவரை ஹியூன்ஸாங், யூவான் சுவான், யூவன்சங், ஹியூன்தஸாங் என்று பலவிதமாக அழைப்பர். 0 ஆங்கிலத்தில் சீனபாஷையிலிருந்து மொழிபெயர்த்த பீல்(Samuel Beal) என்பார் இது Kin-chi-pu-lo என்று எழுதப்பட்டிருக்கிறதென்றும், சீனபாஷையிலிருந்து முதன்முதலில் மொழிபெயர்த்த ஜூலியன் என்ற பிரஞ்சுக்காரர் இதனைக் காஞ்சிபுரமென்று கொண்டதாலே தானும் அவ்வாறு கொண்டதாகவும், இந்த கிஞ்சி என்பதற்கு கடற்றுறை என்று பொருள் என்றும், இதினின்றும் இலங்கை கடலில் மூன்று நாட் பயணமென்றும், ஆகவே இது காஞ்சிபுரமாயிருக்க முடியாதென்றும் எழுதுகிருர். அன்றியும் காஞ்சிபுரத்திற்கு அந்நாளில் கச்சிமாநகர் என்றும், கச்சிப்பேடு என்றும் பெயராதலால் இச்சீன யாத்திரிகன் வந்து சேர்ந்தது கடன்மல்லையே யாகவேண்டும். இதனையுணராது பலரும் சீனயாத்திரிகன் பிழைபட்டானென்று கருதுவர். ஹவீலீ இதே கருத்துடைமை காண்க.

# இயற்கை வனப்பும் திருக்கோவையாரும்.

—:(0):—

பண்டிதை—ந. பத்மாசனி அம்மாள்.

இவ்வுலகமானது இயற்கை தேவியின் தெய்விகக் கோலங்களாற் பொலியப் பெற்றிருக்கின்றது. மலை, கடல், யாறு, சந்திரன், சூரியன், நக்ஷத்திரம், காற்று, மனிதன், விலங்கு, புள் ஆதிய யாவும் இயற்கையின் கோலங்களே. இவைகளையும் இவற்றின் செயல்களையும் உற்றுநோக்குங்கால் நோக்குமவர்தம் மனப்பான்மைக் கேற்ப ஒவ்வொன்றும் பேதமுற்றுத் தோற்றப்படுதலை யாம் காண்கின்ரும். ஒருவனுடையமனம் துன்பமான நிலைமையிலிருந்தால், இயற்கைத் தோற்றங்களும் துன்பமயமாகவே யிருக்கும். இன்பமான நிலைமையிலிருந்தால் இயற்கைத் தோற்றங்களும் இன்பமயமாகவே யிருக்கும்.

இத்தோற்றங்களை யுற்றுநோக்குவதாலுண்டாகும் நுண்ணுணர்ச்சி காரணமாகப் புலப்படும் உள்ளத் துணர்வைக் கவிஞர் கவிகளாகப்புனைந்திருக்கின்றனர். இங்ஙனமாகக் கவி புனைந்த கவிஞர் பலராவர். இவர்களாலியற்றப்பட்ட நூல்களும் பல. இவைகளுளெல்லாம் நம் சமய குரவரான மாணிக்கவாசக சுவாமிக ளருளிச்செய்த திருக்கோவையார் என்னும் நூலானது மிக மிகச் சிறந்ததோர் நூலாகும். இந்நூலில் இயற்கைப் பொருட்களெல்லாம் கண்டார் மனதைக் கவரும் பான்மையவாய்ப் பொலிந்திருத்தலைக் கற்பவர் யாவரும் உணர்வர்.

மணிவாசகப் பெருமானர் இறைவன் றிருவருளைத் தாம் பெற்றகாலையிலுண்டாகிய அநுபவ ஞானத்தை இயற்கைப் பொருள்களி லமைத்து அகப்பொருட்டுறை தழுவுங் கோவைப் பாடல்களாகப் புனைந்தருளினர். இந்நூல் "களவிக் கொத்து" என்று சொல்லப்படும் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடம்படுத்தல், இருவரு முள்வழி யவன் வரவுணர்தல், முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், நாணநாட்டம், நடுங்க நாட்டம், மடற்றிறம், குறையப்புரைத்தல், சேட்படை, பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித் தணத்தல், உடன்கொண்டேகல், வரைவு முடுக்கம், வரைபொருட்பிரிதல், மணஞ்சிறப்புரைத்தல், ஓதற்பிரிவு, காவற்பிரிவு, பகைதணிவினைப் பிரிவு, வேந்தற் குற்றுழிப் பிரிவு, பொருள்வயிற் பிரிவு, பரத்தையிற் பிரிவு ஆகிய இருபத்தைந்து அதிகாரங்களை யுடையதாகவும், காண்டல் முதலிய நானூறு துறைகளையுடையதாகவும் நானூறு செய்யுட்களால் யாக்கப்பட்டிருக்கின்றது. இப்பாடல்கள் அன்பின் முதிர்ச்சியாகிய கோவைத் துறைகளாகும்.

இந்நூலில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்ஆகிய ஐந்தவத்தைகளும் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தலாகிய ஐந்நிலங்களாகவும், பக்குவான்மா தலைமகனுகவும், பசும்பொருள் தலைமகளாகவும், ஆன்மபோதம் பாங்கனுகவும், திருவருள் பாங்கியாகவும், திரோதாயி செவிலித்தாயாகவும், பவ

கற்றுயாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இயற்கைப் புணர்ச்சி முதலான இருபத்தைந்து அதிகாரங்களும் முறையே சற்குரு தரிசனம், ஆன்மபோத தரிசனம், அன்பாலானந்தம் பெற்றநுபவித்தல், அருள் சிவங் கலந்து உயிர் தரிசனஞ் செய்தல், சிவமுயிர் விரவியதருளே தேறல், சிவமுயிர்கூட அருள் வினவுதல், சிவமுயிர் கலத்த லருள் பணியாற் காண்டல், அருளுயிர்ப்பக்குவ மறிந்து வியத்தல், சிவமே கருணை யென்றருள் நோக்கல், உயிரின் புறவே யருளொடுரைத்தல், உயிர்ப்பறிவின்புக்கருள் புகன்றிடுதல், கிடையா வின்பத்தருமை காட்டல், இயற்கை போற் சிவத்தோடியைவுறக் கூட்டல், அருளே சிவத்தோடாக்கியவருமை கருணை பலவுமெடுத்துக் காட்டல், சிவனது கருணை யருள் தெரிவித்தல், அருளுயிர்க்கருமை யறியவுரைத்தனுமானந்தத்திடை யழுத்துவித்தலும், சிவனது கருணை தெரிய வுரைத்தல் இன்பம்பெற அருளொடுத்தியம்பியது, கருணையருள் திரோதைபரையின்புணர்தல், உயிர் சிவ மணம்பெற்றுண்மையாதல், பூரணவின்பத் திறம்பாராட்டல், இன்பத்திறத்தை யெங்குங் காட்டல், இன்பக்கனமன்றி வேறிலையுலகென்றல், இன்பாராமை யன்பேயென்றல், தானதுவதுதானுகுந் தன்மை, அறிவு பூரணமாகி யின்பாதல், என்னும் பொருள்பட வமைக்கப்பட்டிருக்கின்றன. காண்டல் முதலிய துறைகளும் குருவின் திருமேனி காண்டல் முதலான பொருள்பட அமைக்கப்பட்டிருக்கின்றன.

இக்கோவையாரின் முதலில்,

> திருவளர் தாமரை சீர்வளர்
> காவிக ளீசர்தில்லைக்
> குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
> காந்தள்கொண் டோங்குதெய்வ
> மருவளர் மாலையொர் வல்லியி
> னெல்கி யனநடைவாய்ந்
> துருவளர் காமன்றன் வென்றிக்
> கொடிபோன் றொளிர்கின்றதே.

என்னும் கவி சொல்லப்பட்டிருக்கின்றது. இக்கவி தலைமகன் தலைமகளைக் காண்டல் என்னுந் துறையின்பாற் படும்.

இதன் பொருள்:—திருவளரும் தாமரைப் பூவையும், அழகு வளரும் நீலப்பூக்களையும், ஈசரது தில்லைவரைப் பின்கணுண்டாகிய பூங்குமிழின் நிறம் வளரும் பூவினையும், கோங்கரும்புகளையும், பசிய காந்தட் பூக்களையும், உறுப்பாகக்கொண்டு மேம்பட்ட தெய்வமணம்வளரும்மாலை ஒருகொடி போல் நடந்கி அன்னத்தினுடைய நடை வாய்ந்து வடிவு வளருங் காமனுடைய வென்றிக் கொடிபோன்று விளங்குகின்றது. இஃதென்ன வியப்போ என்பதே.

இக்கவியின்கண்ணே தாமரை, நீலம், குமிழ், கோங்கு, காந்தள், கொடி, அன்னம் ஆகிய இயற்கைப்பொருள்க ளெல்லாம் அழகுடன் புனைந்துரைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் இருத்தற்குரிய இடம் ஒரு பூஞ்சோலையாகும். கண்ணைக் கவரும் வனப்பினையுடையதான ஒரு பூஞ்சோலையையுற்றுநோக்கும்போது பார்ப்பவர்தம் மனத்திலுள்ள தோற்றமானது அவ்வியற்கைத் தோற்றத்திலும் பொலிந்திருக்கக் காணலாம். அந்தச் சோலை ஆண்டவனுடைய அருளுருவமாகவும் தோன்றும், ஓர் பெண் கொடியாகவுந் தோன்றும், பூஞ்சோலையாகவுந் தோன்றும், இன்பமயமயமாகவுந் தோன்றும், இன்பமயமாகவுந் தோன்றும். பூஞ்சோலை



இயற்கையானபூஞ்சோலையே. ஆனால் மனத்தின் தன்மையே இயற்கைத் தோற்றத்தைப் பேதமுறக் காட்டுகின்றது.

மாணிக்கவாசக சுவாமிகளும் தில்லையி னெல்லைப் புறத்துள்ள ஓர் பூஞ்சோலையைக் கண்ணுற்றனர். அக்காலையில் அச்சோலையானது ஆண்டவன் அருளுருவமாக அவருடைய கண்ணுக்குத்தோற்றப்பட்டது. கண்டதும் அப்பரம்பொருளின் திருவருளைப் பெற்ற காலத்துத் தாம் அனுபவித்த இன்பத்தை இயற்கைப் பொருள்களி லமைத்துக் கவிகளாகப் புனைந்தருளினர். சிவானந்தாநுபவத்தின் உணர்ச்சி மேலீட்டாற் பாடியருளப்பெற்ற இப்பாடல்களே கோவைத் துறைகளாகும். இவற்றின் உண்மைப் பொருளை இறைவன் திருவருள்பெற்ற பக்குவான்மாக்க ளுணர்ந்துகோடலேயன்றி ஏனையோருணர வல்லாரல்லர்.

இயற்கைப் பொருள்களெல்லாம் பார்ப்போர்தம் மனநிலைமைக்கேற்ற தோற்றங்களாய் விளங்குகின்றன. அங்ஙனமே இயற்கை நூலாகிய திருக்கோவையாரும் பயில்வார் தம் மனநிலைமைக்கேற்ற தோற்றமுள்ளதாய் விளங்குகின்றது.

இதனை,

> ஆரணங் காணென்ப ரந்தணர்,
> யோகிய ராகமத்தின்
> காரணங் காணென்பர், காமுகர்
> காமநன் னூலதென்பர்,
> ஏரணங் காணென்ப ரெண்ணர்,
> எழுத்தென்ப ரின்புலவோர்,
> சீரணங் காயசிற் றம்பலக்
> கோவையைச் செப்பிடினே.

என்னும் பெரியோர் திருவாக்கானுமினிதினுணரலாம். அந்தணர் ஆரணமெனவும், யோகியர் ஆகமத்தின் காரணமெனவும், காமுகர் காம நூலெனவும், எண்ணர் ஏரணமெனவும், புலவர் எழுத்தெனவும் சொல்லுந் தன்மையையுடையதா யிந்நூலிருக்குங் காரணமென்ன? கண்டாரால் விரும்பப்படும் தன்மைவாய்ந்த இயற்கை வனப்புக்க ளெல்லாம் கோவையில் நிரம்பியிருக்கின்றமை யல்லவா? திருவென்னும் மங்கலச்சொல் முதலாகச் சுவாமிகள் எடுத்துக்கொண்டமையும், அச்சொல்லுக்குப் போசிரியர் "கண்டாரால் விரும்பப்படுந் தன்மை"யெனப் பொருளுரைத்தமையும் ஈண்டுக் கவனிக்கப்படத் தக்கனவாகும்.

பொழில்கண்டு மகிழ்தல் என்னுந் துறையின்பாற்பட்ட

> காம்பிணை யாற்களி மாமயி
> லாற்கதிர் மாமணியால்
> வாம்பிணை யால்வல்லி யொல்குத
> லான்மன்று மம்பலவன்
> பாம்பிணை யாக்குழை கொண்டோ
> ணயிலைப் பயில்புனமுந்
> தேம்பிணை வார்குழ லாளெனத்
> தோன்றுமென் சிந்தனைக்கே.

என்னும் பாடலின்கண்ணே தலைமகள் பயிலும் புனத்தினழகு தலைமகளாகத் தலைமகனுக்குத் தோற்றப்பட்டதெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்ஙனமாகவே பிற பல துறைகளிலுந் தலைமகனுடைய மனோநிலைமைக்கேற்ப இயற்கை வனப்புக்களும் புனையப்பட்டிருக்கின்றன.

இயற்கையாகிய அறிவுநூல் ஒவ்வொரு மனிதனுடைய கண்களுக்கு முன்னும் இருக்கின்றது. ஆனால் அதன் தன்மையைக் கற்றுணர்ந்தவர் சிலரினும் சிலரே. தமிழ்க் காவியங்களில் இயற்கை தேவியின் கோலங்களெல்லாம் பலபடப் புனையப்பெற்றிரு

த்தலை யாம் காணலாம். இவ்விபற்கையாகிய அறிவு நூலை யுணர்ந்தவனே புலவன் என்று சொல்லப்படத் தக்கவன். இவனையே தமிழணங்கு தன் சீமந்த புத்திரனைக் காதலிப்பாள்.

---

# * மணிமரம்.

## (The Pearl Tree.)

சா. நா. சா. அருணாசலச் செட்டியார்.

எம். எமில்கோவ் நான்சி என்னுமிடத்தில் மனோதத்துவப் பயிற்சிக் கல்லூரி (School of Appled Psychology)கண்டவராவர். ஒருவன் உறுதியுடனும் நம்பிக்கையுடனும் கூறிக்கொள்ளும் மந்திரத்தால் (Conscious auto-suggestion) எத்துணை நன்மைகளடையப் முடியுமென்பதை அவர் அண்மையில் இலண்டன் மாநகரிலியற்றிய சொற்பொழிவிற் குறிப்பிட்டார். ஒருவன் தனது கண்களை மூடிக்கொண்டும் நோயுள்ள இடம் நோக்கிக் கைகளை நீட்டிக்கொண்டும் "அது சென்றுகொண் டிருக்கிறது" (It's going) என்னுஞ் சொற்களைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே யிருந்தால் உடல் நோயையும் தானே குணப்படுத்திக்கொள்ள முடியும் என அவர் வற்புறுத்தினர். "நான் செய்வேன்" (I will) என்ற சிங்கநாதத்துடன் எழுந்த பெரியோரின் செயற்கரிய செயல்களை—வியக்கத்தக்க முடிபுகளைச் சரித்திரம் கொண்டிலங்குகின்றது. "நான் அன்பு பாராட்டுகிறேன்" (I love) என்றெழும் அன்பின் ஆற்றலை, அற்புதத்தை நம்புவது கூடாதா? புராணங்களிற் கூறப்பெறும் கண்ணனின் அற்புதங்களெல்லாம் இத்தகையனவே. இசைக்கண்ணன் அற்புதக் கண்ணனாகவு மிலங்குகின்றான். அவனது அற்புதங்கள் அன்பையேவெளிப்படுத்துவன. அவன் தாயார்க்கு அவன் ஒருஉலகத்தோற்றத்தைக் காட்டுகிறான். அவன் அவளிடம் அன்புபாராட்டுகிறான். போர்க்களத்தில் அருச்சுனனுக்குத் தன்னை வெளிப்படுத்துகிறான். அவனிடம் அன்பு பாராட்டுகிறான். அத்தோற்றம் அவன் அறத்தாற்றில் ஒழுக வலியையும் உற்சாகத்தையும் தன்னம்பிக்கையையும் அளிக்கிறது. பழம் விற்றுண்ணும் ஏழை ஒருவனுக்கு அவன் சிலஅரிசிகளைப்பொன்மணிகளாகமாற்றிக்கொடுக்கிறான். கூனியொருத்தி(குப்ஜா)அவனால் உருத்திருத்தப்பெற்று அழகாக ஆக்கப்படுகிறாள். கண்ணன் ஏழைகளின் அன்பனுவன். நூல்களில் அவனைப்பற்றிக் கூறப்பெறும் ஒவ்வொரு கதையும் அவனது வரம்பில் பேரருளை விளக்குவனவாகவே யிருக்கின்றனவென நான் உணர்கிறேன். நான் அறிந்தவரையில் அவனது அற்புதங்கள் கேவலம் ஆற்றலைக் காட்டுவனவாக மட்டுமில்லை. அவை ஒழுக்கமுடையனவாகவு மிலங்குகின்றன. அவ்வற்புதங்கள் அவன் மக்கட்பகுதியினரிடம் கொண்டிருக்கும் பேரருளை வெளிப்படுத்துவனவாகும்.

சில்லாண்டுகட்கு முன்னர் இத்தகையவோர் கதை ஆங்கில உடையில் வெளிப் போந்தது. அந்நாடக நூலின் ஆசிரியர் ஆர். சி. திரெவெல்யான் (R. C. Trevelyon) ஆவர். அதற்கு "மணிமரம்" என்னும் பெயர் புனையப்பட்டிருக்கிறது. இடம் கோகுலமும் பிருந்தாவனமுமாகும். அதன் கருத்து அழகாயிருக்கிறது. நாடகத்தின்ஒவ்வொருகாட்சியும் இந்தியப் போக்கைத் தழுவியிருப்பின் நன்றாயிருந்திருக்குமென நான் நினைக்கிறேன். கண்ணனதுதாயாகிய யசோதை, கையில் ஓர் கோலுடன்வீட்டின் நுழைவாயிலில் நின்றுகொண்டிருப்பதாகக் கூறப்படுகிறாள். அந்நூலில் கண்ணன் குழல்பற்றிய குறிப்புகளும் வருகின்றன. ஆனால் அதனிசையை ஆசிரியர் தெளிவானதாகவும் களிப்புத் தருவனவாகவும்(Clear and gay) உருவகப்படுத்துகிறாரேயன்றி வேறில்லை. சிறுவர்கள் கதவுகளை விசையுடன் தள்ளிக்கொண்டு யசோதையைக் கடந்து வீட்டிற்குள் நுழைய முயற்சிப்பதாகக் கூறப்படுகிறது. கண்ணனை அவனது தாயார் விரும்பினும் இல்லையெனினும் வெளியிற்கொண்டு சென்று விடுவதாய் அவர் கூறுவதாகவும் இயம்பப்படுகிறது! பிறகு இருடிகளைப்பற்றிய சில குறிப்புக்கள் வருகின்றன. அவை இந்திய மனப் போக்கிற்கு ஒவ்வாதனவாகும். "கிட்டுணு இவ்வசையாத இருடித் தனத்தினின்றும் என்னைக் காக்கிறார்" என்று ஓர் இருடி கண்ணனைக் குறிப்பிடுகிறார். கண்ணன் ஓர் இருடியினிடம் கீழ்க்கண்ட விநோதமான வார்த்தைகளைக் கூறுகிறான், "கிழவனே! என்னைப்பற்றி ஒரு வார்த்தை கூட அவர்களிடம் சொல்லக்கூடாது. தலையைக்கூட அசைக்கலாகாது. வேர் போன்று ஊமையாக அசையாதிரு. நினைவிலிருந்துவாயாக!"



ஆயினும் பல பாகங்கள் தூய்மையான இந்தியப் போக்கையுடையனவாய், கண்ணனது இயல்பை யழகாக விளக்குவனவா யிருக்கின்றன. கண்ணன் விளையாட்டிலும் பசுவினிடத்திலும் நீலவானிலும் கொண்டுள்ள அன்பு முதன்முதலிலேயே விளக்கப்படுகிறது. யசோதை தன் குழந்தையிடம் தெய்விகக்காட்சியைக் காண்பதை ஒருபாகம் குறிக்கிறது. கண்ணனை விளையாடுவதற்கு அழைத்துக்கொண்டு போக வந்த சிறுவர்களிடம் அவள் பின்வருமாறு கூறுகிறாள். "ஆண்டவன் அவனுள் அடிக்கடி நுழைந்து ஆண்டுச் சிறிது நேரம் வதிவதுபோன்று அவன் எல்லாவற்றினும் அலட்சியமாயிருப்பதாய் எனக்குச் சில நேரங்களில் தோற்றுகிறது."

இந்நாடகத்தின் முக்கிய நோக்கமானது இராதையைக் காப்பாற்றக் கண்ணன் அன்பால் அற்புதங்களியற்றுதலாம். அவன் அவளிடம் காதல் கொண்டுள்ளான். அவள் இறுமாப்படைந்துவிட்டாள். திங்கள் வானில் ஒளி வீசுகிறது. அவன் பிருந்தாவனத்தி னுறைகிறான். திங்களினும் இராதை மிக்க அழகுடையாளென்றும் விளையாடுத் தோழனாகிய தன்னை யவள் அழைக்கிறாள் என்றும் அவன் அங்குப் பாடிக்கொண்டிருக்கிறான். ஆனால் அவள் அங்கு இல்லை. அவனைப் பிரிந்து கோகுலத்தில் வதிகின்றாள். கண்ணன் சுதாமனை அவளிடம் தூதுவிடுக்கின்றான். அவளது ஆரத்தினிருந்ததல் காதணியிலிருந்ததல் ஒரு சிறிய முத்து அவனுக்கு வேண்டுமென்றும் அவள் அளிப்பின் அதை விதைத்து ஆயிரக்கணக்கான முத்துக்களை அதினின்று

---

* ஆசிரியர் வாஸ்வானி எழுதியதன் மொழிபெயர்ப்பு.

முண்டாக்கி அவன் அன்பு பாராட்டுகிற பசுவுக்கு அலங்கரிப்பதாகவும், அவள் அளிக்கும் ஒரு முத்துக்குப் பதிலாகப் பல முத்துக்கள் அவளுக்குத் திரும்ப அளிப்பதாகவும் கண்ணன் இராதைக்குக் கூறியனுப்புகிறான். மணிமரம் ஒன்று வளர்ப்பதற்காக இராதையை ஓர் மணி யனுப்பும்படி கண்ணன் வேண்டுகிறான். சுதாமன் இச்செய்தியை இராதையிடம் கொண்டுசெல்கிறான். இராதை இறுமாந்திருக்கிறாள். கண்ணனிடம் வெறுப்பாய் அவள் பேசுகிறாள். கண்ணன்பெயரைக்கேட்பதற்குந் தனக்கு வெறுப்பாயிருக்கிறதென அவள்கூறுகிறாள். கண்ணன் ஓர் அறிவிலாத இடையன் என அவள் இழித்துரைக்கிறாள்! பொருளை மதியாது அழிக்கும் ஓர் அரசனும் பசுவை மணியாரத்தால் அலங்கரிப்பதென்ற இத்தகைய மூடத்தனமான செய்கையை நினைத்திருக்கவும் முடியாது. மலர்களைப் போன்று முத்துக்கள் மிக எளிதாகவும் மலிவாகவும் கிடைக்கக் கூடியனவல்ல!" என அவள் இயம்புகிறாள். முத்து அளிக்க மறுக்கிறாள். சுதாமன் கண்ணனிடம் போந்து எல்லாவற்றையு முரைக்கிறான். கண்ணன் எவ்வளவு வருத்த முறுகிறான்! அவனது குழல் மக்கள் உளம் என்னும் முத்தைத் தேடுகிறது! அவனது அன்பிற்கு உளமானது இசைய மறுக்கும்பொழுது அவன் எத்துணை வருத்தமுறுகிறான்! கிறித்தவ நூல்களில் இயேசு "துக்கம் நிரம்பிய மனிதன்" (The man of sorrows) என்று கூறப்படுவதற்குக் காரணமில்லாமலில்லை. ஆண்டவனுளத்தில் சோகமுண்டு. ஏனெனில், யாவும் அவைகளிருக்க வேண்டியபடி யில்லை.

ஆண்டவனது அந்தமில் பேரின்பமானது உலகம் என்னும் பலிபீடத்தில் நாளும் அர்ப்பணம்செய்யப்படுகிறது. இல்லையெனின் இயற்கையும் மனிதனும் அழகிலும் வலிமையிலும் யாங்ஙனம் வளருதல் இயலும்? கண்ணன் வருத்தமுறுகிறான்; நோயுறுகிறான். அவனது தாயார் அவனை என்ன வேண்டுமெனக் கேட்கிறார். "அன்னையே! ஓர் சிறிய பொருள். உனது ஆரத்தினின்றும் ஓர் சிறிய முத்தே யான் வேண்டுவது. அவ்வொன்றிற்குப் புதிய பல யான் உனக்கு உதவுவேன்" என அவன் உரைக்கிறான். "இதுதானா? நீ அதைஎதற்காகவேண்டுகிறாய் என்பது எனக்குத்தெரியவில்லையெனினும் அதற்காக வருந்துதல் உன்னை நோய்க்குள்ளாக்கி விட்டபடியால் இதோ! உனக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக்கொள்" என யசோதை இசைகிறாள்.

கண்ணன் நிலத்தைத் தோண்டி அதில் முத்தை ஓர் வித்தாக விதைக்கிறான்! "கண்ணு! கண்ணு!! என்ன செய்துவிட்டாய்? எனது முத்தைப் புதைத்து விட்டாயே! உனது எளிய வயது முதிர்ந்த அன்னையைக் கேலி செய்ய வெண்ணினையோபோலும்!" என யசோதை வருத்தமுறுகிறாள். கண்ணன் அதைக்கேட்டு வறிதே நகைக்கிறான். அருச்சுனன் போர்க்களத்தில் உறவினர்முன் துன்புற்று நிற்கையில் கண்ணன் அவ்வாறே சிரித்தான். "எனது உறவினரை நான் எங்ஙனம் கொல்வேன்?" என அருச்சுனன் வினவினான். கண்ணன் நகைத்தான். நாம் துன்பக்கடலில் ஆழ்ந்து கிடக்கும்போது கண்ணன் சிரிக்கிறான்! துன்பம் சென்றுகொண்டிருக்கிறது. இழத்தல், துன்பம் இவைக



ளிடையேதான் வாழ்க்கை தூய்மையடைகிறது என ஆண்டவன் அறிகிறான். நாம் மாயையாற் பிணிக்கப்படுதலைக்கண்டு அவன் சிரிக்கிறான். நமது மாயையை அவனது மாயையின் துணைகொண்டு கடக்க அருளுகிறான். அவனது மாயை அன்பின் ஆற்றல், அருளின் அற்புதம் ஆகும். யசோதை குழப்பமும் கோபமுமுற்றிருக்கும்போது அவன் சிரிக்கிறான். அவனது மாயையிற் சிறிதை யவளுக்குக் காட்டி அவளது மாயையை வென்றுவிடுகிறான். குழலிசைக்கிறான். முத்து அவனை வணங்குகிறது. அவனது இசையின் அலைகள் மணியைச் சென்றடைகின்றன. விதைபோன்று ஓர் வேர் வெடிக்கின்றது. கண்ணன் இன்னும் குழலிசைத்துக்கொண்டேயிருக்கிறான். அதிகமான அலைகள் அங்கு வீசுகின்றன. நிலத்தினின்றும் அது வெடிக்கிறது. மணிமரம் உண்டாய் விட்டது! குழல் இனிய இசையமுதைப் பொழிந்துகொண்டேயிருக்கிறது. மரம் வளர்கிறது! பெரிதாகிறது! எண்ணிறந்த முத்துக்களையுடைய தாய் உயிருடன் தழைக்கிறது! கண்ணன் "அன்னையே! இதோ, உனது மணி" என்கிறான். புதிய ஓர் முத்தாரத்திற்கும் காதணிக்கும் பல முத்துகள் அவளிடம் கொடுக்கிறான். சிறுவர்களிடம் அவரது பசுக்களுக்கும் மாலை செய்திடுவதற்குப் பல மணிகளளிக்கிறான். இராதை எப்படியிருக்கிறாள்? மணிமரத்தைப் பார்த்த அவளது தோழிகளில் ஒருத்தி கண்ணனின் அற்புதத்தை அவளிடம் தெரிவிக்கக் கோகுலத்துக்குச் செல்கிறாள். கண்ணனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படியும் ஒரு வார்த்தையிலேயே மனமகிழ்ந்து அவன்

ஏற்றுக்கொண்டு விடுவானென்றும் அவள் இராதைக்கு அறிவுறுத்துகிறாள். ஆனால் இராதை இன்னும் கர்வமுடையவளாகவேயிருக்கிறாள். "அவனது மன்னிப்பா! ஒருபோதும்முடியாது" என அவள் தனது தோழியிடம் கூறுகிறாள். இராதை இறுமாந்திருப்பினும் முத்து மரத்தைக் காண வேண்டுமென்னும் நசை அவளுக்கு இருந்தது. அவள் பிருந்தாவனத்துக்கு வருகிறாள். மரத்தைக் காணக் கூடவில்லை. அது மறைந்துவிட்டதா! ஒரு அரசமரத்தினடி (Peepul tree) யில் உட்கார்ந்துகொண்டிருக்கும் ஓர் இருடியினிடம் "ஒன்றையும் காணவில்லையே" என அவள் உரைக்கின்றாள். "உளத்தில் கர்வமிருந்தால் பார்க்க முடியாது. கர்வம் கண்களைக் குருடாக்கிவிடுகிறது" என அவர் விடையிறுப்பது கவனிக்கற்பாற்று. எளிமையுடையானே ஞானராஜ்யத்தில் நுழைகிறான் இப்பொழுது இராதையின் மனம் மாற்ற மடைகிறது. அவள் அவ்விருடியினிடம் "கர்வத்தை விட்டுவிட்டேன். கண்ணனை உள்ளன்புடன் தேடுகிறேன். காணவில்லையெனின் இறந்துபடுகிறேன். ஆ! அவனை யெப்படிக் காண்பது? கூறீர்களோ?" என இரங்குகின்றாள். இராதை தனது குற்றத்திற்காக மனமுடைந்து தான் வெறுத்த நாயகனைக் காண அவா மிகுதியுடையளாயினள். நன்னிருள். அவள் தனியாக இருக்கிறாள். மிக்க வருத்தத்துடன் பின் வருமாறு கதறுகிறாள். "என்னிடமே இருள் குடிகொண்டிருக்கிறது. அதோ தெரிகிற நட்சத்திரங்களெல்லாம் என்னைக் கேலி செய்கின்றன. என துளத்தில் நட்சத்திரமாவது திங்களாவது ஒளி செய்யவில்லை. ஒளி

புண்டாகுமென்ற நம்பிக்கையுமில்லை. அவன் எனது உயிரை நிரப்பிய ஒளியைக் கொன்றவளும் அவனை வெறுத்தவளும் நானே.''

ஆண்டவனது ஞானவொளி எளியவர்க்கே பிரகாசிக்கின்றது. ஒருநாள் ஆண்டவனுடன் கலக்க நாம் செல்லும் வழிக்கு எளிமையே விளக்கொளியாகும். இராதை கர்வத்தைத் தள்ளி எளிமையைக் கொள்கிறாள். மணிமாடத்தைப் பார்க்கிறாள். ''மணியின் ஒளியின்றி வேறொன்றையும் காணவில்லை'' என அவள் இயம்புகின்றாள். ஒளியைப் பின்தொடர்ந்து காட்டிலே கண்ணனைக் காணுகின்றாள். மாயையில் அழுந்தி அவள் அவனை வெறுத்தாள். அவன் மணிமாம் என்னும் மாயையை உண்டுபண்ணி காட்டினிலே தன்னைக் காணும்படி அவளை வசிகரித்தான்! அதுவே முத்திபடைவிக்கும் அன்பின் வழியாகும்! இராதை கண்ணனது மலரடிகளில் வீழ்கிறாள். அவன் அவளை யெடுக்கிறான். ''உனது மணிகளை வைத்துக்கொள். எனக்கு வேண்டாம். ஏனெனில் அன்பின் மணி மறுபடியும் என்னுடையதாயது'' என அவன் கூறுகிறான். ஆண்டவனுக்கு ஒன்றும் வேண்டுவதில்லை. எனினும் மக்கள் உளம் எனும் மணியை யவன் வேண்டுகிறான். அருள் காரணமாகவே அவன் அதை வேண்டுகிறான். அன்புளத்தை யதிகப்படுத்த அவனொடு சேர்ந்து பணியாற்ற நம்மையும் அவன் ஏற்றுக்கொள்வான். பேராசை கர்வம் என்னும் தளைகளை அறுத்தெறிதலே அவனுடன் தொண்டியற்றுதற்கு வழியாம். எளிமையுடனும் அன்புடனும் நாம் அவனுக்கு அடிமைகளாவோம். இந்திய விடுதலைக்கு அவன் நம் மூலமாகப் புதிய அற்புதங்களியற்றுவான்.

---

# இருக்கு வேதத்து உருத்திர தேவதை.

—(o)—

உ.

இருக்கு வேதம் மண்டலம் க. சூக்தம் கக௪.

த. ராமகிருஷ்ணன். (வேதமாணக்கன்)

தமிழ்.

(முன் தொடர்ச்சி.)

௩. மக்களின் உடல் நலம்.

௩. பிறர் நலன் விழையும் மருத்துவன் கருத்திற்கிணங்க யாவரும் ஒழுகுக. மருத்துவனும் யாவருக்கும் நலன் நாடுக. உடல் நலனடைந்த மக்கள் மருத்துவர்க்கு உணவு உதவுக.

பிறர் நலன் விழையும் மருத்துவனே யாவராலும் போற்றுதற்குரியன். தன்னலமுடையான் மக்கட்கிதமானவற்றைக் கூறான். ஆதலால் பிறர் நலன் நாடும் மருத்துவன் அறிவுரைகளையே யாவரும் கேட்குதல் வேண்டும். உடல் நலன் காத்தற்கின்றியமையாதன புலன்களை நல்வழிப்படுத்தி நன்னெறிக்கண் செலுத்தலும், சான்றோர்களைப் போற்றி அவர்வழியொழுகுதலும், உறையுமிடம், பருகும் நீர், உயிர்க்கும் காற்று முதலியவற்றைத் தூயனவாக்கி நுகர்தலுமாம். இக்கருத்துக்கள் இம்மந்திரத்தில் ஆளப்படும் ''தேவ-யஜ்யா'' என்னும் மொழிகளால் பெறப்படுகின்றன. தேவராவார்—புலன்கள், புலமைமிக்க சான்றோர், வான் வளி நெருப்பு நீர் நிலன் முதலிய பூதப்பொருட்கள். யஜ் அல்லது யக்ஞமாவது நல்வினைகளாற்றுதல். அவை 'ஸத்கார ஸம்கதி—தான'— உயர்ந்தவற்றைப் போற்றுதலாகிய ஸத்காரமும், ஒத்தவற்றோடுடன் செல்லுதலாகிய ஸம்கதியும், தாழ்ந்தவற்றை உயர்த்துகின்ற ஈகையாகிய தானமுமாகும். மக்கள் புலன்களை நல்வழியில் பயிற்றுதலானும், வெளிச்சமும் காற்றோட்டமும் ஈரமின்மையுமுடைய இல்லங்களில் தங்குதலானும், தூயகாற்றும் நீரும் பருகுதலானும், தூய உணவுகளை உட்கொள்ளுதலானும் உடல் நல னெய்தவுடன் புலமை மிக்க சான்றோர்களைப் போற்றி நல்லுரைகளைக் கேட்டும், பயின்றும், அவர்வழியொழுகியும் உள நலன் படைத்து உண்மையான இன்பவாழ்க்கை பெறுவர். இத்தகைய உண்மைநலன் வாய்ந்தார் தம்மோடொத்தாரை உளப்படுத்தவும், தம்மிற் றாழ்ந்தாரை உயர்த்தவும் விழைவர். இதுவே தேவபூசை அல்லது தேவ யக்ஞம்; தன்னலமும் பிறர் நலமும் நாடிச்செய்யும் நற்செயலாம் வேள்வியுமாகும்.

*உடல்நலன் காக்கத்தக்க நல்லுரைகள் வழங்கியும், நன்முறையில் பரிகரித்தும் வருகின்ற மருத்துவன் விரும்பியவற்றை ஈதல் யாவர்க்குங் கடனும்.



௪. சினம் முதலியன அகற்றுக.

௪. திருவும், நல்லொழுக்கமும், முயற்சியும், அறிவுஞ் சான்ற மருத்துவனை யடைந்திடுக. சினம் வெகுளிகளை யகற்றி மருத்துவனது நல்லுரைகளுக் கிணங்க ஒழுகுக.

உடல்நலன் பெறச் சினம், மயக்கம், பகைமை, வெறுப்பு முதலியவற்றைக் களைதல்வேண்டும். இத்தகைய மனோ மாற்றங்கள் உடல்நலத்தினைச் சிதைப்பனவாம். இவை விரைவில் இளமை முற்றி முதுமை யெய்துவிப்பன. எனவே, இவற்றை விரைவில் ஒழித்திடுக. எஞ்ஞான்றும் 'ஸுமதி' நல்லெண்ணங்களையே சிந்தித்திடுக. இஃது உடல்நலத்திற்குச் சிறந்த சாதனமாகும்.

திருவில்லான், ஒழுக்கமில்லான், ஊக்கமில்லான், கல்வியில்லாதவனுமாகிய வைத்தியனை அடைதலால் உடல் நலன் பெறுதற்கியலா.

௫. மருந்துகள் கலத்தல்.

௫. நன்முறையில் உணவு கொள்ளுகின்றவனும் அசட்டை செய்யாதவனும் மருந்துகள் கலந்துகொடுக்கும் முறையினால் நோயாளிகளை நன்னிலைப் படுத்துகின்றவனும் திருவுடையானும் கண்டார் விரும்பும் அழகுடையானுமாகிய மருத்துவனை நோய் தீர்த்திடற் கழைத்திடுக. அவன் அகப்புறக் காரணங்களின் நோய்கள் தணிக்கின்றவனுகவும், நோய் நீக்கும் மருந்துகள்யாவுமுடையானுகவுமிருத்தல் வேண்டும்.

மருத்துவன் அழகின்றிப் பிணியுடையானுகி வலிமை யிழந்து சோம்

---

* மருத்துவனுக்கு உதவவேண்டுவதை 'ஹவி' என்னுஞ் சொல் குறிக்கின்றது. ஹவி யென்பது 'ஹு—தாந, அதாநயோ' ஈதலாகும். வேள்வி, நீர், நெய், ஓமப் பொருட்கள் என்பன உபலக்கணே.

பதுடையனைக் சுடுமூஞ்சியா யிருந்தால் எவ்வாறு நோயகற்றுவன்? கண்டார் விரும்பும் வடிவழகனைப் பொலிந்த முகத்துடன் விளங்கினல் நோயாளியின் உள்ளத்தில் 'இம்மருத்துவனால் யாம் நோய்தீர்க்கப் பெறுவேம்' என்ற நம்பிக்கை ஏற்படும். அவ்வாறே நோயாளியின் மனதிலேற்பட்ட நம்பிக்கையால் நோயும் விரைவில்கனும். நோயாளிகளைக் காணச் செல்லும் மருத்துவன் தன் கையில் சிறிதளவாவது உயர்ந்த மருந்துகளுடன் ஏகுதல் வேண்டும். பிணியுடையான் படுந்துயரைச் சிறிதளவு நீக்கத்தக்க எம்மருந்தேனும் வைத்தியனுடைய அன்பான கைகளால் உடன் கொடுக்கப் பெறின், அஃது எத்துணையோ நலன் பயப்பதாக அமையும். நோய் நீக்குதற்கு நோயாளியின் மனோநிலையைக் கண்டறிய வேண்டுவது முதற் கடமையாகும். நோயாளியின் மனதில் இப்போது யாம் சீருற்று வருகின்றோமென்ற எண்ணம் தோன்றுமாயின், அம்மனோநிலையால் நோய் எளிதில் நீங்கப்பெறும்.

மனதை அமைதிபெறச்செய்தலும், புறத்து நின்று உட்செல்லும் தீயவற்றை உட்புகாது தடுத்தலும், வெளியேறச் செய்தலுமாகிய *சர்ம†வர்ம0சர்தி என்னும் மூவகை முறைகளைச் சிவர்களின் உடல்நலன் காக்க மருத்துவர் கையாளுதல் வேண்டும்.

இந்த மந்திரத்தில் திவோவராஹம் என்னும் தொடருக்கு மேற்புலப் பண்டிதர்கள் பலவாறு மயங்கிப் பொருள் கொள்கின்றனர். வானத்துள்ள காட்டுப்பன்றி (The wild boar of the sky) என்று நான்மறைகளையும் ஆங்கிலப்படுத்திய அறிஞர் கிரிபித் பண்டிதரும் வானத்துள்ள செம்பன்றி (The ruddy boar of the sky) என்று டாக்டர் மியூர் துரைமகனும் பொருள் கண்டிருக்கின்றனர். இதனல் ஐரோப்பியர் வேதவுரையின் புன்மை தெளிக. ஈண்டு வாராஹமென்பது பன்றியைக் குறிப்பதன்று. சாயணாச்சாரியார் வாராஹமென்பது (க) 'வாராஹம் வராஹாரம் உத்க்ருஷ்ட போஜநம்' நல்லுணவு கொள்வானென்றும், (உ) 'வராஹவத்ருடாங்கம்' பன்றிபோன்ற உரத்த உடலென்றுங் கூறுவர். மருத்துவ வியலிற்கேற்ப ஈண்டு தகுதியான, பத்தியமான, சிறந்த நல்லுணவு என்று கொள்ளுதலே சிறப்புடைத்தாம்.

௬. மக்கட்குரிய உணவு.

௬. பெரியார், சிறியார், குழந்தைகள் முதலிய யாவருக்கும் ஒத்தவுண்வினை அமைத்தல் மருத்துவர் கடனும்.

பிறந்திறந் துழலுந் தன்மை வாய்ந்த(மர்த்ய, மருத, மர்ய, மர்தMortal) மக்களுக்குரிய நல்லுரைகள் வழங்கி உடல்நலன் காக்கச் செய்கின்ற வைத்தியனை 'மருதாம் பிதா' வென்றும், மக்களை இறப்பினின்று சேய்மைக்கண் நிறுவுதலால் 'அமிருத' என்

---

* சர்ம—உடல் நலத்தால் உளவமைதி பெறுதல். † வர்ம—புறத்து நின்று உட்புகும் நோயணுக்களை புகாது தடுத்தல். பகைவர் அம்புகள் உடலில் தைக்காது காக்கும் கவசம். 0 சர்தி—வாந்தி செய்தல், பேதிக்கு வாங்குதல், வியர்வையால் வெளிப்படுத்தல், உடலில் புகுந்துள்ள நச்சப்பொருட்களை வெளியாக்குதல். 'ச்ருத்—ஸம்தீபநே' உடலொடு தீபனமாகும்படி செய்தலுமாகும்.



றும் இம்மந்திரத்தில் விளிக்கப்படுகின்றது. மக்கள் உடல்நலங் காத்து நல்வாழ்க்கை நடாத்தற்குரிய அறிவுரைகளும் நியதிகளும் அமைத்துத் தருதலான் மருத்துவர் மக்களைக் காப்பவராகின்றனரென்பதில் ஐயமின்று.

இம்மந்திரத்தின் முற்பகுதியில் மருத்துவனுக்கு ஒரு அரிய எச்சரிக்கை செய்யப்படுகின்றது. அஃது நோயாளிக்கு (மர்த்த—போஜநம்) மக்களுக்குரிய உணவினையே கொடுத்தல் வேண்டுமென்ற இனிய வுரையாகும். சில வைத்தியர் புலாலுணவு அருத்துகின்றனர். அது முறையன்று. மக்கள் பழவகை, காய்கறி, தானியாதிகளை உண்ணும் சீவர்களாவர். அவர்களுக்கு இவ்வுணவினையே பத்தியமாகக் கொடுத்தல் வேண்டும். இம்முறையினையே குழந்தைகளுக்கும், இளைஞருக்கும், பெரியாருக்கும் முதியாருக்கும் அனுசரிக்கத்தக்கது. இச்செய்யுளில் மக்கட்குரிய உணவென்று வற்புறுத்தலான், பிற புலாலுணவு முதலியன கொள்ளத்தக்கன வன்றென்பதோர்க.

எ. மருத்துவன் அசட்டை செய்தலாகா.

எ. மருத்துவன் ஆராயாது அசட்டையாக எவருக்காயினும் தகுதியற்ற ஔடதங்களைக் கொடுத்துத் துன்புறுத்தவாவது தளர்ச்சியுறச் செய்யவாவது கூடாது.

அ. மயக்கம் சினம் வெறுப்பு சோம்பல் முதலியன காரணமாக தீய மருந்துகளைக் கொடுத்து எவரையும் மருத்துவர் கொல்லுதல் கூடாது. அவ்வாறே வைத்தியனை அழைத்தவர்களும் தக்கன உடனுதவல் வேண்டும்.

வைத்தியனுடைய மறதி, தவறுதல், அசட்டை, சோம்பல், மயக்கம், சினம், அறியாமையாலும் நோயாளி இறத்தல் கூடும். ஆதலால் மருத்துவன் எஞ்ஞான்றும் சாவதானமாகவும் பொறுமையாகவும் எச்சரிக்கையாகவும் இருத்தல்வேண்டும். இக்குறைகளால் எவரேனும் இறந்துபடுவாராயின் மருத்துவனே பொறுப்பாளியாவன். வைத்தியனுடைய சிறு பிழையால் பிறருடைய மதலைகளும் பிள்ளைகளும் தாய் தந்தையரும் பிறரும் ஒருவாறு மரணத்தின்வாய்ப்படினும் எவருக்கும் பெரும்பேச்சாகமாட்டாது. எனினும் மருத்துவன் எஞ்ஞான்றும் சாவதானமாகவே இருத்தல் வேண்டும். கேவலம்மக்களிடத்துமட்டுமன்று; பிற சீவர்களிடத்தும் மிகப் பொறுமையாகவும் எச்சரிக்கையாகவுமிருக்கத்தக்கது. முன்—கருதலும் பொறுமையு மின்மையான் மருத்துவர் பெரும்பிழைகள் இயற்றுதல் கூடும். வைத்தியனுடைய தவறுதலால் பிறர் மரணமெய்தவுங்கூடும். ஆதலால் மருத்துவர் ஹ்ருபாமிதேந மா வஹீ மனத்திற்றோன்றும் குற்றங்களால் பிறரை வதைத்திடலாகா என்னும் பொன்னுரையினை யாண்டும் நினைவுறுத்தல் வேண்டும். தனக்குரிய வசதியான கால அளவிற்கேற்ப நோயாளிகளை யேற்று சிகிச்சித்தல் வேண்டும். காசாசையால் நோயாளிகளைத் துன்புறுத்தலாகாது.

மருத்துவன் கருத்திற்கிணங்க நடத்தல்.

௯. இடையன் ஆக்களைத் தவறிய வழியினின்று திருப்பிக் காத்தல் போல, மருத்துவன் மக்களைத் தீய வழியினின் நகற்றிக் காத்தல் வேண்டும். யாதெனின், வைத்தியன் நன்மதிக்கிணங்க ஒழுகுவாரே நலனெய்துவர். ஆதலால் யாவரும் வைத்திய

னது நற்கருத்திற் கிணங்கத் தங்க ளொழுக்கினை அமைத்திடுக.

௧0. அமைதியான உள்ளத்துடன் வைத்தியன் யாவருக்கும் நற்கருத்துக்களை வழங்கிடுக. தீயன பயப்பவற்றை எஞ்ஞான்றும் ஒழித்திடுக. இத்தகைய நல்லுரைகளை யாண்டும் யாவருக்கும் அறிவுறுத்தலால் யாவரும் நலம் பெறுவர்.

பசுக்களைக் காப்பாற்றுகின்ற இடையனைப்போல, தீயவொழுக்கால் நோயுற்றாரைத் தக்க நல்லுரைகள் வழங்கி நன்னெறிப்படுத்திக் காப்பது மருத்துவர் கடன். வைத்தியனுடைய நல்லுரைகளுக்கேற்ப ஒழுகுகின்றவன் நோயினின்று தப்புகின்றான். மருத்துவன் ஆரோக்கிய வழிகளை உணர்த்த வேண்டுவதும், மக்கள் அந்நெறிப்பட ஒழுக வேண்டுவதும் முறைமையாகும்.

௬. சமுதாய வளர்ச்சி.

௧௧. சீரிய மருத்துவனை எவரும் அவமதித்தலாகாது. அவ்வாறேமருத்துவனும் மக்களது உரைகள் யாவற்றிற்கும் நன்கு செவி சாய்த்திடுக. யாவருங் கலந்து வாழ்ந்து உயர்வு பெற்றிடுக.

௧௨. மமஹந்தாம் யாமனைவரும் உயர்வு பெறுவோமாக. இவ்வெண்ணம் யாவர் மனதிலும் உறைதல் வேண்டும். மக்களனைவருக்கும் உடல், உள்ளம், அறிவு, ஆன்மாவும் வளர்ச்சி பெற்று நீண்ட வாழ்வெய்தலோடு பிற நலன்களும் பெறுதல் வேண்டும். பரமோர் நன்மை கடைப்பிடித்துப் புகழ்பெறுதல் வேண்டுமென்ற விருப்பம் எவருள்ளத்தும் உதிக்கத் தக்கது. தீயன புரிதலால் தாழ்வும், நல்லவை புரிதலால் உயர்வு மெய்துவர். உயர்வுபெற விழைந்து நல்லனபுரிந்து அல்லவை யகற்றி (பூரணத்வம்)நிறை வெய்த வேண்டுவது யாவர்க்கும் உரியனவாம்.

மக்கட் குயர்வுதரும் பொருட்கள் மித்ர, வருண, அதிதி, சிந்து, பிருதிவி, தியௌ என்பனவாம். (க)பிருதிவி—நிலம், தாய்நாடு, தன்னூடு, தன்னரசு, வீடு, கழனி முதலியன. (உ) சிந்து—நீர், ஆறு, கடல். (௩) தியௌ—வானம், காற்று, ஞாயிறு முதலியன. (ச) அதிதி—அறிவு, சுதந்திரம், சுவாதீனம், தூய்மை, நோயின்மை, சொல்வன்மை, பசு, பால் முதலியன. (ரு) மித்ர—தோழன், உதவி செய்பவன், பிராணன். (௬) வருண—அடையத்தக்கவன், சான்றோன், கடல், நீர், பரவெளி, கதிரவன் முதலியன. இப்பொருட்கள் யாவும் மக்கள் உயர்வடைதற்கு உதவுவன. உயர்வுபெற விழைவார் இப்பொருட்களை ஏற்ற பெற்றி பயன்படுத்தி அறவினையாற்றிப் பொருளீட்டி இன்பநுகர்ந்து வீடடைதற்குரியர்.

மேலே குறித்த பிருதிவியாதி சொற்களில் ஒவ்வொன்றிற்கும் ஒரு பொருள் குறிக்கப்படுகின்றனவோ அன்றிப் பல பொருட்கள் உணர்த்தப் படுகின்றனவோ என்பது இதுவரையிலும் துணியப்படவில்லை. இச்செய்யுளின் பிற்பகுதியாகிய இத்தொடர் இருக்கு வேதத்தில் இருபதிடங்களிலும், எசுர் வேதத்தில் இரண்டு இடங்களிலும் ஆளப்பட்டிருக்கின்றன. இத்துணை இடங்களில் வழங்கப் படுதலால் இத்தொடர் மிகச் சிறப்புடையதேயாகும். இதனை நன்கு ஆராய்ந்து உண்மை காண்டல் அறிஞர்க் குறுகடனாம்.

இதுகாறும் அறிவுறுத்தியவற்றால் பெறப்படும் பொருட்களாவன:—ஒரு



நாட்டிலுறையும் மக்களும் பிற சீவர்களும் உடல்நலம்பெற்று இனிய வாழ்க்கை நடாத்தற்குரிய அறிவுரைகள் வழங்கிக் காக்கவேண்டுவது அந்நாட்டு மருத்துவர்கடனென்பதும்; அம் மருத்துவர் ஆண்டினும் அநுபவத்தினும் முதிர்ந்தவராகவும், உளவலியும் ஊக்கமுமுடையராதல் வேண்டுமென்பதும்; பிறந்திறந் துழலும் மக்கள் யாவரும் தத்தம் உடற் கூறுகளை யறிந்து உரியவொழுக்கம் கைக்கொண்டு புலன்களை நன்னெறியிற் செலுத்தி மனவமைதிபெற்று நோயணுகாது காக்குமாற்றல் படைத்தல் வேண்டுமென்பதும்; உடல்நலங் காப்பன புலன்களைநல்வழிப்படுத்தலும், உறைவிடம் காற்று நீர் முதலியன தூயனவாக்கொள்ளலும், சான்றோரை யணுகி அவர்வழி யொழுகலும், தீயனவகற்றி நல்லெண்ணங்களையே யாண்டுஞ் சிந்தித்தலுமா மென்பதும்; நோய் தீர்ப்பவன் உடல்நலங் காக்கின்றவனாகவும் பிணியாளன் மனதைக் கவரத் தக்க தோற்றமுடையவனாகவும் வேண்டுமென்பதும்; அம்மருத்துவமுறை மனவமைதிதரும் சர்ம, பிணிகள் புகாது தடுக்கும் வர்ம, வார்தியாலும் பேதியாலும் தீபனத்தாலு மகற்றும் சர்தி; பசி கிடத்தலாதியனவா மென்பதும்; எத்தகை நோயாற் பீடிக்கினும் எவர்க்கும் மக்களுக்குரிய தாவர உணவே கொடுக்கததக்கன, பிற புலாலுணவு தள்ளத்தக்கன என்பதை மருத்துவர் கடைப்பிடித்தல் வேண்டுமென்பதும்; சினம் வெகுளி மயக்கமாதியவற்றாலும் பண ஆசையாலும் எவ்வுயிர்க்கும் எஞ்ஞான்றும் தவறிழைத்தலாகா, கால அளவிற்கேற்ப தக்க பிணியாளர்களை யேற்று பொறுமையாகவும் சாவதானமாகவும் எச்சரிக்கையாகவும் மருத்துவர் சிகிச்சித்தல்வேண்டுமென்பதுடன் அவர்க்குரியன பிணிதீர்ந்தார் உடனுதவல் வேண்டுமென்பதும்; ஆக்களைக் காக்கும் இடையனை யொப்ப நெறி திரிந்தாரை காக்கவேண்டுவது வைத்தியர் கடமையாமென்பதும், யாவரும் நிலன், நீர், வான்பொருட்கள், நண்பர், சான்றோர், அறிவு, சுதந்திரம், தூய்மை, நோயின்மை, சொல்வன்மை யாதியவற்றால் நாற்பொருட் பயன்களையும் அடைதல் கூடுமென்பதும் பிறவுமாம்.

## காந்தி ஸினிமா அல்லது புகைப்படக் காட்சி.

—(o)—

ஆர். பரமேச்வர ஐயர்.

இருப்புப்பாதையிலிருந்து அரைமைல் தூரத்திற்குள் இருந்தபோதிலும் நகர வாசிகளால் நாகரிகமெனக் கருதப்படும் அநாகரிகங்களும் இன்பமெனக் கொள்ளப்படும் இடையூறுகளும் இல்லாதது தென்கரை கிராமம். இருந்தாலும் கல்வியிலும் மனிதர் நல்வாழ்விலும் தேசிய உணர்ச்சியிலும் இராஜதானியிலுள்ள எந்தப்பிரபலநகரத்திற்கும் அது பின்னடைந்ததல்ல என்பது அக்கிராமவாசிகளின் ஒற்றுமையையும் விசாலபுத்தியையும் நேர்மையையும் நன்கு விளக்கும்.

வழக்கம்போல் டிசம்பர் விடுமுறை யாரம்பமானதும் நான் மதுரையிலிருந்து சோளவந்தானுக்குப் பிரயாணமாகி அங்கு ரயில்ஸ்டேஷனில் இறங்கினேன். சில நிமிஷங்களுக்குள்

வெங்கு சாஸ்திரிகள் என்னை வழி மறித்துக் கொண்டார்.

"ஏது, ரங்கசாமி இவ்வளவு தாமதம்; இரண்டு நாளைக்கு முன்பே உன்னை எதிர்பார்த்தேன். படிப்பு விஷயம் சரியாய் நடந்து வருகிறதா?"

"எல்லாம்சரியாகத்தான்நடக்கிறது. ஊரில் எல்லோரும் க்ஷேமந்தானே, விசேஷம் ஏதாவது ... ... ...?"

"எல்லாம் க்ஷேமந்தான். வழக்கம்போல் திலகர் சுயராஜ்ய நிதிக்கும் காந்தி வாசகசாலை நிதிக்கும் பணம் சேர்க்க விசேஷ ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. உன்னுடைய உதவியையும் எதிர்பார்க்கிறேன். சாக்குப் போக்குச் சொல்லக்கூடாது, பத்திரம்."

வெங்கு சாஸ்திரிகள் சம்ஸ்கிருதம் தமிழில் அதிக பாண்டித்தியமுடையவர். தேச முன்னேற்றத்திலும் சிவசாபச் சீர்திருத்தத்திலும் அக்கரை அதிகமுள்ளவர். வர்ணாச்சிரம தருமத்தில் சிறிதும் வழுவாதவர். தவிர, காங்கிரஸ் ஆபீஸ் காரியதரிசி. இவர் குக்கிராமத்தில் பிறந்து அங்குள்ள சில நூறு மனிதர்களிடமே தன்னுடைய அபாரமனோசக்தியையும், ஜனவசியத்தையும் எதற்கும் பின்னடையாப் பிடிவாதத்தையும் பிரயோகப்படுத்த நேர்ந்தது இலங்கைத் தோட்டக்கார துரைகளின் துர்ப்பாக்கியந்தான். இவர்மாத்திரம் கூலியாள் கங்காணியா யிருந்தால் கூலியாளுக்குப் பஞ்சமே யேற்பட்டிராது. இவரிடம் அகப்பட்டவன் மீளுவதரிது.

நாங்களிருவரும் மெல்ல நடந்து கவலை நதியை அடைந்தோம். வழி நெடுகத் தம் ஏற்பாடுகளைப்பற்றிப் பேசிக்கொண்டு வந்த சாஸ்திரியார் திடீரென்று, "ரங்கசாமி! லகுவாக ஒரு நாடகம் தயாரித்துவிடலாமென்று சொல்லிவிடாதே. அந்த வேலையை நம் சபாபதி செய்து வருகிறான். சிவாஜி நாடகம் தயாராகி வருகிறது. நீ செய்வது புதியதாயிருக்க வேண்டும். புத்திசாலியாகிய உன்னால் முடியுமென்றே நினைக்கிறேன். நாளை மாலை எனக்கு முடிவு சொல்லவேண்டும். ஜாக்கிரதை" என்று தமது அநுஷ்டானத்திற்குச் சென்றார்.

நானும் வீடுபோய்ச் சேர்ந்தேன். இரவு முழுதும் தூக்கம் பிடிக்கவில்லை. இதுவே பெருங் கவலையாய்விட்டது. நல்ல வேளையாய்க் காலை நாலு மணிக்கு ஒரு யோசனை உதித்தது. மறுநாள் மாலை சாஸ்திரியாரிடம் சொல்லிவிட்டு இரகசியமாகவேவேலை செய்து வந்தேன். ஊரிலுள்ளவர்களுக்கு நானும் என் அத்தை மகன் கிட்டுவும் சதாகூடிப் பேசுவதும் ஒன்றாய்த் திரிவதும் ஒளிந்து திரிவதும் ஒன்றும் அர்த்தம் விளங்கவில்லை.

தைமாதப் பிறப்பும் கழிந்தது. மறுநாளும் வந்தது. ஓர் ஒற்றை மாட்டு வண்டியை என் தம்பி ஓட்டிவர, வண்டிக்குள் கோவில் நகாராவை கட்டிக் கையோயாமல் கிட்டு கனமுழக்கம் செய்துவர, கையால் எழுதப்பட்ட இருநூறு முந்நூறு நோட்டீசுகளை நான் ஆடம்பரத்துடனே விநியோகம் செய்துவந்தேன். வண்டியின் இருபக்கங்களிலும் சுமார் அரையடி உயரமுள்ள பெரிய எழுத்துக்களில் "காந்தி ஸினிமா" அல்லது புதிய புகைப்படக்காட்சி என்ற விளம்பரம் எழுதப்பட்டபலகைகள் தொங்கவிடப்பட்டிருந்தன.

ஜனங்களின் ஆச்சரியத்திற்கு அளவில்லை. டிக்கட்டு விலை இரண்டணா தான். காந்தி வாசகசாலைக் கட்டிடத்துக்குமுன் மூன்றுபுறமும் கிடுகுகளால் அடைக்கப்பட்டிருந்த பந்தல் போடப்பட்டிருந்தது. நான்காவது புறமாகிய மேற்குப் புறத்தில் தட்டி அடைப்புக்குப் பதிலாய் வெள்ளைத் திரை ஒன்று கட்டப்பட்டிருந்தது. இதன் பின்புறம்தான் நானும் கிட்டுவும் நாங்கள் தயாரித்திருந்த 'உலோபி' என்னும் அகஸ்ய நாடகத்தை நடிக்க ஏற்பாடு செய்திருந்தோம். நடிகர்கள் எட்டுப்பேர் வேண்டியிருந்தாலும் ஏககாலத்தில் இருவருக்குமேல் தேவையில்லையாதலால், எங்களுக்குள்ளேயே எல்லா வேஷங்களையும் பங்கிட்டுக்கொண்டு ஊமைஜாடையாக நடிக்க இரகசியத்தில் தயார் செய்திருந்தோம். வெள்ளைத்திரையோரமாக சிறு அறையொன்று தடுத்து வெளியிலிருந்து பார்ப்போருக்கு ஒன்றும் தெரியாதபடி தட்டிகளால் மறைத்து அதில் எங்களுக்கு வேண்டிய உடைகள், பொய் மயிர்கள், சிற்றுண்டிகள், பானகம் நீர்மோர் முதலிய பானங்கள், இன்னும் சில்லரைச் சாமான்களைத் தயாரித்து வைத்திருந்தோம்.

ஆட்டம் சரியாய் மூன்று மணிக்கு ஆரம்பம். அப்பொழுதுதானே சூரிய வெளிச்சம் நன்றாய்த் திரையில் விழுந்து திரைக்குப்பின்புறம் நடிக்கும் எங்கள் நிழல் திரையில் விழுந்து அசல் புகைப்படக் காட்சிபோலத்தோன்றும். இரண்டு மணிக்குள்ளாகவே ஐம்பது ரூபாய்க்கு டிக்கட்டு விற்றுவிட்டது. சாஸ்திரியாரின் சந்தோஷத்திற்கு அளவில்லை. அதிகம் டிக்கட் விற்றால் ஜனங்களுக்கு அசௌகரியமென்று அத்துடன் விற்பனையை நிறுத்தி ஆட்களைப் பந்தலுக்குள் விட்டார்கள். பந்தலும் நிரம்பிற்று. மணி இரண்டரையாயிற்று. ஆட்டம் ஆரம்பிப்பதன் முன் கூட்டத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை என்னையும் கிட்டுவையும் தூண்டிற்று. பின்புறமாகச்சுற்றி வெளிக்கதவண்டை நாங்கள் வந்து நின்றோம். சில நிமிஷங்களுக்குள்—என்ன ஆச்சரியம், திரைக்குப் பின்னால் யாரது? ... ... ...

வெங்கு சாஸ்திரியாரின் மகளான ருக்மணி என்னும் பெண் அங்கு வந்தாள். அவளுக்கு வயது பத்திருக்கும். கலியாணமாகி ஆறுமாதந்தானாகிறது. வந்தவள் நாங்கள் பத்திரப்படுத்தி யிருந்த சாமான்களை ஒவ்வொன்றாய் எடுத்துப்பார்க்க ஆரம்பித்தாள். அவள் செய்கைகளைப் பணம் கொடுத்து ஜனங்கள் வேடிக்கை பார்க்கிறார்களென்று அவளுக்குத் தெரியாது. நான் அவளை வெளியே போகச்சொல்ல வேண்டுமென்று புறப்படுவதற்குள் ... ... ... ...

என்ன இது? மற்றொரு உருவம் திரையில் தெரிந்தது. அது சாஸ்திரியாரின் மருமகனும் என் நண்பனுமான சீனுதான். சீனுவைக் கண்டவுடன் ருக்மணி வெட்கத்தாலும் பயத்தாலும் உடல் குன்றி வெளியே போக முயன்றாள். சீனுவா விடுபவன்? வழியை மறித்துக்கொண்டு அவள் கையைப்பற்ற முயன்றான். விவாகமானது முதல் தன் மனைவியுடன் தனித்து நாலுவார்த்தையாவது பேசவேண்டுவதற்காக பகீரதப் பிரயத்தனஞ்செய்து வந்தான் சீனுஎன்பது எங்களுக்கெல்லாம் நன்றாகத்தெரியும். பாவம், இப்பொழுதுதான் சமயம் வாய்த்ததுபோலும். ஆனாலும் விஷயம் ஒருவிதமாய் முடிவடையுமுன் இரண்டு நிமிஷம் இடைவிடாத

கரகோஷமும் 'பலே! அச்சா' என்ற சப்தங்களும் பூமியைப் பிளக்கும்படியிருந்தன. அதே விநாடி நமது நடிகர்களிருவரும் ஸ்தம்பித்து நின்றார்கள். இதற்கிடையில் ஒரு ஸ்திரீயினுருவம் திரையில் தென்பட்டது. முதலில் சீனுவும் பிறகு ருக்மணியும் மின்னல்போல் மறைந்தார்கள். உள் நுழைந்தது சேஷி அம்மாள் என்பது யாவருக்கும் தெரிந்தது.

சேஷி அம்மாளைத் தெரியாதவர் ஊரில் கிடையாது. ஏன்? அவளும் ஒரு சபையின் காரியதரிசியல்லவா? வம்பர் மகாசபைக் காரியதரிசியான அந்த அம்மையை அறியாதாரும் அவள் சொல்லம்புகளின் வேகத்தையும் வல்லமையையும் தெரியாதவரும் அந்தக் கிராமத்திலேயே கிடையாது. காட்சி பார்க்கவந்திருந்த ஜனங்கள் ஆவலுடன் அவள் செயலைக் கவனித்திருந்தார்கள். அங்கு என்ன விசேஷம் என்று கவனிக்க வந்திருந்த சேஷி அம்மாள் சீனு ருக்மணி முதலியவர்கள்செய்கைகளைத் தன் மனதில்பதிவு செய்துகொண்டு நாலாபக்கமும்பார்க்க, சிற்றுண்டிகளும்பானகம்வகையறுவும் இருப்பதைக்கண்டு சில பழங்களையும் சிற்றுண்டிகளையும் உள்ளே தள்ள ஆரம்பித்தாள். அவளுடைய விசேஷ ஆசாரத்தைப்பற்றியும் விசேஷமாகப் பறையறைந்து வந்த சேஷியம்மாளின் செயலை ஆச்சரியத்துடன் கவனித்து வந்தார்கள். கடைசியாக ஒரு கண்ணாடி டம்ளரில் பானகத்தை எடுத்தாள். சிறிது அதிகமாகஎடுத்துவிட்டபடியால் மற்றொரு டம்ளரில் பாதியைவிட்டு மீதியைக் குடிக்க ஆரம்பித்தாள். ஜனங்களின் ஆரவாரம் முதலனந்தமும் கட்டிலடங்கவில்லை. சீனுவும் ருக்மணியும் ஓடியதைவிட அதிவேகமாய் மறைந்தாள் வம்பர் மகாசபைக் காரியதரிசி. பாவம். அவள் பருகியது காப்பி என்று நினைத்தார்கள்போலும், பந்தலில் இருந்த ஜனங்கள். கிட்டுவுக்கும் எனக்கும் சிரித்து வயிறு புண்ணாகிவிட்டது.

இதற்குள் வெங்கு சாஸ்திரியாரின் உருவம் திரையில் தெரிந்தது. அங்கு சாமான்கள் கிடந்த அலங்கோலத்தையும் எங்களிருவரையும் காணுதலையும் நினைக்க நினைக்க அவர் மனம் பட்டபாடு முகக்குறியால் நன்கு விளங்கிற்று. தனக்குத்தானே ஏதோ முணுமுணுத்துக்கொண்டு கைகளைப் பிசைந்துகொண்டார். அவர் உபசாரஞ் சொல்லி ஜனங்களுக்கு வந்தனம் செய்வதாகநினைத்துக்கொண்ட ஜனங்கள் கரகோஷத்துடனும் ஆரவாரத்துடனும் எழுந்து பந்தலைவிட்டு வெளிக்கிளம்ப ஆரம்பித்தார்கள்.

நாங்கள் அங்கிருப்பது பலருக்கும் பலவிதத்திலும் இடைஞ்சலென்று நினைத்து அப்பொழுதே சோளவந்தானுக்குப் புறப்பட்டுவிட்டோம். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு கிட்டு வீட்டுத் திண்ணையில் நானும் அவனும் படுத்துக்கொண்டபடியே இடைவிடாமற் சிரித்தோம்.

கிட்:—என்னதானிருந்தாலும்நாம் தயாரித்த நாடகம் வீணாகிவிட்டது. இருந்தாலும் —?

நான்:—ஒன்றும் முழுகிப்போகவில்லை. நோட்டீசில் கண்டபடி ஜனங்கள் எதிர்பார்த்திருந்ததற்கு மேல் விநோதமான காட்சியைக் கண்டானந்தித்தார்கள். கொடுத்த காசும் வீண்போகவில்லை.

கிட்:—நாம் ஒன்று நினைக்க, தெய்வம் ஒன்று நினைக்கும். எல்லாம் ஒரு நன்மைக்கே!



பிறகு விசாரித்ததில், சீனு மறுநாள் காலை—ரயிலுக்கே தன்னூருக்குப் போய்விட்டதாகவும், சேஷியம்மாள் தன் கௌரவஉத்தியோகத்தை ராஜிநாமாக் கொடுத்துவிட்டதாகவும் தெரிய வந்தது. சாஸ்திரியார் மாத்திரம் இன்னும் தன் பழைய கொள்கைகளையும் முயற்சிகளையும் கைவிடாது, தேசத்தொண்டுசெய்துவருகிறார். புகைப்படக் காட்சியில் பார்த்த கதை விவரத்தைப்பற்றி கிராமத்தில் பலரும் பலவிதமாய் அபிப்பிராயப்படுகிறார்களே யொழிய ஒருவிதமான முடிவுக்கு இதுவரை வரவில்லை.

---

# நூலாராய்ச்சி.

## சில குறிப்புக்கள்.

பி. ஸ்ரீ.

நமது தமிழ் நாட்டில் இன்னும் இலக்கிய ஆராய்ச்சி-முறைகள் செழித்து வளரவில்லை. இறைவன் பாட்டெனினும் குற்றம் குற்றமேயென்று தோள் கொட்டிய நக்கீரன்கதை, நமது நாட்டில் ஆராய்ச்சி முறைகள் தலையெடுத்திருந்தால், எவ்வாறு தழைத்தோங்கியிருக்கும் என்பதற்கு ஓர் அறிகுறியாகக் காணப்படுகின்றது. ஆனால் நூலாராய்ச்சி என்பது குற்றம் தெரிவது மாத்திரமன்று. இறைவனே கால் நிலம் தோய நின்று அருளிய செய்யுளினும் குறையிருந்ததென்றால், பொதுவாக ஆசிரியரது நூல்களில் குணங்களும் குறைகளும் கலந்து காணப்படுவது வியப்பன்று. ஆகவே, ஒரு பாட்டை எடுத்துக்கொண்டு, அதற்கு நூறு, இருநூறு, முந்நூறு குற்றங்களோ, குணங்களோ கற்பிப்போர், தங்கள் மனோபாவம் நாவன்மை இவற்றினையே காட்டுகின்றார்; அன்னார் ஆராய்ச்சிவாயிலாக உண்மைகாண்போரல்லர். இத்தகைய அறிஞர்,

குற்றமே தெரிவார் குறுமாமுனி
சொற்ற'பாவினும் ஓர்குறை சொல்வரால்,

என்ற வாக்கினுக்கே சான்றாகி நிற்கின்றார்.

ஆராய்ச்சியாளர் குற்றங் குறைகளையும் இவையென்று துணிந்து சுட்டிக் காட்டவேண்டும். குணங்களையும் வியந்து மகிழ்ந்து மதித்துப்பேசல்வேண்டும். ஆராய்ச்சியாளர் உளத்திலும் உரையிலும் உண்மையொளி திகழ்தல் வேண்டும். மதிப்புரை என்பது குற்றமே தெரிவதன்று; மிதமிஞ்சி முகமன் இயம்புவதுமன்று. ஆராய்ச்சியறிவு நந்தமிழ்நாட்டில் பொங்கிப்பெருகி வெள்ளமிடவேண்டும். இதுவே நமது தமிழ் இலக்கியத்தை அரண் செய்யும்ஓர் அகழியாகச்சூழ்ந்திருக்க வேண்டும். ஆராய்ச்சியறிவு குன்றியுள்ள நாட்டில் இலக்கியம் வளமுற்று வலிமைபெற்று 'நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமும்' காட்டி வளர்வதில்லை. ஆராய்ச்சி என்னும் மெய்யுழவின்றி, இலக்கியப் பயிர் செழிப்பதில்லை எனும் உணர்ச்சி இப்போதுதான் நமது நாட்டில் சிறிது சிறிதாகப் பரவி வருகிறது. இலக்கியத்திற்கே இறுதி சூழ்வது போலி யாராய்ச்சி. ஆகவே நாம் உண்மையாராய்ச்சியாளரைப் பின்பற்றி, தமிழர் குலதனமாகிய இலக்கியத்தை மதிப்பிடல் வேண்டும். இத்தகைய ஆராய்ச்சி நூல்கள், தமிழிலக்கியம்

கற்பப்புகுவோர்க்கு அருந்துணையா கும்; புதிய புதிய துறைகளில் நூல்கள் செய்வோர்க்கும் வழிகாட்டி நிற்கும்.

* * *

நம் தமிழ்மொழியில் நன்றாக எழுதப்பெற்ற ஆராய்ச்சி நூல்களே இல்லையென்று சொல்லிவிடலாம். ஒன்றே அறிவார் ஒன்றும் அறியார் என்பது ஆராய்ச்சி புலகில் நாம் முதல் முதல் கண்டுகொள்ளவேண்டிய உண்மையாகும். தமிழ் ஒன்றே பயின்ற பண்டிதர்கள் "ஆராய்ச்சி" இன்னதென்பதையே அறியார். "அவர்கள் செய்வனவெல்லாம் மறுப்புக்களும் கண்டனங்களும் குறுவளிகளும் இவை போல்வன பிறவுமேயாம்" என்று காலஞ்சென்ற திரு. வி. கோ. சூரியநாராயணசாஸ்திரியார் கூறியது உண்மையே. தமிழ் நூற்பயிற்சியோடு ஆங்கிலநூற்பயிற்சியும்வாய்ந்த பண்டித மணிகளே ஆராய்ச்சித் துறைகளில் புதிய தமிழகத்திற்கு வழி காட்டவேண்டும்.

* * *

கம்பர், திருவள்ளுவர், இளங்கோவடிகள், மணிவாசகர் ஆதிய மகாகவிகளை மதிப்பிடும் வல்லமை நமக்குண்டா? என்று சிலர் கேட்கின்றனர். ஆயும் திறன் வேறு; நூல் ஆக்கும் திறனு வேறு என்பதையே இவர்கள் உணர்ந்தாரில்லை. இன்னுஞ் சிலர், தோன்று தோன்றியன வெல்லாம் தூயனவென்று துணிகின்றார். இன்று தோன்றியன முற்றிலும் குறைபாடுடையனவே என்கின்றார். இது அறிவாளர் கொள்கையல்லவென்று காளிதாசன் கூறுகின்றான். "உரகனும் வரனும் ஒக்கக்கூடினல், சிரகர கம்பிதம் செயலாகுமே." அதாவது:—ஆயிரம் தலையுள்ள ஆதிசே-

டனும் இரண்டாயிரம் கைகளுள்ள வாணசுரனும் ஒரே உருவத்தில் கூடினால்தான், இப்பாடல்களுக்குச் சிரக்கம்பம் கரக்கம்பம் செய்தல் கூடும் என்று சிலர் புகழ்ந்துவிடுகின்றார்கள். இவர்களே பகை அல்லது பொருமை கொண்டு சிறந் தொடங்கினால், இவர் தம் இகழ்ச்சியும் ஓர் வரம்பின்றி விரிந்துவிடுகின்றது.

* * *

நமது மொழி இலக்கண வரம்பு வாய்ந்துள்ள நன்மொழியாகுமென்று நாம் பெருமை பாராட்டிக் கொள்ளுகிறோம். பொருளைப்பற்றியஆராய்ச்சி தமிழின் சிறப்பியல்பு என்றும் கூறி வருகிறோம். யாப்பிலக்கணம் நம்மவரால் நன்றாக ஆராயப்பெற்றுள்ளதென்று கொள்வதிலும் ஆட்சேபனையில்லை. ஆனால் நூலாராய்ச்சி—அதிலும் காவிய அமைப்பினைக்குறித்த ஆராய்ச்சி—இன்னும் இந்நாட்டில்குழந்தைப்பருவத்திலேதானிருக்கின்றது. பெருங்காப்பிய 'இலக்கணம்' ஒரு பயங்கரமான பெரும் "பட்டியலா"கவே காணப்படுகின்றது. இது பெருங்காப்பிய இலக்கணமாகுமா? வடமொழியிலும்தமிழ் மொழியிலும் காவியங்கள் அமைக்கப் புகுந்த நம்மவர், மகாகாவியங்களை ஆராய்ந்து, காவிய அமைப்பின் இலக்கணங்களைக் கண்டு கொள்ளத் தவறியது வியப்பிலும் வியப்பே. இத்தகைய ஆராய்ச்சிகள் மேலைநாடுகளிலேதான் நன்கு நடைபெற்றுவருகின்றன. நாமும் இத்தகைய ஆராய்ச்சிமுறைகளை வேண்டும் விகற்பங்களோடு கைக்கொள்வது இன்றியமையாததாகும்.

* * *

ஒரு நூலைப் பரிசிலனைசெய்கையில், அல்லது மதிப்பிடுகையில், நம்துபண்-



டிதர்கள் தனிப்பாடல்களிலேயே பொழுதுபோக்குகிறார்கள். ஒரு பாட்டில் எத்தனை அரும்பொருள்கள்! எத்தனை அணிகள்! தத்துவங்கள்! வேதப்பொருள் முழுவதும் ஒரேசொல்லில்—ஒரே எழுத்தில்கூட—விளங்கிவிடும்படி, கண்ணழித்துப் பொருள் கூறும் விந்தை ஒரு கண்கட்டு வித்தை அல்லது செப்பிடு வித்தையே யாகும். இவ்வாறு செய்யுளை இம்சித்து, கேட்பவரையும் இம்சிப்பது நூலாராய்ச்சியாகுமா? இவ்வாறு தனிச் செய்யுள்களைச் சித்திரவதை செய்வதில், நம்மக்கள் நூலையே மறந்துவிடுகின்றார். 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்பார்ப்பது' என்னும் முறை நூலாராய்ச்சிக்குப் பொருந்தாது என்பதை நாம் நன்குணர்ந்துகொள்ளவேண்டும். ஒரு சோலை—ஒரு தோப்பு—ஒருகாடு, இவற்றின் அழகுகளை ஆராய்வோர், தனி யிலைகளையும் தனிமரங்களையும் ஆராய்வதால் மாத்திரம் எவ்விதமாக உண்மையுணராது திகைப்பரோ, அவ்விதமாகவே தனிச்செய்யுள்களையும் பதசாரங்களையுமே நோக்குவோர் நூலையறியாது இடர்ப்படுவர். ஒரு கட்டடத்தை ஆராய்வதற்கு ஒரு செங்கல் அல்லது ஒரு கல்லை ஆராய்வது போதுமோ?

* * *

மேலைநாட்டார் கற்களைக் கவனித்ததோடு அமையாது, கட்டடத்தையும் காண்கின்றார். தனிமரங்களை நோக்குவதோடு தோப்பையும் காடுகளையும் நன்கு நோக்குகின்றார். ஒரு காவியத்தை ஒரு கட்டடத்திற்கு ஒப்பிடலாம்.

வல்லவனுக்கிய சித்திரம்போலும்,
வண்மைக் கவிஞர் கனவினைப்போலும்
கல்லு தொழிலுணர்ந்தார் செயல் என்றே

நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூற,
கல்லையும் மண்ணையும் பொன்னையுங்
[கொண்டு
காமர்மணிகள் சிலசில சேர்த்துச்
சொல்லை இசைத்துப் பிறர்செயுமாறே,
சுந்தரமா மொருகாவியஞ் செய்தார்.

என்று பாரதியார் ஓர் அழகிய மாளிகையை வருணித்துள்ளார். குருநாடன் அமைத்த மாளிகை, 'வண்மைக் கவிஞர்' கனவினின்று பிறந்து அவர்தம்சொற்சித்திரங்களால் மனோகரமாக இசைந்து விளங்கும் சுந்தரமான காவியத்தை ஒத்திருந்ததாம். இதனால் கட்டடத்திற்கும் காவியத்திற்குமுள்ள தொடர்பு இனிது புலனாகின்றது. கல்லும் மண்ணும் பொன்னும் மணியும் கொண்டு சமையும் ஓர் அற்புத—தாஜ்மஹாலைப்போல, ஓர் காவிய மாளிகையும், கவிச் சிற்பியின் சிங்காரக் கனவுகளாலும் அவற்றை உள்ளவாறு சித்திரிக்கும் செஞ்சொற்களாலும், 'எல்லையில் செல்வம் தீரா இசை'யின்பத்தாலும் இசைந்து நிற்கின்றது. காவிய மாளிகையில் பல் பல் பகுதிகள் (அவயவங்கள்) உண்டு. எனினும் அது கேவலம் ஒரு கற்குவியலன்று; பலவேறு அவயவங்களும் விரவிவரும் ஓர் கலம்பகமுமன்று. ஒரு காவியம் ஒரு தனி மாளிகையாகும். அதன் பலவேறு பகுதிகளும், ஒரு ஜீவப்பிராணியின் அவயவங்களைப்போல, காவிய மாளிகையோடு ஒன்றுபட்டிசைந்து நின்று அதனை ஓர் தனிமாளிகையாகக் காட்டல் வேண்டும். ஒவ்வொரு பகுதியும் முன்னும் பின்னுமுள்ள பகுதிகளோடு சங்கிலித் தொடர்போல இசைந்து காவிய உலகிலே 'ஒற்றுமை'யுணர்ச்சியைக் காட்டவேண்டும்.

*

Best copy available

எந்தக்காவியத்தை ஆராய்ந்தாலும் முதலில் இத்தகைய "ஒற்றுமை" யுணர்ச்சியை நன்குணர்ந்து, அக்காவியத்தின் தனிப் பெருநோக்கம் அல்லது நிகழ்ச்சி எது?—என்பதை அறிந்துகொள்ள வேண்டும். காவியத்தின் தனிப்பெரு நோக்கத்திற்கு அதன் பல வேறுபகுதிகளும் அரண் செய்தோ அழகுசெய்தோ விளங்குதல் வேண்டும். சில பகுதிகள் காவிய மாளிகைக்கு 'அஸ்திவாரக்கல்'லாகவோ அடிப்படையாகவோ விளங்கலாம். வேறு சில பகுதிகள் காவியப் பெருநோக்கத்தின் இயற்கை விளைவாகவிளையலாம். காவியத்தின் தனிப்பெரு நிகழ்ச்சி அல்லது மத்தியசம்பவத்தோடு காவியத்தின் பகுதிகளெல்லாம் ஜீவசம்பந்தம் பெற்று விளங்குதல் வேண்டும்.

* * *

காவியங்கள், வல்லவாக்கியபேரழகு வாய்ந்த கட்டிடங்களைப் போலவே, கவிச் சிற்பிகளால் நிர்மாணம் செய்யப்பெறுகின்றன. காவிய அமைப்பு முறை, கல்வி கேள்விகளில் சிறந்த ரசிகரது செம்மைசான்ற உள்ளத்திற்குப் பேரமுதமாகின்றது. கட்டுக்கோப்பு மர்மங்களை யுணர்ந்து கவிச்சிற்பத்திறமை தோன்ற அமைக்கப்பெறும் காவியப் பூங்கோயில்களே, காவியவுலகின் "தாஜ்மஹால்"களாய், அழகுத் தெய்வம் ஆனந்தத் தாண்டவம் புரியும் அருமைத் திருக்கோயில்களாய்த் திகழ்கின்றன.

பொன்கொண் டிழைத்த!
மணியைக் கொடுபொதிந்த!
மின்கொண் டமைத்த!
வெயிலைக் கொடுதமைத்த!
என்கொண் டியற்றிய!
எனத் தெரிகிலாத!

என்று மகாரசிகனான அநுமன் இலங்கை மாளிகைகளை நோக்கி நோக்கி வியப்பதுபோலவே, பேரறிவாளரும் ஆராய்ச்சியாளருமான பெரியோர், கவிச்சிற்பிகள் இன்பத்தால் இழைத்து அழகால் பொதிந்து, கனவுகளையும் சொற்களையும் சேர்த்து இசையால் இசைத்து, கற்பனையுலகில் கட்டி நிறுத்திய காவிய அரண்மனைகளைக் கண்டு வியந்து பேரின்பமெய்துகின்றார்.

# பத்திரிகை ஆராய்ச்சி.

—(i)—

"இந்துமதத்தின் அந்தரங்கம்" என்னும் பொருள்பற்றி, அறிஞர் வாஸ்வனி பத்திரிகைகளில் ஒரு கட்டுரை வரைந்துள்ளார். அதன் சாரம் வருமாறு:—

பிரபஞ்சம் முழுவதிலும் தன் செல்வாக்கு நிலவியது முன்னாளில் ஆன்ம வித்தையை உலகத்திற்குதவியது இந்தியாவாகிய நம் பாரதகண்டம். ஞானமே பாரதமாதாவின் பொருளாகவும் ஞானமே பாரதநாட்டின் பலமாகவும் ஆன்மதேர்ச்சியே இந்தியாவின் முக்கிய நோக்கமாகவு மிருந்துவந்தன. இக்கருத்தை உள்ளடக்கியே கண்ணன் "ஓ பாரதா! நீ உன்னுடைய எல்லா உரிமையோடும் அவனிடம் அடைக்கலம் புகுவாயாக" என்று உபதேசிக்கிறார். இவ்வரிய உபதேசத்தையே இந்தியாவின் பொது நலம் கருதுபவர்களுக்கு நான் திருப்பிச் சொல்லவேண்டி யிருக்கிறது. இம்மொழிகளில் பண்டைய ஞானத்தின் சாரம் வெளிவந்துளது. ஒரே சமர்க்களத்தில் பாண்டவர் சேனையும் கௌரவர் சேனையும், அழியும் இராச்சியத்தை வெல்வதற்காக அணிவகுத்து நின்றபொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான் அழியாத இராச்சியத்தை அடையும் மார்க்கத்தை அறிவிக்கின்றார். பண்டைய ஞானத்தைப் பாரதகண்டம் பல நூற்றாண்டுகளாகப் பாதுகாத்து வந்திருக்கிறது. இடையிடையே மிருகபலம் எழும்பி தெய்விக—ஸ்தலங்களையும் புண்ணிய ஆலயங்களையும் அளவிடா ஐசுவரியங்களையும் அழித்தது. ஆனால் பாரதகண்டத்தின் பண்டைய ஞானம் அழிக்கப்படாததாகவிருக்கிறது. ஓர் பெரிய படையைத்திரட்டிக் கொண்டு அலெக்சாந்தரென்னும் யவன அரசன் இந்தியாமீது படையெடுத்தனன். மேலும் அசேபியர்களும் ஆப்கன்களும் பட்டாணிகளும் மொகலாயர்களும் இந்தியாவைச் சூழ்ந்து நின்றனர். பிறகு மேற்கிலிருந்து சூறாவளி அடிக்க ஆரம்பித்தது. இவைகளெல்லாவற்றாலும் இந்தியாவின் பழைய ஆன்மஞானத்தின் நிலை குலையவில்லை. இத்தேசம் அமைதியற்றுத் தலைசாய்ந்து கிடக்கிறது. ஏழைகளைப்பற்றி யார் நினைக்கிறார்? "நாம் என்ன செய்கிற"தெனப் பலர் யோசிக்கிறார்கள். எப்பொழுது நமக்கு நல்லகாலம் வருமென்றொரு வாலிபன் மனச் சஞ்சலமடைந்து கேட்கிறான். இவைகளெல்லாவற்றிற்கும் கீதையிலுள்ள பரிகார மொழிகளைத் திருப்பிச் சொல்வதைத் தவிர நான் வேறென்ன சரியான பதில் சொல்ல முடியும்? அதாவது:—"ஓ பாரதா! நீ மனப்பூர்வமாக அவனிடம் அடைக்கலம் புகுவாயாக." ஐரோப்பாவின் நிலைமையைச் சற்று ஆராயுமிடத்து எங்கும் பகைமையும் கொடுமையுமே காணப்படுகின்றன. ஒருவர் சொல்லியபடி பிரிட்டிஷ் 'சாம்ராஜ்யம்' மீண்டும் அநாகரிகத்திற்குத் திரும்புகிறது. நாளுக்குநாள் நாசத்தை யுண்டாக்கவே சாத்திர ஆராய்ச்சிச் சங்கங்கள் உபயோகப்படுகின்றன. ஐரோப்பா 'இம்சை'யில் அதிக நம்பிக்கை கொண்டிருக்கிறது. இயேசுநாதர் மலைமீதிருந்து செய்த உபதேச மொழிகளை ஐரோப்பா அலட்சியஞ் செய்கிறது. கிறிஸ்தவர்களிடம் கிறிஸ்துவின் போதனை வலியற்றிருக்கிறது. மேற்போக்கான சீர்திருத்தத்தால் உண்மைவிருத்தி உண்டாகாது. "முதலில் இறைவனிடம் சரணமடைந்தால் எல்லாம் தானாகவே வந்துசேரும்" என்பது உண்மையல்லவா? உண்மையே நம்மை விடுவிக்கும். ஆகவே தேசியக் கலாசாலைகளும் சங்கங்களும் உண்மையை ஆராய்ந்தறியப் பிரயத்தனப்பட வேண்டுமே தவிர, கொள்கைகளைப் பிரசாரஞ் செய்வதில் காலங்கடத்தலாகாது.

* * *

வடநாட்டில் காஞ்சாபள்ளத்தாக்கில் வாழ்பவரும் இராட்டினத்தில் நூல் நூற்பவருமான ஸ்ரீமதி நோரா ரிச்சார்ட்ஸ் 'மாடர்ன் ரெவியு' பத்திரிகையில் ராட்டினம் என்ற தலைப்பில் எழுதியுள்ள வியாசத்தின் சுருக்கம்:—

இந்தியாவில் என் மனத்தைக் கவர்ந்த அழகிய பொருள்கள் மூன்று. அவையாவையென்று வினவினால் இறைகிணறு, கட்டை வண்டி, இராட்டினம் என்று தயங்காது விடையிறுப்பேன். இப்பொருள்கள் மூன்றும் இயற்கையின் அழகிலே சிறந்தவாயிருப்பதோடு, அவைகளைச் சூழ்ந்து நிற்கும் பொருள்களும் அவற்றின் அழகை அதிகப்படுத்துகின்றன. இறை கிணறு என்றதும் நமது மனத்தின் முன்பு வெப்பமிகுந்த பிரதேசத்தின் நடுவே ஓரிடம், மரங்கள் அடர்ந்து நிழல் படர்ந்து குளிர்ச்சிபொருந்தி விளங்குவதும், கிணற்றிலிருந்து சொட்டுச் சொட்டென்று விழுந்துகொண்டே தண்ணீர் இறைக்கப்படுவதும், அந்நீர் சிறு கால்வாய்களினூடே கலகலவென்றுபாய்ந்து, தாழ்ந்துகிடக்கும் வயல்களில்சென்று விழுவதுமாகத் தோன்றுகின்றது. எனவே கிணற்றின் அழகு ஒருபுறமிருக்க, அதைச் சுற்றியுள்ள காட்சியும் நமக்கு இன்பந்தருவதாயிருக்கிறது. இவ்வாறே மாட்டுவண்டியும்,

இருபுறத்தும் மரங்கள் வரிசையாக வளர்ந்த [illegible] சாலையும் அறிவே மாலை நேரத்தில் தானிய மூட்டைகளை ஏற்றிக்கொண்டு கட்டைவண்டிகள் அசைந்து செல்வதும் நினைவுக்கு வருகின்றன. இரட்டினம் வீட்டுக் குடியிருப்பு வீட்டுத் தாழ்வாரத்தில் ஒரு பெண்மணியானவள் அமர்ந்து அமைதியுடன் நூல் நூற்றுக்கொண்டிருக்கும் காட்சியின் அழகை என்னவென்று கூறுவது! இம்மூன்று பொருள்களுக்கும் அலங்காரம் எதுவும் வேண்டுவதில்லை. தம்மிலேயே அவை அழகு வாய்ந்தன. இறைவனுக்கு அலங்காரம், கவலை ஏற்றத்தை இழுக்கும் மாடுகளும், குதூகலத்துடன் பாடிக்கொண்டு அம்மாடுகளை ஓட்டும் மனிதனுமேயாம். கட்டை வண்டிக்குச் சில சமயங்களில் பித்தளைப் பூண் பூட்டுகிறார்கள். மாலை நேரத்தின் மஞ்சள் வெயில் படும்போது இப்பித்தளைப் பூண்கள் பளபளவென்று ஒளி வீசுவதுண்டு. கட்டைவண்டியின் கம்பீரமான சௌந்தரியத்தை இப்பித்தளையின் பளபளப்பு கெடுத்துவிடுவதில்லை. ஏனெனில் வண்டி திறந்த வெளியுடனும், சூரிய வெளிச்சத்துடனும் தொடர்புடையதொன்று. ஆனால் இராட்டினம் இத்தன்மையதன்று. கூரை நிழலுக்கும் அதற்குமே பொருத்தமுண்டு. இராட்டைக்கு அலங்காரம் அதில் நூற்கும் பெண்மணியேயாவள். இராட்டுக்குச் சிலர் வர்ணம் பூசுகிறார்கள். என்னைக் கேட்டால் சாதாரண மரத்தினாலான இராட்டினமே அழகுடையதென்பேன். வீட்டுத் தாழ்வாரத்தின் நிழலில், பழகிப் பழகிக் கறுத்துப்போன இராட்டுக்குப் பின்னால், மாநிறமும் கறுத்தடர்ந்த கூந்தலுமுடைய ஒரு பெண்மணி, பொன் வெள்ளி நகைகள் அணிந்து, சாயம் தோய்த்த புடவை உடுத்தமர்ந்து நூல் நூற்கும் காட்சியை மனத்தில் கற்பனை செய்து பாருங்கள். இராட்டைக்கு வர்ணம் பூசி அலங்கரிப்பதால் இந்த அழகு மேலிடுமோ? [illegible] இறைவனும், கட்டை வண்டியும், ராட்டினமும் இந்தியாவின் உயிர்நிலைகளாகும். அவை முறையே விவசாயம், விளைவு, வீடு இவைகளைக் குறிக்கின்றன. இந்தியாவுக்கே சிறப்பான சற்குணம் இம்மூன்றிலும் குடிகொண்டிருக்கிறது. அவை மெதுவாகவே செல்லும். கட்டைவண்டியை நீங்கள் பாய்ச்சலில் விட முடியாது. கவலை ஏற்றத்தை இழுக்கும் மாடுகளை பறக்கச்செய்ய முடியாது. இராட்டினத்தில் நூல் நூற்கவோ பொறுமை அதிகம் வேண்டும்; அதில் அவசரம் பயன்படாது. மனித வர்க்கம் இன்னும் எவ்வளவு தான் முன்னேற்றமடைந்தாலும் இம்மூன்று பொருள்கள் மட்டும் எக்காலத்தும் அழியா. இந்தியாவில் கிராம ஜனங்கள் இன்னும் வெகு காலத்துக்கு அவற்றை உபயோகித்து வருவார்கள். இந்தியாவின் இயற்கைக்கே விரோதமான வேகத்தில் நாம் எல்லாரும் விரைந்து செல்லும்போது, அவை அமைதியின் சின்னங்களாக நின்று "ஏன், இத்தனை அவசரம்? இவ்வளவு வேகமாக நீங்கள் தேடுவதென்ன? அதை எங்களால் கொடுக்கமுடியாதா?" என்று வினவா நிற்கும்.

* * *

ஸர் பி. ராமநாதன் கல்வியின் நோக்கத்தைப்பற்றி ஓரரிய சொற்பொழிவு செய்தார். ஆரம்பத்தில் எண்ணம் பேச்சு, செய்கை மூன்றினும் தன்னடக்கம் வேண்டுமென்று அவர் கூறினார். மேலும் அவர் பேசியதன் சாராம்சமாவது:—

மேலை நாடுகளில் ஆன்மாவைவிட, உடம்பை அதிகமாகக் கவனித்துப் போஷிக்கிறார்கள். ஒழுக்கநெறி ஒன்று இருப்பதாகவே பலருக்கும் அங்கு தெரியவில்லை. அப்படி நினைக்கும் சிலர் எதாவது தனித்தனியாக இருக்கிறார்கள். பொதுவாக அவர்களுக்கும் செல்வாக்கில்லை. ஆகையால் கல்வி முறையில் ஆன்மாவைப்பற்றியதொன்றுமேஇல்லாமற் போய்விட்டது. கடவுளிடம் பக்தியை உண்டுபண்ணுவதற்குப்பதிலாக அக்கல்வி உலக ஆசைகளையே வளர்க்கிறது. ஹக்ஸ்லி என்ற நாஸ்திகரே, அவர்களுடைய கல்விமுறை, தீயவழியிலுள்ளவர்களை நல்வழிக்குத் திருப்பக்கூடிய தன்று எனக் கூறியிருக்கிறார். மேலை நாட்டாருக்கு ஆன்மாவைப்பற்றிய விஷயங்கள் மிகக் குறைவாகவே தெரிந்திருக்கின்றன. கிரேக்கர்களுடைய வேதாந்தத்தின் அதிகர்த்தா சோக்ரடீசுக்கு நமது இந்தியக் கொள்கைகளாகிய சீவான்மா; பரமான்மா என்ற இரண்டும்தெரியவில்லை. கல்வியின் நோக்கம் மெய்யறிவினிடத்தில் ஆவலை ஏற்படுத்துவதாகும். நம்முடைய ஆன்மாவின் வளர்ச்சிக்கு, அறிவினிடத்தில் அன்பு கொள்ளுதல் மாத்திரம் போதுமானதல்ல. சுவானுபவம், அதாவது சொந்த அனுபோகம் வேண்டும். யோகம் என்று கூறப்படுவது, அனுபவ முறையில் அறிவைப்பெற முயற்சிப்பதுதான். சுவாசத்தைக் கட்டுப்படுத்துவதும், இன்னும்தன்னடக்கச் செய்கைகளும் ஆன்மாவின் வளர்ச்சிக் குரியவையாகும். ஒரு அளவுக்குட்பட்ட மது சீவான்மாவை அளவற்ற உண்மையாகிய பரமான்மாவு (கடவுளு) டன் ஐக்கியமாக்குவதே உண்மைக் கல்வியின் நோக்கமாக இருக்கவேண்டும். பிரமசரியம், குருகுலவாசம் இவ்விரண்டையும் உயிர்ப்பிக்க வேண்டும். குருகுலவாசத்தில் பிரமசரியத்தில் பழகியவன்தான் இல்லறத்தைச் சரியாக நடத்த வல்லவனாக விருப்பான். இப்படிப்பட்ட கிரகஸ்தர்களை இந்தியா உண்டாக்குமானால் அதற்கு எந்நாளும் அழிவில்லை. அவர்களே தங்களுக்கும் தங்கள் தேசத்திற்கும் கௌரவத்தை நிலை நாட்டுவோர்கள். அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், தாயுமானவர் போன்ற உத்தமர்கள் கூறிய தினசரி வாழ்க்கையைப்பற்றிய அனுபவங்கள்சரியாகப் பள்ளிக்கூடங்களில் கவனிக்கப்படாதது மிகவும் வருந்தத்தக்கது. பள்ளிக்கூடங்களும் கலாசாலைகளும் சரியானவழிகளில் ஏற்படுமானால் குருகுல பிரமசரியம் ஒருவாறு மறுபடி ஏற்படக்கூடும். அப்போது அறிவும் பக்தியும் வளர்ந்து முத்தியுங்கிட்டும்.



## சதங்கை யொலி.

### கடல்கொண்ட கதைகள்.

பூமி முழுவதையும் அல்லது பூமியிற் சில பாகங்களைக் கடல்கொண்ட கதைகளைப் பழைய நாகரிக வரலாறுகள் பலவற்றிற் காணலாம். பைபிலிலே வரும் நோவா காலத்துப் பிரளயக் கதை பிரசித்திபெற்றது; ஆரியர்களின் யுகாந்த காலப் பிரளயங்களையன்றி, குமரிக்குத் தெற்கேயிருந்த ஒரு பெரிய கண்டத்தைக் கடல்கொண்ட கதையும் பூம்புகாரைக் கடல்கொண்ட கதையும், சங்க நூல்களில் காணலாம். இப்பொழுது தென் அமெரிக்காவில் யுகட்டான் என்ற பிரதேசத்திலே அகப்பட்ட சாசனங்களிலிருந்து அத்லாந்திக் மகாசமுத்திரத்தில் முன்பு ஒரு மிகப் பெரிய கண்டமிருந்து கடல் கொள்ளப்பட்டதாகத் தெரிய வருகிறது. இது நிகழ்ந்தது பதினோராயிரம் ஆண்டுகளுக்குமுன் என்பர். இந்த யுகட்டான் பிரதேசத்திலே ஐம்பதினாயிரம் ஜனங்கள்வரை வாழ்ந்து வந்து பின்பு சிதைவுற்றுப் புதையுண்டு மறைந்துபோன கலைநகரங்களின் பாழிடங்கள் அடக்கப்பட்டிருக்கின்றன.

### நாட்டுப் பற்று.

நமது பாரதி "செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே" என்றார். கோல்ட்ஸ்மித் என்ற கவி 'பிரயாணி' என்ற தன் செய்யுள் நூலில் வெகு அழகாக ஒரு தேசாபிமானியைக் குறித்து விரிவாக எழுதுகிறான். ஏழையான அவன் தன் கைப் புல்லாங்குழலை வாசித்துக்கொண்டே சிறிது சிறிதாகப் பணம்பெற்று தன் யாத்திரையை முடிக்கிறான். தன் நாடு சேர்ந்ததும்

"தாய்நாடே! என்னே நீ தரும் இன்பம்! உலகெலாம் சுற்றி வந்தும் உன்னிடத்தின்ற எனது பேரன்பு குறையாது மேலோங்குகின்றது. சீதளபூமியில் குளிரால் விறைத்துக்கொண்டேயிருக்கிறவனுகட்டும், பூமத்திய ரேகைக்கருகில் வெப்பத்தால் வருந்துகிறவனுகட்டும்—எவனுயினும் சரி; தனது நாடே பாருக்குள் நல்ல நாடு என்று பெருமை பாராட்டுகிறான்" என்று அக்கவிஞன் சொல்லுகிறான். இன்னும் ஸ்காட் என்ற ஆசிரியன் "தேசாபிமானம்இல்லாதவன் சாகாமலிருந்தும் செத்தவனே ஆவான். அவனுக்கழுவார் கிடையாது; பூசனை கிடையாது; பாடுவார் கிடையாது" என்று கூறுகிறான். ஒரு மகாகவி 'துன்மார்க்கச் செயலிற் செலவிட்டு ஒரு பிள்ளையை இழப்பதினும் தேசத்திற்காகப் பன்னிரண்டு பிள்ளைகளைக் கொடுக்கலாம்' என்கிறான். அந்தோ! தாதாபாய், திலகமஹரிஷி, காந்தியடிகள், லஜ்பதி, தாசர் முதலானோர் தேசத்திற்காக எத்தனை கஷ்ட நஷ்டம் உற்றனர்! உறுகின்றனர்! டிக்ஸ்வினி சிறை கடந்து மாதக் கணக்கில் பட்டினி கிடந்து ஏன் உயிர் துறந்தனர்? அன்பா! 'தேசாபிமானம், தேசாபிமானம்' என்ற விடையே பல தடவை எதிரொலி செய்கின்றது.

## சாஸ்திர ஆராய்ச்சி.

ஸையன்ஸ் என்று ஆங்கிலத்தில் கூறப்படுவதையே நாம் சாத்திரம் என்று தமிழில் கூறவேண்டியிருக்கிறது. இது பல்வேறு வகைப்படும். மனிதனுடைய அறிவு எந்தெந்தத் துறையில் எவ்வளவு எவ்வளவு தூரம் செல்லுகின்றதோ அதற்குட்பட்டன யாவும் சாத்திர ஆராய்ச்சிக்குட்பட்டனவேயாகும். எறும்பு முதல் யானை ஈருக என்ன பிராணிகளின் வாழ்க்கை சம்பந்தமானவற்றைப்பற்றிக் கூறுவன யாவும் சாத்திரங்களேயாகும். இந்தச் சாத்திர ஆராய்ச்சியில் இந்தியா பண்டைக் காலத்தில் பெரும்புகழ் படைத்திருந்தது. புதிய புதிய ஆராய்ச்சிகளைச் செய்து மூற்காலத்தவர் வெளியிட்டுவந்தனர். தக்ஷசீலம், நாளந்தா, காசி, காஞ்சி முதலிய இடங்களிலிருந்த சர்வகலாசாலைகளில் எறக்குறைய எல்லாச் சாத்திரங்களும் கற்பிக்கப்பட்டு வந்ததாகச் சொல்லப்படுகின்றது. இந்தியர்கள் சாத்திரத்தின் பல துறைகளிலும், புண்பட்டிருந்தார்கள் என்பதற்குப் பல ஆதாரங்கள் இருக்கின்றன. இத்தகைய சாத்திர ஆராய்ச்சியில் மேனாட்டார் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்துதான் அதிகமாக முன்னேற்றமடைந்து வந்திருக்கின்றனர். மஹாயுத்த காலத்தில் சாத்திர ஆராய்ச்சி அதிகமாயிற்றேயன்றிக் குறையவில்லை. சத்துருக்களை எந்தெந்த வழியில் நாசம் செய்யலாம் என்ற விஷயத்திலேயே தங்கள் அறிவைச் செலுத்திப் புதிய புதிய ஆயுதங்களையும் புதிய புதிய இயந்திரங்களையும் நேசக்கட்சியாரும் ஜர்மானியரும் கண்டுபிடித்தார்கள். அரசியல் விஷயங்களில் நமது கவனத்தைச் செலுத்திக்கொண்டு போவதோடு, நமது சாத்திர அறிவையும், இலக்கியத்தையும் மொழியையும் விருத்திசெய்வதற்குரிய வழிகளையும் நாம் மறந்துவிடக்கூடாது. நமது நாட்டில் ஜகதீச சந்திர வசுவையும், பிரபுல்ல சந்திரராயரையும் ரவீந்திரநாத தாகூரையும் காலஞ்சென்ற ராமானுஜம் முதலியவர்களையும் அறியாதார் யார்? நமது நாட்டில் பல வசுக்களும், பல ராய்களும், பல தாகூர்களும் பல பங்கிம் சந்திரர்களும் தோன்றல்வேண்டும். அப்பொழுதுதான் இந்தியா உண்மையில் முன்னேற்றமடைந்ததாகக் கருதப்படும். அரசியல் சுதந்திரத்தால் மட்டும் நாம் முன்னேற்ற மடைந்தவர்களாக எண்ணப்படமாட்டோம். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்"—என்றபடி 'ஸயன்ஸும்' (எண்) இலக்கியமும் (எழுத்து) இரண்டு கண்களாகக் கருதப்பெறல் வேண்டும். சாத்திரமும் (Science) இலக்கியமும் (Literature) நன்கு ஆராயப்பெறுதல் வேண்டும். "சாத்திரங் கோடி வைத்தான்; அவை—தம்மினும் உயர்ந்ததோர் ஞானம் வைத்தான்" என்று பாரதியார் பாடுகிறார். சாத்திரங்களிலும் மேலானது மக்களது மெய்யறிவேயாகும். ஐயந் திரிபுகளால் வேறுபடாத மெய்யறிவே நல்லொழுக்கத்தின் வித்து. இத்தகைய ஒழுக்கத்தினின்றும் அரும்புவது அன்பு; மலர்வது அறம்; கனிவது இன்பவாழ்வு.



சிவமயம்.

# குமரன்

"தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்" —பாரதி.

சதங்கை ௪. | காரைக்குடி, குரோதனஹு பங்குனிமீ | மணி கஉ.

## உண்மை வணக்கம்.

கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஒங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீசனெ னாதவர்க் கில்லையே.

பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மீதொழில் பூணிலென்
எட்டு மொன்று மிரண்டு மறியிலென்
இட்ட மீசனென் னாதவர்க் கில்லையே.

காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி அடைந்தது வேட்கிலென்
ஏல ஈசனென் பவர்க்கன்றி யில்லையே.

கூடவே டத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்த னம்பலக் கூத்தனை
பாடலா ளர்க்கல் லாற்பய னில்லையே.

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி யிருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்று மீசனென் பார்க்கன்றி யில்லையே.

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலுமா னுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே.

—திருநாவுக்கரசர்.

# கவிகுல ஞாயிறு.

—(௦)—

பி. ஸ்ரீ.

விண்ணிடை யுலகமென்னும்
மெல்லியல், மேனிநோக்கக்
கண்ணடி வைத்ததன்ன
இலங்கையைக் கண்ணிற் கண்டான்.

விண்ணாடு என்னும் பெண்ணரசி, அழகு சுமந்திலைத்த தன் பொன் மேனியை நோக்க வைத்த நிலைக்கண்ணாடிபோல, பளபளவென்று அந்தி வேளையின் 'மத்தாப்பு' வெளிச்சத்திலே சுடர்கின்ற இலங்கைமா நகரை அநுமன் கண்ணிற் காண்கின்றான்— என்று கம்பர் வருணிக்கின்றார். இவ்வண்ணமே மண்ணுலகிலுள்ள ஒரு நாட்டின் உயர்ந்த அழகுகளை யெல்லாம் உள்ளவாறு பிரதிபலிக்கும்நிலைக் கண்ணாடியுண்டு. இதுவே அந்நாட்டிற்குரிய இலக்கியமாகும். தமிழிலக்கிய மென்னும் மணிக்கண்ணாடியிலன்றோ, நாம் நம் செந்தமிழ்த தெய்வத்தின் நவரத்தின மேனியைத் தரிசிக்கும் பேறு பெறுகின்றோம்!.

* * *

ஒரு மொழியின் சிறப்பெல்லாம் அம்மொழிக்குரிய வளமும் வனப்பும் அளித்துதவும் இலக்கியத்தின் சிறப்பேயாகும். இலக்கியத்திற்கு அழியாத அழகும் உயிரும் ஒளியும் அளிப்பவர் மகாகவிகளேயாவர். உண்மைக் கவிகளே ஒரு திருநாட்டின் மங்கல நாணாக இலங்குகின்றார். சுதந்திரமே உயிர்; சுவாசம் உயிரன்று (Liberty is the breath of our nostrils) என நல்லறிஞர் நவில்கின்றார்.

வித்தம் அடக்கினேன்
தந்தநற் றமிழ்மொழி
தற்சுதந்திரம் அறம்
அற்பர் வாய்ப்படுமோ?

என்றுமஞேன்மணீய ஆசிரியரும்கூறுவாராயினர். தற்சுதந்திரம்—தன்னரசு, ஒருநாட்டிற்கு எவ்வளவு இன்றியமையாததோ, அவ்வளவு தாய்மொழியின்—தாய்நாட்டின் வளர்ச்சிக்கும் அவ்வக்காலங்களில் நல்லிசைப் புலவர் புனைந்துதரும் தெய்வமாக் கவிகளும் இன்றியமையாதனவேயாகும்.

* * *

மகாகவிகளே ஒரு நாட்டின் உயிர் நிலையாவர். மக்களுடம்பில் தங்கியுள்ள உயிரினுக்கு 'மூன்று கால்கள்' (Three feet) உண்டென்று ஹக்ஸ்லி யென்னும் உடல்நூற் பேராசிரியர் எடுத்துரைக்கின்றார். இவையாவன:—மூளை, மூச்சுப்பை, இரத்தப்பை என்பன. 'இம்மூன்று கால்களிலேதான் உயிர் உடம்பிடையே உலவுகின்றது. இவ்வண்ணமே தமிழிலக்கியமும் 'மூன்று கால்' களால் இயங்குகின்றதென்னலாம்.

யாம் அறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வள்ளுவன்போல், இளங்கோவைப்போல்,
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை,
உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை.

என்று பாரதியார் பாடுகிறார். கம்பராமாயணம், திருக்குறள், சிலப்பதிகாரம் இம்மூன்று நூல்களுமே தமிழுக்கத்தின் உயிர்நிலையாகும். இவற்றினுள்ளும் தமிழுக்குக் 'கதி'யாவார் கம்பரும் திருவள்ளுவருமே—என்று அறிஞர் துணிகின்றார்.

* * *

அறம் திறம்பி மறம் மேலோங்கும் காலத்திலே, உண்மைப் பொருளான ஆண்டவனது அதிகார முத்திரை



பெற்ற அவதாரமூர்த்திகள் தோன்றுகின்றனர் என்பது இந்து சமயத்தின் கொள்கை. இவ்வண்ணமே உலக வாழ்க்கை மணமற்று வனப்பற்று நிலைகுலையும் காலங்களில், அழகுத் தெய்வத்தின் அருள்வெள்ளத்திற்குச் சான்றாக மகாகவிகள் தோன்றுகின்றார். இவர்கள் ஒரு நாட்டிற்கே சொந்தமானவரல்லர்; ஒரு காலத்திற்கே உரிமை வாய்ந்தவர் என்பதுமில்லை. இவர்கள் எக்காலத்திற்கும் எச்சமயத்திற்கும் எந்நாட்டிற்கும் பொதுவானவர்.

வெள்ளத்தின் பெருக்கைப்போல்
கலைப்பெருக்கும் கவிப்பெருக்கும்
மேவுமாயின்,
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்.

என்று பாரதி கூறுவது உண்மையிலும் உண்மையே. செயற்கரிய செய்யும் வீரனே அவதார புருஷனாகின்றான். அத்தகைய ஓர் மகாவீரனே மகாகவியுமாகின்றான். உலகினைச்செந்நெறி செலுத்தவல்ல பேராண்மையும் ஆன்ம சக்தியும் இராமனைப்போன்ற அவதாரமூர்த்திக்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு கம்பனைப்போன்ற மகாவீரகவிக்கும் அவசியமேயாகும்.

* * *

"ஆரென்றறியத் தகாத எனை அரசுமாக்கி முடிசூட்டி ......" என்று கர்ணன் சுயோதன மன்னனை நோக்கிக் கூறியதுபோல, செந்தமிழ்த் தெய்வமும் கவிச்சக்கரவர்த்தியைத் தன் சிந்தையுள் வைத்து, வருகின்ற நாளெல்லாம் வளர்கின்ற காதலால் வாழ்த்துமென்பதில் ஐயமில்லை. திருக்குறள் தமிழர் பொதுமறையெனின், கம்பராமாயணமே தமிழர் காவியப் பூங்கோயிலாகும். சீதையை நோக்கிய இராவணன் கண்களுக்கும் பிற மாதர்களெல்லாம்,

சானகிக்கு அழகு
தந்து அயல்சார

என்றபடி, சீதைக்கு அழகு தருவோராகவே அமைந்திருந்தனர். அவ்வண்ணமே, தமிழ் நூல்களெல்லாம் கம்பரது பெருங்காப்பியத்திற்கே அழகுதந்து அயலொதுங்கி அமைகின்றன.

* * *

நம் செந்தமிழ் வேதவிளக்காகிய திருவள்ளுவரது பெருமையைப் பாராட்டிப் பேசுமிடத்து, பொதுவாக இலக்கிய ஆராய்ச்சியிலும், சிறப்பாக நம்செந்தமிழ்ஆராய்ச்சியிலும் சிறந்து விளங்கும் திருவாளர் வையாபுரிப் பிள்ளை பின்வருமாறுகூறியுள்ளார்:— "எனது கருத்தெல்லாம், பெருமக்களது அருந்தோற்றத்தால் விசேஷித்து விளங்கும் பிரகாசமின்றித் தமிழ்ச் சரித்திரமண்டலம் வறிதேயிருந்த காலத்து 'வள்ளுவர்'என்று நாம் கொண்டாடும் இத்தெய்வ ஒளி தோன்றியது என்பதே. அங்கங்கே சிறுசிறு நட்சத்திரங்கள் ஒன்று சேர்ந்து கூட்டமாக விளங்கியிருந்தன. சங்கப் புலவர்கள் என்று நாம் கருதும் நக்கீரர், கபிலர், மாங்குடிமருதனார் முதலானோர் ஒருங்குகூடிச் சிற்றொளி நல்கித் திகழ்ந்து வந்தனர். சிலப்பதிகார மியற்றிய சேரர் பெருமானும் நட்சத்திரம் இன்னும் விண்ணில் ஒளிரவில்லை. தண்ணிய அருளொடு மிளிரும் தேவார ஆசிரியர்களும் ஆழ்வாராதியர்களும் இன்னும் இன்னொளி நல்கவில்லை. சிந்தாமணியை உதவியருளிய திருத்தக்கதேவர் என்னும் செவ்விய நல்லொளி இன்னும் முகம்

செய்து திகழவில்லை. திருத்தொண்டர் புராணமென்னும் சைவ மெய்ந்நூல் அருளிய சேக்கிழார் எனப்படும் விடிவெள்ளி விண்ணில் இன்னும் அரும்பவில்லை. விண்ணையும் மண்ணையும் தன்னிடமாகக்கொண்டு தனது பேரொளிப் பெருவெள்ளத்தால் இருபேருலகையும் ஜோதி ஸ்வரூபமாக்கிய கம்பர் என்னும் கவிகுலபாஸ்கரன் இன்னும் உதயஞ் செய்யவில்லை. பேரொளி மண்டிலங்கள் ஒன்றுமின்றிச் சிறு வெள்ளிகள் சிற்றொளி செய்து விளங்கிய தமிழ்ச் சரித்திர மண்டலத்தே நாம் இன்று போற்றித் தொழுகின்ற தெய்வ ஒளியாகிய திங்கள் உதயமாயிற்று.' தமிழின் கதிரவனாகிய கம்பரையும் வள்ளுவரையும் திருவாளர் பிள்ளையவர்கள் உலகின் இருபெருஞ் சுடர்களாக உவமித்துக் கூறுவது பொருத்தமுடையதேயாகும்.

* * *

மேலைநாட்டு மகாகாவியங்களையும் நன்கு கற்று, நவீன ஆராய்ச்சித் துறைகளில் கைதேர்ந்த வல்லவராக விளங்கிய (காலஞ்சென்ற) அறிஞர் வ. வெ. சு. ஐயர் பின்வருமாறு கூறியுள்ளார்:—''கம்பனுடைய ராமாயணமானது மற்ற கவிகள் எழுதிய ராம சரிதைகளையும் தமிழில் எழுதப்பட்ட இதர காவியங்களில் பெரும்பாலனவற்றையுங்கூட 'வெயிலிடைத்தந்த விளக்கொளி' போலாக்கிவிட்டது இதுமாத்திரமல்ல. கம்ப ராமாயணமானது ஹோமர் எழுதிய இலியாதையும் விர்க்கிலியன் எழுதிய எனயிதையும் மில்டனுடைய சுவர்க்க நஷ்டம் என்ற காவியத்தையும் வியாசபாரதத்தையும், தனக்கே முதனூலாக இருந்த வால்மீகி ராமாயணத்தையுங்கூட, பெருங் காப்பிய லட்சணத்தின் அம்சங்களுள் அனேகமாய் எல்லாவற்றிலும் வென்றுவிட்டது என்று சொல்லுவோம்.'' எனினும் இத்தகைய பெருமையினை இன்னும் உலகம் உணர்ந்து கொள்ளவில்லை. தமிழ் மக்கள் கம்பரது கவித்திறத்தையும் காவிய வனப்பினையும் தாங்களே இன்னும் உணர்ந்துகொள்ளாத நிலையில், தங்கள் கவிச்சக்கரவர்த்தியின் பெருமையினை உலகமெல்லாம் நன்கறிய எங்ஙனம் பரப்புதல் கூடும்.

* * *

வாங்கரும் பாத நான்கும்
வகுத்த வான்மீகி என்பான்
தீங்கவி செவிக ளாரத்
தேவரும் பருகச் செய்தான்.

என்றுகூறும் கம்பர் ஆதிகாவியமான வான்மீகி ராமாயணத்தின் தீங்கவிகளைச் செவிகளாரப் பருகியுள்ளார் என்பதில் ஐயமில்லை.

மூவானவர் தம்முளும் முந்திய
நாவினர் உரையின்படி நான்தமிழ்ப்
பாவினால் இது உணர்த்திய பண்பரோ.

என்றபடி, கம்பர் வால்மீகியின் இராம கதையைத் தழுவி, தமது காவியத்தை அமைத்திருக்கின்றார் என்பது உண்மையே. எனினும் கம்ப ராமாயணம் ஒரு மொழிபெயர்ப்பு நூலன்று. கம்ப சித்திரம் வேறு; வான்மீகி சித்திரம் வேறு என்பது இருபெரும் புலவர்களது வீரகாவியங்களையும் ஆராய்வோர்க்கு இனிது புலனாகும். கம்ப சித்திரங்களெல்லாம் வான்மீகி சித்திரங்களைப் பார்க்கிலும் பன்மடங்கு ஒளிபெற்று அழகுபெற்று உயிர்பெற்று விளங்குகின்றன.

* * *

வான்மீகியின் இராமகதை நாளடைவில் பல மாறுதல்களை அடைந்து வந்தது. இராம கதை ஆதியில் எத்தகைய சரித்திர ஆதாரமுடையதென்பதை இப்போது ஆராய்ந்து முடிவு கட்டுவது எளிதான காரியமன்று. சரித ஆராய்ச்சித் துறைகளில் மூழ்கிக் கிடக்கும் நிபுணர்களே, இவ்விஷயத்தில் கரைகாணாது திகைக்கின்றனரென்றால், சாமானிய மக்கள் இராம கதையின் சரித மூலங்களைப் பரிசோதிக்க முற்படுவது பெரும்பேதைமையே யாகும். பேரறிவாளர் முடிவு கட்டத் துணியாத விஷயங்களிலும் பேதையர்தம் அறியாமையால்சித்தாந்தம் செய்ய அஞ்சுவதில்லையன்றோ? ஆகவே 'இராவணேச்வரன் சைவனே' என்றும் 'இராம இராவண யுத்தம் ஆரியர் திராவிடர் போரே'யென்றும் கூறுவோர்கூற்று ஆராய்ச்சியின்மையாலும் அறியாமையாலும் துரபிமானத்தாலும் முளைத்தெழுந்த கூற்றேயாகும். இராவணன் பார்ப்பன குலத்தைச் சார்ந்தவன் என்று இராமாயணம் கூறுவதை இவர்கள் ஆராய்வதில்லை! இராமன் கதை ஓர் உத்தம மனிதன் கதையாகவே ஆதியில் வான்மீகி முனிவரால் கருதப்பெற்றது. உத்தமமனிதன்—உத்தமவீரன் கதை, அழகிய கதைகளை இயற்கையாகக் காதலிக்கும் மக்கள் உளத்திற்கு இன்னமுதமாகின்றது. வீரசரிதமாகிய இராம சரிதமே நாளடைவில் ஓர் உயர்ந்த தேசிய லட்சிய புருஷனது சரிதமாக விளைந்தது. அப்பால் இத்திருக்கதை ஓர் அவதார புருஷனது தெய்வத் திருக்கதையாகப் பரிணமித்தது. இங்ஙனம் மூன்று முக்கியமான மாறுதல்களை வான்மீகியின் இராமகதை அடைந்துளதென்பது ஆராய்ச்சிவாயிலாக அறியக்கிடக்கின்றது. இவ் உண்மையினை நவீன ஆராய்ச்சியாளர் பலரும் அங்கீகரிப்பர் என்பதில் ஐயமில்லை. இக்கொள்கை கல்வியிற் பெரிய கம்பருக்கும் உடன்பாடாகும் என்பது கம்பராமாயணத்தைத் துருவித் துருவி ஆராய்வோருக்கு இனிது புலனாகும்.

* * *

கண்டன னென்ப மன்னோ
கதிரவன் சிறுவன் காமர்
குண்டலந் துறந்த கோல
வதனமுங் குளிர்க்குங் கண்ணும்,
புண்டரி கங்கள் பூத்துப்
புயல்தழீஇப் பொலிந்த திங்கள்
மண்டல முதயஞ் செய்த
மாகதக் கிரியனானை.

நோக்கின னெடிது நின்று
நொடிவருங் கமலத் தண்ணல்
ஆக்கிய உலக மெல்லாம்
அன்றுதொட் டின்று காறும்
பாக்கியம் புரிந்த வெல்லாங்
குவிந்திரு படிவ மாகி
மேக்குயர் தடந்தோள் பெற்று
வீரராய் விளைந்த வென்பான்.

தேறினனமரர்க் கெல்லாந்
தேவராந் தேவரன்றே
மாறியப் பிறப்பில் வந்தார்
மானுடராகி மன்னோ!
ஆறுகொள் சடிலத் தானும்
அயனுமென் றிவர்களாதி
வேறுள குழுவை யெல்லாம்
மானுடம் வென்ற தன்றே.

இம்மூன்று அருமைத் திருப்பாடல்களில் கம்பர், அதிமுக்கியமான தமது கொள்கைகளில் ஒன்றினை நன்கு விளக்கியுள்ளார். சுக்கிரீவன் இராமனைப் பார்க்கின்றான். முதலில் சுக்கிரீவன் கண்களுக்கு இராமன் ஓர் உத்தம மனிதனாகவே காட்சியளிக்கின்றான். இராமனது பேரழகும் பெருந்துறவும் சுக்கிரீவன் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன. கண்ட அக்கணத்திலே சுக்கிரீவன்

இராமன்மீது காதல் கொள்கின்றுன். கண்டார் கண்ணுங் குளிர்ந்து நெஞ்சுங் குளிரும்படி 'சிரித்த பங்கயம் ஒத்த' இராமனது வீரத் திருவிழிகள் பேரொளிவீசி மிளிர்கின்றன. குண்டலந் துறந்த இராமனது வதனம் முன்னினும் அதிக இயற்கை யழகுபெற்று மாகத மலையில் பூர்ண சந்திரோதயமானது போலப் பொலிவுற்று விளங்குகின்றது. செந்தாமரை பூத்து நீலமேகம் தழுவி வெண்ணமுத நிலவு வெள்ளத்திலே நிமிர்ந்து நிற்கும் பச்சை மலைபோலத் தோன்றும் இராமனது திருமேனியையும் திருமுகத்தையும் கண்ணுற்ற சுக்கிரீவன்,உள்ளம்நிறைகொடுத்துச் செயல் மறந்து நிற்கின்றுன். எனினும் வீரமூர்த்தியாகவும் தியாக மூர்த்தியாகவும் காட்சிதரும் இராமன் சுக்கிரீவன் கண்களில் ஓர் உத்தம மனிதனுகவே தோன்றுகின்றுன்.

* * *

நோக்கியகண் இமையாது நோக்கி நோக்கி நெடிதுநின்ற சுக்கிரீவனது உளத்திலே இப்போது ஓர் புதிய எண்ணம் உதயமாகின்றது. அறங்கிடந்த சிந்தைபனுப் ஆசைபெலாம் துறந்த இவ் அதிவீரன் உலகத்திற்கே ஓர் உயர்ந்த இலட்சிய புருஷனுகின்றுன். படைப்புக்காலந் தொடங்கி இன்றுகாறும் உலகம் புரிந்த பாக்கியமெல்லாம் குவிந்து மனித வடிவந் தாங்கி வீரத்தோள்பெற்று வீரனுய்க் கட்புலனுயிற்றென்றே சுக்கிரீவன் கருதுகின்றுன். இதுதான் இரண்டாவது நிலை. இந்நிலையிலே வீரமூர்த்தி ஓர் உயர்ந்த தேசிய லட்சியமாக—உலகத்திற்கே உயர்வற உயர்ந்ததோர் இலக்காக—விளங்குகின்றுன். மூன்றுவது நிலையிலே வீரபுருஷன்—லட்சிய புருஷன்—ஓர் அவதார புருஷனுகின்றுன். இராமனை நோக்கி நெடிதுநின்ற சுக்கிரீவனது உள்ளத்தில் லட்சியமூர்த்தியாகவிளங்கிய இராமன் அவதார புருஷனுக மாறிவிடுகின்றுன். சுக்கிரீவனது மனம் தெளிகின்றதாம். தெள்ளத் தெளிந்த உள்ளத்திலே புருஷோத்தமனுகிய இராமன், மனித உருவெடுத்துவந்த பரம்பொருளாகவே வெளிப்படுகின்றுன். இதனுல், தேவாதிய குலங்களையெல்லாம் மானுடம் வென்று விடுகின்றதன்றோ? இத்தகைய ஆனந்தக் கனவுகளில் சுக்கிரீவன் தன்னை மறந்து கரைபுரண்டெழுந்த காதல வெள்ளத்தில் ஆழ்ந்து விடுகின்றுன் என்று கம்பர் கூறுகிருர்.

* * *

சுக்கிரீவனது மூன்று நிலைகளும் இராமயண வளர்ச்சியின் மூன்று படிகளையும் குறிப்பதாகுமென்று கருதுகின்றேன். ஆதியில் வீரத்திருக்கதையாகவே பிறந்த இராமன் கதை முனிவர் ஆச்சிரமத்திலிருந்து அரசர் அரண்மனைக்குச் சென்றது; அங்கிருந்து மகாசனங்கள் வதியும் குடிசைகளிலும் நுழைந்துவிட்டது. "வீரரை யார் வியவாதார்?" என்று கவிச்சக்கரவர்த்தி கூறும் வண்ணம், 'காசில் கொற்றத் திராமன் கதை' யினை, 'கற்றவர் கற்றிலாதவர்' என்னும் இருதிறத்தாராகிய மகாசனங்களும் வியந்துபோற்றி 'உண்ணு நீரினும் உயிரினும்' உவப்பாராயினர். இந்த நிலையிலேதான் இராமன் கதை குறித்த மூன்று மாறுதல்களை யடைகின்றது. இராமனது வீரசரிதம் நமது தேசிய லட்சியங்களின் பொக்கிஷமாகப் பொலிகின்றது. இராமன்



பாரத நாட்டின் நல்லறப் பயனுகவும், சீதை பாரத நாட்டின் சோதியாகவும் விளங்கி நம் மக்களுள்ளமாகிய மகாராச்சியத்திலே என்று மழியாத தமது சிங்காதனத்தைத் தாபிக்கின்றுர். இருதிறத்தார்க்குஞ்செய்த 'வரம்பிவரென்னநின்ற' இராமனும் சீதையும் நாளடைவில் அவதார மூர்த்திகளாகப் பரிணமித்துவிடுகின்றனர். இராமனைப்போன்ற லட்சிய புருஷனும், சீதையைப்போன்ற பெண் தெய்வமும் மனித-குலத்திற்கே உரியராவர். இதனுலன்றோ மனிதகுலம், தேவர்குலம் ஆதிய குழுவை யெல்லாம் வென்று வாகை சூடுகின்றது! இது கம்பர் வாக்கு. மனிதர்க் கெல்லாம் பேரின்பம் பயக்கும் உயர்ந்த லட்சியங்களையும் கொள்கைகளையும் இராம கதை வாயிலாக வெளியிட்டு மனித-குலத்திற்குப் பெருவாழ்வு தருவதே கம்பர் மதமாகும். இதனையே (Religion of humanity) மக்களை வாழ்விக்கும் சமரச சன்மார்க்க மதமென்று கூறலாம்.

* * *

கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலும்
இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி னென்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல்பெருஞ் சமயஞ் சொல்லும்
பொருளும்போற் பரந்த தன்றே.

உண்மைக்கு அனந்த முகங்கள் உண்டு. முழு உண்மையினையும் தன்னகத்தே அடக்கி முடிவுகட்டவல்ல மதம் ஒன்று இவ்வுலகின்கண் இல்லை. 'ஓதிய வுடம்புதோறும் உயிரென' உலாவும் உண்மைப் பொருளின் சிற்சில அம்சங்களே பல்பெருஞ் சமயங்களிலும் ஒருவாறு பிரதிபலிக்கின்றன. உலகின்கண் நின்று நிலவும் பெருஞ் சமயங்களெல்லாம் உண்மையென்னும் ஜீவகங்கையின் பலவேறு துறைகளாக விளங்குகின்றன.

தோள்கண்டார் தோளே கண்டார்,
தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்,
தடக்கைகண் டாருமஃதே,
வாள்கொண்ட கண்ணுர் யாரே
வடிவினை முடியக்கண்டார்?
ஊழ்கொண்ட சமயத் தன்னுன்
உருவுகண் டாரையொத்தார்.

உண்மையும் அழகும் இரண்டல்ல; உண்மையும் அழகும் ஒன்றே என்பது கம்பர் மதம். நமது கவிநாதன் தமது லட்சிய மூர்த்தியாகிய இராமனை 'காதலித்தவுருவாகி அறம்வளர்க்கும் கண்ணுளன்' என்று குறித்துச் செல்வது நன்கு சிந்திக்கத் தக்கது. உண்மையினை அடிநிலமாகக்கொண்டு முளைத்தெழும் அறப்பயிரை வளர்க்கும் கருணை—மேகமே காதலித்த உருவாகி 'காமம் யாவையும்' தந்து நம்மை மேனிலையுறச் செய்வதாகும் என்று கம்பர் கூறுகின்றுர். அன்புருவாகிய அழகன் திரை—மறைவிலிருந்து இப்பிரபஞ்ச நாடகத்தை இனிது நடத்துகின்றுன்.

அறந்தலை நிறுத்தி வேதம்
அருள்சுரந் தறைந்தநீதித்
திறந்தெரிந் துலகம் பூணச்
செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர்
இடர்துடைத் தேகவீண்டு

பிறந்தவர், பிறப்பவர் எல்லாம் 'அன்புருவாகிய அழக' னது அவதார மூர்த்திகளேயாவர். இத்தகைய அவதார மூர்த்தியாகிய இராமனை, 'அந்தமிலழக' னுகக் கம்பர் கற்பிக்கின்றுர். இராமனது வீரத் தோள்களின் பேரழகிலே ஈடுபட்ட பெண்

மணிகள் அவ்வழகு வெள்ளத்தின் கரைகாணுது மயங்கிநின்ருர். தோள் கண்டார் தோளே கண்டார்; அழகனது பலவேறு அழகுகளையும் கண்டாரில்லை. இராமனது திருவடிகளைக் கண்ட பெண்கள் அவ்வடிகளின் பெருவனப்பிலேயே மயங்கி நின்ருர். கையழகுகண்ட மகளிர் நிலையும் இதுவே. இராமனது வடிவென்னும் 'அழியா வழகினை' முடியக்கண்டார் ஒருவருமேயில்லை. இத்தகைய பெண்கள் கூட்டத்தினையே உலகத்திலுள்ள சமயாசாரியர்க ளெல்லாம் ஒத்திருக்கின்ருர். ஆகவே வாய்-வேதாந்தம் பேசி வாழ்நாளை வீணுக்குவது அழகன்று.

*  *  *

ஓரில்லத்திற்கு வேண்டிய பொருளை நாம் எப்படிச் சேகரிக்கின்ருேமோ அப்படியே ஒவ்வொரு வீட்டிலும் உயர்ந்த நூல்களையெல்லாம் சேகரித்து வைத்தல் வேண்டுமென்று ஓர் ஆங்கில ஆசிரியர் கூறுகின்ருர். ஒவ்வொரு தமிழன் வீட்டையும் நற்றமிழ் நூல்கள் அழகு செய்தல் வேண்டும். தமிழ்த் தெய்வத்தின் சிரோரத்தினமாக ஒளிரும் கம்பராமாயணம் நாள்தோறும் ஆராயப்பெறவேண்டும்.

> நான்படிக்கும் போதென்ன
> நானறியேன், நாவொன்ருே?
> ஊன்படிக்கும், உளம்படிக்கும்,
> உயிர்படிக்கும், உயிர்க்குயிரும்
> தான்படிக்கு மனுபவங்காண்.

என்ற பெரியார் வாக்கின்படி கம்பராமாயணம் ஆராய்ச்சிவாயிலாக நன்கு பாராயணம் செய்யப்பெறுதல் வேண்டும். கல்வியிற் பெரிய கம்பரது புலமையின் நறுமணம் நாடும் நகரமும் நன்கு பரிமளித்தல் வேண்டும். கம்பரது கவிச்சிறப்பத்தினையும் புலமைத் திறத்தினையும் கவி நுட்பத்தினையும் தமிழ் மக்கள் அனைவரும் பிறநாட்டு நன்மக்களுங்கூட உணர்ந்துகொள்ளும் வண்ணம் பிரசாரங்கள் நடைபெறுதல் வேண்டும்.

*  *  *

ஆங்கில மேதாவியாகிய கார்லைல் என்பான் மேலைநாட்டுக் கவிச்சக்கரவர்த்தியாகிய ஷேக்ஸ்பியரைப்பற்றி ஓர் சொற்பொழிவு செய்கையில் பின்வருமாறு கூறியுள்ளான். "இந்திய ஏகாதிபத்தியம் இருந்தாலும் சரி; ஒழிந்தாலும் சரி. நமக்கு ஷேக்ஸ்பியர் இல்லாமல் முடியாது! இந்திய ஏகாதிபத்தியம் எப்படியும் ஒருநாள் நம்மைவிட்டு நழுவுவது திண்ணம். ஆனுல் இந்த ஷேக்ஸ்பியரோ அவ்வாறு நழுவிப்போகிறவரல்லர். அவர் என்றென்றும் நம்மக்களிடையே வாழ்பவராவர். நமது ஷேக்ஸ்பியரை நாம் கைவிடலாகாது" என்றுபோரர்வத்தோடுபேசினுன். மேலைநாட்டுநல்லறிஞர்கள் தங்கள் பொருட்செல்வத்தினும் வியாபாரப்பெருக்கினும் அரசுரிமைச் செல்வத்தினும், தங்கள் இலக்கியச் செல்வத்தினையே சிறந்ததாக மதிக்கின்ருர்.

*  *  *

வாசகர்களே! அன்பர்களே! நாமும் கார்லைல் கொள்கையினைப்போன்ற ஒருபெருங் கொள்கையினைக் கைக்கொள்ளல் வேண்டும். அதாவது, "எது இருந்தாலும் சரி; போனுலும்சரி. நமது இலக்கிய விசும்பினை அழகு செய்யும் கவிகுலஞாயிருகிய கம்பர்பெருமானின்றி நாங்கள் என் செய்வோம்? இவரே என்றென்றும் நம்மக்களிடை நிலைபெற்று வாழ்பவராவர்" என்று வீரமுழக்கம் செய்தல் வேண்டும். அப்பொழுதுதான் கம்பரது தெய்விகப் பேரொளி நம்மை நெறிப்படுத்துவதாகும்.

# கம்பர் திருநாள்.

—(௦)—

எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.

தமிழிலக்கிய சரிதத்திலே கம்பர் பெருமானது இராமயண அரங்கேற்றத்தோடு எல்லா வகையினும் ஒத்த சிறப்புடைய பிறிதொரு நிகழ்ச்சி இல்லையெனக் கூறுதலே தகும். இதனேடுஒருவகையான்ஒப்பிடத்தக்கது வள்ளுவப் பெருந்தகையார் தமிழ்வேதம் அருளிச் செய்த பெருநிகழ்ச்சியென்பது யாவரும் அறிவர். தெய்வப் புலமைத் திருவள்ளுவரது அறிவின் மாட்சி அதிசயிக்கத் தக்கதே. அவரது பேரறிவு எத்துணைப் பெரியாரையும் தலைவணக்கு மியல்பினது. தேவிற் சிறந்த திருமாலைப்போல, இத் தெய்வப் பெரும்புலவரும் தமது நுண்ணிய மாட்சிமிக்க புலங்கொண்டு அறிவுலகினை முற்ற அளந்து எல்லை கண்டனர். மக்கட்கு உறுதி பயப்பனவற்றை ஆணிமுத்தன்ன செஞ்சொற்களால் தெளித்துத் தந்தருளினர். வாழ்வின் பெருநோக்கங்களை அகன்று கூர்த்து விளங்கும் தமது அறிவினுற்றலாலும், பரந்து கடைபோகிய தமது கல்வி கேள்விகளின் பெருமையினுலும், ஆழ்ந்து சிறந்து முதிர்ந்த தமது அநுபவவாயிலாலும் நுண்ணிதின் ஆராய்ந்து தெரிந்து தமிழ் மக்கட்கு உதவியருளினர். எவ்வகையினருக்கும் எவ்வகைநிலையினும் துணைநின்றுதவும் அறிவுக் களஞ்சிய மொன்றினை அளித்தருளினர் இவ் அருட்பெருஞ்செல்வர். இவர் இயற்றித் தந்த திருக்குறட் பெருநூலிற்காணும் ஒவ்வொரு குறளும் தனித்தனியே செப்பஞ் செய்யப் பெற்றமணியேயாகும். ஒவ்வொரு குறள்-மணியும் உள்ளத்திருளகற்றி யொளிரும் தன்மையது. ஓத இனிதாயும், கேட்க இனிதாயும், உணர இனிதாயும் உள்ளது இத் தெய்விகப் பெருநூல். இதனை யியற்றியருளிய புலமைத் தெய்வத்திற்குக் கோயிலெடுத்துப் போற்றியும் அவர் திருவவதாரஞ் செய்தருளிய திருநாளினைத் தமிழ்-மக்களது விசேஷதினங்களுள் ஒன்ருகப் பாராட்டியும் வருவது தமிழுலகத்திற்கு ஓர் பெருமையாகவே என்றும் உள்ளதாகும்.

இத் தெய்வப்புலவரது திருவடி-ஸ்பரிசத்தால் தமிழுலகு பரிசுத்தமெய்தியதற்குப் பல நூற்றுண்டுகட்கு முன்பாகவே, அவர் வகுத்தருளியதுபோன்ற உத்தம வாழ்வின் பெருவிதிகளுக்குத் தனி நிலைக்களமாகிய புருஷோத்தமனெருவனைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று பாரத-மாதா தவம்புரிந்துகொண்டிருந்தாள். ஆரிய சமுதாயத்தின் மனேபாவனையானது தானறிந்த ஜாதீய-வீரர்களுக்குள் இப் புருஷோத்தமனை நிச்சயிப்பதன் கண்ணும் அவனது சரித்திரத்தினைக் கோவைப்படுத்தி அலங்கரிப்பதன் கண்ணும் அநேக நூற்றுண்டுகளாக முயன்று வந்தது. இம் முயற்சியின் பயன் முதன்முதல் உருவம் பெறத் தொடங்கியது வால்மீகி மஹரிஷியின் காலத்தேதான். 'ஆதி கவி' யென்று இப்பொழுது போற்றப்படும் இம்மஹான் தமது அற்புத கவித்வ சக்தியினலே ஆரியாவர்த்தத்தில் பரந்து வழங்கிய அச்சரித்திரங்களை யெல்லாம் ஒருநிலைப்படுத்தி

அழகுபெறப் புனைந்து இராமாயணமெனப் பெயர் தந்து இதிஹாஸமாக இயற்றித் தந்தருளினர்.

இம் மஹரிஷியின் காலத்திற்குப் பின்பு, ஆரிய-சமுதாயம் விரிந்து பெருகியது; பாரத-கண்ட முழுவதும் பரந்து சென்றது. தனித்தனியாய்ப் பல வேறிடங்களில் வாசஞ்செய்து வந்த சமுதாயங்கள் பல, ஆரிய சமுதாயத்தோடொன்றுபடவே, இந்து சமுதாயமென்னும் சிறப்புடைப் பெருஞ் சமுதாயமொன்று பரிணமித்தது. இச்சரித்திர-கதிக்குத் தமிழ சமுதாயமும் உட்பட்டு இந்து சமுதாயத்தின் உத்தம அங்கங்களுள் ஒன்றாக விளங்கத் தலைப்பட்டது. தனித்தமிழ் மக்கள் உயரிய நாகரிகம் படைத்தவர்; இயற்கை மதிநலம் முதலிய அருஞ்சிறப்புகள் பெரிதும் வாய்ந்தவர்; கவித்வ சக்தி நிரம்பவுடையவர். இந்து சமுதாயத்தின் பெருமை இத் தனித்தமிழ்மக்களது கலப்பினால் மிக அதிகரித்தது; அதன் ஆத்ம சக்தி உரமிகுந்தோங்கியது; அதன் பாவனா சக்தி வளம்பயின்று விரைவு கொண்டு புதுமை நாடியது; அதன் கவித்வ சக்தி நூற்றுக் கணக்கான விவித வர்ணங்களுடன் அதிமனோஹரமான ரூபவைசித்திரியங்களாகத் தோற்றஞ்சான்று நின்றது. தமிழ்ப் பண்பு மிக்க திராவிட—இந்து சமுதாயத்தின் உள்ளத்தே புதிய வுணர்ச்சிகள் கிளர்ந்து பரந்தன; பௌத்த மதம் பரவலுற்றது; ஜைன சமயம் நிலைபெற விரும்பிப் பெரிதும் முயன்றது. வைதிக சமயம் ஆழ்ந்து நிலை கூடி வெற்றியை யெதிர்நோக்கி நின்றது. வீரமுங் காதலும் விளைந்த தமிழ்-நிலத்தே இப்பொழுது அன்பும் அருளும் விளைவுபெறத் தொடங்கிற்று. பக்தி ஊற்றுக்கண் திறந்து சுரந்து பெருகுவதாயிற்று. இங்ஙனமாக, இரண்டு ஜீவ நதிகள் ஒன்று கூடிப் பெருகி ஓடுவதைப்போல, ஆரியர் நாகரிகமும், தனித்தமிழர் நாகரிகமும் பேதமின்றிக் கலந்து ஒன்றுபட்டுத் தமிழ்நாட்டிலே பிரவஹிப்பதாயிற்று. காலம் விரைந்து சென்றது. நாகரிகக் கலப்பின் ஆரம்பத்தில் நிகழ்ந்த கலக்கம், பரபரப்பு முதலியன யாவும் நாளடைவில் மறைந்தொழிந்தன. தக்ஷிண இந்து சமுதாய வாழ்வு அமைதியுற்றுச் சென்றது. தமிழ்மக்கட்குரிய மனப்பண்பு, அநுபவம், நாகரிகம் இவற்றிற்குத் தக்கவாறும், காலகதியின் விளைவுக்குத் தக்கவாறும் நூதன-சிருஷ்டிகள் முளைத்துச் செழித்தன. பழமையும் பெருமையும் பொருந்திய இருபெரு நாகரிகங்கள் ஒன்றுபட்டதன் முதற் பெரும் பயனாக வள்ளுவ ரென்னும் புலமைத் தெய்வம் தோன்றித் தமிழ் வேதத்தை அருளிச்செய்து மறைந்து சென்றது. பாரதமாதாவின் கனவு நனவாகுங் காலம் சமீபித்தது.

பன்னெடுங் காலமாக ஆரிய-சமுதாயத்தின் உள்ளத்தே ஊறிக்கிடந்து வால்மீகி-மஹரிஷியால் உருவமைந்த இராமசரிதம் இப்பொழுது தன் பூர்வ கதியை யனுசரித்துத் தக்ஷிண இந்து சமுதாயத்தின் உள்ளப்பரப்பிலேயும் அழுந்திக்கிடந்து ரசம் ஊறிக் கனிவதாயிற்று. புதுவதாகிய மனோபாவனையால் புதுக்கோலம் புனையப்பெற்றது. பாரததேவி அரிதிற் றெரிந்து கொண்ட புருஷோத்தமனது சிறந்த குண விசேஷங்கள் நன்கு புலப்படுமாறு நூதன சம்பவங்கள் அழகு பெறச் சேர்க்கப் பெற்றன. இராமபிரானது அபூர்வ குணாதிசயங்களும், அரிய வீரச் செயல்களும், தியாக புத்தியும், மக்களது உள்ளத்தைக் கொள்ளைகொண்டன. அவரது பேரொளித் திருமேனியானது தெய்வ மணத்தாற் கமழ்ந்தது. உயரிய மக்கட் பண்பும், உயரிய தெய்வப் பண்பும் இவர்மாட்டு ஒருங்கு சிறந்து விளங்க இவரது மஹிமை பூர்த்தியெய்தியது. பக்திநிரம்பிய நம் மூதாதையர்களது உள்ளத்தே, இராமபிரான் தெய்வமாகவே குடிகொண்டு நின்றனர். இராம சரிதத்தில் வழங்கிய இதர கதாபாத்திரங்களின் குண விசேஷங்களும் சிறிது சிறிது பேதமெய்தின. இராமாயணம் பலவகையானும் செப்பமெய்தி ஜனசமூகத்தில் வழங்கலாயிற்று; நாடகமாக நடித்து வரப்பெற்றது. இராம சரிதம் புதுநலங்கனிந்து ததும்புவதாயிற்று. கல்லிடைகளிலே கசிந்து பிறந்து சிற்றருவியாய்ச் சிற்றோடையாய்ப் பேராருவியாய்ப் பேரோடையாய்ப் பின்னர் நதியாய்ப் பல சிறு நதிகளோடு சங்கமித்துப் பெருநதியாய் இருகரையும் புரண்டு பெருக்கெடுத்தோடும் மாரிக்காலத்துப் பேராறுபோல, இராம சரித்திரமும் ஆரிய சமுதாயவுள்ளத்தின் அடிப் பரப்பிலே சிறிதளவிற் றோன்றிப் பின் நாளாவர்த்தியில் வரவரப் பெருகி நிரம்பித் தக்ஷிணத்திற் கரை ததும்பிப் பிரவஹித்துச் செல்லுவதாயிற்று. ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன் சமுதாய வுள்ளத்தில் இடப்பெற்ற இராம கதையின் வித்தானது முளைத்துச் செழிப்புற வளர்ந்தோங்கித் திண்ணிய கவடுகள்பல திசைதோறும் போக்கிப் பசேலெனத் தழைத்துத் தண்ணிழல் பரப்பி வானளாவிநின்று கனதுபூரணாகிருதியை யடைந்தது.



தக்ஷிண இந்து சமுதாயத்தின் உள்ளப் பரப்பிலே—கருத்துலகிலே—இராமசரிதம் மேற்கூறியவாறு அங்க பரிபூர்த்தியை யெய்திய போதிலும், வாசா ரூபமான காவியவுலகிலே தக்க ரூபத்தோடு வெளிப்பட்டுத் தோன்றவில்லை. வாசாரூபமாகப் புலப்படுவதற்கு உத்தமப் பெருங் கவிஞனொருவனை அவாவி நின்றது.

இங்ஙிலையிலே, தென்னாடு செய்த அருந்தவத்தினாலும், தமிழன்னை பன்னெடுங்காலமாகத் திரட்டிவைத்த அரும்புண்ணியத்தின் பெரும் பயனாலும் கம்பர்பெருமான் தோன்றியருளினர். 'தெய்வமரணம்' எனத் தமது அமுதவாக்கினால் அவர் கூறுவதுபோல, அவரது ஜனனத்தைத் 'தெய்வதோற்றம்' என்றுதான் விசேடித்துக் கூறவேண்டும். பிரகிருதிதேவி தனது அருள்வளம் அனைத்தையும் இவர்பால் வரையாது பொழிந்தனள். 'கருவிலே திருவுடையவர்' என்பதற்கு இவரிடத்தன்றி யேனையோர்பால் பொருள் நிரம்பக் காணுதலரிது. இயற்கை-மதி நலம் பெரிதும் வாய்ந்தவர். 'தொட்டனைத்தூறு மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத்தூறு மறிவு' என்பது பொய்யாமொழியாகலின், தம்காலத்து வழங்கிய அருங்கலைகள் அனைத்தையும் முற்றக்கற்றுத் தமது அறிவினது அளவினையும் ஆற்றலையும் முன்பின் ஒப்பின்றிப் பெருக்கிக்கொண்டனர். தமது தாய்மொழியை முற்றக் கற்றதனோடமையாது வடமொழிப் பயிற்சியும் நிரம்பவாய்ந்துவிளங்கினர். தம்மோடொப்பாரு மிக்காருமில்லாத பெருங் கல்வியாளராய்ப் புலமை முற்றிய காரணத்தினாலே, 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்னும் முதுமொழி

காலதேசவர்த்தமானத்தால் அளவுபடாத வேரர் பொதுவுண்மையாய் வழங்குதலாயிற்று. உணர்ச்சி-வலி முதலிய பிற மன நலங்களும் இவர்பால் நிரம்பியிருந்தன. மக்களது உள்ளமாகிய வீணையில் எத்தனைவகையான உணர்ச்சி பேதங்கள் எழக்கூடுமோ அவையனைத்தும் தமது சங்கல்ப மாத்திரையினாலே எழுந்து இனிது சப்திக்கச்செய்யும் பேரிசையாண்மை பெற்றனர். அகத்தும் புறத்தும் காணப்படுகின்ற சௌந்தர்ய வைபவங்கள் அனைத்தையும் நுண்ணிதினுணர்ந்து ஆழ்ந்தனுபவித்து ஆனந்த சரீரியாய்த் தோன்றினர். இவரது பாவனாசக்தி எல்லையின்றி அகன்று பரந்தது; கொள்ளக்குறையாத பெருங்கடல் போன்றது; எவ்வுலகத்தினுஞ் சென்று சஞ்சரிக்கவல்லது; எவ்வகைப் பொருளினையும் எவ்வகை நிலையினையும் மனக்கண் முன்னே தெளிவாய்ப் புலப்படுத்துச் சித்திரிக்கும் சிறப்பியல் வாய்ந்தது. அறிவின் பெருமையினாலும், உணர்வின் பெருமையினாலும், பாவனாசக்தியின் பெருமையினாலும் இவரது கவித்வசக்தி முதிர்ந்து கனிந்தது. ஸ்வரங்களும், ராகங்களும், வர்ணங்களும், கீர்த்தனங்களும் ஒன்றின்மேலொன்றாய்ப் படிப்படியாய் இசைச் செல்வத்தோடு பொங்கி வருதற் பொருட்டு நின்ற வீணைபோல, இவரது பண்புமிக்க உள்ளந்தானும், சவிதாசக்தியின் வேகத்தால் பண்கனிந்தூறும் இனிய கருத்துக்கள் அடுத்தடுத்தெழுந்து ஒன்றோடொன்றிசைந்து நவநவமான கானவிலாசத்துடன் ஒழுகிவரும் பக்குவமெய்திற்று. மதுரமிக்க இவ் இருதய கானத்தை யுணர்த்து தற்கென்றே அமைந்த தென்னலராம் இவரது அரிய சொற்செல்வம். தமிழணங்கு இவ் அருந்திறற்பெரியாரது குறிப்புணர்ந்த மாத்திரையில், அவர் விரும்பிய வண்ணம் இன்சுவைகனிந்த நன்மொழியினைத் தட்டின்றி யுதவிவரக் காத்து நின்றனள். தமிழ் மொழியின் இனிமையினையும், அழகினையும், ஆற்றலையும், இவர்போல் முற்றவுணர்ந்தார் பிறர் யாருமில்லையென்றே கூறலாம். தமிழ்மொழி இவரது தனியரசினுக்கு அடங்கிநின்று குற்றேவல் புரிகுவதாயிற்று.

இங்ஙனம் உத்தமப் பெருங்கவிஞர்க்குரிய உத்தம லக்ஷணங்களனைத்தும் ஒருங்கு நிரம்பி விளங்கினர் கம்பர் பெருமான்.

பாரத தேவியின் தவம் முற்றுப் பெறுங்காலமாயிற்று. அவ் அம்மை பன்னெடுங்காலமாக ஆசையொடு எதிர்நோக்கியிருந்த ஸம்பூர்ண-ராம பிரபந்த வாசாரூபமாக உலகினர்க்களிக்கக் கம்பர் பெருமான் திருவுளம் பற்றினர். எத்தகைய மங்கலநன்னாளில் நமது கவிஞர் இங்ஙனம் எண்ணித்துணிந்ததென யாவரால் அளவிட்டுரைக்கத் தகும்! எத்தனை பெருமை பொருந்திய நன்னாள்! எத்தனை சிறப்புமிக்க உத்தமதினம்! கம்பர் பெருமானைப் பாதுகாத்துத் தமக்கும் தமிழ்க்கும் அழியாப் புகழ்தேடிக் கொண்ட சடையப்ப வள்ளலார் தூண்ட இராம சரிதம் பாடுங் கருத்தெழுந்ததெனச் சிலர் கூறுவர். ஆனால் இத்தெய்வமாக்கதையைப் பாடவேண்டுமென்று கம்பரது உயிரே அளவு கடந்த ஆசை கொண்டிருந்த தென்பதுதான் உண்மை. 'ஆசை பற்றியறைய லுற்றேன்' என்றே நமது கவிஞர் சிகாமணியும் நமக்கு உணர்த்துகின்றார். பிறர் யாரேனும்



வேண்ட இத்தெய்வ நறுங்கனி ரஸம் விளைந்து பழுத்ததாக மாட்டாது. மேலும், இப் பெருங்கருத்து கம்பரது இளமைப் பிராயத்திலேயே அவரது திருவுளத்தில் தோன்றியிருத்தல் வேண்டும். இளமைதொட்டே தம்மை இராமாயணத்திற்கெனத் தத்தஞ்செய்தனர். தமது வாழ்வின் தனிப்பெரு நோக்கமே இராமகாதையை யியற்றுதலென்று கடைப்பிடித்தனர். இவரது சிந்தை இராமசரிதத்தைச் சுற்றிச் சுழன்றது; இவரது சொற்கள்யாவும் இராமசரித்திரம் பற்றியே விளைந்தன; இவரது செயல்கள்யாவும் இராமசரிதத்தை முற்றுவிக்கும் பொருட்டே எழுந்தன.

ஆரேனு மொன்று சொல்லத்தொடங்கினும்
அவ்விடத்துன் [கினும்
பேரேவருமென்ன பேறு பெற்றேன்
பெரு நான் மறையின்
வேரே மிதிலையின் மின்னொடும்போய்
வெய்ய கானடைந்த
காரே கடல் கொளுந்தச்சிலை
வாங்கிய காகுத்தனே.

என்றசெய்யுளின் பொருள் கம்பர் பெருமானது திருவுளத்தன்மையை நினைக்கும் பொழுதுதான் நமக்குப் புலப்படுகின்றது. 'உண்ணும் நீரினும் உயிரினுமவனையே யுகப்பார்' என்ற தெய்வத் திருவாக்கின் இன்னிசையிலே நமது மனம் கட்டுண்டு கிடப்பதன் காரணம் இப்பொழுதுதான் நாம் அறிகின்றோம். இவரது அகன்று பரந்த அகவுலகிலே இராமசரிதமொன்றே தனியாட்சி புரிந்துவந்தது. காலம் அளவு முதலிய வரையறையின்றிச் செவிநுகர் கனிகளைச் சொரிந்து தரவல்ல கம்பரென்னும் கற்பகதருவினை, அது வெயில் முதலியனவற்றால் வாடி வருந்தாதபடி, நீர் பெய்து பாதுகாத்து வந்த சடையப்ப வள்ளல்தாமும் இராமசரிதத்தின் பொருட்டுக் கவியின் ஞாபகத்தில் இடம்பெற்றாரே யன்றிப் பிறிதில்லை. பன்னெடுங்காலமாக, இரவும் பகலும், இராமாயண விஷயத்தையே கம்பர் சிந்தனை செய்து வந்தாராதல் வேண்டும். கதைப் போக்கினை அழகுபெற ஒழுங்குபடுத்துதலினும், பலவேறு கட்டங்களில் நிகழும் சம்பாஷணைகளின் முக்கியாம்சங்களைத் தெரிந்தெடுத்து அழகுபடுத்துதலினும், கதாபாத்திரங்களின் குண விசேஷங்களை அவ்வவர்க்குரிய சொல்செயல் முதலியவற்றால் விளங்க அமைப்பதினும், இவர்வாழ்நாளின் முற்பகுதி கழிந்திருத்தல்வேண்டும். இராமசரிதம் என்னும் புண்ணியதீர்த்தத்திலே இவர் படிந்து படிந்து அதன்மயமாகத் தம்மைக் கரைத்திருத்தல் வேண்டும். பலரும் இவரைப் பித்தரெனவும் பேதையெனவும் கூறுமாறு தமது உளங்கோயில் கொண்ட தெய்வப் பெருஞ் சரிதத்திலே ஈடுபட்டுப் பக்தராய் விளங்கினர். 'பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்--பத்தர்சொன்னவும் பன்னப்பெறுபவோ!' என்று நம் கவிஞர்பெருந்தகை கூறுவதன் குறிப்பு உணரத்தக்கது. இவர் தம் பெருங் காப்பியத்தைப் பாடுவது பிறரது ஆணையை மேற்கொண்டன்று; பிறர்கேட்டு உளங்குளிரும்பொருட்டுமன்று; தம் ஆத்ம-தாகத்தைத் தணிக்கும் பொருட்டுத் தாம்பெய்து கொண்ட கானவர்ஷமே யாகும் இவரது 'இராமாவதாரம்'. இப்பெருந்தகையாரது கவித்வசக்தியனைத்தும் 'இராமசரித-காயனம்' என்னும் உத்தமலக்ஷ்யத்தை நோக்கியே அரும்பி மலர்ந்து ஒளி சிறந்து மணங்கமழ்ந்து

விளங்கினவாகும். இத் தெய்வ-கீதத்தைப் பாடுதற் பொருட்டாகவே அமைந்து நின்ற ஓர் அரும் பெறல் வீணையென்று நம்புலவர்பெருமானைக் கூறின், அது மிகவும் பொருத்தமுடையதேயாகும். (தொடரும்.)

# திருப்பொறி ஒற்றிக்கொள்ளல்.

—:(0):—

பண்டிதர்—அ. கிருஷ்ணசாமி நாயுடு எழுதுவது.

சிறப்புற அமைக்கப்பெற்ற ஒவ்வொரு சமயங்களினும், அவ்வச்சமயங்களுக்கே சிறப்பியல்புகளாகச் சில உள்ளன. அகமுகமாக நோக்கும் ஆன்ம தத்துவங்களினும் சிறப்பியல்புகள் உள்ளன; புறமுகமாக நோக்கும் உடற்காட்சியினும் சிறப்பியல்புகள் உள்ளன. ஆன்ம தத்துவங்களைப்பற்றியன வனைத்தும் வெறும் வாக்குவாத வழியாகவே வந்து கொண்டுள்ளன. உடற்காட்சியில்—வேடத்தில்—கூறுவன வனைத்தும் காட்சியளவாகவே காணப்பெறுகின்றன. வாக்குவாதம் ஒடுக்கிப் புலனடக்கிக் காண்பதே ஆன்ம தத்துவங்கள் ஆயினமையான், அவற்றைப்பற்றிப் பேசுகின்றனவோ எழுதுகின்றனவோ இக்கிலையில் ஏலாதென்றே விடுக்கின்றேன்.

வாசா கயிங்கரியம் அன்றி ஒருசாதனம்
மனோவாயு நிற்கும் வண்ணம்
வாலாய மாகவும் பழகியறியேன்; துறவு
மார்க்கத்தின் இச்சைபோல,
நேசானு சாரியாய் விவகரிப்பேன்; அந்த
நினைவையும் மறந்தபோது,
நித்திரை கொள்வேன்; தேகம் நீங்குமென
[எண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்;
பேசாத ஆனந்த நிட்டைக்கும் அறிவிலாப்
பேதைக்கும் வெகு தூரமே.

எனத் தாயுமானவர் சாற்றியாங்கு, வாய் வேதாந்தம் வலுத்தது; செய்கை வேதாந்தம் செத்தது. வாசா கயிங்கரியம் வன்மைபெற்று ஓங்கி வளர்ந்துள்ள இந்நாளில், வேதாந்த தத்துவங்களைச் செய்கையில் காண்பதை விடுத்து, வேறு விளம்ப வேண்டுவ தொன்றுமின்று.

ஆகையால் சமயங்களின் புறத்தோற்றத்தைப்பற்றிய சிறப்பியல்புகளில் சிலவற்றைப்பற்றியே ஈண்டுச் சில செப்புவன். அச்சிறப்பியல்புகளுள் "திருப்பொறி ஒற்றிக்கொள்ளல்" என்பதும் ஒன்று. இதனை, வடமொழியில் சம்ஸ்காரம் என்பர். இச்சம்ஸ்காரங்கள் அவ்வச் சமயங்களுக் கேறப எழுதப்பட்டுள்ளன பல; செய்யப்பட்டு வருவன சில. அதில் திருப்பொறி ஒற்றிக்கொள்ளல் என்பது சைவ சமயத்திலும் சாற்றியுள்ளது; வைணவ சமயத்திலும் விளம்பியுள்ளது. என்னையோ! திருப்பொறி ஒற்றிக்கொள்வோர் தொகை சைவ சமயத்தில் அருகிவிட்டது; வைணவ சமயத்தில் பெருகிவிட்டது. ஆராயுங்கால், முன்னதின் நல்லூழும் பின்னதின் போகூழுமேயாகும். அஃது எங்ஙனம் ஆயினும் ஆகுக. அவற்றின் வரலாறு மட்டும் ஆராய்வோம். இங்ஙனம் பொறி ஒற்றிக்கொள்ளும் சம்ஸ்காரங்களுக்கு ஆகமங்களில்விதியுண்டென்று விளம்புவர். இதுகாலை சைவ வைணவ சமயங்களில் உள்ள ஆகமங்களின்தொகை இத்துணையென அறிஞர்களின் அகத்திற் கெட்டியுள



ளதோ? இல்லை; இல்லை. ஏன்? ஏன்? வைணவ சைவ சமயங்களின் ஆகமங்களிற் பலவும் கருட பகவானுக்கு மகாவிஷ்ணு உபதேசித்ததாகவும், நந்தி தேவனுக்குப் பரமசிவன் உபதேசித்ததாகவும் வழக்காற்று முறையில் வருகின்றன; வழங்குகின்றன. ஆகையால், இவ்விருமூர்த்திகள் அவ்விருவர்க்கும் செய்யும் உபதேசம் முற்றுப்பெற்றதோ? பெறவில்லையோ? என்பதனை முற்றமொழிவோர் யாவர்? இது தேவ ரகசியம். பரசியம் ஆமோ? ஆயின், ஆகமங்கள் இத்துணை என்பதனைத் துணிந்துரைப்போர் யாவர்? பண்டு மக்கள் செய்தன வென்று கொண்டிருப்பினன்றோ அவ்வாகமங்களின் தொகை அளவிலடங்கக்கூடும்? இதுகாலை, அவற்றுள் அச்சிலுள்ளன சில; அகத்திலுள்ளன சில; ஆகாயத்திலுள்ளனவோ பலபல. ஆகாயம் ஒலி வடிவானமையான், ஆண்டவன் அருளும் உபதேசங்கள் ஆகாயக் கோட்டையிலன்றோ அரண் செய்யப்பெற்றிருக்கும்! அவ்வாகாயக் கோட்டையைக்காணுவோர் யாவர்? காணினன்றோ அவற்றின் அளவையும் அறியலாம். இவ்வாகமங்கள் முழுவதும், முதன்முதல் வடமொழியிலேயே முற்றும் எழுதப்பட்டன என்பதை, முழுத்தமிழறிஞர் நினைவில் வைத்தல்வேண்டும். செந்தமிழில்ஒன்றேனும் எழுதப்பெற்றில தென்பதையும் செந்தமிழ் வாணர் சிந்தையில் திகழவைத்தல்வேண்டும். இன்னோரன்ன தேவாகசியங்கள் வெளிவரற்கு வடமொழியே—வழக்காறற்ற மொழியே—வளம்பெற்ற கருவிபோலும்! தெய்வச் செந்தமிழில்—கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோடமர்ந்து, பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த இப்பைந்தமிழில்—இத்தேவாகசியம் பரசியமாகக் காரணம் என்னையோ? என்னையோ? அறிஞர் ஆராய்க; ஆராய்க.

ஆனல், ஆகமங்களைப்பற்றிக் கூறுவதொன்றுண்டு. என்னை? வேதங்களைப்போல் ஆகமங்கள் பழங்காலத்தன அன்று; அன்று. வேதகாலம் வேறு; ஆகமகாலம் வேறு. "வேதமுடன் ஆகமம்" என்ற தொடர்பானே வேத காலமும் ஆகம காலமும் ஒன்றெனக்கொள்ளல் ஒன்றாது; ஒன்றாது. ஒன்றின், "வேதமுடன் ஆகமபுராணம் இதிகாசம் முதல் மற்றுமுள கலைகள்" என அத்தொடரில் பல பகரப்படுகின்றன. அவையும், அக்காலத்தனவென்று அறையவேண்டி வருமே? சுருங்கக் கூறின், வேத காலத்திற்கு ஆகமகாலம் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்டதாகும். இன்னும் நோக்கின், தேவாரம் பிரபந்தம் இவற்றின் காலங்களுக்கும் பிற்பட்டதாகும். தேவாரத்திலேனும் பிரபந்தத்திலேனும் ஆகமங்களைப்பற்றிய செய்திகள் ஒன்றேனும் காணேம். ஆகமம் என்ற மொழியுங்கூட அவற்றுள் எங்கேனும் இல்லை; இல்லை. தமிழ்மக்களுக்கு வேதமாகவும் ஆகமமாகவும் நிகழ்ந்து பிறங்குவன தேவாரமும் பிரபந்தமுமேயாம். அவற்றுள் "திருப்பொறி ஒற்றிக்கொள்ளலை"ப்பற்றி ஒன்றுமே உரையாதிருந்திருப்பின் அதனை ஆராயவேண்டிய அவசியமேயின்று. இவ்வாராய்ச்சி-வானத்தின்கண் வளம்பெற்று மாறிமாறி ஒளிர்வன, திருநாவுக்கரசாஞ் செஞ்ஞாயிறும் பெரியாழ்வாராம் வெண்டிங்களுமேயாம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் சமண சமயத்தினின்றும்சைவசமயம்சார்ந்த

பின்னர், திருத்தூங்கானைமாடம்சென்று எம்பெருமானைச் சேவித்து

புன்னெறியாம் அமண்சமயத்
தொடக்குண்டு போந்தவுடல்
தன்னுடனே உயிர்வாழத்
தரியேன்நான் தரிப்பதனுக்கு
என்னுடைய நாயக!நின்
இலச்சினையிட் டருளென்று
பன்னுசெழுந் தமிழ்மாலை
முன்னின்று பாடுவார்.

எனச் சேக்கிழார் செப்புவன புறச்சான்றாகும். சுவாமிகளே சுவாமியைக் கண்டு,

பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்டேல்,
இருங்கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென்
மேல்பொறி; மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானைமாடச்
சுடர்க் கொழுந்தே.

எனப் பரவுவது அகச்சான்றாகும். சுவாமிகளின் விண்ணப்பத்தை ஏற்றுச் சுடர்க் கொழுந்தாம் சிவபெருமான் திருவருள்கூர்ந்து மூவிலைச்சூலமும் இடபமும் சுவாமிகள் திருத்தோளில் சிவ பூதத்தின் வழியாகச் சாத்தியருளினர். இதனை

ஈதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடகமேருச்சிலையான் அருளால் ஒர்சிவ
[பூதம்
மாடொருவர் அறியாமே வாகீசர் திருத்
[தோளில்
சேயொளி மூவிலைச்சூலம் சினவிடையி
[னுடன்சாத்த

எனவரும் சேக்கிழார் செவ்வாய்மொழியினும் உணர்க. இங்ஙனம் சூலமும் இடபமும் பொறித்த விதம் சேக்கிழாரைப்போல சுவாமிகளும் திருவாக்கிற் குறிக்கப்படவில்லை என்பதைச் சிந்திக்கற்பாற்று.

பெரியாழ்வாரைப்பற்றிய வரலாற்றைப் பெரிதும் ஆராயுங்கால் மகாவிஷ்ணு நேரில் காட்சிதந்து சங்க சக்கரப் பொறிகளைப் பெரியாழ்வார் திருத்தோள்களில் ஒற்றித் திருவருள் செய்ததாகச் சரித்திரம் காணேம். பெரியாழ்வார்தாமே சக்கரப் பொறியைத் திருத்தோள்களில் ஒற்றிக் கொண்டு திருத்தொண்டு செய்ததாகப் பெரியாழ்வாரே பாடுகின்றனர். அவை வருமாறு:—

தீயிற் பொலிகின்ற செஞ்சுடர்ஆழி
திகழ்திருச் சக்கரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டுநின்று
குடிகுடியாட் செய்கின்றோம்
மாயப் பொருபடை வாணனை
ஆயிரந்தோளும் பொழிகுருதி
பாயச் சுழற்றிய ஆழிவல்லானுக்குப்
பல்லாண்டு பாடுவமே.

சென்னி யோங்குதண்
திருவேங்கடம் உடையாய்,உலகு
தன்னை வாழநின்ற நம்பி!
தாமோதரா! சதிர!
என்னையும் என்னுடைமையும்
உன்சக்கரப்பொறி ஒற்றிக்கொண்டு
நின்னருளே புரிந்திருந்தேன்
இனியுன் திருக்குறிப்பே.

மேற்பொறித்த பாசுரங்களே செந்தமிழ்ப் பிரபந்தத்தினும் தேவாரத்தினும் உள்ளன. சிவபெருமான் சிவபூத வடிவமாய்த் திருநாவுக்கரசு சுவாமிகளுக்குப் பொறித்துப் போயினமைபோல் மகாவிஷ்ணு பெரியாழ்வாருக்கும் பொறித்துப் போயின வரலாறுகள் ஒன்றுமேயில்லை. எங்ஙனமோ சைவ சமயத்தினும் வைணவ சமயத்தில், திருப்பொறி ஒற்றிக்கொள்ளும் முறை தீராமுறையாயிற்று. இதற்குச் சம்ஸ்காரம் என்னும் வழக்கே பெருவழக்காகவுள்ளது. முன்னர் ஒன்றாயிருந்த சம்ஸ்காரம் பின்னர் ஐந்து பிரிவினையடைந்தது. அவை முறையே, (க) திருமண் வைத்தல், (உ) சங்கு சக்கரம் ஒற்றல், (ங)தாஸ்யநாமம், (ச) திருமந்திரோபதேசம், (ரு) திருவாராதனக்கிரமம் எனப் பெயர்பெறும். இதுகாலே, இவற்றைப் பஞ்ச சம்ஸ்காரம் எனப் பகர்வர். இவற்றின் பொருளை யாவரும் நன்கனம் அறிவர். ஆனால் தாஸ்ய நாமம் என்பது ஆண்டவனுக்கு அடிமை (தாஸன்)என்னும் பொருள்படப் பெயரினை அமைத்துக்கொள்ளல். இவ்வமைப்பில் ஓர் அதிசயம் உண்டு. என்னெனின், மகாவிஷ்ணுவின் திருநாமங்களன்றி, பிற கடவுளரின் திருநாமங்கள் அணியப்பெற்றவராய்ச் சம்ஸ்காரம் பெறுபவர் இருப்பாரேயாயின், அன்னார் பெயரினை மாற்றி மகாவிஷ்ணுவின் பெயரினுள் ஒன்றை வைத்துவிடுதல். இச்சம்ஸ்காரம் பெற்றவருள் வேலப்பன் வேணுகோபாலன் ஆனவரும், பழனியப்பன் கிருஷ்ணப்பன் ஆனவரும் பலர், பலர். பெற்றோர் ஜன்ம நட்சத்திரத்திற்கியையும்படியாக முயன்று பொருத்தியமைத்த புதல்வரின் பெயர், வெகு விரைவில் மாற்றியாயிற்று. பெரும் பொருட்செலவுச் சடங்குகளில் வைக்கப்பட்ட பெயரும் மாற்றுவதற்கும் பெருஞ்செலவு வேண்டுவதாயிற்று.

இங்ஙனம் பொறி ஒற்றிக் கொள்ளற்காம் காரணங்களைக் காண்பதற்கு அவ்விரு பெரியார் சரித்திரங்களையன்றி வேறு சரித்திர ஆதாரங்களும் இல்லை. மற்றை ஆழ்வாரோ நாயன்மாரோ, இதைப்பற்றி ஒன்றுமே உரைத்தாரில்லை. அவ்விருவர் சரித்திரங்களும் திருப்பொறி யொற்றிக் கொள்ளும் காரணங்களை வேறு வேறாகவே விளம்புகின்றன. திருநாவுக்கரசு சுவாமிகள் சமணசமயத்தொடக்குண்டு வந்த திருவுடம்பு தூய்மை பெறுவான் வேண்டி, எம்பெருமானை வேண்டிக் கொள்ளுகின்றனர். புறச் சமயத்தில் தோய்ந்ததினுலுண்டாகிய ஆன்ம மாசுகள் அத்தனையும், அகச் சமயம் சைவ சமயத்தில் சைவரப் பெற்ற மெய்ஞ்ஞானத்தின் பேரொளியால் நீறுப்பட்டபோயின. ஆன்மா விளக்க முற்றது; தூய்மையுற்றது. ஆனால் உடலமோ விளக்கமுறவில்லை; தூய்மைபெறவில்லை. இவ்வருத்தம் சுவாமிகளை வாட்டிற்று. குறைகளை முடிக்கும் குமரன்மாட்டுக் குறைகளை விண்ணப்பித்தனர். என்னப்பன் விண்ணப்பம் ஏற்காமல் ஏகுவனோ! தோன்றாத சுடர்க்கொழுந்து தோன்றித் திருவருள் சுரந்தது. சுவாமிகள் உடலமோ மாசு நீங்கிற்று; மாண்பு பெற்றது.

பெரியாழ்வாரோ அடிமை—குடி குடி யடிமை—என்பதற் கடையாளமாக மகாவிஷ்ணுவின் சக்கரப் பொறியை ஒற்றிக்கொண்டனர். பெரியாழ்வார் பேரன்பு முழுதும் கண்ணபிரான்மாட்டே கட்டுண்டு கிடந்தது. மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களின் பேரன்பாம் பெருவெள்ளத்தை இரண்டாகப் பிரித்துவிடின்; பெரியாழ்வார் பேரன்போ, கொள்ளிடமாகப் பெருகிக் குவலயத்தைக் குளிர்விக்கும்; மற்றை ஆழ்வார்களின் பேரன்போ காவிரியாகக் கதித்துக் காசினியைக் களிப்பிக்கும். பெரியாழ்வாரின் பேரன்பைப் பெருக்கிப் பேச இது தருணம் அன்று; அன்று. நமது குமரனின் வேறு சதங்கையில் ஒலிசெய்துகொள்வோம்.

பெரியாழ்வார் திருப்பாசுரங்கள் இரண்டினையும் கூர்ந்து நோக்குவோமேயாயின், திருப்பொறியைத் தாமே ஒற்றிக்கொண்டதாகவே புலப்படுகின்றது. அத்திருப் பொறியை ஒற்றிக்

சொல்வதற்கு வேறொருவரை வேண்டினதாகவோ, அன்றி வேறொருவர் வந்து ஒற்றினதாகவோ ஒன்றும் புலனாகவில்லை. இதுகாலை, வழக்கங்கள் இதற்கு முற்றிலும்மாறாக உள்ளன. அவற்றை விதந்து விளம்பின், இத்திருப்பொறி ஒற்றல் வேறொருவரே செய்ய வேண்டும் என்னும் நிலைமையில் வந்துள்ளது. தனக்குத்தானே செய்து கொள்ளின் பெரும்பாவம் என்னும் நிலைமைக்கும் இழிந்துவிட்டது. இது வைணவ சமயத்தின் பெருஞ் சிறப்பிலக்கணம். வைணவ சமயத்தின் வீறுபெற்ற சிறப்பியல்புகளின் பெருமை யனைத்தும் எண்ணி லடங்குமோ! ஏட்டி லடங்குமோ! இதுகாலையோ, அச்சிறப்புக்கள் அனைத்தும் மண்ணிலே—திருமண்ணிலே—மறைந்து போயின. சக்கரப் பொறியின் தீயிலே தீய்ந்துபோயின. திருமண் வைத்தல் சம்ஸ்காரம் செய்து கொள்ளல் இரண்டுமே வைணவ மதத்தின் சிறப்பென்று விளங்கிவிட்டதே! இதுகாலை திருமண் தரித்துள்ளோரனைவரும் சக்கரப்பொறி ஒற்றிக்கொள்ளும் சம்ஸ்காரம் பெற்றுள்ளார் என்று எண்ணல் வேண்டா. வெறும் நாமம் வைப்பாரே தமிழ்நாட்டில் பல்லாராய்ப் பல்கியுள்ளார். நிற்க.

பெரியாழ்வார் காலத்தில் சக்கரப்பொறி ஒற்றிக்கொள்ளும் கொள்கை அவரவரே செய்துவந்தனர். அதுவும் இப்போழ்தைப்போல தீயில் சுடவைத்தே ஒற்றிக்கொண்டனர். இன்றேல், "தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச் சக்கரத்தின், கோயிற் பொறியாலே ஒற்றுண்டுநின்று" என்றும், "என்னையும் என்னுடைமையையும் உனசக்கரப்பொறி ஒற்றிக்கொண்டு" என்று பெரியாழ்வாரே பாடியிரார். தாங்கள் தாங்களே பகவானுக்குப் பேரன்பு பூண்டு, அடிமையாய் ஒழுகி வருவதற்கடையாளமாக ஒற்றிக்கொள்ளும் சக்கரப் பொறியை இன்னொருவர் வந்து ஒற்றுவானேன்? மகாவிஷ்ணுவிற்கு அடிமை என்பதைப் புறத்தில் காட்டும் அறிகுறியே, சக்காத்தைத் தோளில் ஒற்றிக்கொள்வது. இங்ஙனம் ஒற்றுவதும் இன்னொருவர்தான் செய்ய வேண்டுமென்னும் விதிகள் ஆகமங்களில் உள்ளன; தானே ஒற்றிக்கொண்டால் பெரும் பாவம் என்பதும் ஆகமங்களிலேயே உள்ளன. தானே ஒற்றிக்கொண்ட பெரியாழ்வாருக்கு எவ்வாகமம் பிரமாணம்? எப்பாவம் பற்றிக்கொண்டது? எப்பாவமும் பற்றுதவரும் பரமனடியிணையைப் பற்றினவரும் ஆகிய பெரியாழ்வார் சொன்னமை, செய்தமை நமக்குப் பிரமாணமா? ஒழுகிக்காட்டி உயர்பதவிபெற்ற பெரியாழ்வார் முன்னிலையில் இவ்வாகமம் எப்பிரமாணமாகும்? அறிஞரே, ஆராய்க! ஆராய்க. சக்கரப்பொறி ஒற்றிக்கொள்ளும் சம்ஸ்காரத்தில், சங்கு ஒற்றிக்கொள்ளலைப்பற்றிப் பெரியாழ்வார் ஒன்றுமே உரைக்கவில்லை. இதுகாலையோ, சங்கும் சக்கரமும் ஆக வலம் இடம் தோள்களில் ஒற்றிக்கொள்ளும் வழக்கம் வேரூன்றிவிட்டது. ஆகமம் ஆகமம் என்னும் பெயர் வைத்து எத்துணையோ நுழைத்ததைப்போல, சங்கையும் நுழைத்துவிட்டனர்.

பெருமாள் பக்கலில் வைத்தபேரன்பினில் ஆழ்ந்த பெரியாழ்வார் "தன்னையும் தன்னுடைமையையும் சக்கரப்பொறி ஒற்றிக்கொண்டு" "எந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி, வந்து வழிவழி ஆட்செய்கின்றோம்" எனச் சுதந்தரத் தொண்டு செய்துவந்தனர். எம்பெருமானுக்குத்தான் அடிமையேயன்றித் தன்னுடைமைகளும் அடிமையே என்னும் அன்பு பேரன்பேயாகும். இவ்வன்பிற் கடையாளமாகச் சக்கரப் பொறி ஒற்றிக்கொண்டே அடிமையாக வேண்டுமென்னும் சித்தாந்தம் மற்றை யாழ்வார் பக்கலில் செல்லவில்லை. ஆழ்வார் காலங்களுக்கு முன்னும் இவ்வழக்கம் நடைபெற்று வந்ததாகச் சரித்திரங்களோ, சான்றுகளோ ஒன்றுமே இன்று. ஆகமங்களோ ஆழ்வார் காலங்களுக்குப் பிற்பட்டன என்று முன்னரே மொழிந்தேன். ஆகையால், ஆகமப் பிரமாணம் ஆழ்வார் பிரமாணத்தினும் எவ்வாற்றானும் வலியுடைத்தன்று. ஆனால் ஆகமங்கள் பிரமாணங்களன்றோ என்னில்? அவைகள் பிரமாணங்கள் அன்றென்றுமின்று; இன்றென்றுமின்று. அவைகள் அனைத்தையும் கொள்ளவேண்டுமென்றுமின்று. அவற்றிற் கொள்ளற்பாலன சில; தள்ளற்பாலன பல. அவற்றுள் இதுவும் ஒன்று. என்னை? பெருமான் பக்கல் பூண்ட பேரன்பினால் திருப்பொறி ஒற்றிக்கொள்ள வேண்டுமென்ற சிந்தை வருமேல் அதனை அவரவர்களே பெரியாழ்வாரைப்போலஒற்றிக்கொள்ளல் வேண்டும். இதற்கு ஆகமங்கள் குறுக்கிடின் அதற்கு நாமும் குறுக்கிடல் வேண்டும். பெரியாழ்வார் பக்திக்காக ஒற்றிக்கொண்ட சக்கரப் பொறி இதுகாலையோ பணத்திற்காக ஒற்றப்படுகின்றது. அப்பாிபவம் என்னே! என்னே! பக்தியில்லா ஒருவன் பக்தியில்லா இன்னொருவனுக்குப் பணத்தின் பேராசையினால் முத்திரை போடுகின்றான். முத்திரை போட்டுக் கொள்ளலே மோட்சம் உண்டாகுமென உபதேசிக்கின்றனர். முத்திரை போட்டுக் கொண்டவர் போடாதவர் கையில் உண்ணலாகாதென்ற விதியும் வைணவ உலகத்தில் வேரூன்றியுள்ளது. இதற்காக அவ்வீட்டிலுள்ளாரனைவர்க்கும் சூட்டு முத்திரை தீட்டப்பெறுகின்றது. இங்ஙனம் ஆண்பிள்ளைகளுக்கோ? பெண்மக்களுக்கும் செந்தமிழ்க் கன்னிகைகளுக்கும் சூட்டு முத்திரை தீட்டப் பெறுகின்றதே! அச்செந்தமிழ்க் கன்னிகை வடகலைக் குலமாயின், பின்னர் தென்கலைக் குலத்திற்கோ வேறுகுலத்திற்கோ வாழ்க்கைப்படின் அக்கன்னியின் மதப்பொறி மறைக்கப்படுமோ? இவற்றின் விளைவுகளுக்குக் கௌரியின் கதையை நினைப்பூட்டிவிடுகின்றேன்.

இதுகாலை, நம் வாழ்க்கையில் எத்துணையோ விஷயங்களில் இன்னொருவர் உதவி யின்றிச் செய்ய முடியாதென்ற முடிவிற்கு வந்துள்ளோம். இவ்வாறான விலங்குகளை உடைத்தெறிய வேண்டும். அவைகள் சாஸ்திரம் சாஸ்திரம் என்னும் பெயரால் நமது சமூகத்தையே நஞ்சாக்குகின்றது. சாதி சமயம் என்னும் பெயரால் இழைக்கப்படும் கொடுமைகள் பலப்பல. அந்தோ! அவற்றை உன்னுந்தோறும் உள்ளம் உருகுகின்றதே! காணுந்தோறும் கண்கள் கருகுகின்றனவே! மனிதனுக்கு மனிதன் அடிமை என்றல் அன்பினாலன்றி, வேறெக் கட்டுப்பாட்டினும் கட்டுப்படுதலை அறவே களைதல் வேண்டும். இன்னோரன்ன கட்டுப்பாட்டுக் கதைகள் சைவ வைணவப் புலங்களில் கணக்கின்றி முளைத்துள்ளன, அவற்று

றை ஆராய்ச்சிகொண்டு வெட்டிவீழ்த் தற்குக் கொழுந் தமிழ்க் குமரன்—குமரி—குமரர் பலப்பலர் வேண்டும்; வேண்டும்.

# இளைப்பாறுதல்.

கே. அனந்தராமய்யங்கார்.

(இவ்வியாசம் "தேகப் பயிற்சி" யென்னும் பத்திரிகையில் 'விக்டே ருஷே' என்னும் பிரெஞ்சுப் புலவர் "இளைப்பாறும் தொழில்" என்று மகுடமிட் டெழுதிய சிற்றுரையின் சாரமாகும்.)

### களைப்புத்தரும் பேச்சு.

ஒரு தொழிலைவிட்டு மற்றொரு தொழிலைத் தொடங்குதல் இளைப்பாறும் வழியல்ல; அது மற்றொரு விதமாகக் களைப்படைதலே. உண்மையான இளைப்பாறுதல் சரீரத்துக்கும் மனத்துக்கும் மெய்யான சாந்தியைத் தருதலே. அதற்கு மூன்று உறுப்புக்கள் உண்டு:—படுக்கை, ஏகாந்தம், மனம் ஒடுக்கல் என்பன. இம்மூன்று உறுப்புக்கள் இன்றி நாம் உண்மையாக இளைப்பாற முடியாது. ஏனென்றால் இளைப்பாறுதல் என்பதற்கு மனத்துக்குக் கலக்கமளித்து, கவனத்தைக் கவரும் எல்லாத் தொழிலையும் விட்டுவிடுதல் என்று பொருள். இவ்வாறு கூறிவிட்டு ஆசிரியர் 'ருஷே' ஒரு படம் வரைந்து காட்டி அதையே உற்றுநோக்குவார்க்கு மன அமைதி ஏற்படும் என்று அனுபவ வாயிலாகக் கூறுகிறார்.

### எல்லைக் கல்.

இளைப்பாறும் வழிதெரிந்தால் எவ்வளவு நல்லது! உலகத்தில் சில ஓயா உழைப்பாளிகளை உற்று நோக்கினால் அது மிக அருமையினும் அருமையென்றே தோன்றுகிறது. உலகத்தின் பல தொழில்களிலும் ஈடுபட்டு ஓயாதுழைப்பவர்களென்ன, புகழுக்குப் பேராவல்கொண் டுழைக்கும் 'பயில்வான்'களென்ன, அறிவுத் துறைகளில் தங்களையே பலிசெய்யும் அறிவாளிகளென்ன, இவர்களெல்லாம் செல்வத்தையோ, புகழையோ, இன்பத்தையோ குறிக்கோளாகக் கொண்டு கடுநடையிட்டோடி இளைப்பாறத் தெரியாது தியங்குகிறார்கள். தாங்களே இதை ஒப்புக்கொண்டு அனுதாபப்படுகிறார்கள். என்றாலும் இவர்கள் எல்லைக்கல்லை மிதித்துவிட்டார்கள்; அதாவது சரீர உழைப்பின் வளங்களை யெல்லாங் கொட்டிவிட்டு வறுமையடைந்துவிட்டார்கள். அவர் களைப் பின்பற்றக் கூடாது. சோம்பல், மித மிஞ்சின உழைப்பு இரண்டையும் விலக்கிச் செல்லவேண்டும். ஒவ்வொருவரும் தம்முடைய பலத்தைச் சேமிக்கத் தெரிந்துகொள்ளுதல் அவசியம்.

இளைப்பாறுதல் மக்களுடலுக்கு அவசியம் என்று அடிக்கடி எடுத்துக் காட்டப்படுகிறது. அப்பொழுதுதான் சரீரத்தின் பல சிற்றறைகளும் சக்தியால் மீட்டும் நிரப்பப்படுகிறது. உடற்கூற்று நூலின் எந்தக்கொள்கைப்படி இளைப்பாறுதல் கைகூடுகிறதென்று நம்மால் திட்டமாய்ச் சொல்லமுடியாது. ஆனால் ஒன்று மாத்திரம் சொல்லலாம். நிமிஷத்துக்கு நிமிஷம் உழைப்பினால் வெளியாய் இளைப்பாறு



வதால் நிரம்புகிற நரம்பு சக்தியின் பண்டசாலையாக விளங்குகிறது நம்முடைய சரீரம். உழைப்பு வேலைகளும் இளைப்பாறும் வேலைகளும் நெருங்கி வர வேலைத் திட்டத்தை நாம் ஒழுங்குபடுத்த மட்டும் தெரிந்து கொண்டால் இன்னும் அதிகமாகச் சக்தி செலவிட நாம் தயாராயிருக்கலாம். இதனால்தான் வாழ்க்கை முறை யென்பது இளைப்பாறுதல் முறையே யெனப்படுகிறது.

நாம் எப்படி இளைப்பாறுகிறோம்? விளையாட்டுக்களால் நாம் இளைப்பாறுகிறோம் என்று சிலர் சொல்லுகிறார்கள். அவர்கள் ஒரு நாள் முழுதும் வேலை செய்தோ, கவலை கொண்டிருந்தோ நாடகக் கொட்டகைக்கும், சதிர்க் கச்சேரிக்கும், விடுதிக்கும், சங்கங்களுக்கும் ஓடுகிறார்கள். இது இளைப்பாறுவதற்கு நல்ல வழியா?

### களைப்பின்மேல் களைப்பு.

இல்லவே யில்லை. நம்முடைய நரம்பு மண்டலத்தின் பல பாகங்களுக்கும் நெருங்கிய சம்பந்தமில்லையென்று நினைத்து நாம் நடக்கக்கூடாது. நாம் வேலைக் களத்தில் வேலை செய்யும் பொழுது களைப்படைந்த நரம்புகளே, நாம் நாடக சாலையில் சிரிக்கும் பொழுது களைப்படையும் என்று சொல்வதற்கில்லை. ஆனால் இரண்டும் களைப்புக்கொடுக்கும் தொழில்களே. வாரம் முழுவதும் மூளை வேலைசெய்து அலுத்துப்போன சிறுவர்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் உதைபந்து விளையாடி இளைப்பாறுகிறோம் என்று நினைத்தால் அது ஏமாற்றம். அவர்கள் களைப்பின்மேல் களைப்பையே யேற்றுகிறார்கள். ஒரு நாளோ அல்லது ஒரு வாரமோ ஓயா உழைப்புக்குப்பின் பிரத்தியேகமான உடையுடன் திறந்தவெளியில் ஒழுங்கு படுத்தப்பட்ட சில சரீரப் பயிற்சிகள் செய்தலும், இடையிடையே இளைப்பாறிக் கொள்ளுதலும் மிகவும் நல்லதுதான். ஆனால் அதை அளவாகவும் புத்திசாலித்தனமாகவும் செய்யவேண்டும். உண்மையாகவே, சிக்கனத்தின் அழகிய கொள்கைகளை நம்முடைய வாழ்க்கைமுறையில் பயன்படுத்த விரும்பினால், நம்முடைய உழைப்பு நாள் திட்டத்தில் பூர்ணமான இளைப்பாறுதலுக்கும் போதிய அவகாசம் ஒதுக்கிவைக்க வேண்டும். அதற்கு நிபந்தனைகளென்ன?

### படுக்கை.

நீட்டி நிமிர்தல் நம்முடைய நரம்புகளுக்கும் தசைகளுக்கும் போதுமான ஆறுதல் தருகிறது; இதயத்தை இளைப்பாறச் செய்கிறது; சில உறுப்புக்களின் நிலையைப் பேதப்படுத்துகிறது. இயற்கை இதற்கு வழிகாட்டுகிறது. நம்முடைய நரம்பு மண்டலம் இளைப்பாற வேண்டுமானால் சில நிமிஷங்களாவது இந்த நிலையை நாம் அடைய வேண்டும். பிரெஞ்சு மந்திரிகளில் ஒருவரிடம் வயது சென்ற ஒரு காரியஸ்தர் இருந்தார். அவருடைய நீண்ட ஆயுளும் சுறுசுறுப்பும் யார்க்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தன. தமது எஜமானர் பிரெஞ்சு அரசாங்கத்தில் மந்திரிஉத்தியோகம் வகித்திருந்தபொழுது, அவருடைய காரியாலயத்தில் ஒருதட்டி-மறைவில் தாம் ஒரு சாய்வு நாற்காலி அமைத்திருந்ததாகவும் தம் எஜமானனை ஒருவர் பேட்டிகண்டு மீண்டு மற்றொருவர் காண வருவதற்குள் தாம் போய் அதில் சாய்ந்து கொள்வதாகவும் சொல்லியிருக்கிறார். இவ்வாறு எத்

பத்தெட்டு வயதிலுங்கூட இக்கிழவர் நீண்டநேரம் உழைக்கச் சக்தியுள்ளவராய் விளங்கினர்.

ஏகாந்தம்.

நம்முடைய கூட்டாளிகளோடு பழகுதல் களைப்புக்கு நாம் அறியவாராத ஒரு காரணம். எனினும் நம்மைக் களைப்படையச் செய்யும் மனோபாவங்களுக்குச் செல்லாம் அடிப்படையான காரணம் நமது சமூக வாழ்க்கையே. நாம் யாரோடாவது பழகுகிறபொழுது, நம்மிடம் அனேக உணர்ச்சிகள் எழுகின்றன. நாம் பிறரை அடக்கி யாளவோ, திருப்தி செய்யவோ, போட்டி போடவோ, நேசிக்கவோ, பகைக்கவோ, தற்காத்துக் கொள்ளவோ, கற்றுக்கொள்ளவோ, கற்பிக்கவோ முற்படுகிறோம். அடிக்கடி நாம் பிறரைச் சந்திப்பதால் நமது குறைகளையும் துரதிருஷ்டங்களையும் நன்றாக உணருகிறோம். ஜனசமூகத்தில் நம்மெல்லோரைப்பற்றியும் பெரும்பாலாகத் தப்புணர்ச்சியே பேற்பட்டிருக்கிறது. ஜன சமூகம் நாம் சம்பந்தப்பட்டவரை நீதி செலுத்தவில்லை. நம்மைவிடப் பணத்திலும் மதிப்பிலும் உயர்ந்து அறிவிலும் ஆண்மையிலும் கீழ்ப்பட்ட ஒரு மனிதனோடு வார்த்தையாடுங்கால் இதை நாம் வருத்தத்தோடு நினைவுக்குக் கொண்டுவராமலிருக்க முடியவில்லை. நம்மை ஜன சமூகத்திற்குத் தக்கபடி அமைத்துக்கொள்வதில் நாம் எடுக்கும் முயற்சி சில வேளைகளில் மிகுந்த வருத்தத்தையே தருகிறது. "ஜெனெட்" என்னும் பிரெஞ்சு உளநூற் புலவர் மனித வர்க்கத்தைப் பலவகையாகப் பிரிக்கிறார்:—(க) களைப்படையச் செய்யும் மக்கள். இவர்களோடு சாதாரண சம்பாஷணைகூடக் களைப்புத் தருகிறது. இவர்களைக் கண்டதுமே நமக்குக் களைப்பதிகரிக்கிறது. இவர்களோடு பழகுகையில் நாம் இயல்பாகவே தற்காப்பு அல்லது பகைக்கும் நிலையை அடைந்துவிடுகிறோம். (உ) கவனத்தைக் கவராத மக்கள். இவர்களுக்கு நாம் சொல்ல வேண்டிய தொன்றுமில்லை. (ஙூ) கோழை மக்கள். இவர்கள் வாயினின்றும் வார்த்தைகளைப் பிடுங்கவே வேண்டும். (ச) சுத்த சோம்பேறிகள். இவர்களை அடிக்கடி ஊக்கப்படுத்த வேண்டும். இன்னும் இம்மாதிரி மிகப் பலர். இத்திறப்பட்ட ஜனங்களோடு பழகுதல் நரம்பு-சக்திக்குச் செலவையே தருகிறது.

ஏகாந்தம் களைப்பைத்தரும் இக்காரணங்களை நீக்குகிறது. சமூக எழுச்சி குறையவும், நம்முடைய மனோபாவங்கள் சாந்தமடைந்து மழுங்குகின்றன. நம்பிக்கை, ஆசை, பச்சாத்தாபம், போட்டி, வெறுப்பு, கோபம், பகை, நட்பு இவையெல்லாம் மறைந்து ஆன்ம சாந்தியே ஏற்பட்டுவிடுகிறது. இதனால்தான் ஒவ்வொரு மதத்தாரும் ஆன்ம சாந்திக்கு உபாயமாக, சங்க பரித்தியாகம் அல்லது ஏகாந்த சமயம் அவசியமென்று வற்புறுத்துகிறார்கள். இத்தகைய ஏகாந்தத்துக்கு அமைந்த சில விடுதிகளிருக்கின்றன. ஒரு மடாலயத்தின் விதிகள் எவ்வளவு கண்டிப்பாயிருக்குமோ அவ்வளவு கண்டிப்பாய் இங்கும் விதிகளமைந்திருக்கின்றன. இங்கே வாழ்க்கைமுறை, ஏகாந்த நேரங்களுக்கும் போதிய அவகாசம் கொடுத்தே அமைக்கப்பட்டிருக்கிறது.

மனம் ஒடுங்கல்.

நாம் ஏகாந்தத்தில் எதைப்பற்றி நினைக்கவேண்டும்? நம்முடைய கவலைகள், பகை, நட்பு, பேராசை, ஏமாற்றம் இவைகளைப்பற்றியா? இன்னும் களைப்பை அதிகரித்துக்கொள்ள விருப்பமில்லாவிட்டால் இவற்றை நினைக்கவே கூடாது. நம்முடைய எண்ணங்களை அடக்கியே பழகவேண்டும். ஏகாந்த நிலையில் நமக்கு உபயோகமாகும் உயர்ந்த எண்ணங்களிலேயே நம் மனத்தைச் செலுத்த வேண்டும். இளைப்பாறும்பொழுது மனத்தை ஒடுக்கி அதன் நிலையில் நிறுத்த நல்லவழியொன்று சொல்லுகிறேன். இயற்கையின் தோற்றத்தைக் காட்டும் ஒரு படத்தையே உற்றுநோக்கவேண்டும். அது ஒரு புல்வெளி, ஓர் ஏரி அல்லது அமைதியான கடலின் தோற்றமாயிருத்தல் நலம்.



## நடுநிசி.

பி. ஸ்ரீ.

க

"வைத்தியரே! வைத்தியரே!"

ஓ! ஓ! என்ன தொந்தரவு! இந்த நடுநிசியிலே ... ... ... ... கண்ணைத் திறந்து நான் ஜமீன்தாரர் தேவராசேந்திர துரையைப் பார்த்தேன். அவசரமாய் எழுந்திருந்து ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டு அவரை உட்காரும்படி வேண்டினேன். அப்பால் அவரது கலங்கிய முகத்தைக் கவலையோடு நோக்கினேன். அப்பொழுது மணி சுமார் உ-௩0 இருக்கும்.

ஜமீன்தாரரின் முகம் புலர்ந்திருந்தது. அவர் 'மிரள மிரள' விழித்தார். "பழைய துன்பந்தான், இன்றிரவும். உம்முடைய மருந்தினால் பயனொன்றுமில்லை" என்று சொன்னார். ஒருவேளை அவர் திரும்பவும் அமிதமாக மதுபானம் செய்திருக்கலாம் என்ற விஷயத்தைக் குறிப்பாக உணர்த்தினேன்.

அவர் சிறிது திடுக்கிட்டு 'நீங்கள் நினைப்பதுதவறு. மதுபானம் அல்ல, அல்ல. என் கதை முழுதுங் கேளாமல் உண்மையானகாரணத்தை ஊகித்தறிய முடியாது' என்றார். மாடத்திலிருந்த சிறிய மண்ணெண்ணெய் விளக்கைத் தூண்டினேன். தீபம் கொஞ்சம் பிரகாசமாய் எரிந்தது. புகை அதிகமாக வெளிப்பட்டது. என் மேலாடையை உடம்பைச்சுற்றி இழுத்துக்கொண்டு, ஒரு சமாசாரப் பத்திரிகையால் மூடப்பட்டிருந்த சாமான்பெட்டி யொன்றின்மேல் உட்கார்ந்தேன்.

ஜமீன்தாரர் தம் கதையை ஆரம்பித்தார். "என் முதல் மனைவிபோன்ற ஒரு ஸதி!—அவளுக்குச் சமானமானவளைக் கண்டு பிடிப்பது அருமை. நான் அப்பொழுது வாலிபனாயிருந்தேன். இளமை-வெள்ளத்திலே ஆசை, அன்பு, காதல் ஆதிய பல பல பிரசண்ட மாருதங்கள் வீசுவது இயல்புதானே! மேலும் நான் இரவும் பகலும் பாராயணம் செய்து வந்தன, நைடதம்போன்ற சிங்காரரசம் ததும்பும் காவியங்களேயாம். அவளோ ஒரு குறைவுமில்லாமல் வீட்டுக் காரியம் பார்த்து வந்தாள். ஆனால் அதுமட்டும் என்மனத்திற்குப் பூர்ண அமைதி தரவில்லை. "ஒரு மனைவி

அடியாளர்யும், மக்திரியாயும், ஏகாந்தத்தில் தோழியாயும் நற்கலைகளில் விசேஷமிருப்பமுள்ள மாணவியாயும் இருக்கின்றாள்'' என்ற காளிதாசமகா கவியின் நல்லுரையை நான் அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொண்டேன். ஆனால் நன்கலைப்பயிற்சியைக் குறித்து நான் செய்த உபந்யாசங்களெல்லாம் என் மனைவிக்கு யாதொரு நற்பயனையுந்தரவில்லை. 'ஆருயிரே! கண்மணியே! என் அம்மே!' என்று அன்போடு நான் கொஞ்சி யழைத்தால் அவள் விலா வெடிக்கச் சிரிப்பாள். சிறந்த சிங்காரக் கவிகளிலிருந்தும் காதற் களஞ்சியமான பிரபந்தங்களிலிருந்தும் தெரிந்தெடுக்கப்பட்ட சொற்றொடர்களெல்லாம் அவள் பெருஞ் சிரிப்பின்முன், கங்கையாற்றின் வெள்ளத்தில் எதிர்ப்பட்ட காட்டானை பட்டபாடுபடும்! அவள் சிரிப்பதில் ஓர் அற்புத சாமர்த்தியமுடையவளா யிருந்தாள்.

உ

நாலு வருஷங்களுக்கு முன் நான் ஒரு கொடிய ரோகத்தால் அவஸ்தைப்பட்டுக்கொண் டிருந்தேன். அப்போது நமன் வாயிலிருந்தேனென்று தான் சொல்லவேண்டும். பிழைத்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையில்லை. ஒரு நாள் வியாதி அதிகப் பட்டுவிட்டது; வைத்தியரும் கைவிட்டார். இந்த நிலைமையில் என் உறவினருள் ஒருவர் ஒரு பண்டாரத்தை அழைத்து வந்தார். அவன் எங்கிருந்து வந்தானென்பது தெரியாது. ஒரு மூலிகையை இடித்துத் தூளாக்கி நெய்யோடு சேர்த்துச் சாப்பிடும்படி கொடுத்தான். எப்படியோ நான் தப்பிப்பிழைத்தேன். அதற்குக் காரணம் மருந்தாயிருக்கலாம்; அல்லது என் நல்வினையாகத்தா னிருக்கலாம்.

நான் நோயாளியா யிருக்கையில் என் மனைவி ஒரு நிமிஷங்கூட இளைப்பாறவில்லை. அவள் பலவீனமுள்ளவளா யிருந்தும் அற்பமான மனுஷ்ய பலத்தைக்கொண்டு எமகிங்கரர்களோடு இடைவிடாது சலிப்பின்றி எதிர்த்துப் போராடி வந்தாள். தாயார் குழந்தையைக் கைகளால் எடுத்து மார்புற அணைத்துக் காப்பதுபோல, பூர்ண அன்போடும் தயையோடும் முழுமனத்தோடும் ஊக்கத்தோடும் எனது பயனற்ற இவ்வுயிரைக் காப்பாற்றினாள். அவள் சரியாய் ஊண் உறக்கம் கொள்ளுவதில்லை. இவ்வுலகில் வேறொன்றையும் கவனிக்கவேயில்லை. அத்தருணத்தில் தான் விரும்பிய இரைகிடையாமல் ஏமாறிப்போன புலிபோல் எமன் என்னைவிட்டுத் திரும்பி என் மனைவியைப் பற்றிக்கொண்டான்.

௩

அவள் கர்ப்பிணியாய் இருந்தாள்; குழந்தை செத்துப் பிறந்தது. அக்காலம் முதல் பொல்லாப் பிணிகள் பல அவளைப் பிடிக்கத் தொடங்கின. நான் அவளுக்குப் பணிவிடை செய்ய ஆரம்பித்தேன். ஆனால் அதில் அவளுக்குத் திருப்தியில்லை. "நீங்கள் என்னசெய்கிறீர்கள்? ஜனங்கள் என்ன பேசுவார்கள்? தயவுசெய்து இனி இப்படி இரவும் பகலும் என் அறைக்கு வரவேண்டாம்'' என்று கூறுவாள்.

நான் விசிறிக் கொள்வதாகப் பாவனை செய்து அவளுக்கு விசிறினால் அது ஒரு கூத்தாகவே முடியும். நான் அவளுக்குப் பணிவிடை செய்வதில் என் வழக்கமான சாப்பாட்டு நேரத்துக்குக் கூடப் பத்து நிமிஷம் ஆய்விட்டால் அது அவளுடைய துயரக்கவலைக்கும் வேண்டு கோளுக்கும் முணுமுணுப்புக்கும் காரணமாகும். இதனால் நான் அவளுக்கு அற்ப கைங்கரியமும் செய்ய முடியாமல் போய் விட்டது. இவ்விஷயத்தில் ஆண்பிள்ளைகள் ஏன் இந்தப்பாடுபட வேண்டும்? என்று அவள் கூறுவாள்.

என்னுடைய காட்டுத் தோப்பு பங்களாவை நீங்கள் பார்த்திருப்பீர்களென்று நினைக்கிறேன். அந்த பங்களாவைச் சுற்றிலும் அழகிய நந்தவனமொன்றுண்டு. அதை படுத்துப் புண்ணிய நதியான சித்திர கங்கை பிரவகிக்கின்றது. படுக்கை யறைக்குக் கீழே தென்பக்கமாய் என் மனைவி தன்னிஷ்டப்படி ஓர் சிங்காரத்தோட்டம் போட்டிருந்தாள். அது ஆடம்பர மற்று இயற்கை யழகுடன் பொலிந்தது. அங்கு ரோஜா, மல்லிகை, முல்லை, இருவாட்சி, கந்தராஜம், பாரிஜாதம், முதலிய மலர்கள் கண்டோர் மனம் மலர நகை புரிந்து நாலு பக்கமும் நறுமணம் பரப்பின, பயங்கரமான பெயர்களோடும் 'செண்டா'க்களோடும் விளங்கும் பகட்டான அந்நிய தேசத்துச் செடிகோடிகள் அங்குக் காணக்கிடையா.

அங்குள்ள ஒரு பெரிய அசோக விருட்சத்தின் அடியில் வெண்மை நிறமான பளிங்குப் பீடம் ஒன்று இருந்தது. என் மனைவி உடல் வளமுள்ளவளாய் இருக்கையில் காலையிலும் மாலையிலும் அப்பீடத்தைச்சுத்தி செய்வதுண்டு. அதனால் அது என்னும் புத்தப் புதிதாகத் தோன்றியது. கோடை காலத்திலே வீட்டு வேலை முடிந்த பின் அவள் மாலை நேரங்களில் அதில் போய் அமர்ந்திருப்பாள். அவள் அங்கிருந்து நதியைப் பார்க்க முடியும். ஆனால் ஆற்றங்கரையிலிருப்போர் அவளைப் பார்க்கமுடியாது.

௪

அநேக நாளாய்ப் படுக்கையிலிருந்து நகரவும், வகையற்றிருந்த அவள் இயற்கையாசி சந்திரிகையோடு கொஞ்சிச் சிரித்து விளையாடும் அந்திவேளையில், ஒரு நாள் தன்னுடைய அறையை விட்டு வெளிப் போந்து தன் சிங்கார வனத்தில்போய் உட்கார விரும்பினாள்.

நான் அதிக ஜாக்கிரதையாய்க் கூட்டிக் கொண்டு போய் அவளை அசோக மரத்தடியிலுள்ள அப்பளிங்குப்பீடத்தில் அமர்த்தினேன். அப்பொழுது இரண்டொரு அசோக மலர்கள் அவள் மீது உதிர்ந்தன. அவள் தலைக்கு மேலுள்ள கிளைகளினூடே நுழைந்துவந்த சந்திரகிரணம் மெலிவுற்றிருந்த அவள் வதனத்தில் தோய்ந்தது. எங்களைச்சுற்றி எங்கனும் ஏகமௌனம் அரசிருந்தது. புஷ்பங்களின் நறு மணங்கலந்த அந்த இரவில் நான் அவள் பக்கத்தில் அமர்ந்து முகத்தை உற்று நோக்கியபோது என் கண்களில் நீர் ததும்பி வழிந்தது.

மெதுவாய் அவளை நெருங்கி அதி உஷ்ணமாயிருந்த அவளது மெலிந்த கரத்தை என் கைகளால் பற்றினேன். அக்கையை வாங்க அவள் முயலவில்லை. இவ்விதமாக மௌனத்தில் சிறிது பொழுது கழியவே எவ்விதமாகவோ என்னுள்ளம் பூரித்துத் ததும்ப, 'உன்காதலை ஒருநாளும் மறக்க வகையறியேன்' என்ற வார்த்தைகள் தம்மில் தாமாய் என் நாவினின்றும் உதித்தன.

என் மனைவி சிரித்தாள். அவள் சிரிப்பில் சிறிது ஆநந்தமும், கொ

ஞ்சம் நம்பிக்கையின்மையும், சிறித ளவு கூரிய பழிப்பும் கலந்திருந்தன.

அவள் பதிலுரையாமலே "நான் ஒருபொழுதும் அவளை மறக்க மாட் டேன்" என்று கூறியதைத்தான் முழு உண்மை என்று நம்பவில்லை யென்ப தையும், மேலும் அதைத்தானும் மனப்பூர்வமாக ஆமோதிக்கவில்லை யென்பதையும் நகையால் எனக்கு உணர்த்தினள்.

அவளுடைய கூரிய நகைக்கு அஞ் சியே நான் மனைவியிடத்தில் என் காதலை உள்ளவாறு எடுத்துரைக்கத் துணிவதில்லை. நான் அவளைப் பிரிந் திருக்கையில் கோவை செய்திருந்த பேச்சுக்களெல்லாம் அவள் முன்னி லையில் வெற்றுரைகளாய் ஒழிந்தன.

நாம் பேசுவதை விவகாரத்தால் யாராவது கண்டித்தால்அல்லவா, அத ற்குத் தகுந்த பதில் கூறமுடியும்? சிரிப்போ எத்தகைய விவகாரத்தை யும் எளிதில் வென்று விடும் விசித்தி ரமான ஓர் அஸ்திரம்! ஆதலால் நான் மௌனமாய் இருக்கும்படி நேரிட் டது.

சந்திரிகை முன்னினும் பிரகாச மாயிற்று. கோகிலம் ஒன்று 'கூ கூ' வென்று பித்தன் போலக் கூவிக்கொ ண்டிருந்தது. எப்படி அதன் பேடு அன்றிரவு தன் கணவனைக் கவனியா மல் தனியேயிருக்கத் துணிந்ததென் றெண்ணி நான் வியப்புற்றேன்.

௫

அநேக பரிகாரங்கட்குப் பின்னும் விசேஷசிரமத்திற்குப் பின்னும், என் மனைவியின் கோப் இருந்தபடியே தானிருந்தது. வைத்தியர் தலமாற்று தல் அத்தியாவசியகம் என்று குறிப் பித்தார். அவ்வண்ணமே என் மனை

வியை அலகபாத்திற்கு அழைத்துச் சென்றேன்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருக் கையில் தேவராச்துரை திடீரென்று சிறிது நேரம் மௌனமாயிருந்தார். ஏதோ சந்தேகத்துடன் ஒருகேள்வி கேட்கவிரும்பியவர்போல என்னைநோ க்கினர். அதன் பிறகு தலை கவிழ்ந்து சிந்தனையில் ஆழ்ந்தார். நானும் ஒன் றும் பேசவில்லை. மாடத்திலுள்ள மண்ணெண்ணெய்—விளக்கு அசைந் தாடியது. கொசுகுகளின்பாட்டு அந் நள்ளிரவின் நிச்சப்தத்திலே தெளி வாய் ஒலித்தது. அப்பால் அந்த மௌனத்தை முறித்து, தேவராசேந் திர துரை தன் கதையைத் தொடர்ந் தார்.

ஒருபிரபலவைத்தியர் என்மனைவிக் குச் சிகிச்சை செய்து வந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு இந்த நோய் குண மாகாத நோயென்றும் ஆயுள் முழுவதும் என் மனைவிநோயாளியாக வே இருக்க வேண்டி வரும் என்றும் அவர் எனக்குத் தெரிவித்தார்.

அப்பால் ஒரு நாள் என் மனைவி என்னைப் பார்த்துப் பின் வருமாறு சொன்னாள். "என்னுடைய வியாதி யோ என்னை விட்டு நீங்கப் போகிற தில்லை. எ ம னும் சமீபத்தில் என்னை அழைத்துக் கொள்ள அஞ்சு கிறான். இந்த உயிர்ப்பிணத்தோடு நீங்கள் ஏன் உங்கள்வாழ்வை வீணு க்கவேண்டும்? என்னைத் தனியே விட் டகன்று நீங்கள் உங்கள் அலுவலைப் பார்க்கப் போங்கள்"

இப்பொழுது எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. ஆனால் அவளைப் போல் சிரிக்க எனக்குத் தெரியவி ல்லை. ஆதலால் நான் ஒரு கதாநாயக



னைப் போல நடிக்க ஆரம்பித்து, 'இந்த என் சரீரத்தில் எவ்வளவு காலம் ஆவி தங்கி இருக்குமோ அவ வளவு காலமும்......................' என்று தொடங்கினேன்.

அவள் நான் சொல்ல ஆரம்பித்த தை இடைமுறித்து 'இதோ, பாருங் கள், நீங்கள் தொடங்கியதைப் பூர் த்தி செய்ய வேண்டிய தவசியமில்லை. ஏன்? நீங்கள் சொல்லுவதைக் கேட்ப தாலேயே என் பிராணன் போய்விடு மென்று எனக்குத் தோன்றுகிறது' என்று பேசினள்.

இவ்விஷயமான இரகசிய—உண்மை எனக்கு அப்பொழுது தெளிவாய்ப் புலப்படவில்லை யாயினும், இப்பொ ழுது நன்ருய்த் தெரியவருகின்றது. அதாவது—அக்காலத்திலுங்கூட நம் பிக்கையற்ற அந்த நோயாளியைப் பேணுவதில் நான் சிரமப்பட்டு அந் தரங்கத்தில் களைப்புற்றிருந்தேன் எ ன்பதேயாம்.

ஆயினும் பகிரங்கமாக நான் பணி விடை செய்து வந்தேன். ஆனல் என் அகக்களைப்பை முகக் குறிப்பால் என் மனைவி உய்த்துணர்ந்து கொண் டவள் போலக் காணப்பட்டாள். நான் அதை அப்பொழுது உணரவில்லை. ஆனல் அவள் அக்காலத்தில் கூட்டெ ழுத்துக்கள் இல்லாத பாலபாடத்தை ஒருவன் எவ்வளவு எளிதாக வாசிக் கக்கூடுமோ அவ்வளவு எளிதாக என்னை உய்த்துணர்ந்து வந்தாள் என்பதில் இப்பொழுது எனக்கு ஒரு சிறிதும்ஐயமில்லை.

௬

மருத்துவனுரயிறு—மாமல்ல தேவர் எங்கள் ஜாதியைச் சேர்ந்தவர். அவர் வீட்டிற்கு நான் அடிக்கடி போவ துண்டு. நாளடைவில் அவர் தம் பெ

ண்ணிடம் என்னை அறிமுகம் செய்து வைத்தார். அவளுக்குப் பதினைந்து வயதாகியும் விவாகமில்லை. அதே ஜாதியில் சரியான வரன் கிடையாத தால் அவளைக் கலியாணம் செய்து கொடுக்கவில்லையென்று அவள் தகப் பனர் சொன்னர், உண்மையில் அவள் பிறப்பைக் குறித்துச் சில இழிவான அபிப்பிராயங்கள் பரவியிருந்தன.

ஆனல் அவளைப் பார்த்தவர்களுக் கோ அவளிடம் யாதொரு குறையும் இருந்ததாகத் தெரிய வில்லை. அவ ளுடைய அறிவும் அவள் அழகுக்கு, இணையாக இருந்தது. இவ்விரண்டி லும் மயங்கியிருந்த நான் அவளோடு வெகு நேரம் பல விஷயங்களை யும் பற்றிச் சல்லாபம்செய்து இரவில் அகாலமான பிறகே வீட்டிற்குத்திரு. ம்புவது வழக்கமாய் விட்டது. இத ஞல் என்மனைவிக்கு மருந்து கொடுக் கும் நேரம் அடிக்கடி தவறியது. நான் வைத்தியர் வீட்டில் இரு ந்தேனென்பது அவளுக்கு நன்றாய்த் தெரியும். ஆயினும் தாமதத்தின் கார ணத்தை அவள் ஒரு போதும் என் னிடம் விசாரித்ததில்லை.

நோயாளியின் அறை வர வர என க்குப் பொறுத்தற்கரிய துன்பத்தை யும் வெறுப்பையும் விளைத்தது. நான் நோயாளியை அலட்சியம் செய்ய ஆர ம்பித்தேன். அவளுக்கு மருந்து கொ டுக்கும் நேரம் தவறுவது சர்வசாதா ரணமாய் விட்டது.

சில சமயங்களில் வைத்தியர் என் னைநோக்கி "தீராதபிணியால் வருந்து வோர்க்கு மரணமே அருமருந்து அதுவே ஆநந்தகரமான விடுதலை. அவர்கள் உயிர்த்திருக்கும்வரை அவர்கட்கும் சுகமில்லை. அவர்களு

டைய நீராப்பிணி பிறருக்கும் ஒபாக் கவில்லையே" என்று பிரசங்கிப்பர்.

இத்தகைய பிரசங்கங்கள்சாதாரண வேளைகளில்பொறுக்கக்கூடியவையே. என் மனைவி யிருந்த நிலையில் இவை அதிகமாய்ப் போய்விட்டன வென்றே கருதப்படலாம். ஆனால் வைத்தியர் கள் உயிருள்ளவர் பொருட்டும் இறந் தவர் பொருட்டும் துக்கிப்பதில்லை யன்றோ!

ஒருநாள் நான் நோயாளியின் அ றைக்கு அடுத்த அறையிலிருக்கை யில் என் மனைவி திடீரென்று வைத் தியரைநோக்கி "வைத்தியரே உமக்கு என்னிடத்தில் இரக்கமில்லையா? ஏன், பயனற்ற மருந்துகளைக் கொடுத்து வருகிறீர்? இந்தப் பாழான வாழ்க்கை முழுவதுமே எனக்கு ஓர் பொல்லாப் பெரு நோயாயிருக்கிறது! இத்தகைய அரும் பிணிக்குரிய அமிர்த சஞ்சீவி, மரணமேயன்றோ?" என்று கூறினாள்.

அதற்கு வைத்தியர் 'அம்மா' நீ இப்படி நொந்து கொள்ள வேண்டாம்' என்று மறுமொழி கொடுத்தார்.

வைத்தியர் வெளியே போனதும் நான் என் மனைவியின் அறைக்குள் சென்று பக்கத்தில் உட்கார்ந்து கொ ண்டு மெதுவாய் அவள் நெற்றியைத் தடவிக் கொடுத்தேன். அப்போது அவள் "இந்த அறை உஷ்ணமாயிருக் கிறது; நீங்கள் உலாவப் போகலாமே! வழக்கமான மாலையுலா நல்ல பசிக்கு இன்றியமையாத தல்லவா?" என்றாள்.

வைத்தியர் வீட்டிற்குப் போவதே எனது மாலையுலாவாயிருந்தது. ஆரோ க்கியத்திற்கும் பசிக்கும் மிதமான தேக முயற்சி இன்றியமையாத தெ ன்று நான்தான் அவளுக்குப் போதி த்திருந்தேன். என்னுடைய கபட நாடகத்தை அவள் பிரதிதினமும் எளிதில் கண்டு கொண்டாளென்பது எனக்கு இப்போது பூர்ண நிச்சமாய் விட்டது. நான் மடையன்; அவளை வஞ்சித்து விட்டதாக மகிழ்ந்திருந் தேன். இப்படிச் சொல்லி ஜமீன்தார் மறுபடியும் மௌனமாயிருந்தார். க டைசியாகக் கொஞ்சம் நீர் பருகினர். கதை தொடர்ந்தது.

ஒருநாள் வைத்தியரதுபுதல்வி பொ ன்னம்மாள் என் மனைவியைப் பார்க்க விரும்பினாள். அதற்குக் காரணம் என க்கு நன்றாய் விளங்கவில்லை. ஆனால் அவளுடைய கருத்துக்கு நான் முற்றி லும் இணங்கவில்லை. அவளுடைய வே ண்டுகோளை மறுப்பதற்கும் வகையறி யாது விழித்தேன். ஒருநாள் மாலை யில் அவள் எங்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். அன்று என் மனைவியின் துன்பம் அசாத்தியமாயிருந்தது. பொ றுக்க முடியாத அவ்வேதனையிலும் அவள் மௌனமாய்க் கிடப்பாள். அவளுடைய தோற்றத்திலிருந்துதா ன் அவள் பட்ட கஷ்டம் ஒருவாறு எங்களுக்குத் தெரிய வந்தது.

அந்த அறை நிச்சப்தமாயிருந்தது. நான் படுக்கையில் மௌனமாய் உட் கார்ந்திருந்தேன். வழக்கமான மாலை யுலாவைப்பற்றி, அன்று என் மனைவி என்னிடம் பேசவில்லை. அவள் பேச ச்சக்தி யற்றவளாயிருந்திருக்கலாம். அல்லது நான் பக்கத்திலிருந்தது அப் பெருந்துன்பத்திற் கிடையே கொஞ் சம் ஆறுதலைக் கொடுத்திருக்கலாம். அவள் கண்களைக் கூசச் செய்யாதபடி மண்ணெண்ணெய் விளக்கு கதவண் டை வைக்கப்பட்டிருந்தது. அந்த மங் கலான வெளிச்சத்தோடு மௌனமும் கலந்திருந்தது. இடையிடையே ஒரு நிமிஷம் அல்லது இரண்டுநிமிஷங்கள்



என்மனைவிக்குஏற்பட்ட சொற்ப ஆறு தலுக்கு அறிகுறியான மூச்சே அந்த மௌனத்தைக் கடைந்தெழுந்தது. இத்தருணத்தில் பொன்னம்மாள் வ ந்து கதவண்டை நின்றாள். எதிர்ப்பக் கத்திலிருந்து வந்த ஒளி அவள் முக த்தில் விழுந்தது.

என் மனைவி திடுக்கிட்டு என் கை யைப்பற்றிக் கொண்டு, ஓ யார் அது? யார் அது? என்றாள்.

அவள் இருந்த பலவீனமான நிலை யில் கதவண்டை நின்ற அந்நிய உரு வத்தைக் கண்டு அஞ்சினாள். மறுபடி யும் அவள் 'யார் அது? யார் அது? யார் அது?' என்று பலதடவை மெல் லிய குரலில் வினவினாள்.

முதலில் நான் பதில் சொல்ல அசக் தனாயிருந்தேன். பிறகு 'எனக்குத் தெரியாது' என்றேன். ஆனால் அடு த்த நிமிஷத்தில் யாரோ ஒருவர் என் னைக் கசையாலடிப்பது போல ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. உடனே நான் அவசரமாய் 'அவள் வைத்தியர் புதல்வி' என்றேன். என் மனைவி என் பக்கமாய்த் திரும்பி உற்று நோக்கி னாள். நான் அவள் முகத்தைப் பார்க்க வில்லை. பிறகு அவள் பக்கத்தில் வந்து நின்ற புதியவளை நோக்கி ஈனஸ்வரத் தில் 'உள்ளே வாருங்கள், அம்மா' என்றாள். மறுபடியும் அவள் என்னை நோக்கி 'தயவு செய்து தீபத்தைக் கொண்டு வாருங்கள்' என்று சொன் னாள்.

பொன்னம்மை அறைக்குள் வந்து என் மனைவியோடு சிறிது உரையாட லானாள். அவள் பேசிக் கொண்டிருக் கையில் வைத்தியர் நோயாளியைப் பார்க்க வந்தார்.

வைத்திய சாலையிலிருந்து இரண்டு புட்டிகளில் அவர் ஔஷதம் கொண்டு வந்தார். அவற்றை வெளியே எடுத்து என் மனைவியை நோக்கி "இதோ பார் அம்மா! இந்த நீலப்புட்டியிலுள்ளது வெளிப்பிரயோகத்திற்கு; மற்றையது உட்கொள்ளுவதற்கு. இவற்றுள் மு ன்னையது கொடியவிஷம். இவ்விரண் டையும் மாற்றி விடாதே"—என்றார். அவர் என்னையும் எச்சரித்து விட்டு இரு புட்டிகளையும் படுக்கைக்குப் பக் கத்திலிருந்த மேசையின் மீது வைத் தார். அவர் போகும் பொழுது தன் மகளையும் உடன் அழைத்தார்.

அவள் அவரை நோக்கி 'ஐயா! நான் ஏன் தாமசிக்கக்கூடாது? இந்த அம்மாளைப் பேணுவதற்கு ஸ்திரீகள் ஒருவருமில்லையே!' என்று சொன் னாள்.

என் மனைவி ஆவேசத்தோடு படுக் கையில் திடீரென்று எழுந்து உட்கார் ந்து "வேண்டாம்வேண்டாம், அம்மா! உங்களுக்கேன் இந்த சிரமம்? என் கர்மத்தை நான் அநுபவிக்கிறேன். மேலும் எனக்கு ஒரு கிழ வேலைக்காரி இருக்கிறாள். அவள் என்னைப் பெற்ற தாய்போலக் காப்பாற்றி வருகிறாள்." என்றாள்.

வைத்தியர் தன் புத்திரியுடன் வெளியே புறப்பட்ட பொழுது என் மனைவி அவரை நோக்கி "வைத்திய ரே! இவர் இந்த அறையில் நெடு நேரம் உட்கார்ந்திருக்கிறாரே. சுத்த ஆகாயத்தைச் சுவாசிக்கும்படி அவ ரை வெளியே அழைத்துச் செல்ல மாட்டீரோ?" என்று சொன்னாள்.

வைத்தியர் என் பக்கம் திரும் பி 'ஐயா, ஆற்றங்கரையின் ஓரமாகச் சிறிது உலாவி வரலாம், வாருங்கள்' என்றார்.

மனமில்லாதது போலச் சிறிதளவு நடித்த பின் நான் அதற்கிணங்கி

னேன். போவதற்குமுன் வைத்தியர் ஔஷதமுள்ள இரு புட்டிகளையும்பற்றி என் மனைவியை மறுபடியும் ஒரு முறை எச்சரித்தார்.

அன்று சாயங்காலம் நான் வைத்தியர்வீட்டில் போசனம் முடித்துவிட்டு வெகுநேரம் கழித்து வீடுவந்து சேர்ந்தேன். பிறகு என் மனைவியின் அறைக்குப்போனேன். அவள் அதிகமாய் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்தாள். அப்பொழுது என் நெஞ்சே என்னைச் சுட ஆரம்பிக்க, 'உன் வேதனை அதிகரித்திருக்கிறதா?' என்று கேட்டேன். அவள் பதில் சொல்ல முடியாதபடி அவ்வளவு அத்யாவஸ்தையில் இருந்தபடியால் என் முகத்தைமட்டும் ஏறெடுத்துப் பார்த்தாள். அவள் அதிகக் கஷ்டத்துடன் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்ததைக் கண்டேன். உடனே நான் வைத்தியருக்கு ஆள் அனுப்பினேன்.

முதலில் வைத்தியருக்கு ஒன்றுமே புரியவில்லை. 'முடிவில் வலி அதிகரித்திருக்கிறதா? நீ அந்தத் தைலத்தை உபயோகிக்கவில்லையா?' என்றார். அதன்பிறகு அவர் மேசை மீதுள்ள நீலப்புட்டியைக் கையில் எடுத்தார். புட்டி வெறும்புட்டியாயிருந்தது. மனக்கலக்கத்தின் அறிகுறிகளோடும் அவர் என் மனைவியை நோக்கி 'நீ இந்தமருந்தைச் சாப்பிட்டு விடவில்லையே!' என்று வினவினார். அவள் தான் அதைச் சாப்பிட்டதற்கு அறிகுறியாகத் தலை யசைப்பினால் 'ஆம்' என்றுணர்த்தினாள். அவர் இரைப்பைக் குழாயை எடுத்துவர விரைவாய் ஓடினார். நான் உணர்வற்றவன் போல் படுக்கையில் சாய்ந்தேன்.

பிறகு, வியாதியுள்ள குழந்தையைப் பெற்றதாய் தேற்ற முயல்வதுபோல் என் மனைவி என் தலையைத் தன் மார்பருகே இழுத்துக்கொண்டு கையால் தடவித் தன்னுடைய எண்ணங்களை என்னிடம் உரைக்க முயன்றாள். அந்த மெல்லிய ஸ்பரிசத்தினாலேயே 'வருந்தவேண்டாம். எல்லாம் நன்மைக்காகவே! நீர் சந்தோஷமாயிருப்பீர்! நான் சந்தோஷத்துடன் மரணமடைவதும் உமக்குத் திருப்தியே கொடுக்கும்' என்று மீண்டும் மீண்டும் என்னிடம் உரைத்தாள்.

வைத்தியர் திரும்பி வந்தபோது என் மனைவியின் சகலவிதமான வேதனைகளும் அவள் பிராணனுடன் நீங்கிவிட்டன. ஜமீன்தார் மறுபடியும் கொஞ்சம் தண்ணீர் பருகிவிட்டு 'ஆ! இன்று அசாதிய உஷ்ணமாயிருக்கிறது!' என்று கூறி முற்றத்திற் போய் விரைவாய் இரண்டு மூன்று விசை திரும்பித் திரும்பி உலாவிவிட்டு மறுபடியும் அறையிற் புகுந்து தன் கதையைத் தொடர்ந்தார்.

ஏ

அவர் என்னிடம் மனப்பூர்வமாய்ச் சொல்ல விரும்பவில்லை யென்பது தெளிவாயிருந்தது. ஆனால் ஏதோ ஓர் மந்திரசக்தியினால் நான் அவரிடமிருந்து அந்தக் கதையைக் கொஞ்சம் கொஞ்சமாக மறுபடியும் கிரகித்துக் கொள்வதுபோல் தோன்றியது. அவர் ஆரம்பித்தார்.

விவாகத்தின் பிறகு நான் பொன்னம்மையிடத்தில் பிரியத்துடன் பேச முயன்றபோதெல்லாம் அவள் மந்தமாயிருந்தாள். அவள் மனத்தில் ஏதோ ஓர் ஐயம் பதிந்திருந்ததைப் போல்



தோன்றியது. இத்தருணத்தில் தான் நான் மதுபானம் செய்யப் பழகிக்கொண்டேன்.

ஒருநாள் மாலை வேளையில் பொன்னம்மையும் நானும் எங்கள் காட்டுத்தோப்பில் ஆற்றங்கரை யோரமாக உலாவிக் கொண்டிருந்தோம். அந்த நள்ளிருளில் இவ்வுலக இயற்கைக்கு மாறான ஓர்மாயாவுலகத்தின் உணர்ச்சி சிறிது கலந்திருந்தது. ஏகதேசமாய், பறவைகள் தூங்கும்போது அவற்றின் சிறகுகளின் அசைவினால் கேட்கும் ஒலிகூட அப்பொழுது கேட்கவில்லை. நாங்கள் உலாவிய பாதையின் இருபுறங்களிலும் சவுக்கமரங்களின் கிளைகள் ஏங்கி நெடுமூச்சுவிட்டுத் தவழ்ந்துவந்த காற்றில் சாய்ந்தாடிக்கொண்டிருந்தன. அலுப்புற்று மனோரமை அங்குள்ள பளிங்குப் பீடத்தில் கையையே தலையணையாக வைத்துக்கொண்டு சாய்ந்தாள். நான் அவள் பக்கத்தில் அமர்ந்தேன்.

அவ்விடத்தில் இருள் அதிகமாய்க் குவிந்திருந்தது போலத் தோன்றியது. ஆகாயத்தில் தோன்றிய பகுதியிலோ விண்மீன்கள் வைரமணிகள் போல மொய்த்து மிளிர்ந்தன. மரங்களின் அடியில் ஒலித்துக்கொண்டிருந்த சில் வண்டின் சிறுகுரல் மகா மௌனத்தின் தாழ்வரை யோரத்து, அமைந்ததோர் மெல்லிய குரற்கோவைபோ லிருந்தது. அன்று மாலை நான் சிறிது மதுபானம் செய்திருந்தேன். என்மனம் இளகிய நிலையிலிருந்தது. இருட்டில் என் கண்கள் பழகிய பின்னர் களைப்புற்றுப் படுத்திருந்த பொன்னம்மையின் தோற்றம் என் உள்ளத்தில் இன்னதென்று உரைக்க ஒண்ணாத ஓர் விருப்ப உணர்ச்சியை எழுப்பியது. அப்போது அவள் என் அன்பென்னும் பிடியுள் அகப்படாத ஓர் அமானுஷியமான சாயை எனத் தோன்றினாள்.

அத்தருணத்தில் சவுக்கை மரத்தின் சிகரங்கள் திடீரென்று தீப்பற்றியன போலத் திகழ்ந்தன.

பழிதவிர் மதியப்புத்தேள்
பாற்கடல் பருகியாண்டும்
பொழிதரும் அமிர்தமென்னப்
புதுநிலாப் பூத்த

தே, அதற்குக் காரணமாகும். படிப்படியாக அவ்வெண்ணிலா, வெண்ணிறப் பளிங்குப் பீடத்தின் மீது வெண்பட்டுடுத்திச் சயனித்திருந்த பொன்னிற மேனியளான பொன்னம்மையின் அன்றலர்ந்த செந்தாமரையினை வென்ற திருமுக மலரிலே இனிமையாக வீசியது.

என் உவகை கங்குகரையில்லாத கடல்போலப் பொங்கி எழுந்தது. நான் அவளை அணுகி அவள் கையைப் பிடித்துக்கொண்டு "அம்மா, பொன்னே! நீ நான் சொல்லுவதை நம்பாம லிருக்கலாம். ஆனால் நான் ஒருபோதும் உன் காதலை மறக்க வகையறியேன்" என்றேன்.

இச்சொற்கள் என் வாயினின்றும் வெளிப்பட்டதும் திடுக்கிட்டேன். ஏனென்றால் இதே சொற்களை நான் இதற்கு முன் வேறொரு பெண்மணியை நோக்கி விளம்பியது திடீரென்று என் ஞாபகத்தில் மின்னலென ஊடுருவிப் பாய்ந்தது.

அதே நிமிஷத்தில் சவுக்க மரங்களின் சிகரங்களின் மேல், வெண்ணிலவு பொழியும் நீல ஆகாயத்தின் கீழ், ஆற்றங்கரையின் பரந்த அகட்டினின்றும் அதன் அதிதூரமான கரையை நாடி, 'ஹா—ஹா—ஹா ஹா—ஹா—ஹா' என்ற பெருஞ் சிரிப்பின்

ஆரவாரம் அலைமேல் அலைபெரிந்து அதிதீவிரமாய்த் தலைக்குமேல் பா விச் சென்றது. அது இதயத்தைப் பிளந்தெழும் சோகந் தோய்ந்த சிரிப்பா? அல்லது வானமுகட்டைக் கிழித்தெழும் புலம்பலா? என்பதை யான் அறியேன். ஆனால் அதைக் கேட்ட மாத்திரத்திலேயே நான் நிலத்தில் தடுமாறி விழுந்து புரண்டு மூர்ச்சித்தேன்.

அ

மூர்ச்சை தெளிந்ததும் என்னுடைய அறையில் என் படுக்கைமீது படுத்திருந்ததாக உணர்ந்தேன். என் மனைவி என்னை நோக்கி 'உங்களுக்கு என்ன சம்பவித்தது?' என்று வினவினாள். நான் பயத்தால் நடுங்கிக்கொண்டு ஆகாயம் முழுவதும் எதிரொலி கொள்ளுமாறு எழுந்த 'ஹா—ஹா—ஹாஹா—ஹாஹா' என்ற சிரிப்பின் பேரரவம் கேட்கவில்லையோ உனக்கு?' என்று அவளைக் கேட்டேன். என் மனைவிக்கும் அப்பொழுது சிரிப்பு வந்துவிட்டது. அவள் 'நீங்கள் அதைச் சிரிப்பென்று, கருதினீர்கள்? நம் தலைமீது பறந்து சென்ற பட்சி ஜாலங்களின் கீதநாதமே யன்றே நான் கேட்டது? நீங்கள் இதைக் குறித்து எளிதில் பயமடைந்து விட்டீர்களே' என்று கூறி நகையாடினாள்.

பொழுது புலர்ந்தது. குறித்த அரவம் அக்காலத்தில் தென்திசை நோக்கிப் பறந்து சென்ற பறவைக் கணத்தின் ஒலியே எனத் துணிந்தேன். ஆனால் மாலை வந்ததும் மறுபடியும் ஐயமுற்றேன். நிர்நிமித்தமாய், நீல வானமுழுதும் சிரிப்பின் பேரொலி இருளைக் கீறி நிறைந்து பரவியதென என் மனோபாவத்தில் தோன்றியது. இதனால் நாளடைவில் நான் இரவில் பொன்னம்மையிடம் ஒரு வார்த்தை கூடப் பேசுவதற்குச் சக்தியற்றவனானேன்.

பிறகு என் தோப்பு—பங்களாவை விட்டுநீங்கி, பொன்னம்மையைக்கடற்கரைக்கு அழைத்துச் செல்லத் தீர்மானித்தேன். கார்த்திகை நன்மதி. அப்பொழுது வீசிய குளிர்காற்று என் பயத்தை யெல்லாம் அடித்துக்கொண்டு போய்விட்டது. சில தினங்களில் நான் மிகவும் உற்சாக முள்ளவனானேன்.

ஆநந்தமான கடற்கரை. ஆனந்தமான மாலைவேளை. ஏகாந்தமான மணற்கு குன்றுகள் கதிரவன் ஒளியில் மிளிர்ந்து கொண்டிருந்தன.

ஒரு வசதியான கட்டத்தில் நாங்கள் இருவரும் உலாவச் சென்றோம். வெகு தூரம் போய் விட்டோம். அஸ்தமான சூரியனது பொன்னிறக் கதிர்கள் கடல் நீரிலே பாய்ந்து காந்தன ... ... ... அகண்டமாய் வெகு தூரம் பரந்திருந்த அந்த வெண்மணல்வெளியின்மீது வெண்ணிலா அமுதம் பொழிய, அவ்வமுத வொளி வெள்ளம் அண்டமுகடு வரை பொங்கிப் பரவியது.

அத்தகைய இரவில் நாங்கள் இருவருமே தன்னந்தனியராய் நிர்மானுஷ்யமான ஓர் அற்புத திவ்ய உலகத்திலே சஞ்சரித்துக் கொண்டிருந்த தாகவும் அவ்வுலகம் இலக்கின்றி எல்லையிகந்து எண்திசை யெங்கும் பரவி ஆதியந்த மற்றிருந்ததாகவும் நான் உணர்ந்தேன்.

பொன்னம்மை ஓர் அழகிய செங்கிறப், போர்வையால் தன் மேனியை மூடியிருந்தாள். அந்தப் போர்வை அவளது பொன் மேனியையும் மறைத்து, கரிய கூந்தலையும் மறைத்திருந்தது. அவள் மதிமுகம் மாத்திரம் குளிர் வெண் மதியின் அமிர்த வெள்ளத்தில் தோய்ந்து விளங்கியது.

எங்கே பார்த்தாலும் மௌனம், அலையற்ற பேராழி போலப் பரவியிருந்தது. எங்களைச் சுற்றிலும் பல காததூரம் முடிவற்றுப் பரந்திருந்த வெண்ணிற வனாந்திரமே தோன்றியது.

பொன்னம்மை மெதுவாகத் தன் மலர்க்கரம் நீட்டி என் கையைப்பற்றினாள். அப்பொழுதுதான் அவள் தன்னுடைய உடலையும், உள்ளத்தையும், உயிர் வாழ்க்கையையும், தனது யௌவன சௌந்தரியத்தையும் எனக்கே அர்ப்பணம் செய்து விட்டவள் போலத் தோன்றினாள்.

ஆசை யூற்றுப் பெருக்கெடுத்த எனது உள்ளத்தில் இத்தகைய காதலரான இருவரது இதயமலர்களும் மலர்ந்தொளிர்வது, விரிந்து பரவிய இத்தகைய வானவெளியின் கீழன்றி வேறு எவ்விடத்தில் நிகழவல்லது?" என்ற ஆசங்கை உதித்தது.

பிறகு உத்தேச ஸ்தலம் யாதுமின்றி அவ்வகன்ற வெளியிலே நாங்கள் கைகோர்த்து உலாவிக் கொண்டிருந்ததாகவும் எங்கள் மார்க்கம் ஆதியந்த மற்றதாய் வெண்ணிலா வீசும் முடிவற்ற வெளியினூடு போய்க்கொண்டேயிருந்ததாகவும், நாங்கள் அந்நெறியிலே சோகமற்றுத் துயரம் அச்சமாதியவெல்லாம் தவிர்ந்து இன்பப் பெருங்கடல் திளைத்துக் கொண்டிருந்ததாகவும் நான் உணர்ந்தேன். இவ்வண்ணம் உலாவிச் சென்று முடிவில் மணற்குன்றுகள் சூழ்ந்த ஓர் பொய்கையைக் கண்ணுற்றோம். அமைதியுற்றிருந்த அப்பொய்கை—நீர்ப்பரப்பின் மத்தியப் பிரதேசத்திலே அதன் அடிப்பாகம் வரையிலும் ஊடுருவிச் சென்ற ஓர் நீண்ட மதிக்கதிர் 'மின் நகும் ஒள் வாள்' என மின்னிச்சென்றது.

அப்பொய்கைக் கரையை அடைந்தோம்; கரையிறந்த காட்சி யின்பத்தில் மயங்கி நாங்கள் சிறிது நேரம் மௌனமாய் நின்றோம். அப்பொழுது பொன்னம்மாள் என் முகத்தை ஏறெடுத்து நோக்கினாள். நான் குனிந்து அவளை முத்தமிட்டேன்.

அத்தருணத்தில்—எவ் விடத்திலிருந்தோ தெரியவில்லை! மனித சஞ்சார மற்ற அம்மணல் வெளியின் மௌனத்தைக் கடைந்தெழுந்து 'யார் அது? யார் அது? யார் அது?' என்ற வினா மும்முறை ஒலித்தது.

நான் நடுநடுங்கிப்போனேன். என் மனைவியும் பயந்துவிட்டாள். ஆனால் அடுத்த நிமிஷத்தில் அக்குரல் மனிதர் குரல் அல்லவென்றும் சில நீர் வாழ் பறவைகளின் சிலம்பலே என்றும் நாங்கள் இருவரும் தெளிந்தோம். அவை இரவில் அந்நியர் அரவங்கேட்டு வெருவி விழித்துக் கூவியிருக்க வேண்டும்.

பயந்தீர்ந்ததும் விரைவாக நாங்கள் தங்கியிருந்த கடற்கரை—பங்களாவுக்குத் திரும்பினோம். உடனே படுத்துக் கொண்டோம். படுத்ததும் பொன்னம்மாள் தூங்கிவிட்டாள்.

அந்த நடுநிசியிலே யாரோ ஓர் உருவம் படுக்கையினருகே நின்றுகொண்டு, நீண்டுமெலிந்த விரலொன்றால் துயிலமர்ந்த பொன்னம்மையைச் சுட்டிக்காட்டி மெல்லியகுரலில் மீண்டும் மீண்டும் 'யார் அது? யார் அது? யார் அது?' என்று பலமுறை வினவியதாக எனக்குத் தோன்றியது.

நான் அவசரமாய் எழுந்து தீபத்தை ஏற்றினேன். கொசுவலை காற்றில் அசைந்தாடியது. அதற்கிசைய என் நெஞ்சமும் ஊசலாட ஆரம்பித்தது. இரத்தக் குழாய்களில் என் "ஜீவநதி' (இரத்தம்) ஓட்டமின்றி உறைந்துவிட்டதெனத் தோன்றியது. மேலெல்லாம் வியர்வை நீர் அரும்பித் துளித்தது. இவற்றிற் கெல்லாம் காரணம் யாது? 'ஹாஹா—ஹாஹா ஹா ஹா—ஹா ஹா' என்ற பெருஞ் சிரிப்பின் பேராவம் அந்த நள்ளிருளில் எதிரொலி எழுப்பி இசைத்ததேயாம்.

அவ்வரவம் நதிகடந்து மறுகரையிலுள்ள மணற்காட்டையுங் கடந்து, பின்னர் துயிலமர்ந்த நாடெல்லாங் கடந்து, நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் பாவி இப்பிரபஞ்சம் முழுவதும் கடந்து, எண்திசை நிறைந்து எண்ணவொண்ணாத வேறு உலகங்களிலும் பாவிக்கொண் டிருந்ததாகத் தோன்றியது.

அது தூரத்தே எல்லையில்லாத வெளியில் செல்லச்செல்ல அதன் ஆரவாரமும் குறைந்து முடிவில் ஊசிமுனைபோல நுண்ணியதாயிற்று. வரவரத் தேய்ந்து நுண்ணியதாய்விடினும் அகத்தும் புறத்தும் ஊடுருவி ஒலித்த அத்தகைய குரலை என் ஆயுள் முழுவதும் யான் கேட்டதேயில்லை. அத்தகைய விசித்திரமான குரல் ஒன்றுண்டென்று என் கற்பனா சக்தியிலும் நான் கணித்திருந்ததில்லை. என் உள்ளமானது எல்லையற் றுயர்ந்த ஆகாயவெளி போலவும் குறித்த சப்தம் அலையலையாய் எவ்வளவு தூரம் பாவிச்சென்ற போதிலும் சரி, அது என் சித்த—ஆகாசங் கடந்து வெளிச் செல்ல வல்லதன்றெனவும் நான் ஊகித்தேன்.

இவ்வாறு சிந்தித்துக் கொண்டே நான் தீபத்தை அணைத்துவிடலாமென்று தீர்மானித்தேன். ஏனெனில் ஆறித்த சிந்தனை பொறுத்தற்கரியதாய் விட்டது. தீபத்தை அணைத்துவிட்டாலன்றி நான் தூங்க முடியாதென்று கருதினேன். ஆனால் விளக்கை அணைத்ததும்—ஐயோ! வந்துவிட்டது மோசம். மீண்டும் கொசுவலைக்கு அருகாமையில் இருளுடன் கலந்து 'ஓ யார் அது? யார் அது? யார் அது?' என்ற மெல்லரவம் ஒலித்தது.

அப்பேயரவத்திற் கிசைய என் பாழான நெஞ்சமும் பதைத்து நர்த்தனம் புரியத் தொடங்கியது. திரும்பத்திரும்ப என் உள்ளத்தில் 'ஓ யார் அது?—ஓ யார் அது?—ஓ யார் அது?' என்ற வினாக்கள் முடிவின்றி எழுந்த வண்ணமாயிருந்தன. அப்பொழுது, நிச்சப்தமான அந்த நள்ளிரவிலே மேசையின் மீதிருந்த என் கடிகாரமும் சொற்றிறம் பெற்றதுபோலத் தன் மணிக்கரத்தால் பொன்னம்மையைச்சுட்டிக்காட்டி 'ஓ யார் அது?—யார் அது?—யார் அது?' என்று பிரசங்கித்தது.

இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில் ஜமீன்தார் தேவராசேந்திரதுரையின் முகம் சவம்போல வெளுத்துப் போய்விட்டது. அவர் குரல் தொண்டையில் சிக்கிக்கொண்டதெனத் தோன்றியது. அவர் பெருமூச்செறிந்து கொண்டிருந்தார். நான் அவருடைய புயத்தை மெதுவாகத் தொட்டு 'தயவு செய்து இன்னும் கொஞ்சம் தண்ணீர் பருகும்' என்றேன். அதே நிமிஷத்தில் தீபம் மேலோங்கி எரிந்து அணைந்துபோயிற்று. வெளியில் அருணோதயத்தின் மங்கலான வெளிச்சத்தை நான் பார்த்தேன். ஒரு காகம் 'கா—கா' என்று கரைந்தது. வீதியில் நாட்டு வண்டியின் 'கிரீங்—கிரீங்' என்ற சத்தம் கேட்டது.



பிறகு ஜமீன்தாரின் முகக்குறி முற்றிலும் மாறிவிட்டது. அச்சத்தின் அறிகுறி சிறிதும் அங்கே காணப்படவில்லை. அறியாமை—மயமான அச்ச வெறியாலும் ஆகிருளின் மாயத்தாலும் தாம் அவ்வாறு பிதற்றியதாக அவர் உணர்ந்து வெள்கி என்மேற் சிறிது சீற்றமும் கொண்டார். விடைபெற்றுக்கொள்ளாமலே அவர் ஆசனத்தினின்றும் குதித்தெழுந்து பாய்ந்தோடி வீட்டினின்றும் அகன்றார்.

மறுநாளிரவிலும் நடுநிசியிலே 'வைத்தியரே! வைத்தியரே!' என்ற விளியரவம் என் நித்திரையைக் கலைத்து என்னை விழிக்கச் செய்தது.

முற்றிற்று.

## சிறுவர் உலகம்.

### ஏழை மரகதம்.

பி. ஸ்ரீ.

க

"அண்ணா! அண்ணா! அந்தக் கரும் பூனையைப் பிடி. பார், அது ஓடுகிறது. ஐயோ! சீக்கிரம். சீக்கிரம். அது ஒரு கிளியைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. அதன் வாயைப் பார். அவசரமாய்ப் பூனையைப் பிடி" என்று கனகம்மாள் பதறிப் பேசுனாள். சங்கரன் தன் விளையாட்டை உடனே நிறுத்திவிட்டு, பூனையின் பின் ஓடினான். பூனையைப் பிடித்து அதன் கொடிய வாயிலிருந்து கிளிக்குஞ்சைத் தப்புவித்தான். அந்த ஏழைப் பிராணி பயத்தால் நடுங்கிப் போய் விட்டது. அது கொஞ்ச நேரம் செத்தது போல, சங்கரன் கையில் கிடந்தது. அதைத் தன் கையில் கொடுக்கும்படி கனகம்மாள் விரும்பினாள்.

"ஐயையோ! செத்துப் போய் விட்டது போலிருக்கிறதே! என்று விசனித்துக் கொண்டே, சங்கரன் கிளியைத் தங்கையிடம் கொடுத்தான்.

பிறகு அவன் பூனையை அடிக்க வேண்டுமென்று ஓடினான். ஆனால் அந்தத் திருட்டுப் பூனை எங்கேயோ பதுங்கிக் கொண்டது. "இன்று பூனைக்கு இரையில்லாமல் செய்து விட்டோம். ஆகையால் அது வேறு இரை தேடப் போயிருக்க வேணும்" என்று நினைத்துச் சங்கரன் திரும்பினான்.

கனகம்மாள்— (சந்தோஷமாய்) சங்கு! சங்கு! ஓடிவா, கிளிப்பிள்ளை சாகவில்லை. இது எவ்வளவு அழகாயிருக்கிறது பார். ஐயோ! பாவம்! இந்தக் குஞ்சுக்கு எவ்வளவு பலமாகக் காயம்பட்டிருக்கிறது. நாம் என்ன செய்யலாம்?

சங்கரன்—கனகம்! உன்னைப்போலவே இந்தக் கிளியும் அழகாயிருக்கிறது. அது இருக்கட்டும். நான் சொல்வதைக் கேள். மாமா நமக்

குத் தந்த கூட்டில் கிளியை அடைத்து வைப்போம். அந்த வர்ணக் கூடுதான் இந்தப் பச்சைக் கிளிக்கு ஏற்ற நேர்த்தியான கூடு.

பிறகு சங்கு வீடெங்கும் தேடி ஒரு கூட்டை எடுத்துக் கொண்டு விரைவாய் வந்தான். கனகம்மாள் கிளிக்குஞ்சைத் தன் சின்னஞ் சிறு தளிர்க் கையில் ஏந்தி ஆசையோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

சங்கு கூட்டில் படிந்திருந்த புழுதியையும் அழுக்கையும் துடைத்து அதில் மணலும் நீரும் தானியமும் வைத்தான். கிளிப்பிள்ளை காயப்பட்டு பலவீனமாயிருந்ததால் கூட்டின் அடிப்பக்கத்தில் கொஞ்சம் இலவம் பஞ்சும் விரித்து வைத்தான். கடைசியாகக் கிளியைக் கூட்டில் விட்டு அந்தக் குழந்தைகள் கூட்டைச் சுற்றி வந்து,

சின்னஞ் சிறுகிளியே!
சிங்காரப்பைங் கிளியே!
உன்கவலை தீர்க்தே நீ!
ஓடி வருவாயே.
பச்சைப் பசுங்கிளியே!
பால் அமுதம் ஊட்டுவோம்.
அச்சந் தவிர்ந்தே நீ
ஆடி வருவாயே.

என்று பாடினார்கள். இரண்டொரு நாளிலே கிளிப்பிள்ளை சுகம் அடைந்தது. குழந்தைகள் அதைப் பச்சமாய் வளர்த்தார்கள்.

அந்தக் குழந்தைகளுக்கு ஒரு குட்டித் தங்கை இருந்து இறந்து போனாள். அவளுக்கு மரகதம் என்று பெயர். அவளுடைய சாவு பொன்னம்மாளுக்கும் சங்கரனுக்கும் பொறுக்க முடியாத துக்கத்தை உண்டாக்கியது. மூவராயிருந்த நாம் இருவராய் விட்டோமே என்று எண்ணி எண்ணி ஏக்கம் கொண்டார்கள். மாண்டுபோன மரகதம் திரும்பவும் பிறந்திருப்பாள் என்றும் அவள் மீண்டும் தங்களிடம் வரக்கூடுமென்றும் சங்கு சொல்லிக் கனகம்மாளைச் சமாதானப்படுத்துவதுண்டு. கனகம்மாளும் அவன் சொல்லை நம்பினாள்.

இப்போது அவர்கள் தாங்கள் வளர்த்து வந்த கிளியையே "மரகதம்" என்று அழைக்க ஆரம்பித்தனர். இறந்து போன தங்கையே பச்சைக் கிளியாகப் பிறந்து தங்களிடம் வந்திருக்கிறாள் என்று அவர்கள் நாளடைவில் நம்பினார்கள். தாங்கள் இருவரும் மறுபடியும் "மரகதத்தோடு" மூவராய் விட்டதைக் குறித்து மனமகிழ்ச்சி அடைந்தார்கள்.

அதிகாலையில் எழுந்திருந்து குழந்தைகள் மரகதத்தைப் பார்க்க வருவார்கள். காலைவேளையில் சூரியோதய சமயத்திலே சங்கு கிளிக்கூட்டை வீட்டுக்கு வெளியே தொங்கவிடுவான். கனகம்மாள் கிண்ணத்தில் கிளிக்கு ஆகாரம் கொண்டு வருவாள். தூக்கத்திலுங்கூட அவள் "மரகதம் மரகதம்" என்றும், "மரகதம் இரை தா என்று கூப்பிடுகிறதே!" என்றும் சிலவேளை சொல்லுவதுண்டு.

நாள் ஒருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் மரகதம் வளர்ந்து வந்தது. அது நன்றாய்ப் பழகிவிட்டது. பயம் தீர்த்துத் தன்னை ரட்சித்த குழந்தைகளைத் தனது உண்மையான பக்ஷிக்கள் என்று தெரிந்து கொண்டது போல மரகதம் கூட்டை விட்டு ஓடி வந்து அவர்கள் கையிலும் தோளிலும் தலையிலும் ஏறிக்கொள்ளும்.



அவர்கள் மனமுருகும்படி, அவர்கள் சொன்னதை இனிமையாகச் சொல்லும். அதன்பாட்டையும்பேச்சையும் கேட்டு அவர்கள் ஆனந்தத்தால் ஆடுவார்கள். அப்பால் கனகம் மரகதத்தை முத்தம் இட்டுக்கொண்டு "சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை" என்று அந்தப் பச்சைக் கிளி போலவே, கொஞ்சிக் கொஞ்சிப் பேசிப் பரிகாசம் செய்வாள். "பேச்சுப் பேச்சு என்னும் பெரும்பூனை வந்தக்கால்—கீச்சுக் கீச்சு என்னும் கிளி" என்று சங்கு தனக்கு உபாத்தியாயர் சொல்லிக் கொடுத்திருந்த பாட்டை மரகதத்தினிடம் ஒப்பிப்பான்.

கனகம்மாள் சிலவேளை தன் கையாலேயே கிளிக்கு ஆகாரம் ஊட்டுவாள். சில வேளை பொற் கிண்ணத்தில் பால் அன்னம் கொண்டுவந்து கிளி முன் வைப்பாள். அப்போது சங்கு "கனகம்! நீ ஒரு பஞ்சவர்ணக் கிளியாயிருக்க விரும்புகிறாயா? இருந்தால் நான் உன்னையும் கூட்டில் அடைத்து வைப்பேன். சங்கு! இரை தா என்று கூப்பிடுவாய். பாடத்தில் சொல்லியிருக்கிறபடி பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை—நாலும் கலந்து உனக்கு நான் தருவேன்" என்று குறும்புத்தனமாய்ச் சொல்லிச் சிரிப்பான். இவர்கள் கிளிப்பிள்ளையோடு விளையாடி விட்டு ஒழுங்காய்ப் பள்ளிக்கூடம் போவார்கள். கனகம்மாள் பள்ளிக்கூடத்துக்குப் போகையில் "சின்னச் சின்னக் கிளியே, சிங்காரக் கிளியே" என்று மரகதத்தை அழைத்து அதனிடம் தான் போய் வருவதாகச் சொல்லுவாள். மரகதமும் கனகம் வரும்போதெல்லாம் "சின்னச் சின்னக் கிளியே, சிங்காரக் கிளியே" என்றுகண்டோர் மனம் கனிந்திடக் கூவும். உடனே கனகமும் உற்சாகமாய் மரகதத்தோடு "உன்னை நான் ஒருபோதும் பிரிவதில்லை. பிரிந்துஉயிரோடிருக்க மாட்டேன்" என்று உரையாடுவாள்.

உ

சங்குவும் பொன்னம்மாளும் தாயில்லாக் குழந்தைகள். தாயார் அவர்களுடைய சிறு தங்கையாயிருந்த மரகதத்தைப் பெற்றவுடனே இறந்து போனாள். அவர்கள் தகப்பனார் பெரியசமுசாரியாயிருந்து கெட்டுப்போனவர்.

அவர்கள் பாட்டிதான், வீட்டுக் காரியம் பார்த்துவந்தாள். அவளுக்கு நூறுவயதாக, அரை வியாழ வட்டந்தான் இருக்கிறதென்று அவர்கள் தகப்பனார் சொல்லுவதுண்டு. பாட்டி வயதானவளாயிருந்தும் சிறுமிகளைப் போல் சுறுசுறுப்புள்ளவளாயிருந்தாள். அவளை அந்தக் கிராமவாசிகள் அம்மையார் என்று அழைப்பதுண்டு.

விடுமுறைநாள் ஒன்றில் சங்கரனும் பொன்னம்மாளும் தங்கள் தகப்பனாரோடு அடுத்த ஊரிலுள்ள மாமாவைப் பார்க்கப் புறப்பட்டார்கள். அவர்களுக்குக் கிளியை விட்டுப்பிரிய மனமில்லை. கிளியைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ளும்படி அவர்கள் பல தடவை பாட்டியை வேண்டினார்கள்.

அன்று அந்தப் பாட்டியம்மாள், வேளையில் கிளிக்கு உணவு கொடுத்தாள். பிறகு மரகதம் பழகிய கிளியானதால் அது வீட்டில் பறந்துவிளையாடிக் கொண்டிருக்கும்படி, கூட்டைத் திறந்து வைத்திருந்தாள்.

அந்த அம்மையார் 'இவள் இரண்டாவது ஒள்வையாரோ' என்று

யாரும்சந்தேகிக்கும்படி, ஆண்டிலும் அநுபவ அறிவிலும் முதிர்ந்தவளா யிருந்தாள். அவளுக்குத் தெரிந்திருந்த பாடல்கள், பழமொழிகள் எல்லாம், 'இந்த நரைத்த சிறு மண்டைக்குள் இவ்வளவு விஷயம் எப்படி அடங்கிக் கிடக்கிறது!' என்று அந்த ஊராரைப் பிரமிக்கச் செய்தது. மேலும் அவள், வைத்தியத்தில் தேர்ந்தவள் என்று நாட்டுப்புற மெல்லாம் பெயர் பெற்றிருந்தாள். ஆகையால் அவள் அன்று வீட்டில் வேறொருவரும் இல்லாததால் வேலையைச் சீக்கிரம் முடித்துக்கொண்டு அடுத்த தெருவிலே ஒருநோயாளியைப் பார்க்கப்போயிருந்தாள். அவள் கிளியைக் கூட்டில் திரும்பவும் அடைக்க மறந்துபோனாள். ஆனால் ஜன்னல் கதவு திறந்திருந்தது. திரும்பி வந்ததும் பாட்டி வீட்டுவேலை பார்க்க ஆரம்பித்தாள். கிளியைப்பற்றிய ஞாபகமே அவளுக்கில்லை.

அன்றிரவு சங்கரனும் அவன் தங்கையும் அவர்கள் தகப்பனும் வந்தார்கள். வந்தவுடனே குழந்தைகள் கிளியின் யோகக்ஷேமத்தையே விசாரித்தார்கள். அப்பொழுதுதான் பாட்டிக்குக் கிளியின் ஞாபகம் வந்தது. அவள் கிளியைத்தேட ஆரம்பித்தாள். குழந்தைகள் அங்கும் இங்கும் ஓடினார்கள்; 'மரகதம், மரகதம்!' என்று கூவினார்கள்; 'சீட்டி' அடித்தார்கள். அவர்கள் தகப்பனும் எங்கும் தேடினார். கிளியைக் காணவில்லை.

மரகதம் மீண்டும் வரக்கூடுமென்று நம்பி இராத்திரி யெல்லாம் அவர்கள் கூட்டை வீட்டுக்குவெளியே திறந்து வைத்திருந்தார்கள். குழந்தைகளுக்கு அன்று இராத்திரி அநேகமாகச் சிவராத்திரியாகவே யிருந்தது.

மறுநாள் காலையில் கூடு வெறும் கூடாகவே யிருந்தது. "மரகதம் சாப்பிடாமல் நாங்கள் மாத்திரம் சாப்பிடலாமா?" என்று குழந்தைகள் அழுதார்கள்.

அன்று சங்கரனும் கனகம்மாளும் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டார்கள். கொஞ்ச தூரம் போனதும் மரகதம் பாதை யோரத்தில் கிடந்ததைப்பார்த்தார்கள். இறந்துபோன கிளியைக் கனகம்மாள் கையில் எடுத்துக் கொண்டாள். அவர்கள் துக்கத்தை அளவிட யாரால்ஆகும்? அப்புறம் அடியெடுத்து வைக்க அவர்களால் முடியவில்லை. அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் அவர்கள் வீட்டுக்குத் திரும்பினார்கள்.

யாரோ துஷ்டப் பிள்ளைகள் ஏழை மரகதத்தைக் கல் எறிந்து கொன்றிருக்க வேண்டுமென்று தகப்பனார் சொன்னார். மரகதமே மாண்டாயோ!" என்று கனகம்மாள் ஏங்கினாள். சங்குவும் வாய்விட்டு அலறினான். குழந்தைகள் அழுவதைக் கண்டு சகியாமல் பாட்டியும் 'மரகதத்துக்கு நானல்லவா யமனாயிருந்தேன்' என்று நொந்துகொண்டாள்.

பிறகு குழந்தைகள் தங்கள் தோட்டத்தில் மரகதத்தைப் புதைத்தார்கள். புதைத்தஇடத்திலே அவர்கள் ஒரு ரோஜாச் செடி நட்டார்கள். அதன் அருகேயிருந்து கனகம்மாள் புலம்பினாள்.

அன்பே! மரகதமே! ஐயையோ மாண்டா [யோ?

என்னைப் பிரியமனம் எப்படியோ [நீபெற்றாய்?

ஆசைமரகதமே! ஐயோஎன் கண்மணியே! பேசாயோ வாய்திறந்து பேச்சொன்றே [யானாலும்?

ஏழை மரகதமே! ஏன்பிரிந்தாய் எங்களை நீ, கோழை எமன் வஞ்சகமாய்க் கொண்டுபோ [னைப் போனானோ?

சின்னஞ் சிறுகிளியே! சிங்காரப் பைங் [கிளியே!

உன்னைப் பிரிந்தேநான் ஊண்உறக்கம் [கொள்வேனோ?

இப்படியே கனகம்மாள் அழுது புலம்பி வந்தாள். நாளடைவில் ரோஜாவும் நன்றாய் முளைத்தது. ஒரு நாள் அந்தச் செடியில், அழகிய நறுமலர்கள் மந்தமாய் வீசும் காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன. அப்போது சங்கு கனகம்மாளைப் பார்த்து "கனகம்! நாம் முன்போலவே சூவாய்விட்டோம். மரகதமே மறுபடியும்அழகிய ரோஜாவாய்ப்பிறந்து வளர்ந்து வருகிறாள்" என்றான்.

(முற்றிற்று.)



# வசிய நித்திரையின் சுருக்க வரலாறு.

(அறிதுயில்)

—(o)—

(அருங்கலை விநோதன்.)

'ஹிப்னடிசம்' 'மெஸ்மெரிசம்' என்ற புதுமைப் பெயர்களால் பொலியும் கொள்கைகள் நமது நாட்டிலே தான் முதல்முதல் தோன்றித் திகழ்ந்தன—என ஆராய்ச்சியாளர் அறிவிக்கின்றார். பண்டைநாளில் நமது முன்னோர் இக்கொள்கைகளை 'மந்திர வித்தை' 'யோக வித்தை' என்ற பெயர்களால் குறித்து வந்தார்கள். இந்துக்களைப்போலவே, பழைய உலகில் பாரசீகர்களும் எகிப்து நாட்டாரும் யூதர்களும் இத்தகைய உளநூலுண்மைகளை ஒருவாறு உணர்ந்திருந்தார்கள். அதர்வ வேதம் ஒருவகை மந்திர நூலேயாகும். பண்டைக்கால ஆரியர்—திராவிடர்களது உளநூற் கொள்கைகள், நம்பிக்கைகள் பலவும் நான்காம் வேதமாகிய அதர்வ வேதத்திலே தொகுக்கப் பெற்றுள்ளன.

மேலை நாடுகளில்-மெஸ்மர் என்பார் 'மெஸ்மரிசம்' என்ற பெயரால் தமது உளநூல்-சித்தாந்தத்தை வெளியிடுவாராயினர். மெஸ்மருக்குப் பல சீடர்கள் சேர்ந்தார்கள். மெஸ்மரது கொள்கைகளெல்லாம் தற்கால ஆராய்ச்சி யாளரால் ஆதரிக்கப்படவில்லை. ஆனால் மெஸ்மர் நல்ல மனிதர்; ஏழை மக்கள்பால் இரக்கமுள்ளவரா யிருந்தார். மெஸ்மருக்குப் பின் அவரது சீடரும் பிறரும் உளநூலாராய்ச்சியை ஒருவாறு தொடர்ந்து செய்து வந்தார்கள்.

கஅசக-ம் ஆண்டில் ஆங்கில வைத்தியரான ப்ரெயிட் என்பார் 'ஹிப்னடிச' நித்திரையைப்பற்றி ஆராய்ந்து வந்தார். இவ்வைத்தியர் 'ஹிப்னடிச' முறைகளால், மருந்திலா—வைத்தியம் செய்து நோய்களைக் குணப்படுத்தினார். இம்முறைகளால் இவர் நோயாளிக்கு வேதனையின்றி இரணசிகிச்சையும் செய்துபார்த்தார். அப்பால் இரண வைத்தியத்திற்கு 'ஹிப்னடிசம்' ஓர் சாதனமாகப் பலராலும் உபயோகிக்கப் பெற்று வந்தது.

## சீமையில் வசிய நித்திரையைப்பற்றிய ஆராய்ச்சி.

சீமையிலே புத்தப் புதிய முறையில் ஓர் உளநூல் ஆராய்ச்சிக் கழக

முண்டு. இக்கழகத்தார் 'ஹிப்னடிச'த்தைக் குறித்து நன்கு பரிசீலனை செய்து வருகின்றனர். இக்கழகத்தின் உறுப்பினருள் பேர்பெற்ற விஞ்ஞான சாஸ்திரிகளுண்டு; கௌரவம் வாய்ந்த பெருமக்களுண்டு. ௧௮௯௦-ல் கூடிய ஆங்கில வைத்தியர் கூட்டமொன்றில், 'ஹிப்னடிச'த்தின் உண்மை விவரங்களைப் பரிசீலனை செய்து அறிக்கை வெளியிட வேண்டுமென்று 'வைத்தியர் கமிட்டி' (கழகம்) ஒன்று நியமிக்கப் பெற்றது. இக் 'கமிட்டி'யார் இரண்டு வருட ஆராய்ச்சியின் பயனாகத் தயாரித்த தங்களது அறிக்கையினை வெளியிட்டார்கள். இவ் அறிக்கை, 'ஹிப்னடிச' உண்மையை பகிரங்கமாக ஒப்புக் கொள்வதோடு, பல நோய்களுக்கும் 'ஹிப்னடிசம்' சிறந்த உபயோகமுள்ள மருந்தாகுமென்று புகழ்ந்து கூறுகின்றது.

### புதிய உலகில் 'ஹிப்னடிசம்'

புதிய உலகமாகிய அமெரிக்காவிலும் புதுக்கலையாகிய 'ஹிப்னடிசம்' நன்கு பரவலாயிற்று. அமெரிக்காவிலுள்ள பல கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் வசிய நித்திரையைப் பற்றிய ஆராய்ச்சி நடைபெற்று வருகின்றது. அமெரிக்காவிலும் சீமையிலிருப்பது போல, இத்தகைய பரிசீலனைகள் செய்து வரும் ஓர் சாத்திர ஆராய்ச்சிக் கழகம் ஒன்றுண்டு. இப்புதுக்கலை விஷயமாக மருத்துவ மணிகளான நல்லறிஞர் பலரும், நாளடைவில் ஆராய்ச்சி செய்து நோய்களை நிவர்த்தி செய்வதற்குரிய பல புதிய உண்மைகளைக் காண்பாராயினர். ஹிப்னடிசம், ஓரிய சக்தியென்றும் இதனை நல்வழிப்படுத்துவதால் நன்மையே விளையுமென்றும் இப்போது பல ஆராய்ச்சியாளரும் அங்கீகரிக்கின்றனர்.

### பாரிஸ் மாநகரில் கூடிய காங்கிரஸ்.

௧௮௮௯—௧௯௦௦ ஆண்டுகளிலே, நாகரிக உலகின் திலகமாகிய பாரிஸ் மாநகரில் இரண்டு 'காங்கிரஸ்' கூட்டங்கள் கூடின. மேலை நாட்டுப் பிரதிநிதிகள் அனைவரும் விஜயஞ் செய்திருந்தார்கள். ஹிப்னடிச சாஸ்திரத்தைப் பற்றிய பல முக்கியமான விஷயங்களும் விவாதத்திற்கு வந்தன. இன்னும் பல காங்கிரஸ் கூட்டங்களின் வாயிலாக, ஹிப்னடிச விவகாரங்கள் ஒருவாறு தெளிவுபெறலாயின.

### பத்திரிகைகளும் வசிய நித்திரையும்.

ஹிப்னடிச ஆராய்ச்சியறிவை வளர்ப்பதற்குக் கழகங்களோடு, பல பத்திரிகைகளும் போட்டி போடுகின்றன. ஜர்மனியிலும் பிரான்சிலும் இத்தாலியிலும் இத்தகைய பத்திரிகைகள் நல்ல வேலை செய்து வருகின்றன. அமெரிக்காவிலும் இத்தகைய பத்திரிகைகள் பலவுண்டு. பத்திரிகைகள் செய்து வரும் பிரசாரத்திற்கு, இத்தகைய ஆராய்ச்சிகளைப் பற்றி எங்கணும் சொற்பொழிவு செய்து வரும் அறிஞர்களும் அருந்துணை புரிந்து வருகிறார்கள். மேலும் ஜன ரம்யமான எளிய நடையில் எழுதப்பெற்றுள்ள புத்தகங்களும் ஹிப்னடிச அறிவை மக்களிடையே பரப்பி வருகின்றன. இலக்கிய உலகிலும் 'ஹிப்னடிச' முறைகளைப் போற்றுவோர் உண்டு. சில நூலாசிரியர்கள் 'ஹிப்னடிச' உண்மைகள் சிலவற்றை அடிப்படையாகக் கொண்டு அழகிய கதைகள் கட்டியுள்ளார். நாடக ஆசிரியர்களும் 'ஹிப்னடிச'த்தைப் போன் போல் போற்றியுள்ளார். அருங்கலைவாணர்களும் தத்தம் கலை வளர்ச்சிக்குத் துணையாக 'ஹிப்னடிச'த்தைக் கைக்கொண்டுள்ளார். வாழ்க்கையின் பல துறைகளிலும் 'ஹிப்னடிசம்' நன்மைவிளைத்தல் கூடுமென்று இப்போது அறிவாளர் பலரும் கருதுகின்றனர். இன்று புதிய ஞானக் கலைகளில் 'ஹிப்னடிச'மும் ஒன்றாக மதிக்கப்படுகின்றது. இத்தகைய புதிய ஆராய்ச்சித் துறைகளில் தமிழ் நாடும் தனக்குரிய கௌரவ ஸ்தானத்தை வகிக்கப் பின்வாங்காது என்பது எமது நம்பிக்கை.



---

## *காட்டினிலே.

சா. நா. சா. அருணாசலச் செட்டியார்.

கண்ணன் இயற்கைத் தெய்வமெனச் சில ஆராய்ச்சியாளர் துணிகின்றனர்! அவர்கட்கு அவன் சாரற் காலத்து இயற்கையின்புதுமையோர் உருவாகத் திரண்டதெனக் காட்சியளிக்கிறான்! அவர்கள் பரம்பரையையும் பண்டுதொட்டு இன்றுகாறுமுள்ள இந்த சமயானுபவங்களையும் புறக்கணித்து விடுகிறார்கள். கண்ணன் வாழ்க்கையின் ஓர் அமிசத்தை அதிகமாக வலியுறுத்துவதே அவர்தம் இம்முடிபுக்குக் காரணமாகும். அவனது வாழ்க்கையில் இயற்கை ஓர் முக்கிய அமிசமேயாகும். கண்ணன் இயற்கை-தேவியையும் அவனது அன்பர்களையும் நேசிக்கிறான். அவன் பசுவையும் பசு மேய்ப்போரையும் நேசிப்பது இதையே காட்டுகிறது. புராணங்களில் அவன் பன்முறை கோபாலன்—பசுக் காப்போன்—இடையன் என்று அழைக்கப்படுகிறான். அவனது செய்கைகளிற் பல காட்டினோடு தொடர்புடையனவாகும். அவன் ஓர் இளைஞனாகக் குழலிசைத்து நண்பர்களைக் காட்டுக்கு அழைக்கிறான். பிருந்தாவனக் காட்டில் இராதை அவனை அடிக்கடி சந்திக்கிறாள். இயேசுநாதர் மனத்தை ஒருமைப்படுத்துதற்கும் யோகமியற்றுதற்கும் அடிக்கடி மலைக்குச் சென்றது போன்று அவன் காட்டிற்கு ஏகுகிறான். திரௌபதியுடன் நாடு கடத்தப்பட்டு பாண்டவர்கள் காட்டினில் வதியுங்கால் அவன் அவர்களைச் சந்திக்கிறான். குருக்ஷேத்திரத்தில் இந்தியாவைக் காப்பாற்றும் வழியை அவன் காட்டினில் எண்ணமிடுகிறான். காட்டினிலேயே அவன் மறைகிறான்.

காட்டினில் நிகழ்ந்த கண்ணனது இக்கடைசி லீலையானது மிகுதியும் உணர்ச்சியளிக்குந் தன்மையதாகும். துவாரகையில் ஒரு கொடுநோய் பரவுகிறது. மக்கள் உலப்பிலாத் துன்பமெய்துகின்றனர். கண்ணன் அவரிடத்து அன்பு பாராட்டுகிறான். ஆற்றங்கரைக்குச் சென்று கடவுளை வழுத்திக் குடியை யொழிப்பின் இந்நோய் மறையும் என அவன் அவர்க்கு அறிவுறுத்துகிறான். அவர் அவ்வாறு செய்வதாக உறுதிகூறுகிறார். சின்னாட்கள் துவாரகை களிப்பின்கை

* ஆசிரியர் வாஸ்வானி எழுதியதன் மொழிபெயர்ப்பு.

புனைந்தியற்றுக் கவின்பெரு வனப்புடை யோகிய மௌனத்திகழ்கிறது. மக்கள் கண்ணனை வாழ்த்திக் களிப்புடன் வாழ்கின்றனர். நோய் மறைகிறது. பிறகு அவர் கண்ணனுக்களித்த வாக்குறுதிகளை மறக்கின்றனர். மறுபடியும் குடிக்கவாரம்பிக்கின்றனர். குழப்பம் அடைகிறனர். துவாரகை துன்பத்தால் உலைகிறது. தாதைகள் மக்களைக் கொல்கின்றனர். மக்கள் தாதைகளைக் கோறல் புரிகின்றனர். கண்ணன் மகன், கலகக் கூட்டத்தாரால் கொல்லப்படுகிறான். கலகம் தொடர்கிறது. மக்கள் இன்னும் வழியலா வழிமேலேயே சென்றுகொண்டிருக்கிறனர். கண்ணன் சோகமுறுகிறான். அவன் காட்டிற்கு ஏகுகின்றான்! ஓர் மரத்தடியில் உட்காருகிறான். அவன் ஓர் இடையனின் எளிய உடையே தரித்துள்ளான். புத்தர்பிரான் சிலையில் காட்டப்பட்டிருப்பதுபோன்று அவன் ஸ்வஸ்த முறையிலே யோகமியற்றுகிறான். அவ்வமயம் ஜாராஎன்னுமோர் வேடன் வனத்திற்புகுகிறான். கண்ணனது காலினை அவன் ஓர் மானெனமருளுகிறான். அவனது காலில் ஓர் அம்பு தொடுக்கின்றான். ஆண்டவன் உலகத்தொடு ஒன்றியிருக்கின்றான். அது ஓர் உளமுருக்குந் தன்மை வாய்ந்த கதையாகும். கண்ணனது ஆராய்ச்சியாளருக்கு அது உணர்ச்சியளிக்கவில்லை. அவர்களில் ஒருவராய டில்டால் பாதிரியார் "கிறித்துவும் வேறு ஆச்சாரியர்களும்" (Christ and other Masters) என்னும் நூலில் கண்ணன் அவ்வேடனை ஓர் விமானத்தில் உம்பர் நாடழைத்துச் சென்றான் என்ற பாகத்தில் குற்றங் காண்கிறார். "அவனை ஒறுத்தற்குப் பதிலாக, கண்ணன் அவனை ஓர் விமானத்தில் துறக்க நாட்டிற்கேற்றிச் சென்றான்" என அவர் கூறுகிறார்! கண்ணனின் அன்பை எவ்வாறு அறிந்திருக்கின்றனர்! இயேசுவின் வாழ்க்கையில் நேரிட்ட இதுபோன்ற ஓர் நிகழ்ச்சியை நினைவிலிருத்த வேண்டிய ஓர் கிறித்தவப் பாதிரியினிடமிருந்து இவ்வாராய்ச்சி வெளிவருகிறது. இயேசு சிலுவையி(Cross) லிருக்கிறார். அவரது பக்கத்தில் ஓர் கள்வனிருக்கிறான். கிறித்து அவனிடம் "இன்று நீ என்னுடன் துறக்கநாட்டிலிருப்பாய்" என இயம்புகிறார். ஆனால் வேடன் கண்ணபிரானது காலை அம்பால் துளைத்தான். கள்வன் கிறித்து பகவானிடம் நம்பிக்கை கொண்டிருந்தான் என இங்கு விவாதிக்கலாம். அற்றேல் வேடன் கண்ணனை நம்பவில்லை என்று நினைக்க என்ன ஆதாரமிருக்கிறது என நான் கடாவுகிறேன். வேடன் கண்ணனையோர் மானென மருண்டான் எனக் கதை தெளிவாகச் சொல்லுகிறது. மிருக உலகத்தில் அளவிறந்த அன்புகொண்டுள்ள அவனை அவ்வாறு மருளல் ஆச்சரியமன்று; இயற்கையேயாம். வேடன் தான் செய்ததறிந்து மனமுளைந்து கண்ணனை அளவிறந்த ஆழ்ந்த வருத்தத்துடன் மன்னிக்கும்படி வேண்டவில்லை யென ஒருவன் நினைப்பதற்கு என்ன ஆதாரமிருக்கிறது? அவ்வருத்தம்—அவ்வேண்டுகோள், வேடனது நல்வினைப் பயனன்றிப் பிறிதென்னை? ஓர் சோக உள்ளத்தினின்றும் எழும் வேண்டுகோள் ஆண்டவனது அரவிந்தத்தானே யடையாதிருத்தலும் உண்டோ? கிணற்றடியிலிருந்த ஓர் பெண்மணியிடம் 'பருக நீரளிப்பாயாக' என இயேசு கேட்டதாக இயம்பப்படுகிறது. அவர்



ஓர் *சமாரித்தனைத் தனக்கு நீரளிக்கும்படி வேண்டினர். "நீ என்னை வேண்டி நிற்கிறாய்" என்பதற்குப் பதிலாக 'நான் உன்னை வேண்டி நிற்கிறேன்" என் அவர் ஓர் சூத்திரனிடம் கூறினர். அதுவே அன்பு. அன்புபாவியையுந் தேடுகிறது. அன்பு சோகத்தின் அடியையுறுகிறது. கிறித்தவப் புராணங்களில் இயேசு நரகலோகத்திற்குச் (Hades) சென்றாரென நாம் படிக்கிறோம். வேடனது அம்பு தன்னைத் துளைத்ததும் கண்ணன் பாதலத்தை யுற்றானென்றும் படிக்கிறோம். இழிவின் இறுதியிலும் திருவருள் ஆன்மாக்களைத் தேடுகிறது. வேடனின் சோக உளத்தை யவன் புறக்கணிக்கக் கூடுமோ? ஜாராவினது சோகத்தின் எல்லையைக் கண்ணனுற்றானென நான் நம்புகிறேன். தனதுளத்தில் ஆண்டவனை யடையப்பெற்ற அவன் துறக்கத்தினும் உயர்ந்த பதவியை யெய்தி, பேரின்பக் கடலாடுகிறான்.

வேடனாகிய ஜாரா கண்ணனை ஓர் அம்பாலெய்தான். அதாவது உலகம் என்னும் புகைப்படத் தட்டில் ஆண்டவனது அழகொழுகும் உயிரோவியத்தை யெய்தான். அக்காட்சியையே அடிக்கடி தியானிக்க நான் விரும்புகிறேன். தபோ வனத்திலிருக்கும் கண்ணன்—ஓர் அம்பால் துளைக்கப் பெறும் கண்ணன்—வேடனுக்கு அருள்புரியும் கண்ணன்! இக்காட்சி இறைவன் உலகுக்காகச் செய்யும் தியாகத்தை யெனக்குத் தெரிவிக்கிறது. கண்ணன் தனது தவத்திலே, தனது வருத்தத்திலே உலகுக்கு அருள்புரிகிறான். ஜகந்நாதத்திலுள்ள கோயிலில் கண்ணனது உருவம் அமைக்கும் முறையை யறிந்த பழைய ஓர் சிற்பி கண்ணன் வாழ்க்கையின் உண்மையையறிந்திருந்தார். புத்தர் திரிசூலம் போலவும் ஆரியர் சிலுவை போலவும் அவ்வுருவத்தின் இருகைகளும் மேலே உயர்த்தப்பட்டிருக்கின்றன. ஆண்டவனது அநேக உருவங்களில் சிலுவையிலுள்ள கண்ணனது உருவமும் ஒன்றாகும்! கண்ணனது தவம், கண்ணன் தபோவனத்தில் கொண்ட சோகம் இவையே உரிமைப் போர் புரியும் இந்நாளில் இளைஞர் தியானம் செய்ய வேண்டுமென நான் விரும்புகிறேன். தியானித்தலென்னின்:—அதில்மாளுதல், ஒன்றுபடுதல்(Assimilate) ஆகும். இந்திய விடுதலைநாளை அவாவும் இளைஞர்கள் தவமியற்றிக் கண்ணனுடன் அவனது மிகுந்த சோகத்தில் பங்கெடுத்துக் கொள்வார்களா? குழலின் அழைப்பே சிலுவையின் அழைப்பாகும். வருங்காலத்தில் விடுதலைக்கும் மிருக ஆற்றலுக்கும் உள்ள போர் அதிகமாகுமென நான் நம்புகிறேன். உலகத்தோடு நாம் நேசம் பாராட்டி (Compromise) வலிமைக்குக் குறைவோமா? அல்லது நாம் தவமியற்றிக் கொண்டு கண்ணன் பக்கலில் நின்று விடுதலைக்காக உடற்றுவோமா? உலகத்திலே இந்தியாவின் ஊழ் மிக அழகியதாகும். இந்தியதேவி மிகத் துன்புற்றுவிட்டாள். அவள் இன்னும் துன்புற வேண்டும். இன்னுந் தவமியற்ற வேண்டும் என்பது ஆண்டவனது உள்ளக்கிடக்கையாகு

* நாம் இந்நாட்டில் சூத்திரர் என்று கூறுவதை மேலைநாட்டார் சமாரித்தர் (Samaritans) எனச் சொல்லுகிறார்.

திருக்கலாம். கண்ணனது அடிகளில் ஒரு விஷயம் நான் கற்றுக்கொண்டேன்—அதுவே தவத்தின் வலிமையென்பது. உள்ளத்தில் அன்பும் சோகமும் கொண்டு நடக்கும் ஒரு நாட்டிற்கு விடுதலைக் கதவு திறக்கப் பெறுகிறது.

---

## சாஸ்திரத்தைக் காதலிப்போர்.

—:(o):—

'அப்ஸர்வர்' என்ற பத்திரிகையில் பின் வரும் விஷயம் வெளியாயிருக்கிறது:—

பாரிஸ், புரொபஸர் ஈன்ஸ்டீன் ஸமீபத்தில் பாரிஸுக்கு வந்திருந்தார். அவருடைய கொள்கையாகிய 'தியரி அவ் ரெலடிவிடி' என்ற கொள்கையைப்பற்றி அவர் வரைந்துள்ள நூலுக்காக சமீபத்தில்தான் ராயல் வான சாஸ்திர சங்கத்தாரால் பதக்கம் பரிசளிக்கப்பட்டார். பாரிஸில் ஸர்வதேச சங்கத்தார் ஆதரவின் கீழ் அமைக்கப்பட்டுள்ள 'இன்டலெக்சுவல் கோவாபரேஷன்' சங்கத்தாரது பல கூட்டங்களுக்கு அவர் வந்திருந்தார். ஸர்வதேசசங்கத்தால் நியமிக்கப்பட்ட பன்னிரு அங்கத்தினரில் புரொபஸர் ஈன்ஸ்டன் ஒருவர்.

அறிவாளிகளின் கூட்டுறவு (இன்டெலெக்சுவல் கோவாபரேஷன்) பற்றியும் மேற்படி சங்கத்தின் லட்சியங்களைப்பற்றியும் இப்பிரஸித்தி பெற்ற சாஸ்திரஞானியோடு பேச எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. இவை பற்றிய கேள்விகளுக்கு அவர் அளித்த பதிலாவது:—இந்தச்சங்கத்தின் நோக்கமென்ன என்ற கேள்வி சுலபமும் அதே சமயத்தில் கடினமுமானது. நேசப்பான்மை வேண்டுமென்றே அரசியல் வாதிகளின் கூட்டுறவுச் சங்கம் ஸர்வதேச சங்கத்தால் அமைக்கப்பட்டது. அதன் லட்சியம் அறிவுவளர்ச்சி பற்றியதே; ஆனாலும் அது ராஜீயத் துறையில் முக்கியமானது. அறிவாளிகள் நடத்தி வைக்கிறபடி அரசியல் விவகாரம் நடக்கின்றதில்லை. அரசியலை நடத்தி வைப்பது வேறு எதுவாயிருப்பினும் சரி. ஆனால் அரசியலை நடத்தி வைப்பது சாமான்ய அறிவு (காமன்சென்ஸ்) அல்லவே அல்ல. அனுபவ பூர்வமான நலன்கள் ௬௦௦-க்கு ௩௦ பாகமும் பற்பல உணர்ச்சிகளும் ஆவல்களும் ௬௦௦-க்கு ௭௦ பாகமுமாகச் சேர்ந்தே அரசியலை நடத்துகின்றன.

"சாஸ்திரம்? (ஸையென்ஸ்?)"

"சாஸ்திரம், நடத்துமசக்திகொண்டதல்ல."

'அப்படியானால் சாஸ்திரம்எதற்கு?'

"சாஸ்திரம் எதற்காகவுமன்று. அனுபவ விஷயங்களுக்குச் சாஸ்திரம் பயனுடையதே அல்ல. சாஸ்திரம் நன்மையைத் தருவதா அல்லது தீமை பயப்பதா என்பதைப்பற்றி ஏராளமாய்ச் சர்ச்சை செய்யப்பட்டிருக்கிறது. சில நூற்றாண்டுகட்கு மேலாகாது. ஜப்பானைப் பார்ப்போம். சாஸ்திரமின்றியே வாழ்வது முற்றும் சாத்தியமே என்பதை அது ருசுப்படுத்துகிறது. நீங்கள் ஓர் யுவதியைக் காதலிக்கும் பொழுது 'அதனால் என்ன பயன்?' என்று உங்களை நீங்களே கேட்டுக்கொள்வதில்லை. அதுபோலவே, இக்கேள்வியை நீங்கள் சாஸ்திரவிஷயத்திலும் கேட்கக்கூடாது."

"ஆகவே, மனிதன் சாஸ்திரத்தைக் காதலிக்க வேண்டுமென்பது உங்கள் அபிப்பிராயமோ?"

"சாஸ்திரம் ஒருவனுக்குச் சந்தோஷ மளிக்கிறதா?"

"எப்படியாயினும் சரி, என் மட்டில் சாஸ்திரம் எனக்குச் சந்தோஷமே அளிக்கிறது."

"மனித சமூகத்தைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? நீதிக்கட்டுப்பாடு கொண்ட மனிதவாழ்க்கையைப் பற்றி உங்கள் அபிப்பிராயமென்ன?"

"இக்கேள்விக்கு நான் அளிக்கக்கூடிய பதில்கள் இரண்டு. நான் ஒரு மனிதன் என்ற ஹோதாவில்—ஒருபதிலும் சாஸ்திரி என்ற ஹோதாவில் இன்னோர் பதிலும் அளிக்கக்கூடும். நான் ஒரு மனிதன் என்ற ஹோதாவில் மனிதன் உட்படவேண்டிய கட்டுப்பாடுகளை அறிந்திருக்கிறேன். ஆனால், மனித வாழ்க்கையிலும் மனித அன்பிலும் ஒரு பகுதியைத் தமதெனப் பாத்தியங்கொண்டாடும் சில்விஷயங்களை ஞாபகப்படுத்தும் நீதிக்கட்டுப்பாட்டுக் கொள்கைகளினின்றும் ஒரு சாஸ்திரவாதி என்ற முறையில் தப்பித்துக் கொள்கிறேன்.

### தவறுகளும் பலன்களும்.

பின்னால் கேட்கப்பட்ட சில கேள்விகளுக்குப் பதிலாக புரொபஸர் ஈன்ஸ்டீன் "எனது கொள்கைகளா? அவற்றில் தவறுகள் இருக்கின்றன. என்றாலும் அவற்றால் சில நற்பலன்களும் உண்டாயிருக்கின்றன. ஆனாலும், எனது கொள்கைகள் உங்களுக்கு உண்மையில் ருசிகரமாக இராவென்று நன்றாய் அறிந்திருந்தும் அவற்றைப்பற்றி நான் உங்களிடம் எப்படிப் பேசுவது? என் மனதை வருத்தும் வேதனைகளைப்பற்றி நான் உங்களிடம் பேசிக்கொண்டிருக்கும் பொழுது அது உங்களுக்கு வெறும் பொருளற்ற வார்த்தைகளாய்த் தோன்றும்."

"எவ்விடத்தில் தவறு இருக்கிறது என்பதை ஒருவர் எப்படி அறிவது?"

"இதை விளக்க நான் ஓர் உருவகங் கூறவேண்டும். ஒரு கம்பளத்தில் சில இடங்களில் நெசவில் தவறு இருப்பதை நீங்கள் காணக்கூடும், அல்லது இருப்பதாக உங்களுக்குத் தோன்றக்கூடும். அத்தகைய் ஒரு விஷயத்தில் நீங்கள் என்ன செய்ய வேண்டும்? முழுக் கம்பளத்தையும் பிரிக்க வேண்டுமா? இல்லை இல்லை. பழைய நோக்கங்களைக் கொண்டே புதிதாக ஒன்றை நெய்யவேண்டியது தான்."

"உண்மையைப் பாதுகாக்கவேண்டும் என்பது உங்கள் பொருளோ?"

"உண்மைக்குப் பாதுகாப்புத் தேவையில்லை. உண்மையைக் கண்டுபிடித்தவனுக்கும் பாதுகாப்பு வேண்டியதில்லை. நெசவில் நன்றாயும் உண்மையாயுமிருக்கும் பாகத்திற்குக் காப்பு வேண்டியதில்லை; அப்பாகம் தன்னைத்தானே காத்துக்கொள்கிறது. உண்மை யல்லாததும் நன்மையில்லாததுமோ எப்படியும் அறியப்படுவதில்லை; ஆகவே அதற்கும் பாதுகாப்பு என்பது முடியாது."

"ஏதோ ஓர் சர்வகலாசாலையில் இன்னும் நீங்கள் உபந்யசித்து வருகிறீர்களா?"

"ஆம்: சில சமயங்களில் பெர்லின் சர்வகலாசாலையில் நான் உபந்யசித்து வருகின்றேன். எனக்கு உபாத்தியாயனாயிருப்பதில் நிரம்பவும் பிரியம். இரண்டாந்தர (ஸெகண்டரி) பாடசாலைகளில்பாடங்கற்றுக்கொடுப்பது தரம் என்று நினைக்கிறேன்; அங்கே உபாத்தியாயருக்கு ஒவ்வொரு பையனையும் நேரே தெரியும். அதில்எனக்கு நிரம்பவும் பிரியமாயிருக்கிறது."

மேலும் அவர் கூறியதாவது:— "சிரேஷ்டர்களான மனிதர்களை ஏன் சிலர் நாட்டின் பெயரால் அழைக்கின்றனர்? சிரேஷ்டர்களான ஜர்மானியர் எனவும் சிரேஷ்டர்களான ஆங்கிலேயர் எனவும் சொல்லுகிறார்களே! சிரேஷ்டர்களான மனிதர்கள் மனிதர்கள்தான்; அவர்களை ஒரு குறித்த நாட்டிற்குரியவர்களாக நோக்கலாகாது. அவர்கள் வளர்ந்து வந்த இடங்களையும் கவனிக்கலாகாது. அவர்கள் மனிதர்கள், அவ்வளவுதான்."

---

# பத்திரிகை ஆராய்ச்சி.

——[0]——

"கதரும் எளிய வாழ்வும்" என்னும் பொருள்பற்றி ஸ்ரீமதி நோரா ரிச்சர்ட்ஸ் எழுதிய கட்டுரையின் சாராம்சம்:—

கதர் நூல் கையினால் நூற்கப்பட்டது; எனவே குறைகள் உள்ளது. இந்தக் குறைகளிலேதான் அதன் அழகு இருக்கிறது. கையினால் குறையில்லாமல் வேலை செய்ய முடியாது. இயந்திரந்தான் வேறுபாடின்றி ஒரே மாதிரியாக வேலை செய்யக்கூடும். இயந்திர வேலையில் மனித உணர்ச்சிக்கு இடமில்லை. மனிதன் குறைகள் உள்ளவனாயிருப்பதால்தான் அவனிடம் நாம் அன்பு கொள்கிறோம். குறைகளற்றவன் இயந்திரமாகி விடுகிறான். அவனுக்கு நாம் மரியாதை செலுத்தக்கூடும். ஆனால் அன்பு செலுத்த முடியாது. வாழ்க்கையில் பேச்சு அதிகம் கூடாது. அதிகப் பேச்சினால் செயலுக்கு வேண்டிய வீராவேசச் சக்தி நஷ்டமாகிவிடுகிறது. எளிய வாழ்வு அநாகரிக வாழ்வு அன்று. வெளிப் பார்வைக்கு இரண்டும் ஒன்றாகத் தோன்றலாம். ஆனால் உள்நோக்குடன் பார்த்தால், எளிய வாழ்வு உண்மையோடிசைந்த வாழ்வாகும். நமது வெளி வாழ்வை நாம் எளிதாக்குகையில், ஆன்ம வாழ்வைச் செல்வத்திற் சிறந்ததாக்கி வருகிறோம். இதற்கு வாழ்வில் அவகாசம் வேண்டும். ஆன்ம வளர்ச்சிக்கு மௌனம் இன்றியமையாதது. விடுதலையும் அவகாசமும் பெறும்பொருட்டே நமது புறவாழ்வை எளிதாக்குகிறோம். நம்மைக் கீழே இழுத்து உலகப் பொருள்களுடன் பிணைக்கும் தளைகளை அறுத்தெறிகிறோம். உபயோகமற்ற சாமான்களை விட்டுவிட முயலும்போதுதான் அவைகளுக்கு நாம் எத்துணை தூரம் அடிமையாகிவிட்டோமென்பது தெரியவரும். அவைகளை எறியாமலிருப்பதற்கு நாமே பலவகைச் சாக்குப்போக்குகள் கூறிக் கொள்வோம். கடைசியாக ஒருநாள் வெற்றி வருகிறது. அன்றுதான் விடுதலைவழியில் நாம் நடக்க ஆரம்பிக்கிறோம். எளிய வாழ்க்கையில் நமது உடைகள் குறைவாயிருக்கும்; ஆனால் அவை அதிக நாள் நீடித்திருப்பனவாயுமிருக்கும். நமது வீடுகள் சிறியவையாயிருப்பினும் அழகாகக் கட்டப்பெறும். மேலும் இப்போதைவிட அதிகமாக நல்ல காற்றும் இடமும் அவகாசமும் சுதந்தரமும் தத்துவமும் கலையும் வேண்டுவோம். முக்கியமாக நமது வாழ்வு விரிவடைவதற்கு விசாலமான இடந்தேவை. எல்லாப்புறங்களிலும் சாமான்களும், சாமான் தேடும் முயற்சியும் நமது வாழ்வை அடைத்து நெருக்கி விரிவடையச் செய்யாமல் தடுக்க இடங்கொடுக்கக்கூடாது. எளிய வாழ்வு, நாமே வேண்டுமென்று ஏற்றுக்கொண்ட வறுமை-வாழ்வாகும். வாழ்வை எளிமையாக்க இடமில்லாத ஏழைகளிடம் எளிய வாழ்வைப்பற்றி உபதேசிப்பதற்குப் பொருள் இல்லை. ஏழைகள் தங்கள் வாழ்வைக் கடத்துவதே கஷ்டமாயிருக்கிறது. உலகப் பொருள்களைத் தேவைக்கு மிகுதியாகப் படைத்தவர்கள் விஷயத்தில்தான் வாழ்வை எளியதாக்குவதற்குப் பொருள் உண்டு. எளியவாழ்வு உயரிய நாகரிகவாழ்வாகும். உயர் நாகரிகப் பயிற்சி என்பது வாழ்வில் ஊடுருவி நிற்கவேண்டும்; கதர்த்துணியில் பாவும் ஊடையும் இணைந்து நிற்பதுபோல், வாழ்வில் அவகாசம் வேண்டுவோருக்கு வீட்டு வேலைக்காரர்கள் அவசியந்தான். "வாழ்க்கையில் வேலைக்காரர்கள் இருக்கலாம். ஆனால் அவர்கள் தாங்கள் வேலைக்காரர்கள் என்பதை மறக்கும்வண்ணம் அவர்களுடன் பழகுதல்வேண்டும்" என்று டால்ஸ்டாய் என்பவர் கூறுகிறார். வீட்டு வாழ்வில் அமைதியும் இன்பமும் நிலவ வேண்டுமானால் வேலைக்காரர்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே பாவிக்கப்பட வேண்டும். எளிய வாழ்வை மேற்கொண்ட பின்னரே இது சாத்தியமாகும். வேலைக்காரர்கள் தாங்கள் ஊழியர்கள் என்பதை மறப்பதற்கு முன், வாழ்வு கதர் மயமாக வேண்டும். எளிய வாழ்வானது உற்சாகமான வேலையும் போதிய அவகாசமும் உள்ளதாகும். உழைப்பாளிக்கு அதிக அவகாசம்: அவகாசமுள்ளவர்களுக்கு அதிக வேலை. இதுமட்டுமன்று. எளிய வாழ்வுமுறையில் பருப்பொருள்களும் ஆன்ம ஒளி பெறுகின்றன. "பருப்பொருள்களும் கண்ணுக்குப் புலப்படாத ஆன்மாவும் ஒன்றேயாம்" என்று வால்ட் விட்மான் கூறினார். நமது புறவாழ்வுக்குரிய பொருள்களில் நமது ஆன்மாவின் ஒளி திகழவேண்டும். இவ்வாறுதான் நாம் விடுதலைபெறக்கூடும். சாதாரண வாழ்வில் புறவாழ்வும் அகவாழ்வும் பிரிந்து நிற்கின்றன. கதரில் பாவும் ஊடையும் போல் எளிய வாழ்வில் ஆன்மாவும், சடமும் கலந்து நின்று பூரணத்வ நிலைக்கு அழைத்துச் செல்கின்றன.

* * *

சமீபத்தில் பாடலிபுரத்தில் பீஹார் வித்தியா பீடப் (தேசீய சர்வகலாசாலை) பட்டமளிப்பு விழாவில் அக்கிராசனம் வகித்த ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் மாணக்கர்களுக்குச் செய்த அரிய உபந்யாசத்தின் சில பகுதிகளைத் தருகிறோம்:—

தமிழ் இலக்கியத்தில் புத்த பகவானைப்பற்றிய சில அழகிய பாக்கள் இருக்கின்றன. தமக்கென வாழாத அப்பெரியார் உலகத்தின் ஊழியத்துக்காகத் தமது ஆன்மாவைமேலும்மேலும் அடிமைப்படுத்தி வந்தாராம். அவர் மீண்டும் மீண்டும் இவ்வுலகில் வந்து பிறந்தாராயினும் அது மற்ற ஜீவர்களைப்போல் கர்மப் பயனினாலன்று. உலகில் ஜீவராசிகளிடத்து அவர் கொண்ட அளவிறந்த அன்பினால் அவர்களுக்குத் தொண்டு செய்யும் பொருட்டாகத் தமது சொந்த இச்சையினாலேயே அடிக்கடி இவ்வுலகில் பிறவியெடுத்தார். பண்டைக்காலத்திலே தோன்றிய ஜனகர், சந்திரகுப்தர், புத்தர், அசோகர் முதலியோரை விட்டு விடுவோம். இக்காலத்தில் நமது தலைமுறையில் உலக சிரேஷ்டராய் விளங்கும் மனிதர் இந்தியாவில் முதன் முதலில் தமது வேலை தொடங்கியது இம்மாகாணத்தில்தான். அவருடைய விரோதிகள், அரிய தாழ்மைக் குணத்தையும, அதன் தூய்மையினால் எதையும் மதியாத மனத்துணிவையும் ஒருங்கே கண்டார்கள். அவருடைய அளவற்ற சாந்தமே அவர்கள்உள்ளத்தில் குழப்பத்தை விளைத்தது. அவர் புதியதொரு பாஷை பேசினார். அவர்கட்கு அது விளங்கவில்லை. ஏனெனில் அவர் பேசியது சத்திய பாஷை. அதனிடம் அதுகாறும் ஜனங்கள் அச்சங்கொண்டிருந்தனர். குழந்தை தாயை நம்புவதுபோல் அவர் சத்தியத்தை நம்பினார். ...மூளைகளைப்போலவே உங்கள் கரங்களையும் உபயோகிக்கக் கற்றுக்கொண்டீர்களென்று நம்புகிறேன். கரங்களினால் வேலை செய்யும் வழக்கத்தை விட்டுவிடாதீர்கள். வேலையில்லாவிடில் உங்கள் கைகள் துருப்பிடித்துப்போம். மூளைக்கு உறுதி தருவதில் உடல் உழைப்புக்கு இணையான மருந்து வேறொன்றுமில்லை. தினந்தோறும் குறைந்தது ஒருமணிநேரம் உடலையுழைத்து வேலை செய்யுங்கள். எல்லாவற்றிக்கும் மேலாக இராட்டினத்தை மறந்துவிடாதீர்கள். கிராமங்களில் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் கொடிய வறுமையையும் ஒழிக்க வேறு சாதனம் நமக்கில்லை. நமது அரசியல் விடுதலைக்கும், பலாத்கார ஆட்சியி

னின்று உலகைவிடுவிப்பதற்கும்நம்மிடமுள்ள ஆயுதம் அஃது ஒன்றேயாகும், கடைசியாக, ஏழையாயிருப்பது ஓர் அவமானமன்று என்னும் பெரிய உண்மையை உங்களுக்கு நினைவூட்டுகிறேன். அண்டை அயலாரின் தொண்டினையே உங்கள் வாழ்க்கையின் அணிகலனாகப் பூண்டிருந்தால் வறுமை உங்களுக்குச் சிறப்பையே நல்கும். உலகின் எல்லாரும் உங்களை அலட்சியம் செய்யினும் நீங்கள் சோர்வடைதல் வேண்டாம். உங்களைப்பற்றிப் பெருமை கொண்டு, உங்களைத் தமது அளவற்ற அன்புக்குரியவர்களாக்கியிருக்கும் ஒரு மனிதரேனும் இந்நாட்டிலே உள்ளார் என உறுதியுடனிருங்கள். அவர் சாதாரண மனிதரல்லர். உலக சரித்திரத்தில் என்றும் மறக்கவொண்ணாத மகான்களின் வரிசையில் அவர் பெயர் பதிக்கப்பெறும். மேலும் அவரைப்போல் நம்மால் நேசிக்கப்படத் தக்கவர் வேறுயாருளர்? அவர் பொருட்டுத் துன்பமனுபவிக்கவும் உயிரைவிடவும் மகிழ்ச்சியுடன் முன்வராதவர் நம்மில் யாரிருக்கின்றனர்?

# சதங்கையொலி.

—(o)—

## மனிதரது பழக்க வழக்கங்கள்.

தேச சாத்திர நிபுணரான புரொப்ஸர் சார்லஸ் ரிச்சர்ட் என்பவர் தாம்எழுதியுள்ள "பேதை மனிதன், அல்லது மனித சமூகத்தின் மூடத்தனங்கள்" என்னும் புத்தகத்தில் பின்வருமாறு எழுதுகிறார்:— ஆண் பறவைகள் பெண் பறவைகளை வசீகரிக்க உதவும் சிறகுகளைத் தவிர வேறு உயர்ந்த தலையணியை மனிதன் நவீனமாய்க் கண்டு பிடித்தானில்லை; அதற்கு மேல் உயர்ந்த வொன்றைச் சுயமாய்க் கண்டுபிடித்துச் செய்யக்கூடிய புத்தி கோசரம் மனிதனுக்கில்லை. மனிதன் விசித்திரமாக எதையாவது செய்யவேண்டுமானால், உடனே மிருகங்களிடமிருந்தாவது, பறவைகளிடமிருந்தாவது கடன் வாங்கிவிடுகிறான். ஆடவரது நாகரிகமாயினும் சரிதான், ஸ்திரீகளின் நாகரிகமாயினும் சரிதான்; இருவரது நாகரிகப் பாங்கும் மூடத்தனமாகவேதான் இருக்கிறது. சிலசமயம் ஸ்திரீகளின் நாகரிகப் பாங்கு, அதிகக் கோமாளித்தனமாக இருப்பதைக் காணலாம். என்றாலும், அம்மூடத்தனமான நாகரிகஇச்சை மட்டில் புருஷராயினும் ஸ்திரீகளாயினும் ஒன்றேதான். நாகரிகம் என்று சொல்லப்படும் வழக்கத்தை அடிமைபோல் பின்பற்றுகிறோம். அப்படியிருந்தும் அதினும் பிறர் போற்றத் தக்கதிதமான நிலைமையை அடையவிரும்புகிறோம். நமது நிலைமை அடிமைத்தனமானதும் சுதந்திரமற்றதுமேயாகும்.

## தோல்ஸ்தாயின் கல்விமுறை.

தோல்ஸ்தாய் பொதுஜனஊழியத்தில், கல்வி பரப்புவதே சிறந்த கைங்கரியமாகச் செய்தார். தன் கிராமத்தில் முதலில் பள்ளிக்கூடம் தொடங்கினார். சுமார் பதினாயிரம் ஜனங்களடங்கிய ஒரு ஜில்லாவில் கஎ பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தினார். தன்னயம் விடுத்த—திறமையுள்ள நண்பர்களையே அவற்றில் ஆசிரியராக ஏற்படுத்தினார். அத்தனை ஆசிரியருடனும் சகோதரப் பான்மையுடன் சேர்ந்து பழகினார். தாம் இருந்த பள்ளிக்கூடம் இரண்டுமாடியுள்ள கட்டிடம். வெளியில் தேகப்பயிற்சி செய்யுமிடம். பையன்கள் கையில் புஸ்தகமொன்றும் கொண்டுவருவதில்லை. அவர்களுக்கு வீட்டுப்பாடம் கொடுப்பதில்லை. ஒன்றையும் பாடம் பண்ணச் சொல்லுவதுமில்லை. பாடம் பண்ணவில்லையே என்ற கவலையும் அவர்களுக்கு இல்லை. தாமதமாய் வந்ததற்காக ஒருவரும் கண்டிக்கப்படுவதில்லை. தாமதமாக ஒருவரும் வருவதுமில்லை. மனிதனைப் பூரணப்படுத்தி உயர்ந்த அறிவும் விரிந்த நோக்கமும் கொடுப்பது கல்வி. அது அனுபவப் பூங்கொத்து. பையன் பெற்றோரிடமும், பள்ளிக்கூடத்திலும், புத்தகங்களின் மூலமும் உலகிலும் அடையும் அனுபவமே கல்வி. நல்லொழுக்கத்திற்காக ஒரு மனிதன் தனது தூயவாழ்வைக்கொண்டு மற்றொருவனைப் பழக்குவது பயிற்சி. அறிவை ஒருவனிடமிருந்து மற்றொருவனுக்குக் கொடுப்பது படிப்பு. பாட்டு, சித்திரம், நாட்டியம், கைத்தொழில் இவை படிப்பு. படிப்பும் போதனையும் கல்விக்கு வழியே. கல்லூரிகள் சமூகத்தைச் சீர்திருத்தும் வீரர்களை உண்டாக்குவதில்லை. நூறு ஆண்டுகளுக்குள் இந்தக் கட்டிடப் பள்ளிகளும் கல்லூரிகளும்போய், சுதந்திரமான கல்விக் கூடங்கள் மனிதரின் நோக்கத்திற்கும் வாழ்விற்குமுகந்த பயிற்சி தந்து நிற்கும் என்று தோல்ஸ்தாய் கூறுகிறார்.

